உ

கணபதி துணை

# குறுந்தொகை

**1293**

இது

மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

## டாக்டர் உ. வே. சாமிநாதையரால்

பல பிரதிகளைக்கொண்டு ஆராய்ந்து

தாம் எழுதிய உரை, ஆராய்ச்சி முதலியவற்றுடன்

*சென்னை ஸர்வகலாசாலையாருடைய பொருளுதவியால்*

சென்னை :

கேஸரி அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பெற்றது.

ஈசுவர ஆவணிமீ

*Copyright Registered*] 1937 [விலை ரூ. 7-8-0

# இப்புத்தகத்தில் அடங்கியவை

1. நூற்பெயர்கள் முதலியவற்றின் முதற்குறிப் பகராதி ... ... ... v—vi
2. பிழையுந் திருத்தமும் ... ... vii—viii
3. முகவுரை ... ... ... 1—16
4. நூலாராய்ச்சி ... ... 17—112

*முன்னுரை* .... .... .... 17
*ஐவகை நிலச்செய்திகள்* .... .... 21
*பொழுதுகள்* .... .... .... 28

[பெரும்பொழுது : *கார் - கூதிர் - முன்பனி - பின்பனி - வேனில்.* சிறு பொழுது : *மாலை - யாமம் - வைகறை.* காற்று.]

*மரம் செடி கொடி* .... .... .... 32

[*அகில் - அசோகு - அடும்பு - அத்திமரம் - அரலைச்செடி - அவரை - அறுகு - ஆம்பற்கொடி - ஆலமரம் - ஆவிரை - இருப்பை- இற்றி - ஈங்கை- உகாய் - உழுந்து - எருக்கு - எள் - ஐயவி - ஐவனம் - ஓமைமரம் - கரும்பு - கருவிளை - கவலைக் கிழங்கு - கள்ளி - காஞ்சி - காந்தள் - காயாமரம் - குரவம் - குருந்தமரம் - குவளை - குளவி - குறிஞ்சி - குன்றி - கூதளி - கொறுக்காந்தட்டை - கொன்றை - கோங்கு - சந்தனமரம் - சிலை - சேம்பு - ஞாழல் - ஞெமை - தடா - தாமரை - தாழை - தாளி - தினை - நரந்தம் - நெய்தல் - நெருஞ்சி - நெல் - நெல்லி - நொச்சி - பகன்றை - பஞ்சாய் - பயறு - பருத்தி - பலாமரம் - பலாசு - பவழம் - பனை - பாதிரி - பிடா - பித்திகம் - பிரம்பு - பீர்க்கு - புன்கு - புன்னை - மரல் - மராம் - மருதமரம் - மாணைக்கொடி - மாமரம் - மிளகுகொடி - முல்லை - முள் முருங்கை - முள்ளிச்செடி - மூங்கில் - யாமரம் - வரகு - வழை - வள்ளி - வாகை - வாழை - வெட்சி - வேங்கைமரம் - வேம்பு.*]

*விலங்குகள்* .... .... .... 51

[*அணில் - ஆடு - ஆமான் - ஆமை - எருமை - எலி - எறும்பு - ஓந்தி - கடமா - குதிரை - குரங்கு - செந்நாய் - தவளை - நண்டு - நாய் - நீர்நாய் - பசுவும் ஆனேறும் - பல்லி - பாம்பு-புலி - மரையினம் - மான் - மீன் - முதலை - யானை - வருடை - வரையா - வெருகு.*]

*பறவைகள்* .... .... .... 60

[*அன்றில் - அன்னம் - எழால் - கணந்துள் - காக்கை - கிளி - குயில்- குருவி - குறும்பூழ் - கூகை - கொக்கு - கோழி - நாரை - நுளம்பு -*

பருந்து - புறா - மகன்றில் - மயில் - யானையங்குருகு - வங்கா - வண்டு - வெளவால்.]

அன்பு .... .... .... 65

அன்பு வாழ்க்கை .... .... .... 69

[இயற்கைப் புணர்ச்சி - இடந்தலைப்பாடு - பாங்கற் கூட்டம் - பாங்கியிற்கூட்டம் - மடலேற்றம் - பகற்குறி-பகற்குறியிடையீடு - இரவுக்குறி - இரவுக்குறி இடையீடு - வரைவு கடாவுதல் - வரைபொருட் பிரிவு - அறத்தொடு நிற்றல் - வரைவு - உடன்போக்கு - இல்லறம் - பொருட் பிரிவு - பிரிவில் தலைவியின் நிலை - தலைவன் நிலை - மீளுதல் - பரத்தையிற் பிரிவு - கூற்றுவகை - பரத்தையர் - செவிலி - தோழி.]

உபகாரிகள் .... .... .... 82

[அகுதை - அஞ்சி - அதிகன் - அருமன் - அழிசி - ஆய் - எவ்வி - எழினி - ஓரி - கட்டி - குட்டுவன் - கொங்கர் - கோசர் - சேந்தன் - தொண்டையர் - நள்ளி - நன்னன் - பசும்பூட் பாண்டியன் - பாரி - பூழியர் - பொறையன் - மலையன் - வடுகர் - விச்சிக்கோ - வேளிர்.]

இடங்கள் .... .... .... 85

[மலைகள் : அரலைக்குன்றம் - இமயம் - ஏழில் - கொல்லி - பறம்பு - பொதியில். ஆறுகள் : காவிரி - சோணை. காடு. ஊர்கள் : ஆர்க்காடு - உறையூர் - குறும்பூர் - குன்றூர் - தொண்டி - பாடலி - மரந்தை - மூன்றூர் - வாகைப்பறந்தலை.]

பண்டைக்காலத்து மக்கள் வாழ்க்கை நிலை 86

[அரசியல் - ஊரமைப்பு - அறம் - பொருள் - சாதிகள் - ஆடவர் மகளிர் - நிமித்தங்கள் - வழக்கங்கள் - கருவிகள் - ஊர்திகள் - உணவு வகை - உரை - இசை - கடவுள் - நீதிகள்.]

இலக்கணச் செய்திகள் .... .... 101

[நால்வகைச் சொற்கள் - வடசொற்கள் - உவமை.]

புலவர்கள் .... .... .... 103

[சிறப்புப் பெயர்கள் - புலவர்களுடைய ஊர்கள் - சாதி - தொழில் - பெண்பாற் புலவர் - உறுப்பால் வந்த பெயர் - அடைமொழிகள் - சில வழக்காறுகள் - தெய்வப் பெயர்கள் - பிறபெயர்கள்.]

5. பாடினோர் பெயரகராதி ... 113—115

6. இப்பதிப்பில் எடுத்தாண்ட நூல்கள் 116

7. பிரதி பேதங்கள் ... ... 117—128

8. குறுந்தொகை மூலமும் உரையும் க—கூகஉ

9. செய்யுள் முதற்குறிப்பகராதி ... கூகங—கூகஅ

10. அரும்பத முதலியவற்றின் அகராதி கூகஅ-சஙக

# நூற்பெயர் முதலியவற்றின் முதற்குறிப்பகராதி



அகநா - அகநானூறு
அடியார் - அடியார்க்கு நல்லார்
அறநெறிச் - அறநெறிச்சாரம்
இ. கொ - இலக்கணக்கொத்து
இ. வி - இலக்கண விளக்கம்.
இளம் - இளம்பூரணருரை
இறை - இறையனாரகப்பொருள்
இன்னா - இன்னா நாற்பது
இனியது - இனியது நாற்பது
உத்தர - உத்தரகாண்டம்
எ-து - என்பது
ஐங்., ஐங்குறு - ஐங்குறுநூறு
ஐந். எழு. - ஐந்திணை எழுபது
ஐந். ஐம் - ஐந்திணை ஐம்பது
ஒப்பு - ஒப்புமைப்பகுதி.
கடவுள் - கடவுள் வாழ்த்து
கம்ப - கம்பராமாயணம்
கல் - கல்லாடம், கல்லாடர் உரை
கலி - கலித்தொகை
களவழி - களவழி நாற்பது
களவியற் - களவியற் காரிகை
கார் - கார்நாற்பது
குறிஞ்சிப் - குறிஞ்சிப்பாட்டு
குறுந் - குறுந்தொகை
கூர்ம - கூர்ம புராணம்
கைலைபாதி - கைலைபாதி காளத்திபாதியந்தாதி
சங் - சங்கரநமச்சிவாயருரை
சிலப் - சிலப்பதிகாரம்
சிற் - திருச்சிற்றம்பலக் கோவையார்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீகாளத்தி - சீகாளத்திப் புராணம்
சீவக - சீவகசிந்தாமணி
சுந்தர - சுந்தரகாண்டம்
சூ - சூத்திரம்
சூடாமணி - சூடாமணிநிகண்டு
சூளா - சூளாமணி
சே - சேனாவரையம்
சொக்க - சொக்கநாதருலா
தக்க - தக்கயாகப்பரணி
தஞ்சை - தஞ்சைவாணன்கோவை
தண்டி - தண்டியலங்காரம்
தணிகை - தணிகைப் புராணம்
தமிழ்நெறி - தமிழ்நெறி விளக்கம்
தமிழ்விடு - தமிழ்விடுதூது
திணைமா, திணைமாலை - திணைமாலை நூற்றைம்பது
திணைமொழி - திணைமொழி ஐம்பது
திருஞா - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்
திருநா - திருநாவுக்கரசு நாயனார்
திருவரங்கக் - திருவரங்கக் கலம்பகம்
திருவள்ளுவ - திருவள்ளுவமாலை
திருவா - திருவாசகம்
திருவாரூர் நான்மணி - திருவாரூர் நான்மணி மாலை
திருவாரூர் மும்மணிக் - திருவாரூர் மும்மணிக் கோவை
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
திருவிளை - திருவிளையாடற் புராணம்
திருவீங்கோய் - திருவீங்கோய்மலை எழுபது
திவ் - திவ்யப் பிரபந்தம்
தெய்வச் - தெய்வச் சிலையார்
தே - தேவாரம்
தொல் - தொல்காப்பியம்
ந - நச்சினார்க்கினியருரை
நம்பி - நம்பியகப்பொருள்
நள - நளவெண்பா
நற் - நற்றிணை
நன் - நன்னூல்
நாலடி - நாலடியார்
நான்மணி - நான்மணிக்கடிகை
நீதிநெறி - நீதிநெறி விளக்கம்

நீல - நீலகேசி
நெடுநல் - நெடுநல் வாடை
நேமி - நேமிநாதம்
ப - பக்கம்
பட் - பட்டினப் பாலை
பதிற் - பதிற்றுப்பத்து
பதினோராந் - பதினோராந் திருமுறை
பரி - பரிபாடல்
பரிமேல் - பரிமேலழகருரை
ப-ரை - பதவுரை
பழ - பழமொழி
பாண்டிக் - பாண்டிக் கோவை
பி-ம் - பிரதிபேதம்
பிரபு - பிரபுலிங்கலீலை
பு. வெ - புறப்பொருள் வெண்பாமாலை
புறநா - புறநானூறு
பெரிய - பெரிய புராணம்
பெரிய திரு - பெரிய திருமொழி
பெரியாழ்வார் - பெரியாழ்வார் திருமொழி
பெருங்-பெருங்கதை
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப்படை
பேர் - பேராசிரியருரை
பொருந - பொருநராற்றுப்படை
மணி - மணிமேகலை
மதுரைக் - மதுரைக் காஞ்சி
மயிலேறும் - மயிலேறும் பெருமாள் பிள்ளையுரை
மயிலை - மயிலை நாதருரை
மலைபடு - மலைபடு கடாம்
மாறன் - மாறனலங்காரம்
மு - முற்றும்
முத் - முத்தொள்ளாயிரம்
முதற்றிரு - முதற்றிரு வந்தாதி
முருகு - திருமுருகாற்றுப்படை
முல்லை - முல்லைப்பாட்டு
மேற் - மேற்கோள்
யா. கா - யாப்பருங் கலக்காரிகை
யா. வி - யாப்பருங் கலவிருத்தி
வி - விருத்தியுரை
வி. பா - வில்லிபுத்தூரார் பாரதம்
வி-ரை - விசேடவுரை
வீர - வீர சோழியம்

# பிழையும் திருத்தமும்



| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௭ | 14 | 531 | 581 |
| ௧௪ | 2 | தலைவன் கூற்று | தலைவி கூற்று |
| ௨௭ | 2 | யொடு பொய்ப்பப் | பொய்ப்பப் |
| ௩௧ | 15 | கொடுமைக்கு | கொடுமை |
| ௪௨ | 2 | தலைவன் கூற்று | தலைவி கூற்று |
| ௫௨ | 19 | வைத்து கூறியது | வைத்துக் கூறியது |
| ௫௪ | 6 | இன்னுள் | இன்னள் |
| ௬௨ | 11 | யேற்றுப் பால் | யேற்று இடம் |
| ௭௫ | 11 | | ஆசிரியர் பெயர் பரணர் |
| ௭௭ | 19 | | ஆசிரியர் பெயர் கபிலர் |
| ௮0 | 30 | | வெள்ளி வீதியார் |
| ௯௫ | 28 | குவளை மடமங்கையர் | வளைமட மங்கையர் |
| ௯௭ | 9 | | ஆசிரியர் பெயர் அள்ளூர் நன்முல்லை |
| ௧0௩ | 15 | பழமொழி | பழிமொழி |
| ௧௧௯ | 5 | தன்மையோட | தன்மையோடடுத்த |
| ௧௪௨ | 24 | தேர்பவள் | நேர்பவள் |
| ௧௫௭ | 31 | உஇணிய | டுணீஇய |
| ௧௬0 | 24 | குறையாத | நீங்காத |
| ௧௭௬ | 14 | தலைவன் கூற்று | தலைவி கூற்று |
| ௧௭௯ | 19 | கா | கார் |
| ௨௩௧ | 15 | மேன்மையை | மென்மையை |
| ௨௫0 | 19 | தன்மையை | தண்மையை |
| ௨௯௧ | 9 | முறிந்து | முரிந்து |
| ௩௨௯ | 22 | கடலுக்குக் கூந்தலும் திங்களுக்கு நுதலும் | கூந்தலுக்குக் கடலும் நுதலுக்குத் திங்களும் |
| ௬௪௪ | 19 | யியிர் கொண் | யுயிர்கொண் |

| | | | |
|---|---|---|---|
| நஎந | 30 | யுடையப் | யுடைய |
| நஎக | 26 | சேஞ்ஞெ | சேஞ்ஞெ |
| நஅ0 | 26 | தன்மேல் | தம்மேல் |
| நஅசு | 19 | தலைவன் கூற்று | தலைவி கூற்று |
| சஉ௫ | 22 | கச்சிப்பெட்டு | கச்சிப்பேட்டு |
| சசந | 23 | ஷ்ை | ஷ்ை |
| சஎக | 27 | ஷ்ை | ஷ்ை |
| ௫0க | 14 | நசையறவோங்காது | நசையறவுணங்காது |
| ௫க0 | 30 | நட்பே | நண்பே |
| ௫கூஉ | 24 | பின்னர் தலைவியை | பின்னர்த் தலைவியை |
| ௫கூஅ | 16 | குவ்வுமண | குவவுமண |
| ௫எக | 2 | தோழி கூற்று | தலைவி கூற்று |
| ௫கூக | 9 | நகந :5 | நகந : 1, பி - ம். |
| கூ0உ | 30 | நெகிழு | நெகிழுக் |
| கூநஉ | 8 | தலிவியின் | தலைவியின் |
| கூநஅ | 2 | உட்கொண்டு ; | உட்கொண்டது ; |
| கூச0 | 24 | சிறை புறத்தா | சிறைப்புறத்தா |
| கூஅச | 19 | பரத்தையிற் பிரிந்தனனு | பிரிந்தனனு |
| அஉக | 14 | | ஆசிரியர் பெயர் கபிலர் |
| அச௫ | 18-9 | பெயரின் முதனிலையோடு | பெயரோடு |
| அ௫அ | 29 | யடைய தலைவிக்குத் | யடையத்தலைவிக்குத் |
| கூ௫௫ | 5 | கொல்லோர் | கொல்லோ |



உ

கணபதி துணை

# முகவுரை



திருச்சிற்றம்பலம்

மின்காட்டுங் கொடிமருங்கு லுமையாட் கென்றும்
விருப்பவன்காண் பொருப்புவலிச் சிலைக்கை யோன்காண்
நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக் கருளி னோன்காண்
பொன்காட்டக் கடிக்கொன்றை மருங்கே நின்ற
புனக்காந்தள் கைகாட்டக் கண்டு வண்டு
தென்காட்டுஞ் செழும்புறவிற் றிருப்புத் தூரில்
திருத்தளியான் காணவனென் சிந்தை யானே.

(திருநாவுக்கரசர் தேவாரம்)

திருச்சிற்றம்பலம்



## கடைச்சங்க நூல்கள்

கடைச்சங்க காலத்து நூல்களில் இப்பொழுது கிடைக்கும் இலக்கியங்கள் பாட்டு, தொகை, கீழ்க்கணக்கென மூன்றுவகைப் படும். பாட்டென்பது திருமுருகாற்றுப்படை முதல் மலைபடுகடாம் இறுதியாகவுள்ள பத்துப்பாட்டும், தொகையென்பது பல செய்யுட் களைத் தொகுத்தமைத்தனவாகிய நற்றிணைமுதற் புறநானூறு இறுதி யாகவுள்ள எட்டு நூல்களும், கீழ்க்கணக்கென்பது நாலடியார் முதற் கைந்நிலை யிறுதியாகவுள்ள பதினெட்டு நூல்களும் ஆகும்.

இவற்றுள், தமிழின் பொருள்வகைகளாகிய அகத்தையும் புறத் தையும் பற்றிய இலக்கணங்களுக்கு ஏனையவற்றினும் மிகச் சிறந்த இலக்கியங்களாக விளங்குவன எட்டுத்தொகை நூல்களேயாம். அவை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரி பாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன; பதிற்றுப் பத்தும் புறநானூறும் புறப்பொருள்பற்றியும், கலித்தொகையும் பரி

பாடலும் யாப்புப்பற்றியும் தொகுக்கப்பட்டன. ஐங்குறுநூறு அகனைந்திணையுள் ஒவ்வொன்றுக்கும் நூறுநூறு செய்யுட்கள் அமைய ஓரம்போகியார் முதலிய ஐந்து நல்லிசைப் புலவர்களாற் பாடப் பெற்றது; ஏனைய மூன்றும் அகப்பொருள் பற்றிப் பலபுலவர்கள் பாடிய செய்யுட்கள் அடியளவு நோக்கித் தொகுக்கப்பட்டன. குறுந்தொகை நாலடிச் சிற்றெல்லையையும் எட்டடிப்பேரெல்லையையு முடைய அகவற் பாக்களையும், நற்றிணை ஒன்பதடிச் சிற்றெல்லையையும் பன்னிரண்டடிப் பேரெல்லையையுமுடைய பாக்களையும், அகநானூறு பதின்மூன்றடிச் சிற்றெல்லையையும் முப்பத்தோரடிப் பேரெல்லையையு முடைய செய்யுட்களையும் கொண்டன. இவை மூன்றும் இவ்வடியளவையன்றிப் பிறதிறங்களில் ஓரினமாவன. இவ்வமைப்பை நோக்குகையில் பல புலவர்கள் தனித்தனியே இயற்றிய அகப்பொருட் செய்யுட்களைத் தொகுத்து அவற்றை அடியளவால் வகைப்படுத்தியபின் அவற்றைத் தொகுத்தவர்கள் ஒவ்வொன்றிலும் நானூறு பாக்கள் இருக்கும்படி தம் காலத்துப் புலவர்கள் இயற்றியவற்றையும் சேர்த்து அமைத்தார்களென்று கருத இடமுண்டாகின்றது.

தொல்காப்பியமென்னும் பழந்தமிழிலக்கண நூலிற் கண்ட இலக்கணங்களை ஆராயும்போது அதற்குமுன் பலவகையான இலக்கியங்கள் தமிழில் மலிந்துவிளங்கினவென்பது பெறப்படும். புலனெறி வழக்கத்தை ஓர் ஒழுங்கான அமைப்பினால் வரையறுத்துரைக்கும் அந்நூலுக்கும் எட்டுத்தொகைநூல்களுக்கும் இடையே பல ஆண்டுகள் சென்றன. தொல்காப்பியத்திற் கண்ட பலவகை இலக்கணங்களுக்கு இலக்கியங்கள் கடைச்சங்க மருவிய நூல்களிற் கிடைத்தில. சங்க நூல்களிற் காணப்படும் பலசெய்திகளுக்குரிய இலக்கணங்கள் தொல்காப்பியத்திற் காணப்படவில்லை. இவை தொல்காப்பிய காலத்திற்குப் பிறகும் அளவிறந்த நூல்கள் உண்டாயினவென்றும் நாளடைவிற் புதிய மரபுகள் அமைந்தனவென்றும் நினைக்கக் காரணமாகின்றன.

இவ்வாறு உண்டான பலவகை நூல்களும் செய்யுட்களும் காலநிலையினால் தமிழ்நாட்டாராற் புறக்கணிக்கப்பட்டோ வேறுவகையில் மறைந்தோ அருகினபோலும். பிறகு கி. பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்த புலவர்களும் அரசர்களும் தமிழாராய்ச்சியில் ஊக்கங்கொண்டு பழந்தமிழ்ச் செய்யுட்களைத் தொகுக்கத் தொடங்கினர். அங்ஙனம் தொகுத்தனவே முற்கூறிய மூன்றுவகை நூற்றொகுதிக

ளாதல் வேண்டும். தொல்காப்பியகால முதல் அவற்றையன்றிப் பிற செய்யுட்கள் இயற்றப்பட்டிலவென்றுரைத்தல் ஏற்புடையதன்று. இராமாயணம், பாரதம், தகடூர்யாத்திரை, ஆசிரியமாலை, சிற்றட்டகம் முதலிய பலநூல்கள் அக்காலத்தில் இருந்தனவென்று தெரிகின்றது. முற்கூறிய மூன்றுவகை நூல்களில் பத்துப்பாட்டும் பதினெண்கீழ்க்கணக்கும் தனித்தனியே ஒவ்வோராசிரியரால் இயற்றப் பெற்ற நூற்றொகுதிகள். எட்டுத்தொகை நூல்களோ பலர் இயற்றிய செய்யுட்களின் தொகுதிகள்.

பண்டைக்காலத்தில் மக்கள் மனனப் பயிற்சி மிகவுடையராக இருந்ததனால் இவ்வளவு செய்யுட்களையும் அவற்றை இயற்றிய ஆசிரியர் பெயர்களையும் நினைவில் வைத்திருந்தனர். அவை அங்கங்கே பலராற் சொல்லப்பட்டு வழங்கி வந்தன. சில செய்யுட்களின் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. அதனால் அவ்வச் செய்யுட்களிற் காணப்படும் அரிய சொற்றொடராலேயே அப்புலவர் பெயரைக் குறித்துக் கொண்டனர். சிறுபான்மை ஆசிரியர் இயற்பெயர் தெரிந்தும் அவர் பெயரை அமைக்காமல் சிறப்புப் பெயரையே அமைத்தனர்.

## குறுந்தொகை

இங்ஙனம் அமைந்துள்ள புலவர் பெயர்களைக்கொண்டு ஆராய்ந்தால் எட்டுத் தொகையில் முதலில் தொகுக்கப்பட்ட நூல் குறுந்தொகையென்பது தெரியவரும். காக்கை பாடினியார் நச்செள்ளையாரென்பது ஒரு புலவர் பெயர். அவருடைய இயற்பெயர் நச்செள்ளையாரென்பது. விருந்துவரக் கரைந்த காக்கையைப் பாராட்டினமையின் காக்கைபாடினியாரென்ற சிறப்புப் பெயர் அவருக்கு உளதாயிற்று. குறுந்தொகையை முதலில் தொகுக்கையில் நச்செள்ளையார், காக்கை பாடினியார் நச்செள்ளையாரெனக் குறிக்கப்பட்டார். அப்பால் தொகுக்கப்பட்ட நூல்களில் அவ்வாறே வழங்கப்பட்டார். கயமனாரென்பது ஒரு புலவர் பெயர். அப்பெயரை அவரது சிறப்புப் பெயராகவே கருத இடமுண்டு; அவரது இயற்பெயர் தெரியவில்லை. குறுந்தொகையில், கழியில் உள்ள நெய்தல் மலருக்குக் கயத்தில் மூழ்கும் மகளிர்கண்ணை அவர் உவமிக்கின்றனர். கயத்தில் நிகழும் நிகழ்ச்சியைக் கூறுதலின் அப்பெயர் பெற்றாரென்று கொள்ளல் தகும். அவர் இயற்றிய பாடல்கள் பிறதொகை நூல்களிலும் காணப்படுகின்றன. அவ்விடங்களிலும் கயமனாரென்ற சிறப்புப் பெயரே குறிக்கப் பெற்றிருக்கிறது.

அவருடைய இயற்பெயர் தெரிந்த காலத்தும் குறுந்தொகையிலமைந்த பெயரையே பின்தொகுத்த நூல்களிலும் அமைத்தனரென்றே தெரியவருகின்றது. இங்ஙனமே கள்ளிலாத்திரையனாரென்பவரது பெயருக்குரிய காரணம் குறுந்தொகையிலுள்ள செய்யுட் பகுதியாகிய, "கள்ளிற் கேளி ராத்திரை" என்பது. அவர் செய்யுட்கள் புறநானூற்றிலும் வருகின்றன. ஓரேருழவரென்னும் புலவர் இயற்றிய குறுந்தொகைப் பாட்டிலுள்ள, "ஓரே ருழவன் போல" என்னும் தொடர் அவரது பெயர்க் காரணத்தைக் குறிப்பிக்கின்றது. புறநானூற்றிலும் அவர் செய்யுளொன்று காணப்படுகின்றது. இவ்விரு புலவர்களும் குறுந்தொகைச் செய்யுட்பகுதி காரணமாகப் பெற்ற பெயராலேயே பின் தொகுத்த புறநானூற்றிலும் குறிக்கப்பட்டன ரென்றல் ஏற்புடையதேயன்றோ?

இவ்வாறு குறுந்தொகையிலுள்ள சொற்றொடர் காரணமாகப் பெயர் பெற்ற புலவர்கள் அப் பெயராலேயே பிறநூல்களில் வழங்கப் பெறுவது போல அந்நூல்களிலுள்ள செய்யுட்பகுதி காரணமாகப் பெயர் பெற்றாரது பெயர் ஒன்றேனும் குறுந்தொகையில் வரவில்லை. இதனாலும் முதலிற் குறுந்தொகை தொகுக்கப்பட்டதென்பது தெளிவாகும்.

எட்டுத்தொகை நூல்கள் ஆசிரியப்பா, கலிப்பா, பரிபாடலென்னும் மூத்திற யாப்புக்களாலானவை. இவற்றின் முறையே செய்யுட்களைத் தொகுக்கத் தொடங்கினவர்கள் முதலில் ஆசிரியப்பாக்களில் தனியாகவுள்ள அகப்பாட்டுக்களைத் தொகுத்து அடிப்பளவால் மூன்று பிரிவாக்கிக் குறைந்த அளவையுடைய குறுந்தொகையை முதலிற் செப்பஞ் செய்தார்களென்று கொள்வது ஒருவகையில் இயைபுடையதாகவே தோற்றுகின்றது. குறிய அளவையுடைய செய்யுட்களாலாயினமையின் இது குறுந்தொகை யெனப்பட்டது. நெடிய செய்யுட்களாலான அகநானூறு நெடுந்தொகை யெனப்பட்டது.

குறுந்தொகை யென்னும் இத்தொகைநூல் அகப்பொருள் பற்றிய ஆசிரியப்பாக்கள் சாசு-ஐயும் கடவுள் வாழ்த்துச் செய்யுளொன்றையும் உடையது.

'இத்தொகை முடித்தான் பூரிக்கோ. இத்தொகைபாடிய கவிகள் இருநூற்றைவர். இத்தொகை நாலடிச் சிற்றெல்லையாகவும் எட்டடிப்பேரெல்லையாகவும் தொகுக்கப்பட்டது'

என்பன இந்நூலெழுதியுள்ள சுவடிகளிற் காணப்படுகின்றன. இத் தொகையைத் தொகுப்பித்தார் இன்னாரென்று தெரியவில்லை. இந் நூற் செய்யுட்களைப் பாடிய புலவர் இருநூற்றைவரென்று காணப்படி னும் பத்துச் செய்யுட்களைப் பாடிய ஆசிரியர் பெயர் ஏடுகளில் இல்லை. இப்பொழுது கிடைத்த அளவிற் பாரதம் பாடிய பெருந்தேவனார் முதல் அம்மூவன் இறுதியாக 206 பெயர்கள் காணப்படுகின்றன. பத் துச் செய்யுட்களின் ஆசிரியர் பெயர் தெரியாதகாலத்தும் ஒருவர் பெயர் மிகுதியாகக் காணப்படுகின்றது. எழுதுவோருடைய பிழையால் ஒரேவகையான பெயர்கள் சில வேறு வேறாகத் தோற்றும்படி சில வேறுபாட்டோடு அமைந்திருத்தலாலும் ஓராசிரியருக்குரிய சிறப்புப் பெயர்மட்டும் ஒரு செய்யுளிலும் இயற்பெயர்மட்டும் மற்றொரு செய் யுளிலும் எழுதப்பட்டிருத்தலாலும் வேறு சில காரணங்களாலும் இத் தொகைவேறுபாடு உண்டாகியிருத்தல் கூடும். சங்க காலத்துப் புலவர் பெயர்களில் இங்ஙனம் உள்ள பிறழ்ச்சி ஆராய்ச்சியாளர்க்கு மிக்க துன்பத்தை விளைவிக்கின்றது.

## அடியளவு

இந்நூற் செய்யுட்கள் நான்கடிச்சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையுமுடையனவென்று மேற்காட்டிய குறிப்பு அறிவிப்பினும் ௩௦௭, ௩௯௧-ஆம் செய்யுட்கள் ஒன்பதடியையுடையனவாகக் காணப் படுகின்றன. இவ்விரண்டனுள்ளும் ௩௯௧-ஆம் செய்யுள் சில பிரதி களில் எட்டடியையுடையதாகச் சில பாட பேதங்களுடன் எழு தப்பட்டுள்ளது. அதனை எட்டடிச் செய்யுளாகவே கொள்ளினும் மற் றொன்றாகிய ௩௦௭-ஆம் செய்யுள் ஒன்பதடிகளை யுடையதாகவே எல் லாப்பிரதிகளிலும் இருக்கின்றது. அடியளவின்படி தொகுத்த குறுந் தொகை, நற்றிணை, அகநானூறு என்பவற்றுள் பின் இரண்டும் கடவுள் வாழ்த்தொழிய நானூறு செய்யுட்களையே யுடையன. அவ்வினத்திற் சேர்ந்த குறுந்தொகையும் ௪௦௦ செய்யுட்களுடையதாகவே கோடல் பொருத்தமாகும். 9 அடிகளையுடைய ௩௦௭-ஆம் செய்யுளைக் குறுந் தொகையிற் சேராததென்று விலக்கின் இந்நூல் மேலே குறித்த வரையறைக்குள் அடங்கிய ௪௦௦ செய்யுட்களை யுடையதாகின்றது.

## பழைய கருத்து

இவற்றிற்குரிய பழைய கருத்துக்கள் தொகுத்தவராலேனும் பிறகாலத்தாராலேனும் அமைக்கப்பட்டிருத்தல்வேண்டும். ஒரு செய்

யுளுக்கே சில இடங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட கருத்துக்கள் இருக்கின்றன. பிற்காலத்தில் உரையாசிரியர்கள் இச்செய்யுட்களை மேற்கோளாகக் காட்டுமிடங்களிற் சிலவற்றிற்குப் பழைய கருத்தைக் கூறாமல் வேறு கருத்தை யமைக்கின்றனர். தொகைநூல்களுள் ஒன்றாகிய புறநானூற்றுக்கு அமைக்கப்பெற்ற துறைகள் இங்ஙனமே பிற்காலத்தாராற் சேர்க்கப்பெற்றன வென்பதை,

> ‘ தத்தம் புதுநூல் வழிகளால் புறநானூற்றிற்குத் துறைகூறினாரேனும் அகத்தியமும் தொல்காப்பியமுமே தொகைகளுக்கு நூலாகலின் அவர் சூத்திரப் பொருளாகத் துறைகூற வேண்டுமென்றறிக ’ (தொல். புறத். 35, உரை)

என்னும் நச்சினார்க்கினியர் எழுத்து வெளியிடுகின்றது.

முன்பு நிகழ்ந்த சில வரலாறுகளோடு தொடர்புடைய பாட்டுக்களும் இக்குறுந்தொகையிற் சேர்க்கப்பெற்றுத் துறை வகுக்கப்பட்டுள்ளன. இறையனார் தருமியின்பொருட்டு எழுதி யளித்த “ கொங்குதேர் வாழ்க்கை ” என்னும் செய்யுளும், வெள்ளி வீதியார் தம் காதலனைப் பிரிந்த காலத்திற் பாடியனவாகிய, “ கன்று முண்ணாது”, “ நிலந்தொட்டுப் புகாஅர் ” என்பனவும், காதலனை இழந்த ஆதிமந்தியார் பாடிய “ மள்ளர் குழீஇய ” என்பதும் இவ்வகையின வாகும். நூலிற்கண்ட துறைகள் சிலவற்றில் இரண்டாவதாக அமைந்ததும், சிலவற்றிற்கு உரையாசிரியர்கள் எழுதுவதும் பிறவற்றைவிடப் பொருத்த முள்ளனவாகத் தோற்றுகின்றன.

## மேற்கோளாட்சி

தொல்காப்பியம் முதலிய இலக்கண நூல்களின் உரைகளிலும் சிலப்பதிகாரம் முதலிய இலக்கியங்களின் உரைகளிலும் இளம்பூரணராதிய உரையாசிரியர்கள் எட்டுத்தொகை நூல்களிலிருந்தும் பல செய்யுட்களையும் செய்யுட் பகுதிகளையும் மேற்கோளாக எடுத்துக் காட்டுகின்றனர். அங்ஙனம் காட்டும் நூல்களுள் ஏனைய தொகை நூல்களைக் காட்டிலும் குறுந்தொகையே மிகுதியாக எடுத்தாளப்படுகின்றது. இதனால் இத்தொகைநூற்செய்யுட்களில் உரையாசிரியர்கள் கருத்துக்கள் பெரிதும் ஈடுபட்டிருந்தன வென்று தெரிகின்றது. இந்நூலுள் இப்பொழுது தெரிந்தவரையில் 165 செய்யுட்களே பிற நூலுரைகளில் மேற்கோளாகக் காட்டப்பெறாதவை. இந்நூலை மேற்

கோளாக எடுத்தாண்ட உரையாசிரியர்கள் :—(1) அகப்பொருள் விளக்க வுரையாசிரியர், (2) அடியார்க்கு நல்லார், (3) அழகிய மண வாளஜீயர், (4) இளம்பூரணர், (5) இறையனாரகப் பொருளுரையாசிரி யர், (6) கல்லாடர், (7) களவியற் காரிகை உரையாசிரியர், (8) காரி ரத்நகவிராயர், (9) குணசாகரர், (10) சங்கர நமச்சிவாயர், (11) சாமி நாததேசிகர், (12) சிவஞான முனிவர், (13) சேனாவரையர், (14) சொக்கப்பநாவலர், (15) தக்கயாகப்பரணி உரையாசிரியர், (16) தண்டி யலங்கார வுரையாசிரியர், (17) தமிழ்நெறிவிளக்க வுரையாசிரியர், (18) திருமயிலையமகவந்தாதி யுரையாசிரியர், (19) திவ்யப்பிரபந்த ஈட்டுவியாக்யானக்காரராகிய நம்பிள்ளை, (20) தெய்வச்சிலையார், (21) நச்சினார்க்கினியர், (22) பரிமேலழகர், (23) புறநானூற்றுரையாசிரியர், (24) பெருந்தேவனார், (25) பேராசிரியர், (26) மயிலேறும் பெரு மாள் பிள்ளை, (27) மயிலைநாதர், (28) யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியர், (29) வைத்தியநாததேசிகர் என்பவர்கள்.

எட்டுத்தொகை நூல்களின் பெயர்களைத் தொகுத்துக்கூறும் வெண்பாவாகிய,

“ நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை ”

என்பதில் இந்நூல் ‘ நல்ல குறுந்தொகை’ என்று பாராட்டப் பெறு கின்றது.

பழைய உரை

“ நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
இதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்”

என்பது நச்சினார்க்கினியர் உரைச்சிறப்புப்பாயிரச் செய்யுளொன்றன் பகுதி. இதன்கண், பேராசிரியர் தம்முடைய கல்வித்திறனும் அறிவு வன்மையும் உலகினர் அறியும்படி குறுந்தொகைக்குப் பொருளெழு தினரென்பதும், இருபது செய்யுட்களுக்கு மட்டும் எழுதவில்லை யென்பதும், அவ்விருபது செய்யுட்களுக்கும் நச்சினார்க்கினியர் உரை

யிட்டனரென்பதும் கூறப்படுகின்றன. நச்சினார்க்கினியர் உரை வகுத்த நூல்களைத் தொகுத்துரைக்கும் செய்யுளாகிய,

" பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்கும்—சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே "

என்பதிலும் நச்சினார்க்கினியர் 'குறுந்தொகையுள் ஐஞ்ஞான்'கிற்கு உரைகண்ட செய்தி காணப்படுகின்றது.

தொல்காப்பியம் அகத்திணையியலில்,

" உள்ளுறை யுவம மேனை யுவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே " (46)

என்னும் சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர் ஏனையுவமம் வந்த செய்யுளுக்கு இந்நூலிலுள்ள, " யானே யீண்டை யேனே " (௫௪) என்பதைக் காட்டி,

'பேராசிரியரும் இப்பாட்டில் மீனெறி தூண்டி லென்றதனை
ஏனையுவம மென்றார்'

என எழுதியுள்ளார். இதனாலும் பேராசிரியர் குறுந்தொகைக்கு உரை யெழுதியிருத்தல் வலியுறுகின்றது; அவர் அங்கங்கே இலக்கணக் குறிப்புக்கள் எழுதியிருக்க வேண்டுமென்பதும் பெறப்படுகின்றது. அவர் உரையெழுதாது விடுத்த இருபது செய்யுட்கள் பின் இருபது செய்யுட்களாக இருத்தல் கூடும்; இடையிடையே பொருள் தோற்றாமல் விட்ட செய்யுட்களெனக் கொள்ளுதல், 'நல்லறிவுடைய தொல்பேராசா'னாகிய அவரது பெருமைக்கு இழுக்காகும். அவர் தம் முதுமையில் குறுந்தொகைக்கு உரையெழுதத் தொடங்கி 380-செய்யுட்களுக்கு எழுதி முடித்தபின்னர் நோய்வாய்ப் பட்டதாலோ பிறகாரணத்தாலோ மேல் எழுத இயலாத நிலையை யடைந்தனரென்றே கொள்ளுதல் ஏற்புடைத்தாகும். பிற்காலத்தில் நச்சினார்க்கினியர் அவ்வரிய உரையைப் பின்பற்றி அதற்கேற்ப எஞ்சிய செய்யுட்களுக்கு உரை எழுதியிருத்தல் கூடும்.

இங்ஙனம் மிகச் சிறந்த இரண்டு உரையாசிரியர்களாலும் எழுதப்பட்ட பழையவுரை இப்பொழுது கிடைக்கவில்லை. இது தமிழர்களுக்கு நேர்ந்ததொரு பெரிய நஷ்டமேயாகும்.

## ஆராய்ந்த முறை

சீவகசிந்தாமணியை நான் முதன்முறை பதிப்பிக்கும் பொருட்டு ஆராய்ந்து வருகையில் அந்நூலுரையில் மேற்கோளாக வந்துள்ள செய்யுட்களும் செய்யுட்பகுதிகளும் இன்ன இன்ன நூல்களைச் சார்ந்தவையென்று முதலில் எனக்கு விளங்கவில்லை. பத்துப்பாட்டு இன்னவை, எட்டுத் தொகை இன்னவையென்று விளக்கமாக அறிந்துகொள்ள முடியாத காலம் அது. சீவகசிந்தாமணியில் உள்ள மேற்கோள்களுக்குரிய ஆகரங்கள் பெரும்பாலனவற்றைக் கண்டு பிடித்து அப்பதிப்பில் அமைத்தேன். அக்காலத்தில் நான் படித்து அறிந்த நூல்களுள் இக்குறுந்தொகையும் ஒன்று.

திருவாவடுதுறைப் புத்தகசாலையிலிருந்து எட்டுத்தொகையில் கலித்தொகை, பரிபாடல் என்னும் இரண்டொழிய ஏனைய ஆறு நூல்களும் எழுதப்பெற்ற ஏடொன்று கிடைத்தது. அக்காலத்தில் அவற்றின் உட்பொருளை அறிந்து இன்புறுவார் அரியராக இருந்தனர். இடையே பலகாலமாகச் சங்கநூல்களைப் படித்தலும் பாடஞ் சொல்லுதலும் அருகிப் போயினமையின் அந்நூல்களைப் பற்றிய உண்மையே தெரியாமல் இருந்தது. ஆதலின் அவ்வேட்டுச் சுவடியில் எழுதுவோர் பொருளறியாக் குறையால் நேர்ந்த பிழைகள் இருந்தன. அதனைப் பிரதி செய்விக்கையில் பிரதி செய்வோர்களால் நேர்ந்த பிழையால் ஒன்றுக்கு மேற்பட்ட பிரதிகள் செய்யப்பெற்றன. அப்பால் நான் ஏட்டுச் சுவடிகள் தேடிய இடங்களில் அடியிற் காட்டியபடி வேறு ஒன்பது பிரதிகள் கிடைத்தன. அவற்றிற் சில பூர்த்தியாக இருந்தன; சில குறையாக இருந்தன.

1. திருநெல்வேலி ஸ்ரீ அம்பலவாண கவிராயரவர்கள் ஏட்டுப் பிரதி
2. மந்திந் தோப்புமடத்திற் கிடைத்த ஏட்டுப் பிரதி
3. செங்கோல் மடத்திற் கண்ட குறையான ஏட்டுப் பிரதி
4. திருமயிலை வித்வான் ஸ்ரீ சண்முகம் பிள்ளையவர்கள் கடிதப் பிரதி
5. சோடசாவதானம் ஸ்ரீ சுப்பராய செட்டியாரவர்கள் ஏட்டுப் பிரதி
6. கொழுவூர் ஸ்ரீ வேலாயுத முதலியாரவர்கள் ஏட்டுப் பிரதி
7. சென்னை இராசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலை ஏட்டுப் பிரதி

8. புதுக்கோட்டை ஸ்ரீ ராதாகிருஷ்ணையரவர்கள் கடிதப் பிரதி

9. திருக்கோணமலை ஸ்ரீ தி. த. கனகசுந்தரம் பிள்ளையவர்கள் கடிதப்பிரதி.

இவற்றிற் சிலவற்றைப் பார்த்துக்கொண்டு உரியவர்களிடம் கொடுத்துவிட்டேன். இவற்றையன்றிப் பிரயாணங்களிற் கண்ட சில பிரதிகளோடு ஒப்பு நோக்கிப் பிரதிபேதங்கள் குறித்துக்கொண்டதும் உண்டு. மேலே குறித்த பிரதிகளுள் 4, 9 என்னும் எண்ணுள்ள கடிதப் பிரதிகள் இரண்டையும் மீண்டும் ஒருமுறை பார்க்கவிரும்பிய காலத்தில், அவற்றை வருவித்து வைத்திருந்த சென்னைச் சர்வகலா சாலைத் தமிழாராய்ச்சிக் கழகத்தலைவர் ஸ்ரீமான் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்கள், பி.ஏ., பி.எல்., அன்போடு உதவினார்கள். இப்பிரதிகள் யாவும் பெரும்பாலும் ஒரே மூலச்சுவடியின் பிரதிகளாகவே தோற்றின. எழுதுவோரால் நேர்ந்த பிழைகளும் மாற்றங்களும் ஒவ்வொன்றிலும் காணப்படுகின்றன. குறுந்தொகையின் பழைய உரை எங்கேனும் கிடைக்குமோவென்று அலைந்து தேடிப்பார்த்தும் கிடைக்கவில்லை. அதன்மேல், கிடைத்தலரிதென்ற கருத்து உண்டானமையின் அம்முயற்சியை விட்டுவிட்டேன்.

குறுந்தொகைப் பிரதிகளை ஒப்பு நோக்கிய பிறகு தொல்காப்பிய உரை முதலியவற்றைப் படித்து அங்கங்கே மேற்கோளாக ஆளப்பட்ட இந்நூற் செய்யுட்களையும் செய்யுட்பகுதிகளையும் தொகுத்து அவற்றிற் கண்ட பாடபேதங்களையும் குறித்துக்கொண்டேன். இம்முயற்சியால் பல அருமையான திருத்தங்கள் கிடைத்தன ; பல ஐயங்கள் நீங்கின.

அப்பால் குறுந்தொகையின் மூலத்திற் காணப்படும் அரும்பதங்கள், சொற்றொடர்கள், உவமைகள், செய்திகள் முதலியவற்றிற்கு ஓரகராதியும் புலவர் பெயர்களுக்கு ஓரகராதியும் எழுதிவைத்துக் கொண்டேன். ஒரே புலவர் பாடிய செய்யுட்களைத் தொகைநூல்களிற் படித்தறிந்த காலத்தில் அவற்றினுட் காணப்படும் ஒப்புமையாலும் சொல்லாட்சியாலும் இந்நூற்பகுதிகள் சில விளங்கின.

இங்ஙனம் பலவகையான குறிப்புக்களும் அகராதிகளும் எழுதிவைத்துக்கொண்டு பொருள்வரையறை செய்யத் தொடங்கினேன். நாளடைவில் பெரும்பாலான செய்யுட்களின் பொருள்கள் விளங்கின ; 'இனி இதனை அச்சிட்டு வெளிப்படுத்தலாம்' என எண்ணியிருந்

தேன். இடையே, வாணியம்பாடி ஹைஸ்கூலில் தமிழ்ப்பண்டிதராக இருந்த தி. சௌ. அரங்கசாமி ஐயங்காரென்பவர் குறுந்தொகைக்கு உரையெழுதி 1915-ஆம்ஆண்டு பதிப்பித்து வெளியிட்டனர். அப்பால் குறுந்தொகை ஆராய்ச்சியில் எனக்கிருந்த ஊக்கம் சிறிது தளர்ந்தது. பிற நூலாராய்ச்சியிற் கருத்தைச் செலுத்தலானேன். பின்பும் சிலர் சில பத்திரிகைகளில் இந்நூலை வெளியிடுவதாகக் கேள்வியுற்றேன். 1933-ஆம்ஆண்டு புரசபாக்கம் ஸர் எம். ஸி. டி. ஹைஸ்கூலில் தமிழ்ப் பண்டிதராகவுள்ள ஸ்ரீமான் வித்வான் சோ. அருணாசல தேசிகரவர்கள் குறுந்தொகை மூலத்தைமட்டும் பதிப்பித்து வெளியிட்டார்கள். பழைய உரை இல்லாமையால் புதிய உரை எழுதி இந்நூலை நான் வெளியிட வேண்டுமென்ற கருத்து, சில தமிழன்பர்களுக்கு இருந்ததை உணர்ந்தேன். பல அன்பர்கள் அடிக்கடி தூண்டிவந்தார்கள். முற்கூறிய ஐயங்காரவர்கள் உரைப்பிரதி இப்பொழுது எங்கும் கிடைக்கவில்லை. பல வருஷங்களாக உழைத்துத் தொகுத்த குறிப்புக்கள் வீணாகாமல் இருக்கும் பொருட்டு இந்நூலை வெளியிடவேண்டுமென்ற எண்ணம் எனக்கு மீண்டும் உண்டாயிற்று. அதனால் இந்நூலாராய்ச்சியைத் தொடர்ந்து நடத்திவரலானேன். குறிப்புக்களும் ஒப்புமைப்பகுதிகளும் உரைப்பகுதிகளும் எழுதித் தொகுக்கப்பட்டன. அவ்வப்போது என்னோடு இருந்து பழகுபவர்கள் பலர் இவ்வாராய்ச்சிக்கு உதவியாக இருந்தனர்.

பேராசிரியரும் நச்சினார்க்கினியரும் உரை யெழுதிய இந்நூலுக்கு உரையெழுதும் தகுதி என்பாற் சிறிதுமில்லை யென்பதையும் என் முதுமையாலும் பலவேறுவகையான முட்டுப்பாடுகளாலும் எனக்குண்டாகியுள்ள தளர்ச்சியையும் நன்குணர்ந்திருப்பினும் இளமை தொடங்கி இவ்வுலகில் யாதினும் சிறந்ததாக எண்ணி வாழ்ந்து வருதற்குக் காரணமாகிய தமிழிடத்துள்ள அன்பும், எங்ஙனமேனும் இறைவன் இம் முயற்சியை நிறைவேற்றியருளுவானென்ற துணிவும் இப்பதிப்பில் என்னை ஈடுபடச்செய்தன.

## சர்வகலாசாலையார் உதவி

என்கருத்தை அன்பர்கள் சிலரால் அறிந்த ஸ்ரீமான் டி. சிவராம சேதுப்பிள்ளையவர்கள் 1934-ஆம் வருஷம், தாம் தலைவராகவிருந்த தமிழ்ப்பாட புத்தகசபையின் மூலம் இப்பதிப்புக்குரிய உதவி சென்னைச் சர்வகலாசாலையாராற் கிடைக்கும்படி செய்வித்தார்கள்.

அவர்களுடைய நன்முயற்சியையும் தமிழ்ப்பாஷாபிமானத்தையும் மிகவும் பாராட்டுகின்றேன். சர்வகலாசாலையார் ஆயிரத்தைந்நூறு ரூபாய் பொருளுதவி செய்வதாகத் தீர்மானித்து ஐந்நூறு ரூபாய் முதலில் கொடுத்துதவினார்கள். அவர்களுடைய ஆதரவின்றேல் இப்பதிப்பு இப்பொழுது வெளிவந்திராது. இவ்வளவு வருஷங்களாக நான் வெளியிட்டுவரும் நூற்பதிப்புக்களுக்கு இதைப் போன்ற பேருதவி கிடைத்ததில்லை யென்பதைத் தமிழ் நாட்டினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## பதிப்பு

குறுந்தொகைச் செய்யுட்களுக்கு உரையெழுதுகையில் பிரசங்க நூற் செய்யுட் போக்கையும் இலக்கண இலக்கியங்களில் உரையாசிரியர்கள் புலப்படுத்திச் செல்லும் மரபுகளையும் இயன்றவரையில் உணர்ந்து எழுதலானேன். உரைகளில் உரையாசிரியர்கள் இந்நூலிலிருந்து மேற்கோள் காட்டும் செய்யுட்களுக்குச் சில இடங்களில் உரையெழுதி யிருக்கிறார்கள். அவை எனக்குப் பெருந் துணையாக இருந்தன.

இப்பதிப்பில் நான் மேற்கொண்ட சில முறைகளை இங்கே தெரிவிக்க விரும்புகிறேன்:

1. கூற்று:—ஒவ்வொரு செய்யுளும் இன்னாருடைய கூற்றென்பதைத் தலைப்பில் அமைத்திருக்கிறேன். திணைப்பெயரைத் தலைப்பிவிடுதல் அகநானூற்றிற் கண்டதாயினும் பொருளிற் கருத்துச் செல்வதற்கு இம்முறை தக்கதென்று தோற்றியது. அன்றியும், தொல்காப்பியத்திற் கூற்று வகையாகச் சூத்திரங்கள் வகுக்கப்பட்டிருத்தலும் இங்ஙனம் அமைக்கும் கருத்தை உண்டாக்கியது. சில செய்யுட்களில் இரண்டு பழைய கருத்துக்கள் இருக்கின்றன. அவற்றில் முதற் கருத்தின்படியே கூற்று அமைக்கப்பட்டது.

2. கூற்று விளக்கம்:— இது, பழைய கருத்தையும் செய்யுட் பொருளையும் இணைத்துச் சுருக்கமாக வரையப்பட்டது. இரண்டு கருத்துள்ள இடங்களில் முதற்கருத்துக்கே இவ்விளக்கம் எழுதப்பட்டது.

3. மூலம்:—ஏட்டுச் சுவடிகளை ஆராய்ந்து பொருட் சிறப்புடைய பாடங்களையே கொடுத்திருக்கிறேன்.

4. பிரதி பேதம்:—ஏட்டுச் சுவடிகளாலும், உரையாசிரியர்கள் உரைகளில் காட்டிய மேற்கோட் பகுதிகளாலும் தெரிந்த பாடங்க

ளுள் முக்கியமானவை அடிக்குறிப்பிற் காட்டப்பெற்றன. ஏனை யவை தனியே தொகுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவற்றிற் பல மிகவும் பிழையுள்ளனவாக இருப்பினும் பழைய நூல்களில் நம் நாட்டவர்களுக்கு இடைக்காலத்தே இருந்த புறக்கணிப்பை நன்கு வெளிப்படுத்தும். பொருள் வரையறை செய்யாமல் உள்ளதை உள்ள படியே பிரதி செய்து வந்தவர்கள் ஓரெழுத்தை மற்றோரெழுத்தாகக் கொண்டு எழுதி விட்டதனாலும் தெரியாத இடங்களில் தாமே ஊகித் துப் புதியனவாக எழுதிச் சேர்த்து விட்டமையாலும் உண்டான மாறுபாடுகள் அளவில. பழம்பிரதிகளில் ஈகார ஏகாரங்களின் பின்னர் யகரவொற்று எழுதப்பட்டிருந்தது. ஆய்தவெழுத்தை எழுதவேண்டிய விடத்தில் குகரம் எழுதப்பட்டிருந்தது; சில விடங் களில் இவ்விரண்டுமே காணப்படும். மகர ழகரங்கள், ழகரளகரங் கள், சகர சகர தகரங்கள், தந்கர றன்னகரங்கள், லகர வகரங் கள், ரகர றகரங்கள் என்பவை ஒன்றனுக்கொன்று மாறாக எழுதப் பட்டிருக்கும். டு, ரு, கு என்பனவும் அ, கு, சு என்ற மூன்றும் தமக்குள் வேற்றுமை தெரியாதபடி இருந்தன. 'ற்ற' என வரு மிடங்களில் 'த்த' என்ற பாடம் காணப்பட்டது. ஓரிடத்தில் காசினை யென்பதில் கா வென்னுமெழுத்து, தூவென மாறி அதன் பின் ஒரு சகர வொற்றுத் தோன்றித் தூச்சினையென்றெழுதப்பட் டிருந்தது. இங்ஙனம் பல பிரதிகளிலும் காணப்பட்ட பாடங்களையும் அவற்றின் மாறுபாட்டின் வரலாற்றையும் விரிக்கின் மிகப் பெருகும்.

5. பழைய கருத்து :—கருத்திற் பொருத்தமில்லாத சொற்கள் நகலேளைவுக்குள் அமைக்கப்பட்டன. இதிலுள்ள சில கடினமான சொற் களுக்குப் பொருள் இருதலைப் பகரத்துள் அமைக்கப்பட் டிருக்கின் றது. சில செய்யுட்களுக்கு இரண்டு கருத்துக்கள் இருக்கின்றன.

6. ஆசிரியர் பெயர்கள் :—சுவடிகளில் இருந்தவாறே இப்பெயர் கள் அமைக்கப்பெற்றன.

7. பதவுரை :—அந்வயப்படுத்திப் பொருள் விளங்குதற்குரிய சொற்களைப் பெய்து பதவுரை எழுதப்பட்டுள்ளது; பல விடங்களில் விளி முன்னத்தால் வருவித்தெழுதப்பட்டது. சில செய்யுட்களுக்கு ஒருவாறு உரை யெழுதினும் முடிபு முதலியன தெளிவாக இன்மை யின் என் மனத்திற்குத் திருப்தி உண்டாகவில்லை.

8. முடிபு :—வினை முடிபு இத்தலைப்பிற் காட்டப்பட்டது.

9. கருத்து :—செய்யுளின் கருத்துச் சுருக்கமாக எழுதப்பட்டது.

10. விசேடவுரை:—பதசாரங்களும், இலக்கணச் செய்திகளும், பொருள் விளக்கங்களும், வரலாறுகளும் இப்பகுதியில் எழுதப்பட்டுள்ளன. உள்ளுறையுவமம், இறைச்சி யென்னும் இரண்டும் குறிப்பெனவே குறிக்கப்பட்டுள்ளன.

11. மேற்கோளாட்சி :—இலக்கண இலக்கியங்களின் உரைகளில் உரையாசிரியர்கள் இந்நூற் செய்யுட்களையும் செய்யுட் பகுதிகளையும் காட்டிய இடங்கள் அடிவரிசைப்படி வகுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவை, தெரிந்தவரையில் உரையாசிரியர்களின் காலமுறையில் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன. சில இடங்களில் உரையாசிரியர்களுடைய கருத்துக்கள் அடிக்குறிப்பில் விளக்கப்பட்டன.

12. ஒப்புமைப் பகுதி:—இந்நூற் செய்யுட்களின் சொற்பொருளோடு ஒப்புமையையுடைய பிறநூற் செய்யுட்களும் செய்யுட்பகுதிகளும் ஒப்புமைப் பகுதியென்னும் தலைப்பிற் காட்டப்பட்டன. இதிற் பெரும்பாலும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை, சிந்தாமணி யென்னும் நூல்களின் பகுதிகளே காணப்படும். கருத்தை நன்கு விளக்குவனவாகிய பிற்காலத்து நூற்பகுதிகள் சிறுபான்மையாகவே இருக்கும். இவ்வொப்புமைப்பகுதி சங்க நூற்பொருள்களை ஆராய்வாருக்குப் பெரிதும் பயன்படும். பாடங்களை நிச்சயம் செய்வதற்கு இவ்வொப்புமைப் பகுதிகள் சிலவிடங்களில் உதவின. இதிற் காட்டப்பட்ட செய்யுட்பகுதி குறுந்தொகைச் செய்யுளை இயற்றிய புலவரால் பாடப்பெற்றதாக இருப்பின் அங்கே உடுக்குறியிட்டுக் கீழ்க்குறிப்பில் இன்னார் பாட்டென்று காட்டப்பட்டுள்ளது.

நூலின் மூலமும் உரையும் அடங்கிய பகுதிகள் மேலே கண்ட முறையில் வகைப்படுத்திப் பதிப்பிக்கப்பட்டன. நூலிற்கு அங்கமாகச் செய்யுள் முதற்குறிப்பகராதியும், அரும்பத முதலியவற்றின் அகராதியும் நூலின்பின்னே சேர்க்கப்பட்டன.

இம் முகவுரையின்பின்னே நூலாராய்ச்சியும் ஆசிரியர் பெயரகராதியும், பாடபேதங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. நூலாராய்ச்சியில் இந்நூலாலறிந்த பலவகைச் செய்திகளையும் பண்டைக்காலத்

துத் தமிழ் மரபுகளையும் வேறுபலவற்றையும் காணலாம். இந்நூற் செய்யுட்களைப் பாடிய புலவர்களின் சரித்திரத்தைப் புறநானூறு முதலிய பதிப்புக்களில் எழுதியிருப்பது போல எழுத எண்ணியிருந்தேன். அப்பதிப்புக்களில் எழுதிய பிறகு நான் செய்துவந்த ஆராய்ச்சியினால் தெரிந்த செய்திகள் பல. அவற்றையும் அமைத்துப் புலவர் சரித்திரங்களைத் தனியே வெளியிட எண்ணியிருத்தலின் இந்நூலில் ஆசிரியர் வரலாறுகளை எழுதாமல், அவர்கள் பெயர்களையும் அவர்கள் இயற்றிய செய்யுளெண்களையும் மாத்திரம் காட்டியிருக்கின்றேன்.

முதலில் நான் கருதியபடி யல்லாமற் பல புதிய விஷயங்களைச் சேர்க்க நேர்ந்தமையின் எதிர் பார்த்ததைவிட அதிககாலம் இப்பதிப்புக்கு ஆயிற்று.

## உதவிய அன்பர்கள்

இந்நூலை ஆராய்ந்து வந்த காலங்களிலும் பதிப்பித்தகாலத்திலும் பல அன்பர்களுடைய உதவியைப் பெற்றிருக்கின்றேன். அவர்களுள் முக்கியமானவர்கள் என்னுடைய இளைய சகோதரர் சிரஞ்சீவி வே. சுந்தரேசையரும், சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் சிரஞ்சீவி வித்துவான் வி. மு. சுப்பிரமணிய ஐயரும், சிரஞ்சீவி வித்துவான் கி. வா. ஜகந்நாதையரும் ஆவர்.

முன்பு குறிப்பிட்ட என் பிராய முதிர்ச்சியாலும் சரீரத் தளர்ச்சி முதலியவற்றாலும் முன்போல எந்தக் காரியத்தையும் நான் கருதியபடி தனியே இருந்து நிறைவேற்ற இயலவில்லை. ஆயினும் தமிழ்நூல்களை ஆராய்ந்து பதிப்பித்தலில் உள்ள ஆவல் இன்னும் தணியவில்லை. தமிழ்த்தெய்வமே அவ்வப்பொழுது என்கவலையை நீக்கிவருவதாக எண்ணுகின்றேன். கலாநிலையமாகிய சென்னைச் சர்வகலாசாலையாருடைய பேராதரவால் வெளிவரும் இந்நூற் பதிப்பு, தமிழன்பர்கள் எதிர்பார்க்கிறபடி திருப்திகரமாக அமைய வேண்டுமேயென்ற கவலை எனக்கு உண்டு. இச்சமயத்தில் மேற்கூறிய வித்துவான் சிரஞ்சீவி கி. வா. ஜகந்நாதையர் இந்நூலுக்கு நான் பல வருஷங்களாக எழுதியும் தொகுத்தும் வைத்துள்ள பலவகையான ஆராய்ச்சிக் குறிப்புகளையெல்லாம் என்கருத்துக் கிணங்க முறைப்படுத்தி நல்லவடிவத்தில் அழகுபெற அமைப்பதிற் பெரிதும் துணைபுரிந்தார். அவருடைய பேராற்றலையும் எழுதும் வன்மையையும்

தமிழன்னையையும் என் மனமாரப் பாராட்டுகின்றேன். அவருக்கு எல்லா நன்மைகளையும் அளித்தருளும்வண்ணம் தோன்றாத்துணையாக நிற்கும் முழுமுதற் கடவுளை இறைஞ்சுகின்றேன்.

பல வருஷங்களாக முயன்று படித்துப் பலருடைய உதவியைப் பெற்று ஆராய்ந்து ஆராய்ந்து சுவைத்துப்பார்த்த இந்நூல் இப்பொழுது இந்த உருவத்தில் வெளிவருவதைப் பார்க்கையில் எனக்கு உண்டாகும் இன்பம் எழுதி உணர்த்துதற்கரியது. தமிழன்னையின் திருவடித்துணைகளில் இப்பதிப்பும் ஒரு மணமற்ற சிறு மலராக வேனும் கிடந்து நிலவுமென்பது எனது கருத்து.

எனக்குள்ள பலவகையான குறைகளால் இப்பதிப்பிற் பல பிழைகள் நேர்ந்திருத்தல் கூடும். அவற்றை அன்பர்கள் பொறுத்துக் கொள்வார்களென்று எண்ணுகிறேன். இம்முயற்சியை நிறைவேற்றி வைத்த திருவருளை வழுத்தி வாழ்த்துகின்றேன்.

"தியாகராஜ விலாசம்"
திருவேட்டீசுவரன் பேட்டை
12—8—1937

இங்ஙனம்,
**வே. சாமிநாதையர்**

# நூலாராய்ச்சி

## முன்னுரை

சங்கமருவிய நூல்களின் சொற்பொருட் போக்குக்கும் பிற்கால நூல்களின் போக்குக்கும் பலவகையில் வேற்றுமை உண்டு. பழைய காலத்தில் நல்லிசைப்புலவர்கள் அமைத்த புலனெறிவழக்கத்திற் பலவகை மரபுகள் பிற்காலத்தில் வழக்கொழிந்தன. பிற்காலத்தாருடைய நூல்களிற் பல புதிய அமைப்புக்கள் காணப்படுகின்றன. நாளடைவில் உலகத்தில் மக்களின் நடையுடை பாவனைகள் வேறுபடுவது போலவே நூல்களின் நடை முதலியனவும் வேறுபடுதல் இயல்பேயாகும்.

சங்கச் செய்யுட்களிலே சில வரையறைகள் உண்டு. இன்ன பொருளை இன்னவாறு அமைக்கவேண்டுமென்ற மரபு பிறழாமற் புலவர்கள் செய்யுட்களை இயற்றினர். அங்ஙனம் அச்செய்யுட்கள் வரையறைக்குள் அடங்கினும் அவர்களுடைய மனோபாவமும் அதனை வெளியிடும் முறையும் சொற்பொருட் செறிவும் தனிச் சிறப்போடு விரிந்து விளங்குகின்றன. இயற்கையோடு பழகி இயற்கையழகில் ஈடுபட்டு அவ்வியற்கையின் பலவகைக் கோலங்களைச் சொற்சித்திரங்களால் உருப்படுத்திக் காட்டும் அவர்களுடைய பேரறிவின் திறம் யாவரும் வியத்தற்குரியது.

புறத்தே தோன்றும் காட்சிகளைச் செய்யுட்களிற் புனைந்து காட்டும் ஆற்றலினும் அகத்தே தோன்றும் கருத்துக்களை உணர்ச்சியும் மெய்ப்பாடும் புலப்பட உரைக்கும் ஆற்றல் மிகவும் சிறந்தது. இவ்வகையாற்றலையுடைய கவிஞர்களே அறிஞர்களுடைய பெருமதிப்பை அடைகிறார்கள்.

உலகிலுள்ள பொருள்களைக் *காட்சிப்பொருள் கருத்துப் பொருளென இருபெரும் பிரிவாகப் பிரித்துக் கூறுவர். காட்சிப் பொருளா

---

* தொல். அகத். 1, ந. காட்சியென்பது தலைமைபற்றி ஐம்பொறியுணர்வையும் குறித்து நின்றது.

வன ஐம்பொறி யுணர்வுக்கு உட்பட்டவை. கருத்துப் பொருளாவன மனனுணர்வால் அறியப்படுவன. தம் செய்யுட்களைப் படிப்பவர்களுடைய அகக்கண்ணின்முன் இவ்விருவகைப் பொருள்களையும் தோற்றச்செய்யும் ஆற்றல் சங்ககாலத்துப் பெருங்கவிஞர்கள்பால் குறைவற நிரம்பியிருந்தது. இயற்கைப் பொருள்களின் இயல்புகளை அவர்கள் செய்யுளிற் பரக்கக் காணலாம்; அன்பு, வீரம் முதலிய பண்புகளை வெளிப்படுத்தும் செய்யுட்கள் பல. கருத்துப் பொருளாகிய அன்பின்வழி நிகழும் பலவகை நிகழ்ச்சிகளைக் கூறும் அகப்பொருள், அவர்களுடைய கவி மலரும் சோலை. இப்பொழுது நமக்குக் கிடைக்கும் சங்கநூல்களுள் அகப்பொருள் பற்றியனவே அதிகமானவை.

ஒத்த அன்பால் ஒரு தலைவனும் ஒரு தலைவியும் *பால்வழியுய்க்கப் பட்டு அளவளாவியகாலத்துப் பிறந்த இன்பம் அக் கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதொரு பொருளாதலின் அதனை அகமென்றனர். இப்பொருள்பற்றிய புலனெறி வழக்கத்தின் இலக்கணத்தைத் தொல்காப்பியப் பொருளதிகாரமும், இறையனாரகப்பொருள் முதலிய நூல்களும் உணர்த்துகின்றன.

இங்ஙனம் உணர்த்தப்படும் அகப்பொருள் ஐந்து திணையாகப் பகுக்கப்பட்டு ஒவ்வொன்றும் முதல், கரு, உரியென்னும் மூவகையாலும் செய்யுளில் விரிக்கப்படும். முதலென்பன நிலமும் காலமும்; கருவென்பன தெய்வம் முதலியன; உரியென்பன திணைக்குரிய ஒழுக்கங்கள். இவ்வரையறைகள் புலவர்களால் இயற்றப்பெறும் கவியமைப்புக்கு உரியனவேயன்றி உலகியலுக்கு உரியனவல்ல. ஆனால் இவற்றிற் சில மட்டும் உலகியலுக்கு ஏற்புடையனவாகும்.

"நாடக வழக்கினு முலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்"

(தொல். அகத். 56)

என்னும் சூத்திர உரையில் இளம்பூரணர்,

'நாடக வழக்காவது சுவைபட வருவன வெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல். அஃதாவது செல்வத்தானும் குலத்தானும் ஒழுக்கத்தானும் அன்பினானும் ஒத்தார் இருவராய்த்

* பால் - ஊழ்வினை.

தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும், அவ்வழிக் கொடுப்போரும் அடுப்போருமின்றி வேட்கை மிகுதியாற் புணர்ந்தா ரெனவும், பின்னும் அவர் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகை யான் வரைந்தெய்தினரெனவும், பிறவும் இந்திகரனவாகிச் சுவைபட வருவன வெல்லாம் ஒருங்கு வந்தனவாகக் கூறல். உலகியல் வழக் காவது உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்துவருவது'

என வரைவனவற்றால், கவியின் சுவை காரணமாக இத்தகைய வரையறைகள் கொள்ளப்பட்டன வென்பதும், சில நிகழ்ச்சிகள் உலகியலோடு ஒத்து வருமென்பதும் அறியப்படும். பெரும்பான் மையும் நாடக வழக்கே அமைதலின் அதனைத் தொல்காப்பியர் முன்னர்க் கூறினர் போலும். நாடக வழக்கு, கவிஞர்களுடைய உள்ளத்தால் கற்பனை செய்யப்பட்டுப் படிப்போருக்கு இனிமை பயப்பது. இறையனாரகப்பொருள் உரையாசிரியர் இவ்வொழுக லாற்றை,

'இல்லது, இனியது, நல்லதென்று புலவரால் நாட்டப்பட்ட தோர் ஒழுக்கமாதலின் இதனை உலக வழக்கினோடு இயையா னென்பது' (சூ. 1, உரை)

எனக் கூறுவதும் காண்க.

எனவே, கவிகள் தம்முடைய கற்பனை ஆற்றலால் பலவகைச் சுவைபொருந்தக் காட்சிப் பொருளையும் கருத்துப்பொருளையும் புனைந் துரைத்துச் சிறுபான்மை உலகியலோடும் பொருந்த நல்ல பொருளை யமைத்துக்காட்டிய செய்யுட்களே இவ்வகப்பொருட் செய்யுட்களா மென்பது தெரியவரும். இவற்றிற் கூறியபடியே உலகியல் நிகழ வேண்டுமென்பது வரையறையன்று; இவையனைத்தும் உலகியலுக் குப் புறம்பானவையென்று கொள்ளுதலும் தக்கதன்று.

இச்செய்யுட்களிற் காணப்படுவனவாகிய தலைவன் தலைவிய ரிடையே வளரும் அன்புநிலை, அவர் இல்லறம் நடத்தும் முறை முதலியன உலகியலைச் செம்மைப்படுத்தும் தன்மையின. இளம் பூரணர் எடுத்துக்காட்டியனவாகிய தலைவன் தலைவியருடைய ஒப்பு முதலியன செய்யுளுக்காக அமைத்துக்கொண்டவை. இங்ஙனமே சிறந்த தகுதி வாய்ந்தாரையே காப்பியத்துக்குத் தலைவராக அமைக்க வேண்டுமென்று பிற்காலத்திற் காப்பிய இலக்கணம் கூறுவது கவிஞ னுடைய சிறந்த மனோபாவங்கள் வெளிப்பட்டு இன்சுவையை உண் டாக்குமென்னும் காரணம் பற்றியேயாகுட

முதல், கரு, உரியென்னும் மூவகைப் பொருள் வரையறையும கவிச்சுவையை மிகுதிப்படுத்தவே போந்ததென்று தோற்றுகின்றது. உலகத்திற் குறிஞ்சி நிலத்துள்ளாரே அளவளாவுவது, பாலை நிலத்துள்ளாரே பிரிவது, முல்லை நிலத்துப் பெண்டிரே தலைவரைப் பிரிந்து ஆற்றியிருப்பது, மருத நிலத்தினரே ஊடுவது, நெய்தனிலத்தினரே இரங்குவது என்ற வரையறையில்லை; ஆனால் கவிஞன் அமைக்கும் உலகத்திலோ இவ்வரையறைகள் காணப்படுகின்றன. இது நாடக வழக்காகும். நாடகத்தில் அரங்கில் நிகழும் நிகழ்ச்சிக்கு ஏற்ற களனொன்றை நாடகப் புலவன் அமைத்துக் கொள்வதும், ஓவியப் புலவன் தான் எழுதப்புகும் ஓவியத்திற்கு ஏற்ற நிலைக்களனை எழுதிக் கொள்வதும் போன்றது இது. பிரிவைப் புனையும் ஆசிரியன் துன்ப உணர்ச்சியை மிகுதிப்படுத்தவேண்டி நீரில்லாத வறுஞ்சுரத்தையும், ஓய்ந்த யானையையும் தான் கூறும் நிகழ்ச்சியோடு இயைபு படுத்துகின்றான். இன்ப உணர்ச்சியை மிகுதிப் படுத்தவேண்டித் தலைவனும் தலைவியும் ஒருவரை யொருவர் காணும் நிகழ்ச்சியை, * 'சந்தனமும் சண்பகமும் தேமாவும் தீம்பலவும் ஆசினியும் அசோகமும் கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்து நாகமும் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்து பாதிரியும் பரவை ஞாழலும் பைங்கொன்றையொடு பிணியவிழ்ந்து பொரிப்புன்கும் புன்னாகமும் முருக்கொடுமுகை சிறந்து வண்டறைந்து தேனார்ந்து வரிக்குயில்கள் இசைபாடத் தண்டென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவுசெய்யும் பொழிலகநடுவண்' அமைத்துக் காட்டுகின்றான்.

இவ்வாறே மற்ற நிலங்களுக்கும் அவ்வந் நிலத்தில் நிகழும் ஒழுக்கத்திற்கும் இயைபிருத்தலை அறியலாகும். நிலத்தைப்போலவே கால வரையறையும் கவிச்சுவையைப் பெருக்குதற்கு அமைந்தது. அவ்வத்திணையின் ஒழுக்கத்திற்கு இலக்கணத்தில் வரையறுக்கப்பட்ட காலங்கள் ஏற்புடையனவாதலை நச்சினார்க்கினியர் † தொல்காப்பியப் பொருளதிகார உரையில் விளக்கிச்செல்கின்றார்.

கருப்பொருள்கள் ஒவ்வொருவகை நிலத்தின் இயல்பையும் அறிந்து அமைக்கப்பட்டன. அவை உலகியலோடு ஒத்தன. நல்லிசைப் புலவர்கள் மரம், விலங்கு, பறவை முதலியவற்றின் இயல்புகளை நன்றாக உணர்ந்து வெளிப்படுத்தியிருக்கிறார்கள்.

---

* இறை. 2, உரை. † தொல். அகத். 6, 8, 9, உரை.

உரிப்பொருளாவது புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் ஆகிய இவ்வைந்தும் இவற்றின் நிமித்தங்களும் ஆகும். இப்பொருளே முதல் கருவென்னும் இரண்டைக் காட்டிலும் சிறந்தது. பிறபொருள்கள் தம்முள் மயங்கினும் உரிப்பொருள் மயங்குதல் தகாதென்பது இலக்கணம்.

முதல், கரு என்னும் இரண்டும் உரிப்பொருளாகிய நாடக நிகழ்ச்சிக்கு நிலைக்களனாக உதவுகின்றன. அவ்விரண்டும் பெரும்பாலும் காட்சிப்பொருள் வகையைச் சார்ந்தன. அவற்றை நல்லிசைப் புலவர்கள் அமைத்துச் செய்யுள் புனைகையில் நாம் அக்காட்சிகளில் ஒன்றிவிடுகின்றோம். உரிப்பொருளை அமைக்கும்போது கவியினுடைய இணையற்ற பாவிகத்தை யறிந்து மகிழ்கின்றோம்.

சங்ககாலத்துப் புலவர் பெருமக்களின் கவியாற்றலை அறிந்து கொள்வதற்கு இக் குறுந்தொகையும் ஒரு கருவியாகும். இதன்கண் அகநானூற்றைப்போல முதல் கருப்பொருள்களைப் பற்றிய செய்திகள் விரிவாகக் காணப்படவில்லை; திருக்குறளைப்போல அறவே நீக்கப்படவுமில்லை. இலக்கண அமைதி நன்குடையதாகி விரிவும் சுருக்கமும் இன்றி இயற்கைக் காட்சிகளின் எழில் நலங்களையும், அகனைந்திணை யொழுக்கங்களையும், பண்டைக்கால நாகரிகச் சிறப்பையும், வேறு பல அரிய பொருள்களையும் விளக்கிக்கொண்டு நிற்பது இக் குறுந்தொகை.

## ஐவகை நிலச்செய்திகள்

### குறிஞ்சி

இந்நூலுள் ஐந்து நிலங்களின் இயல்புகளும் நிகழ்ச்சிகளும் அங்கங்கே நல்லிசைச் சான்றோரால் புலப்படுத்தப்படுகின்றன. குறிஞ்சிச் செய்திகளைப் பாடுதலில் கபிலர் மிக்க திறமைவாய்ந்தவர். வேறு புலவர் பலரும் அத்திணையின் வளத்தை மிக அழகாக அமைத்துக் காட்டுகின்றனர்.

குறுந்தொகையிலுள்ள குறிஞ்சி நிலங்களில் அந்நிலத்திற்குப் பெயரை யளித்த குறிஞ்சி மலரைக் காண்கின்றோம். * கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு வண்டுகள் பெரிய தேனை இழைக்கின்றன.

---

* குறுந். ௩.

அந்நிலத்து வாழ்வோர்களைக் கானவன், குறவன், புனவன் என்று வழங்குவர்; மகளிரைக் கொடிச்சியரென்பர். தலைமகன் நாடன், வெற்பனென்னும் திணைநிலைப் பெயர்களால் வழங்கப் படுகின்றான்.

குறவர்கள் மரங்களை வெட்டி அவற்றைச் சுட்டபின்னர் அந் நிலத்தில் தினை, ஐவனம் முதலியவற்றை விதைத்து அருவிநீரால் விளைப்பார்கள். தினையோடு பருத்தி அவரை யென்பவற்றையும் இடையிட்டு விளைப்பதும் உண்டு. தம்முடைய உணவுக்காகத் தினை முதலியவற்றையும், அவ்வுணவுக்குச் சுவைதரும் பருப்புக்காக மொச் சையையும், உடைக்காகப் பருத்தியையும் விளைத்து உண்ண உடுக்கக் குறைவின்றி வாழும் அவருடைய வாழ்வில் உள்ளநிறைவு விளங்கு கின்றது.

தாம் விளைக்கும் பயிரையும் மரத்தையும் ஆடவர் காப்பர். குறவன் தினைப்புனத்திற் பரணிட்டு அதன்கண் இருந்து காத்தலின் அவனைச் * சேணோனென்று வழங்குவர். அவன் தினையை உண்ண வரும் யானையைக் கவண் கல்லாலெறிந்து ஓட்டுவான். இராக் காலங் களில் கொள்ளிக்கட்டையை அருகில் வைத்துக்கொண்டிருப்பான். அது கண்டு விலங்கினங்கள் ஓடும். பலாப்பழத்தைக் குரங்குகள் கவராமல் மரந்தோறும் வலைகளைமாட்டிக் காத்தல் கானவர் வழக்கம்.

மகளிரும் தினைப்புனத்தைக் காத்துக் கிளியையும் குருவியையும் ஓட்டுவர்; அருவியில் விளையாடுவர்; சுனைப் பூவையும் வேறு மலரை யும் கொய்து புனைந்து மகிழ்வர்.

அந்நிலத்து வேட்டுவர் மான் முதலியவற்றை வேட்டை யாடு வர். கற்களை வீசியும் சீழ்க்கை யடித்தும் புதல்களில் மறைந்துள்ள விலங்கினங்களை யெழுப்பி அலைப்பர். அவர்களிடம் இரக்கமென்பது சிறிதும் காணப்பெறாது. பெண்மான் பார்த்திருப்பக் கலைமானின் உயிர்நிலையில் வாளியை எய்து பிடுங்குவரென்று அவர்களது வன் கண்மை ஒரு புலவராற் கூறப்படுகின்றது.

குறிஞ்சி நிலத்தாருக்கு ஐவனம் தினையென்பனவும், கவலைக் கிழங்கு தேன் கள் முதலியனவும் உணவுக்குரிய பொருள்கள். கவலைக்கிழங்கைக் கானவர் அகழ்வர். அங்ஙனம் அகழ்ந்த குழியில்

---

* சேண் - நெடுந்தூரம்.

ஒரு கானவன் மணியைப்பெற்ற செய்தி ஒரு செய்யுளிற் சொல்லப்படும்.

மலைச்சாரல்களில் தேன் மிகுதியாகக் காணப்படும். உயர்ந்த இடங்களிலுள்ள தேனை ஒற்றை மூங்கிலையே ஏணியாகக்கொண்டு ஏறி எடுப்பர். அவ்வேணியைக் * கண்ணேணி யென்பர். தேனடைக்குக் கேடகத்தை ஒரு புலவர் உவமை கூறுகின்றார். மலைத்தேனைப் பெருந்தேனென்று வழங்குவர். யானைக்கொம்பை விற்று அதன் விலையால் உணவுப்பொருள் பெற்று உண்பது மலைவாணர் வழக்கம்.

குறவர் முருகனையும் மலையர மகளிரையும் வழிபடுவர். முருகனுக்கு வெறியாட்டெடுப்பர். மறியறுத்துத் தினையரிசியை வைத்து அரளிமாலையைச் சூட்டி வணங்குவர். தம்முடைய புனத்தில் விளைந்த முதற்கதிரைக் கடவுளுக்கு இட்ட பின்னரே உண்பர். அங்ஙனம் நிவேதித்தலின், † "கடியுண் கடவுள்" என்று அத் தெய்வத்தை ஒரு புலவர் கூறுகின்றார். இதனால் அவர்களுடைய கடவுளுணர்ச்சி வெளியாகின்றது. கடம்ப மரத்தை வைத்து அதனடியில் மேடை யமைத்து அக்கடம்பையே கடவுளாகக்கொண்டு போற்றுவதும் உண்டு. அவ்விடத்துக்கு மன்றமென்று பெயர். அத் தெய்வத்தின்மேல் ஆணையிட்டுச் சூளுறுவர். கொடியவரைக் கடவுள் ஒறுக்குமென்று அஞ்சி ஒழுகுவர். மலைவாணர் தம் சிறார்களுக்குப் புலிப்பல்லைக் கோத்த தாலியை அணிவிப்பர். குறிஞ்சி நிலத்து ஊர்கள் சிறுகுடி யென்றும் பாக்கமென்றும் வழங்கப்படுகின்றன. கள்ளுண்டு களியாட்டயர்ந்து யாவரும் மகிழ்ந்திருத்தலின், "நறவுமலி பாக்கம்" என்று ஓரூரை ஒரு புலவர் சிறப்பிக்கின்றார்.

குறிஞ்சி நிலத்துக்கு வளப்பத்தைத்தருவது அருவி. யாமத்திற் பெய்யும் மழையினால் காலையில் அருவியிற் பெருவெள்ளம் பெருகிக் குறிஞ்சி நிலத்தாருக்கு இன்பத்தை உண்டாக்கும். மலையிலிருந்து மிக விரைவாக வீழ்வதாதலின் அதன் வேகத்திற்குத் தேரின் வேகத்தை உவமை கூறுவர். அருவியினால், மலைச்சாரலில் இயல்பாக முளைத்த காந்தள், வேங்கைமரம் முதலியன வளரும்; மலைவாணர் அருவிக்கு அருகிலுள்ள நிலப்பரப்பில் ஐவனத்தை விதைத்து அதன்

* கண் - கணு; கணுவைக் கழிக்காமல் அதனையே படியாகக் கொண்டு ஏறுதலின் கண்ணேணியென்று பெயர்பெற்றது.

† கடியுண் கடவுள் - புதியதை உண்ணும் கடவுள்.

நீரால் விளைவித்துக் கொள்வார். மலையின் மேலுள்ள பலாப்பழம், வாழை, காந்தள், கொறுக்காந்தட்டை, மலர்கள் முதலியவற்றை அருவி கீழே அடித்துக்கொணரும் செய்திகள் இந்நூலிற் காணப் படுகின்றன. அருவியின் ஓசை கேட்பதற்கினியது. அதற்கு முழவின் ஒலியையும் முரசின் முழக்கையும் உவமை கூறுவர். தூய வெள்ளி தாக இருத்தலின் அருவிக்குப் பாம்பின் உரியும், வளைந்து வருதலின் பாம்பும் உவமையாகக் கூறப்படுகின்றன. மகளிர் அருவிநீரில் ஆடி மகிழ்தல் வழக்கம். புணையைக் கைக்கொண்டும் நீராடுவர். தலைவி அருவியை முன்னிலைப்படுத்திக் கூறுவதாக அமைந்த செய்யு ளொன்று உள்ளது.

மலைகளிலும் மலையைச் சார்ந்த இடங்களிலும் அங்கங்கே குண்டுக்கற்கள் இருக்கும். அவற்றைத் துறுகல் என்பர். அதற்கு யானையை உவமை கூறுவர். அதற்கருகில் மாணைக் கொடி படர்வ தாகவும் களிறு துயில்வதாகவும் அக்கல்லின்மேல் வேங்கை மலர் உதிர்வதாகவும் புலவர் பாடியுள்ளனர். மன்றத்தின் கண் உள்ள துறுகல்லில் காந்தள்மலர் மலர்ந்து அவிழ்கின்ற காட்சி ஒருசெய்யுளிற் சொல்லப்படுகின்றது. மழை பெய்யாமல் பல நாட்களாகப் புழுதி முதலியன படிந்த துறுகல்லுக்குப் புழுதி படிந்து கழுவப்படாத யானையையும், மழையாற் கழுவப்பட்ட துறுகல்லுக்கு நீராட்டிய யானையையும் உவமிப்பார்.

## பாலை

குறிஞ்சியும் முல்லையும் வேனிலின் வெம்மையால் தம் இயல்பு திரிதலால் * பாலைநிலம் உண்டாகு மென்பர். இங்ஙனம் காலவிசேடத் தாற் குறிஞ்சி திரிந்த பாலை,

"வேனிற் குன்றத்து வெவ்வரைக் கவாஅன்" (௩௩௯)

என்று குறிக்கப்பெறுகின்றது. இந்நூலில், பாலை நிலத்தில் வெம்மை மிகுதியினால் நீர்நிலைகள் வற்றி உலர்ந்தும், மரமுதலியன அழிந்தும் உலர்ந்தும் பொலிவழிந்தும், விலங்கினங்கள் வலியழிந் தும் காட்சியளிக்கின்றன. நீரில் வைப்பும், புலர்ந்த சுனையும், அறுசுனையும் பாலைநிலத்தின் நிலையைப் புலப்படுத்துகின்றன. மிக அருமையாகச் சில விடங்களில் மட்டும் சிறுபள்ளங்களில் சிறிதளவு நீர் தங்கியிருக்கும்; அந்நீர் மிகவும் கலங்கியும் மிக்க வெம்மையை

* சிலப். ௧௧ : 64-7.

யுற்றும் இருக்கும். அதன் வெம்மை ஒரு முறை சொல்லி யமையாமையால் "வெவ்வெங் கலுழி" என ஒரு புலவர் சொல்லுகின்றார். அருகிலுள்ள செடியின் மலர்கள் விழுந்து அழுகிப்போன நாற்றத்தோடு சிறிதளவு நீருள்ளதொரு பள்ளத் தைப்பற்றி ஒரு புலவர் பாடுகின்றார். முற்கூறிய வெவ்வெங்கலுழி யையும் அந்நாற்ற நீரையும் தலைவனோடு செல்லும் தலைவி விருப்பத் துடன் உண்கின்ற காட்சியை நாம் காண்கின்றோம். அந்தக்கலங் கல் நீருக்கு அவ்விருவரிடையே உள்ள அன்பு ஒரு சுவையை உண்டாக்குகின்றது. பாலைநிலத்திலே தருமத்தின்பொருட்டு நெல்லிமரம் வளர்க்கப்பட்டிருக்கும். அதனை, "அறந்தலைப்பட்ட நெல்லி" என்று ஒரு நல்லிசைப்புலவர் புனைகின்றார். வழிப்போ வார் அதன் காயை உண்டு விடாய் தணித்துக்கொள்வர். உடலும் உள்ளமும் உயிரும் வெம்மையால் தீகின்ற பாலைநிலத்திலே அன் பும் அறமும் பிற இடங்களைக்காட்டிலும் சிறந்து நிற்கின்றன.

நிழலும் நீரும் இன்றி வெம்மையும் தனிமையும் உடையதாத லின் பாலை இன்னா வைப்பென்று கூறப்படும். வழிச்செல்வோர் ஒரு துணையுமின்றிப் பருந்தின் ஒலியை உசாத்துணையாகக் கொள்வ ராம். உப்புவாணிகர் கூட்டமாகச் சேர்ந்து உப்பு வண்டிகளை இந் நிலத்து வழியே ஓட்டிச்செல்வர்.

பாலை நிலத்து வாழ்வாரை எயினரென்பர். அவர் ஆறலைத் துண்ணும் தொழிலினர். அவர் தம் அம்பைப் பாறையில் தீட்டித் தம்முடைய நகத்திற்புரட்டிக் கூர்மைபார்ப்பர். வழிப்போவாரைச் சிறிதும் இரக்கமின்றிக் கொன்று அவருடலின்மீது தழைக்குவியல் களையும் கற்குவியல்களையும் இட்டு மறைப்பர். மரக்கிளைகளில் ஏறி யாரேனும் வருகிறார்களாவெனப் பார்ப்பர். அம்பால் மரத்தின் மேலுள்ள கனிகளை உதிர்ப்பர். மரப்பட்டையை மென்று நீர் வேட்கையைத் தணித்துக் கொள்வர். வேலேந்தி வணிகர் கூட்டத் தினரைக் கொள்ளையிட்டுச் செல்வர். அப்பொழுது தண்ணுமையை முழக்குவர்.

இந்நிலத்திலுள்ள விலங்கினங்கள் ஒன்றனோடு ஒன்று அன்பு பூண்டு இயங்குங் காட்சிகள் சிலவற்றை இந்நூலிற் காணலாம். தன்னுடைய பிடியின் பசியை முதலில் நீக்கும்பொருட்டு ஆண் யானை மரப்பட்டையை உரிப்பதும், கலைமான் மரப்பட்டையைக் காலால் உதைத்து நீக்கி அதனைத் தன் மறிக்குக் கொடுத்து அதற்கு

நிழலாக நிற்பதும் இதற்கு உதாரணங்களாகும். தன் பசியையும் கருதாமல் தன் குட்டிக்கு உணவு கொடுத்து ஏதேனும் எஞ்சியிருந்தால் உண்டுவிட்டு வேனிற்கதிரின் வெம்மையைத் தான் தாங்கித் தன் மறிக்கு நிழலாக நிற்கும் அக்கலையின் நெஞ்சை, "வழுவினெஞ்சு" என்று புலவர் பாராட்டுகின்றார். வேனில் வெம்மையிலே அதன் அன்பு உருகி இலங்குவதைக் காணும்போது யாவற்றையும் அன்பினால் பிறர்க்கு ஆக்கும் சிறந்த உள்ளத்தைப் பாராட்டாமல் இருக்க இயலுமா? "தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்" ஆகும் சிறந்த குணத்தை அம்மானிடத்தே ஏற்றிக் கூறிப் பாராட்டும் புலவரை நாம் பாராட்டுவோமாக.

பொருள் தேடச் செல்லும் தலைவன் பாலைநிலத்து வழியாகச் செல்வதாகவும், தலைவன் தலைவியோடு பாலைநிலத்து வழியே தன்னூர் சென்று மணம் புரிவதாகவும் செய்யுள் செய்தல் புலனெறி வழக்கம். முன்னது அறத்தின் பொருட்டு எத்தகைய துன்பத்தையும் பொறுக்கும் ஆற்றலையும், பின்னது அன்பின் பொருட்டு எல்லா இடையூற்றையும் தாங்கும் மனவலியையும் விளக்குகின்றன.

பாலைநிலத் தலைவன் பெயர்களுள் காளை, விடலை யென்பவற்றை இந்நூலிற் காணலாம்.

## முல்லை

காடும் காட்டைச் சார்ந்த இடங்களும் முல்லையாகப் பகுக்கப்பட்டிருக்கின்றன. இந்நிலம் கார்காலத்தில் வளம் பெற்றுத் திகழும். இங்கே செம்மண் பரந்திருத்தலின் இந்நிலத்தைச் செம்புலமென்பர். இங்குள்ள ஊரைச் சீறூரென்று கூறுவர்.

இங்கே வாழ்பவர் இடையர். அவர்கள் ஆடுகளையும் பசுக்களையும் மேய்ப்பர். புனத்தையுழுது வரகு முதலியவற்றை விதைப்பர். மழையின்பொருட்டுத் தலையிற் கவிழ்த்தற்குப் பறியோலையை வைத்திருப்பர். அவர்கள் இராக்காலத்தே ஆடுகளோடு மேய்புலத்தே தங்கிவிடுதலும் உண்டு. அவர்களுக்குப் பாற்சோறு உணவாகும்.

இந்நிலத்துக்குரிய முல்லைமலரைப் பற்றிய செய்திகள் பலபடியாகச் சொல்லப்படுகின்றன.

## மருதம்

வயலும் வயலைச் சார்ந்த இடங்களும் மருதமாகும். இந்நிலத்து ஊர்களில் நாகரிகம் மிக்க மக்கள் இல்லறம் நடத்தும் செய்திகளைப்

புலவர் புனைந்துரைக்கின்றனர். மருதநிலத்தலைவன் ஊரன், மகிழ்நன் எனப்படுவான்.

உழவர் தம்மேல் பூந்தாது படியும்படி காஞ்சி மரக்கிளையை வளைப்பதும், எருமைக்கன்றைக் கட்டி வைப்பதும், ஒற்றை எருடைய உழவன் ஈரம் உண்டான நிலத்தில் விதைக்க விரைவதுமாகிய செய்திகள் இந்நூலிற் காணும் மருதநில நிகழ்ச்சிகளாம்.

## நெய்தல்

கடலும் கடலைச் சார்ந்த இடமும் நெய்தல் நிலமாகும். கடற்கரையிலுள்ள மணல்மேட்டில் குடில்கட்டி வாழ்வார் பரதவரெனப் படுவர். அவர் ஊர் சிறுநல்லூரென்றும் சிறுகுடி யென்றும் வழங்கப்படுகின்றது. கடற்கரையையும், கடற்கரைச் சோலையையும் கானலென்பர். உப்பளங்கள் கடற்கரையில் இருக்கும்; அவை, 'உப்பு விளை கழனி' எனப்படும்.

பரதவர் படகிற் சென்று மீன் வேட்டை யாடுவர். அப்படகிற்குத் திமிலென்பது பெயர். அவர் திமிங்கிலத்தை எறியுளியால் எறிந்து கொல்வர். சில சமயங்களில் சுறுமீன் பரதவரைத் தன் கொம்பாலும் வாலாலும் எறிந்து புண்படுத்தி விடும். அக்காலத்தில் அவர்கள் புண் ஆறும் வரையில் தம் அகத்தில் தங்கியிருந்து ஆறிய பின் மீட்டும் மீன்வேட்டைமேற் செல்வர். அங்ஙனம் புண்பட்ட ஒரு முதிய பரதவனை அவனது மனைவி உடனுறைந்து பாதுகாக்கும் செய்தி யொன்று ஒரு பாட்டிற் காணப்படுகின்றது. அவள் தன் வீட்டிற்கு வேண்டிய உணவுப்பொருளைப் பெறுவதையும் நினையாமல் உடனிருந்தே ஆவன செய்து அவனது புண்தணிந்து மீட்டும் மீன் வேட்டம் புக்கபின்னரே வேறு வேலையைக் கவனிக்கின்றாள்.

பரதவர் தாம் கொணர்ந்த மீனைத் தம் வீட்டு முன்றிலில் மணலில் உலர்த்துவர். அதனால் அம்மணல் புலால் நாற்றம் வீசும். சிறுமீனை அவர்கள் வலையினாற் பிடிப்பார்கள்.

நெய்தல் நிலமகளிர் உப்பை விற்று அதற்கு மாறாக வெண்ணெல்லைப் பெற்று உண்பர்.

கடற்கரைச் சோலை பல மரங்கள் அடர்ந்து, உதிர்ந்த மலரும் மெத்தென்ற மணலும் பொருந்திப் பயில்வதற்கு இனிதாயிருத்தலின் தலைவனும் தலைவியும் அளவளாவுதற்குரிய இடமாகப் பயன்

படும். நெய்தனிலத் தலைவன் கொண்கன், சேர்ப்பன், துறைவன், புலம்பனென்னும் பெயர்களால் வழங்கப்படுகின்றான்.

## பொழுதுகள்

முதற்பொருளின் வகையாகிய பொழுது பெரும்பொழுது சிறு பொழுதென இருகூறுபடும். பெரும்பொழுதாவன கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனி லென்பன. ஒவ்வொரு பருவத்திலும் இன்ன இன்ன மலர்கள் மலரும், இன்ன இன்ன விலங்குகள் இன்ன இன்ன நிலையை யடையுமென்பன போன்ற பல செய்திகள் உள்ளன. அவை புலவர்களுடைய நுண்ணறிவை வெளிப்படுத்தும்.

### பெரும்பொழுது - கார்

ஆவணி புரட்டாசி மாதங்கள் கார்காலமாகும். இது முல்லைக் குரியது. கார்காலத்து மாலையில் மேகங்கள் அடர்ந்து மின்னி முழங்கி மழை பெய்கின்றன; அம் மழையினால் முல்லைநிலம் வளம் பெறுகின்றது; முல்லை மலர்ந்து மணக்கின்றது; பீர்க்கம்பூ விரிந்து பொன்னையும் பசலையையும் நினைப்பூட்டுகின்றது; கொன்றையும் குருந்தும் முகையவிழ்கின்றன. ஆண்மான் பிணையோடு தனக்கினிய பசிய அறுகம்புல்லை வயிறுஉர உண்டு பரல் நிறைந்த பள்ளத்திலுள்ள தெளிந்த நீரை அருந்தித் துள்ளுகின்றது.

மழையைக் கண்டு புலவர்கள் அடையும் ஆனந்தமும், அதனைப் புகழும் அழகும், தலைவிக்கு அதன்பாலுண்டாகும் பகைமையைப் புனைந்து காட்டும் இயல்பும் படித்துணர்ந்து இன்புறற்குரியன.

### கூதிர்

ஐப்பசி கார்த்திகை மாதங்கள் கூதிர்க்காலம். இப்பருவத்தில் குளிர்காற்று வீசும்; மழை பெய்த பின்பு எஞ்சிய துளிகளை மேகம் துளிக்கும்; அதனைச் சில்பெயலென்பர். இப்பருவத்திற் கரும்பு பொதியவிழும்; ஈங்கைக்கொடி மலரும். கூதிர்ப்பருவத்தில் வீசும் வாடையின் குளிரினால் மக்கள் நடுங்குவர்; விலங்குகளும் பறவைகளும் துன்புறும். இக்காலத்தில் தலைவரோடு இருத்தலைத் தலைவியர் விரும்புவர்.

## முன்பனி

மார்கழி தை மாதங்கள் முன்பனிப் பருவமாகும். இதனை அற்சிரமென்றும் அச்சிரமென்றும் வழங்குவர். இக்காலத்தில் வடகாற்றுச் சிறிது வீசும். பனித்திவலை தண்ணென வீசும். மக்கள் வெந்நீரையுண்பதில் விருப்பமுடையவராவர். அவரை மலரும்; உழுந்தும் பயறும் முதிரும்.

## பின்பனி

மாசி பங்குனி மாதங்கள் இப்பருவமாகும். "பின்பனிக் கடைநாள் தண்பனி யச்சிரம்" என்று இப்பருவத்தை ஒரு புலவர் குறிக்கின்றார். தண்ணிய பனித்துளியைக் காற்று வீசும்போது அத்துளிகள் நூலற்ற முத்துக்களைப்போலத் தோற்றுகின்றனவென ஒரு புலவர் புனைகின்றனர்.

## வேனில்

வேனிலில் இளவேனில் முதுவேனிலென இருவகையுண்டு. இளவேனிற் காலத்திற் கோங்கும் இருப்பையும் மலரும்; அரைத்த சந்தனம் தண்ணென்றிருக்கும். நன்மகளிரும் தண்மையையடைவர். முதுவேனிலில் மலையைச் சார்ந்த இடங்களிற் பாலையின் இயல்பு உண்டாகும்.

## சிறுபொழுதுகள்

சிறு பொழுதுகள் ஐந்தென்றும் ஆறென்றும் இருவகைக் கொள்கைகள் உண்டு.

"காலையும் பகலுங் கையறு மாலையும்
ஊர்துஞ்சி யாமமும் விடியலு மென்றிப்
பொழுது" (நஉ)

என்னும் பாட்டில் ஐவகைச் சிறு பொழுதுகள் சொல்லப்படுகின்றன. காலை பொழுது புலர்ந்தபின்னுள்ள காலமென்றும், பகல் நண்பகலை உள்ளிட்ட காலமென்றும், மாலை சூரியன் மறைந்தது தொடங்கிய இரவின் முதல்யாமமென்றும், யாமம் இடையிரவென்றும், விடியல் இரவின் கடையாமமென்றும் கொள்ள வேண்டும். இவற்றின் இடையே எற்பாடென்னும் பொழுதொன்றையும் கூட்டி ஆறாக உரைப்பர் வேறு சிலர்.

## மாலை

இச்சிறுபொழுதுகளில் மாலையைப்பற்றியே புலவர்கள் பெரிதும் புனைந்து கூறுகின்றனர். சூரியன் மறைந்தபின்னர் வானம் செந்நிறமடைகின்றது. நெடுவெண்ணிலவும் உடுக்களும் தோன்றுகின்றன.

ஆம்பல் முதலிய நீர்ப்பூக்கள் கூம்புகின்றன; முல்லை, பகன்றை முதலியன மலர்கின்றன. கடலும் கானலும் பொலிவிழந்து தனிமைக் கோலத்தோடு தோன்றுகின்றன. தொழில்மேற்சென்றோர் தத்தம் தொழிலினின்றும் நீங்கி வீட்டுக்கு வருகின்றனர். விதைக்கும் பொருட்டுக் காலையிற் சென்ற உழவர் விதைகொண்டு சென்ற வட்டி நிறைய மலரைப் பறித்து வைத்து மீளுகின்றனர். பசுக்களை வீட்டிற்கு ஓட்டிவரும் இடையன் வழியில் மலர்ந்த முல்லைப் பூவைப் பறித்துச் சூடிவருகின்றான். அந்த முல்லையின் மணமும் பொலிவும் மாலைக்காலத்தை விளக்கும் அடையாளங்களாகத் திகழ்கின்றன.

பறவைகள் தத்தம் குஞ்சுகளுக்குரிய இரையை வாயிற் கவ்விக் கொண்டு தாம் கூடு கட்டிய மரங்களில் வந்து அடங்குகின்றன. ஒரு பறவை மிக விரைவாகப் பறந்து வருகின்றது; அதன் அலகில் உணவு இருக்கின்றது; அந்த வேகத்தில் அதனைக் கைவிடாமற் பற்றிக்கொண்டு தன்னுடைய கூட்டுக்குவந்து சேரும்போது தாயை எதிர்நோக்கி நிற்கும் குஞ்சு களிக்கின்றது. அது தன் வாயைத் திறக்கும்போது தாய்ப்பறவை தான் கொணர்ந்த உணவை அதன் உள்வாயிற் செருகுகின்றது. அதனை விழுங்கவேண்டுமென்ற அறிவு வராத அவ்வளவு இளைய குஞ்சுபோலும்!

இங்ஙனம் பல பறவைகள் தத்தம் கூடுவந்தடைய, வௌவாலோ பழுத்த மரங்களைத் தேடிப் புறப்படுகின்றது. காடுகளில் மான் தன் பிணையோடு புதல்களில் மறைந்தொடுங்குகின்றது. யானை மலைமுழைஞ்சுகளில் ஒடுங்குகின்றது. புலி தன்னுடைய ஆட்சிக்காலம் வந்ததாக அறிந்து முழங்குகின்றது.

இக்காலத்தில் தலைவரைப் பிரிந்த மகளிர் காமநோய் மேலிட்டு வருந்துவதைப் பல்வேறு வகையிற் புலவர்கள் சுவைபடப் புலப்படுத்துகின்றனர். தலைவியர் மாலைக்காலத்தை இகழ்வதும், மகளிர் விளக்கேற்றுவதும், விருந்தினரை உண்பதற்கு உள்ளே புகச்செய்து வாயிலைச் சாத்துவதும் இம் மாலைக்காலத்தில் நிகழ்வன.

## யாமம்

இடையிரவாகிய இது செறிந்த இருளுடையதாதலின் நள்ளென் யாமமென்று வழங்கப் பெறும். பலரும் துயில்கின்ற இக்காலத்தில் தலைவரைப் பிரிந்த தலைவியர் அன்றிலின் குரலையும் ஆனேற்றின் மணியோசையையும் கேட்டுத் துயிலாது வருந்தி யிருப்பர். பிற ஒலிகள் அடங்கி யிருத்தலின் கடலின் முழக்கம் மிக்குத் தோற்றும். ஊர்காவலர் இக்காலத்தில் தம்முடைய காவற் றொழிலை மிக்க கருத்தோடு செய்வர். அவரை யாமங் காவலரென்பர். நாழிகைக் கணக்கர் துயிலாது விழித்திருந்து யாமக்கணக்கை ஆராய்வார். நொச்சி மலர் உதிருங்காலம் இவ்யாமமென்று தெரிகின்றது.

## வைகறை

வைகறையில் கோழிகள் குக்கூவென்று கூவும். தலைவனோடு சேர்ந்து இன்புறும் தலைவி யொருத்தி தம் துயிலுக்கு இடையூறாக வந்த இச்சிறு பொழுதை 'வாள்போல் வைகறை' என இழித்துக் கூறுகின்றாள்.

## காற்று

பெரும்பொழுதுகளில் வீசும் காற்றுக்களிற் சிலவகை யுண்டு. தென்றிசையிலிருந்து வருங் காற்றைத் தென்றலென்பர். தென்றலென்ற சொல் இந்நாலில் வாராவிடினும் அசைவளி யென்னும் பெயரால் அது குறிக்கப்படுகின்றது. மெல்லென நடத்தலை அசைதலென்பர். மெல்லென வருவதாதலின் தென்றல் அப்பெயரை உடையதாயிற்று. இக்காரணத்தாலேயே மந்தமாருத மென்னும் பெயர் அதற்கு வடமொழியில் அமைந்தது. இக்காற்றை இளவேனிற்குரியதாகக் கூறுவர்.

சூறைக்காற்றைக் கடுவளி யென்பர்; இது சுழற்றியடிக்கும் தன்மையினது; முதுவேனிலிற் பாலை நிலத்தில் இது வீசுவதைச் சில புலவர் பாடுகின்றனர். கீழ்காற்று, கொண்டலெனப்படும். மேல்காற்று, கோடையெனப்படும்; இது வெம்மையை யுடையது. வடகாற்று வாடை யெனப்படும்; இது பெரும்பாலும் கூதிர்க் காலத்திலும் சிறுபான்மை பனிக்காலத்திலும் வீசுவது; குளிர் மிகுதியாக உடையது; ஊதையெனவும் சொல்லப்படும்.

## மரம் செடி கொடி

நிலமும் காலமுமாகிய முதற்பொருளமைந்த ஐவகைத்திணைகளில் உள்ள கருப்பொருள்கள் பல. அவற்றுள் மரம், செடி கொடி, விலங்கு, பறவையாகியவற்றைப்பற்றிய அரிய செய்திகளைப் புலவர்கள் உணர்ந்து வெளியிடுகின்றனர். இவை இன்ன இன்ன திணைக்குரியன வென்ற வரையறையிருப்பினும் இவை தம்முள் கலந்து இருத்தலும் உண்டு. அதனைத்திணை மயக்கமென்பர்.

> " எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
> அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும்
> வந்த நிலத்தின் பயத்த வாகும் " (தொல். அகத். 19)

என்பது இம்மயக்கத்திற்குரிய இலக்கணமாகும். இந்நூலுள் வந்த இப்பொருள்களைப் பற்றிய செய்திகள் வருமாறு:—

### அகில்

குறிஞ்சி நிலத்தில் உண்டாகும் அகிலைக் கானவர் மற்ற மரங்களோடு வெட்டி எரித்துப் பின் தினையை விதைப்பர்; அவ்வகிலின் புகை வெண்ணிறமாக நீர்த்துளியற்ற மேகத்தைப் போல மேலே எழும். மகளிர் நீராடியபின் தம் கூந்தலுக்கு அகிற்புகையை ஊட்டிப் புலர்த்துவர்.

### அசோகு

இது குறிஞ்சி நிலத்ததாகக் காணப்படுகின்றது. தலைவன் பாங்கியின் வாயிலாகத் தலைவியைப்பெற எண்ணி வருங்கால் அசோகந் தழையைக் கையுறையாகக் கொணர்வான்; இதனைத் தோழி அறுத்தொடு நிற்கும்பொழுது, " தலைவன் தலைவிக்குரிய கையுறைக்காகத் தழை முழுவதையும் கொய்ததனால் இவ்வசோகின் அடிமரம் மாத்திரம் தனித்து நிற்கின்றது " என்கின்றாள் (உகச.)

### அடும்பு

நெய்தல்நிலத்திற் கடற்கரையிற் படருங் கொடிகளுள் மலரையுடையது இது. இதன் இலை இருபிரிவாக இருத்தலின் இதற்கு மானடியை உவமை கூறுவர். இதன் மலர் குதிரையின் கழுத்திலிடும் சலங்கை மணியைப் போல இருக்கும். மகளிர் அதனைப் பறித்துக்

கோதி நெய்தல்மலரோடு கட்டிக் கூந்தலிற் புனைவர். இக்கொடி மணல் மேட்டிற் படரும்.

அத்திமரம்

அதவமென்று இம்மரம் வழங்கும். ஆற்றயலில் வளரும். இதன் கிளைகள் வெண்ணிறமாக இருக்கும். இதன் பழம் கனிந்து கீழே உதிர அதன்மேல் ஆற்றிலுள்ள நண்டுகள் பல ஏறி மிதிக்கும் காட்சியைக் கண்டு அனுபவித்த புலவர் ஒருவர் தலைவியின் வருத்த மிக்க நெஞ்சுக்கு ஏழு நண்டுகள் மிதித்த ஒரு பழத்தை உவமை கூறுகின்றார் (உச.)

அரலைச்செடி

இதனை அலரி யென்றும் அரளி யென்றும் வழங்குவர். குறிஞ்சி நில மாக்கள் வெறியாடி முருகக் கடவுளுக்கு இதன் மலராலாகிய மாலையைச் சூட்டி வழிபடுவர். இது குறிஞ்சி நிலத்துக்கு உரியதாகத் தோற்றுகின்றது.

அவரை

மலையைச் சார்ந்த இடங்களிலுள்ள புனத்தில் படர்ந்து வளர்கின்ற இக்கொடி இக்காலத்தில் மொச்சையென்று வழங்கப்பெறும். வீட்டில் வளர்கின்ற அவரைக் கொடி வேறு; இது வேறு. தினை விளைவதற்கு முன்னர் மலைவாணர் புனத்தில் அவரையை விதைப்பர்; தினை விளைந்து அறுக்கப்பட்ட பின்னர், அதன் தண்டிலே அவரைக் கொடி படர்ந்து கொத்துக் கொத்தாக மலரும்; புனத்திலுள்ள புதல்களிலும் இக்கொடி படரும். இதன் மலருக்குக் கிளியின் மூக்கு உவமை கூறப்படும்.

அறுகு

அறுகம்புல் நீண்டு வளர்ந்திருத்தலின் அதனை, "மாக்கொடி யறுகை" (உருரு) என ஒரு புலவர் குறிக்கின்றார். மழைக்காலத்தில் இப்புல் வளம்பெற்று வளர்ந்திருக்கையில் இதன் காட்சி நீலமணியை நீட்டி விட்டாற்போல இருக்கும். முல்லைநிலத்தில் மானும் குறிஞ்சி நிலத்தில் வரையாவும் இதனை உண்டு மகிழும். இதனை, 'செங்கோற் புதவு' என்பர் ஒரு புலவர்.

ஆம்பற்கொடி

மருத நிலத்திலுள்ள பொய்கையிலும், பிறநீர்நிலைகளிலும் வளரும் ஆம்பல் காலையில் மலர்ந்து மாலையிற் கூம்பும் இயல்பினது.

வண்டு காலையில் இதன் அரும்பின்பாற் சென்று வாய் திறக்க அது மலரும். தண்மை மிக்க இதன் மலரை மகளிர் மேனியின் தண்மைக்கு உவமித்தல் மரபு. இதன் காம்பினுள் துளையிருத்தலின், "தூம்புடைத் திரள்கா லாம்பல்" என்று ஒருவர் கூறுவர். மகளிர் ஆம்பற் பூவின் புறவிதழை ஒடித்துவிட்டுத் தலையிற் சூடுவர்; அங்ஙனம் ஒடித்த பூவை முழுநெறியென்பர். தளிர்களாலும் மலர்களாலும் அமைக்கப் படுவதாகிய தழையுடையில் ஆம்பல்மலரையும் தொடுத்தணிவது மகளிர் வழக்கம். மகளிர் வாய் ஆம்பற் பூவின் மணமுடையதென்பர். இதன் மலர் குருவி, கொக்கு என்பவற்றின் சிறகைப்போலத் தோற்றுவது. வௌவாலின் சிறைக்கு இதன் இலையின் புறத்தை ஒரு புலவர் உவமை கூறுகின்றார்.

## ஆலமரம்

ஆலமரத்தின் அடியிற் சபை கூடுதல் பண்டை வழக்கம். கோசர் என்னும் ஒரு வகையார் ஒரு பழைய ஆலமரத்தடியில் அவை கூடி ஆராய்ந்தனர். அவ்வவையை, "தொன்மூ தாலத்துப் பொதியில்" என்று ஒரு புலவர் குறிக்கின்றார்.

## ஆவிரை

ஆவிரம்பூவை மடலேறும் தலைவன் மடற் குதிரைக்கு அணிதல் வழக்கம். பொன்னிறமுடையதாதலின் இப்பூ, "பொன்னேராவிரை" எனச் சிறப்பிக்கப்படுகின்றது.

## இருப்பை

பாலை நிலத்துக்குரிய மரங்களுள் இருப்பையும் ஒன்று. இது வேனிற்காலத்தில் மலருமென்று தெரிகின்றது. இதன் வெள்ளிய மலர் காம்பினின்றும் கழன்று பாலை நிலத்திலுள்ள சிறுவழி மறையும்படி உதிர்ந்து கிடக்கும் காட்சியை ஒரு புலவர் விளக்குகின்றார்.

## இற்றி

இக்காலத்தில் இச்சி, இத்தியென வழங்குவதும் இம்மரமே. இதன் விழுது ஆலம் விழுதைப்போல நீண்டதன்றாதலின் "புல்வீழ்" என்று சொல்லப்படுகிறது. கல்லின்மேல் முளைத்த இற்றியின் வேர் அக்கல்லின்மேற் படரும்; அது சேய்மையிலிருந்து பார்ப்பவர்களுக்கு அருவியைப் போலத் தோற்றும்.

### ஈங்கை

இஃது ஒருவகைக் கொடியென்று தோற்றுகின்றது. இது நுண்ணிய முள்ளையுடையது. கூதிர்க்காலத்தில் மலர்வது. இதன் அரும்பு செந்நிற முடையது. இதன் மலரிற் பஞ்சி போன்ற துய் இருத்தலின், " வண்ணத் துய்ம்மலர் " என்று சிறப்பிக்கப் பெறும்.

### உகாய்

இது பாலை நிலத்திலுள்ள மரங்களில் ஒன்று. உகாயென்று வழங்குவதே பெரும்பான்மை மரபாயினும் உகாவென்னும் பாடம் சிலவிடங்களிலே காணப்படுகின்றது. இதன் அடிமரம் சாம்பல் போன்ற நிறமுடையது; அதற்குப் புறாவின் புறத்தை உவமை கூறுவர்; " புன்கா லுகாஅய் ", "புல்லரை யுகாஅய்" என்ற தொடர்களால் அது மங்கிய நிறத்தையுடைய தென்பது போதரும். இம் மரத்திற் கனிகள் செறிந்திருக்கும்; அவை உருண்டையாகவும் மஞ்சள் நிறமாகவும் இருத்தலின் அவற்றிற்குப் பொற்காசை உவமையாக்குவர். இம்மரம் பாலையின் வெம்மையால் தழைச்செறிவின்மையின் இதன் நிழல் இடையிட்டுத் தோன்றும்; அதனை " வரிநிழல் " என்பர். அந்நிழலில் மலைப்பசு தங்கியிருத்தல் ஒரு செய்யுளிற் கூறப்படுகின்றது.

### உழுந்து

முல்லை நிலத்துப் புன்செய் விளைபொருள்களுள் ஒன்றாகிய உழுந்தின் அடிக்குக் குறும்பூழ்ப்பறவையின் காலை ஒரு நல்லிசைப் புலவர் உவமை கொள்கின்றார். வேரின் சிறுபகுதி வெளித்தோன்றிய அடித்தண்டின் தோற்றத்திற்கு அவ்வுவமை மிகப் பொருத்தமாக இருக்கின்றது. முன்பனிக் காலத்தில் உழுத்தங்காய் முதிரும். அதனை மானினம் கவர்ந்துண்ணும். உழுந்து முதிர்ந்தபின் அதன் காயைக் கழுந்தினால் அடித்து உடைப்பது வழக்கம்.

### எருக்கு

'குவிமுகி ழெருக்கு' என்று இது கூறப்படுகின்றது. மடலேறும் ஆடவர் இதன் மலராலாகிய கண்ணியைச் சூடி வீதியிலே வருவர்.

### எள்

இஃது எண்ணென்றும் வழங்கும்; மழை அதிகமாகப் பெய்தால் எள்ளின் காய் அழுகி உள்ளீடெல்லாம் போய்விடும். அத்தகைய காயைச் சிதட்டுக்காயென்பர் (உகூக); சிதடு-ஊமை,

## ஐயவி

ஐயவியென்பது வெண்சிறுகடுகு. இது மிகச் சிறிதாதலின் ஞாழற் பூவுக்கு இதனை உவமையாக்குவர்; "ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்" (ருo) என்பது காண்க.

## ஐவனம்

ஐவனமென்பது மலையின்மேல் விளையும் நெல்வகையுள் ஒன்று. அருவியினருகே விதைத்து விளைக்கப்படுவது. குறிஞ்சிநில மக்களுக் குரிய உணவுப் பொருளாகப் பயன்படுவது.

## ஓமைமரம்

ஓமையென்பது பாலைநிலத்து மரங்களுள் ஒன்று. இதன் அடிமரம் பொரிந்து பொலிவற்றிருக்கும். இம்மரங்கள் நிறைந்த இடத்திற்குப் பாழுரை என்று ஒரு புலவர் ஒப்புரைக்கின்றார். இம் மரம் செந்நிறமுடையது. இதன் பட்டையை யானை உரித்து உண் ணும். இதன் குறிய நிழலில் கன்றில்லாத ஒற்றைப் பசு வெயிற்கு அஞ்சித் தங்கியிருக்கும் செய்தி ஒரு செய்யுளிற் காணப்படுகின்றது (உசo.) இதன் கவட்டினிடையே பருந்துகள் இருந்து ஒலிக்கும்.

## கரும்பு

நிலவளத்தைப் புலப்படுத்துவதாகிய கரும்பு மருதநிலத்திற் குரியது. இதனைப் பாத்திகட்டி நீர் பாய்ச்சி விளைவிக்கும் செய்தி களைப் புலவர்கள் பாடியுள்ளார்கள். யானை மிக்க விருப்பத்தோடு இதனை உண்ணும். நுனிப் பகுதியினும் அடிப்பகுதி இனிமை யுடையதாக இருத்தலின் தலைவியின் எயிற்றில் ஊறும் நீர் அவ்வடிக் கரும்பின்கண் எறிந்த துண்டத்தைத் தின்றாற்போல இனிக்கின்ற தென்று ஒரு தலைவன் பாராட்டுகின்றான் (உகூஎ.) இதன் மலர் வெண் ணிறமுடையது; மணமற்றது; வாடை வீசுங்காலத்தில் மலர்வது. மலராமல் முகைப் பருவத்துள்ள கரும்பின் கூம்பிற்குக் கருப்ப முதிர்ந்த பச்சைப் பாம்பை ஒரு புலவர் உவமை யாக்குகின்றார்.

## கருவிளை

இதன் மலர் நீல நிறமுடையதாதலின் அதற்கு மயிற் பீலியை உவமை கூறுவர். அது பொறிகளையுடையது. வாடை அம்மலரை அலைப்பதை ஒரு புலவர் சொல்லுகின்றார்.

### கவலைக்கிழங்கு

இது முல்லை நிலத்துக்குரியது. வேடர் இதனை அகழ்ந்து உணவாகக் கொள்வர்.

### கள்ளி

பாலை நிலத்திற்குரியது. அந்நிலத்தின் வெம்மையால் இதன் அடி பொரிந்திருக்கும்; காய்கள் வெடிக்கும்; அங்ஙனம் வெடிக்கும் போது ஒலி உண்டாகும்; அதனை, "கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி" என்பர் ஒரு புலவர். இதன்முள் கிளைத்திருத்தலை அவர் இதிற் குறித்திருக்கின்றார்.

### காஞ்சி

மருதநிலத்துக்குரிய மரம் இது. வயல்களுக் கருகில் வளர்ந்த இம்மரத்திலுள்ள பூந்தாது தம்மேல் உதிரும்வண்ணம் இதன் கிளையை உழவர் வளைக்கும் செய்தி ஒரு பாட்டிற் காணப்படும். இதன் மலர் மணமுடையது. இதன் பூங்கொத்துக்குப் பயறு உவமை யாகச் சொல்லப்படும்.

### காந்தள்

குறிஞ்சி நிலத்துக்குரிய மலர்களுள் காந்தள் ஒன்று. இது மிகுதியாக வளர்ந்தமைபற்றி மலைச்சாரலிலுள்ள ஊர்களை இப்பூவின் விசேடத்தாற் குறிப்பர்; "காந்தள் வேலிச் சிறுகுடி", "காந்தளஞ் சிறுகுடி" எனக் கூறுதல் காண்க. இது மலைமுழுதும் கமழும் மணத் தையுடையது. மலைச்சாரலில் அருவியினருகே வளரும். கொத்துக் கொத்தாக மலர்வதாதலின் 'குலைக்காந்தள்' என வழங்கப்படும். இதனிடத்துள்ள நறுந்தாதைத் தும்பியென்னும் வண்டு ஊதும். வண்டு வாய்திறக்க இதன் போது மலர்வதற்கு நடுநிலைமையையுடைய சான்றோரைக் கண்ட கடனறி மாக்கள் இடம் விட்டு ஆதரவு செய்து உபசரித்தலை ஒரு புலவர் உவமையாகச் சொல்லுகின்றார்.

தலைவன் தலைவிக்கு அளிக்கும் கையுறைகளுள் காந்தள் மலரும் ஒன்று. ஊர்ப் பொதுவிடத்தில் இது வளர்ந்திருக்கும். அங்குள்ள துறுகல்லில் மலர்ந்து படிந்து விளங்கும். இதன் மலரை யானை முகத்திலுள்ள புண்ணுக்கும், நீண்ட காம்போடுகூடிய பூவைப் படத்தை விரித்த பாம்பிற்கும் கைவிரலுக்கும் உவமையாக எடுத் தாள்வர். தலைவனது மலையிலிருந்து அருவியில் வந்த காந்தட் கொடி யின் கிழங்கைத் தலைவி எடுத்து முயங்கித் தன் வீட்டிற்குக்

கொணர்ந்து நட்டு வளர்த்துப் பாதுகாத்தானென்றதொரு செய்தி ஒரு செய்யுளிற் காணப்படும்.

வெண்காந்தள், செங்காந்தளென இருவகை இதில் உண்டு. செங்காந்தள் தோன்றி யென்றும் வழங்கப்பெறும். அதனைக் குருதிப்பூவென்று கூறுவர். கோழியின் கொண்டைக்கு உவமை யாக அது சொல்லப்படும்.

காந்தளோடு முல்லை குவளை யென்பவற்றை இடையிட்டுக் கோதையாகக் கட்டுவதுண்டு. அக்கோதையைத் தலைவியின் மேனிக்கு ஒரு தலைவன் ஒப்புரைக்கின்றான். தலைவியது மேனியின் மணத்திற் கும் நுதலின் மணத்திற்கும் இம்மலரின் மணத்தை உவமித்தல் மரபு.

காயாமரம்

இக்காலத்தில் இது காசாவென வழங்குகின்றது. இது முல்லை நிலத்திற்குரிய மரம்; கார்காலத்தில் மலர்வது; இதன் மலர் நீலநிற முடையது. காயாமரத்தின் பூக்கெழு பெருஞ்சினை மெல்லிய மயிலின் கழுத்தைப்போலத் தோற்றுவதாக ஒரு புலவர் பாடுகின்றார்.

குரவம்

குராவெனவும் இது வழங்கும். இது பெரும்பாலும் பாலை நிலத்திற்குரியதாயினும் நெய்தனிலத்தில் வளர்ந்ததாக ஒரு செய்யு ளிற் கூறப்படுகின்றது. இது திணைமயக்கத்தின்பாற் படும். அந் நிலத்தில் புன்கமரத்திற்கருகில் பல மலர்களால் நிறைந்து இம்மரம் விளங்குவதை ஒரு புலவர் புனைகின்றார்.

குருந்தமரம்

முல்லை நிலத்திற்குரிய மரம் இது. கார்காலத்தில் மலர்வது, கொன்றைமரத்தோடு சேர்த்துச் சொல்லப்படுவது.

குவளை

இது குறிஞ்சி நிலத்திலுள்ள சுனைகளில் வளர்வது; "சுனைக் குவளை" என்று சிறப்பிக்கப் பெறும். கருங்குவளை, செங்குவளையென இருவகை இதில் உண்டு. அவற்றுள் கருங்குவளை மகளிர் கண்ணுக்கு உவமையாகக் கூறப்படும். இது நீர் நிறைந்த இடத்தில் வளம் பெற்று வளர்வது. இம்மலர் மிக்க மென்மையுடையதாதலின் வண்டு கள் படிந்த அளவில் அழகு கெடுவது. இதன் நறுமணத்தைத்

தலைவியின் மேனி, கூந்தல், நுதலென்பவற்றின் இயற்கை மணத்திற்கு உவமை கூறுவர். குவளையோடு காந்தளையும் முல்லையையும் தொடுத்தமைத்தலுண்டு. இதன் காம்பு குறியது. மகளிர் இதனைக் கூந்தலிற் புனைதலும் தழையுடையிற் கலந்து தொடுத்து அணிதலும் வழக்கம். தலைவன் குவளைக்கண்ணியை அணிந்து வருதலும் குவளை மாலையைத் தலைவிக்குக் கையுறையாக அளித்தலும் மரபு.

## குளவி

மலைமல்லிகையைக் குளவி யென்பர். காட்டு மல்லிகையையும் அங்ஙனம் கூறுவதுண்டு. இது பெரும்பாலும் குறிஞ்சி நிலத்திலும் சிறுபான்மை பாலை நிலத்திலும் காணப்படும். குறிஞ்சி நிலத்தில் மரலோடு முளைத்த இதனை மலைவாணர் களையாகக் களைந்தெறிவர். பாலை நிலத்தில் நீருள்ள சிறு பள்ளங்களுக் கருகில் இது வளரும்; இதன் மலர் அந்நீரில் விழுந்து அழுகியிருக்கும். நறுமணமுடைய இதன் மலரைத் தலைவியின் நுதன்மணத்திற்கு உவமையாக்குவர். இதன் இலைகள் பெரியனவாக இருக்கும்.

## குறிஞ்சி

குறிஞ்சி நிலத்திற்கு அடையாளமாக விளங்குவது இது. இதன் தண்டு கரிய நிறமாக இருக்கும். இதன் மலரில் தேன் மிகுதியாக உண்டு. இம்மலர் பலவருஷங்களுக்கு ஒரு முறை மலர்வதென்று கூறுகின்றனர்.

## குன்றி

இது கொடிவகையுள் ஒன்று. இதன் வித்தை மணியென்பர். அது சிவப்புநிற முடையதாதலின் முருகனது செந்நிற ஆடைக்கு உவமையாகக் கூறப்படுகின்றது.

## கூதளி

கூதளம், கூதாளமெனவும் இது வழங்கும். மலைச்சாரலில் வளர்வது. இதன் காம்பு குறியது. இதன் மலர் உட்டுளையை யுடையது. கார்காலத்தில் மலர்வது. கைவளைக்கு அம்மலர் உவமிக்கப்படுகின்றது.

## கோறுக்காந்தட்டை

இது கொறுக்கைச்சியென வழக்கிலும் எருவையெனச் செய்யுளிலும் ஆளப்படும். அருவியுள்ள இடங்களில் வளர்வது இது. இதனை யானை உணவாகக் கொள்ளுமென்று தெரிகின்றது.

### கோன்றை

முல்லை நிலத்துக்குரிய மரங்களுள் ஒன்று இது. கார்காலத்தில் மலர்வது. முல்லை நிலத்தினர் இதன் மலர்கண்டு கார்காலம் வந்ததை அறிந்துகொள்வர். இது மாலைபோல மலர்வதாதலின் இதன் பூங் கொத்து, "கொடியிணர்" என்று சிறப்பிக்கப்படும். இதன் மலர் மஞ்சள் நிறமுடையதாதலின் பொன்னுக்கும், பொன்னரி மாலைக்கும், பொற்காசிற்கும், கிண்கிணிக்காசிற்கும், பசலைக்கும் ஒப்பாகச் சொல் லப்படும். குருந்தும் கொன்றையும் ஒருங்கு சேர்த்துக் கூறப்படும்.

குழி நிறையக் கொன்றை மலர் விழுந்திருப்ப, அக்குழிக்குச் செல்வர்களுடைய மூடி திறந்த பொன்பெய் பேழையைப் பேய னென்னும் புலவர் உவமை கூறுகின்றார்.

### கோங்கு

பாலை நிலத்திற்குரிய மரம் இது; இலவின் வகையைச் சார்ந் தது; இளவேனிலில் மலர்வது. இது மலர்கின்ற காலத்தில் இதன் இலைகளெல்லாம் உதிர்ந்துவிடும். இலையில்லாத சினையில் வண்டு ஆர்க்கும். இதன் அரும்புக்கு மகளிரது நகிலை ஒப்பிடுவர்.

### சந்தனமரம்

குறிஞ்சி நிலத்திற்குரியது. பொதியின்மலைச் சந்தனமும் முள்ளூர்க் கானத்துச் சந்தனமும் இந்நூலிற் சிறப்பிக்கப் பெறுகின் றன. சந்தனம் வேனிற்காலத்தில் தண்ணிதாக இருக்கும். தலைவன் மலைச்செஞ்சந்தனக் குழம்பை அணிந்து இரவில் தலைவி வாழும் இடத்திற்கு வருதலை ஒரு புலவர் சொல்லுகின்றார். மகளிர் சந்தனப் புகையைக் கூந்தலுக்கு ஊட்டுவது வழக்கம்.

### சிலை

குறிஞ்சி நிலத்து மரவகைகளில் இதுவும் ஒன்றென்று தெரி கின்றது. மிக்க வலிமையும் நெகிழ்ச்சியும் உடையதாதலின் இதனால் வில்லை அமைத்து வேட்டுவர் வேட்டை யாடுவர். சிலை யமைத்தற்குச் சிறந்ததாதலின் இப்பெயர் பெற்றதுபோலும்.

### சேம்பு

மலைப்பக்கத்தில் வளரும் ஒருவகைச் சேம்பு இந்நூலிற் சொல் லப்படுகின்றது. இதன் இலை மிகவும் பெரியது. காற்றால் அசையும் அவ்விலைக்குக் களிற்றின் செவியை ஒருவர் உவமிக்கின்றார்.

ஞாழல்

இது நெய்தல் நிலத்திற்குரிய மரம்; கடற்கரையோரத்தில் வளர்வதாதலின் இதன் வேரில் நண்டுகள் வளையமைத்து வாழும். புன்னையும் இம்மரமும் சேர்த்துக் கூறப்படும். இதன்மலர் சிறிய வடிவினது. அது வெண்சிறுகடுகையும் ஆரன்மீன் முட்டையையும் போலத் தோற்றும். அம்மலர் தண்ணிய நறுமணமுடையது.

ஞெமை

பாலை நிலத்திற்குரிய மரங்களுள் ஒன்று. இம்மரத்தின்மேல் ஆண்பருந்து தன் பெடையோடு சேர்ந்து இன்புற்றிருக்கும் செய்தி ஒரு செய்யுளிற் காணப்படும்.

தடா

இது தடவெனவும் வழங்கும். பெரும்பாலும் குறிஞ்சி நிலத்திற் காணப்படும். இம்மரத்தின்கண் அன்றில் கூடுகட்டி வாழும். இது மிக உயர்ந்து வளர்வது.

தாமரை

இக்கொடி மருதநிலத்துக்குரியது. காலையில் மலர்ந்து மாலையிற் குவிந்த இதன் மலருள் சிறு வெம்மை யிருக்கும்; தலைவியின் மேனி வெம்மைக்கு அவ் வெம்மையை ஒப்பிடுவர். செந்தாமரை மலரை முருகக்கடவுளின் திருவடிக்கும், வெண்டாமரை முகையைக் கொக்குக்கும், தாமரைத் தாதைத் தேமலுக்கும் புலவர் ஒப்பிடுவர்.

தாழை

கண்டல், கைதையென்னும் பெயர்களால் தாழை வழங்கப்படுகின்றது. நெய்தல் நிலத்திற்குரியது இது; கடற்கரையிலும் கழியின் ஓரத்திலும் வளரும். கழியில் வெள்ளம் மிகும்போது மேலே தோன்றியும் குறையும்போது தாழ்ந்தும் விளங்கும் இத்தாழையைத் தலைவி ஒருபாற்படாத தன் நெஞ்சிற்கு உவமை கூறிக்கொள்ளுகின்றாள். இதன் வேரில் வளையமைத்து நண்டுகள் வாழும். இதற்கு விழுது உண்டு. இதன் முள்ளிலையின் தோற்றம் வாளரத்தையும் மலரின் தோற்றம் கொக்கையும் ஒக்கும். தாழையின் வரிசை வேலை நட்டுவைத்த வேலியைப்போலத் தோற்றும்.

### தாளி

தாளியறுகென்பதும் தாளிக்கொடியென்பதும் இப்பெயரால் வழங்கப்படுகின்றன. பசு இதனை மேயும்.

### தினை

குறிஞ்சி நிலத்தில் மலைவாணர் மரங்களைச் சுட்டுக் காட்டை அழித்து அந்நிலத்தை உழுது தினையை விதைப்பர். அது வளர்ந்த பின் கானவரும் குறமகளிரும் தினைக்கதிரைக் காவல்புரிவர். பகலிலும் இரவிலும் குறவர் யானை முதலியவற்றைக் கவணெறிந்து தினைக்கொல்லையைப் பாதுகாப்பர். பகலில் தலைவி தன்தோழியருடன் இருந்து தினையை உண்ணவரும் கிளிகளையும் குருவிகளையும் குளிர், தட்டை, தழலென்னும் கருவிகளால் ஓட்டிக் காப்பாள். தினை நன்றாக வளர்ந்து கரும்பைப்போலத் தோற்றும். அதன் அடி நாரையின் தாள்போல் விளங்கும்.

தினை கதிர்விட்டுப் பால் பிடித்து முதிருங்காலையில் பிடியின் கையைப் போலவும் கொல்லனது கரிக்குறட்டைப் போலவும் தோற்றும். இதில் கருந்தினை, செந்தினை, சிறுதினை யென்னும் வேறுபாடுகள் உண்டு. செந்தினைக்குப் பொன்னை உவமை கூறுவர்.

தினையை இராக்காலத்திற் பறை முழக்கி அறுப்பதும் உண்டு. அறுத்த பின்னர் அதன் முதற்கதிரை முருகக்கடவுளுக்குப் பலியாக வைத்து வழிபடுவர்; வெறியாட்டெடுக்கும் காலத்தில் தினையைப் பாத்திரங்களில் நிறைய வைத்து வணங்குவர். தினையை அரிந்த பிறகு மழை பெய்வதால் கிளைத்த அதன் தாளில் மீண்டும் கதிர் உண்டாகும். அம்மறுகாலில் மொச்சைக்கொடி படர்ந்தேறும். தினைக் கதிரை யானை, மானென்னும் விலங்குகளும் கிளி, குருவி, மயிலென்னும் பறவைகளும் உண்ணும். தினைக்கொல்லையைப் புனமென்றும் துடவையென்றும் கூறுவர். ஏனல், இறடியென்பன தினையைக் குறிக்கும் பெயர்களிற் சில.

### நரந்தம்

நாரத்தம் பூவையும் ஒருவகைப் புல்லையும் இப்பெயராற் குறிக்கின்றனர். இரண்டும் மணமுடையனவென்றும் கூந்தலில் அணியப் படுவனவென்றும் தெரிகிறது.

## நெய்தல்

இது நெய்தனிலத்திற்குரிய நீர்க்கொடி; இலைக்கு மேலே நீண்டு வளரும் மலரையுடையது; வயல்களில் வளர்வதும் உண்டு. இதனை உழவர் அறுத்தெறியினும் மீண்டும் அவ்வயலில் வளர்ந்து மலரும். கடற்கரையிற் படர்ந்த நெய்தற்கொடி தலைவியைக் காண வரும் தலைவனது தேரின் சக்கரத்தால் துணிக்கப்படும். இதன் பூவை நாரை உண்ணும். நெய்தற்பூவின் காம்பு திரண்டதாதலின் அதனைக் கணைக்காநெய்தலென்பர். நறுமணமும் தேனும் உடைய தாதலின் அம்மலரின்பாற் சுரும்புகள் மொய்க்கும். மகளிர் அம் மலரோடு அடும்பினது பூவையும் கட்டியணிவர்.

## நெருஞ்சி

முல்லை நிலத்திற்குரியது இது. இதன் இலை மிகவும் சிறியது. இதன் மலர் கண்ணுக்கினியதாகத் தோற்றினும் அப்பால் இன்னாத தாகிய முள்ளை உண்டாக்குதலின், முன் இனியனாக இருந்து பின் இன்னாசெய்யும் தலைவனுக்கு உவமை கூறப்படுகின்றது; கதிரவன் எந்தத் திசையில் இருப்பினும் அத்திசையையே நோக்கி நிற்கும் இயல்பு வாய்ந்தது.

## நெல்

இது மருத நிலத்திற்குரியது; வெண்ணெல், செந்நெலென இருவகை சொல்லப்படுகின்றன. இவற்றிற் செந்நெல் உயர்ந்தது. கதிரிலுள்ள முதிர்ந்த பச்சை நெல்லை உரலிலிட்டு மகளிர் அவலாக்குதற்கு இடிப்பதுண்டு; அது பாசவலெனப்படும். தொண்டியென்னும் ஊரில் வெண்ணெல் மிகுதியாக விளைந்ததென்று ஒரு செய்யுளால் தெரியவருகின்றது. நெற்கதிரை நாரை நயந்துண்ணும். உள்ளீடில்லாத நெல்லைப் பதடியென்பர். நெற்பொரியைப் புன்கமலருக்கு உவமை கூறுவர்.

## நெல்லி

குறிஞ்சிக்கும் குறிஞ்சிதிரிந்த பாலைக்கும் உரியது; இதன் காய் புளிச் சுவையுடையதாதலின், 'நெல்லியம் புளி', 'தீம்புளி நெல்லி' என வழங்கும். பாலை நிலத்திற் செல்வார் இதன் காயை உண்டு விடாய் போக்கிக் கொள்வர். நெல்லிக் காயைத் தின்று நீர்குடித்தல் வழக்கம். அதனை வௌவாலும் மரையினமும் உண்ணும் செய்தி இந்நூலுட் கூறப்படும். தருமத்தின்பொருட்டு வழிகளில் இம்மரங்கள் வளர்க்கப்படும்.

### நொச்சி

நொச்சியிற் பலவகை உண்டு. இதில் மலைநொச்சி கூறப்பட்டிருக்கிறது. இதன் பூ கரிய நிறமுடையது; அது நீலமணியைப் போலத் தோற்றும். யாமத்தில் அப்பூ உதிரும். இதன் இலைக்கு மயிலடி ஒப்புக் கூறப்படும்.

### பகன்றை

இதனைக் கிலுகிலுப்பையென்றும் சிவதையென்றும் கூறுவர்; இது மாலைக் காலத்தில் மலர்வது. இதன் பூ வெண்ணிறமுடையது. முறுக்கிய வெள்ளிய ஆடையைப் போல்வது; கள்ளைப்போன்ற மணமுடையது. இது பெரிய இலைகளையுடையது; மருதநிலத்தில் நீர்த்துறையில் வளர்வது.

### பஞ்சாய்

பஞ்சாயென்பது ஒருவகைக் கோரை; நீர் தங்கிய பள்ளங்களில் வளரும். இதனால் மகளிர் விளையாடுதற்குரிய பாவையை இயற்றுவர்.

### பயறு

முல்லை நிலத்தில் வளர்வது. முன்பனிக் காலத்தில் பயற்றங்காய் முதிரும். அது மானினத்திற்கு உணவாகும். காஞ்சியின் பூங்கொத்துக்கு அதனை உவமை கூறுவர்.

### பருத்தி

மலைச்சாரலில் மலைவாணர் தினைப்பயிருக்கு இடையே இதனை வித்தி விளைப்பர். இது பரீஇயெனவும் வழங்கும்.

### பலாமரம்

மலைச்சாரலில் வளரும் மரங்களுள் ஒன்று. இதன் சுளை மிக்க மணமுடையது; "பூநாறு பலவுக்கனி" என்று சிறப்பிக்கப் பெறும். வேரிற் காய்க்கும் பலவும் உண்டு. அடிமுதல் நுனிவரையிற் காய்களைக்கொண்ட பலாமரம் ஒன்றை ஒரு புலவர், "வேரு முதலுங் கோடு மொராங்குத், தொடுத்த போலத் தூங்குபு தொடரிக், கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவு" என்று வருணிக்கின்றார். குரங்குகள் இதன் பழத்தைத் தோண்டி உண்ணும். இதன் இலை அகன்றதாக இருத்தலின், "அகலிலைப் பலவு" எனப்படும். வௌவால் இதன் கனியை விரும்பி மாலைக்காலத்தில் இம்மரங்கள் உள்ள சாரலையடை

யும். பலாமரத்தில் வலையை மாட்டிக் குறவன் பழங்களைக் காவல் புரிவான். சிறியதொரு காம்பு பெரிய பழத்தைத் தாங்கி இருப்பதைச் சிற்றுயிருடைய தலைவி பெரியதாகிய காமத்தைத் தாங்குவதற்கு உவமையாகக் காட்டும் செய்யுளொன்று உண்டு.

பலாசு

இக்காலத்திற் புரசென வழங்கும் இது முருக்கின் இனத்தைச் சார்ந்ததாதலின் முருக்கெனவே இந்நூலிற் சொல்லப்படுகின்றது. இதன் மலர் செந்நிற முடையது. பட்டையை யுரித்த இதன் கோலைக் கையில் ஏந்துவது பிரமசாரிகளின் இயல்பு.

பவழம்

இது செந்நிற முடையதாதலின் முருகக்கடவுளின் திருமேனியின் நிறத்திற்கு உவமை கூறப்படுகின்றது.

பனை

இம்மரம் நெய்தல் நிலத்திற்குரியது; பெண்ணை, போந்தையெனவும் வழங்கும். நெய்தனிலத்து ஊர்களில் பனையடியில் மன்றங்கள் உண்டு. மணல் நிறைந்த இடத்தில் இது வளர்வது. காற்று வீச வீச அம்மணல் மிகுவதனால் இதன் அடிமரம் மறைந்து கொண்டே வரும் காட்சியை ஒரு புலவர் குறித்துள்ளார். தலைவியைப் பெறவியலாது வருந்தும் தலைவன் பனைமடலாற் குதிரையைப் போன்ற ஓருருவம் செய்து அதன்மீது ஏறிவருதல் வழக்கம். அதற்கு மடன்மாவென்று பெயர். இதன் மட்டைகள் கருக்குடையனவாக விருக்கும். இதன் காயினுள்ளே பஞ்சி போன்ற நார் இருத்தலின் ஒருவர் அதனை, 'பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்' என்பர். இதன் கள்ளும் நுங்கும் உண்ணுதற்குரியன. இதன் ஓலையாற் செய்த குழிந்த பாத்திரத்தைக் குடையென்பர். அதில் மலர்களைப் பெய்து வைப்பர். பனங்குருத்தோலையில் வேப்பம்பூவை வைத்து ஆடவர் சூடுவதுண்டு. பனைமரத்தில் அன்றிலும் தூக்கணங் குருவியும் கூடுகட்டி வாழும். இதன் ஓலை மடல் தோடு எனப்படும்.

பாதிரி

இது வேனிற்காலத்தில் மலர்வது; இதன் மலர் வளைந்திருக்கும்; குறிய மயிர்போன்றதொருபொருள் அதில் இருத்

தலின் மகளிர் மேனியிற் படர்ந்த குறுமயிருக்கு உவமை கூறப்படு கின்றது.

பிடா

இஃது ஒரு மரம்; பிடவெனவும் வழங்கும். இது கார்காலத்தில் மலரும்.

பித்திகம்

இக்காலத்திற் பிச்சியென்று வழங்குவது இதுவே. இது கார்காலத்தில் மலரும். இதன் அரும்பு சிவந்திருக்கும். அதனை, மகளிர் கடைக்கண்ணுக்கு உவமை கூறுவர். இதன் மலரைப் பனங் குடையிற் பொதிந்து வைப்பர். அம்மலரின் மணம் நன்மகளிர் மேனி மணத்திற்கு உவமையாகும்.

பிரம்பு

இது நீர்நிலைகளின் கரையிற் பிணக்கத்தையுடைய தூறாக வளர்ந்திருக்கும். கொடி போன்றிருத்தலின், "அரிற்பவர்ப் பிரம்பு" எனப்படும். இதன் தூற்றில் நீர்நாய் பதுங்கியிருக்கும். பிரப்பம் பழம் கோடுகளையுடையது; அதனைக் கெண்டை உண்ணும்; அப் பழத்தின் புறத்தை நீர்நாயின் புறத்திற்கு உவமை கூறுவர்.

பீர்க்கு

இக்கொடி பீர், பீரம் எனவும் வழங்கும்; இது மழைக்காலத்தில் மலரும். புதல்களிற் படர்ந்து வளரும். பீர்க்க மலரின் நிறம் மகளிரது பசலை நிறத்திற்கு ஒப்புக் கூறப்படும்.

புன்கு

நெய்தல் நிலத்திற்குரிய மரங்களுள் இம்மரம் ஒன்று. இதன் மலர் பரந்த வெண்மணல் தலைவனும் தலைவியும் பழகுவதற்குரிய இடமாகப் பயன்படும். அம்மலருக்கு நெற்பொரியை உவமை கூறுவர்.

புன்னை

நெய்தல் நிலத்தது; மணல் நிறைந்த இடத்திலே தாழ்ந்த கிளைகளையுடையதாக இருக்கும். அக்கிளைகள் கருநிறமுடையன. அவற்றில் நாரை முதலிய குருகுகள் உறங்கும். கடனீர்த் திவலையால் இம்மரத்தில் அரும்பு தோன்றும். இதன் பூங்கொத்து மின்னும்; அது பொன்னிறமுடைய கேசரங்களையுடையதாக இருக்கும். மகளிர்

இதன் மலரைக் கொய்வர். புன்னை நீழலில் தலைமகனும் தலைமகளும் அளவளாவுவர். இம்மரங்கள் அடர்ந்து பொழிலாகக் கடற்கரையில் விளங்கும்.

மரல்

இது மருளெனவும் வழங்கும். மலைச்சாரலில் வளரும். இதனை மலைவாணர் களையாகக் களைந்தெறிந்துவிட்டு ஐவனத்தை விதைப்பர். மான் இதனை உண்ணும்.

மராம்

கடம்பின்வகையுள் ஒன்று இது. வழியின் அருகிலே இது வளர்ந்திருப்பதுண்டு. இதன்கண் முருகக் கடவுள் எழுந்தருளி இருப்பர். இதனடியில் மேடையிட்டு மன்றமாகக்கொண்டு வழிபடுவது குறிஞ்சி நிலத்தினர் இயல்பு. இதன்பாற் பறவைகள் கூடுகட்டித் தங்கும். வேனிற்காலத்தில் மலர்வது இது. இதன் மலர் வலமாகச் சுழிந்திருப்பதாதலின், “வலஞ்சுரி மராம்” எனக் கூறப்படும். குறிஞ்சி திரிந்த பாலையிலுள்ள இம்மரம் தீய்ந்து நிற்கும். அங்ஙனமுள்ள மரத்திற் கண்ட ஒரு பூவைத் தேனும் தும்பியும் வீணே ஊதி ஒன்றும் உண்ணப்பெறாமற் பெயர்ந்தனவென ஒரு புலவர் பாலைநில நிகழ்ச்சியைப் புலப்படுத்துகின்றார்.

மருதமரம்

மருதநிலத்திற்குரிய மரம் இது; நீர்த்துறைகளில் வளர்வது. இதன் மலர் செந்நிறமுடையது. நீர்த்துறைகளில் நீராடவரும் யானைகளை இம்மரத்திற் பிணித்தல் வழக்கம்.

மாணைக்கொடி

குறிஞ்சி நிலத்தில் வளரும் பெரிய கொடிவகைகளுள் ஒன்று. குண்டுக் கல்லின் அருகே படர்ந்த இக்கொடி அயலில் தூங்கும் களிற்றின்மேல் இவருமென ஒரு செய்தி ஒரு செய்யுளிற் கூறப்பட்டுள்ளது.

மாமரம்

இம்மரம் பெரும்பாலும் மருத நிலத்துக்குரியது; சிறுபான்மை கடற்கரையில் இருப்பதாகக் கூறப்படும். தேமாவென்பது மாவில் ஒரு சாதி. அதன் பழத்தை, “பால்கலப்பன்ன தேக்கொக்கு” என ஒரு புலவர் சிறப்பிக்கின்றார். பொய்கை யருகில் உள்ள மாவின் பழம் அப்பொய்கையில் விழுதலும், அதனை வாளைகள்

கவ்வியுண்ணுதலும், வௌவால்கள் மாம்பழத்தை உண்ணுதலுமாகிய செய்திகள் இந்நூலிற் காணப்படும். குயில் மாவின் பூந்தாதைக் கோதும். மாம்பூவில் வண்டு விழுந்து பயிலும். இதன் பூந்தாதுக்குப் பொன் உவமை கூறப்படும். இதன் தளிரை மகளிர் அடிக்கும் மேனிக்கும் ஒப்புக் கூறுவர். மாவின்வடு நறுமணமுடையது.

### மிளகுகொடி

மலைப்பக்கத்தில் வளர்வது. அதனால், "கறிவள ரடுக்கம்" என்று புலவர் மலைச்சாரலைச் சிறப்பிப்பர்.

### முல்லை

முல்லை நிலத்திற்குரிய அடையாளமாக விளங்குவது இது; மழை பெய்யும் கார்காலத்தில் வளம்பெற்று மாலைக்காலத்தில் மலர்வது. முல்லை மலர்வதனால் தலைவி கார்காலத்தின்வரவை அறிவாள். சில இடங்களில் வீட்டுத் தோட்டத்திலுள்ள மரங்களில் படரும்படி முல்லையை வளர்ப்பர். அம்மலரைப் பறித்து மகளிர் அணிந்து கொள்வர்.

தலைவன் தான் சென்றவினையை முடித்துவருகையில் இடையிலே உள்ள முல்லை நிலத்தில் முல்லைக் கொடிகள் பூத்து நிற்பது கண்டு, "யான் உரியகாலத்தே தலைவிபாற் சென்றிலேனென்று கார்காலம் முல்லையரும்பாகிய பற்களைக் காட்டிச் சிரிக்கின்றது" என்று கூறுவதாக ஒரு புலவர் அமைக்கின்றார். கதிரை அறுத்த வரகின் தாளிலும் துறுகல்லிலும் முல்லைக்கொடி படர்ந்து மலரும். முல்லையரும்பிற்கு மகளிர் பல்லும் காட்டுப்பூனையின் பல்லும் நட்சத்திரங்களும் ஒப்பிடப்படுகின்றன. ஆடவர் மேனியும் உத்தம மகளிர் நுதலும் முல்லையின் மணத்தையுடையன வென்பர். இதன் மலரை இடையரும் சூடுவர். முல்லை, காந்தள், குவளை யென்பவற்றைச் சேர்த்து மாலையாகக் கட்டுதல் வழக்கம். செம்முல்லை தளவெனப் படும்.

### முள்முருங்கை

இம்மரம் கவிரென்று வழங்கப்படுகின்றது. இதன் சிவந்த மலரிதழ் நாரையின் மெல்லிய இறகுக்கு உவமையாகச் சொல்லப் படும்.

### முள்ளிச்செடி

நெய்தல் நிலத்திற் காணப்படுவது; இது முண்டகமென்றும் வழங்கும். இதன் மலர் மிக்க குளிர்ச்சியை யுடையது. இச்செடியி

லுள்ள முள் வளைந்திருக்கும்; அதற்கு அணிற்பல்லை உவமிப்பர். அதன் மலரில் தாது நிறைந்திருக்கும். அது கரியநிறமுடையது.

## மூங்கில்

மூங்கிலிற் பலவகை உண்டு. குறிஞ்சிநிலத்தில் மிகுதியாகவும் பாலை நிலத்திற் சிறிதளவாகவும் காணப்படும். அமை, கழை, பணை, மூந்தூழ், வெதிர், வேய், வேரலென்னும் இதன் பெயர்கள் இந்நூலில் வந்துள்ளன. இயல்பாக வளர்ந்த மூங்கிற்றொகுதியே மலைச்சாரலில் வேலிபோல அமைந்திருக்கும். மூங்கிலடர்ந்த இடத்தைச் சோலை யென்று கூறுவதும் உண்டு. மூங்கிலை யானை உவந்துண்ணும். இதனை யானை வளைத்துவிடுங்கால் மீனெறி தூண்டிலைப்போலவும் செலுத்தி விட்டகுதிரையைப் போலவும் விரைந்து மேலெழும்புங்காட்சியைச் சில புலவர் புனைந்து கூறியுள்ளனர். மலைச்சாரலில் மூங்கில் மிக உயர்ந்து மேலே உள்ள தேனடையைக் கிழித்து நிற்குமொரு செய்தி ஒரு செய்யுளிற் காணப்படும். இதனை மகளிர்தோளுக்கு உவமிப்பர். முள்ளில்லாத மூங்கிலும் உண்டு.

பாலை நிலத்திலுள்ள மூங்கில் உலர்ந்துபோய் வளர்ச்சி பெறுமற் கூழையாக நிற்கும். மலைத்தேனை எடுப்பதற்கு ஒற்றைமூங்கில் கண்ணேணியாகப் பயன்படும்.

## யாமரம்

இம்மரம் பாலை நிலத்திற்கு உரியது. வயிரமுடையதாகவும் பொரிந்த அடியையுடையதாகவும் கூறப்படும். யானை இதன் பட்டையை உரித்து உண்டு அதிலுள்ள நீரினால் நீர்வேட்கையைத் தணித்துக்கொள்ளும். சிறுபான்மை குறிஞ்சி நிலத்திலும் இது காணப்படும். அங்கே கானவர் இதனை வெட்டிவிட்டுத் தினையை விதைப்பர்.

## வரகு

இது முல்லைநிலத்திற் பயிர் செய்யப்படுவது; கார் காலத்தில் தளிர்த்து விளங்கும். செம்மண்மேட்டில் நன்றாக வளரும்; மானுக்கு உணவாகும். இதன் கதிரை யரிந்த தாள், "குறைத்தலைப் பாவை" என்று கூறப்படுகின்றது. அத்தாளில் முல்லைக்கொடி படரும்.

வழை

இது குறிஞ்சி நிலத்தில் வளரும் மரங்களுள் ஒன்று. இது வளர்ந்த இடத்தை, "வழையமலடுக்கம்" என்று ஒரு புலவர் சிறப்பிக்கின்றார்.

வள்ளி

இது கிழங்கையுடையதொரு கொடி. இது படர்ந்த இடம், "வாடா வள்ளியங்காடு" என்று பாராட்டப் பெறுகின்றது.

வாகை

இம்மரம் பாலைநிலத்திற்கு உரியது; உழிஞ்சிலென்பதும் இதுவேயென்று தோற்றுகின்றது. இதன் பூ மணமுடையது. அதற்கு மயிலின் கொண்டையை உவமை கூறுவர். இதன் காய் முற்றி நெற்றாகிக் காற்றால் அலைக்கப்பட்டு ஒலிக்கும். அவ்வொலிக்குப் பறையொலியும் சிலம்பொலியும் ஒப்பிடப்படும். இதன் நெற்று வெண்ணிற முடையது. இதன் விதையை அரிசியென்பர்.

வாழை

வாழைமரமடர்ந்த இடத்தைச் சோலையென்பதும் மரபு. இதன் குருத்துக்கு நுகும்பென்பது ஒருபெயர். அது சுரிந்திருக்கும். அக்குருத்தைத் தடவுதலால் யானை வலியழியும். மலையிலுள்ள வாழை அருவியால் அடித்து வரப்படும். மகளிர் மென்மைக்கு இதன் மென்மை உவமையாகும்.

வெட்சி

காட்டில் வளரும் மரங்களுள் ஒன்று; வளைந்த கிளையையுடையது. இதன் மலரை மகளிர் தம் கூந்தலில் அணிவர்.

வேங்கை மரம்

இம்மரம் குறிஞ்சி நிலத்திற்குரியது. இதன் அடி கரியநிறமுடையது. இதன்மேல் மயில் இருக்கும். யானையால் மிதிக்கப்பட்ட வேங்கை சாய்ந்து, மகளிர் நின்றவாறே கொய்தற்குரியதாக இருக்கும் செய்தியொன்றை ஒரு புலவர் கூறுகின்றார். மகளிர் இம்மரத்தின் மேலேறிப் பூக்கொய்வர். குறிஞ்சிநிலத்திலுள்ள மன்றங்களிலும் இம்மரம் இருக்கும். இது மலர்ந்த காலத்தில் சிறுவர்கள் இதன்மேல் ஏறாமல் கீழிருந்தவாறே, "புலி புலி" என்று ஆரவாரிப்பர். கற்களுக்கு இடையிலும் அருவியினருகிலும் இது வளரும். மேல்

காற்றால் முறிந்து வீழும். இதன் மலர்த்தொகுதிக்குப் புலியை உவமை கூறுவர். பொதியில் மலையிலுள்ள வேங்கை ஒரு செய்யுளிற் சிறப்பிக்கப் பெறுகின்றது. இதன் மலர் மணமுடையது; மகளிராற் கூந்தலில் அணியப்படுவது.

### வேம்பு

பாலை நிலத்திற் காணப்படுவது. இளவேனிற்காலத்தில் மலரும். இதன் அடி மரம் கரியநிறமுடையது. இதன் பூவைப் பனந்தோட்டில் வைத்து ஆடவர் சூடுவர். இதன் பழத்தைக் கிளி உண்ணும்; அப்பழத்திற்குப் பொற்காசு உவமிக்கப்படுகின்றது.

## விலங்குகள்*

### அணில்

இது மக்கள் நிறைந்துள்ள இடத்தில் வருவதற்கு அஞ்சும்; அவர்களில்லாத இடத்தில் விளையாடும். "மக்கள் போகிய வணிலாடு முன்றில்" என்று ஒரு பாழிடம் கூறப்படுகின்றது. இதன் பல் கூரியது.

### ஆடு

வெள்ளாட்டினை வெள்ளை யென்று கூறுவர். அது சிறிய தலையை உடையது. ஆட்டு மந்தையைக் கொக்கின் கூட்டத்திற்கு உவமையாக ஒருவர் கூறுவர். குறிஞ்சிநில மாக்கள் ஆட்டுக்குட்டியைப் பலியாக இட்டு வெறியாடுவர்.

### ஆமான்

காட்டுப்பசுவை ஆமானென்பர். அமர்த்த கண்ணையுடையது இது. வேட்டுவரால் அலைக்கப்பட்ட ஆமானினது கன்று கானவர் வாழும் ஊரிற் புக்கு அவர் குடியிற் பழகி வளரும்.

### ஆமை

ஆமையின் பிள்ளையைப் பார்ப்பென்றல் மரபு. அது தாய் முகம் நோக்கி வளர்வது. "யாமைப் பார்ப்பி னன்ன காமம்" என்று அதனைக் காமத்திற்கு உவமை கூறுவர் ஒரு புலவர்.

* ஊர்வனவும், நீர்வாழ்வனவும் இவ்வகுப்பிற் சேர்க்கப்பட்டுள்ளன

### எருமை

மருத நிலத்தில் உழவர்களால் வளர்க்கப்படுவது. இதன் கழுத்தில் மணி கட்டுவது வழக்கம். கன்றையீன்ற எருமை உழவனால் தனியே கட்டப்பட்ட அக்கன்றை விட்டு அகலாது அருகிலுள்ள பயிரை உண்ணுமென்று அதன் அன்பு ஒரு பாட்டில் விளக்கப்பட்டிருக்கின்றது. இது நடுயாமத்தில் கரைவதனால் தலைவி துயருறுவதாகக் கூறுதல் புலவர் வழக்கம்.

### எலி

வீட்டில் வளரும் எலியை இல்லெலியென்பர். இதனை யாமத்தில் தேடிக் காட்டுப்பூனை உண்ணும்.

### எறும்பு

இந்நூலில் ஒரு செய்யுளில் எறும்பு எறும்பியெனச் சொல்லப்படுகின்றது. இதன் வளையை அளையென்றும் கூறுவர்; அது மிகவும் சிறியது. குறிஞ்சி நிலத்திற் பாறைகளிலுள்ள குறுஞ்சுனைகளுக்கு அவ்வளைகள் உவமையாகக் கூறப்படுகின்றன.

### ஓந்தி

இது பாலை நிலத்தது. இதன் முதுகுக்குக் கருக்கரிவாளை ஒரு புலவர் உவமை கூறுகின்றார். இதன் ஆணைப் போத்தென்றல் மரபு. பாலைநிலத்திற் செல்வார் பார்க்கும் நிமித்தத்திற்குரிய பொருள்களுள் இதுவும் ஒன்று.

### கடமா

கடமை, கடமாவென்பன ஒரு பொருட் சொற்கள். இவ்விலங்கு தினைக்கொல்லையிற் புகுந்து தினையை உண்ணும். வேட்டுவர் இதனை அலைத்து வேட்டையாடுவர்.

### குதிரை

குதிரையை மக்கள் பலவாறு பயன்படுத்திக்கொள்வர். தனியே ஏறிச்செலுத்துவதும் தேரிற் பூட்டிச் செலுத்துவதும் உண்டு. போரில் குதிரைப்படை ஒரு பிரிவாகும். தேரிற் பூட்டிய குதிரையின் வேகத்திற்குக் காற்றை உவமிக்கின்றார் ஒரு புலவர். போர்க்குதிரை துள்ளி யெழுவதை மற்றொரு புலவர் குறிக்கின்றார்.

குரங்கு

இதிற் பலவகை உண்டு. முசுவென்னும் இனத்தின் முகம் கரியதாக இருக்கும். கருங்குரங்கின் உடல் முழுதும் கரியதாகவும் முகம் வெள்ளியதாகவும் இருக்கும். கருங்குரங்கை ஊகமென்பர். குரங்கின் பல் கூரியது; வாய் சிவப்பாக இருக்கும். இதன் ஆண் கடுவன் கலையென்றும், பெண் மந்தியென்றும், குட்டி குருளை பறழ் பார்ப்பென்றும் வழங்கப்படுகின்றன. குரங்கு மிக உயர்ந்த மரங்களிலும் ஏறிப்பாயும் இயல்பினது; மாம்பழத்தைக் கடித்து உண்ணும்; பலாப்பழத்தைத் தோண்டிச் சுளையை உண்ணும்; தளிரை மேயும். மகளிர் பாறையிற் பரப்பிய தினையை அவர்கள் சோர்ந்த சமயம் பார்த்து மந்தி தன் குட்டிகளோடு கவர்ந்து செல்லும் காட்சியொன்றை ஒரு புலவர் அமைக்கின்றார்.

மந்தி தன் குட்டியை அகனுறத் தழுவிக்கொள்ளும். ஆண் குரங்கும் பெண் குரங்கும் ஒன்றனையொன்று காதல் செய்து வாழும் வரலாறுகள் சில இதிற் காணப்படுகின்றன; தன்னுடைய கணவனாகிய ஆண் குரங்கு இறந்தபிறகு கைம்மைவாழ்க்கையை விரும்பாத பெண் குரங்கு மரமேறவும் தெரியாத இளைய குட்டியைத் தன் இனத்தினிடத்தே கையடை கொடுத்துப் பின் உயிரைமாய்த்துக் கொள்ளுமென்பதும், ஆண் குரங்கு மரத்தின் மேலிருந்து பழங்களை உதிர்ப்பக் கீழிருந்து மந்தியும் குட்டிகளும் அவற்றைக் கைக்கொண்டு தின்னுமென்பதும் இதற்குரிய உதாரணங்களாம். முசுவின் குருளை பாறையில் மயிலீன்ற முட்டையை அதன் அருமை தெரியாமல் உருட்டி விளையாடுவதை ஒருவர் தெரிவிக்கின்றார். மழைக்குக் குரங்கு அஞ்சும். தானும் தலைவனும் பழகும் இடத்தில் குரங்கு சாட்சியாக இருந்ததென்று ஒரு தலைவி பகர்கின்றாள்.

செந்நாய்

இது பெரும்பாலும் பாலைநிலத்திற்குரியது; சிறுபான்மை குறிஞ்சி நிலத்திலும் காணப்படும். இது விலங்குகளை வேட்டையாடி உண்டு சிறு பள்ளத்திலுள்ள நீரை உண்ணும். புலிக்கு இவ் விலங்கு உணவாகும்.

தவளை

தவளையின் வாய் கிண்கிணியின் வாய்க்கு உவமை கூறப்படுகின்றது. இதன் இனமாகிய தேரை சுனையில் வாழ்வது; பகுவாயையுடையது; தட்டைப் பறையைப்போல ஒலிப்பது.

### நண்டு

இது ஞெண்டு எனவும் வழங்கும்; கொக்கிற்கு அஞ்சும்; நீர்த் துறைகளிலுள்ள மரங்களின் வேரில் வளையமைத்துக்கொண்டு வாழும்; அலைகளால் தன்மனை சிதைக்கப்படும்போது வருந்தி ஓடும். இதன் கால்கள் வளைந்திருக்கும். கடற்கரையில் விளையாடும் மகளிர் இதனை அலைத்து விளையாடுவர். அதற்கு அலவனாட்டுதலென்று பெயர். நண்டு ஓடும்பொழுது மணலிற் கோடுகள் உண்டாகும்; அவை கோலம் செய்தாற்போலத் தோற்றும். பொன்னிறமுள்ள கோடுகளை யுடைய ஒருவகை நண்டு உண்டு.

### நாய்

தலைவன் வேட்டையாடும்பொருட்டு வருகையில் நாயோடு வருவான். அது கடமா முதலிய விலங்குகளைத் துரத்தியலைத்து அவனுக்குத் துணைபுரியும். சில சாதியினர் தம்முடைய வீடுகளில் நாயை வளர்ப்பர். அவர் வீட்டு வாயிலில் அது காவல் புரியும். அங்ஙனம் நாயில்லாத அந்தணர் வீட்டு வாயிலை ஒரு புலவர், "நாயில் வியன் கடை" என்று சிறப்பிக்கின்றார்.

### நீர்நாய்

இது நீரில் வாழ்வது; பிரம்பின் தூற்றில் தங்கியிருக்கும். இது வாளைமீனை உணவாகக் கொள்ளும். இதன் உடலிலே கோடுகள் இருக்குமென்றும் அவை பிரப்பம்பழத்தின் மேலுள்ள கோடுகளைப் போலத் தோற்றுமென்றும் தெரிய வருகின்றது.

### பசுவும் ஆனேறும்

ஆனிரை முல்லை நிலத்திற்குரியது; காலையில் மேய்புலத்திற்குச் சென்று மேய்ந்துவிட்டு மாலையில் வீட்டிற்குத் திரும்பிவரும். வருங்கால் பசுக்கள் கன்றை நினைந்து மடியிற் பால் சுரப்ப வரும் காட்சி ஒரு செய்யுளிற் சொல்லப்படுகின்றது. தன் தாய்ப்பசுவின் வரவைக் கன்று மாலைக்காலத்தில் எதிர்நோக்கி நிற்கும். பசுவிற்கும் கன்றுக்குமிடையே உள்ள அன்பு மிகச் சிறந்தது; ஆதலின் அதனைத் தலைவனுக்கும் தலைவிக்கும் இடையேயுள்ள அன்புக்கு உவமை கூறுவர்.

பசு அறுகம்புல்லை உண்பதில் விருப்பமுடையது. முதிய பசு இளம்புல்லைக் கடித்து உண்ணமுடியாவிடினும் நாவினால் தடவு

மட்டில் ஒருவகை இன்பத்தைப் பெறும். பசுவின் அலை தாடியை அணலென்பர். அது நிலத்தளவும் நாலும்.

பசுவின் நிரையோடு ஏறும் இருக்கும்; ஆதலின் அந்நிரையை, "ஏறுடையினம்" என்பர். அவ்வேற்றின் கழுத்தில் மணி கட்டுதல் வழக்கம். இராக்காலத்தில் அம்மணியின் ஒலியைக் கேட்டுத் தலைவி வருந்துவாள். பசுக்கள் தங்குமிடம் தொழுவம், மன்று, மன்றமெனக்கூறப்படும்.

எருது உழவிற்குப் பயன்படும். அது வேனிற் காலத்தில் உழாது சோம்பியிருக்கும்; வெப்ப மிகுதியினால் மெலிவடையும்.

## பல்லி

பல்லி பாலை நிலத்திற் கள்ளியில் இருப்பதாகக் கூறப்படுகின்றது. இதன் கால் செந்நிறமானது. இது தன் துணையை அழைக்கும் ஓசைக்குக் கானவர் தம் நகத்தில் அம்பைப் புரட்டும் ஓசையைப் பாலைபாடிய பெருங்கடுங்கோ உவமை கூறுவர்.

## பாம்பு

இதிற் பலவகை உண்டு. பச்சைப்பாம்பு, நல்லபாம்பு, மலைப் பாம்பென்பன இந்நூலிற் கூறப்படுகின்றன. பச்சைப் பாம்பின் கருப்பமுதிர்வு கரும்பின் கூம்புக்கு உவமையாகும். நல்ல பாம்பு மிக்க விஷமுடையது. வெண்ணிறமான நாகமொன்றுண்டு. அதன் குட்டி கடித்தாலும் யானை இறந்துபடும். நாகப்பாம்பின் தலையில் மணி உண்டு; அது நீல நிறமுடையது. பாம்பு காந்தள் மலருக்கும், அதன் உரி கானலுக்கும் அருவிக்கும், அதன் மணி தும்பி யென்னும் வண்டிற்கும் உவமையாக்கப்படுகின்றன.

## புலி

மலையைச் சார்ந்த இடங்களிலே புலி வாழும். இது யானையைத் தாக்குதலும் யானையால் தாக்கப்பட்டு வலிசோர்தலும் உண்டு. யானை, செந்நாய், மரையினம் முதலியவற்றைக் கொன்று உண்ணும். இதன் உடலில் வளைந்த கோடுகள் இருக்கும். கண்கள் செந்நிறமுடையன. இதன் உடலுக்கு வேங்கை மரத்தின் பூத்த கிளையும், முழக்கத்திற்குக் கடலொலியும் ஒப்புக் கூறப்படுகின்றன. இருந்தபடியே இருபக்கத்திலும் பார்க்கும் இயல்பினது இது. தான் கொன்ற விலங்குகளை

மலைக் குகையிலே இட்டு வைத்திருக்கும். இரவிலே பிறவிலங்குகளை வேட்டையாடி உண்ணும். இதன் ஆணை ஏற்றையென்றல் மரபு.

மரையினம்

இவ்வினத்திற் பெண்ணை மரையாவென்றும், ஆணை மரையே றென்றும் வழங்குவர். இது மரங்களின் இலைகளையும் நெல்லிக் காயையும் உண்ணும் இயல்பினது. புலி இதனைக் கொன்று உண்ணும். மலைச்சுனையிலுள்ள மலர்களைத் தனது மூச்சினால் ஒதுக்கிவிட்டு நீரைப் பருகும் இதன் தன்மையை ஒருபுலவர் எடுத்துரைக்கின்றார்.

மான்

மான் பெரும்பாலும் முல்லை நிலத்திற்குரியதாகச் சொல்லப் படும். இதன் ஆண் கலை இரலை யெனவும், பெண் பிணையெனவும், குட்டி மறியெனவும் வழங்கப்படும். புள்ளியையுடைய மானைப் * புகரி யென்பர். ஆண்மானின் கொம்புகள் நெறிந்தும் திரிந்தும் கவைத்தும் இருக்கும். இது மழையற்ற காலத்தில் வெம்மையினால் வருநதும். மழை பெய்த புனத்தில் அறுகு முதலியவற்றை உண்டு பரல் நீரைக் குடித்துக் கலையும் பிணையும் மகிழ்ந்து துள்ளி விளையாடும். மான் மாலைக்காலத்தில் துணையோடு புதரில் மறையும். உழுந்து, வரகு, அறுகு, மரல், பயறு முதலியவற்றை உண்ணும். வேட்டுவரால் அலைக்கப்படும். ஆண்மானின் உயிர்நிலையிற் கானவர் அம்பெய்து கொல்லுவர். மானின் அடியை அடும்பின் இலைக்கு உவமை கூறுவ துண்டு.

மீன்

மீன்களிற் பலவகை உள. அயிரை, ஆரல், இறா, கயல், கெண்டை, சுறா, வாளை யென்பன இந்நூலில் வந்துள்ளன. மீனைத் தூண்டிலெறிந்தும் வலை வீசியும் பிடிப்பர். நெய்தனிலமாக்கள் படகி லேறிக் கடலிடைச்சென்று எறியுளியை வீசி மீன்பிடிப்பர். பாணர் மீனைப் பிடித்து மண்டையென்னும் பாத்திரத்திற் பெய்துவைப்பர். சில சமயங்களில் நீரில் மீனைக் கருதியமைக்கப்பட்ட வலையில் நீர்நாய் முதலியவை படுவதுமுண்டு. கடலிற் கொண்ட மீன் பரதவரால் மணல்முன்றிலில் உலர்த்தப்படும். கடல்மீனை நாரையும் கழிமீனைக் காக்கையும் உண்ணும்.

---

* புகர் - புள்ளி.

அயிரைமீனையும் ஆரல்மீனையும் நாரை உண்ணும். அயிரை பொய்கையிலும் காணப்படும். ஆரல்மீனின்முட்டை மிகவும் சிறியது. அது ஞாழற்பூவைப் போலத் தோற்றுவது.

இருமீனை இறவெனவும் மொழிவர்; இது வளைந்த காலையும் வளைந்த உடலையும் உடையது; கழிகளிற் காணப்படும். அன்றியின் வளைந்த வாய்க்கு இதனை உவமையாகப் பகர்வர்.

ஒன்றையொன்று பொரும் இணைக்கயலை மகளிர் கண்களுக்கு ஒப்பாக இயம்புவர். கெண்டையென்னும் மீன் பிரப்பம்பழத்தை உண்ணும்; பொய்கையில் வாழும்; நாரைக்கு உணவாகும்.

சுறுவென்பது கடலில் வாழ்வது. இது நீண்ட கொம்பையுடையது. பரதவர் இதனை வலையாற் பிடிக்க இயலாமையால் ஒருவகை எறியுளியை எறிந்து குத்திக்கொல்வர். இது மிக்க வலியுடையதாதலின் வயச்சுறுவெனக் குறிக்கப்படும். கொம்பை யுடையதாதலின் கோட்டு மீனென்றும் வழங்கப்படும். வலைஞர் இதனால் எறியப்பட்டுப் புண்ணையடைதலும் உண்டு.

வாளையென்னும் மீன் பொய்கைகளிலும் பிற சிறிய நீர்நிலைகளிலும் காணப்படும். இது மாம்பழத்தை உண்ணும்; நீர் நாய்க்கு உணவாகும். இதன் பெண்ணை நாகென்பது மரபு.

முதலை

இதன் கால்கள் வளைந்தவை. இதன் ஆணை ஏற்றையென்றல் மரபு. இதற்கு அஞ்சி இஃதுள்ள வழியில் யாரும் செல்லார். முதலை வாழும் துறையொன்றை, " கொடுங்கான் முதலைக் கோள்வ லேற்றை, வழிவழக் கறுக்குங் கானலம் பெருந்துறை " என்று ஒரு புலவர் கூறுகின்றார்.

யானை

யானையைப் பற்றிய செய்திகள் பல இந்நூலுள் வந்துள்ளன. குறிஞ்சி நிலத்தில் வலியோடு உலவும் யானையையும் பாலை நிலத்தில் உரனழிந்து வெம்மையால் துன்புறும் யானையையும் பற்றிய நிகழ்ச்சிகளைப் புலவர்கள் புனைந்துரைத்திருக்கின்றார்கள். சிறிய கண்களையும் ஆழ்ந்த வாயையும் மெல்லிய தலையையும் மதத்தால் நனைந்த கவுளையும் சேம்பின் இலையைப்போலத் தோற்றும் செவிகளையும் தினைக்கதிருக்கு உவமை கூறப்படும் துதிக்கையையும் பேயின்

பல்லைப்போன்ற கால் நகங்களையும் உடைய ஆண் யானைகள் புழுதி படிந்த மேனியுடன் குண்டுக்கற்களைப்போல நிற்கின்றன. சில யானைகள் கயத்தையும் ஆற்றையும் நாடிச் செல்லுகின்றன. சில மழையில் நனைந்து இன்புறுகின்றன. ஒரு யானை ஒரு துறுகல்லிற்கு அருகில் துயில்கின்றது. அதற்கும் அத்துறுகல்லிற்கும் வேற்றுமை தோற்றாமையின் அங்கே படர்ந்த மாணைக்கொடி அக்களிற்றின் மேற்படர்கின்றது. ஒரு யானை வேங்கை மரத்தடியில் துயிலும் போது அதனுடைய மூச்சு நெடுந்தூரம் ஒலிக்கின்றது. பள்ளி யானைகள் தலைவன் உயிர்ப்பதைப்போலப் பெருமூச்சு விடுகின்றன. தினைப்புனத்திற் சென்ற யானை கானவன் விட்ட கவணுக்கு அஞ்சி ஓடுகின்றது. இரவில் அப்புனத்திற் சென்ற மற்றொரு யானை அக் கானவன் வைத்துள்ள கொள்ளியைக்கண்டு அஞ்சி வருகையில் விண்ணிலிருந்து வீழும் நட்சத்திரத்தைக் கண்டு அதையும் கொள்ளிக்கட்டை யென்றெண்ணி அஞ்சுகின்றது. பெரிய உடலையுடையதாக இருந்தும் சிறு வெள்ளரவினால் ஓர் யானை அணங்கப்படுகின்றது. புதிதாகப் பிடிக்கப்பட்ட யானையொன்று வலியிழந்து மயங்கி நிற்கின்றது. அதைக் கண்ட புலவர் தலைவியின்பால் மயங்கிய தலைவனுக்கு அதனை உவமையாக்குகின்றார். களிறு மிதித்த மலையடிவாரங்களில் நீர் உண்டாகின்றது. யானைகள் ஒன்றோடொன்று பொருகின்றன; அருகில் நின்ற வேங்கைமரம் அதனால் சிதைகின்றது. புலியைத் தாக்கிப் புண்ணுறும் யானையையும், அப்புலியை வருத்தும் களிற்றையும் குறிஞ்சி நிலத்திற் காண்கின்றோம்.

மூங்கில், கொறுக்கைச்சி, கரும்பு, தினை, யா, ஓமை முதலியவற்றை யானைகள் உண்ணுகின்றன. தான் விரும்பிய தழைபுணவை உண்ட யானை மதம் பெருக ஒருசார் நிற்கின்றது.

வருந்திய நடையையும் முழந்தாளையுமுடைய மடப்பிடியொன்று தன் கன்று பால்குடித்துக்கொண்டே யிருப்பத் தினையை உண்டு மகிழ்கின்றது. யானைக்கன்று குறவர் பிள்ளைகளோடு பழகி வளர்கின்றது.

பாலைநிலத்தில் தங்குதற்கு நிழலின்மையால் வழிப்போவார் உடலை ஆறலை கள்வர் மூடிய தழைக் குவியலின் நிழலில் ஓய்ந்த யானை நிற்கின்றது. நீர்வேட்கை மிக்கு வறுங்கயத்தைத் துழாவுகின்றது. மரத்தின் பட்டையை உரித்து மென்று ஒருவாறு வேட்கை தணிகின்

றது. வேறொரு யானை உலர்ந்த மரத்தைப் பிளக்கமாட்டாமல் கையை மடித்து வருந்துகின்றது.

யானை தன் இனத்தைப் பாதுகாத்து உணவூட்டும் இயல்பினது. பிடிகளும் கன்றுகளும் முதிய யானைகளும் அடங்கிய யானைக்கூட்டத் திற்குத் தலைமையுடையதாக ஓர் யானை செல்லும். அதனை யூதநாத னென்பர். ஏந்தலென்று இந்நூல் கூறுகின்றது. யாமரத்தைக் குத்தி அதன் பட்டையால் தன் இனத்தின் பசியைத் தீர்க்கும் யானையை இதிற் காணலாம்.

களிறும் பெண்யானையும் ஒன்றனோடு ஒன்று இணைந்து அன்பு பூண்டொழுகுகின்றன. குறிஞ்சிநிலத்துக்களிறு தன் மடப்பிடி யைத் தழுவிக் குன்றகச் சிறுகுடியிற் செல்கின்றது. மாலைக்காலத் தில் அப்பிடியோடு மலைமுழைஞ்சுகளிற் புகுகின்றது. புலியினின் றும் பிடியைப் பாதுகாக்கின்றது. பாலைநிலத்துக்களிறொரு யாமரப் பட்டையை உரித்துத் தன்பிடியின் பசியைக் களைகின்றது.வாழையால் மதனழிந்து கிடக்கும் களிற்றைப் பிடி தன் கையால் தடவி உபசரிக் கின்றது. இக்காட்சிகளில் அக்களிற்றுக்கும் பிடிக்கும் இடையேயுள்ள அன்பு விளங்குகின்றது.

பழக்கப்பட்ட யானைகளைப் பாகர்கள் கழுவுதலும், நீர்த்துறை களிலுள்ள மருதமரத்திற் பிணித்தலும், போரிடைப் படையாகக் கொண்டு செல்லுதலும், வீரர்கள் அதனைக்கொன்று தாமும் படுதலு மாகிய செய்திகள் இதில் வந்துள்ளன.

பெண்டிர் பிடியின்மேல் ஊர்தல் வழக்கமாதலின் தம்மைப் பாடி வரும் விறலியர்க்குப் பெண்யானைகளை உபகாரிகள் பரிசிலாக அளிக் கின்றனர்.

யானைக்கொம்பு விலை உயர்ந்தது. அதனால் தேர் இயற்றப்படும். அக்கொம்பை விற்று அதன்விலையால் உணவு பெறுதல் குறிஞ்சி நிலத்து வாழ்வார் வழக்கம்.

வருடை

எண்கால் வருடையென்று கூறப்படுவதும் இதுவே. இதனை வருடைமானென்றும், இதன் குட்டியை மறியென்றும் கூறுதல் மரபு. இது செங்குத்தான மலைகளில் வாழும் இயல்பினது.

வரையா

மலைப்பசு; அறுகம்புல்லை உண்டு உகாய் மரத்தின் நிழலில் தங்குவதாக ஒரு செய்யுள் கூறுகின்றது. இதன் ஆண் ஏறென்றும் பெண் வரையா வென்றும் கூறப்படும். வரையாவை, “ மடக்கண் வரையா ” என்பர்.

வெருகு

காட்டுப்பூனை வெருகெனப்படும். இது வேலிகளில் வாழ்வது; மாலையிற் சென்று இரைதேடும்; எலியையும் கோழியையும் உண்ணும். இதன் பல் முல்லையரும்பிற்கு உவமை கூறப்படும். இதன் குட்டியைப் பிள்ளையென்றல் மரபு.

பறவைகள்

அன்றில்

இது நெய்தனிலத்தில் வாழ்வதொரு பறவை. ஆணும் பெண்ணும் எப்பொழுதும் சேர்ந்து வாழும். ஆண் பறவையின் உச்சிச்சூட்டானது சிவந்து நெருப்புப்போலத் தோற்றும். இதன் அலகு வளைந்தது; அதற்கு இறமீனை உவமை கூறுவர். இதன் கால் கரியது. இது பனைமரத்திற் கூடுகட்டி வாழ்வது. ஒரு செய்யுளில் தடாமரத்திலும் வாழ்வதாகக் கூறப்பட்டுள்ளது. யாமத்தில் இது நரலும். அவ்வொலிகேட்டுத் தலைவி துயருறுவாள்.

அன்னம்

இப்பறவை பெரும்பாலும் நெய்தற்குரியதாகச் சொல்லப்படும். இது குறுங்காலையும் வெண்ணிறத்தையும் உடையது. மணலில் தங்கியிருக்கும். மிகவும் உயரத்தில் விரைவாகப் பறக்கும்; அவ்விரைவு பற்றிக் குதிரைக்கு உவமையாகக் கூறப்படும்.

எழால்

புல்லூறென்னும் பறவையை எழாலென்பர். இது பாலை நிலத்தில் இருப்பது; வங்காவென்னும் பறவையை அடித்துக்கொல்லும் இயல்பினது.

கணந்துள்

பாலை நிலத்தில் வாழும் பறவைகளுள் ஒன்று; நீண்ட காலையுடையது. இப்பறவைகள் கூட்டமாக வசிக்கும். இப்புள் தன் குரலால் வழிப்போவாருக்கு ஆறலை கள்வருண்மையை அறிவுறுத்திப் பெயரச் செய்யும்.

## காக்கை

பெரும்பாலும் நெய்தல்நிலத்ததாகக் கூறப்படும். கழுத்திற் சிறிதளவு வெண்ணிறமுடைய ஒருவகைக் காக்கையைச் சிறுவெண் காக்கை யென்பர். இதன் உள்வாய் சிவந்திருக்கும். இது கடற்கரையில் வீசும் திவலையால் நனைந்து சோலையில் தங்கும். கழியைத் துழாவி மீனை உண்ணும். இது கரைந்தால் விருந்தினர் வருவரென்பர். மகளிர் சோற்றைக் காக்கைக்குப் பலியாக இடுதல் வழக்கம்.

## கிளி

கிளியின் வளைந்த அலகுக்குக் கைவிரல் நகமும் அவரை மலரும் ஒப்பிடப்படுகின்றன. இது வேப்பம் பழத்தையும் தினைக்கதிரையும் உண்ணும்; குறமகளிராற் கடியப்படும்.

## குயில்

குயில் மாமரத்தில் வாழ்வது; கரிய நிறமுடையது; மின்னுகின்ற தூவியை உடையது. இளவேனிலில் மாம்பூவின் தாதைக் கோதும். அப்பொழுது அத்தாது இதன்மேற் படிந்து பொன்னை உரைக்கும் கட்டளைக்கல்லைப்போலத் தோற்றச் செய்யும்.

## குருவி

குருவிகளிற் பலவகை உண்டு. இங்கே வீட்டிலுறையும் சிட்டுக் குருவியும் காட்டுக் குருவியும் தூக்கணங் குருவியும் கூறப்படுகின்றன. வீட்டின் இறப்பிலே உறையும் குருவியின் சிறகுக்கு ஆம்பற் பூவின் வாடலை உவமிப்பர். அது வீட்டின் முன்னிடத்திலே உலர்த்திய தானியங்களை உண்டு உலர்ந்த சாணகத்தைக் குடையும். ஆண் குருவி தனது பெண்குருவி கருப்ப முதிர்ந்தமையால் அது கருவுயிர்த்தற்கேற்ற மெத்தென்ற இடம் அமைக்கும்பொருட்டுக் கரும்பின் பூவைக் கோதும் காட்சி ஒரு புலவராற் சொல்லப்படுகின்றது. குருவிகள் தினைக் கொல்லையில் தினையை உண்ணும். தூக்கணங் குருவி பனைமடலிற் கூடு கட்டும்.

## குறும்பூழ்

இதன் கால் செந்நிறமுடையது; உழுத்தஞ் செடியின் அடியைப் போல்வது. இப்பறவையை நெய்யிற் பொரித்துப் பாணர் முதலியோர் உண்பர்.

கூகை

இது பெரும்பாலும் மலையில் வாழ்வதாதலின், 'குன்றக் கூகை' எனப்படும். இப்பறவை ஒலித்தலைக் குழறலென்பர். அவ்வொலி அச்சத்தைத் தருவது; மகளிர் அது கேட்டு அஞ்சுவர். "கூகைக் கோழி" என ஒரு புலவர் இதனைக் குறிக்கின்றார்.

கொக்கு

கொக்கு நண்டையும் மீனையும் உண்ணும். தனக்குரிய உணவை எதிர்நோக்கிப் பார்த்துக்கொண்டே நிற்கும். இதன் புறத்திற்கு ஆம்பல் மலரை உவமை கூறுவர்.

கோழி

ஆண்கோழி சேவலென்றும், பெண் பேடை யென்றும், குஞ்சு பிள்ளை யென்றும் கூறப்படும். சேவலின் கொண்டை செங்காந்தளைப்போலத் தோற்றும். கோழி பூனைக்கு இரையாகும். விடியற் காலத்தில் குக்கூவெனக் கூவும். குப்பையைக் கிளைக்கின்ற கோழிகள் ஒன்றனோடு ஒன்று போர் செய்யும்; அதனை, 'குப்பைக் கோழித் தனிப்போர்' என்று ஒரு புலவர் சிறப்பிப்பர். பெட்டைக்கோழி குறுங்காலையுடையது; குஞ்சுகளோடு கூடியிருக்கும்; காட்டுப் பூனைக்கு அஞ்சும்.

காட்டுக்கோழியைக் கானங்கோழி யென்பர். அது பொறிகளையுடைய கழுத்தையும் கவர்த்த குரலையும் உடையது.

நாரை

இது வெள்ளிய சிறகையும் பசிய காலையும் செவ்வாயையும் உடையது. சிறகின் இடையேயுள்ள தூவி செந்நிறமாக இருத்தலின் முள்ளுமுருங்கையின் மலரை உவமை கூறுவர். இப்பறவை அயிரை, ஆரல், கழிமீன், கெண்டை, நெய்தல், நெற்கதிர் முதலியவற்றை உண்ணும். புன்னைச்சினையில் தங்கியிருக்கும்; வாடைத் துவலைக்கு வருந்தும். இதன் தாள் அகன்றிருக்கும். இதன் காலுக்குத் தினைத்தாளை உவமை கூறுவர். கருங்காலையுடைய ஒருவகை நாரையும் உண்டு. சிறகின் வலியையிழந்து பறக்கும் ஆற்றலில்லாத முதிய நாரையொன்று தானே சென்று உணவு தேட இயலாமல் கடற்கரையில் புன்னைமரத்தில் நீராளவும் தாழ்ந்திருக்கும் கிளை

யில் இருந்து அலைகளில் வரும் மீனை உண்ணலாமென்னும் அவா வோடு தங்குவதை ஒரு புலவர் கூறுகின்றனர்.

## நளம்பு

நுளம்பென்பது மாட்டீயின்பெயர். 'ஆனுளம்பு' என இந் நூலுட் கூறப்படுகின்றது. இவ்வீ இரவிலே பசுக்களைக் கடித்துத் துன்புறுத்தும்.

## பருந்து

இது பாலைநிலத்தில் தன் பெடையோடு தங்கும். ஓமை மரத் தின்மீது இருந்து ஒலித்தலும், ஞெமை மரத்தின்மேல் ஊனை விரும் பித் தங்குதலும் கூறப்படுகின்றன.

## புறா

பாலைநிலத்தது. இதன் புறத்தை உகாய் மரத்தின் அடிக்கு உவமை கூறுவர். ஓமை மரத்தின்மேலும் கள்ளியின்மேலும் தங்கு வதாகக் கூறப்படுகின்றது. இது புள்ளிகளுள்ள கழுத்தையுடையது; குறுக அடியிட்டு நடக்கும்; துணையோடு சேர்ந்து ஒலித்து மகிழும். ஆண் புறா இரைதேடிப் புறத்தே செல்ல, அது வரத்தாழ்த்தமையால் பெண்புறா அதனை நினைந்து கூவும் செய்தி இதிற் காணப்படும்.

## மகன்றில்

நீர்வாழ் பறவைகளுள் ஒன்று இது; பூக்களிற் பயில்வது. நிலத் தில்வாழும் அன்றிற் பறவையைப்போல ஆணும் பெண்ணும் பிரி வின்றி எப்பொழுதும் இணைந்தேயிருக்கும். தலைவனும் தலைவியும் பிரி வின்றி ஒன்றியிருப்பதற்கு மகன்றிற் சேர்க்கையை உவமை கூறுவர்.

## மயில்

முல்லையிலும் குறிஞ்சியிலும் மயில் இருப்பதாகக் கூறப்படும். இது போழ்ந்தாற் போன்ற கண்ணையுடையது. கார்காலத்தில் ஆர வாரித்து மேகத்தைக்கண்டு மகிழும். கான்யாற்றங் கரையிற் களித்து ஆடும். இதனை வலையமைத்து வேடர் பிடிப்பர். இது பாறையில் முட்டையிடும்; வேங்கைமரத்தின்மேல் தங்கும்; தினைக்கதிரை உண் ணும். ஆண்மயிலுக்குத் தோகையுண்டு. அத்தோகையிலுள்ள பீலி யைப் பேதைப் பருவ மகளிரது மயிர்முடிக்கு உவமிப்பர். அப் பீலி யில் கண்போன்ற ஒருறுப்பு இருக்கும்; அதனைக் கண்ணென்றே

வழங்குவர். மயிலை மகளிரது மென்மைக்கும் அதன் கழுத்தைக் காயா மலருக்கும் அதன் கலாவத்தை மகளிர் கூந்தலுக்கும் அதன்குடுமியை வாகைப்பூவிற்கும் அதன் காலை நொச்சியிலைக்கும் ஒப்பிடுவர்.

### யானையங் குருகு

யானைச் சாத்தனென்னும் ஒருவகைப் பறவை இதுபோலும். இது நெய்தல் நிலத்தில் வாழ்வது. வீரர்களது ஆரவாரத்தைக் கண்டு வெருவுவதாக ஒரு செய்யுள் கூறும்.

### வங்கா

இது பாலை நிலத்தில் வாழும் பறவைகளுள் ஒன்று. சிவந்த காலையும் வேய்ங்குழலின் ஓசையைப்போன்ற குரலையும் உடையது. எழாலென்னும் பறவைக்கு அஞ்சும் இயல்பினது.

### வண்டு

இதிற் பலவகை உண்டு. தும்பி, தேன், சுரும்பு, வண்டு என்பன இந்நூலிற் கூறப்படுகின்றன. இவற்றுள் தும்பி யென்பது உயர்ந்த சாதி; அது நன் மணத்திற் செல்வது; "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி" எனச் சிறப்பிக்கப்படுகின்றது; பூவை ஊதும்; மராம்பூ காந்தள் முதலியவற்றை ஊதும் செய்தி இதிற் காணப்படும். அதற்கு நீலமணியை ஒப்பிடுவர். தேனென்னும் ஒரு வகை வண்டு தும்பியோடு மலரை ஊதும் செய்தி ஒரு புலவராற் சொல்லப்படுகின்றது. நெய்தல்மலரின் மணத்தைச் சுரும்பு நுகர்வதாக ஒருபுலவர் அமைக்கின்றார். கொன்றை, குறிஞ்சி, குவளை, புன்னை, முல்லை, கோங்கு, காந்தள், ஆம்பல் முதலிய மலர்களிலுள்ள மணத்தையும் தாதையும் தேனையும் வண்டு உட்கொள்ளும்; ஐவகை நிலத்துப் பூக்களிலும் பயிலும் தன்மை வாய்ந்தது; மலரும் பருவத்துள்ள பூக்களைச் சென்று ஊதித் திறக்க அவை மலரும். இதனைத் தாதுவிடுவதாகச் செய்யுளியற்றல் மரபு (௩.௯௨.)

### வெளவால்

இது வாவலெனவும் வழங்கும். இதன் சிறை வலிமையும் வளைவும் மென்மையும் பொருந்தியது; கரிய நிறமுடையது. இதற்கு ஆம்பலிலையின் புறம் உவமையாகும். இதன் நகம் மிகக் கூரியது இப்பறவை மரங்களில் தலைகீழாகத் தொங்கும் இயல்புடையது. முள்ளில்லாத முங்கிலிற் சென்று நாலுவதாக ஒரு செய்யுள் கூறும்

இது மெல்லப் பறக்கும். இராக்காலத்திற் பழுத்த மரங்களைத் தேடிச் செல்லும். நெல்லிக்காய், மாம்பழம், பலாப்பழமென்பவற்றை உண்ணும்.

## அன்பு

இங்ஙனம் விரிவாக வகுத்துக் காட்டப்பட்ட பொருள்களின் இயல்புகளால் புலவர்கள் இயற்கையின் உண்மைகளை நன்குணர்ந்து பாடியுள்ளார்களென்பது தெரியவரும். ஐந்திணை ஒழுக்கங்களாகிய உரிப்பொருளை அவர்கள் வெளிப்படுத்தும் முறை மிக இனியது. தலைவனும் தலைவியும் அன்புற்று இன்பம் நுகர்ந்து வாழும் வாழ்க்கையின் பல திறப்பட்ட நிகழ்ச்சிகளை அவர்கள் நாடகவழக்கும் உலகியல்வழக்கும் இயையக் கூறிச் செல்கின்றனர். தலைவிக்கும் தலைவனுக்குமிடையே உள்ள அன்பைப்பற்றிய செய்திகள் மிக உயர்ந்த நிலையை யுடையன. இவ்வன்பு காமம், கேண்மை, தொடர்பு, நட்பு, நயம் என்னும் பெயர்களால் வழங்கும்.

இவ்வன்பு பிறவிதோறும் தொடர்ந்து வருமென்பது சான்றோர் கொள்கை. ஆதலின், "பயிலியது கெழீஇய நட்பு" (உ) என்று இத்தூய காதலைக் கூறுவர். பிறவிதோறும் கணவனும் மனைவியுமாக இருப்பதே இவ்வன்பின் பயன்; இதனை,

"கடனறிந் திருவே மாகிய வுலகம்" (ருஎ)

என்பதில் தலைவி குறிக்கின்றாள்; "இப்பிறவி நீங்கி மறுபிறவியடையினும் நீயே என் கணவனாகுக; நானே நின் நெஞ்சுபொருந்திய மனைவியாகுக" (சக) என்று வேண்டுகின்றாள். தலைவனோ தலைவியைப் பெறாத துயர மிகுதியால் துன்புற்ற நெஞ்சை நோக்கி, "இந்தப் பிறவியோடு இந்நட்பு அற்றுவிடுமென்பதொன்று இல்லை; இது மறு பிறவியினும் மன்னுதல் பெறும்; ஆதலின் நாம் பெறும் பேறு ஒன்று உண்டு; நீ வருந்தற்க" (கககூ) என்று ஆற்றுவிக்கின்றான்.

இவ்வாறு பிறவிதோறும் தொடர்ந்துவரும் அன்பு நல்லூழினால் தலைவனையும் தலைவியையும் ஒன்றுபடுத்தற்குக் காரணமாகின்றது. அவ்வன்பின் தொடர்ச்சியை அறாமல் இயையச் செய்வது ஊழ். அதனைப் பாலென்றும் தெய்வமென்றும் கூறுவர்;

"பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயிற்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ" (கூசுகூ)

என்று தோழி தலைவனைப் பற்றிக் கூறுகின்றாள்; 'தலைவனது குணச் சிறப்பை அளந்தறிவதற்குரிய தகுதி நமக்கு ஏது? இது நல்லூழி னால் அமைக்கப்பட்ட தொடர்பு' என்று பொருள்படும் இக்கூற்றி னால் புறத்தோற்றத்திற் காணப்படும் தகுதியினால் தொடர்பு உண்டா வதன்றென்பதும் பால் வகுத்தமைப்பதனாலேயே அது நேர்கின்ற தென்பதும் பெறப்படும்.

இளம்பருவந் தொடங்கித் தலைவனும் தலைவியும் நட்புப் பூண்டு ஒழுகவேண்டு மென்பது இல்லை. நொதுமலர்களாக இருப்பினும் ஊழின் வலியால் பிறவிதோறும் தொடர்ந்த அன்பு மீண்டும் இணைக்கப்படுகின்றது. ஒரு தலைவன் முன் அறியாத தலைவி ஒருத்தியைக்கண்டு அவள் பால் வயப்பட்டு அன்பு பூணுகின்றான். நெடுங்காலம் பழகினாரிடையும் அன்பு உண்டாதலரிதாகிய இவ்வுலகத் தில் முன் பழக்கமில்லாத தம் இருவருடைய மனமும் ஒன்றியதை நினைந்து அவன் வியக்கின்றான்: "என்னுடைய தாயும் உன்னு டைய தாயும் என்ன உறவினர்? ஒருறவும் உடையரல்லரே! என் தந்தையும் உன் தந்தையும் எந்த முறையில் உறவுடையர்? அவர்களுக்கும் கேண்மையில்லையே! யானும் நீயும் எப்படி அறிவோம்? இதுகாறும் அறிந்தோமில்லையே! இங்ஙனம் இருப்ப வும், செம்மையாகிய முல்லைநிலத்திற் பெய்த மழைநீர் அந்நிலத் தோடு இயைவது போல நம் இருவருடைய அன்புடை நெஞ்ச மும் தாமே கலந்தனவே! என்ன வியப்பு!" (௪0) என்பது அவன் கூற்று. நொதுமலர்களாகத் தோற்றிய அவ்விருவரிடையே ஒளித்திருந்த அன்பு தக்க காலத்தில் வெளிப்பட்டு ஒன்றுகின்றது.

இதைவிட வியத்தற்குரியதாகிய அன்பின் செய்தியொன்று வேறொரு செய்யுளிற் கூறப்படுகின்றது; பகைஞர்களாகத் தோற்றிய இருவரிடம் பழைய அன்பு ஒன்றிவிடுகின்றது: தலைவனும் தலைவியும் பாலைநிலத்துவழியே செல்கின்றனர். அவ்விருவரையும் இளமைக் காலத்தில் பகைஞர்களாகக் கண்டவர்கள் சிலர் பாலையின் வெம்மையை யும் கொடுமையையும் மறந்து அவர்கள் அப்பொழுது இணைந்து செல் வதைப் பார்க்கின்றனர். அவர்களுக்கு உண்டாகும் வியப்பும் ஊழின் வலியினிடத்தே தோன்றிய மதிப்பும் அளவற்றன; "என்ன வியப்பு! சிறு பிராயத்தில் இவன் இவளுடைய தலைமயிரைப் பிடித்து இழுப் பான்; இவளும் இவனுடைய மயிரைப் பிடித்திழுத்து ஓடுவாள்; செவிலியர் தடுத்தாலும் நில்லாமல் காரணமில்லாத சண்டையைச்

செய்துகொண்டிருப்பார்கள். இப்பொழுதோ மெல்லிய இரட்டை மாலை சேர்ந்தாற்போல இவர்கள் மணம் புரிந்து மகிழ்தற்குரியவரானார்கள். இப்படிச்செய்த ஊழ்வினையே! நீ மிக நல்லை!" (உஉக) என்று பாலை அவர்கள் வாழ்த்துகின்றார்கள்.

தலைவனிடமும் தலைவியினிடமும் இவ்வன்பு மறைந்து நிற்கின்றது. நல்லூழின் திறத்தினால் தக்க செவ்வி உண்டாகும்போது அது சூரியனைக்கண்ட தாமரைபோல மலர்கின்றது. 'காமமென்பது ஒரு நோயன்று; துயரமுமன்று. அது மக்களிடத்தே மறைந்து நிற்கும் ஒரு குணம். அது மிகுதலும் தணிதலும் இல்லை. தழைபுணவைத் தின்ற யானைக்கு மதம் உண்டாவதுபோலப் பால்வயத்தாற் கூட்டப்பட்டாரைக் காணும்போது அது வெளிப்படும்' (கஙக) என்று அவ்வன்பின் இயல்பை ஒரு புலவர் உணர்த்துகின்றார். அங்ஙனம் காணும் காலத்து வெளிப்படுவதாதலின் அதனை, "கண்டர வந்த காம வொள்ளெரி" (ஙOரு) என்று ஒரு நல்லிசைப் புலவர் நவில்கின்றார். அது பிறவிதோறும் தொடர்ந்த பழமையதாயினும் தோற்றும்போதெல்லாம் புதிய இன்பத்தை உடையது; இக்கருத்து, "விருந்தே காமம் பெருந்தோ ளோயே" (உOச) என்பதில் வெளிப்படுகின்றது. கண்டமாத்திரத்தே நெஞ்சங் கலந்த காதல் பண்டை உறுதியைப் பெற்றுவிடுகின்றது. நிலத்தினும் பெரிதாகவும் வானினும் உயர்ந்ததாகவும் நீரினும் ஆழமுடையதாகவும் வளர்கின்றது (ங); உயிர் அக்காதலாகிய பெரும்பழத்தைத் தாங்கி நிற்கும் காம்பைப்போல நிற்கின்றது (கஅ); காம்பைக் காட்டிலும் பழத்திற்குத்தானே மதிப்பு? அதுபோல உயிரினும் அவ்வன்பு சிறந்து விளங்குகின்றது. கடல்சூழ் மண்டிலத்தைப் பெற்றாலும் அந்நட்பு விடுதற்கரியதாகின்றது (ஙOO.) அது நாணத்தால் வெளிப்படாமல் தலைவியின் உள்ளே கிடந்து தாயில்லாத முட்டைபோல மெலிவடைகின்றது. யாமைப் பார்ப்புத் தாயின் முகம் நோக்கி வளர்வதுபோலத் தலைவனது காட்சியால் தளிர்ப்பதாகிய அது புறத்தேயுள்ள இடையூறுகளால் சில கால் பொலிவிழக்கின்றது. அப்பொழுது அதனை உள்ளடக்கி வைக்கும் ஆற்றலில்லாத தலைவி அதனை நோயாக நினைக்கின்றாள். தலைவனும் அங்ஙனமே தலைவியைக் காணப் பெறானாயின் அன்பு தடைப்பட்டு வருந்துகின்றான்; உள்ளந்தாங்கா வெள்ளத்தில் நீந்துகின்றான்; 'இந்நோய் பரந்தது; பொறுத்தற்கரிது' என்று நண்பனிடம் கூறுகின்றான்.

தலைவியோ, 'பொறையரு நோய்' கொண்டு என்பு உருக நலிந்து வாடுகின்றாள். அன்னைப் பகையாகக் காண்கின்றாள்; "இகலும் தோழிநங் காமத்துப் பகையே" (உருஎ), "சேர்ப்பனொடு செய்தன மன்றவோர் பகைதரு நட்பே" (௩௦௪), "பகையா கின்றவர் நகைவிளை யாட்டே" (௩.௬௪) எனக் கதறுகின்றாள்.

பிரிவின்றி வாழ்தலே அன்பு வளர்தற்கு வழி யென்பதைத் தலைவனும் தலைவியும் உணர்கின்றனர். "பிரிவின் றாயி னன்றுமற் றில்ல.... நாடனொடு கலந்த நட்பே" (௧௩௪), "தணப்பருங் காமம்" (௧௭௭) என்னும் கூற்றுக்களில் இக்கருத்தைக் காணலாம். தலைவனோ, "பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்" என்றும், "வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே" (௩௨) என்றும் கூறுகின்றான். பிரிவரிதாகிய தண்டாக் காமம் பிரிவினால் இடையூறு உறுவதினும் உயிர் போதல் சிறந்ததென்பதே அன்புடையார் துணிபு (௫௭.)

"விரிநீர்ச் சேர்ப்ப னீப்பி னொருநம்
இன்னுயி ரல்லது பிறிதொன்
றெவனோ தோழி நாமிழப் பதுவே" (௩௩௪)

என்பது தலைவி கூற்று. தலைவன் பிரிவினால் உயிரிழத்தலை அவள் பாராட்டவில்லை. மறுமை யுலகத்தும் மன்னுதல் பெறுமென்ற துணிவினால் அவளுக்குக் காதலிழத்தலினும் சாதலே சிறந்ததாகத் தோற்றுகின்றது. "யாம் எம்முடைய காதலரைக் காணேமாயின் கரையிலுள்ள கற்களோடு உராய்ந்து செல்லும் நுரையைப்போல மெல்ல மெல்ல உயிர் தேய்ந்து இல்லையாவோம்" என்று ஒரு தலைவி இயம்புகின்றாள்.

எவ்வகை இடையூறு உற்றாலும் அன்பு அழியாதென்னும் துணிவு காதலர்மாட்டே இருத்தலின் அவர்கள் உலகியலோடு பொருந்தி வாழ்கின்றார்கள். அடிக்கடி கண்டு அளவளாவாவிடினும் மனமொன்றிய அன்பு தேயாதென்பதை,

"காம மொழிவ தாயினும்...எம்
தொடர்புந் தேயுமோ நின்வயி னானே" (௪௨)

என்பதிற் கபிலர் உணர்த்துகின்றார். இங்கே காமமென்றது மெய்யுறு புணர்ச்சியை; தொடர்பென்றது அன்பினை. "யார் எவ்வாறு பழித்தாலும் எம் அன்பு அழியாதென்பதை நான் நன்றாக அறிந்தேன்" (௧௪௦) என்று ஒரு தலைவி கூறுகின்றாள். "தலைவனோடு நாம்

கொண்ட காதல் நன்றாகக் கட்டப்பெற்றது; நன்றாக முடிந்தமைந் தது; அவிழ்த்தற்கரியது" (௩௧௩) என்று ஒருத்தி சொல்கின்றாள்.

அன்பின் வயப்பட்டார் தமக்கு அன்புடையாரால் தீங்கு நேர்ந் தாலும் அதனைத் தீங்காகக் கருதாமல் ஒழுகுவர். "தலைவனோடு நாம் அளவளாவாவிடினும் அவனைத் தலைவனாகப் பெற்றோம், அவனோடு நட்புச் செய்தோமென்ற அளவிலே எமக்கு இன்பம் உண்டாகின் றது" (௬௧), "தலைவனது நட்பு என்தோளை மெலிவித்தும் அமைதி யைத் தந்தது" (௬௦), "தலைவன் கொண்ட கேண்மை நாம் பசந்தா லும் தான் பசப்பை யுறாது" (௨௬௪) எனவரும் கூற்றுக்களில் அன்பா னது குறைவையும் நிறைவாகக் கொள்ளுமென்ற உண்மை விளங்கு கின்றதல்லவா? தலைவனால் என்ன துயருற்றாலும் அவனை, "அன்றை யன்ன நட்பினன்" (௩அ௫) ஆகவும், "அக் குன்றநாடன் கேண்மையை என்றும் நன்று" (௩அ) ஆகவும் மறுவில் நட்பாகவும் (௨௪௭) தலைவி காண்கின்றாள். இவ்வன்புடைக் காமத்தின் விளைவைப் பற்றிப் புலவர்கள் கூறுவனவற்றை ஆராய்கையில் அதன் மென்மையையும் நுண்மையையும் வியத்தக்க ஆற்றலையும் அறிந்து இன்புறுகின்றோம். "ஐதே காமம்" என்று நம்மைப் போலவே பாங்கியும் வியப்படை கின்றாள்.

## அன்பு வாழ்க்கை

இத்தகைய சிறந்த அன்பினைப் பூண்ட தலைவனும் தலைவி யும் தம்முட் காதலித்து வாழும் வாழ்க்கை இரண்டு வகைப்படும். அவை, மணம் புரிந்து வாழ்வதற்கு முன்னதாகிய களவொழுக்கமும் அதன் பின்னதாகிய கற்பொழுக்கமும் ஆம். களவொழுக்க மாவது தலைவனும் தலைவியும் அடுப்பாரும் கொடுப்பாருமின்றித் தெய்வத்தாற் கூட்டப்பெற்று அன்புற்றுப் பிறர் தம் ஒழுக் கத்தை அறியாவாறு ஒழுகுதல். இதனைக் களவென்றும், ஒளித்த செய்தியென்றும், மறையென்றும் புலவர்கள் குறிக்கின்றார்கள். தலை வனும் தலைவியும் முதலிற் கண்டு அளவளாவும் நிகழ்ச்சியை இயற் கைப்புணர்ச்சியென்பர்.

### இயற்கைப் புணர்ச்சி

தலைவன் தன்னுடைய ஏவல் இளையரோடு வேட்டையாடுதற் குச் செல்லுங்காலத்துத் தலைவியைக் காண்கின்றான். கண்டு அவளது அழகில் ஈடுபடுகின்றான்; அவளது கதுப்பயல் விளங்கும் சிறுநுதல்

புதுக்கோள் யானையைப்போல அவனைப் பிணிக்கின்றது. அவனது நெஞ்சம் தலைவியின் கண்வலையிற் படுகின்றது. தலைவியும் நெஞ்சம் நெகிழ்கின்றாள். அன்புடை நெஞ்சங்கள் ஒன்றுபடுகின்றன. செம்புலப் பெயனீர்போல இருவரும் அளவளாவுகின்றனர். அப்பொழுது தலைவன் தலைவியினது நலத்தைப்பாராட்டி, "நின்னைப் பிரியேன்; பிரியின் ஆற்றேன்" என்று வஞ்சினங் கூறுகின்றான்;

"மெல்லிய லரிவைநின் னல்லகம் புலம்ப
நிற்றுறந் தமைகுவே னாயி னெற்றுறந்
திரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே" (கங-எ)

என்று கூறுகின்றான். அப்பொழுது அவன் தெய்வங்களின்மேல் ஆணையிட்டு உறுதிமொழி அளிக்கின்றான்;

"நேரிறை முன்கை பற்றிச்
சூர மகளிரொ டுற்ற சூள்" (ருங)

பிழையாதென்றும் தன்னை அவன் பிரியானென்றும் தலைவி தெளிகின்றாள். அப்பால் தலைவன் பிரிந்து விரைவில் வருவதாகக் கூறிச் செல்கின்றான்.

சிற்றிலிழைத்து விளையாடுகையிலும் விழாக்காலத்திலும் தலைவன் தலைவியைக்கண்டு அன்பு பூண்ட நிகழ்ச்சிகளும் காணப்படுகின்றன.

## இடந்தலைப்பாடு

இயற்கைப்புணர்ச்சியின்பின் தலைவன் முன்னர்த் தான் தலைவியைக் கண்ட இடத்தைச் சார்ந்து அவளோடு அளவளாவுதல் இடந்தலைப்பாடு என்னும் பெயர்பெறும். தலைவியினது நலத்தை நயந்து அவளை மீண்டும் எய்தப்பெற்றுத் தலைவன் உவக்கின்றான். அவளுக்குப் பாவை செய்து கொடுத்தும் அவள் தினைப்புனத்தைக் காக்கையில் உடனிருந்து கிளியோப்பியும் தொய்யில் முதலியவற்றால் அவளைப் புனைந்தும் அளவளாவுகின்றான்.

## பாங்கற் கூட்டம்

இங்ஙனம் அளவளாவிவரும் தலைவன் இடையிடையே தலைவியைப் பிரியும்படி நேர்தலின் அப்பிரிவினால் உள்ளமெலிந்து உடல்வலி குன்றிச் சோர்வுறுகின்றான். அச்சோர்வு புறத்தார்க்குப் புலனாகும்படி யிருத்தலின் அவனுடைய பாங்கன் அதனை உணர்

கின்றான். தலைவன் கூற்றால் அவன் ஒரு தலைவியினிடம் ஈடுபட்டதை அப்பாங்கன் அறிந்து தலைவனை இடித்துரைக்கின்றான்.

பார்ப்பனப் பாங்கன், வேறு பாங்கனெனப் பாங்கர் இருவகைப் படுவர். கஙகூ-ஆம் செய்யுளில் பார்ப்பனப்பாங்கனது இயல்பு கூறப் படுகின்றது. 'இடிக்குங் கேளிர்', 'சிறு அரேமுறு நண்பன்', 'புலவர் தோழன்' எனப் பாங்கன் பாராட்டப்படுகின்றான். தலைமை நிலையுடைய தலைவனும் இடித்துரைக்கும் பாங்கனையுடையானென்னும் செய்தி நட்பின் உயர்வைச் சான்றோர் அறிந்திருந்தமுறையைப் புலப் படுத்தும். மிகுதிக்கண் மேற்சென்றிடித்தற் பொருட்டே நண்பர் இருத்தலின், பாங்கர் அத்தகைய சிறந்த கடமையைச் சோர்வின்றிச் செய்கின்றனர். பாங்கனாற் கழறப்பட்ட தலைவன் தனது ஆற்றாமை மிகுதியையும் தலைவியினது இன்றியமையாமையையும் தெரிவித்தபின் பாங்கன் உண்மை தெளிந்து தலைவனது நிலை குறித்து இரங்குகின்றான்.

## பாங்கியிற் கூட்டம்

மீட்டும் நாள்தோறும் தலைவியை அடைந்து உவக்கும் தலைவன் அவளது உயிர்ப்பாங்கியை உணர்ந்து அவள் வாயிலாகத் தலைவியின் நட்பை வளர்க்க எண்ணுகின்றான். இங்ஙனம் பாங்கிக்கும் இந் நட்பு அறிவுறுத்தப்பட்டபின் நிகழ்ந்துவரும் ஒழுக்கம் பாங்கியிற் கூட்டமெனப்படும். தலைவியும் பாங்கியும் ஒருங்கிருந்து பயிலும் தினைப்புனத்துக்குத் தலைவன் செல்கின்றான்; தலைவிக்கும் பாங்கிக்கும் உள்ள மனவொற்றுமையை உணர்கின்றான்; "இவ்விருவரும் நீராடுகையில் இத்தலைவி புணையின்முதலைக் கைக்கொண்டால் தோழியும் அதனையே கைக்கொள்கின்றாள்; புணையின் கடையைக் கொண்டால் அதனையே கொள்கின்றாள்; புணை கைவிட்டுப் புனலோடு ஒழுகினால் ஆண்டும் வருகுவள் போலும்!" (உஉஉ) என வியந்து அவளை தான் நினைந்த செயலை முடித்துக்கொள்வதற்கேற்ற வாயிலென்பதை உணர்கின்றான்; ஆதலின், ஏதேனும் ஒரு காரணத்தை மேற்கொண்டு அவளை அணுகவெண்ணி அசோகந்தழையைக் கையுறையாகக் கொண்டு செல்கின்றான்; பன்னாள் வந்து பணிமொழி பயிற்றித் தோழியினது நெஞ்சத்தை நெகிழ்க்க எண்ணுகின்றான்; காந்தள் மலரைத் தருகின்றான்; நீலப்பூவை அளிக்கின்றான்; தன் உள்ளத்துள்ள துயரைச் சொல்லமாட்டாமல் துயருறுகின்றான். தோழியோ அவனை மறுக்க எண்ணுகின்றாள்; "எங்கள் குன்றம் முழுவதும்

காந்தள்மலர் மிகுதியாக உள்ளது. உம்முடைய காந்தட்பூ எமக்கு வேண்டுவதன்று" (க) என்று அவனது கையுறையை மறுக்கின்றாள். அப்பால் தலைவன் வேறு வழியின்றி, "நான் மடலேறித் தலைவியினிடத்து எனக்குள்ள தொடர்பை ஊரறிய வெளிப்படுத்துவேன்" என்று கூறுகின்றான்.

## மடலேற்றம்

மடலேற்றமென்பது தான் விரும்பிய தலைவியொருத்தியைப் பெறாத தலைவன் பனைமடலாற் குதிரை போன்றதோர் உருவமமைந்து தன் படத்தையும் தலைவியின் படத்தையும் எழுதிக்கையில் வைத்துக்கொண்டு வீதியினிடையே ஊர்ந்து வருதல். காமம் முற்றிய தலைவன் மடலூருங்காலத்தில் எருக்கங் கண்ணியைச் சூடுவான்; வெள்ளென்பை அணிவான்; மடன்மாவிற்கு மணியணிவான்; ஆவிரம்பூமாலையைப் புனைவான்; நாணத்தை ஒழித்து அதன் மேலேறி வீதியினிடத்தே வந்து, "இன்னாள் செய்தது இது" என வெளிப்படக் கூறுவான். அதுகேட்ட சான்றோர் அத்தலைவனுக்குத் தலைவியை மணம் புரிவிக்கும் முயற்சிகளைச் செய்வர். இங்ஙனம் மடலேறுதலைப் பற்றிய செய்திகள் தலைவன் "நான் மடலேறுவேன்" என்று கூறும் செய்யுட்களால் அறியப்படுவனவாகும். அவன் மடலேறுவதாகக் கூறுதலோடு அமைவானேயன்றி ஏறான்; அங்ஙனம் ஏறுதல் அன்புடைக் காமமாகாது; பெருந்திணையின்பாற் படும்.

தலைவனது உண்மையன்பை யுணர்ந்துகொண்ட தோழி அவன் கொடுக்குங் கையுறையைத் தலைவிபாற் கொண்டுசென்று அவனது நிலையைப் புலப்படுத்துவாள். அப்பால் நிகழும் நிகழ்ச்சிகள்யாவும் அத்தோழியைத் துணைக்கொண்டே தலைவன் தலைவியரால் நிகழ்த்தப் பெறும்.

## பகற்குறி

தோழியினது துணையினால் தலைவன் தலைவியைக் கண்டு பழகும் இடத்தை அறிகின்றான். வீட்டிற்கு வெளியே பகற்காலத்தில் அவ்விருவரும் சந்தித்துப் பழகுதலைப் பகற்குறியென்பர். அவன் தலைவியைத் தினைப்புனத்தும் பொழிலிடையும் கண்டு இன்புற்றுப் பிரிகின்றான். தலைவி அவன் மார்பு புணையாகச் சுனையாடுதல் முதலிய இன்ப விளையாடல்களைப் பயில்கின்றாள். இக்கூட்டத்திற்கு இடையூறு வாராமல் தோழி அவ்வப்பொழுது தலைவனுக்குக் குறியிடம் பெயர்த்துக் கூறுகின்றாள்.

## பகற்குறியிடையீடு

தலைவன் வரத் தாழ்த்தலால் தலைவி துன்புறுகின்றாள். தாய் அறிவுறுவாளென்ற அச்சத்தால் பகற்குறியிடம் மாற்றப்படுகின்றது. இவை பகற்குறியிடையீடெனப்படும். அப்பால் தினை முதிர்ந்தபின்னர்த் தலைவியைத் தமர் வீட்டிற்கு அழைத்துச்செல்கின்றார்கள்.

## இரவுக்குறி

அக்காலத்தில் தலைவன் இரவில் கழியும் காடும் கடந்து தலைவியினது வீடு சென்று தான் வந்ததைச் சில குறிப்பினாற் புலப்படுத்துகின்றான். தலைவி அதனையறிந்து அவனைக் கண்டு அளவளாவுகின்றாள். இத்தகைய ஒழுக்கத்தைக்கூறும் பகுதி இரவுக்குறியெனப்படும். இரவுக்குறியில் சில சமயங்களில் தலைவன் தலைவியினது வீடுவந்து அவள் வீட்டில் உணவின் பொருட்டுத் தங்கியிருக்கும் விருந்தினர்களுள் ஒருவனாகப் புகுந்து உணவருந்தித் தலைவியையும் கண்டு செல்வான். தலைவன் இரவுக்குறி வந்தொழுகும் பொழுது தேரில் வருதலும் உண்டு. அங்ஙனம் வருங்கால் அதனை நெடுந்தூரத்தே நிறுத்திவிட்டுத் தனியே வருவான்; வந்து குறிப்பாகத் தலைவியின் வீட்டுக் கதவைத் தட்டுவான்; இதனை, "இரவுக் கதவமுயறல்" என்று ஒரு புலவர் கூறுகின்றார். அவன் தன் மார்பிற் சந்தனம் பூசியும் முத்துமாலை குவளைக் கண்ணிமுதலியவற்றைப் புனைந்துகொண்டும் வருவான். காட்டிலுள்ள விலங்கினங்களுக்கும், வழிதெரியாமல் அடர்ந்துள்ள இருளுக்கும், இடைவிடாது பொழியும் பெருமழைக்கும் அஞ்சாமல் தலைவியின் அன்பினால் ஈர்க்கப்பட்டு அவன் வருவதனால் அவ்வன்பின் உறுதி புலப்படும்.

## இரவுக்குறியிடையீடு

தலைவன் இவ்வாறு வருங்காலத்தில் சிலமுறை தலைவியைக் காண இயலாமல் சென்றுவிடுவான். காவல்மிகுதியால் தலைவி அவனைக் காணுதல் அரிதாகும். அத்தகைய சமயங்களில் அவன் மிக வருந்தி மீள்வான். இங்ஙனம் இரவுக் குறியினிடத்தே தலைவன் தலைவியைக் காணமல் தடைப்படுதலை, "இரவுக்குறி யிடையீடு" என்பர்.

## வரைவு கடாவுதல்

நாள்தோறும் அஞ்சுதற்குரிய வழியிடையே தலைவன் வருதலும் அங்ஙனம் அவன் வந்தாலும் சிலகாலங்களில் தாய் முதலியோ

ரது காவலால் அவனைக் காண முடியாமல் தலைவி வருந்துவதும் களவொழுக்கத்தின் துன்பங்களை உணரச் செய்கின்றன. இவ்விருவரது ஒழுக்கத்தையும் ஊரினர் அறிந்து பழி கூறுகின்றனர். தலைவிக்கு உண்டாகும் வேறுபாடுகளும் அவர் கூறும் பழியை மிகுவித்தற்குக் காரணமாகின்றன. இவற்றையெல்லாம் பாங்கி தலைவனுக்குக் கூறி இனி மணந்துகொண்டு பிரிவின்றி வாழ்தலே தக்கதென்பதைக் குறிப்பிக்கின்றாள். அவன் இரவுக்குறியையே விரும்பி, வரைதலின் நினைவின்றியிருப்பதை உணர்ந்து பலவகையாலும் தன் கருத்தை அறிவுறுத்துகின்றாள்; 'இவள் உயிர் சிறிது; காமமோ பெரிது' (கஅ) என்றும் பிறவாறும் அவனிடம் கூறுவதன்றி, அவன் வந்து வேலியருகில் நிற்குங்காலத்து அவனது ஒழுக்கத்தைப் பழித்தும் கூறுகின்றாள். இவற்றால் தலைவன் வரைதலின் இன்றியமையாமையை உணர்ந்து கொள்ளுகின்றான்.

## வரைபொருட் பிரிவு

தலைவியை மணம் புரிவதற்குரிய பரிசப்பொருள் பெறுவதற்காகத் தலைவன் பிரிகின்றான். அக்காலத்தில் தலைவி அப்பிரிவைப் பொறாது வருந்துகின்றாள். தோழி, "நின்பொருட்டன்றே அவர் பிரிந்தார்?" என்று இடித்துரைத்தும், "வந்து விடுவார்" என்று ஆற்றுவித்தும் தலைவியினது துயரத்தை ஒருவாறு போக்குகின்றாள்.

## அறத்தோடு நிற்றல்

தலைவியினது வேறுபாடு கண்ட தாய் முதலியோர் அவ் வேறுபாடு எதனால் உண்டாயிற்றென்று ஆராயத் தொடங்குகின்றனர். நெல்லை வைத்துக் குறி பார்ப்பவளாகிய கட்டுவிச்சியை அழைத்து வந்து கட்டுப் பார்க்கின்றனர். கட்டுப் பார்த்தலாவது ஒரு முறத்தில் நெல்லைவைத்து அதை எண்ணிப்பார்த்து அவ்வெண்ணின் வழியே அறிந்த செய்திகளைக் கூறல். அதைப் பார்ப்பவள் தெய்வங்களைப் பாடி அழைத்து நிமித்தம் பார்ப்பாள். ஆதலின் *அகவன் மகள் எனப்படுவாள். அப்படி அவள் பாடும்பொழுது உண்மையை எங்ஙனமேனும் அறிவிக்க வேண்டுமென்ற எண்ணமுடைய தோழி, அவ்வகவன்மகளை அணுகுகின்றனள். அவள் ஒவ்வொரு மலையாக வருணித்துப் பாடுகின்றாள். தலைவனது குன்றத்தையும் பாடுகின்

* அகவல் - அழைத்தல்.

றுள். அதைப் பாடி முடித்தவுடன் வேறொன்றைத் தொடங்கும் போது தோழி இடைமறித்து,

"அகவன் மகளே அகவன் மகளே
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே யவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே" (உரு)

என்கின்றாள். அந்தப்பாட்டினிடத்தில்மாத்திரம் தோழிக்கு அத்துணை அன்பிருத்தற்குக் காரணம் யாதென்று தாய் முதலியோர் ஆராய்கின்றனர்; அவளையே கேட்கின்றனர். அவள் உண்மையைக் கூறிவிடுகின்றாள். 'அவர்' யாரென்பதைத் தாய் முதலியோர் அறிகின்றனர்.

இவ்வாறு கட்டுப் பார்ப்பதையன்றி வெறியாடும் வேலனை யழைத்து முருகனுக்குப் பலி கொடுத்துத் தாய் முதலியோர் தலைவியின் துயரை நீக்கத் தலைப்படுவதுமுண்டு. வேலன் இது முருகனாலாயதென்று கூறுவான். அப்பொழுது தோழி உண்மை கூறி அறத்தொடு நிற்பாள்.

"இவ்வூராருடைய ஆரவாரந்தான் எவ்வளவு? இவளுடைய நோய்க்குக் காரணம் இன்னதென்று இவர்கள் அறியவில்லையே! இவளுக்குத் தழையாடையை ஒரு தலைவன் கையுறையாகத் தந்தான். அங்ஙனம் தரும்பொருட்டு அவன் தழை கொய்த அசோகமரம் மொட்டையாக நிற்ப, அதனை ஆராயாமல் இவர்கள் அதற்கருகிலுள்ள அரலைமலரைப்பறித்து மாலைகட்டி முருகனுக்குச் சூட்டி வழிபடுகின்றார்களே" (உகச) என்று படர்க்கையாகவும், "முதுவாய்வேல, முருகனை வணங்கி மறியைக்கொன்று பலி கொடுத்தாயாயின் இவளுக்கு நோயைத் தந்த தலைவனது மார்பமும் அப்பலியை உண்ணுமோ?" (௩௬உ) என்று வேலனை நோக்கியும், "ஆடவன் ஒருவன் குவளைப்பூ மாலையை இவளுக்குத் தந்தான். அதுமுதல் இவள் நீலப் பூவைக் காணும்பொழுதெல்லாம் அவனை நினைந்து வருந்துகின்றாள்" (௩௬௬) என்று செவிலியை நோக்கியும் கூறித் தோழி அறத்தொடு நிற்கின்றாள்.

சில சமயங்களில் அயலார் தலைவியை மணந்துகொள்ள எண்ணிப் பரிசத்துடன் வருவார்கள். அப்பொழுது அவரை மறுத்துத் தலை

வனை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்பதை யெண்ணித் தோழி அறத்தொடு நிற்பாள் (௩எக.)

## வரைவு

வரைபொருளுக்காகப் பிரிந்து சென்ற தலைவன் அதனை ஈட்டிக்கொண்டு முதியோர் வாயிலாக அனுப்புகின்றான். அம்முதியோர் தலைவியின் தமர்பால் வந்து தலைவனது கருத்தை வெளிப்படுத்த அவரும் உடம்படுவர். அதனை யறிந்த தோழியும் தலைவியும் பேருவகை பூப்பர். பின்னர்த் தலைவனுக்கும் தலைவிக்கும் மணம் நடைபெறும். மணம் நடைபெற்றபின்னர் அவ்விருவரும் இல்லறம் நடத்தத் தொடங்குவர்.

## உடன்போக்கு

தலைவியினுடைய தமர் தலைவனை ஏற்றுக்கொள்வாரென்ற குறிப்புத்தோன்றாவிடின், தலைவன் தலைவியை அவள் தமரறியாவாறு அழைத்துச் செல்வான். அங்ஙனம் செல்வதில் தலைவி முதலில் நாணத்தால் தடைப்படினும் கற்பின் உயர்வையறிந்து உடன்போகத் துணிவாள். பாலைநிலத்து வழியே அவர் செல்வதாகச் செய்யுள் செய்தல் வழக்கம். அவ்விருவரும் அன்பு பூண்டு அங்ஙனம் செல்லுதலை இடைச்சுரத்துக்கண்டார் வியந்து பாராட்டுவர். தலைவன் தலைவியைத் தன்னூருக்குக் கொண்டு சென்று மணம் புரிவான்; 'கொடுப்போரின்றி நிகழும் கரணம்' என்று அதனைக் குறிப்பர். அவ்விருவரும் சென்றபிறகு அவர்களைச் செவிலி தேடிக்கொண்டு செல்வாள்.

## இல்லறம்

இல்வாழ்க்கையில் தலைவி தன் கணவனைப் பேணுவதிற் சிறப்புறுகின்றாள். அவள் உணவு சமைத்து விருந்தோம்பித் தன் கணவனுக்கு இட்டு உவக்கின்றாள். நல்ல முற்றிய தயிரைப்பிசைந்த காந்தள்போன்ற மெல்லிய விரலைக் கழுவாமல் தன் ஆடையில் துடைத்துக்கொண்டு தன் கண்கள் புகையேறும்படி தாளிதம் செய்து பண்ணிய குழம்பைத் தலைவன் இனிதாயிருக்கின்றதென்று உவந்து உண்பதைக்கண்டு அவளுக்கு உண்டாகும் உள்ளமகிழ்ச்சி அவளது முகத்திற் பொலிகின்றது. அவனும் வேம்பின் பைங்காயை அவள் தந்தாலும் அதனைக் கற்கண்டுக் கட்டியென ஏற்று உண்கின்றான்.

## பொருட்பிரிவு

பிரிவென்பதை யறியாமல் இடையீடின்றி இன்பந்துய்த்து இல்லறம் நடத்தும் அவர்களுடைய வாழ்க்கையின் இடையே அறத்திற்கு வேண்டிய பொருளீட்டும் முயற்சி தோன்றுகின்றது. அரசனது அதிகாரத்துக்குட்பட்டு அவனது ஏவலின்மேல் வேற்றூருக்குச் செல்லினும் அங்கே தங்கி வருதலை யறியாத தலைவன் இல்வாழ்க்கைக்குரிய பொருளை ஈட்டும்பொருட்டுப் பிரிகின்றான். தலைவிக்கு உணர்த்தியும் உணர்த்தாமலும் பிரிதல் அவன் வழக்கம். பின் ஒருகால் பிரிதல் நேருமென்று எண்ணி முன்னரே, "நான் செல்வேன், செல்வேன்" என்று பலகால் கூறுகின்றான். அங்ஙனம் கூறியும் அவன் செல்லானாக, "இவர் செல்வாரல்லர்" என்று தலைவி அதனைப் பொருட்படுத்தாது இருக்கின்றாள். பொருளில்லார்வாழ்க்கை யாசகம் செய்தலைக் காட்டிலும் இழிவென்பதை யுணர்ந்த அவன், "செல்வேன்" என்று ஒரு நாட்கூற அதனை அவன் முற்கூறிய பொய்ப்பிரயாணமாக எண்ணிப் போய்வருக வென்று தலைவி கூறுகின்றாள். அதுவே தலைக்கீடாகத் தலைவன் பிரிந்து விடுகின்றான்.

இங்ஙனமன்றித் தலைவன் பிரிவதற்குமுன் தலைவியின் நுதலை நீவியும் கூந்தலைத் தடவியும் பேராதரங் காட்டிச் சொல்லாது பிரிதலும், தோழி வாயிலாகக் குறிப்பித்துச் செல்லுதலும் உண்டு.

## பிரிவில் தலைவியின் நிலை

தலைவன் பிரிந்தகாலத்தில் தலைவிக்கு உண்டாகும் துன்பம் பலவகையாகும். அவள் துயிலை இழக்கின்றாள்; அழுகின்றாள்; அவள் உடல் மெலிகின்றது; அவளுடைய கைவளைகள் நெகிழ்கின்றன; தோள்வளைகள் நெகிழ்கின்றன; மற்ற இழைகள் யாவும் நெகிழ்கின்றன; மலர் புனைந்து அலங்கரித்துக் கொள்ளலை அவள் வெறுக்கின்றாள்; மாமையென்னும் பேரழகு தொலைந்துவிடப் பசலை பரவுகின்றது; கண்ணும் நுதலும் அழகழிகின்றன; ஆனேற்றின் கழுத்திற்கட்டிய மணியின் ஒலியும், அன்றிலின்குரலும் ஊரெல்லாம் அடங்கிய நள்ளிரவில் துன்பத்தை உண்டாக்குகின்றன.

மாலைப்பொழுது அவளுக்கு ஒரு கூற்றாகின்றது. எல்லாப் பொழுதும் மாலைக்காலமாகவே தோற்றி அவளைத் துன்புறுத்துகின்றன. தலைவன்பால் யாரையேனும் தூதுவிடலாமாவென்று எண்ணுகின்றாள். தலைவன் கூறிச்சென்ற பருவம் வருகின்றது. " இன்னும்

அவர் வரவில்லையே" என்று வருந்துகின்றாள்; தோழி, "வந்துவிடுவார்" என்றும், "இது தலைவர்கூறிய பருவம் அன்று" என்றும் கூறி ஆற்றுவிக்கின்றாள்; தலைவியைக்கடிகின்றாள்; தலைவனைப் பழிக்கின்றாள். "எங்ஙனமேனும் வந்துவிடுவார். அவர் அறங்கருதியன்றே பிரிந்தார்" என்று எண்ணித் தன் கற்பின் இயல்பினால் வன்மை பெற்றுத் தலைவி ஆற்றியிருக்கின்றாள்.

தலைவன் நிலை

பொருளுக்காகப் பிரிந்த தலைவன் உலகியலினின்றும் வழுவாதிருக்கவேண்டித் தன் அன்பினையும் அடக்கிக்கொண்டு ஆள்வினையில் தலைப்படுகின்றான். தான் வந்தகாரியம் முடிந்தவுடன் தலைவியின்பால் உடனே போய்ச்சேரவேண்டுமென்று விரைகின்றான். தன்வரவைப் பாணன் வாயிலாகச் சொல்லியனுப்புகின்றான்; தானும் தேரில் புறப்படுகின்றான்.

மீளுதல்

பாணன் தலைவன் வரவைத் தலைவிபால் அறிவுறுத்துகின்றான். தலைவனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் அவள் தலைவன் வரவை உறுதியாகத் தெரிந்துகொள்ள விரும்பி, "அப்படியா? நீயாகக் கண்டாயா? வேறு யாராவது சொல்லக் கேட்டாயா? உனக்குப் பொன் நிறைந்த பாடலிபுத்திர நகரம் உரியதாகுக! உண்மையைச் சொல். அவர் வரவை யார்வாயிலாகக் கேட்டாய்?" என்று பேரார்வத்துடன் மீட்டும் மீட்டும் உசாவி அறிந்துகொள்கின்றாள். அப்பொழுது அவளுக்கு உண்டாகும் மகிழ்ச்சிக்கு எல்லையேது? அவளுடைய மெலிந்த தோள்கள் பருக்கின்றன; கழன்ற வளைகள் இறுகுகின்றன.

தலைவன் வந்துவிடுகிறான். வீட்டில் அன்று பெரிய விருந்து நடக்கின்றது. தம்முடைய மகிழ்ச்சியை யாவரோடும் விருந்துண்டு பங்கிட்டுக்கொள்கின்றார்கள். அதுகாறும் வருத்தத்தால் விட்ட கண்ணீர் மாறித் தலைவிக்கு மெய்ம்மலி யுவகையினால் கண்ணீர் உண்டாகின்றது. அவர்களுடைய வாழ்க்கை அறம்பொருளின்பங்களிற் குறைவின்றி நடைபெறுகின்றது. தலைவன் தன்னுடைய உள்ள நிறைவால், உலகுக்கு வளம் சுரக்கும் மழையை வாழ்த்துகின்றான்

"பெய்தினி வாழியோ பெருவான் யாமே
செய்வினை முடித்த செம்ம லுள்ளமொ
டிவளின் மேவின மாகிக் குவளைக்

துறுந்தா ணுண்மலர் நாறும்
நறுமென் கூந்தன் மெல்லணை யேமே" (உஎ0)

என்பது அவன் கூறும் வாழ்த்து.

பரத்தையிற் பிரிவு

இங்ஙனம் பலவகையாலும் உயர்நெறியதாகிய அன்புடை வாழ்க்கை, பூவிற்குப் புல்லிதழ்வாய்த்தாற் போலவும், மதிக்கு மறு வாய்த்தாற் போலவும் பரத்தையிற் பிரிவென்னும் இழிந்த ஒழுக்கத்தினுல் சிறிது கலக்கமடைகின்றது. பேராசிரியர் சிற்றம்பலக் கோவையாரின் உரையில்,

'பரத்தையிற் பிரிவென்பது தலைமகளை வரைந்தெய்திய பின்னர், வைகலும் பாலே நுகர்வாெனருவன் இடையே புளிங்காடியும் நுகர்ந்து அதன் இனிமையை நுகர்ந்தாற்போல, அவள் நுகர்ச்சியின் இனிமையறிவதற்குப் புறப்பெண்டிர் மாட்டுப் பிரியாநிற்றல். அல்லதூஉம், பண்ணும் பாடலு முதலாயின காட்டிப் புறப்பெண்டிர் தன்னைக் காதலித்தால் தான் எல்லார்க்குந் தலைவனுதலின் அவர்க்கும் இன்பஞ் செய்யப் பிரியாநிற்றலென்றுமாம். அல்லதூஉம், தலைமகளை ஊடலறிதற்குப் பிரிதலென்றுமாம்'

என்று எழுதுவர். இப்பரத்தையிற் பிரிவு உலகியலையே கருதி அமைந்ததுபோலும். தலைவியின் ஊடலுக்குக் காரணம் வேண்டுமென்பதற்காக இப்பரத்தையிற் பிரிவு அமைந்ததென்பது அத்துணைச் சிறந்த காரணமாகத் தோற்றவில்லை. கோயிற்சிற்பங்களில் சில வகையான காட்சிகள் அமைந்திருத்தலைப்போல இக்கவிஞர்களுடைய சொற்சிற்பங்களில் இஃது அமைந்துள்ளதென்றே தோற்றுகின்றது. முன்னதற்கு ஏதேனும் தக்க காரணம் இருக்குமெனின் இதற்கும் அக்காரணம் பொருந்தும்.

எவ்வாறுயினும், பரத்தையிற் பிரிவு நல்லொழுக்கத்திற்கு இழுக்கென்பதே சான்றோர் கொள்கையென்பதை வலியுறுத்தக் குறளிலுள்ள வரைவின்மகளிரென்ற அதிகாரமொன்றே போதியது. மணிமேகலை முதலிய காப்பியங்களில் கள்ளுண்போனையும் பித்தனையும் புனைந்துரைக்கும் காட்சிகளால் அவ்விருவருடைய ஒழுக்கங்கள் சிறந்தனவென்று கவிஞர்கள் கொண்டதாகக் கருதல் கூடாதன்றே! பரத்தையிற்பிரிவினுல் தலைவனுடைய விழுப்பத்துக்கு இழிவு நேரினும் தலைவியினுடைய கற்பின் திறம் சுடச்சுட ஒளிவிடும் பொன்போல் ஒளிர்கின்றது.

தலைவன் பரத்தையிற் பிரிந்தானென்பதை யுணர்ந்தும் அக் கொடிய செயலை உள்ளத்துள் மறைத்துத் தலைவி ஒழுகுகின்றாள். அவளுடைய சிறந்த இயல்பு அவளுடைய உயிர்ப்பாங்கியையும் திகைக்க வைக்கின்றது. அவள், "இவள் கற்புநெறியில் தலை சிறந்து நிற்கின்றாள்" (கூ, கப) என்று தலைவியைப் பாராட்டுகின்றாள். ஒருகால் தலைவனது ஒழுக்கக்கேட்டைப்பற்றித் தோழி குறைகூறுகின்றாள்; "அவர் கொடியரென்னும் கொடிய வார்த்தையை நாம் ஏன் கூற வேண்டும்? அவருடைய மனையிற் பல கடமைகளைச் செய்யவேண்டிய நமக்கு இதைப்பற்றி என்ன கவலை?" (கஅக) என்று தலைவி அதனைப் பாராட்டாமல் பேசுகிறாள். தலைவன் பரத்தையரிடத்திலிருந்து வந்த காலத்தில் அவள் சிறிதும் முகம் கோணாமல் இனிய முகத்தோடு எதிர்கொண்டு பேணுகின்றாள். அப்பொழுது தலைவியினுடைய கற்பு ஒரு தெய்வத்தன்மையோடு விளங்குகின்றது. தோழி, "இதுவல்லவா கடவுட் கற்பு!" என்று எண்ணுகின்றாள். அடுத்த கணத்திலேயே, "இவள் அறிவிலி; இப்படிச் செய்யலாமோ?" என்கின்றாள். தலைவியோ, தலைவனைச் சான்றோனாக எண்ணுபவள்; தெய்வமாக மதிப்பவள்; "நீ ஏன் வருந்துகின்றாய்? சான்றோர் புகழ்ந்தாற்கூட நாணுவார்கள். பழியை எங்ஙனம் தாங்குவார்கள்?" என்று தோழிக்குச் சமாதானம் கூறுகின்றாள். தோழிக்கு இந்தத் தலைவியின் குடிப் பிறப்பின் இயல்பு விளங்கவில்லை. அப்படிப் பிறத்தல் வெறுக்கத் தக்கதாகத் தோற்றுகின்றது; "சீசீ; இந்தக் குடிப்பிறப்பு மிகவும் கெட்டது. குலமகளிராகப் பிறத்தல் வெறுக்கத்தக்கது. இன்று காலையில்தான் இவன் பரத்தையரோடு அளவளாவுவதற்காகத் தேரில் ஏறி ஊரறியச் சென்றான். மாலையில் இங்கேவந்து நிற்கின்றான். இவளும் உடன்பட்டு வரவேற்கின்றாள்" என்று அவள்கூறுகின்றாள். உண்மையில் அவள் குடிப்பிறப்பையும் கற்பையும் பழிக்கின்றாளா? இல்லை; அந்த நிலையில் மக்களாகப் பிறந்தார் யாரும் அங்ஙனம் ஒழுகுதல் அரிதென்று கருதியே அவ்வாறு கூறுகின்றாள்.

தலைவி ஊடுவதும், பாணன் விறலி முதலியவர்களைத் தலைவன் தூதாக விடுத்தலும், தலைவி வாயின்மறுத்தலும், தலைவனே நேரில் வந்து இரத்தலும், அவன் தன் பிள்ளையைத் தழுவிக்கொண்டும் விருந்தினரை யழைத்துக்கொண்டும் வீடு புக்குத் தலைவியைக்கண்டு அளவளாவுவதும், பரத்தையர் தலைவிக்குக் குறைகூறுவதும், தலைவி மூன்று நாட் பூப்பை யடைந்தகாலத்தில் தலைவனைப் பிரிந்திருத்தலும், வேறு பல செய்திகளும் இக்காலத்து நிகழ்ச்சிகளாம்.

பரத்தையிற் பிரிவுவரையில் தலைவன் தலைவியர்களுடைய அன்பு தலைமைக் கருத்தாக இருந்து இவ்வரலாற்றை நடத்துகின்றது. பரத்தையிற் பிரிவில் தலைவியின் கற்பே இலக்காகநிற்ப அதனைச் சுற்றிப் பலபல நிகழ்ச்சிகள் புனையப்படுகின்றன. எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவாதலின் பலவகைக் குறைபாடுகள் பொருந்திய பரத்தையிற் பிரிவிலும் கற்புநெறியின் சிறந்த தன்மை புலவர்களாற் புலப்படுத்தப் பட்டிருத்தல் அறிந்து மகிழ்தற்கு உரியதாகும்.

இவ்வன்பின் வழி நிகழும் வரலாற்றில் அன்பின் வழிவந்த இன்ப முயற்சியும் அதனை நிறுத்தற்குரிய பொருள் முயற்சியும் அப்பொருளால் வரும் அற முயற்சியும் முறையே மேற்கொள்ளப் படுகின்றன. இவை பழைய சங்க நூற் செய்யுட்களிலே உள்ளீடாக இருந்து பலவகையான சுவைகளையுடைய சொற்பொருட்செறிவு பெற்று விளங்குகின்றன.

## கூற்றுவகை

அகப்பொருள் நூல்களிலுள்ள செய்யுட்கள் யாவும் தலைவன் முதலியோருள் யாரேனும் ஒருவரது கூற்றாகவே அமைந்திருக்கும். இந்நூலுள் பின்வரும் ஒன்பதின்மருடைய கூற்றுக்கள் வந்துள்ளன :—(க) இற்பரத்தை 1, (2) கண்டோர் 3, (ங) காதற்பரத்தை 2, (ச) செவிலித்தாய் 9, (ரு) தலைவன் 62, (சு) தலைவி 180, (எ) தோழி 140, (அ) பரத்தை 2, (கூ) பாங்கன் 2. நற்றாயின்கூற்று ஒன்றேனும் காணப்படவில்லை. தலைவி கூற்றே பிறவற்றினும் மிகுதியாக உள்ளது. அதற்கடுத்தபடி தோழிகூற்றின் தொகையும் அதனையடுத்துத் தலைவனது கூற்றும் அமைந்துள்ளன. இவர்களுடைய கூற்றுக்களில் பிறருடைய கூற்றையும் கொண்டுகூறும் இடங்கள் சில உண்டு.

## பரத்தையர்

பரத்தையரில் இற்பரத்தை, காதற்பரத்தை, சேரிப்பரத்தை யென்னும் மூவகையார் சொல்லப்படுகின்றனர். அவர்கள் தலைவனோடு தேரிற் சென்று நீராடுதலும் அவனைத் தம்மிடத்தே ஈடுபடச் செய்தலும் தலைவியைப் பழித்தலுமாகிய செயல்களை யுடையவர்கள்.

### செவிலி

செவிலித்தாய் நற்றாயின் தோழியாகவும் தலைவியின் உயிர்த் தோழிக்குத் தாயாகவும் இலக்கண நூல்களிற் சொல்லப்படுகின்றாள். அவள் தலைவியினிடம் பேரன்பு பூண்டு பாதுகாத்தும் அவளுக்கு வேண்டிய உணவு கொடுத்தும் இரவுக் காலத்தில் தன் அருகே துயிலச் செய்து காவல் புரிந்தும் அவள் பிரிந்தகாலத்தில் வருந்தித் தேடிச் சென்றும் அவளுடைய இவ்வாழ்க்கையைக் கண்டு இன்புற்றும் ஒழுகுகின்றாள்.

### தோழி

தோழி தலைவியோடு ஒன்றிய நெஞ்சினையுடையவள். தலைவியின் களவொழுக்கத்தில் தலைவனுக்குக் குறியிடங்கூறியும் குறியிடம் பெயர்த்தும் வரைவுகடாவியும் தாய்க்கு அறத்தொடுநின்றும் இல்வாழ்க்கையில் துணைபுரிந்தும் தலைவன் பிரிந்தகாலத்தில் தலைவியை ஆற்றுவித்தும் வாழ்கின்றாள். தலைவியினுடைய செயல்கள் யாவும் அவள் அறிந்தனவே. தன்னலஞ் சிறிதுமின்றித் தலைவன் தலைவியர் இருவரது நலத்தை மட்டும் கருதிப் பலவகை இடுக்கண்களுக்கிடையும் சதுர்படச் செயல் புரிந்துவாழும் தோழியினது வரலாறு மிக்க வியப்பைத்தருவது. தலைவிக்கும் தோழிக்குமிடையே உள்ள நட்புரிமை தலைவனுக்கும் பாங்கனுக்கும் இடையேயும் காண்டலரிது. தொல்காப்பியர் தோழியை, "ஒன்றித் தோன்றும் தோழி" என்கின்றார்.

இதுகாறும் அகப்பொருள்நெறி ஒருவாறு சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

இந்நூற் செய்யுட்களிற் காணப்படும் சில உபகாரிகளைப்பற்றியும் சில இடங்களைப் பற்றியும் உள்ள செய்திகள் வருமாறு:—

### உபகாரிகள்

அகுதை: இவன் வீரர்களோடு வீரபானம் செய்து மகிழ்ந்து வாழ்பவன். தன்பாற் பாடிவரும் அகவல்மகளிருக்குப் பிடியைப் பரிசில் தருபவன்.

அஞ்சி: குறைவின்றி ஈபவன்; யானை தேர் முதலிய படைகளையுடையவன்; போர் செய்தலிற் சிறந்தவன்.

அதிகன்: பசும்பூட்பாண்டியனது படைக்குத் தலைவன்; நடுநிலைமையோடு போர் செய்தவன்; கொங்கரோடு வாகைப் பறந்தலையிற் போர் செய்து பட்டவன்.

அருமன் : "ஆதியருமன்" என்று கூறப்படுகின்றான். மூதூரென்னும் ஊரில் வாழ்ந்தவன்.

அழிசி : சேந்தனென்பவனுடைய தந்தை. வீரபானத்தைச் செய்து விலங்கினங்களை வேட்டையாடும் தன்மையையுடைய வாள் வீரர்பலருக்குத் தலைவன். யானைப்படைகளை உடையவன். ஆர்க்காடென்னும் ஊரையுடையவன்.

ஆய் : பொதியில் மலைக்குத் தலைவன் ; கழலுந்தொடியை அணிந்திருப்பவன்.

எவ்வி : இசைவல்லார்களைப் பாதுகாக்கும் இயல்புடையவன் ; வேளிர்களுள் ஒருவன் ; பாணர்களுக்குப் பொற்பூவைப் பரிசிலாக வழங்கியவன். இவனது பிரிவினால் பாணர் மிக்க வருத்தத்தையடைந்தனர்.

எழினி : கடையெழுவள்ளல்களில் ஒருவன். பகைவர் கொண்டு சென்ற தன் பசுநிரையை மீட்டவன்.

ஓரி : வள்ளல்களில் ஒருவன். பல இலக்குகளை ஒரே சமயத்தில் ஊடுருவித் துளைக்கும் வல் வில்லையும் திண்ணிய தேரையும் உடையவன். இவனுக்குரியனவாக ஒரு கானமும் கொல்லிமலையும் கூறப்படுகின்றன.

கட்டி : வல்வேற் கட்டியென்று பாராட்டப் படுகின்றான். இவன் ஒரு நாட்டுக்குத் தலைவன்.

குட்டுவன் : மேல்கடற்கரையிலிருந்த மாந்தையென்னும் நகரத்திற்குரிய சிற்றரசன்.

கோங்கர் : பசும்பூட் பாண்டியனுக்குப் பகைவர் ; வாகைப் பறந்தலையில் அதிகனை வென்றவர்.

கோசர் : நாலூர்க்கோசரென்று வழங்கப்படுவர். இவர் பழையதோர் ஆலமரத்தடியிற் சபைகூடிப் பல அரசியற் காரியங்களை ஆராய்ந்தனர். இவர் வன்கட் சூழ்ச்சியையும் பொய்யாத வாய்மொழியையும் உடையவர். நன்னனென்னும் அரசன்பாற் பகையுடையார்.

சேந்தன் : அழிசியென்பவனுடைய மைந்தன்; "ஏந்துகோட்டியானைச் சேந்தன்" என்று பரணராற் சிறப்பிக்கப் பெறுகின்றான்.

தோண்டையர் : தொண்டை நாட்டுக்குரியர். கல்லாடனாரென்னும் புலவர் இவரைப் பாராட்டுகின்றார். தேர்ப்படையையும் யானைப் படையையும் உடையவர்.

நள்ளி : காக்கைபாடினியார் நச்செள்ளையா ரென்னும் பெண் புலவராற் பாராட்டப்படுகின்றான்; திண்ணிய தேரை யுடையவன். இவனுக்குரியதாகிய காடொன்றிற் பல பசுக்களை யுடைய இடையர் வாழ்ந்திருந்தனர்.

நன்னன் : இவனுக்குரிய காவல்மரமாகிய மாவைக் கோசரென்பார் வெட்டிவிட்டு இவனது நாட்டிற் புக்கனர். தன் காவல் மரத்துக் கனியைத் தின்றதற்காக ஒரு பெண்ணைக் கொலை செய்தமையால் பரணரால் இகழப்படுகின்றான்.

பசும்பூட்பாண்டியன் : அதிகமானைத் தன் படைத்தலைவனாகப் பெற்றவன் ; கொங்கருக்குப் பகைவன்.

பாரி : ஏழு வள்ளல்களில் ஒருவன் ; இவன் மலை பறம்பென்பது.

பூழியர் : பூழி நாட்டினர் ; வெள்ளாட்டுத் தொகுதிகளை யுடையவர்.

போறையன் : பரணராற் பாடப் பெறுபவன். கொல்லிமலை சில காலம் இவனதாக இருந்தது. குடகடற் கரையிலுள்ள தொண்டியென்னும் பட்டினத்துக்குரியவன்.

மலையன் : மலையமான் திருமுடிக்காரியென்னும் வள்ளல். கபிலராற் பாராட்டப்பெறுபவன். போரில் வெற்றி பெறும் ஆற்றலையும் வேல் விளங்கும் தடக்கையையும் உடையவன். அரசர்களுக்குப் போரில் துணையாகச் செல்பவன். முள்ளூர்க்கானத்துக்குத் தலைவன்.

வடுகர் : ஒரு சாதியினர் ; கஞ்சங்குல்லையைத் தொடுத்துக் கண்ணியாக அணிபவர். இவர்களுடைய நாடு கட்டியின் நாட்டின் எல்லையிலுள்ளது.

விச்சிக்கோ : விச்சியரென்னும் குலத்திற் பிறந்தவன் ; வில் கெழு தானையை யுடையவன். இவன் வேந்தரொடு குறும்பூரிற் பொருத செய்தி பரணராற் சொல்லப்படுகின்றது.

வேளிர் : கீழ்கடற்கரையதாகிய குன்றூரென்னும் ஊரிற் பண்டைக்காலந் தொடங்கி வாழ்ந்து வரும் ஒருவகை வேளிர் கூறப்படுகின்றனர்.

## இடங்கள்

### மலைகள்

அரலைக் குன்றம்: இப்பெயர் ஒரு குன்றத்துக்குரியது போலும்.

இமயம்: "பேரிசை யிமயம்" எனச் சிறப்பிக்கப்பெறும்.

ஏழில்: இக்குன்றத்தைப் பற்றிக் கொல்லன் அழிசியென்னும் புலவர் கூறுகின்றார்.

கொல்லி: இம்மலை பரணராற் பொறையனுக் குரியதாகவும் கபிலரால் வல்வில்லோரிக் குரியதாகவும் கூறப்படுகின்றது. அவ்விருவராலும் இதன்கண் உள்ளதும் தெய்வத்தாலெழுதப் பெற்றதுமாகிய கொல்லிப் பாவையைப் பற்றிய செய்திகள் சொல்லப்படுகின்றன.

பறம்பு: பாரியென்னும் வள்ளலுக்குரியது. இங்கே உள்ள சுனையின் நீர் தைமாதத்தில் மிக்க குளிர்ச்சியை யுடையதாக இருக்கும்.

பொதியில்: பொதியில் வளப்பமுழுதும் அறிந்தார் யாவருமிலராதலின் இதனை, "மன்னுயி ரறியாத் துன்னரும் பொதியில்" என்று ஒரு புலவர் பாடுகின்றார். ஆய் என்பவனுக்கு உரியதாக இது சொல்லப்படுகின்றது. இம்மலையில் உண்டாகும் காந்தளும் வேங்கையும் சந்தனமும் புலவர்களது பாராட்டைப் பெற்றனவாகும்.

### ஆறுகள்

காவிரி: உறையூர்க் காவிரித்துறையைப் பற்றிப் பரணர் பாடுகின்றார். அத்துறையில் மருத மரங்கள் இருத்தலையும் அம்மரங்களில் யானைகள் கட்டப்பட்டிருத்தலையும் அவர் சொல்லியுள்ளார்.

சோணை: பாடலிபுத்திர நகரத்தில் உள்ளதொரு நதி. இதன்கண் யானைகள் நீராடுஞ் செய்தியை ஒரு செய்யுள் கூறும்.

### காடு

மலையமானுக்குரிய முள்ளூர்க்கானம் இரண்டு செய்யுட்களிலும், வல்வில் ஓரிக்குரிய கானமொன்று ஒரு செய்யுளிலும் கூறப்படுகின்றன.

ஊர்கள்

ஆர்க்காடு : சோழநாட்டில் உள்ளது ; அழிசி யென்பவனுக்கு உரியது. ஆர்க்காட்டுக் கூற்றமென்றதொரு பெயர் சாஸனங்களால் அறியப்படுகின்றது.

உறையூர் : காவிரிக்கு அருகில் சோழர்களுடைய இராசதானி யாக விளங்கியது. உறந்தையெனவும் வழங்கும்.

குறும்பூர் : விச்சிக்கோ வென்பவன் அரசரோடு பொருத இடம் ; பரணராற் குறிப்பிக்கப்படுகிறது.

குன்றூர் : கீழ்கடற்கரையிலுள்ளதொரு நகரம் ; இதன்கண் நெடுங்காலமாகச் சில வேளிர் வாழ்ந்து வந்தனர்.

தொண்டி : மேல்கடற்கரைக்கண்ணதாகிய தொண்டியொன்று பரணராற் குறிக்கப்படுகின்றது. அது பொறையனுக்குரியது. நெல் வளம் மிக்க தொண்டி யொன்று வேறிரண்டு புலவர்களால் பாராட்டப் பெறுகின்றது. அது கீழ்கடற்கரைக்கண்ணதென்று தெரியவரு கின்றது.

பாடலி : "பொன்மலி பாடலி" என்று சிறப்பிக்கப்பெறும் சோணை நதியின் கரையில் இருப்பதாகக் கூறப்படும் பாடலிபுத் திர மென்பது இதுவே.

மரந்தை : மாந்தையென்றும் பாடமுண்டு ; கடற்கரைக்கண் ணது ; குட்டுவனுக்கு உரியது.

முள்ளூர் : மலையமானுக்குரியது ; இதனைச்சார்ந்த காடொன்று புலவராற் புகழப்பெற்றது.

வாகைப்பறந்தலை : அதிகமானுக்கும் கொங்கருக்கும் போர் நடந்த இடம் ; பரணர் இதனைக் குறித்துப் பாடுகின்றார்.

## பண்டைக்காலத்து மக்கள் வாழ்க்கை நிலை

இந்நூற் செய்யுட்களிற் புலவர்கள் சார்த்துவகையாலும் உரிப்பொருளுக்கு உபகாரப்படும் வகையாலும் உணர்த்துகின்ற பல செய்திகள் அக்காலத்துத் தமிழ் மக்களுக்குரிய வழக்கங்கள், வாழ்க்கை நிலை, நாகரிகம், அரசியல் முதலியவற்றை ஒருவாறு அறி ந்து கொள்வதற்குக் கருவியாக இருக்கின்றன.

## அரசியல்

அரசன் செங்கோல் செலுத்தும் இயல்பினனாக இருந்தான். நிலப்பரப்பு நாடு, ஊர், சேரி, குடியென்னும் பிரிவுகளை யுடையதாக இருந்தது. மொழியின் வரையறையினால் தேசங்கள் பிரிக்கப்பட்டிருந்தன. தமிழ் வழங்காத பிறநாட்டை மொழிபெயர்த்தேமென்று குறிக்கின்றனர். வடுகர் முனையதாகிய ஆந்திரர் நாடு அங்ஙனமே இந்நூலில் குறிக்கப்படுகின்றது. அரசனது நீதி நெறியை முறையென்பர். இளையனாகிய அரசன் பகைவர் சூழ்ச்சியால் இடுக்கணுற்றுப் பின் நட்பாளருடைய உதவியால் அரசுரிமையைப் பெறுவதும் அங்ஙனம் பெற்ற காலத்தில் தன் நட்பாளர் செய்த நன்றியை மறவாதிருத்தலும் பழைய வழக்கு. இதனைக் கபிலர் ஒரு பாட்டில் மறைமுகத்தாற் குறிக்கின்றார் (௨௨௫.)

முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் குடிமக்கள் குறைகளைக் கேட்டு அறம் வழங்கினான். அங்ஙனம் வழங்கும்பொருட்டு அவனுக்கு உதவிபுரிய அறங்கூறவையமென்னும் நியாய சபை இருந்தது. அது பல சான்றோர்களைத் தன்பாற் கொண்டது. வழக்குடையார் அங்கே வந்து வெளிப்படையாகத் தமக்கு உண்டாகிய துன்பத்தைக் கூறுவர். தன்பாற் காதலுடைய தலைவியைப் பெறாத தலைவன் அறங்கூறவையத்தே தன் உரிமையை நிலை நாட்டுதல் வழக்கம்.

குற்றஞ் செய்தாரை அரசன் ஒறுத்தான். குற்றம் செய்தார் தம் நிறையளவு பொன்னைச் செலுத்தலும் யானைகளைத் தருதலும் தண்ட வகைகளிற் சில. கொலைத்தண்டனையும் சிறுபான்மை அக்காலத்தில் இருந்தது. ஆராயாது கொலைத்தண்டனை புரியும் அரசன் நரகில் வீழ்வானென்பது அக்காலத்தினர் கொள்கை. அவனைப் புலவர் வெளிப்படப் பழித்துரைப்பர்.

அரசர்கள் தம்முடைய நகரத்தில் காவல் மரமாக ஒன்றை வைத்து வளர்த்துப் பாதுகாப்பர்; அது கடிமரமெனப்படும். ஒவ்வோரரசருக்கும் அது வேறு வேறாக இருந்தது. நன்னனென்னும் ஓரரசனுடைய காவன்மரம் மா. ஓரரசனது நாட்டின்மேற் படையெடுக்கும் மற்றோரரசன் முதலில் அவனது காவன்மரத்தை வெட்டிவிட்டு நாட்டுட் புகுவான்.

தேர், யானை, குதிரை, வீரர் என்னும் நால்வகைப் படைகளை அரசர்கள் வைத்திருந்தனர். வீரர்களில் வாட்படை யுடையார் வேற்படை யுடையார், விற்படை யுடையார் முதலிய பிரிவு உண்டு கேடகத்தையுடைய படையும் இருந்தது. படைக்குத் தலைவன் ஏனாதி யெனப்படுவான்; சேனாபதியென்பதன் திரிபே அது. பாண்டியனுக்கு ஏனாதியாக இருந்த ஒருவர் இயற்றிய செய்யுள் ஒன்று (கஙிசு) இருக்கிறது. அரசர் பகையரசரோடு போர்புரியும் போது வேறு சிற்றரசர்களையும் துணையாகக்கொண்டு போர்புரிவர் வேந்தருடைய அதிகாரிகளே படையை நடத்திச்சென்று போர் புரிந்து வருதலும் வழக்கம். யானைப்படையைக் கொன்று வெற்றி பெறுதல் சிறந்த வீரமாகக் கருதப்பட்டது. அங்ஙனம் யானையைக் கொன்றபின் வீரன் இறந்தாலும் அதனாற் குறைவொன்றில்லை அதிகன் அங்ஙனம் பட்டவனென்று சொல்லப்படுகின்றான்

பகையரசருடைய நாட்டுப் பசுக்களை ஓட்டி வருதலும் அதனை மீட்டற்பொருட்டுப் பகையரசர் வருதலும் போருக்கு முன் நிகழும் நிகழ்ச்சிகள். போரில் அரசரும் வீரரும் அறநெறி பிறழாது நடுநிலைமையில் நின்று பொருவர்; வஞ்சியாமல் எதிர் நின்று கொல்வர்; இதனை நகம்படக் கடத்தலென்று புலவர் இயம்புவர்.

போரில் வெற்றிபெற்ற வீரர் அக்களிப்பினால் ஆரவாரம் செய்வர்; வெற்றி முரசு முழக்கப்படும் (நஅ௦.) அவ்வீரர் கள்ளை வீரபானமாக உண்பது வழக்கம்.

ஊரமைப்பு

ஊர்களிற் பலவகைத் தெருக்கள் இருந்தன. அந்தணர் முதலிய பல்வேறு சாதியினரும் கைத்தொழிலாளரும் இனிது வாழ்ந்துவந்த வீதிகள் இருந்தன. அந்தணர் தெரு தூய்மையை யுடையதாகவும் நாயில்லா வாயில்களை யுடையதாகவும் இருக்கும் அதனை, "ஆசிறெரு" என்று ஒரு புலவர் குறிக்கின்றார். பலர் கூடிக் கடவுளை வணங்கியும் பல செய்திகளைப் பேசியும் தங்குதற்குரிய மன்றங்கள் ஊரின்கண் இருந்தன. ஊரார் நீருண்ணுதற்கும் ஆடுதற்கும் ஆறில்லாத விடங்களில் ஊருக்கு அணிமையில் பொய்கைகள் இருந்தன. சில விடங்களில் கேணிகள் இருந்தன. ஊருக்கு அணித்தாகப் பொய்கையும் அதற்கு அப்பாற் சிறிது தூரத்தே கான்யாறும் இருப்பதாக ஒரு செய்யுள் கூறும். "யாம் எம் மயிருக்கு மண் கடவி நீராடற்கு அக்கான்யாற்றுக்கு வருவேம்" என்று ஒருத்தி கூறுகின்

றுள். இதனால் ஊரரால் உண்ணப்படும் நீர் பொய்கையில் இருத்தலின் அதன்கண் நீராடல் பிழையென்று அவர்கள் எண்ணியிருந்தமை புலப்படும்.

அறம்

எல்லாச் சாதியினரும் விருந்தோம்புதலையே சிறந்த கடப்பாடாகக் கொண்டிருந்தனர். அந்தணருக்கு நீரோடு பொன் சொரியும் வழக்கம் இருந்தது. வருபவர்களுக்கு வரையறையின்றி உணவிடுதல் குடிமக்கள் இயல்பு. இராக்காலத்தில், "புறத்தே யாரேனும் உள்ளீரோ?" என்று வினவி யாவரையும் அழைத்து உண்பிப்பர். ஈதலாகிய பேரறத்தை அக்கால மக்கள் பெரிய கடைப்பிடியாக மேற்கொண்டனர். இரவலர் வாரா நாளைப் பயனற்றநாளாகக் கருதினர். ஒருவன் சபதம் செய்கையில், "இரவலர் வாரா நாட்கள் பல எனக்கு உண்டாகுக!" என்கின்றான்.

பொருள்

பொருளை அறத்தின்பொருட்டுத் தேடுதலே பண்டைப்பெரியோர் கருத்து. தம் முன்னோர்கள் ஈட்டி வைத்த செல்வத்தைச் செலவழித்தல் பிழையென்ற கொள்கையும், அந்தச் செல்வத்தையுடையவனைச் செல்வனாகக் கொள்ளல் கூடாதென்ற கொள்கையும்

"உள்ளது சிதைப்போ ருளரெனப் படாஅர்"

என்ற அடியால் விளங்குகின்றன. பொருளீட்டும் முயற்சியைச் செய்யாமல் வறியனாக இருத்தல் யாசகம் செய்தலினும் இழிவாகக் கருதப்பட்டது. தான் அரிதின் முயன்று ஈட்டிய பொருளால், தான் இன்புறுவதோடமையாமல் தன்பால் வந்த இரவலருக்கும் ஈந்து உபகரித்து வந்தான் இல்வாழ்வான். தம்மில்லில் இருந்து தம்மால் ஈட்டப்பட்ட பொருளால் அறத்தைச் செய்து இன்பத்தை நுகரும் அவ் வாழ்க்கையின் இனிமை மிகவும் பெரிதென்பது முன்னோர் கொள்கை.

உணவு உடையாதியவற்றில் மிக எளிய அமைப்பையுடைய இல்லறத்தானுக்குப் பெருநிதி வேண்டுவதில்லை. 'ஈதலுந் துய்த்தலும் இல்லோர்க்கு இல்'லையாதலால் அவ்விரண்டுக்கும் ஓரளவு பொருள் வேண்டும்; அதனை எத்தகைய இடருற்றாலும் அவன் பொருட்படுத்தாமல் நாடிடையிட்டும் காடிடையிட்டும் சென்று தேடி வந்தான். மனிதனுடைய ஆசைக்கு அளவில்லையாதலின்

தன் ஆசைக்கேற்பப் பொருளை நிரப்புதல் இயலாதென்பதை யுணர்ந்து (ருகூ) வேண்டிய பொருளை அறத்தின் வழியே ஈட்டினான். அவனுடைய மனமறிந்து மனைவாழ்க்கை நடத்தும் மனைவியும் பொருளிற் கருத்துடையவளானாள். "இவள் வந்தபின் முன் வறிய நிலையிலிருந்த இவ்வீடு விழாவையுடையதாயிற்று" என்று போற்றும் நிலைமையைத் தலைவி யடைந்தா ளென்று ஒரு பாட்டுக் கூறுகின்றது. அவளது நல்லூழின் ஆற்றலால் அந்நிலை அமைந்ததென்பது ஓரளவு உண்மை ஆயினும் ஒரு குடும்பம் விழாவுடையதாதல் வேண்டுமெனின் நிறை பொருளும் உவகையுள்ளமும் வேண்டும். நிறைபொருள் உண்டாகச் செலவிற் சுருக்கமும் வரவுப் பெருக்கமும் இன்றியமையாதன. தற் கொண்டானது வளத்தக்காளாகிய மனைவி செலவு வகைகளை மட்டுப் படுத்தியும், தான் பிரிவால் துன்புறினும் தலைவனை அறங்கருதிப் பொருளீட்டும் முயற்சியில் ஊக்குவித்துப் பெருநிதி பெற்றுவரச் செய்தும் பொருள்பெருகுதற்குக் காரணமாயினள். யாவரிடத்தும் அன்பு பூண்டொழுகுதலினால் குடியிலுள்ளார் அனைவரும் மனங் கலந்து பழகி அவளுடைய நல்லியல்பிற் கட்டுண்டு உவகை யுள்ளங் கொண்டனர். இவ்விரண்டு வகைபற்றியும் அவளால் விழாவுண்டா தல் புலப்படும்.

ஆடவனும் சோம்பியிராது வினைமுயற்சியில் ஊக்கமுடையவனாக இருந்தான்.

"வினையே யாடவர்க் குயிரே" (கருரு)

என்பது அவன் கருத்து. அவனது நெஞ்சம் பொருளின்கண்ணே பிணிக்கப்படுதலின் பிரிவரிய தன் மனைவியையும் பிரியத் துணிந்தான். தன்னுடைய கடமைகளை நிறைவேற்றுதற்குப் பொருள் கருவியென் பதையும் அதனை யீட்டுதல் உலகத்துப்பண்பு (கூகூ) என்பதையும் உணர்ந்து மொழி வேறுபட்ட தேயத்துக்கும் அவன் சென்றான்; இங்ஙனம் வேறு பல இடங்களுக்கும் சென்று தன் முயற்சியில் நல மடைந்தான். பொருளீட்டி மீண்டு வருகையில் அவன் உள்ளம் நிறைவடைந்தது. "செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு" அப் பொருளைக்கொண்டு வாழ்ந்தான். அதனை வறிதே செலவிடாமல் தக்கபடி போற்றிவந்தமையின் அது, "சேடில் விழுப்பொருள்" (உகசு) ஆகியது. பொருளீட்டுதலிலும் அதனால் அறத்தைச் செய்தலி

லும் இன்பத்தை அடைதலினும் அப்பொருளைப் போற்றுதலினும் அவன் சிறப்பெய்தினன்.

அக்காலத்தில் ஏழைமக்கள் ஒரு பொருளுக்கு மற்றொரு பொருளை விலையாக ஈந்து பண்டமாற்றை மேற்கொண்டனர். செல்வர்கள் பொற்காசுகளைப் பெட்டிகளிற் சேமித்து வைத்தனர். அக்காசு வேப்பம்பழத்தைப்போல உருண்டை வடிவினதாக இருந்தது.

பசுக்களைப் பாதுகாத்து அவற்றாற் பெறும் பால் நெய் முதலியவற்றை விற்று அவ்வூதியத்தினால் வாழும் மக்கள் பலர் இருந்தனர். அவர்களுடைய செல்வநிலை 'இத்தனை பசுவையுடைய குடி' என்று குறிப்பிடப்பட்டது. ஒரு வறிய குடியினருடைய வாழ்க்கை, "ஓரான் வல்சிச் சீறில் வாழ்க்கை" என்று சொல்லப்படுகின்றது. பசுக்களைக் கோதனமென்று வழங்குதல் இங்கே நினைத்தற்குரியது.

இங்ஙனமே நிலங்கள் பலவுடையாரை இத்தனை ஏருடையாரென்பது வழக்கு. ஒருவனை, "ஓரேருழவன்" என்று ஒரு புலவர் குறிக்கின்றார்.

உழவும் வாணிகமும் கைத்தொழிலும் அக்காலத்தில் வாழ்க்கைக்குப் போதியனவாகவும் இன்பத்திற்கு உறுதுணையாகவும் இருந்தன. பல சாதியினரும் மனமொன்றி ஒருவருக்கொருவர் துணை புரிந்து வாழ்ந்து வந்தனர்.

## சாதிகள்

அந்தணர் எழுதாக் கற்பாகிய வேதமோதலைச் செய்துவந்தனர். அவருள் பிரமசாரிகள் பலாசமரத்தின் கோலையும் கமண்டலத்தையும் விரதவுணவையும் உடையவராக இருந்தனர். அரசர் நெறிதிறம்பாமல் அரசுபுரிந்தனர். வாணிகருள் உப்பு வாணிகரும் வளைவிற்பாரும் இந்நூலுட் சொல்லப்படுகின்றனர். இடையர், வலைஞரென்பாரைப் பற்றிய செய்திகள் பல. கொல்லரது உலைக்கல்லும், பொற்கொல்லர் பொன்னை உரைக்கும் கட்டளைக்கல்லும், மிதிதோலும், கரிக்குறடும், பொற்காசிற் கம்பியைக் கோக்கும் செயலும் அவர்களாற் சொல்லப்படுகின்றன. சிறு பிள்ளைகளுக்குச் சிறு வண்டிகளைத் தச்சர் செய்து தந்தனர். வண்ணாத்தி ஆடையைக் கஞ்சியில் தோய்த்து நீர்த்துறையில் துவைத்தாள். கூத்தர் முழவை

ஒலித்தனர். ஆரியக்கூத்தரென்னும் வகையினர் கயிற்றின்மீ ஏறிப் பறைகொட்டி யாடினர்.

பாணர் யாழ்வாசித்து உபகாரிகளிடம் பொற்பூவைப் பரிசிலாகப் பெற்றனர். சிலர் ஒருகண்மாக்கிணையை முழக்கினர். மன்றங்களி லும் போர்க்களத்திலும் அவர் காணப்பட்டனர். மீன் பிடித்துத் தமக் குரிய மண்டையென்னும் பாத்திரத்திற் சொரிந்து வைத்தனர். தலைவ னிடமிருந்து தலைவிபால் தூதாகச் சென்றனர்.

### ஆடவர்

ஆடவர் முயற்சியும், மனவலியும், உடலுரமும் பொருந்தி விளங்கினர். வீரர்கள் கழலையணிந்தனர்; சந்தனத்தையும், மலர் மாலைகளையும் அணிந்து உவந்தனர். விழாக்களில் மகளிர் ஆடும் குரவையில் மள்ளர் தலைக்கை தந்தனர்.

### மகளிர்

இந்நூலிற் சொல்லப்படும் மகளிர் அழகாலும் குணத்தாலும் சிறந்திருக்கின்றனர். நீர் போன்ற சாயலும், மயில்போன்ற இயலும், நறுமை தண்மை மென்மையாகிய இயல்பு வாய்ந்த மேனியும், இயற்கை மணமும், மாமைக்கவினும் உடையவர்களாக விளங்குகின்றனர். அவர்கள் மேனி அழகை வெளிப்படுத்திக் கொண்டு தளிர்போன்ற மென்மையையும் பொன்போன்ற பொலிவை யும் உடையதாகத் திகழ்கின்றது.

கூந்தல் நறுமையும் தண்மையும் உடையது; குழல் முதலிய ஐவகையாகப் பகுக்கப்படுவது; நெறிப்பை யுடையது; மைபோலக் கரியது; நீட்சியை யுடையது; புறத்தே தாழ்ந்து மயிற்கலாவத்தை யொப்பது; பின்னலோடு கூடியிருப்பது; இத்தகைய கூந்தலிலே பலவகை மலர்களை மகளிர் அணிந்து மகிழ்கின்றனர்.

அவர்களுடைய நுதல் மலர்மணம் வீசுகின்றது; எண்ணுட்டிங் களைப்போலத் தோற்றுகின்றது. தோள் பருத்து மென்மை யுடைய தாக இலங்குகின்றது; அதற்குப் புணையும் மூங்கிலும் அணையும் உவமிக்கப்படுகின்றன.

நெய்தல், குவளை, தாமரை யென்னும் மலர்களைப் போலவும் மானின் கண்களைப் போலவும் கண்கள் அழகு பெறுகின்றன;

கொழுவிய கடையையும் சிவந்த அரிகளையும் குளிர்ச்சியையும் கொண்டு மையணியப் பெற்று எப்பொழுதும் அலமருகின்றன.

பற்கள் செறிவுபெற்றுக் கூரியனவாகவும் தூய வெள்ளியன வாகவும் ஒளியை யுடையனவாகவும் நாணன்முளையைப்போன்றன வாகவும் தோற்றுகின்றன. நாக்குச் சிவந்து அப்பற்களுக்கு அஞ்சு வதுபோலத் திகழ்கின்றது. இடை சிறுத்துக் காணப்படுகின்றது. மார் பிற் சுணங்கு படர்கின்றது. மெல்லிய சீறடியால் மயிலைப்போல மகளிர் நடக்கின்றனர்; குறுக அடியிட்டு அசைந்து நடந்து வருகின்றனர்.

அவர்களுடைய மொழிகள் சிலவாக இருப்பினும் அழகிய பொருட்செறிவும் மென்மையும் இனிமையும் உடையனவாக அமை கின்றன.

மகளிருடைய கூந்தலிற் பொன்னரிமாலையும், காதிற் குழையும், தோளில் தொடியும், முன்கையிற் சங்குவளையும் பிறவளைகளும், அடி யிற் சிலம்பும் அணியப்பட்டு அழகு செய்கின்றன. இவற்றையன்றி வேறு பல வாலிழைகள் அவர்களுடைய இயற்கையழகுடைய மேனி யில் அமைந்து செயற்கையழகைச் செய்கின்றன.

பேதை மகளிர் பந்தாடுகின்றனர்; பாவையொடு விளையாடுகின்ற னர். கன்னிமகளிர் பிறையைத் தொழுகின்றனர். நீராடுதலினும், பொழில் விளையாடுதலினும், அலவனாட்டுதலினும், கிளிவளர்த்தலி னும் மகளிர்க்கு விருப்பம் மிகுதியாக உள்ளது. மரங்களிலிருந்து பூவைக் கொய்தும், கொய்த பூவைச் செப்புக்களிற் சேமித்துவைத் தும், தாமே முல்லைக்கொடியை வளர்த்தும் மலரின்பாலுள்ள தம் விருப்பத்தை வெளிப்படுத்துகின்றனர்.

நீராடும்பொழுது சிலர் எண்ணெய்போகக் களிமண்ணையிட்டுப் பிசைந்தும், நீராடியபின் அகிற்புகையாலும் சந்தனப் புகையாலும் கூந்தலை உலர்த்தியும், எண்ணெய் தடவி வாரிப் பூவணிந்தும் தம் கூந் தலை அலங்கரிக்கின்றனர்.

மணம் புரிந்த மகளிர் சிலம்புகழி நோன்பு இயற்றுகின்றனர். தலைவரைப் பிரிந்த மகளிர் அவர் விரைவில் வரும்பொருட்டுத் தூக் கையை வணங்குகின்றனர்; அவர் கூறிச்சென்ற நாட்கணக்கைச் சுவரிற் கோடிட்டுப் பார்த்து அறிகின்றனர்.

கருப்ப முதிர்ந்த மகளிர் புளிச்சுவையை மிகுதியாக விரும்புகின்றனர். பன்னிரண்டு மாதம் கருப்ப முதிர்தலை ஒரு புலவர் சொல்லுகின்றார்.

விழாவில் மகளிர் துணங்கைக்கூத்தாடிக் களிக்கின்றனர். உரலில் தானியங்களை இடிக்கும்போது வள்ளைப் பாட்டைப் பாடுகின்றனர்.

அவர்கள் இனிய உணவுகளை அடுவதில் திறமையையும், தலைவர் மனங்கோணுவாறு ஒழுகும் இயல்பையும், இணையற்ற அன்பையும், தெய்வக் கற்பையும் உடையராகி வீட்டிற்கும் நாட்டிற்கும் புகழை உண்டாக்குகின்றனர்.

## நிமித்தங்கள்

அக்காலத்தார் பார்க்கும் நிமித்த வகைகளிற் சிலவற்றை இதிற் காணலாம். பாலைநிலத்திற் செல்வார் ஓந்தியை நிமித்தப் பொருளாகக் கொள்வர். நிமித்தம் புள்ளெனக் கூறப்படுகின்றது. முதலிற் பறவைகளால் நிமித்தம் பார்க்கும் வழக்கம் உண்டாயினமையின் அப்பறவையைக் குறிக்கும் புள்ளென்னும் பெயரால் அது வழங்கப் பெற்று, அப்பால் வேறு பலவகை நிமித்தங்களுக்கும் அதுவே பெயராக வழங்கலாயிற்றென்று தோற்றுகின்றது ;

> " ............ஓதி முதுபோத்து
> தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்தும்" (கசo)

என்பதில் இவ்வோந்தி நிமித்தத்தையும் புள்ளென்றே வழங்குதல் காண்க ; பறவைகளால் நிமித்தம் பார்த்தலை,

> " நுநத மிருவிசும் பிவரும் " (உகூo)

என்னும் செய்யுட்பகுதி அறிவிக்கும். காக்கை கரைந்தால் விருந்தினர் வருவரென்பது நம் நாட்டினர் கொள்கை. ஒரு பெண்புலவர் அங்ஙனம் விருந்துவரக் கரைந்த காக்கையை நன்றியறிவோடு பாராட்டி யிருக்கின்றார். மகளிருக்குத் தோள்வளை செறிதல் ஒரு நன்னிமித்தம். புள், விரிச்சியென இரண்டும் ஒரு பாட்டிற் கூறப்படுகின்றது. விரிச்சியென்றது நற்சொல். அதனை இக்காலத்திலும் 'அசரீரி வாக்கு' என்று வழங்குவர்.

## வழக்கங்கள்

பொதுவாக நாட்டு மக்களிடத்தே காணப்படும் சில வழக்கங்களை இந்நூலால் அறிய இயலும். அவற்றிற் சில இக்காலத்திற் காணப்படாதன; சில காணப்படுவன. பறையும் சங்கும் ஆர்ப்ப மணம்புரியும் ஒரு வழக்கம் சொல்லப்படுகின்றது. மணம் செய்த பின்னர் மகளின் சிலம்பைக்கழிக்கும் ஒருவகை நோன்பு பண்டைக் காலத்திற் செய்யப்பட்டது. சுடலையைக் கண்டு அகன்று செல்லுதல், கலத்திற் பால் கறத்தல், முன்றிலில் தானியத்தை உலர்த்துதல், முதியோர் சென்று மணம் பேசுதல், உயர்ந்த இடத்திலேறிப் பார்த்தல், பிறையைத் தொழுதல் முதலியன சில வழக்கங்கள். ஒருவருடைய அச்சத்தைப் போக்கும்பொருட்டு அவரது நுதலை நீவுதல் பழைய வழக்கம்.

துன்புற்றவர்கள் அத்துன்பவுணர்ச்சி தாங்கமாட்டாமல் முட்டிக்கொள்ளுதலும், ஏதேனும் ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு ஓவெனப் புலம்புதலும், இன்புற்றவர்கள் உவகையினாற் கண்ணீர் விடுதலுமாகிய குணத்தன்மைகளைப் புலவர்கள் புலப்படுத்தியிருக்கின்றனர்.

துயரத்தினால் உண்டாகும் கண்ணீர் வெம்மையையுடையதாகுமென்பதும், உத்தம ஆடவர் மேனி முல்லையின் நறுமணத்தை யுடையதாக இருக்குமென்பதும் அரிய செய்திகள்.

## கருவிகள்

நாகரிக வாழ்வையும் கைத்தொழிற் சிறப்பையும் புலப்படுத்தும் பலவகைக் கருவிகளும் பொருள்களும் இந்நூலில் இடையிடையே சொல்லப்படுகின்றன. வீரர்களுக்குரிய படைக்கலங்களும் அவ்வச்சாதியினர்க்குரிய கருவிகளும் முன்னர்ச் சொல்லப்பட்டன. உடைவகைகளில் கலிங்கமென்பது ஒன்று. குறிஞ்சிநிலமகளிர் உடுக்கும் தழையுடையொன்று. முருகக்கடவுளுக்குரிய செந்நிற உடுக்கை கடவுள் வாழ்த்திற் சொல்லப்படுகின்றது.

அரசனுக்குரிய சிங்காதனத்தைக் கட்டிலென்பர். மகளிர் விளையாடுதற்குப் பந்தும் பாவையும் பயன்பட்டன. பாவைகள் பூந்தாதினாலும் பஞ்சாய்க் கோரையாலும் செய்யப்பட்டன. செல்வர் வீடுகளில் இளமகளிர் பொற்கலத்தே பாலை உண்டனர். மக்கள் கண்ணாடிக் குப்பிகளில் கள்ளை வைத்தனர். குளிர்காலத்தில் உண்ணும் பொருட்டு வெந்நீரை ஆறுமற் பாதுகாத்து வைத்தற்குரிய செப்

பொன்றிருந்தது. அது சேமச்செப்பு என்று சொல்லப்படுகின்றது. குறிய கால்களையுடைய கட்டிலும், அதன்மேல் நூலால் தொடுக்கப்பட்ட பூமாலைகள் மலர்கள் அணைகளென்பவை செறிந்த படுக்கையும் செல்வர் வீடுகளில் அமைந்திருந்தன.

## ஊர்திகள்

வாகனங்களுள் உப்பு வாணிகருடைய மூடா வண்டிகள் ஒரு சார் காணப்படுகின்றன. வீரரும் பிறரும் ஊரும் தேர்கள் ஒருபால் உள்ளன. வெள்ளிய தந்தத்தாற் செய்யப்பட்ட தேர்கள் சிறந்த குதிரைகள் பூட்டப்பெற்று நிற்கின்றன. தேரின் பக்கங்களில் பொன்னாற்செய்த தகடுகள் தைக்கப்பட்டும், முன்னே தாமரை மொட்டுப் போன்ற வடிவமுள்ள கொடிஞ்சி அமைக்கப்பட்டும் உள்ளன. வேறு பல வகையான அலங்காரங்களையும் இழைகளையும் அத்தேரிற் காண்கின்றோம். அதன் சக்கரங்களிற்கூடப் பொன்னாலாகிய சூட்டு இருக்கின்றது. தேர் வரும்போது அதிற் கட்டப்பெற்ற மணிகள் ஒலிக்கின்றன.

நீரில் விளையாடுதற்குரிய புணைகளும், கடலிற் செல்லுதற்குரிய திமிலும், கலமும் (கப்பலும்) சொல்லப்படுகின்றன. ஒருமலை மாலைப் பொழுதில் இருளில் மறைவதற்கு உவமையாகக் கப்பல் கடலில் ஆழ்வதை ஒரு புலவர் கூறுதலின் கப்பல் பெரியதாக இருக்கவேண்டுமென்று தெரியவருகின்றது.

## உணவு வகை

தேவர்களுடைய உணவாகிய அமிழ்தமே யாவற்றினும் சிறந்ததென்ற நினைவு அக்காலத்தும் இருந்தது. அதனை அரும்பெறலமிழ்தம் என்று குறிக்கின்றனர். வயிறாரச் சுவைத் துண்ணும் உணவை ஆர்பதமென்றும், வைத்திருந்து விலங்குகள் உண்ணும் உணவை அல்கிரை யெனவும், காக்கைக்கிடுவதைப் பலியெனவும், கடவுளுக்கு நிவேதிப்பதை மடையெனவும் கூறுவர். பாலும் நெய்யும் கலந்த உணவுகள் பல சொல்லப்படுகின்றன. கதிரிலுள்ள பச்சை நெல்லைக்கொண்டு இடிக்கும் பாசவலும், நெற்பொரியும், வெல்லக்கட்டியும் சிலவகை உணவுகள். தயிரைப் பிசைந்து தாளித்துச் செய்யும் ஒருவகைக் குழம்பை, "தீம்புளிப்பாகர்" என்று குறிக்கின்றனர். பொரியோடு கலந்து பாலை இளைஞர் உண்டல் வழக்கம் (கூருகூ.) உண்பாரது தகுதிக்கேற்ற உணவுகள் புலவர்களாற் கூறப்படுகின்றன.

காக்கைக்கு வெண்ணெற்சோறும் நெய்யும் இடுவதும், அறிவருக்குச் செந்நெற்சோறும் நெய்யும் இடுவதும் இதனை வெளிப்படுத்தும்; பாணனுக்குரிய உணவாக நெய்யிற் பொரித்த குறும்பூழ்ப் பறவை யாகிய வியஞ்சனம் சொல்லப்படுதலும் காண்க.

உணவுக்குரிய பொருள்களாகிய நெல், வரகு, தினை, மொச்சை, கள் என்பனவற்றைப் பற்றிய செய்திகள் பல. கள்ளென்பதை மயக்கத்தைத் தரும் தென்னங்கள்ளென்றே கொள்ளுதல் தக்க தன்று. அரசர்களும் வேறு சிறந்த வாழ்க்கைநிலையையுடைய மக்களும் இதனை நுகர்வாரென்பதை ஆராய்கையில் அவர்களுக்கு மனவெழுச்சியைக் கொடுக்கும் பானவகையென்றே கொள்ளுதல் வேண்டும்.

கள்ளில் நெல்லாற் செய்த கள்ளும், பனங்கள்ளும், இனிமையும் வெப்பமுமுடைய கள்ளும், தேனாலாகிய ஒருவகைக் கள்ளும் மக்களுக்கு உணவாகச் சொல்லப்படுகின்றன. அதனைக் கண்ணாடிக் குப்பிகளிற் சேமித்து வைப்பர்; அவற்றின் வாய் குறுகியும் ஏனைப்பகுதி அகன்றும் இருக்கும்;

> "மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
> இட்டுவாய்ச் சுனைய"

என்னும் அடிகள் இச்செய்திகளை அறிதற்குக் கருவியாக உள்ளன.

உரை

மனிதன் பெற்ற பேறுகளில் பேசும் ஆற்றல் ஒன்று. விலங்குகள் உண்ணுதற்குரிய வாய்பெற்றும் பேசுதற்குரிய ஆற்றலின்மையின் வாயில்லாப் பிராணிகளாகின்றன. மனிதன் தனக்கு அரிதிற் கிடைத்துள்ள வாயாற் பேசும் உரைகள் இன்ன தன்மையினவாதல் வேண்டுமென்பதைப் பற்றிய புலவர்களுடைய எண்ணங்களை இந்நூலிலிருந்து ஒருவாறு அறியலாகும். அவற்றை அவர்கள் தனியாக எடுத்துக் கூறவில்லை. ஆயினும், தலைவன் தலைவி முதலியோருடைய இயல்புகளோடு சார்த்திச் சொல்லும் இடங்களிலுள்ளவற்றை நாம் தனியே யெடுத்து ஆராய்ந்து பார்ப்பின் சொல்லைப்பற்றிய அவர்கள் எண்ணங்கள் புலப்படும்.

பொய்ம்மொழி புகலுதல் அறவே ஒழிக்கத் தக்கதென்பது அவர்களுடைய முதற் கொள்கை. ஒருவர்பாலுள்ள விருப்பத்தால் உள்ளதை மறைத்துக் கூறுதலை அவர்கள் வெறுத்தனர். அறிந்த

செய்தியைப் பொய்த்துக் கூறுதல் ஆன்றோர்கள்பால் இல்லை. அங்ஙனம் தீதுமொழிந்தார் தக்காராகார். உண்மையைப்போலத் தோற்றும்படி பொய்யைச் சொல்லுதலும் பிழை ;

"வாய்போற் பொய்ம்மொழி கூறலஃ தேவனோ" (உருகூ)

என்பது காண்க. நன்மையைத் தருவதாகிய உண்மையைக் கூறுதற்குச் சிறிதும் அஞ்சார் ;

"நன்மொழிக் கச்ச மில்லை" (ருகூஉ)

என்பதே அவர்கள் கருத்து. பயனுடைய மொழியை நல்லுரையாகவும் பயனற்றமொழியைப் புல்லுரையாகவும் கருதினர். இனிமையோடு பேசுதலையே அவர்கள் விரும்பினர். இன்னாக் கிளவியை அகற்றினர். பிறரைப் பழித்தலையும் வெறுத்தனர். பொய், பயனில் சொல், இன்னாச் சொல், புறங்கூற லென்பவற்றை உரையின் குற்றங்களென்று திருவள்ளுவர் வகுத்துக் காட்டிய நெறியையே இந்நூற் செய்யுட்களிலும் காண்கின்றோம்.

பேசும்பொழுது ஆராய்ந்து பேசுதலே சிறந்தது ; "தெரிதீங்கிளவி" என்னுந் தொடர் இதனைக் குறிக்கின்றது. நெஞ்சில் நன்மையையே நினைத்துப் பேசவேண்டும் ; "தீதி னெஞ்சத்துக் கிளவி" என்பது இக்கருத்தைத் தோற்றுவிக்கின்றது. அழகிய சொற்களால் இனிமை தோன்றப் பேசவேண்டும் ; "அந்தீங்கிளவி" யென்னும் தொடரால் இதனைப் பெறலாகும். மெல்லெனஇனிமைபெறக் கேட்பார் விரும்பும்வண்ணம் பேசும் உரைகளை,

"மெல்லிய வினிய மேவரு தகுந"

என ஒரு புலவர் குறிக்கின்றனர். இவற்றால் வஞ்சகமில்லா நெஞ்சத்தோடு எண்ணி ஆராய்ந்து அழகிய சொற்களால் இனிமையும் நன்மையும் உண்டாகும்வண்ணம் உண்மையும் பயனும் உடைய சொற்களைப் பிறர் விரும்பிக் கேட்கும் முறையிற் பேசும் மொழிகளே சிறந்தவையென்று பழம்புலவர்கள் எண்ணிய எண்ணம் புலப்படுகின்றதன்றோ ?

## இசை

தமிழர் இசையைப் போற்றி வளர்த்து வந்தனர். இசைப் பயிற்சியையே தம் வாழ்க்கைத் தொழிலாகக் கொண்ட பாணர் முதலியோர் தமிழ்மக்களுக்குத் தம்முடைய இசையினால் இன்பம்

ஊட்டினர். இசையைப்பற்றியும், இசைக்கருவிகளைப் பற்றியும் சில செய்திகள் இந்நூலில் உள்ளன.

தோற்கருவிகளில் தண்ணுமை, தொண்டகம், பதலை, முரசு, முழவென்பன இதில் வந்துள்ளன. இவற்றுள் தொண்டகப்பறை குறிஞ்சிநிலத்தாருக்குரியது (௩எரு.) துளைக்கருவியுள் குழலின் இசை வங்காவென்னும் பறவையின் ஒலிக்கு உவமையாகின்றது. பண்களுள் படுமலைப்பாலையின் உச்ச விசையும் நெய்தற்குரிய விளரிப் பண்ணும் உவமைகளாக ஆளப்படுகின்றன. பாட்டுக்களுள் குன்றம் பாடும் பாட்டும் உலக்கைப்பாட்டாகிய வள்ளையும் மகளிராற் பாடப் படுவனவாகும்.

## கடவுள்

இவ்வாறு நாகரிகமிக்க வாழ்க்கையை நடத்திய தமிழ் நாட்டினர் கடவுளை வணங்கி வழிபட்ட முறைகள் பலவகைப்படும். முருகக்கடவுளைக் குறிஞ்சிநிலமக்கள் வெறியாட்டெடுத்து வழிபடுவர். இந்நூலுக்குக் கடவுள்வாழ்த்தாக அமைந்த செய்யுள் முருகக் கடவுளைப் பற்றிக் கூறுவது. அவர் தாமரைபோன்ற திருவடிகளையும், பவழம்போன்ற மேனியையும், திகழும் ஒளியையும், குன்றிமணி போன்ற செந்நிற உடையையும், சுடரெறிக்கும் நெடிய வேலாகிய படையையும், அம்பையும், கழலும் தொடியையும், சேவற் கொடியையும் உடையவர். உலகத்தைத் துன்பத்தினின்றும் காத்து இன்பத்தை உண்டாக்குபவர். அவருக்கு யானைவாகனம் உண்டு. குன்றின் நெஞ்சுபக வேலெறிந்த வீரமும் அவுணரை அழித்த புகழும் உடையவர். அவரைச் சேய், நெடுவேள், முருகு என வழங்குகின்றனர். குறிஞ்சிநிலத்தார் கடம்ப மரத்தில் அவர் உறைவதாகக் கருதி அதனைப் பூசிப்பர். அரலைமாலை சூட்டியும், தினைக் கதிரையும் தினையையும் வைத்தும், மறிப்பலி கொடுத்தும் முருகவேளை வழிபடுவர்.

மலையிலுள்ள வேறு சில தெய்வங்களைச் சூரென்பர். அவர்களுட் பெண்தெய்வங்களைச் சூரரமகளிரென்பர். அத்தெய்வத்தாற் பற்றப் படுதலும் அங்ஙனம் பற்றப்பட்டார் நடுங்குதலும் இயல்பு.

கடவுள் கொடியோரைத் தண்டிக்குமென்னும் கொள்கையுடையராகிய மக்கள் அக்கடவுளுக்கு அஞ்சி அறநெறியில் ஒழுகினர்.

சூலத்தையுடைய துர்க்கையை வழிபட்டுக் காப்புநூல் கட்டி விரதமிருத்தல் மகளிர் வழக்கம். பேய்களைப்பற்றிய செய்திகள் சில வருகின்றன.

கூற்றுவனைப்பற்றிய செய்தியொன்று உளது. அவன் இரக்கமின்றி உயிரைக்கொண்டு செல்லுதலின் அவனதுசெயலை, "அறனில் கோள்" என ஒரு புலவர் சொல்கின்றார்.

மக்கள் தம்முடைய புண்ணியச் செயலால் தேவர்களாகி அவர்களுக்குரிய போகங்களை நுகர்வரென்ற கொள்கை அக்காலத்திலும் இருந்தது. நன்றி செய்தாரை, "இவர்கள் அமிர்தம் உணவாகப் பெற்றுத் தேவலோக வாழ்க்கையைப் பெறுவாராக" என்று வாழ்த்துவார் கூற்றுக்களால் இதனை அறியலாம். தேவலோகம் புத்தேளுடென்றும், உயர்நிலை யுலகமென்றும், பெரும்பெயருலகமென்றும் சொல்லப்படும். புண்ணியஞ் செய்தார் சுவர்க்க பதவியுறுதல் குறிக்கப்படுதல் போலவே பாவஞ் செய்தார் நிரயம் புகுதலும் குறிக்கப்படுகின்றது. வாழ்த்துவார்கூற்றினால் முன்னது வெளிப்படுதலைப் போல வைவார்கூற்றினாற் பின்னது தெளிவாகின்றது (உகூஉ.)

## நீதிகள்

அறம் பொருள் இன்பம் வீடுபற்றிய நீதிகள் அங்கங்கே அமைந்து விளங்குகின்றன. பெரிய உபகாரம் செய்தால் அவரை யாவரும் விரும்புவரென்பது,

"பெருநன் றாற்றிற் பேணரு முளரோ" (கக௫) என்பதனாலும் அறத்தாற் புகழ்பெற விரும்புவார் பொருளைச் சேமித்துவையாமல் ஈவாரென்னும் கருத்து,

"நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப்பொருள் போலத்
தங்குதற் குரிய தன்று" (கசங) என்பதனாலும்

சான்றோர் அறநெறியே செல்வரென்பது,

"திறவோர் செய்வினை யறவ தாகும்" (உசஎ) என்பதனாலும்

சான்றோர் தம்மைப் புகழ்ந்தால் நாணமடைவாரென்பதும் பழியைப் பொறாரென்பதும்,

"சான்றோர், புகழு முன்னர் நாணுப
பழியாங் கொல்பவோ" (உ௫உ) என்பதானும்

வறியவருக்கு ஈந்து அன்புடையராயிருத்தலே நன்றென்பதும் அங்ஙனம் இராமை நன்றன்றென்பதும்,

" நல்கின் வாழ நல்கூர்ந் தோர்வயின்
நயனில ராதத னன்றென வுணர்ந்த
குன்ற நாடன் றன்னினு நன்று " (௩௨௭) என்பதாலும்

ஒருவருக்கு வழங்கிய பொருளை மீட்டும் பெறுதல் இழிவென்ற நீதி,

" இடுக்க ணஞ்சி யிரந்தோர் வேண்டிய
கொடுத்தவை தாவென் சொல்லினும்
இன்னா தோநம் மின்னுயி ரிழப்பே " (௩௪௯) என்பதனாலும்

கடமையை யுணர்ந்தவர்கள் சான்றோரைக் கண்டால் இடங்கொடுத்து வரவேற்பரென்னும் செய்தி,

" தாமறி செம்மைச் சான்றோர்க் கண்ட
கடனறி மாக்கள் போல விடன்விட்டு" (௨௬௫) என்பதாலும்

வெளியாகின்றன. இவை அறம் பற்றிய நீதிகள்.

" இல்லோ னின்பங் காமுற் றாங்கு" (௧௨௦)

" இல்லோர் வாழ்க்கை யிரவினு மிளிவு " (௨௮௩)

என்பன வறுமையின் இழிவைப் புலப்படுத்துவன.

" உள்ளது சிதைப்போ ருளரெனப் படாஅர் " (௨௮௩)

" வினையே யாடவர்க் குயிரே " (௧௩௫)

என்பவை முயற்சியின் இன்றியமையாமையை அறிவுறுத்துகின்றன.

" ......இனத்தி னியன்ற
இன்னா மையினு மினிதோ
இனிதெனப் படூஉம் புத்தே ளுடே " (௨௮௮)

" மருவி னினியவு முளவோ " (௩௨௨)

என்பவை நட்பின் பெருமையை எடுத்துரைக்கின்றன.

" நில்லா மையே நிலையிற்று " (௧௪௩)

என்பது நிலையாமையைக் கூறுகின்றது.

## இலக்கணச் செய்திகள்

### நால்வகைச் சொற்கள்

சில முறைப் பெயர்கள் இடத்திற்கேற்ற மரபையுடையன. யாயென்பது தன்மையிடத்துக்கும் ஞாயென்பது முன்னிலைக்கும் தொடர்புடைய முறைப்பெயர்களென்று தெரியவருகின்றது (௪0.)

வினையெச்ச உருவங்களில் செய்யிய, செய்பியரென்னும் வாய்பாடுடைய சொற்கள் பல அளபெடையோடு காணப்படுகின்றன. செய்பு, செய்ம்மாரென்னும் வாய்பாட்டெச்சங்களும் வந்துள்ளன. குடியென்னும் வினையடியாகப் பிறந்த செய்யியவென்னும் வாய்பாட்டெச்சம் குடீஇயவென விருத்தல் முறை; இந்நூலில் குடிக்கியவென (௩௫௬) வந்துள்ளது. அதற்குக் குடித்தியவென ஒரு பாடம் காணப்படுகின்றது.

இசின், சின் என்னும் இரண்டு இடைச்சொற்கள் பலவிடங்களில் ஆளப்படுகின்றன. அவற்றுள், இசினென்பது "வழிபடல் சூழ்ந்திசின்" (௧௧) என்பதுபோலத் தன்மையிலும், சின்னென்பது "உரைத்திசின்" (௬௩) என்பதுபோல முன்னிலையிலும் பலவிடங்களில் அமைந்துள்ளன. அழேன்றேவென்னும் பொருளில் "அழாற்கோ" (௧௬௨) என ஓர் அரும்பதம் இந்நூலில் மட்டும் காணப்படுகின்றது.

மோ, மே, தில்ல, மன், மன்ற, அம்ம, தில, ஆல், ஏ, ஓ முதலிய பலவகை இடைச்சொற்கள் பொருளுடையனவாகவும் அசை நிலையாகவும் வழங்குகின்றன. அங்ஙனமே நனி, தவ முதலிய உரிச்சொற்களையும் இதிற் காணலாம்.

## வடசொற்கள்

வடசொற்கிளவிகள் வடவெழுத் தொருவித் தமிழெழுத்தைப் பெற்றும் தமிழுக்கு ஏற்ற விகாரங்களை யடைந்தும் வேறு பல வகையில் திரிந்தும் வழங்குகின்றன. அவை வருமாறு:—அகில் அச்சிரம், அமயம், அமிழ்தம், அரசன், அவை, ஆரியர், இமயம் உலகம், ஏமம், கடிகை, கமண்டலம், கலாவம், காமம், காலம் குணன், குவளை, சகடம், சூலி, சேமம், சேரி, தண்டு, தாது, தூது தெய்வம், நகர், நீலம், நேமி, பக்கம், பணிலம், பருவம், பலி, பவழம் பிச்சை, மண்டிலம், மணி, மதம், மதி, மாலை, முகம், முத்து, முரசு யாமம், வாசம் முதலியன. இவற்றிற் சிலவற்றைத் தமிழெனவே கொள்வாரும் உளர்.

## உவமை

வினை பயன் மெய் உருவென்னும் நால்வகை உவமைகளும் பல விடங்களில் உள்ளன. உவமையின் நயம் சங்க நூல்களிற்போலப் பிற்கால நூல்களிற் காணல் இயலாது.

உவமையும் பொருளும் ஒரே இடத்திலுள்ளனவாகச் சில உவமங்கள் கூறப்படுகின்றன; பாலை நிலத்திலுள்ள பல்லியின் ஒலிக்கு அந்நிலத்திலுள்ள மறவர் அம்பை உகிர் நுதியிற் புரட்டும் ஓசையை உவமை கூறுதலும் (கரு), அகவன் மகளுடைய நரைமயிருக்கு அவளணிந்த மனவுக் கோப்பையே உவமையாக்குதலும் (உரு), மலைமேலுள்ள இற்றியின் வேருக்கு அங்குள்ள அருவியை உவமையாக அமைத்தலும் (கoரு), ஒரு குறமகளின் கண்ணுக்கு அவளுடைய தமர் எய்த அம்பை உவமித்தலும் (உஎஉ) இவ்வகையைச் சார்ந்தவை.

கூற்றுடையார் தாம் அறிந்த உவமையைக் கூறுதல் இயல்பு; மலையில் வாழும் தோழி தலைவியின் காமத்துக்குப் பலாப்பழத்தையும் (கஅ), குறிஞ்சி நிலத்தலைவி தான் ஆற்றியிருத்தலுக்குக் கிளியுண்ட கூழைத்தினை தழைத்தலையும் (கருரு) உவமையாக இயம்புதல் இத்தகையதே யாகும்.

கேட்பார் தெளிவதற்கேற்ற உவமையைக் கூறுதல் ஒருவகை. பரத்தையிற் பிரிந்துவந்த மருதநிலத்தலைவனுக்குத் தம் நிலையைப் புலப்படுத்த வந்த தோழி,

"கைவினை மாக்கடஞ் செய்வினை முடிமார்
சுரும்புண மலர்ந்த வாசங் கீழ்ப்பட
நீடின வரம்பின் வாடிய விடினும்
கொடியரோ நிலம்பெயர்ந் துறைவே மென்னுது
பெயர்த்துங் கடிந்த செறுவிற் பூக்கும்
நின்னூர் நெய்த லனையேம் பெரும" (ருoக)

என்று கூறுதல் இதற்கேற்ற உதாரணமாதல் காண்க. அன்ன, அனைய, ஆங்கு, இன், இன்ன, ஏய்க்கும், ஒத்து, கடுப்ப, புரையும், போல், மருள், மானும் முதலிய உவம உருபுகள் செய்யுட்களில் வந்துள்ளன.

## புலவர்கள்

இந்நூற் செய்யுட்கள் சிலவற்றில் ஆசிரியர் பெயரே ஏடுகளில் இல்லை. சில ஆசிரியர்கள் பெயர்களிற் பல பிரதிபேதங்கள் உள்ளன. சில பெயர்கள் ஒரே புலவர்க்குரியனவாகக் கருத இடமிருப்பினும் துணிந்து சொல்ல முடியவில்லை.

ஆயினும் இப்பொழுது கிடைக்கும் பெயர்களைக்கொண்டு புலவர்களைப்பற்றிய சிலவிஷயங்களை நாம் அறிந்துகொள்ள இயலும்.

சில புலவர்களுடைய ஊர், சாதி, தொழில், உறுப்புக் குறை முதலிய சிலவற்றை அவர்களுடைய பெயர்களிலிருந்தே ஊகித்து உணர்ந்துகொள்ளலாம். அன்றியும் அக்காலத்தில் மக்களுக்கு இடும் பெயர்களைப்பற்றிய சில செய்திகளையும் தெரிதல் கூடும்.

இந்நூற் செய்யுட்களில் பொருள்களைச் சிறப்பித்தும் அரிய உவமைகளைக் கூறியும் தம் புலமைத் திறத்தைக் காட்டிய புலவர்கள் சிலருக்கு அவ்வாற்றலைக் குறிக்கும் சிறப்புப் பெயர்கள் அமைந்துள்ளன. அவற்றிற் சில சிலருடைய இயற்பெயரோடு இணைந்தும் வேறு சில தனியாகவும் உள்ளன.

சிறப்புப் பெயர்கள்

(1) கார்க்கியரென்னும் புலவர் பெருமான் நெய்தற்றிணையைப் பாடும் ஆற்றல் வாய்ந்தமையின் நெய்தற் கார்க்கியரென்று வழங்கப்படுகின்றார். அவர் பாட்டுக்களில் (௫௫, ௨௧௨) நெய்தல் நிலத்தில் கழியிலுள்ள நீலப்பூக்கள் கூம்புவதும், கடற்றிவலை வீசு ஊதைக்காற்றுத் துன்பத்தை யுண்டாக்குவதும், தலைவன் மணியொலிக்கத் தேரிலேறிக் கடற்கரை வழியே வருவதும் சொல்லப் படுகின்றன.

(2) பெருங் கடுங்கோவென்பவர் ஓரரசர்; தமிழ்ப் புலமையிற் சிறந்தவர். அவர் பாலை நிகழ்ச்சிகளைப் பாடுதலில் வீறு பெற்றவராதலின் பாலை பாடிய பெருங்கடுங்கோ என்ற பெயரால் வழங்கப் படுகின்றார். இந்நூலிலுள்ள அவர் பாடல்களிற் பெரும்பாலன பாலைக்குரியனவே.

(3) சோவேங்கைப் பெருங்கதவனென்பது ஒருவர் பெயர். அவர் செய்யுளில் (௧௩௪) கல்லினிடையே முளைத்த வேங்கை மரத்தின் பூவையுடைய கிளையை அருவி தாக்கும் காட்சி வருணிக்கப்படுகின்றது. வேங்கை மரத்தைப் பற்றிய இச்செய்தியை அமைத்ததுபற்றி இவர் இயற்பெயரோடு வேங்கையென்னும் அடை இயைக்கப் பெற்றதென்று கருத இடமுண்டு.

(4) மாதங் கீரனென்னும் புலவர் மடலேற்றத்தைப் பற்றிய செய்திகளைத் தம் செய்யுளிற் சொல்லுதலின் (௧௮௨) மடல்பாடிய மாதங்கீரனென்னும் பெயரோடு குறிக்கப்படுகின்றார்.

(5) நச்செள்ளையாரென்ற புலவர் காக்கையைப் பற்றிப் பாராட்டிப் பாடினமையின் காக்கைபாடினியார் நச்செள்ளையாரென்று சிறப்பிக்கப்பெற்றார்.

இந்த ஐந்து புலவர்களுடைய இயற்பெயரும் சிறப்புப் பெயரும் ஒருங்கே அறியப்படுகின்றன.

சிறப்புப்பெயர் மாத்திரம் தெரியும் புலவர்கள் :—

(1) கயமனார் : பசிய இலையினின்றும் மேலெழுந்த நெய்தற்பூ கழியில் வெள்ளம் மிகும்போதெல்லாம் கயத்தின்கண்ணே மூழ்கும் மகளிருடைய கண்ணை யொக்குமென்று இவர் ஒரு செய்யுளிலே (கூ) பாடுகின்றார். இதுபற்றி இவர் கயமனாரென்ற சிறப்புப் பெயர் பெற்றாரென்று ஊகிக்கப்படுகின்றது.

(2) செம்புலப் பெயனீரார் : நொதுமலராக இருந்த தலைவனும் தலைவியும் ஒன்றுபட்டு உள்ளப்புணர்ச்சி யுற்றதை,

> " செம்புலப் பெயனீர் போல
> அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே " (சு0)

என உவமை வாயிலாக வெளியிட்ட சிறப்புப்பற்றி இவர் இப்பெயர் பெற்றார்.

(3) அணிலாடு முன்றிலார் : தலைவன் பிரிந்தகாலத்தில் பொலிவிழந்த தலைவிக்கு மக்கள் போகிய அணிலாடு முன்றிலையுடைய இல்லத்தை உவமையாக்குதலின் (சக) இவர்பெயர் இங்ஙனம் அமைந்தது.

(4) நெடுவெண்ணிலவினார் . களவுக்காலத்தில் இரவுக்குறிக்கண் வரும் தலைவனுக்கு இடையூறாக இருக்கும் நிலவை, 'நெடுவெண்ணிலவே' என விளித்துத் தோழி வெறுப்புக் குறிப்புப்படக் கூறுவதாக ஒரு செய்யுள் (சஎ) பாடியதால் இவர் இப்பெயரைப் பெற்றார்.

(5) மீனெறி தூண்டிலார் : கானயானை கைவிடு பசுங்கழை மீனெறி தூண்டிலைப்போல மேலே எழும்புமென உவமை கூறிய திறம்பற்றி (சுச) இவர் இப்பெயரை அடைந்தார்.

(6) விட்ட குதிரையார் : யானையாற் பற்றிவிடப்பட்ட மூங்கில் செருவிற் செலுத்திவிட்ட குதிரையைப்போல மேலே எழும்புமென உவமையை அமைத்தமையின் (எச) இச்சிறப்புப் பெயரால் இவர் வழங்கப்பட்டார்.

† 14

(7) ஓரேருழவனார்: *தலைவியைக் காணுவதற்கு விரையும் தன் நெஞ்சிற்கு ஒரு தலைவன் 'ஈரம்பட்ட செவ்விப்பைம்புனத்து ஓரேருழவனை' உவமிப்பதாகச் செய்யுள் செய்தமையின் (கஙக) இவர் இப்பெயர்க்கு உரியரானார்.*

(8) கூவன் மைந்தன்: *துன்பத்தை வெளிப்படக் கூறமாட்டாது துயருறும் தலைவிக்கு இரவிலே கூவலில் குராற்பசு வீழக் கண்ட ஊமனை உவமித்தலின் (உஉச) இப்பெயர் இவருக்கு உரியதாயிற்று. மைந்தனென்பது இவரது இயற்பெயர் போலும்.*

(9) காலெறி கடிகையார்: *தலைவியின் எயிற்றுநீரின் இனிமைக்கு அடிக்கரும்பில் வெட்டிய துண்டத்தைத் தின்றதால் உண்டாகும் இனிமையை உவமித்து,*

> " ... ... ... கரும்பின்
> காலெறி கடிகைக் கண்ணயின் றன்ன
> வாலெயி றூறிய வசையி றீநீர் " (உகள)

*எனச் சிறப்பித்தலின் இவர் இங்ஙனம் குறிக்கப்பெற்றார்.*

(10) ஓரிற்பிச்சையார்: *அறிவர் பெறும் உணவை ஓரிற்பிச்சையெனக் குறித்தலின் (உளள) இப்புலவர் இப்பெயருடையரானார்.*

(11) கல்பொரு சிறுநுரையார்: *தலைவனைப் பிரிந்திருக்க மாட்டாத தலைவி அப்பிரிவினால் உண்டாகும் துன்ப மிகுதியைப் புலப்படுத்தி,*

> " யாமெங் காதலர்க் காணே மாயிற்
> செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
> கல்பொரு சிறுநுரை போல
> மெல்ல மெல்ல வில்லா குதுமே " (உகூ0)

*எனக் கூறுவதாகப் பாடினமையின் இவர் இக்குறியீடு பெற்றார்.*

(12) கள்ளிலாத்திரையனார்: *கட்குடிக்கும் விருப்பத்தினாற் சில நண்பர்கள் கூடிக்கொண்டு சென்றதைக் கள்ளிற்கேளிராத்திரையெனக் குறித்தலின் (உகூங) இவர் இச் சிறப்புப்பெயரால் வழங்கப் பெற்றார்.*

(13) குப்பைக் கோழியார்: *தலைமகள் தன் நோயைத் தீர்ப்பார் ஒருவருமின்றித் தான் வருந்துவதைக் குப்பைக் கோழித் தனிப்*

போருக்கு உவமிப்பதாக ஒருசெய்யுள் (௩0௫) செய்தலின் இந் நல்லிசைப்புலவர் இப்பெயரைப் பூண்டார்.

(14) பதடிவைகலார்: தலைவியோடு பழகாத நாளைப் பதடி வைகலென்று (௩உ௩) சொல்லுதலின் இவர் இக்குறி பெற்றார்.

(15) கவைமகன்: இரட்டைப்பிள்ளைகளைக் கவைமகவெனக் கூறி அவர்கள் நஞ்சுண்டதை உவமையாக எடுத்தாண்டமையின் (௩உச) இச்சான்றோர் இவ்வாறு குறிக்கப்பெற்றார்.

(16) வில்லக விரலினார்: பரத்தையும் தலைவனும் ஒன்று பட்டதற்கு வில்லைப் பிடித்த விரல்களை உவமித்து,

"வில்லக விரலிற் பொருந்தி" (௩எ0)

எனப் பாடுதலின் இவர் இக்காரணப்பெயர் பெற்றார்.

(17) கங்குல் வெள்ளத்தார்: இரவினைக் கண்டு தலைவி அஞ்சி,

"கங்குல் வெள்ளங் கடலினும் பெரிதே" (௩அஎ)

எனக் கூறுவதாக அமைத்தலின் இவர் இவ்விசேடப் பெயரை யடைந் தார்.

(18) குறியிறையார்: குறமகாரைக் குறமகளீன்ற குறியிறைப் புதல்வரெனக் (௩௬ச) குறித்தலின் இவர் இப்பெயர் பெற்றார்.

இப்புலவர்களுள் பதின்மூவர் தாம் கூறிய உவமை நயத்தாற் பெயர் பெற்றவர்களாதல் காண்க. இதனாற் புலமையாற்றல் உவமையால் வெளிப்படுமென்னும் பண்டையோர் கொள்கை தெளிவுறும்.

## புலவர்களுடைய ஊர்கள்

பல புலவர்களின் பெயர்களோடு அவர்களுடைய ஊர்களும் சேர்த்துச் சொல்லப்படுகின்றன. அவ்வூர்கள் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் விரவி யுள்ளனவாகத் தோற்றுகின்றன. அவை யாவன: (1) அரிசில், (2) அள்ளூர், (3) ஆலங்குடி, (4) ஆலத்தூர், (5) இடைக்காடு, (6) இருந்தையூர், (7) ஈழம், (8) உகாய்க்குடி, (9) உரோடகம், (10) உறையூர், (11) ஐயூர், (12) ஒக்கூர், (13) கச் சிப்பேடு, (14) கடம்பனூர், (15) கடியலூர், (16) கருவூர், (17) கழார், (18) காவிரிப்பூம் பட்டினம், (19) கிடங்கில், (20) கிளி

மங்கலம், (21) குடவாயில், (22) குறுங்குடி, (23) கூடலூர், (24) கூழி, (25) கோவூர், (26) சிறைக்குடி, (27) செல்லூர், (28) தங்கால், (29) பெருங்குன்றூர், (30) பொதுக்கயம், (31) மதுரை, (32) மாங்குடி, (33) மாடலூர், (34) மிளை, (35) வெள்ளூர், (36) வேம்பற்றூர். இவ்வூர்களுள் உறையூர், கருவூர், காவிரிப் பூம்பட்டினம், மதுரை யென்னும் பெரிய நகரங்களிற் பல புலவர்கள் வாழ்ந்து வந்தனர்.

## சாதி

புலவர்களுடைய சாதியை வெளிப்படுத்தும் பெயர்கள் பல. கபிலர் முதலிய சிலர் அந்தணரென்பது வேறு வகையால் தெரிய வருகின்றது. ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன் அரசர்களுள் ஒரு வகையினனென்பதை அவன் பெயர் தெரிவிக்கின்றது. குட்டுவன் கண்ணன், நம்பி குட்டுவனென்பவர்களும், சேரமான் சாத்தன் சேரமானெந்தை யென்பவர்களும் சேரர் பரம்பரையினராகத் தோற்றுகின்றனர். சோழர்களுள் கோப்பெருஞ்சோழனது செய்யுள் ஒன்று இந்நூலில் உள்ளது. அண்டர்மகன் குறுவழுதி, பாண்டியன் பன்னாடு தந்தானென்பார் தம் பெயராலேயே பாண்டியமன்னர் பரம்பரையினரென்பதைப் புலப்படுத்துகின்றனர். கோக்குளமுற்றன், கோவேங்கைப் பெருங்கதவனென்னும் பெயர்களிலுள்ள கோவென்னும் அடை அவர்கள் முடியுடை மன்னர் குலத்தினரென்பதை யறிவிக்கின்றது. மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனாரென்பவர் வாணிகரென்றும், அவர் ஆடை வியாபாரம் செய்தனரென்றும் அவர் பெயர் அறிவிக்கின்றது. வேளாளர்களுள் வேளென்னும் பெயரால் அறியப்படுவாரும், கிழாரென்னும் பெயரால் அறியப்படுவாரும் பலர். மூதெயினனார் என்னும் புலவர் மறவராகக் கருதப்படுகின்றார்.

## தொழில்

புலவர்கள் தொழிலைச் சில பெயர்கள் உணர்த்துகின்றன. பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனென்பார் பாண்டியனுக்குப் படைத் தலைவராக இருந்தார். செய்தி வள்ளுவன் பெருஞ் சாத்தனென்பவர் அரசாங்கத்துச் செய்திகளை யறிவிக்கும் கருமத்தலைவராக இருந்தனர். குலபதி நக்கண்ணனாரும், கணக்காயன் தத்தனாரும், ஆசிரியன் பெருங்கண்ணனாரும் ஆசிரியத் தொழிலுடையார். மதுரை யெழுத்தாளன் சேந்தன்பூதனார் எழுதும் தொழிலினர். கொல்லன் அழிசி,

தங்கால் முடக் கொல்லனார், மதுரைக் கொல்லன் புல்லன் (புலவன்?), மதுரைப் பெருங்கொல்லனென்பார் கொற்றொழிலையும், உலோச்சனா ரென்பவர் உலோச்செனனும் தொழிலையும், உறையூர் முதுகூத்தனார், வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தனென்னும் இருவரும் கூத்தாடுந் தொழிலையுமுடையாரென்பதை அவர்கள் பெயர்களே புலப்படுத்து கின்றன.

இவற்றால், அரசர்களும் அரசியலில் துணைபுரியும் படைத்தலைவர் முதலியோரும் பல்வேறு சாதியினரும் பல தொழிலினரும் தமிழை ஆராய்ந்து புலமையுற்று விளங்கியதை அறியலாம். தமிழ்ப் புலமையில் அவர்களுக்குள் வேற்றுமை பாராட்டப்பெறவில்லை. அவர்கள் மனங்கலந்து பழகியிருத்தலும் கூடும். சங்கத்தில் அவர் கள் தம்முடைய புறவேற்றுமைகளை மறந்து தமிழாற் பிணிக்கப் பட்டு ஒன்றி அக்காலத்தில் இருந்தனரென்று கருத இடமுண்டு. அவர்கள் செய்யுட்கள் இந்நூலிற் கோக்கப்பெற்று ஒன்றுபட்டு விளங்குவதை இப்பொழுது காண்கின்றோம்.

## பெண்புலவர்

இப்புலவர்களுள் அள்ளூர் நன்முல்லையார், ஆதிமந்தியார், ஊண்பித்தை, ஒக்கூர் மாசாத்தியார், ஔவையார், கச்சிப்பேட்டு நன்னாகையார், காக்கை பாடினியார் நச்செள்ளையார், நன்னாகையார், பூங்கணுத்திரையார், வருமுலையாரித்தி, வெள்ளிவீதியாரென்பார் பெண்பாற்புலவர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களுள் அள்ளூர் நன்முல்லையார், ஔவையார், காக்கைபாடினியார் நச்செள்ளையார், வெள்ளிவீதியாரென்பவர்கள் மிக்கபுகழ்வாய்ந்தவர்கள். ஆதிமந்தியா ரென்பவர் கரிகாற்பெருவளத்தானுடைய மகளாரென்று தெரி கின்றது.

## உறுப்பால் வந்த பெயர்

ஆசிரியன் பெருங்கண்ணன், காரிக்கண்ணனார், கொல்லிக் கண்ணன், நெடுங்கண்ணன், பூங்கண்ணன், பூங்கணுத்திரையாரென் பார் தம் கண்ணின் இயல்பாற் பெயர்பெற்றவர் போலும். நரி வெரூஉத்தலையார், சீத்தலைச் சாத்தனாரென்பவர்களுக்குத் தலையால் வந்தபெயர்கள் அமைந்தன. கடுந்தோட் கரவீரன், திப்புத் தோளார், பெருந்தோட் குறுஞ் சாத்தன் என்பார் தோளாற் பெயர் பெற்றார். பரூஉமோவாய்ப்பதுமனாரென்பதும் உறுப்பால் வந்தபெயர். ஐயூர்

முடவனார், தங்கால் முடக் கொல்லனாரென்னும் இருவரும் முடவ ரென்பது அப்பெயர்களால் உணரப்படும்.

## அடைமொழிகள்

சில பெயர்களுக்குமுன் மா, பெரு, முது, குறு, இள, ந, நல் என்னும் அடைகள் அமைந்துள்ளன. தொல்கபிலரென்பதில் தொன்மையென்னும் அடைவந்தது. இவை ஒவ்வொரு காரணம் பற்றியே அமைந்தனபோலும். அங்ஙனம் வந்தவை வருமாறு :

(1) இளமை: இளங்கீரந்தையார், இளங்கீரனார், இளம் பூதனார், இளங்கண்ணன், இளம்போத்தன், மருதன் இளநாகனார், இளவேட்டனார், வாயிலிளங்கண்ணன் ;

(2) குறுமை : அண்டர் மகன் குறுவழுதி, குறுங்கீரன் ;

(3) சிறுமை : சிறு கந்தன் ;

(4) ந : அழிசி நச்சாத்தனார், நச்செள்ளையார், நக்கீரனார் ;

(5) நன்மை : அள்ளூர் நன் முல்லையார், நன்னாகையார், நல் வெள்ளியார், நல்வேட்டனார் ;

(6) பெருமை : பெருங்கண்ணன், கடுகு பெருந்தேவன், பெருஞ் சாத்தன், பாரதம் பாடிய பெருந்தேவனார், பெரும் பதுமனார், பெருங் கொல்லன், பெருங்கந்தன் ;

(7) மா : மாசாத்தியார், மாமலாடன், மாமூலனார், மாவளத்தன்;

(8) முதுமை : முதுகூத்தனார், முதுகொற்றனார், முடெயினனார்.

## சில வழக்காறுகள்

தமிழ் இலக்கண உரைகளில் உதாரணங்களாகப் பலவிடங்களில் கொற்றன், சாத்தன், தேவன், பூதனென்னும் நான்கு பெயர்கள் காட்டப்பெறுகின்றன. இவை அக்காலத்தில் மக்களுக்கு மிகுதியாக இட்டு வழங்கும் பெயர்களென்று தோற்றுகின்றன. புலவர் பெயர் களிலும் இந்நால்வகைப் பெயர்களைக் காணலாம்.

(1) கொற்றன் : இருந்தையூர்க் கொற்றன் புலவன், உறையூர் முது கொற்றன், கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றன், கடியிக் கொற்ற னார், கொற்றனார், செல்லூர்க் கொற்றன், படுமரத்து மோசி கொற் றன், மதுரை யாசிரியன் கோடங் கொற்றன், வெண் கொற்றன் ;

(2) சாத்தன் : *அழிசிநச்சாத்தனார், உறையூர் முதுகண்ணன் சாத்தனார், கருவூர்ச் சேரமான் சாத்தன், செய்தி வள்ளுவன் பெருஞ் சாத்தன், பேரிசாத்தனார், மதுரைச் சீத்தலைச் சாத்தனார், வடமவண் ணக்கன் பேரிசாத்தனார்;*

(3) தேவன் : *கடுகு பெருந்தேவன், பாரதம் பாடிய பெருந் தேவனார், பூதத்தேவன், மதுரையீழத்துப் பூதன்றேவன், வாயிலான் தேவன்;*

(4) பூதன் : *இளம்பூதனார், ஈழத்துப் பூதன் தேவன், காவன் முல்லைப் பூதனார், சேந்தம் பூதனார், பூதத் தேவன், பூதம் புல்லன், மதுரை யெழுத்தாளன் சேந்தன் பூதன், வெண் பூதன்.*

*இவற்றையன்றி ஆந்தை, கீரன், தத்தன், புலவனென்னும் பெயர்கள் பல புலவர் பெயர்களோடு இணைந்து வழங்குகின்றன :—*

(1) ஆந்தை : *அஞ்சியாந்தை, ஓதலாந்தையார், சிறைக்குடி யாந்தையார்;*

(2) கீரன் : *இளங்கீரனார், கழார்க்கீரன் எயிற்றியன், குடவா யிற் கீரனக்கன், குறுங்கீரன், சேந்தன் கீரன், தும்பிசேர் கீரனார், நக் கீரனார், படுமரத்து மோசிகீரனார், மடல் பாடிய மாதங்கீரனார்;*

(3) தத்தன் : *ஆரியவரசன் யாழ்ப்பிரம தத்தன், கணக்காயன் தத்தன், குழற்றத்தன், மதுரைக் கண்டரதத்தன், மதுரை வேளா தத்தன்;*

(4) புலவன் : *இருந்தையூர்க் கொற்றன் புலவன், உழுந்தினம் புலவன், மதுரைக் காஞ்சிப் புலவன். புல்லனென்று வருவனவும் புலவனென்று கொள்ளற்குரியன போலும்.*

## தெய்வப் பெயர்கள்

*புலவர்க்குரிய பெயர்களில் இறையனார், உருத்திரன், கண்ணன், கந்தன், குமரன், சத்திநாதன், சாத்தன், தாமோதரன், தேவன், பது மன், பெருந்தேவனார், பேரெயின் முறுவலார், வெண்பூதி யென்பன தெய்வப் பெயர்களாகத் தோற்றுகின்றன. கந்தனென்பது கந்துடை நிலையில் வழிபடப்பெறும் கடவுளின் பெயர். சாத்தனென்பது ஐய னார் பெயர். பதுமனென்பது பிரமதேவன் பெயர். கண்ணன், தாமோதரனென்பன திருமால் பெயர்கள். குமரனென்பது முருக வேள் பெயர். இறையனார், உருத்திரன், சத்திநாதன், பெருந்தேவ*

னூர், பேரெயின் முறுவலார், வெண்பூதி யென்பன சிவபிரானைக் குறிக்கும் பெயர்கள். பெருந்தேவனென்பது மகாதேவனென்னுந் திருநாமத்தின் பொருளுடையது. பேரெயின் முறுவலாரென்பது திரிபுரங்களை முறுவலால் எரித்ததைக் குறிக்கும் பெயரென்றும், வெண்பூதியாரென்பது திருநீற்றை யணிந்ததைக் குறிப்பதென்றும் தோற்றுகின்றன.

## பிறபெயர்கள்

தெய்வப் பெயரையன்றிப் பூதத்தின் பெயரையும் பேயென்னும் பெயரையும் உடைய புலவர்களை இந்நூலால் அறிகின்றோம். முதலாழ்வார்களில் இருவர் பூதத்தாழ்வார் பேயாழ்வா ரென்னும் பெயரை யுடையாராக விளங்குதல் இங்கே கருதற்குரியது.

பாரதத்திற் காணப்படும் சல்லியனது பெயரை ஒரு புலவர் பூண்டுள்ளார். சாண்டிலியன், கார்க்கியரென்னும் முனிவர் பெயர்களைச் சிலர் கொண்டுள்ளனர்.

வேறு வகையான பெயர்கள் பல உள்ளன. பல பெயர்கள் இக்காலத்தாருக்கு விநோதத்தை உண்டாக்குவன. அவற்றிற்குரிய காரணத்தை இப்பொழுது அறிய இயலவில்லை.

உறுப்புக்குறை, சாதி, தொழில் முதலியவற்றோடு சார்த்திப் புலவர்களிற் சிலர் பெயர்கள் வழங்குவதை உற்று நோக்கும்போது அவற்றாலும் பிறவகையினாலும் அவர்களுடைய கல்விப் பெருமை குறையவில்லை யென்பதும் அவர்களைக் குறிக்கும் அடையாளமாகவே அத்தகைய முறை கொள்ளப்பட்டதென்பதும் புலனாகின்றன; எல்லாவற்றிலும் புலமையே தலைமை பெற்று விளங்கியதென்ற கருத்து உறுதியாகின்றது.

# பாடினோர் பெயரகராதி


அஞ்சியாந்தை, 294.
அண்டர்மகன் குறுவழுதி, 345.
*அணிலாடு முன்றிலார், 41.
அம்மூவனார், 49, 125, 163, 303, 306, 318, 327, 340, 351, 397, 401.
அரிசில்கிழார், 193.
*அழிசி நச்சாத்தனார், 271.
அள்ளூர் நன்முல்லையார், 32, 67, 68, 93, 96, 140, 157, 202, 237.
அறிவுடை நம்பி, 230.
*ஆசிரியன் பெருங்கண்ணன், 239.
ஆதிமந்தியார், 31.
*ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன், 184.
ஆலங்குடி வங்கனார், 8, 45.
ஆலத்தூர்கிழார், 112, 350.
இடைக்காடனார், 251.
*இருந்தையூர்க் கொற்றன் புலவன், 335.
*இளங்கீரந்தையார், 148.
இளங்கீரனார், 116.
*இளம் பூதனார், 334.
இறையனார், 2.
ஈழத்துப் பூதன் றேவன், 343.
*உகாய்க்குடிகிழார், 63.
*உருத்திரன், 274.
உரோடகத்துக்காரத்தன், 155.
உலோச்சனார், 175, 177, 205, 248.
*உழுந்தினைம் புலவன், 333.
*உறையன், 207.
*உறையூர்ச் சல்லியன் குமாரன், 309.
*உறையூர்ச் சிறுகந்தன், 257.
*உறையூர்ப் பல் காயனார், 374.
உறையூர் முதுகண்ணன் சாத்தனார், 133.
உறையூர் முதுகூத்தனார் (முதுகூற்றனார்), 353, 371.
*உறையூர் முதுகொற்றன், 221, 390.
*ஊன்பித்தை, 232.
*எயிற்றியனார், 286.
ஐயூர் முடவனார், 123, 206, 322.
ஒக்கூர்மாசாத்தியார், 126, 139, 186, 220, 275.
ஒரு சிறைப் பெரியனார், 272.
*ஓதஞானி, 227.
ஓதலாந்தையார், 12, 21, 329.
ஓரம்போகியார், 10, 70, 122, 127, 384.
*ஓரிற்பிச்சையார், 277.
ஓரேருழவனார், 131.
ஔவையார், 15, 23, 28, 29, 39, 43, 80, 91, 99, 102, 158, 183, 200, 364, 388.
*கங்குல் வெள்ளத்தார், 387.
*கச்சிப்பேட்டுக் காஞ்சிக்கொற்றன், 213, 216.
*கச்சிப்பேட்டு நன்னாகையார், 30, 172, 180, 192, 197, 287.
*கடம்பனூர்ச் சாண்டிலியன், 307.
கடியலூர் உருத்திரங் கண்ணனார், 352.
*கடுகு பெருந்தேவன், 255.
*கடுந்தோட்கரவீரன், 69.
*கடுவன் மள்ளன், 82.
*கண்ணன், 244.
*கணக்காயன் தத்தன், 304.
*கந்தக் கண்ணன், 94.
கபிலர், 13, 18, 25, 38, 42, 87, 95, 100, 106, 115, 121, 142, 153, 187, 198, 208, 225, 241, 246, 249, 264, 288, 291, 312, 355, 357, 361, 385.
கயமனார், 9, 356, 378, 396.
கருவூர்க் கதப்பிள்ளை, 64, 265, 380.
*கருவூர் கிழார், 170.
*கருவூர்ச் சேரமான் சாத்தன், 268.
*கருவூர்ப் பவுத்திரன், 162.
*கருவூரோதஞானி, 71.
*கல்பொரு சிறுநுரையார், 290.


* இந்நூலினாலன்றிப் பிறநூலினா லறியப்படாத புலவர்கள்.

கல்லாடனார், 260, 269.
*கவைமகன், 324.
கழார்க்கீரன் எயிற்றி (எயிற்றியன்), 35, 261, 330.
*கள்ளிலாத்திரையன், 293.
காக்கைபாடினியார் நச்செள்ளையார், 210.
*காமஞ்சேர் குளத்தார், 4.
*காலெறி கடிகையார், 267.
காவன்முல்லைப் பூதனார், 104, 211.
*காவிரிப்பூம்பட்டினத்துக்கந்தரத்தனார், 342.
காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார், 297.
*காவிரிப்பூம்பட்டினத்துச்சேந்தங் கண்ணன், 347. [252.
*கிடங்கிற்குலபதி நக்கண்ணன்,
*கிளிமங்கலங்கிழார் (கிள்ளி மங்கலங்கிழார்), 76, 110, 152, 181.
*குட்டுவன் கண்ணன், 179.
குடவாயிற் கீரத்தனார், 281, 369.
*குடவாயிற் கீரனக்கன், 79.
*குப்பைக் கோழியார், 305.
*குழற்றத்தன், 242.
*குறியிறையார், 394.
*குறுங்கீரன், 382.
குறுங்குடி மருதனார், 344.
குன்றியனார், 50, 51, 117, 238, 301, 336.
கூடலூர் கிழார், 166, 167, 214.
*கூவன் மைந்தன், 224.
*கூழிக்கொற்றன். 276.
*கொல்லன் அழிசி, 27, 138, 145,
*கொல்லிக் கண்ணன், 34. [240.
கொற்றனார், 218, 358.
கோக்குளமுற்றன், 98. [129, 147.
கோப்பெருஞ் சோழன், 20, 53,
*கோவத்தன், (கோவதத்தன்) 66,
கோவூர்கிழார், 65. [194.
*கோவேங்கைப் பெருங்கதவன்,
சத்திநாதனார், 119. [134.
*சாத்தன், 349.
சிறைக்குடி யாந்தையார், 56, 57, 62, 132, 168, 222, 273, 300.
*செம்புலப் பெயனீரார், 40.
*செய்திவள்ளுவன் பெருஞ்சாத்தன், 228.
*செல்லூர்க்கொற்றன், 363.
சேந்தம்பூதனார், 247.
*சேந்தன் கீரன், 311.
*சேரமானெந்தை, 22.
*தங்கால் முடக்கொல்லனார், 217.
*தாமோதரன், 92.
தாயங்கண்ணனார், 319
*திப்புத்தோளார், 1.
*தீன்மிதி நாகன், 111. [392.
தும்பிசேர்கீரனார், 61, 316, 320,
தூங்கலோரியார், 151, 295.
* தேவகுலத்தார், 3.
* தேரதரன், 195.
தொல்கபிலர், 14.
நக்கீரனார் (மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார்), 78, 105, 143, 161, 266, 280, 368.
நம்பிகுட்டுவன், 109, 243.
நரிவெரூஉத்தலையார், 5, 236.
* நன்னாகையார், 118, 325.
* நாகம் போத்தன், 282.
* நாமலார் மகன் இளங்கண்ணன், 250.
நெடும்பல்லியத்தை (நெடும்பல்லியத்தன்), 178, 203.
* நெடுவெண்ணிலவினார், 47.
* நெய்தற் காக்கியர், 55, 212. [383.
* படுமரத்து மோசி கீரனார், 33, 75,
* படுமரத்துமோசிக் கொற்றன்,
* பதடி வைகலார், 323. [376.
* பதுமனார், 6.
பரணர், 19, 24, 36, 60, 73, 89, 120, 128, 165, 199, 258, 259, 292, 298, 328, 393, 399.
* பரூஉ மோவாய்ப்பதுமன், 101.
பனம் பாரனார், 52. [270.
*பாண்டியன் பன்னாடு தந்தான்.
பாண்டியனேனாதி நெடுங்கண்ணன், 156.
* பாரகாபரன், 254. [கடவுள்.
பாரதம் பாடிய பெருந்தேவனார்,

பாலைபாடிய பெருங்கடுங்கோ, 16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398.
பூங்கண்ணன், 253.
பூங்கணுத்திரையார், 48, 171.
பூதத்தேவன் (பூதந்தேவன்), 285.
* பூதம் புல்லன், 190.
பெருங்கண்ணனார், 289, 310.
பெருங்குன்றூர்கிழார், 338.
* பெருஞ்சாத்தன், 263.
* பெருந்தோட்குறுஞ்சாத்தன், [308.
பெரும்பதுமனார், 7.
* பெரும்பாக்கன், 296.
பேயனார், 233, 359, 400.
* பேயார், 339.
பேரிசாத்தனார், 278, 314, 366.
பேரெயின் முறுவலார், 17.
* போதுக்கயத்துக்கீரந்தை, 337.
* பொன்மணியார், 391.
* பொன்னாகன், 114.
மடல்பாடிய மாதங்கீரனார், 182.
* மதுரைக்கடையத்தார் மகன் வெண்ணாகன், 223.
* மதுரைக் கண்டரதத்தன், 317.
* மதுரைக்கண்ணனார், 107.
* மதுரைக் கதக்கண்ணன், 88.
மதுரைக் காஞ்சிப்புலவன், 173.
* மதுரைக்கொல்லன்புல்லன், 373.
மதுரைச்சீத்தலைச்சாத்தனார், 154.
மதுரை நல்வெள்ளியார், 365.
* மதுரைப்பெருங்கொல்லன், 141.
* மதுரைமருதங்கிழார்மகன் இளம்போத்தன், 332. [279, 367.
மதுரைமருதனிளநாகனார், 77, 160,
மதுரை யளக்கர் ஞாழார் மகன் மள்ளன், 188, 215.
மதுரை யறுவை வாணிகன் இளவேட்டனார், 185. [றன், 144.
* மதுரையாசிரியன் கோடங்கொற்
மதுரை யீழத்துப்பூதன் றேவன், 189, 360. [பூதன், 90, 226.
மதுரை யெழுத்தாளன் சேந்தன்
* மதுரை வேளாதத்தன், 315.
* மள்ளனார், 72.
மாங்குடி கிழார், 302.
மாங்குடி மருதனார், 164.
* மாடலூர் கிழார், 150.
* மாதிரத்தன், 113.
* மாமலாடன், 46.
மாமூலனார், 11.
* மாயெண்டன், 235.
* மாலை மாறன், 245.
* மாவளத்தன், 348.
* மிளைக்கந்தன், 196.
மிளைகிழான் நல்வேட்டனார், 341.
* மிளைப்பெருங் கந்தன், 136, 204, [234.
மிளைவேள் தித்தன், 284.
* மீனெறி தூண்டிலார், 54.
மோசி கீரனார், 59, 84.
* மோசி கொற்றன், 377.
* மோதாசனார், 229.
* வடமவண்ணக்கன், 81. [159.
வடமவண்ணக்கன் பேரிசாத்தனார்,
* வடமன் தாமோதரன், 85.
* வருமுலையாரித்தி, 176.
* வாடாப்பிரமந்தன், 331.
* வாயிலான் தேவன், 103, 108.
* வாயிலிளங் கண்ணன், 346.
* விட்டகுதிரையார், 74.
* வில்லக விரலினார், 370.
விற்றூற்று மூதெயினனார், 372.
* வெண்கொற்றன், 86.
* வெண்பூதன், 83.
* வெண்பூதியார், 97, 174.
* வெண்மணிப்பூதி, 299.
வெள்ளிவீதியார், 26, 44, 58, 130, 146, 149, 169, 386.
* வெள்ளூர் கிழார் மகனார் வெண்பூதியார், 219.
* வேட்டகண்ணன், 389. [தன், 362.
* வேம்பற்றூர்க் கண்ணன் கூத்
ஆசிரியர் பெயர் இல்லாத பாட்டுக்கள் :—191, 201, 256, 313, 321, 326, 375, 379, 381, 395.

# இப்பதிப்பில் எடுத்தாண்ட நூல்கள்



அகநானூறு, அகப்பொருள் விளக்கம், அஞ்ஞவதைப் பரணி, அம்பிகாபதி கோவை, அறநெறிச்சாரம், அறப்பளீசுர சதகம், அற்புதத் திருவந்தாதி, ஆதியுலா, இலக்கணக்கொத்து, இலக்கண விளக்கம், இறையனாரகப் பொருள், இன்னாநாற்பது, இனியது நாற்பது, ஈங்கோய்மலை எழுபது, உத்தர காண்டம் (இராமா.), ஐங்குறுநூறு, ஐந்திணையெழுபது, ஐந்திணையைம்பது, கடம்பவனபுராணம், கந்தரனுபூதி, கம்பராமாயணம், கல்லாடம், கலித்தொகை, களவழி நாற்பது, களவியற்காரிகை, கார்நாற்பது, காளத்திநாதர் கட்டளைக் கலிப்பா, கிளவித் தெளிவு, கிளவி மாலை, குணநாற்பது, குறிஞ்சிப்பாட்டு, கூர்மபுராணம், கைந்நிலை, கைலைபாதி காளத்திபாதியந்தாதி, கோயில் நான்மணிமாலை, சித்திரமடல், சிதம்பரச்செய்யுட்கோவை, சிலப்பதிகாரம், சிலாசாஸனங்கள், சிற்றட்டகம், சிறிய திருமடல், சிறுபஞ்சமூலம், சிறுபாணாற்றுப்படை, சீகாளத்திப் புராணம், சீவகசிந்தாமணி, சூடாமணி நிகண்டு, சூளாமணி, ஞானாமிருதம், தக்கயாகப்பரணி, தகடூர் யாத்திரை, தஞ்சைவாணன் கோவை, தண்டியலங்காரம், தணிகைப் புராணம், தமிழ் நாவலர்சரிதை, தமிழ்நெறிவிளக்கம், தமிழ் விடுதூது, தனிப்பாடல், திணைமாலைநூற்றைம்பது, திணைமொழியைம்பது, திரிகடுகம், திருக்குற்றாலக் குறவஞ்சி, திருக்குறள், திருச்சிற்றம்பலக்கோவையார், திருச்செந்தூர்த்தலபுராணம், திருநெடுந்தாண்டகம், திருப்பல்லாண்டு (திவ்.), திருப்பாவை (திவ்.), திருமயிலையமகஅந்தாதி, திருமுருகாற்றுப்படை, திருவரங்கக்கலம்பகம், திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, திருவள்ளுவமாலை, திருவாசகம், திருவாய்மொழி, திருவாரூர் நான்மணிமாலை, திருவாரூர் மும்மணிக்கோவை, திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், திருவிசைப்பா, திருவிருத்தம், திருவெங்கைக்கோவை, திருவெங்கையுலா, திருவேகம்பமாலை, திருவேகம்பர் திருவந்தாதி, திவாகரம், தேவாரம், தொல்காப்பியம், தொல்காப்பியமுதற்சூத்திர விருத்தி, நளவெண்பா, நற்றிணை, நன்னூல், நன்னெறி, நாச்சியார் திருமொழி, நாலடியார், நான்மணிக்கடிகை, நீதிநெறி விளக்கம், நீலகேசி, நெடுநல்வாடை, நேமிநாதம், பட்டினப்பாலை, பதிற்றுப்பத்து, பரஞ்சோதி முனிவர் திருவிளையாடல், பரிபாடல், பழம்பாடல், பழமொழி, பாசவதைப்பரணி, பாண்டிக் கோவை, பிரபுலிங்கலீலை, புறநானூறு, புறப்பொருள்வெண்பாமாலை, பெரிய திருமடல், பெரிய திருமொழி, பெரியபுராணம், பெரியாழ்வார் திருமொழி, பெருங்கதை, பெரும்பாணாற்றுப்படை, பெருமாள் திருமொழி, பொருநராற்றுப்படை, மணிமேகலை, மதுரைக் காஞ்சி, மலைபடுகடாம், மாறன் அலங்காரம், மீனாட்சியம்மைகுறம், முத்தொள்ளாயிரம், முதற்றிருவந்தாதி, முல்லைப்பாட்டு, மோகவதைப்பரணி, யாப்பருங்கலக்காரிகை, யாப்பருங்கல விருத்தி, வளையாபதி, வில்லிபுத்தூராழ்வார் பாரதம், வீரசோழியம்.

# * பிரதி பேதங்கள்



கட 6. ஏமம் வைகல்.

உ. கருத்து : இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தவழித் தலைமகன் தலைமகளை, இயற்கைப் புணர்ச்சிக்கண் இடையீடுபெட்டு நின்ற.

ந : 3. குறுஞ்சிப்பூ.

ரு : 2. மென்னிழற் புன்னை. 3. துவலை. எ : 2. மேவுந.

அ : 1. கழனி மரத்து, கழனிமாஅத்து.

கூ : 1. யாயாகியளோ. 2. தமியள்வைகிய. 3. மெய்சாயுநளே.

கo. ஆசிரியர் : ஓரம்போதியார்.

கக : 1. நெகிழ ; நாளும். 2. பாடிலகலுழுமங்கண்ணொடு. 4. எழுகினி ; வாழிநெஞ்சேமுனுவது. 7. மொழிபெயர் தேத்தாராயினும். 8. வழிவிடல். கஉ : 2. உலைக்கனலன்ன.

கந : 1. கெழீஇய. 3. ஒருத்தலைச் சேக்கும். 5. பசலையான்றன. கருத்து : கூட்டங்கூட்டி.

கச : 1. அமிர்துபொதி. 4-5. மறுகி நல்லோள். 6. கூறுகயாஅநாணுகம்.

கரு : 6. தொடுவளை முன்கை நம்மடந்தை. கசு : 1. கணவர்தம்.

கஅ : 1. வேலிக்கோடல் பலவின்.

ககூ : 3. வாழியோ. 5. யாருளர் நமக்கே, யாரே நினக்கே.

உக. கருத்து : வருங்கார் காலத்தை...... தேறனென்றறிக.

உஉ : 3. வலஞ்சுழிமராஅத்து. 5. தேனூரொண்ணுதல். கருத்து: தோழிவற்புறுத்தது.

உச : 5. குழையகக் கோட்டியோ. 6. காதலர்க் கல்லென்றவ்வே, காதலர்க் கவவென்றவே, நாம்வெங் காதலர்க் கல்லென்றவ்வே.

உரு : 2. தானவன் பொய்ப்பின்.

உசு : 2. மேக்கெழும் பெருஞ்சினை. 6. முத்துநிறை யொத்த முள்ளெயிற்று, முள்ளெயிற்றுவர் வாய். 7-8. தந்தை கடுவனும். கருத்து: வேறுபாடு கண்டார் எதனுனெயிற்றென்று.

உஎ : 4. பசலையுணீஇய. 5. அல்குலெம் மாமைக்கவினே.

உஅ : 1. மூட்டுவேன்கொல். 2. ஓரேயானும்.

உகூ : 2. பெயனீர்க்கேற்றன. கருத்து: நோக்கிக் கூறுகின்றான்.

---

* இந்நூலை அச்சிட்டு வருங்காலத்தில் வேறு ஆராய்ச்சியால் கிடைத்த பிரதிபேதங்கள் இங்கே கொடுக்கப்படுகின்றன.

௩0 : 1. தோழியகலநற். 2. மெய்யுறமரீஇ. 3. வரத்தகை கனூழன் மருட்ட. 6. அளியன். கருத்து : ஆற்றியிராதாற்ருதாகின்ற தென் ; நலிந்ததெனக் கூறுகின்ருள். ௩க : 5. ஞெகிழ்த்த.

௩உ : 2. விடியலுமின்றிப். 5. தோற்றெனை. கருத்து: கூறுகின்றது.

௩௩ : 1. இனமாணுக்கன். 2. என்னகொல்லோ. ஆசிரியர் : படிமத்து மோசிகீரன், படுமத்து மோசிகீரன்.

௩௪ : 1 ஒறுப்பவொல்லார். 4. முனுஅது, யானை. 4-5. கானலம் பெருந்தொட்டமள்ளர்.

௩௫ : 2. சூன்முதிர்பன்ன. 5. வாடையு நம்பிரிந்திசினோர்க்கு. ஆசிரியர் : கிழார்க்கீரனெயிற்றி.

௩௬ : 1. மாணமாக்கொடி. 3. நீயலேன், நீயல்லென், நீயலன். 5. தவாஅ வஞ்சினம். ௩எ : 1. நல்கினு நல்குவர்.

௩௮ : 1. அறையின் முட்டை. 6. உள்ளாதகற்றச்

௩௯ : 1. பொங்கர் போந்தெனை. 3. மலையிடையருஞ்சுரம்.

கருத்து : யாங்கனம், தனதாராமை மிகுதி.

௪0 : 1. யாயும் யாயுமாராகியரோ. 3. நானு நீயும். கருத்து: கூறுகின்றது.

௪௩ : 3. இருபெயராண்மை. 5. அலமறுக்குறுமே. கருத்து: கிழத்தி உரைத்தது. ௪௪ : 1. என் கண்ணே.

௪௫ : 2. மகளிர் மரீஇச்சென்ற, மகளிர்க்காணிய சென்ற. 4. மறுவருஞ் சிறுவர் தாயே.

௪௬ : 3-4. மன்ற, தெருவின். 4. எருவை நுண்டாது.

௪௮ : 6. நசையாடு பண்பின்.

௪௯ : 2. மாணீர்ச். 5. நின்னெஞ்சினேர் பவளே. கருத்து : நீங்கிய வழியப்பள்ளி. ௫0. ஆசிரியர் : குன்றியாள்.

௫க : 6. அவனெடு மொழிமோ. ஆசிரியர் : குன்றியன்.

௫உ : 1. ஆர்களி மிதித்த. 2. கூரசைத் தனையையாய், சூரசைந் தனையையாய். 4. விரிந்திலங்கு வெண்பல். 5. பரந்தனெனல்லனே. கருத்து: முன்னுளில் தான் அறத்தொடு நின்றமை.

௫௩ : 1. மகிழ்நனைநறிய. 2. நனைமுது புன்கின். 6. நேரிழை முன்கை. ௫௫ : 2. பொங்கு பிதிர்த்திவலை; தைஇய.

௫௬ : 1. வேட்டைச் செந்நாய். 2. குழவி.

௫எ : 1. படினுமியாண்டு. 4. போகதில்ல.

௫௮ : 2. நிறுத்தலாற்றினே. 3. வெயில்பயின் மருங்கின். 6. நொண்டுகொளற், மொண்டுகொளற்.

௫௯ : 1. பரதவர் கோமான். 2. அறலைக்குன்றத்து, அதலைக்குன்றத்து. 4. நறுநுத ருவெனின்.

௬௦: 1. கூதாளி; பருவரை. 2. இருகை, இருங்கை. 3. உட்குழி சிறு குடை. 4. நீட்டுபு நக்கி, உருட்டுபு நக்கி. ௬௧: 6. உற்றனஞ்.

௬௨: 2. நாறிணர்க்குவளையோ டிடையிடுபு விரைஇ. 5. முயங்குக வின்னே, முயங்குவ மினியே.

௬௩. ஆசிரியர்: உகாய்க்குடிக்கிழார்.

௬௪: 3. மடக்கட் குழவி யெனவந் தனரே. 4 நோவே மாகுதல். ஆசிரியர்: கருவூர்க் கந்தப்பிள்ளைச் சாத்தனார்.

௬௫: 2. மருவந்து. 3. களிதரு தண்கார். 4-5. வருந்தி, நோநொந் துறைய விருந்தினரோ. 5. விருந்திரோ, இருந்தன்று லெனவே. கருத்து: கண்டெடார்ழிந்த தலைமகள்.

௬௬: 1. மடவைமன்ற. 4. கொடியிணர் பூத்த.

௬௭: 3. புது நூனுழைப்பான். கருத்து: ஆற்றாத தலைமகள்.

௬௮: 3. அரும்பனியற்சிரம்.

௬௯: 2. கைமை. 4. ஒங்குவரை நடுநாட் பாய்ந்து. 6. வருந்துகம்.

௭௦: 5. அளைமெல்லியள் யாமுயங்குங்காலே. ஆசிரியர்: ஓரம் போதியார். ௭௧: 4. கானவ னல்குறூஉ மகளே.

௭௩: 1. வேயையவர்நீ, வெய்யை யேநீ. 3 நாட்டிற் போக்கிய. கருத்து: இரவுக்குறி நேர்ந்தது றவும்.

௭௫: 3. சோலைபடியும். பூஞ்சுனை படியும். 4. பொன்வலி பாடலி, பொன்மலி பாடினி. ஆசிரியர்: படிமத்துமோசிகீரனார்.

௭௬: 2. என்பநங்கல்வரை, என்ப வோங்கல்வெற்பர். 5. வாடை தூங்கும். ௭௯: 7. ஒல்லோமென்ற தப்பற் சொல்லா தேகல்.

௮௦: 2. விருத்தி விரும்பி, விருந்தினர் விரும்பி. 3. தானமஃது. கிளையொடு நுகர்கதன். கருத்து: பாங்காயினள் கேட்ப.

௮௧: 2. பல்கிளையொருசிறைப். 3. இழந்து புலம்பும். 5. புலவு திரைக். 7. பெண்ணையஞ்சிறு நல்லூரே. ஆசிரியர்: வடமவண்ணக் கன் பேரிசாத்தன். ௮௨: 3. தோழி காழகிற்.

௮௩: 1. அமிர்தம். கருத்து: உணர்த்திய செவிலியை.

௮௫: 3. இழையர். கருத்து: தோழிவாயின் மறுத்தது.

௮௬: 5. ஆனுளம் புழம்பு தொறுலம்பும்.

௮௭: 5. ஞெகிழிய ஞெகிழ்ந்தன்று.

௮௮: 3. தொன்முரண் கொல்லும்.

௮௯: 1. பாவடி புழல. 7. பாடி நன்குறினே.

௯௦: 3. மருங்குன் மாமழை. 4. பலவுக் கனியினை வரை. 5. ண்டுறை தரூஉம். 7. சால்பின்றன்றே.

௯௧: 1. அரிப்பவர்ப் பரம்பின் 2. இலஞ்சி.

௯௨: 3. மராத்த, மாத்த. 5. இரைகொண்டவையும்.

கூ௪ : 4. இன்னுர் தமியர் கேட்டிற். 6. மலைத்தக்க.

கூ௫ : 3. குறமகள். கூ௮ : 2. துன்னர்ச்சென்று, துன்னுச் சென்று.

கூகூ : 4. மராத்தோடுதோய், கோடுகொய்; மலிர்சிமை, மலிர் சிறை. கருத்து : நினைத்து மறியீரோ.

க00 : 2. பசுமரல் கடுக்கும் 3. காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி.

க0உ : 2. வருத்தின், வருந்தின். கருத்து : எனக் கூறுநின்றது.

க0௪ : 2. தன் சிதர் மறைப்ப. 5. பலவாகவ்வே.

க0௫ : 1. புனவன்றுடவைப். 2. கடியொண். 4. வேர்த்துற்று

க0௬ : 1. புல் வீழாற்றிக், புல் வீழித்திக். 3. நீநின் னெஞ்சத்துக்

க0௭ : 1. ஒண்பூவென்னத். கருத்து : பொருள் முடித்து வந்த.

க0௮ : 4. செவ்வறன் செவ்வி. 5. உய்வன் போல்வல்.

க0௯ : 2. புணரி யிஃதிரை, யுணரியிகுதிரை; மிகுதிரை. 3. புண ரியவிந்த ஞான்றும்.

கக0: 2-3. நீர்நிலைப். 3-4. புதன்மலி யொண்பொறி. 7. இன்னு வெறிதரும். கருத்து: வற்புறுத்தியது. ஆசிரியர் : கிள்ளி மங்கலங்கிழார்

ககக : 6-7. நம், மல்லோர் பெருநகை.

ககஉ : 3. நிலம்படர். 4. நாளுடை யொசியல்.

ககங : 2. சேயத்து மன்று. 3. அல்லதியாவரும். 5. கூழைக் கேர் மணங்குறுகஞ், கூழைக் கேரு மணங்குணர்கஞ். கருத்து : குறிப் பிறைற் குறிப்பிடம் பொய்த்து. ஆசிரியர் : மாநீர்த்தன்.

கக௪: 3. வைகலும். 4.ஆரால் அருந்திய வயிற்ற. 5. என் மதிநுதலே

கக௫ : 1. பெருநன்றுற்றிய, பெருநன் றுன்றிற். 2-3. புரிமா ணுடு புலவி. 3-4. இல கவரப்பாடமை பொழுகிய.

கக௬ : 3. அறலார்ந்தன்ன.

கக௭ : 3. வேரளைச் செலீஇ. 4. கயிறரி பெருந் நீரத்தழுந்துர் துறைவன், பெருந்திறத் தழுந்துறைவன்.

கக௮ : 4. வருவிருளிரோ. கககூ : 3. இளையமுளை.

கஉக : 1. மெய்யே. 4. கேட்டொடு. கருத்து: சென்றுண்டவனைக்

கஉஉ : 1. பைங்கார்க் கொக்கின். ஆசிரியர் : ஓரம் போதியார்.

கஉங : 2. நிலவு குவித்தன்ன. 4. இன்னுவாரார்.

கஉ௪ : 1. உமணர்ச் சேர்ந்து. 2-3. பெருங்காட்டின்னு. 4. தமி யேற்கு. கஉ௫ : 2. எவணரோ வென்ப.

கஉ௭ : 2. வான் முகை வெருளும். 3. கழனிய படப்பை.

கஉ௮ : 2. திண்டேோட் பொறையன்.

கஉகூ : 1. ஏமமுறு. 4. பகுவெண்டிங்கள். 5. விளங்குந்திருநுதல்

கங0 : 2. முந்நீராவிற் செல்லார்.

கஙக : 2. பேரமைக்கண்ணி. 3. நெடுஞ்சேணுருடை.

கஙஉ : 5. தாய்காண் விரும்பினன்ன. 6. சாஅ நோக்கினளே.

கஙங : 4. உரஞ்செத்து முள்ளேன். 3-4 ஒலித்தாங்கெண்ணுரஞ் 5. நலம்புத்துண்ட.

கஙச : 2. நன்று மற்றில்லை, நன்றுமாறில்ல. 4. பூவிடை யலங்கு சினை. 5. கல்பொருதிலங்கும்.

கஙரு : 4. அழாற்றேழி. கஙசு : 4. மென்ருள் பதம் போல.

கஙஎ : 1. புலம்பல். 4. செலாஅது தகவே.

கஙஅ : 2. எழினும்பர்; உம்பரம்.

கஙகூ : 3. புகுவிடன். 4. கிளிப்பயிர்ந்தாஅங்கு, கிளைப்பயிர்ந் தாஅங்கு. கசO : 2. புட்கொளப் போதும். 4. யானமுங்கிய வெவ்வம்.

கசக : 1. விளைதினை கடியாச், விழைதினை கடியச். 2. செல்கின் ரேளே. 6. படுமதம். 8. நாட நீ வாரலோ.

கசஉ : 1. தொடலைதைஇயப். 5. பின்னுழந்தன்னுழையதுவே.

கசங : 2. பழமலை நாடன். 6. தூங்குதற்கு.

கசச : 1. கழியாகாவி, கழியிற் காவி. 5. பாலலாற்படுப்ப. 7. மலைநாடே. கசரு : 1. சிறுகுடிக். 4. உறைநரொடு சார்வாத்.

கசசு : 2. புணர்பவர்.

கசஎ : 2. மயிரொடு வொழுகிய. 4. எழுப்புதிகனவே.

கசஅ : 1. சீரூஅர்ச் சீரடிப். 4. குறுந்தோடு, அலமரும்.

கசகூ : 2. சனி நீடமர்ந்தன்று, நனிநீட்டமர்ந்தன்று. 3-4. சிறு சிறைத் தீம்புனல்.

கருO : 2. வாஅன்மீனின். 4. உண்ணேய் மிகுமினிமல்கும்.

கருக : 1. வங்கர் கடந்த. 2. எழாலுற விழுந்தெனக். 3 குறும்பல மிகவும்.

கருஉ. **கருத்து:** வரைவு நீட்டியவழி. **ஆசிரியர்:** கழிமங்கலங் கிழார், கிள்ளி மங்கலங்கிழார். கருங : 5. சிரானிளிடை.

கருச : 5. பொரிக்காற் கள்ளி. கருரு : 7. தேர்வருமென்முன்.

கருசு : 3. தாழ்மண்டிலத்து. 4. படிமவுண்டி.

கருஎ : 2. துட்கென்றற்றென். 4. வான்போல்.

கருஅ : 2. கழறுகுரல் செலீஇ. 6. துணையிலாளர் பெண்டிரிஃ தெவனே.

கருகூ ; 1. அல்குலுருங்கல் செல்லா. 3. வீங்கிய. 4. கொம்மை வருமுலை.

கசுO : 2. இரவினன்ன, அரவினன்ன. 3. ஓங்குசினைக்கட்சி.

கசுக : 2. வீசுந்தன்றலை. 7. நின்றேனே.

கசுஉ : 1. கார்ப்புனந்தந்த. 2. பல்லாபுகுதரும் புல்லென் மாலை.

கசுங : 1. கடலேயூழி. கசுச : 1. கனைக்கோட்டு. 2. தேங்கொக்கு.

கசுரு : 2. விழைத்ததன். 4. பெரும்புயற்றலை. கருத்து : பெயர்ந்த தங்கூடலுறு நெஞ்சிற்கு.

கசுசு : 2. பெயர்த்து. 3 நன்றுமன்மாநகை, நன்றுமன்மாந்தை.

கசுஎ : 2. கழாஅதுரீஇ. 3. குய்புகை கமழ. கருத்து : கடிநகர் சென்ற.

கசுஅ : 2. பசுங்கொடைப் பலவுடன். 5. சாயிறை யணைத்தோள்.

கசுகூ : 1. சுரஞ்செல்லியானை. 2. மற்றியான்.

கஎ0 : 5. நன்கறிந்தனன் யானே.

கஎக : 4. நொதுமலர்த்தலையே. கருத்து : தலைமகள் சொல்லியது.

கஎங : 3 - 4. நானப் பழிபடருண்ணோய், நாணடப்பழி.

கஎச : 2. கவைமுடக்கள்ளி; கடிநொடி. 4. அரிய வெண்ணூர்.

கஎரு : 1. தேணைசைஇயப்பல. 7. அமைத்தாங்கமைக.

கஎசு : 2. பனிமொழி. 6. வேறு புலநாட்டுப் பெய்த, புலநன் னூட்டுப். கஎஎ : 3. மன்றற்பெண்ணை.

கஎஅ : 2. எங்கெழிின் மலர்ந்த; திரடாள். 3. ஆம்பல் குற்றுநர் 6. யானுமக்கு. 7. சோன்றநீர். கருத்து : களவு கற்றொழுகலாற்றுமை.

கஎகூ : 3. சொல்லலஇய. 5. குவையுடைப் பசுங்கிளை.

கஅ0 : 1. பழூப்பல். 3. அறைமடிக் கரும்பின். 4. வைதலொரு இளை. 5. எயினர்கொல்லோ.

கஅக : 5. பாஅற்பெய் பைம்பயிர். 7. பெருமுதிர் பெண்டிர்.

கஅஉ : 7. மெலிந்திலளாம். கஅங : 7. கானகவைப்பிற்.

கஅச : 3. அதர்ப்பட்டு. 4. ஆண்டொழிந்தன்றென் மாண்டகை ஒழிந்ததன்றென். 7. காணலானே.

கஅரு : 2-3. தொடி நெகிழ்த்து. கஅசு : 1. ஆர்கலியாற்றொடு

கஅஎ : 1. செல்வரை. 4. பலலினும் வலியன்.

கஅஅ : 2. தகைமுற்றினமே.

கஅகூ : 5. காலையிற் செலீஇ மாலையெய்தி. 7. அடைந்து சா குதுமே. கருத்து : பட்டிடத்துத்.

ககூ0 : 5. வாவுரு முரறும். 7. தொழுவத் தெழுமணிக்குரலே

ஆசிரியர் : பூதம் புலவன். ககூக : 7. என்குவம்.

ககூஉ : கருத்து : வன்பொறை.

ககூங : 2. இட்டுவர்ச்சுனைய பருவாய்த்தட்டைப். 5. மன்னெ தோளே. ஆசிரியர் : அழிசிற் கிழார்.

ககூச : 1-2. மின்னுவானேயிரங்கு, மின்னுவரலேயிரங்கு.

ககூரு : 2. எழுதகு. 5. தைவளைவளி; மெய்பாய்ந்தூதா. 6. செய் யறுபாவை. ககூசு : 6. ஐயவவற்று லன்பிலபாலே.

ககூஅ : 1. மாவுங் கொன்ற. 2. கருப்புமருள்.

உ00 : 2. வீசும் வளிகலந்து, வீழும் வீசுமந்து.

உ0க : 1. மயிலியலாட்டி, 4. மாந்தியல்லது. 5. மூங்கிலிற் றூங்கும், 6. ஓங்கியசாரல்.

உ0உ : 4. செய்தியல் காதலர். 5. செய்யின் ; நோமே நெஞ்சே.

உ0ங : 3. இருந்து. 4. கடவுணணிய. 5. வரீஇயிரெழுகு ; ஒரீஇயினன். 6. பரியலெமன்யாம்.

உ0ச : 1. என்பர். 4. கைவந்தாங்கு.

உ0ரு : 1. கருவிப் பெயன்மழை. உ0சு : 2. குன்றுமின்ன.

உ0எ : 1. செப்பினெஞ் செலினே, செப்பி நாஞ்செலினே ; சொலினே. 3. புலம்பு கொண்டவ்விளி. 5. கல்வரை பலாது ; பேஎர் பட்ட தொல்வழங்கு ; தேர்வழங்கு.

உ0அ : 1. என்றேனலவென். 2. பொருகளிறு தமித்த நெறி தாள் வேங்கை. 4. நின்றுகொய் மலையகநாடனொடு.

உ0கூ. **கருத்து :** பொருண்முற்றி மறுதரும். **ஆசிரியர் :** பாலை பாடிய பெருங்கோ.

உக0 : 6. விரைந்துவரக் கரைந்த. **கருத்து :** ஆற்றுவித்தாயென் றூர்க்கு.

உகக : 3-4. எஞ்சா, றீந்த. 4. மராஅந்தொங்கல் வஞ்சினே.

உகஉ : 1. கொடுஞ்சினை நெடுநேர்தேர். 3. கானல்வந்து.

உகங : 2. கவைத்தலை முதுபோத்து. 3. இறைஞ்சிப் பரூஉப் பெருந்தாளால். 5. தெறித்து நகை மரபிற். 6. வெயிற் கழிக்கும்.

உகரு : 1. படரும் பைப்பையா ; பையப்பயப். **ஆசிரியர் :** மதுரை யளக்கர் ஞாழார் மள்ளர். உகசு : 6 பெய்யு முழங்கும்.

உகஎ : 1. தினைக்கிளி கடிதெனிற். 2. வருதலுணூறும். 4. கூறிய வினைத்தற்கு. 6. வைதேஎயகமயானே. **ஆசிரியர் :** முடிக்கோலவனார்.

உகஅ : 2. கைநூல் யாவாமற். 3. புள்ளுமோராமல் **ஆசிரியர் :** கொறன.

உககூ : 2. நாஅர் நெஞ்சத். **ஆசிரியர் :** வெள்ளூர்கிழார் வங்கனார் வெண்பூதியார். உஉ0 : 1. பழமழை கலித்த.

உஉக **ஆசிரியர் :** முதுகூற்றன்.

உஉஉ : 1. தலைப்புணை கொளினே. 2. கடைப்புணை கொளினே.

உஉங : 2. என்றி யென்றிவள். 6. அன்னையன் றேம்பிய.

உஉச : **கருத்து :** கிழவி யுரைத்தது.

உஉரு : 2. திணைபிடி ; பெருங்கணுடை. 3. கெட்டிடத்துலந்த. 5. ீன்றி மறந்தமையாயின். 7. உரியவானினக்கே. **கருத்து :** வைத்துப்பிரி வார்க்கு. உஉஅ : 2. குருகு குளிரிடத்தின். 3. குடிகுன்றிற்.

உஉகூ : 2. புன்றலையோரி. 4. உறுப்ப. 6. பிணையலன்னவர். 7. ீனை மகிழியற்கை.

உ௩0: 4. றுடையன் கொல்லோ. 5. வழங்கு நீரதத்தவச்.

உ௩க: 1. ஒராவாழினும், ஒருஉ வாழினும். 4. நாணிட.

உ௩உ: 4. யானை பொளித்துண்டு.

உ௩௩: 4. கானெதிர் புறவினதுவே யுணர்ந்தோர்க்கு.

உ௩௪: 2. எல்விறுபொழுதின்.

உ௩௫: 1. வாழியவாடை. 2. தூங்கு வெள்ளருவி. 3. கல்லுயரண்ணியதுவே. கருத்து: வாடைக்கணுரைப்பானுய்ப்.

உ௩௬. ஆசிரியர்: நரிவெருத்தலையார். உ௩௭: 5. முழங்குவலன்

உ௩௮: 2. வாம்பணைத். கருத்து: மறுதந்து.

உ௩௯: 2. விடுநாளுண்டோ.

உ௪0: 2. ஒளிவிடுபணைமலர். 3. வெருகுப்பல். 4-5. நோயோர்க் கண்டிசின். 6. கலத்திற்றேற்றி. ஆசிரியர்: கொல்லனழுசி.

உ௪க: 1. தாங்கலம். 2. கெழுதகைமையினன். 4. மலர்ப்பதம்.

உ௪உ: 1. கானக்கோழிக். 2. ஒண்பொறி.

உ௪௩: 2. அன்னவெண்பூக். 4. புள்ளுமிழ். 5. படிகியரென்.

உ௪௪: 3. கேட்டனெம். கருத்து: தாம் காவன் மிகுதியால் இற்றை ஞான்று; கூடவரிதென. உ௪௫: 4. மாலைநாட்டு.

உ௪௬: 2. மயக்கிய. 3. கழித்துழவும்; பாணுணீத்தோர். 5. அலைக்குமன்ன. 8. தாயரொ டுகற்பாலோரே.

உ௪௭: 1. அணிப்புகூஉம். 5. யாஅமென்சினை.

உ௪௮: 1. அதுவரவன்மையோ. 5. அடம்பு. 7. பெறிய கூறி.

உ௪௯: 3. சாரலலர் நாட்டுக்.

உ௫0: 2. இரலைமான். 4. கமொகடவுமதி. கருத்து: பாங்கற் குரைத்தது. ஆசிரியர்: இளங்கணன்.

உ௫க: 1. மடவரல் வாழி. 2. காலைமாரி. கருத்து: வற்புறுத்தது.

உ௫உ: 7. முன்னர்நாளும். கருத்து: தீயன கடந்து.

உ௫௩: 3. பூச்சோரணையிற்.

உ௫௪: 4. துயில்வர மறந்தனர். 5. பயிலிருங்கதுப்பிற். ஆசிரியர்: பாரகாபான்.

உ௫௫: 3. வாங்கி யியங்கு நடை. 7. பொருட் பிணிப்போதிய.

உ௫௬: 2. பிணையொடு மாந்த. 3. கான்பின்பட. 8. தெரியிழை கண்ணே.

உ௫௮: 1. வாரலோ வாரலெஞ்சேரி. 2. பெருமாகாவிரி. 5. அரியரிலம்புக விளங்கோட்டு வேட்டை.

உ௫௯: 6-7. வாய்போலப் பொய்ம்மொழி. 8. நின்னுயிர் நானே.

உ௬0: 2. வாய் ஞெகிழ்ந்தனவே. 6. வழைமலரடுக்கத்து. 7. கன்றிலேரா.

உசுக: 1. படுமழை. 5. பொழுதினுணு மென்கண். 8. விழுமந் தானே. ஆசிரியர்: கிழார்க்கீரனெயிற்றி.

உசுஉ: 3. இருக்கத் தன் மனையே யானே. கருத்து: உடன்போக்கு நேர்ந்த தோழிக்குக் கிழத்தி உடன்போக்கு உணர்த்தியது.

உசுரு: 4. தெய்வம் பலவுடன். 8. நாமிகற் படவே. கருத்து: இப் பாட்டடன்னே.

உசுச: 1. கான்யாற்றிடுகரை, கான்யாற்றிருங்கரை.

உசுஎ. கருத்து: நாமும் பொருடருதும்.

உசுஅ: ஆசிரியர்: கருவூர்ச் சேரமான் சிரத்தன்.

உசுகூ: 1. துணைவர சாவாது, புனையரியசாவாது.

உஎ0: 2. வீழ்முறை. 4. பெய்கினி, பெய்யினி.

உஎஉ: 4. நேர்பட நகைஇச். 8. நாறிரு......நுதற்கொடிச்சி.

உஎரு: 1. புதுமுகை தயங்க. 2. பெருங்காட்டுள்ளுறும், பெருங் காடுள்ளுறும். 8. நாமுளெமாகப்.

உஎச: 8. ஆகமுழக்கினஞ் செலினே. உஎ௫: 3. எறுடை யினத்தது.

உஎசு: 1. யாவைதையும். 4. அறிதலுமறியாது. 3-4. தொய்யின் மிகுதி காப்போரறியார். 6. கடவினியாங்காவது. கருத்து: தலைமகன் கூறியது. உஎஎ: 6. கடைபெயல் வாடை.

உஎஅ: 1. உறுவளியுள்ளியவந்தளிர். 5-6. கீழிருந், தொப்பன வொப்பன. 7. பார்ப்படை மந்திய.

உஎகூ: 5. மழைகெழுமறைந்த. 7. அரும்பல் குன்றம்.

உஅஉ: 3. நன்மறி. 8. என்பர்கொலவரே.

உஅரு: 2. இழிவெனச். 3. சொல்லிவண்மை.

உஅச: 3. காந்தள் வீழும். 4. அவலனுயினும். 6. வாள்வெள் ளருவி.

உஅ௫: 5. பேடையொடு. 6-7. றோமைத்தலை, கின்றோவமைத் தலை. 8. பருந்திருந்துயக்கும். கருத்து: வன்பொறை எதிரழிந்து.

உஅசு: 1. உள்ளிற் காண்பென். 2. அமுதமூறும். 3. மழைபோற் கூந்தல். உஅஎ. கருத்து: வேறுபட்ட கிழத்தி.

உஅஅ: 2. குரங்கொருங்கிருக்கும். 3. இனத்தியன்ற.

உகூ0: 2. அனைய மதுகையர், எனைமதுகையர். 6. இல்லாகும்மே.

உகூக: 1. சுடும்புனமருங்கிற். 3. இசைஇயின்னிசையாய். 8. மலர் போன்றவ்வே. உகூஉ: 1. பொன்னுதலரிவை.

உகூரு: 2. வஞ்சியங் குறுங்காய்.

உகூச: 2. தழுஉவணி. 6. துயவுக்கோட்டசைத்த.

உகூ௫: 1. பூண்டுஞ் செறீஇயும். 5. ஓராவல்சி.

௨௯௫ : 3. மூணையிற். 8. நும்மினிற்றகுமோ, நுமிதற்றகுமோ. ஆசிரியர் : பெரும்பாகன்.

௨௯௮ : 4. மையனோக்கம். 5. அஃகுதை. 7. பரிசின்யானப். 8. குறித்தவன்.

௨௯௯ : 1. இதுவுமற்றெவனோ. 5. கண்டன மன்னங்கண்ணே. 8. ஞெகிழ்பவெந்தட, ஞெகிழ்பதடமென்.

௩00 : 4. நுண்பகுறுத்தி. 8. விடல்சூழலென், சூழிலன் **கருத்து :** வன்பொறையுங் கூறியது.

௩0௨ : 4. அன்றேபின்னும். 5. நண்பினிருவரும், பிரியாவன் பினரிருவரும். ௩0௩ : 1. குறுங்கால் வெண்குருகு. 4. இங்குப்.

௩0௪ : 1. தொல்வினைப். 2. முனிவெதிர்.

௩0௬ : 1. காமவெள்ளெரி. ௩0௫ : 5. வண்டுவீழ்வபயிரும்.

௩0௭ : 3. பிறையேயநோய். **ஆசிரியர் :** சாண்டலியன்.

௩0௮ : 2. இருந்தலே.

௩0௯ : 3. நடனவரம்பின் வாடிவிடினும். 8. வல்லாமாற்றே.

௩௧0 : 7. துறையவற். ௩௧௧. **கருத்து :** சொற்றது.

௩௧௨ : 1. களவினள். 4. நம்மோரன்னோள். 7. முகத்தாளாகி. **கருத்து :** வரைவிடை வேட்பக்கூறியது.

௩௧௪ : 5. மின்னுமிளமுலே. **ஆசிரியர் :** பேறிச்சாத்தன், பேரிச்சாத்தன். ௩௧௫. **கருத்து :** வரைவிடை வேறுபடுகின்றுயென்ற.

௩௧௬ : 4. பொருவிரவு. 5. ஓராங்குக்காட்ட. 8. சொன்னனிறவாயினவே. சில பிரதிகளில் இப்பாட்டு இல்லை.

௩௧௭ : 3. தேம்பியமாமலர். ௩௧௯ : 3. பிடியொடு பொருந்திய.

௩௨0 : 2. கழிகொண்ட. 6. புள்ளுமிழ்பொங்கர். 8. தூர்த்தன் காடுமையானே. **ஆசிரியர் :** தும்பிமோசிகீரன், தும்பிசேர்கீரன்.

௩௨௧ : 1. மலேச்சேரஞ் சாந்திரை. 8. திறம்பல் வாழி.

௩௨௩ : 3. வானத் தெடுஞ்சுவர்.

௩௨௪ : 1. கொடுந்தாண் முதலைக்.

௩௨௭. **கருத்து :** அண்மையாளுக யாற்றேடுரைப்பாளாய்.

௩௨௮ : 7. புலிநேர்குறழனிலே.

௩௨௯ : 2. உகுத்தலினுது. 3. வழங்குஞ் சிறுநெறி தாவும். 7 மழைக்கணிக்கு.

௩௩0 : 1. நலத்தகைப் புலைச்சி, நலத்தகைப் புலத்தி. 7. நாடே. **ஆசிரியர் :** கிழார்க்கிரனெயிற்றியன்.

௩௩௧ : 4. யானைகான நீந்தி. **ஆசிரியர் :** பிரமாந்தன்.

௩௩௨ : 3. நாறுமயிர். 6. மன்றனண்ணிய.

௩௩௪ : 1-2. செவ்வாய்ப் பெருந்தோட்டெறிதிரை.

௩௩௫: 5. வெற்பனண்ணியதுவே.

௩௩௭: 1. முகிழ் முருத்தன. 3. செறிசிறை வெண்பலும். 5. யான் றன்னறிவலென்னறியலளே. ௩௩௮ கருத்து: வற்புறுத்தியது.

௩௩௯: 5. தோழி நறுமாயிதழ். ௩௪௦: 4. அழிவினின்ற.

௩௪௧: 1. பல்லிபடரிய. 5. கண்ணியலாண்மை.

௩௪௨: 7. பணிவினை யெனினே.

௩௪௩: 2. அண்ணலியானை யணிமுகம் பாய்ந்தே.

௩௪௪: 3. அண்ணனல்லேஞெடு. 5. யானினிரையிறந்து.

௩௪௫: 4. இந்த அடி ஒரு பிரதியில்லை.

௩௪௬: 8 செல்லவு மாகாது.

௩௫௦: 2. பனிவெங் குன்றம். 5. கணத்துள். 8. நிலையார் பொருட்பிணி. கருத்து: பிரிவு சேர்ந்த.

௩௫௧: 4-5. துறைவற்குரிய. 6-7 சேரியி, னகையாய்த் தாயத் தாரோ. ௩௫௨: 6. யறிவன்றேழி; யவற்காணு.

௩௫௨. ஆசிரியர்: கடியலூருத்திரனங் கண்ணன்.

௩௫௩: 4. நிறையிதழ்.

௩௫௪: 3. தணிந்தனையாயினெம் முய்த்துக் கொடுமோ. கருத்து: வாயில்வேண்டச் சென்ற.

௩௫௫. கருத்து: இரவுக்குறிநேர்ந்த; தோழிநேர்ந்து. ஆசிரியர்: பரணரென்ற பெயரும் உள்ளது.

௩௫௬: 7. பரலும்பல. ஆசிரியர்: கயமனுர்.

௩௫௭: 5. சிறுதினைக்காக்கும். ௩௫௮: 3. வாஅய பற்று.

௩௫௯: 5. புல்லினன் விறலவன்.

௩௬௦: 2. அன்னைகாணி; அரும்படர்.

௩௬௧: 3. மணங்கமழுத்தி, மணங்கமழுந்தியோர். 4. ஏர்குலைநிவந்த. 6. கடியாதோட்கே. ௩௬௨: 3. சில்லவிழுடையொடு.

௩௬௩: 6. வின்றுனைப் பிரிந்தே. ஆசிரியர்: சொல்லூர்க்கொற்றன்.

௩௬௪: 1. அரிப்பவர். 3. பொற்கோல்விற்கொடி. 4. என்பதேற்றேன். 8. மண்கொணற்குவரும்.

௩௬௫: 1. வளைஞெகிழநாடொறும். 2. பாடிலகழிந்து, பாடிலகலுழுந்துனியாஞவே. 3. ததும்பியருவி.

௩௬௬. ஆசிரியர்: பேரிசாத்தன், பெரிச்சாத்தன்.

௩௬௮: 5-6. நீத்தத்திகல்கரை.

௩௭௦: 5. மருங்கிலமே. கருத்து: தன்னைப்புறத்துரைத்தாள்.

௩௭௨: 2. நெடுவெளிக்குப்பை. 6. யுலர்பதங் கொள்ளாயிரவை. ஆசிரியர்: வீற்றுறுத்தெயினன், வீற்றிஞத்தேயினன்.

௩எ௩ : 7. காந்தள் சிறுகுடிக். 8. அமைந்த தொடர்பே. கருத்து ஆற்றுளாகித் தலைமகட்கு. ஆசிரியர்: மதுரைக் கோலம்புல்லன், மதுரைக்கொலம்புல்லன். ௩எ௪ : 7. கூட்டினுமயங்கிய.

௩எ௫ : 4. இரவருவாரிற். 5. யாமத்துக் கறங்கும்.

௩எ௬. ஆசிரியர் : படுமரத்து மோகிக் கொற்றன், படுமாத்து.

௩எஎ. ஆசிரியர் : மோசிற்றன்.

௩எ௮ : 3. தண்மழை தலையலாரைக் குகந்த நீறித்துச். 5. போகிய கானே. ௩எ௯ : 3. கண்ணமை துணி. 5. யெம்மின்.

௩௮0 : 1. புதைப்பாஅ.

௩௮௧ : 3. பகலையாகி. 7. தோன்றனக்கதன். கருத்து : வரைவிடை யாற்றுளாய்த் தலைமகளை.

௩௮௨ : 2. முகைத்தலை திறந்த. 3. பூமலர்பு தளவ ; தேங்கமழ் பூக்களுல், தேங்கமழ் பூக்கால்.

௩௮௩ : 3. சென்றைக்க சென்றி. 4. ஒய்வன வொழுங்கி, ஒய்வன வொழுக. 6. யாது மில்லையான். கருத்து : உடன்போக்கு நேர்வித்த வந்த தோழிக்கு நாணுல் வருந்துந் தலைமகளை. ஆசிரியர் : படுமரத்து படுமாத்து. ௩௮௪ : 1. உழுந்துடைக் கழுத்திற்.

௩௮௫ : 1. பழமருந்தினக்கலை, பழந்தினினக்கலை. 2. சிலையிற் கானவன். 7. இப்பழங்கேளுரே.

௩௮எ : 3. நிறைவரம்பாக. 5. வெள்ளக் கடலினும்.

௩௮௮: 1. நீர்க்கால் யாத்த. 3-4. அசாவதுமணர். 5. முழுச்சினை. கருத்து : குறித்துச் சொலவழுங்கலுறுவாளை.

௩௮௯ : 3. வரைந்தென வந்தெதிர். 4. மகனே யென்றனன்.

௩௯0 : 2. சொல்லாதீமோ. 5. இளைவந்து. கருத்து : கண்டார் இப்பொழுது.

௩௯௧ : 5. மாமழை தழீஇயப். 9. கூவுந்தோழி.

௩௯௨ : 4. துடவைய சிறுதினைக். ஆசிரியர் : தும்பிசேரகிஞர்.

௩௯௪ : 3. மறுவரவந்தோடி. 5. வார்கினைப். கருத்து : ஆற்றுவிக்கலுறுந்தோழி.

௩௯௫ : 5. களையலராயினுங் ; கண்ணினிதுபடீஇ, கண்ணின்றுபடீஇ.

௩௯௬ : 3. வுரைத்தனள் கொல்லோ. 4. ஒருத்தனல். 7. செலலே

௩௯எ : 1. நனைமுது, நனைமரு. 8. களைஞரோவிலரே.

௩௯௮ : 1. துற்றுந்துவலை. கருத்து : தலைமகன், உலகியல்மேல்

௩௯௯ : 4. விடுவுழி பரந்தலானே.

௪00 : 2. கனைஇக் காமம். 6. தேரே. ௪0௧: 5. நக்குவலையாயாடலுங்

உ

கணபதி துணை

# குறுந்தொகை

## மூலமும் உரையும்

### கடவுள் வாழ்த்து

தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த *வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைக லெய்தின்று லுலகே.

என்பது கடவுள் வாழ்த்து.

பாரதம் பாடிய பெருந்தேவனார்.

(பதவுரை.) *தாமரை புரையும் காமர் சேவடி* - தாமரைமலரைப்போன்ற அழகிய செம்மையாகிய திருவடியையும், *பவழத்து அன்ன மேனி* - பவழத்தை யொத்த சிவந்த நிறத்தையும், *திகழ் ஒளி* - விளங்காநின்ற ஒளியையும், *குன்றி ஏய்க்கும் உடுக்கை* - குன்றிமணியை ஒக்கும் சிவந்த ஆடையையும், *குன்றின் நெஞ்சு பக எறிந்த அம் சுடர் நெடு வேல்* - கிரவுஞ்சமலையினது நடுவிடம் பிளக்கும்படி வீசிய அழகிய ஒளியையுடைய நெடிய வேற்படையையும், *சேவல் அம் கொடியோன்* - கோழிச்சேவலை வரைந்த கொடியையுமுடைய முருகக்கடவுள், *காப்ப* - பாதுகாத்தருளுதலால், *உலகு ஏமம் வைகல் எய்தின்று* - உலகத்திலுள்ள உயிர்கள் இன்பமயமாகிய நாட்களை அடையாநின்றன; ஆதலின் உலகுக்கு இடையூறில்லை யென்றவாறு.

---

(பிரதிபேதம்) * வெஞ்சுடர், செஞ்சுடர்.

(முடிபு.) அடியையும் மேனியையும்ஒளியையும் உடுக்கையையும் வேலையும் சேவற்கொடியையுமுடைய முருகவேள் காப்ப உலகு ஏமவைகலை எய்தியது.

(கருத்து.) முருகக்கடவுளின் இத்திருவுருவைத் தியானம் பண்ணுக; பண்ணின் எல்லா நலமும் எய்தலாம்.

(விசேடவுரை.) மங்கலமொழியாதலின் தாமரை முற்கூறப் பட்டது. காமர் - காமம் மருவு என்பதன் விகாரமெனக் கொண்டு விருப்பம் மருவிய எனலுமாம்; "காமரு சுனைமலர்" (முருகு. 75) என்பதன் உரையையும் அதன் அடிக்குறிப்பையும் பார்க்க. மேனி: ஆகுபெயர்; 'மேனியென்றார் ஆகுபெயரால் நிறத்தை' (சிலப். ரு: 172, அடியார்.) குன்றென்றது சூரபன்மாவுக்கு அரணாகி அவனை உள்ளிட்டுக்கொண்டு ஓடிவந்த மலையெனலும் ஆம்; "ஒருதோகை மிசையேறி யுழல்சூரு மலைமார்பு முடனூடுறப், பொருதோகை சுரராச புரமேற விடுகாளை புகழ்பாடுவாம்" (தக்க. 5) என்பதையும், 'தனக்குப் பகைவனான சூரபன்மாவுக்கு மறைவாய் ஓடிவரலான மலையினுடைய மார்பும் சூரபன்மாத்தானும் ஒக்க ஒரே காலத்திலே ஊடுருவும்படி வேலேறுபடப் பொருதருளி' என்னும் அதன் உரைப் பகுதியையும், "கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியும், தொளைபட் டுருவத் தொடுவே லவனே" (கந்தரனுபூதி) என்பதையும் பார்க்க. நெஞ்சு - நடுவிடம். சேவல் - மயிற்சேவலுமாம்; ஆண்மயிலுக்குச் சேவலென்னும் பெயர் வழங்குதல் மரபன்றாயினும், முருகவேளுடைய மயிலை அங்ஙனம் கூறுதல் பொருந்தும்; "சேவற் பெயர்க்கொடை சிறகொடு சிவணும், மாயிருந் தூவி மயிலலங் கடையே" (தொல். மரபு. 48) என்பதன் விசேடவுரையிலுள்ள, 'செவ்வேளூர்ந்த மயிலுக்காயின் அதுவும் நேரப்படும்' என்னும் பேராசிரியர் கூற்றால் இது விளங்கும். முருகவேளுக்கு மயிற்கொடியும் உண்டென்பது, "பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ" (முருகு. 122) என்பதனாலும் அதன் அடிக்குறிப்பாலும் அறியப்படும். சேவலங் கொடியோனென்பது முருகனென்னுந்துணையாய் நின்றது. சேவலங்கொடியை உடம்படுபுணர்த்தினார், "பழமுதிர் சோலை மலைகிழ வோனே" (முருகு. 317) என்றாற்போல. ஏமவைகல் - பிறவித்துன்பம் சாராத நாட்களெனினுமாம் (பரி. கஎ: 53, பரிமேல்.) உலகு: ஆகுபெயர். எய்தின்று: காலவழுவமைதி.

இஃது உலகுக்குப் பயன்பட வாழ்த்தியது.

## கடவுள் வாழ்த்து

இது வாழ்த்து முதலிய மூன்றனுள் வருபொருளுரைத்தலென் பதன்பாற்படும்.

இச்செய்யுள் அகப்பொருட்டுறைச் செய்யுட்டொகையாகிய இந் நூலுக்குப் புறத்துறுப்பாய்ப் புறப்பொருட் பாடாண்டிணையைச் சார்ந்த கடவுள்வாழ்த்தென்னும் துறையின்பாற்படும்.

## * மேற்கோளாட்சி

அடி, 1. 'தாமரை.........சேவடியென்றவழி, சிவப்புடையன பல வற்றினும் தாமரை உயர்ந்ததாகலின் அஃது உவமையாகக் கூறப்பட்டது' (தொல். உவம. 3, இளம்.); 'தாமரை.........சேவடி யென்பது சினைக்குச் சினை உவமமாயிற்று' (ஷை. ஷை. 6, இளம், பேர்.); 'தாமரை.........சேவடி யென்றவழி நான்கு சொல்லாகி ஓசை பெற்று நின்றவாறு கொள்க; அவை ஈரசை யென்று கொள்க' (ஷை. செய் 11, இளம்.); 'தாமரை.........சேவடியென்பது பதிஞ்ரெழுத்தான் வந்தது' (ஷை. ஷை. 49, இளம்.); 'தாமரை யென்பது தாமரைப்பூ வென்றவாறு; இது முதலிற் கூறும் சினையறிகிளவி; தாமரை.........சேவடி யென்றாற் போல வெனக்கொள்க' (யா. வி. சிறப்.); 'தாமரை......... சேவடி என அதன் சினையை உணர்த்தின் ஆகுபெயராம்' (நன். 289, மயிலை; 290, சங்கர, வி.); 'தாமரை......சேவடி......என்றாற்போல்வன முதற்பொருளை உணர்த்தும் பொருட்பெயரான் அவற்றின் ஒருவழியுறுப் பாகிய சினைப்பொருளைக் கூறின' (இ. வி. 192.)

3. "குன்றி யேய்க்கு முடிக்கையென் றாற்கரி, தென்று மோசிவப் பென்றுமோ வவ்விரண், டொன்றி நின்றவென் றேதுது மோவெனின், நின்ற தோர்வர லாற்றொடு நிற்குமே" (யா. வி. 95, உரை, மேற்.)

3-4. 'குன்றின்.........வேலென்புழிப் போல நெஞ்சென்றது ஈண்டும் † அகப்பொருட்டாய் நின்றது' (குறள், 1250, பரிமேல்.); 'குன்றின்......வேலென்பது போலக் கல்லுக்கு நெஞ்சு கூறினரெனவுணர்க' (தஞ்சை. 331, சொக்க.); 'குன்றின்......வேலென்றாற்போல உரமென்றது ஈண்டு இடப்பொருட்டாய் நின்றது' (திருமயிலையமகஅந்தாதி, 11.)

5. 'சொல்லுவான்குறிப்பு முருகவேளை நோக்குதலின் சேவல் கோழியாயிற்று' (தொல். கிளவி. 53, தெய்வச்.)

* இந்நூற் செய்யுட்களும் செய்யுட்பகுதிகளும் பழைய உரைகளில் மேற்கோளாக எடுத்தாளப்பட்ட இடங்கள்.

† அகம் - இடம்.

5 - 6. 'ஈற்றடியிரண்டும் மகார வகாரங்கள் எதுகையாய் வந்தன' (யா. வி. 53.)

**முற்றும் :** 'இதனுட் குறித்தபொருள் : முருகவேள் காப்ப உலகம் காவற்பட்டதென்னும் பொருள். இதனை முடித்தற்பொருட்டு *எழுத்து முதலாகி வந்து ஈண்டிய அடிகளெல்லாவற்றானும் நாட்டியவாறு கண்டு கொள்க' (தொல். செய். 74, இளம்.) ; 'என்பது ஆறடியான் வந்தது (ஷை. ஷை. 158, பேர்.) ; 'என்பது † முன்னமின்றி வந்தது' (ஷை. ஷை. 211, பேர், ந.) ; 'இதனுட் பொழிப்பெதுகையும் ஒரூஉவெதுகையும் ஒரூஉமோனையும் பிறிதும் வந்தனவாயினும் முதல் வந்ததனாலே பெயர் கொடுத்துப் பொழிப்பெதுகைச் செய்யுளென்று வழங்கப்படும்' (யா. வி. 53) ; இஃது எல்லாக் குற்றமுந்தீர்ந்த செய்யுள் (யா. கா. ஒழிபு. 9.)

## ஒப்புமைப் பகுதி

1. "மரையிதழ் புரையு மஞ்செஞ் சீறடி" (நன். 155, மயிலை. மேற்.)

2. பவழத்தன்ன மேனி : "செய்யன்" (முருகு. 206) ; "உருவு முருவத்தீ யொத்தி" (பரி. கக : 99.)

திகழொளி : "ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" (முருகு. 3.)

3. "சிவந்த ஆடையன்" (முருகு. 206); "உடையு மொலியலுஞ் செய்யை" (பரி. கக : 97.)

3 - 4. குன்றின் நெஞ்சு பக எறிந்தது : "குன்றங் கொன்ற குன்றுக் கொற்றத்து" (முருகு. 266) ; "தெவ்வுக் குன்றத்துத் திருந்துவேலழுத்தி, அவ்வரை யுடைத்தோய்" (பரி. கக : 102-3) ; "வரைவயிறு கிழித்த சுடரிலை நெடுவேற், றிகழ்பூண் முருகன்" (தொல். களவு. 23, ந. மேற் : 'பையுண் மாலை') ; "கடல்வயிறு கிழித்து மலைநெஞ்சு பிளந்தாங், கவுணரைக் கடந்த சுடரிலை நெடுவேல், நெடுவேள்" (சிலப். உ௩ : 188-90) ; "அருவரை பிளந்த வஞ்சுவரு நெடுவேல்" (பெருங். உ. 5 : 147.)

குன்றின் நெஞ்சு : "விஞ்சையம் பெருமலை நெஞ்சகம் பிளந்து" (பெருங். க. 51 : 8.)

4. (பி - ம்.) சேந்சுடர் நெடுவேல் : "செவ்வேற் சேஎய்" (முருகு. 61) ; "செவ்வா யெஃகம்" (பதிற். கக : 7) ; "அமையா வென்றி யரத்தநெடு வேலோய்" (கல். கடவுள். உ : 15.)

---

* எழுத்து அசை சீர் தொடை முதலியன ஈண்டிய அடி.

† முன்னம் : தொல். செய். 207, பேர். பார்க்க.

5. சேவலங்கொடியோன்: "கோழி யோங்கிய வென்றடு விறற் கொடி", "புகரில் சேவலங், கொடியன்" (முருகு. 38, 210-11.)

6. எய்தின்று: குறள், 1240.

---

## தோழி கூற்று

[பாங்கியிற்கூட்டத்தை விரும்பிய தலைமகன் செங்காந்தட் பூவைக் கையுறையாகக் கொடுத்துத் தோழியின்பால் தன்குறை கூறியவழி அவள், "இஃது எமது மலையிடத்தும் உள்ளதாதலின் இதனை வேண்டேம்" என்று மறுத்துக் கூறியது.]

க. செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த
செங்கோ லம்பிற் செங்கோட் டியானைக்
* கழறொடிச் சேஎய் குன்றம்
குருதிப் பூவின் குலைக்காந் தட்டே.

எ - து. தோழி கையுறை மறுத்தது.

[கையுறை - கையின்கண்ணே சேர்ப்பது.]

† திப்புத் தோளார்.

(ப - ரை.) வெற்ப, செங்களம் பட - போர்க்களம் இரத்தத்தாற் செந்நிறத்தையுடைய களமாகும்படி, அவுணர் கொன்று தேய்த்த - அசுரர்களைக்கொன்று இல்லையாக்கிய, செ கோல் அம்பின் - இரத்தத்தாற் சிவந்த திரண்ட அம்பையும், செ கோடு யானை - சிவந்த கொம்பையுடைய யானையையும், கழல் தொடி - உழல இட்ட வீரவளையையுமுடைய, சேஎய் குன்றம் - முருகக்கடவுளுக்குரிய இம் மலையானது, குருதி பூவின் குலை காந்தட்டு - சிவப்பாகிய பூங்கொத்துள்ள காந்தளை உடையது.

(முடிபு.) சேயினது குன்றம் காந்தட்டு.

(கருத்து.) காந்தட் பூவாற் குறைவிலேமாதலின் நின் கையுறையை ஏலேமென்றபடி.

(வி - ரை.) வெற்பவென்னும் விளி முன்னத்தால் வருவிக்கப்பட்டது (தொல். செய். 207.) கொன்று - வருத்தியெனவுமாம்;

---

(பி - ம்.) * கழறொடீஇ. † தீப்புத்தோளார்.

"கரும்பு போழ், கொல்லப் பயன்படுங் கீழ்" (குறள், 1078.) தேய்த்த இல்லையாக்கின (முருகு. 69, ந.) கொன்று தேய்த்த வென்க ; தேய்த்த சேயென்க. செங்கோலம்பு : செம்மை, வளைவின்மையுமாம் ; 'அம்பு வடிவாற் செவ்விதாயினும்' (குறள், 279, பரிமேல்.) முருகக்கடவுளுக்கு அம்பு உண்மை, "பொறிவரிச் சாபமும்" (பரி. ரு : 65) என்பதனாற் பெறப்படும். செங்கோடு - பகைவரைக் குத்திச்சிவந்த கொம்பு.

முருகக்கடவுளின் ஊர்திகளுள் யானை ஒன்றென்பதும், அதன் பெயர் பிணிமுகமென்பதும், அருள்செய்வதற்கும் போர்செய்வதற்கும் எழுந்தருள்கையில் அதனை அவர் ஊர்ந்து செல்வாரென்பதும் "வேழமேல் கொண்டு", "அங்குசங் கடாவ வொருகை", "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. 82, 110, 247), "கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு" (பதிற். கக : 6), "சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கி" (பரி. ரு : 2) என்பவற்றாலும் அவற்றின் உரைகளாலும் அறியலாகும்.

கழறொடியென்றாள், "கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை" (முருகு. 114) என்று கூறுதலின். கழறொடி - உழலுந்தொடி (சிறுபாண். 95, ந.) சேஎயென்றது அளபெடுத்த வழியும் விளியன்றி நின்றது, "செவ்வேற் சேஎய், சேவடி" (முருகு. 61 - 2) என்புழிப்போல. குருதிப்பூவின் குலைக்காந்தளென்றது முதற்கேற்ற அடையடுத்து நின்றது, "குவிமுகி ழெருக்கங் கண்ணி" (குறுந். கஎ : 2), "உளைப்பூ மருதி னொள்ளிணர்" (முருகு. 28), "நறுமலர்க் குறிஞ்சி நாண்மலர்" (சிலப். கச : 89) என்ற இடங்களிற்போல. குருதி - சிவப்பு. வெண்காந்தளுமுண்மையின் குருதிப்பூவென்றாள் ; குருதிப் பூ - இரத்தம் போன்ற நிறத்தையுடைய பூவெனினும் ஆம். கொத்தாகவே பூத்தலின் குலைக்காந்தளென்றாள்.

## மேற்கோளாட்சி

3 - 4. 'குன்றங்.........காந்தட்டு : என்புழி யாம் காந்தட்பூவாற் குறைவிலமெனப் பின்னும் கூற்று, சொல்லெச்சமாய் நிற்குமாறு உணர்க' (தொல். எச்ச. 45, ந.)

மு. 'செங்களங்.........காந்தட்டே : இது தோழி தலைவியை இட்டுத் துய்த்து நீங்கியது' (தொல். களவு. 23, ந.); 'இதனுட் * பலவடியும் வந்த

* பலவடி யென்றது ஐந்துவகைக் கட்டளையடிகளை.

வாறு காண்க', 'இதனுள் எழுத்து அளவு மிகாமற் குறையாமல் உச்சரிக்க அவ்வழிநின்ற ஓசையால் ஆசிரியம் வந்தவாறு காண்க' (தொ. செய். 50, 76, இளம்.); 'செங்களம்.........காந்தட்டே: எனச் செய்யுள் முடிந்த வழியும் இவற்றால் யாம் குறையுடையேமல்லேமென்று தலைமகற்குச் சொன்னாளேல் அது கூற்றெச்சமாம்; என்னை? அவ்வாறு கூறவும் சிதைந்ததுஇன்மையின். தலைமகட்குச் சொன்னாளேல் அது குறிப்பெச்சம்; என்னை? அது காண்பாயாகிற் காணெனத் தலைமகளை இடத்துய்த்து நீங்கிய குறிப்பினளாகி அது தான்கூறாளாதலின் என்பது' (தொ. தொ. 206, பேர்.); 'இக்காந்தளால் யாம் குறையுடையமல்லமெனத் தலைவற்குக் கூறிற் கூற்றெச்சமாம், அக்கூற்றும் செய்யுட்குச் சிதைவின்மையின்; அது காண்பாயாகிற் காணெனத் தலைவியைநோக்கி இடத்துய்த்துக்கூறிற் குறிப்பெச்சமாம், அவனைக் கூடுகவெனத் தான் கூறாளாகலின்' (தொ. தொ. 206, ந; இ. வி. 5[illegible]); '* தலைமகனது வரவுணர்ந்து தோழி தலைமகளைக் குறியிடத்துக் கொண்டு சென்று, யான் செங்காந்தட்பூக் கொய்துகொடு வருவல்; அவ்விடம் தெய்வமுடைத்து; நின்னால் வரப் படாது; நீ அவ்வளவும் இப்பொழிலிடத்தே நில்: என்று நிறீஇ நீங்குவதற்குச் செய்யுள்' (இறை. 18, நம்பி. 149); 'தோழி தலைமகளைக் குறிவயின் நிறுத்திப் பெயர்ந்தது' (தமிழ்நெறி விளக்கம், 17); 'இஃது அளவடியானும் அகவலோசையானும் வந்த நேரிசையாசிரியப்பா' (யா. கா. செய். 2); 'இந்தப்பாட்டில் கூற்றெச்சமும் குறிப்பெச்சமும் வந்தன' (கல். 'வானவர்க்கிறைவன்' மயிலேறும்.)

## ஒப்புமைப் பகுதி

1. செங்களம்: "செங்களம் வேட்டு" (பதிற். ச-ஆம் பத்துப் பதிகம், 11); "செங்களந் துழவுவோள்" (புறநா. உஎஅ: 7); "தேன் மிடைந்த தாரினான் செங்களஞ் சிறந்ததே" (சீவக. 279); "செங்களத்து மறங்கருதி", "செங்களத்துச் செழுஞ்செல்வம்" (பு. வெ. 127, 207.)

* இக்கருத்துக் குரியனவாக, "அஞ்சிறை வண்டறை காந்தளம் போதுசென் றியான்றருவேன், பஞ்சுறை தேரல்கு லாய்வரற் பாற்றன்று பாழியொன்னார், நெஞ்சுறை யாச்செற்ற வேன்மன்ன னேரி நெடு வரைவாய், மஞ்சுறை சோலை வளாய்த்தெய்வ மேவும் வரையகமே", "நீவிரி கோதையிங் கேநின்னின் னல்வரற் பாலதன்று, தீவிரி காந்தள் சென் றியான்றரு வேன்றெய்வ மங்குடைத்தாற், பூவிரி வார்பொழிற் [illegible]ந்தை வானவன் பூவழித்த, மாவிரி தானையெங் கோன்கொல்லி சூழ்ந்த வரையகமே" (பாண்டிக்கோவை) என்னும் செய்யுட்கள் இறையனு ரகப் பொருளுரையிற் காட்டப்பெற்றுள்ளன.

அவுணர்த் தேய்த்தல்: "செறுநர்த் தேய்த்த", "பொருநர்த் தேய்த்த", "செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கி" (முருகு. 5, 69, 99.)

2. செங்கோலம்பு: "செங்கோ லம்பினர்" (அகநா. ௩௩௭ : 13.)

செங்கோட்டியானை: "புலிவிளை யாடிய புலவுநாறு வேழத்தின், தலைமருப் பேய்ப்பக் கடைமணி சிவந்த", "தொன்றுறை துப்பொடு முரண்மிகச் சினைஇக், கொன்ற யானைக் கோடுகண் டன்ன, செம்புடைக் கொழுமுகை யவிழ்ந்த காந்தள்" (நற். ௩௧ : 5-6, உ௯௪ : 5-7); "பொரு திகல் புலிபோழ்ந்த பூநுத லெழில்யானைக், குருதிக்கோட் டழிகறை தெளிபெறக் கழீஇயின்று" (பரி. ௨௦ : 4-5); "மறமிகு வேழந்தன் மாறுகொண் மைந்திறற், புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல, உயர் முகை நறுங்காந்த ணுடோறும் புதிதீன" (கலி. ௫௩ : 3-5.)

3. கழறொடி: "கழறொடி யாஅய்" (குறுந். அச : 3, புறநா. க௨அ : 5); "கழறொடித் தடக்கை" (புறநா. ௯௧ : 2.)

தொடிச்சேய்: "தொடியணி தோளன்" (முருகு. 211.)

4. காந்தளின் குருதிப்பூ: "தோடார் தோன்றி குருதி பூப்ப" (முல்லை. 96); "காந்தட் குருதி யொண்பூ", "குருதி யொப்பின் கமழ் பூங் காந்தள்" (நற். ௩௪ : 2-3, ௩௯௯ : 2); "குருதி மலர்த்தோன்றி" (கைந்நிலை, 26.)

தலைக்காந்தள்: "சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்" (குறுந். உ௩௯ : 3); "அகலிலைக் காந்த ளலங்குகுலைப் பாய்ந்து", "காந்தட், கமழ்குலை யவிழ்ந்த நயவருஞ் சாரல்", "அலங்குகுலைக் காந்தள்" (நற். கஅ௫ : 8, ௩க௩ : 6-7, ௩௫௯ : 2); "எடுத்த நறவின் குலையலங் காந்தள்" (கலி. ௪0 : 12); "பகைறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்தள்" (அகநா. க0அ : 15); "பூந்தண் சாரற் பொங்குகுலை யெடுத்த, காந்தட் கொழுமுகை" (பெருங். உ. 12 : 67-8.) (க)

---

## தலைவன் கூற்று

[இயற்கைப்புணர்ச்சிக்கண் தலைவியின்கூந்தல் இயற்கைமணம் உடையதென்பதைத் தலைவன் வண்டை வினவுதல் வாயிலாகப் புலப்படுத்தி நலம்பாராட்டியது.]

உ. கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது * கண்டது மொழிமோ

(பி - ம்.) * கண்டன.

பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீ யறியும் பூவே.

எ - து. இயற்கைப்புணர்ச்சிக்கண் இடையீடு பட்டுநின்ற தலைமகன் தலைமகளை நாணின் நீக்குதற்பொருட்டு மெய்தொட்டுப்பயிறல் முதலாயின அவண்மாட்டு * நிகழ்த்திக்கூடித் தனது அன்பு தோற்ற நலம் பாராட்டியது.

[*இயற்கைப் புணர்ச்சி - ஊழ்வினையால் நேர்ந்த புணர்ச்சி. மெய்தொட்டுப்பயிறல் முதலாயின : மெய்தொட்டுப் பயிறல், பொய் பாராட்டல், இடம்பெற்றுத் தழாஅல், இடையூறு கிளத்தல், நீடு நினைந்திரங்கல், கூடுதல் உறுதல், சொல்லிய நுகர்ச்சி வல்லே பெறுதல், தீராத் தேற்றம் என்பன ;* தொல். *களவு.* 11.]

இறையனார்.

(ப - ரை.) *கொங்கு தேர் வாழ்க்கை - பூந்தாதை ஆராய்ந்து உண்ணுகின்ற வாழ்க்கையினையும், அகம் சிறை தும்பி - உள்ளிடத்தே சிறையையும் உடைய வண்டே, காமம் செப்பாது - என் நிலத்து வண்டாதலின் நான் விரும்பியதையே கூறாமல், கண்டது மொழிமோ - நீ கண்கூடாக அறிந்ததையே சொல்வாயாக ; நீ அறியும் பூ - நீ அறியும் மலர்களுள், பயிலியது கெழீஇய நட்பின் - எழுமையும் என்னோடு பயிலுதல் பொருந்திய நட்பையும், மயில் இயல் - மயில் போன்ற மென்மையையும், செறி எயிறு - நெருங்கிய பற்களையும் உடைய, அரிவை கூந்தலின் - இவ்வரிவையின் கூந்தலைப்போல, நறியவும் - நறுமணமுடைய பூக்களும், உளவோ - உள்ளனவோ ?*

(முடிபு.) *தும்பி, நீ அறியும் பூக்களுள் அரிவையின் கூந்தலைப்போல நறியனவும் உளவோ ? மொழிவாயாக.*

(கருத்து.) *தலைவியின்கூந்தல் இயற்கைமணம் உடையது.*

(வி - ரை.) *தும்பி சொல்லும் ஆற்றல் இலதாயினும் உள்ளது போல, "சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்"* (தொல். *பொருள்.* 2) *என்ற விதிப்படி உவகைபற்றிக் கூறியது. கொங்கு - தேனுமாம் ; "முள்*

(பி - ம்.) * *நிகழ்த்திப் பாடுமாற்றால் கூடிய தலைமகன் தனது.*

2

ளைத் தாமரை முகிழ்விரி நாட்போது, கொங்குகவர் நீலச் செங்கட் சேவல்" (சிறுபாண். 184 - 5, ந.) அம் சிறை - அழகிய சிறையுமாம்; "அம்ம வாழியோ வணிச்சிறைத் தும்பி" (குறுங். நகூஉ : 1.) தும்பி - உயர்ந்தசாதி வண்டு. மணத்தைப்பற்றிக் கூறுதலின் நன்மணத்திற் செல்லுந் தும்பியை நோக்கிக் கூறினான் (சீவக. 892, ந.) செப் பென்பதைத் திசைச்சொலென்பர் நச்சினார்க்கினியர். கண்டது - அறிந்தது. மோ: முன்னிலையசை. பயிலாத பொருட்கண் அரு வருப்புத் தோன்றுதற்கு ஏதுவாகிய பயிர்ப்பென்னும் குணமுடை யளாதலின், பயிலியது கெழீஇய நட்பென்றான். மயிலியல், செறி யெயிறு என்னும் அடைகளும் உடம்படுபுணர்த்தும்வாயிலாக இரண்டு இயல்புகளை விளக்கின; "முறிமேனி முத்த முறுவல் வெறி நாற்றம், வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு" (குறள், 1113) என்ப தையும், 'பெயரடையானும் ஓரியல்பு கூறப்பட்டது' (பரிமேல்.) என்னும் அதன் உரையையும் பார்க்க. அரிவையென்றது பருவங் குறித்ததன்று. ஓகாரம் வினாவோடு எதிர்மறைப் பொருளது. பூ - பூக்களுள்; ஏழனுருபு இறுதிக்கண் தொக்கது. ஏகாரம் ஈற்றசை.

## மேற்கோளாட்சி

1. 'கொங்கு...வாழ்க்கை யென்பது இளவேனி லாயிற்று, தும்பி கொங்குதேரும் காலம் அதுவாதலின்' (தொல். அகத். 16, ந.); அஞ் சிறை: அகமென்பதன்முன் சிறையென்பது வரின் இடையெழுத்துக் கெடும் (நன். 222, சங்கர, வி.)

2. மோவென்பது முன்னிலையசை (தொல். இடை. 26, இளம், சே, தெய்வச், ந, கல்; நன். 439, மயிலை, 440; சங், வி; இ. வி. 276); செப்பென்பது சொல்லென்பதை உணர்த்தல் (நன். 457, மயிலை; 458, சங், வி.); 'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ வென்றது என்நிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறுதே கொள்ளென் றலிற் குறிஞ்சிநிலம் ஒன்றாயிற்று.' (தொல். களவு. 2, ந.)

1 - 2. 'கொங்கு...தும்பியென்பது ஒன்பதெழுத்தான் வந்தது; காமஞ்...மொழிமோ வென்பது பத்தெழுத்தான் வந்தது.' (தொல். செய். 49, இளம்.)

மு. 'இதனுள் தும்பியென்றது முன்னிலையாக்கல்; கண்டது மொழிமோ வென்றது சொல்வழிப்படுத்தல்; கூந்தலின் நறியவு முளவோ வென்றது நன்னயமுரைத்தல்; காமஞ் செப்பாதென்றது

என்னிலத்து வண்டாதலின் எனக்காகக் கூறுது மெய்கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின் இடமணித்தென்றது ; பயிலியது கெழீஇய நட்பென்றது தம் நிலையுரைத்தல்' (தொல். களவு. 10, ந.) ; சொல்லா மரபின சொல்லுவனவாக உவகைபற்றிக் கூறியது (ஷை. பொருள். 2, ந.) ; 'கொங்குதேர் வாழ்க்கை யென்னும் பாட்டு இயற்கைப் புணர்ச்சிக்கண் நிகழ்ந்த செய்யுள்' (ஷை. செய். 187, பேர்.) ; தலைமகளைப் புகழ்ந்து நயப்புணர்த்தியது (இறை. 2) ; பெருநயப்புரைத்தலென்னுந் துறை (நம்பி. 129 ; இ. வி. 497) ; நயப்புணர்த்தியது (தமிழ்நெறி விளக்கம், 15) ; 'இவ்வாசிரியத்துள் இயற்சீரும் உரிச்சீரும் விரவி வந்தன' (யா. வி. 15) ; நயப்புணர்த்தல் (* களவியற் காரிகை, 25.)

## வரலாறு

இச்செய்யுளை, 'ஆலவாய்இறையனுர் தருமியென்னும் பிரமசாரிக்குப் பொற்கிழிவாங்கிக் கொடுத்த சிந்தாசமுத்தி யகவல்' என்று **தமிழ் நாவலர் சரிதை** கூறும்.

இது, பாண்டியனுற் சங்கமண்டபத்தின் முன் கட்டப்பட்ட பொற்கிழியைத் தருமியென்னும் பிரமசாரியொருவன் பெறும்பொருட்டு ஸ்ரீசோமசுந்தரக்கடவுள் இயற்றி அவனுக்கு அளித்ததென்று கூறப்படும் ; "பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப், பொற்குவை தருமிக் கற்புட னுதவி, என்னுளங் குடிகொண் டிரும்பய னளிக்கும், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்" (கல். க) ; "வழுத்திய மறையோன் றன்மை கண்டவன் மனத்தி னுசை, ஒழித்திடு வான்வி ரும்பி யுரகமா ணிக்கச் செம்பொற், குழைக்கிசைய காத னங்கட் கொங்குதேர் வாழ்க்கை யென்ருேர், கிழிக்கிசை கவிதை பாடிக் கொடுத்தனன் கீர்த்தி வேட்டு" (திருவால. கசு : 10) ; "திருந்துசிவ முனிதருமி தளர்ந்தேன் மன்றல் செய்வான்வண் பொருளிலையென் றேத்த விங்குப், பொருந்துமடந் தைய ரோடுயர் தலத்து லாவும் புகழ்மாற னணைந்தமணங் கண்டு தென்கொல், அருந்தமிழா விதுபொருந்தப் பாடு வாரே லளிப்பலென்ருேர் பொற்கிழி நற் சபையுட் டேக்க, மருந்தனையான் கொங்கென்ருேர் கவிதை பாடிக் கிழியறுப்பான் வழங்கியொப்பித் தனன்கீழ் நின்றே" (கடம்பவன புராணம், கO : 16) ; "தென்ன வன்குல தெய்வ மாகிய, மன்னர்

---

* இது சென்னை அரசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலையிலுள்ள ஒரு பழைய அகப்பொருள் இலக்கணநூல் ; களவியற்காரிகை யென்னும் பெயரிட்டு இதனை **ஸ்ரீமான் S. வையாபுரிபிள்ளையவர்கள், பி. ஏ., பி.** எல்., வெளியிட்டிருத்தலின் அப்பெயரே இங்குக் குறிக்கப்பட்டது.

கொங்குதேர் வாழ்க்கை யின்றமிழ், சொன்ன லம்பெறச் சொல்லி நல் கினார், இன்னா நீர்ந்தவ னிறைஞ்சி வாங்கினன்" (திருவிளை. தருமிக்கு 88); "அங்கதை யிப்பா வேந்தர்க் கறைந்தனை பெறுதி யென்று கொங்குதேர் வாழ்க்கை யென்னுங் கோதிறாக் கீந்து விட்டான், பொங் கிய களிப்பி னானும் பேர்ய்த்தொடர் பமுதந் தன்னைத், திங்கள் வெண் குடையி னன்றன் செவிப்புலத் தூற்றி னனல்" (சீகாளத்தி நக்கீர. 61); "அப்பாலோர் வண்டை யனுப்பி னவர்காமம், செப்பாதே யென்றூற் றிகைக்குமே", "தருமிக்கே, ஓர்வாழ்க்கை வேண்டி யுயர் கிழிகொள் வான்கொங்கு, தேர்வாழ்க்கை யென்றெடுத்த செய்தியும்' (தமிழ்விடுதூது, 108, 114-5); "கொங்கய வன்மீ னவர்க்கு வகுத்துச் சொல் பவள—கொங்குதேர் வாழ்க்கையென்னும் கவிதையைக் கனவட்ட மென்னும் குதிரையையுடைய வலிய பாண்டியனுக்கு, கூந்தற்கு இயற்கை மணமுண்டென்பதனை விளக்கத் திருவுளம் பற்றும் பவளம் போலும் சிவந்த வாயினை யுடையாய்" (திருமயிலையமக அந்தாதி, 53, உரை.)

## ஒப்புமைப்பகுதி

1. தும்பிகொங்கு தேர்தல்: "தாதுண் டும்பி" (மதுரை. 655) "தாதுண் பறவை" (அகநா. ச: 11); "கொங்குண் வண்டே கரியாக" (பெரியதிருமொழி, க. 3: 4.)

அஞ்சிறைத்தும்பி: "அஞ்சிறை வண்டி னரிக்கணம்" (முருகு. 76); "அறுசில் கால வஞ்சிறைத் தும்பி", "அஞ்சிறை வண்டி னரியினம்" (ஐங். 20, 489); "அஞ்சிறை மணிநிறத் தும்பி" (கலி. சசு: 2.)

2. காமஞ்செப்பல்: "தாமிள மகளிரைக் காமஞ் செப்பி" (பெருங். க. 41: 101.)

கண்டதுமொழிதல்: "கண்டது மொழிவல்" (குறுந். உஎ௬: 4.)

3. பிறவிதோறுந் தொடர்ந்த நட்பு: "உடுத்துவழி வந்த வுழுவ லன்பு", "பிறப்பிடைக் கொண்டுஞ் சிறப்பொடு பெருகி, நெஞ்சிற் பின்னி நீங்கல் செல்லா, அன்பு", "தொன்முறை வந்த, பிறப் பிடைக் கேண்மைப் பெருமனைக் கிழத்தி", "பிறப்புவழிக் கேண்மை" (பெருங். உ. 11 : 39, 16 : 39 - 41, 18 : 115 - 6, ௫. 6 : 64.)

4. செறியெயிற்றரிவை: "செறியெயிற் றரிவைய ருருவாய்" (நீலகேசி, 58.)

4 - 5. கூந்தலின் இயற்கை மணம்: "கூந்தல் ......... நறுந்தண் ணியவே", "கைவள் ளோரி கானந் தீண்டி, எறிவளி கமழு நெறிபடு கூந் தல்", "நறுமென் கூந்தல்", "நாறிருங் கூந்தல்", "நறுங் கதுப்பு"

(குறுந். ககசு: 1 - 4, ககூ: 3 - 4, உஎ0 : 8, உஎஉ : 8, ௩கஉ: 6); "நாறு மயிர்க் கொடிச்சி", "தண்ணிய கமழுந் தாழிருங் கூந்தல்", "நாறிருங் கதுப்பு", "வண்டுபடு நாற்றத், திருள்புரை கூந்தல்" (நற். கூ௬ : 8, க௩எ : 1, உ௫0 : 8, உஎ0 : 2-3) ; "மணநாறு கதுப்பினுய்" (கலி. ச௩ : 23); "நாறிருங் கூந்தல்" (புறநா. கக௩ : 9.)

பூ. "வண்டுகளோவம்பி னீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ
உண்டு களித்துழல் வீர்க்கொன் றுரைக்கிய மேனமொன்றுய்
மண்டுக ளாடிவை குந்தமன் ஞள்குழல் வாய்விரைபோல்
விண்டுகள் வாரு மலருள வோநும் வியலிடத்தே"

(திவ். திருவிருத்தம், 55)

"தூவுண்டை வண்டினங் காள்வம்மின் சொல்லுமின் றுன்னிநில்லாக்
கோவுண்டை கோட்டாற் றழிவித்த கோன்கொங்க நாட்டசெங்கேழ்
மாவுண்டை வாட்டிய நோக்கிதன் வார்குழல் போற்கமழும்
பூவுண்டை தாமுள வோநுங்கள் கானற் பொழிலிடத்தே"

"இருங்கழல் வானவ னுற்றுக் குடியிகல் சாய்ந்தழியப்
பொருங்கழல் வீக்கிய பூழியன் மாறன்றென் பூம்பொதியில்
மருங்குழ லுங்களி வண்டினங் காளுரை யீர்மடந்தை
கருங்குழ லுறுமென் போதுள வோநுங் கடிபொழிலே"

"விண்டே யெதிர்ந்ததெவ் வேந்தர் படவிழி ஞத்துவென்ற
ஒண்டே ருசிதனெங் கோன்கொல்லிச் சார லொளிமலர்த்தா
துண்டே யுழல்வா யறிதியன் றேயுள வேலுரையாய்
வண்டே மடந்தை குழல்போற் கமழு மதுமலரே"

"பொருங்கழல் வானவற் காயன்று பூலந்தைப் போர்மலைந்தார்
ஒருங்கழ லேறவென் றுன்கொல்லிச் சாரலொண் போதுகடம்
மருங்குழல் வாய்நீ யறிதிவண் டேசொல் லெனக்குமங்கை
கருங்குழல் போலுள வோவிரை நாறுங் கடிமலரே"

"தேற்றமில் லாததெவ் வேந்தரைச் சேவூர்ச் செருவழித்துக்
கூற்ற மவர்க்காய வன்கொல்லிச் சாரற்கொங் குண்டுழல்வாய்
மாற்ற முரைநீ யெனக்குவண் டேமங்கை வார்குழல்போல்
நாற்ற முடைய வுளவோ வறியு நறுமலரே." (பாண்டிக்கோவை.)(உ)

## தலைவன் கூற்று

[வரையாது ஒழுகும் தலைவன் வேலிப்புறத்தே நின்றதை யறிந்த தோழி அவன் வரைந்துகொள்ள வேண்டுமென்னும் எண்ணமுடையளாகி அவன் செவியிற்படும்படி அவனது நட்பைப் பழித்துக்கூறிய போது, தலைவி அந்நட்பு மிகச் சிறப்புடையதென்று உணர்த்தியது.]

௩. நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று
நீரினு மாரள வின்றே சாரற்
*கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே.

எ - து. தலைமகன் சிறைப்புறமாக, அவன் வரைந்து கோள்வது வேண்டித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் இயற்பட மொழிந்தது.

[சிறைப்புறம் - வேலிக்குப் புறம்பு. இயற்பழித்தல் - இயல்பை இழித்துக்கூறல்.]

தேவகுலத்தார்.

(ப - ரை.) சாரல் - மலைப்பக்கத்திலுள்ள, கரு கோல் குறிஞ்சி பூ கொண்டு - கரிய கொம்புகளையுடைய குறிஞ்சிமரத்தின் மலர்களைக் கொண்டு, பெரு தேன் இழைக்கும் - பெரிய தேனை வண்டுகள் செய்தற்கு இடமாகிய, நாடனொடு நட்பு - நாட்டையுடைய தலைவனோடு யான்செய்த நட்பானது, நிலத்தினும் பெரிது - பூமியைக்காட்டிலும் அகலமுடையது; வானினும் உயர்ந்தன்று - ஆகாயத்தைக் காட்டிலும் உயர்ந்தது; நீரினும் அருமை அளவின்று - கடலைக் காட்டிலும் அளத்தற்கரிய ஆழமுடையது.

(முடிபு.) நாடனொடு செய்த நட்பு, பெரிது; உயர்ந்தது; அளவினது என்க.

(கருத்து.) தலைவனொடு செய்த நட்பு மிகச் சிறந்தது.

(வி - ரை.) அளவின்று - அளவினையுடையது; "இருபாற் பட்டவொருசிறப் பின்றே" (தொல். புறத். 16); "பெரும்புலம் பின்றே" (நற். ௱௪ : 5.) கருங்கோல் : கருமை - வன்மையுமாம். குறிஞ்சி: இது பன்னிரண்டு வருடத்திற்கு ஒரு முறை மலருமென்றும், அம்மலரிலி

(பி - ம்.) * கருங்காற் குறிஞ்சி.

ருந்து ஈக்களால் எடுக்கப்படுந் தேன் மிக்க சுவையை உடையதென்றும், நீலகிரியிலுள்ள தொதுவரென்னும் ஒருவகைச் சாதியார் இது மலருங்காலத்தைக் கொண்டே தம்முடைய பிராயத்தைக் கணக்கிடுவரென்றும் சொல்வர். பெருந்தேன் - அளவிற் பெரிதாகிய மலைத்தேன்; "நெடுவரைப் பெருந்தேன்", "பெருந்தேன் கண்படுவரை" (குறுந். ௩0 : 1-2, உ௪௩ : 5) ; "கயிலை யுகுபெருந்தேன்" (சிறு. 16) ; "இம்மலைப் பெருந்தேன்" (பெரிய. கக : 101.) தேன் - தேனடையுமாம். நாடன் - குறிஞ்சி நிலத்தலைவன் ; 'குறிஞ்சி நிலமுடைமையால் நாடனென்று சொல்லுவேனே' (புறநா. ௪௩ : 1, உரை) ; "கணங்கொளருவிக் கான்கெழு நாடன்" (ஐங். க௮௩ : 1.)

## மேற்கோளாட்சி

3. 'முதற்பொருள் முதலிய மூன்றுங்கொண்டே இவ்வைந்திணை ஆமெனமேற்கூறுபவாகலின் இவற்றிற்கு இப்பெயரும் முறையும் முறையானே கருப்பொருள் பற்றியும் உரிப்பொருள் பற்றியும் ஆயினபோலுமென்பது ; அற்றேல் கருப்பொருள் பலவன்றே? அவற்றுள் குறிஞ்சி முதலாயினவற்றுற் பெயர்பெற்றவாறு என்னையெனின், கருங்கோற் குறிஞ்சியெனவும்.........சான்றோரான் எடுத்துக் கூறப்படுதலின் அவற்றுள் அவை சிறத்தலானென்க' (இ. வி. 379.)

3 - 4. 'முல்லை குறிஞ்சி யென்பன இடுகுறியோ காரணக்குறியோ வெனின் ஏகதேச காரணம்பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறியென்று கொள்ளப்படும் ; என்னை காரணமெனின்.........கருங்கோற்.........நட்பே : என்றவழி மைவரையுலகிற்குக் குறிஞ்சிப் பூச் சிறந்ததாகலானும்.........இந் நிலங்களை இவ்வாறு குறியிட்டாரென்று கொள்ளப்படும்' (தொல். அகத். 5, இளம்.)

2 - 4. 'சாரற்.........நட்பே : இதில் நாட்டிற்கு அடையாகிவந்த குறிஞ்சிப்பூவும் தேனும் இறைச்சிப்பொருளென்று கொள்க' (தொல். பொருளியல், 33, இளம்; இ. வி. 588.)

மு. 'நிலத்தினும்.........நட்பே என்பது பெருமை வியப்பு ; கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைத்தாற்போல வழி முறைமுறையாற் பெருகற்பாலதாகிய நட்பு மற்றுஅவனைக் கண்ணுற்ற ஞான்றே நிலத்தினது அகலம்போலவும் விசும்பினுேக்கம்போலவும் கடலின் ஆழம்போலவும் ஒருகாலே பெருகிற்றென்றமையின் ; இது தன்கட்டோன்றிய பெருமைவியப்பு ; இது தலைமகன் கருத்தினுள்ள நட்பிற்குக் கொள்ளுங்கால் பிறன்கட்டோன்றிய பெருமைவியப்பா

மென்பது கொள்க' (தொல். மெய்ப். 7, பேர்; இ. வி. 578); 'தலைவிக்கு உரிமையைக் கொடுத்த கிழவோன்மாட்டுப் பெருமையிற்றிரியாத அன்பின்கண்ணும் தலைவிக்குக் கூற்று நிகழும்; நிலத்தினும்......... நட்பே: எனவரும்' (ஷை. கற்பு. 6, இளம்.); 'இது சிறுத்தற்கட் கூறியது' (ஷை. ஷை. ஷை. ந.) 'இஃது ஈற்றயலடி முச்சீர்த்தாயிற்று' (ஷை. செய். 68, ந.); 'இஃது ஈற்றயலடி முச்சீரான் வந்தமையின் நேரிசையாசிரியப்பா' (வீர. யாப்புப். 9; யா. வி. 71; யா. கா. செய். 7, இ. வி. 747); 'ஆசிரியப்பா அளவடியான் வந்தது' (யா. வி. 27.)

## ஒப்புமைப்பகுதி

1. "நிலத்தினும் பெரிதே நேர்ந்தவர் நட்பே" (தொல். களவு. 20, மேற்.)

2. "கடலினும் பெரிதெமக் கவருடை நட்பே" (ஐங். கஅச: 4.)

1 - 2. **நிலம் வான் கடல் என்ற மூன்றும் பெருமைக்கு எல்லையாகக் கூறப்படுதல்:** "காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப் பெரிது", "வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சம், தானறி குற்றப் படின்", "பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின், நன்மை கடலிற் பெரிது" (குறள், 102, 272, 103); "மண்ணினும் வானினு மற்றை மூன்றினும், எண்ணினும் பெரியதோரிடர்" (கம்ப. அயோமுகி. 99.)

3. **கருங்கோற் குறிஞ்சி:** "கருங்கோற் குறிஞ்சிநும் முறைவினூர்க்கே" (அகநா. ருoஅ: 16); "கருங்கோற் குறிஞ்சி யடுக்கம்" (புறநா. ருஎச: 8); "கருங்கோற் குறிஞ்சியுங் கடிநாள் வேங்கையும்" (பெருங். க. 50 : 26.)

4. **நாடனது நட்பு:** "மலைநாடன் கேண்மை" (திணைமா. 18.)

3-4. **குறிஞ்சித்தேன்:** "குறிஞ்சிப் பெருந்தே னிறூல்" (கலி. 'வேற்றுப்பிடி')

(ந.)

---

## தலைமகள் கூற்று

[பிரிவாற்றுமல் வருந்துகின்றுளென்று கவலையுற்ற தோழிக்கு, 'தலைவன் முன்பு எனக்குச் செய்த தண்ணளியை நினைந்து ஆற்றினேன்' என்பது புலப்படக் கூறியது.]

ச. *நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி
அமைதற் கமைந்தநங் காதலர்
அமைவில ராகுத * ஞோமென் னெஞ்சே.

பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

†காமஞ்சேர் குளத்தார்.

(ப - ரை.) என் நெஞ்சு நோம் என் நெஞ்சு நோம் - எனது நெஞ்சம் வருந்தாநிற்கும், எனது நெஞ்சம் வருந்தாநிற்கும்; இமை தீய்ப்பு அன்ன - இமைகளைத் தீயச்செய்யுங் கருவியைப்போன்ற வெம்மையையுடைய, கண்ணீர் தாங்கி - எனது கண்ணீரைத் தாம் துடைத்து, அமைதற்கு அமைந்த நம் காதலர் - அளவளாவுதற்கு அமைந்த நம் தலைவர், அமைவு இலர் ஆகுதல் - இப்பொழுது மனம் பொருந்தாராய்ப் பிரிந்திருத்தலால், என் நெஞ்சு நோம் - எனது நெஞ்சம் வருந்தா நிற்கும்.

(முடிபு.) காதலர் அமைவிலராகுதலால் நெஞ்சு நோவா நிற்கும்.

(கருத்து.) தலைவர் இப்பொழுது உடனிராமையால் என் நெஞ்சு வருந்தும்.

(வி - ரை.) நோம் - நோகும். நெஞ்சே: ஏ, அசைநிலை. கண்ணீர் தாங்கி - கண்ணீரைத் தடுத்து; என்றது துடைத்தலை; "அழாஅ லென்றுநம் மழுதகண் டுடைப்பார்" (குறுந். அஉ: 2); கண்ணீர் தாங்கியவராதலின் மீண்டும் அருள்வாரென்று நினைந்து ஆற்றுவேனென்பது குறிப்பு. தாங்கி நோமென இயைத்துப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. அமைதற்கு - நாம் ஆற்றியிருத்தற்கெனலு மாம். பிரிவாற்றாமையால் வரும் கண்ணீராதலின் வெம்மையை யுடையதாயிற்று. ஆகுதலால் என் நெஞ்சு நோமென இயைக்க. மூன்றுமுறை அடுக்கியது ஆற்றாமை மிகுதிபற்றி.

## மேற்கோளாட்சி

மு. ‡ 'முனிவுமெய்ந் நிறுத்தலென்னும் மெய்ப்பாட்டிற்குச் செய்' (தொல். களவு. 20, இளம்.)

---

(பி - ம்.) * நோமே நெஞ்சே. † இதனை, 'காமஞ்சொகினத்தார்' என்று ஊகித்துப் படித்தற்கும் இடமுண்டு. ‡ முனிவுமெய்ந் நிறுத்தல் -

## ஒப்புமைப் பகுதி

1. என் நெஞ்சு : குறுந். கக : 4, ௩0௬ : 4.

நோம் என் நெஞ்சு : (குறுந். உ0உ : 1, 5) ; "நொதும லாட்டிக்கு நோமென் னெஞ்சே", "நோகோ யானே நோமென் னெஞ்சே" (நற். ககஅ : 11, ௩கஉ : 1) ; "இவட்குமருந் தன்மை நோமென் னெஞ்சே" (ஐங். ௫௧ : 4.)

2. பிரிவாற்றுமையால் வரும் கண்ணீர் வெப்பமுடையதாதல் : "நறவின், சேயித ழனைய வாகிக் குவளை, மாயிதழ் புரைய மலிர்கொ ளீரிமை, உள்ளகங் கனல வுள்ளுதொ றுலறிப், பழங்கண் கொண்ட கலிழ்ந்துவீ ழவிரறல், வெய்ய வுகுதர" (அகநா. கக : 9 - 14) ; "இமை தீர் வெம்பனி" (பெருங். க. 40 : 192) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க ; "கண்கள் வெம்பனி யுகுத்த வன்றே" (சீவக. 2508) ; "கண் ணுகும் வெய்யநீர் வெள்ளத்து" (கம்ப. தைலமாட்டு. 2.)

3. அமைதற்கமைந்த : "அமைந்தாங் கமைக" (குறுந். கஎ௫ : 7). "நம்மறந் தமைகுவ ளாயி னுமறந், துள்ளா தமைதலு மமைகுவ மன்னே" (ஐங். ௩௬ : 2 - 3.)

மு. ஒருவாறு கருத்து ஒப்புமையுள்ள செய்யுள் : குறுந். உ0உ.

(௪)

---

## தலைவி கூற்று

[பிரிவாற்றுமையால் தலைவி வருந்துதலையறிந்து கவலையுற்ற தோழிக்கு அவள், தன்கண்கள் துயிலாமையை உணர்த்தும் வாயிலாகக் காமநோயின் கொடுமையைக் கூறியது.]

௫. அதுகொ றோழி காம நோயே
வதிகுரு குறங்கு * மின்னிழற் புன்னை
உடைதிரைத் திவலை யரும்புந் தீநீர்
மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்
பல்லித ழுண்கண் பாடொல் லாவே.

---

களவொழுக்கத்தான் வந்த துன்பத்தைப் பிறர்க்குப் புலனுகாமை மெய் யின்கண்ணே நிறுத்தல் என்பர் இளம்பூரணர் ; பேராசிரியர் வேறு கூறுவர்.

(பி - ம்.) * மின்னிலைப்புன்னை.

எ - து. பிரிவிடை ஆற்ருளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

நரிவெரூஉத்தலையார்.

(ப - ரை.) தோழி—, வதி குருகு உறங்கும் - தன்னிடத்தில் தங்கியிருக்கும் குருகுகள் உறங்குதற்குக் காரணமாகிய, இன் நிழல் புன்னை - இனிய நிழலையுடைய புன்னை மரமானது, உடை திரை திவலை அரும்பும் - கரையைச் சாரச்சார உடைகின்ற அலைகளால் வீசப்படும் துளியால் அரும்புகின்ற, தீ நீர் - கண்ணுக்கு இனிதாகிய நீர்ப்பரப்பையுடைய, மெல்லம் புலம்பன் - மெல்லிய கடற்கரையை யுடைய தலைவன், பிரிந்தென - பிரிந்தாளுக, பல் இதழ் உண் கண் - பல இதழ்களையுடைய தாமரைமலரைப் போன்ற என் கண்கள், பாடு ஒல்லா - இமைபொருந்துதலைச் செய்யாவாயின; காம நோய் அது கொல் - காம நோயென்பது அத்தன்மைத்தோ?

(முடிபு.) தோழி, புலம்பன் பிரிந்தெனக் கண்பாடொல்லா; காம நோய் அதுகொல்.

(கருத்து.) தலைவன் பிரிவினுல் யான் துயிலொழிந்தேன்.

(வி - ரை.) அதுவென்றது கண் உறங்காமையைச் சுட்டி நின்றது; செய்யுளாதலின் சுட்டுப்பெயர் முன் வந்தது (தொல். கிளவி. 39.) தோழி: விளி. காமநோயே: ஏ, அசை. குருகு பகலினும் இரவினும் தங்குதற்குரியதாகலின், 'வதி குருகுறங் கும் புன்னை' என்றாள். இயல்பாகவே தங்குவதற்குரியதாயினும் அதன் நிழல் உறக்கத்தையும் உண்டுபண்ணுவதாதலின், 'இன் னிழற்புன்னை' என்றாள். உடைதிரை - முரிகின்ற திரை; "உடை திரை முத்தஞ் சிந்த" (சீவக. 2652.) தீநீர்ப் புலம்பு, மெல்லம்புலம் பென்க; தீமை - இனிமை; புலம்பு - கடற்கரை. மருதமும் நெய்த லும் மென்புலமெனப்படுமாதலின், 'மெல்லம்புலம்பு' என்றாள். பிரிந்தென - பிரிந்தாளுக; "தண்கடற் சேர்ப்பன் பிரிந்தென" (ஐங். கஅ௩: 3.) பல்லிதழ் - பல இதழ்களையுடைய தாமரைப்பூ; சினையிற் கூறும் முதலறிகிளவி. உண்: உவமவுருபு; உண்கண் - மையுண்ட கண்களுமாம்.

தன் நாட்டில் குருகு உறக்கத்தைப் பெறும் புலம்பன் எனக்கு உறக்கம் நீங்குதற்குக் காரணனாயினனென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

1. 'குறியது (குற்றெழுத்து) பிற்கூறிய முறையன்றிக் கூற்றினால் ......அதுகொரேழி எனவும்.........தொடர் மொழி யீற்று நின்ற ஒற்றுக் கெடுதலுங் கொள்க' (தோல். தொகை. 18, ந.); இடைச்சொல், அதுகொரேழி காமநோயே எனப் பெயரைச் சார்ந்து நின்று அதன் பொருளை விளக்கிற்று (ஷை. இடை. 1, ந.); இடைச்சொற் பகாப் பதம் பிறிதோடு வந்தது (நன். 150, மயிலை.); 'அதுகொ........ நோயே: என்றற் றொடக்கத்தன தொகாநிலைத் தொடர் மொழிகள்' (ஷை. 259, 373, மயிலை; ஷை. 374, சங், வி.) 'அதுகொல்: தொடர் மொழி' (ஷை. 260, சங், வி.)

4. மெல்லம் புலம்பு: 'தெள்ளம்புனல், மெல்லம் புலம்பு போல் வதோர் பண்புத்தொகை' (சிறு. 379, பேர்.)

மு. 'பிரிந்தவழிக் கலங்கியது: அதுகொ........நோயே எனவரும்' (தோல். களவு. 20, இளம்.); 'இது வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கூறியது; அதுகொ ரேழி காமநோயே: என்னும் பாட்டும் அது' (ஷை. ஷை. 21, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. குருகு - நாரை (குறுந். உ௬௬: 4 - 5, உ௬௬: 1 - 2); அன்னப் பறவை யெனினுமாம்; "கன்னியம் புன்னைமே லன்னங்காள்" (யா. வி. 60, மேற்.)

குருகுறங்கும் புன்னை: "புன்னைத் தடவுநிலை மாச்சினை, புள்ளிறை கூரும்" (அகநா. ௧0: 3 - 4.)

இன்னிழற் புன்னை: "புன்னையம் புகர்நிழல்" (குறுந். ௩0௩: 6); "எக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇ" (அகநா. உ0: 3); "கன்னியம் புன்னை யின்னிழற் றுன்னிய" (யா. வி. 37, மேற்.)

(பி - ம்.) இன்னிலைப் புன்னை: "முடவுமுதிர் புன்னைத் தடவுநிலை மாச்சினை" (அகநா. ௧0: 3.)

(பி - ம்.) மின்னிலைப் புன்னை: "மின்னிலைப் பொலிந்த விளங் கிணரவிழ்பொற், றண்ணறும் பைந்தா துறைக்கும், புன்னையங் கானல்" (அகநா. ௮0: 11 - 3.)

2 - 3. புன்னை திரைத்திவலையால் அரும்பல்: "வான்கடற் பரப் பிற் றூவற் கெதிரிய, மீன்கண் டன்ன மெல்லரும் பூழ்த்த, முடவுமுதிர்

புன்னை" (அகநா. கo : 1 - 3); "தாவற் கலித்த தேம்பாய் புன்னை" (புறநா. உச : 7.)

4. மெல்லம் புலம்பன்: குறுந். உசரு : 5; நற். ககரு : 4; ஐங். கஉo : 4, ககo : 3; அகநா. கo : 4.

4. மு. ஐங். கடுடு : 2.

5. பல்லிதழுண்கண் : (குறுந். உருக : 4); "பல்லித ழுண்கணும் பரந்தவாற் பனியே", "பல்லித ழுண்கண் கலுழ" (நற். கருரு : 10, உசக : 11), "பல்லித ழுண்கண் பசத்தன்மற் றெவனோ", "பல்லித ழுண் கண் ணழப்பிரிந் தோரே", "பல்லித ழுண்கண் மடந்தை", "பல்லித ழுண்கண் பனியலைக் கலங்க" (ஐங். கஎo : 4, ககo : 4, டுடுச : 5, டுருக: 4, சஎக : 2); "பல்லிதழ் மலருண்கண்", "பல்லித ழுண்கண்ணுந் தோளும்" (கலி. சரு : 11, கoo : 10, ககஉ : 9); "பல்லித ழுண்கண் பரந்தன பனியே" (அகநா. கசுக : 14.)

கண்பாடோல்லா : (குறுந். கக : 2, டுரு எ : 1, டுசுரு : 2 - 6); "கண்பட லொல்லா" (கலி. கo : 13.)

4 - 5. தலைவன் பிரிவாற் கண்துயிலாமை : "நாடற்குத், துயி லறந் தனவாற் றோழியென் கண்ணே" (குறுந். கஅசு : 3 - 4); "தமிழ் நர் பெருமாற்கென், கண்படா வாறே யுரை" (முத். 75.) (ரு)

---

## தலைவி கூற்று

[பரிசப்பொருளை ஈட்டும்பொருட்டுத் தலைவன் பிரிந்தவிடத்து ஆற்றாளாகிய தலைவி, நள்ளிரவில் யாவரும் துயின்றும் நான் துயின் றிலேனென்று தோழி துயின்றமையைப் புலப்படுத்தி அவளுக்குக் கூறியது.]

சு. நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந்
தினிதடங் கினரே மாக்கண் * முனிவின்று
நனந்தலை யுலகமுந் துஞ்சும்
† ஓர்யான் மன்ற துஞ்சா தேனே.

எ - து. வரைவிடை வைத்துப் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலை மகள் தோழியை ‡ நெருங்கிச் சொல்லியது.

---

(பி - ம்.) * முனிவின்றி. † ஓஒயான், ஓரியான். ‡ நோக்கிச் சொல்லியது.

[வரைவிடை வைத்துப் பிரிதல் - மணஞ்செய்துகொள்ளுதற்கு இடையே பொருளீட்டுதற்குத் தலைவன் பிரிதல்; வைத்து: சொன்னடை. இடைவைத்து - இடையீடாக நீக்கிவைத்தென்பர் நச்சினார்க்கினியர்; தோல். களவு. 21, உரை.]

பதுமனார்.

(ப - ரை.) யாமம் நள்ளென்றன்று - இடையிரவு செறிந்த இருளை உடையதாக இராநின்றது; மாக்கள் சொல் அவிந்து இனிது அடங்கினர் - மனிதர் பேசுதலை ஒழிந்து இனிமையாகத் துயின்றனர்; நன தலை உலகமும் முனிவின்று துஞ்சும் - அகன்ற இடத்தையுடைய உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் வெறுப்பின்றித் துயிலாநிற்கும்; ஓர் யான் மன்ற துஞ்சாதேன் - யான் ஒருத்தியே நிச்சயமாகத் துயிலேனாயினேன்.

(முடிபு.) யாமம் நள்ளென்றன்று; மாக்கள் அடங்கினர்; உலகமும் துஞ்சும்; யான் ஒருத்தியே துஞ்சாதேன்.

(கருத்து.) யாவரும் துயிலும் நள்ளிரவிலும் யான் துயின்றிலேன்.

(வி - ரை.) நள்: நளியென்னும் உரிச்சொல் ஈறுதிரிபு; செறிவின்கண் வந்ததென்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். பதி. 41); நள்ளென்னும் ஓசையையுடையதாயிற்றெனலுமாம் (நேநேல். 186, ந; புறநா. கசஙூ: 1 - 2, உரை); நள் - நடுவுமாம்; நண்பகல் என்புழிப்போல. ஏகாரம்: அசை. யாமம் - பதினைந்தாம் நாழிகையை இறுதியாகவுடைய இடையிரவு; நள்ளென்றன்றே என்ற குறிப்பினால் இஃது இடையாமம் ஆயிற்று. மாக்கள் - ஐயறிவுடையோர்; என்றது தாய் முதலியவர்களை; தன் துயரை அறியாதிருத்தல்பற்றி இங்ஙனம் கூறினாள். நனந்தலை: நன, அகலத்தை உணர்த்தும் அகரவீற்று உரிச்சொல் (தோல். உரி. 78.) உலகமென்றது எல்லா உயிர்களையும் (முருகு. 1, ந.) உலகமும்: உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை. ஓர்யானென்றது உடனிருந்து ஆற்றுவிக்கக் கடவளாகிய தோழியும் துயின்றமையைப் புலப்படுத்தியது. மன்ற: தேற்றப்பொருளில் வந்தது (தோல். இடை. 17.)

## மேற்கோளாட்சி

3. 'நனந்தலையுலகு: என்றக்கால் அகன்றலையுலகு என்பதாம்' (தோல். உரி. 79, இளம்.); நனவென்பது அகலமாகிய குறிப்புணர்த்திபது (ஷை. ஷை. 80, சே.)

மு. தலைவன்வயிற் பரத்தைமை உண்மைக்கு மேற்கோள் (தொல். களவு. 20, இளம்.) ; தலைவன் வருந் தொழிற்கு அருமை வாயில் கூறின் தலைவிக்குக் கூற்று நிகழும் ; 'இதனுள் பொழுது சென்றதில்லை யென்றும் மாக்கள் இன்னும் துயின்றிலரென்றும் அருமையை வாயில் கூறியவழித் தலைவி யாமமும் நள்ளென்றும் மாக்களும் துயின்றும் வந்திலரென வருந்திக் கூறியவாறு காண்க' (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. நள்ளென்றன்றே யாமம் : "நள்ளென வந்த நாரின் மாலை", "நள்ளென் யாமம்", "நள்ளென் கங்குல்", "பல்லோர் துஞ்சு நள்ளென் யாமம்", "நள்ளென் யாமத் தையெனக் கரையும்", "நள்ளென் கங்குல்" (குறுந். ககஅ : 2, கருO : 4, கருரு : 5, உசச : 1, உகூக : 4, ருகஉ : 4.)

2. மாக்கள் : "ஏதின் மாக்கள்", "கவலை மாக்கட்டிப் பேதை யூரே" (குறுந். அக : 2, கஙக : 7.)

1-2. "துஞ்சா துறைநரொ டொவாத், துயிற்கண் மாக்களொடு நெட்டிரா வுடைத்தே" (குறுந். கசங : 4-5) ; "ஒலியவிந் தடங்கி யாம நள்ளெனக், கலிகெழு பாக்கந் துயின்மடிந் தன்றே" (நற். ருOரு : 1-2.)

1-3. "பல்லோர் துஞ்சு நள்ளென் யாமம்" (குறுந். உசச : 1) என்பதன் ஒப்புமைப் பகுதிகளைப் பார்க்க ; "ஊரெலாந் துஞ்சி யுலகெலா நள்ளென்று, பாரெலாம் பாடவிந்த பாயிருட்கண்" (கக-ஆம். திருவாரூர் மும்மணிக். உகூ.)

4. தலைவி துஞ்சாமை : (குறுந். ங,கக, உஅ, கருஅ, கசங, கஅகூ, உசரு, உகூக, ருOக, ருஉக, ருஙஎ, ருகூங, ருஅக); "நள்ளென் யாமத்துங் கண்படை பெறேஎன்" (நற். களஅ : 8) ; "ஆரிருட் கங்கு லணையொடு பொருந்தி, ஓர்யா னுகுவ தெவன்கொல்" (அகநா. அஉ : 16-7.)

3-4. "கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே" (குறுந். கருஅ : 1.)

மு. "மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா, என்னல்ல தில்லை துணை" (குறள், 1168) ; "யாமத்து, ஞாலத் துயிரெல்லாங் கண்டுஞ்சு நள்ளிருள்கூர், காலத்துந் துஞ்சாதுன் கண்" (கைலைபாதி காளத்தி பாதி யந்தாதி, 64.) (௬)

## கண்டோர் கூற்று

[தலைவனும் தலைவியும் தமரின் நீங்கி உடன்போன காலத்தில், எதிரே வந்தவர்கள், தலைவி காலில் அணிந்திருந்த சிலம்பினால் அவ்விருவருக்கும் மணம் நடைபெறவில்லை யென்பதை உணர்ந்து இரங்கிக் கூறியது.]

எ. வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி * மேலவுஞ் சிலம்பே நல்லோர்
யார்கொ லளியர் தாமே யாரியர்
† கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற் றொலிக்கும்
‡ வேய்பயி லழுவ முன்னி யோரே.

எ-து. செலவின்கண் இடைச்சுரத்துக் § கண்டோர் கூறியது.

[செலவு - உடன்போக்கு. இடைச்சுரத்து - பாலைநிலத்து வழியினிடையே.]

பெரும்பதுமனார்.

(ப - ரை.) ஆரியர் கயிறு ஆடு பறையின் - ஆரியக்கூத்தர் கழையிற்கட்டிய கயிற்றின்மேல் நின்று ஆடும்பொழுது கொட்டப்படும் பறையைப்போல, கால் பொர கலங்கி - மேல்காற்றானது தாக்குதலால் நிலைகலங்கி, வாகை வெள் நெற்று ஒலிக்கும் - வாகை மரத்தினது வெள்ளிய நெற்றுக்கள் ஒலித்தற்கு இடமாகிய, வேய் பயில் அழுவம் - மூங்கில் செறிந்த பாலைநிலப்பரப்பில், முன்னியோர் - கடந்து செல்ல நினைந்து வருபவர்களுள், வில்லோன் காலன கழல் - வில்லையுடையவனாகிய இவ்வாடவனது காலில் உள்ளன வீரக்கழல்கள்; தொடியோள் மெல் அடி மேலவும் சிலம்பு - தோள்வளையை அணிந்த இம்மகளினுடைய மெல்லிய அடியின்மேலுள்ளனவும் சிலம்புகள்; நல்லோர் யார்கொல் - இந்நல்லோர் யாவரோ? அளியர் - இவர் அளிக்கத் தக்கார்!

(முடிபு.) அழுவம் முன்னியோர் யார் கொல்? அளியர்!

(கருத்து.) மணம்புரிந்து கொள்ளாத இவர்திறம் இரங்கத்தக்கது.

(பி - ம்.) * மேலன. † கயிறுள்பறையிற். ‡ வேய்பயில்பழுவம்.
§ கண்டோர் செவிலிக்குச் சொல்லியது.

(வி - ரை.) உடன்போக்கின்கண் நேரும் இடையூறுகளை நீக்கற் பொருட்டு வில்லுடையனாதலின் தலைவனை வில்லோனென்றார்; உதய ணன் வாசவதத்தையைக் கொண்டு செல்லுகையில் வராகனென்பவ னது கையிலிருந்த வில்முதலியவற்றைப் பெற்றுச் சென்றானென்றும், பின் தன்னை வளைத்த சவரர் புளிஞரை அவற்றால் வென்றானென்றும் பெருங்கதையிற் காணப்படும் செய்தி இங்கே அறியற்பாலது. கழல், வீரத்திற்கும் வென்றிக்கும் தனித்தனியே கட்டப்பட்டனவாதலின் காலனவென்று பன்மையாற் கூறினார்; போர்தோறும் வென்று கட் டினவென்பதுமாம்; "காலன புனைகழல்" (புறநா. ௧00 : 1, விசேட வுரை); "கெழுதகை யம்பர் கிழவோன் சேந்தனில், விழைவுறு தியாகத்து வீரத்து வீக்கிய, கழலே யாடவர் கான்மிசை யணிவடம்" என்பது திவாகரமாதலின், கொடையின்பொருட்டும் வீரத்தின் பொருட்டும் புனைந்த கழல்களென்றலுமாம்.

தலைவனால் தலைவி வரைந்துகொள்ளப்படாமையைப் புலப் படுத்துவார், 'மெல்லடி மேலவும் சிலம்பே' என்றார்; மணம்புரி வதற்குமுன், மணமகளது காலில் பெற்றோர்களால் அணியப்பட்ட சிலம்பை நீக்குதற்கு ஒரு சடங்கு செய்யப்படும்; அது 'சிலம்பு கழி நோன்பு' எனப்படும்; "நும்மனைச் சிலம்பு கழீஇ யயரினும், எம்மனை வதுவை நன்மணங் கழிகெனச், சொல்லி னெவனோ............ பொய்வல் காளையை யீன்ற தாய்க்கே' (ஐங். ௩௯௯) என்பதனால் அந் நோன்பு மணத்துக்கு முன்பு செய்யப்படுமென்று தெரிகின்றது. மெல்லடி யென்றது இப்பாலையில் நடக்கலாற்றாளென்னும் இரக்கக் குறிப்பைப் புலப்படுத்தியது. தூய்மை, அன்பு, உவகை முதலிய அகத்தியல்பை முகத்தால் அறிந்தமையின், 'நல்லோர்' என்றார்.

ஆரியர் - ஆரிய நாட்டிலுள்ள ஒருவகைக்கூத்தர்; அவர் இயற் றுங் கூத்து ஆரியக்கூத்தெனப்படும்; 'ஆரியக் கூத்தாடினாலும் காரியத் திலே கண்' என்ற பழமொழி அக்கூத்தின் அருமையைப் புலப்படுத் தும்; விலக்குறுப்பின் வகையாகிய பதினொன்கனுள் ஒன்றாகிய சேத மென்பது இருவகைத்தென்பதும் அவ்விரண்டனுள் ஆரியக்கூத்து ஒன்றென்பதும் சிலப்பதிகார உரையால் அறிந்த செய்திகள்; "ஆரி யங் தமிழெனுஞ் சீர்நட மிரண்டினும்" (சிலப். ௩ : 12 - 25, அடி யார். மேற்.) அக்கூத்தர் கழையை நட்டுக் கயிறுகட்டி அக்கயிற்றின் மேல் ஆடுவர். "ஆடியற் பாணிக் கொக்கு மாரிய வமிழ்தப் பாடற், கோடியர்" (கம்ப. கார்காலப். 33) என்று கம்பரும் இக்கூத்தரைப் பற்றிக் கூறியுள்ளார்.

பசுமையற முதிர்ந்ததாதலின் வெண்ணெற்றென்றார்.

ஏகாரங்களும் தாமென்பதும் அசை. மேலவும் : உம்மை, இறந்தது தழீஇய எச்சவும்மை.

## மேற்கோளாட்சி

1-2. செவிலிக்குக் கண்டோர் கூறியது (தொல். செய். 193, பேர்.); செய்யுளுள் பெயரின் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமானது (ஷை. பெயர். 41, கல்.)

1-3. செய்யுளுள் பெயரின் ஈற்றயலாகாரம் ஓகாரமாயிற்று (தொல். பெயர். 41, இளம், தெய்வச், ந; நன். 352, மயிலை; 353, சங், வி.)

மு. பெயரிடத்து ன ள ர ஈற்றயலாகாரம் செய்யுளில் ஓகாரமாக வந்தது (தொல். பெயர். 41, சே; இ. வி. 326); வில்லோனும் தொடியோளுமென்பன பொருளெனப்படும்; வேய்பயிலழுவம் முன்னியோரென்பது அப்பொருள் நிகழ்ச்சியான் இறந்தகாலமெனப்படும்; அப்பாட்டிற்குச் சிறந்தார் அவராகலின் அவரே பொருளாயினரென்பது (தொல். செய். 203, பேர், 202, ந; இ. வி. 575); சுரத்திடைச் செல்லும் தலைமகனையும் தலைமகளையும் கண்டு எதிர்வருகின்றார், யார்கொல் இவ்வாறு போந்தாரெனச் சொல்லியது (இறை. 23); இடைச்சுரத்துக் கண்டோர் கூற்று (தொல். அகத். 43, இளம், 40, ந.); 'சுரத்து எதிர்ப்பட்டார் சொல்லியது' (தமிழ்நெறி. 23); கண்டோர் அயிர்த்தல் (நம்பி. 182.)

## ஒப்புமைப் பகுதி

1. கழல்: "ஆய்கழற், சேயிலை வெள்வேல் விடலை" (குறுந். கஙி : 4-5.)

2. மெல்லடி : "நல்லோண் மெல்லடி நடையு மாற்றாள்" (தொல். அகத். 40, ந. மேற்.)

தலைவி சிலம்புடையளாதல்: "பெயர்ந்து போகுநி பெருமூ தாட்டி, சிலம்புகெழு சீறடி சிவப்ப, இலங்குவேற் காளையொ டிறந்தனள் சுரனே" (தொல். அகத். 40, ந. மேற்.)

சிலம்புகழி நோன்பு: "சிலம்பு கழீஇய செல்வம்" (நற். உஎகூ : 10); "அருங்கடி வியனகர்ச் சிலம்புங் கழியாள்.........கூர்வேல் விடலை

~~யொசி~~ பொய்ப்பப் போகி", "சிலம்புகழீஇ, அறியாத் தேஎத்த ளாகுதல் கொடிதே" (அகநா. ருகடு : 8 - 14, ருஅடு : 17-8.)

4 - 5. காற்றல் வாகையின் நெற்று ஒலித்தல்: "வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென, நெற்றுவிளை யுழிஞ்சில் வற்ற லார்க்கும்", "அத்த வாகை யமலை வானெற், றரியார் சிலம்பி னரிசி யார்ப்பக், கோடை தூக்குங் கானம்" (குறுந். ருக: 1 - 2, ருகக: 1 - 3); "காய்த்த வாகை நெற்றொலிப்ப" (திவ். பெரியதிரு. க. 7 : 8.)

வாகை நெற்றின் ஒலிக்குப் பறையின் ஒலி உவமை : "வாட லுழிஞ் சில் விளைநெற் றந்துணர், ஆடுகளப் பறையி னரிப்பன வொலிப்பக், கோடை நீடிய வகன்பெருங் குன்றம்", "உறுவளி யெறிதொறும்...... குறுங்கா லுழிஞ்சிற், றூறுசினை விளைந்த நெற்ற மாமேகள், அரிக்கோற் பறையி னையென வொலிக்கும்" (அகநா. சடு : 1 - 3, கடுக : 6 - 10.)

மு. "வில்லான் விறலடி மேலன பொற்கழல் வெண்முத்தன்ன
பல்லா ளிணையடி மேலன பாடகம் பஞ்சவற்கு
நெல்லார் கழனி நெடுங்களத் தன்று நிகர்மலைந்த
புல்லா தவரென யார்கொல் லருஞ்சுரம் போந்தவரே."

(பாண்டிக்கோவை.) (எ)

---

## காதற்பரத்தை கூற்று

[தலைவி தன்னை இகழ்ந்து கூறினளென்று அறிந்த காதற் பரத்தை அத்தலைவியின் பக்கத்திலுள்ளார் கேட்கும்படி, "தலைவன் எமக்கு வயப்பட்டான்போல இங்கே இருந்துவிட்டு, தலைவிபாற் சென்று அவளுக்கு அடங்கி அவள் மனம்போல் ஒழுகினன் ; தருக் குற்று என்னை அவள் இகழ்ந்ததற்குக் காரணம் அதுபோலும் !" என்று கூறியது.]

அ. கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்
பழன வாளை கதூஉ மூரன்
எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்
கையுங் காலுந் தூக்கத் * தூக்கும்
† ஆடிப் பாவை போல
‡ மேவன செய்யுந்தன் புதல்வன் றாய்க்கே.

---

(பி - ம்) * தூங்கும். † ஆடியிற்பாவை, ஆடியுட்பாவை. ‡ மேவின, ஏவின.

எ-து. கிழத்தி, தன்னைப் புறனுரைத்தாளெனக் கேட்ட காதற் பரத்தை அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

[பாங்காயினர் - பக்கத்திலுள்ள தோழி முதலியோர்.]

ஆலங்குடி வங்கனர்.

(ப - ரை.) *கழனி மாத்து* - வயலருகிலுள்ள மாமரத்தினது *விளைந்து உகு தீ பழம்* - கனிந்து வீழ்கின்ற இனிய பழத்தை, *பழன வாளை* - பொய்கையிலுள்ள வாளைமீன்கள், *கதூஉம் ஊரன்* - கவ்வி உண்ணுதற்கு இடமாகிய ஊரையுடைய தலைவன், *எம் இல் பெரு மொழி கூறி* - எம்முடைய வீட்டில் எம்மை வயமாக்குதற்குரிய பெரு மொழிகளைக் கூறிச்சென்று, *தம் இல்* - தம்முடைய வீட்டில், *கையும் காலும் தூக்க* - முன்னின்றார் தம் கையையும் காலையும் தூக்க, *தூக்கும் தானும் தூக்குகின்ற*, *ஆடி பாவை போல* - கண்ணாடியுள் தோன்றுகின்ற பாவையைப் போல, *தன் புதல்வன் தாய்க்கு* - தன்னுடைய மனைவிக்கு, *மேவன செய்யும்* - அவள் விரும்பியவற்றைச் செய்வான்

(முடிபு.) ஊரன், எம்மிற் பெருமொழி கூறிப் புதல்வன் தாய்க் குத் தம்மில் மேவன செய்வான்.

(கருத்து.) தலைவன் தன் மனைவியை அஞ்சி ஒழுகினன்.

(வி - ரை.) கழனி - வயல். தீம்பழம்: தீமை - இனிமை; "தீ நீர்" (பரி. கo : 111, கஉ : 7) என்பவற்றின் உரையைப் பார்க்க. கதூஉம் - கதுவும். ஊரன் - மருத நிலத்தலைவன். ஆடி - கண்ணாடி; முதற்குறை (நன். 268, மயிலை.) பாவை - கண்ணாடியிற்றோற்றும் உருவம். பரத்தை, தலைவியைத் தலைவனுக்குமனைவியென்று கூறும் பொருளாதலின் புதல்வன்றாயென்றாள். பெருமொழியென்றது "உன்னைப் பிரியேன்" என்றது முதலியவற்றை; சபதமுமாம். தன் மனைவி மேவனசெய்யுமென்றது, அங்ஙனம் அவன் செய்தமையே அவள் என்னைப் புறங்கூறும் தருக்குக்குக் காரணமாயிற்றென்னும் நினைவிற்று.

## மேற்கோளாட்சி

1-2. பலவகை யின்பமும் வருந்தாது பெறுவரென்பதனைப் புலப் படுத்தி நிற்றலின் இனிதுறு கிளவிபற்றி உள்ளுறையுவமம் தோன்றியது (தொல். உவம. 28, பேர்.)

5-6. ஆடி: முதற்குறையையுடைய சொல் குறிப்பினுற் பொருளறி வித்தது (நன். 268, மயிலை.)

4-6. கண்ணுடிப் பாவை தன்னைச்சேர்ந்தவர் செயலாயே இருக்கும் (சீவக. 2327, ந.)

மு. காமக்கிழத்தியர் தலைவனை இகழ்ந்தது (தொல். கற்பு. 10, இளம்.); இல்லிடத்திருந்து தலைவனும் தலைவியும் ஊடியும் உணர்த்தியும் செய்த தொழிலைக் கேட்டுக் காமக்கிழத்தி இகழ்ந்தது (ஷை. ஷை. 10, ந.); 'இது குறுந்தொகை. புறன் உரைத்தாளெனக் கேட்ட பரத்தை தலைவனை நெருங்கித் தலைவன்பாங்காயினுர் கேட்ப உரைத்தது; இது (மருதத்திற்கு) * முதுவேனில் வந்தது' (ஷை. அகத். 8, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கழனி மா: "கொக்கார் வளவய லூர" (பழ. 18); "கொக்கார் வளவய லூரன்" (கைந்நிலை, 48.)

மாத்துத் தீம்பழம்: "தேக்கொக்கு", "பால்கலப் பன்ன தேக்கொக்கு" (குறுந். உசு : 6, உ0க : 2); "கொக்கினுக் கொழிந்த தீம்பழம்" (நற். உஅ0 : 1.)

மாம்பழம் விளைந்து உதுதல்: "நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம்" (ஐங். சுக : 1); "மாவின் பழம்விழும் படப்பை யெல்லாம்" (தே. திருநா. திருவலம்புரம்.)

2. கதூஉம்: "கெண்டை கதூஉம்" (குறுந். கூக : 2.); "நீர்த் தாழ்ந்த குறுங்காஞ்சிப், பூக்கதூஉ மினவாளை" (புறநா. கஅ : 7 - 8.)

1-2. மாம்பழத்தை வாளை உண்ணல்: "கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு, துணர்த்தேக் கொக்கின் றீம்பழங் கதூஉம்" (குறுந். கசுச : 1 - 2); "வனமாவி னிருங்கனி யுண்டுமெதர்த், தினவாளை யிரைத் தெழு கின்றனகாண்" (சூளா. சீயவதைச். 231); "வண்டுறை மருங்கினுங்கோர் மாங்கனி வீழ்தல் கண்டே...........வென்றொரு வாளை தன் வாய்க், கொண்டுறை வலிமை நோக்கி" (வி. பா. திரௌபதி மாலை. 13.)

4-5. ஆடிப்பாவையின் இயல்பு: "ஆடியுட் பாவை போனீ யணங்கிய தணங்க வென்றான்" (சீவக. 957); "கண்ணடி யனைய நீர்மைப் பெண்ணுடைச் சொல்லியர் தம்பா லோனே" (திருவாநூர்மும்மணிக். கக

* மாம்பழம் முதிர்ந்து உதிர்வது கூறப்படுதலின் அதற்குரிய காலமாகிய முதுவேனிலென்றார்.

17-8) ; "மாற்றிரி, ஆடிப் பாவையோ டலர்கிழற் பாவை, கைகாண் மெய்பிறி தெவையும் பைபயத், தூக்கிற் றூங்கி மேக்குயர் புயர்தல்" (ஞானமிர்தம், ௬ : 20-23) ; "ஆடிவந்த நற்பாவை போலடியார், கூட விளை யாடிவந்த கோமானே" (தமிழ்விடு. 252.)

6. மேவன செய்தல் : குறள், 1073.

புதல்வன் தாய் : குறுந். ௯௫௧ : 6 ; ஐங். ௯0 : 4, ௪0௫ : 4, ௪௪௨ : 5 ; அகநா. ௬ : 13.

கருத்து ஒப்பு : அகநா. ௧௬௬, கருத்து. (அ)

---

## தோழி கூற்று

[பரத்தையிற் பிரிந்து மீண்ட தலைமகன் வாயில்வேண்டிப் புக்க விடத்து, தோழி, "தலைவனது பரத்தைமையாகிய கொடுமையால் துன்புறுபவளாயினும் தலைவி அவன் செய்த குற்றத்திற்குத் தான் நாணி எமக்கும் அறிவியாமல் மறைத்துக் கற்பொழுக்கத்திற் சிறப்புற் றிருக்கின்றாள்; ஆதலின் சினந்திலள்" என்று கூறுமுகத்தால் தலைவி யைக்கண்டு மகிழ்தல் இயலுமென்பதைத் தலைவனுக்குப் புலப்படுத் தியது.]

௯. யாயா கியளே மாஅ யோளே
மடைமாண் செப்பிற் றமிய வைகிய
பெய்யாப் பூவின் மெய்சா யினளே
பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்
இனமீ னிருங்கழி யோத மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும்
தண்ணந் துறைவன் கொடுமை
*நம்மு ணாணிக் கரப்பா டும்மே.

எ-து. தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது.

கயமனார்.

(ப-ரை.) மாஅயோள் - இயல்பாகவே மாமை நிறத்தையுடைய ளாகிய தலைவி, மடை மாண் செப்பில் - இப்பொழுது மூட்டுவாயால்

---

(பி - ம்.) * நம்முணாணிக் கரப்பாடுதுமே.

மாட்சிமைப்பட்ட செப்பினுள், தமிய வைகிய - இட்டு அடைப்பத் தனித்தனவாகி வைகிய, பெய்யா பூவின் - சூடப்படாத பூக்களைப் போல, மெய் சாயினள் - உடல் மெலிந்தாள்; பசு அடை நிவந்த - பசுமையாகிய இலைக்குமேலே உயர்ந்து தோன்றும், கணை கால் நெய்தல் - திரட்சியையுடைய காம்பையுடைய நெய்தற்பூவானது, இனம் மீன் இரு கழி - கூட்டமாகிய மீன்களையுடைய கரிய கழியின் கண், ஓதம் மல்குதொறும் - வெள்ளம் அதிகரிக்குந் தோறும், கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும் - ஆழமான குளத்தில் முழுகும் மகளிரது கண்ணை ஒத்தற்கு இடமாகிய, தண்ணந்துறைவன் கொடுமை - தண்ணிய துறையையுடைய தலைவனது கொடுமையை, நம் முன் நாணி - நம்முன்னே சொல்லுதற்கு நாணமுற்று, கரப்பு ஆடும் - மறைத்தலையுடைய சொற்களைச் சொல்லுகின்றாள்; ஆதலின், யாய் ஆகியள் - கற்புக்கடம் பூண்டவளானாள்.

(முடிபு.) மாயோள் மெய் சாயினள்; துறைவன் கொடுமைக்கு நாணிக் கரப்பாடும்; ஆதலின் அவள் யாயாகியள்.

(கருத்து.) தலைவனது கொடுமையைத் தலைவி மறந்து அவனை ஏற்றுக்கொள்வாள்.

(வி - ரை.) தலைவியை யாயென்றது, புலத்தற்குக் காரணமான பரத்தைமை தலைவன்பால் உளதாகவும் அதை மனங்கொள்ளாத கற்பின் சிறப்பை நோக்கி (ஐங். க, உரை.) மாயோள்-மாமை நிறத்தை யுடையவள்; மாமை நிறமென்பது மாந்தளிர்போன்ற அழகிய நிறம்; அஃது இலாவணியம் எனப்படும். தமிய வைகிய பூ, பெய் யாப் பூவென்க. நெய்தற்பூவுக்குப் பலகால் மூழ்கியெழும் மகளிர் கண் உவமை. இவள் நாணி மறைத்தாலும் அவன் கொடுமையால் இவள் துன்புறுதலை இவளது உடல் மெலிவால் யாமறிந்தேமென்ப தைப் புலப்படுத்துவாள், 'மெய்சாயினள்' என்றாள். கரப்பாடும்மே: செய்யுளோசை நோக்கி மகரவொற்று விரிந்தது.

சிறப்பில்லாத நெய்தற்பூக்கள் சிறப்புடைய மகளிர் கண்களை மானுமென்றமையால், சிறப்பில்லாத பரத்தையர் தலைவனுக்குச் சிறப் புடைய தலைவியை ஒத்தனரென்னும் குறிப்புப் பெறப்படும்.*

## மேற்கோளாட்சி

4. கருப்பொருள்களுள் நெய்தற்பூச் சிறத்தலால் கடலைச்சார்ந்த நிலம் நெய்தலென்னும் பெயர்பெற்றது (இ. வி. 379.)

---

* ஐங். உ, உரையைப் பார்க்க.

6. இன் என்னும் ஐந்தாம் வேற்றுமையுருபு உவம உருபோ வந்தது (தொல். உவம. 11, பேர்.) ; மான என்பது வினையுவமத்தின்கண் வந்தது (ஷை. ஷை. 12, ஷை.)

4-6. நெய்தல்நிலம் நெய்தற்பூச் சிறத்தலாற் பெற்ற பெயர் (தொல். அகத். 5, இளம்.) ; 'பொருட்கு அடுத்த அடையும் உவம அடைக்கு ஏற்றது, உணரப்படாதன களையப்படுமென்பது; பாசடை நிவந்த கணைக்காலென நெய்தலாகிய பொருட்குவந்த அடையிரண்டும் உவமத்திற்கு ஏற்பவாராமையான் அவை தெளிமருங்கில என்று களைந்து கொள்க' (ஷை. உவம. 20, பேர்.)

7. தண்ணந்துறைவன் : விரிக்கும்வழி விரித்தலென்னும் செய்யுள் விகாரம் (தொல். எச்ச. 7, ந.)

7-8. தலைவியைச் சுட்டி ஒருவர் ஒருவருக்கு உரைப்பார் போல வாயில்கள் தம்முட் கூறவும் பெறும் ; அவையும் தலைவி கேட்பன ; இ. பாடினி பாணற்கு உரைத்தது (தொல். செய். 201, பேர் ; 199, ந.)

மு. தலைமகனைப் பேணாத ஒழுக்கத்தினால் தலைமகள் நாணுடை பொருண்மைக்கண்ணும் தோழிக்குக் கூற்று நிகழும் (தொல். கற்பு. 7, இளம், 8, ந.) ; தலைவியின் தன்மைகளை அகம் புகல் மரபின் வாயில்கள் தலைவற்கு உணர்த்துதல் (ஷை. ஷை. 11, இளம்.) ; பாங்கி தலைவியைப் புகழ்தல் (நம்பி. 207, உரை.)

## ஒப்புமைப் பகுதி

1. மாஅயோள் : குறுந். கூஉ : 6, கககூ : 5 ; அகநா. சுஉ : 16.

3. பெய்யாப் பூவைப்போல மெலிதல் : "பெய்யாது வைகிய கோதை போல, மெய்சா யினை" (நற். கக : 1-2) ; "பெய்யா மலரிற் பிறிதாயினளே" (சீவக. 1960.)

2-3. செப்பிலே பூவை வைத்தல் : "புடையமை பொலிந்த வகையமை செப்பிற்.........கமழ்நறும்பூ" (மதுரைக். 421-3); "முதிரா வேனி லெதிரிய வதிரல், பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர், நறுமோ ரோடமொ டுடனெறிந் தடைச்சிய, செப்பு" (நற். ௬௭ : 3-6) ; "செப்புவா யவிழ்ந்த தேம்பொதி நறுவிரை, நறுமலர்" (சிலப். உஉ : 121-2) "பித்திகக் கோதை செப்புவாய் மலரவும்", "பூத்தகைச் செப்புமி" (பெருங். க. 33 : 76, ௩. 5 : 78) ; "காமவி லேகையுங் கற்பக மாலையும், சேம மணிநகைச் செப்பினு ளேந்துபு" (சூளா. மந்திர. 56.)

செப்பிற் பூவைப்போல மெலிதல்: *"வகைவரிச் செப்பினுள் வைகிய கோதையேம்"* (கலி. கூஅ : 15); *"வகைவரிச் செப்பினுள் வைகிய மலர்போற், றகைநலம் வாடி"* (மணி. ச : 65-6.)

4. நீவந்த நெய்தல்: *"நீணறு நெய்தல்"* (குறிஞ்சிப். 79.)

கணைக்கால் நெய்தல்; பெரும்பாண். 213; நற். கரு அ : 6; அகநா. ருகூ0 : 4.

4-5. கழிநெய்தல்: குறுந். ருருகூ : 5; நற். ககஎ : 2-3, ருஅஉ : 1 - 2; ஐங். கஅரு : 5.

4-6. நெய்தற்பூவிற்குக் கண் உவமை: *"கண்போ னெய்தல்"*, *"கழிசேர் மருங்கிற் கணைக்கா னீடிக், கண்போற் பூத்தமை கண்டு நுண்பல, சிறுபா சடைய நெய்தல்"*, *"ஒண்ணுதன் மகளி ரோங்குகழிக் கொய்த, கண்ணே ரொப்பிற் கமழ்நறு நெய்தல்"* (நற். அ : 8, உஎ : 9-11, உஅரு : 1-2); *"கண்போ னெய்தல்"* (ஐங். கருக : 3); *"இருங்கழி மலர்ந்த கண்போ னெய்தல்"* (அகநா. கஎ0 : 4); *"கண்ணவிழ் நெய்தலும்"* (சிலப். கச : 77.)

7. தலைவனது கொடுமை: குறுந். கசரு : 2, உஉச : 2, உசரு : 5; ஐங். கக : 2, கஉ : 2; இறை. 45.

7-8. தலைவி தலைவனது கொடுமையை மறைத்தல்: *"தன்னெவ்வங் கூறினு நீசெய்த வருளின்மை, என்னையு மறைத்தாளென் றோழி யதுகேட்டு, நின்னையான் பிறர்முன்னர்ப் பழிகூற றோணி, கூருநோய் சிறப்பவு நீசெய்த வருளின்மை, சேரியு மறைத்தாளென் றோழி யதுகேட்டாங், கோருநீ நிலையிலை யெனக்கூற றோணி, நோயட வருந்தியு நீசெய்த வருளின்மை, ஆயமு மறைத்தாளென் றோழி யதுகேட்டு, மாயநின் பண்பின்மை பிறர்கூற றோணி"*, *"இன்றிவ்வூ ரலர்தூற்ற வெய்யாய்நீ துறத்தலின், நின்றதன் னெவ்வநோ யென்னையு மறைத்தாண் மன்"* (கலி. சச : 8-16, கஉச : 13-4.)

மு. (குறுந். க0); *"வேயாது செப்பி னடைத்துத் தமிவைகும் வீயினன்ன, தீயாடி சிற்றம் பலமனை யாடில்லை யூரனுக்கின், றேயாப் பழியென நாணியென் கண்ணிங்ங னேமறைத்தாள், யாயா மியல்பிவட் கற்புநற் பால வியல்புகளே"* (சிற். 374.) (கூ)

## தோழி கூற்று

[பரத்தையிற் பிரிந்த தலைவன் மீண்டுவந்து வாயில் வேண்டிய விடத்துத் தோழி, "ஏற்றுக்கோடற்குத்தகாத கொடுமையை யுடைய னாயினும் அதனை மனங்கொள்ளாமல், கற்பொழுக்கத்தின் சிறப்பி னால் தலைவன் கொடுமையை மறைத்து அவன் நாணும்படி தலைவி தானே அவனை ஏற்றுக்கொள்ள வருகின்றாள்" என்று கூறியது.]

கO. யாயா கியளே விழவுமுத லாட்டி
பயறுபோ லிணர பைந்தாது * படீஇயர்
உழவர் வாங்கிய கமழ்பூ மென்சினைக்
காஞ்சி யூரன் கொடுமை
கரந்தன ளாகலி னாணிய வருமே.

எ - து. தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது.

ஓரம்போகியார்.

(ப - ரை.) யாயாகியள் - தலைவியாயவள், விழவுமுதலாட்டி - தலைவன் செல்வம்பெற்று மகிழ்ந்து குலாவுதற்குக் காரணமாக உள்ளாள்; பயறு போல் இணர பைந்தாது - பயற்றின் கொத்தைப்போன்ற பூங்கொத்திலுள்ளனவாகிய பசிய பூந்தாதுக்கள், படீஇயர் - தங்கள் மேலே படும்படி, உழவர் வாங்கிய - உழவர்கள் வளைத்த, கமழ் பூ மென் சினை - கமழ்கின்ற பூக்களையுடைய மெல்லிய கிளைகளைக் கொண்ட, காஞ்சி ஊரன் - காஞ்சிமரத்தையுடைய ஊரனது, கொடுமை கரந்தனள் ஆகலின் - கொடுமையை நாம் தெரிந்துகொள் ளாதபடி மறைத்தாளாதலின், நாணிய வரும் - அவன் நாணும்படி எதிர்கொள்ள வருகின்றாள்.

(முடிபு.) விழவு முதலாட்டி, தலைவனது கொடுமையை வெளி யிடாமல் மறைத்தாளாதலால் அவன் நாணும்படி வாராநின்றாள்.

(கருத்து.) தலைவி தலைவனது கொடுமையை மறைத்து அவனை ஏற்றுக்கொள்வாளாயினாள்.

---

பி - ம்.) * படீஇய, பரீஇயர்.

(வி - ரை.) யாயாகியள் : ௬-ஆம் செய்யுளின் விசேடவுரையைப் பார்க்க. விழவுமுதலாட்டி யென்றது தலைவி இல்லறம் நிகழ்த்தவந்த பின்பே தலைவனுக்குச் செல்வம் உண்டாயிற்றென்பதைத் தெரிவிக்கின்றது; இந்நூல் உ௬௫-ஆம் செய்யுளாலும் இது விளங்கும். முதல் - காரணம் (தொல். வேற்றுமை. 10.) காஞ்சித்தாது முதலியன இளைய மகளிரால் விரும்பப்படுவனவாதலால், அவர்பொருட்டு உழவர் வளைத்தனர்; அதனை மகளிர் விரும்புவதை, "ததைந்த காஞ்சி" (பதிற். உ௩ : 19) என்பதற்கு, 'விளையாட்டு மகளிர் பலரும் தளிரும் முறியும் தாதும் பூவும் கோடலாற் சிதைவுபட்டுக் கிடக்கின்ற காஞ்சி' என்றெழுதப் பட்டுள்ள உரையினால் அறியலாகும். உழவர் காஞ்சிச் சினையை வளைத்தமையைத் தாதாகிய அடையாளம் புலப்படுத்துதல் போலத் தலைவனுடைய பரத்தைமையை அவன் உடம்பின்பாற் காணப்படும் சந்தனமுதலியன புலப்படுத்துமென்பது குறிப்பு; கலி. எஉ, எஅ - ஆம் பாடல்களாலும் இது விளங்கும். கொடுமை யென்றது தலைவனது பரத்தைமையை. தான் கொடுமை செய்த காலத்தும் அதனைப் பொருட்படுத்தாமல் எதிரேற்றுக் கொள்ளும் தலைவியின் செயல் தலைவனுக்கு நாணத்தை உண்டாக்கும்; "இன்னா செய் தாரை யொறுத்த லவர்நாண, நன்னயஞ் செய்து விடல்" (குறள், 314.) நாணிய - யாம் நாண வென்றுமாம்; இப்பொருளுக்கு, தலைவியைப் பின்பற்றி யொழுகும் யாம் பன்முறையும் அவன் கொடுமையைச் சுட்டி அவனுக்கு வாயில்நேர்தல் முறையன்றென்று கூறி நிற்ப, அவன்கொடுமையை அறிந்து வருந்திய தலைவி அதனை மறந்து தன் கற்பொழுக்கத்தினால் எம்மை நாணச் செய்தாளென்பது கருத்தாகக்கொள்க.

## ஒப்புமைப் பகுதி

1. **யாயாகியள் :** குறுந். க : 1.

2 - 4. **காஞ்சிப் பூந்தாது :** "கோதை யிணர குறுங்காற் காஞ்சிப், போதவிழ் நறுந்தா தணிந்த கூந்தல்", "குறுங்காற் காஞ்சிக் கோதை மெல்லிணர்ப், பொற்றகை நுண்டா துறைப்ப" (அகநா. உ௬௬ : 1-2, ௩௪௧ : 9 - 10.)

**இணர காஞ்சி :** "வீழிணர்க், காஞ்சி" (அகநா. ௩௩௬ : 8-9.)

4. **தலைவன் கொடுமை :** குறுந். க : 7, ஒப்பு.

மு. குறுந். க. (க0)

## தலைவி கூற்று

[தலைமகனைப் பிரிந்திருக்கும் தலைவி, "நெஞ்சே, தலைவர் வாராமையின் உடம்பு மெலிந்தது; துயிலையும் ஒழிந்தேன்; துயர் மிகுதியால் அழுவேன்; இங்ஙனம் இங்கிருந்து துயருறுதலைக் காட்டிலும் அவர் இருக்குமிடத்திற்குச் செல்லுதல் நலம்" என்று தோழி கேட்கும்படி நெஞ்சை நோக்கிக் கூறுவாளாய்த் தனது துயரமிகுதியைப் புலப்படுத்தியது.]

கக. கோடீ ரிலங்குவளை ஞெகிழ நாடொறும்
பாடில கலிழுங் கண்ணொடு புலம்பி
ஈங்கிவ ணுறைதலு * மூய்குவ மாங்கே
எழுவினி † வாழியென் னெஞ்சே ‡ முனாது
குல்லைக் கண்ணி வடுகர் முனையது
§ பல்வேற் கட்டி நன்னாட் டும்பர்
மொழிபெயர் தேஎத்த ராயினும்
வழிபடல் சூழ்ந்திசி னவருடை ¶ நாட்டே.

எ - து. தலைமகள், தன் நெஞ்சிற்குச் சொல்லுவாளாய்த் தோழி கேட்பச் சொல்லியது.

மாமூலனார்.

(ப - ரை.) என் நெஞ்சே வாழி - எனது நெஞ்சே நீவாழ்வாயாக! கோடு ஈர் இலங்கு வளை ஞெகிழ - சங்கினை அறுத்துச் செய்யப்பட்டு விளங்கும் கைவளை உடல்மெலிவினால் நெகிழாநிற்ப, நாள்தொறும் பாடு இல கலிழும் கண்ணொடு - நாள்தோறும் இமைபொருந்துதல் இல்லாதனவாகிக் கலங்கியழும் கண்ணோடு, புலம்பி - தனித்து வருந்தி, ஈங்கு இவண் உறைதல் உய்குவம் - இப்படி இங்கே தங்குதலினின்றும் தப்புவேமாக; ஆங்கு - தலைவர் இருக்கும் இடத்திற்கு, இனி எழு - செல்ல இப்பொழுது எழுவாயாக; முனாது - முன்னேயுள்ளதாகிய, குல்லை கண்ணி - கஞ்சங்குல்லையாலாகிய கண்ணியை அணிந்த, வடுகர் முனையது - வடுகருக்குரிய இடத்தினதாகிய, பல் வேல் கட்டி நல் நாட்டு உம்பர் - பலவேலையுடைய கட்டியென்பவ

(பி - ம்) * முயங்குவம். † வாழிய நெஞ்சே. ‡ முனஅது, முனையது. § வல்வேற். ¶ நட்பே.

னுடைய நல்ல நாட்டுக்கு அப்புறத்தில் உள்ள, மொழிபெயர் தேஎத்தர் ஆயினும் - மொழி வேறுபட்ட நாட்டில் உள்ளவரேனும், அவருடை நாட்டு - அவருடைய நாட்டினிடத்து, வழிபடல் சூழ்ந்திசின் - செல்லுதலை எண்ணினேன்.

(முடிபு.) நெஞ்சே, உய்குவம்; எழு; நாட்டு வழிபடல் சூழ்ந்திசின்.

(கருத்து.) தலைவரைப் பிரிந்து தனித்திருத்தலை இனி ஆற்றேன்.

(வி - ரை.) வளை ஞெகிழ்தலும் கண் பொருந்தாமையும் தலைவனைப் பிரிந்த துன்பத்தால் விளைந்தவை. உறைதலும் : உம்மை, அசைநிலை (புறநா. உசு : 3, விசேடவுரை); சாரியையுமாம் (தொல். குற்றியலுகரப். 76.) இனி - இப்பொழுது (குறள், 1083, பரிமேல்.)

வடுகர் : இவர் வேங்கடத்தின் வடக்கே யிருந்த ஒருசாதியார்; மிக்க வீரமும் வன்மையும் உடையவராகச் சொல்லப்படுகின்றனர்; இவருள் ஒரு சாரார் வேட்டையாடும்தொழிலுடையார்; அதன் பொருட்டு நாய்களையும் உடன்கொண்டுவருவர்; இவரை 'வம்பவடுகர்' என்றும் நூல்கள் கூறும்.

கட்டி : இவன் சேரனுடைய படைத்தலைவர்களுள் ஒருவன்; கங்க நாட்டுக்குத் தலைவனாகச் சொல்லப்படுகின்றான். மொழிபெயர் தேஎம் - மொழி வேறுபட்ட நாடு. இதனால், கட்டியினுடைய நாடும் வடுகரது நாடும் வேற்றுமொழியை யுடையனவென்பது பெறப்படும்.

மொழி வேறுபட்ட நாட்டிற்சென்று உறைதல் அருமையாதலின் ஆயினும் என்று சிறப்பும்மை கொடுக்கப்பட்டது. வழிப்படலென்பது எதுகை நோக்கி இயல்பாயிற்று. வழிபடல் - தலைவன் இருக்குமிடத்துச் செல்லுதல் (தொல். களவு. 22); வழிபாடு செய்தலுமாம்.

## மேற்கோளாட்சி

1 - 4. தலைவி நெஞ்சொடு உசாவித் தலைவனைச் சேர்ந்தது (தொல். பொருளியல், 9, இளம்.)

மு. தலைவி தலைவன் உள்ள இடத்திற்குச் செல்லுதலும் பொருளாக வருதல் (தொல். களவு. 22, இளம்.); தலைவன் நாட்டிற்குச் செல்வாமென்று தலைவி தன் நெஞ்சிற்குக் கூறியது (ஷை. ஷை. ஷை. ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கோடீரிலங்குவளை : குறுந். ௲க : 5, ௲௬௫ : 1.

சங்கை அறுத்து வளைசெய்தல் : "கடற்கோடு செறிந்த வளைவார் முன்கை", "கடற்கோ டறுத்த வரம்போ ழவ்வளை", "கோடீ ரெல் வளை" (ஐங். ௧௯௧ : 1, ௧௯௪ : 1, ௧௯௬ : 1.)

வளை நெகிழ்தல் : குறுந். ௲க : 5, ௫௦ : 4, ௧௨௫ : 1, ௨௧௧ : 1 ௨௧௬ : 3, ௨அ௯ : 2, ௲௧௬ : 1, ௲௬௫ : 1, ௲௭௧ : 1; நற். ௨௬ : 1, ௫௬ 4 ; ஐங். ௨௭ : 3, ௫௪ : 3, ௧௲௬ : 2, ௧௪௦ : 3 ; கலி. ௲ : 3 ; குறள் 1157 ; கைந்நிலை, 55.

2. கண் துயிலாமை : குறுந். ௬ : 4, ஒப்பு.

துஞ்சாமையும் கலிழ்தலும் : (குறுந். ௲௫௭ : 1-2, ௲௬௫ : 2) "பாடின்றிப் பசந்தகண் பைதல பனிமல்க" (கலி. ௧௬ : 1.)

3. உய்தல் : "ஒருவே மாகிய புன்மைநா முயற்கே", "தெருமர் லுயவே" (குறுந். ௫௭ : 6, ௨௫௦ : 6) ; "அன்னை சொல்லு முய்கம்" (அகநா. ௬௫ : 2.)

3 - 4. "எழுவினி நெஞ்சஞ் செல்கம்" (புறநா. ௨௦௭ : 1); "உய்ய வேண்டினெழு போத நெஞ்சே" (தே. திருஞா. திருப்புகலூர்.) ; "நீயிருந் திங் கென்போது நெஞ்சமே" (திருவாரூர் மும்மணிக். ௨௲) ; "உருகி நெஞ்சே நினைந்திங் கிருந்தென் றொழுதும்மெழு" (திவ். பெரியதிரு ௯. 3 : 2.)

5. வடுகர் முனை : "கல்லா நீண்மொழிக் கதநாய் வடுகர், வல்லா ணருமுனை" (அகநா. ௧௦௭: 11-2.)

6. பல் வேல் : "பல்வே லெழினி" (குறுந். அ௦ : 5) ; "பல்வேற் றிரையற் படர்குவி ராயின்" (பெரும்பாண். 37) ; "பகைபுறங் கண்ட பல்வே லிளைஞரின்" (குறிஞ்சிப். 129.)

கட்டி : "துன்னருங் கடுந்திறற் கங்கன் கட்டி", "போரடு தானைக் கட்டி" (அகநா. ௪௪ : 8, ௨௨௬ : 16.)

7. மொழி பெயர் தேஎம் : ஐங். ௲௨௧ : 4 ; அகநா. ௬௭ : 12, ௨௧௧ : 8.

5 - 7. வடுகர் முனையதாகிய நாடு : "கடுங்குரற் பம்பைக் கதநாய் வடுகர், நெடும்பெருங் குன்றம்" (நற். ௨௧௨ : 5 - 6) ; "வேங்கடத் தும்பர்.........இகன்முனைத் தழீஇய வேறுடைப் பெருநிரை,நனைமுதிர் நறவி

ஞட்பலி கொடுக்கும், வானிணப் புகவின் வடுகர் தேஎத்து ”, “ புடையலங் கழற்காற் புல்லி குன்றத்து, நடையருங் கானம் விலங்கி நோன் சிலைத், தொடையமை பகழித் துவன்றுநிலை வடுகர், பிழியார் மகிழர் கலி சிறந் தார்க்கும், மொழிபெயர் தேஎம் ” (அகநா. உகரு : 3-8, உகூ0 : 13 - 7.)

ழ. “நாஞ்செலி னெவனோ தோழி.........குன்றுவிலங் கியவினவர் சென்ற நாட்டே ” (அகநா. ரு0க : 12 - 7.) (கக)

---

## தலைவி கூற்று

[‘ தலைவி தலைவனது பிரிவை ஆற்றும் வன்மையிலளாயினள் ’ என்று கவலையுற்ற தோழி கேட்கும்படி, “ தலைவர் சென்ற வழியின் கொடுமையை நினைந்தே யான் வருந்துகின்றேனென்பதை உணராமல் இவ்வூர், பிரிவை ஆற்றேனாயினேனென்று வேறொன்றைக் கூறு நின்றது; இஃது என்ன பேதைமை!” என்று தலைவி சொல்லியது.]

கஉ. எறும்பி யளையிற் குறும்பல் சுனைய
உலைக்க லன்ன பாறை யேறிக்
கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்
* கவலைத் தென்பவவர் † சென்ற வாறே
அதுமற் றவலங் கொள்ளாது
‡ நொதுமற் கழறுமிவ் வழுங்க லூரே.

எ - து. ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

ஓதலாந்தையார்.

(ப - ரை.) அவர் சென்ற ஆறு - தலைவர்போன வழியானது, எறும்பி அளையின் - எறும்பின் வளைகளைப்போல, குறு பல் சுனைய - குறுமையையுடைய பலவாகிய சுனையை உடைய, உலை கல் அன்ன - கொல்லனது உலைக்களத்துள்ள பட்டடைக் கல்லைப்போன்ற வெம்மையையுடைய, பாறை ஏறி - பாறையின்மேல் ஏறி, கொடு வில் எயினர் - வளைந்த வில்லையுடைய எயினச் சாதியினர், பகழி மாய்க்கும் - தம் அம்புகளைத் தீட்டுதற்கு இடமாகிய, கவலைத்து - கவர்த்த வழிகளை

---

(பி - ம்.) * கவலைத்தவர் தேர் சென்ற. † தேர் சென்ற. ‡ நொது மலர்க்கழறும், நொதுமற்கலுழும்.

உடையது; என்ப - என்று கண்டோர் கூறுவர்; இ அழுங்கல் ஊர் இந்த ஆரவாரத்தையுடைய ஊரானது, அது அவலம் கொள்ளாது அவ்வழியின் கொடுமையைப்பற்றித் துயரத்தை உட்கொள்ளாமல், நொதுமல் கழறும் அயற்றன்மையையுடைய சொற்களைக் கூறி இடித்துரைக்கும்.

(முடிபு.) அவர் சென்ற ஆறு கவலைத்து என்ப; ஊர் அவலங் கொள்ளாது கழறும்.

(கருத்து.) தலைவர் சென்ற வழி மிக்க கொடுமையையுடையது; அதனைத் தோழி நினைந்திலள்.

(வி-ரை.) எறும்பி-எறும்பு; எறும்பை எறும்பியென வழங்கும் மரபு திருவெறும்பியூரென்னும் சிவதலத்தின் பெயராலும் அறியப் படும்; "எறும்பி யூர்மலை யானெங்க ளீசனே" (தே. திருநா.) அளை - வளை; எறும்பின் வளையை இங்ஙனம் கூறும் வழக்கு, "நுண்பல லெறும்பு கொண்டளைச் செறித்த, வித்தா வல்சி" (அகநா. ௩எஎ: 3 - 4) என்பதனாலும் பெறப்படும். சுனைகள் குறுமையும் பன்மை யும் உடையன வென்பதை, "மீன்க ணற்றதன் சுனையே" (புறநா. கoக: 10) என்பதற்கு, 'மீன்கணென்றது சுனையினது பன்மையும் ........சிறுமையும்' என்றெழுதப்பட்டுள்ள விசேடவுரையும் வலியுறுத் தும். குறும்பல் சுனை - ஒன்றற்கொன்று அண்ணிதாய்ப் பலவாகிய சுனை யென்றலுமாம் (பட். 38, ந.) சுனையபாறை, அன்னபாறையென இயைக்க. உலைக்கல்லை உவமை கூறியது வெம்மைக்கு; "ஞாயிறு காயும் வெவ்வறை" (குறுந். ருஅ: 3) என்பது பாறையின் வெம்மை யைப் புலப்படுத்தல் காண்க. கொடு வில் எயினர் - வழிப்போவாரைக் கொல்லுதற்குக் காரணமாகிய கொடுமையையுடைய வில்லையுடைய எயினர் எனலுமாம்; 'கொடுவில் எயினர் - கொடிய வில்லையுடைய வேடர்' (பட். 266, ந.) மாய்த்தல் - தீட்டுதல்; "மாய்த்த போல" (அகநா. ரு: 12) என்பதன் உரையைப்பார்க்க. மற்று: அசை. நொதுமற்கழறலென்றது, வழியின் கொடுமையை அறிந்து வருந்து தலை உணராமல், பிரிவினால் ஆற்றாதிருந்தாளென்று தோழி சொல் வதை; நொதுமல் - அயல். அழுங்கல் - தடைசெய்தலுமாம். ஊரென்றது தோழியை; தோழியை ஊரென்றல் மரபு; "யானே வன் செய்கோ பொய்க்குமிவ் வூரே" (ஐங். கருச) என்பதன் உரையில், 'பொய்க்கு மிவ் வூரென்றது, தலைமகன் குணங்கூறுகின்ற தோழியை நோக்கியெனக் கொள்க' என்றுள்ள பகுதியினாலும்,

இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே, ஏதில ரென்னு மிவ் வூர்" (குறள், 1129) என்பதன் விசேடவுரையில், 'தன் கருத் தறியாமைபற்றிப் புலந்து சொல்லுகின்றாளாதலின் தோழியை வேறு படுத்து இவ்வூரென்றாள்' (பரிமேல்.) என்றுள்ள பகுதியினாலும் இதனையறியலாம். வழியினது வெம்மையும் ஆறலைகள்வரால் வரும் அச்சமும் வழியினதுமயக்கமும் அவலத்துக்கு ஏதுவாயின.

## மேற்கோளாட்சி

1-2. இயற்சீர்வெள்ளடிஆசிரியம் தொடுக்குங்கால் பா ஒன்றாகத் தொடுக்கப்படும் (தொல். செய். 162, பேர்.); இயற்சீர் வெள்ளடி ஆசிரியத்தில் விரவிவரும் (ஷை. ஷை. 112, இளம், 62, பேர், ந; இ. வி. 745.)

மு. தலைவன் பிரிந்துழி வழியருமை பிறர் கூறக்கேட்டுத் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.); தலைவி கொடுஞ்சொற் சொல்லியது (நம்பி. 170); இயற்சீர்வெள்ளடி ஆசிரியத்தில் விரவி வரும் (யா. வி, 29; யா. கா, ஒழிபு. 4.)

## ஒப்புமைப் பகுதி

1. **சுனையின் துறுமை:** "மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன, இட்டு வாய்ச் சுனைய" (குறுந். ககரு : 1-2.)

1-2. **சுனையை யுடைய பாறை:** "பிடிதுஞ்சு வன்ன வறைமேல நுங்கின், தடிகண் புரையுங் குறுஞ்சுனை" (கலி. க0அ : 40-41); "பாறை நெடுஞ்சுனை" (அகநா. உ : 4.)

3. **கோடுவில் எயினர்:** "மாரி வளம்பெறா வில்லே ருழவர், கூற் றறம் முன்பொடு கொடுவி லேந்தி" (சிலப். கக : 210-11.)

4. **ஆறு கவலைத்து:** "கவலை யாத்த வவல நீளிடை" (குறுந். உஉச : 1.)

6. **அழுங்கலூர்:** குறுந். கச0 : 5, உஅக : 8.

மு. "மண்டுந் திரைவையை சூழ்தஞ்சை வாணற்கு வன்புலியும்
செண்டுங் கொடுத்தகல் செம்பியர் போலன்பர் சென்றுழிமுள்
இண்டுங் கழையும் பயிலும்வெங் கானியல் கேட்டுமிந்நோய்
கண்டுங் கலங்கல்செல்லாதிந்த வூரெற் கழறனன்றே" (தஞ்சை. [266.) (கஉ)

## தலைவன் கூற்று

[பாங்கியிற் கூட்டத்தின்பின் பிரிவாற்றாமல் வருந்திய தன் வேறுபாடுகளை உணர்ந்து கவன்ற தோழியை நோக்கி, "தலைவரது பிரிவினால் எனது உள்ளம் நோய் கொண்டது; கண்களும் அழகிழந்து பசலையை அடைந்தன" என்று தலைவி கூறி ஆற்றாமைக்குக் காரணத்தைப் புலப்படுத்தியது.]

கரு. மாசறக் கழீஇய யானை போலப்
பெரும்பெய லுழந்த விரும்பிணர்த் துறுகல்
பைத * லொருதலைச் சேக்கு நாடன்
நோய்தந் தனனே தோழி
பசலை † யார்ந்தன குவளையங் கண்ணே.

எ - து. தலைவன் தோழியிற் கூட்டங்கூடி ஆற்றும் வகையான் ஆற்றுவித்துப் பிரிய, வேறுபட்ட கிழத்தி தோழிக்கு உரைத்தது.

[தோழியிற் கூட்டம் - தோழியை முன்னிட்டுக்கொண்டு தலைவியைக் கூடியது. ஆற்றும் வகையான் ஆற்றுவித்தல் : பெருநயப்புரைத்தும், பிரியேனென்றும், பிரிந்து மீள்வேனென்றும், இடமணித்தென்றும் கூறி ஆற்றுவித்தல்.]

கபிலர்.

(ப - ரை.) தோழி—, மாசு அற கழீஇய - மேலேயுள்ள புழுதி முற்ற நீங்கும்படி பாகனாற் கழுவப்பட்ட, யானை போல - யானையைப் போல, பெரு பெயல் உழந்த - பெரிய மழையை ஏற்றுத் தூய்மையுற்ற, இரு பிணர் துறுகல் - பெரிய சருச்சரையையுடைய துறுகல்லானது, பைதல் ஒரு தலை - பசுமையையுடைய ஓரிடத்தில், சேக்கும் நாடன் - தங்குகின்ற மலைநாட்டையுடைய தலைவன், நோய் தந்தனன் - காம நோயைத் தந்தான்; அதனால், குவளை அம் கண் - முன்பு குவளை மலரைப் போன்றிருந்த என்னுடைய அழகிய கண்கள், பசலை ஆர்ந்தன - இப்பொழுது பசலை நிறம் நிரம்பப் பெற்றன.

(முடிபு.) தோழி, நாடன் நோய் தந்தனன்; அதனால் என் கண்கள் பசலையார்ந்தன.

---

(பி - ம்.) * லொருதலை சேக்கு. † யார்ந்தநங் குவளை.

(கருத்து.) தலைவன் பிரிவினால் வேறுபாடுகள் உண்டாயின.

(வி - ரை.) மாசு என்றது புழுதியை; யானை தன் தலையிலும் உடம்பிலும் தானே புழுதியை வாரி வீசிக்கொள்ளும் இயல்பினதென்பது இங்கே அறிதற்குரியது; "நீறாடிய களிறு" (பட். 48.) தன்பாலுள்ள புழுதி முற்றும் நீங்கும்படி கழுவப்பட்ட யானையைப் போலத் துறுகல்லிலுள்ள பல மாசுகளும் அறக்கழுவவேண்டுதலின் பெரும்பெயல் என்றாள்; இங்கே கூறப்பட்ட இவ்வுவமை இந்நூலின் உ௭௬ - ஆம் செய்யுளில், "மழைகெழு மறந்த மாயிருந் துறுகல், துகள்சூழ் யானையிற் பொலியத் தோன்றும்" என்று எதிர்மறை முகத்தால் ஆளப்பட்டிருத்தல் காண்க. இருமை - கருமையுமாம். பிணர் - நால்வகை ஊறுகளுள் ஒன்று; இதனை ஜர்ஜ்ஜரா வென்பர் வடமொழியாளர்; அது தமிழில் சருச்சரையென வழங்கும்; இக்காலத்தில் சுரசுரப்பென்பதும் அது. துறுகல் - உருண்டைக்கல்; பொற்றையென வழங்கும்; நெருங்கிய மலையென்பர் நச்சினார்க்கினியர். பைதல் - ஈரமுமாம். நாடன் - குறிஞ்சி நிலத்தலைவன்; குறுந். ந: 4, விசேடவுரையைப் பார்க்க. நோயென்றது பிரிவாற்றாமையால் மிக்க காமநோயை (கலி. கஎ : 9,ந.) அஃது உடம்பின்மெலிவுக்குக் காரணமாவது (சிலப். கக: 79, அரும்பத.) பிரிவாற்றாத மகளிருக்குக் கண் பசத்தல் இயல்பு. குவளையங்கண் என்றது பசலையார்வதற்கு முன் இருந்த நிலையைப் புலப்படுத்தியபடி; கழிந்ததற் கிரங்குதலால் தற்புகழ்ச்சியாகாது.

துறுகல் தன் இயல்பினை மறைக்கும் மாசு நீங்கப் பெற்ற நாடன் அவவியல்பிற்கு மாறாக என் கண்களின் இயல்பை மறைக்கும் பசலையை வளரச் செய்தனனென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

மு. பாங்கி தலைவனை இயற்பழித்தது (தொல். களவு. 23, இளம், ந.)

## ஒப்புமைப் பகுதி

2. மழை துறுகல்லைக் கழுவுதல்: "வான்கண் கழீஇய வகலறை" (குறிஞ்சிப். 98.)

1-2. துறுகல்லிற்கு யானை உவமை: "கூழை யிரும்பிடிக் கைகரந் தன்ன, கேழிருந் துறுகல்", "பொருத யானைப் புகர்முகங் கடுப்ப, மன்றத் துறுகன் மீமிசைப் பலவுடன், ஒண்செங் காந்த ளவிழு நாடன்"

(குறுந். கசக: 4-5, உ௪௪: 1-3); "யானை.........தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு, வேறுபல் பூளையொ டுழிஞை சூடி" (பட். 231-5); "காழ்மண் டெஃகங் களிற்றுமுகம் பாய்ந்தென, ஊழ்மல ரொழி முகை யுயர்முகந் தோயத், துறுகல் சுற்றிய சோலை வாழை", "களிறு மலைந் தன்ன கண்கூடு துறுகல்" (மலைபடு. 129 - 31, 384); "குறுங்கா லிற்றிப் புன்றலை நெடுவீழ், இரும்பிணர்த் துறுகற் றீண்டி வளிபொரப், பெருங்கை யானை நிவப்பிற் றூங்கும்" (அகநா. ௬எ : 6 - 8.)

4. தலைவியின் நோய்: (குறுந். உஉச : 3, ௪00 : 7); "ஆற்றனோ யடவிவ ளணிவாட", "நோய்மலி நெஞ்சமொ டினைய ரேழி", "நோயட வருந்தியும்" (கலி. கஎ : 9, உஎ : 22, ௪௪ : 14.)

தலைவன் நோய் தருதல்: "உள்ளூருஞ் சிந்தைநோ யெனக்கே தந்து" (திவ். திருநெடுந்தாண்டகம், 23.)

5. கண் பசலையார்தல்: "காமங் கொல்லிவள் கண்பசந் ததுவே", "நெய்த லுண்கண் பைதல் கூர", "கண்ணுந் தோளுந் தண்ணறுங் கதுப்பும், பழநல மிழந்து பசலை பாய" (நற். ௩௫ : 12, கக௩ : 7, உகக : 1-2); "பூப்போ லுண்கண் பொன்போர்த் தனவே", "உண்கண் பசப்ப தெவன்கொ லன்னாய்", "எதி லாளர்க்குப் பசந்தவென் கண்ணே", "கய லெனக் கருதிய வுண்கண், பயலைக் கொல்கா வாகுதல் பெறினே", "நயந் தோ ருண்கண் பயந்துபனி மல்க", "பசப்பணிந் தனவான் மகிழ்ந வென் கண்ணே", "என்செயப் பசக்குந் தோழியென் கண்ணே", "பல்லித ழுண்கண் பசத்தன்மற் றெவனோ", "பயந்தன மாதோநீ நயந் தோள் கண்ணே", "பனிமலர் நெடுங்கண் பசலை பாய", "கொன்றைப் பூவிற் பசந்த வுண்கண்" (ஐங். க௬ : 4, உக : 4, ௩௪ : 4, ௩௬ : 4-5, ௩எ : 2, ௪௫ : 4, க௬க : 5, கஎ0 : 4, உ௬௪ : 4, ௪எஎ : 1, ௫00 : 1); "பல்லி தழ் மலருண்கண் பசப்ப", "பொன்னெனப் பசந்தகண் போதெழி னலஞ்செல" (கலி. ௪௫ : 11, எஎ : 12); "கண்பசந்து" (அகநா. க௪௬ : 11); "முயக்கிடைத் தண்வளி போழப் பயப்புற்ற, பேதை பெரு மழைக் கண்", "கண்ணின் பசப்போ" (குறள், 1239-40.)

4-5. தலைவனால் நோயும் பசலையும் உண்டாதல்: "ஆய்மல ருண்கண் பசப்பச், சேய்மலை நாடன் செய்த நோயே" (ஐங். உ௪உ : 4-5); "அரிமத ருண்கண் பசப்பநோய் செய்யும், பெருமான்" (கலி. அஉ : 20-21); "சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு, நோயும் பசலையுந் தந்து" (குறள், 1183); "பயப்பூரச், சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே" (தே. திருஞா. திருச்செங்காட்டங்குடி.) (க௩)

## தலைவன் கூற்று

[பாங்கியினாற் குறைமறுக்கப்பட்ட தலைவன், "என்னைத் துன்புறுத்தியவள் இன்னாளென்பதை யாவரும் அறிந்து கூறும்படி மடன்மாவூர்ந்து மறுகிற் செல்வேன்" என்று அப்பாங்கி கேட்பக் கூறியது.]

கச. அமிழ்துபொதி செந்நா * வஞ்ச வந்த
வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவை
பெறுகதில் லம்ம யானே பெற்றாங் [கைப்
கறிகதில் லம்மவிவ் வூரே மறுகில்
நல்லோள் கணவ னிவனெனப்
பல்லோர் கூறயா † நாணுகஞ் சிறிதே.

எ - து. ‡ "மடன்மா கூறு மிடனுமா ருண்டே" என்பதனால் தோழி குறைமறுத்துழித் தலைமகன், மடலேறுவலென்பதுபடச் சொல்லியது.

[குறை - காரியம்; தலைவனைத் தலைவி ஏற்றுக் கொள்ளச் செய்தல். பட - குறிப்பினாற் புலப்பட.]

தொல்கபிலர்.

(ப - ரை.) அமிழ்து பொதி - அமுதத்தின் இனிமை நிரம்பிய, செ நா - செவ்விய நாவானது, அஞ்ச - அஞ்சும்படி, வந்த - முளைத்த, வார்ந்து இலங்கு - நேராகி விளங்குகின்ற, வை எயிறு - கூர்மையாகிய பற்களையும், சின்மொழி - சிலவாகிய சொற்களையும் உடைய, அரிவையை - தலைவியை, யான் பெறுகதில் - நான் மடன்மா ஏறுதலாற் பெறுவேனாக; பெற்றாங்கு - பெற்ற பின்பு, இ ஊர் - இந்த ஊரிலுள்ளார், அறிகதில் - அறிவாராக; பல்லோர் - பலர், மறுகில் - வீதியில், நல்லோள் கணவன் இவன் என கூற - இந்நல்லாளுடைய தலைவன் இவனென்று சொல்லாநிற்க, யாம் சிறிது நாணுகம் - நாம் சிறிது நாணுவேம்!

(பி - ம்.) * வஞ்சி. † நண்ணுகஞ்.
‡ தோல். களவு. 11.

(முடிபு.) யான் பெறுக; ஊர் அறிக; பல்லோர் கூற யாம் நாணுகம்!

(கருத்து.) யான் மடலேறுவேன்.

(வி - ரை.) அமிழ்தென்றது எயிற்றில் ஊறிய நீரை. அமிழ்து பொதி எயிறு, வந்த எயிறு எனக்கூட்டுக. பற்கள் கூரியனவாதலின் நா அஞ்சியது; அஞ்சினமையின் அது சிலமொழி கூறியது. அரிவையென்றது பருவங்குறியாமற் பெண்ணொன்னுந் துணையாய் நின்றது, "செறியெயிற் றரிவை" (குறுந். உ : 4) என்புழிப்போல. தில்: விழைவுப்பொருளில் வந்தது. சின்மொழி - சிலவாகிய மொழி (கலி. உகூ : 10, ந.); மென்மொழி (பழ. 226, உரை) என்றும், மெத்தென்றமொழி (புறநா. கசுசு : 16, உரை) என்றும் கூறுவார் உளர். யாமென்றது தலைவியையும் உளப்படுத்தி. மடலேறத் தொடங்கும்போது நாணத்தை முற்ற நீத்தவனாதலின், 'சிறிது நாணுகம்' என்றான்.

தலைவன் தன்னுடைய உருவத்தையும் தலைவியினது உருவத்தையும் எழுதியமைத்த படத்தைக் கையிலேந்தி மடன்மாவிலேறி மறுகிற் செல்வானாதலின், அந்நிலை, இன்னாள் கணவன் இவனென்று ஊரினர் அறிதற்கு ஏதுவாயிற்று.

## மேற்கோளாட்சி

2. வார்தலென்னும் உரிச்சொல் நேர்தலென்னும் பொருளில் வந்தது (தொல். உரி. 23, தெய்வச், 19, ந; இ. வி. 284.)

3. விழைவின் தில் தன்மையிடத்திற்குரியது (தொல். இடை.12, இளம்.); ககர உயிர்மெய், வியங்கோள் வினைமுற்று விகுதியாகவரும் (நன். 337, மயிலை, 338, சங், வி; இ. வி. 239.)

2-3. தில்லென்னும் இடைச்சொல் விழைவின்கண் வந்தது (தொல். இடை. 5, இளம், சே, கல், தெய்வச், ந; நன். 430, மயிலை, 431, சங், வி.)

3-4. தில்லென்னும் இடைச்சொல் காலம் பற்றி வந்தது (தொல். இடை. 5, இளம், சே, கல்; நன். 430, மயிலை, 431, சங், வி; இ. வி. 264.)

2 - 4. தில் விழைவின்கண் வந்தது (இ. வி. 264.)

## ஒப்புமைப் பகுதி

2. **வார்ந்திலங்கு வையெயிறு:** "*வையெயிற்று, வார்ந்த வாயர்*" (மதுரைக். 413-4); "*வாஅர்ந் திலங்கு வாலெயிற்று*" (நற். கக௲ : 7.)

**வையெயிறு:** நற். உகு : 7; அகநா. ௩உ௫ : 11.

**சின்மொழி:** "*சிலமெல் லியவே கிளவி*" (குறுந். எ0 : 4); "*சின் மொழித் துவர்வாய்*" (நற். கக0 : 9); "*சின்மொழி*" (கலி. உக: 10, கஉ௫ : 16, க௩உ : 13); "*முள்ளெயிற்றுச், சின்மொழி யரிவை*" (அகநா. ௩௬க : 13-4); "*சிலசொல்லிற் பலகூந்தனின், நிலைக்கொத்த நின் றுணைத்துணைவியர்*" (புறநா. க௬௬ : 16-7); "*சின்மொழியார்*" (நாலடி. 362); "*முள்ளெயி றிலங்கச் செவ்வாய் திறந்து, சில்லென் கிளவி மெல்லென மிழற்றி*" (பெருங். ச. 5 : 16-7); "*சிற்றம் பல மன்ன சின்மொழியை*" (சிற். 343); "*திறமலி சின்மொழிச் செந்துவர் வாயினை*" (திருவாரூர் மும்மணிக். 24); "*சின்மொழி*" (திவ். திரு விருத்தம், 19-20.)

1 - 2. **அமிழ்து பொதி எயிறு:** "*முள்ளெயிற், றமிழ்த மூறுஞ் செவ்வாய்*" (குறுந். உஅகு : 1-2); "*முள்ளுறழ் முளையெயிற் றமிழ் தூறுந் தீநீரை*", "*ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றாய்*" (கலி. ச : 13, உ0 : 11); "*கூரெயிற், றமிழ்த மூறுஞ் செவ்வாய்*" (அகநா. ௩௫ : 24-5); "*முத்துக்கூர்த் தன்ன முள்ளெயிற் றமுதம்*" (மணி. கஅ : 72); "*அமர ராக்கிய வமிழ்தெனக் கினையோள், தன்முளை யெயிற்றுநீர் தானெனை வயின்றும்*" (பெருங். ௩. 14 : 162-3); "*முள்வா யெயிற்றா றமுதம்*" (சீவக. 491.)

**நா எயிற்றை அந்தசுதலும் சில மொழிதலும்:** "*நல்கி ளுவஞ்சு முள்ளெயிற்று மகளிர்*" (புறநா. ௩௬க : 16); "*கூரெயிறு நாப் போழ்த லஞ்சியஞ்சி, உழன்மாலைத் தீங்கிளவி யொன்றிரண்டு தான் மிழற்று மொருநாட் காறும்*" (சீவக. 1353.)

3. **பெறுகதில்லம்ம:** "*பெறுகதில் லம்மவிவ் வூருமோர் பெற்றி*" (சிலப். உச : பாட்டுமடை.)

4-5. **மறுகில் மடலேறுதல்:** குறுந். கஎ : 1-3, ஒப்பு.

4-6. **மடலேறும்போது தலைவனுக்குரிய தலைவியை ஊரினர் அறிதல்:** "*இன்னள் செய்த திதுவென முன்னின், றவள்பழி நுவலு மிவ்வூர்*" (குறுந். கஎ௩ : 5-6.) (கச)

## செவிலித்தாய் கூற்று

[தலைவி தமரைப் பிரிந்து தலைவனுடன் சென்றதைத் தோழியால் அறிந்த செவிலி, "நம் மகளும் அவள் அன்பனும் பாலையைக் கடந்து சென்று இதற்குள் மணம் புரிந்து கொண்டிருப்பர்; அதனால் அவர்களுடைய நட்பு உலகறிய உறுதிபெற்றதாகும்" என்று நற்றாய்க்குக் கூறியது.]

கரு. பறைபடப் பணில மார்ப்ப விறைகொள்பு
தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய
* நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி யாய்கழற்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே.

எ - து. உடன்போயின பின்றைத் தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள்; நிற்பச் செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.

[உடன் போயின பின்றை - தலைவி தன் தமரைப்பிரிந்து தலைவனுடன் போனபின்பு. அறத்தொடு நிற்றல் - தலைவி இன்ன தலைவனுடன் நட்புப் பூண்டு சென்றாளென்ற உண்மையைக் கூறி அத்தலைவியின் கற்புக்குச் சார்பாக நிற்றல். நற்றாய் - தலைவியை ஈன்றதாய்.]

ஔவையார்.

(ப - ரை.) தோழி—, ஆய்கழல் - அழகிய வீரக்கழலையும், செ இலை - செம்மையாகிய இலையையுடைய, வெள் வேல் - வெள்ளிய வேலையும் கொண்ட, விடலையொடு - தலைவனோடு, தொகுவளை முன் கை - பலவாகத்தொக்க வளைகளைப்பூண்ட முன் கைகளையுடைய, மடந்தை நட்பு - நின்மகள்செய்த நட்பானது; தொல் முது ஆலத்து பொதியில் - மிகப்பழைய ஆலமரத்தடியின்கண் உள்ள பொதுவிடத்தில், இறைகொள்பு தோன்றிய - தங்குதலைக்கொண்டு தோன்றிய, நாலூர் கோசர் நன் மொழிபோல - நான்கு ஊரிலுள்ள கோசரது நன்மையை

(பி - ம்.) * நல்லூர்க்கோசர்.

யுடைய மொழி உண்மையாவதைப் போல, பறை பட - முரசு முழங்கவும், பணிலம் ஆர்ப்ப - சங்கு ஒலிக்கவும் மணம் செய்தலால், வாய் ஆகின்று - உண்மை ஆகியது.

(முடிபு.) விடலையொடு மடந்தை நட்பு வாயாகின்று.

(**கருத்து.**) தலைவி தன் தலைவனுடன் சென்றனள்.

(வி - ரை.) பறையும் சங்கும் மங்கலநாளில் முழங்குவன ; " மத்தளங் கொட்ட வரிசங்க நின்றூத, முத்துடைத் தாம நிரைதாழ்ந்த பந்தற்கீழ், மைத்துன னம்பி மதுசூதன் வந்தென்னைக், கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் றோழீநான் " (திவ். நாச்சியார். ௬ : 6) என்பதிலும் மணத்தில் இவ்விரண்டும் கூறப்படுதல் காண்க; பறை யென்றது இங்கே தோற்கருவிகளைக் குறித்து நின்றது; " பல்லா ரறியப் பறையறைந்து நாட்கேட்டுக், கல்யாணஞ் செய்து " (நாலடி. 86) என்புழிப்போல. பொதியில்=பொது இல் - அம்பலம் (முருகு. 226, ந.) பலர் கூடியிருத்தற்கேற்ற கிளைப்பரப்பும் நிழலுமுடைமை யின் ஆலமரத்தின் அடியிலே அவைகூடுதல் பண்டை வழக்கமென்று தெரிகின்றது ; " வெல்போ ரிராம னருமறைக் கவித்த, பல்வீ ழாலம் போல " (அகநா. ௭௦ : 15-6) என்பதனாலும் அதன் உரையாலும் இதனை அறியலாகும். கோசர் : மோகூர்ப் பழையனுடைய நியாய சபையில் இருந்த ஒருவகை வீரர்; இவர்கள் நான்கு பிரிவினர்க ளென்று தெரிகின்றது (**மதுரைக்.** 508-9, ந.); நாலூர் - ஓரூருமாம். விடலை - பாலைத்திணைக்குரிய தலைவன் பெயர்.

கொடுப்போரின்றியும் கரணம் நிகழ்வதுண்டாதலின், உடன் போக்கின்பின் இருவரும் மணம்புரிந்துகொள்வதனால் மடந்தை யினது நட்பானது உலகறிய உண்மையாகுமென்றாள் செவிலி.

## மேற்கோளாட்சி

**மு.** தலைவி தலைவனுடன் சென்றமையறிந்து தோழியோடு பொருந்திக் கற்பின் ஆக்கத்து நிற்றற்கண் செவிலிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 25, **இளம்.**); ' இதனுள் விடலையொடு மடந்தை நட்பு, பறைபடப் பணில மார்ப்ப இறைகொண்டு நாலூர்க் கோசர் நன்மொழிபோல வாயா யிற்றெனச் செவிலி நற்றாய்க்குக் கூறினமையானும், விடலையெனப் பாலை நிலத்திற்குரிய தலைவன் பெயர் கூறினமையானும் கொடுப்போ ரின்றியும் கரணம் நிகழ்ந்தவாறு ' (ஷை. கற்பு. 2, **இளம்**, ந ; இ. வி. 528) ; உடன்

போயினபின் செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநின்றது (தொல். களவு 24, ந.); செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநின்றது (நம்பி. 185.)

## ஒப்புமைப் பகுதி

3. கோசர் : குறுந். எங : 4 ; புறநா. கசுக : 9, அடிக்.

2-3. ஆலம் பொதியிற் கோசர் : "துனைகா லன்ன புனைதேர்க் கோசர், தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்" (அகநா. உருக: 7-8) "வலம்புரி கோச ரவைக்களத் தானும்" (புறநா. உஅங: 6.)

4. ஆகின்று : குறுந். கசுசு : 4, உசஅ : 3, உருஅ : 2, உஎக: 5, ஙகச : 7.

3-4. கோசர்மொழி உண்மையாதல்: "வாய்மொழி நிலைஇய சேண் விளங்கு நல்லிசை, வளங்கெழு கோசர்" (அகநா. உ௦ரு : 8-9.)

5. சேயிலை வெள்வேல் : "சேயிலை வெள்வேல், மதியுடம் பட்ட மையணற் காளை" (அகநா. உஉக : 5-6.)

இலைவேல் : "திருந்திலை நெடுவேல்" (புறநா. கஅ௦ : 13.)

4-5. கழல்விடலை : "வில்லோன் காலன கழலே" (குறுந். எ : 1.)

6. தொதுவளை : "தொக்க வளையுமுடைத்தொன்மைக், கோலம்" (திருவா. கோத்தும்பி.)

வளைமுன்கை : குறுந். ருசு: 3.

4-6. விடலையொடு நட்பு வாயாதல்: குறுந். ங. (கரு)

---

## தோழி கூற்று

[பொருளீட்டுப்பொருட்டுத் தலைவன் பிரிந்த காலத்தில், 'அவர் நம்மை நினைப்பாரோ, நினையாரோ' என்று கருதிக் கவலையுற்ற தலைவியை நோக்கி, "அவர் சென்ற பாலை நிலத்தில் ஆண்பல்லி பெண் பல்லியை அழைத்தலைக் கேட்டு நின்னை நினைந்து மீண்டு வருவர்" என்று கூறி ஆற்றுவித்தது.]

கசு. உள்ளார் கொல்லோ தோழி * கள்வர்தம்
பொன்புனை பகழி † செப்பங் கொண்மார்
உகிர்நுதி புரட்டு மோசை போலச்
செங்காற் பல்லி தன்றுணை பயிரும்
அங்காற் கள்ளியங் காடிறந் தோரே.

எ - து. பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைமகள் ஆற்றாமை கண்டு தோழி கூறியது.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) தோழி—, கள்வர் - ஆறலை கள்வர், செப்பம் கொண்மார் - செப்பஞ் செய்யும்பொருட்டு, தம் பொன் புனை பகழி - இரும்பிறற் செய்யப்பட்ட தம் அம்பை, உகிர் நுதி - நகநுனியிலே, புரட்டும் ஓசைபோல - புரட்டுதலால் உண்டாகிய ஒலியைப்போல, செ கால் பல்லி - செம்மையாகிய காலையுடைய ஆண்பல்லியானது, தன் துணை பயிரும்-தன் துணையாகிய பெண்பல்லியை அழைத்தற்கு இடமாகிய, அம் கால் - அழகிய அடியையுடைய, கள்ளியங்காடு இறந்தோர் - கள்ளிகளையுடைய பாலையைக் கடந்து பொருள்வயிற் சென்ற தலைவர், உள்ளார்கொல் - நம்மை நினையாரோ ?

(முடிபு.) தோழி, காடிறந்தோர் உள்ளார்கொல்?

(கருத்து.) தலைவர் விரைவில் வந்துவிடுவர்.

(வி - ரை.) பொன்னென்றது இரும்பை ; "பொன்னியற் புனைதோட்டியான்", "விளங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகை" (புறநா. கச : 3, கரு : 12) என்பவற்றையும் அவற்றின் உரைகளையும், "மின்னுந் தமனியமும் வெற்றிரும்பு மொன்றாகிப், பொன்னின் பெயர்படைத்தாற் போலாதே" (தொல். புறத். 35, ந. மேற்.) என்பதையும் பார்க்க. செப்பமென்றது இங்கே கூர்மையை. பலகாலும் வழிப்போவாரை எய்து மழுங்கியதாதலின் அம்பு செப்பங் கொள்ளவேண்டுவதாயிற்று ; "கொடுவி லெயினர் பகழி மாய்க்கும்" (குறுந். கஉ : 3) என்று முன்னும் கூறப்பட்டது. பயிர்தல் - அழைத்தல் ; "புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும், அத்தம்" (குறுந். எக : 4-5.) அங்காற்கள்ளி யென்றாள், அகில் உண்டாதலின் ;

(பி - ம்.) * கானவர். † செப்பங் காண்மார்.

" அகில்படு கள்ளியங் காடிறந் தோரே " (ஐங். அதிகப்பாட்டு.) பா
நிலத்திலுள்ள கள்ளியிற் பல்லி இருந்து ஒலிக்கும் செய்தி,

" கள்ளி முள்ளரைப் பொருந்திச் செல்லுநர்க்
குறுவது கூறுஞ் சிறுசெங் நாவின்
மணியோர்த் தன்ன தெண்குரற்
கணிவாய்ப் பல்லிய காடிறந் தோரே " (அகநா. கஅக : 12-5)

என்பதனாலும் பெறப்படும்.

பல்லி தன் துணையை அழைக்கும் பாலைநிலத்திற் செல்பவர் அது கேட்டு நின்னை நினைந்து மீண்டு வருவர்; ஆதலின் நீ ஆற்றி யிருப்பாயாக வென்பது குறிப்பு.

## ஒப்புமைப் பகுதி

1. உள்ளார்கொல்லோ தோழி: குறுந். கள : 1, உகஉ : 1; நற். உசக : 1; ஐங். சஅசு : 1, ப. 143 : 1-4; அகநா. உஙரு : 2. (கசு)

---

## தலைவன் கூற்று

[தன்குறையை நிறைவேற்ற உடன்படாத தோழியை நோக்கித் தலைவன், " காமம் மிக்கவர்கள் மடலேறுவார்கள்; வரைபாய்தல் முதலியவற்றையும் செய்யத் துணிவார்கள் " என்று தான் மடலேற எண்ணியிருத்தலை உலகின்மேல் வைத்துக் கூறியது.]

கள. மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப
மறுகி னார்க்கவும் படுப
பிறிது மாகுப காமங்* காழ்க் கொளினே.

எ - து. தோழியிற் கூட்டம் வேண்டிப் பின்னின்ற தலைமகன், தோழி குறைமறுமற் கூறியது.

பேரெயின் முறுவலார்.

---

(பி - ம்.) * காழ்கொளினே.

(ப - ரை.) காமம் காழ்க்கொளின் - காமநோயானது முதிர்வுற்றால், மடலும் - பனை மடலையும், மா என - குதிரையெனக்கொண்டு, ஊர்ப - ஆடவர் அதனை ஊர்வர்; குவி முகிழ் எருக்கங் கண்ணியும் - குவிந்த அரும்பையுடைய எருக்கம் பூமாலையையும், பூ என - அடையாள மாலையைப்போல, சூடுப - தலையில் அணிந்துகொள்வர்; மறுகின் ஆர்க்கவும் படுப - வீதியில் பிறர் தம்மைக்கண்டு ஆரவாரிக்கவும் படுவர்; பிறிதும் ஆகுப - தம் கருத்து முற்றாதாயின் சாதலுக்குரிய வரைபாய்தல் முதலிய வேறு செயலையுடையரும் ஆவர்.

(முடிபு.) காமம் காழ்க்கொளின் மடலும் ஊர்ப; கண்ணியுஞ் சூடுப; ஆர்க்கவும் படுப; பிறிதும் ஆகுப.

(கருத்து.) நான் மடலூர எண்ணியுள்ளேன்.

(வி - ரை.) தனது உட்கோளை உலகின்மேல் வைத்து, காமம் முற்றப்பெற்றோர் இவை செய்வரென்றமையால் ‘யானும் அதுசெய்வேன்’ என்பது குறிப்பாற் புலப்படும்.

காமம் மிக்க தலைவன் பனைமடலால் குதிரையைப்போல ஓருருவம் அமைத்து அதன் கழுத்தில் மணி, மாலை முதலியவற்றைப் பூட்டி, தன் உருவத்தையும் தலைவியின் உருவத்தையும் ஒரு படத்தில் எழுதிக் கையிலேந்தி அதன்மேல் யாவரும் அறிய ஊர்ந்துவருதலை மடலேறுதலென்பர்; அங்ஙனம் அவன் வருவதைக் கண்ட ஊரினர் படமுதலியவற்றால், ‘இன்னவளுக்கும் இவனுக்கும் நட்பு உண்டு’ என்பதை அறிந்து அதனை வெளிப்படக் கூறிப் பழிப்பர்; அது கேட்டுத் தமர் மணம்புரிவிப்பர் (கலி. ௧௩௪.) மடலேறும் தலைவன் நீறு, எருக்கமாலை, ஆவிரம்பூமாலை முதலியவற்றை அணிந்து வருதல் வழக்கமென்று தெரிகின்றது. மடலேற்றைக் குறித்த வேறு பல செய்திகளைத் திவ்யப் பிரபந்தத்திலுள்ள பெரிய திருமடல், சிறிய திருமடலென்பவற்றின் வியாக்கியானங்களால் உணரலாம்.

மா - குதிரை. மடல் - பனைமடல். மடலும்: உம்மை, இழிவு சிறப்பு. ‘குவிமுகிழ்’ என்றது முதலுக்கேற்ற அடை. கண்ணி தலையிற் புனைவதாதலின் சூடுபவென்றான். கண்ணியும்: உம்மை, இழிவு சிறப்பு. மறுகின்கண் யாவரும் அறியவருதலின், ‘மறுகின் ஆர்க்கவும் படுப’ என்றான். ஆர்ப்பவர், மடலேறிய கோலத்தைக்கண்ட ஊரினர். ‘இவன் மடலேறும்படி செய்தவள் இத்தலைவி’ என்றும் பிறவாறும் பலர்கூறுதலை ஆர்த்தலென்றான்; இதனை,

“பொன்னே ராவிரைப் புதுமலர் மிடைந்த
பன்னூன் மாலைப் பனைபடு கலிமாப்
பூண்மணி கறங்க வேறி நாணட்
டழிபட றுண்ணேய் வழிவழி சிறப்ப
இன்னள் செய்த திதுவென முன்னின்
றவள்பழி நுவலு மிவ்வூர்” (குறுந். ௧௭௩)

என்பதிற் காண்க. ஆர்க்கவும்: உம்மை, இறந்தது தழீஇயது. பிறிதும் என்றது காமம் முற்றியவர் செய்வனவற்றுள் மடலேறுதற்கு இனமாகிய வேறு செயல்களையுடைய நிலையை. அவை வரைபாய்தல் முதலியன;

“ஆராக் காம மடூஉநின் றலைப்ப
இறுவரை வீழ்நர்” (அகநா. ௩௨௨ : 3-4),

“விரையூர் குழலியர் தந்தசிந் தாகுல வெள்ளநிறைக்
கரையூர் பொழுதிளங் காளையர் தாங்கிழி கைப்பிடித்துத்
தரையூர் தொறும்பெண்ணை மாமட லூர்வர் தவிர்ந்துபின்னும்
வரையூர்வர் தஞ்சையர் கோன்வாணன் மாறையில் வாணுதலே”
(தஞ்சை. 102)

என்பவற்றால் இதனை அறியலாகும்.

காமம் காழ்க்கொளினென்பதற்குக் காமமாகிய கனி பரலையுடையதானுலென்று கொண்டு, பரலென்பதற்குப் பரல்போன்ற தடையென்று உருவக ஆற்றாற் பொருள்செய்து காமம் நிறைவேறுமல் தடைப்படுமாயின் என்று உரைகோடலும் ஒன்று; “காமத்துக் காழில் கனி” (குறள், 1191) என்றவிடத்துப் பரிமேலழகர் எழுதிய, ‘காம நுகர்ச்சியென்னும், பரலில்லாத கனியை’ என்ற பதவுரையையும், ‘தடையின்றி நுகரப்படுதலின் காழில்கனி யென்று கூறினுள்’ என்ற விசேடவுரையையும் காண்க.

## மேற்கோளாட்சி

1. மடலென்பது புறக்காழுடையனவாகிய மரங்களுக்கு வரும் (தொல். மரபு. 86, பேர்.)

4. ‘பிறிதுமாகுப காமங்காழ்க் கொளினேயென்புழி யானும் அது செய்வேனெனப் பொருள் கொள்ளுதல் குறிப்பு’ (இ. கொ. 89.)

மு. பாங்கிக்குத் தலைவன் மடலேறுதலை உலகின்மேல் வைத்து உரைத்தது (இறை. 9; நம்பி. 145; இ. வி. 509); தலைவன் மடலேறுதல் (தொல். களவு. 11, இளம், ந.); 'கலக்கமென்பது சொல்லத் தகாதன சொல்லுதல். இன்னும் இதனானே, தலைமகற்காயின் அதனினூங்கு வருவதோர் கலக்கமும் உளதாம் என்றது; அவை மடலூர்தலே, வரைபாய்தலே யென்றற்றொடக்கத்தன.........இதனுள் சாதல் எல்லையாகக் கூறியவாறு கண்டுகொள்க' (தொல். மெய்ப். 22, பேர்.); 'மடலேறுவே னென்றது' (தமிழ்நெறி. 17); மடற்றிறங்கூறல் (களவியற். 34); குறிப்பெச்சம் வந்தது (நன். 359, மயிலை.)

## ஒப்புமைப் பகுதி

1. மடல்மா: "மடன்மா கூறு மிடனுமா ருண்டே" (தொல். களவு. 11); "மாவென மதித்து மடலூர்ந் தாங்கு" (நற். ௩௪உ : 1); "படரும் பனையீன்ற மாவுஞ் சுடரிழை, நல்கியா ணல்கி யவை", "மாமேலே னென்று மடல்புனையா நீந்துவேன்", "மாவென் றுணர்மின் மடலன்று", "மடன்மாமேல், மன்றம் படர்வித் தவள்" (கலி. கௌஅ : 12-3, கௌகூ : 15, க௪0 : 3, க௪க : 9-10.)

2. குவிமுகிழ் எருக்கு: "குவியிண ரெருக்கின் றதர்பூங் கண்ணி" (அகநா. ௩0க: 11); "குவியிணர்ப், புல்லிலை யெருக்கம்" (புறநா. க0சு : 1-2); "குவிமுகி ழெருக்கிற் கோத்த மாலையன்" (மணி. ௩ : 105); "குனிகா யெருக்கின் குவிமுகிழ் விண்டலொடு" (தணநாற்பது.)

1-2. மடலேறுவார் எருக்கங்கண்ணியை அணிதல்: "மடலே காமந் தந்த தலரே, மிடைபூ வெருக்கி னலர்தந் தன்றே" (நற். கருஉ : 1-2); "எருக்கின், பிணையலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப, ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து" (கலி. கௌகூ : 8-10); "ஈசன சாந்து மெருக்கு மணிந்தோர் கிழிபிடித்துப், பாய்சின மாவென வேறுவர் சீறூர்ப் பனை மடலே" (சிற். 74); "எருக்கங் கண்ணியுஞ் சூடி விருப்புடை, இடப்பான் மடந்தை நொடிப்போழ்து தணப்பினும், மடலூர் குறிப்புத் தோன்ற" (திருவாரூர் நான்மணி. உ௪ : 12-4.)

1-3. மடலேறுவார் எருக்கங்கண்ணி சூடி மறுகில் வருதல்: "எருக்கொடு பிணித்தியாத்து, மல்லலூர் மறுகின்க ணிவட்பாடு மிஃதொத்தன்" (கலி. கௌஅ: 9-10); "மங்கையர்தங் கண்ணான் மயங்கினார் வெள்ளெலும்பும், துங்க வெருக்குந் தொடுத்தணிந் - தங்கமெலாம், வெந்தேறு சாம்பன் மிகவணிந்து வீதிதொறும், வந்தேறி யூர்வர் மடல்" (கிளவித்தெளிவு.)

மடலேறி மறுகில் வருதல்: (குறுந். கச: 4-6, கஎ௩: 2-6, க௮௨: 1-5); "*பல்லார்நக் கெள்ளப் படுமடன் மாவேறி, மல்லலூ ராங்கட் படுமே*", "*வருந்தமா ஊர்ந்து மறுகின்கட் பாட*" (கலி. கக: 22-3, கசக: 22); "*மடன்மாமேல், நின்றேன் மறுகிடையே நேர்ந்து*" (திணைமா. 16.)

4. பிறிது : குறுந். உகஅ : 8.

காமம் காழ்க்கோளல்: "*நிறையு முண்டோ காமங் காழ்க் கொளின்*" (மணி. ௫ : 20); "*காமத் தியற்கை காழ்ப்பட வுணர்ந்து*" (பெருங். க. 36 : 7); "*காமங் காழ்கொளீஇ*" (சீவக. 1941.)

1-4. காமநோய் மிகுவதனால் மடலூர்தல்: "*மற்றிந்நோய், பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய், மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி, நிறுக்குவென் போல்வல்யா னீபடு பழியே*", "*ஒங் கிரும் பெண்ணை மடலூர்ந்தென் னெவ்வநோய், தாங்குத றேற்றா விடும் பைக் குயிர்ப்பாக, வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது, பாடுவேன் பாய்மா நிறுத்து*" (கலி. ௫௮: 20-23, க௩௯: 10-13); "*காம முழந்து வருந்தினார்க் கேம, மடலல்ல தில்லை வலி*", "*காமுற்றா ரேறு மடல்*" (குறள், 1131, 1133.)

பின் வருவன இச்செய்யுளை அடியொற்றி வந்தவை :—

"*மாவென் றுரைத்து மடலேறுப மன்று தோறும்*
*பூவென் றெருக்கி னிணர்சூடுப புன்மை கொண்டே*
*பேயென் றெழுந்து பிறரார்ப்பவு நிற்ப காம*
*நோய்நன் கெழுந்து நனிகாழ்க்கொள்வ தாயி னக்கால்*"
(வளையாபதி.)

"*படலே றியமதின் மூன்றுடைப் பஞ்சவன் பாழிவென்ற*
*அடலே றயின்மன்னன் றெம்முனை போன்மெலிந் தாடவர்கள்*
*கடலே றியகழி காமம் பெருகக் கரும்பனையின்*
*மடலே றுவர்மற்றுஞ் செய்யா தனவில்லை மாநிலத்தே*"
(பாண்டிக்கோவை.)

"*பொருநெடுந் தானைப்புல் லார்தம்மைப் பூலந்தைப் போர்தொலை*
*செருநெடுஞ் செஞ்சுடர் வேனெடு மாறன்றென் னுடனையாய்[த்த*
*அருநெடுங் காமம் பெருகுவ தாய்விடி னுடவர்கள்*
*கருநெடும் பெண்ணைச்செங் கேழ்மட லூரக் கருதுவரே*" (ஷை.)
(கஎ)

## தோழி கூற்று

[இரவில் வந்து மீளும் தலைவனுக்குத் தோழி, 'தலைவியினது காமம் அவளால் தாங்கற்கு அரியதாதலின் விரைவில் வரைந்து கொள்ளவேண்டும்' என்பதைப் புலப்படுத்தியது.]

க அ. வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார னாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.

எ - து. இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனைத் தோழி எதிர்ப் பட்டு வரைவுகடாயது.

கபிலர்.

(ப - ரை.) வேரல் வேலி - சிறுமூங்கிலாகிய வாழ்வேலியை யுடைய, வேர் கோள் பலவின் சாரல் நாட - வேரிலே பழக்குலைகளை யுடைய பலாமரங்கள் செறிந்த பக்கத்தையுடைய மலைநாடனே, சாரல் - பக்கமலையில், சிறு கோடு - பலாமரத்தின் சிறிய கொம்பில், பெரு பழம் தூங்கியாங்கு - பெரிய பழம் தொங்கியதுபோல, இவள் - இத்தலைவியினது, உயிர் தவ சிறிது - உயிரானது மிகச் சிறுமையை யுடையது; காமம் தவ பெரிது - காமநோய் மிகப் பெரிது; அஃது - அந்நிலையை, அறிந்திசினோர் யார் - அறிந்தவர் யார்? ஒருவருமில்லை; செவ்வியை ஆகுமதி - அவளை வரைந்துகொள்ளும் பருவத்தை உடையை யாகுக.

(முடிபு.) நாட, இவள் உயிர் தவச் சிறிது; காமம் தவப் பெரிது; அஃது அறிந்திசினோர் யார்? செவ்வியை ஆகுமதி.

(கருத்து.) தலைவியை நீ விரைவில் மணம்புரிந்து கொள்ள வேண்டும்.

(வி - ரை.) வேரல் - சிறுமூங்கில் (குறிஞ்சி. 71, ந.) மலைச்சார லில் இயல்பாக வளர்ந்த மூங்கிலே பலாமரத்திற்கு வேலியாயிற்று; இத்தகைய வேலியை வாழ்வேலி யென்பர் (பெரும்பாண். 126, ந.) வேர்க்கோட் பலவு - வேர்ப்பலா; இது பலாமரத்துள் ஒருசாதி.

செவ்வி - தலைவியை வரைந்துகொள்ளும் நிலை. தலைமகனுக்கு உவப்பில்லாத வரைவைப்பற்றிக் கூறப்புகுகின்றாளாதலின் அதற்குப் பாதுகாப்பாக முதலில், 'நீ செவ்விய நலத்தை உடையையாகுக' என்று வாழ்த்தியதுமாம். தன்னினும் மிக்கார்க்கு இன்னாதனவற்றைக் கூறுதற்கு முன் வாழ்த்துதல் மரபு; இதனை, கண்ணகி வழக்குரைக்க வந்து நின்ற நிலையை வாயில்காவலன் பாண்டியனுக்கு அறிவிப்பதற்குமுன், "வாழியெங் கொற்கை வேந்தே வாழி" (சிலப். உ௦ : 30) என்பது முதலியவற்றால் வாழ்த்திப் பின்கூறும் பகுதியும், சச்சந்தனுக்குக் கட்டியங்காரனது வஞ்சச்செயலைக் கூறப் புக்க வாயில் காவலன், "நீணில மன்ன போற்றி நெடுமுடிக் குருசில் போற்றி, பூணணி மார்ப போற்றி புண்ணிய வேந்தே போற்றி" (சீவக. 264) என்று கூறிய பகுதியும், அப்பகுதிக்கு 'வெய்ய சொல்லைக் கூறுதலையுடைய வாயிலோன், போற்றியென்று கூறி இறைஞ்சி........... கூறினனென்க' (ந.) என்றுள்ள உரையும் புலப்படுத்தும். ஆகுமதி : மதி, முன்னிலையசைச்சொல். அஃது : செய்யுளாதலின் சுட்டுப்பெயர் முன்வந்தது. 'சாரற் சிறுகோட்டுப் பெரும்பழம்' என்றவிடத்துள்ள சாரல் தலைவிக்குரிய மலையிடத்தது. தாம் அறிந்த பொருள்களை உவமை கூறுதல் உலகத்தார் இயல்பாதலின் இங்கே தோழி, தான் அறிந்த தன்மலைப் பலவின்பழத்தை உவமை கூறினாள்; "தோழிக் காயி னிலம்பெயர்ந் துரையாது" (தொல். உவம. 26.) தவ வென்பதனைப் பெரிது என்பதனோடும் கூட்டுக.

இயல்பாகவே பாதுகாப்புடையதாகியும் வேரிற் பழுத்தலின் கீழ் உகும் நிலையிலதாகியும் உள்ள பலாப்பழத்தையே நின்மலையிற் கண்டாயாதலின், நீ சிறுகோட்டிற் பெரும்பழந்தூங்கும் நிலையை உணராயாயினும், அதனை உணர்கவென்று தோழி அறிவுறுத்தினாளாயிற்று.

பாதுகாப்பு இலதாகித் தன்னைத் தாங்குதற்குரிய கொம்பும் சிறியதாகித் தானும் பெரியதாகி இருக்கும் பழம் கனிந்து கொம்பினின்றும் உகும்; அன்றிப் பிறராற் கொள்ளவும்படும்; அதுபோலத் தன்னை வேற்றுவரைவினின்றும் பாதுகாப்பார் இலளாகி உயிரும் சிறியளாகிய இவளிடத்துக் காமம் பின்னும் கனியின் இவள் உயிர் விடுதலும் நேரும்; அன்றிப் பிறர் வரைந்துகொள்ளவும் முயல்வர் என்று உவமையை விரித்துக்கொள்க. பழம் மிகக் கனிந்து உகுவதன்முன் உரிய காலத்தே உரியார் கொள்வதைப்போல இவள்

உயிர் நீப்பதற்குள் உரிய பருவத்தே இவளுக்குரியையாகிய நீ வரைந்து கொள்வாயாக என்பது குறிப்பு.

உயிர் சிறுமையையுடையதென்பது அணுவென்று கூறப்படுதலாலும், சிற்றுயிரென்னப்படுதலாலும் பெறப்படும்.

## மேற்கோளாட்சி

3. சின், படர்க்கைக்கண் வரும்; பால் காட்டும் எழுத்தோடு அடுத்து வரும் (தொல். இடை. 27, இளம், சே, தெய்வச், ந.)

4. செய்யுட்கண் இனமுள்ள அடைமொழி வந்தது (நன். 400, மயிலை, 401, சங், வி; இ. வி. 312.)

மு. தோழி தலைவியின் காமம் (காதல்) மிகவுரைத்தல் (தொல். களவு. 23, இளம், ந; நம்பி. 166; இ. வி. 523); நிலைமண்டில ஆசிரியப்பா (டை. செய். 112, இளம்; யா. கா. செய். 8; இ. வி. 734); ஆசிரியப்பா ஐந்தடியான் வந்தது (டை. டை. 158, பேர்.); 'ஆற்றாளென்பதுபடக் கூறியது' (தமிழ்நெறி. 18); 'இதனுள் அடியெதுகையும் கூழைமோனையும் ஒரூஉவெதுகையும் இணைமுரணும் கடையிணையெதுகையும் பின்முரணும் வந்தனவாயினும், முதல்வந்ததனாற் பெயர் கொடுத்து, அடியெதுகைச் செய்யுளென்று வழங்கப்படும்', 'வேரல் வேலி வேர்க்கோட் பலவினென்னும் பாட்டினுள், சிறுகோட்டுப் பெரும் பழமென்னும் அடியினுள் இணைமுரணும் கடையிணை யெதுகையும் வந்தனவாயினும், யாதானுமொன்றினாற் பெயர்கொடுத்து இணைமுரணென்றேனும், கடையிணை யெதுகையென்றேனும் வழங்கப்படும்; ஏனையடி ஒரூஉத் தொடையாகிய வரனடையில்லாமையால் அதனை மயக்கமெனினும் இழுக்காது' (யா. வி. 53); எல்லா அடியும் ஒத்துச் சிறப்புடை நேர்த்தலையான் வந்த நிலைமண்டில ஆசிரியப்பா (டை. 74.)

## ஒப்புமைப் பகுதி

1. வேரல்வேலி: "முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே" (குறுந். உகக: 6); "வேரல் வேலி மால்வரைக் கவான்" (சூளா. சீயவதை. 227.)

வேர்க்கோட் பலா: "வேரு முதலுங் கோடு மொராங்குத், தொடுத்த போலத் தூங்குபு தொடரிக், கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவின், ஆர்கலி வெற்பன்" (குறுந். உடுஎ: 1-4); "செவ்வேர்ச், சினை

தொறுந் தூங்கும் பயங்கெழு பலவின்" (நற். எஎ : 4-5); " செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. உ0௧ : 15.)

வேரல்வேலிப் பலவு : "யானை.........வேரல் வேலிச் சிறுகுடி யலறச், செங்காற் பலவின் றீம்பழ மிசையும், மாமலை நாட" (நற். உ௩உ : 1-6.)

5. காமம்பெரிது : (குறுந். ௧0உ : 3, ௩எ௧ : 4); " காதலுனுங் கடலினும் பெரிதே", " காமம் பெரிதே களைஞரோ விலரே" (நற். ௧௬௬: 10 ௩௩௫ : 11.)

காமமும் உயிரும் : (குறுந். உ௩0) ; " பெரிதே காமமென் னுயிர்தவச் சிறிதே" (கலி. ௧௩எ : 2.) (௧அ)

---

## தலைவன் கூற்று

[தலைவி ஊடியபோது அவ்வூடலைத் தான் தெளியச்செய்யவும் தெளியாளாகிப் பின்னும் ஊடிய காலத்தில் தலைவன், "இவள் தன் பழைய தன்மை மாறி நம்மோடு உறவில்லாள்போல் இருக்கின்றாள்" என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறியது.]

௧௯. எவ்வி யிழந்த * வறுமையாழ்ப் பாணர்
பூவில் வறுந்தலை போலப் புல்லென்
றினைமதி வாழிய நெஞ்சே மனைமரத்
தெல்லுறு மௌவ லாறும்
பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே.

எ - து. உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் சொல்லியது.

[உணர்ப்பு - ஊடலைத் தெளியச்செய்தல்.]

பரணர்.

(ப - ரை.) நெஞ்சே—, மனை மரத்து - மனைப்படப்பையி லுள்ள மரத்தின்மீது படர்ந்த, எல் உறு மௌவல் - ஒளியை யுடைய முல்லைமலர்கள், நாறும் - மணம் வீசுதற்கிடமாகிய, பல்

(பி - ம்.) * வறுமையர் பாணர்.

இரு கூந்தல் - பலவாகிய கரிய கூந்தலையுடைய இவள், இனி, நமக்கு - நம் திறத்தில், யாரளோ - எத்தகைய உறவினை உடையவளோ! ஏதிலள்போலும்; ஆதலால், எவ்வி இழந்த - எவ்வியென்னும் உபகாரியை இழத்தலால் உண்டாகிய, வறுமை யாழ்ப்பாணர் - வறுமையையுடைய யாழ்ப்பாணரது, பூ இல் வறு தலைபோல - பொற்பூ இல்லாத வறிய தலையானது பொலிவிழந்திருத்தல்போல, புல்லென்று - பொலிவிழந்து, இனைமதி - வருந்துவாயாக.

(முடிபு.) நெஞ்சே, கூந்தல் நமக்கு யாரளோ! ஆதலின், பாணர் தலைபோலப் புல்லென்று இனைமதி.

(கருத்து.) இவள் இப்பொழுது வேறுபாடுடையளானாள்.

(வி - ரை.) எவ்வி : இவன் வேளாளருள் உழுவித்துண்போர் வகையினன்; மிழலைக்கூற்றத்துத் தலைவன்; கடற்கரைக்கண் உள்ள நீழலென்னுமூர் இவனுடையது (அகநா. ஙசுசு); இவன் வேள் எவ்வியென்றும் கூறப்படுவான்; பாணர்க்குப் பொற்பூ அளித்து ஆதரித்து வந்தவன். இவன் பாணரைப் பாதுகாக்கும் தன்மையை யுடையவனென்பதும், பகைவராற் போரில் இறந்தானென்பதும் வெள்ளெருக்கிலையார் பாடிய கையறுநிலைச்செய்யுளினுள்ள, "இரும்பா ணொக்கற் றலைவன் பெரும்பூட், போரடு தானை யெவ்வி மார்பின், எஃகுறு விழுப்புண் பலவென, வைகுறு விடிய லியம்பிய குரலே" (புறநா. உஙஙு : 5-8) என்னும் பகுதியால் உணரலாகும். இவ்வுபகாரி இறந்ததனால் பாணர் மிகவருந்தினரென்பதும் அவருடைய இசை பயனிலதாயிற்றாதலின் தம் யாழை முறித்தெறிந்தனரென்பதுமாகிய செய்தி, "எவ்வி வீழ்ந்த செருவிற் பாணர், கைதொழு மரபின் முறித்திடூஉப் பழிச்சிய, வள்ளுயிர் வணர்மருப்பு" (அகநா. ககரு : 8-10) என்பதனால் வெளியாகிறது. பாணர் உபகாரிகளிடமிருந்து பொற்பூவைப் பெறுதல் மரபு; பூவின்மையால் அவர்கள் தலை வறுந்தலையாயிற்று. புல்லென்றல் - பொலிவழிதல் (கலி. ங : 4,ந.) இனைமதி : மதி, முன்னிலையசை. வாழிய : அசை. நெஞ்சு கேட்டற்குரியதன்றாயினும், "உறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன், மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்து" (தொல். பொருளியல், 2) க் கூறப்படும் வழுவமைதியின் பாற்பட்டு அமைந்தது. மனைமரமென்றது வீட்டைச் சார்ந்த தோட்டத்திலுள்ள நொச்சிமரமுதலியவற்றை. மரத்திலே படர்ந்த மௌவலென்க.

மகளிர் முல்லையை வளர்த்தல் இயல்பு; 'தேவி முல்லை வளர்த்தற்குக் காரணம் கற்புடைமையென வுணர்க' (தக்க. 75, உரை.) மௌவல் நாறும் கூந்தலென்றது, முல்லையை அணிந் தமையால் அமைந்த மணத்தையுடையதென்றபடி. கற்புக்கு அறிகுறியாக மகளிர் முல்லைமலரைச் சூடுதல் மரபு; 'கற்பின் மிகுதிதோன்ற முல்லை சூடுதல் இயல்பு' (சிறுபாண். 28-30, ந.) எல் - ஒளி (தொல். 753); இரவுமாம். பனிச்சை முதலிய ஐந்து பகுதிகளையுடையதாதலின் பல் கூந்தலென்றான். யாரளோ வென்றது பண்டையுளல்லளென்றபடி; இச்சொல் யாரென்றது அள்விகுதி பெற்றுப் பால்குறித்து நின்றது, யாரையென்பது போல.

## மேற்கோளாட்சி

1-2. அகத்திணையிற் புறத்திணைக்கருப்பொருள் உவமமாக வந்தது (தொல். அகத். 55, ந.)

2-3. நெஞ்சை உணர்வுடையதுபோல வெகுளிபற்றிக் கூறியது (தொல். பொருளியல், 2, ந.)

மு. உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் புலத்தல் (தொல். கற்பு. 15, இளம், ந.); துன்பத்துப் புலம்பலென்னும் மெய்ப்பாடு தலைவனுக்கும் உரியது (ஷை. மெய்ப். 22, பேர்; இ. வி. 580); 'தலைவி தான் உணர்த்தவும் உணராமல் தன்னைக் கைவிட்டுப் பிரியின், தான் அவளை நீங்குதற்கு அஞ்சிய அச்சத்தின் கண்ணும் தலைவற்குக் கூற்று நிகழும்; அஃது உணர்ப்புவயின்வாரா ஊடலாம்' (ஷை. கற்பு. 5, ந.); தலைமகள் புலவி தணியாளாகத் தலைமகன் ஊடல் (நம்பி. 206.)

## ஒப்புமைப் பகுதி

1. எவ்வி: புறநா. உ௩௩: 6, அடிக்.

2. புல்லென்றல்: குறுந். ௪௧: 5, ௧௭௭: 2, ௩௧௦: 4.

1-2. பாணர் பொற்பூச்சூடுதல்: (பொருந. 159-60, அடிக்.); "பூப்புனையும், நற்குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல்புலவீர்" (பு. வெ. 31.)

3. வாழிய நெஞ்சே: குறுந். ௧௯௯: 2.

இனைமதி வாழிய நெஞ்சே : "உடைமதி வாழிய நெஞ்சே" (அகநா. ௧௨௬ : 8.)

மனைமரம் : "மனைமரத்தான்" (மதுரை. 268); "மனைமர மொசிய வொற்றி" (அகநா. ௫அ : 13.)

4. எல்லுறு மௌவல்: "அரும்பவிழ் முல்லை, * நிகர்மலர்" (சிலப். ௯ : 1-2.)

3-4. மனைமரத்தில் உள்ள மௌவல் : "மயிலடி யிலைய மாக்குர னொச்சி, மனைநடு மௌவலொ டூழ்முகை யவிழ" (நற். ௧௧௫ : 5-6); "மனையிள நொச்சி மௌவல் வான்முகை", "மனைய, தாழ்வி னொச்சி சூழ்வன மலரும், மௌவன் மாச்சினை" (அகநா. உ௧ : 1, உ௩ : 10-12) ; "இல்வளர் முல்லையொடு மல்லிகை", "மனைவளர் முல்லை" (சிலப். ௪ : 27, ௧௩ : 120); "இல்லெழு முல்லையொடு மல்லிகை மயங்கி", "மனைப் பூங் காவின் மருங்கிற் கவினிய, பைந்தார் முல்லை வெண்போது நெகிழ" (பெருங். ௧. 33 : 73, ௩. 7 : 13-4.)

5. பல்லிருங் கூந்தல் : நெடுநல். 54 ; ஐங். ௩௦அ : 1, ௪உ௯ : 1 ; கலி. ௧௦௪ : 41-2 ; அகநா. ௪௩ : 11 ; மணி. 22 : 130 ; சீவக. 164, 989. (௧௯)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவை உணர்த்திய தோழியை நோக்கி, "என் பாலுள்ள அருளையும் அன்பையும் நீக்கிப் பிரிவது அறிவுடையோருக்கு அழகன்று" என்று தலைவி உணர்த்தியது.]

உ௦. அருளு மன்பு நீக்கித் துணைதுறந்து
பொருள்வயிற் பிரிவோ ருரவோ ராயின்
உரவோ ருரவோ ராக
மடவ மாக மடந்தை நாமே.

எ - து. செலவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

[செலவு - தலைவன் பொருள்வயிற் பிரிதலை.]

கோப்பெருஞ் சோழன்.

* நிகர் - ஒளி.

(ப - ரை.) மடந்தை - தோழியே, அருளும் அன்பும் நீக்கி - அருளையும் அன்பையும் துறந்து, துணை துறந்து - தம் துணைவியை விட்டு, பொருள்வயின் - பொருள்தேடும் முயற்சியின்பொருட்டு, பிரிவோர் - பிரியும் செயலையுடைய தலைவர், உரவோராயின் - அறிவுடையவராயின், உரவோர் உரவோர் ஆக - அவ்வாற்றலையுடையோர் அறிவுடையவரே யாகுக! நாம் - அவரைப் பிரிந்திருத்தற்குரிய ஆற்றலில்லாத நாம், மடவம் ஆக - அறிவிலேம் ஆகுக!

(முடிபு.) மடந்தையே, பிரிவோர் உரவோராகுக! நாம் மடவமாக!

(கருத்து.) என்னைப் பிரிந்து செல்லுதல் அறிவுடைய தலைவர்க்கு அழகன்று.

(வி - ரை.) அருள் - தம்மோடு ஒரு தொடர்பும் இல்லாதார் மாட்டும் அவர் துயரங்கண்டால் உண்டாகும் இரக்கம்; அன்பு - தொடர்புடையாரிடத்தும், தன்னாற் புரக்கப்படுவார் மேலும் உளதாகிய காதல் (புறநா. ரு : 5, உரை.) அன்பினின்றும் அருள் உண்டாதல் தோற்றும் முறை; அருளின்பின் அன்பு நீங்குதல் நீங்கும் முறை. பெண்ணென்னும் பொதுமைபற்றி என்பால் அருளேனும் துணைவியென்னும் சிறப்புப் பற்றி அன்பேனும் உளராயின் நீங்காரென்பது குறிப்பு. துணைவியைத் துறந்து போவார் அருளும் அன்பும் உடையராதல் இல்லை என்பது பெறப்பட்டது. உரவோர் - அறிவுடையோர், வன்மையையுடையோர்; உரம் - அறிவு; "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்" (குறள், 24.) மடவம் - அறிவில்லேம்; 'மடவர் - அறிவில்லாதார்' (புறநா. கoசு : 4, உரை.) உரவோராக வென்றது உரவோரல்லரென்னும் நினைவிற்று.

## மேற்கோளாட்சி

4. ககரவுயிர்மெய் வியங்கோள் விகுதியாக வந்தது (நன். 337 மயிலை.); ககரவுயிர்மெய்யீற்று வியங்கோள் வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்தது (இ. வி. 239.)

ரு. பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைவிகூறியது (தொல். அகத். 45, இளம்.); செலவுணர்த்திய தோழிக்குத் தலைவி செலவழுங்கக் கூறியது (ஷை. கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அருளும்அன்பும் நீக்கல்: "அருளு மன்பு நீக்கி நீங்கா, நிரயங் கொள்பவர்" (புறநா. ௫ : 5-6.)

அருளும் அன்பும் : குறள், 757.

1-2. துணைதுறந்து பொருள்வயிற் பிரிவோர் உரவோர்: "நறு நுதனீத்துப் பொருள்வயிற் செல்வோய், உரனுடை யுள்ளத்தை" (கலி. கஉ : 9-10.)

1-2. அன்பையும் அருளையும் நீக்கிப் பிரிதல் : "அவரே, அன் பின் மையி னருள்பொரு ளென்னுர், வன்கண் கொண்டு வலித்துவல் லுநரே" (குறுந். ௩௬௫ : 1-3.)

பொருள்வயிற் பிரிதல் அன்பின்மை : "பொருள்வயி னகறல், அன் பன்று" (கலி. உ : 24-5.)

பொருள்வயிற் பிரிவோர் அருளிலராதல்: "அருளி லாளர் பொருள் வயி னகல" (அகநா. ௩0௫ : 9.)

1-3. அருளும் அன்பும் நீக்கிப் பொருள்செய்தல் அறிவுடைமை யன்று : "அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம், புல்லார் புரள விடல்" (குறள். 755.)

3 - 4. உரவோர், மடவம் : "உரவோ ரெண்ணினு மடவோ ரெண் ணினும்" (பதிற். எ௩ : 1.) (உ0)

---

## தலைவி கூற்று

[தன் வரவுக்குரிய காலமாகத் தலைவன் குறித்துச் சென்ற கார்ப் பருவத்தைக் கண்டு தலைவி வருந்துவாளென்று எண்ணிய தோழியை நோக்கித் தலைவி, "தலைவர் மெய்ம்மையையுடையோராதலின், அவர் கூறிய பருவம் இஃதன்று" என்று கூறித் தான் ஆற்றியிருத்தலைப் புலப்படுத்தியது.]

உக. வண்டுபடத் ததைந்த கொடியிணை ரிடையிடுபு
பொன்செய் புனையிழை கட்டிய மகளிர்
கதுப்பிற் றோன்றும் புதுப்பூங் * கொன்றைக்

---

(பி - ம்.) * கொன்றை கானம்.

**கானங் காரெனக் கூறினும்**
**யானோ தேறேனவர் பொய்வழங் கலரே.**

எ - து. பருவம் வருந்துணையும் ஆற்றுவித்த தோழி, 'அவ வரக்குறித்த பருவ வரவின்கண் இனி ஆற்றுவிக்குமாறு எவ்வாறு! என்று தன்னுள்ளே கவன்றுட்கு, அவளது குறிப்பறிந்த தலைமகள் "கானம், அவர் வருங்காலத்தைக் காட்டிற்றாயினும் யான் இது கா காலமென்று தேறேன், அவர் போய் கூறாராகலின்" எனத் * தான் ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.

ஓதலாந்தையார்.

(ப - ரை.) *தோழி, வண்டுபட - வண்டுகள் தேன் உண்ணு தற்கு வந்து வீழும்படி, ததைந்த - செறிந்து மலர்ந்த, கொடி இணர் - நீட்சியையுடைய பூங்கொத்துக்களை, இடை இடுபு - தழை களின் இடையே மேற்கொண்டு, பொன் செய் புனை இழை - பொன் னாற் செய்த அணிந்துகொள்ளுதற்குரிய தலையணிகளை, கட்டிய - கோத்துக்கட்டிய, மகளிர் கதுப்பின் - மகளிருடைய கூந்தலைப்போல, தோன்றும் - கண்ணுக்குத் தோன்றுகின்ற, புது பூ கொன்றை - புதிய பூக்களையுடைய கொன்றைமரங்களையுடைய, கானம் - காடா னது, கார் என - இது கார்ப்பருவமென்று, கூறினும் - அம் மலர்க ளால் தெரிவிப்பினும், யான் தேறேன் - நான் தெளியேன்; ஏனெ னின், அவர் பொய் வழங்கலர் - தலைவர் பொய்ம்மொழியைக் கூறார்.*

(முடிபு.) *கானம் காரெனக் கூறினும் அவர் பொய் வழங்கல ராதலின் யான் தேறேன்.*

(கருத்து.) *இது கார்ப்பருவம் அன்று.*

(வி - ரை.) *ததைந்த - மலர்ந்த* (அகநா. ௧: 1, *உரை.*) *கொடி - ஒழுங்கு* (கலி. *சக*: 6, ந.) *இழையென்றது பொன்னரிமாலை முதலிய வற்றை. இடையிடுபு தோன்றும் என்க. புதுப்பூ வென்றமையால் பரு வம் தொடங்கிய அணிமை பெறப்படும். கொன்றைமரத்திற்கு மக ளிரும், தழைக்கு அவர் கூந்தலும், பூங்கொத்துக்குப் பொன்னிழை யும் உவமம். கொன்றை நீண்ட கொத்தாகக் கார்காலத்தில் மலர்வது. கானங் கூறல் என்றது மரபு வழுவமைதி; "என்ன மரபின வெனத் கூறுதலும்"* (தொல். *எச்ச.* 26.) *யானோ : ஓ, பிரிநிலை. அவரென்றது*

---

(பி - ம்.) * *தலைமகள்.*

நெஞ்சறிசுட்டு. பொய்வழங்கலரென்றது, கார்ப்பருவத்தில் மீண்டு வருவேனென்று தலைவன் கூறிச்சென்றதைக் குறிப்பித்தது. ஏகாரம்: அசை.

கொன்றை மகளிரைப் போலத் தோற்றினும் மகளிரல்லவென்று தெளிவதுபோல, இது கார்ப்பருவமென்று தோற்றினும் அன்றென்று தெளிந்தேனென்றபடி.

## மேற்கோளாட்சி

5. பிரிநிலை ஒகாரத்தின்பின் வருமொழி இயல்பானது (தொல். உயிர்மயங். 88, இளம், ந.); பிரிநிலை ஒகாரம் வந்தது (ஷை. இடை. 8, சே, ந.)

5-6. பிரிநிலை ஓகாரம் (தொல். இடை. 8, தெய்வச்.)

மு. இது பருவங்கண்டுழியும், பொய்கூறுரென்று தலைவி ஆற்றியிருந்தது (தொல். அகத். 14, ந.); 'கானங் காரெனக் கூறவும் வாராரென்றவழி, அது கூறினும் யானோ தேறேனெனப் பிரிநிலை ஓகாரத்தாற் பிரிந்தது' (ஷை. கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. வண்டுபடத் ததைந்தபூ: "வண்டுபடத் ததைந்த கண்ணி", "அருவிடர்த் ததைந்த, சாரற் பல்பூ வண்டுபடச் சூடி" (அகநா. க: 1, உஉ: 12-3.)

3. கூந்தலுக்குக் கொன்றைத்தழை: "குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட" (திருவாரூர் மும்மணிக். க: 8.)

2-3. கொன்றைப் பூவிற்குப் பொன்: (குறுந். உ௲ : 1-3); "பொன்வீக் கொன்றை" (நற். உசகூ: 8); "கனமலர் கொன்றை" (தே. திருஞா. வாள்கொளிபுத்தூர்.)

1-3. கொன்றைக்கு இழையணிந்த மகளிர்: "இழையணி மகளிரின் விழைதகப் பூத்த, நீடுசுரி யிணர சுடர்வீக் கொன்றைக், காடுகவின் பூத்த" (நற். ௬0உ : 1-3.)

கொடியிணர்க் கொன்றை: "கொன்றை.........கொடியிணர் ஊழ்த்த" (குறுந். கூகூ : 1-4); "தூங்கிணர்க் கொன்றை" (குறிஞ்சி. 86.)

3-4. கொன்றை கார்காலத்தில் மலர்தல்: (குறுந். சுகூ: 1-5, கசஅ: 3-5, உ௲: 1-4); "கார்நறுங்கொன்றை" (புறநா. க: 1, அடிக்.);

"கார்விரி கொன்றை கலந்த கண்ணுதலான்", "காரார்பூங் கொன்றையினான்" (தே. திருநா.); "மழைக்கரும் பும்மலர்க் கொன்றையினானை" (ஷை. சுந்தர.)

2-4. கொன்றை கார்காலத்தில் மலர்தலும் பொன்னை ஒத்திருத்தலும்: "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" (அகநா. கடவுள். 1.)

மு. குறுந். சுசு. (உக)

---

தோழி கூற்று

[தலைவன் பிரிந்துசெல்வானென்பதைக் குறிப்பால் அறிந்து வருந்திய தலைவியை நோக்கி, "தலைவர் நின்னை அழைத்துக் கொண்டே செல்வார்" என்று தோழி கூறி ஆற்றுவித்தது.]

உஉ. நீர்வார் கண்ணை நீயிவ ணொழிய
யாரோ பிரிகிற் பவரே சாரற்
சிலம்பணி கொண்ட வலஞ்சுரி மராஅத்து
வேனி லஞ்சினை கமழும்
* தேம்மூ ரொண்ணுத னின்னொடுஞ் செலவே.

எ - து. செலவுக்குறிப்பறிந்து ஆற்ருளாகிய கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

[செலவுக் குறிப்பறிந்தது, தலைவன் பண்டையினும் சிறந்த தலையளி செய்தமை முதலியவற்ருல்.]

சேரமானெந்தை.

(ப - ரை.) சிலம்பு அணி கொண்ட - மலைப்பக்கமானது தனக்கு அழகாகக்கொண்ட, வலம் சுரி மராஅத்து - வலமாகச் சுரித்த வெண் கடப்பமலரையுடைய, வேனில் அம் சினை - வேனிற்காலத்தில் மலர்ந்த அழகிய கிளையினிடத்தில், கமழும் - மணக்கின்ற, தேம் ஊர் ஒள் நுதல் - நன்மணம் பரவிய விளக்கத்தையுடைய நெற்றியையுடையாய், நீர் வார் கண்ணை - துயரத்தினால் நீர்சொரியும் கண்ணை உடையாயாகி, நீ இவண் ஒழிய - நீ இங்கே தனியாகத் தங்க, பிரிகிற்பவர் - நின்

---

(பி - ம்.) * தேம்மூசொண்ணுதல்.

'ப் பிரிந்து செல்லும் ஆற்றலுடையவர், யார் - யாவர்? செலவு - தலைவர் செல்லுதல், நின்னொடும் - நின்னோடே ஆகும்.

(முடிபு.) ஒண்ணுதல், நீ ஒழியப் பிரிகிற்பவர் யார்? செலவு நின்னொடும் ஆகும்.

(கருத்து.) தலைவர் நின்னைப் பிரிந்து செல்லார்.

(வி - ரை.) தலைவன்பிரிந்தால் தலைவி துயரமிகுதியினால் அழுது கொண்டேயிருத்தல் இயல்பாதலின், 'நீர்வார் கண்ணை நீ யிவ ணொழிய' என்றாள்; "அழப்பிரிந் தோரே" (குறுந். ௩௦௭ : 9.) யாரோ என் பது ஒருவருமிலரென்னும் பொருளில் வந்தது. பிரிகிற்பவர் - பிரியச் சம்மதிப்போரெனலுமாம்; கிற்றல் - சம்மதித்தல் (தக்க. 57, உரை.) வலஞ்சுரியென்றது, பூவிற்கு அடை; மராம்: ஆகுபெயர்; "நெடுங் கான் மராஅத்துக் குறுஞ்சினை பற்றி, வலஞ்சுரி வாலிணர் கொய்தற்கு நின்ற" (ஐங். ௩௮௩ : 2-3.) வேனில் - இங்கே இளவேனில்; மராம் இளவேனிலில் மலருமென்பது, ஐங்குறுநூற்றில் இளவேனிற்பத் தில் உள்ள, "அவரோ வாரார் தான்வந் தன்றே, வலஞ்சுரி மராஅம் வேய்ந்துநம், மணங்கமழ் தண்பொழின் மலரும் பொழுதே" (௩௪௮) என்பதனாற் பெறப்படும். மலர்ந்த கிளையாதலின் அஞ்சினையென்றாள்.

தேமூர் ஒண்ணுதலென்றது நுதலின் மணத்தையும் விளக்கத்தை யும் புலப்படுத்தியவாறு. உத்தமமகளிருடைய நுதல் இயற்கைமண முடையதென்பதை 'நறுநுதல்' என்னும் வழக்கினால் அறியலாகும்; திலகமுதலியவற்றால் மணம்பொருந்திய நுதலென்றலும் பொருந்தும்; "திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்" (முருகு. 24.) தேமூசு ஒண் ணுத லென்னும் பாடத்திற்குத் தன்பாலுள்ள வாசனையை விரும் பிய வண்டுகள் மொய்க்கும் ஒள்ளிய நெற்றியையுடையாயென்று பொருள் கொள்க; தேம் - வண்டு. செலவு என்பதன்பின் ஆகுமென ஒருசொல் அவாய்நிலையால் வருவித்து முடிக்க.

ஆற்றாமை மிக்க தலைவி, 'யாரோ பிரிகிற்பவரே' என்று தோழி கூறிய மாத்திரத்தில் துயர்நீங்கித் தலையெடுத்து நிமிர்ந்து நோக்கினா ளாக, நெற்றியின் விளக்கங்கண்ட தோழி, 'தேமூரொண்ணுதல்' என்று விளித்தாள்.

## மேற்கோளாட்சி

1. முன்னிலை யொருமை வினைக்குறிப்பு முற்று, வினையெச்சக் குறிப்பாகியது (நன். 350, மயிலை, 351, சங், வி; இ. வி. 250.)

மு. ஆற்றுளாய தலைமகட்குத் தோழி பிரிவு நயப்பச் சொல்லிய (தமிழ்நெறி. 24.)

## ஒப்புமைப் பகுதி

1. **நீர்வார் கண்ணை**: "நீர்வார் கண்ணேன் கலுழும்" (நற். கசடு 4); "நீர்வார் கண்ணேந் தொழுது" (புறநா. ககடு: 6); "நீர்வா கண்ணை யெம்முன் வந்தோய்" (சிலப். உ0 : 48.)

1-2. "யாரோ பிரிகிற் பவரே குவளை, நீர்வார் நிகர்மல ரன்னநின் பேரமர் மழைக்கண் டெண்பனி கொளவே" (நற். நுகக : 8-10.)

**தலைவன் பிரிவதால் தலைவி அழுதல்**: குறுந். கக : 2, ஒப்பு.

3. **வலஞ்சுரி மராம்**: "வலஞ்சுரி மராஅத்துச் சுரங்கமழ் புதுவீ (அகநா. அடு : 1); "பொரியரை மராஅத்து வாலிணர்ச் சுரிமலர் (யா. வி. 44, மேற் : 'பரியல்.)

3 - 4. **மராம் வேனிலில் மலர்தல்**: (குறுந். உகக : 4-5) "வேனற் பூத்த மராங்கோதை" (தே. திருஞா. நாகைக்காரோணம்.

5. **நுதலுக்கு மணம் உண்மை** (குறுந். கூக : 3, உ0கூ : 7, உகூக 2-3, உஎடு : 3, நுஉடு : 4-5); "நறுநுத லரிவை", "தேங்கமழ் திரு தல்" (நற். கூ0 : 10, சுஉ : 6); "நன்னுத ஞறு முல்லை மலர" (ஐங் சகஉ : 2); "நறுநுதல்" (கலி. கச : 4, உக: 6, கூடு : 14, கூக: 22) "மையிருங் கான நாறு நறுநுதல்", "தேங்கமழ் புதுமலர் நாறுமி ணுதலே", "நாறு நறுநுதல்", "தேங்கமழ் திருநுதல்" (அகநா. சடு 10, எஅ : 24, கடு : 10, உடுஅ :18, நுஅக : 3.)

(ழ - ம்.) **தேமசொண்ணுதல்**: "சுரும்பிமிர் சுடர்நுதல்" (நற் உசகூ : 11); "நுதலும், நுண்வியர் பொறித்து வண்டார்க் கும்மே (சிற்றட்டகம்.) (உஉ

---

## தோழி கூற்று

[தலைவியது வேறுபாட்டின் காரணத்தைச் செவிலித்தாய் முதலியோர் கட்டுவிச்சி ... நெற்குறி பார்ப்பவளைக்கொண்டு ஆராய்ந்த காலத்தில் தோழி, "தலைவனுக்குரிய மலையை நீ பாடுவாயாக" என்று கூறும் வாயிலாக அத் தலைவியின் வேறுபாடு ஓர் ஆடவனால் உண்டாயிற் றென்பதைப் புலப்படுத்தியது.]

உரு. அகவன் மகளே யகவன் மகளே
மனவுக்கோப் பன்ன நன்னெடுங் கூந்தல்
அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே, அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே.

எ - து. கட்டுக்காணிய நின்றவிடத்துத் தோழி அறத்தொடு நின்றது.

[*கட்டு - முறத்தில் நெல்லைவைத்துத் தெய்வங்களைப் பாடி எண்ணிப் பார்த்துக் கட்டுவிச்சி காணும் குறி.*]

ஔவையார்.

(ப - ரை.) *அகவல் மகளே - தெய்வங்களை அழைத்துப் பாடுதலைச்செய்யும் கட்டுவிச்சியே, அகவல் மகளே—, மனவு கோப்பு அன்ன - சங்குமணியினாலாகிய கோவையைப்போன்ற வெண்மையாகிய, நல் நெடு கூந்தல் - நல்ல நீண்ட கூந்தலையுடைய, அகவல் மகளே—, பாட்டு பாடுக - பாட்டுக்களைப் பாடுவாயாக; இன்னும் பாட்டுப் பாடுக—, அவர் நல் நெடு குன்றம் பாடிய பாட்டு - நீ பாடிய பாட்டுக்களுள் அவருடைய நல்ல நெடிய குன்றத்தைப் புகழ்ந்து பாடிய பாட்டை, இன்னும் பாடுக - மீண்டும் பாடுவாயாக.*

(முடிபு.) *அகவன் மகளே, பாடுக; இன்னும் பாடுக; குன்றம் பாடிய பாட்டை இன்னும் பாடுக.*

(கருத்து.) *இவள்பால் அன்புபூண்ட தலைவருடைய குன்றத்தைப் பாடின் இவளது வேறுபாடு நீங்கும்.*

(வி - ரை.) *அகவல் மகள் - கட்டுவிச்சி; அகவல் - அழைத்தல்; 'அதனை வழக்கினுள்ளார் அழைத்தலென்றுஞ் சொல்லுப; அவை ..............கட்டுங் கழங்குமிட்டுரைப்பார்கண்ணும்............கேட்கப்படும்'* (தொல். செய். 81, பேர்.); *'அகவிக் கூறலின் அகவலாயிற்று; ...........அதனை வழக்கினுள் அழைத்த லென்ப'* (ஷை. ஷை. ஷை. ந.); *தெய்வங்களை அழைத்துக்கூறும் இயல்புடையாளாதலின் இப் பெயர் பெற்றாள்; 'அகவரென்றார், குலத்தோரெல்லாரையும் அழைத்துப் புகழ்வரென்பதுபற்றி'* (மதுரைக். 223, ந.)

*தலைவியினுடைய காமநோயை யறியமாட்டாத தாயர் அவள் வேறுபாட்டின் காரணத்தை ஆராயும்பொருட்டு அகவன்மகளாகிய*

கட்டுவிச்சியை அழைத்துக் கட்டுப்பார்ப்பது வழக்கம். கட்டுவிச்சி முறத்தில் நெல்லையிட்டு அதனை எண்ணி அதனாற்போந்த சில நிமித்தங்களை அறிந்து, "இவள் முருகனால் அணங்கப்பட்டாள்" என்று கூறுவாள். அதுகேட்ட தாயர் வேலனையழைத்து வெறியாட்டெடுப்பர்.

இவ்வகவுண்மகள் தெய்வமேறிக் குறிகூறுதலும் உண்டு. இவளைப் பிற்காலத்தார் குறத்தியென்று கூறுவர். "கட்டினுங் கழங்கினும் வெறியென விருவரும், ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்" (தோல். களவு. 24) என்பதன் உரையில், 'கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினானும் கழங்கினானும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம்மையல் தீராதென்று கூறுதலின் அவ்விருவரும் தம்மின் ஒத்த திறம்பற்றியதனையே செய்யும் செய்தியிடத்தும்' (ந.) என்றுள்ள பகுதி தாயர் கட்டுப்பார்ப்பதற்குரிய விதியைப் புலப்படுத்துகின்றது;

"குன்ற நாடன் பிரிவிற் சென்று
நன்னுதற் பரந்த பசலைகண் டன்னை
செம்முது பெண்டிரொடு நென்முன் னிறீஇக்
கட்டிற் கேட்கு மாயின்" (நற். உஅஅ: 4-7),

பனிவரை நிவந்த பயங்கெழு கவாஅற்
றுனியில் கொள்கையொ டவர்நமக் குவந்த
இனிய வுள்ள மின்னா வாக
முனிதக நிறுத்த நல்க லெவ்வம்
சூருறை வெற்பன் மார்புறத் தணிதல்
அறிந்தன ளல்ல ளன்னை வார்கோற்
செறிந்திலங் கெல்வளை நெகிழ்ந்தமை நோக்கிக்
கையறு நெஞ்சினள் வினவலின் முதுவாய்ப்
*பொய்வல் பெண்டிர் பிரப்புளர் பிரீஇ
முருக னாரணங் கென்றலி னதுசெத்து"

(அகநா. கஅ : 1-10)

என்பன இவ்வழக்கத்தை விளக்கும். இதனையன்றி, 'அகலுளாங்க ணறியுநர் வினாய்'- அகன்ற இடத்தையுடைய ஊரிடத்துக் கட்டினாலும் கழங்கினாலும் எண்ணியறிவாரை வினாவி அவ

* பொய்வல் பெண்டிர் - கட்டுவிச்சியர்.

தெய்வத்தான் வந்த வருத்தமென்றலின்' (குறிஞ்சிப். 7, ந.), "சேரி யாயத்துச் செம்முதிர் பெண்டிரொடு, கட்டறி மகளேக் கடிமுறத் திட்ட, வட்ட நெல்லு மாண்பில பெரிதென" (பெருங். க. 37 : 235-7), "கட்டுவிச்சி கட்டேறிச், சீரார் சுளகிற் சிலநெல் பிடித் தெறியா, வேரா விதிர்விதிரா மெய்சிலிராக் கைமோவாப், பேரா யிர முடையா னென்றாள்" (திவ். சிறியதிருமடல், 20-22), "இதுகாண்மி னன்னைமீ ரிக்கட்டுவிச்சி சோற்கொண்டுநீர், எதுவானுஞ் செய்தங் கோர் கள்ளு மிறைச்சியுந் தூவேன்மின்" (திவ். திருவாய். ச. 6 : 3) என்பவற்றாலும், திருக்கோவையாரிலுள்ள கட்டுவைப்பித்தல், கலக்க முற்றுநிற்றல், கட்டுவித்தி கூறல் (283-5) என்னும் துறைகளுக்குரிய செய்யுட்களாலும், அவற்றின் உரையாலும்,

"முந்நாழி முச்சிறக்கை நெல்லளந்து கொடுவா
முறத்திலொரு படிநெல்லையென் முன்னேவை யம்மே
இந்நாழி நெல்லையுமுக் கூறுசெய்தோர் கூற்றை
இரட்டைபட வெண்ணினபோ தொற்றைபட்ட தம்மே
உன்னுமுன் வேள்விமலைப் பிள்ளையார்வந் துதித்தார்
உனக்கினியெண் ணினகரும மமைப்பினிற்கை கூடும்
என்னுணை யெங்கள்குலக் கன்னிமா றறிய
எக்குறிதப் பினுந்தப்பா திக்குறிகா ணம்மே"

(மீனுட்சியம்மைகுறம், 26)

என்பதனாலும் இக்கட்டுவிச்சியைப் பற்றிய செய்திகள் சிலவற்றை உணரலாகும்; பிற்காலத்துக் கலம்பகத்துள்ள குறமென்னும் உறுப் பாலும் குறவஞ்சியென்னும் பிரபந்தம் முதலியவற்றாலும் சில செய்திகள் புலப்படும்.

மும்முறை அகவன்மகளை விளித்தது தான் கூறும் கூற்றின் உண்மையைக் கூர்ந்து அறியும் பொருட்டு. மனவுக்கோப்பன்ன என் றது அவள் அணிந்த அணியையே அவள் கூந்தலுக்கு உவமை கூறிய வாறு. இவ்வுவமையால் கட்டுவிச்சி நரைமுதாட்டியென்பது பெறப் படும். நன்னெடுங் கூந்தலென்றது இகழ்ச்சிக் குறிப்பு, "பயனின் மூப்பிற் பல்சான் றீரே" (புறநா. கக௯ : 3) என்புழிப் பல்சான்றீ ரென்பதையும், "எழில்செய் கூகை" (சீவக. 102) என்பதையும் போல. அவர் : நெஞ்சறிசுட்டு. பாடுதற்குரிய சிறப்புடையதென் பாள், 'நன்னெடுங் குன்றம்' என்றாள். மலைவாழ்சாதியினளாகிய அகவன்மகள் தான்கண்ட மலைகளின் வளத்தைப் பாடுவது இயல்

10

பாதலின் அவள் பல மலைவளங்களைப் பாடினள்; அவற்றுள் தலைவனது மலைவளத்தைக் கேட்பதில் தலைவிக்குப் பெருவிருப்பம் உளதாமாதலின் தோழி அதனை மீண்டும் பாடென்றாள். 'இன்னும் பாடுக' என்றதனைப் பின்னுங் கூட்டுக.

'அவர் நன்னெடுங் குன்றம்பாடிய பாட்டு' என்று கூறின், 'அவர் யார்?' என்னும் ஆராய்ச்சி தாயரிடையே பிறந்து உண்மையறிதற்கு ஏதுவாமாகலின் இஃது அறத்தொடு நிற்றலாயிற்று.

## மேற்கோளாட்சி

1. முறைமை சுட்டா மகளென்னும் ளகரவீற்று உயர்திணைப்பெயர் பிறிதுவந் தடைதலாகிய ஏகாரம் பெற்று விளியேற்றது (தொல். விளி. 12, ந; இ. வி. 207); உயர்திணைப்பெயர் ஏகாரம்பெற்று விளியாயிற்று (நன். 304, மயிலை.)

மு. 'கட்டுக்காணிய நின்றவிடத்துத் தோழி அறத்தொடு நின்றது; அதுவும் வெறியாட்டின்கண் அடங்கும்' (தொல். பொருளியல், 12, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அகவன் மகள்: "வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்" (குறுந். உகஅ: 6.)

5. தலைவனது குன்றத்தைப் பாடுதல்: சிறுபாண். 128; நற். கடுக 4, ௲எ௲: 3; ஐங். உசச: 2-4; பரி. கஎ: 51; கலி. சo, சக, ச௲; அகநா. உoஅ: 2; புறநா. க௲க: 3, கச௲: 12, கடுக: 12; சிலப். உச.

3-5. அகவன்மகள் மலைவளம் பாடுதலைக் குறவஞ்சி நூல்களிற் பரக்கக் காணலாகும். (உ௲)

---

## தலைவி கூற்று

[பிரிந்த தலைவன் மீண்டுவருவேனென்று சொல்லிய இளவேனிற் பருவத்தைக் கண்ட தலைவி, "தலைவர் பிரிவினால் எனக்கு உண்டாகிய வேறுபாடுகளைக் கண்டு ஊரார் பழி கூறுகின்றனர். அது தீர அவர் இன்னும் வந்திலர்" என வருந்திக் கூறியது.]

உச. கருங்கால் வேம்பி னொண்பூ யாணர்
என்னை யின்றியுங் கழிவது கொல்லோ
ஆற்றய லெழுந்த வெண்கோட் டதவத்
* தெழுகுளி றுமிதித்த வொருபழம் போலக்
குழையக் † கொடியோர் நாவே
காதல ரகலக் ‡ கல்லென் றவ்வே.

எ - து. பருவங்கண்டு ஆற்ருளாகிய கிழத்தி உரைத்தது.

[பருவம் - தலைவன் வருவேனென்று கூறிச் சென்ற காலம்; ஈண்டு இளவேனில்.]

(ப - ரை.) கரு கால் வேம்பின் ஒள் பூ யாணர் - கரிய தாளை யுடைய வேப்பமரத்தினது ஒள்ளிய பூவின் புதுவருவாயானது, என்னை இன்றியும் - என்னுடைய தலைவன் இல்லாமலும், கழிவதுகொல் - செல்வதுவோ? கொடியோர் நா - அயலாராகிய கொடியமகளிருடைய நாக்கள், காதலர் அகல - என்காதலர் என்னை நீங்கிச் செல்ல, ஆற்று அயல் எழுந்த - ஆற்றங்கரையில் முளைத்து வளர்ந்த, வெள் கோடு அதவத்து - வெள்ளிய கொம்புகளையுடைய அத்திமரத்தினது, எழு குளிறு மிதித்த - உண்ண விரும்பிய எழுநண்டுகளால் மிதிக்கப் பட்ட, ஒரு பழம்போல - ஒற்றைப்பழமானது குழைவதுபோல, குழைய - நான் வருந்தும்படி, கல்லென்ற - அலர்கூறிக் கல்லென்று முழங்கின.

(முடிபு.) ஒண்பூ யாணர் கழிவது கொல்லோ? காதலர் அகலு தலால் குழையக் கொடியோர்களின் நா, கல்லென்றன.

(கருத்து.) தலைவர் வாராமையின் ஊரினர் பழி கூறுதல் அடங்க வில்லை.

(வி - ரை.) வேம்பு இளவேனிலில் மலர்வது (ஐங். ௩௫௦.) தலைவனைத் தலைவி என்னையென்று கூறுதற்குரிய விதி, "அன்னை யென்னை யென்றலு முளவே, தொன்னெறி முறைமை சொல்லினு மெழுத்தினும், தோன்ரு மரபின வென்மனர் புலவர்" (தொல். பொருளியல், 52) என்பது; இந்நூலுட் பலவிடங்களில் தலைவனைத் தலைவி என்னையென்றலுங் காண்க. கொல்: இரக்கக் குறிப்பு;

(பி - ம்.) * எழுகளிறு. † கோட்டியோர். ‡ கவ்வென்றவ்வே.

இளவேனிலில் உடனிருக்கவேண்டிய தலைவன் சென்றானென்று இரங்கியவாறு. அதவத்து: அதவென்னும் அகரவீற்றுப் பெயர் அத்துச் சாரியை பெற்று அச்சாரியையின் அகரம் கெடாமல் வந்தது. (தொல். புணர். 31.) அத்திப்பழம் மென்மையுடையதாதலின் நண்டு கள் மிதித்தலாற் குழைவதாயிற்று; இங்ஙனம் குழைகின்ற பொரு ளுக்கு அத்திப்பழத்தை உவமை கூறுதல், "அதம்பழத் துருவு செய்தா ரவளிவ ணல்லூ ராரே" (தே. திருநா.) என்பதனாலும் விளங் கும். ஒன்றுக்கு ஏழு கூறுவது மரபு. இங்கே ஏழென்பது பலவென் பதைக் குறிக்கநின்றதொரு வாய்பாடு; 'ஏழென்பது அதற்குமேலாய மிக்க பன்மை குறித்து நின்றது, ஒருவர் கூறை யெழுவ ருடுத் தென்றாற்போல' (குறள், 1269, பரிமேல்.); இவ்வாய்பாடுகளை அநந்த வாசி யென்று கூறுவர் தக்கயாகப்பரணி யுரையாசிரியர். கொடியோ ரென்பது உயர்திணை யிருபாற் பொதுப்பெயரேனும் தொழிலால் ஆணொழித்து நின்றது; "ஊரவர் கௌவை யெருவாக" (குறள், 1147) என்பதனுரையில் 'ஊரவரென்பது தொழிலான் ஆணொழித்து நின்றது' என்றெழுதியமை இங்கே அறியற்பாலது. கல்லென்றல்: தலைவன் பிரிவினால் தலைவி வேறுபட்டிருத்தலை எடுத்துக்கூறிப் பழித் தல்; இஃது ஒலிக்குறிப்பு. கல்லென்றவ்வே: விரிக்கும்வழி விரித்தல்.

ஓகாரமும் ஏகாரங்களும் அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. கருங்கால் வேம்பு: பொருந. 143-4; புறநா. சடு: ௩௩௮: 5-6.

2. என்னை: குறுந். உ௪: 3, உ0௩: 5, உஉ௩: 7.

4. ஒன்றுக்கு ஏழு: "ஏழூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த, உலை வாங்கு மிதிதோல்" (குறுந். ௧௭உ: 5-6); "ஒருநா ணம்மில் வந்ததற் கெழுநாள், அழுப வென்ப" (ஐங். ௩உ: 2-3); "ஒருநா ளெழுநாள் போற் செல்லும்" (குறள், 1269); "ஓவா தெழுமடங் குட்குவரத் தோன்றி" (பெருங். ௧. 43: 122); "பூசுசாந் தொருவர் பூசிற் றெழுவர் தம் மகலம் பூசி" (சீவக. 116.)

3-4. அதவத்துப் பழம்: "அதவத் தீங்கனி யன்ன செம்முகத் துய்த்தலை மந்தி" (நற். ௯௫: 3-4.)

நண்டுகள் பழந்தை விரும்பல்: "அகலிலை நாவ லுண்டுறை யுதிர்த்த கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன், தாழை வேரளை வீழ்துணைக்

கிடேஉம், அலவன்" (அகநா. ௩உ௦ : 4-7); "அலவன்றன் சீர்ப்பெடை யின், வாய்வண் டனையதொர் நாவற் கனிநனி நல்க" (சிந். 84.)

6. கல்லென்றல்: குறுந். கஎக: 1, உசுஉ : 1; மலைபடு. 549; நற். ககக : 9, கசுரு : 3-4; புறநா. கஅச : 8. (உச)

---

## தலைவி கூற்று

[தலைவன் நெடுங்காலம் மணஞ்செய்துகொள்ளாமலிருத்தல் பற்றி வருந்திய தலைவி, "தலைவர் அருள் பூண்டு என்னை வரைந்து கொண்டாலன்றி எனக்கு உதவி செய்யத் தக்க சான்று பகர்வார் வேறு ஒருவரும் இலர்" என்று கூறியது.]

உ௫. யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் *கால
ஒழுகுநீ ராரல் பார்க்கும்
குருகு †முண்டுதான் மணந்த ஞான்றே.

எ - து. வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

[வரைவு - மணம் செய்தல்.]

(ப - ரை.) தோழி, தான் மணந்த ஞான்று - தலைவன் என்னைக் களவில் மணந்த காலத்தில், யாரும் இல்லை - சான்றுவார் வேறு ஒருவரும் இலர்; தானே கள்வன் - தலைவனாகிய கள்வன் ஒருவன் றான் இருந்தனன்; தான் அது பொய்ப்பின் - அங்ஙனம் இருந்த தலைவன் அப்பொழுது கூறிய சூளுறவினின்றும் தப்பினால், யான் எவன் செய்கு - நான் யாது செய்யவல்லேன்! ஒழுகு நீர் ஆரல் பார்க்கும் - ஓடுகின்ற நீரில் ஆரல் மீனின் வரவை உண்ணும்பொருட்டுப் பார்த்து நிற்கும், தினை தாள் அன்ன - தினையின் அடியைப்போன்ற, சிறு பசு கால - சிறிய பசிய கால்களையுடைய, குருகும் உண்டு - நாரையும் இருந்தது.

(முடிபு.) தலைவன் மணந்த ஞான்று யாரும் இல்லை; தானே; தான் அது பொய்ப்பின் எவன் செய்வேன்! குருகும் உண்டு.

---

(பி - ம்.) * காஅல. † முண்டோம்.

(கருத்து.) தலைவன் தான் கூறியபடி இன்னும் வரைந்து கொண்டானல்லன்.

(வி - ரை.) யாருமென்றது அறிவுடையோரை. தானே : ஏகாரம், பிரிநிலை. பிறரறியாவாறு வந்து தன் நலத்தைக் கவர்ந்துகொண்டு சென்றவனாதலின் கள்வன் என்றாள். 'அது' என்றது, 'நின்னைப் பிரியேன்; பிரியின் ஆற்றேன்' என்றும், 'நின்னை விரைவில் மணந்து கொள்வேன்' என்றும் கூறிய சூளுறவை (குறிஞ்சி. 208-10, உரை); அது : நெஞ்சறி சுட்டு. பார்க்கும் - உண்ணும் பொருட்டுக் கூர்ந்து பார்த்துக்கொண்டே நிற்கும். குருகும் உண்டு: உம்மை இழிவு சிறப்பு; அஃது இருந்தும் சான்றாகும் தகுதி பெற்றதன்றென்னும் நினைவிற்று.

செய்கோ : ஓகாரம், அசைநிலை. ஞான்றே : ஏகாரம், அசைநிலை.

என் நலத்தைப் பிறரறியாவாறு கவர்ந்த கள்வன் தன் வாய் மொழியின்படி செய்திலன்; 'நீ இங்ஙனம் கூறினையன்றே; அதனை நிறைவேற்றாதது என்?' என்று தொடுத்து வினவுதற்கு ஏற்ற சான்றும் இல்லை; அங்கே இருந்தது களிபோதற்குத் தகாத நாரையொன்றே; அஃதும் ஆரன்மீனை நோக்கிய கருத்தினதாதலின் அவன் சூளுறவைக் கேட்டிராது. இதற்கு என் செய்வேனென்பது தலைவியின் கருத்தாகக் கொள்க.

ஆரல் பார்க்கும் நாரை உண்டென்றமையின் இக்களவுக்கூட்டம் நீர்த்துறைக்கண் நிகழ்ந்ததென்பது பெறப்படும்.

தோழியென்ற விளி முன்னத்தாற் போந்தது.

'தாம் மணந்த ஞான்றே' என்ற பாடத்திற்கு, அவன் மணந்த நிகழ்ச்சியை எண்ணிப் பெருமிதங்கொண்ட தலைவி தாமென்று பன்மையாற் கூறி, கள்வனுதலைக் கூடுகையில் உண்டான செறல்பற்றித் தானென்று ஒருமையாற் கூறியதாகக் கொள்க; "எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையும், தேரான் பிறனில் புகல்" (குறள், 144) என்புழிப்போல.

## மேற்கோளாட்சி

3-5. பன்மை ஒருமை வழுவமைதி (தொல். எச்ச. 66, இளம்.); பன்மை ஒருமை மயக்கம் (சிற். 108, 123, பேர்.); பன்மை ஒருமைப் பால் வழுவமைப்பாகக் கொள்ளுதற் கியலாது (நன். 338, மயிலை.); காலை வென்பது பெயரெச்ச வினைக்குறிப்புச் சொல்; உண்டென்பது குறிப் புணர்த்தி நிற்றலின் ஒருமைச்சொல் (தொல். முதற் சூத்திரவிருத்தி.)

'இன்னும் இதனுனே பன்மை சுட்டிய பெயர்ச்சொல், ஒருமையோடு இயைபின்றி இயைதலின் வழுவாயமைவதூஉங்கொள்க. குருகென்பது இயற்பெயராதலின் அதன்கட் பன்மையோடு காலவென்பது இயைந்து காலனவாகிய குருகுகள் என நிற்பின், அஃது உண்டென்னும் ஒருமைக்கு ஏலாமையின், குருகென்பது ஒருமையாயே நின்றதாதலின் வழுவேயாம்; கள்வன் தானொருவனுமே, வேறு சிலர் ஆண்டில்லையென்று கூறுகின்றாள், இரை தேரும் மனக்குறிப்புடைமையிற் கேளாது, சிறிது கேட்டதாயினும் கொலைசூழ் குருகாதலின் கூறுவதுஞ் செய்யாது, இத் தன்மைத்தாய குருகும் உண்டென்று கூறுதலின் உண்டென்று ஒருமை வாசகத்தாற் கூறினர்' (தொல். எச்ச. 65, ந.)

மு. அவன் புணர்வு மறுத்தலென்னும் மெய்ப்பாடு வந்தது (தொல். களவு. 21, இளம்.); 'இதனுள், யானெவன்செய்கோவெனத் தோழி வினவாக் காலத்து அவன் தவற்றை வரைவிடை வைத்தலின் ஆற்றுமைக்குத் தலைவி தானே அறிவித்தாள்' (ஷை., ஷை. ஷை., ந.); தலைமகன் இகந்தமை தலைமகள் பாங்கிக்கு இயம்பியது (நம்பி. 176; இ. வி. 533); உண்டென்பது ஐம்பால் மூவிடத்திற்கும் வரும் (நன். 339, சங், வி.); உண்டென்பது யாண்டும் அஃறிணை யொருமையையே உணர்த்திநிற்கு மெனக் கூறவேண்டுவதில்லை (இ. வி. 240.)

## ஒப்புமைப் பகுதி

1. **தலைவனைக் கள்வனென்றல்:** (குறுந். ௩௧அ : 8); (நற். உஅ : 4); "இவனென் னலங்கவர்ந்த கள்வ னிவனெனது, நெஞ்ச நிறை யழித்த கள்வன்" (மு.ந். 102); "காடுடைய சுடலைப்பொடி பூசியென்னுள் ளங்கவர் கள்வன்" (தே. திருஞா.)

2. **பொய்த்தல்:** குறள், 293.

**தலைவன் பொய்த்தல்:** "பொய்வ லாளன்" (குறுந். ௩௦ : 2); "இவன், பொய்பொதி கொடுஞ்சொல்" (நற். உ௦௦ : 10-11); "தானுற்ற, சூள்பேணுன் பொய்த்தான் மலை" (கலி. சச : 19-20); "நும்மோ ரன்னோர் மாட்டு மின்ன, பொய்யொடு மிடைந்தவை தோன்றின், மெய்யாண் டுளதோவிவ் வுலகத் தானே" (அகநா. உஅகூ : 15-7.)

1-2. **தலைவன் சூளுறவு செய்தலும் அதனைப் பொய்த்தலும்:** "பணையெழின் மென்றோ ளணைஇய வந்நாட், பிழையா வஞ்சினஞ் செய்த, கள்வனுங் கடவனும் புணைவனுந் தானே" (குறுந். ௩௧அ : 6-8.)

5. **குருகுதழண்டு:** குறுந். உகூ : 8; அகநா. ௩உ௦ : 13-4; திவ். பெரியதிரு. கூ. 3; 4.

4-5. களவுக்காலத்துப் பயிலும் இடத்தில் நாரை இருத்தல் "இரைதேர் வெண்குரு கல்லது யாவதும், துன்னல்போ கின்றாற் பொழிலே" (குறுந். கசுகூ : 3-4.)

ஆரல் பார்க்கும் குருகு : (குறுந். க0கூ : 3, ககச : 4-5) ; "இரை தேர் நாரை", "இரைதேருந் தடந்தா ளுரை" (நற். கூகு : 6, கூக : 4) "நாரைக ளாரல் வார" (தே. திருநா. திருநனிபள்ளி.)

3-5. நாரையின் காலுக்குத் தினைத்தாள் : "தினைத்தா ளன்ன செங்கா னுரை சேருந் திருவாரூர்" (தே. சுந்தா.) (உகு)

---

## தோழி கூற்று

[தலைவியின் வேறுபாட்டுக்குக் காரணம் பிறிதோர்தெய்வமென்று கட்டுவிச்சியால் அறிந்த தாயர் முதலியோருக்குத் தோழி, "இவள் ஒரு தலைவனொடு நட்புப் பூண்டாள் ; அவனை ஓர் ஆண்குரங்கும் அறியும்" என்று உண்மையைக் கூறியது.]

உசு. அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்
தகாஅன் போலத் தான்றீது மொழியினும்
தன்கண் கண்டது பொய்க்குவ தன்றே
தேக்கொக் கருந்து முள்ளெயிற்றுத் துவர்வாய்
வரையாடு வன்பறழ்த் தந்தைக்
கடுவனு மறியுமக் கொடியோ னையே.

எ - து. நற்றாயுஞ் செவிலித்தாயும் தலைமகளது வேறுபாடு கண்டு, இஃது எற்றினானாயிற்றென்று கட்டுவிச்சியை வினவிக் கட்டுக் காண்கின்ற காலத்துத் தலைமகளது வேறுபாட்டிற்குக் காரணம் பிறிதோர் தெய்வமென்று கூறக்கேட்டுத் தோழி அறத்தொடு நின்றது.

[எற்றினான் - என்ன காரணத்தால். கட்டுவிச்சி - கட்டுப் பார்ப்பவள் ; இந்நூல் உகூ-ஆம் பாட்டின் கருத்தையும் உரையையும் பார்க்க.]

(ப - ரை.) அரும்பு அற மலர்ந்த - அரும்புத்தன்மை இல்லாமல் மலர்ந்த, கரு கால் வேங்கை - கரிய அடியையுடைய வேங்கை

மரத்தின், மேக்கு எழு பெரு சினை - மேலே வளர்ந்த பெரிய கிளையில், இருந்த தோகை - இருந்த மயிலானது, பூ கொய் மகளிரின் - அதன்மலரைக் கொய்யும் மகளிரைப்போல, தோன்றும் நாடன் - தோன்றுதற்கு இடமாகிய நாட்டையுடைய தலைவன், தகாஅன் போல - இவளுக்கு உரியனுருந் தகுதியிலானென்பதுபோல, தான் - கட்டுவிச்சி, தீது மொழியினும் - தெய்வத்தால் வந்ததென்று தீங்கானதைக் கூறினும், தேன் கொக்கு - தேமாவின் கனியை, அருந்தும் - உண்ணுகின்ற, முள் எயிறு துவர் வாய் - முள்ளைப்போன்ற கூரிய பற்களையும் செவ்விய வாயையுமுடைய, வரை ஆடு - மலைகளில் விளையாடும், வன் பறழ் தந்தை - வலிய குட்டியின் தந்தையாகிய, கடுவனும் - ஆண்குரங்கும், அ கொடியோனை - அந்தக் கொடியவனுகிய தலைவனை, அறியும்—; ஆதலின் அது, தன்கண் கண்டது - தன்கண்ணுற் கண்ட நிகழ்ச்சியை, பொய்க்குவது அன்று - காணேனென்று பொய் சொல்லாதது.

(முடிபு.) நாடன் தகான்போலத் தான் தீதுமொழியினும் அக்கொடியோனைக் கடுவனும் அறியும்; ஆதலின் கண்டது பொய்க்குவதன்று.

(கருத்து.) இத்தலைவியின் நோய்க்குக் காரணம் ஒரு தலைவனோடு செய்த நட்பேயாகும்.

(வி - ரை.) அரும்பு முழுவதும் மலர்ந்தவென்றலுமாம்; அற - முழுவதும்; "நின்னை யறப்பெறுகிற்கிலேன்" (அறநெறிச். 191.) கருங்கால் - பெரிய அடியுமாம். மகளிர் வேங்கைமலரைக் கொய்து அணிந்துகொள்ளல் இயல்பு. நாடன் - குறிஞ்சிநிலத் தலைவன் (குறுந். ௩: 4, விசேட.) தகாஅன் போலவென்றது தகுதியுடையனுக இருக்கவும் தகானென்று சொல்லிப் புறக்கணித்தலைப்போல வென்றபடி. தலைவியின் கற்புக்கு இழுக்காதலின் 'பிறிதோர் தெய்வத்தாலாயிற்று' என்ற கட்டுவிச்சி கூற்றைத் தீது மொழிதலென்றாள். அதுகாறும் தலைவன் வரையாமல் நீட்டித்ததை நினைந்தவளாதலின் கொடியோனென்றாள்.

கடுவனும்: உம்மை, இழிவுசிறப்பு; இத்தகைய கடுவனும் அவனை அறிந்திருப்பக் கட்டுவிச்சியால் அழைக்கப்பட்ட தெய்வம் அறியாதது என்ன மடமை யென்பது தோழியின் குறிப்பு.

தேமாமரங்கள் செறிந்த சோலையின்கண் குட்டியும் ஆண்குரங்கும் அம்மரங்களிலுள்ள பழங்களைத் தின்று விளையாடும்பொழுதில்

தலைவனொருவன் தலைவிக்கு நண்பனானானென்ற செய்தியைத் தோழி இதனால் தெரிவித்தாளாயிற்று.

வேங்கைமேலிருந்த தோகை பூக்கொய் மகளிரிற் றோன்றும் நாடனென்றது, வேங்கையின் பூவைக்கொய்து அதன் அழகைக் கெடுக்கும் மகளிரைப்போல மயில் தோற்றினும் உண்மையில் அம்மரத்திற்கு மேலும் அழகைத்தந்து அமைவதுபோல, தலைவன் இப்பொழுது இவளது நலமழியச் செய்தவனாகத் தோற்றினும் வரைந்துகொள்வானேல் இவள் நலம் வளரச்செய்வானென்னும் குறிப்பினது.

## மேற்கோளாட்சி

2. சினை, மரத்தோடு அடுத்து வந்தது (தொல். மரபு. 87, பேர்.)

7. பறழென்பது குரங்கின் இளமைப் பெயர் (தொல். மரபு. 14, பேர்.); நிரைநேர்பு ஒன்றாமையின் இயற்சீர் வெண்டளையானது (ஷை. செய். 56, ந.)

8. ஆண் குரங்கினைக் கடுவனென்றல் தொன்றுதொட்ட வழக்கு (தொல். மரபு. 68, பேர்.)

மு. * தலைவனைத் துறந்தான்போலவும் மறந்தான்போலவும் கருதித் தான் தீது மொழியினுமென, தோழி வினவாக்காலத்து அவன் தவற்றைத் தலைவி வரைவிடை வைத்தலின் ஆற்றாமையை அறிவித்தது (தொல். களவு. 21, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. மு. நற். ககஉ : 2 ; புறநா. உ0உ : 18.

அரும்பற மலர்தல்: "அரும்பற மலர்ந்த வாய்பூ மராஅத்து" (அகநா. உ௫எ : 6) ; "அரும்பற, வள்ளித ழவிழ்ந்த தாமரை" (புறநா. உ௪௬ : 13-4.)

கருங்கால் வேங்கை : குறுந். ௪எ : 1, ௩௪௩ : 5 ; நற். க௫க : 8-9, க௬அ : 1, உ௫எ : 5 ; ஐங். உகக : 1 ; திணைமா. 26.

---

* இக்கருத்துக்கு, 'தகான்போலத் தான்தீது மொழியினும் - தகுதியற்றான் சுரிபொய்த்தலைப் போல என்னைப் புறக்கணிக்கும் சொற்களைத் தலைவன் சொல்லினும்' என்று பொருள் கொள்ளவேண்டுமென்று தோற்றுகின்றது.

1-2. வேங்கைமரத்தின்மேல் தோகை இருத்தல்: "பூத்த வேங்கை வியன்சினை யேறி, மயிலின மகவு நாடன்" (தமிழ்நெறி. மேற்.)

1-3. வேங்கை மரத்தின்மேலுள்ள மயிலுக்குப் பூக்கோய்யும் மகளிர்: "விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை, பூக்கொய் மகளி ரிற் றோன்று நாடன்" (ஐங். உகஎ: 1-2.)

5. கண்கண்டது பொய்க்குவதன்று: குறுந். கஅச: 1.

6. தேக்கோக்கு: குறுந். கசுச: 2, உ0க: 2.

மாம்பழம் இனியது: குறுந். அ: 1, ஒப்பு.

8. கவேனும் அறியும்: குறுந். உ௫: 5.

தலைவனைக் கோடியனென்றல்: குறுந். உ௫உ: 2, உஎஅ: 4, ௬சுஎ: 1; நற். உஅ: 4; அகநா. கசுரு: 12, ௬சுக: 10. (உசு)

---

## தலைவி கூற்று

[தலைவன்பிரிவினை இவள் ஆற்றாளாயினளென்று கவலையுற்ற தோழியை நோக்கித் தலைவி, "நான் ஆற்றியிருப்பவும் என் மாமை யழகு வீணாகும்படி அதனைப் பசலை உண்டது" என்று கூறியது.]

உஎ. கன்று முண்ணாது கலத்தினும் படாது
நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்
கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது
பசலை *யுணீஇயர் வேண்டும்
திதலை யல்குலென் மாமைக் கவினே.

எ - து. பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கோல்லன் அழிசி.

(ப - ரை.) நல் ஆன் தீ பால் - நல்ல பசுவின் இனிய பாலானது, கன்றும் உண்ணாது - அப்பசுவின் கன்றினாலும் உண்ணப்படாமல், கலத்தினும் படாது - கறக்கும் பாத்திரத்திலும் விழாமல், நிலத்து உக்காங்கு - தரையிற் சிந்தி வீணானதுபோல, திதலை அல்குல்—,

(பி - ம்.) * யுண்ணிய, யுண்ணியர்.

என் மாமை கவின் - எனது மாமையாகிய பேரழகை, எனக்கும் ஆகாது - எனக்கு அழகு பயந்து நிற்பதாகாமலும், என்னைக்கும் உதவாது - என் தலைவனுக்கு இன்பம் பயவாமலும், பசலை உணீஇயர் வேண்டும் - பசலையானது தான் உண்ண விரும்பா நிற்கும்.

(முடிபு.) பால் நிலத்து உக்காங்குப் பசலை மாமைக்கவினை உணீஇயர் வேண்டும்.

(கருத்து.) தலைவனது பிரிவினால் மாமைக்கவின் அழியப் பசலை பாந்தது.

(வி - ரை.) கலம் - பால்கறக்கும் பாத்திரம்; "கறவைகன் றார்த்திக் கலநிறை பொழியும்" (மணி. கஉ: 93.) மாமை தலைவிக்கு அழகு பயந்து சிறப்புத்தருதலின், 'எனக்கு மாகாது' என்றாள்; "தனக்கமைந் தன்றிவண் மாமைக் கவினே" (ஐங். கoரு: 3-4.) என்னை; குறுந். உச: 2, விசேடவுரையைப் பார்க்க. மாமை தலைவனுக்குப் பயன்படுதலாவது, அம் மாமைக் கவினை நோக்கி நோக்கி அவன் மகிழ்ச்சிபெறுதல்; "துறைவற், கினிய மன்றவென் மாமைக் கவினே" (ஐங். கசசு: 2-3); "நுண்ணெழின் மாமைச் சுணங்கணி யாகந்தம், கண்ணொடு தொடுத்தென நோக்கியும்" (கலி. ச: 17-8.) பசலை - பிரிவாற்றாமையால் உண்டாகும் வேறுபாடான பொன்னிறம். 'பசலை உணீஇயர்' என்றது, "உண்டற் குரிய வல்லாப் பொருளை, உண்டன போலக் கூறலு மரபே" (தொல். பொருளியல், 19) என்னும் மரபு வழுவமைதியின்பாற்படும். திதலை - தேமல். மாமைக் கவின்: இது மகளிருக்குப் பேரழகு பயப்பது; இதன் நிறம் மாந்தளிர் (குறுந். ங௩க), ஆம்பலின் நாருரித்தமெல்லிய தண்டு (நற். சு: 1-2, ஐங். ஙரு), ஈங்கையென்னும் கொடியின் தளிர் (அகநா. எரு: 17-8), அசோகந் தளிர் (கலி. கரு: 12) என்பவற்றின் நிறத்தைப் போன்றதென்று கூறுவர். பசலை படர்ந்தால் இந்நிறம் அழிந்துவிடும்.

கன்று உண்டபின் கலத்திலும் நிறையும் பாலைப்போல மாமைக் கவின் தலைவிக்குப் பயன்பட்டுத் தலைவனுக்கும் நிறைந்த இன்பத்தைத் தருவதற்குரியதென்பது உவமையாற் பெறப்படும்.

எனக்கும், என்னைக்கும்: உம்மை யிரண்டனுள் முன்னது எதிரது தழீஇயது; பின்னது இறந்தது தழீஇயது.

இது பசலை பாய்தலென்னும் மெய்ப்பாடு.

## மேற்கோளாட்சி

3. தலைவி தலைவனை என்னையென்றது (தொல். பொருளியல், 52, ந.)

4. செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம் வினைமுதல் வினையைக் கொண்டு முடிந்தது (நன். 343, மயிலை, 344, சங், வி.)

மு. பசலைபாய்தலென்னும் மெய்ப்பாடு (தொல். மெய்ப். 22, பேர்; இ. வி. 580); காதல் கைம்மிகல் என்னும் மெய்ப்பாடு (ஷை. களவு. 21, இளம்.); '* இது வெள்ளிவீதியார்பாட்டு; இது தம் பெயர் கூறின், புறமாமென்று அஞ்சி வாளாது கூறினர்' (ஷை. அகத். 54, ந.)

## ஒப்புமைப் பகுதி

3. என்னை: குறுந். உச: 2, ஒப்பு.

5. திதலையல்குல்: குறுந். உகச: 5; நற். கருரு: 3-4; ஐங். உக: 4, எஉ: 2; அகநா. ௫௪: 21, கஅரு: 2, கஅக: 9.

4-5. தலைவன் பிரிவினால் மாமை அழிதல்: (குறுந். ருகூஅ: 2); "நீயே, குவளை யுண்க ணிவளீண் டொழிய, ஆள்வினைக் ககறி யாயி னின்றொடு, போயின்று கொல்லோ தானே படப்பைக், கொடுமு ளீங்கை நெடுமா வந்தளிர், நீர்மலி கதழ்பெய றலைஇய, ஆய்நிறம் புரையு மிவண் மாமைக் கவினே" (நற். உ0௬: 5-11); "கான நாடன் பிரிந் தெனத், தானும் பிரிந்தன்றென் மாமைக் கவினே" (தொல். களவு. 21, ந. மேற்: 'அம்மவாழி'); "களியானைத் தென்ன னிளங்கோவென் றெள்ளிப், பணியாரே தம்பா ரிழக்க - அணியாகம், கைதொழு தேனு மிழக்கோ நறுமாவின், கொய்தளி ரன்ன நிறம்" (முத். 83); "மற் கொண்ட திண்டோண் மறவே னெடுந்தகை, தற்கண்டு மாமைத் தகை யிழந்த - எற்காண" (பு. வெ. 307.)

பசலையினால் மாமை அழிதல்: (குறுந். ருருக: 7); "வண்ணம் பசந்து புலம்புறு காலை" (தொல். பொருளியல், 8); "நன்மலை நாடன்,......பிரியின், மணிமிடை பொன்னின் மாமை சாயவென், அணி நலஞ் சிதைக்குமார் பசலை" (நற். ரு0ச: 4-7); "இனிப்பசந் தன் றென் மாமைக் கவினே", "நன்மா மேனி பசப்ப" (ஐங். ரு௬: 4,

* குறுந்தொகை, உகூ-ஆம் செய்யுளை இயற்றிய ஆசிரியர்பெயர் வெள்ளிவீதியார் என்றும், இப்பாட்டின் ஆசிரியர் பெயர் கொல்லனழிசி என்றும் பிரதிகளில் உள்ளன; நச்சினார்க்கினியர் கூற்றால் இவ்விரண்டும் மாறி யெழுதப்பட்டதாகக் கொள்ளவேண்டுமென்று தோற்றுகின்றது.

கசச : 3, உஉக : 3) ; "செயலையந் தளிரேய்க்கு மெழினல மந்நலம், பயலையா லுணப்பட்டு", "பன்னாளும் படர்டப் பசலையா லுணப்பட்டாள், பொன்னுரை மணியன்ன மாமைக்கட் பழியுண்டோ" (கலி. கரு : 12-3, சஅ : 16-7) ; "வாமான்றேர்க் கோதையை மான்றேர்மேற் கண்டவர், மாமையே யன்றோ விழப்பது - மாமையிற், பன்னூறு கோடி பழுதோவென் மேனியிற், பொன்னூறி யன்ன பசப்பு" (முத். 53); "பேர்கின் றதுமணி மாமை பிறங்கியள் ளற்பயலை, ஊர்கின்றது" (திவ். திருவிருத்தம், 12) ; "மாமை பொன்னிறம் பசப்ப" (பு. வெ. 299.) (உஎ)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைபொருளுக்காகப் பிரிந்த காலத்தில், அவன் விரைந்து வாராமைபற்றிக் கவலையுற்ற தோழியை நோக்கி, "என் துன்பத்தை அறியாமல் துயில்கின்ற இவ்வூரின்றிறத்து யான் யாது செய்வேன்?" என்று தலைவி சினந்து கூறியது.]

உஅ. முட்டு வேன்கொ றாக்கு வேன்கொல்
ஓரேன் யானுமோர் பெற்றி மேலிட்
டாஅ வொல்லெனக் கூவு வேன்கொல்
அலமர லசைவளி யலைப்பவென்
உயவுநோ யறியாது துஞ்சு மூர்க்கே.

எ - து. வரைவிடை யாற்றாளாய்க் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

ஔவையார்.

(ப - ரை.) அலமரல் - சுழலுதலையுடைய, அசை வளி - அசைந்து வருகின்ற தென்றற்காற்று, அலைப்ப - வருத்தா நிற்க, என் உயவு நோய் அறியாது - எனது வருந்துதலையுடைய காமநோயை உணர்ந்துகொள்ளாமல், துஞ்சும் ஊர்க்கு - கவலையின்றித் தூங்கும் ஊரிலுள்ளாரை, யான், முட்டுவேன் கொல் - முட்டுவேனோ? தாக்குவேன் கொல் - தாக்குவேனோ? ஓர் பெற்றி மேலிட்டு - ஒருதலைக் கிட்டை மேற்கொண்டு, ஆஅ ஒல்லென - ஆவென்றும் ஒல்லென்றும் ஒலி உண்டாக, கூவுவேன் கொல் - கூப்பிடுவேனோ? ஓரேன் - இன்னது செய்வதென்பதை அறியேன்.

(முடிபு.) ஊரை முட்டுவேன்கொல்? தாக்குவேன்கொல்? கூவுவேன்கொல்? ஓரேன்.

(கருத்து.) என்னுடைய நோயைத் தாயர் முதலியோர் அறியாமையின் யான் ஆற்றேனாயினேன்.

(வி - ரை.) முட்டுதல் உடம்பாற்றீண்டுதலென்றும், தாக்குதல் கோல் முதலிய கருவிகளால் தீண்டுதலென்றும் கொள்க; முட்டுதல் - எதிர்த்தலுமாம் (தொல். களவு. 21.) ஓர் பெற்றிமேலிட்டுக் கூவுதலாவது, 'பாம்பு பாம்பு' என்றேனும், 'திருடன் திருடன்' என்றேனும் பிறவாறேனும் கூவுதல். இங்ஙனம் கூவுதலால் ஊரார் எழுந்து அலர் தூற்றுவர்; அவ்வலர் தலைவன் தன்னை வரைந்து கொள்வதை விரைவிற் கூட்டும் உபாயமாதலின் தலைவிக்கு இன்பம் பயக்கும்; "அலரெழ வாருயிர் நிற்கும்" (குறள், 1141.) உயவு: உயாவென்பதன் திரிபு; "உயாவே யுயங்கல்" (தொல். உரி. 71.) உயவுநோய்: வருத்தத்தையுடைய காமநோய் (கலி. ௩௫: 22, ந.) நோய் அறியாது துஞ்சுமென்றமையால் தலைவி துஞ்சாமை பெறப்படும். ஊர்க்கு - ஊரை; உருபுமயக்கம்; "உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்" (சிலப். பதி. 56.)

ஊர்க்கு - ஊரினர்பொருட்டு, முட்டுவேன்கொல் - சுவர்முதலியவற்றில் முட்டிக் கொள்வேனோ? தாக்குவேன்கொல் - தாக்கிக்கொள்வேனோவென்று பொருள் கூறலும் ஆம்.

## ஒப்புமைப் பகுதி

3. ஆஅ: "ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினொடு" (பழம். பாடல்); "ஆவம்மா வம்மாவென் னம்மா வகன்றனையே" (சீவக. 1804.)

4. அசைவளி அலைத்தல்: "தைவர லசைவளி மெய்பாய்ந் தூறுதரச், செய்வுறு பாவை யன்னவென், மெய்பிறி தாகுதல்" (குறுந். ௧௯௫: 5-7.)

அசைவளி: குறுந். உ௭௩: 2; கலி. ௧உ௬: 12.

5. உயவு நோய்: கலி. ௩௫: 22, ௯அ: 7, ௧௧௩: 3.

துஞ்சும் ஊர்: குறுந். ௩௦உ: 7.

தலைவி துஞ்சாமை: குறுந். ௬: 4, ஒப்பு. (உஅ)

## தலைவன் கூற்று

[தலைவன் இரவுக்குறியை விரும்ப, அதனைத் தோழி மறுத்து, வரைந்து கொள்ள வேண்டுமென்று குறிப்பித்தாள்; பின்னும் அவனது நெஞ்சம் இரவுக்குறியை விரும்ப, "நின் குறையையறிந்து நிறைவேற்றுவார் அரியராகவும், நீ வருந்துதலினாற் பயன் யாது?" என்று அவன் அதனைநோக்கி இரங்கிக் கூறியது.]

உக. நல்லுரை யிகந்து * புல்லுரை தாஅய்ப்
பெயனீர்க் கேற்ற பசுங்கலம் போல
உள்ளந் தாங்கா வெள்ள நீந்தி
† அரிதவா வுற்றனை நெஞ்சே ‡ நன்றும்
பெரிதா லம்ம நின் பூச லுயர்கோட்டு
மகவுடை மந்தி போல
அகனுறத் தழீஇக் கேட்குநர்ப் பெறினே.

எ - து. இரவுக்குறி மறுக்கப்பட்ட தலைமகன, இவா எமமை மறுத்தாரென்று வரைந்துகொள்ள நினையாது பின்னுங் கூடுதற்கு அவாவுற்ற நெஞ்சினை நோக்கிக் கூறியது.

[இவர் - தோழியும் தலைவியும்.]

ஔவையார்.

(ப - ரை.) நெஞ்சே—, நல் உரை இகந்து - நல்ல உரைகள் நீங்கி, புல் உரை தாஅய் - பயனற்ற உரைகள் பரவப்பெற்று, பெயல் நீர்க்கு ஏற்ற - பெய்தலையுடைய மழையின் நீரை ஏற்றுக்கொண்ட, பசு கலம்போல - சுடப்படாத பசுமண்ணாலாகிய பாண்டத்தைப் போல, உள்ளம் தாங்கா - உள்ளத்தினால் பொறுக்கமுடியாத, வெள்ளம் நீந்தி - ஆசைவெள்ளத்தில் நீந்தாநின்று, அரிது - பெறுதற்கரியதை, அவாவுற்றனை - பெறவிரும்பினை; உயர் கோடு - உயர்ந்த மரக் கொம்பிலுள்ள, மக உடை மந்திபோல - குட்டியையுடைய பெண் குரங்கு தன் குட்டியால் தழுவப்பெற்று அமைவதுபோல, அகன் உற - மனம் பொருந்த, தழீஇ - என் கருத்தைத் தழுவிக்கொண்டு கேட்குநர் - என் குறையைக் கேட்டு நிறைவேற்றுவாரை, பெறின் -

(பி - ம்.) * புல்லுரைத்தாஅய். † அரிதயர்வுற்றனை. ‡ என்றும்.

பெறுவாயாயின், நின் பூசல் - உனது போராட்டம், நன்றும் பெரிது - மிகவும் பெருமையுடையது.

(முடிபு.) நெஞ்சே, நின்பூசல் கேட்குநர்ப் பெறின் பெரிது.

(கருத்து.) இனித் தலைவியை இரவிற் காண்டல் அரிது.

(வி - ரை.) நல்லுரையென்றது தன் விருப்பத்திற்கு இணங்கி இரவுக்குறி நேரும் உரையை. புல்லுரையென்றது இரவுக்குறி மறுத்து வரைவுகடாயதை. பசுங்கலம் நீரைத் தாங்காமை, உள்ளம் ஆசைவெள்ளத்தைத் தாங்காமைக்கு உவமை. நீர்க்கேற்ற - நீரை யேற்ற; உருபுமயக்கம் (குறுந். உஅ: 5.) நீந்துதல் - உட்டுளைதல்; ஆசைவெள்ளத்தில் நிலையின்றித் தடுமாறுதல். அரிது - இரவுக் குறி; தோழி அதனை மறுத்தமை அரிதென்பதனாற் பெறப்பட்டது. நெஞ்சுக்கு உள்ளம் கூறுதல் மரபு. நெஞ்சை இங்கே விளித்துக் கூறியது, "நோயு மின்பமு மிருவகை நிலையிற், காமங் கண்ணிய மரபிடை தெரிய, எட்டன் பகுதியும் விளங்க வொட்டிய, உறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோல், மறுத்துரைப் பதுபோ னெஞ் சொடு புணர்த்தும்" (தோல். பொருளியல், 2) என்னும் இலக்கணம் பற்றி. நன்றுமென்பது மிகுதியைப் புலப்படுத்தி நின்றது; "நன் றும், சேய வம்ம விருவர்தம் மிடையே" (குறுந். உகஎ: 3-4.) கேட்குநரென்றது கேட்டுக் குறைதீர்ப்பவர்களை; "வழிபடு வோரை வல்லறி தீயே" (புறநா. கO: 1) என்பதையும், 'வழிபடுவோரை வல் லறிதியென்றது, அறிந்து அவர்களுக்கு அருள் செய்யை யென்ப தாம்' என்னும் அதன் விசேடவுரையையும் காண்க. கேட்குநர்ப் பெறினேயென்றது கேட்பார் அரியராயினமையை உணர்த்தியது (குறள், 334, பரிமேல்.)

## மேற்கோளாட்சி

5-6. மகவென்பது குரங்கின் இளமைப் பெயர் (தோல். மரபு. 14, பேர்.)

மு. தோழியால் வரைவுகடாவப்பட்ட பின்னரும் தலைவன் களவொழுக்கம் வேண்டிக் கூறியது (தோல். களவு. 17, இளம்.); தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக்கூறிச் செட்பட நிறுத்தலில் தனக்கு உண்டாகிய வருத்தத்தால் தலைவனுக்குக் கூற்று நிகழும் (ஷை. ஷை. 11, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. **நீரையேற்ற பசுங்கலம்:** "ஈர்மட் செய்கை நீர்படு பசுங்கலம் பெருமழைப் பெயற்கேற் றுங்கு" (நற். கூ0அ : 9-10); "பசுமட், கலத்துணீர் பெய்திரீஇ யற்று" (குறள், 660); "எழிலையாழ் செய்கைப் பசுங் கலன் விசும்பி னின்றுளி படநனைந் துருகி" (திருவிசைப்பா, கருவூர்த். திருவிடைமருதூர், 7.)

3. **ஆசைவெள்ளம்:** "இருவே நீந்தும் பருவரல் வெள்ளம்" (நற். கூகூக : 4.)

4. **அரிது:** குறுந். உகஅ : 2.

3-4. **நெஞ்சுக்கு உள்ளம் கூறும் மரபு:** "வருந்தினை வாழியென் னெஞ்சே.........செல்லினிச் சிறக்கநின் னுள்ளம்" (அகநா. கக : 2-8.)

6. **மகவுடை மந்தி:** "பார்ப்புடை மந்திய மலை", "பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்" (குறுந். உஎஅ : 7, கூகூ௫ : 4); "மலையார் சாரன் மகவுடன் வந்த மடமந்தி" (தே. திருஞா. திருக்குற்றாலம்.)

6-7. **மந்தி மகவைத் தழுவுதல்:** "குந்தி வாழையின் கொழுங்கனி நுகர்ந்துதன் குருளையைத் தழுவிப்போய், மந்தி மாம்பணை மேல்வைகு நாங்கூர் வண்புரு டோத்தமமே" (திவ். பெரியதிரு. ௪. 2 : 9.)

மு. "பின்னிலை வேட்டல் பெரிதினி தேபின்னர் மாறிநின்று
தன்னிலை தேய்ந்து தணியா ருயிரைத் தழீஇக்கொடொன்று
முன்னிலை யீச னருள்போற் றழுவி முனிதுயர்கூர்
என்னிலை நோக்கி யிரங்கவல் லார்ப்பெறி னேழைநெஞ்சே"
(தணிகைப். களவுப். 259.) (உகூ)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைபொருளின்பொருட்டுப் பிரிந்த காலத்தில், தலைவியது ஆற்றாமைக் காரணத்தைத் தோழி வினவ, தலைவி, "இயல்பாக ஆற்றியிருக்கும் யான், தலைவனை மருவியதாகக் கண்ட பொய்க் கனவினால் வருத்தமுறுவேனாயினேன்" என்று கூறியது.]

**௩0. கேட்டிசின் வாழி தோழி யல்கற்**
**பொய்வ லாளன் மெய்யுறன் * மரீஇய**
**† வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட வேற்றெழுந்**

(பி - ம்.) * மரீஇ. † வாய்த்தரு.

*தமளி தைவந் தனனே குவளை*
*வண்டுபடு மலரிற் சாஅய்த்*
*தமியேன் மன்ற வளியேன் யானே.*

எ - து. * "அவர் நின்னை வரைந்துகோடல் காரணத்தாற் பிரியவும், நீ † ஆற்றுயாகின்றதேன்?" என வினவிய ‡ தோழிக்குத் தலைமகள், "யான் ஆற்றியுளேனுகவும் கனவு வந்து என்னை இங்ஙன் நலிந்தது" எனக் கூறியது.

கச்சிப் § பேட்டு நன்னாகையார்.

(ப - ரை.) *தோழி—, கேட்டிசின் - கேட்பாயாக: அல்கல் - இராக்காலத்தில், பொய்வலாளன் - பொய் கூறுதலில் வன்மையுடைய தலைவன், மெய் உறல் மரீஇய - என் உடம்புடன் அணைதலைப் பொருந்திய, வாய் தகை - மெய்போலுந் தன்மையையுடைய, பொய் கனு - பொய்யாகிய கனவு, மருட்ட - மயக்கத்தை உண்டாக்க, ஏற்று எழுந்து - துயிலுணர்ந்து எழுந்து, அமளி தைவந்தனன் - தலைவனென எண்ணிப் படுக்கையைத் தடவினேன்; வண்டுபடு குவளை மலரின் - வண்டுகள் வீழ்ந்து உழக்கிய குவளைமலரைப் போல, சாஅய் - மெலிந்து, மன்ற - நிச்சயமாக, தமியேன் - தனித்தவளாயினேன்; யான் - அத்தகைய யான், அளியேன் - அளிக்கத்தக்கேன்!*

(முடிபு.) *தோழி, கேட்டிசின்; பொய்வலாளன் மரீஇய பொய்க் கனு மருட்ட எழுந்து அமளி தைவந்தனன்; தமியேன்; அளியேன்!*

(கருத்து.) *யான் தலைவனோடு அளவளாவியதாகக் கனுக்கண்டேன்.*

(வி - ரை.) *கேட்டிசின்: சின், முன்னிலையசைச்சொல்* (தொல். இடை. 27.) *வாழி: அசைநிலை. அல்கல் - இரவு* (கலி. ௬௫: 2.) *பொய்வலாளனென்றது தான் கூறிய நாளில் வந்து வரையாமையைப் புலப்படுத்தியது. வாய்த்தகைப் பொய்க்கனு - உண்மையைப் போலத் தோன்றிப் பொய்யாக முடியும் கனவு; இது கனவென்னும் மெய்ப்பாடு. ஏற்றெழுதல் - துயிலுணர்ந்தெழுதல்* (மலைபடு. 257, ந.) *தமியேனென்றாள் நனவில் தனியளானமைபற்றி.*

---

* *அவர் வரைந்து.* † *ஆற்றியிராதாகின்றதென்.* ‡ *தோழிக்கு யான்.* § *இச்சொல் 'பட்டு' என வழங்குகின்றது.*

## மேற்கோளாட்சி

மு. காமம் இடையீடுபட்டுழித் தலைவி கனுக்காண்டலும் உரித்து (தொல். பொருளியல், 3, இளம்; இ. வி. 571); வரைதற்குப் பிரிய, வருந்துகின்றது என்னென்ற தோழிக்குத் தலைவி கனவுநலிவுரைத்தல் (ஷை. களவு. 21, ந.); தலைமகள் கனவுநலிவுரைத்தல் (நம்பி. 164; இ. வி.. 521.)

## ஒப்புமைப் பகுதி

2. பொய்வலாளன்: குறுந். உ௫: 2, ஒப்பு.

3. தலைவி கனுக்காண்டல்: குறள், 1211-20.

வாய்த்தகைப் பொய்க்கனு: "வறுங்கை காட்டிய வாயல் கனவின், ஏற்றேக் கற்ற வுலமரல்" (அகநா. ௩௯: 23-4.)

ஏற்றெழுதல்: கலி. கஉ: 8, ௩எ: 20; பெருங். உ. 11: 66.

போய்க்கனுக்கண்டு எழுதல்: குறுந். கசஎ: 3-4.

1-3. அல்கற்கனு: "அல்கற், கனவுகொ ணீகண்டது" (கலி. கூ0: 21.)

5. வண்டுபடு மலரைப்போல மெலிதல்: "காமருதேன், சுரும் புண் டெழுநன் மலரிற் றொலைநலம்" (அம்பிகாபதிகோவை, 16); "வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை, உண்டுபோ கட்ட வுயிர்க்கு" (நள. சுயம்வர. 119.)

மு. "களியானைத் தென்னன் கனவின்வந் தென்னை
அளியா னளிப்பானே போன்றான்—தெளியாதே
செங்காந்தண் மெல்விரலாற் சேக்கை தடவந்தேன்
என்காண்பெ னென்னலால் யான்" (முத். 63.) (௩0)

---

## தலைவி கூற்று

[அயலார் தலைவியை மணம் செய்யும்பொருட்டு முயன்ற காலத் தில் அதுகாறும் தலைவனைப் பற்றிய செய்தியை வெளியிடாத தலைவி "நான் ஆடுகளத்தில் துணங்கையாடும் இயல்புடையேன்; என்னோடு நட்புச்செய்து பிரிந்தமையால் என் கைவளைகளை நெகிழச்செய்

தலைவன் அத்துணங்கைக்குத் தலைக்கை தந்தான். அவன் இப்பொழுது எங்கே உள்ளானோ? பல இடங்களில் தேடியும் கண்டேனில்லை" என்று உண்மையைத் தோழிக்கு வெளிப்படுத்தியது.]

௬க. மள்ளர் குழீஇய விழவி னானும்
மகளிர் தழீஇய துணங்கை யானும்
* யாண்டுங் காணேன் மாண்டக் கோனை
யானுமோ ராடுகள மகளே யென்கைக்
கோடீ ரிலங்குவளை நெகிழ்த்த
பீடுகெழு † குரிசிலுமோ ராடுகள மகனே.

எ - து. நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது.

[நொதுமலர் - தலைவனல்லாத அயலார். வரைவுழி - மணத்திற்கு உரிய பரிசத்தோடு வந்தபொழுது.]

‡ ஆதிமந்தியார்.

(ப - ரை.) மாண் தக்கோனை - மாட்சிமை பொருந்திய தகுதியை யுடையோனை, மள்ளர் குழீஇய விழவினானும்-வீரர் கூடியுள்ள சேரிவிழாவின் கண்ணும், மகளிர் தழீஇய துணங்கையானும் - மகளிர் தம்முள் தழுவி ஆடுகின்ற துணங்கைக்கூத்தின் கண்ணும், யாண்டும் - ஆகிய எவ்விடத்தும், காணேன் - கண்டேனில்லை; யானும் ஓர் ஆடுகளம் மகளே - யானும் ஆடுகின்ற களத்திற்குரிய ஒரு மகளே; என் கை - என் கையிலுள்ள, கோடு ஈர் இலங்கு வளை நெகிழ்த்த - சங்கை அறுத்துச் செய்த விளங்குகின்ற வளையல்களை நெகிழச் செய்த, பீடு கெழு - பெருமை பொருந்திய, குரிசிலும் - தலைவனும், ஓர் ஆடுகளம் மகனே - ஆடுகின்ற களத்திலுள்ள ஒருவனே.

(முடிபு.) மாண்தக்கோனைக் காணேன்; யானும் ஓர் ஆடுகள மகள்; குரிசிலும் ஓர் ஆடுகளமகன்.

(கருத்து.) என்னோடு துணங்கையாடிய தலைவன் ஒருவன் உளன்.

(வி - ரை.) மள்ளர் - வீரர் (குறுந். ௬௪ : 5.) திருவிழாக் காலங்களில் வீரர்கள் தத்தம் சேரிகளில் விளையாட்டுப்போர்

(பி - ம்.) * ஆண்டுங். † குரிசிலு மாடுகள மகனே.
‡ இதனை ஆதிமருதியாரென்று படித்தற்கும் இடமுண்டு.

நிகழ்த்துவர்; "மாயோன் மேய வோண நன்னாள்................மறங் கொள் சேரி மாறுபொரு செருவில், மாறா துற்ற வடுப்படு நெற்றிச், சுரும்பார் கண்ணிப் பெரும்புகன் மறவர்" (மதுரைக். 591-6) என்பதையும், 'அத்திருநாளிற் பொரும் சேரிப்போர் கூறினர்' (ந.) என்னும் அதன் உரையையும், "கூர்தரு வேல்வல்லார் கொற்றங் கொள் சேரிதனிற், கார்தரு சோலைக் கபாலீச் சரமமர்ந்தான், ஆர் திரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்" (தே. திருஞா.) என் பதையும் பார்க்க. துணங்கை - ஒருவகைக் கூத்து; இதனைச் சிங் கிக் கூத்தென்பர் (முருகு. 56, வேறுரை); "பழுப்புடை யிருகை முடக்கி யடிக்கத், துடக்கிய நடையது துணங்கை யாகும்" (முருகு. 56, ந. மேற்.) என்பது இதன் இலக்கணம்.

மகளிர் விழாக்காலத்தே துணங்கையாடுதலும் ஆடவர் அவர் கட்கு முதற்கை கொடுத்தலும் பண்டை வழக்கங்கள்; "முழவிமிழ் துணங்கை தூங்கும் விழவின்" (அகநா. ௩௩௬: 16) என்பது விழா வில் துணங்கைக்கூத்து நடத்தலையும், "நிரைதொடி நல்லவர் துணங் கையுட் டலைக்கொள்ளக், கரையிடைக் கிழிந்தநின் காழகம்வந் துரை யாக்கால்" (கலி. ௭௩: 16-7), "மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந் தர், எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து" (புறநா. ௨௪: 8-9) என் பவை ஆடவர் முதற்கை தருதலையும் விளக்கும். விழவினானும், துணங் கையானும் என்ற விடங்களில் மூன்றன் உருபுகள் ஏழன்பொருண் மைக்கண் வந்தன (குறள், 1196, 1213, பரிமேல்.) விழவின்கண்ணும் துணங்கையின்கண்ணும் காணேனென்றது தலைவன் வீரனென்பதை யும் ஆடுகளமகனென்பதையும் புலப்படுத்தியது. யாண்டும் - வேறு எவ்விடத்துமென்றலுமாம். மாண்டக்கோனென்றது தனக்கு ஏற் றவனென்றவாறு. யானும் ஓராடுகள மகளே யென்றது தான் துணங்கையாடியதையும் குரிசிலும் ஓராடுகள மகனே யென்றது அவன் அத்துணங்கைக்குத் தலைக்கை கொடுத்தானென்பதையும் புலப்படுத்தி அறத்தொடு நின்றதாயிற்று. வளைநெகிழ்த்த என்றது தன்பால் உண்டான வேறுபாட்டிற்குக் காரணம் தலைவனது பிரி வென்னும் நினைவிற்று. பீடுகெழு குரிசிலென்பது தலைவனது உயர்வை வெளிப்படுத்தியவாறு.

இத்தகைய தலைவனொருவன் என்னோடு நட்புச்செய்திருப்ப் நொதுமலர் வரைதல் அறனன்று. ஆதலின் நீ அதனை மாற்ற முயல் வாயாகவென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

1-3. 'நாயகியானவள் நாயகனுன ஸர்வேச்வரனைப் புறம்பே திரளிடையாகிலுங் காண ஆசைப்பட்டுப் புலம்பின பாசுரம்.........இந்தக் கிளவி, மள்ளர்.........கோனையென்று அகத்தமிழிலும் சொல்லப்பட்டது' (திவ். திருவிருத்தம், 84, அழகிய மணவாளஜீயர் ஸ்வாபதேசம்.)

3-4. இருவகைக் கட்டளையடியும் தொடுத்த அடிமோனை வந்தது (தொல். செய். 92, ந.)

மு. 'இது காதலற்கெடுத்த ஆதிமந்திபாட்டு; இவை தத்தம் பெயர் கூறிற் புறமாமென்று அஞ்சி வாளாது கூறினர். ஆதிமந்தி தம் பெயரானும் தம் காதலனுகிய ஆட்டனத்தி பெயரானும் கூறிற் காஞ்சிப்பாற் படும்; ஆதிமந்திபோல, எதஞ் சொல்லிப் பேதுபிறி துறலே யெனவும், வெள்ளி வீதியைப் போல நன்றும், செலவயர்ந் திசினல் யானே யெனவும் அகத்திணைக்கண் சார்த்துவகையான் வந்தனவன்றித் தலைமைவகையான் வந்திலவென்பது' (தொல். அகத். 54, ந.); 'நொதுமலர் வரைவின்கண் தலைவி தன்குடிப்பிறப்பும் கற்பும் முதலிய உயர்ச்சிக்கேற்ப அதனை மறுத்துத் தலைவன் வரையுமாறு நீ கூறெனத் தோழிக்குக் கூறும்' (ஷை. களவு. 16, ந.); காமக் கிழவ னுள்வழிப்படினு மென்பதற்கு மேற்கோள்; 'ஆண்டுங் காணேனென அவனுள்வழிப்பட்டுக் கூறினமையின் கற்பின்பாலதாய்த் தோழியும் தலைவனும் பெண்டன்மையிற் றிரியக் கருதாது நன்கு மதித்தவாறு காண்க' (ஷை. ஷை. 22, ந.); 'மள்ளர் குழீஇய விழவினானும்.........என்பனவற்றுள் தலைவி தேடிச் சென்றதும் செல்வாமென்றதும் சிறைப்புறமாக வரைவுகடாய பொருட்பயன் தருதலின், அறக்கழிவுடையவேனும் அமைந்தன' (ஷை. பொருளியல், 24, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. *மகளிர் துணங்கை: "வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர், துணங்கை நாளும் வந்தன" (குறுந். ௩௬௪: 5-6); "இலங்குவளை மடமங்கையர், துணங்கையஞ்சீர்த் தழூஉ" (மதுரைக். 159-60); கலிகெழு துணங்கை யாடிய மருங்கின்", "முழாவிமிழ் துணங்கைக்குத் தழூஉப்புணை யாகச், சிலைப்புவல் லேற்றிற் றலைக்கை தந்துநீ, நளிந்தனை வருதல்" (பதிற். ௧௩: 5, ௫௨: 14-6); "தணந்ததன் றலையுநீ தளரிய லவரொடு, துணங்கையா யெனவந்த கவ்வை", "நினக்கொத்த

* வீரர்கள் ஆடும் துணங்கையும், பேய்களாடும் துணங்கையும் உண்டு.

நல்லாரை நெடுநகர்த் தந்தூநின், தமர்பாடுந் துணங்கையு ளரவம்வந் தெடுப்புமே" (கலி. ௬௬ : 17-8, ௭0 : 13-4.)

1-2. விழாவும் துணங்கையும் : "முழவிமிழ் மகலாங்கண், விழவு நின்ற வியன்மறுகிற், றுணங்கையந் தழூஉவின் மணங்கமழ் சேரி", "தழூஉப் பிணையூஉ, மன்றுதொறு நின்ற குரவை சேரிதொறும், உரையும் பாட்டு மாட்டும் விரைஇ, வேறுவேறு கம்பலை வெறிகொள்பு மயங்கிப், பேரிசை நன்னன் பெறும்பெயர் நன்னாள், சேரி விழவி னார்ப்பெழுந் தாங்கு" (மதுரைக். 327-9, 614-9) ; "விழவயர் துணங்கை" (நற். ௫0: 3) ; "துணங்கையர் குரவையர்" (சிலப். ௫ : 70.)

4. ஆடுகளமகள் : அகநா. ௩௭0 : 15.

5. கோடீரிலங்குவளை, சங்கை அறுத்து வளைசெய்தல், வளை நெகிழ்தல் : குறுந். ௧௧ : 1, ஒப்பு.

மு. "வில்லார் விழவினும் வேலாழி சூழுலகில்
நல்லார் விழவகத்து நாங்காணேம்—நல்லாய்
உவர்க்கத் தொரோவுதவிச் சேர்ப்பனைப் பாரைச்
சுவர்க்கத் துளராயிற் சூழ்" (திணைமா. 62)

"தையனல் லார்கள் குழாங்கள் குழிய குழுவினுள்ளும்
ஐயநல் லார்கள் குழிய விழவினு மங்கங்கெல்லாம்
கையபொன் னாழிவெண் சங்கொடுங் காண்பா னவாவுவனான்
மையவண் ணாமணி யேமுத்த மேயென்றன் மாணிக்கமே"
(திவ். திருவிருத்தம், 84.) (௩௧)

---

## தலைவன் கூற்று

[தோழியினிடம் தன் குறைகூறி அவள் உடம்படாமையை அறிந்த தலைவன், "யான் தலைவியின்பிரிவை ஆற்றேன் ; அவளை அடையும்பொருட்டு மடலேறினால் அவளுக்குப் பழி உண்டாகும் ; வாளாவிருப்பின் வாழ்தலும் பழி ; ஆதலின் இவை நேரா வண்ணம் நீ குறை நேர்வாயாக" என்று அவளுக்குக் கூறியது.]

௩௨. காலையும் பகலுங் கையறு மாலையும்
ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்
பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்
மாவென மடலொடு மறுகிற் றோன்றித்

தெற்றெனத் தூற்றலும் பழியே
வாழ்தலும் பழியே பிரிவுதலை வரினே.

எ - து. பின்னின்றான் கூறியது.

[பின் நின்றான் - தோழி தன் குறையை ஏற்றுக்கொள்ளாத காலத்தில் அவளுடைய உதவியை விரும்பி அவளை இரந்து நின்ற தலைவன்; "இரந்து பின்னிற்றல்" (நம்பி. 143.)]

(ப - ரை.) காலையும் - காலைப்பொழுதும், பகலும் - உச்சிப் பொழுதும், கை அறு மாலையும் - பிரிந்தோர் செயலறுதற்குக் காரண மாகிய மாலைப்பொழுதும், ஊர் துஞ்சு யாமமும் - ஊரினர் துயில்கின்ற இடையிரவும், விடியலும் - விடியற்காலமும், என்ற இ பொழுது இடை தெரியின் - என்ற இச்சிறுபொழுதுகள் இடையே தோற்றுமாயின், காமம் பொய் - அத்தகையோருடைய காமம் உண்மையன்று; பிரிவு தலைவரின் - பிரிவு வருமாயின், அப்போது, மா என - குதிரையெனக் கொண்டு, மடலொடு - பனைமடலாற் செய்த குதிரையின் உருவத்தை யூர்ந்து, மறுகில் தோன்றி - தெருவில் வெளிப்பட்டு, தெற்றென - யாவரும் இன்னாளால் இவன் இச்செய்ல் செய்தானென்று தெளியும் படி, தூற்றலும் - தலைவி செய்த துயரைப் பலர் அறியச் செய்தலும், பழி - பழிக்குக் காரணமாகும்; வாழ்தலும் பழி - அது செய்யாது உயிரோடு வாழ்ந்திருத்தலும் பழிக்குக் காரணமாகும்.

(முடிபு.) பொழுது இடைதெரியின், காமம் பொய்; பிரிவு தலை வரின் தூற்றலும் பழியே; வாழ்தலும் பழியே.

(கருத்து.) தலைவியைப் பிரியின் உயிர் வாழேன்.

(வி - ரை.) "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" (குறள், 1227) என்பவாகலின், பிரிந்தார் காம நோய் மிக்குச் செயலறுதற்கு ஏதுவாகும் மாலையை, 'கையறுமாலை' என்றான். இரவின் முதல்யாமத்தை யொழித்து இடையாமத்தைக் கருதி, 'ஊர்துஞ்சியாமமும்' என்றான்; ஊரினர் துஞ்சும் யாமம் அதுவாதலின். இடை - வேறுபாடுமாம். பொய்யே: ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது.

சிறுபொழுது ஐந்தென்பது ஒரு சாரார் கொள்கை; "மாலை யாமம் வைகறை யெற்படு, காலை வெங்கதிர் காய்நண் பகலெனக், கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்" (நம்பி. 12); "சிறு

பொழு தைந்தினும்" (பிரபு. கக: 4); சிவஞானமுனிவர் கொள்கையும் இதுவே. என்றிப்பொழுது: அக்ரம தொகுத்தல். காமம் இங்கே மெய்யுறுபுணர்ச்சி.

தெற்றென - தெளிய; "தெற்றெனக் கேண்மின்" (கலி. கசச: 11) என்பதன் உரையைப் பார்க்க. தெற்றெனத் தூற்றலாவது, 'தலைவி என்னைத் துன்புறுத்தினாள்; அவள் என் குறையறிந்து நிறைவேற்றாமையின் இம்மடல்மாமேல் ஏறிவருவேனாயினேன். நீங்கள் தலைவியை எனக்கு மணம்புரிவித்து இத்துன்பத்தினின்றும் என்னைப் பாதுகாக்க வேண்டும்' என்று ஊரிலுள்ள சான்றோரை விளித்துக் கூறுதல்; இதனைக் கலித்தொகை, கஙஅ, கஙகூ, கசo, கசக-ஆம் செய்யுட்களால் உணர்க.

பழியே, வரினே: ஏகாரங்கள், அசைநிலை.

'நான் தலைவியைப் பிரிந்திருக்க ஆற்றேன். நீ என் குறையை மறுத்தாயாயின் மடலேறித் தலைவியைப் பெறலாகும்; ஆயினும் அது தலைவிக்குப் பழிதருவதாதலின் அது செய்யத் துணிந்தேனல்லன்; அது செய்யாது உயிர் வைத்துக்கொண்டு வாழ்தலும் எனக்கு அரிது; ஆதலின் உயிர்நீத்தலே நன்று' என்று தலைவன் தோழிக்கு இரக்கம் உண்டாகும்படி கூறினான்.

களவொழுக்கத்தின் இலக்கணங்களுள் இறுதியாகிய சாக்காடு என்பது இதனுள் வந்தது (தொல். களவு. 9.)

## மேற்கோளாட்சி

1-3. சிறுபொழுது ஐந்து (தொல்காப்பிய முதற்சூத்திரவிருத்தி.)

## ஒப்புமைப் பகுதி

1. கையறுமாலை: குறுந். கூஅஎ: 2; ஐங். கஅங: 4.

மாலையில் தனித்தோர் செயலறுதல்: "ஐயறி வகறறுங் கையறு படரோ, டகலிரு வான மம்மஞ் சினப், பகலாற்றுப் படுத்த பழங்கண் மாலை" (அகநா. எக: 7-9); குறள், 1221-1230, பார்க்க.

2. ஊர்துஞ்சியாமம்: "துஞ்சூர் யாமத் தானும்" (குறுந். கூ0உ: 7); "உறைமயக் குற்ற வூர்துஞ் சியாமத்து" (நற். உகஉ: 3); "துஞ்சூர் யாமத்துந் துயிலறி யலவே" (ஐங். கங: 4.)

3. காமத்தாற் பொழுது இடைதெரியாமை: "போழ்திடைப் படாமன் முயங்கியு மமையார்", "பொழுதிடைப் படநீப்பின் வாழ்

வாளோ" (கலி. ௪ : 10, 24); "நாளிடைப் படினென் றேழி வாழாள்", "எல்லையு மிரவு மென்னுது கல்லெனக், கொண்டல் வான்மழை பொழிந்த வைகறைத், தண்பனி யற்சிரந் தமியோர்க் கரிதெனக், கனவினும் பிரி வறி யலனே" (அகநா. ௧௧௨ : 9, ௧௭௮ : 17-20); "போகப் பெருநுகம் பூட்டிய காலே, மாக விசும்பின் மதியமு ஞாயிறும், எழுதலும் படுதலு மறியா வின்பமொடு", "மட்டுவிளை கோதையொடு மகிழ்ந்துவிளை யாடிச், செங் கதிர்ச் செல்வ னெழுச்சியும் பாடும், திங்களு நாளுந் தெளிதல் செல் லான்" (பெருங். ௨. 9 : 183-5, ௪. 2 : 86-8); "தூம மேகம முந்துகிற் சேக்கைமேற், காம மேநுகர் வார்தம காதலால், யாம மும்பக லும்மறி யாமையாற், பூமி மாநகர் பொன்னுல கொத்ததே" (சீவக. 135); "கங் குலும் பகலும் பிரிவில ராகிக் காதல்வெள் ளத்திடை யழுந்திப், பங்கமில் போக நுகருநாள் வந்து புகுந்தது பங்குனித் திங்கள்" (உத்தரா. சீதை வனம். 11.)

4. மடல்மா : குறுந். ௧௭ : 1, ஒப்பு.

மடலேறி மறுகில் தோன்றல் : குறுந். ௧௭ : 1-3, ஒப்பு.

5. தெற்றெனு : பொருந. 174 ; அகநா. ௪௮ : 4 ; குறள், 581.

6. பிரிவினுல் வாழாமை : (குறுந். ௫௭ : 3-4, ௧௬௮ : 7) ; "பிரி யின் வாழா தென்போ தெய்ய" (பழம்பாடல்.) (௩௨)

---

## தலைவி கூற்று

[தலைவனுக்குத் தூதாக வந்த பாணனை ஏற்றுக்கொண்ட தலைவி, "இவன் நன்றாகப் பேசுகின்றான்; இங்கே விருந்து பெறுவான்" என்று உணர்த்தியது.]

௩௩. அன்னு யிவ்ஞெ ரிளமா ணுக்கன்
தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ
இரந்தூ ணிரப்பா மேனியொடு
விருந்தி னூரும் பெருஞ்செம் மலனே.

எ - து. வாயிலாகப் புக்க பாணன் கேட்பத் தோழியை நோக்கித் தலைமகள் வாயில் நேர்வாள் கூறியது.

[வாயில்-தூது ; வாயில் நேர்வாள்-தூதிற்கு உடம்படுவாளாகி.]

படுமரத்து மோசிகீரன்.

(ப - ரை.) அன்னாய் - தோழியே, இவன் ஓர் இள மாணாக்கன் - இப்பாணன் ஓர் இளைய மாணாக்கன்; தன் ஊர் மன்றத்து - தனது ஊரிலுள்ள பொதுவிடத்து, என்னன்கொல் - எத்தகையவனோ? இரந்தூண் நிரம்பா மேனியொடு - இரந்து பெறும் உணவினால் முற்ற வளராத மேனியோடு, விருந்தின் ஊரும் - புதிதாகப் பெறும் விருந்தின்பொருட்டுச் செல்லும், பெரு செம்மலன் - பெரிய தலைமையையுடையவன்.

(முடிபு.) அன்னாய், இவன் இளமாணாக்கன்; என்னன்கொல்லோ? செம்மலன்.

(கருத்து.) இவன் இங்கும் விருந்தைப் பெறுவான்.

(வி - ரை.) தோழியைத் தலைவி அன்னையென்றல் மரபு (தொல். பொருளியல், 52.) பாணன் வாயிலாகப் புக்குத் தலைவன் பெருமையைச் சொல்வன்மை புலப்படப் பாராட்டினனாதலால் அவன் கல்வியைச் சிறப்பிக்க எண்ணி, 'இளமாணாக்கன்' என்றாள். அவனைப் புகழ்ந்தமையால் அவன்பாலும் அவனை வாயிலாக விடுத்த தலைவன்பாலும் உள்ள ஆதரவு புலப்பட்டது. மன்றம் - பொதுவிடம்; ஊர்மன்றத்தே பாணர் தங்குவது பண்டை வழக்கம்.

'அயலதாகிய இவ்விடத்திலே இங்ஙனம் சொல்வன்மையுறப் பேசுவோன் தன் ஊரில் தான் தங்கும் மன்றத்தில் இன்னும் சிறந்த சொல்வன்மையுடையன் போலும்!' என்னும் கருத்தால், 'என்னன் கொல்லோ' என்றாள்.

இரந்தூண் - இரந்து பெற்று உண்ணும் உணவு; 'அட்டூண் டுழனி' என்றதைப் போன்றது இத்தொடர். மாணாக்கர் இரந்து உண்ணுதல் மரபு. நிரம்பாமை - பொலிவு பெறாமை. விருந்தின் ஊர்தலாவது விருந்து பெறுதற்குரிய இடங்களுக்கெல்லாம் செல்லுதல்; ஊர்தல் - செல்லுதல்; 'ஊர்தல் ஈண்டுப் போதன்மேற்று' (சீவக. 286, ந.)

விருந்தினூரும் செம்மலனென்றது, அதனை ஈண்டும் பெறுவானென்னும் நினைவிற்று. தலைவனை ஏற்றுக்கொள்ளும் எண்ணமுடையாளாதலின் அவன் வருங்கால் விருந்தயர்தலும் அப்பொழுது அவனுக்கு வாயிலாக வந்த பாணனும் விருந்துணவு பெறுதலும் நேரும். தலைவர் வருங்கால் மகளிர் விருந்தயர்தல், "அரும்பெறற் காதலர் வந்தென விருந்தயர்பு" (குறுந். ௩௯௮ : 6) என்பதனால் விளங்கும்.

சொல் : ஐயம். ஓவும் ஏயும் அசைநிலை.

தோழியை நோக்கி இங்ஙனம் தலைவி கூறியவற்றால் அவளது உடம்பாட்டுக்குறிப்பை யறிந்த பாணன் அதனைத் தலைவன்பாற் சென்று உணர்த்த அவன் வந்து தலைவியோடு அளவளாவுதல் இதற்குப் பயன்.

## மேற்கோளாட்சி

1. தோழியைத் தலைவி அன்னையென்றது (தொல். பொருளியல், 50, இளம், 52, ந.) ; ஐகாரவீற்றுப் பொதுப்பெயர் விளிவேற்றுமையில் ஆயென்று வந்தது (நன். 305, மயிலை, 306, சங், வி.)

2. ஊர்மன்று : வழக்கின்கண் இனமில்லாத அடைமொழி வந்தது (நன். 400, மயிலை.)

௩. பாணன் வாயிலாகவந்துழித் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, இளம்.) ; பாணன் சொல்வன்மைக்குத் தோற்று வாயில் நேர்ந்த தலைவி தோழிக்கு உரைத்தது (ஷை. ஷை. ஷை. ந.)

## ஒப்புமைப் பகுதி

1. தோழியை அன்னையென்றது : குறுந். ௧௫0 : 5.

2. பாணர் மன்றத்திருத்தல் : "மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்" (மலைபடு. 492) ; "மன்றம் போந்து மறுகுசிறை பாடும், வயிரிய மாக்கள்", "வயிரிய மாக்கள் பண்ணமைத் தெழீஇ, மன்ற நண்ணி மறுகுசிறை பாடும்", "மன்றம் படர்ந்து மறுகுசிறைப் புக்குக், கண்டி நுண்கோல் கொண்டுகளம் வாழ்த்தும், அகவலன்" (பதிற். ௨௩ : 5 - 6, ௨௯ : 8 - 9, ௪௩ : 26 - 8); "மன்றுபடு பரிசிலர்" (புறநா. ௧௩௫ : 11.)

2 - 3. மன்றத்துப் பாணர் இருத்தலும் ஊண் பெறுதலும் : "இரத்தி நீடிய வகன்றலை மன்றத்துக், கரப்பி லுள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி, அமலைக் கொழுஞ்சோ றார்ந்த பாணர்க்கு" (புறநா. ௩௪ : 12 - 4.)

4. பாணர் விருந்தை நோக்கிச் செல்லல் : "அறாஅ யாணரகன் றலைப் பேரூர்ச், சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது, வேறுபுல முன்னிய விரகறி பொருந" (பொருந. 1 - 3.) (௫௫)

## தோழி கூற்று

[தலைவியை வரைந்துகொள்ள வந்துள்ளவனே அவளால் விரும்பப்பட்டவனாதலின், இனி அவன் வரைவானென்னும் செய்தியைக் கேட்டு இதுகாறும் உண்டான பலவகைத் துன்பங்களுமின்றி இவ்வூரினர் மகிழ்வாராகவென்று தோழி தலைவன் வரைவொடுவந்தமையைத் தலைவிக்கு உணர்த்தியது.]

ந ச. ஒறுப்ப வோவலர் மறுப்பத் தேறலர்
தமிய ருறங்குங் கௌவை யின்றாய்
இனிய து கேட்டின் புறுகவிவ் வூரே [தோ
முறஅ, * யானையங் குருகின் கானலம் பெருந்
டட்ட மள்ள ரார்ப்பிசை வெரூஉம்
குட்டுவன் † மரந்தை யன்னவெம்
‡ குழல்விளங் காய்நுதற் கிழவனு மவனே.

எ - து. வரைவுமலிந்தமை ஊர்மேல் வைத்துத் § தோழி கிழத்திக்குச் சொல்லியது.

கோல்லிக் கண்ணன்.

(ப - ரை.) முறஅது - முன்னிடத்திலுள்ளதாகிய, கானல் - கடற்கரையிலுள்ள, யானையங்குருகின் பெரு தோடு - வண்டாழ்ங் குருகின் பெரிய தொகுதியானது, அட்ட மள்ளர் - பகைவரைக் கொன்ற வீரரது, ஆர்ப்பு இசை வெரூஉம் - வென்று முழங்கும் முழக்கத்தினை அஞ்சுதற்கு இடமாகிய, குட்டுவன் மரந்தை அன்ன - குட்டுவனுக்குரிய மரந்தையென்னும் நகரைப் போன்ற, எம் - எமது, குழல் விளங்கு - பணிச்சை விளங்குகின்ற, ஆய் நுதல் கிழவனும் - அழகிய நெற்றிக்கு உரிமையுடையோனும், அவனே - வரைவொடு வரும் அத்தலைவனேயாவான்; ஆதலின், ஒறுப்ப - தமர் ஒறுக்கவும், ஓவலர் - வருத்தத்தினின்றும் நீங்காராகி, மறுப்ப - தோழியர் பல காரணங்கள் கூறி இங்ஙனம் வருந்துதல் தகாதென்று மறுத்துக் கூறவும், தேறலர் - தெளியாராகி, தமியர் - தலைவரைப் பிரிந்து தனியராய், உறங்கும் கௌவை இன்றாய் - உறங்குகின்ற வருத்தம் இல்லாதவராகி, இ ஊர் - இவ்வூரிலுள்ளார், இனியது கேட்டு இன்பு

(பி - ம்.) * யானையுண்குருகின். † மாந்தையன்னவென். ‡ குழை விளங். § தோழிக்குக் கிழத்தி.

உறுக - அவன் விரைந்து கொள்வானென்ற இனிய செய்தியைக் கேட்டு மகிழ்ச்சியை யடைக.

(முடிபு.) நுதற்கிழவனும் அவனே; கௌவை இன்றாய் இவ் வூர் இனியது கேட்டு இன்புறுக.

(கருத்து.) தலைவன் இனி விரைவில் மணந்துகொள்வான்.

(வி - ரை.) ஒறுத்தல்: 'நீ என இத்தகைய வேறுபாடு உடையையாயினாய்?' என்றும், 'நீ புறத்தே செல்லற்க' என்றும் கூறிச் செவிலி முதலியோர் அலைத்தல். மறுத்தல் - தலைவன் விரைவில் வந்து மணம் புரிவானென்று காரணங் காட்டி, அவன் வாரானோ வென்று ஐயுற்ற தலைவியின் கருத்தை மறுத்துரைத்தல். தமியர் - தலைவரைப் பிரிந்த தனிமையையுடையார். உறங்கும் கௌவை - உறங்குவதனாலுண்டாகும் வருத்தம்; என்றது துயில் வாராவிடினும் பிறர் தம் நோய் அறியாவாறு உறங்குவதுபோலப் படுத்துக் கிடக்கும் வருத்தம்; உறங்குதல் காரணமாக எழுந்த பழிமொழியெனலுமாம். தலைவிக்கும் பிறர்க்கும் இன்பம் பயப்பதாதலின் தலைவன் மணம்புரியுஞ் செய்தியை இனியதென்றாள்; "நன்றுபுரி கொள்கை" (௩௭௪) என்று பின்னும் வந்துள்ளது; "இனிதுசெய் தனையா லுந்தை வாழியர், நன்மனை வதுவை யயரவிவள், பின்னிருங் கூந்தன் மலரணிந் தோயே" (ஐங். ௨௯௪ : 3-5.) இவ்வூரென்று ஊரார்மேல் வைத்துக் கூறினளாயினும் அது தலைவியைக் கருதியதென்று கொள்க. ஊரே: ஏ, அசைநிலை.

யானையங்குருகு: இதனை வண்டாழ்ங்குருகென்பர் நச்சினார்க்கினியர் (மதுரைக். 674, உரை); திருவோண நட்சத்திரத்திற்குரிய புள்ளாகச் சோதிடநூலார் கூறுவர்; "குஞ்சரக் குரல குருகு" (௧௪௫ : 15) என ஒரு பறவை அகநானூற்றிற் கூறப்படுகிறது. அக்குருகே யானையங்குருகாயின் யானையைப்போன்ற குரலுடைமை பற்றி இப்பெயர் பெற்றதென்று கொள்வதற்கு இடமுண்டு. ஆனைச்சாத்தனென்னும் பறவை (திருப்பாவை) இதுபோலும்.

கானலம்பெருந்தோடு: அம், சாரியை. பறவைக்கூட்டத்தைத் தோடென்னும் வழக்கு இந்நூலுள், "இருந்தோட்டுப் புள்ளினம்", "அன்னத்து வெண்டோடு", "காக்கைச் செவ்வாய்ப் பைந்தோடு" (௧௯௧ : 2, ௩0௪ : 5-6, ௩௩௪ : 1) என்று பின்னும் காணப்படும்.

வீரர்கள் பகைவரைக் கொன்று அவ்வெற்றிக் களிப்பினால் நகைத்து ஆரவாரித்தல் இயல்பு; இது வீராட்டஹாசமென்று வடமொழியாளரால் வழங்கப்படும்.

போர், நெய்தல் நிலத்தில் நடைபெறுதலின் வீரர்களது ஆர்ப்பிசைக்குக் கடற்கரையிலுள்ள பறவைகள் அஞ்சின; "தும்பை தானே நெய்தலது புறனே" (தொல். புறத். 12) என்பதன் உரையில், 'இருபெருவேந்தரும் ஒருகளத்துப் பொருதலின், அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், களரும் மணலும் பரந்த வெளிநிலத்துப் பொருதல் வேண்டுதலானும், அந்நிலம் கடல் சார்ந்த வழியல்லது இன்மையானும்' என்று இளம்பூரணர் எழுதிய பகுதியைக் காண்க.

குட்டுவன் - குட்டநாட்டை யுடையோன் (மதுரைக். 105, ந.); இந்நாடு மலைநாட்டின் ஒருபகுதி. குட்டுவனென்னும்பெயர் சேரர்களுக்கு உரியதாக வழங்குகின்றது; செங்குட்டுவன், பல்யானைச்செல்கெழு குட்டுவனென்னும் சேரவரசர்கள் பெயரமைப்பு இதனைத் தெளிவுறுத்தும்.

மரந்தை: இது மேலைக்கடற்கரைக்கண் உள்ளதொரு நகர் (குறுந். கசுகூ.)

எம் நுதற்கிழவனென்று தோழி கூறினாளேனும் அவள் கருதியது தலைவியின் நுதலையேயென்று கொள்க. தலைவியின் உறுப்புக்களைத் தோழி தன்னுடையனவாகக் கூறுவது புலனெறிவழக்கு; இது,

"தாயத்தி னடையா வீயச் செல்லா
வினைவயிற் றங்கா வீற்றுக் கொளப்படா
எம்மென வரூஉங் கிழமைத் தோற்றம்
அல்லா வாயினும் புல்லுவ வுளவே"

(தொல். பொருளியல், 27)

என்பதனாலும் அதன் உரையாலும் உணரப்படும்.

குழல் விளங்கு ஆய்நுதலென்றது, மகளிர் குழலை வகுக்கும் ஐந்து வகைகளில் ஒன்றாகிய பனிச்சையைத் தன்மேலேபெற்று விளங்கும் நெற்றியென்றவாறு. அது முன்னுச்சியிலே அமைக்கப்படுவது; அளகமென்பதும் அது; "ஓதி யொண்ணுதல்" (ஐங். கூள: 5); "அளக வாணுதல்" (கம்ப. மந்தரை. 86), "நுதலளக பாரம்" (தக்க. 25) என்று அது நுதலோடு சார்த்தி வழங்கப்படுதல்

காண்க. குழலை நுதலுக்கு அடையாக்கினமையின், குழலுக்கும் கிழவனென்பது கொள்க. இங்ஙனமே தலைவியின் உறுப்புக்களுக்கு உரிமையுடையனாகத் தலைவனைக் கூறும் வழக்கு, "தோட்கிழவன்" (கலி. ௪௧: 42) என்பது முதலியவற்றால் அறியப்படுகின்றது. முன்பு வரைபொருளுக்குத் தலைவன் பிரிந்த காலத்தில் குழலையும் நுதலையும் நீவிச் சென்றானாதலின் அவ்வுரிமையை நினைந்து, 'குழல் விளங் காய்நுதற் கிழவன்' என்றாள் (கலி. ௪ : 19.) அவனே: ஏகாரம், தேற்றம்.

## மேற்கோளாட்சி

மு. தலைவனுக்குத் தலைவியின்தமர் வரைவுடம்பட்டதனைத் தலைவி விரும்பியது; 'தமரான் ஒறுக்கப்பட்டு ஓவாராய்த் துயருழத்தல் ஆகா தென ஆற்றுவிக்குஞ் சொற்களால் மறுத்துரைப்பவுந் தேறாராய்த் தனித் திருப்பார் உறக்கங்காரணமாக எழுந்த கௌவையைக் கேளாது வரைந் தெய்திய மாற்றத்தைக் கேட்டு இவ்வூரும் இன்புறுக வென்பதாம்' (தொல். களவு. 16, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. "ஒறுப்ப வோவலை நிறுப்ப நில்லலை" (அகநா. ௩௪௨ : 1.)

5. அட்டமள்ளர் ஆர்த்தல்: (குறுந். ௩௨௮ : 5 - 8, ௩௧௩ : 4 - 6); "ஒன்னாத் தெவ்வ ருலைவிடத் தார்த்து" (பெரும்பாண். 419; மலைபடு. 386); "வென்றிகொள் வீர ரார்ப்பு", "நேரா வெழுவ ரடிப்படக் கடந்த, ஆலங் கானத் தார்ப்பு", "பதினொரு வேளிரொடு வேந்தர் சாய, மொய்வலி யறுத்த ஞான்றைத், தொய்யா வழுந்தூ ரார்ப்பு" (அகநா. ௩௬ : 23, ௨௦௧ : 5 - 6, ௨௪௬ : 12 - 4); "வம்ப மள்ளரை......... அழுந்தப் பற்றி யகல்விசும் பார்ப்பெழக், கவிழ்ந்துநிலஞ் சேர வட்டதை" (புறநா. ௭௭ : 9 - 12.)

6. தட்டுவேன் : நற். ௧௦௫ : 7 ; அகநா. ௨௧௨ : 16.

மரந்தை : நற். ௩௫ : 7; பதிற். ௧௦ : 28 ; அகநா. ௧௨௭ : 6, ௩௭௬ : 18 ; முத். 82, 105. (௩௪)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தமையால் மெலிவுற்ற தலைவி அழுதாளாக, "நீ அழுதது என்?" என்று வினவிய தோழிக்கு, "தலைவர் பிரிந்த காலத்தில் அழாமல் உடம்பட்ட என்கண்கள் இப்பொழுது நாண

மின்றி அழுதன" என்று தன் வருத்தத்தைக் கண்ணின்மேலேற்றித் தலைவி உரைத்தது.]

கூரு. நாணில மன்றவெங் கண்ணே நாணேர்பு
சினைப்பசும் பாம்பின் சூன்முதிர்ப் பன்ன
கனைத்த கரும்பின் கூம்புபொதி யவிழ
நுண்ணுறை யழிதுளி தலைஇய
தண்வரல் வாடையும் பிரிந்திசினோர்க் கழலே.

எ - து. பிரிவிடை மெலிந்த கிழத்தி, தோழிக்குச் சொல்லியது

கழார்க் கீரனெயிற்றி.

(ப - ரை.) தோழி—, நாள் நேர்பு - தலைவர் பிரிந்த நாளில் உடம்பட்டு, சினை பசு பாம்பின் - கருப்பத்தையுடைய பச்சைப் பாம்பினது, சூல் முதிர்ப்பு அன்ன - கருவின் முதிர்ச்சியைப் போன்ற, கனைத்த கரும்பின் கூம்பு பொதி - திரண்ட கரும்பினது குவிந்த அரும்பு, அவிழ - மலரும்படி, நுண் உறை அழி துளி தலைஇய - நுண்ணிய மழை பொழிந்து அழிந்ததுளி பொருந்திய, தண்வரல் வாடையும் - தண்ணிய வருதலையுடைய வாடைக்காற்றையுடைய கூதிர்க் காலத்தும், பிரிந்திசினோர்க்கு - பிரிந்துறையும் தலைவர் பொருட்டு, அழல் - அழுதலால், எம் கண் - எம்முடைய கண்கள், மன்ற - நிச்சயமாக, நாண் இல - நாணம் இல்லாதன.

(முடிபு.) நாள் நேர்பு, பிரிந்திசினோர்க்கு அழுதலால் எம் கண்கள் நாணில.

(கருத்து.) அவர் பிரியும்பொழுது கண்கள் அழுது தடை செய்யாதது தவறு.

(வி - ரை.) "வண்ணம் பசந்து புலம்புறு காலை, உணர்ந்த போல வுறுப்பினைக் கிழவி, புணர்ந்த வகையிற் புணர்க்கவும் பெறுமே" (தொல். பொருளியல், 8) என்பது இலக்கணமாதலின், கண்களை நாணில்லாதன போலக் கூறினாள். கண் நேர்தலாவது தலைவன் பிரிந்த காலத்தில் அழாமல் உடம்பட்டிருந்தமை; தடுத்தலைச் செய்யாமையே உடம்பாடாயிற்று; தலைவன் பிரியுங்காலத்தில் கண்கள் அழுது அவன் செல்லுதலைத் தடுத்தலுமுண்டென்பதை இந்நூல் உடுசு-ஆம் செய்யுளால் உணரலாகும்.

தோகையால் மூடப்பட்டுப் பசுமையாக இருத்தலின் கரும்பின் அரும்புக்குப் பச்சைப்பாம்பை உவமை கூறினாள். கார்காலத்து மழை பெய்தபின் மேகத்தில் எஞ்சியிருக்கும் துளிகள் கூதிர்க்காலத்து வீழ்தலின், 'நுண்ணுறை யழிதுளி தலைஇய வாடை' என்றாள். தலைஇய - பெய்தவெனலுமாம். வாடையும் : உம், இழிவு சிறப்பு; வாடையையுடைய கூதிர்க்காலம் தலைவனும் தலைவியும் இன்புறுவ தற்கு ஏற்ற காலம் (தோல். அகத். 6, ந.); ஆதலின் உடனிருப்பதற் குரிய காலத்திற் பிரிந்துறைகின்றாரென்று தலைவிவருந்தினாள். பிரிந்திசினோர் : இசின் படர்க்கைக்கண் வந்ததோர் இடைச்சொல் (புறநா. கக, உரை.)

## மேற்கோளாட்சி

1\. மேனி பசந்து தனிப்படருறுங்காலத்துத் தலைவி தன்னுடைய உறுப்பினை அறிந்ததுபோலப் பொருந்தின கூற்றுச் சொல்லவும் பெறும் (தோல். பொருளியல், 8, ந.)

5\. 'தண்வரல்...அழலேயென ஆனுருபு இறுதிக்கண் தொக்கதா லெனின் அது வினைச்சொற் காரணப்பொருட்டாய் நின்றது' (தோல். வேற்றுமைமயங்கு. 22, ந.); 'இடையிலே தொகுமென்றது என்னை? கடந் தானிலம், இருந்தான் குன்றத்து, தண்வரல்.........அழலே......என்பன நிலத்தை, குன்றத்தின்கண், அழலான்...........என்று வேற்றுமை யுருபு கள் ஏற்றினும் தொகுமாலோ வெனின், அவை ஒருபெயரனையவாய் உருபு முதலியன ஏலாமையின், தொகைவிதியால் தொக்கனவாகா; செய் யுள் விகாரவகையாற் றொகுக்கப்பட்டனவென்க' (நன். 362, மயிலை.)

## ஒப்புமைப் பகுதி

2-3. பசும்பாம்பின் தூல்: "சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல், மெல்லவே கருவிருந் தீன்று" (சீவக. 53.)

5\. தண்வரல் வாடை : குறுந். எக : 5, ககo : 5-6, கருo : 5.

4-5. உறை அழிதுளி வாடை : "கடைப் பெயல் வாடை", "வந்த வாடைச் சில்பெயற் கடைநாள்", "அழிதுளி கழிப்பிய வழிபெயற் கடைநாள்...........வாடை", "எல்லாந் தந்ததன் றலையும் பையென, வடந்தை துவலை தூவ", "தண்ணென, ஆடிய இளமழைப் பின்றை, வாடை" (நற். அக : 4 - 7, கஙஉ : 5-6, உஉக : 9-11.)

3-5. வாடையாற் கரும்பின் போது அவிழ்தல்: "புலம்போடு வந்த பொழுதுகொள் வாடை, இலங்குபூங் கரும்பி னேர்கழை யிருந்த, வெண் குருகு நரல வீசும், நுண்பஃ றுவலைய", "பெய்துபுலந் திறந்த பொங்கல் வெண்மழை, எஃகுறு பஞ்சித் துய்ப்பட் டன்ன, துவலை தூவல் கழிய வகல்வயல், நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக், கோடைப் பூளை யின் வாடையொடு துயல்வர", "கிளைவிரி கரும்பின் கணைக்கால் வான்பூ,.........குரங்க,.........பனிகடி கொண்ட பண்பில் வாடை" (அகநா. ௧௩ : 21-4, உ௧எ : 1-5, உ௩௫ : 12-5.) (௩௫)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைபொருளின் பொருட்டுப் பிரிந்த காலத்தில் அப்பிரிவைத் தலைவி ஆற்றாளெனக் கவலையுற்ற தோழியை நோக்கித் தலைவி, "தலைவர் முன்பு பிரியேனென்று சூளுறவுசெய்து இப்பொழுது பிரிந்துறைய அதனால் உண்டான வருத்தத்தைப் பொறுத்துக்கொண்டு யான் இருப்பவும் நீ வருந்துதல் முறையன்று" என்று உணர்த்தியது.]

௩௬. துறுக லயலது மாணை மாக்கொடி
துஞ்சுகளி றிவரும் குன்ற நாடன்
நெஞ்சுகள னாக நீயலென் யானென
நற்றோண் மணந்த ஞான்றை மற்றவன்
தாவா வஞ்சின முரைத்தது
நோயோ தோழி நின்வயி னானே.

எ - து. வரைவிடை வைத்துப் பிரிய, ஆற்றாளெனக் கவன்று வேறுபட்ட தோழியைத் தலைமகள் ஆற்றுவித்தது.

[பிரிய - தலைவன் பிரிய.]

பரணர்.

(ப - ரை.) தோழி—, துறுகல் அயலது - உருண்டைக் கல்லின் அயலில் உள்ளதாகிய, மாணை மா கொடி - மாணையென்னும் பெரிய கொடியானது, துஞ்சு களிறு இவரும் குன்றம் நாடன் - தூங்குகின்ற களிற்றின்மேற் படரும் குன்றங்களையுடைய நாட்டுக்குத் தலைவன், யான்—, நெஞ்சு களனாக - நின் நெஞ்சு இடமாக இருந்து, நீயலென் என - பிரியேனென்று, நல் தோள் மணந்த

ஞான்றை - எனது நல்ல தோளை அணைந்த பொழுது, அவன் - அத்தலைவன், தாவா வஞ்சினம் உரைத்தது - கெடாத உறுதிமொழியைக் கூறியது, நின்வயினான் - நின்திறத்தில், நோயோ - வருத்தத்துக்குக் காரணமாகுமோ? ஆகாதன்றே.

(முடிபு.) தோழி, நாடன் மணந்த ஞான்றை அவன் வஞ்சினம் உரைத்தது நின்வயின் நோயோ?

(கருத்து.) தோழி, தலைவன் வஞ்சினத்தை யுரைத்து மறந்திருத்தல் எனக்குத் துன்பந் தருவது; அதனை நானே பொறுத்து ஆற்றியிருப்ப உனக்கு வருத்தமுண்டாதற்குக் காரணமில்லை.

(வி - ரை.) களிறு துறுகல்லைப்போன்று தோற்றுதலின் அக்கல்லில் ஏறும் மாணைக்கொடி களிற்றின்மேலும் படர்ந்தது. துறுகல் யானையைப்போலத் தோற்றுமென்பதை இந்நூல் ௧௩-ஆம் செய்யுளாலும், அதன்மேற் கொடிகள் படருமென்பதை, "முல்லை யூர்ந்த கல்" (குறுந். ௨௭௫: 1) என்பதனாலும் உணர்க. நெஞ்சுகளனாக வென்பது நீயலெனென்பதன் முதனிலையோடு முடிந்தது; நெஞ்சிடமாக இருந்து புறத்தே உடனிராமற் பிரிதலைச் செய்யேனென்றபடி. தோள் மணத்தல்: அவையல் கிளவி. நற்றோளென்றது பழைய நிலையையுணர்த்தியபடி; இப்பொழுது மெலிந்ததென்னும் நினைவிற்று; பட்டாங்கு கிளந்ததுமாம். ஞான்றை: ஐ, சாரியை. தாவா வஞ்சினமென்றது அது கூறியகாலத்துத் தலைவியின் நினைவு; இப்பொழுது அது தவறியதென்பது குறிப்பு. நின்வயின் நோயோவென்றது, என் திறத்தன்றோ நோயாகும், நினக்கு நோயாதற்குக் காரணமில்லையென்றபடி; ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

மாணைமாக்கொடி, துஞ்சுகின்ற அளவும் துறுகலென்று தோற்றும் யானையின்மேற் படர்ந்து, துயில் நீங்கி அது சென்றவிடத்துப் பற்றுக்கோடின்றி யிருத்தலைப்போல, தலைவன் தோண்மணந்து உடனிருந்த அளவும் கெடாததாக இருந்த வஞ்சினத்தை மெய்யாகக்கருதி மகிழ்ந்த யான், அவன் பிரிய, வருந்துவேனாயினேனென்பது குறிப்பு.

நெஞ்சுகளனாக வஞ்சின முரைத்ததென்று கூட்டி, நெஞ்சம் இடமாகப் பிறந்த சூளுறவை யுரைத்ததென்று பொருள் கூறலும் ஆம்.

## மேற்கோளாட்சி

மு. தோழியைத் தலைவி ஆற்றுவித்தது (தொல். களவு. 22, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. மாணைக்கோடி: "வாங்கு வேய்ங்கழை துணித்தனன் மாணையின் கொடியால், ஓங்கு தெப்பமொன் றமைத்து" (கம்ப. வனம்புகு. 36.)

3. தலைவன் தலைவியின் நெஞ்சில் இருத்தல்: குறுந். உஉஅ: 6, ௩௪0: 7; குறள், 1128, 1130, 1204, 1205, 1218.

4. தோள் மணத்தல்: குறுந். க0க: 6.

5. தலைவர் வஞ்சின முரைத்தல்: (குறுந். ௫௩: 6-7); "எழுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி" (குறிஞ்சிப். 210); "எஞ்சா வஞ்சின நெஞ்சுணக் கூறி" (நற். உகச: 6); "நெஞ்சுண, அரிய வஞ்சினஞ் சொல்லியும்" (அகநா. கஎ௫: 6-7.)

4-5. தலைவன் தலைவியின் தோளை மணந்த காலத்து வஞ்சின முரைத்தல்: "பணையெழின் மென்றோ ளணைஇய வந்நாட், பிழையா வஞ்சினஞ் செய்த, கள்வன்" (குறுந். ௩கஅ: 6-8); "தோள்புதி துண்டஞான்றைச், சூள்" (அகநா. ௩உ0: 13-4.)

3-5. நீங்கேனென்று தலைவன் வஞ்சினமுரைத்தது: "நல்ல சொல்லி மணந்தினி, நீயே னென்ற தெவன்கொ லன்னாய்" (ஐங். உஉ: 3-4); "நீங்கா வஞ்சினஞ் செய்துநத் துறந்தோர்" (அகநா. ௩எஅ: 18.)

மு. தலைவி ஆற்றாளென்று தோழி வருந்துதல்: "நெஞ்சுநெகிழ் தகுந கூறி யன்புகலந், தருஅ வஞ்சினஞ் செய்தோர் வினைபுரிந்து, திறம்வே றாக லெற்றென் றோற்றி, இனைத லான்றிசி னீயே" (அகநா. உ௬எ: 1-4.)

(௩௬)

## தோழி கூற்று

[தலைவனது பிரிவை ஆற்றாத தலைவியை நோக்கி, "தலைவர் மிக்க அன்புடையர்; அவர் சென்ற பாலைநிலத்தில் களிறு தன்பிடியை அன்போடு பாதுகாத்து நிற்கும் காட்சியைக்கண்டு நின்னைப் பாதுகாக்கும் தம் கடமையையெண்ணி விரைவில் மீள்வர்" என்றுகூறித் தோழி ஆற்றுவித்தது.]

௩எ. நசைபெரி துடையர் நல்கலு நல்குவர்
பிடிபசி களைஇய பெருங்கை வேழம்
மென்சினை யாஅம் *பொளிக்கும்
அன்பின தோழியவர் சென்ற வாறே.

(பி - ம்.) * பிளக்கும், பிளிக்கும்.

எ-து. தோழி, கடிதுவருவாரேன்று ஆற்றுவித்தது.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) *தோழி—, நசை பெரிது உடையர் - தலைவர் நின்பால் விருப்பம் மிக உடையவர்; நல்கலும் நல்குவர் - நல்குதலையும் செய்வர்; அவர் சென்ற ஆறு - அவர் போன வழிகள், பிடி பசி - பெண் யானையினது பசியை, களைஇய - நீக்கும்பொருட்டு, பெரு கை வேழம் - பெரிய துதிக்கையையுடைய ஆண்யானை, மெல் சினை யாஅம் பொளிக்கும் - மெல்லிய கிளைகளை உடைய யாமரத்தின் பட்டையை உரித்து அதன் நீரை அப்பிடி பருகச்செய்யும், அன்பின - அன்பைப் புலப்படுத்தற்கு இடமாக உள்ளன.*

(முடிபு.) *நசை பெரிதுடையர்; நல்குவர்; அவர் சென்ற ஆறு அன்பின.*

(கருத்து.) *தலைவர் விரைவில் மீண்டு வருவர்.*

(வி - ரை.) *நல்கல் - தலையளிசெய்தல்* (குறள், 1156, பரிமேல்.) *நல்கலும் நல்குவர் - நல்குதலையுஞ் செய்வரென்னும் பொருளினது; நல்குவரென்பது காரியவாசகமாக நின்றது* (தோல். *வேற்றுமை மயங்கு.* 29, ந.); *இங்ஙனம் வரும் தொடர்கள் பல இடங்களிற் காணப்படுகின்றன;* " *அணியலு மணிந்தன்று* " (புறநா. *க*: 5) என்*பதற்கு,* '*அழகுசெய்தலும் செய்தது*' *என்றும்,* " *இயங்கலு மியங்கு மயங்கலு மயங்கும்* " (சிலப். ௨௨ : 154) *என்பதற்கு,* '*இயங்குதலையுஞ்செய்யும்; மயங்குதலையுஞ் செய்யும்*' *என்றும் உரையாசிரியர்கள் எழுதியிருத்தலைக் காண்க. யாமரத்தைப் பொளிப்பதற்கேற்ற கருவியுடைமையைப் புலப்படுத்த,* '*பெருங்கை வேழம்*' *என்றாள்.*

*யாஅம்:* *இது பாலை நிலத்திலுள்ளதொரு மரம்; யாவெனவும் வழங்கும்; அவ்வழக்கு விளா விளாம், மரா மராமெனச் சில மரப் பெயர்கள் வழங்கிவரும் முறையைப் போன்றதென்று தோற்றுகின்றது. இம் மரத்தின் பட்டை நீர்ப்பசை மிக்கதென்று தெரிகின்றது. பொளித்தல் - உரித்தல்;* " *பெரும்பொளி வெண்ணார்* " (அகநா. *அ௩ :* 6.)

*இயல்பாகவே நின்பால் விருப்பமும் தலையளி செய்தலும் உடையராதலாலும், தாம் செல்லும் வழியில் நிகழும் நிகழ்ச்சி ஆண்பாலார் தமக்குரிய மனைவியரிடத்தில் அன்பு வைத்துப் பாதுகாக்கும்*

கடமையை நினைப்பூட்டும் இயல்புடையதாயினமையாலும் அவ
விரைந்து வந்துவிடுவரென்பது குறிப்பு.

தலைவனது பிரிவாற்றாமல் வருந்தும் தலைவிக்குத் தோழி, கருப்
பொருள்களுள் தலைவன் அன்பு செய்தற்குத் தகுவனவற்றைக்
கருதிக் கூறுதல் வற்புறுத்தலாகுமாதலின் (தோல். பொருளியல்
37) இங்ஙனம் கூறினாள்.

## மேற்கோளாட்சி

மு. "இதனுள் முன்பே நெஞ்சகத்து அன்புடையார் அதன்மேலே
களிறு தன்பிடியின் பெரும்பசி களைதற்கு மென்றோலையுடைய * ஆச்சா
வைப் பிளந்து அந் நாரைப் பொளித்து ஊட்டும் அன்பினையுடைய, அவ
சென்ற ஆறு, அதனைக் காண்பர்காணென்று அன்புறு தகுந கூறிப் பிர
வாற்றுதலை வற்புறுத்தவாறு காண்க. நம்மேல் இயற்கையாக அன்பில
னென்று ஆற்றுளாவளென்று கருதாது இவளை ஆற்றுவித்தற் பொருட்டு
இவ்வாறு கூறலின் வழுவாயமைந்தது" (தோல். பொருளியல், 37, ந.)
வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல் (நம்பி. 170.)

## ஒப்புமைப் பகுதி

1. **நசை பெரிதுடையர்**: "யாரினு மினியன் பேரன் பினனே"
"நசைநன் குடையர்" (குறுந். அ௫ : 1, உகடு : 1.)

**தலைவர் நல்குதல்**: "நல்கார் நயவா ராயினும்", "துறைவன்
நல்கிய நாடவச் சிலவே" (குறுந். சுo : 5, நஉஅ : 3-4); "நல்குவன்
போலக் கூறி, நல்கா னாயினும்" (ஐங். கசுஎ : 3-4); "நல்குவ ரென்னு
நசை" (குறள், 1156.)

**நல்கலும் நல்குவர்**: குறுந். உகஅ : 4, உ௫க : 3, உசுஅ : 2; நற்
சoசு : 1, கசஎ : 7, நகஅ : 1; ஐங். நசு : 3; கலி. உந : 7, ௫ச : 8
14, ௫௫ : 19; அகநா. அ : 18; புறநா. க: 5, அடிக்.

3. **யாமரம்**: தோல். உயிர்மயங்கு. 27.

3-4. **யானை யாமரத்தைப் பொளித்தல்**: (குறுந். உநஉ : 4-5)
'உம்ப லகைத்த வொண்முறி யாவும்" (மலைபடு. 429); "பெருங்களி
றுரிஞ்சிய மண்ணரை யாஅத், தருஞ்சுரக் கவலைய வதர்படு மருங்கின்"
(அகநா. கஎ : 16- 7.)

---

* இவ்வுரையினால், யாஅமென்பதை ஆவென்று **நச்சினார்க்கினியர்**
கொண்டனரென்று தோற்றுகின்றது.

2-4. யானை யாவைப் பொளித்துப் பிடிக்கு ஊட்டுதல்: (குறுந். ௨௫௫ : 1-5, ௩௦௭ : 4-7); "யானைதன், கொன்மருப் பொடியக் குத்திச் சினஞ்சிறந், தின்னு வேனி லின்றுணை யார, முளிசினை யாஅத்துப் பொளிபிளந் தூட்டப், புலம்புவீற் றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்" (அகநா. ௩௩௫ : 4-8.)

பாலைநிலத்தில் யானை பிடியைப் பாதுகாத்தல்: நற். ௧௩௭ : 6-7; கலி. ௧௧ : 9.

மு. " புன்றலை மடப்பிடி யுணீஇய ரங்குழை
நெடுநிலை யாஅ மொற்றி நனைகவுட்
படிஞிமி றுகடியுங் களிறே...........
.......................................
பிரிந்துசே ணுறைநர் சென்ற வாறே" (அகநா. ௫௯ : 7-18.)

(௩௭)

## தலைவி கூற்று

[தலைவன் வரைபொருளுக்குப் பிரிந்து நெடுங்காலமாக வாரா திருப்ப, வருந்திய தலைவியை நோக்கித் தோழி, "நின்னை வரைந்து கொள்ளும் பொருட்டன்றோ அவர் பொருளீட்டச்சென்றார்; அங்ஙன மிருப்ப நீ அதனை நன்றென்று கருதாமல் வருந்துவது யாதுகாரணம் பற்றி?" என்று வினவியபோது, "அவர் பிரிவை ஆற்றும் வன்மை என்பால் இல்லை" என்று தலைவி உணர்த்தியது.]

௩௮. கான மஞ்ஞை யறையீன் முட்டை
வெயிலாடு முசுவின் குருளை யுருட்டும்
குன்ற நாடன் கேண்மை யென்றும்
நன்றுமன் வாழி தோழி யுண்கண்
நீரொ டொராங்குத் தணப்ப
உள்ளா *தாற்றல் வல்லு வோர்க்கே.

எ-து. வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தனது ஆற்றாமை தோன்றத் தோழிக்குக் கூறியது.

கபிலர்.

(ப - ரை.) தோழி—, கானம் மஞ்ஞை - காட்டிலுள்ள மயிலானது, அறை ஈன் முட்டை - பாறையில் ஈன்ற முட்டைகளை, வெயில் ஆடும் முசுவின் குருளை உருட்டும் - வெயிலில் விளையாடும்

(பி - ம்.) * தகறல்.

முசுவின்குட்டி உருட்டுதற்கு இடமாகிய, குன்றம் நாடன் கேண்மை மலைநாட்டை யுடையவனாகிய தலைவனது நட்பு, தணப்ப - அவன் பிரிய உண் கண் நீரொடு - மைதீட்டப்பெற்ற கண்ணினின்று பெருகும் நீரோடு, ஓராங்கு - ஒருபடியாக, உள்ளாது - அப்பிரிவை நினைந்து வருந்தாமல், ஆற்றல் வல்லுவோர்க்கே - பொறுத்துக்கொள்ளுதலில் வன்மையுடையோர்க்குமாத்திரம், என்றும் நன்று மன் - எக்காலத்தும் மிக நல்லதாகும்.

(முடிபு.) குன்றநாடன்கேண்மை ஆற்றல் வல்லுவோர்க்கு என்றும் நன்று.

(கருத்து.) தலைவனது பிரிவை ஆற்றும் வன்மையிலேனாயினேன்.

(வி - ரை.) முசு - முகங்கரியதாகிய ஒருவகைக்குரங்கு. வல்லுவோர்க்கு என்றும் நன்றென்றமையின் தனக்குச் சிலகாலம் நன்றாகவும், சிலகாலம் நன்றன்றாகவு மிருப்பதென்பது கொள்ளப்படும்; தலைவன் கேண்மை, அவன் தன்னோடு இருக்கும் காலத்தில் நன்றாகவும் பிரிந்தகாலத்தில் துன்பத்தைத் தருவதாகவும் தலைவிக்கு அமைந்தது இஃது, “சாரனுடன் கேண்மை, சாரச் சாரச் சார்ந்து, தீரத் தீரத் தீ பொல்லாதே” (பழம்பாடல்) என்பதனால் விளங்கும். கண்ணீரொடு ஆற்றுதல் அரிதாதலின் ‘அங்ஙனம் செய்வார் மனவலியுடையார் போலும்!’ என்ற நினைவினால் வல்லுவோர் என்றாள். ஓராங்கு - ஒரு பெற்றிப்பட (புறநா. உ௩அ : 15, உரை); தலைவன் உடனுறைந்த காலத்தும் பிரிந்த காலத்தும் ஒருபடித்தாக வென்றவாறு. நீரொடு தணப்ப என்று கூட்டி யான் அழுதுகொண்டிருப்பவும் அதனைக் கருதாமற் பிரிய என்று கொள்ளலுமாம்.

வாழி : அசைநிலை. வல்லுவோர்க்கே : ஏகாரம், பிரிநிலை தனக்கு நன்றன்றென்னும் கருத்துப் பெறப்படும். ஏகாரத்தை அசைநிலையாக்கி, மன் ஒழியிசைப்பொருளில் வந்ததாகக்கொண்டு, ‘யான் அவ்வன்மை பெற்றிலேன்’ என்று பொருள்கொள்ளலும் ஒன்று ஆற்றல் வல்லுவோர்க்கு நன்று என்றமையின் தன்பால் ஆற்றுதற்குரிய வன்மையில்லாமையைப் புலப்படுத்தினளாயிற்று. நன்று - பெரிதுமாம் (தொல். உரி. 45.)

மயில் அடைகாத்தற்குரிய அதன் முட்டை அங்ஙனம் மசயப் படாது பாறையின்மேல் தனித்துக் கிடப்பதையன்றி அதனை

குரங்கின் குட்டி விளையாட்டாக உருட்டுவதுபோல, தலைவன், உடனிருந்து இன்புறுத்தற்குரிய தலைவி அவன்பிரிவினால் துன்புறுதலையன்றி, தமக்கு நகை விளைவதொன்றே பயனாக ஊரார் அலர் கூறும் துன்பத்தையும் பெற்றாளென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

2. குருளையென்பது குரங்கிற்கு இலேசினால் அமைத்துக்கொள்ளப்படும் (தொல். மரபு. 14, பேர்.); நிரைநேர்பு கணவிரிபோல நின்று முசு என்பதனோடு நிரையொன்றாசிரியத் தளையாயிற்று (டி. செய். 56, ந.)

2-3. 'நாடினர் கொளினேயென்ற இலேசினாற் குருளையென்பது முசுவிற்குங் கொள்ளப்படும்' (தொல். மரபு. 9, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

3. நாடன் கேண்மை : குறுந். ௩ : 4.

4. நன்றுமன் : குறுந். ௫௮ : 2, க௩௪ : 2, உஉ௬ : 4.

5. ஓராங்கு : குறுந். உ௫எ : 1, ௩கசு : 5.

4-5. தலைவன் பிரிவினால் தலைவி கண்ணீர் விடுதல் : குறுந். கக : 2, உஉ : 1-2, ௩௫ : 5 ; அகநா. ௫ : 21.

5 - 6. பிரிவை ஆற்ற வல்லவர் : "அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப், பின்னிருந்து வாழ்வார் பலர்" (குறள், 1160.)

மு. "வந்தாய் பவரையில் லாமயின் முட்டை யிளையமந்தி
பந்தா டிரும்பொழிற் பல்வரை நாடன்பண் போவினிதே [போற்
கொந்தார் நறுங்கொன்றைக் கூத்தன்றென் றில்லை தொழார்குழுப்
சிந்தா குலமுற்றுப் பற்றின்றி நையுந் திருவினர்க்கே" (சிற். 276.)
(௩அ)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில் ஆற்றாதிருந்த தலைவியை, "நீ ஆற்றல்வேண்டும்" என்று வற்புறுத்திய தோழிக்கு, "தலைவர் சென்ற வழியானது கடத்தற்கரிய கொடுமையை யுடையதென்று அறிந்தார் கூறுவர்; அதனைக் கேட்ட யான் ஆற்றுவது எங்ஙனம்?" என்று தான் ஆற்றாமையின் காரணத்தைத் தலைவி தெரிவித்தது.]

௩௯. *வெந்திறற் கடுவளி பொங்கர்ப் போந்தென
நெற்றுவிளை யுழிஞ்சில் வற்ற லார்க்கும்
மலையுடை யருஞ்சுர மென்பநம்
முலையிடை முனிநர் சென்ற வாறே.

எ-து. "பிரிவிடை ஆற்றல் வேண்டும்" என்ற தோழிக்கு "யாங்ஙனம் ஆற்றுவேன்!" எனத் தனது ஆற்றாமைமிகுதி தோன்றத் † தலைமகள் கூறியது.

‡ ஔவையார்.

(ப - ரை.) *தோழி—, நம் முலையிடை முனிநர் - நம் நகிலினிடத்துத் துயிலுதலை வெறுத்தவர், சென்ற ஆறு - பிரிந்து சென்ற வழியானது, வெ திறல் கடு வளி - வெம்மையான வலியையுடைய விரைவான காற்றானது, பொங்கர் - மரக்கிளையிலே, போந்தென - வீசுதலால், உழிஞ்சில் - வாகை மரத்தினது, நெற்று விளை வற்றல்-நெற்றினது முற்றிய வற்றலானது, ஆர்க்கும் - ஒலித்தற்கு இடமாகிய, மலை உடை அரு சுரம் - மலைகளையுடைய கடத்தற்கரிய சுரமாகும், என்ப - என்று கூறுவர்.*

(முடிபு.) *முனிநர் சென்ற ஆறு அருஞ்சுரமென்பர்.*

(கருத்து.) *தலைவர் சென்ற வழியின் கொடுமையை நினைந்து நான் ஆற்றேனாயினேன்.*

(வி - ரை.) *பாலை நிலத்ததாதலின் காற்று வெம்மையுடையதாயிற்று. திறல் - வலி; காற்று மிக்க வலியுடையதென்பது "விசும்பு தைவரும் வளியும்............போல............வலியும்", "வளி மிகின் வலியு மில்லை"* (புறநா. உ : 3-8, ருக : 3) *என்பவற்றாலும் அறியப்படும். கடுவளி - பெருங்காற்றெனலுமாம்* (புறநா. ருரு : 20, உரை.) *பொங்கர் - மரக்கொம்பு; " உயர்ந்த பொங்க ருயர்மர மேறி"* (கலி. எரு : 6) *என்பதன் உரையைப் பார்க்க. உழிஞ்சில் - வாகை*

(பி - ம்.) * *வெந்தெறற்.* † *தலைமகள் கூறுகின்றாள், "நம் முலையிடைத் துயின் முனிந்து போயினோர் சென்றவழி இப்பெற்றிப்பட்ட கொடுமைத்தால்; யான் எங்ஙனம் ஆற்றியுளேனாவேன்; யான் ஆற்றுகின்றிலேனென நீ ஆற்றுயாகின்றதென்!" எனத் தோழிக்குத் தலைமகள் கூறியது.* ‡ *அவ்வையார்.*

(சிலப். ௧௧: 76, அடியார்.) வற்றல் - பசுமையற வற்றிய காய். 'முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து, நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப், பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" (சிலப். ௧௧: 64-6) என்பவாதலின் குறிஞ்சி திரிந்த பாலையென்பாள், 'மலையுடை யருஞ்சுரம்' என்றாள்; "வரைபிளந் தியங்குநர், ஆறு கெட விலங்கிய வழலவி ராரிடை" (கலி. ௨: 7-8) என்பவாகலின் மலைகள் உடைந்த அருஞ்சுரமெனினும் ஆம். தான் சென்றறியாத தாதலின் 'என்ப' என்றாள். 'முலையிடை முனிநர்' என்றது இன்பந் துய்த்து ஈண்டு இராதே கொடுமையையுடைய பாலையிற் சென்று துன்ப முழப்பவராயினரென்று இரங்கிய நினைவிற்று (கலி. ௨: 11-22.)

'அவர் சென்றது கடத்தற்கரிய சுரமென்பர்; அது கருதியே யான் ஆற்றேனாயினேன்' என்று தலைவி உணர்த்தினாள்.

ஆறே: ஏ, அசைநிலை.

## மேற்கோளாட்சி

மு. வழியருமை கேட்டவழித் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கடுவளி: குறுந். ருஎ௨: 2; அகநா. ௧: 17; புறநா. ௯௯: 20.

வெம்மையையுடைய கடுவளி: "விலங்குவெங் கடுவளி யெடுப்ப", "காய்சினக் கடுவளி" (அகநா. ௭௧: 17, ௨௨௫: 6.)

1-2. காற்றல் உழிஞ்சில்வற்றல் ஒலித்தல்: குறுந். ௭: 4-5, ஒப்பு.

3. மலையுடை யருஞ்சுரம்: "பன்மலை யருஞ்சுரம்", "பன்மலை, வெவ்வறை மருங்கின் வியன்சுரம்" (அகநா. ௨0௫: 11, ரு௬௧: 14-5.)

4. நகிலிடைத் துயிலுதல்: "இடைமுலைக் கிடந்து" (குறுந். ௧௭அ: 4); "துயிலி னிளமுலையார்" (கைந்நிலை, 38); "அவர்நம, தேந்துமுலை பாகத்துச் சார்ந்துகண் படுப்பவும்" (தொல். கற்பு. 6, ந. மேற்: 'நாமவர்'); "நப்பின்னை கொங்கைமேல், வைத்துக் கிடந்த மலர் மார்பா" (திவ். திருப்பாவை, 19.)

4. "நம், இன்றுயின் முனிநர் சென்ற வாறே" (குறுந். ௨௧௫: 6-7.) (ரு௯)

## தலைவன் கூற்று

[தெய்வத்தாலாகிய கூட்டத்தின்பின்பு தலைவி, தலைவன் பிரிவானோவென ஐயுற்றவிடத்து அதனைக் குறிப்பாலறிந்த தலைவன், "ஒருதொடர்பு மில்லாத நாம் ஊழின் வன்மையால் ஒன்றுபட்டோமாதலின் இனி நம்மிடையே பிரிவு உண்டாகாது" என்று உணர்த்தியது.]

௪௦. யாயு ஞாயும் யாரா கியரோ
எந்தையு நுந்தையு மெம்முறைக் கேளிர்
யானு நீயு மெவ்வழி யறிதும்
செம்புலப் * பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே.

எ - து. இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தபின்னர், பிரிவரோனக் கருதி அஞ்சிய தலைமகள் குறிப்புவேறுபாடு கண்டு தலைமகன் கூறியது.

[குறிப்பு வேறுபாடு - எண்ணத்தின் வேறுபாடு; என்றது இவர் பிரிவர்போலுமென்று கருதிக் கவலையுறுதல்.]

† செம்புலப் பெயனீரார்.

(ப - ரை.) யாயும் - என்னுடைய தாயும், ஞாயும் - நின் தாயும், யார் ஆகியர் - ஒருவருக்கொருவர் எத்தகைய உறவின் முறையினராவர்? எந்தையும் - என் தந்தையும், நுந்தையும் - நின் தந்தையும், எ முறை கேளிர் - எந்த முறையில் உறவினர்? யானும் நீயும் - இப்பொழுது பிரிவின்றியிருக்கும் யானும் நீயும் ஒருவரையொருவர், எ வழி அறிதும் - எவ்வாறு முன்பு அறிந்தோம்? இம்மூன்றும் இல்லையாகவும், செ புலம் பெயல் நீர்போல - செம்மண் நிலத்தின்கண்ணே பெய்த மழைநீர் அம்மண்ணோடு கலந்து அதன் தன்மையை யடைதல் போல, அன்பு உடை நெஞ்சம் - அன்புடைய நம் நெஞ்சம், தாம் கலந்தன - தாமாகவே ஒன்றுபட்டன.

(முடிபு.) யாயும் ஞாயும் யாராகியர்? எந்தையும் நுந்தையும் எம் முறைக்கேளிர்? யானும் நீயும் எவ்வழி அறிதும்? நெஞ்சம் கலந்தன.

(கருத்து.) இனிப் பிரிவரிது.

(பி - ம்.) * பெய்நீர். † செம்புலப் பெய்நீரார்.

(வி - ரை.) யாய் - என் தாய்; இச்சொல் தன்மையோடு தொடர்புடைய தென்பது, 'யாயென்பது தன்மையோடு ஒட்டுதலின் முறைப்பெயரெனினும் உயர்திணையாம்' (தொல். பெயர், 26) என நச்சினார்க்கினியரும், 'யாயென்பதோவெனின் தன்மையோடு தன்மையின் முறைப்பெயரேனும் உயர்திணையெனப்படும்' எனக் கல்லாடரும் எழுதிய உரைப்பகுதிகளால் தெளிவாகும். யாய், ஞாய், தாய் என்னும் மூன்றும் முறையே என்தாய், நின்தாய், அவர்தாயென மூவிடத்தோடும் ஒட்டி வருவன; 'இம் மூன்றிடத்தும் ஒட்டுப்பட்ட பெயர்கள் ஆறும் வேற்றுமை முறையைக் குறித்து மேற்சொல்லிய வாற்றான் தந்தை, நுந்தை, எந்தை எனவும்; தாய், ஞாய், யாய் எனவும்; தம்முன், நும்முன், எம்முன் எனவும்; தம்பி, நும்பி, எம்பி எனவும் முதல்வனையும், ஈன்றாளையும், முன்பிறந்தானையும், பின்பிறந்தானையும் உணர்த்தும் பன்மைச் சொற்கள்' (தொல். எச்ச. 14) என்று தெய்வச் சிலையார் எழுதியுள்ள அரிய உரைப்பகுதியால் இது புலப்படும்.

அறிதுமென்றது எதிர்காலம் இறந்தகாலப் பொருளில் வந்தது.

செம்மண்ணிலத்துப் பெய்த நீரானது அம்மண்ணோடு கலந்து அதன் நிறத்தையும் சுவையையும் பெற்று ஒன்றுபடுவதுபோல நம் நெஞ்சம் ஒன்றோடொன்று கலந்து தன்மைகள் ஒன்றுபட்டன வென்று உவமையை விரித்துக்கொள்க. நெஞ்சுகலந்தமைக்குச் செம்புலப் பெயனீரை உவமைகூறிய சிறப்பால் இச் செய்யுளின் ஆசிரியர் 'செம்புலப் பெயனீரார்' என்னும் சிறப்புப்பெயர் பெற்றார். நெஞ்சங் கலந்தனவென்பது உள்ளப் புணர்ச்சியைக் குறித்தபடி; "உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியும், கள்ளப் புணர்ச்சியுட் காதலர்க் குரிய" (நம்பி. 34.)

'நம்மைப் பெற்றோரிடையேனும் நம்மிடையேனும் இதற்கு முன் ஒரு தொடர்பும் இல்லை; அங்ஙனம் இருப்பவும் நம் ஊழ்வினையின் வன்மையினால் இப்பொழுது ஒன்றுபட்டோம்; ஆதலின் இனிப் பிரிவு நேராது' என்று தலைவன் புலப்படுத்தித் தலைவியின் அச்சத்தை நீக்கினான்.

ஒகாரமும் ஏகாரமும் அசைநிலை.

## மேற்கோளாட்சி

மு. களவுக்காலத்து வருந்திய வருத்தந்தீரத் தனது காதல் மிகுதி தோன்றச் சொல்லுதற்கண் தலைவனுக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல்.

கற்பு. 5, இளம்.) ; பிரிவரெனக் கருதிய தலைவியின் குறிப்புணர்ந்து தலைவன் கூறியது (ஷை. களவு. 10, ந.) ; நம்மானன்றி நெஞ்சம் தம்மிற்றும் கலத்தலின் தெய்வத்தாலுயிற்றெனத் தலைவன் தலைவியைத் தெருட்டியது (ஷை. கற்பு. 5, ந.) ; தெளித்தல் (தமிழ்நெறி. 15) ; தலைவன் பிரியேனென்றது (நம்பி. 129.)

## ஒப்புமைப் பகுதி

1. ஞாய் : கலி. அக : 12, அ௫ : 28, 36, கOஎ : 25.

யாராகியர் : குறுந். ககO : 2.

செம்புலப் பெயனீரின் தன்மை : "நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க், கினத்தியல்ப தாகு மறிவு", "நிலத்தொடு, நீரியைந் தன்னார்" (குறள், 452, 1323) ; "அப்பென்றும் வெண்மைய தாயினு மாங்கந் நிலத்தியல்பாற், றப்பின்றி யேகுண வேற்றுமை தான்பல சார்தலினால்" (திருவேகம்பமாலை) ; "செந்நில முகுநீர் போலச் செல்விமான் மயமே யாகி" (பிரபு. ௬ : 17.) (௬O)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்தில் தலைவியின் மேனியிற் பொலிவழிந்த வேறுபாடு கண்டு கவலையுற்ற தோழியை நோக்கி, "தலைவர் உடனிருப்பின் நான் மகிழ்வுற்று விளங்குவேன் ; பிரிவின் பொலிவழிந்தவளாவேன்" என்று கூறியது.]

௬க. காதல ருழைய ராகப் பெரிதுவந்து
சாறுகொ ளூரிற் புகல்வேன் மன்ற
அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்
மக்கள் போகிய வணிலாடு முன்றிற்
புலப்பில் போலப் புல்லென்
றலப்பென் றோழியவ ரகன்ற ஞான்றே.

எ - து. பிரிவிடை வேறுபாடு கண்டு கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

அணிலாடு முன்றிலார்.

(பி - ம்.) * புலம்பில்.

(ப - ரை.) தோழி—, காதலர் உழையர் ஆக - தலைவர் பக்கத்தவராக இருப்ப, பெரிது உவந்து - மிக மகிழ்ச்சியுற்று, சாறுகொள் ஊரின் - விழாக்கொண்ட ஊரினர் மகிழ்வதைப்போல, மன்ற - நிச்சயமாக, புகல்வேன் - விரும்பி மகிழ்வேன்; அவர் அகன்ற ஞான்று - அவர் என்னைப் பிரிந்துசென்ற காலத்தில், அத்தம் நண்ணிய - பாலைநிலத்திற் பொருந்திய, அம் குடி சிறு ஊர் - அழகிய குடியையுடைய சிறிய ஊரில், மக்கள் போகிய - மனிதர் நீங்கிச் சென்ற, அணில் ஆடு முன்றில் - அணில் விளையாடுகின்ற முற்றத்தையுடைய, புலம்பு இல் போல - தனிமையுள்ள வீட்டைப்போல, புல்லென்று - பொலிவழிந்து, அலப்பென் - வருந்துவேன்.

(முடிபு.) தோழி, காதலர் உழையராகப் புகல்வேன்; அவர் அகன்ற ஞான்று அலப்பென்.

(கருத்து.) தலைவர் பிரிந்தமையின் வருத்தமுடையேனாயினேன்.

(வி - ரை.) உழையர் - பக்கத்தில் உள்ளவர்; உழை-பக்கம்; என்றது நெருங்கிப்பழகும் நிலையினரென்றவாறு; " தழையினு முழையிற் போகான் " (குறுந். உகசு : 7.) சாறுகொள் ஊரிற் புகல்வேனென்றது, இயல்பாகவுள்ளவற்றோடு மிகுதியான சிறப்பை விழாக்காலத்தே ஓரூர் கொண்டிருப்பதுபோல எனது இயற்கைநலங்களோடு சிறப்பான விளக்கம் பெற்று இருப்பேனென்றபடி. பாலை நிலத்து வெம்மையின் கொடுமைக்கும் ஆறலைகள்வரால் வரும் ஏதத்திற்கும் அஞ்சி ஊரினர் வேறிடம் செல்வாராதலின், அத்தம் நண்ணிய சிறூரின் இல்லைக் கூறினள். போகிய - ஒழிந்த (புறநா. கம : 10, உரை.) அணிலாடு முன்றில் - மக்கள் பயிலாமையின் அணிலசையும் முற்றம்; மக்களுள்ளவழி அணில் வாராதென்பது, " வரிப்புற வணிலொடு கருப்பை யாடாது " (பெரும்பாண். 85) என்பதனாற் பெறப்படும். மக்கள் போகிய வீட்டு முற்றத்தை அணிலாடு முன்றிலென்று சிறப்பித்த இதனால் இச்செய்யுளை இயற்றிய ஆசிரியர் அணிலாடு முன்றிலார் என்னும் பெயர் பெற்றனர்.

புலம்பு - தனிமை. அலத்தல் - துன்புறல் (முருகு. 271, ந.) ஞான்றே : ஏகாரம், அசைநிலை. மக்கள் போகிய புலப்பில்போலப் புல்லென்று அலப்பெனென்ற உவமையினால் அழகு நீங்கிய உடம்பினளாவேனென்பது பெறப்படும்.

இப்பொழுது என் வேறுபாட்டிற்குக் காரணம் தலைவரது பிரிவென்பதை இதன்வாயிலாகத் தலைவி தோழிக்குக் குறிப்பித்தாள்.

## மேற்கோளாட்சி

மு. பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பதுபடக் கூறியது (தொல். கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. விழாக்கொண்ட ஊரைப்போல மகிழ்தல்: "விழவுமேம்பட்டவென் னலனே" (குறுந். கஉ௫ : 4.)

3. மு. அகநா. க : 10.

5. புல்லென்றல்: குறுந். கக : 2, ஒப்பு.

5-6. தலைவன் பிரிதலால் தலைவி பொலிவழிதல்: "உழையிற் பிரியிற் பிரியும், இழையணி யல்குலென் றோழியது கவினே" (கலி. ௫௦ : 23-4.)

3-6. "உண்ட லளித்தெ னுடம்பே விறற்போர், வெஞ்சின வேந்தன் பகையலைக் கலங்கி, வாழ்வோர் போகிய பேரூர்ப், பாழ்காத் திருந்த தனிமகன் போன்றே" (நற். க௫௩ : 7-10); "கல்லெனக் கவின்பெற்ற விழவாற்றுப் படுத்தபிற், புல்லென்ற களம்போலப் புலம்புகொண் டமைவாளோ", "நல்குநர் புரிந்து நலனுணப் பட்டோர், அல்குநர் போகிய ஊரோ ரன்னர்" (கலி. ௫ : 10-11, உ௩ : 10-11.) (சுக)

---

## தோழி கூற்று

[இரவில் வந்து தலைவியோடு பழகவேண்டுமென்று விரும்பிய தலைவனை நோக்கி, "நெருங்கிப் பழகாவிடினும் நம் நட்பு அழியாது" என்று குறிப்பால் தோழி மறுத்தது.]

சஉ. காம மொழிவ தாயினும் யாமத்துக்
கருவி மாமழை வீழ்ந்தென வருவி
விடரகத் தியம்பு நாடவெம்
தொடர்புந் தேயுமோ நின்வயி னானே.

எ - து. இரவுக்குறி வேண்டிய கிழவற்குத் தோழி நேர்ந்த வாய் பாட்டான் மறுத்தது.

[நேர்ந்த வாய்பாட்டான் மறுத்தலாவது, உடன்பட்டாள் போன்ற சொல்லமைதியும் மறுத்தமையைக் குறிப்பாற் புலப்படுத் தும் பொருளமைதியும் பொருந்தக் கூறுதல்.]

கபிலர்.

(ப - ரை.) யாமத்து - நடு இரவின்கண், கருவி மா மழை - தொகுதியையுடைய பெரிய மழை, வீழ்ந்தென - பெய்தலால், அருவி விடரகத்து இயம்பும் - நீர் பெருகி அதனால் அருவியானது பின்னாளிலும் மலைமுழைஞ்சுகளில் ஒலிக்கும், நாட - குறிஞ்சி நிலத்தை யுடையவனே, காமம் ஒழிவது ஆயினும் - காமமானது நீங்குவதாக இருப்பினும், நின்வயினான் - நின்னிடத்தில், எம் தொடர் பும் தேயுமோ - எமக்குள்ள நட்பும் அழியுமோ? அழியாது.

(முடிபு.) நாட, காமம் ஒழிவதாயினும் நின்வயினான் எம் தொடர்பும் தேயுமோ?

(கருத்து.) நீ இரவில் வாராவிடினும் தலைவிக்கும் நினக்கும் உள்ள நட்பு அழியாது.

(வி - ரை.) காமம் - இங்கே, மெய்யுறு புணர்ச்சி (குறள், 1092, பரிமேல்.) கருவி மா மழை - மின்இடி முதலாகிய தொகுதியையுடைய பெரிய மழை (புறநா. கரு௯ : 19, உரை.) விடரகம் - மலையிடத் துள்ள வெடிப்புக்களும் குகைகளும்; முழைஞ்சென்பர் நச்சினார்க் கினியர் (மலைபடு. 366, உரை.) எம்மென்றது தலைவிக்கும் தனக்கு முள்ள ஒற்றுமைபற்றி. தொடர்பும் : உம்மை, இறந்தது தழீஇயது. ஓகாரம் எதிர்மறைப் பொருளது. நின்வயினான் : ஆன் என்பது ஏழன்பொருளில் வந்தது. ஏகாரம் அசைநிலை.

தொடர்புந் தேயுமோ வென்றமையால் தேயாதென்பது பெறப் பட்டமையின் தலைவன் முதலில் இரவுக்குறி நேர்ந்ததாகக் கருதி னான். காமம் ஒழிவதாயினுமென்றது மெய்யுறு புணர்ச்சி நீங்கற்கு மிடமுண்டென்பதைக் குறிப்பால் அறிவித்து இரவுக்குறி மறுத்த மையை வெளிப்படுத்தியது.

முதல்நாள் இடையாமத்தில் மழைபெய்து ஒழியினும் அதனால் உண்டான அருவி பிற்றைநாளும் அறாது ஒழுகுதல்போல, முன்னர்ப்

பயின்ற பயிற்சியால் பெற்றதொடர்பு பின்னர் அப்பயிற்சி ஒழியி னும் அறாதென்பது குறிப்பு.

## ஒப்புமைப் பகுதி

1. காமமென்பது மெய்யுறுபுணர்ச்சியைக் குறித்தல்: குறுந். ௩௨ : 3. இறை. 2, உரை.

2. கருவி மாமழை : குறுந். ௧௪ : 7, ௧௬௭ : 2, ௨௦௫ : 1; பெரும் பாண். 24; நற். ௩௨௧ : 11; அகநா. ௪ : 6; புறநா. ௧௫௯ : 19, ௨௦௪ : 13.

1-2. யாமத்து மழைபெய்தல்: "நள்ளென் யாமத்து மழை பொழிந் தாங்கே" (நற். ௨௨ : 11.)

3. விடரகத்தியம்பும் : குறுந். ௨௪௧ : 6.

2-3. அருவி ஒலித்தல்: குறுந். ௭௮ : 1-2, ௩௫௩ : 3, ௩௬௫ : 3-4.

அருவி விடரில் ஒலித்தல்: "மால்வரை யிழிதரும் தூவெள் ளருவி, கன்முகைத் ததும்பும்" (குறுந். ௬௫ : 1-2) ; "கல்யா றொலிக்கும் விடர் முழங் கிரங்கிசை" (மலைபடு. 324.)

1-3. முன்நாள் மழைபெய்தமையால் அருவி உண்டாதல் : (குறுந். ௬௦ : 2-5, ௨௫௧ : 1-2, ௩௬௭ : 4-5) ; "கருவி வானங் கான்ற புயலின், அருவி யாற்று மலை", "கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழி நாள், அருவி" (சீவக. 725, 2752.)

மு. குறுந். ௬௧ : 4-6. (௪௨)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில், "அவர் பிரிவாரென்று சிறிதும் கருதாமையின் நான் சோர்ந்திருந்தேன்; அக்காலத்து அவர் தம் பிரி வைக் கூறின் யான் ஆற்றேனென எண்ணிச் சொல்லாமற் போயினா ர். இதனை நினைந்து என் நெஞ்சம் வருந்தும்" என்று இரங்கித் தலைவி கூறியது.]

சஈ. * செல்வா ரல்லரென் றியா†னிகழ்ந் தனனே
‡ ஒல்வா ளல்லளென் §றவரிகழ்ந் தனரே
ஆயிடை, இருபே ராண்மை செய்த பூசல்
நல்லராக் கதுவி யாங்கென்
அல்ல னெஞ்ச மலமலக் குறுமே.

எ-து. பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லியது.

¶ ஔவையார்.

(ப - ரை.) தோழி, யான்—, செல்வார் அல்லர் என்று - தலைவர் நம்மைப் பிரிந்து செல்லாரென்று எண்ணி, இகழ்ந்தனன் - அவர் செலவை விலக்காமற் சோர்ந்திருந்தேன்; அவர்—, ஒல்வாள் அல்லள் என்று - நம் பிரிவை இவளுக்கு அறிவித்தால் அதற்கு இவள் உடம்படாளென்று எண்ணி, இகழ்ந்தனர் - என்னிடம் சொல்லுதலினின்றும் சோர்ந்தனர்; அ இடை - அக்காலத்தே, இருபெரு ஆண்மை செய்த பூசல் - இருவரிடத்துமுள்ள இரண்டு பெரிய ஆண்மைகள் செய்த போரினால், என் அல்லல் நெஞ்சம் - எனது துன்பத்தையுடைய நெஞ்சு, நல் அரா - நல்லபாம்பு, கதுவியாங்கு - கவ்விக்கடித்ததனால் வருத்தப்படுவதைப்போல, அலமலக்கு உறும் - இப்பொழுது மிக்க கலக்கத்தை யடையா நின்றது.

(முடிபு.) செல்வா ரல்லரென்று யான் இகழ்ந்தேன்; ஒல்வா ளல்லளென்று அவர் இகழ்ந்தனர்; ஆயிடைச் செய்த பூசலால் என் நெஞ்சம் அலமலக்குறும்.

(கருத்து.) தலைவர் என்னிடம் சொல்லாமற் பிரிந்தமையின் நான் கலங்குவேனாயினேன்.

(வி - ரை.) தன்பால் மிக்க அன்புவைத்து ஒழுகிவந்தவனாதலின், 'இவர் பிரிவார்' என்னும் எண்ணம் உண்டாதற்கு இடமில்லையாக, 'செல்லார்' என்று தலைவி சோர்ந்திருந்தாள். இகழ்தல் - செய்வது செய்யாது சோர்ந்திருத்தல் (குறள். 539, பரிமேல்.) 'யான் இகழ்ந் தனன்' என்பது அங்ஙனம் இகழாது, செல்லுதலுங் கூடுமெனக் கருதியிருப்பின் அப்பொழுது செலவை விலக்கியிருப்பேனென்னும்

---

(பி - ம்.) * செல்லா. † னிகந்தனனே. ‡ வீவாள், விடுவாள். § றவரிகந்தனரே. ¶ அவ்வையார்.

நினைவிற்று. தன் பிரிவைக் கூறின் அதற்குத் தலைவி உடம் படாளென்று தலைவன் கூறாமலே சென்றான்; இங்ஙனம் தலை வன் சொல்லாது பிரிதலும் மரபென்பதை, 'துன்புறு பொழுதி னும் - உணர்த்தாது பிரிந்து தலைவி துன்பம் மிக்க பொழுதினும்' (தொல். கற்பு. 43, ந.) என்பதனாலும், இந்நூலுள் வந்துள்ள, "யாந் தமக், கொல்லே மென்ற தப்பற்குச், சொல்லா தகறல் வல்லு வோரே" (௭௯: 7-8) என்னும் செய்யுட் பகுதியினாலும் உணரலாகும். அங் ஙனம் சொல்லாது பிரியினும் ஒருவாற்றானுணர்ந்து பின்னும் தலைவி ஆற்றாளாவளெனின், வெளிப்படச் சொல்லாவிடினும் தலையளி செய் தல் முதலியவற்றாலும் ஆயுதங்களைத் துடைத்துப் புதுப்பித்தலாலும் தலைவன் தன் பிரிவைக் குறிப்பால் தெளிவுறுத்திப் பிரிவானாதலின் அவன் செய்த தலையளியை நினைந்து ஆற்றியிருப்பா ளென்று கொள்க (நற். ௧௭௭; கலி. ௭: 5-16.); 'சொல்லாது பிரியுங் கால் * போழ்திடைப் படாமன் முயங்கியும் அதன்றலைத் தாழ் கதுப்பு அணிந்தும் முள்ளுறழ் முளையெயிற்று அமிழ்தூறுந் தீநீரைக் கள்ளினும் மகிழ் செய்யுமென வுரைத்தும் இவை முதலிய தலையளி செய்து தெருட்டிப் பிரிய அவை பற்றுக் கோடாக ஆற்றுதலின்' (தொல். கற்பு. 43, ந.)

ஒல்வாள் அல்லள் - ஆற்றுளெனலுமாம். 'இவர் நம்மைப் பிரியார்' என்னும் ஊக்கத்தையும், 'இவளுக்குச் சொல்லாமலே போவேம்' என்னும் துணிவையும் முறையே இருவர்பாலு முண் டான ஆண்மை யென்றாள். ஆண்மை யென்பது இருபாலார்க்கும் உரியதென்பது, தலைவன் தலைவியரிடையே உள்ள ஒப்பினது வகையைக் கூறவந்த தோல்காப்பியர், "பிறப்பே குடிமை யாண்மை" என்று கூறுவதாலும், அதன் உரையிற் பேராசிரியர், 'ஆண்மை புருடர்க்காம், அஃது ஆள்வினை யெனப்படும், இது நலமகட் கொப்பதன்றாலெனின்: † குடிமை யாண்மை யென்புழி ஆண்மை யென்பது இருபாற்கும் ஒக்குமாதலின் அமையுமென்பது' என் றெழுதிய பகுதியாலும் தெளியப்படும்.

பாம்பினாற் பற்றப்பட்டாருக்கு அதன் நஞ்சு உயிர்போமளவும் துன்புறுத்துதலைப்போல இஃது என் உயிர் போமளவும் துயர் செய்யு மென்று உவமையை விரித்துப் பொருள்கொள்க (அகநா. ௬௫: 3-5.)

---

* கலி. ௪. † தோல். களவி. 56.

நல்லரா : நல்லபாம்பென்பது வழக்கு. அல்லல் நெஞ்சமென்று வைத்துப் பின்னும் அலமலக்குறுமென்றது, அவர் பிரிவினால் துன் புறுவதோடு எம் இருவரது இகழ்ச்சியையும் நினைந்து பின்னும் கலங்குவதாயிற்று என்றவாறு. அலமலக் குறுதல் - சுழலுதல்; இது 'கலமலக்குறுதல்' எனவும் வரும்; "மனங்களைக் கலமலக் குறுக் கும்" (நீல. 28.)

ஏகாரங்கள் அசைநிலை.

## மேற்கோளாட்சி

1-2. என்னென்பது சொல்லுதலென்னும் தொழில் குறித்து வினைக்குரிய விகுதியுடன் வந்தது (நன். 420, மயிலை.)

3. சுட்டுநீண்டு வகரவொற்று வேறுபட முடிந்தது (தொல். குற் றியலுகரப். 78, ந.); ஆண்மை யென்பது ஆளுந்தன்மை யென்னும் பொருளில் இருபாலையும் உணர்த்திநின்றது (ஷை. கிளவி. 57, ந.)

மு. அறியாமைப் பிரிந்த தலைமகனையுடைய கிழத்தி சொல்லியது (இறை. 52); பாங்கி தலைமகட்குத் தலைமகன் செலவுணர்த்தத் தலைவி இரங்கல் (நம்பி. 170.)

## ஒப்புமைப் பகுதி

3. ஆயிடை : குறுந். ருசo : 3.

4. நல்லரா : நற். கஉ௬ : 3 ; அகநா. எஉ : 14.

4-5. பாம்பு கதுவியது போன்ற துன்பம் : "பூம்பொறிப் பொலிந்த வழலுமி ழகன்பைப், பாம்புயி ரணங்கி யாங்கு மீங்கிது, தகாஅது.........உடையுமென் னுள்ளம்" (நற். எ௬ : 2-5); "அரவுறு துயர மெய்துப" (ஐங். கஎரு : 2.)

மு. "செல்லா ரவரென யானிகழ்ந் தேனே
ஒல்லா ளிவளென வொழிந்தனர்
நல்லெழி லுண்க ணவியுமென் னெஞ்சே" (தமிழ்நெறி. மேற்.)

"பிரியா ரெனவிகழ்ந் தேன்முன்னம் யான்பின்னை யெற்பிரியிற்
றரியா ளெனவிகழ்ந் தார்மன்னர் தாந்தக்கன் வேள்விமிக்க
எரியா ரெழிலழிக் கும்மெழி லம்பலத் தோனெவர்க்கும்
அரியா னருளிலர் போலன்ன வென்னை யழிவித்தவே" (சிற். 340)

"செல்லா ரவரென் றியானிகழ்ந் தேன்சுரஞ் செல்லத்தன்கண்
ஒல்லா ளவளென் றவரிகழ்ந் தார்மற் றவையிரண்டும்
கொல்லா ரயிற்படைக் கோனெடு மாறன் குளந்தைவென்ற
வில்லான் பகைபோ லெனதுள்ளந் தன்னை மெலிவிக்குமே"

(பாண்டிக்கோவை.) (சுங.)

---

## செவிலித்தாய் கூற்று

[தலைவி தலைவனுடன் போனபின்பு அவர்களைப் பாலைநிலத்திற் றேடிச்சென்ற செவிலி அவர்களைக் காணாமல் வருந்திக் கூறியது.]

சச. காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந் தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே.

எ - து. இடைச்சுரத்துச் செவிலித்தாய் கையற்றுச் சொல்லியது.

[இடைச்சுரத்து - பாலைநிலத்தின் இடையில்.]

வெள்ளி வீதியார்.

(ப - ரை.) கால் பரி தப்பின - என் கால்கள் நடந்து நடந்து நடை ஓய்ந்தன; நோக்கி நோக்கி கண் வாள் இழந்தன - இணைந்து எதிர்வருவாரைப் பார்த்துப்பார்த்து என்கண்கள் ஒளியை இழந்தன; மன்ற - நிச்சயமாக, இ உலகத்து - இந்த உலகத்தில், பிறர் - நம்மகளும் அவள் தலைவனும் அல்லாத பிறர், அகல் இரு விசும்பின் மீனினும் பலர் - அகன்றபெரிய வானத்திலுள்ள மீன்களைக் காட்டிலும் பலராவர்.

(முடிபு.) கால் பரிதப்பின; கண் வாள் இழந்தன; பிறர் பலர்.

(கருத்து.) தலைவியையும் தலைவனையும் நான் கண்டேனில்லை.

(வி - ரை.) நோக்கி நோக்கி யென்றதற்கேற்ப நடந்துநடந்தென்பது வருவித்துரைக்கப்பட்டது. முதுமையை யுடையாளாதலி னாலும் பாலைநிலம் நடத்தற்கு அரியதாதலினாலும் நடந்து நடந்து செவிலிக்குக் கால் ஓய்ந்தன. பரி - நடை (மதுரைக். 689, ந.) பொருள்களை நெடுநேரம் வெயிலில் கூர்ந்துநோக்கின் கண் ஒளிமழுங்குதல்

இயல்பு. பாலையில் நெடுந்தூரத்தில் ஆணும் பெண்ணுமாக இணைந்துடன் வருவாரை நோக்கி, 'இவர் நம் மகளும் அவள் தலைவனும் போலும்' என்று எண்ணி அவரையே கூர்ந்துநோக்கி அணிமையில் வர, அவரல்லரென்பதை அறிந்து பின்னும் இங்ஙனம் வருவாரை இப்படியே நோக்கி நோக்கிச் செவிலி மனம் வெறுத்தாள். அகலிரு விசும்பு - தன்னை யொழிந்த நான்கு பூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக்காரணமாகிய பெரிய ஆகாயம் (பெரும்பாண். 1, ந.)

பன்மைக்கு விசும்பின்மீனைக் கூறுதல் மரபு. பிறர் - தான் கருதி நோக்குவாராகிய தலைவியும் தலைவனுமல்லாத பிறர்.

பலரே: ஏகாரம் தேற்றப்பொருளில் வந்தது; ஏனை ஏகாரங்கள் அசைநிலை.

## மேற்கோளாட்சி

1-2. வாளென்னும் உரிச்சொல் ஒளியாகிய பண்பு உணர்த்தி நின்றது (தொல். உரி. 70, இளம், 69, ந.)

மு. சுரத்திடை வினையது நிகழ்ந்தபின்னர்ச் செவிலி கூறியது. (தொல். அகத். 40, இளம்.); செவிலி கடத்திடைத் தன்னெஞ்சிற்குக் கூறியது (ஷை. ஷை. 42, ந.); செவிலி புதல்வியைக் காணாது கவலை கூர்தல் (நம்பி. 188.)

## ஒப்புமைப் பகுதி

1. செவிலி நடை ஒய்தல்: "அரிநரைக் கூந்தற் செம்முது செவிலியர், பரிமெலிந் தொழிய" (நற். ககO : 6-7.)

1-2. கூர்ந்துபார்த்தலாற் கண் ஒளி இழத்தல்: "நீளிடை யத்த நோக்கி வாளற்றுக், கண்ணுங் காட்சி தௌவின" (நற். கூகஎ: 2-3); 'வெளிறுகண் போகப் பன்னாட் டிரங்கி" (புறநா. களஎ: 2); 'வாளற்றுப் புற்கென்ற கண்ணும் - அவர் வரும் வழி பார்த்து என் கண்களும் ஒளி யிழந்து புல்லியவாயின' (குறள், 1261, பரிமேல்.); "கண்ணும் வாளற்ற" (சீவக. 998.)

3. அகலிருவிசும்பு: பெரும்பாண். 1, 292; மதுரைக். 50, 182, 267; நெடுநல். 20; குறிஞ்சிப். 48; மலைபடு. 100; கலி. கOஉ: 1; பதிற். சஅ: 4; புறநா. உ: 2-7, அ: 9, எஎ: 11; மணி. கக: 91; பெருங். 1. 38: 16, ௩. 12: 2.

3 - 4. வான்மீனைப் பன்மைக்குக் கூறுதல்: "வானத்து மீன்க ணற்றதன் சுனையே", "வானத்து, வயங்கித் தோன்று மீனினும்...... பொலிக நுங் நாளே", "வானத்து, வயங்குபன் மீனினும் வாழியர் பலவென" (புறநா. கஎ௧: 9-10, கூகஎ: 15-8, கஎக: 24-5); "வானத்து, மேலாடு மீனிற் பலராவர்" (நாலடி. 113.) (உச)

---

## தோழி கூற்று

[பரத்தையர்பாற் சென்ற தலைவன் விட்ட தூதுவர் தலைவியி னது உடம்பாட்டை வேண்டியபொழுது, தலைவி உடம்பட்டாளென் பதை யறிந்து தோழி, "தலைவன் கொடுமை தன்னைத் துன்புறுத்த வும் அதனைப் பாராட்டாமல் உடம்படுதற்குரிய இக்குடியிற் பிறத்தல் கொடிது" என்று கூறிக் குறிப்பினால் தலைவியின் உடம்பாட்டைத் தெரிவித்தது.]

**உரு. காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி**
**வாலிழை மகளிர்த் *தழீஇய சென்ற**
**மல்ல லூர னெல்லினன் பெரிதென**
**மறுவருஞ் சிறுவன் றாயே**
**தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே.**

எ - து. தலைமகற்குப் பாங்காயினார் வாயில் வேண்டியவழித் தோழி வாயில் நேர்ந்தது.

[பாங்காயினார் - பாணர் முதலியோர்.]

ஆலங்குடி †வங்கனார்.

(ப - ரை.) காலை எழுந்து - காலையிற் புறப்பட்டு, கடு தேர் பண்ணி - விரைந்து செல்லும் தேரை ஏறுதற்கேற்ப அமைத்து, வால் இழை மகளிர் - தூய அணிகலன்களை அணிந்த பரத்தையரை, தழீஇய சென்ற - தழுவும் பொருட்டுச் சென்ற, மல்லல் ஊரன் - வளப்பம் பொருந்திய ஊரையுடைய தலைவன், பெரிது எல்லினன் என - மிக்க விளக்கத்தை யுடையவனென்றெண்ணி, சிறுவன் தாய் - ஆண்மகப் பெற்ற தலைவி, மறுவரும் - அவனை ஏற்றுக் கொள்வா

(பி - ம்.) * தரீஇய, மரீஇய. † வங்கன்.

ளாயினும் மனம் சுழலுவாள்; இ திணை பிறத்தல் - மனம் சுழலுதற் குரிய செயலைத் தலைவன் செய்யினும் அதனை மறந்து வாயில் நேர்தற் குரிய இக்குடியிற்பிறத்தல், தெறுவது - துன்புறுத்துவதாகும்.

(முடிபு.) சிறுவன் தாய் ஊரன் எல்லினனென மறுவரும்; இத்திணைப் பிறத்தல் தெறுவது.

(கருத்து.) தலைவி கற்பொழுக்கமுடைய குடியிற் பிறந்தாளாத லின் தலைவனை ஏற்றுக்கொள்வாள்.

(வி - ரை.) எழுந்து - துயிலெழுந்தெனலுமாம். பண்ணல் - ஏறுதற்கேற்ப அமைத்தல் (புறநா. கஉ: 2, உரை); அலங்கரித்தலு மாம். வாலிழைமகளிரென்றது தலைவன் தந்த செல்வத்தால் இழை யுடையராயினரென்னும் நினைவிற்று. தரீஇய வென்னும் பாடத் திற்கு, 'நம் இல்லிற் கொணர்ந்து வைத்தற்கு' என்று பொருள் கொள்க; "நேரிழை நல்லாரை நெடுநகர்த் தந்துநின், தேர்பூண்ட நெடுநன்மான் றெண்மணிவந் தெடுப்புமே" (கலி. எ௦: 17-8); "ஊரன், தேர்தர வந்த தெரியிழை" (அகநா. நகசு: 7-8.) ஊரன் - மருதநிலத் தலைவன். எல் - விளக்கம். தலைவன் பரத்தையரோடு இன்புற்றதனால் விளக்கமுடையனாயினன்; "எல்லினை வருதி" (கலி. எரு: 14) என்பதையும், 'வதுவை அயர்ந்த பின்பு விளக்கத் தினை யுடையையாய் வாரா நின்றாய்' (ந) என்னும் அதனுரையையும் காண்க. மறுவருதல் - சுழலுதல் (அகநா. உஉ: 4, உரை.) சிறுவன் தாயென்றமையால் தலைவி ஆண்மகப்பெற்றமை விளங்கியது.

பரத்தையிற்பிரிந்த தலைமகன் தன் தலைவி ஆண்மகப்பெற்றதை யறிந்து அம்மகவைக் காணவருதலும் அப்பொழுது தலைவி தன் கற் பொழுக்கத்தின் சிறப்பால் அவன் தீங்கைமறந்து ஏற்றுக் கொள்ளு தலும் மரபு. 'தெறுவதம்ம' என்று தோழி கூறியதனால் அவனை ஏற்றுக்கோடல் தகாதென்பது அவள் கருத்தாதல் விளங்கும்.

உயர்குடிப்பிறந்த கற்புடைமகளிர் தம் தலைவர் கொடுமைபுரியி னும் அதனை மறந்து அன்பு பாராட்டுதல் அக்குடிப்பிறப்பிற்குரிய இயல்பென்பது இந்நூல் கூ, க௦ - ஆம் செய்யுட்களாலும், ஐங்குறு நூறு முதற்பாட்டின் உரையினாலும்,

"சேக்கை யினியார்பாற் செல்வான் மனையாளாற்
காக்கை கடிந்தொழுகல் கூடுமோ கூடா

தகவுடை மங்கையர் சான்றாண்மை சான்றோர்
இகழினுங் கேள்வரை யேத்தி யிறைஞ்சுவார்"
(பரி. உ௦ : 86-9)

"மாய மகிழ்நன் பரத்தைமை
நோவேன் றோழி கடனமக் கெனவே" (கலி. எரு : 32-3)

"அன்புடைக் கணவ ரழிதகச் செயினும்
பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை"
(பெருங். ௪. 14 : 98 - 9)

என்பவற்றாலும் விளங்கும்.

பிறத்தல்லே: லகரவொற்று செய்யுளோசை நோக்கி விரிக்கும் வழி விரிந்தது. அம்மவும் ஏகாரங்களும் அசைநிலை.

## மேற்கோளாட்சி

1. மருதத்திற்குக் காலையென்னும் சிறுபொழுது வந்தது (தொல். அகத். 8, ந.)

மு. புறப்பட்ட விளையாட்டினைத் தலைவன் பொருந்திய புகற்சிக் கண் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 9, இளம்.); குடிப் பிறத்தலை வெறுத்தலாகிய மெய்ப்பாடு வந்தது (ஷை. மெய்ப். 12, இளம்.); உறுதகையில்லாப் புலவியுள் மூழ்கிய கிழவோள்பால் நின்று கெடுத்தற் கண் தோழி கூறியது (ஷை. கற்பு. 9, ந.); தோழி தலைவியை உயர்த்துக் கூறியது (ஷை. பொருளியல், 46, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. தேர்பண்ணல்: "நெடுந்தேர் பண்ணி" (நற். உ௦எ : 4.)

மு. தஞ்சை. 261.

2. வாலிழை: குறுந். கஅஅ : 3.

1-2. தலைவன் தேரிற் பரத்தையர்பாற் செல்லல்: 'தண்டுறை யூரன் றேரெம், முன்கடை நிற்க - அவன்றேர் பிறமகளிர் முன்கடை நிற்ற லொழிந்து எம்முன் கடை நிற்க' (ஐங். ரு, உரை); "நிரைதார் மார்ப னெருந லொருத்தியொடு, வதுவை யயர்தல் வேண்டிப் புதுவதின், இயன்ற வணிய னித்தெரு விறப்போன், மாண்டொழின் மாமணி கறங்கக் கடைகழிந்து, காண்டல் விருப்பொடு தளர்புதளர் போடும், பூங்கட் புதல்வனை நோக்கி நெடுந்தேர், தாங்குமதி வலவவென் றிழிந்தனன்" (அகநா. சுசு : 7 - 12.)

4. மறுவருதல்: "மறுவந்துகள" "மறுவந் தோடி" (குறுந். சுழ: 2, ௩கச: 3); "பெறுவென் கொல்லென மறுவந்து மயங்கி" (பெருங். க. 33 : 127.) (சுரு)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி ஆற்றமாட்டாளென்று கவலை யுற்ற தோழியை நோக்கி, "என்னைத் துன்புறுத்தும் மாலைக்காலமும் தனிமையும் தலைவர் சென்ற நாட்டிலும் உளவாதலின் அவருக்கும் அவற்றால் துன்பம் உண்டாகும்; அதனால் அவர் விரைவில் வருவா ரென்று எண்ணி யான் ஆற்றுகின்றேன்" என்று தலைவி கூறியது.]

சசு. ஆம்பற் பூவின் சாம்ப லன்ன
கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றி லுணங்கன் மாந்தி மன்றத்
தெருவினுண் டாது குடைவன வாடி
இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொ ளோழியவர் சென்ற நாட்டே.

எ - து. பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி, ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

* மாமலாடன்.

(ப - ரை.) தோழி—, ஆம்பல் பூவின் சாம்பல் அன்ன - ஆம் பல் மலரின் வாடலையொத்த, கூம்பிய சிறகர் - குவிந்த சிறகுகளை யுடைய, மனை உறை குரீஇ - வீட்டின்கண் தங்கும் குருவிகள், முன் றில் உணங்கல் மாந்தி - முற்றத்தில் உலரும் தானியங்களைத் தின்று, மன்றத்து - பொதுவிடத்தின்கணுள்ள, எருவின் நுண் தாது குடை வன ஆடி - எருவினது நுண்ணிய பொடியைக் குடைந்து விளையாடி, இல் இறை பள்ளி - வீட்டிறப்பிலுள்ள இடத்தே, தம் பிள்ளையொடு வதியும் - தம்முடைய குஞ்சுகளோடு தங்கியிருக்கும், புன்கண் மாலை யும் - பிரிந்தார்க்குத் துன்பத்தைத் தரும் மாலைக்காலமும், புலம்பும் -

---

(பி - ம்.) * மாமிலாடன்.

தனிமையும், அவர் சென்ற நாட்டு - அத்தலைவர் பிரிந்து சென்ற தேயத்தில், இன்றுகொல் - இல்லையோ?

(முடிபு.) தோழி, அவர் சென்ற நாட்டு, மாலையும் புலம்பும் இன்று கொல்?

(கருத்து.) என்னுடைய பிரிவினால் தலைவரும் துன்புறுவராதலின் விரைந்துவருவர்.

(வி - ரை.) சாம்பல் - பூவின் வாடல் (சீவக. 2349, ந.) எரு - உலர்ந்த சாணம். பறவைகளின் குஞ்சுகளைப் பிள்ளை யென்றல் மரபு (தொல். மரபு. 4.) புன்கண் மாலை - ஒளியிழந்த மாலையென்பதும் ஆம் (குறள், 1222, பரிமேல்.) மாலையும் இன்று கொல், புலம்பும் இன்றுகொலெனத் தனித்தனியே கூட்டுக. அவர்: நெஞ்சறிசுட்டு. ஏகாரம்: அசைநிலை.

தலைவர் சென்ற நாட்டிலும் துன்பந்தரும் மாலையும் தனிமையும் உளவாதலின் அவற்றால் உண்டாகும் துயரத்தையறிந்து அவர் என்னை நினைத்து மீண்டு வருவார்; அது நினைந்து யான் ஆற்றுவே னாயினேனென்பது தலைவியின் கருத்து.

தமக்குரிய இடத்தில் தம் பிள்ளையோடு குருவிகள் வதியும் மாலையில் அவை கண்ட தலைவர் நாமும் நம் மகவோடும் தலைவியோ டும் சேர்ந்துறைதல் வேண்டுமென்னும் கருத்தினராவாரென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

4. பலவின்பால்வினைமுற்று வினையெச்சமானது (நன். 350, மயிலை, 351, சங், வி.)

5. பிள்ளையென்பது பறவையின் இளமைப்பெயர் (தொல். மரபு. 4, பேர்.)

மு. தலைவி தலைவன் சென்ற நாட்டு இவை இன்றுகொலென்றது (தொல். கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. மனையுறை குரீஇ: "மனையுறை குரீஇக் கறையணற் சேவல்" (புறநா. ௩௧௮: 4); "மனையுறை குருவி வளைவாய்ச் சேவல்" (திருவாரூர் மும்மணிக். ௧௧: 1.)

4. எருவின் தாது : நற். உஎ௪ : 2.

3-4. மன்றத்து எருவின் தாது : " *தாதெருத் ததைந்த முற்றம்* " (மலைபடு. 531) ; " *தாதெரு மறுகு* " (நற். ௩௪௩ : 3) ; " *தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ* ", " *காஞ்சித்தா துக்கன்ன தாதெரு மன்றத்து* " (கலி. ௧0௩ : 62, ௧0௮ : 60) ; " *தாதெரு மறுகின் மூதா ராங்கண்* " (அகநா. ௧௬௫ : 4) ; " *தாதெரு மறுகு* " (புறநா. ௩௩ : 11, உ௧௫ : 2, ௩௧௧ : 3) ; " *தாதெரு மன்றந் தானுடன் கழிந்து* ", " *தாதெருமன் றத் தாடுங் குரவை* ", " *தாதெரு மன்றத்து மாதரி யெழுந்து* " (சிலப். ௧௬ : 102, ௧எ : '*மாயவன்றன்*', உஎ : 74.)

2-4. " *மனையுறை புறவின் செங்காற் சேவல், இன்புறு பெடையொடு மன்றுதேர்ந் துண்ணாது, இரவும் பகலு மயங்கிக் கையற்று, மதலைப் பள்ளி மாறுவன விருப்ப* " (நெடுநல். 45-8.)

5. பறவைகளின் துஞ்சைப் பிள்ளை யென்றல் : குறுந். ௬உ : 4, ௧௩௧ : 4.

2-5. குருவி வீட்டின் இறப்பில் தங்குதல் : " *முடங்க விறைய தூங்கணங் குரீஇ* " (குறுந். ௩எ௪ : 5.)

6. புன்கண் மாலை : " *பையுண் மாலை* " (குறுந். ௧௬௫ : 2.)

மாலை துன்பத்தைத் தருதல் : குறள், 1221-30.

5-6. ௸. குறுந். ௩௩0 : 6-7. (௪௬)

---

## *தோழி கூற்று*

[*தலைவன் இரவில் தலைவியிடம் வந்து பழகுங்காலத்தில் அவனை விரைந்து மணம் செய்துகொள்ளும்படி தூண்ட எண்ணிய தோழி, " நிலவே, நீ இரவில் வந்தொழுகுந் தலைவரது களவொழுக்கத்திற்கு நன்மை செய்வாயல்லை " என்று கூறி இரவுக்குறியை மறுத்தது.*]

௪எ. கருங்கால் வேங்கை வீயுகு துறுகல்
இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை
எல்லி வருநர் களவிற்கு
நல்லை யல்லை நெடுவெண் ணிலவே.

எ - து. இரவுக்குறிக்கண் தோழி, முன்னிலைப் புறமொழியாக நிலாவிற்கு உரைப்பாளாகத் தோழி உரைத்தது.

[முன்னிலைப் புறமொழி - கூறப்படும் செய்தியைக் கேட்டறிதற்குரியவர் முன்னே இருப்பவும் அவரை விளித்துக் கூறாமல், வேறொருவரையேனும் பிறிதொரு பொருளையேனும் விளித்துக் கூறுவது (தொல். கற்பு. 26, ந.)]

நெடுவெண்ணிலவினார்.

(ப - ரை.) நெடு வெண் நிலவே - நீட்டித்தலையுடைய வெண்ணிலாவே, கரு கால் வேங்கை - கரிய அடியையுடைய வேங்கை மரத்தின், வீ உகு துறுகல் - மலர்கள் உதிர்ந்த குண்டுக்கல், இரு புலி குருளையின் தோன்றும் - பெரிய புலிக்குட்டியைப் போலக் காணப்படும், காட்டிடை - காட்டினிடத்து, எல்லி வருநர் களவிற்கு - இரவின் கண் வரும் தலைவரது களவொழுக்கத்திற்கு, நல்லை அல்லை - நன்மை தருவாய் அல்லை.

(முடிபு.) நெடுவெண்ணிலவே, காட்டிடை எல்லி வருநர் களவிற்கு நல்லை அல்லை.

(கருத்து.) இனி இரவில் வருதல் தகாதாதலின் தலைவர் தலைவியை விரைவில் மணந்துகொள்ளல் வேண்டும்.

(வி - ரை.) வேங்கை, கருந்தோலிற் செம்பொறி யமைந்த உடலினதாகலின் கரிய பாறையும் அதன்மேல் உதிர்ந்த வேங்கை மலர்த் தொகுதியும் புலிக்குருளையின் தோற்றத்தைச் செய்தன; "புலிப்பொறி வேங்கைப் பொன்னிணர்" (ஐங். ௩௯௬.) காட்டில் வருங்கால் நிலா வொளியில் வேங்கைமலர் பரவிய துறுகல்லைப் புலியென்றெண்ணித் தலைவன் அஞ்சுதலுங் கூடுமென்பது குறிப்பு; "வான்கண் விரிந்த பகன்மரு ணிலவிற், சூரன் மிளைய சார லாரா, றேங்கன் மிசைய வேங்கை யொள்வீ, புலிப்பொறி கடுப்பத் தோன்றலின்" (அகநா. உ௨அ: 8 - 11.) எல்லி - இரவு; "எல்லியம் போது வழங்காமை முன்னினிதே" (இனியது. 34.) காட்டிடை வரும்போது வழியிலுள்ள வேங்கைமலர் உக்க பாறையை வேங்கைக்குருளையென்று அஞ்சச் செய்வதாலும், ஊரின்கண் உள்ளார் கண்டுகொள்வதற்கு ஏதுவாதலாலும் நிலவை, 'நல்லை யல்லை' யென்றாள். நெடு வெண்ணிலவு - நெடுநேரம் எறிக்கும் வெண்ணிலவு; இயல்பாகத் தனக்

மைந்த பொழுதின்மாத்திரம் எறிக்கும் நிலவாயினும், விரைவில் மறையவேண்டுமென்னும் விருப்பினளாதலின், அவளுக்கு நெடுமையுடையதாகத் தோன்றியது ; தம்மால் விரும்பப்படாத நிலவை, 'நெடுவெண்ணிலவு' என்று கூறுவதாக அமைத்த சிறப்பால் இச்செய்யுளை இயற்றிய நல்லிசைப்புலவர் 'நெடுவெண்ணிலவினார்' என்னும் பெயர் பெற்றார்.

நிலவை நோக்கிக் கூறுவாளாய்த் தோழி, இங்ஙனம் ஒழுகுதல் ஏதம் தருமென்று தலைவனுக்கு அறிவுறுத்தி வரைவு கடாயினாளாயிற்று.

## மேற்கோளாட்சி

2. குருளை புலியின் இளமைப் பெயர் (தொல். மரபு. 8, பேர்.)

1-2. 'ஒற்றைக்கிளவியும் இரட்டைவழித்தாகி வருவன கொள்க ; இரும்புலிக் குருளை யென்றதனையே துறுகல்லோடும் வேங்கைவீயோடும் ஒப்பித்தமையின் இப்பெயர்த்தாயிற்று' (தொல். உவம. 22, பேர் ); ஒற்றைக்கிளவி இரட்டை வழித்தாய் வந்த உவமை (மாறன். 103.)

மு. 'இராவந்து ஒழுகுங்காலை முன்னிலைப் புறமொழியாக நிலாவிற்கு உரைப்பாளாய் உரைத்தது. இக்குறுந்தொகையுட் குறிஞ்சியுள் * வேனில் வந்தது' (தொல். அகத். 12, ந.); தலைவி நிலவு வெளிப்பட வருந்தியது (ஷை. களவு. 16, ந.); நிலவு வெளிப்படுதல் (நம்பி. 161; இ. வி. 519); பண்புவமை வந்தது (தண்டி. பொருளணி. 12); பாலைக்குரிய வேனில் குறிஞ்சிக்கண் வந்தது (இ. வி. 394); வேறுபட வந்த உவமம் (ஷை., 645.)

## ஒப்புமைப் பகுதி

1. **கருங்கால் வேங்கை :** குறுந். உசு : 1, ஒப்பு ; மதுரை. 296 ; நற். உகஎ : 4, உஉஉ : 1, ௩கங : 1, ௩டுக : 5-6, ௩சுஅ : 2, ௩அங : 1 ; அகநா. ௩சடு : 8, ௩சக : 10 ; புறநா. கஙஎ : 9.

**வேங்கைப்பூ துறுகல்லின்மேல் உதிதல்:** "அரும்புவா யவிழ்ந்த கருங்கால் வேங்கைப், பொன்மரு ணறுவீ கன்மிசைத் தாஅம்" (நற். உடுஎ : 5-6); "கருங்கால் வேங்கை மாத்தகட் டொள்வீ, இருங்கல் வியலறை வரிப்பத் தாஅம்" (ஐங். உகக : 1-2); "மன்ற வேங்கை மண

* வேங்கை பூத்து உகுங்காலம் வேனிலாதலின் இங்ஙனம் உரைத்தார்.

நாட் பூத்த, மணியே ரரும்பின் பொன்வீ தாஅய், வியலறை வரிக்கு முன்றில்" (அகநா. உகஉ : 7-9.)

1-2. **வேங்கைமலர் உதிர்ந்த துறுகல்லீந்த வேங்கை:** "மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின, அழுகை மகளிர்க் குழுவை செப்ப" (பரி. கச : 11-2); "அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை, மாத்தகட் டொள்வீ தாய துறுகல், இரும்புலி வரிப்புறங் கடுக்கும், பெருங்கல் வைப்பு" (புறநா. உ0உ : 18-21); "கருங்கா லினவேங்கை கான்றபூக் கன்மேல், இருங்கால் வயவேங்கை யேய்க்கும்" (திணைமா. 26) "நறமலி வேங்கையின் பூப்பயில் பாறையை நாகநண்ணி, மறமலி வேங்கை யெனநனி யஞ்சும்" (சிற். 96.)

**வேங்கை மலர்த்தோதுதிக்குப் புலி:** நற். ருஅரு : 1-2; அகநா. கஉ : 9-11, உ0கூ : 19-20.

4. நெடுவெண்ணிலவு : குறுந். ககரு : 4; அகநா. உ : 17; பெருங். க. 35 : 235. (சஎ)

---

## தோழி கூற்று

[தலைவன் பகற்பொழுதில் வந்து தலைவியுடன் பழகும் காலத்தில் அவனைக் காணாது நெடுநேரம் கழிவதனால் துயருற்ற தலைவியினது மேனியிற் பசலை முதலிய வேறுபாடுகள் உண்டானமை கண்டு வருந்தி, "தலைவர் இவளை வரைந்து கொள்வோமென்று சொல்லாரோ!" என்று தோழி கூறியது.]

சஅ. தாதிற் செய்த தண்பனிப் பாவை
காலை வருந்துங் கையா றோம்பென
ஓரை யாயங் கூறக் கேட்டும்
இன்ன பண்பி னினைபெரி துழக்கும்
* நன்னுதல் பசலை நீங்க வன்ன
நசையாகு பண்பி னொருசொல்
இசையாது கொல்லோ காதலர் தமக்கே.

எ - து. பகற்குறிக்கட் காணும் பொழுதினும் † காணாப்பொழுது பெரிதாகலின், வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு தோழி சொல்லியது.

---

(பி - ம்.) * நன்னுதற்பசலை. † தொல். களவு. 16.

[' இவ்வகைபகற்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகனைக் காணும் பொழுதிற் காணும்பொழுது பெரிதாகலான் ஆற்றாளாய் நெஞ்சு மிக்கது வாய்சோர்ந்து கடலிற்காணும் கானலிற்காணும்........... வறிதே குழவி அழுதாற்போல யாதானும் ஒருசொற் சொல்லும்' (18) என்பது இறையனாரகப்பொருள் உரை.]

* பூங்கணுத்திரையார்.

(ப - ரை.) தாதின் செய்த - பூந்தாது முதலிய பொடிகளாற் செய்யப்பட்ட, தண் பனி பாவை - மிக்க குளிர்ச்சியையுடைய விளையாட்டுப்பாவையானது, காலை வருந்தும் - காலைப்பொழுதில் வருந்துதலாற் பிறந்த, கையாறு ஓம்பு என - செயலறுதலை ஒழிப்பாயாகவென்று, ஓரை ஆயம் - விளையாட்டையுடைய மகளிர் திரள், கூற கேட்டும் - சொல்லக் கேட்டபின்பும், இன்ன பண்பின் - இத்தகைய தன்மையையுடைய, இனை பெரிது உழக்கும் - வருத்தத்தை மிக அடையும், நன் நுதல் - நல்ல நெற்றியையுடைய தலைவியினது, பசலை நீங்க - பசலை நீங்கும்படி, காதலர் தமக்கு - தலைவர் மாட்டு, நசை ஆகு பண்பின் - இவளுக்கு விருப்பமாகும் தன்மையையுடைய, அன்ன ஒரு சொல் - அத்தகைய ஒரு சொல்லானது, இசையாது கொல் - இயலாதோ?

(முடிபு.) ஆயம் கூறக்கேட்டும் உழக்கும் நன்னுதலின் பசலை நீங்க ஒரு சொல் காதலர்தமக்கு இசையாது கொல்?

(கருத்து.) தலைவன் இத்தலைவியை வரைந்துகொண்டால் இவள் தன் துன்பத்தினின்றும் நீங்குவாள்.

(வி - ரை) தாது - பலவகைப் பொடி. தலைவி பாவையினிடத்து மிக்க விருப்பினளாதலின் (பெருங். உ. 15 : 112), 'பாவையின் கையாற்றைப் பாதுகாப்பாயாக' என்றால் அவள் அதனை உடனே செய்வாளென்று மகளிர் நினைந்தனர். கேட்டும்: உம்மை உயர்வு சிறப்பு. இன்ன பண்பு என்றது தலைவனைக் காணும்பொழுது பெரிதானமையின் அவன் பிரிவினால் துன்புற்றுப் பசலையும் படரும் கொண்டிருந்த இயல்பை. இனை - வருத்தம் (கலி. கக : 19, ந.) பசலை: தலைவனது பிரிவினால் உண்டாவது; இந்நூல் உஎ-ஆம் செய்யுளின் விசேடவுரையைப் பார்க்க. நன்னுதலென்று வைத்து அந்நுதலையுடையாளது பசலையென்றமையின் நுதலும் பசலை கொண்டதெனக்

(பி - ம்.) * பூங்கணுத்தரையார்.

கொள்க (குறுங். அஎ : 4.) அன்ன ஒருசொலென்றது வரைவே னென்று சொல்வதை. எப்பொழுதும் உடனுறையும் நிலையைத் தலைவி விரும்பினளாக, அதற்கு ஏற்றது வரைந்துகொண்டு இல்லறம் நடத் துதலேயாதலின் அக்கருத்தை வெளியிடும் சொல்லை, 'நசையாகு பண்பின் ஒருசொல்' என்றாள். தலைவன், வரைந்து கொள்வே னென்று கூறும் வழக்கத்தை, ஐங்குறுநூறு, கூஉ - ஆம் செய்யுளும் அதன் உரையும் விளக்கும். ஒரு சொல் - ஒப்பற்ற சொல்; 'ஒரு சொல் இசையாது கொல்லோ' என்ற சொற்கிடக்கை, 'பல சொல்லி நயப்புணர்த்திப் பாராட்டும் தன்மையினருக்கு இவ்வொருசொல் அரிதன்றே' என்னும் குறிப்பையும் புலப்படுத்தியது.

அன்னம் என்று பிரித்து, அன்னமானது காதலருக்கு ஒரு சொல்லை இசையாதுகொலென்பதும் ஒருவாறு பொருந்தும்; ஆயி னும் சிறப்புடையதன்று.

ஓகாரமும் ஏகாரமும் அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. தாதிற் செய்த பாவை: "தாதுசெய் பாவை" (அகநா. ருகூஉ : 6.)

செய்த பாவை : "செய்வுறு பாவை" (குறுந். ககூ : 6.)

தலைவியின் பாவை : குறுந். கக௪ : 1, உஎசு : 1, உஎஅ : 3.

3. ஓரை ஆயம் : குறுந். ருககு : 5, ௪0க : 3 ; நற். சுஅ : 1, க௪ரு : 3 ; புறநா. கஎசு : 1. (சுஅ)

---

## தலைவி கூற்று

[தலைமகன் பரத்தையிற் பிரிந்து மீண்டுவந்தகாலத்து முன் னிருந்த ஆற்றாமை நீங்கி, அவனோடு அளவளாவி, "நாம் பிறவி தோறும் அன்புடைய கணவனும் மனைவியுமென இருப்போமாக!" என்று தலைவி கூறியது.]

சகூ. அணிற்பல் லன்ன கொங்குமுதிர் முண்டகத்து
மணிக்கே ழன்ன மாநீர்ச் சேர்ப்ப
இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா * கியரென் கணவனை
யாஅ கியர்நின் னெஞ்சுநேர் பவளே.

எ - து. தலைமகன் பரத்தைமாட்டுப் பிரிந்தவழி ஆற்றளாகிய தலைமகள், அவனைக் கண்டவழி அவ்வாற்றுமை நீங்குமன்றே; நீங்கியவழிப் பள்ளியிடத்தாளுகிய தலைமகற்குச் சொல்லியது.

[தலைவனைக் கண்டால் தலைவியினது ஆற்றுமை நீங்குமென்பது, "எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற் கொண்கன், பழி காணேன் கண்ட விடத்து", "காணுங்காற் காணேன் றவருய காணுக் காற், காணேன் றவறல் லவை" (குறள், 1285-6) என்பவற்றுல் உணரப்படும். பள்ளி - படுக்கை.]

அம்மூவனர்.

(ப - ரை.) அணில் பல் அன்ன - அணிலின் பல்லை ஒத்த முள்ளையுடைய, கொங்கு முதிர் முண்டகத்து - தாது முதிர்ந்த முள்ளிச் செடியையும், மணி கேழ் அன்ன மா நீர் - நீலமணியினது நிறத்தை ஒத்த கரிய நீரையுமுடைய, சேர்ப்ப-கடற்கரையையுடைய தலைவ, இம்மை மாறி - இப்பிறப்பு நீங்கப்பெற்று, மறுமை ஆயினும் - நமக்கு வேறு பிறப்பு உண்டாயினும், என் கணவன் - என்னுடைய தலைவன், நீ ஆகியர் - இப்பொழுது என்பால் அன்பு செய்தொழுகும் நீயே ஆகுக! நின் நெஞ்சு நேர்பவள் - நின்னுடைய மனத்திற்கு ஒத்த காதலி, யான் ஆகியர் - இப்பொழுது நின் நெஞ்சு கலந்தொழுகும் யானே ஆகுக!

(முடிபு.) சேர்ப்ப, மறுமையாயினும் நீ என் கணவன் ஆகியர்! நின் நெஞ்சு நேர்பவள் யான் ஆகுக!

(கருத்து.) நம்முடைய அன்பு பிறவிதோறும் தொடரும் இயல்பினதாகுக!

௧ (வி - ரை.) அணிற்பல் முண்டகத்தின் முள்ளுக்கு உவமை. முண்டகம் - கழிமுள்ளிச்செடி. மறுமையென்றது வரும் பிறவிகள்

(பி - ம்.) * கியரெங்.

எல்லாவற்றையும். கணவனே : ஐ, சாரியை. நீயாகிய கொண்கணவனே யென்றதற் கேற்ப யானுகியர் நின் மனைவியென்னுது நெஞ்சு நேர்பவளென்றது, கணவனென்றமையாலேயே மனைவியென்பது பெறப்பட்டமையாலும், மனைவியாக இருப்பினும் நெஞ்சு நேர்பவளாகும் பேறு பரத்தைக்காவதுமுண்டாதலின் வாளா மனைவியென வாழாமல் நெஞ்சு பொருந்தியவளுமாதல்வேண்டு மென்பது நினைவாதலாலும் என்க. நெஞ்சு நேர்தல் : "அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே" (குறுந். சo : 5) என்று முன்னும் வந்தது. நேர்தல் - கொடுத்தலுமாம்; தலைவன் தன் நெஞ்சைத் தலைவிக்குக் கொடுத்தலாவது எப்பொழுதும் அவளை நினைத்து அன்பு பாராட்டல். ஏகாரம் : அசைநிலை.

முள்ளிச்செடி புறத்தே முட்களையுடையதாயினும் மலர்களும் அம்மலர்களில் மணமுடைய பூந்தாதும் குறைவறப் பெற்றிருத்தலைப் போலத் தலைவன் புறத்தொழுக்க முடையனாயினும் தன்மாட்டு அன்புடையனாகவே இருக்கின்றானென்பது தலைவியின் குறிப்பு.

## மேற்கோளாட்சி

மு. தலைமகன் நலம்பாராட்டியவழித் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, இளம்.) ; தலைவிக்குச் சாக்காடென்னும் மெய்ப்பாடு வந்தது (ஷை. களவு. 9, ந.); காமக்கிழத்தியர் நலம்பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருளின்கண் தலைவி கூறியது (ஷை. கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. முண்டகத்தின் முள் : குறுந். ருக : 1.

5. நெஞ்சு நேர்பவள் : ஐங். கருக : 5.

3 - 5. மறுமையிலும் கணவனும் மனைவியுமாதல் : (குறுந். கககு : 5 - 8); 'தன் துணையாக - இம்மை மறுமைக்குத் துணையாக' (கலி. சுகூ : 4, ந.), "எமர்தர வாரா தாயினு மிவனேற், றவனுறை யுலகத் தழித்துப்பிறந் தாயினும், எய்துதல் வலித்தனென்" (பெருங். க. 36 : 113 - 5); "மறப்பா னடிப்பதொர் தீவினை வந்திடிற் சென்றுசெலூஉ, பிறப்பா னடிப்பினும் பின்னுந்துன் னத்தகும் பெற்றியரே" (சிற். 205.)

## தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்த தலைவனால் விடப்பட்ட தூதுவரை நோக்கி, "அவர் விளையாடும் துறை அழகு பெற்றது; அவர் மணந்த தோள் மெலிவுற்றது" என்று தலைவி கூறியது.]

ரு௦. ஐயவி யன்ன சிறுவீ ஞாழல்
* செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்த்
துறையணிந் தன்றவ ரூரே யிறையிறந்
திலங்குவளை நெகிழச் சாஅய்ப்
புலம்பணிந் தன்றவர் மணந்த தோளே.

எ - து. கிழவற்குப் பாங்காயின வாயில்கட்குக் கழத்தி சொல்லியது.

† குன்றியனார்.

(ப - ரை.) ஐயவி அன்ன சிறு வீ ஞாழல் - வெண்சிறு கடுகைப்போன்ற சிறிய பூக்களையுடைய ஞாழல் மரத்தின்பூ, செ வீ மருதின் செம்மலொடு - செம்மையாகிய மலர்களையுடைய மருத மரத்தின் பழம்பூவோடு, தாஅய் - பரந்து, அவர் ஊர் - தலைவருடைய ஊரினிடத்தில், துறை - நீர்த்துறையை, அணிந்தன்று - அழகு செய்தது; அவர் மணந்த தோள் - அவர் முன்பு அளவளாவிய என் தோள், இலங்குவளை - விளங்கும் வளையல்கள், இறை இறந்து நெகிழ - முட்டுவாய்ச் சந்தைக் கடந்து நெகிழும்படி, சாஅய் - மெலிந்து, புலம்பு அணிந்தன்று - தனிமையையே அழகாகப் பெற்றது.

(முடிபு.) ஞாழல் தாஅய் அவர்ஊரில் துறையை அணிந்தன்று; அவர் மணந்ததோள் புலம்பணிந்தன்று.

(கருத்து.) அவர் என்னைப் புறக்கணித்தமையால் நான் மெலிந்தேன்.

(வி - ரை.) சிறுவீயென்பதும் செவ்வீயென்பதும் முதற்கேற்ற அடைகள். ஞாழலின்பூச் சிறியதென்பது, "கனைமுதிர் ஞாழற் சினைமருடிரள்வீ" (கூஎ : 1) என்னும் இந்நூற் செய்யுளாலும் பெறப்படும். இறை - இங்கே தோட்சந்து; "வணங்கிறைப் பணைத்தோளெல்

(பி - ம்.) * செவ்வி மருதின். † குன்றியான்.

வளை மகளிர்", "தொடிவிளங் கிறைய தோள்" (குறுந். ௩௬௪ ; 5, ௩௬௭ : 2.) புலம்பு - தலைவர் சாராத தனிமையும், வளையில்லாத் தனிமையும். துறை அணிந்தன்று - துறையை அழகு செய்தது (புறநா. க : 5, உரை) ; தோள் அணிந்தன்று - தோள் அணிந்தது. புலம்பு அணிந்தன்று என்பது குறிப்புமொழி.

தானும் அவனும் ஒன்றுபட்டு வாழும் கற்புக்காலத்தில் அவ னூரே தனதூராகவும், 'அவரூரே' என்று பிரித்துச் சொன்னது அவன்பாலுள்ள புலவிபற்றி. அவர் சாரும் பொருள்களுள் துறை பொலிவு பெற்றிருப்பத் தோள்மட்டும் பொலிவிழந்ததே யென்பது தலைவியின் நினைவு.

'அவர் ஊரிலுள்ள துறையை அணிந்தன்று' என்றது அவன் பரத்தையரோடு அத்துறைக்கண் விளையாடினனென்று அறிந்தமை யைக் குறிப்பித்தது.

## ஒப்புமைப் பகுதி

1. சிறுவீ ஞாழல் : நற். கசுக : 1.
2. மருதினது செவ்வீ : முருகு. 33-4, ந.

5. தோள்மணத்தல் : குறுந். ௩௬ : 4, ஒப்பு ; 100 : 7, உஎஉ : 1-8.

4-5. தோள்வளை நேகிழ்தல் : குறுந். கஅ௯ : 2, உ௯உ : 1. (௫0)

---

## தோழி கூற்று

[தலைவன் வரைந்துகொள்ளுதற்குரிய முயற்சிகளைச் செய்த காலத்து, அவன் விரைந்து வந்து மணந்தானல்லனென்று கவலையுற்ற தலைவிக்கு, "நானும் தாயும் தந்தையும் நின்னை அத்தலைவருக்கே மணம் செய்து கொடுக்க விரும்பியுள்ளோம். இந்த ஊரினரும் அம்பல் கூறும்வாயிலாக உங்கள் இருவரையும் சேர்த்துச் சொல்கின் றார்கள்" என்று தோழி கூறியது.]

௫க. * கூன்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்
நூலறு முத்திற் காலொடு பாறித்

---

(பி - ம்.) * கூர்முண்முண்டகக் கூனி மாமலர்.

துறைதொறும் * பரக்குந் தூமணற் சேர்ப்பனை
யானுங் காதலென் யாயுநனி வெய்யள்
எந்தையுங் கொடீஇயர் வேண்டும்
அம்ப லூரு மவனொடு மொழிமே.

எ - து. வரைவு நீட்டித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி வரைவுமலிவு கூறியது.

[*வரைவுமலிவு - மணம் செய்து கொள்ளுதற்குரிய முயற்சி களின் மிகுதி.*]

குன்றியனார்.

(ப - ரை.) *கூன் முள் முண்டகம் - வளைவாகிய முள்ளையுடைய கழிமுள்ளியினது, கூர் பனி மா மலர் - மிக்க குளிர்ச்சியையுடைய கரிய மலர், நூல் அறு முத்தின் - நூலற்று உதிர்ந்த முத்துக்களைப்போல, காலொடு பாறி - காற்றாற் சிதறி, துறை தொறும் பரக்கும் - நீர்த்துறைகளுள்ள இடங்கள்தோறும் பரவுதற்கு இடமாகிய, தூ மணல் சேர்ப்பனை - தூய மணலையுடைய கடற்கரைக்குத் தலைவனை, யானும் காதலென் - யானும் விரும்புதலையுடையேன்; யாயும் நனி வெய்யள் - நம் தாயும் அவன்பால் மிக்க விருப்பத்தையுடையளாயிரா நின்றாள்; எந்தையும் கொடீஇயர் வேண்டும் - நம் தந்தையும் அவ னுக்கே நின்னை மணஞ் செய்து கொடுக்க விரும்புவான்; அம்பல் ஊரும் - பழிமொழியைச் சிலரறிய உரைக்கும் ஊரிலுள்ளாரும், அவனொடு மொழிமே - அவனோடு நின்னைச் சேர்த்தே சொல்லுவர்.*

(முடிபு.) *சேர்ப்பனை யானும் காதலென்; யாயும் வெய்யள்; எந்தையும் கொடீஇயர்வேண்டும்; அம்பலூரும் அவனொடுமொழியும்.*

(கருத்து.) *நின்மணத்திற்குரிய முயற்சிகள் நடைபெறுகின் றன; நீ கவலற்க.*

(வி - ரை.) *முள்ளியின் மலர் கரியநிறமுடையதென்பது, "மணிப்பூ முண்டகம்"* (மதுரைக். 96) *என்பதனால் விளங்கும். நூலறுமுத்தைப்போலவென்றது வினையுவமம்; ஒன்றோடு ஒன்று சேராமல் தனித்தனியே மலர்கள் சிதறினவென்று கொள்க. காலொடு பாறி - காலாற் சிதறி* (அகநா. ௬: 7, *உரை.*) *வரிக்குமென்னும்*

(பி - ம்.) * *பரிக்கும், வரிக்கும்.*

பாடத்திற்குக் கோலஞ் செய்தாற்போலக் கிடக்குமென்று பொருள் கொள்க. 'இவளுடைய நலத்திற்கேற்ற நலத்தையுடைய தலைமகனைக்கண்டு இன்புறும் தோழி; என்னை? களவொழுக்கத்தில் எழில் நலமுடையான் ஒருவனைக்கண்டு இன்புறக்கடவளோ வெனின் அதற்குக் காரணம் எழினலமேயன்று; பின் அறத்தொடுநிலைநின்று கூட்டுகை அகத்தமிழினது இலக்கணமாதலால் தன்குரவர் வினவத் தான் அறத்தொடு நிற்குமிடத்துக் குரவர் தாமேசென்று மகட் கொடுக்கும் குடிப்பிறப்பினுல் உயர்ச்சியையுடையனுதலால்' (சிற். 66, பேர்.) தோழி யானும் காதலென் என்றாள். தலைவி அறத்தொடு நிற்பத் தோழியும், அவள் அறத்தொடு நிற்பச் செவிலியும் நற்றாயும், நற்றாய் வாயிலாகத் தந்தையும் தலைவி ஒருதலைவன்பால் அன்பு பூண்டாளென்பதை அறிவார்களாதலின் அம்முறையே தோழி, தன்னையும் யாயையும் பின் தந்தையையும் கூறினாள். பிறர் விரும்பினாலும் தலைவியைத் தலைவனுக்குக் கொடுக்கும் உரிமை தந்தைக்கே உண்டாதலின், 'எந்தையுங் கொடீஇயர் வேண்டும்' என்றாள்.

அம்பல் - சிலரறிந்து கூறும் பழிமொழி; 'சொல் நிகழாதே முகிழ் முகிழ்த்துச் சொல்வது' (இறை. 22, உரை) என்றும், 'பரவாத களவு' (சிற். 180, பேர்.) என்றும் கூறப்படும். அம்பலூர் அவனொடு மொழிதலாவது, அங்கங்கே சிலர்சிலர் கூடி நின்று பழி கூறுவாராகி, 'இன்னாள் இன்னானோடு நட்புடையாள் போலும்' என்று உரைத்தல்.

இங்ஙனம் யாவரும் தலைவன் வரைவுக்கு உடம்பட்டாராக இருப்ப, அவர் நீட்டித்தாரென்று ஆற்றாததற்குக் காரணம் இல்லை யென்று தோழி உணர்த்தினாளாயிற்று.

முட்செடியாகிய முள்ளியினிடத்துள்ள மலர் கைவருந்திப் பறித்துக்கொள்ளும்படி அமையாமல் காற்றினாற் கவரப்பட்டு எளிதிற்கொள்ளும்படி மணலிற் பரந்து கிடப்பதுபோல, அரிதின் முயன்று உடம்பாடுபெற்று நிறைவுறுத்தும் வரைவு தலைவனுடைய முயற்சியினால் மலிந்து எல்லாருடைய உடம்பாட்டையும் பெற்றதென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

6. செய்யுமென்னு முற்று ஈற்றுயிர்மெய் கெட்டுவந்தது (தொல். வினை. 39, இளம்; 41, சே, ந, தெய்வச், 40, கல்; நன். 340, மயிலை 341, சங், வி; இ. வி. 244.)

மு. தமர் வரைவுடன்பட்ட தன்மையினால் தலைவியை வற்புறுத்தற்கண் தோழிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். களவு. 24, இளம்.); தோழி வரைவுகடாயவழி அவ் வரைந்து கோடல் மெய்யாயினமையின் வதுவை முடியுமளவும் ஆற்றும்படி தோழி வற்புறுத்திக் கூறியது (ஷை. ஷை. ந.); பாங்கி தமர் வரைவெதிர்ந்தமை தலைமகட்கு உணர்த்தியது (இ. வி. 531.)

## ஒப்புமைப் பகுதி

1. கூன்முண் முண்டகம்: அகநா. ௨௬: 1-2.

2. நூலறு முத்திற் சிதறல்: குறுந். ௧௦௪: 2.

4-5. தோழியும் தந்தையும் உடன்படுதல்: "யாமே, மலர்ந்த பொய்கை முகைந்த தாமரைத், தண்டுறை யூரன் வரைக, எந்தையுங் கொடுக்க வெனவேட் டேமே" (ஐங். ௬: 3-6.)

6. ஊரார் தலைவனோடு சேர்த்துத் தலைவியைக் கூறுதல்: "துறைவற், கூரார் பெண்டென மொழிய வென்னை" (ஐங். ௧௧௩: 2-3.)

மு. "வேங்கைக் கண்ணிய வெறிதரு நாடற்
கின்றீம் பலவி னேர்கெழு செல்வத்
தெந்தையு மெதிர்ந்தனன் கொடையே யலர்வாய்
அம்ப லூரு மவனொடு மொழியும்
சாயிறைத் திரண்ட தோள்பா ராட்டி
யாயு மவனே யென்னும் யாமும்
வல்லே வருக வரைந்த நாளென
நல்லிறை மெல்விரல் கூப்பி
இல்லுறை கடவுட் கோக்குதும் பலியே"
(அகநா. ௨௮௨: 10-18.) (௫௧)

---

## தோழி கூற்று

[தலைவன் வரைந்துகொள்ளுதற்குரிய முயற்சிகளைச் செய்வதையும் அதனைத் தமர் ஏற்றுக்கொண்டதையும் அறிந்து மகிழ்ந்த தலைவியை நோக்கி, "நீ வருந்துவதை யறிந்த யான் உண்மையைத் தாயர்க்கு அறிவித்தேன்; அதனால் இஃது உண்டாயிற்று" என்று தோழி உணர்த்தியது.]

௫௨.* ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம்பிற்
சூர்நசைந் தனையையாய் நடுங்கல் கண்டே
நரந்த நாறுங் குவையிருங் கூந்தல்
நிரந்திலங்கு வெண்பன் மடந்தை
பரிந்தனெ னல்லனோ விறையிறை யானே.

எ - து. வரைவுமலிவு கேட்ட தலைமகட்குத் தோழி, 'முன்னுளின் அறத்தோடு நின்றமை காரணத்தான் இது விளைந்தது' என்பது படக்கூறியது.

பனம்பாரனுர்.

(ப - ரை.) நரந்தம் நாறும் - நரந்தப்பூவின்மணம் கமழ்கின்ற, குவை இரு கூந்தல் - தொகுதியாகிய கரிய கூந்தலையும், நிரந்து இலங்கு வெள் பல் - வரிசைபுற்று விளங்கும் வெள்ளிய பல்லையுமுடைய, மடந்தை - மடந்தையே, ஆர் களிறு மிதித்த நீர் - தன்பால் பொருந்திய யானைகள் மிதித்தமையால் உண்டாகிய பள்ளத்தில் தங்கிய நீர், திகழ் சிலம்பில் - விளங்கும் மலைப்பக்கத்திலுள்ள, சூர் நசைந் தனையையாய் - தெய்வத்தால் விரும்பப்பெற்ற தன்மையையுடையையாகி, நடுங்கல் கண்டு - நீ நம் கற்புக்கு ஏதம் வருமோவென்று அஞ்சி நடுங்குதலையறிந்து, யான் - நின் வருத்தத்தைப் பொறாத யான், இறை இறை - சிறிது சிறிதாக, பரிந்தனென் அல்லனோ - அப்பொழுதப்பொழுது இரங்கி வருந்தினேனல்லனோ?

(முடிபு.) மடந்தையே, நீ நடுங்கல் கண்டு யான் பரிந்தனென் அல்லனோ?

(கருத்து.) நின் துயர்கண்டு ஆற்றுமல் யான் அறத்தொடு நின்றேன்.

(வி - ரை.) களிறு மிதித்த இடம் பள்ளமாதலும் அங்கே நீர் தங்குதலும், "விலங்குமலைக் கவாஅற், கரும்புநடு பாத்தி யன்ன, பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே" (குறுந். உகூஉ : 6-8) என்பதனுலும் உணரப்படும். சிலம்பிற் சூரென்றது மலைப்பக்கத்தில் வாழுந் தெய்வங்களை; அவர் வரையரமகளிரெனப்படுவர்; "சூரரமகளி ராரணங் கினரே............சீவா லாறே" (பழம்பாடல்), "மூப்

(பி - ம்.) * ஆர்கலி மிகுத்த.

புடை முதுபதி தாக்கணங் குடைய” (அகநா. எ : 4) என்பவற்றைக் காண்க; சிலம்பிற்சூர் - முருகனுமாம். காப்பு மிகுதியினாலும் தாயர் வெறியாட்டெடுக்க விரும்பியதனாலும் தலைவி நடுங்கினாள். நரந்தம் : இதனை நாரத்தம்பூவென்பர் நச்சினார்க்கினியர் (குறிஞ்சிப். 94, உரை.) ஐவகையாகப் பகுக்கப்படுவதாதலின், 'குவையிருங் கூந்தல்' என்றாள்; 'குவையிருங் கூந்தல் - குவிந்த கரிய கூந்தல்' (புறநா. உரு : 14, உரை.) குவையிருங் கூந்தலும் நிரந்திலங்குவெண்பல்லும் உடைமை, தலைவி பேதைப்பருவம் நீங்கிப் பெதும்பைப்பருவம் முதிர்ந்து மணம் செய்தற்குரிய நிலையினளென்பதை யறிவிக்கும்; இந்நூல் நகஎ - ஆம் செய்யுளைப் பார்க்க.

பரிதல் - இரங்கி அறத்தொடு நிற்றல். இறை இறையென்றது பலமுறை வருந்தினமையைக் குறித்தது.

ஏகாரங்கள் அசைநிலை.

## மேற்கோளாட்சி

1. மிதித்த : செய்தவென்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் காரண காரியப் பொருளில் வந்தது (தொல். வினை. 37, ந.) ; ஷை எச்சம் செயப் படுபொருள் விகற்பமாகும் (ஷை. ஷை. 36, கல்.)

மு. தோழி கூறிய சொற்கேட்டு வரைவுடம்படுதற்கண் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். களவு. 17, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

2. தெய்வமேறினோர் நடுங்குதல் : (குறுந். கo௬ : 3-5); “சூருறு மஞ்ஞையி னடுங்க” (குறிஞ்சிப். 169); “சூரமை நுடக்கம்” (ஐங். எக : 1); “சூருறு மஞ்ஞையின்.........அதிர்வனர் நடுங்கி” (பெருங். க. 44 : 22-4.)

3. குவையிருங் கூந்தல் : குறுந். நoo : 1.

நரந்தம் நாறும் கூந்தல் : “நரந்தநா றிருங்கூந்தல்” (கலி. ருச : 5); “விளங்கிழை மகளிர் கூந்தற் கொண்ட, நரந்தப் பல்காழ்க் கோதை” (புறநா. நoஉ : 3-4.)

3, மு. அகநா. உசுசு : 4. (ருஉ)

## தோழி கூற்று

[தலைவன் வரைவேனென்று உறுதிமொழி கூறிய பின்பும் நெடுங்காலம் கழிந்தது கண்டு தலைவி வருந்துதலை யறிந்த தோழி, தலைவனை நோக்கி, "நீ கூறிய உறுதிமொழிகள் எம்மை வருத்தின; அவை பிறழாமல் நீ இனி விரைவில் மணந்துகொள்ள வேண்டும்" என்று கூறியது.]

ருந. எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்
நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் *வான்பொரி சிதறி யன்ன
எக்கர் நண்ணிய வெம்மூர் வியன்றுறை
நேரிறை முன்கை பற்றிச்
சூரர மகளிரொ டுற்ற சூளே.

எ - து. வரைவு நீட்டித்தவழித் தோழி தலைமகற்கு உரைத்தது.

கோப்பெருஞ்சோழன்.

(ப - ரை.) மகிழ்ந - தலைவனே, முன்றில் - முன்னிடத்தி லுள்ள, நனைமுதிர் புன்கின் பூ - அரும்பு முதிர்ந்த புன்கமரத்தின் மலர்கள், தாழ் - உதிர்ந்து பரந்து தங்கிய, வெண்மணல் - வெள்ளிய மணற்பரப்பு, வேலன் புனைந்த - வேலனால் அமைக்கப்பட்ட, வெறி அயர் களந்தொறும் - வெறியாட் டெடுக்கும் இடந்தோறும், செ நெல் வான் பொரி - செந்நெல்லினது வெள்ளிய பொரி, சிதறி அன்ன - சிதறினாற் போன்ற தோற்றத்தைத் தரும், எக்கர் நண்ணிய - மணல் மேடுகள் பொருந்திய, எம் ஊர் வியல் துறை - எம்முடைய ஊரி லுள்ள அகன்ற நீர்த்துறையில், நேர் இறை முன்கை பற்றி - நுண்ணிய மூட்டுவாயையுடைய முன்கையைப் பிடித்து, சூரரமகளிரொடு உற்ற - தெய்வமகளிரைச் சுட்டிக் கூறிய, சூள் - சத்தியம், எம் அணங்கின - எம்மைத் துன்புறுத்தின.

(முடிபு.) மகிழ்ந, எம்மூர் வியன்றுறையில் நீ உற்ற சூள் எம்மை அணங்கின.

---

(பி - ம்.) * வெண்பொரி.

(கருத்து.) நீ நின் உறுதிமொழிக்கேற்ப விரைவில் மணம் செய்துகொள்ள வேண்டும்.

(வி - ரை.) சூள் பலமுறை செய்யப்பட்டனவாதலின் அணங்கினவென்று பன்மையாற் கூறினாள். வெண்மணலென்றது எக்கரின் ஒரு பகுதி. வேலன் - வெறியாட்டெடுப்பவன்; இவன் படிமத்தானென்றும் கூறப்படுவான்; முருகனைப் பூசைபண்ணும் தொழிலினன்; தன் கையில் வேலையுடைமையின் இப்பெயர் பெற்றான். வெறியயர்தல் - மறியறுத்துக் குரவையாடி முருகனை வழிபடுதல். அங்ஙனம் வெறியயருங் களத்திற் பொரி சிதறுதல் உண்டென்பது, "செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி" (முருகு. 231) என்பதனாலும் அறியப்படும். சூளாவது, "நின்னை விரைவில் மணம் செய்துகொள்வேன்" என்றது; "நேரிறை முன்கை பற்றி நுமர்தர, நாடறி நன்மண மயர்கஞ் சின்னாள், கலங்க லோம்புமின்" (குறிஞ்சிப். 231-3) என்பதைப் பார்க்க.

சூள் அணங்குதலாவது அதை நினைந்து, 'இன்னும் வரைந்திலரே!' என்று வருந்துதற்கு ஏதுவாதல். சூள் செய்தாரையே அச்சூளாற் குறிக்கப்படும் தெய்வம் வருத்துவது மரபு (பரி. அ: 65-6); அஃது எம்மையும் அணங்கிற்று என்றது, அதனால் உண்டான வருத்தமிகுதியையும் அதனை நிறைவேற்றுதற்கண் விரைந்து மேற்கொள்ளவேண்டும் முயற்சியையும் அறிவுறுத்தியவாறு.

பார்வைக்கும் பயிலுதற்கும் இனிமை தருதற்குரியதாகிய புன்கமலர் பரந்த மணற்பரப்பு, அஞ்சுதற்கேதுவாகிய தோற்றத்தைத் தரும் துறை யென்றமையால், விரைந்து மணம் செய்வாயென்னும் தெளிவைத் தந்து இனிமை பயப்பதற்குரியனவாகிய நின்சூள் இப்பொழுது வருத்தத்தைத் தருவனவாயினவென்னும் குறிப்புப் புலப்பட்டது.

ஏகாரங்கள் அசைநிலை.

## மேற்கோளாட்சி

குறிஞ்சிக்கருப்பொருளில் ஒன்றாகிய செய்வூத்தின் வகை சூரரமகளிர் (தொல். அகத். 5, ந.)

மு. தலைமகன் சூளுற்ற சூளுறவிற் சோர்வு கண்டு அழிந்து தோழி கூறியது (தொல். கற்பு. 9, இளம்.); தீராத் தேற்றத்தைப் பின்னொரு கால் தலைவி தேர்ந்து தெளிவொழித்துக் கூறியது (ஷை. களவு. 10, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. எம் அணங்கினை : குறுந். கசகூ : 4.

3. வேலன் வெறியயர் களம் : "வேலன் றைஇய வெறியயர் களனும்" (முருகு. 222); "வேலன், வெறியயர் வியன்களம்" (அகநா. கூஅ : 18 - 9); "வெறியயர் வெங்களத்து வேன்மகன்" (நாலடி. 16); "வேலனூர் வந்து வெறியாடும் வெங்களத்து" (சிலப். குன்றக்.)

2 - 3. பலமலர்கள் நிறைந்த இடம் வெறிக்களம் போலத் தோன்றுதல் : குறுந். உகஅ : 1-3.

2-4. புன்கின் மலருக்குப் பொரி : "பொரிப்பூம் புன்கு" (குறுந். உசக : 2; நற். கூ : 5; ஐங். உசஎ : 3, உகூஅ : 2); "பொரியுரு வுறழப் புன்குபூ வுதிர" (கலி. உஉ : 11); "பொரியெனப், புன்கவி ழகன்றுறை" (அகநா. கககூ : 5-6); "புன்கு பொரிமலரும் பூந்தண் பொழிலெல்லாம்" (திணைமொழி. 14); "பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கு" (சிலப். கஉ : 'செம்பொன்'); "பேசிற் செந்தலைய வெண்கறைய புன்கம் பொரியணிந்தனவே" (சீவக. 1649); "பொரியணிந்து புன்குதிர்ந்து பூநாறுந் துறையெல்லாம்", "பொரிவிரிவன புதுமலரன புன்குதிர்வன புறனே" (சூளா. ச : 56, கூ : 1); "மிகவுடைய புன்கு மலர்ப் பொரியட்ட மணஞ்செய்யு மிழலை யாமே", "பொரியேர் புன்கு சொரிபூஞ் சோலைப் புத்தூரே" (தே. திருஞா.)

5. எக்கர் நண்ணிய துறை : குறுந். உசக : 2-3.

6. நேரிறை முன்கை : ஐங். சகூஉ : 4.

7. தலைவன் களவுக்காலத்திற் சூளுறுதல் : குறுந். உகூ : 5, ஒப்பு, கஉஎ : மு.

6-7. முன்கைபற்றிச் சூளுறுதல் : "அரிய வஞ்சினஞ் சொல்லியும் பன்மாண், தெரிவளை முன்கை பற்றியும்" (அகநா. கஎரு : 7 - 8)

5-7. துறையிற் சூளுறுதல் : ஐங். ருஉ : 1-4. (ருங)

## தலைவி கூற்று

[தலைவன் வரையாமல் நெடுங்காலம் வந்து பழகுங் காலத்தில் அங்ஙனம் பழகுதலினால் உண்டாகும் ஏதத்தையறிந்து வருந்திய தலைமகள் தோழியை நோக்கி, "தலைவன் என் பெண்மைநலத்தைக் கொண்டான். இனி அவன் வரைந்து கொண்டாலன்றி அதனைப் பெறேன்" என்றது.]

௩௪. யானே யீண்டை யேனே * யென்னலனே
ஏனல் காவலர் கவணொலி † வெரீஇக்
கான யானை கைவிடு பசுங்கழை
மீனெறி தூண்டிலி னிவக்கும்
கானக நாடனொ டாண்டொழிந் தன்றே.

எ - து. வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

மீனெறி தூண்டிலார்.

(ப - ரை.) தோழி, யான்—, ஈண்டையேன் - இவ்விடத்தி லுள்ளேன்; என் நலன் - என்னோடு முன்பு ஒன்றியிருந்த எனது பெண்மைநலன், ஏனல் காவலர் கவண் ஒலி - தினைப்புனங் காப்பார் விடும் கவண்கல்லின் ஒலிக்கு, வெரீஇ - அஞ்சி, கானம் யானை - காட்டு யானை, கை விடு பசு கழை - கைவிட்ட பசிய மூங்கிலானது, மீன் எறி தூண்டிலின் நிவக்கும் - மீனைக் கவர்ந்துகொண்ட தூண்டிலைப்போல மேலே செல்லுதற்கு இடமாகிய, கானக நாடனொடு - காட்டையுடைய தலைவனோடு, ஆண்டு - நாங்கள் பழகிய அவ்விடத்தே, ஒழிந்தன்று - நீங்கியது.

(முடிபு.) யான் ஈண்டையேன்; என் நலன் நாடனொடு ஆண்டு ஒழிந்தன்று.

(கருத்து.) தலைவன் பிரிவினால் யான் பெண்மைநலனிழந்தேன்.

(வி - ரை.) யானே: ஏகாரம், பிரிநிலை. ஈண்டையேனே: ஏகாரம், அசைநிலை. நலனே: ஏகாரம், பிரிநிலை. தான் உண்ண விரும்பி வளைத்த மூங்கிலைக் கவணொலிகேட்டு அஞ்சி யானை கைவிட்டது;

(பி - ம்) * யென்னலன். † வெரீஇய.

அங்ஙனம் விட்ட மூங்கில், மீன் அகப்பட்ட காலத்தில் மீன் பிடிப்பவன் மேலே விரைவாக எடுக்கும்போது தூண்டில் நிமிர்தலைப் போல விரைந்து சென்றது. கானக நாடன் - காட்டிற்கு உள்ளாகிய நாட்டையுடையான் (புறநா. ௫ : 3, உரை.) ஆண்டென்றது களவுக் கூட்டம் நிகழ்ந்த இடத்தை. கானக நாடனொடு ஒழிந்தன்று என்றமையால் அவன் மீண்டுவந்தால் என்பால் ஒன்றுமென்பது தெளியப்படும்;

"நீங்குங்கா ளிறஞ்சாய்ந்து புணருங்காற் புகழ்பூத்து
நாங்கொண்ட குறிப்பிவ ளலமென்னுந் தகையோதான்"

"சுடர்நோக்கி மலர்ந்தாங்கே படிற்கூம்பு மலர்போலென்
தொடர்நீப்பிற் றொகுமிவ ளலமென்னுந் தகையோதான்"
(கலி. எஅ : 11-2, 15-6.)

ஒழிந்தன்றே : ஏகாரம் அசைநிலை.

யானை வளைக்குங் காலத்தில் வளைந்து அது கைவிடத் தூண்டிலைப் போல மூங்கில் நிமிரும் நாடனென்றது, தன் நெஞ்சத்து அன்புளதாகிய காலத்து நம்பால் மருவிப் பணிந்து ஒழுகி அன்பற்ற காலத்துப் பணிவின்றித் தலைமைசெய்து நம் நலங்கொண்ட தன் கொடுமை தோன்ற ஒழுகுகின்றானென்பதாம் (ஐங். உஎஅ, உரை.)

யானையால் கைவிடப்பட்டு நிமிரும் மூங்கிலுக்கு மீனெறி தூண்டிலை உவமை கூறிய சிறப்பினால் இச்செய்யுள் செய்த நல்லிசைச் சான்றோர் மீனெறி தூண்டிலார் என்னும் பெயர் பெற்றனர்.

## மேற்கோளாட்சி

3-5. தொழிலும் பண்பும்பற்றி வந்த உவமை (தண்டி. 4.)

மு. அணுகி மாட்டின்றி வந்த செய்யுள் (தொல். செய். 212, பேர், 211, ந.) ; 'பேராசிரியரும் இப்பாட்டின் மீனெறி தூண்டிலென்றதனை ஏனையுவமமென்றார்' (ஷை. அகத். 46, ந.)

## ஒப்புமைப் பகுதி

2-3. யானை கவணொலிக்கு வெருவுதல்: "புனஞ்சூழ் குறவர், உயர்நிலை யிதணை மேறிக் கைபுடையூஉ, அகன்மலை யிறும்பிற் றுவன்றிய யானைப், பகனிலை தளர்க்குங் கவணுமிழ் கடுங்கல்" (மலைபடு. 203-6) ; "இலங்கொளி மருப்பிற் கைம்மா வுளம்புநர், புலங்கடி கவணையிற் பூஞ்

சினை யுதிர்க்கும் ", " பிடியொடு மேயுஞ் செய்புன் யானை, அடியொதுங் கியக்கங் கேட்ட கானவன், நெடுவரை யாசினிப் பணவை யேறிக், கடு விசைக் கவணையிற் கல்கை விடுதலின் " (கலி. உந : 1-2, சக : 7-10) ; ' இரவின் மேயன் மருஉம் யானைக், கால்வ லியக்க மொற்றி நடுநாள், வரையிடைக் கழுதின் வன்கைக் கானவன், கடுவிசைக் கவணி னெறிந்த சிறுகல் ", " தினைமே யானை யினனிரிந் தோடக், கல்லுயர் கழுதிற் சேணோ னெறிந்த, வல்வாய்க் கவணின் கடுவெடி யொல்லெனா " (அகநா. உகஉ : 8-11, ருகஉ : 13-5) ; " இடுதினைதின் வேழங் கடியக் குறவர், வெடிபடு வெங்கவண்க லூன்ற " (ஐங்கோய்மலை யெழுபது, 7.)

4. மீனெறி தூண்டில் : சீவக. 800.

3-4. யானை முங்கிலை வளைத்து விடுதல் : " தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி விட்ட விசைபோய்க், காளம தார்முகில் கீறுங் கற்குடி மாமலை யாரே " (தே. திருஞா.)

1-5. நலன் ஆண்டு ஒழிந்தது : குறுந். கஎ : 1-2, கஉ௬ : 4-7.

நலன் தலைவனோடு ஒழிந்தது : " தம்மொடு, தானே சென்ற நலனும் " (அகநா. க0ௗ : 13-4) ; " பைந்தொடி யோவியப் பாவை போன்றனள், சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல, மைந்தனு முனியொடு மறையப் போயினன் " (கம்ப. மிதிலைக் காட்சி. 39.)

மு. " சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென விலஞ்சி
மீனெறி தூண்டிலி னிவக்கு நாடன்
உற்றோர் மறவா நோய்தந்து
கண்டோர் தண்டா நலங்கொண் டனனே " (ஐங். உஏஅ.) (ருச)

## தோழி கூற்று

[தலைவன் வேலிப்புறத்திலே கேட்கும் அணிமையில் நின்ற காலத்தில், அவன் விரைந்து வரைந்துகொள்ள வேண்டுமென்பதை அறிவுறுத்துவாளாய், " இவ்வூர் சிலநாளே வாழ்வதற்குரியதாகவும், இன்னாமையையுடையதாகவும் இருக்கின்றது " என்று கூறி, வரையாவிடின் தலைவி உயிர்நீர்ப்பாளென்று தோழி புலப்படுத்தியது.]

**ருரு. மாக்கழி மணிப்பூக் கூம்பத் தூத்திரைப்**
**பொங்குபிதிர்த் துவலையொடு மங்கு றைஇக்**

கையற வந்த தைவர லூதையொ
டின்னு வுறையுட் டாகும்
சின்னாட் டம்மவிச் சிறுநல் லூரே.

எ - து. *வரைவொடு புகுதானேல் இவள் இறந்துபடும் எனத் தோழி, தலைமகன் சிறைப்புறத்தானாகச் சொல்லியது.

[சிறைப்புறம் - வெளிப்புறம்.]

நெய்தற் † கார்க்கியர்.

(ப - ரை.) *இ சிறு நல் ஊர் - இந்தச் சிறிய நல்ல ஊரானது, மா கழி மணி பூ கூம்ப - கரிய கழியினிடத்திலேயுள்ள நீலமணி போன்ற பூக்கள் குவியும்படி, தூ திரை பொங்கு பிதிர் துவலையொடு - தூய அலையிடத்துப் பொங்கிய பிசிராகிய துளியோடு, மங்குல் தைஇ - மேகத்தைப் பொருந்தி, கை அற - பிரிந்தோர் செயலறும்படி, வந்த—, தைவரல் ஊதையொடு - தடவுதலையுடைய வாடைக் காற்றோடு, இன்னா உறையுட்டு ஆகும் - துன்பத்தைத் தரும் தங்குமிடத்தையுடையதாகின்ற, சில் நாட்டு - சில நாட்களையுடையது.*

(முடிபு.) *இச் சிறுநல்லூர் சின்னாட்டு.*

(கருத்து.) *தலைவன் வாராவிடின் தலைவி இன்னும் சில நாட்களே உயிர் வாழ்வாளாதலின் அவன் விரைவில் வரைந்து கொள்ள வேண்டும்.*

(வி - ரை.) *மணிப்பூ என்றமையால் நீலமணி போன்ற* முள்ளி (சிறுபாண். 148), நெய்தல் (மதுரைக். 282) *முதலியவற்றைக் கொள்க. இவை கூம்பவென்றமையின் மாலைப் பொழுதைக் கொள்க.*

*‘இன்னுவுறையுட்டாகுஞ் சின்னாட்டம்ம இவ்வூர்’ என்று ஊரின் மேல் வைத்துச் சொன்னாலும் தோழி நினைந்தது, ‘தலைவி இன்னும் சின்னாளே இவ்வூரில் உயிர் வாழ்வாள்; அச்சின்னாளும் இன்னாமை தரும் இயல்புடையன’ என்பதாகக் கொள்க; இதனால் தலைவனுக்கு விரைந்து வரைந்துகொள்வதன் இன்றியமையாமையைக் குறிப்பித்தாள்.*

---

(பி - ம்.) * *நீவரைவொடு புகுதாயேல்.* † *கார்க்கியன், கார்க்கியார்.*

இன்னுவுறையுட்டாதலும் சின்னுட்டாதலும் ஊரின்பாலுள்ள குறையினலல்லவென்பதைப் புலப்படுத்தி, 'சிறு நல்லூர்' என்று சிறப்பித்தாள்.

அம்மவும் ஏகாரமும் அசைநிலை.

நெய்தனிலத்துக் கருப்பொருள்களை இதனகண அமைததுப பாடிய சிறப்பினுல் இவ்வாசிரியர் தம் இயற்பெயராகிய கார்க்கியரென் பதனோடு நெய்தலென்னும் அடையையும் சேர்த்து வழங்கப்பெற்ருர் போலும்.

## ஒப்புமைப் பகுதி

3. **கையறு வந்தலைதை : குறுந். கக௭ : 3-4.**

2-3. **ஊதையும் துவலையும் : குறுந். அக : 3-4.**

3-4. "இன்னு வுறையுட் டாயினு மின்பம், ஒருநா ளுறைந்திசி னோர்க்கும், வழிநாள் தம்பதி மறக்கும் பண்பி னெம்பதி" (**அகநா.** உ00 : 4-6.) (௫௫)

---

## தலைவன் கூற்று

[தலைவியையும் உடன் அழைத்துச் செல்லவேண்டுமென்று விரும்பிய தோழிக்கு உடம்படானுகித் தனியே பிரிந்து சென்ற தலைமகன் பாலைநிலத்தின் தீமையைக் கண்டு, "இத்தகைய பொல் லாங்கையுடைய இடத்தில் தலைவி வருவாளாயின் மிக இரங்கத்தக் காள்!" என்று கூறியது.]

௫௬. வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சிற்
குளவி மொய்த்த வழுகற் சின்னீர்
வளையுடைக் கைய ளெம்மொ *டுணீஇயர்
வருகதில் லம்ம தானே
அளியளோ †வளியளெந் நெஞ்சமர்ந் தோளே.

எ - து. தலைமகன் கொண்டுதலைப் பிரிதலை மறுத்துத் தானே போகின்றவழி இடைச்சுரத்தின் பொல்லாங்கு கண்டு கூறியது.

[கொண்டுதலைப் பிரிதல் - தலைவியை உடன்கொண்டு அவள் தமரினின்றும் பிரிதல் (தொல். அகத். 15.) பொல்லாங்கு - தீமை.]

---

(பி - ம்) * உணீய. † அளியளென் னெஞ்சமர்ந்தோளே.

* சிறைக்குடியாந்தையார்.

(ப - ரை.) வேட்டஞ் செ நாய் - வேட்டையை மேற்கொண்ட செந்நாய், கிளைத்தூண் மிச்சில் - தோண்டி உண்டு எஞ்சியதாகிய, குளவி மொய்த்த - காட்டுமல்லிகைப்பூ மூடிய, அழுகல் சில் நீர் - அழுகல் நாற்றத்தையுடைய சிலவாகிய நீரை, வளையுடை கையள் - வளையையுடைய கையளாய், எம்மொடு உணீயர் - எம்மோடு சேர்ந்து உண்ணுதற்கு, தான் - தலைவி, வருகதில் - வருக; வந்தால்; எம் நெஞ்சு அமர்ந்தோள் - எம் நெஞ்சின்கண் விரும்பிப் பொருந்திய அத்தலைவி, அளியளோ அளியள் - மிக இரங்கத்தக்காள்!

(முடிபு.) தான் எம்மொடு நீரை உணீயர் வருகதில்லம்ம; எம் நெஞ்சமர்ந்தோள் அளியள்!

(கருத்து.) பொல்லாங்கையுடைய இவ்விடத்தில் தலைவி வருதற் குரியளல்லள்.

(வி - ரை.) வேட்டம் - தனக்குரிய இரையைத் தேடி வேட்டையாடுதல். பாலை நிலத்தில் நீரற்ற சுனையில் தோண்டி அங்குள்ள சிறிதளவாகிய நீரை விலங்கினமும் மக்களும் உண்டல் வழக்கம்; "ஆறுசெல் வம்பலர் சேறுகிளைத் துண்ட, சிறுபல் கேணி" (அகநா. கருள: 1-2.) குளவி - காட்டு மல்லிகை (குறிஞ்சிப். 76, ந.) அருகிலுள்ள மரங்களிலிருந்து உதிர்ந்த குளவிமலர்கள் மிக விழுந்து மூடி நெடுநாளிருத்தலின் அவை அழுகி நீரில் தீய நாற்றத்தை உண்டாக்கின. சின்னீர் - சிறிதளவாகிய நீர்; 'குடத்துள்ளும் பிறகலதநுள்ளும் இருந்த நீரைச் சிறிதென்னுது சிலவென்றலும்............போல்வன வழக்காம்' (தொல். கிளவி. 17, ந.) வருகதில் லம்மவென்றது, வந்தால் இன்னுமையையுடையளாவளென்னும் பொருள் தந்து ஒழியிசையாய் நின்றது. பிரிந்திருப்பின் பிரிவையாற்றுளாதலாலும், உடன் வந் தாற் பாலைநிலத்துப் பொல்லாங்கை ஆற்றுளாதலாலும் 'அளியள்' என்றான். அளியளோ வளியளென்றது மிக அளியளென்றவாறு (புறநா. ருக: 8, உரை.) தலைவியைப் பிரிந்து வந்தேனுயினும் அவளை எப்பொழுதும் நினைக்கும் நிலையினேனென்பான், 'என் நெஞ்சமர்ந் தோள்' என்றான்.

அம்ம, ஏ: அசைநிலை.

---

(பி - ம்.) * சிறைக்குடியாந்தை.

## ௫எ - ஆம் பாடல்

## மேற்கோளாட்சி

மூ. * தமர் வரைவுடன் படாதவழித் தலைமகளைச் சுரத்தின்கண் உடன்கொண்டு போகத் தலைவன் துணிந்தது (தொல். அகத். 44, இளம்.); 'நீ களவில் தேற்றிய தெளிவகப்படுத்தலும் தீராத் தேற்றமும் பொய்யாம்; அவை பொய்யாகாதபடி, செய்கைகளோடே இவளை உடன்கொண்டு செல்க' எனத் தன் அறியாமை தோன்றக் கூறி வந்த தோழி கேட்பத் தலைவன் கூறியது (ஷை. கற்பு. 5, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. **வேட்டச் செந்நாய்:** "பசியட முடங்கிய பைங்கட் செந்நாய், மாயா வேட்டம் போகிய கணவன்" (நற். ௧0௩ : 6-7.)

**வேட்டச் செந்நாய் உண்ட மிச்சில்:** **நற்.** ௪௩ : 3-4; **பெருங்.** ௧. 52 : 75-6.

2. **நீரை மலர் முடியிருத்தல்:** குறுந். ௩௧எ : 3-4, ஒப்பு.

**சின்னீர்:** பெரும்பாண். 340; கலி. ௧௧ : 8, ௩௪ : 3; புறநா. ௩உ௫ : 3; மணி. உ௩ : 142.

1-3. **தலைவி மிச்சில்நீரை உண்ணுதல்:** "இனிய........உவலைக் கூவற் கீழ, மானுண் டெஞ்சிய கலுழி நீரே" (ஐங். உ0௩ : 2-4.)

4. **வருகதில்லம்ம:** அகநா. ௧௪௧ : 11, உஎ௬ : 7.

5. **அளியரோ அளியள்:** "அளியரோ வளியர்" (நற். ௧உ : 8; அகநா. ௪௩ : 13.)

**தலைவன் நெஞ்சில் தலைவி இருத்தல்:** "நெஞ்சமர் தகுவி" (அகநா. உ௫௬ : 12); "யாமு முளேங்கொ லவர்நெஞ்சத்து" (குறள், 1204.) (௫௬)

---

## தலைவி கூற்று

[தாய் முதலியவர்களாற் காக்கப்படும் தலைவி, தலைவனைப் பிரிந்திருத்தற்கு ஆற்றுளாகித் தோழியை நோக்கி, "தலைவரும் யானும் தனித்திருப்பதினும் ஒன்றாக இருந்து ஒருங்கே உயிர்விடுதல் நன்று" என்று கூறியது.]

---

* இக்கருத்து, இச்செய்யுளுக்கு இயல்பாக உள்ள கருத்தைக்காட்டிலும் சிறப்புடையதாகத் தோற்றுகின்றது.

டுஎ. பூவிடைப் படினும் யாண்டுகழிந் தன்ன
நீருறை மகன்றிற் புணர்ச்சி போலப்
பிரிவரி தாகிய தண்டாக் காமமொ
டுடனுயிர் போகுக தில்ல கடனறிந்
திருவே மாகிய வுலகத்
தொருவே மாகிய புன்மைநா முயற்கே.

எ - து. காப்புமிகுதிக்கண் ஆற்றுளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

[காப்பு மிகுதி - தலைவியைப் புறத்தே செல்லவிடாமல் தாய் முதலியவர்கள் பாதுகாத்தலின்மிகுதி; 'தாய்துஞ்சாமை நாய்துஞ் சாமை ஊர்துஞ்சாமை காவலர் கடுகுதல் நிலவு வெளிப்படுதல் கூகை குழறல் கோழிகுரற் காட்டலென இவை' என்பர் (இறை. 29, உரை.)

சிறைக்குடியாந்தையார்.

(ப - ரை.) *தோழி கடன் அறிந்து - செயக்கடவனவாகிய முறையை அறிந்து, இருவேம் ஆகிய - பிறவிதோறும் தலைவனும் தலைவியுமாகிய இருவேமாகப் பயின்று வந்த, உலகத்து - இவ்வுலகத்தில், ஒருவேம் ஆகிய துன்பம்-பிரிவினால் ஒருவராகிய துன்பத்தினின்றும், நாம் உயற்கு - நாம் நீங்கித் தப்புதற்கு, பூ இடை படினும் - பூவானது தம் இடையிலே பட்டாலும், யாண்டு கழிந்தன்ன - அக்காலம் பல யாண்டுகள் கடந்தாற்போன்ற துன்பததை உண்டாக்கும் தன்மையை யுடைய, நீர் உறை மகன்றில் புணர்ச்சிபோல - நீரின்கண் உறைகின்ற மகன்றிற்பறவைகளின் புணர்ச்சியைப்போல, பிரிவு அரிதாகிய தண்டா காமமொடு - பிரிதல் அருமையாகிய குறையாத காமத்தோடு உடன் உயிர் போகுகதில்ல - ஒருங்கே எம் உயிர் போவனவாகுக: இஃது எனது விருப்பம்.*

(முடிபு.) *ஒருவேமாகிய புன்மையினின்றும் நாம் உயற்கு உடன் உயிர் போகுகதில்ல.*

(கருத்து.) *தலைவரைப் பிரிந்திருத்தலினும் உயிர்நீத்தல் சிறப்புடையது.*

(வி - ரை.) *மகன்றில்: இது நீர்வாழ் பறவைகளுள் ஒன்று இப்பறவைகள் ஆணும் பெண்ணும் பிரிவின்றி இணைந்து வாழுட*

தன்மையுடையன ; இவை மருதத்திணைக்குரியவையென்று தெரிகின்றது (நம்பி. 23); இவை மலர்களிற் பயில்வனவாதலின் உடனுறையுங் காலத்தில் அப்பூ இடைப்படுதலும் கூடுமாதலால், 'பூவிடைப் படினும்' என்றாள் ; 'பூவின்கண் திரியும் மகன்றில்' (பரி. அ : 44, பரிமேல்.) என்பதைப் பார்க்க. காமம் - மெய்யுறு புணர்ச்சி (குறுந். சஉ : 1.)

கடனென்றது, கற்புக்காலத்துக் கணவனும் மனைவியும் நடத்தும் இல்லறத்துக்குரிய முறைகளை. இருவேமாகிய உலகமென்றது பல பிறப்பின்கண்ணும் தொடர்ந்து வந்த நட்பைக் குறிக்கொண்டது. நெஞ்சமும் உயிரும் ஒன்றுபட்டனவேனும் நம் கடமையை யறிந்து ஒழுகுதற்காக இரண்டு மெய்யுடையேமாயினேமென்பது தலைவியின் கருதது. ஒருவரால் ஒருவர் இன்பந்துய்க்கும் முறையறிந்து அதற்காக இருவேமாயினேம் என்பதும் ஒன்று ; 'வேறுபாடு இல்லையாயினும், புணர்ச்சியான் வரும் இன்பம் துய்த்தற்பொருட்டாக இன்று யானென்றும் இவளென்றும் வேறுபாட்டோடு கூடிய அழகை யாரறிவார் !' (சிற். 8, பேர்.) என்பதையறிக.

காப்புமிகுதிக்கண் தலைவனைப் பிரிந்திருப்பவளாதலின், 'இங்ஙனம் தனித்து இருத்தலினும் அவனோடு சேர்ந்துள்ளகாலத்திலேயே அவனுயிரும் என்உயிரும் ஒருங்கே நீங்கின் மீண்டும் நட்புடையவராகப் பிறப்போம்' என்று கூறினாளாயிற்று. இறக்கும் பொழுது உள்ள நினைவின்மிகுதியே மறுபிறப்பிற்குக் காரணமாகுமென்னும் கருததினால் இது வேண்டினாள் ; 'உயிர் உடம்பு நீங்கிப் போங்காலத்து அடுத்த வினையும் அது காட்டுங் கதிநிமித்தங்களும் அக்கதிக்கண் அவாவும் உயிரின்கண் முறையே வந்துதிப்ப........... அவ்வுயிரை அவ்வவா அக்கதிக்கட்கொண்டு செல்லுமாதலான்' (குறள், 361, பரிமேல்.)

தலைவனைப் பிரிந்து தான் ஒருத்தியாதலையும், தன்னைப் பிரிந்து அவன் ஒருவனாதலையும் 'ஒருவேம்' என்பதனாற் புலப்படுத்தினாள்.

படினும் : உம்மை, இழிவு சிறப்பும்மை. ஏகாரம் அசைநிலை.

## மேற்கோளாட்சி

4. தில்ல : இடைச்சொல், ஈறு திரிந்து வந்தது (தொல். இடை. 3, ந.)

மு. *'முற்பிறப்பில் இருவேமாய்க் கூடிப் போந்தனம்; இவ்வுலகிலே இப்புணர்ச்சிக்கு முன்னர் யாம் வெவ்வேறாய் உற்ற துன்பத்து இன்றா ராமே நீங்குதற்கெய்திய பிரிவரிதாகிய காமத்துடனே இருவர்க்கும் உயிர்போவதாக, இஃதெனக்கு விருப்பமென்றானென்பதனால் தாந்நிலை யுரைத்தலும் பிரிவச்சமும் கூறிற்று' (தொல். களவு. 10, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. மகன்றிற் புணர்ச்சி: "குறுங்கான் மகன்றி லன்ன, உடன் புணர் கொள்கைக் காத லோரே" (ஐங். ருஅக: 4-5); "அலர்ஞெமன் மகன்றி னன்னர்ப் புணர்ச்சி" (பரி. அ: 44.)

3. பிரிவரிதாகிய காமம்: (குறுந். களஎ: 7); "அரிதே காதலர்ப் பிரிதல்" (நற். ௫: 7); "நூலிடை விலங்கினும், கவவுப்புலந் துறையுங் கழிபெருங் காமம்" (அகநா. ருகூக: 5-6.)

3-4. பிரிதலைக் காட்டிலும் உயிர் செல்லுதல் நலம்: குறுந். ருஉ: 6, ஒப்பு; நற். கஉக: 1-2, உ0ரு: 7-8; ஐங். ககக: 3-4; கலி. உ: 13, ரு: 6, ச: 24, ௫: 18-9, க0: 21, உக: 12-3; அகநா. ருருகூ: 11-4.

6. உய்தல்: குறுந். கக: 3, ஒப்பு.

மு. "மணிநீர்க் கயத்து மலரிடை தட்பினும் வார்கழுத்துப்
பிணிநீர் மையிற்சற்று நீங்கினு மூழி பெயர்ந்தனைய
துணிநீர் மகன்றிலிற் றண்டாது காமத் துறைபடியும்
அணிநீர் மையினுயி ரோராங் ககல்கதி லம்புவிக்கே"

(தணிகைப். களவுப். 72.) (ருஎ)

---

## தலைவன் கூற்று

[தன்னை இடித்துக்கூறிய பாங்கனை நோக்கி, "எனது காம நோய் பொறுத்தற்கரியதாயிற்று; இதனை நீங்கச் செய்யின் நன்று கும்" என்று தலைவன் கூறியது.]

---

* இதனால் நச்சினார்க்கினியர் இச் செய்யுளைத் தலைவன் கூற்றாகக் கொண்டாரென்று தெரிகின்றது; இக்கருத்தே சிறப்புடையது, தலைவி தலைவன்உயிர் போதலைக் கூறுதல் சிறப்பின்றாதலால்.

ருஅ. இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே.

எ - து. கழற்றெதிர்மறை.

[கழறுதல் - தலைவனைப் பாங்கன் இடித்துரைத்தல். எதிர்மறை - தலைவன் எதிர்மறுத்துரைத்தல்.]

வெள்ளிவீதியார்.

(ப - ரை.) இடிக்கும் கேளிர் - இடித்துரைக்கும் நண்பரே, நும் குறையாக - நுமது காரியமாக, நிறுக்கல் ஆற்றின் - என் காம நோயை நிறுத்தலைச் செய்தால், நன்று மன் இல்ல - மிக நன்று; எனது விருப்பம் அது; ஞாயிறு காயும் - சூரியன் வெயில் எறிக்கும், வெ அறை மருங்கில் - வெம்மையையுடைய பாறையினிடத்தே, கை இல் ஊமன் கண்ணின் காக்கும் - கையில்லாத ஊமையன் தன் கண்ணினாலே பாதுகாக்க முயலுகின்ற, வெண்ணெய் உணங்கல் போல - உருகிய வெண்ணெயைப்போல, இ நோய் - என்பாலுண்டான இக் காமநோய், பரந்தன்று - பரவியது; நோன்று கொளற்கு அரிது - பொறுத்துக் கொண்டு நீக்குதற்கு அரிதாயிருக்கின்றது.

(முடிபு.) கேளிர், நிறுக்கலாற்றின் நன்றுமன்; இந்நோய் பரந்தன்று; நோன்றுகொளற்கரிது.

(கருத்து.) காமநோய் பொறுத்தற்கரிதாயிற்று.

(வி - ரை.) இடித்தல் - குற்றம் கண்டால் நெருங்கிக் கண்டித்து அறிவுறுத்தல். கேளிரென்றும் நும்மென்றும் பன்மையிற் கூறியது செறல்பற்றி. ஆற்றினென்றது அங்ஙனம் செய்தலரிதென்னும் நினைவிற்று. ஆற்றினோ: ஓகாரம், அசைநிலை. இல்: விழைவின்கண் வந்தது.

வெண்ணெய் ஞாயிற்றின்வெப்பத்தால் உருகிப் பரந்ததுபோலக் காமநோய் பரந்தது; அவ்வெண்ணெய் உருகாமற் காக்கும்பொருட்டு இருப்பவும் ஊமன் தன்னுடைய கைக்குறையால் அதனை எடுத்துப்

பிறிதோரிடத்தில் வைத்துப் பாதுகாக்கவும், ஊமைத்தன்மையால் பிறரைக் கூவிப் பாதுகாக்கச் செய்யவும் இயலாததுபோல, இந்நோயை அடக்கிப் பாதுகாத்தற்குரிய யான், நிறுக்கும் ஆற்றலையும் பிறரிடம் வெளியிடற்குரிய நிலையையும் பெற்றிலேனாதலின் இதனைக்காக்க இயலேனாயினேன் என்று உவமையை விரித்துக்கொள்க; “சொல்லருங் கடுநோய்க், காமக் கனலெரி” (பெருங். க. 33 : 202-3.)

அரிதே: ஏகாரம் அசைநிலை.

## மேற்கோளாட்சி

மு. தலைவன் நிகழ்பவை உரைத்தது (தொல். களவு. 11, இளம்.); பாங்கற்கூட்டத்துக்கண் வந்தது (ஷை. செய். 186, பேர்.); * பார்ப்பான் கேட்போனாகத் தலைவனுக்குக் கூற்று நிகழ்ந்தது (ஷை. ஷை. 196, பேர், 196, ந.) ; பாங்கன் கழறியவற்றை மறுத்துத் தன்னெஞ்சில் நிகழும் வருத்தங்களை அவற்குக் கூறுதற்கண் தலைவனுக்குக் கூற்று நிகழ்ந்தது (ஷை. களவு. 11, ந.); தலைமகன் கழற்றெதிர்மறை (இறை. 3; களவியற். 26); பாங்கனை நின் குறையாக இது முடிக்கவேண்டுமென்று தலைவன் கூறியது (இ. வி. 505.)

## ஒப்புமைப் பகுதி

1\. இடிக்குங் கேளிர் : கலி. ௬ : 21 ; குறள், 447, 448, 784 ; கம்ப. நிந்தனைப். 59.

2 நன்றுமன் : குறுந். ௬அ : 4, ஒப்பு.

நன்றுமற்றில்ல : குறுந் : க௬ச : 2, உருகூ : 2; நற். ௨௫௫ : 7.

3\. வெவ்வறை : குறுந். கஉ : 2

4\. ஊமன் : குறுந். உஉச : 5.

3 6. “வெந்து முருங்கிய, வெய்ய பாறையில் வெண்ணெய் நிகர்க்குமால்” (கம்ப. சூர்ப்பநகைப். 78.) (ருஅ)

---

* ‘இனிப் பாங்கனைற் குறிதலைப்பெய்தலுமென்று ஒருமைபடச் சூத்திரஞ் செய்யாது, பாங்கனோரினென்று பன்மைபடக் கூறிய தெற்றிற்கு? அவன் ஒருவனேலோவெனின், பாங்கன் பார்ப்பானாகலின், பன்மைவாசகத்தாற் சொன்னாரென்பது’ (இறை. 3, உரை) என்பவாகலின் இப்பாட்டில் கேளிர் எனப் பன்மையாகக் கூறியிருப்பது கருதி இங்ஙனம் கூறினர்.

## தோழி கூற்று

[தலைவன் பொருள்தேடச் சென்ற காலத்தில் அவனது பிரிவை ஆற்றாமல் வருந்திய தலைவியை நோக்கி, "தலைவர் நின்னை மறவார்; தமக்கு வேண்டிய பொருளைப் பெற்று விரைவில் மீளுவர்" என்று தோழி கூறியது.]

௫௧. பதலைப் பாணிப் பரிசிலர் கோமான்
அரலைக் குன்றத் தகல்வாய்க் குண்டுசுனைக்
குவளையொடு பொதிந்த குளவி நாறுநின்
நறுநுதல் * மறப்பரோ மற்றே முயலவும்
சுரம்பல விலங்கிய வரும்பொருள்
நிரம்பா வாகலி னீடலோ வின்றே.

எ - து. பிரிவிடை யழிந்த கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

[அழிந்த - மனம் வருந்திய. வற்புறுத்தியது - ஆற்றியிருத்தல் வேண்டுமென்று துணிவு கூறியது.]

† மோசிகீரனார்.

(ப - ரை.) பதலை பாணி - ஒருகண்மாக்கிணையை இயக்கும் தாளத்தையுடைய, பரிசிலர் கோமான் - பாணர் முதலிய இரவலரைப் பாதுகாப்பவனது, அரலை குன்றம் - அரலையென்னும் குன்றத்தின் கண் உள்ள, அகல்வாய் - அகன்ற வாயையுடைய, குண்டு சுனை குவளையொடு - ஆழமுள்ள சுனையின்கண் அலர்ந்த குவளைமலர்களோடு, பொதிந்த குளவி நாறும் - சேர்த்துக் கட்டிய காட்டுமல்லிகையின் மணம் வீசும், நின் நறு நுதல் - நினது நல்ல நெற்றியை, மறப்பரோ - தலைவர் மறப்பாரோ? முயலவும் - பலநாள் நின்று முயற்சிகளைச் செய்தாலும், சுரம் பல விலங்கிய அரு பொருள் - பாலைநிலம் பல குறுக்கிட்ட கிடைத்தற்கரிய பொருள், நிரம்பாவாகலின் - முற்றக் கைகூடாவாதலின், நீடல் இன்று - முற்றும் பெற்றே மீள்வேமென்று கருதித் தலைவர் காலம் நீட்டித்துத் தங்குதல் இலதாகும்; ஆதலின் நீ வருந்துதலை ஒழிவாயாக.

(முடிபு.) நறுநுதல் மறப்பரோ? பொருள் நிரம்பா ஆகலின் நீடல் இன்று.

---

(பி - ம்.) * தாவென மறப்பரோ மற்றெனை. † மோசிகீரன்

(கருத்து.) தலைவர் விரைவில் மீளுவர்.

(வி - ரை.) பதலை - ஒருகண் மாக்கிணையென்னும் பறை. பரிசிலர் கோமானென்றது பரிசிலருக்குப் பரிசில் தந்து பாதுகாக்கும் தலைவனென்றபடி. அரலைக்குன்றமென்பது ஒரு குன்றத்தின் பெயரென்று தோற்றுகின்றது; ஆயினும் அதன் தலைவன் இன்னுனென்பதும் அதன் இருப்பிடமும் இப்பொழுது விளங்கவில்லை; அரலை - பரலுமாம். குளவியொடு பொதிந்த குவளைக்கண்ணியை நெற்றி மாலையாக அணிந்தமையால் நெற்றி அம்மலர்களின் மணங்கமழ்ந்தது; இயற்கை மணத்தைக் கூறினும் பொருந்தும். குளவி நாறுமென்றமையின் நறுமை நன்மையாயிற்று; "பொலநறுந் தெரியல்" (புறநா. உக : 3) என்பதன் உரையில், "பொன்னு னியன்ற நல்ல மாலை' என்றும், 'நறுமை பொன்னிற்கு இன்றெனினும் தெரியற்கு அடையாய் நின்றது; நன்மையுமாம்' என்றும் உள்ள பகுதிகளைப் பார்க்க. மற்று, ஏ : அசைநிலை.

'நின் நறுநுதலை நீவிப்பிரிந்த அவர் அந்நுதலின் அழகையும், தம் பிரிவு நீட்டிக்குமெனின் அழகு குறையுமென்பதையும் மறவாதவராதலின் அங்கே நெடுநாள் தங்கார்; தாம் பெறவெண்ணிய பொருளனைத்தும் பெற்றே மீள்வரென்பையேல், பொருளை முற்றப்பெறுதல் அரிதாதலின் அங்ஙனம் எண்ணுமல் வேண்டியதுமட்டும் பெற்று மீள்வர்' என்று தோழி காரணங்காட்டி வற்புறுத்தினுள்.

சுரம்பலவற்றைக் கடந்து சென்று பொருள் தேடவேண்டுமாதலின், 'சுரம்பல விலங்கிய வரும்பொருள்' என்றுள். "சென்றோர் முகப்பப் பொருளுங் கிடவாது" (கலி. கஅ : 5) என்பதும், 'நீ நன்குமதித்த பொருளும், சென்றவர்கள் தத்தம் நிலைமைக் கேற்பக் காலம் நீட்டிப்ப நின்று தேடுவதன்றி இப்பொழுதே முகந்துகொள்ள ஓரிடத்தே கிடவாது' என்னும் அதன் உரையும் அன்புடையார் காலம் நீட்டிப்பப் பொருள்தேடிநில்லாரென்பதைப் புலப்படுத்தல் காண்க. நீடலோ : ஓகாரம், அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. பதலைப் பாணி : "நொடிதரு பாணிய பதலை" (மலைபடு. 11.)

2. பரிசிலர் கோமான் : "இல்லோ ரொக்கற் றலைவன்" (புறநா. கூடு :8) ; "இல்லோர் செம்மல்" (சிலப். கடு . 90.)

3. துளவிமலர் மணமுடையது: "குளவிக், கடிபதங் கமழுங் கூந்தல்" (நற். ௩௭௬ : 9-10); "நாறிதழ்க் குளவி" (புறநா. ௩௮0 : 7.)

தலைவி நுதலுக்கு மணம் உண்மை: குறுந். ௨௨ : 5, ஒப்பு.

குளவியும் குவளையும்: நற். ௩௭௬ : 5 6.

2-3. சுனைக்குவளை: "பைஞ்சுனைக், குவளை" (குறுந். ௩௪௨ : 4-5); "குவளையம் பைஞ்சுனை" (மலைபடு. 251); "கடவுட் கற்சுனை யடையிறந் தவிழ்ந்த, பறியாக் குவளை மலர்" (நற். ௩௪ : 1-2); "மல்ல லறைய மலிர்சுனைக் குவளை" (அகநா. ௩0௮ : 11); "குவளைப் பைஞ்சுனை" (புறநா. ௧௩௨ : 5.)

குண்டுசுனைக் குவளை: "குண்டுநீர்ப் பைஞ்சுனை பூத்த குவளை" (குறுந். ௨௧௧ : 6); "தீநீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளை" (புறநா. ௧௧௬ : 1.)

5-6. "பொருள்வயி னீட்டலோ விலர்நின், இருளேங் கூந்த லின்றுயின் மறந்தே" (அகநா. ௨௩௩ : 14-5.) (௫௯)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவையாற்றாத தலைவி தோழியை நோக்கி, "தலைவர் என்னோடு அளவளாவாமல் விருப்பினும் அவரைக் காணுமாத்திரத்தில் எனக்கு இன்பம் பிறக்கும்; அஃதும் இப்பொழுது இலதாயிற்று" என்று கூறியது.]

௬0. குறுந்தாட் * கூதளி யாடிய நெடுவரைப்
பெருந்தேன் கண்ட விருக்கை முடவன்
உட்கைச் சிறுகுடை கோலிக் † கீழிருந்து
சுட்டுபு நக்கி யாங்குக் காதலர்
நல்கார் நயவா ராயினும்
பல்காற் காண்டலு முள்ளத்துக் கினிதே.

எ - து. பிரிவிடை யாற்றாமையிற் றலைமகள் தோழிக்குரைத்தது.

(பி - ம்.) * கூதளிராடிய. † கீழிருந்தூட்டுபு.

பாணர்.

(ப - ரை.) தோழி, குறு தாள் கூதளி - குறிய அடியை யுடைய கூதளஞ்செடி, ஆடிய நெடு வரை - அசைந்த உயர்ந்த மலையி லுள்ள, பெரு தேன் கண்ட - பெரிய தேனடையைக் கண்ட, இருக்கை முடவன் - காலின்மையின் எழுந்து நிற்றற்கு இயலாமல் இருத்தலை யுடைய முடவன், உள் கை சிறுகுடை - உள்ளங்கையாகிய சிறிய குவிந்த பாத்திரத்தை, கோலி - குழித்து, கீழ் இருந்து - அம்மலை யின் கீழே இருந்தபடியே, சுட்டுபு - அத்தேனிறாலைப் பலமுறை சுட்டி, நக்கியாங்கு - உள்ளங்கையை நக்கி இன்புற்றதைப் போல, காதலர் - தலைவர், நல்கார் நயவார் ஆயினும் - தண்ணளி செய்யாராயினும் விரும் பாராயினும், பல்கால் காண்டலும் - பலமுறை பார்த்தலும், உள்ளத் துக்கு இனிது - எனது நெஞ்சிற்கு இனிமைதருவது.

(முடிபு.) காதலர் நல்கார் நயவாராயினும் பல்காற் காண்டலும் இனிது.

(கருத்து.) தலைவரைக் காணுதிருத்தல் துன்பத்தைத் தருவதா யிற்று.

(வி - ரை.) தோழியென்னும் விளி வருவித்துரைக்கப்பட்டது. கூதளி: இது கூதாளியெனவும் கூதளம், கூதாளமெனவும் வரும்; கூதாளியென்பதே புணர்ச்சிக்கண் அம்முப்பெற்றும் குறுகியும் வரு மென்பர் நச்சினார்க்கினியர் (தொல். உயிர்மயங்கு. 44); இதன் மலர் வெண்ணிற முடையது (முருகு. 192); கூதிர்ப் பருவத்தில் அலர்வது (நற். உசச : 2.)

பெருந்தேன்: குறுந். ௩: 4-ஆம் அடியின் விசேடவுரையைப் பார்க்க. காலுடையாரும் ஏறுதற்கரிதென்பாள் நெடுவரை யென்றாள். குடை - பனையோலையாற் செய்யப்பட்டு நீர் எடுத்தற்கும் பருகுதற் கும் உணவுப்பொருள் வைத்தற்குமுரிய ஒரு கருவி (கலி. உ௩ : 9; அகநா. கஉக : 12; புறநா. கஎஎ : 16.) இங்கே அதனைப் போன்றமை யின் உட்கைச்சிறுகுடை யென்றாள். 'முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டாற்போல' என்னும் பழமொழியொன்று இங்கே நினைத் தற்குரியது. முடவன் தேனிறாலிலுள்ள தேன் தனகையில் வீழப் பெற்றுச் சுவைத்து இன்புறுணுயினும் அதனைக் கண்டவளவிலே இன் பம் பெற்றதுபோலத் தலைவருடைய தண்ணளியையும் நயப்பையும்

பெறேனாயினும் அவரைக் காண்டலே ஓரின்பம் தருவதென்று உவமையை விரித்துக்கொள்க. காண்டலும்: உம்மை இழிவுசிறப்பு. பல்காற் காண்டலும் என்றதற்கேற்பப் பல்கால் என்பது உவமைக்கும் கூட்டப்பட்டது. இனிதே: ஏகாரம் அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

2. இருக்கை முடவன்: 'தமக்கு உற்றது உரைக்கலாத மூத்தார்களும் பெண்டிர்களும் இருக்கை முடவரும்' (இறை. 35, உரை.)

1-3. தேனைக் கண்ட முடவன் அதனை விரும்பல்: "கொடுங்குன்றினீள்குடுமி, மேற்றேன் விரும்பு முடவனைப் போல" (சிற். 150.)

5. தலைவன் நல்குதல்: குறுந். ௬எ: 1, ஒப்பு.

5-6. தலைவனைக் காணுதலால் இன்பம் உண்டாதல்: "துனிதீர் கூட்டமொடு துன்னா ராயினும், இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல்" (நற். உகசு: 1-2); "பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக், காணா தமையல கண்" (குறள், 1283.)                                    (சுய)

---

## தோழி கூற்று

[பரத்தையிற் பிரிந்த தலைமகனுக்குத் தூதாக வந்த பாணர் முதலியோரை நோக்கி, "தலைவன் இங்கேவந்து தலைவியோடு இன்புறானாயினும், அவனது நட்பை மனத்தால் நினைந்து அமைதியுற்றுத் தலைவி இருத்தலின் அவள்வளைகள் செறிந்தன; ஆதலின் அவன் வந்து செய்யும் குறையொன்றிலம்" என்று கூறித் தோழி வாயில் மறுத்தது.]

சுக. தச்சன் செய்த சிறுமா வையம்
ஊர்ந்தின் புறாஅ ராயினுங் கையின்
ஈர்த்தின் புறூஉ மிளையோர் போல
உற்றின் புறேஎ மாயினு நற்றேர்ப்
பொய்கை யூரன் கேண்மை
செய்தின் புற்றனெஞ் செறிந்தன வளையே.

எ - து. தோழி, தலைமகன்வாயில்கட்கு உரைத்தது.

* தும்பிசேர்கீரன்.

(ப - ரை.) தச்சன் செய்த - தச்சனாற் செய்யப்பட்ட, சிறு மா வையம் - சிறிய குதிரை பூட்டப்பெற்ற சிறு வண்டியை, ஊர்ந்து இன்புறூஉம் ஆயினும் - ஏறிச் செலுத்தி இன்பமடையாராயினும், கையின் ஈர்த்து இன்புறூஉம் இளையோர் போல - கையால் இழுத்து இன்பமடையும் சிறுவரைப்போல, உற்று இன்புறேம் ஆயினும் - மெய்யுற்று இன்பமடையேமாயினும், நல் தேர் - நல்ல தேர்களையும், பொய்கை - பொய்கையையுமுடைய, ஊரன் கேண்மை - ஊர்க்குத் தலைவனது நட்பை, செய்து இன்புற்றனெம் - மேன்மேலும் பெருகச் செய்து இன்பமடைந்தேம்; வளை செறிந்தன - அதனால் வளைகள் கழலாமல் இறுகியமைந்தன.

(முடிபு.) உற்று இன்புறேமாயினும் ஊரன்கேண்மையைச் செய்து இன்புற்றனெம்; வளை செறிந்தன.

(கருத்து.) தலைவர் எம்மை மறந்தாலும் யாம் அவரை மறவேமாயினேம்.

(வி - ரை.) தச்சன் செய்தவை மாவும் வையமுமாகிய இரண்டும். சிறுமா, சிறுவையமென்க. நற்றேரையுடைய ஊரனைப் பற்றிச் சொல்லப்புகுவாள் அததேரோடு தொடர்புடைய உவமையையே கூறினாள்.

'இளையோர், பெரியோர் ஊரும் பெரியதேரை ஊர்ந்து இன்புறா விடினும் அத்தேரை நினைந்து பண்ணிய சிறுதேரை ஈர்த்து, அப்பெரியோர் அடையும் இன்பத்தைப் பெறுவதுபோல, பரத்தையர் பெறும் மெய்யுறுபுணர்ச்சியைப் பெற்று இன்புறேமாயினும், தலைவனை நினைந்து உள்ளத்தே நட்பைப் பெருக்குதலினால், அவர்பெற்ற இன்பத்தையே யாம் பெற்றேம்' என்று உவமையை விரித்துக்கொள்க.

நற்றேர்ப் பொய்கையூரனென்றது, தலைவன் தன் தேரிலேறிப் பரத்தையருடன் பொய்கைநீராடுவானென்றறிந்ததைக் குறித்தது. கேண்மை - நெஞ்சிற் பயின்ற நட்பு; "புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான், நட்பாங் கிழமை தரும்" (குறள், 785) என்பவாகலின், உணர்ச்சியே புணர்ச்சிக்குரிய பயனாகிய வளைசெறிதலை உண்டாக்கியது. தோழி தனக்கும் தலைவிக்குமுள்ள ஒற்றுமைபற்றி உற்றின்புறேமாயினுமென்று தன்மைப்பன்மையாற் கூறினாள்.

* இதனைத் தும்பிசொகினனென்று படித்தற்கும் இடமுண்டு.

வளையே : ஏகாரம் அசைநிலை.

இதனால், 'அவன் ஈண்டு வாராதிருப்பவும் வந்தாற்போன்ற இன்பத்தைப் பெற்றேம்; ஆதலின் ஈண்டு வந்து செய்வதொன் றிலன்' என்று தோழி வாயில் மறுத்தாளாயிற்று.

விளையாட்டுத்தேரை ஈர்த்து இன்புறும் பருவங் கடந்து மெய்த் தேரை யூர்ந்து இன்புறுவார்போலக் களவுக்காலங் கடந்து மெய்யுறு புணர்ச்சியை இடையீடில்லாமற் பெறுவதற்குரிய கற்புக் காலத்தினே மாகிய யாம் சிறாரைப் போலக் களவுக்குரிய உள்ளப் புணர்ச்சி யையே உடையேமாயினேம் என்னும் குறிப்பும் பெறப்படும்.

## மேற்கோளாட்சி

1. அதனின் இயறல் என்னும் பொருளில் மூன்றும் வேற்றுமை வந்தது (தொல். வேற்றுமை. 11, இளம், கல்.)

## ஒப்புமைப் பகுதி

1-3. **சிறுதேரை இளையோர் ஊராமல் ஈர்த்தல் :** "தச்சச் சிறுஅர் நச்சப் புனைந்த, ஊரா நற்றே ருருட்டிய புதல்வர்" (பெரும் பாண். 248-9.)

1-3. **இளையோர் சிறுதேரை இழுத்தல் :** "பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும், முக்காற் சிறுதேர்" (பட். 24-5); "கால்வரேர் கையி னியக்கி நடைபயிற்றா, ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல், போல வருமென் னுயிர்" (கலி. அக : 8-10) ; "விளையாடு சிறுதே ரீர்த்து மெய் வருந்தி, யமளித் துஞ்சும்......புதல்வர்" (மணி. எ : 55-7) ; "தொழிலுடைச் சிறுபறை பூண்டு தேரீர்த்து" (திருவாரூர் மும்மணிக். உஉ : 2); ஆண்பாற் **பிள்ளைத்தமிழ்களிலுள்ள சிறுதேர்ப் பருவத்தைப்** பார்க்க.

4. **உற்றின்புறுதல் :** "ஐதேமக் கம்ம மெய்தோய் நட்பே" (குறுந். சா௧ : 6.)

5. **ஊரன் கேண்மை :** குறுந். உகசு : 4, ௩0அ : 6.

4-6. ஒருவாறு ஒப்பு : குறுந். சஉ. (௬௩)

## தலைவன் கூற்று

[இயற்கைப்புணர்ச்சிக்கண் தலைவியோடு அளவளாவிய தலைவன் பிற்றைநாளில் முதல்நாட் கண்ட இடத்தில் அவளைத் தலைப்பட்டு இன்புற எண்ணித் தன் நெஞ்சை நோக்கி, "அவள் நறுமையும் மென்மையும் நன்னிறமும் உடையள்; இன்றும் அவளைப் பெறுவேம்" என்று கூறியது.]

௬௨. கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை
நாறிதழ்க் குவளையொ *டிடைப்பட விரைஇ
ஐதுதொடை மாண்ட கோதை போல
† நறிய நல்லோண் மேனி
முறியினும் ‡வாய்வது ¶முயங்கற்கு மினிதே.

எ - து. தலைமகன் இடந்தலைப்பாட்டின்கட் கூடலுற நெஞ்சிற்குச் சொல்லியது.

[இடந்தலைப்பாடு - இயற்கைப்புணர்ச்சிக்குப் பின் மீண்டும் தலைவியை முன்னாட் கண்ட இடத்திலே சென்று தலைப்படுதல்.]

சிறைக்குடி யாந்தையார்.

(ப - ரை.) நெஞ்சே, கோடல் - காந்தள்மலரையும், எதிர் முகை பசு வீ முல்லை - தோற்றிய அரும்பிலிருந்து உண்டாகிய செவ்வி மலர்களாகிய முல்லைப் பூக்களையும், நாறு இதழ் குவளையொடு - மணக்கின்ற இதழ்களையுடைய குவளைமலர்களோடு, இடைப்பட விரைஇ - இடையிடையே பொருந்தும்படி கலந்து, ஐது தொடை மாண்ட - அழகிதாகத் தொடுத்தல் மாட்சிமைப்பட்ட, கோதை போல - மாலையைப்போல, நறிய நல்லோள் மேனி - நறுநாற்றத்தை யுடைய தலைவியது மேனியானது, முறியினும் வாய்வது - தளிரைக் காட்டிலும் மென்மையும் நிறமும் பொருந்தியது; முயங்கற்கும் இனிது - தழுவுதற்கும் இனியது.

(முடிபு.) நெஞ்சே, நல்லோளது நறிய மேனி முறியினும் வாய்வது; முயங்கற்கும் இனிது.

(கருத்து.) தலைவியை முன்பு தழுவி இன்புற்றதுபோல இப்பொழுதும் இன்புறுவேன்.

(பி - ம்.) * டிடைபட. † நறியணல்லோள். ‡ வாயது. ¶ முயங்குக மினியே.

(வி - ரை.) எதிர்தல் - தோன்றுதல் (கலி. ககஎ : 3, ந.) ; பருவத்தை நேர்தல் (ஐங். ஐம். 31, உரை.) பசுவீ - செவ்விப் பூ ; பசுமை நிறத்தின்கண் செல்வதன்று ; 'பைங்காந்தள் - செவ்விக் காந்தட்பூ' (சிற். 1, பேர்.) என்பதைப் பார்க்க. மேனியின் இயலைக் கூறினன், இயற்கைப் புணர்ச்சிக்கட் பழகியவனாதலின். இனிதே : ஏகாரம் அசைநிலை.

## மேற்கோளாட்சி

மூ. தலைவன் பிரிந்துழிப் பெருகிய சிறப்பின்கண் அவனுக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 5, இளம்.) ; * புணர்ந்துழி மகிழ்ந்து கூறியது (ஷை. அகத். 14, களவு. 6, ந.); இயற்கைப்புணர்ச்சிக்கண் வந்தது (ஷை. செய். 186, ந.); முயங்குதலுறுத்தல் (நம்பி. 127); மெய்யுறு புணர்ச்சி (இ. வி. 405.)

## ஒப்புமைப் பகுதி

1. எதிர்முகை : "எதிர்மலர்" (நான்மணி. காப்பு.)

பசுவீ முல்லை: குறுந். உஉக : 5.

1-4. தலைவியின்மேனி மலர்களின் மணத்தையுடைமை : (குறுந். அச : 4-5, கசுஅ : 1-4); "பொய்கைப் பூவினு நறுந்தண் ணியளே" (ஐங். கஎ : 4.)

தலைவியின்மேனிக்கு மலர்மாலைஉவமை : (குறுந். உஉக : 6); "திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக், குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ, மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந், துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே" (சிற். 1); "பேதையைப் பெண்ணி பலைப் பெய்வளையை யென்மார்பிற், கோதையை" (பு. வெ. 255.)

4-5. தலைவிமேனிக்கு முறி உவமை : (குறுந். உஉஉ : 7); "முறி மேனி ...வேய்த்தோ ளவட்கு" (குறள், 1113.)

5. தலைவி மேனியின் நறுமை, மென்மை, இனிமை : குறுந் : ஏ0: 2-5. (கூஉ)

---

* இக்கருத்து, சிறப்புடையதாகத் தோற்றுகின்றது.

## தலைவன் கூற்று

[பொருள்தேடவேண்டுமென்று துணிந்த நெஞ்சை நோக்கி, "பொருள் தேடச் செல்லின் தலைவியைப் பிரியவேண்டும்; அவளைப் பிரிவது அரிது" என்று உணர்த்தித் தலைவன் செலவு தவிர்ந்தது.]

கூ௩. ஈதலுந் துய்த்தலு மில்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக வெண்ணுதி யவ்வினைக்
கம்மா வரிவையும் வருமோ
எம்மை யுய்த்தியோ வுரைத்திசி னெஞ்சே.

என்பது. * பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.

[கடைக் கூட்டுதல் - முடிவு போக்குதல் (பொருந. 175, ந.); துணிதல்.]

உகாய்க்குடிகிழார்.

(ப - ரை.) நெஞ்சே—, ஈதலும் - இரவலர்க்குக் கொடுத்தலும், துய்த்தலும் - இன்பங்களை அனுபவித்தலும், இல்லோர்க்கு - பொருளில்லாத வறியவர்க்கு, இல் என - இல்லையென்று கருதி, செய்வினை - பொருள் செய்தற்குரிய செயல்களை, கைம்மிக எண்ணுதி - மிக எண்ணாநின்றாய்; அ வினைக்கு - அச்செயல் செய்தற்குத் துணையாக, அ மா அரிவையும் - அழகிய மாமைநிறத்தையுடைய தலைவியும், வருமோ - வருவாளோ? எம்மை உய்த்தியோ - எம்மை மட்டும் செலுத்துகின்றாயோ? உரைத்திசின் - சொல்லுவாயாக.

(முடிபு.) நெஞ்சே, செய்வினை எண்ணுதி; அரிவையும் வருமோ? எம்மை உய்த்தியோ? உரைத்திசின்.

(கருத்து.) இவளைப் பிரிந்து செல்லுதல் இயலாதது.

(வி - ரை.) ஈந்து எஞ்சியவற்றையே துய்த்தல் இல்வாழ்வான் கடப்பாடாதலின் ஈதலை முன்னர்க் கூறினான்; "விருந்தோம்பி, மிச்சின் மிசைவான்" (குறள், 85) என்பதை ஓர்க. ஈதலாகிய அறமும் துய்த்தலாகிய இன்பமும் பொருளால் ஆகுமாதலின் அம்முறை பற்றிக் கூறினானெனலுமாம்; "வடுவிலா வையத்து மன்னிய

* பொருள் கடைக்கூட்டிய நெஞ்சு: குறுந். ௭௧, கருத்து; அகநா. ௩௩௫, கருத்து.

மூன்றில், நடுவண தெய்த விருதலையு மெய்தும்" (நாலடி. 114); "ஆராயிற் றானே யறம்பொரு ளின்பமென், றூரா ரிவற்றி னிடைய தனை யெய்துவார், சீரா ரிருதலையு மெய்துவர்" (திவ். சிறியதிரு மடல், 3-4.) இல்லோர் - பொருளில்லாதவர் (குறுந். கஉ௦ : 1); பொருளின்மையையே இன்மையென்றும், பொருளில்லோரையே இல்லோரென்றும் வழங்குதல் மரபு. இல்லோர்க்கென்பதற்கு வேற்றுநாட்டுக்குச் சென்று பொருண்முயற்சி செய்யாமல் இல்லிலே தங்கியிருப்பாருக்கெனலுமாம்; "செறுவோர் செம்மல் வாட்ட லுஞ் சேர்ந்தோர்க், குறுமிடத் துய்க்கு முதவி யாண்மையும், இல்லிருந் தமைவோர்க் கில்லென் றெண்ணி" (அகநா. உ௩க : 1 - 3) என்பதைக் காண்க. இல்லோர்க்கு இல்லென என்ற குறிப்பால் செய் வினை யென்பது பொருள்செய்வினையைச் சுட்டியது. உரைத்திசின் : சின், முன்னிலையசை; "உரைத்திசிற் றோழி" (குறுந். ௩௦உ : 1); இதன் இலக்கணம், "மியாயிக மோமதி இகுஞ்சி னென்னும், ஆவயி னாறும் முன்னிலை யசைச்சொல்" (தொல். இடை. 26) என்பது.

'நெஞ்சே, நீ பொருள்செய்யும்பொருட்டு வேற்றுநாட்டுக்குப் போக எண்ணுகின்றாய்; அங்கே இத்தலைவி வருவாளோ? வாராளாக வின் நான் மட்டும் போகவேண்டும்; இவளைப் பிரிந்து நான் செல்ல ஆற்றேனன்றே' என்று கூறித் தலைவன் செலவழுங்கினான். இங்ஙனம் அழுங்கியது செல்லாமலே இருத்தற்கன்று; தன் மனத்திலுள்ள பேரன்பைப் புலப்படுத்தி ஒருவகையால் அவளை ஆற்றுவித்துப் பின்பு பிரிவதே அவன் கருத்து; இதுவே புலனெறி வழக்கமென் பது, "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த தவிர்ச்சி யாகும" (தொல். கற்பு. 44) என்பதனால் அறியலாகும்.

## மேற்கோளாட்சி

மூ. இன்மையது இளிவைத் தலைவன் நெஞ்சிற்குக் கூறியது; இது பொருள் வயிற்பிரிவு) வணிகர்க்கே யுரியது (தொல். அகத். 41, ந); தலைவியை வருகின்றாளன்றேயெனக்கூறித் தலைவன் செலவழுங்கியது ஷை. கற்பு. 5); மறுத்துரைப்பதுபோல நெஞ்சினை இளிவரல்பற்றிக் கூறியது (ஷை. பொருளியல், 2, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. இல்லோர்க்கு ஈதல் இல்லை : "இருள்படு நெஞ்சத் திடும்பை தீர்க்கும், அருணன் குடைய ராயினு மீதல், பொருளில் லோர்க் கொல் லியையா தாகுதல், யானு மறிவென் மன்னே" (அகநா. ௩௩௫: 1-4.)

இல்லோர்க்குத் துய்த்தல் இல்லை: (குறுந். ௧௨0 : 1); “ வறியா ரிருமை யறியார் ” (சிறு. 333.)

இல்லோர்க்கு ஈதலும் துய்த்தலும் இல்லை : “ இசையு மனபமு மீதலு மூன்றும், அசைவுடை யிருந்தோர்க் கரும்புணர் வின்மென ” (நற். உ௧௪ : 1-2.)

2. கைம்மிகல்: நற். ௩௨ : 3 ; கலி. ௪௬ : 23, ௫௮ : 7, ௧0௭ : 24.

1-2. “ அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும், பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும், புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப், பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர் ” (கலி. ௧௧ : 1-4.)

3. அம்மாவரிவை : புறநா. ௩௪௩ : 5 ; குறள், 1107.

4 உரைந்திசினோர்ச்சே : நற். ௧0௩ :1. (௬௩)

---

## தலைவின் கூற்று

[தலைவன்பிரிவை ஆற்றுமலிருந்த தலைவியை நோக்கி, “ அவர் நின் துன்பத்தையறிவர் ; ஆதலின் விரைவில் மீள்வர் ” என்று தோழி கூற, “ அவர் அறிந்தவராயிருந்தும் இன்னும் வந்திலர் ” என்று தலைவி கூறியது.]

௬௪. பல்லா நெடுநெறிக் * ககன்று வந்தெனப்
புன்றலை மன்ற நோக்கி மாலை
† மடக்கட் குழவி ‡ யணவந் தன்ன
நோயே மாகுத லறிந்தும்
சேயர் தோழி சேய்நாட் டோரே.

எ - து. பிரிவிடை யாற்றுமை கண்டு, வருவரெனச் சொல்லிய தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

[வருவர் - தலைவர் வருவர்.]

¶ கருவூர்க் கதப்பிள்ளை.

---

(பி - ம்.) * கன்று வருந்தெனப். | மக்கட் குழவி. ‡ யலம்வந்தன்ன, யவண்வந் தன்ன. ¶ கருவூர்க் கந்தப் பிள்ளை.

(ப - ரை.) தோழி—, பல் ஆ - பல பசுக்கள், நெடு நெறிக்கு அகன்று வந்தென - நெடிய வழியின்கண் நீங்கிச் சென்றனவாக, புன் தலை மன்றம் நோக்கி - அவை தங்கியிருத்தற்குரிய புல்லிய இடத்தை யுடைய மன்றத்தைப் பார்த்து, மாலை - மாலைக்காலத்தில், மடம் கண் குழவி - மடப்பம் பொருந்திய கண்ணையுடைய கன்றுகள், அணவந் தன்ன நோயேம் ஆகுதல் அறிந்தும் - தலையெடுத்துப் பார்த்து வருந்திஞற் போன்ற தம் வரவு நோக்கிய துன்பத்தை யுடையே மாதலை அறிந்திருந்தும், சேய்நாட்டோர் - நெடுந்தூரதேதுள்ள நாட்டுக்குச் சென்ற தலைவர், சேயர் - இன்னும் நெடுந்தூரத்திலே யுள்ளார்.

(முடிபு.) தோழி, சேயநாட்டோர் நோயேமாகுதல் அறிந் தும் சேயர்.

(கருத்து.) தலைவர் நாம் துன்புறுவோமென்பதை அறிந்தவரா யிருந்தும் இன்னும் வந்திலர்.

(வி - ரை.) படர்க்கையினும் வந்தென்பது செல்லுதலென்னும் பொருளில் வந்தது; தொல். கிளவி. 29-ஆம் சூத்திர வுரைகளைப் பார்க்க. பசுக்கள் சென்றது மேய்தற்கு. புன்றலை - பொலிவழிந்த இடம்; பசுக்கள் இன்மையின் பொலிவழிந்ததாயிற்று. மன்றம் - பசுக்கள் தங்கியிருக்கும் இடம்; "ஆன்கணம், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர" (குறிஞ்சிப். 217-8); இதனை யுடையராயிருத் தல்பற்றி இடையர்கள் * மன்றாடிகளென்னும் பெயருடையராயினர்; இப்பெயர் சிலாசாஸனங்களிற் காணப்படுகின்றது. மடக்கண் - மென்மைபொருந்திய கண்; கன்றுதலின் மடக்கண் உடையதாயிற்று.

மேயச் சென்ற பசுக்கள் மாலைக்காலத்தில் ஊர்க்கு மீண்டுவந்து மன்று புகுவது வழக்கம்; அதனால் மாலையில் கன்றுகள் தம் தாய்ப்பசுக்களை எதிர்நோக்கியிருந்தன; "கறவை கன்றுவயிற் படர" (குறுந். கஅ : 2.) அணவருதல் - தலையெடுத்துப் பார்த்து வருந்துதல்; "அணந்த யானை" (குறிஞ்சிப். 35) என்பதற்கு, 'மேனோக்கி வருந்தின யானை' என்று நச்சினார்க்கினியர் உரை யெழுதுதல்காண்க. அலம் வந்தன்னவென்ற பாடத்திற்கு மனஞ் சுழன்றாற்போன்ற வென்று பொருள்கொள்க.

* திருவால. இஉ : 5, 11.

பிரிந்து சென்ற பசுக்கள் மாலைக்காலத்தில் மீண்டு வருதலை அவற்றின் கன்றுகள் எதிர்நோக்கி நிற்றலைப்போல, பிரிந்து சென்ற தலைவனது வரவை உரிய பருவத்தில் எதிர்நோக்கி யிருப்பேனென்று உவமையை விரித்துக்கொள்க. புன்றலையென்று உவமைக்குக் கூறிய தற்கேற்ப அவரில்லாமையாற் பொலிவிழந்த இவ்விடத்தைப்பார்த்து யான் வருந்தினேனென்பதும் கொள்க.

"அவர் நின் துன்பத்தை அறியாதிரார்" என்று தோழி ஆற்றுவித்தாளாதலின், "அறிந்தும் இன்னும் சேயராயினர்" என்று வருந்தினள்.

தாய்ப்பசுவிற்கும் கன்றுக்கும் உள்ள அன்பு மிகச் சிறந்ததாதலின் அது தாய்க்கும் பிள்ளைக்குமுள்ள அன்புக்கு உவமை கூறப்படுவதோடு, தலைவன் தலைவியருக்கு இடையிலுள்ள அன்பு, இறைவன் அடியார்க்கு இடையிலுள்ள அன்பு முதலியவற்றிற்கும் கூறப்படுதல் மரபு; "கன்றுபிரி காராவின் றுயருடைய கொடி" (கம்ப. குகப்.) என்று தாயன்புக்கும், "தமியர் தாமே, செல்பவென்ப...... பண்பில் கோவலர் தாய்பிரித் தியாத்த, நெஞ்சமர் குழவி போல நொந்துநொந், தின்னுமொழிது மென்ப" (அகநா. உகூ : 9-13) என்று தலைவியின் அன்புக்கும், "கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே" (திருவா.) என்று அடியாரது அன்புக்கும் உவமையாக வருதல்காண்க.

அறிந்தும்: உம்மை, உயர்வு சிறப்பு. நாட்டோரே: ஏகாரம் அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

3. அணவரல்: குறுந். கஉஅ: 3; பரி. க: 2.

1-4. தலைவன் வரவை எதிர்பார்க்கும் தலைவிக்குத் தாய்ப்பசுவை எதிர்பார்க்கும் கன்று: குறுந். கஉஉ: 4-6. (சுசு)

---

## தலைவி கூற்று

[கார்ப்பருவம் வந்ததையறிந்த தலைவி, தலைவன் வாராமையாற் வருந்தி, "இன்னும் நீங்கள் உயிரோடு இருக்கின்றீர்களோ வென்று கேட்பதுபோலக் கார்ப்பருவம் வந்தபின்பும் தலைவர் வந்திலர்; இனி என்செய்வேன்!" என்று தோழியிடம் வருந்திக் கூறியது.]

சுரு. *வன்பரற் றெள்ளறல் பருகிய விரலைதன்
இன்புறு துணையொடு மறுவந் துகளத்
தான்வந் தன்றே தளிதரு தண்கார்
வாரா துறையுநர் வரனசைஇ
வருந்திநொந் துறைய †விருந்திரோ வெனவே.

எ - து. பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது.

கோவூர் கிழார்.

(ப - ரை.) தோழி, வன் பரல் தெள் அறல் பருகிய - வலிய பருக்கைக்கற்களினிடத்தேயுள்ள தெளிந்த நீரைக் குடித்த, இரலை - ஆண்மான், தன் இன்புறு துணையொடு - இன்பத்தை நுகர்தற்குரிய தன்னுடைய பெண்மானோடு, மறுவந்து உகள - களிப்பினாற் சுழன்று துள்ளி விளையாடாநிற்கவும், வாராது உறையுநர் - இங்கே வாராமல் சென்ற இடத்தே தங்கிய தலைவர், வரல் நசைஇ - மீண்டு வருதலை விரும்பி, வருந்தி நொந்து உறைய - மிகவருந்தித் தங்கும்பொருட்டு, இருந்திரோ என - உயிர் வைத்துக்கொண்டிருந்தீரோ வென்று கேட்பதற்கு, தளி தரு தண் கார் - மழைத்துளியைத் தருகின்ற தண்ணிய கார்ப்பருவம், வந்தன்று - வந்தது.

(முடிபு.) உறையுநர் வரல் நசைஇ இருந்திரோ எனக் கார் வந்தன்று.

(கருத்து.) கார்ப்பருவம் வந்தபின்பும் தலைவர் வந்திலர்.

(வி - ரை.) மான் தன் துணையோடு உகளும்படி கார்ப்பருவம் வரவும், தலைவர் தம் துணையோடு மகிழும்படி வந்து சேர்ந்திலரென்னும் குறிப்புத் தோன்றுகின்றது. 'கார்ப்பருவம் வந்தபின்பும் நாம் உயிரோடு இருத்தல் பிழை' என்னும் நினைவினளாதலின் அக்கருத்தை அப்பருவம் கேட்பதாக அமைத்தாள். இனி அவர் விரைவில் வாராவிடின் உயிர்வாழ்தலருமை என்பதும் புலப்பட்டது.

தான், ஏகாரங்கள் : அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. பரலிலுள்ள நீர் : "பரலவ லூறற் சிறுநீர்" (நற். ௩௩௩ : 3.)

(பி - ம்.) * வன்பாற். † விருந்தனிரோ.

பாலும் இரலையும் : "*பரலவ லடைய விரலை தெறிப்ப*" (அகநா : 4.)

2. மறுவருதல் : குறுந். சஃ : 4, ஒப்பு.

1-2. பரல்களிலுள்ள நீரைப் பருகி இரலைமான் பெண்மானோடு உகளுதல் : குறுந். உ௫௦ : 1-2.

இரலையும் துணையும் உகளல் : (குறுந். ௩௩அ : 1-2) ; "*அறுகோட் டிரலையொடு மான்பிணை யுகளவும்*" (பட். 245) ; "*பிணையெருத் தெழி லேற்றின் பின்னாப், பிணையுங் காணிரோ பிரியுமோ வவையே*" (கலி. உ௦ : 22-3) ; "*மடப்பிணை தழீஇத், திரிமருப் பிரலை புல்லருந் துகள*" (அகநா. கச : 5-6) ; "*மறியுடன் றழீஇய மடமா னம்பிணை, துள்ளுநடை யிரலையொடு வெள்ளிடைக் குழும*" (பெருங். க. 54 : 38-9.)

1-3. கார்ப்பருவத்தில் இரலையும் துணையும் இணைந்திருத்தல் : "*திரிமருப் பிரலையொடு மடமா னுகள, எதிர்செல் வெண்மழை பொழி யுந் திங்களின்*" (முல்லை. 99-100) ; "*மண்கண் குளிர்ப்ப வீசித் தண் பெயல், பாடுலந் தன்றே பறைக்குர லெழிலி......அண்ண லிரலை யமர் பிணை தழீஇத், தண்ணறல் பருகித் தாழ்ந்துபட் டனவே*", "*இருதிரி மருப்பி னண்ண லிரலை, செறியிலைப் பதவின்...மடப்பிணை யருத்தித், தெள்ளற றழீஇய வார்மண லடைகரை, மெல்கிடு கவுள துஞ்சுபுறங் காக்கும்*", "*கார்தளி பொழிந்த வார்பெயற் கடைநாள்......தண்ணறும் படுநீர் மாந்திப் பதவருந்து, வெண்புறக் குடைய திரிமருப் பிரலை, வார் மண லொருசிறைப் பிடவவிழ் கொழுநிழற், காமர் துணையொ டேமுற வதிய*", "*படுமழை பொழிந்த பயமிகு புறவின்......திரிமருப் பிரலை தெள்ளறல் பருகிக், காமர் துணையொ டேமுற வதிய*", "*இருவிசும் பிவர்ந்த கருவி மாமழை, நீர்செறி நுங்கின் கண்சிதர்ந் தவைபோற், சூர் பனிப் பன்ன தண்வர லாலியொடு, பருஉப்பெய லழிதுளி தலைஇ வான மின்று, குரூஉத்துளி பொழிந்த பெரும்புலர் வைகறை, செய்துவிட் டன்ன செந்நில மருங்கிற், செறித்துநிறுத் தன்ன தெள்ளறல் பருகிச, சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை, வலந்திரி மருப்பி னண்ண லிரலையொ, டலங்குசினைக் குருந்தி னல்குநிழல் வதிய*", "*மறியுடை மடப்பிணை தழீஇப் புறவிற், றிரிமருப் பிரலை பைம்பயி ருகள, வார்பெய லுதவிய கார்செய் காலை*" (அகநா. உ௩ : 1-9, ௩ச : 4-8, க௩௯ : 5-12, க௫ச : 1-9, ௩௦ச : 1-10, ௩கச : 5-7) ; "*கருவியல் கார்மழை கால் கலந் தேந்த, உருகு மடமான் பிணையோ டெழும்*" (திணைமொழி. 25) ; "*கார்வளம் பழுனிக் கவினிய கானத்து......சிறுபிணை தழீஇய திரிமருப் பிரலை*" (பெருங். க. 49 : 101-14.)

5. வருந்தி நொந்துறைதல் : குறுந். ககஉ : 2, ௪௦௦ : 7.

## தோழி கூற்று

[கார்காலம் வந்தபின்பும் தலைவன் வாராமையால் வருந்திய தலைவியை நோக்கி, "இப்போது பெய்யும் மழை பருவமல்லாத காலத்துப் பெய்வது; இதைக் கார்காலத்துக் குரியதென்று மயங்கிக் கொன்றைமரங்கள் மலர்ந்தன. ஆதலின் இது கார்ப்பருவமென்று நீ வருந்தற்க" என்று தோழி கூறியது.]

௬௬. மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
கல்பிறங் கத்தஞ் சென்றோர் கூறிய
பருவம் வாரா வளவை நெரிதரக்
கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த
*வம்ப மாரியைக் காரென மதித்தே.

எ - து. பருவங்கண்டு அழிந்த தலைமகளைத் தோழி பருவமன் றென்று வற்புறீஇயது.

[பருவம் - இங்கே கார்காலம். வற்புறீஇயது - வற்புறுத்தியது.]

† கோவத்தன்.

(ப - ரை.) கல் பிறங்கு அத்தம் சென்றோர் - கற்கள் விளங்கும் பாலை நிலத்து அருவழியைக் கடந்து சென்ற தலைவர், கூறிய - மீண்டு வருவேனென்று சுட்டிக் கூறிய, பருவம் - கார்ப்பருவம், வாரா அளவை-வாராத காலத்திலே, வம்ப மாரியை-பருவமல்லாத காலத்துப் பெய்யும் மழையை, கார் என - கார்காலதது மழையென்று, மதித்து-கருதி, நெரிதர - நெருங்கும்படி, கொம்புசேர் கொடி இணர் ஊழ்த்த - சிறு கொம்புகளிற் சேர்ந்த ஒழுங்காகிய பூங்கொத்துக்களைப் புறப்பட விட்டன; ஆதலின், தடவு நிலை கொன்றை - பரந்த அடியையுடைய கொன்றைமரங்கள், மன்ற - நிச்சயமாக, மடவ - பேதைமையை யுடையன.

(முடிபு.) பருவம் வாரா அளவை வம்பமாரியைக் காரென மதித்து இணர் ஊழ்த்த; அதனாற் கொன்றை மடவ.

(கருத்து.) இது கார்ப்பருவம் அன்று; ஆதலின் நீ வருந்தற்க.

(வி - ரை.) தலைவி, "கார்ப்பருவம் வந்து விட்டது; மழை பெய்கின்றது; கொன்றையும் பூத்தன; இன்னும் அவர் வந்திலர்"

---

(பி - ம்.) * வம்பு. † கோவதத்தன்.

என்றுகூறி இரங்கினளாதலின், 'இது கார்காலமன்று' என்று வற்புறுத்துந் தோழி தலைவிகூற்றை மறுப்பாளாய், "இம்மழை வம்ப மாரி; இதைக்கண்டு அறியாமையால் கொன்றைகள் பூத்தன" என்றாள். இங்ஙனம் பருவத்தைத் தெரிவிக்கும் பொருள்களின் மேல் அறியாமையை ஏற்றிக் கூறும் மரபு, "பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத், தரும்பே முன்னு மிகச்சிவந் தனவே", "மடவ வாழி மஞ்ஞை" (குறுந். கஅச : 1-2, உருக : 1) என்று பின்னும் வந்துள்ள செய்யுட்பகுதிகளால் உணரப்படும். கல் - மலையுமாம். கொன்றையின் மலர்கள் நீண்ட கொத்தாக இருத்தலின், 'கொடியிணர்' என்றாள். கொன்றை கார்காலத்தில் மலர்வது.

மதித்தே : ஏகாரம், அசைநிலை.

## மேற்கோளாட்சி

5. வம்பு என்னும் உரிச்சொல் நிலையின்மைப் பொருள் குறித்து வந்தது (தொல். உரி. 31, சே, தெய்வச், 29, ந; இ. வி. 290.)

மு. தலைவிக்குத் தோழி பருவம் அன்றென்றது (தொல். அகத். 42, இளம்.); பருவமன்றென்று வற்புறுத்தலின் இச்செய்யுள் இருத்தல் நிமித்தமானது (ஷை. ஷை. 14, ந.); பருவமன்றெனத் தோழி படைத்து மொழிந்தது (ஷை. கற்பு. 9, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. நடவுநிலை : குறுந். உகக : 6.

2. கலிபிறங்குத்தும் : அகநா. எக : 16; சிலப். கரு : 57; மணி. கரு : 39.

1-4. கொன்றையின் கொடியிணர் : "புழற்காய்க் கொன்றைக் கோடணி கொடியிணர்" (நற். உகரு : 4); "கொன்றை கொடியிண ரூழ்ப்ப" (பரி. அ : 24.)

5. வம்பமாரி : "வம்பப் பெரும்பெயல்" (புறநா. ருஉ௲ : 2); "வம்பார் குன்றம்" (தே. திருஞா. திருக்குற்றாலம்.)

1-5. கொன்றை கார்காலத்தில் மலர்தல் : குறுந். உக : 3-4, ஒப்பு.

மு. "நீரற வறந்த நிரம்பா நீளிடைத்
துகில்விரித் தன்ன வெயிலவி ருருப்பின்
அஞ்சுவரப் பனிக்கும் வெஞ்சுர மிறந்தோ
ராம்வரத் தெளித்த பருவங் காண்வர

இதுவோ வென்றிசின் மடந்தை மதியின்று
மறந்துகடன் முகந்த கமஞ்சூன் மாமழை
பொறுத்தல் செல்லா திறுத்த வண்பெயல்
காரென் றயர்ந்த வுள்ளமொடு தேர்வில
பிடவுங் கொன்றையுங் கோடலும்
மடவ வாகலின் மலர்ந்தன பலவே" (நற். கக.) (கூகூ)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவை ஆற்றாத தலைவி தோழியை நோக்கி, "பிரிந்து சென்ற தலைவர் நம்மை நினையாரோ? நினைப்பின் வந்திருப் பாரன்றோ" என்று கூறியது.]

கூஎ. உள்ளார் கொல்லோ தோழி கிள்ளை
வளைவாய்க் கொண்ட வேப்ப வொண்பழம்
புதுநா ணுழைப்பா னுதிமாண் வள்ளுகிர்ப்
பொலங்கல வொருகா சேய்க்கும்
நிலங்கரி கள்ளியங் காடிறந் தோரே.

எ - து. பிரிவிடை யாற்றாது தலைமகள் தோழிக்கு உரைத்தது.

அள்ளூர் நன்முல்லை.

(ப - ரை.) தோழி—, கிள்ளை - கிளி, வளை வாய் கொண்ட - வளைந்த அலகினிடத்திலே கொண்ட, வேப்ப ஒள் பழம் - வேம்பினது ஒள்ளிய பழமானது, புது நாண் நுழைப்பான் - புதியபொற் கம்பியை ஊடுசெலுத்தும் பொற்கொல்லனது, நுதி மாண் வள் உகிர் - முனை மாட்சிமைப்பட்ட கூரிய கைந்நகத்திற் கொண்ட, பொலம் கலம் ஒரு காசு ஏய்க்கும் - பொன்னுபரணத்திற்குரிய ஒரு காசை ஒக்கும், நிலம் கரி - நிலம் கரிந்துள்ள, கள்ளியங்காடு - கள்ளியையுடைய பாலை நிலத்தை, இறந்தோர் - கடந்து சென்ற தலைவர், உள்ளார் கொல் - என்னை நினையாரோ?

(முடிபு.) தோழி, காடிறந்தோர் உள்ளார்கொல்?

(கருத்து.) தலைவர் என்னை மறந்தனர் போலும்!

(வி - ரை.) கிளியின் அலகுக்குக் கைவிரல் நகங்களும், வேப்பம் பழத்திற்கு உருண்டையான பொற்காசும் உவமைகள். காசைப் பற்றுதற்குரிய தகுதியுடையதைப் புலப்படுத்தி, 'நுதிமாண் வள்ளுகிர்' என்றாள். ஒருவகைப் பொற்காசு உருண்டை வடிவமாகவும் இருந்ததென்பது,

"காசி னன்ன போதீன் கொன்றை"

"...... புன்கா லுகாஅய்க்
காசினை யன்ன நளிகனி" (குறுந். கசஅ: 3, உஎச : 1-2),

"பொன்செய் காசி ளுண்பழந் தாஅம்
குமிழ்" (நற். உஎச : 4-5)

என்பவற்றாலும் அறியப்படும். பொன்னென்பது செய்யுளிற் பொல மென்றாயிற்று. பொலங்கல மென்றது இங்கே காசுமாலையை. வெம்மையால் நிலங் கரிந்தது.

வேம்பும் கள்ளியும் பாலைநிலக் கருப்பொருள்கள்.

கள்ளியங்காடு : அம், சாரியை. ஒகாரமும் ஏகாரமும் அசைநிலை.

உள்ளார் கொல்லென்றது நினைத்தால் வந்திருப்பரென்னும் நினைவிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. உள்ளார் கொல்லோ தோழி : குறுந். கசு : 1, ஒப்பு.

1-2. கிளியின் வளைந்த வாய் : "வளைவாய்ச் சிறுகிளி" (குறுந். கசக : 1) ; "வளைவாய்க் கிள்ளை" (பெரும்பாண். 300.)

3-4. காசை நாணிற் கோத்தல் : 'நாண்வழிக் காசு போலவும்' (இறை. 2, உரை.)

1-5. கள்ளியங் காடிறந்தோர் உள்ளார் கோல் : குறுந். கசு : 1-6. (கூஎ)

---

## தலைவி கூற்று

[தலைவன்பிரிவினால் வருந்திய தலைவி முன்பனிப்பருவத்தும் அவன் வாராமையால் துன்புற்று, "இப்பனியின் துன்பத்தைத் தீர்ப்பது தலைவருடைய மார்பே யாகும்; ஆதலின் அவர் வாராவிடின் இதனை ஆற்றுதல் அரிது" என்றது.]

௬௮. பூழ்க்கா லன்ன செங்கா லுழுந்தின்
ஊழ்ப்படு முதுகா யுழையினங் கவரும்
அரும்பனி யச்சிரந் தீர்க்கும்
மருந்துபிறி தில்லையவர் மணந்த மார்பே.

எ - து. பிரிவிடைக் கிழத்தி மெலிந்து கூறியது.

அள்ளூர் நன்முல்லை.

(ப - ரை.) *பூழ் கால் அன்ன* - குறும்பூழ்ப்பறவையின் காலைப் போன்ற, *செ கால் உழுந்தின்* - செவ்விய காலையுடைய உழுந்தினது, *ஊழ்ப்படு முதுகாய்* - மிக முதிர்ந்த காய்களை, *உழை இனம் கவரும்* - மான்கூட்டங்கள் தின்னும்பொருட்டுக் கொள்ளும், *அரு பனி* - பொறுத்தற்கரிய பனியையுடைய, *அச்சிரம் தீர்க்கும்* - முன்பனிக் காலத்தால் உண்டாகும் துன்பத்தைப் போக்கும், *மருந்து* - பரிகாரம், *அவர் மணந்த மார்பே* - என்னை மணந்த அவருடைய மார்பேயாகும்; *பிறிது இல்லை* - வேறு இல்லை.

(முடிபு.) *அச்சிரந் தீர்க்கும் மருந்து அவர் மணந்த மார்பே; பிறிதில்லை.*

(கருத்து.) *அவர் உடன் இராமையால் இம்முன்பனிப் பருவம் எனக்குத் துன்பம் தருவதாயிற்று.*

(வி - ரை.) *உழுந்தின் வேர் சிறிது மேலே தெரிந்த அடிக்குப் பூழ்க்கால் உவமை. அச்சிரம் - முன்பனிக்காலம்* (பரி. ௧௮. 38; சிலப். ௧௪ : 105); *இஃது அற்சிரமெனவும் வழங்கும். உழுந்து பயறு முதலியன முன்பனிப் பருவததில் முதிர்வன; "இரும்பனிப் பருவத்த மயிர்க்கா யுழுந்து"* (நற். ௮௯ : 5); *"பற்றுவிடு விரலிற் பயறுகா யூழ்ப்ப, அற்சிர நின்றன்றாற் பொழுதே"* (அகநா. ௩௩௯ : 4-5.) *அச்சிரம் : ஆகுபெயர். மருந்து - பரிகாரம்; "மருந்தில் கூற்றம்"* (புறநா. ௩ : 12) *என்பதன் உரையைப் பார்க்க. அவர் - தலைவர்; நெஞ்சறி சுட்டு. அம்மார்பு மருந்தாதலை முன்னர் அறிந்தேனென்பாள் 'மணந்த மார்பு' என்றாள். மார்பே : ஏகாரம் பிரிநிலை.*

## ஒப்புமைப் பகுதி

3. **அரும்பனி யச்சிரம் :** (குறுந். ௭௬ : 6, ௮௨ : 6) ; "*கடும்பனி யற்சிரம்*" (நற். ௮௬ : 4) ; "*அரும்பனி யளைஇய வற்சிரக் காலை*" (ஐங். ௨௭௦ : 2.)

தலைவரைப் பிரிந்திருப்போர் அச்சிரத்தால் துன்புறல்: (குறுந். எசு : 6); "காதலர்ப் பிரிந்தோர் கையற நலியும், தண்பனி வடந்தை யச்சிரம்" (ஐங். உஉஅ : 3-4); "வாடை தூக்கும் வருபனி யற்சிரம், நம்மில் புலம்பிற் றம்மூர்த் தமியர், என்னு குவர்கொ லளியர்", "தண்பனி யற்சிரந் தமியோர்க் கரிதென", "அற்சிரத் தூதை தூற்றப், பனியலைக் கலங்கிய நெஞ்சமொடு, வருந்துவ மல்லமோ பிரிந்திசினோர் திறத்தே", "அகன்றுறை மகளி ரணிதுறந்து நடுங்க, அற்சிரம் வந்தன்று" (அகநா. எஅ : 10-12, களஅ : 19, கஅஉ : 13-5, உகள : 12-3.)

4. மருந்து பிறிதில்லை : நற். அ0 : 9, கசo : 11, உசள : 9; கலி. சு0 : 21; அகநா. கசஎ : 14.

தலைவன்மார்பு தலைவிக்கு இன்பம் பயத்தல்: (குறுந். எஉ : 1, அ0 : 7, உசள : 6-7, உசஅ : 1-2, உஉக : 3-5); "மகிழ்நன் மார்பிற் றுஞ்சி", "மார்புறப் படுத்தல்" (நற். உ0 : 2, கஎக : 11); "கழனி யூரன் மார்பு, பழன மாகற்க", "ஊரன் மார்பே, பனித்துயில் செய்யு மின்சா யற்றே" (ஐங். ச : 5-6, கச : 3-4.) (சுஅ)

## தோழி கூற்று

[இரவுக்குறியை விரும்பிய தலைவனை நோக்கி, "நீ இரவில் வருவையாயின் நினக்குத் தீங்குண்டாகுமோ வென்றெண்ணி யாம் வருந்துவோம்; ஆதலின் நீ வாரற்க" என்று தோழி மறுத்துக் கூறியது.]

சுக. கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்குஞ்
சார னாட நடுநாள்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே.

எ-து. தோழி, இரவுக்குறி மறுத்தது.

* கடுந்தோட் கரவீரன்.

(ப - ரை.) கரு கண் தா கலை - கரிய கண்ணையும் தாவுதலையும் உடைய ஆண்குரங்கு, பெரும்பிறிது உற்றென - இறந்துபாட்டை

* இதனைக் 'கடுந்தோட்காவீரன்' என்று படித்தற்கும் இடமுண்டு.

அடைந்ததாக், கைம்மை உய்யா - கைம்மைத்துன்பத்தைப் போக்க மாட்டாத, காமர் மந்தி - விருப்பத்தையுடைய பெண்குரங்கானது, கல்லா வன்பறழ் - மரமேறுதல் முதலிய தம் தொழிலைக் கல்லாத வலிய குட்டியை, கிளைமுதல் - சுற்றத்தினிடத்து, சேர்த்தி - கையடையாக ஒப்பித்து, ஓங்குவரை அடுக்கத்து - ஓங்கிய மலைப் பக்கத்தில், பாய்ந்து உயிர் செகுக்கும் - தாவி உயிரை மாய்த்துக் கொள்ளும், சாரல் நாட - சாரலையுடைய நாட்டுக்குத் தலைவனே, நடுநாள் - நள்ளிரவில், வாரல் - வாரற்க; யாம் வருந்துதும் - அங்ஙனம் நீவரின் நினக்குத் தீங்குண்டாமென்றெண்ணி நாம் வருந்துவோம்; வாழி - நீ தீங்கின்றி வாழ்வாயாக!

(முடிபு.) நாட, நடுநாள் வாரல்; யாம் வருந்துதும்; வாழி!

(கருத்து.) நீ இரவில் வருதலை யொழி.

(வி - ரை.) தா - தாவுதல் (தொல். உரி. 46, ந.); வலியுமாம்; 'தாப்புலி - வலிய புலி' (பு. வெ. 31, உரை.) பெரும் பிறிது - இறந்துபாடு (புறநா. ௬௨ : 2, உரை.) கைம்மை யுய்யா - கைம்மைத் துன்பத்தைப் போக்க முடியாத; 'உறைமலி யுய்யா நோய் - மருந்தாற் போக்கமுடியாத நோய்' (சிலப். ௭ : 8, அரும்பத.); கைம்மை விரதத்தை நெடுகச் செலுத்தமாட்டாத வெனவுமாம். கல்லா - தன் தொழிலைக் கல்லாத (மலைபடு. 312, ந.) பறழ் மரமேறுதல் முதலிய வற்றைக் கற்கவில்லை யென்னும் குறையையும் ஓராமல் மந்தி உயிர் நீத்தமை அதன் தலைக்கற்பை உணர்த்துகின்றது; தம் குட்டிகளுக்காக உயிர்வைத்து வாழும் பெண் விலங்குகளும் உண்டு;

"அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கும்
ஆளி லத்த மாகிய காடே" (புறநா. ௨௩ : 18-22)

எனபதைக் காண்க.

பாய்ந்த மாத்திரத்தில் உயிர் போதற்குரிய உயரத்தையுடைய தென்பாள் 'ஓங்குவரை யடுக்கம்' என்றாள். நடுநாள் - நள்ளிரவு; "வியலிரு ணடுநாள்" (அகநா. ௨௧௮ : 6.) தலைவனுக்கு ஏதம் வாராமல் இருத்தலை விரும்புவாளாதலின் 'வாழியோ' என்றாள்.

வாழியோ: ஓகாரம், அசைநிலை. யாமே: ஏகாரம், அசைநிலை.

கலை இறந்ததாக மந்தியும் உயிர்செருக்கும் நாட என்றது, பெண் விலங்கினங்களும் தம் துணைக்குத் துன்பம் நேர்ந்தகாலத்தில் உயிர்தரியாமையை நின்னுட்டில் அறிந்தனையாதலின், நினக்கு ஏதம் வருமேல் இவள் உயிர் வாழ்தலின்மையையும் அறிதியென்று உணர்த்தியவாறு.

## மேற்கோளாட்சி

1. தாவென்னும் உரிச்சொல் வருத்தமென்னும் பொருளில் வந்தது (தொல். உரி. 48, இளம், சே, தெய்வச்; இ. வி. 282); தாவுதலென்னும் பொருளில் வந்தது (ஷை. ஷை. 46, ந.); கலையென்னும் பெயர் குரங்கின் ஆணிற்கும் சிறுபான்மை வந்தது (ஷை. மரபு. 46, பேர்.)

2. குரங்கின்பெண்பால் மந்தியென்று கூறப்பட்டது (தொல். மரபு. 67, பேர்.)

2-3. பறழென்னும் இளமைப்பெயர் குரங்கிற்கு வந்தது (தொல். மரபு. 7, பேர்.)

5-6. அசைநிலை யோகாரம் வந்தது (நன். 422, மயிலை.)

மு. காப்பு வரையிறந்தது (தொல். களவு. 24, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

1. பெரும்பிறிது: குறுந். ௩0உ: 3; நற். உ௧௧: 3; மணி. உ௩: 28.

3. கல்லா வன்பறழ்: "கருவிரன் மந்திக் கல்லா வன்பறழ்", "கருவிரன் மந்திக் கல்லா வன்பார்ப்பு" (ஐங். உஎஉ: 1, உ௮0: 1.)

5. நடுநாள்: அகநா. எஉ: 2, ௧௬உ: 6, உ௩௮: 3, உ௧௨: 9; புறநா. ௧௮௧: 3.

6. வாரல்வாழியோ: "வாரல் வாழியரைய" (அகநா. ௧உ: 5.)

5-6. "நடுநாள் வருதி நோகோ யானே" (நற். உ௫எ: 10.)

(௬௯)

---

## தலைவன் கூற்று

[தலைவியோடு இன்புற்று நீங்கும் தலைவன், "இவள் ஐம்புலனுக்கும் இன்பத்தைத் தருபவளாயினுள்; இவளைப் புகழுமாறறியேன்" என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறி மகிழ்ந்தது.]

எ௦. ஓடுங்கீ ரோதி யொண்ணுதற் குறுமகள்
நறுந்தண் ணீர ளாரணங் கினளே
இனைய ளென்றவட் புனையள வறியேன்
சிலமெல் லியவே கிளவி
அணைமெல் லியள்யான் முயங்குங் காலே.

எ - து. புணர்ந்து நீங்குந் தலைமகன், தன்னெஞ்சிற்குச் சொல்லியது.

ஓரம்போகியார்.

(ப - ரை.) நெஞ்சே, ஒடுங்கு ஈர் ஓதி - ஒடுங்கிய நெய்ப்பை யுடைய கூந்தலையும், ஒள் நுதல் - ஒள்ளிய நுதலையும் உடைய, குறுமகள் - தலைவி, நறு தண் நீரள் - மணத்தையும் தண்மையையும் உடைய தன்மையினள்; ஆயினும், அரு அணங்கினள் - பிரிந்தகாலத்துப் பொறுத்தற்கரிய வருத்தத்தைத் தருபவள்; அவள் - அவளை, இனையள் என்று - இத்தகையினளென்று, புனை அளவு அறியேன் - புனைந்துரைக்கும் எல்லையை அறியேன்; கிளவி சில மெல்லிய - அவளுடைய சொற்கள் சின்மையை யுடையன; மென்மையை உடையன; யான் முயங்குங்கால் - யான் அவளை அணையும்பொழுது, அணை மெல்லியள் - பஞ்சணையைப்போன்ற மென்மையை உடையள்.

(முடிபு.) குறுமகள் நறுந்தண்ணீரள்; அணங்கினள்; புனையளவு அறியேன்; கிளவி சில மெல்லிய; அணையுங்கால் அணை மெல்லியள்.

(கருத்து.) இவள் ஐம்புலனுக்கும் இன்பந்தருபவள்.

(வி - ரை.) ஒடுங்கீரோதி யென்றது, ஐவகைக் கூந்தற்பகுப்பில் ஒன்றாகிய சுருளை (பதிற். கச: 15, உரை.) புனையப்புனைய மேலும் புனையத் தோன்றுவதன்றி இவ்வளவே என வரையறுத்து நிறுத்தலாகாமையின், புனையளவறியேனென்றான்.

ஓதி, ஒண்ணுதற் குறுமகளென்றமையின் காட்சியின்பமும், சில மெல்லியவே கிளவி யென்பதனாற் கேள்வியின்பமும், தண்ணீரள் அணை மெல்லிய ளென்றமையால் ஊற்றின்பமும், நறுநீரளென்றமையின் உயிர்ப்பின்பமும், யான் முயங்குங்காலென்பதனாற் குறிப்பாகச் சுவை இன்பமும் ஒருங்கே பெறுதலை உணர்த்தினான்.

ஏகாரங்கள் அசைநிலை.

---

(பி - ம்.) * அணைமெல்லியல்.

## மேற்கோளாட்சி

மு. புணர்ச்சியால் தலைவன் மகிழ்ந்தது (தொல். களவு. 11, இளம்.) ; இடந்தலைப்பாட்டின்கண் தலைவன் புணர்ச்சியின் மகிழ்ந்தது (ஷை. ஷை. ஷை. ந.)

## ஒப்புமைப் பகுதி

2. தலைவியின் மேனி நறுமை : குறுந். கூஉ : 1-4, ஒப்பு.

நறுந்தண்ணீரள் : குறுந். அச : 4-5, கசுஅ : 4 ; ஐங். கூஎ : 4.

4. சில கிளவி : குறுந். கச : 2, ஒப்பு ; அகநா. ௩சரு : 18 ; சீவக. 2027.

5. மெல்லியள் : குறுந். கருஎ : 1.

அணைபோன்ற மென்மை : "அணைமென்றோள்" (கலி. க : 9, ௩0 : 9, சுகூ : 9, கூக : 6, கஉச : 12) ; "அணைமருளின்றுயி லம்பணைத் தடமென்றோள்", "அணையென,...அமைந்தநின் றடமென்றோள்", "அணைத்தோளாய்" (ஷை. கச : 1, நிசு : 19-20, அஎ: 9) ; "அணைபுரை மென்மையமைபடு பணைத்தோள்" (பெருங். உ. 15 : 72) ; "செம்பஞ்சியணையனைய வாடமைத் தோள்" (சீவக. 170.) (எ0)

மு. குறள், 1101.

---

## தலைவன் கூற்று

[பொருளை ஈட்டுதற்பொருட்டுத் தலைவியைப் பிரிய எண்ணிய நெஞ்சை நோக்கி, "இத்தலைவி நம் காமநோய்க்கு மருந்தும், இன்பம் பெறுதற்குச் செல்வமும் ஆதலின் இவளைப் பிரிதல் இயலாது" என்று தலைவன் கூறியது.]

எக. மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கி னம்பகட் டிள்முலைப்
பெருந்தோ ளுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் *நல்குறு மகளே.

எ - து. பொருள்கடைக் கூட்டிய நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.

[கடைக் கூட்டுதல் - துணிதல். செலவு அழுங்கியது - செல்லுதலைத் தவிர்ந்தது.]

---

(பி - ம்.) * நல்குவர் மகளே.

கருவூர் ஓதஞானி.

(ப - ரை.) நெஞ்சே, அரும்பிய சுணங்கின் - தோற்றிய தேமலையுடைய, அம் பகடு இள முலை - அழகிய பெருமையையுடைய இளைய நகிலையும், பெரு தோள் - பெரிய தோளையும், நுணுகிய நுசுப்பின் - நுண்ணிதாகிய இடையையும் உடைய, கல்கெழு கானவர் - கற்கள் பொருந்திய காட்டையுடையவர், நல்குறு மகள் - பெற்ற மகள், மருந்து எனின் மருந்து - காமநோய்க்குப் பரிகாரம் வேண்டுமென்று கருதுங்கால் எனக்குப் பரிகாரமாவாள்; வைப்பு எனின் வைப்பு - போகம் நுகரச் செல்வம் வேண்டுமென்று கருதின் எனக்குச் செல்வமுமாவாள்.

(முடிபு.) மகள், மருந்தெனின் மருந்து; வைப்பெனின் வைப்பு.

(கருத்து.) இவளைப் பிரிந்து பெறும் செல்வம் வேறொன்று இல்லை.

(வி-ரை.) இவளைப் பிரியின் காமநோய்க்கு மருந்தில்லையென்பதும், அம்மருந்தும் யான் இன்பம் பெறும்பொருட்டுத் தேடிச் செல்ல எண்ணிய செல்வமும் இவளேயாதலின் செல்லுதல் தவிர்வேனென்பதும் புலப்படுகின்றன. மருந்து - அமிழ்தமும் ஆம். வைப்பு - சேமநிதி. மருந்தே, வைப்பே: ஏகாரங்கள், அசைநிலை; தேற்றேகாரங்களுமாம்.

பகடு - பெருமை (புறநா. கூஅ: 5, உரை.) தோள்பெருத்தலும் இடை சிறுத்தலும் மகளிர்க்கு அழகு; "தோள்... எனப்பெருகி, நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" (கலி. க0அ: 2-3.) கல் - மலையுமாம். கல்கெழு கானவர் நல்குறு மகளென்பது அனைத்தும் ஒருபெயராய் நின்று முலைமுதலியவற்றோடு இயைந்தது. மகளே: ஏகாரம் அசைநிலை.

தலைவியின் உறுப்புநலங் கூறினான், இத்துணை நலனுடையாளைப் பிரிதல் அரிதென்று நினைந்து.

## மேற்கோளாட்சி

4. கல்லைக்கெழீஇயினவென இரண்டனுருபு விரிந்தது (தொல். குற்றியலுகரப். 75, இளம், 76, ந.)

மு. தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியது (இறை. 51; தமிழ்நெறி. 24); இனிது உறு கிளவிபற்றி ஏனை உவமம் வந்தது (தொல். உவம. 28, பேர்.); நிகழ்காலமென்னும் உறுப்புவந்தது (ஷை. செய்யுள்.

202, பேர், 202, ந : இ. வி. 575); பொருளென்னும் உறுப்பின்றிவந்தது (ஷை. ஷை. 211, பேர், ந); எமக்கென்னும் சொல் பின்னும் முன்னும் எஞ்சிநின்றது (ஷை. எச்ச. 45, சே, ந ; இ. வி. 351); இயற்சீரான் வந்த ஆசிரியப்பா (யா. வி. 15.)

## ஒப்புமைப் பகுதி

1. மருந்து : நற். கஅ௪ : 10-11.

2. சுணங்கையுடைய நகில் : சிறுபாண். 24-6 ; அகநா. ௬கக : 9 ; புறநா. ௬௬எ : 21-2, ௬௫௨ : 13-4.

அரும்பிய சுணங்கு : அகநா. ௨௫௬ : 22.

3. பெருந்தோள் : "பெருந்தோட் குறுமகள்" (குறுந். க௫ : 3) ; "பெருந்தோண் மடந்தை" (சிலப். ௬ : 6.)

நுணுகிய நுசுப்பு : "நுழைசிறு நுசுப்பு" (குறுந். க௫க : 2.)

பெருந்தோளும் நுணுகிய நுசுப்பும் : "பெருந்தோ ணுணுகிய நுசுப்பிற், றிருந்திழை யரிவை" (அகநா. ௬எ௪ : 17-8) ; "பெருந் தோட் சிறுமருங்குற் பேரமர்க்கட் பேதை" (நன். 402, மயிலை. மேற்.)

(எக)

---

## தலைவன் கூற்று

[தலைவியோடு அளவளாவி வந்த தலைமகன்பாற் காணப்பட்ட வேறுபாடுகளை நோக்கி, "இவை நினக்கு எதனால் வந்தன?" என வினவிய பாங்கனுக்கு, "மலைச்சாரலிலுள்ளதொரு தினைப்புனத்தில் குருவியோட்டுவாளொரு மகளது அழகு கண்டு மயங்கி யான் இக் காம நோயுற்றேன்" என்று கூறியது.]

எ௨. பூவொத் *தலமருந் தகைய வேவொத்
தெல்லாரு மறிய நோய்செய் தனவே
தேமொழித் திரண்ட மென்றோண் மாமலைப்
பரீஇ வித்திய வேனற்
குரீஇ யோப்புவாள் பெருமழைக் கண்ணே.

எ - து. தலைமகன், தன் வேறுபாடு கண்டு வினவிய பாங்கற்கு உரைத்தது.

மள்ளனார்.

---

(பி - ம்.) * அலம் வரும்.

(ப - ரை.) தோழி, தேமொழி - இனிய மொழியினையும், திரண்ட மெல் தோள் - பருத்த மெல்லிய தோளினையும் உடைய, பரீஇ வித்திய ஏனல் - பருத்தியை இடையிலே விதைத்த தினை முதிர்ந்த புனத்தின்கண், குரீஇ ஓப்புவாள் - அத்தினையை உண்ண வரும் குருவியினங்களை ஓட்டுகின்றவளது, பெரு மழை கண் - பெரிய குளிர்ச்சியையுடைய கண்கள், பூ ஒத்து அலமரும் தகைய - பூவினை அழகில் ஒத்துச் சுழலுந் தன்மையை யுடையன; ஏ ஒத்து - ஆயினும் கொடிய தொழிலால் அம்பினை ஒத்து, எல்லாரும் அறிய - நின்னைப் போன்ற யாவரும் என்னுடைய வேறுபாட்டை அறியும்படி, நோய் செய்தன - எனக்குத் துன்பத்தை உண்டாக்கின.

(முடிபு.) குரீஇ ஓப்புவாள் கண் நோய் செய்தன.

(கருத்து.) நான் ஒரு மலைவாணர் மகள்பால் நட்புப்பூ[illegible] நோய் உற்றேன்.

(வி - ரை.) பூ - தாமரைப் பூ; குவளையுமாம். கண்கள் பூவைப் போலக் காண்டற்கு இனிமைதந்து தாம் வெருண்டன போலச் சுழலு மாயினும் என்பால் அம்புபோற் கொடியனவாகி அவ்வம்பாலுண்டாகி யாவரும் அறியும் புண்போன்ற காமநோயைத் தந்தனவென்று பொருளை விரித்துக் கொள்க. அலமருந்தகைய வென்றான், தான் வருந்திசையறியாது சுற்றெங்கும் நோக்கியதை முன்பு அறிந்தமை யின்; 'வடிக்கண் பரப்பியென்றான், இன்ன திசையால் வருமென்றறி யாது சுற்றெங்கும் நோக்குதலின்' (சிற். 34, பேர்.) எல்லாரு மென்றானேனும் கருதியது பாங்கனையென்க; நீ அறிந்தமையின் இங்ஙனமே யாவரும அறிவரெனவும் ஒன்று. நோய் - காமநோய். தேமொழித் திரண்ட மென்றோளென்ற அடைகளும் உடம்படு புணர்ததும்வாயிலாக அவையும் நோய்க்குக் காரணமாயின வென் பதைப் புலப்படுத்தின. முன்னர்க் குருவியோப்புங் குரலினிமையை அறிந்தவனாதலின் தேமொழி யென்றும், பின்னர்ப் பழகித தோள் இயல்பறிந்தவனாதலின் திரண்ட மென்றோளென்றும் அம்முறையே வைததுக் கூறினான். தினை வளர்ந்த இடத்திற் பருத்தியை விதைத்து அத்தினை முதிர்ந்து கொய்யப்பட்ட பின்னர்ப் பருத்தி விளைய அதனைக் கொள்ளுதல் மலைவாணர் வழக்கம். பருத்திக்குரிய பெய ராகிய பருவியென்பது பரீஇயென்றும், குருவியென்பது குரீஇயென் றும் வந்தன. இங்ஙனமே மருவி - மரீஇ, உருவி - உரீஇ என வினைச் சொற்களும் வருதல் காண்க.

'மாமலைப் பரீஇ வித்திய வேனற் குரீஇ யோப்புவாள்' என்பது தலைவியென்னும் துணையாக நின்றது. பெருமழைக் கண்ணென்றான், கண் பெரிதாதல் மகளிர்க்கு இலக்கணமாதலின்; கலி. க௦அ: 2-3, பார்க்க.

## மேற்கோளாட்சி

மூ. 'இக்குறுந் தொகையுள் குரீஇ யோப்புவாள் கண்ணென வழி நிலைக் காட்சியைப் பாங்கற்குக் கூறினமையின் அத் திணைக்குரிய முற்று தற்குரிய இளவேனிலும் பகற்பொழுதும் காட்சிக்கண் வந்தன' (தொல். அகத். 16, ந.)

## ஒப்புமைப் பகுதி

4. தினைப்புனத்தில் பருத்தியை விதைத்தல்: "பருவி வித்திய பைந்தாட் புனம்" (பெருங். க. 50: 16.)

4-5. பருத்தியை விதைத்த புனத்திற் குருவியை ஓட்டுதல்: "பருவி விசசி மலைச்சாரற் பட்டை கொண்டு பகடாடிக், குருவி யோப்பிக் கிளிகடிவார்" (தே. சுந்தர. திருவையாறு.)

ஏனலிற் குருவி யோட்டுதல்: "உளைக்குரற் சிறுதினை கவர்தலிற் கிளையமல், பெருவரை யடுக்கத்துக் குரீஇ யோப்பி" (அகநா. ௩அஅ: 4-5.)

2-5. கண் நோய் செய்தல்: "தேம்பாய வவிழ்நீலத் தலர்வென்ற வமருண்கண்...நிறம்பாய்ந்த, கணையினு நோய்செய்தல் கடப்பன்றோ கனங்குழாய்", "நீலலர் நீல மெனவவர்க் கஞ்ஞான்று, பேரஞர் செய்த வென் கண்" (கலி. ௫௭: 9-15, க௪௩: 50-51); "நிறைமதி வாண் முகத்து நேர்கயற்கண் செய்த, உறைமலி யுய்யா நோய்" (சீலப். எ: 8); "கருநெடுங் கண்டரும் காம நோயே" (பழம்பாடல்); "சேற்றுக்கா னீலஞ் செருவென்ற வேந்தன்வேல், கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி பொருகயல், தோற்றந் தொழில் வடிவு தம்முட் டடுமாற்றம், வேற்றுமை யின்றியே யொத்தன மாவேடர், ஆற்றுக்கா லாட்டியர் கண்" (யா. வி. 62, மேற்.)

1-5. கண்ணணிந்துப் பூ: குறுந். க௦௧: 4; ஐங். கசு: 1; கலி. உஅ: 18, ௩௩: 9, ௩௯: 51, எ௫: 31, க௪உ: 11.

கண் அலமருதல்: "அலமர லுண்கண்ணர்", "அலமர லமருண்க ணணங்கல்லாய்" (கலி. எ௩: 12, கக௩: 2.) (௭௨)

## தோழி கூற்று

[தலைவன் பகலில் வருவதை மறுத்துரைத்து இரவில் வரச் செய்து பின்னர் அதனையும் மறுத்த தோழி, வரைந்து கொள்ளும் பொருட்டு அங்ஙனம் செய்வதன் இன்றியமையாமையைத் தலைவிக்குக் கூறியது.]

எ௩. மகிழ்நன் மார்பே வெய்யை யானீ
அழியல் வாழி தோழி நன்னன்
நறுமா கொன்று * நாட்டிற் போகிய
ஒன்றுமொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் † வேண்டுமாற் சிறிதே.

எ - து. பகற்குறி மறுத்து, இரவுக்குறி நேர்ந்து, அதுவும் மறுத்தமைபடத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

பரணர்.

(ப - ரை.) தோழி—, மகிழ்நன் மார்பே - தலைவனது மார்பையே, நீ வெய்யை - நீ விரும்புதலுடையை; நன்னன் நறு மா கொன்று - நன்னனது காவன்மரமாகிய நறிய மாமரத்தை வெட்டி, நாட்டில் போகிய - அவனது நாட்டினுட்புக்க, ஒன்று மொழி கோசர் போல - வஞ்சினத்தையுடைய கோசரைப் போல, சிறிது - சிறிதளவு, வன்கண் சூழ்ச்சியும் - வன்கண்மையை யுடைய ஆராய்ச்சியும், வேண்டும்—; அழியல் - அதன்பொருட்டு வருந்தற்க.

(முடிபு.) தோழி, நீ மகிழ்நன்மார்பே வெய்யை; சிறிது சூழ்ச்சியும் வேண்டும்; அழியல்.

(கருத்து.) பகற்குறியும் இரவுக்குறியும் மறுத்தால் தலைவன் விரைவில் மணந்து கொள்வான்.

(வி - ரை.) மார்பே: ஏகாரம் பிரிநிலை. "வெய்யமை வேண்டல்" (தொல். உரி. 36) என்பது சூத்திரமாகலின் வெய்யையென்பது விரும்பினையென்னும் பொருள் தந்தது. நன்னன்: கொங்கு நாட்டுக் கருகில், மலைநாட்டிலிருந்தவன் போலும். மா: அவனது காவன்மரம். நறுமை மாம்பழத்திற்கு அடை. பகையரசர்களது

(பி - ம்.) * ஞாட்பிற் போக்கிய. † வேண்டுமால்.

காவன்மரத்தை வெட்டுதல் மரபு; புறநானூறு, உங: 8-9-ஆம் அடிகளையும் அவற்றின் அடிக்குறிப்பையும் பார்க்க. ஒன்றுமொழி - வஞ்சினம் (மதுரைக். 143, ந.); என்றது, இன்னது செய்யேனாயின் இன்னனாவேனென்று சபதஞ் செய்தல்; தொல். புறத். 24, பார்க்க. ஒன்றுமொழி - இரண்டுரையாமல் ஒன்றையே மொழிதல்; இது பற்றியே வஞ்சினத்திற்கு இப்பெயர் வந்ததென்று தோற்றுகின்றது; "இரண்டா காதவன் கூறிய தெனவே" (புறநா. நஅச: 11) என்பதைப் பார்க்க. ஒன்றுமொழி - ஒன்றையே கூறும் வாய்மை யெனினும் ஆம்; கோசரது வாய்மை இந்நூல் கஙு-ஆம் பாட்டாலும் தெளியப் படும். கோசர் - ஒருவகை வீரர். அவர் செய்த சூழ்ச்சி இன்னதென்று தெரியவில்லை. வன்கண் - அருளில்லாக் கொடுமை. சூழ்ச்சி - யோசித்துச் செய்யும் தந்திரம். வன்கட் சூழ்ச்சி யென்றது இரவுக்குறி நேர்ந்து அதனையும் மறுத்தலைப் புலப்படுத்தியபடி. சூழ்ச்சி பெரிதாயின் தலைவன் மனமுடைவானாதலின் சிறிதே வேண்டுமென்றாள்.

ஆல், வாழி, ஏ: அசைநிலைகள்.

"தலைவன் ஒழுகுமாறெல்லாம் நாமும் உடம்பட்டு ஒழுகினோமாயின் களவொழுக்கம் குறைவின்றி நடைபெறுமென்னும் துணிவினால் அவன் இதனையே கடைப்பிடித்து வரைதற்குரிய முயற்சியை மேற்கொள்ளான். பகற்குறியை மறுத்தால், இரவுக்குறி வேண்டுவான்; அதற்கு நேர்ந்து பின்பு அதனையும் மறுப்பேமாயின் அதனால் இடையூறுற்று அவன் இனி இத்தகைய தடைகள் நேராமைக்கு உபாயம் வரைந்து கொள்ளுதலேயென்று அறிந்து அதற்கு ஆவன செய்வான். இரவுக்குறி மறுத்தலால் நம்மிடத்தில் அன்பின்மை உளதுபோலத் தோற்றினும் அதனால் விளையும் இன்பம் பெரிதாதலால் இச் சூழ்ச்சி இப்பொழுது ஓரளவு வேண்டுவதாயிற்று" என்று தோழி கூறினாள்.

## மேற்கோளாட்சி

மு. தோழி வன்புறை (தொல். களவு. 24, இளம். 23, ந.); தலைவியைப் பாங்கி கழறியது (நம்பி. 154.)

## ஒப்புமைப் பகுதி

1. தலைவி தலைவனது மார்பை விரும்புதல்: (குறுந். கஅ: 4, ஒப்பு.); "ஆகவி வெற்பன் மார்புநயந் துறையும், யானே" (நற். க0ச: 7-8);

"நின்மார்பு நயந்த நன்னுத லரிவை", "நின், மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே", "மலர்ந்த மார்பிற் பாயற், றுஞ்சிய வெய்யள்" (ஐங். சசு : 2, ருக : 3-4, உ0ரு : 4-5.)

4. கோசர் : குறுந். கரு : 3, ஒப்பு.

ஒன்றுமொழிக் கோசர் : அகநா. கசுகூ : 10.

2-4. நன்னன், கோசர் : அகநா. கரு : 2-10.

ரு. ஒருவாறு ஒப்பு : அகநா. உஅ. (எங)

---

## தோழி கூற்று

[தலைவன் தோழிபால் குறியிடத் தெதிர்ப்படுதலை விரும்பினானாக, தலைவியிடம், "நம்மால் விரும்பப்படும் தலைவன் நம்மை விரும்பி மெலிகின்றான்" என்று அவள் கூறியது.]

எச. விட்ட குதிரை *விசைப்பி னன்ன
விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்
யாந்தற் படர்ந்தமை யறியான் றானும்
வேனி லானேறு போலச்
சாயின னென்பநம் மாணல நயந்தே.

எ - து. தோழி தலைமகன் குறை மறுதவாற்றாற் கூறியது.

[குறை - குறியிடத்தெதிர்ப்படுதலை வேண்டல். கூறியது - தலைவிக்குக் கூறியது.]

விட்டகுதிரையார்.

(ப - ரை.) விட்ட குதிரை விசைப்பின் அன்ன - அவிழ்த்து விடப்பட்ட குதிரை துள்ளியெழும் எழுச்சியைப் போன்ற, விசும்பு தோய் பசு கழை - வளைத்துப் பின் விட்டமையால் வானத்தைத தோய்ந்த பசிய மூங்கிலையுடைய, குன்றம் நாடன் - குன்றத்தை யுடைய நாட்டுக்குத் தலைவன், யாம் தன் படர்ந்தமை அறியான் - யாம் தன்னை நினைந்து மெலிதலை அறியானாகி, தானும்—, வேனில் ஆன் ஏறு போல - வேனிலின் வெம்மையை ஆற்றாத இடபத்தைப்போல, நம்

(பி - ம்.) *விசையி னன்ன, வியப்பி னன்ன.

மாண் நலம் நயந்து-நமது மாட்சிமைப்பட்ட நலத்தை விரும்பி, சாயி னன் - மெலிந்தான்.

(முடிபு.) நாடன் யாம் தற்படர்ந்தமையை அறியானாகி நம் நலம் நயந்து சாயினன்.

(கருத்து.) தலைவன் கருத்துக்கு உடம்பட வேண்டும்.

(வி - ரை.) விட்டவென்ற உவமையடையைப் பொருளுக்கும் கூட்டி வளைததுவிட்ட கழையென்று கொள்க. யானை மூங்கிலை உண்ணும்பொருட்டு வளைத்தலும் எதற்கேனும் அஞ்சி விடுதலும் குறிஞ்சி நிலத்து நிகழ்ச்சி; இந்நூல், ருச-ஆம் செய்யுளைப் பார்க்க. விட்ட - செலுத்தியவெனலுமாம். விசைத்தல் - துள்ளுதல் (புறநா. ௧௨௦: 14, உரை.) இங்கே உள்ள உவமையையும் பொருளையும் மாறிக் கூறினாரும் உளர்; "வெடிவேய் கொள்வது போல வோடித், தாவு புகளு மாவே" (புறநா. ௩௦௨: 1-2.) யாமென்றதும் நம்மென்றதும் தலைவிக்கும் தனக்குமுள்ள ஒற்றுமைபற்றி.

வேனிலின் வெம்மையால் துன்புற்ற ஆனேறு, காமநோயால் துன்புற்ற தலைவனுக்கு உவமை. சாயினன் - மெலிந்தனன்; சாய் தல் - மெலிதல் (தொல். உரி. 32.) மாணலமென்றது பட்டாங்கு கூறி யது. தானும்: உம்மை, இறந்தது தழீஇயது. என்ப, ஏ: அசை நிலைகள்.

தலைவன் தலைவியை மருவுதற்குரிய செவ்வியை விரும்பினானாக, "நாமும் அவனை விரும்பி நிற்கின்றோம். அவனும் இரந்து நிற்கின்றான். நாம் விரும்புவது, நானே வலிய வந்ததாதலின் மறுது உடம்படல் வேண்டும்" எனறு தோழி தலைவிக்குக் கூறினாள்.

வளைக்குங்கால் வளைந்ததேனும் இயல்பில் விசும்புநோக்கிய உயர்வையுடைய மூங்கிலைப்போல, தலைவன் நம் மாணலம் நயந்து நம் மிடைப் பணிந்து ஒழுகினானெனினும், இயல்பாகத் தலைமையை உடையனென்பது குறிப்பு.

மூங்கில் விசைத்தெழுதலுக்கு விட்ட குதிரையின் விசைப்பை உவமைகூறிய சிறப்பினால் இச்செய்யுளை இயற்றிய நல்லிசைப்புலவர் விட்டகுதிரையார் என்னும் பெயர் பெற்றனர்.

## மேற்கோளாட்சி

மூ. தலைவி பாயகிளை முனிந்தது (நம்பி. 113.)

## ஒப்புமைப் பகுதி

4. தலைவனுக்கு ஆனேறு உவமை: "ஆகாண் விடையி னணிபெற வந்து", "துணைபுண ரேற்றி னெம்மொடு வந்து" (குறிஞ்சிப். 136, 235); 'ஏறு நாகுடனே தம்மிற் கூடி நின்றன; அவைபோல நாமுங் கூடிச் சேரப்போதற்குக் கூட்டத்திற்கு உடம்படுவோயாக வென்றான்' (கலி. கக௩: 28-9, ந.)

5. துறைவேண்டிய தலைவன் மேலிதல்: குறுந். உகஅ: 3-4.

மாணலம்: குறுந். உ௫அ: 8, உகக: 7, ௩எஎ: 1; தொல். கற்பு. 9.

4-5. வேனிலால் விலங்குகள் வாடுதல்: கலி. எ: 1; அகநா. உக: 15-19. (எச)

---

## தலைவி கூற்று

[தலைவனது வரவைப் பாணனால் அறிந்த தலைவி, "நீ பாடலி புத்திர நகரைப் பெறுவாயாக!" என்று வாழ்த்தியது.]

எ௫. நீகண் டனையோ கண்டார்க்கேட் டனையோ
ஒன்று தெளிய நசையினெ மொழிமோ
வெண்கோட் டியானை சோணை படியும்
பொன்மலி * பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே.

எ - து. தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலைமகள் கூறியது.

படுமரத்து மோசிகீரனார்.

(ப - ரை.) பாண, காதலர் வரவு - தலைவரது வரவை, நீ கண்டனையோ - நீயே நின்கண்ணாற் கண்டாயோ? கண்டார் கேட்டனையோ - அன்றித் தலைவனைக் கண்டாரைக் கேட்டறிந்தாயோ? யார்வாய் கேட்டனை - அங்ஙனம் பிறர்பால் கேட்டனையாயின், யார் வாயிலாகக் கேட்டாய்? ஒன்று தெளிய நசையினம் - உண்மையாகிய ஒன்றை அறிய விரும்பினேம்; ஆதலின், மொழிமோ - சொல்வாயாக; சொன்

---

(பி - ம்.) * பாடிலி.

னால், வெண் கோடு யானை - வெள்ளிய கொம்பையுடைய யானைகள், சோணை படியும் - சோணையாற்றில் துளைந்து விளையாடும், பொன்மலி பாடலி - பொன் மிக்க பாடலிபுத்திர நகரத்தை, பெறீஇயர் - பெறுவாயாக!

(முடிபு.) காதலர் வரவை நீ கண்டனையோ? கேட்டனையோ? யார்வாய்க் கேட்டனை? நசையினம்; மொழிமோ; பாடலி பெறீஇயர்!

(கருத்து.) தலைவர் வரவை உரைத்த நினக்குச் செல்வம் பெருகுவதாகுக!

(வி - ரை.) தலைவனுடைய வரவைப் பலகால் எதிர்பார்த்தும் வாராமையால் சலிப்புற்றனளாதலின் பாணன் மொழியை ஐயுற்று, நீ கண்டனையோ வென்றும் கேட்டனையோ வென்றும் யார் வாய்க் கேட்டனை யென்றும் வினவினள். இங்ஙனம் அடுத்துப் பல முறை கேட்டது தலைவன் வரவினிடத்து அவளுக்குள்ள ஆதரவைப் புலப்படுத்தியது.

தான் ஆற்றியிருத்தற்பொருட்டுப் பலகாலும், வருவர் வருவரெனத் தோழி முதலியோர் கூறியதைக் கேட்டுக்கேட்டு அவர்கள் மொழிகளில் உறுதிபெறாதவளாதலின் அவர் கூறினரோவென்னும் ஐயுறவினால் 'யார்வாய்க் கேட்டனை?' என்றாள். ஓகாரங்கள் வினா.

தலைவன் பரத்தையிற் பிரிந்திருக்கும் காலத்தில் பாணனைத் தலைவி தூது விடுதலும் (ஐங். 478-9), அங்ஙனமே தலைவன் அவனைத் தூதுவிடுதலும் (ஐங். 477) மரபு. அங்ஙனம் தூதுசென்ற பாணன் தலைவன் வரவை உணர்த்தினனாகத் தலைவி மகிழ்ந்து அவனை வாழ்த்தியது இது.

மொழிமோ: மோ, முன்னிலையசை.

சோணை - ஒரு நதி (சிலப். ㄲ: 99-100, அடியார்.) இதன் வட கரையிலுள்ளது பாடலிபுத்திரமென்னும் நகரம்; பழைய காலத்தில் மகதநாட்டின் தலைநகரமாக இருந்தது. இது பாடலியென வழங்குதலும் பொன்னாற் சிறப்புடையதென்பதும்,

"பல்புகழ் நிறைந்த வெல்போர் நந்தர்
சீர்மிகு பாடலிக் குழீஇக் கங்கை
நீர்முதற் கரந்த நிதியங் கொல்லோ" (அகநா. உகடு: 1-6)

"பாடலிப் பிறந்த பசும்பொன் வினைஞரும்" (பெருங். க.58 : 42) என்பவற்றால் அறியப்படும்.

'பாடலிபெறீஇயர்' என்று கூறினேனும் அவள் கருதியது செல்வம்பெற்று வாழ்வாயாக என்பதாகக் கொள்க.

வரவே : ஏகாரம், அசைநிலை.

## மேற்கோளாட்சி

3. செய்யுளில் இனச்சுட்டில்லாப் பண்புகொள்பெயர் வந்தது (தொல். கிளவி. 18, இளம், கல்.)

மு. தலைவன் வருகின்றானென்ற உழையர்க்குத் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, இளம்.) ; தலைவன் வரவைத் தலைவி விரும்பிக்கூறியது (ஷை. ஷை. ஷை, ந.)

## ஒப்புமைப் பகுதி

4. பெறீஇயர் : குறுந். அஅ : 2, உஎஎ : 5.

3-4. தலைவன் வரவைக் கூறியவரைத் தலைவி வாழ்த்தல்: குறுந். உ0க. (எரு)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவைத் தலைவியிடம் உணர்த்தச் சென்ற தோழியை நோக்கி, "நான் அச்சிரக் காலத்தில் துன்புறும்படி தலைவர் பிரிவாரென்று முன்பே அறிந்தேன்; நீ சொல்வது மிகை" என்று கூறித் தலைவி புலந்தது.]

**எசு. காந்தள் வேலி யோங்குமலை நன்னாட்டுச்**
*** செல்ப வென்பவோ கல்வரை மார்பர்**
**சிலம்பிற் சேம்பி னலங்கல் வள்ளிலை**
**பெருங்களிற்றுச் செவியின் மானத் † தைஇத்**
**தண்வரல் வாடை தூக்கும்**
**கடும்பனி ‡ யச்சிர நடுங்கஞ ருறவே.**

எ - து. பிரிவுணர்த்தச் சென்ற தோழிக்கு அவர் பிரிவு முன்னர் உணர்ந்த தலைமகள் சொல்லியது.

கிள்ளிமங்கலங்கிழார்.

---

(பி - ம்.) * செல்வ னென்ப வோங்கல்வரை மார்பன், செல்வ வென்பவே. † தைஇய. ‡ யற்சிரம்.

(ப - ரை.) தோழி, சிலம்பில் சேம்பின் அலங்கல் வள் இலை மலைப்பக்கத்திலுள்ள சேம்பினது அசைதலையுடைய வளவிய இலையை, பெரு களிறு செவியின் மான - பெரிய களிற்றினது செவியை ஒப்பத் தோன்றும்படி, தைஇ - தடவி, தண்வரல் வாடை - தண்ணிய வரவையுடைய வாடைக்காற்று, தூக்கும் - அசைத்தற்குரிய, கடு பனி அச்சிரம் - மிக்க பனியையுடைய அச்சிரக் காலத்தில், நடுங்கு அஞர் உற - நடுங்குதற்குக் காரணமாகிய துன்பத்தை நான் அடையும்படி, கல் வரை மார்பர் - கற்களையுடைய மலையைப் போன்ற மார்பையுடைய தலைவர், காந்தள் வேலி ஓங்கு மலை நல்நாட்டு - காந்தளை வேலியாகவுடைய உயர்ந்த மலை பொருந்திய நல்ல நாட்டிடத்து, செல்ப என்ப - என்னைப் பிரிந்து போவாரென்று கூறுகின்றனர்.

(முடிபு.) அச்சிரக் காலத்தில் அஞருறக் கல்வரை மார்பர் செல்ப வென்ப.

(கருத்து.) தலைவர் பிரிவை முன்னரே உணர்ந்தேன்; அவர் பிரியின் நான் துன்புறுவேன்.

(வி - ரை.) இயல்பாக வளர்ந்த காந்தளை வேலியாக உடைய மலைநாடு. என்ப வென்றமையால் தான் முன்னரே அறிந்தமையை விளக்கினள். சிலம்பிற் சேம்பு: மலைச்சேம்பென்று ஒருவகைச் சேம்பு உண்டு. தூக்கும் - அசைக்கும் (கலி. அச: 1, உரை.) கடும் பனி - புதுப்பனியுமாம். அச்சிரம் - முன்பனி.

'தலைவர் செல்வதைத் தடுப்பது நின் கடமையாக இருப்ப, அதைச் செய்யாமல் அயலாரைப்போல அவர் பிரிவை உணர்த்த வந்தது தகுதியன்று' என்பது தலைவியின் கருத்து; 'அழுங்குவித்தது வந்து கூறற்பாலையாய நீயும் இவ்வினைகள் செய்தனவே செய்தா யெனப் புலந்து கூறியவாறு' (குறள், 1157, பரிமேல்.) என்பது இக்கருத்தை வலியுறுத்தும்.

என்பவோ: ஓகாரம் இரக்கக் குறிப்பு; அசைநிலையுமாம். செவி யின்மான: உவம வுருபு ஐந்தனுருபோடு வந்தது (குறுந். கூ: 6.) உறவே: ஏ, அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. காந்தள் வேலி மலைநாடு: "கைம்மலர்க் காந்தள் வேலிக் கண மலை" (சீவக. 208.)

3. சிலம்பிற் சேம்பு ; அகநா. கஎஅ : 4.

3-4. பெரிய இலைக்குக் களிற்றுச்செவியை உவமை கூறுதல் மரபு : குறுந். உசசு : 2.

5. தண்வரல் வாடை : குறுந். ௬டு : 5, ஒப்பு.

6. கடும்பனி யச்சிரம் : குறுந். சுஅ : 3, ஒப்பு, அஉ : 6 ; நற். அசு : 4 ; சிலப். கச : 102-5.

5-6. வாடையும் பனியும் : "தண்பனி வடந்தை யச்சிரம்" (ஐங். உஉ௬ : 4) ; "பனிகடி கொண்ட பண்பில் வாடை", "வடந்தை தூக்கும் வருபனி யற்சிரம்" (அகநா. உ௬டு : 15, ௬எஅ : 13.)

2-6. தலைவன் பிரிவினால் அச்சிரக் காலத்தில் தலைவி துன்புறல் : குறுந். சுஅ : 3, ஒப்பு. (எசு)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவை ஆற்றுளாகிய தலைவி தோழியை நோக்கி, "வழிப்போவார் இறத்தற்குக் காரணமாகிய வெம்மையையுடைய பாலைநிலத்தின் ஏதத்தை நினைந்து என்தோள்கள் தலைவர்திறத்து மெலிந்தன" என்று கூறியது.]

எஎ. அம்ம வாழி தோழி யாவதும்
தவறெனிற் றவறோ விலவே வெஞ்சுரத்
துலந்த வம்பல ருவலிடு பதுக்கை
நெடுநல் யானைக் * கிடுநிழ லாகும்
அரிய கானஞ் சென்றோர்க்
கெளிய வாகிய தடமென் றோளே.

எ - து. பிரிவின்கண் ஆற்றுளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

மதுரை மருதன் இளநாகனார்.

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று சொல்வேன் ; கேட்பாயாக : வெ சுரத்து - வெவ்விய அருவழியில், உலந்த வம்பலர் - இறந்த

(பி - ம்.) * கிடுநீராகும்.

வழிப்போக்கர்களுடைய உடலைமறைத்த, உவல் இடு பதுக்கை - தழையைச் செயற்கையாக இட்ட குவியலானது, நெடு நல் யானைக்கு - உயர்ந்த நல்ல யானைக்கு, இடு நிழல் ஆகும் - இட்டநிழலைத் தருதற்குரிய பொருளாகப் பயன்படும், அரிய கானம் - கடத்தற்கரிய பாலை நிலத்தில், சென்றோர்க்கு - என்னைப் பிரிந்து சென்ற தலைவர்திறத்து, எளிய ஆகிய - மெலிந்தனவாகிய, தட மென் தோள் - பரந்த மெல்லிய என்தோள்கள், தவறு எனின் - தவறுடையனவென்று கூறின், யாவதும் - சிறிதும், தவறு இல - தவறு இல்லாதன.

(முடிபு.) தோழி, கானம் சென்றோர்க்கு எளியவாகிய தோள்கள் தவறு இல.

(கருத்து.) தலைவர் சென்ற பாலையினது ஏதத்தைக் கருதி என் தோள்கள் மெலிந்தன.

(வி - ரை.) வாழி : அசைநிலை. தவறே : ஏகாரம், அசைநிலை. பாலை நிலத்திற் செல்வாரை அந் நிலத்துள்ள ஆறலைகள்வர் கொன்று அவருடலைத் தழைக்குவியலால் மூடிவிடுதல் வழக்கம் ; கற்குவியலால் மூடுதலும் உண்டு (புறநா. ௩ : 20-21, உரை.) வம்பலர் - வழிப்போவார் (புறநா. உ௩0 : 2, உரை.) உவல் - தழை ; 'உவல் இட்ட - தழையாலே வேயப்பட்ட' (புறநா. உகூஉ : 2, உரை) ; உவல் உவலையெனவும் வழங்கும் (முல்லை. 29 ; பு. வெ. 169.) பதுக்கை - குவியல் ; பதுங்கியிருத்தற்கு உரியதாகலின் இப்பெயர் பெற்றது போலும் ; இது பதுக்கெனவும் வழங்கும் ; "உயர்பதுக் கிவர்ந்த ததர்கொடி யதிரல்" (அகநா. உ௮௯ : 2.) பதுக்கை நெடுநல் யானைக்கு இடுநிழலாகு மென்றது அதன் உயரத்தையும் வேறு நிழலின்மையையும் புலப்படுத்தியவாறு. அரிய கானம் - இயல்பாகவுள்ள வெம்மையினாலும் ஆறலைகள்வரால் உண்டாகும் ஏதத்தினாலும் செல்லுதற்கரிய பாலைநிலம்.

ஏகாரங்கள், அசைநிலைகள்.

'நான் ஆற்றியிருப்பவும் அவர் மணந்த தோள் அதனொடர்பினால் அவர் சென்ற வழியிலுள்ள ஏதத்தை நினைந்து மெலிந்தன ; தம்மோடு * தொடர்புடையாரது துன்பத்துக்கு மெலிதல் தகுமன்றே!' என்று தலைவி கூறினளாயிற்று.

---

* அகநா. ௬உ : 18.

" வண்ணம் பசந்து புலம்புறு காலை
உணர்ந்த போல வுறுப்பினைக் கிழவி
புணர்ந்த வகையாற் புணர்க்கவும் பெறுமே"

(தொல். பொருளியல், 8)

என்னும் விதிபற்றித் தோளை உணர்வுடையதுபோலக் கூறினாள்; தலைவியின் துயர்மிகுதியையே அத்தோள்கள் புலப்படுத்தினவாதலின் பாலைநிலத்தின் ஏதம் நினைந்து அவள் வருந்தினாளென்பதைத் தோழி இதனால் அறிவாள். இங்ஙனம் தலைவி தன்னையும் தோளையும் வேறுபடுத்திக் கூறும் வழக்கு உண்மையை,

" தான்குறி வாராத் தப்பற்குத்
தாம்பசந் தனவென் றடமென் றோளே" (குறுந். கஉக : 5-6),

" துறைகெழு வூரன் கொடுமை நாணி
நல்ல னென்றும் யாமே
அல்ல னென்னுமென் றடமென் றோளே" (ஐங். கக : 2-4),

" வாளே ரெல்வளை நெகிழ்ந்த
தோளே தோழி தவறுடை யவ்வே" (அகநா. உ௬எ : 16-7)

என்று வந்துள்ளவற்றானும் உணரலாகும்.

## மேற்கோளாட்சி

1. அம்மவென்னும் இடைச்சொல் கேட்பித்தற்பொருளில் வந்தது (தொல். இடை. 28, இளம், சே, 27, தெய்வச், 28, ந; நன். 437, மயிலை; இ. வி. 274.)

## ஒப்புமைப் பகுதி

1. அம்மவாழி தோழி: குறுந். ௬0௪: 1, க௩௪: 1, க௪௬: 1, உ௩0: 1, உ௮எ: 1, உ௬௬: 1, ௩௫0: 1, ௩௬க: 1, ௩எ௫: 1; ஐங். கக்க - கஉ0.

3. உவலிடு பதுக்கை: அகநா. ௬எ: 14.

உலந்த வம்பலர் உவலிடு பதுக்கை : (குறுந். உ௬எ : 1-4); 'கொலைத் தொழிலையுடைய வேடர் வில்லாலே கொல்லப்பட்டவருடைய உடலம் மறைய இட்ட இலைக்குவை' (கலி. கஉ : 1-2, ந.); "வெண்ணுனை யம்பின் விசையிட வீழ்ந்தோர், எண்ணுவரம் பறியா வுவலிடு பதுக்கைச், சுரம்" (அகநா. ௬0௬: 7-9.)

வம்பலர் உடல்களை மூடிய பதுக்கை : அகநா. கஎ௧ : 4-5, உக௧ : 10-11, உ௩௩ : 5-6, உ௮௪ : 1-2 ; புறநா. ௩ : 18-20 ; ஐந். எழு. 30.

2-3. சுரத்துப் பதுக்கை: அகநா. ௩௯ : 6-7, ௬௧ : 10, க௯௧ : 11.

சுரத்து வம்பலர் : "சுரஞ்செல் வம்பலர்" (பெருங். க. 55 : 50.)

வெஞ்சுரத்து வம்பலர் இறத்தல் : நற். ௧௬௪ : 6-8, உ௬௮ : 1-2, ௩௯உ : 1-3 ; கலி. ௪ : 1-5 ; அகநா. ௧௧௩ : 18, ௧௬௧ : 2-4, ௧எ௧ : 1-6, ௩௧௩ : 12-3.

3-4. பதுக்கை நிழல் தருதல் : "பதுக்கை நீழ லொதுக்கிடம்" (நற். ௩௯உ : 8.)

பதுக்கையும் யானையும் : "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணுடவர், வில்லிட வீழ்ந்தோர் பதுக்கைக் கோங்கின், எல்லி மலர்ந்த பைங்கொடி யதிரல், பெரும்புலர் வைகறை யரும்பொடு வாங்கிக், கான யானை கவளங் கொள்ளும்" (அகநா. க௯எ : 4-8.)

5. அரிய கானம்: குறுந். க௯௪ : 7, ௩உ௧ : 4.

6. தடமென்றோள் : குறுந். கஉக : 6 ; நெடுநல். 149 ; பட். 301 ; ஐங். ௧௧ : 4, க௪௩ : 3, ௪௯௯ : 5 ; கலி. உ : 22, க௪ : 1, உ௬ : 10, ௪0 : 8, ௪௬: 25, ௯௬ : 20, ௬௩ : 5, ௧௧உ : 24, ௧௧௩ : 1, ௧௩௧ : 13 ; அகநா. உ௧ : 4, ௧௧0 : 10, ௧௮௧ : 24. (எஎ)

---

## பாங்கன் கூற்று

[தலைவனது வேறுபாட்டுக்குக் காரணம் அவன் ஒருத்திபாற் கொண்ட காமமே யென்பதனை உணர்ந்து, "காமம் தகுதியில்லாரிடத் தும் செல்வதாதலின் அது மேற்கொள்ளத் தக்கதன்று" என்று பாங்கன் இடித்துரைத்தது.]

எ௮. பெருவரை மிசையது நெடுவெள் ளருவி
முதுவாய்க் கோடியர் முழவிற் றதும்பிச்
சிலம்பி னிழிதரு மிலங்குமலை வெற்ப
நோதக் கன்றே காமம் யாவதும்
நன்றென வுணரார் மாட்டும்
சென்றே நிற்கும் * பெரும்பே தைமைத்தே.

---

(பி - ம்.) * பெரும் பேதைத்தே.

எ - து. பாங்கன் தலைமகற்குச் சொல்லியது.

நக்கீரனார்.

(ப - ரை.) பெரு வரை மிசையது - பெரிய மலையின் உச்சியி லுள்ளதாகிய, நெடு வெள் அருவி - நெடிய வெள்ளிய அருவியானது, முது வாய் கோடியர் - அறிவு வாய்த்தலையுடைய கூத்தரது, முழவின் ததும்பி - முழவைப்போல ஒலித்து, சிலம்பின் இழிதரும் - பக்கமலை யின்கண் வீழும், இலங்கு மலைவெற்ப - விளங்குகின்ற மலையையுடைய தலைவ, காமம் - காமமானது, யாவதும் - சிறிதும், நன்றெனா உணா ரார் மாட்டும் - இது நன்மையென உணரும் அறிவில்லாதாரிடத்தும், சென்று நிற்கும் - சென்று தங்குகின்ற, பெரு பேதைமைத்து - பெரிய அறிவின்மையையுடையது; ஆதலின் அது, நோதக்கன்று - வெறுக்கத்தக்கது.

(முடிபு.) வெற்ப, காமம் பெரும்பேதைமைத்து; நோதக்கன்று.

(கருத்து.) நீ ஒருத்திபாற் கொண்ட காமத்தை ஒழிவாயாக.

(வி - ரை.) பெருவரை - அளக்கலாகா அளவும் பெருமையும் வறப்பினும் வளந்தரும் வண்மையு முடைய மலை. மிக உயர்ந்த மலை யாதலின் அருவியும் நெடியதாயிற்று. முதுவாய்க் கோடியர் - அறிவு வாய்த்தலையுடைய கூத்தர் (பட். 253, ந.); அறிவுமுதிர்ந்த வாய் மையையுடைய கூத்தரெனலும் (முருகு. 284, ந; புறநா. சஅ : 7) ஆம்.

ததும்புதல் - ஒலித்தல் (கலி. ௭0 : 10, ந.) வெற்பனென்பது குறிஞ்சிநிலத்தலைவனென்னும் பொருளைத் தந்து இடுகுறிமாத்திரை யாய் நின்றது (சிற். 128, பேர்.) காமம் - தலைவியின்பாலுள்ள பெரு விருப்பம். உணாரரென்றது, காமநுகர்ச்சிக்குப் பொருளாகியவரை; இங்கே தலைவியைச் சுட்டியது.

"சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு" (குறள், 422.)

ஆதலின் நன்மையறியாதார் மாட்டுச் செல்லும் காமத்தை அறிவற்ற தென்றான்.

காமத்துக்குக் கண்ணில்லை யென்பது ஒரு பழமொழி.

---

(பி - ம்.) * நக்கீரர்.

யான் ஒரு மலைவாணர் மகள்பால் விருப்புற்றேனென்ற தலைவனை நோக்கி, "நீ கொண்ட காமம், இது நன்று, இது தீதென அறியாத ஒருத்திபாற் சென்றதாதலின் அது வெறுக்கத்தக்கது" என்று பாங்கன் கூறினன்: தலைவனை, "நீ பேதை" என்று கூறும் நிலையினனாகி அங்ஙனம் கூறுதல் தன் பணிவுக்கு மாறுபாடாதலின் 'நின்காமம் பேதைமையுடையது' என்று குறிப்பாற் பெறவைத்தான்.

ஏகாரங்கள்: அசைநிலைகள். மாட்டும்: உம்மை இழிவுசிறப்பு.

மிக உயர்ந்த மலையின் உச்சியிலுள்ள அருவி மிகத்தாழ்ந்த தாழ்வரையில் வீழ்ந்ததுபோல, மிக்க பெருமையை யுடைய நீ நின் பெருமையும் உரனும் நீங்கிக் காமங்கொண்டாயென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

1. அஃறிணை ஒன்றன்பாற்கண் வந்த பெயரெச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்று (தொல். எச்ச. 61, ந.); ஒன்றன்பால் வினைக் குறிப்புமுற்றுப் பெயரெச்சக்குறிப்பானது (நன். 350, மயிலை, 351, சங், வி.)

4-5. யாவதென்னும் ஒன்றறி சொல்லும் நிலைமொழியாய் நின்று புணர்தலும் மருவின் பாத்தியது (தொல். தொகை. 30, இளம், ந.)

5-6. 'காமநோயுறுதார் மானமுடையார். நன்றென வுணரார் மாட்டுஞ் சென்றே நிற்கும்; யானறிவ தொன்றன் றென்பதாம்' (குறள், 1255 பரிமேல்.)

மு. தோழி தலைவனிடம் படைத்து மொழிந்தது (தமிழ்நெறி. 17); பாங்கன் தலைவனைக் கழறியது (நம்பி. 137.)

## ஒப்புமைப் பகுதி

1. "பெருவரை யிழிதரு நெடுவெள் ளருவி" (அகநா. ௩௫அ:12.)

2. முதுவாய்க் கோடியர் முழவு: பட். 253.

முதுவாய்: முருகு. 284.

1-2. அருவியோசைக்கு முழவு: (குறுந்: ௩௬௫: 3-4); "ஒருதிறம், மண்ணார் முழவி னிசையெழ, ஒருதிறம், அண்ண னெடுவரை யருவிநீர் ததும்ப", "பாணி முழவிசை யருவிநீர் ததும்ப" (பரி. ௧எ 13 - 4, உ௧: 36); "பாடின் னருவிப் பனிநீ ரின்னிசைத், தோடமை

முழவின் றுதைகுர லாக" (அகநா. அஉ : 3 - 4); "யாழுங் குழலு முழவு மியைந்தென, வீழு மருவி விறன்மலை நன்னாட" (திணைமொழி. 7); "அருவி யாற்றிசை யணிமுழ வாக" (பெருங். உ. 16 : 81); "முழவின் னிசை மூரி முழங்கருவி", "அருவி, தாழ்ந்து வீழ்ந்தவை முழவிற் றதும்பின", "படுகண் முழவி னிமிழருவி வரையும்" (சீவக. 1193, 1560, 2172); "அருவித்திரண் மழலைம் முழவதிரும், அண்ணாமலை" (தே. திருஞா.); "மலையிலங் கருவிகண் மணமுழ வதிர" (தே. திருநா.)

4. நோதக்கன்று : குறுந். உசுரு : ஞ.. (எஅ)

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவினால் வருந்திய தலைவி தோழியை நோக்கி, "என்பாற் சொல்லின் நான் உடம்படமாட்டேனென்னும் கருத்தால், சொல்லாமற் பிரிந்து சென்ற தலைவர் தாம் சென்ற ஊரிலேயே தங்கிவிட்டாரோ?" என்று கூறி வருந்தியது.]

எசு. கான யானை தோனயந் துண்ட
பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை
அலங்க லுலவை யேறி யொய்யெனப்
புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்
அத்த நண்ணிய வங்குடிச் சீறூர்ச்
* சேந்தனர் கொல்லோ தாமே யாந்தமக்
கொல்லே மென்ற † தப்பற்
‡ சொல்லா தகறல் வல்லு வோரே.

எ - து. பொருள்வயிற் பிரிந்த தலைமகனை நினைந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

குடவாயிற் ¶ கீரனக்கன்.

(ப - ரை.) தோழி, யாம் தமக்கு ஒல்லேம் என்ற தப்பல் - யாம் தாம்பிரிவதற்குப் பொருந்தேமென்ற தவற்றினால், சொல்லாது அகறல் வல்லுவோர் - சொல்லாமற் செல்லுதலில் வன்மையுடையோ

(பி - ம்.) * சேர்ந்தனர். † தப்பல். ‡ சொல்லாதேகல். ¶ கீரத்த

ராகிய தலைவர், கானம் யானை - காட்டுயானையால், தோல் நயந்து உண்ட - பட்டை விரும்பி உண்ணப்பட்ட, பொரி தாள் ஓமை - பொரிந்த அடியையுடைய ஓமைமரத்தினது, வளி பொரு நெடு சினை அலங்கல் உலவை - காற்று அடிக்கும் நெடிய கிளையினது அசைதலையுடைய வற்றற்கொம்பில், ஏறி—, ஒய் என - ஒய்யென்று, புலம்புதரு குரல - தனிமையையும் வருத்தத்தையும் வெளிப்படுத்தும் குரலையுடையனவாகி, புறவு பெடை பயிரும் - ஆண்புறுக்கள் பெண்புறுக்களை அழைக்கும், அத்தம் நண்ணிய - பாலைநிலத்திற் பொருந்திய, அம் குடி சிறு ஊர் - அழகிய குடிகளையுடைய சிற்றூரில், சேந்தனர் கொல் - தங்கினரோ?

(முடிபு.) சொல்லாதகறல் வல்லுவோர் சேந்தனர்கொல்?

(கருத்து.) தலைவர் இனி மீளாரோ?

(வி - ரை.) பாலைநிலததின் வெம்மையால யானை ஓமைமரத தின் தோலை உண்டது. புலம்பு - தனிமையும் வருத்தமும்.

ஓ, தாம், ஏ: அசைநிலைகள்.

பாலைநிலத்துள்ள ஆண்புறவு தன் பெடையை விரும்பி அழைக்கும் இடத்தில் தங்கினரோ வென்றது, பறவையினங்களும் தம் துணையின்பால் அன்பு வைத்து ஒழுகும் அவ்விடத்தில் தங்கினரேல், ஆண்டுள்ள நிகழ்ச்சியும் என்பால் வந்து ஒன்றுதலாகிய தம் கடமையை அறிவுறுத்துமன்றே யென்ற குறிப்பினது. (ஐங். ருருரு.) ஒல்லேம் - உடம்படேம். நாம் உடம்படாமையைத் தவறாக நினைத்து அதுபற்றிச் சினந்து அங்கே தங்கி விட்டனரோ வென்பது தலைவியின் ஐயம்.

தலைவர் சொல்லாது அகலுதலுண்டென்பதை இந்நூல் சரு-ஆம் செய்யுளாலும் அதன் உரை முதலியவற்றாலும் உணரலாகும். வல்லுவோரென்றது அங்ஙனம் பிரிந்து செல்லுதல் நெஞ்சில் வன்மையிருப்பினன்றி இயலாதென்னும் குறிப்பினது.

## மேற்கோளாட்சி

6-8. தலைவன் சொல்லாது பிரிந்தது (தொல். கற்பு. 43, ந.)

மு. 'புணர்ந்துடன் போகிய கிழவோண் மனையிருந், திடைசசுரத் திறைசசியும் வினையுஞ் சுட்டி, அன்புறு தக்க கிளத்த ருனே, கிழவோன்

செய்வினைக் கசச மாகும்' ஆதலின், 'புலம்புதரு குரலவாய்ப் புறவினைப் பெடை அழைக்கும் வருத்தங்கண்டு வினைமுடியாமல் வருவரோவென அஞ்சியவாறு காண்க' (தொல். கற்பு. 7, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. ஓமை: "புன்மு ளோமைய சுரனிறந் தோரே" (குறுந். உ௬௦ : 8) ; "புல்லரை யோமை" (ஐங். ௩௧௬ : 6.)

1-2. யானை ஓமைத்தோலை உண்ணல்: "முளிசினை, ஓமைக் குத்திய வுயர்கோட் டொருத்தல்" (குறுந். ௩௧௬ : 3-4) ; "கயந்தலை மடப்பிடி யுயங்குபசி களைஇயர், பெருங்களிறு தொலைத்த முடத்தா ளோமை", "பசிப்பிடி யுதைத்த வோமைச் செவ்வரை", "பணைத்தா ளோமைப் படுசினை......ஒடித்துமிசை கொண்ட வோங்குமருப் பியானை" (நற். ௧௩௭ : 6-7, உ௭௧ : 7, ௩௧௮ : 2-5.)

3. அலங்கல் உலவை: அகநா. ௧௧௧ : 6.

4. புறவு, பேடையைப் பயிர்தல்: குறுந். உ௮௫ : 5.

5. மு. குறுந். ௪௧ : 3, ஒப்பு.

அங்குடிச் சீறூர்: நற். ௩௪௩ : 2 ; புறநா. ௩௨௪ : 8.

2-4. ஓமையின்மேற் பறவையிருத்தல்: குறுந். உ௦௭ : 2-3 ; ஐங். ௩௨௧ : 1-2.

4-5. புறவுள்ள பாலைநிலச் சீறூர்: "புறவுசேர்ந் திருந்த, புன்புலச் சீறூர்" (புறநா. ௩௨௮ : 1-2.)

7. தப்பல்: குறுந். ௧௨௧ : 3, உ௬௨ : 2 ; நற். உ௦௩ : 10 ; அகநா. ௧௧௬ : 9.

8. சொல்லாதேகல்: சிற். 270. (௭௯)

---

## பரத்தை கூற்று

[தலைவி தன்னைப் புறங்கூறினளென்று கேட்ட பரத்தை அத்தலைவிக்குப் பாங்காயினோர் கேட்ப, "நானும் தலைவனும் புதுப்புனலாடப் புகுகின்றேம் ; அவள் வலியுடையளாயின் தலைவனை வாராமற் காப்பாளாக!" என்று தன் வன்மைமிகுதி தோன்றத் தன்னை வியந்து கூறியது.]

அ0. கூந்த லாம்பன் முழுநெறி யடைச்சிப்
பெரும்புனல் வந்த *விருந்துறை விரும்பி
யாமஃ தயர்கஞ் சேறுந் தானஃ
தஞ்சுவ துடைய ளாயின் வெம்போர்
நுகம்படக் கடக்கும் பல்வே †லெழினி
‡ முனையான் பெருநிரை போலக்
கிளையொடுங் காக்கதன் கொழுநன் மார்பே.

எ - து. தலைமகட்குப் பாங்காயினர் கேட்பப் பரத்தை சொல்லியது.

¶ ஔவையார்.

(ப - ரை.) *யாம்—, கூந்தல் - எம் கூந்தற்கண், ஆம்பல் முழு நெறி அடைச்சி - ஆம்பலினது புறவிதழொடித்த முழுப்பூவைச் செருகி, பெரு புனல் வந்த - வெள்ளம் வரப்பெற்ற, இரு துறை விரும்பி - பெரிய நீர்த்துறையை விரும்பி, அஃது அயர்கம் - அப் புனல்விளையாட்டைச் செய்வேமாகி, சேறும் - செல்வேம்; தான் - தலைவி, அஃது - அங்ஙனம் யாம் தலைவனுடன் விளையாடுதலுக்கு, அஞ்சுவது உடையள் ஆயின் - அஞ்சுவாளானால், வெ போர் - வெவ்விய போரில், நுகம் பட கடக்கும் - பகைவரை நடுநிலை யுண்டாகும்படி வஞ்சியாது எதிர்நின்று கொல்லும், பல் வேல் எழினி - பல வேற் படையையுடைய எழினியென்னும் உபகாரியினது, முனை ஆன் பெரு நிரை போல - போர்முனையிடத்தேயுள்ள பசுக்களின் பெரிய கூட்டத்தைப் போல, தன் கொழுநன் மார்பு - தன் கணவனது மார்பை, கிளையொடும் காக்க - பாங்காயினரோடும் பாதுகாப்பாளாக!*

(முடிபு.) *யாம் துறை விரும்பிச் சேறும்; தான் அஞ்சுவ துடையளாயின் கொழுநன் மார்பைக் காக்க.*

(கருத்து.) *தலைவன் என்னுடைய விருப்பப்படியே ஒழுகுவானன்றித் தலைவி விரும்பியவாறு ஒழுகான்.*

(வி - ரை.) *முழு நெறி - புறவிதழ் ஒடித்த முழுப்பூ* (புறநா. *கககூ : 2, உரை*); *இதழொடியாத பூவெனினுமாம்* (சிலப். உ: 34, அடியார்.) *அடைச்சுதல் - செருகுதல்* (சிலப். *கச : 77,* அடியார்.)

---

(பி - ம்.) ** விருந்திறை, விருந்தின்றி. † லெழுநி. ‡ முளையான்.*
¶ *அவ்வையார்.*

பெரும்புனல் - வெள்ளம். தலைவன் பரத்தையரொடு நீர் விளை யாடுதல்,

" யாறுங் குளனுங் காவு மாடிப்
பதியிகந்து நுகர்தலு முரிய வென்ப "

(தொல். கற்பு. 50)

என்பதனாலும் அதன் உரையாலும் உணரப்படும்.

வெம்போர் - தான் விரும்பும் போரெனினுமாம்; வீரர் போரை விரும்பி யிருத்தல், " போரெனிற் புகலும் புனைகழன் மறவர் " (புறநா. ௩௧ : 9) என்பதனாற் பெறப்படும். நுகம் - நுகத்தின் தன்மை; நடுவு நிலை; இங்கே ஆகுபெயர். நுகம்பட - வலியுண்டாக வென்பர் நச்சினார்க்கினியர் (மலைபடு. 87.) எழினி - அதியமான் அஞ்சி. தன் நாட்டுப் பசுக்களைப் பகைவர் கொண்டு சென்றாராக அவரொடு பொருது அப்பசுக்களை எழினி மீட்டுக் காத்தான்; *இவ்வரலாறு,

" சில்பரிக் குதிரைப் பல்வே லெழினி
கெடலருந் துப்பின் விடுதொழின் முடிமார்
கனையெரி நடந்த கல்காய் கானத்து
வினைவ லம்பின் விழுத்தொடை மறவர்
தேம்பிழி நறுங்கண் மகிழின் முனைகடந்து
வீங்குமென் சுரைய வேற்றினந் தரூஉம் "

" நெடுநெறிக் குதிரைக் கூர்வே லஞ்சி
கடுமுனை யலைத்த கொடுவி லாடவர்
ஆகொள் பூசலின் " (அகநா. ௧௦௫ : 10-15, ௩௭௨ : 9-11)

என்பவற்றாலும் உணரப்படும்.

எழினி தனக்குரிய நிரையைக் கைக்கொண்ட பகைவரிடத்தி லிருந்து அதனை மீட்டுக் காத்தாற்போல, தலைவி தனக்குரிய தலைவன் மார்பைக் கைக்கொண்ட எம்மிடத்திலிருந்து அதனைப் பெற்றுக் காப்பாளாக வென்று உவமையை விரித்துக் கொள்க.

தலைவி தன்னைக் குறைகூறினாளென்று கேட்டவளாதலின் பரத்தை சினங்கொண்டு, " யாம் நீர்விளையாடச் செல்வேம்; தலை வன் தானே எம் வயப்பட்டு வருவான். அவனை வாராமற் காக்கும் வன்மை தலைவிபால் உளதாயின் அவள் காப்பாளாக " என்று எள் ளல் தோன்றக் கூறினாள். தலைவி அங்ஙனம் காக்கும் வலியில

* இச்செய்தி இப்பொழுது கிடைக்கும் தகடூர் யாத்திரைச் செய்யுட் களாலும் வலியுறப்பெறுகின்றது.

னென்பது அவள் நினைவு. தலைவிக்குப் பாங்காயினார் கேட்பக் கூறு பவளாதலின் அவர் நெஞ்சிற் படவும் கூறுவாளாகி, 'கிளையொடும் காக்க' என்றாள்; 'கிழத்தியைச் சுட்டாவெனவே, பாங்காயினார் கேட்பச் சொல்லினும் அமையுமென்பதாயிற்று' (தொல். செய். 199, பேர்.) ஏகாரம், அசைநிலை.

## மேற்கோளாட்சி

மு. புனல்விளையாட்டின்கண் காமக்கிழத்தியர் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 10, இளம், ந.)

## ஒப்புமைப் பகுதி

1. ஆம்பல் முழுநெறி : அகநா. ௧௫௬ : 9.

1-2. புனல் விளையாட்டும் பூவை அடைச்சுதலும் : "புனலாட் டமர்ந்து, தண்ணறு முல்லையுந் தாழ்நீர்க் குவளையும், கண்ணவிழ் நெய் தலுங் கதுப்புற வடைச்சி" (சிலப். ௧௪ : 75-7.)

5. பல்வேல் : குறுந். ௧௧ : 6, ஒப்பு.

பல்வேல் எழினி : அகநா. ௧௦௫ : 10.

வேல் எழினி : புறநா. ௧௫௮ : 8-9, அடிக்.

6. முனையான் பெருநிரை : "முனையூர்ப், பல்லா நெடுநிரை" (நற். ௧௦௦ : 7-8); "முனையா" (அகநா. ௩௫ : 5); "அடையார் முனை யலற வையிலைவேற் காளை, விடையாயங் கொள்கென்றான் வேந்து" (பு. வெ. 1.)

6-7. நிரைகாத்தல் : "ஆதந் தோம்பல்" (தொல். புறத். 2.)

7. கொழுநன் மார்பைக் காத்தல் : "மார்புரனி விலக்க ஞெடுங்கி யோளே" (ஐங். ௪௨ : 4.)

கிளையொடுங் காத்தல் : "நின் கிளையொடு போகென்று தத்தம், கொழுநரைப் போகாமற் காத்து" (கலி. ௧௦௧ : 25-6.)

மு. "அரியார் மதர்விழி யாயமுந் தானு மகன்றுறைவாய்
விரியார் கருங்கழன் மன்புறங் காப்பினு மென்புறமே
புரியா தொழுகுவ னேலழி யாத புகழ்படையாக்
கரியார் திருவிற் றரியா துடைகவென் கைச்சங்கமே."
(அம்பிகாபதிகோவை, 476.) (௮௦)

## தோழி கூற்று

[பாங்கியின்வாயிலாகத் தலைவியோடு அளவளாவப்பெற்ற தலைவன் பிரியும் காலத்தில் அவனை நோக்கி, "நின்னுடைய குறையை நான் முடித்து வைத்தேன்; தலைவி நின்னோடு ஒன்றினள்; இனி நீ அதோ தெரியும் எம் ஊர்க்கண்ணும் வந்து பழகுவாயாக" என்று தோழி கூறியது.]

அக. இவளே, நின்சொற் கொண்ட வென்சொற் றேறிப்
பசுநனை ஞாழற் பல்சினை யொருசிறைப்
புதுநல னிழந்த புலம்புமா றுடையள்
உதுக்காண் டெய்ய வுள்ளல் வேண்டும்
நிலவு மிருளும் போலப் புலவுத்திரைக்
கடலுங் கானலுந் தோன்றும்
* மடற்றாழ் பெண்ணையெஞ் சிறுநல் லூரே.

எ - து. தோழியிற் கூட்டங் கூடிப் பிரியும் தலைமகற்குத் தோழி சொல்லியது.

† வடமவண்ணக்கன்.

(ப - ரை.) வெற்ப, இவள் - இத்தலைவியானவள், நின் சொல் கொண்ட என் சொல் - குறையுறும் நின்சொற்களை ஏற்றுக்கொண்டு தன்னிடத்துக் கூறிய என்சொற்களை, தேறி - தெளிந்து, பசு நனை ஞாழல் பல் சினை ஒரு சிறை - பசிய அரும்புகளையுடைய ஞாழல் மரத்தினது பல கிளைகள் அடர்ந்த ஒரு பக்கத்து, புது நலன் இழந்த - இதுகாறும் புதியதாக இருந்த தன் பெண்மைநலத்தை இழந்ததனாலுண்டான, புலம்பு உடையள் - தனிமையையுடையள்; நிலவும் இருளும் போல - நிலவையும் அதனோடு நின்ற இருளையும் போல, புலவு திரை கடலும் கானலும் தோன்றும் - புலால்நாற்றம் வீசும் அலைகளையுடைய கடலும் அதன் கரையிலுள்ள சோலையும் கண்ணுக்குத் தோன்றுகின்ற, மடல் தாழ் பெண்ணை - மடல்கள் தாழ்ந்த பனைமரங்களையுடைய, எம் சிறு நல் ஊர் - எமது சிறிய நல்ல ஊர், உது காண் - அதோபார்; உள்ளல் வேண்டும் - இனி எம்மை மறவாது நினைக்கவேண்டும்.

---

(பி - ம்.) * மடல்சூழ். † வடமவண்ணக்கர்.

(முடிபு.) இவள் நலன் இழந்த புலம்புடையள்: எம் சிறு நல் லூர் உதுக்காண்; உள்ளல் வேண்டும்.

(கருத்து.) இனி எம்மை மறவாது எம்மூருக்கு வந்து பழக வேண்டும்.

(வி - ரை.) இவளே: ஏகாரம் அசைநிலை. நின்சொற் கொண்ட என்சொல் லென்றது, தோழி தலைவனது குறையையேற்றுத் தலைவி நயக்கச் செய்த சொற்களை. பசு நனை - இள அரும்பு. ஞாழல் - நெய்தற்குரியதொரு மரம். தோழியிற் கூட்டம் கூடிய தலைவன் தலைவியோடு கடற்கரையிலுள்ள ஞாழன்மரத்தின் நிழலில் அளவளா வினு னாதலின், 'ஞாழற் பல்சினை யொருசிறைப், புதுநலனிழந்த புலம்புடையள்' என்றாள். புலம்பு - நலனிழந்தமையால் உண்டான தனிமை. மார்: அசைநிலை. உதுக்காண்: சுட்டின்முன் வல்லெழுத்து இயல்பாகாது மிக்கதை நச்சினார்க்கினியர்,

"சுட்டுமுத லிறுதி யுருபிய னிலையும்
ஒற்றிடை மிகாஅ வல்லெழுத் தியற்கை"

(தொல். உயிர்மயங்கு. 61)

என்னும் சூத்திரத்திலுள்ள 'வல்லெழுத்தியற்கை' என்ற விதப்பி னாற் கொண்டார். தெய்ய: அசைநிலை (தொல். இடை. 48, இளம்.); "சொல்லேன் றெய்ய நின்னொடும் பெயர்த்தே"; இது தெய்யோ வெனவும் வரும். உள்ளல் வேண்டுமென்பது நினைந்து வரவேண்டு மென்னும் குறிப்பினது; அதன் பொருட்டே தம் ஊரைக் காட்டி னாள். இது தோழி களஞ்சுட்டிக் கூறியது; இதற்கு விதி, "தோழி யின் முடிபு மிடனுமா றுண்டே" (தொல். களவு. 30) என்பது.

அலையின் பிறழ்ச்சியால் வெண்மையாகத் தோற்றும் கடலுக்கு நிலவும், அடர்த்தியால் இருண்டு தோன்றும் கானலுக்கு இருளும் உவமை; நிரனிறை. எதிர் நிரனிறையாகக் கொண்டு கருநீர்க் கடலுக்கு இருளையும், பரந்த கடற்கரை மணற்பரப்புக்கு நிலவையும் (குறுந். கஉஅ: 2) உவமை கொள்ளுதலும் ஆம். நெய்தனிலத்ததாதலின் ஊர் பனைமரங்களை யுடையதாயிற்று. நெடுந்தூரத்தில் வரும்போது தோன் றும் அடையாளங்களாகிய கடலையும் கானலையும் முன்பும், அணுகிய பின்னர்த் தோன்றுவதாகிய பெண்ணையைப் பின்பும் கூறினாள். சிறிய தாயினும் சிறப்புடையதாதலின் சிறுநல்லூரென்றாள்; நீ வரு தற்குரியதென்னும் குறிப்பினது. ஊரே: ஏகாரம், அசைநிலை.

" தலைவி தானாக விரும்பி இதனைச் செய்திலள் ; நான் கூறினமையின் இது செய்தாள். நானும் நீ குறைவேண்டி இரந்தமையின் அவளை நயக்கச் செய்தேன். ஆதலின் அவள் நலனிழந்தமைக்கு நின் முயற்சியே காரணமாவது. இனி நீ அவள் துயருறாவாறு அவ்வூரினிடத்தும் வந்து அளவளாவுக " என்று தோழி கூறினாள்.

## மேற்கோளாட்சி

மூ. இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாகுமெனறு அறிவுறுதத வழிப் பின்னும் புணர்ச்சி வேண்டிய தலைவற்குத் தோழி இடமுணர்த்தியது (தொல். களவு. 24, இளம்.) ; பாங்கியிற் கூட்டத்தின்பின் முற்காலத்துப் பணிந்து பின்னின்றோனைத் தோழி தானே பணிந்தொழுகுமிடத்து அவளுக்குக் கூற்று நிகழ்ந்தது (ஷை. ஷை. 23, ந.) ; தோழிக்குத் தலைவி தனது வேட்கையை எதிர்நின்று கூறியது (ஷை. ஷை. 27, ந.)

## ஒப்புமைப் பகுதி

3. தலைவி புதுநலம் இழத்தல் : " பூவி னன்ன நலம்புதி துண்டு " (நற். கசு : 4) ; " பொன்மாலை மார்பனென் புதுநலமுண் டிகழ்வானே " (தே. திருநா. திருப்பழனம்.)

2-3. கடற்கரையில் தலைவனும் தலைவியும் அளவளாவுதல் : (குறுந். கஎ : 1-2) ; " கடிமலர்ப் புன்னைக்கீழ்க் காரிகை தோற்றாளை ", " ஆய்மலர்ப் புன்னைக்கீ ழணிநலந் தோற்றாளை ", " திகழ்மலர்ப் புன்னைக் கீழ்த் திருநலந் தோற்றாளை " (கலி. கநடு : 6, 9, 12.)

4. உதுக்காண் : குறுந். ககக : 1, நடுஅ : 4.

5-6. கானற் சோலைக்கு இருள் : " இருடிணிந் தன்ன வீர்ந்தண் கொழுநிழல் " (குறுந். கஉந : 1) ; " பொழிலே, இரவோ ரன்ன விருளிற் றாகியும் " (யா. வி. 69, மேற்.)

கடலுக்கும் கானலுக்கும் நிலவும் இருளும் : " நிலவு மிருளும் போல நெடுங்கடற், கழியுங் கானலு மணந்தன்று " (தொல். களவு. 23, ந. மேற்.)

7. சிறு நல்லூர் : குறுந். கூசு : 5; அகநா. நகச : 16.

4-7. உதுக்காண்...சிறுநல்லூரே : " ஈகாண் டோன்றுமெஞ் சிறுநல் லூரே " (நற். உகச : 9) ; " உவக்காண் டோன்றுமெஞ் சிறுநல் லூரே " (அகநா. நகூ0 : 15.) (அக)

தலைவி கூற்று

[தலைவன் தான் வருவதாகக் கூறிச் சென்ற முன்பனிப் பருவம் வரவும் அவன் வாராமையினால் வருத்தமுற்ற தலைவியை நோக்கி, "நீ வருந்தற்க; அவர் தலையளி செய்து பிரிந்த அன்புடையவராதலின் விரைவில் வருவர்" என்ற தோழியை நோக்கி, "அவர் முன்பு அன்புடையராயினும் இப்பொழுது வந்திலராதலின் அவர் தன்மை மாறியது போலும்!" என்று தலைவி கூறியது.]

அஉ. வாருறு வணர்கதுப் புளரிப் புறஞ்சேர்
பழாஅ லென்றுநம் மழுதகண் டுடைப்பார்
யாரா குவர்கொ றோழி சாரற்
பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகாற்
கொழுங்கொடி யவரை பூக்கும்
அரும்பனி * யச்சிரம் வாரா தோரே.

எ - து. பருவங் கண்டு அழிந்த தலைமகள், வருவரென்று † வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.

கடுவன் மள்ளன்.

(ப - ரை.) தோழி—, சாரல் - மலைப்பக்கத்திலுள்ள, பெரு புனம் குறவன் - பெரிய தினைப்புனத்திலுள்ள குறவனது, சிறு தினை மறு கால் - சிறிய தினையரிந்த மறுகாலிடத்தில், கொழு கொடி அவரை பூக்கும் - கொழுவிய அவரைக்கொடி மலர்கின்ற, அரு பனி அச்சிரம் - பொறுத்தற்கரிய பனியையுடைய அச்சிரக் காலத்திலும், வாராதோர் - வாராத தலைவர், வார் உறு வணர் கதுப்பு உளரி - நீட்சியையுடைய வளைந்த கூந்தலை வகிர்ந்து, புறம் சேர்பு - முதுகைச் சார்ந்து, அழாஅல் என்று - அழுதலை யொழியென்று கூறி, நம் அழுத கண் துடைப்பார் - நம் அழுத கண்ணீரை முன்பு துடைப்பார்; இப்பொழுது, யார் ஆகுவர் - எத்தன்மையை உடையராவரோ?

(முடிபு.) தோழி, வாராதோர், முன்பு துடைப்பார்; இப்பொழுது யாராகுவர்கொல்?

(கருத்து.) தலைவர் முன்பு அன்புடையராயினும் இப்பொழுது அன்பின்றி என்னை மறந்தனர் போலும்!

---

(பி - ம்.) * யற்சிரம். † வற்புறுத்தி.

(வி - ரை.) தான் பிரியுங்கால் தலைவி வருந்துதலை அறிந்த தலைவன் அவள் கூந்தலை உளரியும் கண்ணீரைத் துடைத்தும் தலையளி செய்து பிரிந்தானாதலின் அச்செயல்களை நினைந்து, "அங்ஙனம் செய்த தலையளியை யுடையார் இன்னும் வாராமல் அயற்றன்மை யுடையராயினர்!" என்று வருந்தினள். தோழி, தலைவன் பிரியுங்கால் செய்த தலையளியை நினைவுறுத்தி வற்புறுத்தினளாக, "அங்ஙனம் செய்யினும் இப்பொழுது வாராமையால் அவர் தன்மை வேறுபட்டது போலும்!" என்னும் கருத்துப்படக் கூறினள்.

யாரென்றது நம்மோடு தொடர்பிலரென்னும் நினைவிற்று. குறவனுக்குரிய சிறுதினை. தினைக்கதிரை அரிந்தபின் அதன் அடியில் மீட்டும் கிளைத்துக் கதிர் உண்டாகும்; அதனை மறுகாலென்பர். அம்மறுகாலில் விதைத்த அவரை வளர்ந்தது. அவரை யென்றது இங்கே மொச்சையை.

கொல், ஏ : அசைநிலைகள்.

அச்சிரம் அவர் வாராமையின் பொறுத்தற்கரியதாயிற்று; அவர் வரின் அரியதாகாது; இந்நூல் கூஅ - ஆம் செய்யுளைப் பார்க்க.

குறவன், ஒருமுறை யறுத்த கதிராற் பயன் பெற்றதன்றிப் பின்னும் மறுகாலிற் கிளைக்கும கதிராலும் அதனோடு அவரையினாலும் பயனைப் பெறுதற்குரிய அச்சிர மென்றது, தலைவன் முன் இன்புற்றதன்றி மீண்டும் இப்பொழுது வந்து என்பாற் பெறும் இன்பத்தையும் செய்வினை முடித்த இன்பத்தையும் பெறுதற்குரியனென்னுங் குறிப்பினது.

## ஒப்புமைப் பகுதி

1. தலைவன் தலைவியின் கூந்தலை அழகுபடுத்தல் : நற். உகச : 4-5.

வாருறு வணர்கதுப்பு : "வாருறு வணரைம்பால்" (கலி. ௫அ : 1.)

வணர்கதுப்பு : "வணர்சுரி யைம்பாலோய்" (சிலப். எ : 31.)

கதுப்பு உளர்தல் : "ஒலியல் வார்மயி ருளரினள் கொடிச்சி" (அகநா. க0உ : 5.)

தலைவன் தலைவியின் கூந்தலை உளர்தல் : "நெறிகுரற், சாந்தார் கூந்த லுளரி......மனைவயி னிருப்பவர்" (அகநா. ௬அக : 1-10.)

தலைவன் தலைவியின் புறஞ்சேர்தல் : "தாழிருங் கூந்தலென் றோழியைக் கைகவியாச், சாயலின் மார்பன் சிறுபுறஞ் சார்தர" (கலி

சஉ : 29-30) ; "நங் காதலி, உயங்குசாய் சிறுபுற முயங்கிய பின்னே"; "சிறுபுறங் கவையின னாக" (அகநா. கக : 18-9, உகூ : 23, நூஉ : 9.)

2. அழாஅல் : குறுந். கநடு : 4.

தலைவன் தலைவியினது கண்ணீரைத் துடைத்தல் : (குறுந். ச : 2) ; "பன்னாள், அழுதகண் ணீர்துடைத்த கை" (தண்டி. 114, மேற்.)

தலைவனது பிரிவால் தலைவி அழுதல் : குறுந். கக : 2, உஉ : 1, நூ0எ : 9, நூடுஎ : 1-2, நூகூடு : 2; ஐங். கஅ : 3-4, நூநூச : 5; கலி. எ0 : 11.

4-5. சிறுதினை மறுகாலில் அவரை படர்தல் : "கொய்பத முற்றன குலவுக்குரலேனல், விளைதயிர்ப் பிதிர்வின் வீயுக் கிருவிதொறும், குளிர்புரை கொடுங்காய் கொண்டன வவரை" (மலைபடு. 108-10); "சிறுதினை கொய்த விருவி வெண்காற், காய்த்த வவரை" (ஐங். உஅகூ : 1-2) ; "அவரை பொருந்திய பைங்குர லேனல்" (ஐந். எழு. 1.)

6. அரும்பனி யச்சிரம் : குறுந். கூஅ : 3, ஒப்பு.

5-6. அச்சிரக்காலத்தில் அவரை பூத்தல் : "அவரைப் பைம்பூப் பயில......சிதர்சினை தூங்கு மற்சிர வரைநாள்" (அகநா. உகூச : 9-11.)

(அஉ)

---

## தோழி கூற்று

[வரைவுக்குரிய முயற்சிகளோடு வந்த தலைவனைச் செவிலி ஏற்றுக் கொண்டமையைத் தோழி அச்செவிலியை வாழ்த்தும் வாயிலாகத் தலைவிக்கு உணர்த்தியது.]

அந. அரும்பெற லமிழ்த மார்பத மாகப்
பெரும்பெய ருலகம் பெறீஇயரோ வன்னை
தம்மிற் றமதுண் டன்ன *சினைதொறும்
தீம்பழந் தூங்கும் பலவின்
ஓங்குமலை நாடனை வருமென் றோளே.

எ - து. தலைமகன் வரைந்தெய்துதல் உணர்த்திச், செவிலியைத் தோழி வாழ்த்தியது.

† வேண்பூதன்.

---

(பி - ம்.) * கிளை. † வெண்பூகன்.

(ப - ரை.) தம் இல் - தமது வீட்டின்கண் இருந்து, தமது உண்டன்ன - தமது முயற்சியால் ஈட்டிய பொருளில் தம் கூற்றை உண்டாற் போன்ற இன்சுவையைத் தருவனவாகி, சினை தொறும் - கொம்பு தோறும், தீ பழம் - இனிய பழங்கள், தூங்கும் பலவின் - தொங்குகின்ற பலாமரங்களை யுடைய, ஓங்கு மலைநாடனை - உயர்ந்த மலைகளுள்ள நாட்டுக்குத் தலைவனை, வரும் என்றோள் - வரைதற்குரிய பொருளோடு வருவானென்று கூறியவளாகிய, அன்னை—, அரு பெறல் அமிழ்தம் ஆர்பதம் ஆக - பெறுதற்கரிய அமிழ்தமே உண்ணும் உணவாக, பெரு பெயர் உலகம் - பெரும்புகழுடைய சுவர்க்கத்தை, பெறீஇயர் - பெறுவாளாக!

(முடிபு.) நாடனை வருமென்றோளாகிய அன்னை, பெரும் பெயருலகம் பெறீஇயர்!

(கருத்து.) தலைவர் வருவாரென்று உணர்த்திய செவிலி வாழ்வாளாக!

(வி - ரை.) பெரும்புண்ணியம் செய்தார்க்கே அமுதவுணவு பெறற்குரிய தாகலின் 'அரும்பெற லமிழ்தம' என்றாள். ஆர்பதம் - உணவு. பெரும்பெயர் உலகம - பெரிய புகழையுடைய உலகம்; என்றது சுவர்க்கத்தை; பெயர் - பொருளுமாம். தமது என்றது தம் முயற்சியால் ஈட்டிய பொருளில் தமக்கென ஆன்றோரால் வரையறுத்த ஆறிலொரு கூற்றை. உண்டன்ன தீம்பழமென்று கூட்டுக. "தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால், அம்மா வரிவை முயக்கு" (குறள், 1107) என்ற விடத்து இன்பத்துக்குத் தமதுண்ட இன்பத்தை உவமை கூறுதல் காண்க.

வருமென்றோள் - வருவாளென்று கூறினாள்; அங்ஙனம் கூறியது தம்மில் தமதுண் டன்னதென்று உரைத்தலும் ஆம்; அன்ன: அன்னதென்பதன் விகாரம்.

இதனால் தோழி தலைவிக்கு, "தலைவன் வரைதற்குரிய முயற்சிகளைச் செய்வானாயினான்; அவற்றிற்கு அன்னை முதலியோர் உடம்பட்டனர்" என்று உணர்த்தினாள்.

ஓ, ஏ: அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. நலத்செய்தவர்கள் அமிழ்தம் பெறுகவென்று வாழ்த்தல்: குறுந். உ0௧: 1.

ஆர்பதம் : குறுந். ௩அக : 2; நற். கOஉ : 2; பதிற். ௫௫ : 11, ௬௬ : 9.

1-2. சுவர்க்கம் பெறும்படி வாழ்த்துதல் : குறுந். ௩௬க : 1-2.

5. குறுந். உOக : 7.

4-5. சினைதோறுந் தீம்பழம் தூங்கும் பலவு : (குறுந். உ௫எ : 1-3); "கீழு மேலுங் கார்வாய்த் தெதிரிச், சுரஞ்செல் கோடியர் முழவிற் றூங்கி, முரஞ்சுகொண் டிறைஞ்சின வலங்குசினைப் பலவே" (மலைபடு. 142-4.)

மு. ஒருவாறு ஒப்பு : குறுந். ௩௬க. (அ௩)

---

## செவிலித்தாய் கூற்று

[தலைவி தமரைப் பிரிந்து தலைவனுடன் சென்றாளாக, அதனை யறிந்த செவிலி, "யான் நேற்று வழக்கம்போல் தழுவவும் அதனை என் மகள் வெறுத்தாள்; அதன் காரணத்தை அப்பொழுதே அறி திலேன்; இப்பொழுது அறிந்தேன்" என்று கூறி இரங்கியது.]

அச. பெயர்த்தனென் முயங்கயான் வியர்த்தனெ னென்றனள்
இனியறிந் தேனது துனியா குதலே
கழறொடி யாஅய் மழைதவழ் பொதியில்
வேங்கையுங் காந்தளு நாறி
ஆம்பன் மலரினுந் தான்றண் ணியளே.

எ - து. மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

[மகள் - தலைவி. போக்கிய - தலைவனோடு செல்வதற்குக் காரண மாகிய.]

மோசிகீரன்.

(ப - ரை.) கழல் தொடி ஆய் - உழல இட்ட தோள்வளையை யுடைய ஆயென்னும் வள்ளலது, மழை தவழ் பொதியில் - மேகங் கள் தவழும் பொதியின்மலையில் உண்டான, வேங்கையும் காந்தளும் நாறி - வேங்கை மலரினது மணத்தையும் காந்தள் மலரினது மணத் தையும் வீசி, ஆம்பல் மலரினும் - ஆம்பல் மலரைக்காட்டிலும், தண் ணியள் - குளிர்ச்சியையுடையளாகிய என்மகள், பெயர்த்தனெ

முயங்க - யான் ஒருமுறை தழுவியதோடமையாமல் மீட்டும் தழுவும் காலத்து, யான் வியர்த்தனென் என்றனள் - நான் வியர்வையை யடைந்தேன் என்று கூறினள்; அது துனி ஆகுதல் - அங்ஙனம் யான் தழுவியது அவளுக்கு வெறுப்புண்டாக்குதற்குக் காரணமாதலை, இனி அறிந்தேன் - அவள் கூறிய அக்காலத்தே அறிந்திலேனாயினும் இப்பொழுது அறிந்தேன்.

(முடிபு.) தண்ணியள், யான் முயங்க வியர்த்தனென் என்றனள்; அது துனியாகுதலை இனி அறிந்தேன்.

(கருத்து.) தலைவி எம்பால் வெறுப்புற்று ஒரு தலைவன்பால் விருப்புற்றுச் சென்றனள்; இதனை முன்னரே அறிந்திலன்.

(வி - ரை.) வியர்த்தனெ னென்றமையால் முன் ஒருமுறை தழுவினானென்றது பெறப்பட்டது. அங்ஙனம் தழுவிய பழக்கத்தால் செவிலி மீட்டும் தழுவினாள். தலைவியை அருகில் துயிலச்செய்தல் செவிலியர் வழக்கம். வியர்த்தனெனென்றது, வியர்த்தனனாதலின் நீ முயங்கற்கவென்ற குறிப்பினது.

செவிலி அறிந்தது, "ஒருதலைவனது முயக்கத்தையே இன்பமாகக் கருதியவளாதலின் பிறர் முயக்கம் வெறுப்புறச் செய்தது" என்பதனை. "முன்பு விருப்பாயிருந்த என் முயக்கம் இப்பொழுது அவளுக்கு வெறுப்பாயிற்று" என்பதும் குறிப்பு;

> "குறுக வந்து குவவுநுத னீவி
> மெல்லெனத் தழீஇயினே னாக வென்மகள்
> நன்னா ராகத் திடைமுலை வியர்ப்பப்
> பல்கான் முயஙகினண் மன்னே" (அகநா. சக : 6-9)

என்பதில் இக்கருத்து விரிவுற அமைந்திருத்தல் காண்க.

இனி - இப்பொழுது (கலி. க : 4, ந.) இனி யறிந்தேனென்றமையின் அப்பொழுதே அறிந்திலேனென்பதும், அறிந்திருப்பின் அவள் நெஞ்சுவிரும்பியது ஆற்றியிருப்பேனென்பதும் போந்தன. ஆகுதலே: ஏகாரம் அசைநிலை. கழல் தொடி : இந்நூல் முதற் செய்யுளின் மூன்றுமடியையும் அதன் உரை முதலியவற்றையும் பார்க்க.

ஆய் : ஏழுவள்ளல்களுள் ஒருவன். இவனுக்குரியது பொதியின்மலை. மழைதவழ பொதியிலென்றது, காந்தளும் வேங்கையும்

வளம்பெற வளர்தற்குரிய மழையுண்டென்பதைக் குறித்தது. தான் வாழும் குறிஞ்சிநிலத்துக்குரிய வேங்கையின் மணத்தையும் காந்தளின் மணத்தையும் அறிந்தவளாதலின், தலைவியின் மேனிமணத்துக்கு அவற்றை உவமை கூறினாள். தலைவியின் மேனி இயற்கை மணம் உடையதென்றபடி. ஆம்பல்மலர் நீர்ப்பூவாதலின் தண்மைக்கு உவமையாயிற்று; "பொய்கைப் பூவினு நறுந்தண் ணியளே" (ஐங். கூஎ : 4.) தான் நாள்தோறும் முயங்கித் துய்த்த பழக்கத்தினால் தலைவி மேனியின் நறுமையையுந் தண்மையையும் கூறினாள்.

தான் : அசைநிலை. தண்ணியளே : ஏகாரம் இரக்கக்குறிப்பு ; இத்தகைய தன்மையுடையவள் வெப்பமிக்க பாலையிற் செல்ல நேர்ந்ததே யென்னும் நினைவிற்று.

## மேற்கோளாட்சி

1. வினையெச்சத் தன்மைத்தெரிநிலைமுற்று (தொல். எச்ச. 61, ந.) ; தன்மை வினைமுற்று வினையெச்சமாயிற்று (நன். 350, மயிலை, 351, சங், வி ; இ. வி. 237, 250.)

4-5. குறிப்புவினைமுற்று, சிறுபான்மை ஆக்கமின்றி வந்தது (தொல். எசச. 36, சே, ந ; நன். 346, மயிலை ; இ. வி. 249.)

மு. பிற்றை ஞான்று தலைமகளது போக்குணர்ந்து செவிலி மயங்கிப் பெரியதோர் கவலையளாய் நொதுமலை இவை செய்தது இது கருதிப் போலும் என்று கூறியது (இறை. 23) ; உடன் போக்கிய செவிலி கவன்றுரைத்தது (தொல். அகத். 39, இளம்.) ; உடன்போக்கிற்கு மகள் நெஞ்சு துணிந்த காலத்துத் தன்மேல் அன்பு நீங்கியதுணர்ந்து செவிலி கூறியது (ஷை. களவு. 24, ந.) ; செவிலி கூற்று (ஷை. செய். 190, பேர் ; இ. வி. 562.)

## ஒப்புமைப் பகுதி

2. இனி : குறுந். கக : 4, கரு௫ : 3, உ0௫ : 5.

2, மு. கலி. கச : 9.

செவிலி முயக்கம் தலைவிக்கு வெறுப்பைத் தருதல் குறுந். ௫௫ : 6-7.

3. கழறொடி : குறுந். க : 3, ஒப்பு.

கழறொடியாய் : புறநா. ௬எச : 16.

3, மு. புறநா. கஉ௮ : 5.

4. வேங்கைமணம் நாறுதல்: குறுந். உகுரு: 6, ஒப்பு.

3-4. பொதியில் வேங்கை: "வகையமை தண்டாரான் கோடுயர் *பொருப்பின்மேற், றகையிணர் ரிளவேங்கை மலர்" (கலி. ருஎ: 16-7.)

4-5. தலைவியின்மேனி மலர்களின் மணம் உடைமை: குறுந். கஉ: 1-4, ஒப்பு.

தலைவிமேனியின் நறுமையும் தண்மையும்: குறுந். எ0: 2, ஒப்பு.

(அச)

---

## தோழி கூற்று

*[தலைவனுக்குத் தூதாக வந்த பாணன், "தலைவன் மிக்க அன்புடையன்" என்று பாராட்டியபொழுது தோழி, "இவன் சொல்லத்தான் அவரதன்பு புலப்படுகின்றது; மற்று அவர் செயலால் அறிந்திலம்" என்று கூறி வாயில் மறுத்தது.]*

அரு. யாரினு மினியன் பேரன் பினனே
உள்ளூர்க் குரீஇத் துள்ளுநடைச் சேவல்
சூன்முதிர் பேடைக் கீனி லிழைஇயர்
தேம்பொதிக் கொண்ட தீங்கழைக் கரும்பின்
நாறா வெண்பூக் கொழுதும்
யாண ரூரன் பாணன் வாயே.

எ - து. வாயில் வேண்டிச் சென்ற பாணற்குத் தோழி சொல்லி வாயின் மறுத்தது.

† வடமன் தாமோதரன்.

(ப - ரை.) *உள் ஊர் குரீஇ - ஊரினுள் இருக்கும் குருவியின், துள்ளு நடை சேவல் - துள்ளிய நடையையுடைய ஆண்பறவையானது, சூல் முதிர் பேடைக்கு - கருப்பம் முதிர்ந்த பெண்குருவிக்கு, ஈன் இல் - பொறை யுயிர்த்தற்குரிய இடத்தை, இழைஇயர் - அமைக்கும்பொருட்டு, தேம் பொதி கொண்ட - தேன் பொதிதலைக் கொண்ட, தீ கழை கரும்பின் - இனிய கோலையுடைய கரும்பினது, நாறா வெண் பூ - மணம் வீசாத வெள்ளிய பூவை, கொழுதும் -*

---

** பொருப்பு - பொதியின்மலை.*

(பி - ம்.) † *வடம வண்ணக்கன் தாமோதரன்.*

கோதி யெடுக்கும், யாணர் ஊரன் - புதுவருவாயையுடைய ஊருக்குத தலைவன், பாணன் வாயே - பாணனது சொல்லின் அளவில், யாரினும் இனியன் - எல்லாரினும் இனிமையை யுடையான்; பெரு அன்பினன் - தலைவியின்பாற் பெரிய அன்பினை உடையான்; உண்மையில் அங்ஙனம் இலன்.

(முடிபு.) ஊரன், பாணன் வாயே இனியன்; பேரன்பினன்.

(கருத்து.) பாணன் தலைவனைப் புகழினும் தலைவன் அன்பிலன்.

(வி - ரை.) அன்பினனே: ஏகாரம், அசைநிலை. உள்ளூர் - ஊருள்; முன்பின் மாறியது. குரீஇ - குருவி; இந்நூல் ஈ௨-ஆம் செய்யுள் 5-ஆம் அடியின் விசேடவுரையைப் பார்க்க. துள்ளு நடைச் சேவலென்றது அதன் ஊக்கத்தைப் புலப்படுத்தியது; சேவலுக்குத் துள்ளுநடை கூறினமையின் சூன்முதிர் பேடை ஒய்ந்த நடையினதென்பதும் பெறப்படும். ஈன் இல் - முட்டையை ஈனும் இடம். அது மெத்தென விருத்தல் வேண்டுமாதலின் கரும்பின் பூவைச் சேவல் கொழுதியது.

தேம் பொதி - தேனடையுமாம்; தேம் - தேன்போலும் இனிய சாறு எனலுமாம். தீங்கழை - சுவையினிமையையுடைய கோல். நாறுமை கரும்பின் பூவிற்கு இயல்பு. வேறொன்றிற் செல்லவொட்டாமல் தடுத்துத் தன்னையே உண்ணச் செய்யும் தேம்பொதியை உடைய தேனும் அதன்பாற் செல்லாது தன் கருமமே கண்ணுகிப் பூக் கொழுது மென்றது அச்சேவலின் பேரன்பைப் புலப்படுத்திப் பறவையினங்களும் அன்பு பாராட்டும் ஊரையுடையான் தான் அவ்வியல்பு பெற்றிலனென்னும் நினைவை வெளிப்படுத்தியது.

வாயே: ஏகாரம் பிரிநிலை; வாயே - வாயில் மட்டும்; "நின் வாய், மெய்கொண்ட வன்பின ரென்பதென்" (சிற். 386) என்பதன் உரையிலுள்ள, 'நின்வாயில் அவர் விள்ளா அருள் பெரிய ரன்றோ வென்றுரைப்பினும் அமையும்' என்னும் பகுதியைக் காண்க. வாய்: ஆகுபெயர்.

பாணன், "தலைவன் யாரினும் இனியன்; பேரன்பினன்" எனக் கூறக் கேட்ட தோழி அவனது சொல்லால் மட்டும் தலைவன் அங்ஙனம் இருத்தலை யன்றிச் செயலில் இலனென்னும் கருததுபடக் கூறினள். இங்ஙனம் தலைவனது அன்பின்மையைக் குறிப்பாற் கூறினமையின் வாயின் மறுத்தாளாயிற்று.

இனிய தேனடையும் தீங்கழையும் உளவாகவும், மணமும் நன்னிறமும் இல்லாத கரும்பின் பூவைக் குருவி கொழுதும் ஊரனென்றது, அறத்தோடு பொருந்திய இன்பத்தைத்தரும் தலைவி உளளாகவும் அவள்பாலன்பின்றி, அன்பும் கற்பு மில்லாத பரத்தையரைத் தலைவன் விரும்பினானென்னும் குறிப்பினது; "பூத்த கரும்பிற் காய்த்த நெல்லிற், கழனி யூரன்" (ஐங். ச) என்பதன் உரையில் அதன் உரையாசிரியர், 'பூத்துப் பயன்படாக் கரும்பினையும் காய்த்துப் பயன்படும் நெல்லினையுமுடைய ஊரனென்றது, ஈன்று பயன்படாப் பொது மகளிரையும் மகப்பயந்து பயன்படுங் குலமகளிரையும் ஒப்ப நினைப்பான் என்றவாறு' என்றெழுதிய பகுதி இங்கே கருதற்குரியது.

பாணன் பொய் கூறினனாதலின் அவன்பால் வெகுட்சியுற்ற தோழி அவனை முன்னிலைப்படுத்திக் கூறுதலையும் விரும்பாளாகிப் படர்க்கையில் உணர்த்தினாள்.

## மேற்கோளாட்சி

2. பறவையின் ஆண்பாற்கெல்லாம் சேவலென்னும் பெயர் உரியது (தொல். மரபு. 48, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. பொரன்பினன்: குறுந். ௩எ : 1, ஒப்பு.

4. தீங்கழைக் கரும்பு: மலைபடு. 119.

கரும்பில் தேனடை இருத்தல்: "கரும்பிற் றொடுத்த பெருந்தேன்" (சிலப். ௧0 : 82); "அறையுறு கரும்பி னணிமடற் றொடுத்த, நிறையுறு தீந்தேன்" (பெருங். ௧. 48 : 146-7); "தீங்கரும் பெருத்திற் றூங்கி யீயின்றி யிருந்த தீந்தேன்", "கரும்பின்மேற் றொடுத்ததேன்" (சீவக. 712, 1936.)

3-4. குருவிச் சேவல் இல் இழைத்தல்: "மனையுறை குரீஇக் கறையணற் சேவல், பாணர் நரம்பின் சுகிரொடு வயமான், குரற்செய் பீலியி னிழைத்த குடம்பை" (புறநா. ௩௧௮ : 4-6.)

5. பூக்கொழுதுதல்: குறுந். ௨௬௩ : 2.

4-5. கரும்பின் நாறாப்பூ: 'நாற்றங் கொள்ளப்படாத கரும்பின் பூ' (ஐங். ௧௧, உரை); "தீங்கரும் பீன்ற திரள்கா லுளையலரி, தேங்கமழ் நாற்ற மிழந்தாஅங்கு" (நாலடி. 199.)

கரும்பின் வெண்பூ: நற். ௬௬௬ : 7-8 ; புறநா. ௩௫ : 10.

2-5. குருவிச் சேவல் கருப்பம்பூவாற் பேடைக்கு ஈனில் இழைத்தல்: "கரும்பின், வேல்போல் வெண்முகை பிரியத் தீண்டி, முதுக் குறை குரீஇ முயன்றுசெய் குடம்பை" (நற். ௬௬௬ : 7-9) ; "சூன் முதிர் துள்ளு நடைப்பெடைக் கிற்றுணைச் சேவல்செய்வான், தேன் முதிர் வேழத்தின் வெண்பூக் குதர்செம்ம லூரன்" (சிற். 369) ; "மனையுறை குருவி வளைவாய்ச் சேவல், சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி, ஈனி லிழைக்க வேண்டி யாணு, அன்புபொறை கூர மேன்மேன் முயங்கிக், கண்ணுடைக் கரும்பி னுண்டோடு கவரும், பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை, வருபுன லூரன்" (பதினோராந். திருவாரூர் மும்மணிக். ௧௧.)

பறவைகள் பூவாற் கூடு கட்டுதல்: சீவக. 65. (அரு)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவைத் தலைவி ஆற்றாளெனக் கவலையுற்ற தோழியை நோக்கி, "தலைவர் என்னோடு இருந்து இன்புறுதற்குரிய பொழுதாகிய இக்கூதிர்யாமத்திலே தனிமைத்துன்பத்தை மிகுதிப் படுத்தும் ஆன்மணிக்குரலைக் கேட்போர் வேறு யாருளர்? நான் ஒருத்தியேயன்றே?" என்று தலைவி கூறியது.]

அசு. சிறைபனி யுடைந்த சேயரி மழைக்கட்
பொறையரு நோயொடு புலம்பலைக் கலங்கிப்
பிறருங் கேட்குந ருளர்கொ லுறைசிறந்
தூதை தூற்றுங் கூதிர் யாமத்
தானுளம் புலம்புதொ றுளம்பும்
நாநவில் கொடுமணி நல்கூர் குரலே.

எ - து. ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

வெண்கொற்றன்.

(ப - ரை.) தோழி, உறை சிறந்து - மழைத்துளி மிக்கு, ஊதை தூற்றும் - வாடைக் காற்று வீசித்தூவுகின்ற, கூதிர்யாமத்து - கூதிர் பருவத்தின் நள்ளிரவில், ஆன் - எருதானது, உளம்பு உலம்புதொறு

உளம்பும் - ஈ ஒலிக்குந்தோறும் அலைக்கின்ற, நா நவில் கொடு மணி - நாவினால் முழங்குகின்ற கொடிய மணியின், நல்கூர் குரல் - மெல்லிய ஓசையை, சிறை பனி உடைந்த - தடுக்கப்பட்ட நீர் உடைந்து துளித்துளியாக விழுகின்ற, செ அரி மழை கண் - செம்மையான அரிகளையும் குளிர்ச்சியையுமுடைய கண்ணோடும், பொறை அரு நோயொடு - பொறுத்தற்கரிய காமநோயோடும், புலம்பு அலைக் கலங்கி - தனிமை வருத்துதலாற் கலங்கி, கேட்குநர் - கேட்டுவருந்துவார், பிறரும் உளர்கொல் - என்னையன்றிப் பிறமகளிரும் உள்ளாரோ?

(முடிபு.) கூதிர்யாமத்து ஆன் உளம்பும் மணியின்குரலைக் கேட்குநர் பிறரும் உளர்கொல்?

(கருத்து.) தலைவர் உடனிருத்தற்குரிய இப்பருவத்தில் யானொருத்தியே தனிமைத்துன்பத்தை உடையேனாயினேன்.

(வி - ரை.) நோயென்றது பிரிவாற்றாமையால் உளதாகுந் துன்பத்தை. புலம்பு அலைக்கலங்கி - புலம்பு அலைத்தலினாற் கலங்கி; 'நீரலைக் கலாவ - நீரலைத்தலாலே கலக்க மெய்த' (நெநேல். 6, ந.) ஒடுவைக் கண்ணுக்குங் கூட்டுக. பிறரும்: உம்மை, இறந்தது தழீஇயது. கூதிர்யாமத்தின்கண் தலைவிக்குப் பிரிவின் துன்பம் மிக்குக் காமம் பெருகுமாதலின் அவள் வருந்தினாள்; "யாமங் கொளவரிற் காமங், கடலினு முரைஇக் கரைபொழி யும்மே" (அகநா. ௧௨௮: 3-4.) தலைவனோடு இருந்து இன்புறுதற்குரியவை கூதிராகிய பெரும்பொழுதும் யாமமாகிய சிறுபொழுதும்; இவை குறிஞ்சி யொழுக்கத்துக்குரியன. அக்காலத்திலும் தலைவர் வாராராயினரென்று தலைவி கவன்றாள். நுளம்பு - ஈ; இங்கே மாட்டு ஈ; "நின்னருள், ஆணை வைப்பிற் காடெனு வனுவும், வானுற நிமிர்ந்து காட்டுங், கானிலா னுளம்புங் கருடனு தலினே" (கோயினான்மணிமாலை, ௪: 23-6.) தன்னைத் துன்புறுத்தும் அவ்வீயின் குரலைக் கேட்ட மாத்திரத்தில் அதனால் முன்னர்த் துன்புற்றறிந்த ஆன் அதனை யோட்டும்பொருட்டுத தலையை அசைக்க அப்பொழுது அவ்வானின் கழுத்திலுள்ள மணி யசைந்து ஒலித்தது. உளம்புதல் - அலைத்தல் (கலி. ௨௩ : 1, ந.) தான் கேட்பதற் கின்னாமையின் கொடுமணி யென்றாள். யாவரும் துயிலும் யாமமாதலின் அம்மணியின் மெல்லிய குரலும் இவளுக்குக் கேட்டது. அவ்வொலி, யாமத்தையும தன் தனிமையையும் மிகுதியாகக் காட்டிக் தலைவியைத் துன்புறுத்தியது. குரலே: ஏ, அசைநிலை.

தலைவர் இருத்தற்குரிய கூதிர் யாமத்தில் அவரைப் பிரிந்திருப்ப தெவ்வாறென்று தலைவி இரங்கினாள்.

## மேற்கோளாட்சி

1 சிறை யென்பது தடுத்துக் காத்தலை உணர்த்தும் (சீவக. 2890, ந.)

மு. தனித்துழி இறைவி துனித்தழுதிரங்கல் (நம்பி. 205.)

## ஒப்புமைப் பகுதி

1. சேயரிக்கண் : ஐங். ஐம். 15.

தலைவன் பிரிவினால் தலைவி அழுதல்: குறுந். கூஅ : 4 - 5, ஒப்பு.

2. பொறையருநோய் : "பொறையில்லா நோயோடு" (கலி. கூ : 4.)

புலம்பலைக்கலங்கி : "நோயலைக் கலங்கிய" (நற். கசு : 1.)

3. பிறர் : குறுந். உசுகூ : 5.

தலைவி என்னைப்போலப் பிறரும் உளரோவென்றல்: நற். கமச : 8 - 12 ; அகநா. உ௦உ : 9 - 15.

4. ஊதை தூற்றும் யாமம் : "ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்து" (நள். 349, சங். மேற்.)

3-4. உறையும் ஊதையும் : குறுந். ௫௫ : 2-3, ஒப்பு.

5-6. ஆன்மணி : மலைபடு. 573.

4-6. தலைவி யாமத்தில் ஆன்மணியோசை கேட்டுத் துன்புறுதல் : குறுந். கஅ௦ : 5 - 7, உஎசு · 1-4. (அகூ)

---

## தலைவிகூற்று

[தலைவன் தெய்வங் காட்டிச் சூளுற்றுப் பின் பிரிந்து நீட்டித்தானாக, அத்தெய்வம் ஒறுக்குமோவென்று அஞ்சிய தலைமகள், "என்பால் உண்டான வேறுபாடுகளுக்குக் காரணம் தலைவர் கொடுமையன்று; என் முனைநிலையேயாகும்" என்று கூறியது.]

அஎ. மன்ற மரா அத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறூஉ மென்ப யாவதும்
கொடிய ரல்லரெங் குன்றுகெழு நாடர்
பசைஇப் பசந்தன்று நுதலே
ஞெகிழ ஞெகிழ்ந்தன்று தடமென் றோளே.

எ-து. தலைமகள் தெய்வத்திற்குப் பராயது.

[பராயது - வேண்டிக்கொண்டது; சிற். 235, கொளு, உரை.]

கபிலர்.

(ப - ரை.) மன்றம் மராஅத்த - பொதுவிடத்திலுள்ள மராத்தின் கண் தங்கும், பேஎம் முதிர் கடவுள் - பிறர்க்கு அச்சம் செய்தல் முதிர்ந்த தெய்வம், கொடியோர் - கொடுமையுடையாரை, தெறூஉம் என்ப - வருத்தும் என்று அறிந்தோர் கூறுவர்; எம் குன்று கெழு நாடர் - குன்றுகள் பொருந்திய நாட்டையுடைய எம் தலைவர், யாவதும் கொடியர் அல்லர் - சிறிதும் அத்தெய்வத்தால் ஒறுத்தற் குரிய கொடுமையையுடையரல்லர்; நுதல் பசைஇ பசந்தன்று - என்நெற்றி நான் அவரை விரும்பியதனால் பசலைபெற்றது; ஞெகிழ - என்மனம் அவர் திறத்து நெகிழ்ந்தமையால், தட மென் தோள் பரந்த மெல்லிய என் தோள், ஞெகிழ்ந்தன்று - மெலிவுற்றது.

(முடிபு.) கடவுள் கொடியோரைத் தெறூஉம் என்ப; எம் நாடர் கொடியர் அல்லர்; என் நுதல் பசைஇப் பசந்தன்று; ஞெகிழத் தோள் ஞெகிழ்ந்தன்று.

(கருத்து.) என்பால் உண்டான வேறுபாடுகளுக்குத் தலைவர் காரணரல்லர்.

(வி - ரை.) மன்றமென்பது பலர் கூடியிருக்கும் மரத்தினடி. மராம் - செங்கடம்பு. இதன்கண் தெய்வம் இருத்தல், "நல்லரை மராஅத்த கடவுள்" (மலைபடு. 395-6) என்பதனாலும் பெறப்படும். கொடியோரை வருத்துவதாதலின் 'பேஎமுதிர் கடவுள்' என்றாள்.

தலைவன் தலைவியோடு அளவளாவியபொழுது கடம்பமரத்தி லுறையும் கடவுள்மேல் ஆணையிட்டு, "நின்னைப் பிரியேன்; பிரியின் ஆற்றேன்" என்று தெளித்தான்; பின்னர் அவன் பிரிந்து நீட்டித்தானாக அப்பிரிவினால் தலைவி வேறுபாடு உற்றாள். தன்னு

டைய வேறுபாடுகளுக்குக் காரணம் தலைவன் பிரிந்துறையும் கொடுமையே ஆதலின், அக் கொடுமை கருதி அவனாற் சூளுறப்பட்ட கடவுள் அவனை ஒறுக்குமென்று அவள் கவன்றனள். ஆதலின் தலைவன் கொடுமையுடையவனல்லனென்று கூறி அவன் துன்புறுமாற் செய்ய வேண்டுமென்று தெய்வத்தைப் பரவினாள்.

குன்றுகெழுநாடரென்றது தலைவரென்னுந் துணையாய் நின்றது. பசைதல் - விரும்புதல்; "பசைஇய கேள்வனை" (பெருங். ரு. 1 : 229.) தலைவன் பிரிவினால் நுதல் பசந்தது.

நுதற்பசலையும் தோள்நெகிழ்வும் தலைவன் கொடுமையினால் உண்டானவையல்ல; என்னுடைய மனநிலையினாலேயே அவை உண்டாயினவென்று தலைவி கூறினாளாயிற்று. அவர்பாற் குற்றமில்லையாதலின் அத்தெய்வம் அவரைப் பாதுகாக்கவேண்டுமென்பதும் குறிப்பு.

நுதலே, தோளே : ஏகாரங்கள் அசைநிலை.

## மேற்கோளாட்சி

1. பேமென்னும் உரிச்சொல் அச்சமாகிய குறிப்புணர்த்தி நின்றது (தொல். உரி. 68, இளம், 69, சே, தெய்வச், 67, ந.); மன்றமராஅத்த பேஎமுதிர் கடவுளென்பது மராஅத்துக் கடவுளென நிற்கும் (டி. எச்ச. 65, ந.); மராஅத்த கடவுளென்பது பகுதிப்பொருள் விகுதி பெற்று நின்றது (இ. வி. 300.)

1-2. தெய்வமஞ்சலென்னும் மெய்ப்பாடு வந்தது (தொல். மெய்ப். 24, இளம்.)

மு. தலைவன் செய்த சூளுறவு பொய்த்தற்காகத் தெய்வம் அவனை வருத்துமென்று தலைவி அஞ்சியபொழுதும் தாவில் நன்மொழி கூறும் பொழுதும் தலைவிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 21, 23, இளம்.); தலைவன் தெய்வத்தை நோக்கிச் சூளுற்றுப் பொய்த்தானாக, தெய்வம் அச்சூளுறவிற்கு அவனை வருத்துமென்று அச்சம் நீட்டிப்பின் தலைவிக்குக் கூற்று நிகழும் (டி. டி. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. மராமரத்திலுள்ள கடவுள் : கலி. ௧0௧ : 14-5 ; தஞ்சை. 132.

1-2. கடவுள் கொடியோரைத் தெறுதல் : பரி. அ : 65-8 ; சிலப். ௫ : 128-34.

4. நுதல் பசத்தல்: குறுந்: ௪அ: 5, உ0௫: 7; நற். ௭௩: 10, ௧0அ: 8, ௧௩௩: 3, ௧௬௭: 11, உ௪௭: 7-8, உஅஅ: 5, ௩உஉ: 9, ௩௬அ: 7, ௩அஅ: 1-2; ஐங். ௫௫: 4, ௬௭: 5, ௧0௫: 4, ௧0௭: 2, உ௧௧: 4, உஉஉ: 4; கலி. உஅ: 15; அகநா. ௧0உ: 19, உ௩௫: 17, ௩௭௬: 13.

5. தோள் நெகிழ்தல்: குறுந். ௭௭: 6, ௬0: 7, ௧௧௧: 1, உ௧0: 5, உ௩௧: 1, ௩௫௭: 2, ௩௭௭: 2, ௩அ௧: 1; நற். ௧௩0: 7, ௧௩௧: ?, உ௩௭: 1; ஐங். ௩௧: 3, ௧௩௩: 3; அகநா. ௧: 8, ௪௧: 1-2, ௧௬௧ 13, உ௭0: 4.

4-5. நுதல் பசத்தலும் தோள் நெகிழ்தலும்: குறுந். ௧அ௫: 1-2; நற். ௧௫௧: 1, ௧௬௭: 1-2; அகநா. அ௫: 1, ௧௭௧: 1-3, ௩0௭: 1. (அ௭)

---

## தோழி கூற்று

["தலைவன் இரவுக்குறியை விரும்புகின்றான்; இனி இரவிலே வருவான்" என்று தோழி தலைவிக்குக் கூறியது.]

அஅ. ஒலிவெள் ளருவி யோங்குமலை நாடன்
சிறுகட் பெருங்களிறு வயப்புலி தாக்கித்
தொன்முரண் * சோருந் துன்னருஞ் † சாரல்
நடுநாள் வருதலும் வரூஉம்
வடுநா ணலமே தோழி நாமே.

எ - து. இரவுக்குறி நேர்ந்த வாய்பாட்டால் தோழி தலைமகட்குச் சொல்லியது.

மதுரைக் கதக்கண்ணன்.

(ப - ரை.) தோழி—, ஒலி வெள் அருவி - ஒலிக்கும் வெள்ளிய அருவியையுடைய, ஓங்கு மலைநாடன் - உயர்ந்தமலைகளுள்ள நாட்டையுடைய தலைவன், சிறு கண் பெரு களிறு - சிறியகண்ணையுடைய பெரிய களிறு, வய புலி தாக்கி - வலியையுடைய புலியை எதிர்த்துப் பொருது, தொல் முரண் சோரும் - தனது பழைய வலிசோர்தற்கிடமாகிய, துன் அரு சோலை - மக்கள் அடைதற்கரிய சாரலின் வழியே, நடுநாள் வருதலும் வரூஉம் - இடையிரவில் வருதலையும்

(பி - ம்.) * சொல்லுங். † சோலை.

செய்வான்; நாம் வடு நாணலம் - அங்ஙனம் அவன் வருதலினால் நமக்கு உண்டாகும் பழிக்கு நாம் நாணேம்.

(முடிபு.) தோழி, மலைநாடன் வருதலும் வரூஉம்; நாம் வடு நாணலம்.

(கருத்து.) தலைவர் இனி இரவில் வந்து அளவளாவுவர்.

(வி - ரை.) களிறும் புலியும் எதிர்த்துப் போர்செய்யும் சாரலாதலின் துன்னுதற்கு அரியதாயிற்று. வயப்புலி - சிங்கமுமாம். நடு நாள் - இடையாமம். வருதலும் வரூஉம்: "நல்கினு நல்குவர்" (குறுந். ௩௭ : 1) என்பதன் விசேடவுரையைப் பார்க்க. 'நடுநாள்வருதலும்வரூஉம்' என்பது இரவுக்குறிநேர்ந்ததைப் புலப்படுத்தியவாறு.

வடுவென்றது தலைவன் வருதலைப் பிறர் குறிப்பால் அறிந்து பழிகூறுதலை.

வழியின் ஏதத்துக்கு அஞ்சாமல் அவனே வரும்பொழுது அவனை ஏற்றுக்கொள்ளாமல் வடுவை நாணி மறுத்தல் அழகன்றெனபது தோழியின் நினைவு.

அருவியானது ஓங்கிய மலையிலிருந்து கீழிழிந்து நிலப்பரப்பிலுள்ளாருக்குப் பயன்படுவதுபோலத் தலைவன் நெடுந்தூரம் கடந்து வந்து நமக்குப் பயன்படுவானென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

மு. பகற்குறி நேர்ந்த இடத்துத் தோழி தலைவிக்குக் கூறியது (தொல். களவு. 24, இளம்.): * இரவுக்குறிமறுத்தது (தமிழ்நெறி. 18); பாங்கி தலைமகட்குத் தலைமகன் குறையறிவுறுத்தல் (நம்பி. 158.)

## ஒப்புமைப்பகுதி

2-3. களிறு புலியைத் தாக்குதல்: குறுந். ௧௪௧ : 4 - 5, ௩௪௩ 1-3; மலைபடு. 307-9; நற். ௩௬ : 1-3, ௩௧ : 4-6, ௧௦௪: 1-2, ௧௫௧ 2-3, ௨௦௨ : 1-4, ௨௧௭ : 2-5, ௨௪௭ : 1-2, ௩௫௩ : 9-10; கலி. ௩௮ 6-7, ௪௨ : 1-2, ௪௮ : 1-7, ௪௯ : 1-2, ௫௨ : 1-4; அகநா. ௩௩௨ : 2-9.

4. தலைவன் நள்ளிருளில் வருதல்: குறுந். ௨௬௮ : 5.

வருதலும் வரூஉம்: குறுந். ௩௭ : 1, ஒப்பு. (௮௮)

* இக்கருத்துச் சிறப்புடையது.

## தோழி கூற்று

[தலைவி தலைவன்பெயரை வள்ளைப்பாட்டில் அமைத்துப் பாடினு ளாக, அதனைக் கேட்ட ஊரினர் அலர் தூற்றுதலைத் தோழி தலைவன் சிறைப்புறத்திலிருக்கும்பொழுது புலப்படுத்தி, விரைவில் வரைதல் நலமென்பதை உணர்த்தியது.]

அகூ. பாவடி யுரல பகுவாய் வள்ளை
ஏதின் மாக்க ணுவறலு *நுவல்ப
அழிவ தெவன்கொலிப் பேதை யூர்க்கே
பெரும்பூட் பொறையன் பேஎமுதிர் கொல்லிக்
கருங்கட் டெய்வங் குடவரை யெழுதிய
நல்லியற் பாவை †யன்னவிம்
மெல்லியற் குறுமகள் பாடினள் குறினே.

எ - து. (1) தலைமகன் சிறைப்புறத்தானுகத் தோழி தன்னுள்ளே சொல்லுவாளாய்ச் சொல்லியது.

[தலைவன் சிறைப்புறத்தானுகத் தோழி வள்ளைப் பாட்டைப் பற்றிக் கூறுதல்: கலி. சுo - சுஉ.]

(2) தலைமகற்குப் பாங்காயினுர் கேட்பச் சொல்லி வாயின்மறுத் ததுமாம்.

பரணர்.

(ப - ரை.) பெரு பூண் பொறையன் - பெரிய அணிகலத்தை யுடைய சேரனுக்குரிய, பேஎம் முதிர் கொல்லி கரு கண் தெய்வம் - அச்சந்தருதல் மிக்க கொல்லிமலையிலுள்ள கரிய கண்களையுடைய தெய்வம், குடவரை எழுதிய - அம்மலையின் மேற்குப் பக்கத் தில் எழுதிய, நல் இயல் பாவை அன்ன - நல்ல இயலையுடைய பாவையை ஒத்த, இ மெல் இயல் குறுமகள் - இந்த மெல்லிய இயல்பை யுடைய தலைவி, பாடினள் குறின் - தலைவனுடைய பெயரைப் பாடி இடிப்பாளாயின், பா அடி உரல பகுவாய் வள்ளை - அங்ஙனம் அவள் பரந்த அடியினையுடைய உரலினது பகுவாயிடத்துத தானியம் இடிக் கும்பொழுது பாடும் வள்ளைப்பாட்டைக் குறித்து, ஏதில் மாக்கள் - அயலார்கள், நுவறலும் நுவல்ப - குறை கூறுதலையும் செய்வார்கள்;

(பி - ம்.) * நுவறல். † யன்னவென்.

இ பேதை ஊர்க்கு - இத்தகைய அறிவின்மையையுடைய ஊரினர் கூறும் சொற்களின்பொருட்டு, அழிவது எவன் - வருந்துதலாற் பயன் யாது?

(முடிபு.) குறுமகள் பாடினள் குறின், மாக்கள் நுவல்ப; இப்பேதையூர்க்கு அழிவது எவன்கொல்?

(கருத்து.) ஊரினர், தலைவி ஒரு தலைவன்பால் நட்புடையளென் பதை அறிந்துகொண்டனர்.

(வி - ரை.) பா அடி - பரந்தஅடி (புறநா. உ௩௩ : 2.) பகுவாய் வள்ளை - மகளிரது பகுவாயிலிருந்து வெளிப்படும் வள்ளைப்பாட்டுமாம்.

வள்ளை - உரற்பாட்டு (தொல். புறத்திணை. 8, ௩.) மகளிர் உரலில் நெல் முதலியவற்றை இடிக்கும்போது அதனால் உண்டாகும் அயர்வு தோற்றுதிருக்கும்பொருட்டுப் பாட்டுப்பாடுதல் இயல்பு; இங்ஙனம் பாடும் பாட்டு வள்ளைப் பாட்டெனப்படும். இவ்வகைப் பாட்டையும் செயலையும் பல்வரிக் கூத்துள் அடக்குவர் (சிலப். ௩ : 13, அடியார்.) ; *அவலிடி யென்றும், அம்மனை வள்ளையென்றும், உலக்கைப் பாட்டென்றும் இது கூறப்படும்.

இப்பாட்டு, இடிப்பவர்களுடைய அன்புக்குரியாரைத் தலைவர்களாகப் பெற்றிருத்தல் மரபு; மகளிர், தெய்வத்தையும் (திருவா. திருப்பொற்சுண்ணம்), அரசர்களையும் (சிலப். உ௬), தமையன்மாரையும் (பெருங். உ. 14 : 50-52), தலைவனையும் (கலி. ௪௦-௪உ) வள்ளைப்பாட்டிற் பாடுவர்.

பேய்கள் போர்க்களத்தில் ஒரு தலைவன் வெற்றி பெற்ற காலத்திற் கூழ் சமைப்பதற்குமுன் அங்குள்ள பொருள்களை உரலிலிட்டு இடிக்கும்போது தலைவனை வாழ்த்துதல் மரபென்று பரணி நூல்களால் தெரியவருகின்றது. 'சும்மேலோ சும்முலக்காய்' என்னும் ஈற்றையுடைய செய்யுட்கள் வள்ளைப்பாட்டுக்களாக அந்நூல்களிற் காணப்படுகின்றன; அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி, பாசவதைப்பரணி யென்பவற்றைப் பார்க்க.

ஏதின்மாக்கள் - அயற்றன்மையையுடையார்; மாக்களென்றது, தலைவியின் நிலையை அறிந்து இரங்கும் தன்மை இன்மையின். நுவற

* "உந்தி யவலிடி யூராளி யோகினிச்சி" (சிலப். ௩ : 13, அடியார். மேற்.)

ஓம் நுவல்ப : " நல்கலும் நல்குவர் " (குறுந். ௩எ : 1) என்பதன் விசேடவுரையைப் பார்க்க.

பெரும்பூண் - பேரணிகலம்; இது மார்பில் அணியப்படுவது.

போறையன் கோல்லி : கொல்லிமலை வல்வில் ஓரிக்குரியது; அவ்வோரியைப் பொருது வென்ற காரி அம்மலையைச் சேரனுக்கு ஈந்தாளுதலின் அஃது அச்சேரனுக்குரியதாயிற்று (அகநா. உ0௯.)

கோல்லிப்பாவை : இது கொல்லிமலையின் மேல்புறத்திலே தெய்வத்தால் அமைக்கப்பட்டது ; இது கண்டோர் நெஞ்சங் கலங்கி மயங்கி வீழ்ந்து உயிர்விடச் செய்வது. தலைவிக்கு உவமையாக இப் பாவை இந்நூல் ௧00-ஆம் செய்யுளிலும் கூறப்பட்டுள்ளது. இது நகைத்துத் தன் முன் வந்தாரைக் கொல்லுமென்பர் (சித்திர மடல்.)

தலைவன் வரையாமல் வந்து ஒழுகினனாக, அதனை ஆற்றாது வருந்திய தலைவி ஏனையோருடன் உரலில் தானியத்தை இடிப்பாளாய்த் தலைவனைப் பாடி ஆற்றினாள் ; அங்ஙனம் அவள் பாடியதை யறிந்து உடனிருந்த மகளிர், தலைவி ஒரு தலைவன்பாற் காதலுடையாளென்றுணர்ந்து அலர் கூறினர். தலைவன் வேலிப்புறத்தில் இருக்கும் போது தோழி இச்செய்தியைத் தன்னுள்ளே கூறுவாள்போன்று சொல்லித் தலைவியின் நிலையைப்புலப்படுத்தி விரைவில் வரைந்து கொள்ள வேண்டுமென்னும் குறிப்பைத் தலைவனுக்கு உணர்த்தினாள். இங்ஙனம் உணர்த்தியதனால் அவன் ஆராய்ந்து விரைவில் மணத் திற்குரியன செய்தல் பயன். இவை கலித்தொகை ௪௩ - ஆம் செய்யுளாலும், அதன் கருத்தாகிய,

> ' இது வரைவு நீட ஆற்றாளாயினவிடத்துத் தோழி தானுந் தலைவியும் வள்ளைப்பாடலுள் முருகனைப் பாடுவார்போல இருவர்க்கும் ஏற்பத் தலைவனைப் பாடத் தலைவி ஆற்றினமை தோழி தன்னுள்ளே கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகக் கூறியது '

என்பதனாலும், அச்செய்யுளின் விசேடவுரையில் நச்சினார்க்கினியர்,

> ' எனத் தன்னுள்ளே கூறுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகக் கூறினாள், அவன் கடிதாக வரைதற்கு. இதனால், தலைவற்குச் சூழ்ச்சி பிறந்தது '

என்றெழுதியவற்றாலும் விளங்கும்.

தலைமகள் தன் நெஞ்சுமிக்கது வாய்சோர்ந்து தலைவனைப் பாடினாள் ;

“ பொன்னார மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபேர்
உன்னேனென் றாழுலக்கை பற்றினேற்—கன்னோ
மனனொடு வாயெல்லா மல்குநீர்க் கோழிப்
புனலூடன் பேரே வரும் ”

என்பதனைக் காண்க.

‘அழிவ தெவன்கொல்’ என்றது, இப்பேதையூரினர் நவலுதலால் நன்மையே யுண்டாமாதலின் இதற்கு வருந்தல் வேண்டாவென்னும் குறிப்பினது.

கொல், ஏகாரங்கள் : அசைநிலைகள்.

இம்மெல்லியற் குறுமகளென்றமையின் தலைவியும் அருகிலிருந்தமை பெறப்படும்.

‘வள்ளைப் பாட்டைத் தலைவனோடு தொடர்பில்லா அயலார்களும் பாடுகின்றார்கள் ; அங்ஙனம் இருப்ப இவள் பாடியதால் வரும் ஏதம் யாது ?’ என்று நின்றவாறே பொருள் செய்தலும் ஒன்று. தலைவி தன் நலன் இழந்தமையால் வள்ளைப் பாட்டைப் பாடினள் ; அதைப் பற்றி ஊரவர் பழிமொழி கூறுகின்றனர். அவ்வாறு கூறுவதற்கு அவர்க்கு வந்த கேடு யாதெனப் பொருள் கூறலும் ஒன்று ; “ கல்லக வெற்பன் சொல்லிற் றேறி, யாமெந் நலனிழந் தனமே யாமத், தலர் வாய்ப் பெண்டி ரம்பலொ டொன்றிப், புரையி றீமொழி பயிற்றிய வுரையெடுத், தாறுக் கௌவைத் தாகத், தாமென் னிழந்ததிவ் வழுங்க லூரே ” (நற். ௩௬ : 4-9.)

இரண்டாவது கருத்துக்கு இயைபு வருமாறு : பாடினள் - தலைவனது கொடுமையைப் பாடினளாய் ; ஏதின் மாக்கள் - தலைவியோடு உறவில்லாத பரத்தையர். தலைவி, தலைவன் பரத்தையர்பால் அமைந்திருக்கும் கொடுமையையும், பரத்தையர் அவனை விடாது பற்றியிருக்கும் தன்மையையும் பாடிக் குற்றினளாக, அது கேட்டுப் பரத்தையர் தலைவியை இழித்துரைத்தனரென்று கேட்ட தோழி, “ தலைவி பாடிக் குற்றினால் பரத்தையர் குறை கூறுதல் என் ? அவர்கள் கூறுவது கூறுக. யாம் அஞ்சேம் ” என்று வாயில்கள் கேட்கும்படி கூறி வாயில் மறுத்தாள்.

இக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதன்று.

## மேற்கோளாட்சி

மூ. தலைவன் ஒழுகலாறு புறத்தார்க்குப் புலனாகி அலர் தூற்றப் பட்ட இடத்துத் தோழியைச் செவிலி வினவியது (தொல். களவு. 25, இளம்.) ; செவிலி தானே கூறியது (ஷை. ஷை. 25, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. பாவடி : குறுந். க௪௦ : 1.

வள்ளைப்பாட்டு : "தினைகுறு மகளி ரிசைபடு வள்ளையும்" (மலை படு. 342) ; "கொல்யானைக் கோட்டால் வெதிர்நெற் குறுவாநாம், வள்ளை யகவுவம் வா" (கலி. ௪௨ : 7-8) ; "அறையுர னிறைய வைவனப் பாசவல், இசையொடு தன்னைய ரியல்புபுகழ்ந் திடிக்கும், அம்மனை வள்ளை" (பெருங். உ. 14 : 50-52) ; "பைம்பொன் னறைமேற் பவழ முரலாக, வம்ப மணிபெய்து வான்கேழ் மருப்போச்சி, அம்பொன் மலை சிலம்ப வம்மனை வள்ளையுடன், கம்பஞ்செய் யானைக் கரியவனைப் பாடி னார்" (சூளா. சுயம்வரச். 106) ; "மனையளகு, வள்ளைக் குறங்கும் வள நாட" (திருவள்ளுவ. 5) ; "வள்ளை வெள்ளை நகையார்" (சிற். 221.)

2. மாக்கள் : குறுந். ௬ : 2, ஒப்பு.

ஏதின் மாக்கள் : புறநா. ௫௪ : 27.

நுவறலு நுவல்ப : குறுந். ௩எ : 1, ஒப்பு.

3. பேதையூர் : குறுந். க௫௧ : 7, உஎ௬ : 7-8.

4 - 6. கொல்லிமலையில் தெய்வம் எழுதிய பாவை : *"பொறை யன், உரைசா லுயர்வரைக் கொல்லிக் குடவயின், ......நெடுவரைத் தெய்வ மெழுதிய, வினைமாண் பாவை யன்னோள்", "பயங்கெழு பல வின் கொல்லிக் குடவரைப், பூதம் புணர்த்த புதிதியல் பாவை, விரிகதி ரிளவெயிற் றோன்றி யன்னநின்" (நற். க௪௫ : 6-11, ககஉ : 8-10) ; *"பொறையன் கொல்லி, ஒளிறுநீ ரடுக்கத்து வியலகம் பொற்பக், கடவு ளெழுதிய பாவையின், மடவது மாண்ட மாஅ யோளே", "கொல்லி, நிலைபெறு கடவு ளாக்கிய, பலர்புகழ் பாவை யன்னநின் னலனே" (அகநா. ௬உ : 13-6, உ0௯ : 15-7) ; 'தெய்வப்பாவை - தெய்வத்தாற் செய்த கொல்லிப்பாவை' (சீவக. 657, ந.)

கொல்லிப்பாவை : * நற். உ0௧ : 5-11 ; கலி. ௫௬ : 7, ந ; சிலப். ௬ : 61, அடியார் ; சீவக. 197, 667, ந.

---

* குறுந். அக - ஆம் செய்யுளாகிய இதனைப் பாடிய பரணரே இயற்றிய செய்யுட்கள்.

7. மெல்லியல்: குறுந். ௭௦ : 5, ௧௩௭ : 1.

தலைவியைக் குறுமகள் என்றல்: குறுந். ௭௦ : 1, ௬௫ : 3, ௧௦௪ : 5, ௧௮௯ : 6, ௨௬௭ : 5, ௨௭௬ : 1, ௨௮௦ : 3, ௨௯௫ : 5. (௮௯)

---

## தோழி கூற்று

[தலைவன் வரையாமல் நெடுங்காலம் தலைவியோடு பழகியபோது ஒருநாள் அவன் வேலிப்புறத்திலே வந்துநிற்ப அவன் கேட்கும்படி தலைவியை நோக்கிக் கூறுவாளாகி, "தலைவனது கேண்மையினால் நின்மேனிக்கு வாட்டம் நேர்ந்ததேனும் நீ அன்பிற் குறைந்தா யல்லை" என்று தலைவியின் நிலையைத் தோழி புலப்படுத்தியது.]

௯௦. எற்றோ வாழி தோழி முற்றுபு
கறிவள ரடுக்கத் திரவின் முழங்கிய
மங்குன் மாமழை வீழ்ந்தெனப் பொங்குமயிர்க்
கலைதொட விழுக்கிய பூநாறு பலவுக்கனி
வரையிழி யருவி யுண்டுறைத் தரூஉம்
குன்ற நாடன் கேண்மை
மென்றோள் சாய்த்துஞ் சால்பீன் றன்றே.

௭-து. வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகத் தோழி கூறியது.

மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன்.

(ப - ரை.) தோழி—, முற்றுபு - சூல் முற்றி, கறி வளர் அடுக்கத்து - மிளகு கொடி வளர்கின்ற மலைப்பக்கத்தில், இரவில் முழங்கிய - இராக்காலத்தில் முழக்கத்தைச் செய்த, மங்குல் மா மழை - மேகத்தினது பெரிய மழைக்கால், வீழ்ந்தென - வீழ்ந்தனவாக, பொங்கு மயிர் கலை - மிக்க மயிரையுடைய ஆண் குரங்கு, தொட - தீண்டியதனால், இழுக்கிய - நழுவிய, பூ நாறு பலவு கனி - மலர்மணத்தை வீசும் பலாப்பழத்தை, வரை இழி அருவி - மலைப் பக்கத்தில் வீழும் அருவியானது, உண் துறை தரூஉம் - நீருண்ணுந் துறையின்கண் கொண்டு வருகின்ற, குன்றம் நாடன் கேண்மை - குன்றுகளுள்ள நாட்டையுடைய தலைவனது நட்பு, மெல் தோள் சாய்த்தும் - நின் மெல்லிய தோள்களை மெலியச் செய்தும், சால்பு ஈன்றன்று - அமைதியைத் தந்தது, இஃது, எற்று - எத்தகையது!

(முடிபு.) தோழி, குன்றநாடன் கேண்மை தோள் சாய்த்தும் சால்பு ஈன்றன்று; இஃது எற்றோ!

(கருத்து.) நீ மெலிந்தாயாயினும் இயல்பு வேறுபட்டாயல்லை.

(வி - ரை.) எற்று - எத்தகையது; என்ன வியப்பைத் தருவ தென்பது நினைவு; மெலிவைத் தருவதற்கும் அமைதியைத் தருவ தற்கும் ஒருங்கே காரணமாயிருப்பது வியப்பாதலின் 'எற்றோ' என்றாள். முற்றுபு - சூழ்ந்தெனலுமாம். அடுக்கம் - பக்கமலை (முருகு. 42, ந.) இரவில் முழங்கிப் பெய்த மழையினால் அருவி உண்டாகி அது காலையில் பலாப்பழத்தை உண்டுறையினிடத்தே தந்தது. பூ நாறு - பூவைப் போன்ற மணத்தை வீசும்; மலர்களே மணம் வீசுதலிற் சிறப்புடையவை; பலவின் பழம் நெடுந்தூரத்திலுள்ளாரும் அறிதற்குரிய மணத்தை வீசுதலால் பூ நாறு பலவுக்கனி யென்றார்.

உண்துறை - ஊரினர் நீர் உண்ணுகின்ற துறை. இயல் பாகவே மேன்மையையுடைய தோள் மெலிந்ததென்பாள் மென் றோள் சாய்த்து மென்றாள். சால்பாவது, தலைவன் வரைந்து கொள்வா னென்னும் உறுதியோடு அமைதல்.

ஓ, வாழி, ஏ: அசைநிலைகள்.

இதனால் தலைவியின் மெலிவையும் அவளது அன்பின் உறுதியை யும் தோழி தலைவனுக்கு அறிவித்து விரைவில் மணம்புரிந்துகொள்ள வேண்டியதன் இன்றியமையாமையைப் புலப்படுத்தினளாயிற்று.

மலையுச்சியிலே கலையால் விரும்பப்பட்ட பழத்தை அதன் கைப் படாதபடி அருவியானது பலரும் அறியத் தான் பயன்படும் துறை யின்கண் சேர்த்து அப்பழத்தையும் பயன்பட வைத்ததுபோல, பிற ரால் வரைந்து கோடற்கு உரியநிலையிலுள்ள தலைவியை அவர் பெறு மற்செய்து தான்மணந்து தான் பிறர்க்குதவிசெய்து வாழும் தனது இல்லத்தின்கண் அவளையும் விருந்தோம்பல் முதலிய அறம்புரியச் செய்வித்தற்குரியனென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

மு. * 'கேண்மை தோளை மெலிவித்ததாயினும் எனக்கு அமைதி யைத் தந்தது; யான் ஆற்றவும், தான் மெலிதல் பொருந்தாதது எத்தன்

* இதனால் நச்சினார்க்கினியர் இச்செய்யுளைத் தலைவி கூற்றாகக் கொண்டாரென்று தெரிகிறது; அது சிறப்புடையது.

மைத்தெனத் தலைவி தோழிக்குக் கூறியவாறு காண்க; கலைநீண்ட வழுக்கி வீழ்ந்த பழத்தை அருவி பின்னும் பயன்படுத்தும் நாடன் என்றதனானே அலரால் நம் சுற்றத்திற் பிரிந்தேமாயினும் அவன் நம்மை வரைந்து கொண்டு இல்லறம் செய்வித்துப் பயன்படுத்துவனென்பதாம்' (தொல். பொருள். 9, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. கறிவளர் அடுக்கம்: குறுந். உ அஅ : 1; நற். கடுக : 7; கலி. ருஉ : 17.

4. மழைவீழ்தல்: பெரும்பாண். 363; அகநா. கஅஉ : 9-10, நஉந : 13, நருச : 1-2.

கலைதொட்ட பலவுக்கனி: குறுந். நசஉ : 1, நஎந : 4-6.

4-5. அருவி பலாப்பழத்தைக் கொணர்தல்: "ஆசினி முதுசுளை கலாவ...இழுமென விழிதரு மருவி" (முருகு. 301-16); "அருவி தந்த பழஞ்சிதை வெண்காழ்" (மலைபடு. 174.)

2-5. இரவில் மழைபெய்தலால் அருவி உண்டாதல்: குறுந். சஉ : 1-3, ஒப்பு.

7. தோள் மெலிதல்: குறுந். அஎ : 5, ஒப்பு.

6-7. தலைவன் கேண்மை மெலிவித்தும் சால்புடையதாதல்: குறுந். உ கூச : 4-5; நற். கநகூ : 7-9. (கூ0)

---

## தலைவி கூற்று

[பரத்தையரிடம் சென்று மீண்டுவந்த தலைவன் தலைவியினது உடம்பாட்டை வேண்டி நின்றவிடத்து அவன்பால் ஊடலையுடையவளாயினும் தன் நெஞ்சம் அவன்பாற் செல்வதையறிந்த தலைவி, "நீ அவன்பால் அன்புடையையாகி இருப்பின் பலநாள் துஞ்சா துறையும் துன்பத்தையடைவாய்" என்று கூறியது.]

கூக. அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளைகனி
குண்டுநீ ரிலஞ்சிக் கெண்டை கதூஉம்
தண்டுறை யூரன் பெண்டினை யாயிற்
பலவா குகநின் னெஞ்சிற் படரே

ஓவா தீயு மாரி வண்மைக்
கடும்பகட் டியானை நெடுந்தே ரஞ்சி
கொன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே.

எ - து. (1) பரத்தையர் மாட்டுப் பிரிந்த தலைமகன், வாயில் வேண்டிப் புக்கவழித் தன் வரைத்தன்றி அவன் வரைத்தாகித் தன் நெஞ்சு நெகிழ்ந்துழித் தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லியது.

[நெஞ்சு தலைவன் வரைத்தாதல்: கலி. ௬௭: 21, ௭௭: 21-4, ௯௦: 28-9, ௯௧: 22-4; அகநா. உ௬: 26; குறள், 1259, 1260, 1284, 1291.]

(2) பரத்தையிற் பிரிந்து வந்தவழி வேறுபட்ட கிழத்தியைத் தோழி * கூறியதூஉமாம்.

ஔவையார்.

(ப - ரை.) நெஞ்சே, அரில் - ஒன்றோடொன்று பிணங்குதலையுடைய, பவர் பிரம்பின் - பிரப்பங்கொடியின், வரி புற விளை கனி - புறத்தே வரிகளையுடைய விளைந்த பழத்தை, குண்டு நீர் இலஞ்சி கெண்டை - ஆழமாகிய நீரையுடைய குளத்திலுள்ள கெண்டைமீன், கதூஉம் - கவ்வுதற்கிடமாகிய, தண் துறை ஊரன் - தண்ணிய நீர்த்துறைகளையுடைய ஊர்த் தலைவனுக்குரிய, பெண்டினை ஆயின் - மனைவியாக நீ இருப்பின், நின் நெஞ்சில் படர் பல ஆகுக - நின் உள்ளத்தில் துன்பம் பலவாக ஆகுக! ஓவாது ஈயும் - காலமும் இடமும் பெறுவார் தகுதியும் நோக்கி யொழியாமல் எப்பொழுதும் கொடுக்கும், மாரி வண்மை - மேகம்போன்று கைம்மாறு கருதாத வண்மையையுடைய கையினையும், கடு பகடு யானை - விரைந்தசெலவையுடைய ஆண்யானைகளையும், நெடு தேர் - உயர்ந்த தேர்களையும் உடைய, அஞ்சி - அதியமான் அஞ்சியென்னும் உபகாரியினது, கொன் முனை - அச்சத்தைச் செய்யும் போர்க்களத்தில் உள்ள, இரவு ஊர் போல - இரவையுடைய ஊரிலுள்ளார் போல, நீ துஞ்சும் நாள் - நீ துயிலும் நாட்கள், சில ஆகுக - சிலவே ஆகுக!

(முடிபு.) நெஞ்சே, ஊரன் பெண்டினையாயின், நின் நெஞ்சிற் படர் பலவாகுக; நீ துஞ்சும்நாள் சில ஆகுக!

---

* கழறியதென்பது சிறப்புடையது.

(கருத்து.) தலைவன்பால் இரங்கி இப்பொழுது உடம்பட்டாலும் பின்னும் தன் ஒழுக்கத்தினின்றும் அவன் மாறுபடான்.

(வி - ரை.) நெஞ்சே என்னும் விளி முன்னத்தால் வருவிக்கப் பட்டது. அரில் - கொடிப்பிணக்கு (மலைபடு. 379, ந.) நெஞ்சினை உணர்வுடையதுபோலக் கூறியது இது (தொல். பொருள். 2.)

'தலைவனுக்கு உடம்பட்டு அளவளாவுவையேல் மீண்டும் அவன் பிரிய அதனால் உண்டாகும் துன்பம் பலவாகும்; அதனால் நீ துயில் கின்ற நாட்களோ சிலவாகும்' என்றாள். பெண்டினையாயினென்றது கற்புக்கடம் நோக்கித் தலைவன் கொடுமையை மறந்து உடம்பட்டு ஒழுகும் தன்மையை யுடையையாயினென்றவாறு. நெஞ்சிற்கு நெஞ்சுகூறுதல் மரபு.

அஞ்சி: அதியமான் நெடுமான் அஞ்சி; இவன் எழு வள்ளல் களுள் ஒருவன்; இவனுக்குரியது தகடூர்.

"யானையுடைய படை" (இனியது. 5) என்று படைப்பெரு மைக்கு யானையைக் கூறுபவாதலின், அதனை முன்னர்க் கூறினாள். கொன்: அச்சப்பொருளைத் தரும் இடைச்சொல்; கொல்முனை - பகைவர்களைக் கொல்லுகின்ற போர்முனை யெனலுமாம்.

போர்க்களமுள்ள ஊரினர் அச்சத்தால் இரவில் தூங்காராதலின் அவரை உவமை கூறினாள்.

பிரம்பினிடத்தே காய்த்துப் பழுத்து முதிர்ந்த கனியை எளிதிற் கெண்டை பெறும் ஊரனென்றது, தன்னுடைய சிறப்பால் அன்பும் செல்வமும் முதிர்ந்த தலைவனைப் பரத்தையர் எளிதிற் கவர்ந்து கொள்வரென்னும் குறிப்பினது.

ஏகாரங்கள் அசைநிலை.

இரண்டாவது கருத்து: தலைவன் பரத்தையிற் பிரிந்துவந்து வாயில் வேண்டியவழித் தலைமகள் அவனை எதிர்கொள்ளும் குறிப்பி னளாதலை அறிந்த தோழி, "அவன் இத்துணைக் கொடுமையுடையவ னாக இருந்தும் அதனை மறந்து நின் கற்பொழுக்கத்துக்கியைய ஒழுகுவா யாயின், மீண்டும் அவன் கொடுமைக்கு ஆளாகித் துன்புறுவாய்" என்று கூறியது. இந்தக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதா கத்தோற்றுகின்றது. வேறுபட்ட - ஊடலினின்றும் வேறுபட்ட; "காணுங்காற் காணேன் றவறாய காணக்காற், காணேன் றவறல்ல வை" (குறள், 1286.)

## மேற்கோளாட்சி

7. கொன்னென்னும் இடைச்சொல் முனையை விசேடித்து நின்றது (தொல். எச்ச. 60, ந.)

7-8. கொன்னென்னும் இடைச்சொல் அச்சப்பொருளில் வந்தது (தொல். இடை. 6, இளம், சே, தெய்வச், கல், ந; இ. வி. 265.)

மு. தான் மனையாளை ஒத்தலால் தன்போல்வார் தலைவனுக்கு மிகை யெனக் குறித்த கோளின்கண் காமக்கிழத்தி கூறியது (தொல். கற்பு. 10, இளம்.) ; அகப்பாட்டினுள் * பாட்டுடைத் தலைவன் பெயரும், கிளவித் தலைவன் பெயரும் வந்தன (நம்பி. 249.)

## ஒப்புமைப் பகுதி

1. அரிற்பவர்ப் பிரம்பு : † குறுந். கூகச : 1; அகநா. கு : 19.

2. கதூஉம் : குறுந். அ : 2, ஒப்பு.

1-2. பிரம்பும் கெண்டையும் : பெரும்பாண். 287-8.

3. ஊரன்பெண்டு : "நின், பெண்டெனப் பிறர் கூறும்" (கலி. எஎ : 10-11.)

5. மாரி வண்கை : "பெயன்மழைத் தடக்கை" (சிறுபாண். 124) ; "வான வண்கை" (மதுரைக். 442) ; "வான நாண வரையாது சென் றோர்க், கானா தீயுங் கவிகை வண்மை" (புறநா. ருச : 6 - 7) ; "மழை யொன்று வண்டடக்கை" (தொல். உவம.11, பேர். மேற்.); "எழிலி வான மெள்ளினன் றரூஉங், கவிகை வண்கை", "மழைவிழை தடக்கை" (ஷை. ஷை. 14, பேர். மேற்.) ; "மழை தழீஇய கையாய்" (சீவக. 2779.)

6. நெடுந்தேரஞ்சி : "கடும்பரிப் புரவி நெடுந்தே ரஞ்சி" (அகநா. கூருஉ : 12.)

7-8. கோன்முனை இரவூர் துஞ்சாமை : "பகைமுக வூரிற் றுஞ் சலோ விலளே" (குறுந். உகஉ : 8) ; "துஞ்சாக் கண்ண வடபுலத் தரசே" (புறநா. கூக : 17.) ; "மறங்கால்வே லண்ணல் வரும்வருமென் றேங்கி, உறங்கா வடவேந்த ரூர்" (சிலாசாஸனப் பாடல்.) (கூக)

---

* பாட்டுடைத் தலைவன் பெயராவது அஞ்சி யென்பது ; கிளவித் தலைவன் பெயராவது ஊரனென்பது. † ஔவையார் பாட்டு.

## தலைவி கூற்று

[மாலைப்பொழுது வந்ததுகண்டு தலைவி, "பறவைகள் தம் பார்ப்புக்களுக்குரிய இரையை வாய்க்கொண்டு தம் கூடுகளை நோக்கிச் செல்கின்றன" என்று கூறி, "இனி ஆற்றேன்" என்பதுணர்த்தியது.]

கூ௨. ஞாயிறு பட்ட வகல்வாய் வானத்
தளிய தாமே கொடுஞ்சிறைப் பறவை
இறையுற வோங்கிய நெறியயன் * மராஅத்த
பிள்ளை யுள்வாய்ச் செரீஇய
இரைகொண் டமையின் விரையுமாற் செலவே.

எ - து. காமமிக்க கழிபடர் கிளவியாற் பொழுது கண்டு சொல்லியது.

[கழிபடர் கிளவி - மிக்க துன்பத்தைப் புலப்படுத்துஞ் சொல்.]

தாமோதரன்.

(ப - ரை.) ஞாயிறு பட்ட - கதிரவன் மறைந்த, அகல் வாய் வானத்து - அகன்ற இடம் பொருந்திய ஆகாயத்தில், கொடு சிறை பறவை - வளைந்த சிறகுகளையுடைய பறவைகள், இறை உற ஓங்கிய - தாம் தங்கும்படி உயர்ந்த, நெறி அயல் மராஅத்த - வழியின் அயலில் வளர்ந்த கடம்பின்கண் உள்ள கூட்டிலிருக்கும், பிள்ளை - குஞ்சுகளின், உள் வாய் செரீஇய - வாயினுள்ளே செருகும்பொருட்டு, இரை கொண்டமையின் - இரையைத் தம் அலகில் எடுத்துக் கொண்டமையால், செலவு விரையும் - விரைந்து செல்லும்; அளிய - அவை இரங்கத்தக்கன.

(முடிபு.) பறவை செலவு விரையும்; அளிய.

(கருத்து.) மாலைக்காலம் வந்தது; இனிக் காமநோயை ஆற்றேன்.

(வி - ரை.) படுதல் - மறைதல்; "படுசுடரமையம்" (அகநா. சஅ: 23) என்பது காண்க.

---

(பி - ம்.) * மரத்த.

மாலைக்காலத்திற் பறவைகள் தம் கூட்டிற்கு வந்து அடங்கும்; "குரீஇ....இல்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும், புன்கண் மாலை" (குறுந். சசு), "விலங்கும் பறவையும் வீழ்துணைப் படர" (பெருங். க. மாலைப்புலம்பல், 43.) இறையுறல் - தங்குதல்; "புன்னைத் தடவுநிலை மாச்சினைப், புள்ளிறை கூரும்" (அகநா. கo : 3 - 4) என்பதையும், 'இறை கூரும் - தங்குதல் மிகும்' என்னும் அதன் உரைக்குறிப்பையும் பார்க்க. "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" (தொல். மரபு. 4) என்பது விதியாகலின், பறவைக் குஞ் சைப் பிள்ளையென்றாள். செரீஇய - செருகும்பொருட்டு; செருகி யென்பது செரீஇயென்று வந்தது (குறுந். உகூ0 : 1); இங்ஙனமே பருகியென்பது பரீஇயென (நாலடி. 220) வருதல் காண்க.

தாம், ஆல், ஏ : அசைநிலைகள்.

இதனால் தலைவி மாலைப்பொழுது வந்ததை யறிந்து காமநோய் மிகப்பெற்று ஆற்றாளாயினளென்பது பெறப்படும்.

## மேற்கோளாட்சி

மு. இரங்கல் நிமித்தமென்னும் உரிப்பொருள் வந்தது (தொல். அகத். 14, ந.); தலைவிக்குக் காமம் சிறந்துதோன்றினமையின் கூற்று நிகழ்ந்தது (ஷை. களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. **அகல்வாய் வானம்** : குறுந். சச : 3, ஒப்பு.

2. **கோடுஞ்சிறைப் பறவை** : "கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை" (குறுந். ௩௯உ : 2.)

3. **நெறியயன் மராம்** : அகநா. கஉக : 8.

4. **பிள்ளை** : குறுந். சசு : 5, கரு௩ : 4.

2-4. **பறவை இரையைப் பிள்ளையின் வாயிற் செருகுதல்** : "இரை தேருந் தடந்தாளுரை, ஐய சிறுகட் செங்கடைச் சிறுமீன், மேக்குயர் சினையின் மீமிசைக் குடம்பைத், தாய்ப்பயிர் பிள்ளை வாய்ப்படச் சொரியும்" (நற். கூக : 4 - 7); "கழனி யாரல் கவுளகத் தடக்கிப், பழன மருதிற் பார்ப்புவாய்ச் சொரிந்து, கருங்காலுரை நரன்றுவந் திறுப்ப", "பல்சிறைப் புறவம் பரிந்துடனுடி, அவ்வாய்க் கொண்ட வாரிரை யமிழ்தம், செவ்வாய்ப் பார்ப்பிற்குச் சேர்ந்தவண் சொரிதலின்" (பெருங். ௩. 7 : 29-31, ௫. 1 : 68-70.) (கூஉ)

## தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்துவந்த தலைமகனுக்குத் தூதாகவந்து, "நீ சினவற்க; அவர் அன்புடையார்" என்ற தோழிக்கு, "அவர் நம்மால் உபசரித்து வழிபடற்குரியவரே யன்றி அளவளாவி மகிழ்தற்குரிய ரல்லர்" என்று தலைவி கூறியது.]

கூரு. நன்னலந் * தொலைய நலமிகச் சாஅய்
இன்னுயிர் கழியினு முரைய லவர்நமக்
கன்னையு மத்தனு † மல்லரோ தோழி
புலவியஃ தெவனோ வன்பிலங் கடையே.

எ - து. வாயிலாகப் புக்க தோழிக்கு வாயில் மறுத்தது.

அள்ளூர் நன்முல்லையார்.

(ப - ரை.) தோழி—, நல் நலம் தொலைய - நல்ல பெண்மை நலம் கெடவும், நலம் மிக சாஅய் - மேனியழகு மிக மெலியவும், இன் உயிர் கழியினும் - எல்லாவற்றினும் இனிய உயிர் நீங்கினும், உரையல் - அவர்பாற் பரிவு கூர்ந்த சொற்களைச் சொல்லற்க; அவர் - தலைவர், நமக்கு—, அன்னையும் அத்தனும் அல்லரோ - தாயும் தந்தையும் அல்லரோ? அன்பிலங்கடை - தலைவன் தலைவியர்பாலுள்ள அன்பு இல்லாவிடத்து, புலவி எவன் - ஊடல் உண்டாவது எதன்பொருட்டு?

(முடிபு.) தோழி, உரையல்; அவர் நமக்கு அன்னையும் அத்தனும் அல்லரோ? அன்பிலங்கடை, புலவி எவன்?

(கருத்து.) தலைவன் என்பால் மனைவியென்னும் கருத்துடன் அன்பு புரிந்தானல்லன்.

(வி - ரை.) நலம் இரண்டனுள் முன்னது பெண்மை நலம்; இரண்டாவது அழகு.

"நீ அவர்மாட்டுப் புலத்தல் தகாது; அவரை ஏற்றுக்கொள்ளல் வேண்டும்" என்று தோழி கூறினாளாக, "என்னுடைய நலமும் உயிரும் தொலையுமேனும் பொறுத்துக்கொண்டு அவரை ஏற்றுக் கொள்ளல் என் கடன்; அவர் அன்னையையும் அத்தனையும் போல

(பி - ம்.) * தொலைந்து. † மல்லரோ, புலவி.

உபசரிக்கத்தக்கவர்; ஆயினும் தலைவராகக் கருதி அளவளாவுதற்குரிய அன்பு அவர்பால் இல்லை; அவ்வன்பில்லார்மாட்டுப் புலவியும் அது தீர்தலும் என்ன பயனை உடையன? நான் புலந்தேனல்லன்" என்று அயன்மை தோன்றத் தலைவி கூறினாள். இவ்வயன்மைக்குறிப்பினால் வாயில் மறுத்தாளாயிற்று.

அன்னையென்றாள் பிரித்தற்கரிய தொடர்புடைமைபற்றி; அத்தனென்றாள் அவன் ஆணைக்கடங்கி ஒழுகுதல்பற்றி. "ஊடுதல் காமத்துக் கின்ப மதற்கின்பம், கூடி முயங்கப் பெறின்" (குறள், 1330) என்பவாகலின் காமமுள்ளார்க்கே புலவியும் அதனாற் பெறப்படும்பயனும் உளவாகும்; அன்னையும் அத்தனும் போன்ற அவருக்கும் எனக்கும் உள்ள தொடர்பு பெற்றோர்க்கும் பிள்ளைக்கும் உள்ள தொடர்பேயாதலின் காமமில்லை; ஆதலின் புலவி உண்டாதற்கு ஏதுவில்லை யென்றபடி. அன்பிலங்கடை புலவியாற் பயனில்லை யென்றமையின், அன்புள்ளவிடத்துப் புலவி பயன்பெறுமென்பதாயிற்று.

எவனோ: ஓகாரம் அசைநிலை; கடையே: ஏ, அசைநிலை. அஃது: பகுதிப்பொருள் விகுதி.

## மேற்கோளாட்சி

2-4. செறலின்கட் பால் மயங்கியது (நன். 378, மயிலை.)

மு. தலைவனைத் தலைவி காய்தற்கண் வந்தது (தொல். கற்பு. 6, இளம், ந.); * தோழி, தலைவனை அன்பிலை கொடியையெனக் கேட்ட தலைவன் முனிந்த உள்ளத்தினாங் கொல்லோவென ஐயுற்று அவனது குறிப்பை அறிதல் வேண்டியும், தனது நெஞ்சில் நிறைந்து நின்ற ஊடல் கையிகந்து துனியாகிய வழி இஃது அவற்கு எவனாங் கொல்லென அஞ்சியவழியும் தலைவி தலைவனோடு அயன்மையுடைய சொல்லைத் தோற்றுவிக்கவும் பெறும்; 'நன்னலம்...கடையே: என்பதனுள், அவரை அன்பிலை கொடியை யென்னாதி, அன்பில்வழி நின்புலவி அவரை என்செய்யும்? அவர் நமக்கு இன்றியமையாத எமரல்லரோ வென இருவகையானும் அயன்மை கூறியவாறு காண்க' (ஷை. ஷை. 18, ந.)

## ஒப்புமைப் பகுதி

4. "நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியும்
காதல ரில்லா வழி",
"நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது." (குறள், 1308-9.) (௯௬)

* இக்கருத்து, சிறப்புடையது.

## தலைவி கூற்று

[தலைவன் மீள்வதாகக் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்ததை யறிந்த தோழி 'தலைவி இதுகண்டு ஆற்றாள்' என வருந்தினளாக, அதனையறிந்த தலைவி, "இன்னும் கார்ப்பருவம் வரவில்லை; ஆயினும் மேகம் முழங்குகின்றது; நான் ஆற்றுவேன்; தலைவர் இது கேட்டு வினைமுடியாமல் மீள்வரோவென்றே அஞ்சினேன்" என்று கூறியது.]

௯௪. பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்
தரும்பே முன்னு மிகச்சிவந் தனவே
யானே மருள்வேன் றோழி பானாள்
இன்னுந் தமியர் கேட்பிற் பெயர்த்தும்
என்னா குவர்கொல் பிரிந்திசி னோரே
அருவி மாமலைத் தத்தக்
கருவி மாமழைச் சிலைதருங் குரலே.

எ - து. பருவங்கண்டு ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பதுபடத் தலைமகள் சொல்லியது.

* கந்தக் கண்ணன்.

(ப - ரை.) தோழி—, பெரு தண் மாரி - பெரிய தன்மையையுடைய மழைக்காலத்துக்குரிய, பேதை பித்திகத்து அரும்பு - அறிவின்மையையுடைய பிச்சியின் அரும்புகள், முன்னும் மிக சிவந்தன - தாம் சிவக்க வேண்டிய காலத்திற்கு முன்பே மிகச்சிவந்தன; யானே மருள்வேன் - அவற்றைக் கண்டு இது கார்ப்பருவமென்று நானா மயங்குவேன்?, மயங்கேன்; ஆயினும், பிரிந்திசினோர் - என்னைப் பிரிந்திருப்பவராகிய, இன்னும் தமியர் - இன்னும் என்பால் வந்து சேராமல் தனித்து இருக்கும் தலைவர், அருவி மாமலை தத்த - அருவியானது பெரியமலையிலே தத்தி வீழும்படி, கருவி மா மழை - தொகுதியாகிய பெரிய மேகத்தினது, சிலைதரும் குரல் - முழங்கும் ஓசையை, பானாள் - நடு இரவில், கேட்பின் - கேட்டால், பெயர்த்தும் என் ஆகுவர் - தாம் முன்னரே பிரிவினால் வருந்துவதன்றி மீட்டும் எந்த நிலைமை உடையவராவரோ!

(பி - ம்.) * கதக்கண்ணன்,

(முடிபு.) தோழி, பித்திகத் தரும்பு மிகச் சிவந்தன; யானே மருள்வேன்? பிரிந்திசினோர், இன்னுந் தமியர் மழைக்குரலைக் கேட்பின் என்னாகுவர்!

(கருத்து.) தலைவர் இம்மேகமுழக்கத்தைக் கேட்டு வினைக்குறை முடியாமல் மீள்வாரோ?

(வி - ரை.) பெருந்தண் மாரிக்காலத்தில் சிவக்கவேண்டியவை மேகம் முழங்கிய மாத்திரத்தில் சிவந்தனவாதலின் இவை பேதைமையுடையனவென்னும் நினைவால் 'பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத் தரும்பு' என்றாள். பித்திகம் - பிச்சி; இது மழைக்காலத்து அரும்பிமலருமென்பது, "மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை" (குறுந். கசுஅ : 1, உஉஉ : 5) என்பதனால் விளங்கும். பருவத்தைத் தெரிவிக்கும் பொருள்களின்மேல் அறியாமையை ஏற்றிக் கூறும்மரபு இந்நூல் கூகூ-ஆம் செய்யுளின் விசேடவுரையால் விளங்கும். பானாள் - பால் + நாள்; பால் - பகுதி; என்றது நடுவைக் குறித்தது; பானாள் - நடுயாமம் (கலி. ௯௦ : 9, ந.); நடுநாளென வருதலையுங் காண்க (குறுந். கூகூ : 5.) யானே: ஏகாரம் எதிர்மறைப்பொருளது.

தலைவன் தன்னை நினைந்து வினையை முடிவுபோக்காது மீள்வனோ வென்று தலைவி கூறுதல் மரபாதலை, "புணர்ந்துடன் போகிய" (தொல். கற்பு. 7, ந.) என்பதன் உரையினால் உணரலாகும்.

பிரிந்திசினோர் - தலைவரைப் பிரிந்தோராகிய பிறமகளிரென்றும் ஒன்று; பிறர் ஆற்றற்கரியரென்றெண்ணி வருந்துவேனாயினேனென்றதாகக் கொள்க.

இசின், படர்க்கைக்கண் வந்தது. என்னாகுவர் கொலென்றது மீண்டு வருவாரோ வென்னும் நினைவிற்று. மழை பெய்தலினால் மலையில் அருவி உண்டாதலின், 'அருவிமாமலைத் தத்த' என்றாள்; இந்நூல் சஉ-ஆம் செய்யுளைப்பார்க்க. சிலதரும்: ஒரு சொல். யானே என்பதிலுள்ளதையன்றி ஏனைய ஏகாரங்களும், கொல்லும் அசைநிலைகள்.

யானே மருள்வேனென்றமையின் ஆற்றுவலென்பது படவும், என்னாகுவர் கொல் பிரிந்திசினோரே யென்றமையின் தான் கவன்றமைக்குக் காரணந் தோன்றவும் தலைவி கூறினாளாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. மாரிப் பித்திகம் : நற். ௩௪௪ : 3 ; அகநா. உ௯௫ : 19.

1-2. பித்திகத்தின் அரும்பு சிவந்திருத்தல் : (குறுந். 222 : 5-6) "செவ்வரி யரும்பின் பைங்காற் பித்திகம்" (நெடுநல். 40, பா - ம்.)

பித்திகத்தின் அரும்பு மாரிக்காலத்துக்கு உரித்தாதலும் சிவந்திருத்தலும் : "மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக், கொயலரு நிலைய பெயலேர் மணமுகைச், செவ்வெரிந்" (அகநா. ௪உ : 1-3.)

3. பாறுள் : குறுந். ௧௪உ : 3, ௧௪௫ : 3, உ௪௬ :3, ௩0௧: 4, ௩௧௧ 4, ௩௫௫ : 4, ௩௭௫: 5.

6. அருவி தந்தல் : "தத்துற்று...இழுமென விழிதரு மருவி" (முருகு. 305-16.)

7. கருவி மாமழை : குறுந். ௪உ : 2, ஒப்பு.

மழைக் குரல் : "மழைமுழங்கு கடுங்குரல்" (குறுந். ௩௯௯ : 6.)

(௯௪)

---

### தலைவன் கூற்று

[தனது வேறுபாடு கண்டு வினவிய பாங்கனுக்கு, "ஒரு குறமகள்பாற் கொண்ட காமத்தால் என்கண் இஃது உண்டாயிற்று" என்று தலைவன் கூறியது.]

௯௫. மால்வரை யிழிதருந் தூவெள் ளருவி
* கன்முகைத் ததும்பும் பன்மலர்ச் சாரற்
சிறுகுடிக் குறவன் பெருந்தோட் குறுமகள்
நீரோ ரன்ன சாயல்
தீயோ ரன்னவென் னுரனவித் தன்றே.

எ - து. தலைமகன் பாங்கிற்கு உரைத்தது.

கபிலர்.

(ப - ரை.) தோழ, மால் வரை இழிதரும் - பெரியமலையினிடத்து வீழும், அருவி—, கல் முகை ததும்பும் - பாறைகளின்

(பி - ம்) * கண்முகைத் ததும்பும்.

வெடிப்புக்களில் ஒலிக்கும், பல் மலர் சாரல் - பலமலரையுடைய சாரலில் உள்ள, சிறு குடி குறவன் - சிற்றூரிலுள்ள குறவனுடைய, பெரு தோள் குறுமகள் - பெரிய தோளையுடைய சிறிய மகளினது, நீர் ஓரன்ன சாயல் - நீரைப்போன்ற மென்மை, தீ ஓரன்ன என் உரன் அவித்தன்று - தீயை ஒத்த என் வலியைக் கெடச் செய்தது.

(முடிபு.) குறுமகளது சாயல் என் உரனை அவித்தன்று.

(கருத்து.) நான் ஒரு மலைவாணர் மகளைக் காமுற்றேன்.

(வி - ரை.) தோழவென்னும் விளி முன்னத்தாற் பெறப்பட்டது. கல்முகை - மலைமுழைஞ்சுமாம். ததும்புதல் - ஒலித்தல். பன்மலர்ச் சாரலென்றான், இயற்கைப் புணர்ச்சிபெற்றவிடம் அதுவாதலால். பெருந்தோள்: மகளிருக்குத் தோள்பெருத்தல் அழகு; இந்நூல் எக - ஆம் செய்யுள் விசேடவுரையைப் பார்க்க. ஓரன்ன - ஒரு தன்மையையுடைய (தோல். நூன். 2, இளம்.); ஒத்த (கலி. உஅ: 9.) தீயை வலிக்கு உவமை கூறும் மரபு,

"தீயெழுந் தன்ன திறலினர்" (முருகு. 171)

என்பதனானும் புலப்படும். எதிர்ப்பட்ட பொருளை அழிக்கும் தன்மையதாகலின் தீயை எதிர்ப்படுபகையை அழிக்கும் வலிக்கு உவமை கூறுவர்;

"வளித்தலைஇய தீயும்......போல...தெறலும்......உடையோய்" (புறநா. உ: 4-8)

என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

பகையையழிக்கும் தீயன்ன என் வலியைத் தீயை யழிக்கும் நீரன்ன குறுமகளது மென்மை அழித்ததென்றான்;

"ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு" (குறள், 1088)

என்பதில் இக்கருத்து விளங்குதல் காண்க.

பெருந்தோட்குறுமகளென்றது, குறிப்பால் என் உரனவிதற்கு அந்தோளும் காரணமாயதென்பதை உணர்த்தியது. குறுமகளென்றான், பெருந்தலைமையையுடைய என் உரனவியச் செய்தாளென்னும் வியப்புத்தோன்ற.

தலைவன்பாற் சோர்வுகண்ட பாங்கன், "நினக்கு இவ்வாட்டம் எற்றினானாயிற்று?" என்று வினாயினானாக, தலைவன், "குறுமகள் சாயலினானாயிற்று" என்றான்.

ஏகாரம் அசைநிலை.

## மேற்கோளாட்சி

4-5. பொருளும் பொருளும் முரணின (தொல். செய். 95, ந, பேர்.); கட்டளையடியும் சீர்வகையடியும் முரணின (ஷை. ஷை. ஷை, ந.)

## ஒப்புமைப் பகுதி

1-2. அருவி கன்முழைகையில் ஒலித்தல்: (குறுந். ௪௨: 2-3, ஒப்பு.); "கன்முழை யருவி" (புறநா. ௧௪௭: 1, பி-ம்.)

3. குறவன் மகள்: * ஐங். ௨௫௫-௬௦.

பெருந்தோள்: குறுந். ௭௧: 3, ஒப்பு.

குறுமகள்: குறுந். ௮௯: 7, ஒப்பு.

4. நீரை ஒத்த சாயல்: "புதுநிறை வந்த புனலஞ் சாயல்" (மலை படு. 61); "வானி நீரினுந், தீந்தண் சாயலன்" (பதிற். ௮௬: 12-3); * "நீரினுஞ் சாய லுடையன்" "வேனிற் புனலன்ன நுந்தை" (கலி. ௪௨: 20, ௮௪: 38); * "நீரினு மினிய சாயற், பாரிவேள்" (புறநா. ௧௦௫: 7-8.) (௯௫)

---

### தலைவி கூற்று

[தலைமகன் வரையாதுவந்து ஒழுகிய காலத்தில் அவனைத் தோழி இயற்பழித்தாளாக, அது கேட்ட தலைவி தோழியைச் சினந்து கூறியது.]

௯௬. அருவி வேங்கைப் பெருமலை நாடற்
கியானெவன் செய்கோ வென்றி யானது
நகையென வுணரே னாயின்
என்னா குவைகொ லன்னுத லினியே.

---

* கபிலர் பாடியவை.

எ - து. தலைமகனை இயற்பழித்துத் தேருட்டுந் தோழிக்குத் தலைமகள் இயற்படச் சொல்லியது.

[இயற்பழித்தல் - இயல்பைப் பழித்துக் கூறல். தெருட்டுதல் - தலைவியைத் தேற்றுதல்.]

அள்ளூர் நன்முல்லை.

(ப - ரை.) *நல் நுதல் - நல்ல நெற்றியை உடையாய், அருவி வேங்கை - அருவியினதருகில் வளர்ந்த வேங்கைமரங்களையுடைய, பெரு மலை நாடற்கு - பெரிய மலையையுடைய நாட்டுக்குரிய தலைவன் திறத்து, யான் எவன் செய்கு - நான் என்ன செய்வேன், என்றி - என்று கூறி அவனை இயற்பழித்தாய்; யான் அது நகை என உணரேன் ஆயின் - நீ அங்ஙனம் கூறியதை நான் விளையாட்டுமொழியென்று உட்கொண்டிரேனாயின், நீ என் ஆகுவை - நீ என்ன பாடு படுவாய்? மிகவும் துன்புறுவாயன்றே.*

(முடிபு.) *நன்னுதல், நாடற்கு யான் எவன் செய்கோ என்றி; யான் அது நகையென உணரேனாயின், நீ என்னாகுவை?*

(கருத்து.) *நீ தலைவனை இயற்பழித்தல் தகாது.*

(வி - ரை.) *தலைவன் விரைவில் வரையாமல் ஒழுகினானாக அவன் வரைதல் வேண்டிய தோழி, "தலைவன் நம்நிலையை அறியானாயினன்; அவன் திறத்து என்செய்வேன்!" என்று இயற்பழித்தாளாக, "அவரை நீ அறியாது பழித்தாய். நீ கூறியதை நகைப் பொருட்டுச் சொல்லியதாக உட்கொண்டேன்; இல்லையெனின் உன்னைத் தண்டம் செய்வேன்; அப்பொழுது நீ எந்நிலையினையாவாய்!" என்று தலைவி கூறினாள்.*

*அருவி - அருவீ யென்பதன் விகாரமெனலும் ஒன்று; "அருவி யாம்பல்"* (பதிற். சுடு : 19) *என்பதன் உரையைப் பார்க்க. யானெவன் செய்கோ வென்னுந் தொடர் வினவுதல் கருதாது வெறுப்புக் குறிப்புடையது* (ஐங். கருச : 4, உரை.)

*அருவி வேங்கைப் பெருமலை நாடனென்றது, அருவியானது தன்னைச் சார்ந்த வேங்கையைக் குறைவின்றிப் பாதுகாத்தலைப் போலத் தலைவனும் தன்னைச் சார்ந்த என்னைப் பாதுகாப்பானென்னும் குறிப்பை உணர்த்தியது; இக்குறிப்பினாலே தலைவி இயற்படச் சொன்னாளாயிற்று.*

ஓ, கொல், ஏ : அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

மு. தலைவன் வரைதலை விரும்பி இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிந்தது (தொல். களவு, 16, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அருவி வேங்கை : (குறுந். கஙச : 3-5) ; "அதிரிசை யருவிதன் னஞ்சினை மிசைவீழ, முதிரிணர் வீழ் கொண்ட முழவுத்தா ளெரி வேங்கை" (கலி. சச : 3-4) ; "கறங்குவெள் ளருவி பிறங்குமலைக் கவாஅற், றேங்கம ழிணர வேங்கை" (அகநா. ககஅ : 1-2.)

2. யானேயீண் டையேனே : குறுந். உ௫ : 2; ஐங். க௫ச : 4. (௬௬)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரையாமல் நெடுநாள் இருப்ப வருந்திய தலைவி, "எம்முடைய நட்பினை யாவரும் அறிந்தனர் ; இன்னும் தலைவர் வரையும் முயற்சியை மேற்கொண்டாரல்லர்" என்று கூறியது.]

௬எ. யானே யீண்டை யேனே *யென்னலனே
ஆனா நோயொடு கான லஃதே
துறைவன் றம்மூ ரானே
மறையல ராகி மன்றத் தஃதே.

எ - து. வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

வெண்பூதி.

(ப - ரை.) தோழி, யான் ஈண்டையேன் - நான் இவ்விடத்தில் தனியே உள்ளேன் ; என் நலன் ஆனா நோயொடு கானலஃது - எனது பெண்மைநலம் என்னின் நீங்கி அமையாத வருத்தத்தோடு கடற்கரைச் சோலையினிடத்தது ; துறைவன் தம் ஊரான் - தலைவன் தனது

(பி - ம்.) * யென்னலன்.

ஊரினிடத்துள்ளான்; மறை - எம்மிடையே உள்ள மந்தணமாகிய நட்பைப்பற்றிய செய்தியானது, அலர் ஆகி - பலர் அறியும் பழி மொழியாகி, மன்றத்ததுவே - பொதுவிடத்தின்கண் பரவியுள்ளது.

(முடிபு.) யான் ஈண்டையேன்; என் நலன் கானலதுவே; துறைவன் தம்மூரான்; மறை மன்றத்ததுவே.

(கருத்து.) என் நலனுண்ட தலைவர் இன்னும் வரைதற்குரிய முயற்சியைச் செய்தாரல்லர்.

(வி - ரை.) யானென்றது தலைவனால் வரைந்து கொள்ளப்பட்டு அவனுடன் இருத்தற்குரிய யானென்றும், என் நலனென்றது என்னோடு உடனிருந்து சிறப்புத் தருதற்குரியதென்றும் கொள்ளக்கிடந்தன. நலன் கானலதுவென்றது, நெய்தற்கண் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சியைச் சுட்டியபடி. துறைவன் - நெய்தனிலத் தலைவன். தலைவனும் அவன் சுற்றத்தாரும் வாழுமிடமாதலின் அவரையு முளப் படுத்தித் தம்மூரானென்றாள்.

மறை - வெளிப்படாதிருந்த நட்பைப் பற்றிய செய்தி; "தோழிநம் மறையே" (குறுந். கஉஉ : 6) என்று பின்பும் வருதல் காண்க; "உட்கரந் துறையு முய்யா வரும்படர், செப்பல் வன்மையின்" (குறிஞ்சிப். 11-2) என்று கூறுவாராதலின் மறையென்றாள். மன்று - பொதுவிடம்; இங்கே தந்தையையும் தன்னையரையும் குறித்தது (குறள், 1138, பரிமேல்.)

என்நலன் என்பாலும் யான் தலைவன்பாலும் இருக்கப்பெற்று இன்புற வேண்டியிருப்ப அந்நிலை பெற்றிலேனென்று இரங்கினாள். மறை வெளிப்பட்டுத் தமர் தலைவனை ஏற்றுக்கொள்ளும் நிலையில் இருந்தும் தலைவன் வந்திலனென்பது கருத்து. மறை மன்றத்ததுவே என்பதனால் இனி, களவொழுக்கம் இயைபுடையதன்றென்பது பெறப்படும்.

ஏகாரங்கள் அசைநிலைகள். கானலதுவே, மன்றத்ததுவே : ஆய்தங்கள் விரிக்கும்வழி விரித்தல்.

## மேற்கோளாட்சி

2. ஆய்தம் பின் தோற்றிக்கொண்ட புள்ளி (தொல். செய். 18, பேர்.)

மு. சேணிடையின்றி இட்டிதாகப் பிரிந்துழித் தலைவி இரங்கிக் கூறியது (தொல். களவு. 20, ந.); மாட்டின்றி வந்த செய்யுள் (ஷை. செய். 211, பேர், ந.) ஒரூஉவண்ணம் வந்தது (ஷை. ஷை. 227, பேர், ந.)

## ஒப்புமைப் பகுதி

1. மு. குறுந். ௫௪ : 1.

1-2. தலைவி தன்நலனைக் கானலில் இழத்தல் : குறுந். அக : 2-3, ஒப்பு.

தலைவி நலனிழத்தல்: குறுந். ௫௪ : 1-5, கஉ௫ : 4-7.

4. அலர் மன்றிற் பரவுதல் : "அலரு மன்றுபட் டன்றே" (அகநா. உ௦க : 10); "காமம், மறையிறந்து மன்று படும்", "என்காமம், மறை யிறந்து மன்று படும்" (குறள், 1138, 1254.) (கூஎ)

---

## தலைவி கூற்று

[தலைவன் தான் கூறிச்சென்ற பருவத்தே வாராமையால் வருந்திய தலைவி, "யான்பசலையுற்ற நிலையையும் பருவம் வந்தமையையும் யாரேனும் தலைவரிடம் சென்று அறிவுறுத்தினால் நலமாகும்" என்று தோழிக்குக் கூறியது.]

கூஅ. இன்ன ளாயின ளன்னுத லென்றவர்த்
துன்னச் சென்று செப்புநர்ப் பெறினே
நன்றுமன் வாழி தோழி நம் படப்பை
நீர்வார் பைம்புதற் கலித்த
மாரிப் பீரத் தலர்சில கொண்டே.

எ - து. பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது.
கோக்குளமுற்றன்.

(ப - ரை.) தோழி—, நம்படப்பை - நம்தோட்டத்திலுள்ள, நீர் வார் பைம்புதல் கலித்த - நீர் ஒழுகுகின்ற பசிய புதலினிடத்தே தழைத்துப் படர்ந்த, மாரி பீரத்து அலர் சில - மழைக்காலத்தில் மலரும் பீர்க்கின் மலர்கள் சிலவற்றை, கொண்டு - கைக்கொண்டு, அவர்

துன்ன சென்று - தலைவரை நெருங்கச்சென்று, நல் நுதல் இன்னள் ஆயினள் - நல்ல நெற்றியையுடைய தலைவி இவ்வலரைப் போன்ற பசலையை அடைந்தாள், என்று செப்புநர் பெறின் - என்று அவர்பாற் சொல்லுவாரைப் பெற்றால், நன்று மன் - மிக்க உதவியாக இருக்கும்.

(முடிபு.) தோழி, பீரத்தலர் சிலகொண்டு அவர்த் துன்னச் சென்று இன்னளாயினளென்று செப்புநர்ப்பெறின் நன்றுமன்.

(கருத்து.) நான் பசலை நோயட நிற்றலைத் தலைவர் அறிந்திலர்; அறியின் வரைவர்போலும்!

(வி - ரை.) நன்னுதலென்றது நீ கண்டபொழுது நன்னுதலா யிருந்தாள், இப்போது பசலையுற்றுளென்னும் கருத்துடையது. நன்னுதல் இன்னளாயின ளென்றமையின் அந்நுதல் பசலைபுற்றதென் றுணர்க; இந்நூல் அஎ: 4-ஆம் அடியின் ஒப்புமைப் பகுதியைப் பார்க்க. அவர்: நெஞ்சறிசுட்டு. பிறரறியத்தகாத மறையாதலின் அவரை அணுகச்சென்று கூற வேண்டுமென்றாள். செப்புநர்ப்பெறி னென்றது செப்புவாரைப் பெறுதல் அரியதாயிற்றென்றவாறு. மன்: மிகுதியை உணர்த்தியது; அது பெற்றிலேனெனலுமாம். வாழி: அசைநிலை; அங்ஙனம் செப்புவார் உளரேல் அவர் வாழ்வாராக எனலும் பொருந்தும். படப்பை - தோட்டம்; இங்கே மனைக்கருகி லுள்ள தோட்டம்; "படப்பை வேங்கை" (குறுந். உகக: 3) எனப் பின்னும் வருதல் காண்க.

மாரிக்காலமாதலின் நீர்வார் பைம்புதலாயிற்று. புதல் - செடிகள் அடர்ந்து வளர்ந்த செறிவு; இஃது இப்பொழுது புதரென வழங்கும். பீர்க்கு, கொடியாதலின் புதலிற்படர்ந்து தழைத்தது. மழைக் காலத்திலுள்ள நீர்நலத்தாற் புதலும் தழைத்துப் பசுமைபெற்றது; பீர்க்கும் தழைத்துப் பூப்பெற்றது. பீரம் - பீர்க்கு; அது மழைக் காலத்தில் மலர்வது.

பீரத்து அலரைக் காட்டுதல் தலைவியின் பசலையையும், மழைப் பருவம்வந்ததனையும் ஒருங்கே நினைவுறுத்தற்கு; இது குறிப்பு நுட்ப மென்னும் அணி.

தலைவன் வரைபொருட்குப் பிரிந்தானாக, அவன் கூறிச்சென்ற கார்ப்பருவம் வந்தகாலத்தில் அவன் வாராமையால் வருந்திய தலைவி, "தலைவாது பிரிவினால் நான் பசலைபெற்றேன்; என் மேனி அழகு

கழிந்தது. அவர் என் நிலையை அறியார் போலும்! யாரேனும் அவர் உள்ள இடத்திற்குச் சென்று 'நின்பிரிவினால் தலைவி நலனிழந்து பசலையுற்றாள்; நீ கூறிய பருவமும் வந்தது' என்று நினைவுறுத்தினால் அவர் விரைந்துவந்து வரைந்துகொள்வர்" என்று கூறினாள்.

ஏகாரங்கள் அசைநிலைகள்.

இதில் பசலைபாய்தல், தூதுமுனிவின்மை யென்னும் மெய்ப்பாடுகள் வந்தன.

## மேற்கோளாட்சி

5. பீர் என்னும் சொல் அத்துச்சாரியை பெற்றுவந்தது (தொல். புள்ளிமயங்கு. 68, ந; இ. வி. 133.)

மு. இயற்கைப்புணர்ச்சிப்பின் நிகழ்ந்தனவற்றைத் தலைவி தோழிக்கு நாணத்தால் உரையாளாயின் நோயட வருந்துவாள் (தொல். களவு. 21, இளம்.); 'மாரிப்பீரத்தலர் சில கொண்டே காட்டி இன்னளாயினள் நன்னுதல் என்றவழி, குறித்தபருவங் கழிந்ததென்னும் பொருண்மை விளங்கிற்று; உருவுவமம் இவ்வாறு பொருளுணர்த்துதற் பகுதிநோக்கி உவமப்பகுதியென்றா னென்பது' (ஷை. உவம. 1, பேர்.); தன்னைத் தலைவன் காணுவகை நாணால் மறைந்தொழுகினும், தன் பொலிவழிவினைத் தலைவனுக்குக் காட்டல் வேண்டுதற்கண்ணும் தலைவிக்குக் கூற்று நிகழும்; 'இன்னளாயினளென்றது, தற்காட்டுறுதல்: செப்புநர்ப் பெறினே யென்றதனாற் களவாயிற்று, கற்பிற்கு வாயில்கள் செப்புவார் உளராதலின்' (ஷை. களவு. 20, ந.); தலைவி தன் துயர் தலைவனுக்கு உரைத்தல் வேண்டுமென்றது (இ. வி. 521.)

## ஒப்புமைப் பகுதி

1-3. தலைவி தன் வேறுபாட்டைத் தலைவனுக்கு அறிவிக்க விரும்புதல்: குறுந். கஅ௯: 1-8, உகo: 5-7, உஉஉ, மு.

4. நீர்வார் பைம்புதல்: குறுந். உசo: 1, உசஉ: 3.

5. பீர்க்கு மழைக்காலத்தில் மலர்தல்: "மாரிப் பீரத்தலர்" (சிலப். எ: 38.)

4-5. புதற்கலித்த பீரம்: "பொன்போற் பீரமொடு புதற்புதன் மலர" (நெடுநல். 14); "இவர்கொடிப் பீர மிரும்புதன் மலரும்" (ஐங். சகூச: 2); "புதலிவர் பீரி னெதிர்மலர்" (அகநா. கஙு: 2.)

1-5. பசலைக்குப் பீர்க்கின் மலர் : நற். ௧௯௭ : 1-2, உ௭௭ : 6-8, ௩உ௬ : 6-7 ; கலி. ௩௧ : 4, ௫௩ : 14-5, ௧உ௪ : 8, ௧௪௩ : 49 ; அகநா. ௪௫ : 7-8, ௫௭ : 12-3, ௧௩௫ : 2-3 ; ஐந்திணை ஐம்பது, 2 ; திணைமாலை நூற். 100, 116 ; சிலப். ௭ : 38.

கார்ப்பருவத்தில் தலைவன் வாராமையால் தலைவி பீர்க்க மலரைப் போன்ற பசலை அடைதல் : "*வறந்த ஞாலந் தெளிர்ப்ப வீசிக், கறங்குர லெழிலி கார்செய் தன்றே, பகைவெங் காதலர் திறைதரு முயற்சி, மென்றோ ளாய்கவின் மறையப், பொன்புனை பீரத் தலர்செய் தன்றே*" (ஐங். ௪௫உ.) (௯அ)

---

## தலைவன் கூற்று

[*பொருள்வயிற் பிரிந்த தலைவன் பொருளீட்டி மீண்டு வந்த காலத்து, "நீர் பிரிந்தவிடத்து எம்மை நினைத்தீரோ?" என்று வினவிய தோழிக்கு, "நான் எப்பொழுதும் நினைந்திருந்தேன்" என்று அவன் கூறியது.*]

௧௧. உள்ளினெ * னல்லெனே யானே யுள்ளி
† நினைத்தனெ * னல்லெனே பெரிதே ‡ நினைத்து
மருண்டனெ * னல்லெனே யுலகத்துப் பண்பே
நீடிய ¶ மரத்த கோடுதோய் மலிர்நிறை
$ இறைத்துணச் சென்றற் றாஅங்
கனைப்பெருங் காம மீண்டுகடைக் || கொளவே.

ஏ - து. பொருள் முற்றிப் புகுந்த தலைமகன், 'எம்மை நினைத்தும் அறிதிரோ?' என்ற தோழிக்குச் சொல்லியது.

[*முற்றி - நிறையப்பெற்று. புகுந்த - மீண்டுவந்த.*]

ஔவையார்.

(ப - ரை.) *நீடிய மரத்த* - உயர்ந்த மரத்தினது, *கோடுதோய் மலிர்நிறை* - கிளையைத் தொட்டுப்பெருகும் மிக்கவெள்ளம், *இறைத்து உண சென்று அற்றாங்கு* - பிறகு கையால் இறைத்துண்ணும் அளவு

---

(பி - ம்.) * னல்லனே. † நினைந்தனென். ‡ நினைந்து. ¶ மாத்த, மராஅத்த. $ இறைத்துணைச். || கொளலே.

சிறுகிச் சென்று அற்றதுபோல, அனை பெரு காமம் - வெள்ளத்தைப் போன்ற அவ்வளவு பெரிய காமநோய், ஈண்டு கடைக்கொள - இங்கே யான் வருதலால் முடிவடையும்படி, யான்—, உள்ளினென் அல்லெனோ - ஆழ்ந்து எண்ணினேனல்லேனோ? உள்ளி - அங்ஙனம் எண்ணி, பெரிது நினைத்தனென் அல்லெனோ - மீட்டும் மீட்டும் மிக நினைவு கூர்ந்தேனல்லேனோ? நினைத்து - அங்ஙனம் நினைவுகூர்ந்து, உலகத்துப் பண்பு மருண்டனென் அல்லெனோ - என் நினைவு நிறைவேறுதற்கு மாறாக இருக்கும் உலகத்தியல்பை எண்ணி மயங்கினேன் அல்லேனோ?

(முடிபு.) காமம் கடைக்கொள யான் உள்ளினென் அல்லெனோ? நினைத்தனென் அல்லெனோ? மருண்டனென் அல்லெனோ?

(கருத்து.) யான் எப்பொழுதும் உங்களை நினைத்திருந்தேன்.

(வி - ரை.) உள்ளுதல் - உள்ளத்துள் எண்ணுதல். நினைத்தல் - மீட்டும் மீட்டும் எண்ணுதல். அல்லெனோ வெனவரும் மூன்றும் வினா வெதிர் வினாவும் விடைகளாக அமைந்து முறையே உள்ளினென், நினைத்தனென், மருண்டனெனென்னும் பொருளைப் பயந்தன.

உலகத்துப் பண்பென்றது இல்லறம் நடத்துபவன் அதற்குக் கருவியாம் பொருளுக்குப் பிரிந்தால் அப்பொருள் பெற்றே மீண்டுவர வேண்டுமென்னும் மரபை; "எள்ள ளுநைப் பொருடால் விருப் பொடு, நாணுத்தளை யாக வைகி" (அகநா. உக: 20-21) என்பது இதனைப் புலப்படுத்தும்.

மரத்தின் கிளையைத் தொட்டுச் சென்ற வெள்ளம் நெடுந்தூரம் வந்து, இறைத்துண்ணும்படி. சிறுகிப் பின்பு அற்றதுபோல, காம வெள்ளமானது மிகப் பெரிதாயிருந்து, நான் இங்கு மீண்டுவரும் போது வரவரக் குறைந்து, தலைவியோடு அளவளாவியவுடன் அறு மென்று உவமையை விரித்துக்கொள்க.

தோழி, "நீவிர் இவ்வளவுகாலம் பாணித்தீர்; ஆண்டுள்ள போது எம்மை நினைத்திலீர் போலும்!" என்றாட்கு, "நான் எப் பொழுதும் இங்கு மீண்டுவருதலை நினைத்திருந்தேனாயினும் உலக இயல்பை அஞ்சி இத்துணைநாள் நின்றேன்" என்று கூறினான். "இயல்பாகப் பொருள்தேடுதலில் ஊக்கம்பெற்றிருப்பின் இன்னும் நெடுநாள் கழியும்; நும்பாலுள்ள நினைவு என்னை விரைவில் மீளச்செய்தது" என்பது அவன் கூற்றிற் புலப்பட்டது.

ஓகாரங்கள் வினு ; ஏகாரங்கள் அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

மூ. இளமையும் காமமும் நோக்காது பெயர்ந்தீரென்று கூறி இதற்குக் காரணம் என்னையெனத் தலைவன் வந்துழிக் கேளிர் நிகழ்த்தும் நிகழ்ச்சிக்கண் தலைவற்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 5, இளம்.); மீண்டுவந்த தலைவனை இடைச்சுரத்து மறந்தீரோவெனத் தலைவி வினுவியவழி அவனுக்குக் கூற்று நிகழ்ந்தது (ஷை. ஷை. ஷை. ந.)

## ஒப்புமைப் பகுதி

1. உள்ளினெனல்லெனே யானே: நற். ௩: 7.
2. மலிர்நிறை: ஐங். ௪௰: 1, ௭௨: 3, ௭௨: 4.

கோடுதோய் மலிர்நிறை: அகநா. ௧௬௬: 15, ௩௭௪: 4.

மூ. அகநா. உ௬.

---

## தலைவன் கூற்று

[தலைவன் பாங்கனுக்கு, "யான் ஒரு மலைவாணர் மகளைக் காமுற்றேன் ; அவள் பெறுதற்கரியள்" என்று கூறியது.]

௪00. அருவிப் பரப்பி னைவனம் வித்திப்
பருவிலைக் குளவியொடு பசுமரல் கட்கும்
காந்தள் வேலிச் சிறுகுடி * பசிப்பிற்
கடுங்கண் † வேழத்துக் கோடுநொடுத் துண்ணும்
வல்வில் லோரி கொல்லிக் குடவரைப்
பாவையின் மடவந் தனளே
மணத்தற் கரிய பணைப்பெருந் தோளே.

எ - து. (1) பாங்கற்கு உரைத்தது.

(2) அல்லகுறிப்பட்டு மீள்கின்றான், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

[அல்ல குறிப்படுதல் - குறியல்லதனைக் குறியாகக் கருதிச் செல்லுதல் ; தொல். களவு. 42 ; இறை. 17.]

கபிலர்.

---

(பி - ம்.) * பசித்தெனை. † யானைக்.

(ப - ரை.) தோழ, அருவி பரப்பின் - அருவிபாயும் பரந்த நிலத்தில், ஐவனம் வித்தி - மலைநெல்லை விதைத்து, பரு இலை குளவியொடு - இடையிலே களையாக முளைத்த பருத்த இலையையுடைய மலைமல்லிகையோடு, பசுமரல் - பசியமரலை, கட்கும் - களைந்தெறியும், காந்தள் வேலி - காந்தளையே இயற்கைவேலியாகவுடைய, சிறுகுடி - சிற்றூரிலுள்ளார், பசிப்பின் - உணவின்றிப் பசித்தாராயின், கடு கண் வேழத்து கோடு - தறுகண்மையையுடைய யானையினது கொம்பை, நொடுத்து உண்ணும் - விற்று அவ்விலையால்வரும் உணவை உண்ணுதற்கிடமாகிய, வல்வில் ஓரி - வலியவில்லையுடைய ஓரியினது, கொல்லி குடவரை - கொல்லிமலையின் மேல்பக்கத்திலுள்ள, பாவையின் - பாவையைப் போல, மடவந்தனள் - நான் கண்டுகாமுற்ற மகள் மடப்பம் வரப்பெற்றாள்; ஆயினும், பணை பெரு தோள் - அவளுடைய மூங்கிலைப்போன்ற பெரிய தோள்கள், மணத்தற்கு அரிய - தழுவுதற்கு அரியனவாகும்.

(முடிபு.) நான் கண்டு காமுற்ற மகள் மடவந்தனள்; அவள் தோள் மணத்தற்கரிய.

(கருத்து.) என்மனங்கவர்ந்த தலைவி பெறுதற்கரியள்.

(வி - ரை.) தோழவென்பது முன்னத்தாற் கொள்ளப்பட்டது. ஐவனம் - மலைநெல் (மலைபடு. 115.) பருவிலை: "நெடுவிடை" (கைந்நிலை, 13) என்பதுபோல நின்றது; பரீஇயிலை, பரியவிலையென்று நிற்றலே பெருவழக்கு. குளவி: இதனைக் கொடியென்பர் (ஐங். எழு. 3, உரை.) மரல் மருளென்று வழங்கும்; இதனை ஒருவகைக்கற்றாழை யென்பர். கடுங்கண் வேழமென்றது அவ்வேழத்தின் கோடு பெறுதற்கரியதென்பது கருதிற்று. நன்மணமுடைய மலரையுடைய குளவியையும் மரலையும் ஒருங்கேகளைந்து விடுதலும், தம்பாலுள்ள ஐவனமுழுதையும் வித்தி உணவின்றிப் பசித்தலும், அங்ஙனம் பசிக்குங்காலத்து அரிதிற்பெறும் யானைக் கொம்பை எளிய விலைக்குக் கொடுத்தலும் மலைவாணர் அறியாமையைக் காட்டின.

வல் வில் ஓரி: இவன் எழுவள்ளல்களுள் ஒருவன். வல்வில்: ஒரேகாலத்திற் பலபொருள்களை ஊடுருவிச் செல்லும்படி அம்பை எய்யும் வில்; இதனையுடைய வீரனை வல்வில்லியென்பது வழக்கு. ஓரியின் வல்வில் வீரத்தைப்பற்றி வன்பரணர் என்னும் புலவர்,

" வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி யுரற்றலைக்
கேழற் பன்றி வீழ வயல
தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன் "

(புறநா. ௧௫௨ : 1-6)

என்று பாராட்டுதல் காண்க.

கோல்லிப்பாவை : இந்நூல் ௮௬ - ஆம் செய்யுள் உரை முதலியவற்றைப் பார்க்க. மடவந்தனள் - அறியாமையை உடையளாயினள். யான் அவளைக்கண்டு படுந்துன்பத்தை அறியாளாயினளென்பது கருத்து. கொல்லிப்பாவை தோற்றத்திற் பாவைபோல இருப்பினும் பெறுதற்கரியதுபோல, தோற்றத்தில் மடவந்தாள்போலிருப்பினும் பெறுதற்கரியாளென்றபடி. மடவந்தனள் - வெருவினளென்றலுமொன்று (குறள், 1089, பரிமேல்.) கொல்லிப்பாவையைப் போல மடவந்தனளென்று இங்கே உள்ளவாறே பிறரும், " கொல்லி.... கடவு ளெழுதிய பாவையின், மடவது மாண்ட மாஅ யோளே " (அகநா. ௬௨ : 13-6) என்று கூறுதல் காண்க. பெருந்தோள் : ௬௫-ஆம் செய்யுள் உரையைப் பார்க்க.

ஏகாரங்கள் : அசைநிலைகள்.

தலைவன் ஒரு தலைவிபாற் காமுற்று வந்ததை அவன்வாயிலாய் அறிந்த பாங்கன், " அவள் எவ்வியல்பினள்? " என்றானுக்குத் தலைவன் கூறியது இது.

இரண்டாவது கருத்து : தலைவன் இரவில் தலைவியின் மனைப்பக்கத்தே வந்து தான்வந்ததைச் சிலகுறிப்பினால் புலப்படுத்தினான்; தலைவி அவன் வருதற்குமுன் இயற்கையாக உண்டான சில ஒலிகளைத் தலைவன்செய்த குறியாக எண்ணிவந்து பார்த்து அவன் வாராமையின் வறிதே மீண்டவளாதலின், பின்பு உண்மையிலே அவன்வந்து குறி செய்ததையும் முன்னதைப் போன்றதென்றே எண்ணி வாளா விருந்தாள்; அதனால் தலைவியைக் காணாத தலைமகன், " என் மனத்தைக் கவர்ந்து துன்புறுத்திவிட்டுத் தான் ஒன்றும் அறியாள்போல இருக்கும் தலைவியை இனிப் பெறுதல் அரிதுபோலும்! " என்று தன் நெஞ்சை நோக்கி வருந்திக் கூறியது. இக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதன்று.

## மேற்கோளாட்சி

3-4. * செய்தெனவென்னும் வாய்பாட்டெச்சம் தன் வினைமுதல் வினையைக் கொண்டு முடிந்தது (நன். 343, மயிலை, 344, சங், வி; இ. வி 247.)

## ஒப்புமைப் பகுதி

1. ஐவனம் : மதுரைக். 288 ; ஐந். எழு. 12.

அருவிப்பரப்பில் ஐவனம் வித்தல்: "மைபடு சிலம்பி னையவனம் வித்தி, அருவியின் விளைக்கு நாடன்" (குறுந். ௩௭௧ : 2-3); "ஐவனங்கள் அணியா ரருவி கவர்கிளி யோப்புமின் சாரல்" (11-ஆம். திருவேகம்ப அந். 57.)

2. மரல்: குறுந் : உ௩உ : 3.

3. காந்தள் வேலி : குறுந். எசு : 1, ஒப்பு.

2-3. குளவியும் காந்தளும்: "உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள், அடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரல்" (புறநா. ௯0 : 1-2) "இலையடர் தண்குளவி யேய்ந்த பொதும்பிற், குலையுடைக் காந்தள்" (ஐந். எழு. 3.)

3 - 4. குறவர் யானைக்கோம்பை விற்றல்: "மகிழ்நொடை பெறூஅ ராகி நனைகவுட், கான யானை வெண்கோடு சுட்டி" (அகநா உசரு : 10-11.)

5. வல்வில் : "வல்வில் விடலை", "வல்விற் காளை" (ஐங். ௩௭௩ 5, ௩௯0 : 3); "கைபுனை வல்வில்", "வல்வி லேவர்" (கலி. எ : 6, ௧0௪ 58); "வல்வில் விளையர்", "வான்போழ் வல்வில்" (அகநா. ௧உ0 : 12 ௧௫உ : 15, உ௮௧ : 5); "வல்வில் வேட்டுவன்" (புறநா. ௧௫0 : 7) "வல்வி லிராமன்" (திவ். பெரியதிரு. ௫. 1 : 4); "வல்வில் விளையன்" "வல்வில் வயவர்", "வல்விற் குமரர்", "வல்வில் விளையர்" (பெருங் க. 47 : 32, 56 : 45, 264 ; ௩. 17 : 217) ; "சுற்றூர் வல்வில்", "மராமர மேழு மெய்த வாங்குவிற் றடக்கை வல்வில், இராமன்" (சீவக 1057, 1643.)

வல்வில்லின் தன்மை : கம்ப. குலமுறை. 26, மராமரப். 138-9.

வல்வில் ஓரி : நற். சு : 9 ; அகநா. உ0௯ : 13-4 ; புறநா. ௧௫௮ : 5.

---

* பசித்தெனவென்பது இவ்வுரையாசிரியர்கள் கொண்ட பாடம்.

கொல்லிமலை ஓரிக்குரியது: "ஓரி கொல்லி" (நற். உசுரு: 7); "ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி" (அகநா. உ0அ: 21-2); "ஓங்கிருங் கொல்லிப் பொருநன்", "கொல்லி யாண்ட வல்வி லோரி" (புறநா. கருஉ: 31, கருஅ: 5.)

5-6. கொல்லிப்பாவை: குறுந். அக: 4-6, ஒப்பு.

7. தோள் மணத்தல்: குறுந்: ருo: 5, ஒப்பு.
தோள்அரிய: குறுந். உஎஉ: 1-8.

---

## தலைவன்கூற்று

[*தலைவியோடு இன்புற்று இல்லறம் நடத்தும் தலைவன் அத்தலைவியினால் வரும் இன்பம் எப்பொருளினும் சிறப்புடையதென்று பாங்காயினார் கேட்பக் கூறியது.*]

கoக. விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமும்
அரிதுபெறு சிறப்பிற் புத்தே ணாடும்
இரண்டுந் தூக்கிற் சீர்சா லாவே
பூப்போ லுண்கட் பொன்போன் மேனி
மாண்வரி யல்குற் குறுமகள்
தோண்மாறு படூஉம் வைகலொ டெமக்கே.

எ - து. (1) தலைமகட்குப் பாங்காயினார் கேட்பச் சொல்லியது.

[*பாங்காயினார் - தோழி முதலியோர்.*]

(2) வலித்த நெஞ்சிற்குச் சொல்லிச் செலவழுங்கியதூஉமாம்.

[*வலித்தநெஞ்சு - பொருளீட்டும்பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்லத்துணிந்தநெஞ்சு. செலவு அழுங்கியது - செல்லுதலைத் தவிர்ந்தது.*]

* பருஉமோவாய்ப் பதுமன்.

(ப - ரை.) *விரி திரை பெரு கடல் - விரிந்த அலையையுடைய*

---

(பி - ம்.) * *பருவமோவாய்ப்.*

பெரியகடல், வளைஇய உலகமும் - வளைந்த பூவுலக இன்பமும், அரிது பெறு சிறப்பின் புத்தேள் நாடும் - பெறுதற்கரிய தலைமையையுடைய தேவருலக இன்பமும், இரண்டும் - ஆகிய இரண்டும், பூ போல் உண் கண் - தாமரைப்பூவைப்போன்ற மையுண்ட கண்களையும், பொன் போல் மேனி - பொன்னைப் போன்ற நிறத்தையும், மாண் வரி அல்குல் - மாட்சிமைப்பட்ட வரிகளையுடைய அல்குலையும் உடைய, குறு மகள் - தலைவியினது, தோள் மாறுபடூஉம் - தோளோடு தோள் மாறு படத்தழுவும், வைகலொடு - நாளிற்பெறும் இன்பத்தோடு, தூக்கின் - ஒருங்குவைத்து ஆராய்ந்தாலும், எமக்கு —, சீர் சாலா - அவ் வைகலின்பத்தின் கனத்திற்கு ஒவ்வா.

(முடிபு.) எமக்கு, குறுமகள் தோள் மாறுபடூஉம் வைக லொடு, கடல் வளைஇய உலகமும் புத்தேணாடும் ஆகிய இரண்டும் தூக்கிற் சீர் சாலா.

(கருத்து.) தலைவி பெறுதற்கரிய சிறப்பினள்.

(வி - ரை.) விரிதிரைப் பெருங்கடல் வளைஇய வுலகமென்று சிறப்பித்தது நிலப்பரப்பின் பெருமையைக் கூறும் வாயிலாக அதன் உயர்வை உணர்த்தியபடி. தானம் தவம் முதலியன செய்தே அடைய வேண்டுதலின் அரிது பெறு சிறப்பிற் புத்தேணாடென்றான். உலகம், நாடு: ஆகுபெயர் (குறள், 247, பரிமேல்.) சீர் - கனம்; 'சீர் தூக்கும் கோல்-பாரத்தை வரையறுக்கும் கோல்' (குறள், 118, பரிமேல்.) பூப்போலுண்கண் எனத் தலைவியின் உறுப்புக்களை அடை களாற் சிறப்பித்துக் கூறியது அவள்பாற் பெற்ற இன்பத்தின் பயனு கத் தலைவன் உணர்ந்த இயல்புகளைப் புலப்படுத்தியபடி. தோள் மாறு படுதலாவது ஒருவர் இடத்தோள் மற்றவர் வலத்தோளினும் ஒருவர் வலத்தோள் மற்றவர் இடத்தோளினும் பொருந்தத் தழுவுதல். எமக் கென்றது தலைவியையும் உளப்படுத்தியபடி.

தூக்கினு மென்ற வும்மை விகாரத்தால் தொக்கது. ஏகாரங்கள்; அசை நிலை.

இரண்டாவது கருத்து: பொருள் தேடும் பொருட்டுத் துணிந்த நெஞ்சை நோக்கி, "இவளைப் பிரிந்து பொருள் தேடலாற் பெறும் பயன் யாது? பொருளால் இல்லறமாகிய இம்மைப் பயனும் அவ்வறத்தான் வரும் சுவர்க்க இன்பமாகிய மறுமைப் பய னும் உண்டாமாதலின் அதனைத் தேடுதல் இன்றியமையாததெனின்

இவளால் வரும் இன்பம் அவ்விருவகை இன்பத்தினும் உயர்வுடையது" என்று கூறித் தலைவன் செலவு தவிர்ந்தது. இக்கருத்து முன்னையதினும் சிறப்புடையதாகத் தோற்றுகின்றது.

## மேற்கோளாட்சி

1. பதினைழெழுத்தான் வந்த கட்டளையடி (தொல். செய். 50, இளம்.)

மு. பொருளினும் காமம் வலியுடைத்தென உட்கொண்ட வழித் தலைவனுக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 5, இளம்.); காரணத்தின் அமைந்து முடிந்தகாலை நெஞ்சு தளையவிழ்ந்த புணர்ச்சிக்கண் இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலியவற்றால் தலைவன் மகிழ்ந்தது (ஷை. ஷை. 5, செய். 187, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. புத்தேளுநாடு அரிதிற் பெறப்படுதல்: "அரிதிற்பெறு துறக்கம்" (பரி. ௧௫ : 17), 'தவத்தானுந் தானத்தானு மன்றிப் புகலாகாச் சுவர்க்கம்' (இறை. 2, உரை.)

1 - 3. ஒன்றன் பெருமைக்குப் பூவுலகத்தையும் வானத்தையும் ஒப்பிடுதல்: "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்ற லரிது" (குறள், 101.)

4. பூப்போலுண்கண்: முல்லை. 23; நற். ௨0 : 6, ௬௨௫ : 7; ஐங். ௧௬ : 4, ௧0௧ : 4.

பூவைப்போன்ற உண்கண்: குறுந். ௫ : 5, ௬௭௭ : 1.

கண்ணிற்குப் பூ: குறுந். ௭௨ : 1 - 5, ஒப்பு.

பொன்போல் மேனி: குறுந். ௬௧௯ : 6; நற். ௧0 : 2; ஐங். ௨௬0 : 4; அகநா. ௨௧௨ : 1 - 2.

5. மாண்வரி யல்குல்: குறுந். ௧அ0 : 5-6.

தலைவியைத் திருமகளென்றல்: குறுந். அ௯ : 7, ஒப்பு.

மு. ஒருவகைஒப்பு: குறுந். ௨௯௭; பட். 218 - 20; குறள், 1103; சிந். 46. (௧0௩)

## தலைவி கூற்று

[தலைவன்பிரிந்து நெடுங்காலம் நீட்டித்தானாக அதனை உணர்ந்த அவனது பிரிவைத் தலைவி ஆற்றுளெனத் தோழி கவன்றதையறிந்து அத்தலைவி 'அவரை நினைந்துநினைந்து காமநோய் மிக்கு வருந்துகின்றேன்; அவர் தம் சொற்படி இன்னும் வந்திலர்' என்று கூறியது.]

கo௨. உள்ளி னுள்ளம் வேமே யுள்ளா
திருப்பினெம் மளவைத் தன்றே வருத்தி
வான்றோய் வற்றே காமம்
சான்றோ ரல்லர்யா மரீஇ யோரே.

எ - து. ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி, 'யான் யாங்ஙனம் ஆற்றுவேன்?' * என்றது.

† ஔவையார்.

(ப - ரை.) உள்ளின் உள்ளம் வேம் - தலைவரை நினைந்தால் எம் உள்ளம் வேவாநிற்கும்; உள்ளாது இருப்பின் - நினையாமல் இருப்பேமாயின், எம் அளவைத்து அன்று - அங்ஙனம் இருத்தல் எமது ஆற்றலளவிற்கு உட்பட்டதன்று; காமம் - காமநோயோ, வருத்தி - எம்மை வருந்தச்செய்து, வான்தோய்வற்று - வானத்தைத்தோய்வது போன்ற பெருக்கத்தையுடையது; யாம் மரீஇயோர் - எம்மால் மருவப்பட்ட தலைவர்; சான்றோர் அல்லர் - சால்புடையாரல்லர்.

(முடிபு.) உள்ளின் உள்ளம் வேம்; உள்ளாதிருப்பின் எம் அளவைத்தன்று; காமம் வான்தோய்வற்று; மரீஇயோர் சான்றோரல்லர்.

(கருத்து.) தலைவர் தம் சொற்படி மீண்டு வாராமையின் ஆற்றேனாயினேன்.

(வி - ரை.) தலைவனை நினைந்தகாலத்தில் அவனது பிரிவுத்துன்பம் தோற்றுதலின் உள்ளின் உள்ளம் வேமென்றாள். உள்ளம் வேதலாவது புறத்தே துன்பம் தோற்றுவாறு உள்ளத்துள்ளே துயரத்தை அடக்கி நிற்றல்.

(பி - ம்.) * என்கின்றது. † அவ்வையார்.

என் துயரத்தை அறியாராயினமையின் அன்பின்மையையும், தமதுபிரிவு நீட்டித்தலால் எனக்கு உண்டாகிய வேறுபாடுகளையறிந்த ஊரார் தம்மைத் தூற்றுதலைக் கருதாது இன்னும் ஆண்டே உறைதலின் நாணமின்மையையும், இல்லறம் நிகழ்த்துவார் உரியகாலத்தே தலைவியருடன் இருந்து இன்புறும் உலகியலை மறந்தமையால் ஒப்புரவின்மையையும், மெல்லியலாகிய என்துயர் நீங்க வாராமையின் கண்ணோட்டமின்மையையும், தாம் கூறிய காலத்தில் மீளாமையின் வாய்மையின்மையையும் உடையரென்னும் கருத்தை உள்ளிட்டுச் சான்றோரல்லர் எனக்கூறினள் ; " அன்புநா ணொப்புர வு கண்ணோட்டம் வாய்மையோ, டைந்துசால் பூன்றிய தூண் " (குறள், 983) என்பதை அறிக.

ஏகாரங்கள் அசைநிலை.

## மேற்கோளாட்சி

1. கீழ்க்கதுவா யெதுகை வந்தது (தொல். செய். 93, ந.) ; காதல் கைம்மிகலென்னும் மெய்ப்பாடு வந்தது (சீவக. 996, ந.)

2 - 3. தொழில் நிகழ்த்தற்குரிய அல்லாப் பொருளை நிகழ்த்தின போலக் கூறியது (தொல். பொருள். 19, ந.)

மு. காதல் கைம்மிகலென்னும் மெய்ப்பாடு வந்தது (தொல். மெய்ப். 23, பேர் ; இ. வி. 580) ; வருத்தமிகுதியால் தலைவனை வழிபடுதலை மறுத்துத் தலைவி கூறியது (ஷை. களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. உள்ளின் உள்ளம் வேம் : (குறுந். ௯௰0 : 4) ; " உள்ளினு ளுள்ளம் வேமே " (நற். ௧௮௪ : 6) ; " உள்ளினு முள்ளஞ் சுடும் " (குறள், 1207) ; " கருதின்வே முள்ளமும் " (கம்ப. தாடகை. 5.)

3. காமத்தின் பெருக்கம் : குறுந். ௧௮ : 5.

காமம் வான்தோய்வற்று : குறுந். ௬௬ : 4 - 6.

4. தலைவன் சான்றோனல்லனெனப்படுதல் : நற். ௨௬௬ : 8 - 9, ௬௬௫ : 8 - 9. (௧0௨)

## தலைவி கூற்று

[கூதிர்ப்பருவம் வந்தபின்பும் தலைவன் வாராமையினால் துனபுற்ற தலைவி தோழியை நோக்கி, "இவ்வாடைக் காலத்திலும் மீண்டு வாராராயினர்; இனி யான் பிரிவாற்றாது உயிர் நீங்குவேன்" என்று கூறியது.]

கoரு. கடும்புனல் * றொகுத்த நடுங்கஞ ரள்ளற்
கவிரித ழன்ன தூவிச் செவ்வாய்
இரைதேர் நாரைக் கெவ்வ மாகத்
தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்
வாரார் போல்வர்நங் காதலர்
வாழேன் போல்வ றோழி யானே.

எ - து. பருவங் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

வாயிலான் தேவன்.

(ப - ரை.) தோழி—, கடு புனல் தொகுத்த—மிக்க புனலால் தொகுக்கப்பட்ட, நடுங்கு அஞர் அள்ளல் - நடுங்குதற்கு ஏதுவாகிய துன்பத்தைத்தரும் சேற்றினிடத்து, இரை தேர் - மீனாகிய உணவைத் தேர்கின்ற, கவிர் இதழ் அன்ன - முள்ளுமுருங்கைமலரின் இதழைப் போன்ற, தூவி - மெல்லிய இறகையும், செ வாய் - செம்மையாகிய அலகையும் உடைய, நாரைக்கு—, எவ்வம் ஆக - துன்பம் உண்டாகும் படி, தூஉம் துவலை - தூவுகின்ற நீர்த்துளிகளையுடைய, துயர் கூர் வாடையும் - பிரிந்தார் துயர்கூர்தற்குக் காரணமாகிய வாடைக் காற்றையுடைய கூதிர்க்காலத்திலும், நம் காதலர் - பிரிந்து சென்ற நம்முடைய தலைவர், வாரார் - வருவாரல்லர்; யான்—, வாழேன் - வாழ்வேனல்லன்.

(முடிபு.) தோழி, நம் காதலர் வாடைக்காலத்தும் வாரார்; யான் வாழேன்.

(கருத்து.) தலைவர் இன்னும் வாராமையின் துன்பம் மிகப் பெற்றேன்.

(பி - ம்.) * றொடுத்த.

(வி - ரை.) தன்பாற் சென்றுரை ஆழ்த்திவிடும் இயல்பின தாதலின் நடுங்கலுரளளலென்றாள். இரைதேரும் முயற்சியையுடைய நாரைகளும் துன்புற்று அம்முயற்சி யொழிதற்கு ஏதுவாக இருக்கும் இவ்வாடைக் காலத்தில் தலைவர் மட்டும் தம்முயற்சியை ஒழிந்து ஈண்டுப் போந்திலரென்பது குறிப்பு.

வாடையும்: உம்மை, இழிவு சிறப்பு. போல்வர், போல்வல்: உரையசைகள் (தொல். இடை. 29.) ஏகாரம், அசை.

நம் காதலரென்றாள், தனக்கும் தோழிக்குமுள்ள ஒற்றுமை பற்றி.

"என்னுடன் தாம் சேர்ந்திருத்தற்குரிய இவ்வாடைக் காலத்தி லும் தலைவர் மீண்டிலர்; இவ்வாடையின் துயர் பொறுத்தற்கு அரிதா யிற்று; அவருடைய பிரிவை இக் காலம் மிகுதியாகப் புலப்படுத்தி விட்டதாதலின் இனி உயிரைவைத்துக்கொண்டு ஆற்றும் ஆற்றல் இல்லேன்" என்று தலைவி கூறி வருந்தினாள்.

## மேற்கோளாட்சி

1. கடியென்னும் உரிச்சொல் மிகுதிப்பொருளில் வந்தது (தொல். உரி. 86, இளம்.); உரிச்சொல் ஈறுதிரிந்து வந்தது (ஷை. ஷை. 98, ஷை.)

## ஒப்புமைப்பகுதி

2. நாரையின் தூவி செந்நிறமுடையது: "மடநடை நாரை, பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி" (ஐங். ௧௫௬ : 2-3); 'பெரிய நாரை சிறகு சிவந்திருத்தலானும்' (கலி. ௧௨௬ : 1-5, ந.); "சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்" (ஐந். எழு. 68.)

2. இரைதேர் நாரை: "இரைதேர் நாரை", "இரைதேருந் தடந்தா ணாரை" (நற். ௩௫ : 6, ௧௧ : 4.)

4. துயர்கூர் வாடை: குறுந். ௧௧0 : 6, ௨௪0: 4, ௨௭௭ : 6, ௩௧௭ : 5-6, ௩௩௨ : 1-2. (௧0௩)

## தலைவி கூற்று

[கூதிர்ப்பருவம் வந்தபின்புந் தலைவன் வாராமையினால் துன்புற்ற தலைவி தோழியை நோக்கி, "இவ்வாடைக் காலத்திலும் மீண்டு வாராராயினர்; இனி யான் பிரிவாற்றாது உயிர் நீங்குவேன்" என்று கூறியது.]

௧௦௩. கடும்புனல் * றொகுத்த நடுங்கஞ ரள்ளற்
கவிரித ழன்ன தூவிச் செவ்வாய்
இரைதேர் நாரைக் கெவ்வ மாகத்
தூஉந் துவலைத் துயர்கூர் வாடையும்
வாரார் போல்வர்நங் காதலர்
வாழேன் போல்வ றோழி யானே.

எ - து. பருவங் கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

வாயிலான் தேவன்.

(ப - ரை.) தோழி—, கடு புனல் தொகுத்த—மிக்க புனலால் தொகுக்கப்பட்ட, நடுங்கு அஞர் அள்ளல் - நடுங்குதற்கு ஏதுவாகிய துன்பத்தைத்தரும் சேற்றினிடத்து, இரை தேர் - மீனாகிய உணவைத் தேர்கின்ற, கவிர் இதழ் அன்ன - முள்ளுமுருங்கைமலரின் இதழைப் போன்ற, தூவி - மெல்லிய இறகையும், செ வாய் - செம்மையாகிய அலகையும் உடைய, நாரைக்கு—, எவ்வம் ஆக - துன்பம் உண்டாகும்படி, தூஉம் துவலை - தூவுகின்ற நீர்த்துளிகளையுடைய, துயர்கூர் வாடையும் - பிரிந்தார் துயர் கூர்தற்குக் காரணமாகிய வாடைக் காற்றையுடைய கூதிர்க்காலத்திலும், நம் காதலர் - பிரிந்து சென்ற நம்முடைய தலைவர், வாரார் - வருவாரல்லர்; யான்—, வாழேன் - வாழ்வேனல்லேன்.

(முடிபு.) தோழி, நம் காதலர் வாடைக்காலத்தும் வாரார்; யான் வாழேன்.

(கருத்து.) தலைவர் இன்னும் வாராமையின் துன்பம் மிகப் பெற்றேன்.

(பி - ம்.) * றொடுத்த.

(வி - ரை.) தன்பாற் சென்றாரை ஆழ்த்திவிடும் இயல்பின தாதலின் நடுங்கஞரள்ளலென்றாள். இரைதேரும் முயற்சியையுடைய நாரைகளும் துன்புற்று அம்முயற்சியொழிதற்கு ஏதுவாக இருக்கும் இவ்வாடைக் காலத்தில் தலைவர் மட்டும் தம்முயற்சியை ஒழிந்து ஈண்டுப் போந்திலரென்பது குறிப்பு.

வாடையும்: உம்மை, இழிவு சிறப்பு. போல்வர், போல்வல்: உரையசைகள் (தொல். இடை. 29.) ஏகாரம், அசை.

நம் காதலரென்றாள், தனக்குந் தோழிக்குமுள்ள ஒற்றுமை பற்றி.

“என்னுடன் தாம் சேர்ந்திருத்தற்குரிய இவ்வாடைக் காலத்திலும் தலைவர் மீண்டிலர்; இவ்வாடையின் துயர் பொறுத்தற்கு அரிதாயிற்று; அவருடைய பிரிவை இக் காலம் மிகுதியாகப் புலப்படுத்தி விட்டதாதலின் இனி உயிரைவைத்துக்கொண்டு ஆற்றும் ஆற்றல் இல்லேன்” என்று தலைவி கூறி வருந்தினாள்.

## மேற்கோளாட்சி

1. கடியென்னும் உரிச்சொல் மிகுதிப்பொருளில் வந்தது (தொல். உரி. 86, இளம்.); உரிச்சொல் ஈறுதிரிந்து வந்தது (௸. ௸. 98, ௸.)

## ஒப்புமைப்பகுதி

2. நாரையின் தூவி செந்நிறமுடையது: “மடநடை நாரை, பதைப்ப வொழிந்த செம்மறுத் தூவி” (ஐங். கருசு : 2-3); ‘பெரிய நாரை சிறகு சிவந்திருத்தலானும்’ (கலி. கஉசு : 1-5, ந.); “சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்” (ஐந். எழு. 68.)

2. இரைதேர் நாரை: “இரைதேர் நாரை”, “இரைதேருந் தடந்தாணாரை” (நற். ருடு : 6, கக : 4.)

4. துயர்கூர் வாடை: குறுந். கக௦ : 6, உச௦ : 4, உஎஎ : 6, ருகஎ : 5-6, ருருஉ : 1-2. (க௦ரு)

---

## தலைவி கூற்று

[தலைவன் நெடுங்காலம் பிரிந்துறைந்தானாக அப்பிரிவை ஆற்றாத தலைவி, "பின்பனிப் பருவத்திற் பிரிந்த தலைவர் பலநாள் செல்லவும் மீண்டுவந்திலர்; நான் எங்ஙனம் ஆற்றுவேன்!" என்று கூறியது.]

கoச. அம்ம வாழி தோழி காதலர்
நூலறு முத்திற் றண்சித ருறைப்பத்
தாளித் தண்பவர் நாளா மேயும்
பனிபடு நாளே பிரிந்தனர்
பிரியு நாளும் பல*வா குவவே.

எ - து. (1) பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குக் கூறியது.

(2) சிறிய வுள்ளிப் பெரிய மறக்க வேண்டாவோ வென்ற தோழிக்குக் கிழத்தி கூறியதூஉமாம்.

[சிறிய நன்மைகளை நினைந்து பெரியனவாகிய கொடுமைகளை மறக்க வேண்டாவோ; "கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த, ஒன்றுநன் றுள்ளக் கெடும்" (குறள், 109.)]

காவன்முல்லைப் பூதனார்.

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று கூறுவன் கேட்பாயாக: காதலர் - நம் தலைவர், நூல் அறு முத்தின் - நூலற்ற முத்து வடத்தினின்றும் தனித்து உதிர்கின்ற முத்துக்களைப் போல, தண் சிதர் உறைப்ப - குளிர்ந்த பனித்துளிகள் துளிக்க, தாளி தண்பவர் - குளிர்ந்த தாளியறுகின் கொடியை, நாள் ஆ மேயும் - விடியற்காலத்தில் பசுக்கள் மேயும், பனி படு நாளே - பனிவீழ்கின்ற காலத்திலே, பிரிந்தனர் - என்னைத் தலைவர் பிரிந்து சென்றார்; பிரியும் நாளும் - அங்ஙனம் பிரிந்து சென்று உறையும் நாட்களும், பல ஆகுவ - பலவாகின்றன; நான் எங்ஙனம் ஆற்றுவேன்!

(முடிபு.) தோழி, காதலர் பனிபடு நாளே பிரிந்தனர்; பிரியும் நாளும் பல ஆகுவ.

---

(பி - ம்.) * வாகுகவே, வாகுபவே.

(கருத்து.) தலைவர் காலமல்லாத காலத்திற் பிரிந்ததோடன்றிப் பல நாட்களாகியும் மீண்டாரிலர்.

(வி - ரை.) வாழி : அசை. பனித்துளி ஒன்றோடொன்று தொடர்பின்றித் தனித்தனியே விழுமாதலின் நூலறுமுத்தை உவமை கூறினள். தாளி - ஒருவகை யறுகு; "தாளி யறுகின் றாராய் போற்றி" (திருவா. போற்றி. 201); ஒருவகைக் கொடியுமாம். நாட்காலையில் பசு மேயும்பொழுது அறுகின் நுனியிலுள்ள பனித்துளிகள் துளிக்கும். பனிபடுநாளே பிரிந்தனரென்பது பிரிதற்குரிய காலமன்றென்னுங் கருத்தினது.

தலைவர் பிரிந்த நாள் உண்மையிலே சிலவாயினும் அவை தலைவிக்குப் பலவாகத் தோற்றுதல் இயல்பு ; நெடுநல்வாடை யென்ற பெயர்க் காரணம் கூறவந்த நச்சினார்க்கினியர், 'தலைவனைப் பிரிந்திருந்து வருந்துந் தலைவிக்கு ஒருபொழுது ஓரூழிபோல நெடிதாகிய வாடையாய்' என்றதைக் கருதுக.

"என்னோடு உடனிருத்தற்குரிய பருவத்திற் பிரிந்தனர்; அது துன்பத்திற்குக் காரணமாயிற்று; அங்ஙனம் பிரிந்தவர் சில நாளில் மீண்டு வந்திருப்பின் அத்துன்பத்தை ஆற்றியிருப்பேன்; அவ்வாறின்றிப் பல நாட்களாகவும் இன்னும் வந்திலர்; யான் என் செய்கேன்!" என்று தலைவி கூறி இரங்கினள்.

நாளே : ஏகாரம், பிரிநிலை; ஆகுவலே : ஏகாரம், அசை.

**இரண்டாவது கருத்து :** தலைவன் தான் கூறிய பருவத்தே வாராது தாழ்த்தானாக அவன் கொடுமையை நினைந்து வருந்திய தலைவியை நோக்கி, "அவன் நின்மாட்டுச் செய்த தலையளியை நினைந்து இக்கொடுமையை மறப்பாயாக" என்ற தோழிக்குத் தலைவி, "அவர் பிரிந்த காலமும் ஏற்றதன்று; வருங்காலமும் கடந்தது; பன்னாளாயின; இனி எங்ஙனம் மறப்பது?" என்று கூறியது. இது முன்னையதினும் சிறப்புடையதன்று.

## மேற்கோளாட்சி

1. அம்மவென்னும் இடைச்சொல் கேளென்னும் முன்னிலையேவற்பொருட்கண் வந்தது (நன். 437, மயிலை.)

மூ. பாலைக்குப் பின்பனிப்பருவம் வந்தது ; தலைவி தோழிக்கு உரைத்தது (தொல். அகத். 10, ந.)

## ஒப்புமைப்பகுதி

1. அம்மவாழி தோழி : குறுந். எஎ : 1, ஒப்பு.

2. நாலறு முத்து : குறுந். இக : 2.

தண்சிதர் உறைத்தல் : குறுந். உசஉ : 2.

2 - 3. அறுகின் நுனியிலுள்ள பனித்துளிக்கு முத்து : "ஊசி யறுகை யுறுமுத்தங் கோப்பனபோல், மாசி யுகுபனிநீர் வந்துறைப்ப" (நக்கீரர் வாக்கு.) (கOசு)

---

### தலைவி கூற்று

[தலைவன் நெடுங்காலம் வரையாமல் பிரிந்திருந்தானாக, "தலைவன்கேண்மை வரைவினால் உண்மையாகாமல் என் நினைவளவில் நின்று துன்புறுத்துகின்றது" என்று கூறித் தலைவி வருந்தியது.]

கOரு. புனவன் றுடவைப் பொன்போற் சிறுதினைக்
கடியுண் கடவுட் கிட்ட *செழுங்குரல்
அறியா துண்ட மஞ்ஞை யாடுமகள்
வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்
சூர்மலை நாடன் கேண்மை
நீர்மலி கண்ணொடு †நினைப்பா கின்றே.

எ-து. வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

நக்கீரர்.

(ப-ரை.) தோழி, புனவன் துடவை - குறவனுக்குரிய தோட்டத்தில் விளைந்த, பொன்போல் சிறுதினை - பொன்னைப்போன்ற சிறுதினையில், கடி உண் கடவுட்கு இட்ட செழு குரல் - புதியதை உண்ணும் தெய்வத்துக்குப் பலியாக இட்ட வளவிய கதிரை, அறியாது உண்ட மஞ்ஞை - தெரியாமல் உண்ட மயில், ஆடுமகள் வெறி உறு வனப்பின்- தேவராட்டிவெறியாடுகின்ற அழகைப்போல, வெய்துற்று - வெம்மையுற்று, நடுங்கும் - நடுங்குதற்கு இடமாகிய, சூர்மலைநாடன் - தெய்வங்

(பி-ம்.) *சில்குரல். †நினைப்பாகும்மே.

கள் உறையும் மலைநாட்டையுடைய தலைவனது, கேண்மை - நட்பு, நீர் மலி கண்ணொடு - நீர்மிக்க கண்களோடு, நினைப்பு ஆகின்று - நாம் நினைந்து துன்புறுதற்குக் காரணமாகியது.

(முடிபு.) மலைநாடன்கேண்மை நினைப்பாகின்று.

(கருத்து.) தலைவன் வரையாமையின் அவனை நினைந்து துன்புறு கின்றேன்.

(வி-ரை.) புனவன் - புனத்தையுடைய குறவன். மலைவாணர் தினையை வித்தி விளைத்து அதில் தோற்றும் புதுக்கதிரைத் தெய்வத் துக்குப் பலியாக இடுதல் மரபு.

ஆடுமகள் - வெறியாடுபவள்; இவள் கணிக்காரிகை யெனவும் கூறப்படுவாள். சூர் - அச்சமுமாம்.

தெய்வத்துக்கிட்ட பலியை உண்டற்கினியதென்றெண்ணி அறி யாதுண்ட மஞ்ஞை பின்பு நடுங்குதலைச் செய்யும் மலைநாடனென்றது, என் தகுதிக்கு மேற்பட்டதாகிய தனது கேண்மையை இனியதென் றெண்ணி அறியாமற் பெற்றமையால், இப்பொழுது நடுங்கச் செய் தானென்னும் குறிப்பினது; (சிற். 193, பேர்.)

தலைவனுடைய கேண்மை கண்ணீர் மல்கச் செய்யும் துன்பத் தைத்தந்து நினைவளவிலே நின்றதேயன்றி இன்பத்தைத் தந்து வரை யுஞ் செயலளவில் முற்றவில்லையென்பது தலைவியின் உட்கோள்.

## மேற்கோளாட்சி

2. கடியென்னும் உரிச்சொல் புதுமையென்னும் பொருளில் வந் தது (தொல். உரி. 87, தெய்வச்; நன். 456, மயிலை. 457. சங்; வி; இ. வி. 282.)

மு. வரைவிடை வைத்தகாலத்து உருத்தமுற்றழிந்த தலைவி தானே கூறியது (தொல். களவு. 21, இளம்.)

## ஒப்புமைப்பகுதி

1. மு. குறுந். கஉஉ : 1.

சிறுதினை : குறுந். கஎ௫ : 3.

3-4. வெறியாடுமகள்; குறிஞ்சி. 175; பட். 154-5.

மந்தரை நடுங்குதல்: குறிஞ்சி. 169.

4. வெறியுறு வனப்பு: "வெறிகொள் பாவையிற் பொலிந்த" (அகநா. ௯எ௦ : 14.)

வெறியுற்றாற் நடுங்குதல்: குறுந். ௨௨ : 2, ஒப்பு.

6. ஆகின்று : குறுந். கககக : 4.

(க௦௫)

---

## தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்த தலைவன் தான் குறைவில்லா அன்புடையனென்று கூறித் தூது விடுப்ப, அதனையறிந்த தலைவி, "தலைவர் உள்ளத்தாற் பொய்யாது அன்புடையராயின் யாமும் பழைய அன்புடையேமென்பதை அவருக்குக் கூறி விடுப்பேம்" என்று தோழிக்குக் கூறும் வாயிலாகத் தான் வாயில்நேர்ந்ததைப் புலப்படுத்தியது.]

க௦௬. புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்று நாடன்
தீதி னெஞ்சத்துக் கிளவி நம்வயின்
* வந்தன்று வாழி தோழி நாமும்
நெய்பெய் தீயி னெதிர்கொண்டு
† தான்மணந் தனையமென விடுகந் தூதே.

எ-து. தலைமகன் தூதுகண்டு, கிழத்தி தோழிக்குக் கூறியது.

கபிலர்.

(ப - ரை.) தோழி—, புல் வீழ் இற்றி - புல்லிய விழுதையுடைய இற்றிமரத்தினது, கல் இவர் வெள் வேர் - மலையிலுள்ள கற்களிற்படர்கின்ற வெள்ளிய வேர், வரை இழி அருவியின் தோன்றும் - மலைப்பக்கத்தில்வீழ்கின்ற அருவியைப்போலத்தோன்றும், நாடன் - நாட்டையுடைய தலைவன், தீது இல் நெஞ்சத்து கிளவி - குற்றமற்ற நெஞ்சினால் நினைந்து கூறிய சொற்களை உரைக்குந்தூது, நம்வயின் வந்தன்று - நம்மிடத்து வந்தது; நாமும்—, நெய் பெய் தீயின் - நெய்யைப் பெய்ததீயைப்போல, எதிர்கொண்டு - அத்தூதை ஏற்றுக்கொண்டு,

---

(பி-ம்.) * நயந்தன்று. † தாமளந்தனையம், தாம்வரைந்தனையம்.

தான் மணந்தனையம் என - அவன் எம்மை மணந்தகாலத்தில் இருந்த அன்புடைய நிலையினேம் என்று கூறி, தூதுவிடுகம் - தூது விடுவேம்.

(முடிபு.) தோழி, நாடன் தீதில் நெஞ்சத்துக்கிளவி வந்தன்று; நாமும் எதிர்கொண்டு தூதுவிடுகம்.

(கருத்து.) தலைவனை நாம் ஏற்றுக்கொள்வேமாக.

(வி-ரை.) தலைவன் பரத்தையிற் பிரிந்தானாக அவன் அன்பில னென்றெண்ணிய தலைவியின்பால் அவன் விடுத்ததூது, "தலைவன் தலைநாளன்ன அன்பினன்; அவனை ஏற்றருளவேண்டும்" என்று கூறியதுகேட்ட அவள், "அவன் அத்தகையனாயின் நாமும் மணநாளின்கண் வைத்திருந்த அன்பிற்குறைவின்றியுள்ளேமென்று தூது விடுவேம்" என்று தோழிக்குக் கூறியது இது.

தீதில் நெஞ்சத்துக்கிளவியென்றது தலைவன் நெஞ்சாற்பிழைப் பிலனென்று தலைவி உணர்ந்தமையைப் புலப்படுத்தியது. நாமும்: உம்மை இறந்தது தழீஇயது. தலைவன் மணந்த காலத்தில் நிறைந்த அன்போடிருந்தவாறே இப்பொழுதும் குறைவின்றியிருப்பேமென் றமையின் அவனை ஏற்றுக்கோடற்குறிப்புப் பெறப்பட்டது. மணந்த காலத்தை நினைவுகூர்ந்ததலைவிக்கு அந்நினைவின் மிகுதியே நெய்பெய் தீயை உவமை கூறச் செய்தது.

ஏகாரம், அசைநிலை.

## மேற்கோளாட்சி

மு. தூதுமுனிவின்மைவந்தது (தொல். களவு. 21, இளம்.); 'அது கற்பிற் கல்லது எலாது; என்னை? களவினுள் செப்பெய் தீயின் எதிர் கொள்ளலாகாமையின்' (ஷை மெய்ப். 23, பேர்.); தூதுகண்டு தலைவி கூறியது (ஷை. கற்பு. 6, ந.)

## ஒப்புமைப்பகுதி

1. புல்வீழிற்றி: "குறுங்கா லிற்றிப் புன்றலை நெடுவீழ்" (அகநா. ௫௭: 6.)

இற்றியின் வீழ்: "ஒல்குநிலை யிற்றி யொருதனி நெடுவீழ்" (அகநா. ௩௪௩: 19.)

5. நெய்பெய் தீ: "நெருப்பழற் சேர்ந்தக்கா னெய்போல் வதூஉம், எரிப்பச்சுட் டெவ்வரோ யாக்கும்" (நாலடி. 124.) (௧௦௬)

## தலைவி கூற்று

[பொருள்வயிற் பிரிந்த தலைவன் மீண்டு வரப்பெற்று அவனோடு இன்புற்ற தலைவி பொழுது புலர்ந்தமையால் துயருற்று, "எம்மைத் துயிலினின்றும் எழுப்பிய சேவலே; நீ இறந்துபடுவாயாக" என்று கூறித் தன் காமமிகுதியைப் புலப்படுத்தியது.]

கoஎ. குவியிணர்த் தோன்றி யொண்பூ வன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்
* நள்ளிருள் யாமத் தில்லெலி பார்க்கும்
பிள்ளை வெருகிற் கல்கிரை யாகிக்
கடுநவைப் படீஇயரோ நீயே நெடுநீர்
யாண † ரூரன் றன்னொடு வதிந்த
‡ ஏம வின்றுயி லெடுப்பி யோயே.

எ-து. பொருள் முற்றி வந்த தலைமகனையுடைய கிழத்தி காமமிக்க கழிபடர் கிளவியாற் கூறியது.

[முற்றி - நிறையப் பெற்று. காமமிக்க கழிபடர்கிளவி - காமம் மிக்கதனாலுண்டாகிய பெருந்துன்பங் காரணமாகக் கேட்டலும் விடை கூறுதலும் இல்லாத புள் முதலியவற்றை நோக்கிக் கூறுதல்.]

மதுரைக் கண்ணனார்.

(ப-ரை.) குவி இணர் தோன்றி - குவிந்த கொத்துக்களையுடைய செங்காந்தளினது, ஒண் பூ அன்ன - ஒள்ளிய பூவைப்போன்ற, தொகு செ நெற்றி - தொக்க சிவந்த கொண்டையையுடைய, கணம் கொள் சேவல் - கூட்டங் கொண்ட சேவலே, நெடு நீர் - ஆழமாகிய நீரினால் உண்டாகும், யாணர் - புதுவருவாயையுடைய, ஊரன் தன்னொடு வதிந்த - ஊரையுடைய தலைவனோடு தங்கிய, ஏமம் இன் துயில் - இன்பத்தைத்தரும் இனிய துயிலினின்றும், எடுப்பியோய் - எம்மை எழுப்பினோய்; நீ —, நள் இருள் யாமத்து - செறிந்த இருளையுடைய இடையிரவின்கண், இல் எலி பார்க்கும் - வீட்டிலுள்ள எலிகளை உண்ணும் பொருட்டு ஆராயும், பிள்ளை வெருகிற்கு - காட்டுப்பூனையின் குட்டிக்கு, அல்கு இரையாகி - சில நாள் இட்டு வைத்துண்ணும் உணவாகி, கடு நவை படீஇயர் - மிக்க துன்பத்தை அடைக.

---

(பி-ம்.) * நல்லிருள். † ஊரனொடுவதிந்த. ‡ எம்மின்றுயில்.

(முடிபு.) சேவல், துயில் எடுப்பியோய்; நீ கடிநகரைப் படீஇயர்.

(கருத்து.) பொழுது புலர்ந்தமையால் நான் துன்புற்றேனாயி னேன்.

(வி - ரை.) குவியிணரென்றது பூதலுக்கேற்ற அடை. 'பிள்ளை வெருகிற்கு எலியே உணவாகச் சாலும்; அதற்கு நீ அகப்படின் பல நாள் கவலையின்றி உண்ணுதற்கு உதவும்; நானும் நின்குரல்கேளாது இன்புறுவேன்' என்பது தலைவியின் உள்ளக்கிடக்கை. கடிநகை யென்றது இறந்துபாட்டை. கடிநகைப்பட்டு இரையாகுக வென மாறிக்கூட்டுக. படீஇயரோ: ஓ, அசைநிலை. எடுப்புதல் - எழுப் புதல் (கலி. ௭௦: 21, ந.) ஏகாரங்கள், அசைநிலை.

தலைவன் பொருள்தேடும் பொருட்டுப் பிரிந்துசென்று மீண்டா னாக, அவனை நெடுநாட் பிரிந்த துயரறக் கூடியிருக்க எண்ணிய தலை விக்கு ஓரிரவு மனநிறைவை உண்டாக்கவில்லை; ஏம இன்றுயிலைத் தரும் அவ்விரவு விரைவிற் புலர்ந்ததுகண்டு அவள் துயருற்றாள்; காம மயக்கத்தால், புலர்ந்ததென உணர்த்திய சேவலின்பாற் குறை யுளதாகக் கருதி இது கூறினாள்; ஆதலின் இது காமமிக்க கழிபடர் கிளவியாயிற்று.

## மேற்கோளாட்சி

2. கோழியின் ஆணிற்குச் சேவலென்னும் பெயர் உரித்து (தொல். மரபு. 48, பேர்.)

4. பிள்ளையென்னும் பெயர் நடப்பவற்றிற்கு உரித்து (தொல். மரபு. 5, பேர்.)

மு. 'இதனுள், தொகுசெந்நெற்றிக் கணங்கொள் சேவலென்பதனை யும், கடிநகைப் படீஇயரோ நீயே யென்பதனையும், இன்றுயிலெடுப்பியோ யென்பதனையும் கூட்டிப் பொருள் கொண்டமையான் கொண்டுகூட்டுப் பொருள்கோ ளாயிற்று' (யா. வி. 95.)

## ஒப்புமைப் பகுதி

1-2. சேவலின் கொண்டைக்குத் தோன்றிப்பூ: "கொய்ம்மலர் தோன்றிபோற், சூட்டுடைய சேவலும்", "பூத்தலை வாரணப்போர்" (சீவக. 73, 120.)

3. நள்ளிருள் யாமம் : குறுந். சு : 1, ஒப்பு.

4. பிள்ளை வெருத : புறநா. கசஎ : 8.

அல்கிரை : "கொடுவாய்ப் பேடைக் * கல்கிரை தரீஇய" (அகநா. ௩ : 4.)

5. கடுநவைப் படீஇயரோ : "கடுநவைப் படீஇயர் மாதோ" (அகநா. கசஐ : 14.)

1-5. சேவல் வெருகிற்கு உணவாதல்: "குவியடி வெருகின் பைங்க ணேற்றை, ஊனசைப் பிணவி னுயங்குபசி களைஇயர், தளிர்புரை கொடிற் றிற் செறியிரி பெருத்திற், கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ வன்ன, நெற்றிச் சேவ லற்றம் பார்க்கும்" (அகநா. ௩௬எ : 8-12.)

7. ஏமவின்றுயில் : "இருள்மென் கூந்த லேமுறு துயிலே" (அகநா. ௩உ : 13.) (க0எ)

---

## தலைவி கூற்று

[கார்ப்பருவம் வந்தது கண்ட தலைவி, "இன்னும் தலைவர் வந்திலர்; யான் உய்யேன்" என்று வருந்திக் கூறியது.]

க0அ. மழைவிளை யாடுங் குன்றுசேர் சிறுகுடிக்
கறவை கன்றுவயிற் படரப் புறவிற்
பாசிலை முல்லை யாசில் வான்பூச்
செவ்வான் செவ்வி கொண்டன்
றுய்யேன் போல்வ றோழி யானே.

எ - து. பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குக் கூறியது.

வாயிலான்றேவன்.

(ப - ரை.) தோழி—, மழைவிளையாடும் - மேகங்கள் விளையாடுதற்கிடமாகிய, குன்றுசேர் சிறுகுடி - மலையைச் சேர்ந்த சிற்றூரினிடத்து, கறவை - மேய்தற்பொருட்டு அகன்றிருந்த பசுக்கள்,

---

* அல்கிரை யென்பதற்கு இங்கே மிக்க இரையென்று அகநானூற்று அரும்பதவுரை யாசிரியரெழுதினர்.

கன்று வயின் படர - தம் கன்றுகளினிடத்தே நினைந்துசெல்ல, புறவில் - முல்லைநிலத்தில், பசு இலை முல்லை - பசிய இலைகளையுடைய முல்லையினது, ஆசு இல் வான் பூ - குற்றமில்லாத சிறந்த மலர்ப்பரப்பு, செ வான் செவ்வி கொண்டன்று - செக்கர் வானத்தின் அழகைக் கொண்டது; யான் உய்யேன் - இக் கார்ப்பருவத்து மாலையில் தலைவர் வாராமையின் யான் உயிர்வாழேன்.

(முடிபு.) தோழி, முல்லை வான்பூச் செவ்வான் செவ்வி கொண்டன்று; யான் உய்யேன்.

(கருத்து.) கார்ப்பருவம் வந்துவிட்டது; தலைவர்பிரிவை இனிப் பொறுத்திரேன்.

(வி - ரை.) கறவை - பாற்பசு. மாலைக்காலத்திற் பசுக்கள் கன்றை நினைந்து வீடுசெல்லுதல் மரபு. முல்லைநிலம் செந்நிறமாயிருத்தலின் அதற்குச் செவ்வானமும் அதன்கட்பூத்த முல்லைமலர்களுக்கு உடுக்களும் உவமை. மழைவிளையாடுதல் கார்காலத்தை யறிவிப்பது. கறவைபடர்தலும் முல்லைபூத்தலும் மாலையில் நிகழ்வன. போலும்: அசை. ஏகாரம்: அசைநிலை.

## மேற்கோளாட்சி

2. படரென்னும் உரிச்சொல் செலவாகிய குறிப்புணர்த்தியது (தொல். உரி. 44, சே, 42, ந, 44, தெய்வச்: இ. வி. 282.)

## ஒப்புமைப் பகுதி

1. **மழைவிளையாடுங் குன்று:** "மால்வரை, மழைவிளை யாடு நாடனை" (குறுந். உகூரு: 6-7); "வெண்மழை, வான்றோ யுயர்வரை பாடும் வைகறை" (அகநா. கஉச: 6-7.)

2. **மாலையில் கறவை கன்றுவயிற் படர்தல்:** (குறுந். கூச: 1-3); "ஆன்கணம், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதர" (குறிஞ்சிப். 217-8); "கறவைதம் பதிவயிற், கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர" (கலி. கஉக: 9-10); "பதவுமேய லருந்து மதவுநடை நல்லான், வீங்குமாண் செருத்த தீம்பால் பிலிற்றக், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு, மாலை", "கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரும், ஆபூண் தெண்மணி யைதியம் பின்னிசை, புலம்புகொண் மாலை கேட்டொறும்"

(அகம். ௯௪ : 9-12. ௯௪ : 14-6); "குவளை மேய்ந்த குடக்கட் சேதா, முள்ளிப் பாசிச் சிப்பி கெழுதக எவிப்பச், சுற்றரினை குரல மன்றுவழிப் படூஉ" (மணி. ௩ : 130-32.)

5. உயர்ந்தோர் போல்: நற். ௯௦௬ : 5-6.

4-5. மடமயிர் இலை மலர்தல்: நற். ௧௧௨ : 2-3; உ௬௪ : 2-3; ௬௮௭ : 1-2. (௧௦௮)

---

## தோழி கூற்று

[தலைவன் [illegible] அண்மையனாக இருக்கையில் தலைவிக்குக் கூறுபவளாய், "தலைவர் நாடோறும் வந்து பயின்று செல்லும் இக் காலத்தில் நின் நுதலின் மாறியது என்?" என்று தோழி, அவர் வந்து வரைய வேண்டுவதன் இன்றியமையாமையைப் புலப்படுத்தியது.]

௧௦௯. முடக்கா லிறவின் முடங்குபுறப் பெருங்கிளை
புணரி யிகுதிரை தரூஉந் துறைவன்
புணரிய விருந்த ஞான்றும்
இன்னது மன்னோ நன்னுதற் கவினே.

எ - து. சிறைப்புறம். தம் வேறுபாடு கண்ட புறத்தார் அலர் கூறுகின்றமை தோன்றத் தோழி தலைமகட்குக் கூறுவாளாய்க் கூறியது.

நம்பி குட்டுவன்.

(ப - ரை.) முடம் கால் - வளைவையுடைய காலையுடைய, இறவின் - இறாமீனின், முடங்குபுறம் பெரு கிளை - வளைந்த முதுகை யுடைய பெரிய இனத்தை, புணரி இகு திரை - கடலில் தாழும் அலையானது, தரூஉம் - கொண்டு வந்து தருதற்கு இடமாகிய, துறைவன் - துறையையுடைய தலைவன், புணரிய இருந்த ஞான்றும் - அளவளாவ இருந்த பொழுதும், நல் நுதல்கவின் - நினது நல்ல

(பி - ம்.) * முடக்காலிறவின்.

நெற்றியின் அழகு, இன்னது - பிறர் அலர் கூறும் குறைபாட்டை யுடைய இத்தகையதாயிற்று; மன் - இஃது இரங்கற்குரியது!

(முடிபு.) துறைவன் புணரிய இருந்த ஞான்றும் நன்றுதற்கவின் இன்னது மன்.

(கருத்து.) தலைவன் வரைந்தாலன்றி நின் வேறுபாடு நீங்காது.

(வி - ரை.) தலைவன் வரைந்து கொள்ளாமல் நெடுங்காலம் ஒழுகினானாக, அதனால் தலைவி வருந்தினாள்; அவ்வருத்தத்தை அவளது நுதல் வேறுபாடு முதலியன வெளியிட ஊரார் அறிந்து அலர் தூற்றுவாராயினர். இந்நிலையைத் தலைவன் கேட்கும் அணிமையில் இருப்பத் தலைவிக்குக் கூறுவாள் போலத் தோழி அவனுக்கு அறிவித்தது இது. தலைவனோடு நாடோறும் பயின்று வரினும் அச்சத்தின் பாற்பட்ட அக்களவின்பம் தலைவிக்குத் துன்பத்தை உண்டாக்குவதென்றும் அலர்மிக்கதென்றும் அறிந்து தலைவன் அவளை வரைந்து கொள்ளுதல் இதன் பயன்.

நுதற்கவின் இன்னதென்றது பசலை பெற்றதைக் குறித்தது. களவுக் காலத்து இடையீடுண்மையின் அதனால் வருந்திய தலைவியின் நிலை நீங்க வரைந்துகொண்டு இடையீடின்றி உடனுறைந்து இல் வாழ்க்கை நடத்தலே தகுதி யென்று தோழி குறிப்பால் அறிவுறுத்தினாள்.

## மேற்கோளாட்சி

மு. தலைமகள் கவினழிபுரைத்தது (நம்பி. 164.)

## ஒப்புமைப் பகுதி

1. இறவின் புறம் வளைந்தது: (குறுந். ௧௬0 : 2); "சிலைப்புமான ......பச்சிறப் பிறழும்" (பெரும்பாண். 269-70); "முடங்கிறா", "முடங்குபுற விறவின் மோவா யேற்றை, எறிதிரை தொகுத்த வெக்கர்" (நற். ௪௯ : 3, உ௧௧ : 5-6); "முடங்குபுற விறவு", "துய்த்தலை முடங்கிறா" (அகநா. உஉ0 : 17, ௩௭௬ : 16); "பூட்டுசிலை யிறவு" (சீவக. 1788); "முடங்கிறா முதுநீர்" (தே. திருநா. திருவாரூர்.)

2. இருதிரை: மலைபடு. 226; ஐங். ௪௬௫ : 1; அகநா. ௮உ : 5, ௧௧உ : 14, உ௭௪ : 2.

4. நுதற்கவின்: கலி. ௫௩ : 24. (௧0௬)

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச் சென்ற பருவம் வரவும் அவன் வாராமையின், "இனி அவர் வரினும் வாராவிடினும் நமக்குப் பயனொன்று மில்லை; நான் இறந்துபடுவேன்" என்று தலைவி கூறியது.]

கக0. வாரா ராயினும் வரினு மவர்நமக்
கியாரா கியரோ தோழி நீர
நீலப் பைம்போ துளரிப் புதல
பீலி யொண்பொறிக் கருவிளை யாட்டி
நுண்மு ளிங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மல ருதிரத் தண்ணென்
றின்னா *தெறிதரும் வாடையொ
டென்னா யினள்கொ லென்னா தோரே.

எ-து. (1) பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்கு உரைத்தது.

(2) தலைமகனைக் கொடுமைகூறித் தலைமகளைத் தோழி வற்புறீஇயதுமாம்.

கிளிமங்கலங்கிழார்.

(ப-ரை.) தோழி—, நீர - நீரிலுள்ள, நீலம் பைம்போது உளரி - நீலத்தினது மலர்ந்த செவ்வியையுடைய பேரரும்பை மலரச் செய்து, புதல - புதலிலே உள்ள, பீலி ஒள் பொறி கருவிளை - மயிற் பீலியின் ஒள்ளிய கண்ணைப்போன்ற கருவிளைமலரை, ஆட்டி - அலைத்து, நுண் முள் இங்கை செ அரும்பு ஊழ்த்த - நுண்ணிய முள்ளையுடைய இங்கையினது செவ்விய அரும்புகள் மலர்ந்த, வண்ணம் துய் மலர் - நிறத்தையும் துய்யையும் உடைய மலர்கள், உதிர - உதிரும்படி, தண்ணென்று - குளிர்ச்சியையுடையதாகி, இன்னாது எறிதரும் வாடையொடு - இன்னாததாகி வீசுகின்ற வாடைக்காற்றினால், என் ஆயினள் கொல் - எத்தன்மையினள் ஆனாளோ, என்னாதோர் - என்று நினைந்து கவலையுறாத தலைவர், வாராராயினும் - வாராவிடினும், வரி

(பி-ம்.) * செறிதரும்.

னும் - வந்தாலும், நமக்கு யார் ஆகியர் - நமக்கு என்ன தொடர்புடையவராவர்? வருவதற்குள் இறந்து படுவேன்.

(முடிபு.) தோழி, என்னுயிர் கொல் என்றோர், வாராராயினும் வரினும் யாராகியர்?

(கருத்து.) தலைவர் வாராமையின் யான் இறந்து படுவேன்.

(வி - ரை.) "உயிரோடிருப்பின் அவர் வந்தால் இன்புறுவேன்; அவர் வருதற்குரித்தான இப்பருவத்தில் வாராமையின் யான் இனி இறந்து படுவேன்; யான் இறந்துபட்ட பின்னர் அவர் வரினும் வாராவிடினும் எனக்கு அதனால் பயன் ஒன்றுமில்லை" என்று தலைவி கூறினாள்.

இன்னுயிர் தெறுதரும் வாடையென்றது அவ்வாடையே தன் உயிர் நீத்தற்குரிய காரணமாகுமென்று குறிப்பித்தவாறு.

துய் - பஞ்சின் நுனிபோன்ற மெல்லிய பொருள். ஓ, ஏ: அசைநிலை.

இரண்டாவது கருத்து: "நம்மேல் அன்புடையராயின் நம்மைத் துன்புறுத்தும் இவ்வாடைக்காலத்தே வந்து துன்பத்தைப் போக்க வேண்டும். இதற்குப் பாதுகாப்பாக வாராவிடின் அவர் இனி வந்தும் பயனில்லை" என்று தோழி கூறியதாகக் கொள்க.

## மேற்கோளாட்சி

1-2. அகைப்பு வண்ணம் வந்தது (தொல். செய். 229, பேர்., ந.)

மு. பருவங்கண்டழிந்த தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந; செய். 211, பேர். 211, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. யாராகியர்: குறுந். ௪o: 1.

1 - 2. அவர் யாராகியர்: "யாரா கோர்நமக் கியாஅர்" (அகநா. ௬o: 8.)

4. கருவிளம்பூவிற்கு மயிற்பீலி: "தண்புனக் கருவிளைக் கண் போன் மாமலர், ஆடுமயிற் பீலியின் வாடையொடு துயல்வர" (நற். உ௬உ: 1-2.)

3-4. புதல கருவிளை: "கருவிளை முரணிய தண்புதற் பகன்றை" (அகநா. உ௫௫: 11.)

5. நுண் முள் ஈங்கை : "கொடுமுள் ளீங்கை" (நற். உ0௫ : 9, அகநா. ௬௫எ : 1.)

5-6. ஈங்கையின் துய்ம்மலர் : "ஈங்கைய, வண்ணத் துய்ம்மலர்" (குறுந். ௬அ0 : 5-6); "ஈங்கைத் துய்த்தலைப் புதுமலர்" (நற். ௧௧௬ : 1-2); "ஈங்கைத், துய்யவிழ் பனிமல ருதிர", "முட்கொம் பீங்கைத் துய்த்தலைப் புதுவீ" (அகநா. உ௫உ : 9-10, ௬0௯ : 3.)

5-7. வாடையால் ஈங்கைப்பூ உதிர்தல் : "ஈங்கைவா டுதிர் புக...... மேனின்ற வாடையால்" (கலி. ௬௧ : 3-6.)

4-7. கருவிளை, ஈங்கை, வாடை : "நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத், துய்த்தலைப் பூவின் புதலிவ ரீங்கை, நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந் தளிர், இருவகி ரருளி னீரிய துயல்வர...... ஆறு தெறிதரும் வாடையொடு" (அகநா. உ௧௭ : 5-15.)

ழ. குறுந். அஉ. (௧௧0)

---

## தோழி கூற்று.

[தலைவன் வேலிப்புறத்தானாக அவனுக்குப் புலப்படும்படித் தோழி, "நின்மேனியின் வேறுபாடு கண்டு அன்னை வெறியாடத் தொடங்கினாள். அவ் வேறுபாடு நீங்குதற்குரிய வழி வெறியாடலன் றென்பதைத்தாய் அறியும்பொருட்டுத் தலைவன் இங்கே வந்து செல்லுதல் நலம்" என்று தலைவியை நோக்கிக் கூறியது.]

௧௧௧. மென்றோ ணெகிழ்த்த செல்லல் வேலன்
வென்றி நெடுவே ளென்னு மன்னையும்
அதுவென வுணரு மாயி னாயிடைக்
கூழை யிரும்பிடிக் கைகரந் தன்ன
கேழிருந் துறுகற் *கெழுமலை நாடன்
வல்லே வருக தோழி நம்
இல்லோர் பெருநகை காணிய சிறிதே.

எ - து. வரைவு நீட்டித்தவழித் தலைமகள் வேறுபாடு கண்டு வெறியெடுப்பக் கருதிய தாயது நிலைமை தலைமகட்குச் சொல்லுவாளாய்த் தலைவன் சிறைப்புறமாகத் தோழி கூறியது.

† தீன்மிதி நாகன்.

---

(பி - ம்.) * செழுமலை. † தீன்மதி நாகன்.

(ப - ரை.) தோழி—, மெல் தோள் நெகிழ்த்த செல்லல் - நின் மெல்லிய தோளை மெலியச்செய்த துன்பம், வேலன் - வெறியாட்டாளன், வென்றி நெடுவேள் என்னும் - வெற்றியையுடைய நெடிய முருகக்கடவுளால் வந்ததென்று சொல்லுவான்; அன்னையும் - நம் தாயும், அது என உணருமாயின் - அதுவென்றே நினைப்பாளாயின், ஆயிடை - அப்பொழுது, கூழை இரு பிடி - குறிய கருமையான பெண் யானையினது, கை கரந்தன்ன - கைமறைந்தாற் போன்ற, கேழ் இரு துறுகல் கெழுமலை நாடன் - கரிய நிறத்தையுடைய பெரிய துண்டுக்கல் பொருந்திய மலைநாட்டையுடைய தலைவன், நம் இல்லோர் பெரு நகை காணிய - நம் வீட்டிலுள்ளாரது பெரிய நகைக்கிடமான செய்கையைக் காணும் பொருட்டு, சிறிது - சிறிது நேரம், வல்லே வருக - இங்கே விரைந்து வந்து செல்வானாக.

(முடிபு.) தோழி, செல்லலை வேலன் நெடுவேளென்னும் அன்னையும் அதுவென உணருமாயின், மலை நாடன் காணிய சிறிது வல்லே வருக.

(கருத்து.) தாய் நின் வேறுபாடு கண்டு வெறியெடுத்தலைத் தலைவன் அறிவானாக.

(வி - ரை.) முருகக் கடவுளுக்குரிய வேலைத் தான் ஏந்தி நிற்றலின் வெறியாட்டாளன் வேலனென்னும் பெயர் பெற்றான்; இவன் படிமத்தானெனவும் கூறப்படுவான். பிள்ளையாயிராமல் தான் வேண்டிய வடிவு கோடலின் நெடுவேளென்றாள்; "சேவலங் கொடியன் நெடியன்" (முருகு. 210-11, ந.)

அன்னையும்: உம்மை, உயர்வு சிறப்பு; வேலன் நெடுவேளென்று கூறினானாயினும், பெண்ணியல்பினாலும் என்னோடு பயின்ற பயிற்சியினாலும் என் நிலையை ஓர்ந்தறிதற்குரிய தாயும் அதனை உண்மையென்று கருதி, என் வேறுபாடு முருகனால் வந்ததென்றே உணர்தல் அருமையென்னும் கருத்தால் உணருமாயி னென்றாள்.

வாளா நோக்குவார்க்குப் பிடி கைகரந்தாற் போன்ற தோற்றத்தையும் ஆய்ந்தறிவாருக்குத் தன் உண்மைத் தோற்றத்தையும் தன் நாட்டிலுள்ள துறுகல் தருதலைப்போல, ஆய்வின்றிக் காண்பார்க்கு முருகனால் வந்த விளைவென்றும் ஆய்ந்து காண்பார்க்குத் தன்னால் வந்ததென்றும் தோற்றும்படி தலைவன் தந்த நோய் செய்ததென்பது குறிப்பு.

வல்லே வருகவென்றது, தாய் விரைவில் வெறியெடுக்கக் கருது வாளென்பதையும் குறிப்பித்தது.

நகை - நகையைவிளைக்கும் செயல். தாய் செயல் பேதைமையை யுடையதாதலின் அதுகண்டு நகை விளையும்; "எள்ள லிளமை பேதைமை மடனென், றுள்ளப் பட்ட நகைநான் கென்ப" (தொல். மெய்ப். 4) என்பது காண்க. சிறிது காரிய வென்றமையால் இத னைப்போல எத்துணையோ நகைக்குக் காரணமான செயல்களை இல் லோர் புரிவரென்பது பெறப்படும்; அவையாவன கட்டுப் பார்த்தல் கழங்கு பார்த்தல் முதலியன.

நெடுவேள்: ஆகுபெயர், அவன் செயலுக்கு ஆயினமையின். சிறிதே: ஏகாரம், அசைநிலை.

இதனால் தோழி சிறைப்புறமாக இருந்த தலைவனுக்கு, "தலை வன் இன்னும் வரைந்துகொள்ளாமையால் தலைவி துன்புற்றாள்; அவ ளுடைய அகத்துன்பம் புறத்தாருக்குப் புலனாகும்படி அவள் தோள் கள் நெகிழ்ந்தன. அதுகண்டு தாய் வெறியாட்டெடுக்க எண்ணியுள் ளாள்" என்பதைப் புலப்படுத்தினாளாயிற்று. தலைவன் இதனை யுணர்ந்து விரைவில் வரைந்துகொள்ளுதல் இதன் பயன்.

## ஒப்புமைப் பகுதி

1. தோள்நெகிழ்ந்த செல்லல்: குறுந். ௮௭: 5, ஒப்பு.

2. நெடுவேள்: முருகு. 211, 273; பெரும்பாண். 75; பரி. ௧௧: 84; அகநா. ௨௨: 6, ௧௮: 27, ௧௨௦: 1, ௩௮௨: 5; புறநா. ௫௫: 19; சிலப். ௨௩: 190.

4-5. துறுகல்லுக்த யானை: குறுந். ௧௩: 1-2, ஒப்பு.

துறுகல்லுக்தப் பிடி: "சுரும்புணக் களித்த புகர்முக வேழம், இரும் பிணர்த் துறுகற் பிடிசெத்துத் தழூஉம்" (ஐங். ௨௩௧: 1-2); "பிடி துஞ்சு வன்ன வறை" (கலி. ௧௦௮: 40.)

1-7. வெறியாட்டெடுக்கையில் தலைவன் வருதலும் இல்லோர் பேதைமைகண்டு நகுதலும்: அகநா: ௨௨.

கருத்து: அகநா. ௨௬௨, கருத்து. (௧௧௧)

## தலைவி கூற்று

[தலைவன் வரைந்துகொள்ளாமல் நெடுநாள் ஒழுகினனாக, "நான் ஊரார் அலருக்கு அஞ்சி மறைந்தொழுகுகின்றேன்; என் காமம் மெலிகின்றது; அதனை முற்றும் விடும் நிலையைப் பெறும் ஆற்றலில்லேன்" என்று கூறித் தலைவி வருந்தியது.]

ககஉ. கௌவை யஞ்சிற் காம மெய்க்கும்
எள்ளற விடினே யுள்ளது நாணே
பெருங்களிறு வாங்க முறிந்து நிலம் படாஅ
நாருடை யொசிய லற்றே
கண்டிசிற் றோழியவ ருண்டவென் னலனே.

எ - து. வரைவு நீட்டித்தவழித் தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

ஆலத்தூர்கிழார்.

(ப - ரை.) தோழி—, கௌவை அஞ்சின் - பிறர் கூறும் பழிமொழியை அஞ்சினால், காமம் எய்க்கும் - காமம் மெலிவடையும்; எள் அற விடின் - பிறர் இழித்தல் அறும்படி அக்காமத்தை விட்டுவிடின், உள்ளது நாணே - என்பால் இருப்பது நாணமட்டுமே ஆகும்; அவர் உண்ட என் நலன் - தலைவர் நுகர்ந்த எனது பெண்மை நலம், பெரு களிறு வாங்க - பெரியகளிறு உண்ணும்பொருட்டு வளைக்க, முரிந்து - வளைந்து, நிலம் படாஅ - நிலத்திற் படாத, நாருடை ஒசியல் அற்று - பட்டையையுடைய ஒடிந்த கிளையைப் போன்றது; கண்டிசின் - இதனைக் காண்பாயாக.

(முடிபு.) தோழி, கௌவை அஞ்சின் காமம் எய்க்கும்; விடின் நாணே உள்ளது; அவர் உண்ட நலன் ஒசியலற்று; கண்டிசின்.

(கருத்து.) ஊரார் அலரை அஞ்சிக் காமத்தை மிகுதியாக வெளிப்படுத்தாமல் இருக்கின்றேன்.

(வி - ரை.) கௌவை - பலர் கூறும் பழிமொழி. "என்பாலுள்ள காமத்தினால் உண்டாய வேறுபாடுகளை ஊரினர் அறிந்து பழிமொழி கூறுகின்றனர்; அப்பழிமொழிக்கு அஞ்சுவேனாயின் என்பாலுள்ள காமம் குறைவுபடும்; அக்கவ்வை சிறிதேனும் உண்டாகாமலிருத்தற்பொருட்டு என் காமத்தை முற்றும் விடின் என்பால்

எஞ்சியிருப்பது நாணம் ஒன்றுமேயாகும்; எனது பெண்மைநலனும் கற்பும் அழிந்துவிடும். பெண்மை நலன் முன்னரே தலைவரால் உண்ணப்பட்டுச் சிறிதளவு எஞ்சிநிற்கின்றது” என்று தலைவி கூறினாள்.

காமத்தை விடுவதாற் பயனில்லை யென்பது தலைவி கருத்து. கௌவையும் காமமும் ஒன்றுக்கொன்று முரணாக இருந்து தலைவியைத் துன்பத்துக்கிடமாக்கின;

“நலிதருங் காமமுங் கௌவையு மென்றிவ்
வலிதி னுயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழும மிரண்டு” (கலி. சசஉ: 56-8)

என்பதில் இக்கருத்து விளக்கமாக அமைந்துள்ளது.

கௌவையும் நாணும் காமத்தைப் பெருகவிடாமல் தடை பண்ணுவன (குறள், 1163.)

களிறு வளைத்துத் தழைகளை உண்டதனால் ஒடிந்த மரக்கிளையானது தன்னுடைய இயல்பான நிலையை ஒழிந்து மீட்டும் அந்நிலையைப் பெறுதவண்ணம் இருப்பினும், முற்ற ஒடிந்து கீழே விழுந்து வாடி உலராமல் நாரின் தொடர்பினால் மீண்டும் தழைக்கும் நிலையில் இருத்தலைப்போல, தலைவனால் உண்ணப்பட்ட நலன் தன் பண்டை நிலைமையைப் பெறாத நிலையிலிருப்பினும், முற்றும் அழிந்தொழியாமல் தலைவர் வரைவாரென்னும் கருத்தினால் பின் சிறக்கத்தக்க நிலையில் அமைந்துள்ளதென்று உவமையை விரித்துக்கொள்க.

உண்ட நலனென்றது உண்ணப்படுவதற்குரியதல்லாத பொருளைப் பிறர் உண்டதுபோலக் கூறும் மரபுபற்றி வந்தது (தொல். பொருள். 21, ந.)

இசின்: முன்னிலையில் வந்தது. நாணே: ஏகாரம், பிரிநிலை; ஏனை ஏகாரங்கள், அசை நிலைகள்.

## மேற்கோளாட்சி

மு. தலைவனை வழிபடுதலை மறந்த தலைவியே அவனை எற்றுக் கோடலை விரும்பியபோது கூறியது; ‘இது, நாணே உள்ளது; கற்புப் போமென்றலின் மறுத்தெதிர் கோடலாம்’ (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. காமமும் நாணமும் : (குறுந். க௪௯ : 1-6); "காமம் விடுவொன் ஞே நாண்விடு நன்னெஞ்சே, யானோ பொறேனிவ் விரண்டு" (குறள், 1247.)

5. கண்டிசிற்றோழீ : குறுந். உஉ0 : 7, உ௪0 : 5.

தலைவன் உண்ட நலம் : குறுந். உ௬௯ : 6 ; நற். கஙு : 4. (ககஉ)

---

## தோழி கூற்று

[பகற்குறியின்கண் வந்து அளவளாவிய தலைவனுக்குத் தாம் பயிலும் இடத்தை மாற்றி வேறிடங்கூறுவாளாய், "தலைவி காட்டாற்றங்கரையிலுள்ள பொழிலுக்கு எம்முடன் வருவாள்" என்று ஆண்டு வரும்வண்ணம் குறிப்பாகத் தோழி கூறியது.]

கக௯. ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச்
சேய்த்து மன்றே சிறுகான் யாறே
இரைதேர் வெண்குரு கல்ல தியாவதும்
துன்னல்போ கின்றாற் பொழிலே யாமெம்
கூழைக் *கெருமண் கொணர்கஞ் சேறும்
ஆண்டும் வருகுவள் பெரும்பே தையே.

எ-து. பகற்குறி நேர்ந்த தலைமகற்குக் குறிப்பினாற் குறியிடம் பெயர்த்துச் சொல்லியது.

† மாதிரத்தன்.

(ப - ரை.) தலைவ, பொய்கை—, ஊர்க்கும் அணித்து - ஊருக்கும் அருகிலுள்ளது ; சிறு கான் யாறு - சிறிய காட்டாறு, பொய்கைக்கு சேய்த்தும் அன்று - அப்பொய்கைக்குத் தூரியதும் அன்று; அணிமையிலே உள்ளது ; பொழில் - அங்குள்ள சோலை, இரை தேர் - அப் பொய்கையிலும் யாற்றிலும் உணவை ஆராய்கின்ற, வெண்குருகு அல்லது - வெள்ளிய நாரைகளையன்றி, யாவதும் - வேறு எவ்வுயி

(பி - ம்.) * கேர்மண். † மாதீரத்தன்.

ரும், துன்னல் போகின்று - நெருங்கல் ஒழிந்ததாகும்; யாம் எம் கூழைக்கு - நாங்கள் எமது கூந்தலுக்கு இட்டுப் பிசையும்பொருட்டு, எருமண் கொணர்கம் - எருமண்ணைக் கொணர்வேமாய், சேறும் - அங்கேசெல்வேம்; பெருபேதை - பெரிய பேதைமையையுடைய தலைவி, ஆண்டும் வருகுவள் - அங்கும் வருவாள்.

(முடிபு.) பொய்கை ஊர்க்கும் அணித்து; யாறு சேய்த்து மன்று; பொழில் யாவதுந் துன்னல் போகின்று; யாம் சேறும்; பெரும் பேதை ஆண்டும் வருகுவள்.

(கருத்து.) பொய்கைக்கு அணித்தாகிய காட்டாற்றின் கரையி லுள்ள பொழிலகத்தே தலைவியைக் கண்டு அளவளாவலாகும்.

(வி - ரை.) பொய்கை யென்றது, ஊரினர் உண்ணுதற்கும் ஆடுதற்கும் பயன்படும் பொய்கையை. ஊர்க்கு அணித்தாயிருத் தல்பற்றி அதனை ஊரணியென வழங்குதலும் உண்டு; "சேர், * ஊரணி யுற்றவர்க் கூரன்மற் றியாவர்க்கு மூதியமே" (சிற். 400, பி - ம்.); பொய்கை - மானிடர் ஆக்காத நீர்நிலை. ஊர்க்கும்: எதிரது தழீஇய எச்சவும்மை; சிறுகான் யாற்றுக்கும் அணித் தென்னும் பொருளைத் தழுவி நின்றது. தலைவன் சிறுகான்யாற்றைக் கடந்துவரும் வழக்கமுடையனாதலின் அவ் யாற்றைச் சுட்டிக் கூறி னாள். இரை - மீன் முதலியன. போகின்று - நீங்கியது. எரு மண் என்றது களிமண்ணை. கூந்தலிலுள்ள எண்ணெய்ப்பசை, சிக்கு முதலியன போகும்பொருட்டுக் களிமண்ணைத் தேய்த்துக்கொண்டு மகளிர் நீராடுதல் வழக்கு; இதனைச் சிற்றூர்களில் இன்றும் காணலாம்;

"கூழைபெ யெக்கர்" (குறுந். கூஎஉ : 5),
"கூந்த னறுமண்" (பெருங். க. 40 : 28)

என்பவற்றைப் பார்க்க.

---

* "காரணி கற்பகம்" என்னும் முதலையுடைய இச் செய்யுளின் ஈற்றடியின் முதல் "ஊரணி" என்று ஒரு பழம்பிரதியிற் காணப்பட் டது. எதுகை நயத்தையும், 'உற்றவர்க்குச் சேர் ஊரணி - சுற்றத் தார்க்கு அவர் வேண்டிய செய்யவிருத்தலின் அணித்தாகிய ஊரணியோ டொக்கும்' என்ற **பேராசிரியர்** உரையையும், இக் குறுந்தொகைச் செய் யுட் பொருளையும் கருதுகையில் இப்பாடம் சிறப்புடையதாகத் தோற்று கின்றது. ஊருக்கு அணித்தானமையின் பொய்கையை ஊரணியென்று கூறுதலும், ஊரினரால் உண்ணப்படும் தகுதியுடைய நீர்நிலையை ஊருணி யென்று கூறுதலும் வழக்கென்று கொள்ளுதல் பொருந்தும்.

ஆண்டும் வருகுவளென்றது ஈண்டு வந்ததையன்றி யென்னும் எச்சப் பொருளைத் தந்தது.

பெரும் பேதையென்றாள், கூழை முடியா நிலையிலுள்ள தனக்கு எருமண் வேண்டிற்றிலதாகவும் எம்மொடு வருவாளென்பது கருதி.

ஊர்க்குமணித்தே பொய்கை, அப்பொய்கைக்குக் கான்யாறு அருகிலுள்ள தென்றதனால் 'யாங்கள் வரலெளிது' என்பதைக் குறிப்பித்தாள். இங்ஙனம் வருதற் கெளியதாகியஇடத்துத் தனியிடமு முண்டாங்கொலோ வென்னும் ஐயம் நிகழாதபடி யாவதும் துன்னுதல் நீங்கியது அப்பொழில் என்றாள். யாம் வருவது எம் கூழைக்கு எருமண் கொணர்தற்கேயாதலின் யாமும் கான்யாற்றங்கரையிலே நிற்றலன்றிப் பொழிலிற் புகுதோ மென்பதை அறிவித்தாள்.

"தோழியின் முடிவு மிடனுமா றுண்டே" (தொல். களவு. 30) என்னும் விதிபற்றித் தோழி குறியிடங் கூறினாள்.

ஏகாரங்கள், அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

1. உயர்வு சிறப்பும்மை வந்தது (தொல். இடை. 7, கல், ந.)

2. ஐயவும்மை வந்தது (தொல். இடை. 7, கல்.)

1-2. ஐயவும்மை வந்தது (தொல். இடை. 7, ந.); நான்காம்வேற்றுமையுருபு இதற்கிது வென்பதுபட வந்தது (நன். 297, மயிலை ; இ. வி. 201.)

மு. பகற்குறி நேர்ந்தது (தொல். களவு. 24, இளம்.); பகற்குறி நேர்ந்து இடங்காட்டியது (ஷை. ஷை. 23, ந.); நயந்தமை கூறிய தோழி தலைமகற்குக் குறிப்பினாற் பகற்குறியிடங்காட்டியது (களவியற் காரிகை.)

## ஒப்புமைப் பகுதி

3-4. துநுது துறியிடத்தில் இருத்தல்: துறுந். உ௬ : 4-5. (கககூ)

## தோழி கூற்று

[தலைவியைக் குறியிடத்தில் நிறுத்தி வந்த தோழி தலைவனிடம் வந்து அதனைக் குறிப்பாகப் புலப்படுத்தியது.]

கககச. நெய்தற் பரப்பிற் பாவை* கிடப்பி
நின்குறி வந்தனெ னியறேர்க் கொண்க
செல்கஞ் செலவியங் கொண்மோ வல்கலும்
ஆர †லருந்த வயிற்ற
நாரை மிதிக்கு மென்மக ளுதலே.

எ - து. இடத்துய்த்து நீங்குந் தோழி தலைமகற்குக் கூறியது.

பொன்னுகன்.

(ப - ரை.) இயல் தேர் கொண்க - இயற்றப்பட்ட தேரை யுடைய தலைவ, நெய்தல் பரப்பில் - நெய்தல் நிலத்தின்கண், பாவை கிடப்பி - எனது பாவையை வளர்த்திவிட்டு, நின் குறி வந்தனென் - நீ இருக்கு மிடத்து வந்தேன்; அல்கலும் - இரவு வருதலும், ஆரல் அருந்த வயிற்ற - ஆரல் மீனை அருந்தி நிறைந்த வயிற்றையுடையன வாகிய, நாரை - நாரைகள், என் மகள் நுதல் மிதிக்கும் - என் மக ளாகிய அப்பாவையின் நெற்றியை மிதிக்கும்; ஆதலின், செல்கம் - யாம் போகின்றேம்; செல்ல வியங்கொண்மோ - அவளைப் போகும் படி நீயே ஏவுவாயாக.

(முடிபு.) கொண்க, பாவை கிடப்பினென்; வந்தனென்; என் மகள்நுதல் நாரை மிதிக்கும்; செல்கம்; செல வியங்கொண்மோ.

(கருத்து.) தலைவியைக் கண்டு அளவளாவி விரைவில் விடுப்பா யாக.

(வி - ரை.) நெய்தற் பரப்பு - நெய்தற் பூவின் பரப்பெனினு மாம்; பாவையினிடத்துள்ள பேரன்பினால் நெய்தல்மலர்களைப் பரப்பி அப்பரப்பின்மேல் மெத்தென வளர்த்திவந்தாளெனக் கொள்க. பாவை - பஞ்சாய்க் கோரையினாற் செய்த பாவை; தாது முதலியவற்றாற் செய்த பாவையுமாம். இயல் தேர் - இயலுந்தே ரெனினுமாம். வந்தனென் என்று முன்பு ஒருமையாற் கூறிப் பின்பு

(பி - ம்.) * கிடப்பினென். † லருந்தும்.

செல்கமெனப் பன்மையாற் கூறினமையின் தோழியுடன் தலைவி வந்துள்ளா ளென்பதையும் அவளைக் குறியிடத்தே நிறுத்தித் தோழி வந்தனளென்பதையும் தலைவன் உணர்வான். வியங்கொள் ளல் - ஏவலை மேற்கொள்ளல்; "வியங் கொண்டான்" (சிலப். கூ : 78.) ஆரலருந்திய வயிற்ற வென்றது, மிதிக்குங்கால் நோய்தரும் கன முடையதென்றபடி.

என் மகளென்றது பாவையை. பாவையினிடத்தே அன்பு பூண்டு அதனைப் போற்றி வளர்த்தலும், மணம் முதலியன செய்து மகிழ்தலும் மகளிர்க்கு இயல்பு. மகளிர்க்குப் பாவையின்பாலுள்ள அன்பை இந்நூல் சஅ - ஆம் செய்யுளாலும் அதன் விசேடவுரை யாலும் உணரலாகும்.

மோ : முன்னிலையசை (குறுந். உஎரு : 2, ந கூo : 2.) அல்கல் - இரா; பகல் குறைந்து இரா வருதலென்னும் பொருளில் வந்தது.

ஏ : ஈற்றசை.

## மேற்கோளாட்சி

மு. தலைமகள் குறைநயந்தமை தலைமகற்குக் கூறியது (தொல். களவு. 24, இளம்.); ஆயத்தின்நீங்கித் தன்னொடு நின்ற தலைவியைத் தலைவ னொடு கூட்டவேண்டி அவளின்நீங்கித் தலைவனுக்கு இன்னுழி எதிர்ப்படுதி யென உரைக்குமிடத்துப் பாங்கிக்குக் கூற்றுநிகழ்ந்தது; 'வந்தனெ னென்றும் என்மகளென்றும் ஒருமைகூறிச் செல்கமென்ற உளப்பாட்டுப் பன்மையால் தலைவிவரவுங்கூறி இடத்துய்த்தவாறும் உணர்த்தினள்; செலவியங்கொண்மோவென்றது நீயே அவளைப் போகவிடுவாயாக வென்றதாம்' (ஷை. ஷை. ஷை. ந.)

## ஒப்புமைப் பகுதி

க. பாவை : குறுந். சஅ : 1, ஒப்பு.

உ. தலைவன் தேநூர்ந்து வருதல் : தொல். பொருள். 18.

4-5. ஆரல் அருந்த வயிற்ற நாரை : "பழனப் பன்மீ னருந்த நாரை" (ஐங். எO : 1.)

நாரை ஆரல்மீனை அருந்துதல் : (குறுந். உகு : 4-5, ஒப்பு); "கூர் வாய்ச் சிறுகுருகே குண்டுநீ ருட்கிடந்த ஆர லிரைகருதி நித்தலு நிற்றி

யால்" (தொல். களவு. 20, ந. மேற்.); "கழிப்பூ ராரலொடு கொழுப்ட ருக் கொளீஇய, நாரைச் சேவல் பார்வலொடு வதிந்த", "கழனி யூரவ கவுளகத் தடக்கிப், பழன மருதிற் பார்ப்புவாய் சொரிந்து, கருங்க ணுரை நரன்றுவந் திறப்ப" (பெருங். ௩. 4 : 42-3, 7 : 29-31.)

மு. "பனியேர் நறுமலர்ப் பாயலிற் கண்வளர் பாவையொரு
தனியே கிடந்தழுந் தாயுமங் கில்லைத் தடஞ்சிலம்பா
முனியேல் விடைகொள்வன் முற்றுமின் காவன் முகிணகைசெங்
கனியே யினியசெவ் வாய்நவ்வி மான்விழிக் காரிகையே"

(அம்பிகாபதி கோவை, 153.)

---

(கக௪)

## தோழி கூற்று

[தலைவனுடன் போகும்படி தலைவியை உய்க்கும் தோழி, "இவளை எக்காலத்தும் அன்புவைத்துப் பாதுகாப்பாயாக" என்று அவனுக்குக் கூறியது.]

ககரு. பெருநன் றாற்றிற் பேணரு முளரே
ஒருநன் றுடைய ளாயினும் புரிமாண்டு
புலவி தீர வளிமதி யிலைகவர்
பாடமை யொழுகிய தண்ணறுஞ் சாரல்
மென்னடை மரையா துஞ்சும்
நன்மலை நாட நின்னல திலளே.

எ - து. உடன்போக்கு ஒருப்படுத்து மீளுந் தோழி தலைமகற்குக் கூறியது.

கபிலர்.

(ப - ரை.) ஆடு அமை ஒழுகிய - அசைகின்ற மூங்கில்கள் நீண்டு வளர்ந்த, தண் நறு சாரல் - தண்ணிய நறிய மலைப்பக்கத்தின் கண், மெல் நடை மரையா - மெல்லிய நடையையுடைய மரையா, இலை கவர்பு - இலைகளை விரும்பி உண்டு, துஞ்சும் - துயிலுதற்கிட மாகிய, நல் மலை நாட - நல்ல மலைநாட்டையுடைய தலைவ, பெரு நன்று ஆற்றின் - பெரிய நன்மை யொன்றை ஒருவர் தமக்குச் செய் தால், பேணரும் உளரே - அங்ஙனம் செய்தாரைப் போற்றுதாரும்

உள்ளாரோ? யாவரும் போற்றுவர்; அது சிறப்பன்று; ஒரு நன்று - சிறிதளவு நன்மையை, உடையளாயினும் - இத்தலைவி பெற்றவளாக இருக்கும் காலத்திலும், புரி மாண்டு - விருப்பம் மாட்சிமைப்பட்டு, புலவி தீர - புலத்தல் நீங்கும் வண்ணம், அளிமதி - இவளைப் பாது காப்பாயாக; நின் அலது இலள் - இவள் நின்னையன்றி வேறு பற்றுக் கோடு இல்லாள்.

(முடிபு.) மலைநாட, பெருநன்று ஆற்றிற் பேணுநரும் உளரே? ஒரு நன்றுடையளாயினும் அளிமதி; நின்னலதிலள்.

(கருத்து.) இவள்பால் இன்றுபோல என்றும் அன்பு வைத்துப் பாதுகாப்பாயாக.

(வி - ரை.) "இவள் நினக்குப் பலவகையிலும் இன்பம் தரும் நிலையில் இருக்கின்றாள்; இவள்பால் இப்பொழுது நீ அன்பு பூண்டு பாதுகாத்தல் பெரிதன்று; பெரிய உபகாரம் செய்தாரைப் பாதுகாத் தல் உலகில் யாவர்க்கும் இயல்பே. ஆதலின் இவளால் இப்பொழுது பெறும் இன்பத்தை அடையமுடியாத முதுமைப் பருவத்திலும் இவ ளுக்கு நின்பாலுள்ள அன்பொன்றையே கருதிப் பாதுகாத்து வருவா யாக. இவளைப் பாதுகாப்பதற்கு வேறு யாரும் இலர்" என்று தோழி கூறித் தலைவியைத் தலைவனுடன் விடுத்தாள்.

உளரே: ஏகார வினா எதிர்மறைப்பொருள் தந்தது. ஒரு நன் றென்றது தலைவிக்குத் தலைவன்பாலுள்ள அன்பை; "கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த, ஒன்றுநன் றுள்ளக் கெடும்" (குறள், 109) என்பது இங்கே நினைக்கத்தக்கது. இலையென்றது மூங்கில் இலையை யன்று; பிறமரங்களி லுள்ளவற்றை. கவர்தலென்னும் சொல் விலங் கினங்கள் உணவுதேடியுண்டலைக் குறித்தற்குச் சான்றோரால் ஆளப்படு கின்றது; "மரையா மரல்கவர" (கலி. ௬: 1) முதலியவற்றைப்பார்க்க.

மரையா, தனக்குப் பயன்படாது ஓங்கிவளர்ந்த மூங்கில்களை யுடைய சாரலாயினும் தனக்குப் பயன்படும் இலைகளைத் தேடியுண்டு அதன்கண் அன்புவைத்துத் துயில்வதுபோல, நினக்குப் பயன்படாத மூப்புடையளாயினும் நினக்கு உவந்த நல்லியல்புகண்டு இன்புற்று இவள்பால் அன்புவைத் தொழுகுவாயாக வென்பது குறிப்பு.

இலவே: ஏ, அசைநிலை.

## மேற்கோளாட்சி

மு. பாங்கி தலைவனுக்கு ஓம்படை கூறியது (இறை. 23); தலைவன் ஒருவழித் தணக்கும்வழிப் பாங்கி ஓம்படை கூறியது (தொல். களவு. 24, இளம், ந.)

## ஒப்புமைப் பகுதி

1. பேரு நன்று: "சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கானேப், பெறுநன்றி மன்னும் பெரிதென்று" (யா. வி. 4, மேற்.)

4. ஆடமை: குறுந். ௩௩௪: 1; அகநா. ௮௨: 1, ௨௨௫: 5.

5. மென்னடை மரையா: "துளங்குநடை மரையா" (அகநா. ௩: 7.)

6. தலைவி தலைவனை யன்றிப் பாதுகாப்பார் பிறரிலள்: (குறுந். ௩௪௭: 7-8); "தம்மின் றமையா நந்நயந் தருளி" (நற். ௧: 7); "இவளே நின்னல திலளே" (இறை. 23, மேற்.) (௧௧௫)

---

## தலைவன் கூற்று

[ஊழ்வலியால் தலைவியைக் கண்டு அளவளாவிய தலைவன் அவளது கூந்தற் சிறப்பைப் பாராட்டி நெஞ்சிற்குக் கூறியது.]

௧௧௬. யானயந் துறைவோ டேம்பாய் கூந்தல்
வளங்கெழு சோழ ருறந்தைப் பெருந்துறை
நுண்மண லறல்வார்ந் தன்ன
நன்னெறி யவ்வே நறுந்தண் ணியவே.

எ - து. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

இளங்கீரன்.

(ப - ரை.) நெஞ்சே, யான் நயந்து உறைவோள் - என்னால் விரும்பப்பெற்றுத் தங்கும் தலைவியினது, தேம் பாய் கூந்தல் - வண்டுகள் தாவுகின்ற கூந்தல், வளம் கெழு - வளப்பம் பொருந்திய, சோழர் உறந்தை பெரு துறை - சோழரது உறையூரிற் பெரிய நீர்த்துறைக்கண் உள்ள, நுண் மணல் அறல் - நுண்ணிய கருமணல், வார்ந்தன்ன-

நீண்டு படிந்தாற் போன்ற, நல் நெறிய - நல்ல நெறிப்பை யுடையன; நறு தண்ணிய - நறுமையும் தண்மையும் உடையன.

(முடிபு.) யான் நயந்துறைவோள் கூந்தல் நன்னெறிய; நறுந் தண்ணிய.

(கருத்து.) தலைவியின் கூந்தல் நெறிப்பையும் நறுமணத்தையும் தண்மையையும் உடையன.

(வி - ரை.) யான் நயப்ப உறைவோளென எச்சத்தைத் திரித்துப் பொருள் கொள்ளலும் ஆம். கூந்தலென்றது கூந்தலின் ஐவகைப் பகுப்புக்களை யாதலின் பன்மையால் முடித்தான். வளங்கெழு வென்றது உறந்தைக்கு அடை. உறந்தைப் பெருந்துறை யென்றது காவிரித்துறையை. நெறிப்பு - படிப்படியாய் நீரோட்டத்தினால் மணலில் உண்டாகும் சுவடு; இது பற்றமென்றும் கூறப் படும்.

இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைவன், தலைவியின் கூந்தலாகிய மெல்லணையில் துஞ்சி இன்புற்றவனாதலின் அக் கூந்தலின் இயல்புகளை நினைந்து, இவற்றாற் பெறும் இன்பத்தை இடைவிடாமல் நுகரும் பேறு பெற்றிலேமே என்னும் இரக்கக் குறிப்புப்பட இதனைத் தன் நெஞ்சிற்குக் கூறினான்.

சேய்மையிற் கண்டபோழ்து தோற்றத்தால் இன்பத்தைத் தருமென்பான் நன்னெறியவ்வே யென்று முதலினும், நெருங்கும் போழ்து மணத்தால் இன்பத்தைத் தருமென்பான் நறுமை யுடையன வென்றும், பின்னும் நெருங்கி அளவளாவிய போழ்து ஊற்றினாலின்பந் தருமென்பான் தண்ணிய வென்றும் முறையே கூறினான்.

நன்னெறி யவ்வே: வகரம் விரிக்கும் வழி விரித்தது. ஏகாரங்கள், அசைநிலை.

## ஒப்புமைப்

2. சோழர் உறந்தை: அகநா. ௬௨: 4-5, ௩௬௯: 13-4, ௩௮௫: 3-4.

3. மணலின் நெறிப்பு: குறுந். ௩௫௧: 3.

4. கூந்தலின் நெறிப்பு: குறுந். ௧௯0: 1, ௧௯௯: 4.

1-4. கூந்தலின் நறுமணம்: குறுந். ௨: 4-5, ஒப்பு.

கூந்தலின் நறுமணமும் தண்மையும்: "தண்ணிய கமழுந் தாழிருங் கூந்தல்" (நற். ௧௩௭: 1.)

(கககூ)

## தோழி கூற்று

[தலைவன் வரைந்து கொள்ளாமல் நெடுநாள் ஒழுகினனாக, அவ் வொழுக்கத்தால்வரும் அச்சத்தினும் அவன் வாராதமைவதால்வரும் துன்பம் பொறுத்துக் கொள்ளுதற்குரியதென்று தலைவிக்குக் கூறும் வாயிலாகத் தோழி வரைவின் இன்றியமையாமையைப் புலப்படுத் தியது.]

௧௧௭. மாரி யாம்ப லன்ன கொக்கின்
பார்வ லஞ்சிய பருவர லீர்ஞெண்டு
கண்டல் வேரளைச் செலீஇய ரண்டர்
கயிறரி யெருத்திற் கதழுந் துறைவன்
வாரா தமையினு மமைக
சிறியவு முளவீண்டு விலைஞர்கை வளையே.

எ - து. வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

குன்றியன்.

(ப - ரை.) தோழி, மாரி ஆம்பல் அன்ன கொக்கின் - மாரிக் காலத்து ஆம்பல்மலரைப்போன்ற தோற்றத்தையுடைய கொக்கினது, பார்வல் அஞ்சிய பருவரல் - பார்வையை அஞ்சிய துன்பத்தை யுடைய, ஈர் ஞெண்டு - ஈரமான நண்டு, கண்டல் வேர் அளை செலீஇயர் - தாழைவேரினிடையே உள்ள வளைக்குட் செல்லும் பொருட்டு, அண்டர் கயிறு அரி எருத்தின் - இடையரால் பிணிக்கப் பட்ட கயிற்றை அறுத்துச் செல்லும் எருதைப்போல, கதழும் - விரைந்து செல்லுதற்கு இடமாகிய, துறைவன் - கடற்றுறையை யுடைய தலைவன், வாராது அமையினும் அமைக - இங்கே வாராமற் பொருந்தினும் பொருந்துக; அவர் வாராமையால் நின்உடல் மெலிய நின்கைகள் முன் அணிந்த வளைகளை இழப்பினும் பிறருக்கு அம் மெலிவு புலப்படாமல் அந்நிலையிலும் செறிப்பதற்குரியனவாகிய, விலை ஞர் கைவளை - விற்பார் தரும் கைவளைகளுள், சிறியவும் - சிறிய அளவை யுடையனவும், ஈண்டு உள - இங்கே உள்ளன.

(முடிபு.) துறைவன் வாராதமையினும் அமைக; விலைஞர் கைவளை சிறியவும் ஈண்டு உள.

---

(பி - ம்.) * குன்றியனார்.

(கருத்து.) தலைவன் வரைந்து கொள்ளாமையால் உண்டான மெலிவை நாம் மறைத்து ஒழுகுவோமாக.

(வி - ரை.) கொக்கின் புறத்தே அலைநீர்த்திவலைகள் காணப் படுமாதலின், அதற்கு மாரியினால் நனைந்த ஆம்பலை உவமை கூறினாள். பார்வல் - பார்வை; "இன்க ணுடைத்தவர் பார்வல்" (குறள், 1152) என்பதன் உரையைப் பார்க்க.

தலைவன் தலைவியோடு களவின்பம் துய்த்து வரைந்து கொள்ளாமல் நெடுநாள் ஒழுகினான்; அதனால் தலைவி துயருற்றாள். தோழி அதனை உணர்ந்து, "இவர் வரைதலின்றிக் களவில் வந்து செல்லுதல் அச்சந் தருதற்குரியது. இங்ஙனம் நம் உள்ளத்தே அச்சம் மிகும் படி வருவதினும் வாராதமைவதே நலம் தரும். அங்ஙனம் வாராமை விருப்பின் எனக்குத் துயரம்மிக்கு உடல் மெலியும், அவ்வுடல் மெலிவைக் கைவளைகள் கழன்று புலப்படுத்துமே யெனின் அம் மெலிவைப் பிறரறியாவாறு செறித்துக்கொள்ளும் சிறியவளைகளும் உள்ளன" என்றாள். இதனால் களவுப் புணர்ச்சியினால் வரும் அச் சத்தையும், அது பெருவிடின் தலைவிக்கு உண்டாகும் துன்பத்தையும் வெளியிட்டு, இவ்விரண்டும் நீங்க விரைவில் வரைந்துகொள்ளுதலே தக்கதென்னும் கருத்தைக் குறிப்பித்தாள்.

இது, தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குக் கூறிய தென்று தோற்றுகின்றது.

கொக்கின் பார்வையை அஞ்சி நண்டு தன் வளையிலே தங்கு வதைப்போல, ஊரினர் அலரை அஞ்சித் தலைவன் தலைவியை விரைவில் மணந்துகொண்டு தன் அகத்தே இல்லறம் நடத்தற்குரியனென்பது குறிப்பு.

ஏகாரம், ஈற்றசை.

## மேற்கோளாட்சி

3-4. கதழ்வு என்னும் உரிச்சொல் விரைவுப்பொருளில் வந்தது (தொல். உரி. 18, இளம், 17, ந.)

## ஒப்புமைப் பகுதி

க. கொக்கின் புறத்திற்கு ஆம்பற்பூ: (நற். கஉஉ: 1-2); 'மாரிக் கொக்கின் கூர லன்ன, குண்டுநீ ராம்பற் றண்டுறை யூரன்",

"கயக்கணக் கொக்கி னன்ன கூம்புமுகைக், கணைக்கா லாம்பல்"; "கொக்கின், கூம்புநிலை யன்ன முகைய வாம்பல்" (நற். ௧00: 2-3, ௨௩0: 2-3, ௨௮0 : 1-2.)

2. பார்வல் : மதுரைக். 231 ; பதிற். ௮௪ : 5; புறநா. ௩: 19; பெருங். ௩. 4 : 43.

2-3. நண்டினது கண்டல் வேரளை : "புலவுத்திரை யுதைத்த கொடுந்தாட் கண்டற், சேர்ப்பே ரீரளை யலவன்" (நற். ௧௨௩ : 9-10); "கனிகவின் சிதைய வாங்கிக் கொண்டுதன், தாழை வேரளை வீழ்துணைக் கிடூஉம், அலவன்" (அகநா. ௩௮0 : 5-7); "கண்டல் வேரளை சேர லவா நீ" (நன். 310, மயிலை. மேற்.)

நண்டின் வேரளை : குறுந். ௩௨௮ : 1-2 ; ஐங். ௨௨ : 1-2, ௨௩ : 1.

1-3. கொக்கிற்கு அஞ்சி நண்டு தன் வளையிற் புகுதல் : "வேப்பு நனை யன்ன நெடுங்க ணீர்ஞெண், டிரைதேர் வெண்குரு கஞ்சி யயல, தொலித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளற், றிதலையின் வரிப்ப வோடி விரைந்துதன், நீர்மலி மண்ணளைச் செறியு மூர" (அகநா. ௧௭௬ : 8-12.)

(௧௧௭)

## தலைவி கூற்று

[தலைவன் வரைந்து கொள்ளாமல் நெடுநாள் இருப்ப, தலைவி அவன் வரவை ஒவ்வொருநாளும் எதிர்நோக்குவாளாய் மாலைப் பொழுதில், "இன்னும் வந்திலர்" என்று கூறி வருந்தியது.]

௧௧௮. புள்ளு மாவும் புலம்பொடு வதிய
நள்ளென வந்த நாரின் மாலைப்
பலர்புகு வாயி *லடைப்பக் கடவுநர்
வருவீ ருளீரோ வெனவும்
வாரார் தோழிநங் காத லோரே.

எ - து. வரைவு நீட்டித்தவழித் தலைமகள் பொழுதுகண்டு தோழிக்குச் சொல்லியது.

நன்னாகையார்.

(ப - ரை.) தோழி—, புள்ளும் மாவும் - பறவைகளும் விலங்கினங்களும், புலம்பொடு வதிய - தனிமையோடு தங்க, நள்ளென

(பி - ம்.) * லடையக் கடவுநர்,

வந்த - நள்ளென்னும் ஓசைபட வந்த, நார் இல் மாலை - அன்பில்லாத மாலைக்காலத்தில், பலர் புகு வாயில் - பலரும் புகுதற்குரிய வீட்டுவாயிலை, அடைப்ப - அடைக்க எண்ணி, கடவுநர் - வினவுவார், வருவீர் உளீரோ எனவும் - உள்ளே வருவீர் இருக்கின்றனிரோ என்று கேட்கவும், நம் காதலோர் - நம் தலைவர், வாரார் - வாராராயினர்.

(முடிபு.) தோழி, மாலையில் கடவுநர், வருவீர் உளீரோ எனவும் நம் காதலோர் வாரார்.

(கருத்து.) நம் தலைவர் இன்றும் வந்திலர்.

(வி - ரை.) தலைவன் வரைந்து கொள்ளாமல் நெடுங்காலம் இருந்தானாக, அவன் வரைவொடு புகுதுவா னென்று ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்திருக்குந் தலைவி மாலைப்பொழுது கண்டு அவன் வாராமையினால் துன்புற்று, "இன்றும் தலைவர் வந்திலர்" என இரங்கிக் கூறினாள்.

தனக்குத் துன்பம் பயப்பதுபற்றி மாலையை நாரின் மாலையென்றாள். தன் வீட்டில் விருந்தினர் பலர் வந்து உண்ணுவாராதலின் அவர் தடையின்றிப் புகும்வாயிலைப் பலர் புகுவாயிலென்றாள். இராக்காலத்தில் விருந்தினர்களைப் புகவிட்டுப் பின்னும் எவரேனும் உள்ளாரோவென ஆராய்வாராகி ஏவலாளர்கள் வினவி, ஒருவரும் இலராக வாயிற் கதவை அடைத்தனர். தலைவன் வந்திருப்பின் விருந்தினர் கூட்டத்தில் ஒருவனாகப் புகுவான் (தொல். களவு. 16.); அவன் அங்ஙனம் புகவில்லையாதலின், அவர் வந்திலரென்று தலைவி கூறினாள்.

'வாயில் அடையக் கடவுநர்' என்பதுபாடமாயின் வாயிலின்கண் உள்ளாரை ஒருவர் விடாமல் முற்றவும் ஆராய்வாராய், "வருபவர்கள் உளீரோ?" என்றுகேட்பவும் தலைவர் வந்திலரென்று பொருள் கொள்க.

ஏகாரம், ஈற்றசை.

## ஒப்புமைப் பகுதி

1. புள்ளும் மாவும் : "மாவும் புள்ளும் வதிவயிற் படர" (யா. வி. 35, மேற்.); "விலங்கும் பறவையும் வீழ்பதிப் படர" (பெருங். ௧. 33 : 43, பி-ம்.)

2. நள்ளென வந்த மாலை: குறுந். ௬: 1, ஒப்பு; ௧௯0: 4, ஒப்பு.

3. பலர் புகுவாயில்: "வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப, மலரத் திறந்த வாயில் பலருண" (குறிஞ்சிப். 202-3); "உலகுபுகத் திறந்த வாயிற், பலரோ டுண்டன் மரீஇ யோனே" (புறநா. உ௩௪: 5-6); "பலர்புகத் திறந்த பகுவாய் வாயில்" (மணி. எ: 92, ௧எ:77.)

(௧௧அ)

---

## தலைவன் கூற்று

[இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து மீண்ட தலைமகனது வேறுபாடு கண்ட பாங்கன், "நினக்கு இஃது எற்றினானாயிற்று?" என்றவழி, "ஓர் இளைய மகளால் ஆயிற்று" என்று தலைவன் கூறியது.]

௧௧௯. சிறுவெள் ளரவி னவ்வரிக் குருளை
கான யானை யணங்கி யாஅங்
கிளையண் முளைவா ளெயிற்றள்
வளையுடைக் கையளெம் மணங்கி யோளே.

எ - து. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் பாங்கற்கு உரைத்தது.

* சத்தி நாதனார்.

(ப - ரை.) தோழ, இளையள் - இளமையை யுடையவளும், முளைவாள் எயிற்றள் - நாணல் முளையைப் போன்ற ஒளியையுடைய பற்களையுடையவளும், வளையுடைக் கையள் - வளையினையுடைய கையினளுமாகிய ஒருத்தி, சிறு வெள் அரவின் - சிறிய வெள்ளிய பாம்பினது, அ வரி - அழகிய கோடுகளையுடைய, குருளை - குட்டியானது, கானம் யானை - காட்டியானையை, அணங்கியாங்கு - வருத்தினாற்போல, எம் அணங்கியோள் - எம்மை வருந்தச் செய்தனள்.

(முடிபு.) இளையள், எயிற்றள், கையள் எம் அணங்கியோள்.

(கருத்து.) ஓர் இளைய மகள் என்னைத் தன் அழகினால் வருத்தினாள்.

(வி - ரை.) கரும்பாம்பும் உளதாதலின் அதனை நீக்க வெள்ளர வென்றான். இதனைக் கோதுமை நாகமென இக்காலத்தில் வழங்கு

---

(பி-ம்.) * சத்தி நாகனார்.

வர். தோற்றத்தால் அழகிய வரியையுடையதேனும் செயலாற் கொடியதென்பது குறிப்பு.

இளைய பாம்புக்குட்டியானது, பிறருக்கு அடங்காது திரியும் யானையைத் தீண்டி வருத்தியதுபோல, இளமையையுடைய தலைவி பகைவரால் தோல்வியுறாத என்னை வருத்தினளென்று உவமையை விரித்துக்கொள்க.

பாம்பின் இளமை தலைவியின் இளமைக்கும், அதன் வரி வளைக்கும் உவமைகள். முளைவாளெயிறென்ற பொருளடையை உவமைக்குங் கூட்டுக. அரவின் குட்டி தன் எயிற்றால் யானையை வருத்தியது போல் தலைவி தன் முறுவலினால் என்னை வருத்தினளென்றும் உவமையை விரிக்க.

இயற்கைப் புணர்ச்சிக்குமுன் காட்சியினால் இளையளென்பதை யும், முறுவற் குறிப்புணர்ந்தவழி முளைவாளெயிற்ற ளென்பதை யும், இயற்கைப் புணர்ச்சியின்கண் தழுவுவழி வளையுடைக் கைய ளென்பதையும் உணர்ந்தவனாதலின் அவற்றை முறையே வைத்துக் கூறினான்.

ஏகாரம், ஈற்றசை.

## மேற்கோளாட்சி

1. குருளை யென்பது பாம்பிற்கும் சிறுபான்மை வந்தது (தொல். மரபு. 8, பேர்.)

மு. தலைவன் உற்ற துரைத்தது (இறை. 3 ; களவியற். 26) ; பாங் கற்குத் தலைமகன் கூறியது (தமிழ்நெறி. 16); அங்கிசை யகவற் சிறப் புடை இயற்சீரான் வந்த நேரிசையாசிரியப்பா (யா. வி. 71.)

## ஒப்புமைப் பகுதி

1. அரவின் குருளை : "சிறுவெள் ளரவின் குருளை" (சிலப். கஉ : 22.)

1-2. இளைய அரவு வருத்துதல் : "அளைதா ழரவு மரியும்வெந் தீயு மரசுமெங்ஙன், இளைதாயி னுங்கொல்லும்" (அம்பிகாபதி. 126 )

அரவு யானையை வருத்துதல் : "குஞ்சரங் கோளிழைக்கும், பாம்பு" (சிற். 21.)

4. எம் அணங்கியோள் : ஐங். உ௫௬ : 6.

3-4. இளையளாயினும் தலைவி தலைவனை அணங்குதல்: "குன்றக் குறவன் காதன் மடமகள், வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி, வளையண் முளைவா ளெயிற்றள், இளைய ளாயினு மாரணங் கினளே" (ஐங். உ௫௬.)

ஒ. "அளையா ரரவின் குருளை யணங்க வறிவழிந்து
துளையார் நெடுங்கைக் களிறு நடுங்கித் துயர்வதுபோல்
வளையார் முளையெயிற் றூர்மன்னன் மாறன்வண் கூடலன்ன
இளையா ளொருவ ரணங்கைநந் தால்யா ளினைகின்றதே."
(பாண்டிக் கோவை.)

(௪௧௯)

## தலைவன் கூற்று

[தலைவன் குறியிடத்தில் வந்ததைக் குறிப்பால் அறிவித்த காலத்தில் தலைவி அவன் வருதற்கு முன்னரே குறியல்லாததைக் குறியென் றெண்ணிச்சென்று வறிதே மீண்டவளாதலின் வாராதொழிய, வருத்த முற்ற தலைவன், "தலைவி நன்மையையுடையா ளென்பதை யறிந்தது போலப் பெறுதற்கரியா ளென்பதையும் இதுகாறும் அறிந்திலையே!" என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறியது.]

**௪௨௦. இல்லோ னின்பங் காமுற் றாஅங்**
**கரிதுவேட் டனையா னெஞ்சே காதலி**
***நல்ல ளாகுத லறிந்தாங்**
**கரிய ளாகுத லறியா தோயே.**

எ - து. (1) அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.

(2) இஃது இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன், பிரிந்தவழிக் † கலங்கியதுமாம்.

பரணர்.

(ப - ரை.) நெஞ்சே—, இல்லோன் இன்பம் காமுற்றுஆங்கு - பொருளில்லாத வறிஞன் இன்பத்தை விரும்பினாற்போல, அரிது வேட்டனை - பெறுதற் கரியதை நீ விரும்பினை; நீ, காதலி - நம் தலைவி, நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு - நமக்கு நன்மை தருப

(பி - ம்.) * நல்லா ளாகுதல். † கலங்கிற்றுமாம்.

வளாதலை அறிந்ததுபோல, அரியள் ஆகுதல் அறியாதோய் - நாம் நினைக்கும் பொழுதெல்லாம் நமக்கு எளியளாய் வருவதின்றிப் பெறற் கரியளாதலையும் அறியாயாயினை.

(முடிபு.) நெஞ்சே, அரிது வேட்டனை ; அறியாதோய்.

(கருத்து.) தலைவி பெறுதற்கரியள்.

(வி - ரை.) இல்லோன் - பொருளில்லாதவன் (குறுந். ௬௩, விசேட.) வறிஞனுக்கு இன்பம் இல்லையென்பதை இந்நூல் ௬௩ - ஆம் செய்யுளாலும் அதன் விசேட வுரையாலும் உணரலாம். அரி தென்றது தலைவியைத் தான் நினைத்த காலத்தில் எதிர்ப்பட்டு இன்புறு தலை. காம மயக்கத்தால் நெஞ்சைக் கேட்பதுபோலக் கூறினன்.

நல்லளாகுதலையறிந்தது இதற்குமுன் நிகழ்ந்த கூட்டங்களில்.

நெஞ்சே, அறியாதோய், அரிது வேட்டனை என்று கூட்டிப் பொருள் கொள்ளுதலும் ஒன்று.

இரண்டாவது கருத்து: இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் தலைவியைப் பிரிந்து, 'இனி இவளைக் காணுமாறு எங்ஙனம்!' என்று மயங்கி, "இதுகாறும் நமக்கு நல்லளாகிய இவள் இனி அரியளன்றே!" என்று நெஞ்சை நோக்கிக் கூறியது.

## மேற்கோளாட்சி

மூ. குறிபிழைத்தவழித் தலைவன் உள்ளத்திற்குச் சொல்லியது (தொல். களவு. 17, இளம்.) ; புணர்ந்து பிரிந்துழி அன்பு மிகுதியால் தான் மறைந்து அவளைக் காணுங்கால் சீறூரிடைக் கண்டு இனிக் கூடுதல் அரிதெனத் தலைவன் இரங்கியது (ஷை. ஷை. 11, ந.) ; * இரவுக்குறி கழிதல் (களவியற்.) ; தலைவன் தலைவியைப் பிரிந்துழிக் கலங்கிக் கூறுதல் (இ. வி. 501.)

## ஒப்புமைப் பகுதி

1. இல்லோனுக்கு இன்பம் அரிதாதல் : (குறுந். ௬௩ : 1, ஒப்பு); "பொருளிலார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு", "இன்மை யெனவொரு பாவி மறுமையும், இம்மையு மின்றி வரும்" (குறள், 247, 1042.)

2. நெஞ்சு அரிது வேட்டல் : குறுந். உ௧ : 4.

மூ. † குறுந். கஉஅ. (கஉ0)

---

* 'இரவுக்குறி கழிதலென்பது அல்லகுறிப்பட்டு மீண்ட தலைமகன் வருந்துதல்' களவியற் காரிகையுரை. † பரணர் பாட்டு.

## தலைவி கூற்று

[தலைவன் செய்த குறியென்று பிறிதொன்றை யெண்ணிச் சென்று அவனை எதிர்ப்படப்பெறாமல் ஒரு நாள் மீண்ட தலைவி, பின் ஒரு நாள் அவன் வந்தமை கூறிய தோழியை நோக்கி, "நீ உரைப்பது உண்மையோ? முன் அவன் வாராமையால் துன்புறுகின்றேன்" என்று கூறியது.]

௧௨௧. மெய்யோ வாழி தோழி சாரல்
*மைபட் டன்ன மாமுக முசுக்கலை
ஆற்றப் பாயாத் தப்ப †லேற்ற
கோட்டொடு போகி யாங்கு நாடன்
தான்குறி ‡வாயாத் தப்பற்குத்
தாம்பசந் தனவென் றடமென் றோளே.

எ - து. இரவுக் குறி வரும் தலைமகன் செய்யுங்குறி பிறிதொன்றனால் நிகழ்ந்து மற்று அவன் குறியை ஒத்தவழி அவ்வொப்புமையை மெய்ப்பொருளாக வுணர்ந்து சென்றாள், ஆண்டு அவனைக் காணாது தலைமகள் மயங்கியவழிப் பின்னர் அவன் வரவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் கூறியது.

[இரவுக்குறி.......மயங்கியவழி - தலைவி அல்ல குறிப்பட்டு மீண்டவிடத்து. பின்னர் - பின் ஒரு நாள்.]

கபிலர்.

(ப - ரை.) தோழி—, மெய்யோ - இப்பொழுது தலைவன் வந்ததாக நீ கூறியது உண்மையோ? முன்பு, சாரல் - மலைப்பக்கத்தில், மை பட்டன்ன மா முகம் முசு கலை - மைபட்டாற் போன்ற கரிய முகத்தையுடைய ஆண்குரங்கு, ஆற்ற பாயா தப்பல் - கொம்பு தாங்குப்படி பாயாத தவற்றினது பயன், ஏற்ற கோட்டொடு போகியாங்கு - அக்குரங்கை ஏற்றுக்கொண்டு முறிந்த அக் கொம்பினிடத்துச் சென்றாற்போல, நாடன் - தலைவன், குறி வாயா தப்பற்கு - குறிப்பை வாய்ப்பச் செய்யாத தவற்றின் பொருட்டு, என் தட மென் தோள் பசந்தன - என்னுடைய பரந்த மெல்லிய தோள்கள் பசலையை அடைந்தன.

(பி - ம்.) * மைப்பட்டன்ன. † லொற்ற. ‡ வாராத்.

(முடிப.) தோழி, மெய்யோ? நாடன் தப்பற்கு என் தோள் பசந்தன.

(கருத்து.) ஏற்றகுறியைச் செய்யாது முன்னர்த் தவறிய தலைவன் இப்போது வந்தானென்று நீ கூறுதல் மெய்யோ?

(வி - ரை.) அல்லகுறிப்பட்டு மீண்டவளாதலின், தோழியும் அவ்வாறே பிறிதொரு குறிப்பைத் தலைவன் செய்ததாக எண்ணி அவன் வந்தானென்று கூறுகின்றாளோவென ஐயுற்று, மெய்யோவென்றாள். வாழி: அசைநிலை; மெய்யாயின் அவனது வரவாகிய நற்செய்தியை உரைத்த நீ வாழ்வாயாகவெனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். முசுவென்பது முகமட்டும் கரியதாயிருக்கும் ஒருவகைக் குரங்கு. ஆற்ற - முற்றவென்பதும் ஒன்று. நாடன் - குறிஞ்சி நிலத் தலைவன்; இந்நூல் ரு-ஆம் செய்யுளின் விசேடவுரையைப் பார்க்க. தப்பல் - தப்பு, தவறு.

தான், தாம், ஏ: அசைநிலைகள்.

தான் செய்த குறியையறிந்து தலைவி வந்திலளென்று தலைவன் கூறுதல் கூடுமென்று நினைத்தவளாதலின் இங்ஙனம் கூறினாள்.

"குரங்கு, கொம்பு ஏற்றுக் கொள்ளும்படி பாயாமையால் அது முறிந்து போனதுபோல, தலைவர் நான் அறியும் வண்ணம் குறி செய்யாத தவற்றால் என் தோள்கள் பசந்தன" என்று தலைவி கூறினாள்.

தலைவியின் தோள் பசந்தமைக்குக் காரணம் தலைவனை எதிர்ப்படாமை.

## மேற்கோளாட்சி

2. கலையென்னும் பெயர் முசுவிற்கு வந்தது (தொல். மரபு. 46, பேர்.)

5-6. அல்ல குறிப்படுதல் (தொல். களவு. 42, ந.)

ரு. மெய்யே யென்ற லென்னும் மெய்ப்பாடு வந்தது; 'இதனுட் கூறியதென ஒரு சொல்வர வேண்டும்' (தொல். மெய்ப். 22, இளம்.); இரவுக்குறி வரும் தலைவன் செய்யுங்குறி பிறிதொன்றனால் நிகழ்ந்து தலைவன் குறியை ஒத்தவழி அதனை மெய்யாக உணர்ந்து மயங்கிய வழித் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது: 'கோடு ஆற்றப்பாயாது வேண்டிய வாறு பாய்ந்து அதனை முறித்த முசுப்போல நாம் குறிபெறுங்காலத்து

வாராது புள் தாமே வெறித்தியம்புந் துணையும் நீட்டித்துப் பின்பு வருதலின், குறிவாயாத் தப்பு அவன் மேலேற்றி, அதற்குத் தோள் பசந்தன வென்று பின் ஒருநாள் அவன் வந்துழித் தோழியை நோக்கி, இவ்வரவு மெய்யோவெனவே தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தையும் பெற்றும்' (தொ. களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. மைபட்டன்ன மாமுக முசுக்கலை: "மைபட் டன்ன மாமுக முசுவினம்" (அகநா. உ௬எ : 9.)

மாமுக முசுக்கலை : முருகு. 303.

3. தப்பல்: குறுந். எ௬ : 7, ஒப்பு.

6. தோள் பசந்தல்: "கண்ணுந் தோளும்....பழநல மிழந்து பசலை பாய" (நற். உ௧௬ : 1-2); "வேய்புரை மென்றோட் பசலையும்" (கலி. ௩௬ : 48.)

தடமென்றோள் : குறுந். எஎ : 6, ஒப்பு.

5-6. தலைவியின் துயரத்தைத் தோள் காட்டுதல்: குறுந். எஎ, விசேட.

தலைவனது தவறு தோளின் தவறுதல்: "தாம்பழி யுடைய ரல்லர் நாளும், நயந்தோர்ப் பிணித்த றேற்று வயங்குவினை, வாளே ரெல்வளை நெகிழ்த்த, தோளே தோழி தவறுடை யவ்வே" (அகநா. உ௬எ : 14-7.)

(௧௨௧)

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்திருந்த காலத்தில் மாலைப்பொழுது கண்டு தலைவி வருந்திக் கூறியது.]

௧௨௨. பைங்காற் கொக்கின் புன்புறத் தன்ன
குண்டுநீ ராம்பலுங் கூம்பின வினியே
வந்தன்று வாழியோ மாலை
ஒருதா னன்றே கங்குலு முடைத்தே.

எ - து. தலைமகள் பொழுதுகண்டு அழிந்தது.

ஓரம்போகியார்.

(ப - ரை.) பசு கால் கொக்கின் - பசிய கால்களையுடைய கொக்கினது, புல்புறத்துஅன்ன - புல்லிய புறத்தைப்போன்ற, குண்டு நீர் ஆம்பலும் கூம்பின - ஆழமாகிய நீர்நிலையில் வளர்ந்த ஆம்பலின் மலர்களும் குவிந்தன ; இனி - இப்பொழுது, மாலை வந்தன்று - மாலைக்காலம் வந்தது ; வாழி - அது வாழ்வதாக ! ஒரு தான் அன்று - இங்ஙனம் வந்தது இம்மாலையாகிய தான் ஒன்றுமட்டும் அன்று ; கங்குலும் உடைத்து - தன் பின் வரும் யாமத்தையும் உடையது ; இனி என் செய்வேன் !

(முடிபு.) ஆம்பலுங் கூம்பின ; இனி மாலை வந்தன்று ; ஒரு தான் அன்று ; கங்குலும் உடைத்து.

(கருத்து.) இராக்காலம் வந்து விட்டது ; இனி யான் மிக்க துன்பத்தை அடைவேன்.

(வி - ரை.) ஆம்பலும் : உம்மை, உயர்வு சிறப்பு. ஆம்பற் பூக் குவிவதனால் மாலை வந்ததைத் தலைவி அறிந்தாள். நீர்வளமின்றிக் குவியாது மாலைக்காலம் வந்தமையாற் குவிந்தன வென்பாள், 'குண்டு நீராம்பல்' எனச் சிறப்பித்தாள். வாழியோ : ஓகாரம் அசைநிலை. மாலையை வாழ்த்தியது குறிப்புமொழி ; தனக்குத் துன்பத்தைத்தரும் அது வாழ்தற்குரிய தன்றென்பது தலைவியின் உள்ளக் கிடக்கை ; "செல்வ லத்தை சிறக்கநின் ளுளே" (புறநா. கககூ: 15) என்னும் ஆலூர் மூலங்கிழார் செய்யுட் பகுதியிற், 'சிறக்க நின்ளுளே' என்று வாழ்த்தியதைக் குறிப்பு மொழியென்று அதன் உரையாசிரியர் கூறியது காண்க ; இங்ஙனம் வரும் குறிப்பு மொழிகளை,

"விடுத்தனன் வேலீயர்நின் வேலே" (புறநா. உ0உ : 17),
"வானோர் பெருமிதம் வாழியே" (தக்க. 562)

என்பவற்றிற் காணலாம்.

ஏகாரங்கள், அசைநிலை. கங்குலும் : உம்மை, இறந்தது தழீஇயது.

மாலை வந்ததனால் துன்புற்ற தலைவி, "இம்மாலையோடு என்துயர் ஒழிந்திலது ; இதன்பின் வருவது கங்குல் ; அதுவும் என் துயரை மிகுவிப்பதாகும்" என வருந்தினாள்.

மாலை - இரவின் முதல்யாமம் ; கங்குல் - இடையாமம். இவ்விரண்டையும் தலைவி அஞ்சுதல், இந்நூல் ௩அஎ - ஆம் செய்யுளால் நன்கு விளங்கும்.

மாலையைத் தொடர்ந்து கங்குல் வருதலின் அக்கங்குலை மாலை உடையதென்று கூறினள்.

இவற்றால் வரும்துயரை எங்ஙனம் ஆற்றுவேனென்பது எச்சம்.

## ஒப்புமைப் பகுதி

1. கோக்கின் புறம் ஆம்பலுக்கு : குறுந். ௧௧௭ : 1, ஒப்பு. (௧௨௨)

---

## தோழி கூற்று

[தலைவன் பகலில் வந்து மறைந்து நிற்க, "தலைவர் இன்னும் பாணிப்பாராயின் நம் தமையன்மார் மீன்வேட்டையினின்றும் திரும்பி வருவாராதலின் அவர் நம்மைக் காண்டல் அரிது; இப் பொழுதே வருவராயின் நன்றாகும்" என்னும் கருத்துத் தோன்றத் தோழி தலைவிக்குக் கூறியது.]

௧௨௩. இருடிணிந் தன்ன வீர்ந்தண் கொழுநிழல்
நிலவுக்குவித் தன்ன வெண்மண லொருசிறைக்
கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப
இன்னும் வாரார் வரூஉம்
பன்மீன் வேட்டத் தென்னையர் திமிலே.

எ - து. பகற்குறியிடத்து வந்த தலைமகனைக் காணாத தோழி, அவன் சிறைப்புறத்தானாதல் அறிந்து தலைமகட்குச் சொல்லியது.

ஐயூர் முடவன்.

(ப - ரை.) தோழி, நிலவு குவித்தன்ன வெண்மணல் ஒரு சிறை - நிலவைத் தொகுத்தாற் போன்ற தோற்றத்தையுடைய வெள்ளிய மணற் பரப்பின் ஒரு பக்கத்தில் உள்ள, இருள் திணிந்தன்ன ஈரம் தண் கொழு நிழல் - இருள் செறிந்தாற் போன்ற ஈரமும் குளிர்ச்சியு முடைய நிழலையுடைய, கரு கோடு புன்னை பூ பொழில் - கரிய கிளை களையுடைய புன்னைமரங்கள் அடர்ந்த பூஞ்சோலை, புலம்ப - தனிமைப் பட்டிருப்ப, இன்னும் வாரார் - தலைவர் இன்னும் வந்தாரிலர்; பல் மீன் வேட்டத்து - பலவகை மீன்களை வேட்டையாடுதலையுடைய,

என்னையர் திமில் - தமையன்மார் ஏறிச் சென்ற மீன் படகுகள், வரூஉம் - மீண்டு வரும்.

(முடிபு.) பொழில் புலம்ப, இன்னும் வாரார்; என்னையர் திமில் வரூஉம்.

(கருத்து.) தலைவர் இப்பொழுதே வருதல் நலம்.

(வி - ரை.) பகலில் தலைவியைக் கடற்கரைப் பொழிலிற் கண்டு இன்பந் துய்த்துவரும் தலைவன் ஒருநாள் அங்கே தலைவி அறியாத வாறு அவளும் தோழியும் பேசுவனவற்றை அறிந்து மகிழும் அவா வினால் மறைந்திருந்தான். அவன் வந்திலனென்று கருதிய தோழி பின்பு அவன் அருகில் மறைந்திருப்பதை உணர்ந்து அவன் கேட்க வேண்டுமென்னும் கருத்தோடு தலைவிக்குச் சொல்லுவாளாய் இதனைக் கூறினாள்.

இருள் திணிந்தன்ன நிழலென்றது உள்ளே நிகழ்வனவற் றைப் புறத்தார் அறிவரிய நிலையின தென்றபடி. கொழு நிழல், புன் னைப்பூம் பொழிலுக்கு அடை. கடற்கரை மணற்பரப்பின் ஒரு சார் புன்னைப் பொழில் உள்ளது. மெத்தென்ற மணற் பரப்பும், தண்மை யும், பூமணமும் விரவி யிருத்தலால் அது பகற்குறிக்கு ஏற்ற தகுதியையுடைய இடமென்பது பெறப்படும்.

புலம்ப - தனிப்ப; தலைவன் வாராமையினால் பொழில் தனிமை யுடையதாயிற்று.

"தலைவர் இதற்குள் வந்திருத்தல்வேண்டும். இனி வருவதற்குப் பாணிப்பின் மீன்வேட்டைக்குச் சென்ற நம் தமையன்மார் மீண்டு வந்துவிடுவாராதலின், இங்கே நிற்றலரிதாகும்" என்று தலைவன் அறி யும்படி கூறினாள். இதற்குப்பயன் தலைவன் உடனே மறைவினின் றும் வெளிவந்து தலைவியைக் காண்டல்.

காலையில் மீன்படகில் மீன்பிடிக்கச் சென்ற நெய்தனிலமாக்கள் மாலையில் மீண்டுவருதல் இயல்பு. 'என்னையர் திமில் வரூஉம்' என்றமையால் பகற்போது சுருங்குவதையும் தோழி குறிப்பித்தாளா யிற்று.

ஏகாரம், ஈற்றசை.

## மேற்கோளாட்சி

5. "வல்லெழுத் தியற்கை யுறழத் தோன்றும்" என்பதனுள், தோன்றுமென்பதனாற் பல என்பதன் அகரங் கெட, லகரம் மெல்லெழுத் தாய் முடிந்தது (தொல். உயிர்மயங்கு. 13, ந.)

மு. ஒருவழித் தணத்தற்கண் தோழி தலைவிக்குக் கூறியது (தொல். களவு. 24, இளம்.); தலைவன்நீட்டத் தலைவி வருந்தியது(நம்பி. 154.)

## ஒப்புமைப் பகுதி

1. நிழலுக்த இருள் : (குறுந். அக: 5-6, ஒப்பு.); "தூங்கிருள்வெய் யோற்கொதுங்கிப், புக்கிருந்தா லன்ன பொழில்" (நள. சுயம்வர. 22.)

2. மணலுக்த நிலவு : (குறுந். ௩௨௦ : 3); "நிலவெக்கர்ப் பல பெயர" (பொருந. 213); "நிலவுக்கானல்" (மதுரைக். 114); "நில வடைந்த விருள்போல, வலையுணங்கு மணன்முன்றில்" (பட். 82-3); "நிலவுமணல்", "நிலவுக்குவித் தன்ன மோட்டுமணல்", "நிலவுத்தவழ் மணற்கோடு", "நிலவுமண லீந்தி" (நற். ௩௧ : 9, ௧௪௦ : 6, ௧௫௬ : 3, ௧௬௩ : 5, ௧௮௩ : 3); "வாணிலா வேய்க்கும் வயங்கொளி யெக்கர்" (கலி. ௧௩௧ : 17); "நிலாவி னிலங்கு மணன்மலி மறுகு" (அகநா. ௨௦௦ : 1); "நிலவுமணல் வியன்கானல்" (புறநா. ௧௭ : 11); "நிலாவெழுந்த வார்மணல்" (திணைமா. 29); "நிலவோ ரன்ன வெண்மணற் பாக்கத்து" (தமிழ்நெறி. மேற்.); "அறல்விளங்கு நிலாமணல்" (மணி. ௮ : 11.)

1-2. நிழலுக்த இருளும் மணலுக்த நிலவும் : "பொழிலே,இரவோ ரன்ன விருளிற் றூகியும், நிலவோ ரன்ன வெண்மண லொழுகியும், அரைசுமண நயந்த பந்தர் போலவும், வரைவா ழியக்கிய ருறைவிடம் போலவும்" (யா. வி. 69, மேற்.)

3. கருங்கோட்டுப்புன்னை : நற். ௬௭ : 5, ௨௪௯ : 1, ௩௧௧ : 9. ஐங். ௧௬௧ : 2; பெருங். ௧. 40 : 68.

2-3. நிலவுமணலும் கருங்கோட்டுப் புன்னையும் : "நிலவுக் குவிந் தன்ன வெண்மண லொருசிறை, இரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை" (யா. வி. 38, மேற்.)

3-4. புன்னைப்பொழிலில் தலைவனும் தலைவியும் அளவளாவுதல் : குறுந். ௨௩௩ : 3-4, ௩௦௩ : 6 ; கலி. ௧௩௫ : 6, 9, 12 ; அகநா. ௩௨௦ : 10-13, ௩௪௦ : 1-2, ௩௭௦ : 3-4.

5. மீன்வேட்டம்: "புன்றலை யிரும்பரதவர்.........பாயிரும் பனிக் கடல் வேட்டஞ் செல்லாது" (பட். 90-92); "கோட்டுமீ னெறிந்த வுவகையர் வேட்டமடிந், தெமரு மல்கினர்", "எல்லிமிழ் பனிக்கடன் மல்குசுடர்க் கொளீஇ, எமரும் வேட்டம் புக்கனர்", "கோட்சுறுக் குறித்த முன்பொடு, வேட்டம் வாயா தெமர்வா ரலரே", "திண்டிமிற் பரதவ ரொண்சுடர்க் கொளீஇ, நடுநாள் வேட்டம் போகி" (நற். சக: 5-6, கஎ: 8-9, உகடு: 11-2, ௩அஅ: 4-5); "பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடிப் பரதவர்", "கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பு" (அகநா. கசo: 1, கஎo: 11.)

மீன்வேட்டையாடுவார் தீமில்: குறுந். ௩oச: 4.

4-5. மீன்வேட்டம் புக்கார் திமிலில் வருதல்: "எந்தை திமிலிது நுந்தை திமிலெனை, வளைநீர் வேட்டம் போகிய கிளைஞர், திண்டிமி லெண்ணும்" (நற். ௩௩க: 6-8); "எற்பட, வருதிமில்" (அகநா. ககo: 2-3.) (கஉ௩)

---

## தோழி கூற்று

[தலைவியைப் பிரிந்து தனியே செல்ல விரும்பிய தலைவன், "பாலைநிலம் இவள் வருதற்குரியதன்று; இன்னாமையையுடையது" என்று கூற, "தலைவரைப் பிரிந்தாருக்கு வீடுமட்டும் இனிமையை யுடையதோ?" என்று வினவு முகத்தால் தலைவியையும் உடன்கொண்டு செல்லும்படி தோழி அறிவித்தது.]

கஉச. உமணர் சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை
ஊர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்கா
டின்னா வென்றி ராயின்
இனியவோ பெரும தமியோர்க்கு மனையே.

எ - து. புணர்ந்துடன் போக்கினைத் தலைமகள் ஒழியப் போக லுற்ற தலைமகற்குத் தோழி சொல்லியது.

[தலைமகள் ஒழிய - தலைவி தனியே இருப்ப. புணர்ந்து உடன் போக்கினைத் தோழி சொல்லியதென இயைக்க. புணர்ந்துடன் போக்கு: தொல். கற்பு. 2.]

பாலைபாடிய பெருங் கடுங்கோ.

(ப - ரை.) பெரும - தலைவ, உமணர் - உப்பு வாணிகர், சேர்ந்து கழிந்த மருங்கின் - பலர் கூடிக் கடந்து சென்ற பக்கத்தையும், அகன்றலை - விரிந்த இடத்தையும் பெற்ற, ஊர் பாழ்த்தன்ன - குடியிருந்த ஊர் பாழாகப் போனதைப் போன்ற தோற்றத்தையுடைய, ஓமை பெரு காடு - ஓமை மரங்கள் வளர்ந்த பெரிய பாலை நிலங்கள், இன்னா - இன்னாமையை யுடையன, என்றிராயின் - என்று கூறித் தனியே செல்லக் கருதினீராயின், தமியோர்க்கு - தலைவரைப் பிரிந்த தனிமையையுடைய மகளிருக்கு, மனை - வீடுகள், இனியவோ - இனிமை தருவனவோ? அல்ல.

(முடிபு.) பெரும, காடு இன்னா என்றிராயின், தமியோர்க்கு மனை இனியவோ?

(கருத்து.) தலைவியையும் உடன் கொண்டு செல்லுதல் வேண்டும்.

(வி - ரை.) தலைவியை உடன்கொண்டு செல்ல வேண்டுமென்று விரும்பிய தோழியை நோக்கித் தலைவன், "யான் செல்லும் வழியிலுள்ள பாலைநிலம் இன்னாமையை யுடையது" என்று கூற அது கேட்ட தோழி கூறியது இது. "பாலைநிலம் இன்னா தென்றீர்; தலைவர் பிரிந்த மனை, மகளிர்க்கு இனிமையைத் தருவனவோ? இன்னாமையை யன்றோ தருவன? இவளைப் பிரிந்து சென்றால் இம்மனை இவளுக்குப் பாலையினும் இன்னாமையை உடையதாகும்; ஆதலின் இவளை உடன் கொண்டு செல்லுதலே நன்று" என்று தோழி கூறினாள்.

உமணர் சேர்ந்து கழிந்த மருங்கினையுடைய காடு, ஊர் பாழ்த்தன்ன காடென இயைக்க. பாழ்த்த ஊரன்ன காடென்று மாறிக்கூட்டினும் பொருந்தும். பாலை நிலத்தில் உமணர் செல்லுதலை, "நீரி லத்தக் காரிடை மடுத்த, கொடுங்கோ லுமணர் பகடு தெழி தெள்விளி, நெடும்பெருங் குன்றந் திமிழ்கொள வியம்பும்" (அகநா. கஎ : 12-4) என்பதனாலும் அறியலாகும். வறியன வாய்ப் பொலிவழிந்து சிதைந்து கிடக்கும் வீடுகளையுடைய ஊர், பசுமையின்றிப் பொலிவழிந்து நிற்கும் ஓமை மரங்களையுடைய பாலை நிலத்துக்கு உவமை. ஓமையம் பெருங்காடு: அம், சாரியை.

'தமியோர்க்கு மனை இனியவோ' என்று பொது வகையாற் கூறினாளேனும் கருதியது தலைவியையேயெனக் கொள்க. இனியவோ வென்றவினா எதிர்மறைப் பொருளையுடையது. ஏகாரம், ஈற்றசை.

## மேற்கோளாட்சி

மு. அடி முதலிற் கூன் வந்த ஆசிரியம் (வீர. யாப்புப். 13); 'இதன் முதற்கண் நாலசைச்சீர் வந்ததன்றேவெனின், அஃது ஐஞ்சீரடியாக வைப்பினும் குற்றுகரத்தை ஒற்றாகக்கொண்டு நாற்சீரடியாக வைப்பினும் நாலசைச்சீர் அன்றாம்' (யா. வி. 95); ஆசிரியப்பாவுள் ஐஞ்சீரடி வந்தது (யா. கா. ஒழிபு. 5; இ. வி. 745.)

## ஒப்புமைப் பகுதி

1. உமணர்: குறுந். ௩அஅ: 4.

2. ஓமையம் பெருங்காடு: "உவரெழு களரி யோமையங் காட்டு" (நற். அ௪: 8.)

2 - 4. "ஊழி யருக்கனும், எரியு மென்ப தியாண்டைய நீண்டெரின், பிரிவி னுஞ்சுடு மோபெருங் காடென்றாள்" (கம்ப. நகர்நீங்கு. 226.)

(கஉ௬)

## தலைவி கூற்று

[தலைவன் வரைந்து கொள்ளாமல் நெடுநாள் ஒழுகினமை வருந்திய தலைவி, அவன் கேட்கும் அண்மையில் இருப்பத் தோழியை நோக்கி, "தலைவன் என் நலம் கொண்டான்; அந்நலம் என்னைப் பிரிந்தது. நான் இன்னும் உயிரோடு வாழ்ந்திருக்கின்றேன்" என்று கூறித் தலைவன் வரையாவிடின் உயிர் நீங்குமென்ற குறிப்பை உணர்த்தியது.]

கஉ௫. இலங்குவளை நெகிழச் சாஅ யானே
உளெனே வாழி தோழி சாரற்
றழையணி யல்குன் மகளி ருள்ளும்
விழவுமேம் பட்டவென் னலனே பழவிறற்
*பறைவலந் தப்பிய பைத லுரை
திரைதோய் வாங்குசினை யிருக்கும்
தண்ணந் துறைவனொடு கண்மா றின்றே.

எ - து. வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் தோழிக்குச் சிறைப்புறமாகச் சொல்லியது.

(பி - ம்.) * பறைவலி.

[சிறைப்புறமாக - தலைவன் கேட்கும் அண்மையில் மறைவாக இருக்கும்பொழுது.]

அம்மூவன்.

(ப - ரை.) தோழி—, சாரல் தழை அணி அல்குல் மகளிருள்ளும் - மலைச்சாரலில் விளைந்த தழையினாலாய உடையை அணியும் அல்குலையுடைய மகளிர் யாவரினும், விழவு மேம்பட்ட என் நலன் - விழாவைப்போலச் சிறப்பெய்திய எனது பெண்மை நலம், பழ விறல் பறைவலம் தப்பிய பைதல் - பழைய விறலையுடைய சிறகின் வன்மை தவறியதனால் உண்டாகிய துன்பத்தையுடைய, நாரை—, திரை தோய் - அலைகள் தோயப் பெற்ற, வாங்கு சினை இருக்கும் - வளைந்த மரக்கிளையில் தங்கியிருக்கும், தண்ணந் துறைவனொடு - குளிர்ந்த கடற்றுறையையுடைய தலைவனோடு, கண் மாறின்று - என்னைவிட்டுப் பிரிந்து சென்று இடம் பெயர்ந்தது; அங்ஙனமாகவும், யானே - யான் மாத்திரம், இலங்கு வளை நெகிழ சாஅய் - விளங்குகின்ற வளைகள் நெகிழும்படி மெலிந்து, உளென் - இன்னும் உயிருடன் இருக்கின்றேன்.

(முடிபு.) தோழி, என்நலன் துறைவனொடு கண்மாறின்று; யானே சாஅய் இன்னும் உளென்.

(கருத்து.) தலைவன் விரைவில் வரைந்துகொள்ளானாயின் உயிர் தரியேன்.

(வி - ரை.) தலைவன் வரையாது ஒழுகினமையால் ஊரார் அலருக்குஅஞ்சித் தலைவியின் உடல்மெலிய வளைகள் நெகிழ்ந்தன. யானே: ஏகாரம், பிரிநிலை. உளெனே: ஏகாரம், அசைநிலை; இரக்கக்குறிப்புமாம். வாழி: அசைநிலை. உளெனே யென்றது, உயிர் விடும் நிலையினேன் என்னும் குறிப்பைப் புலப்படுத்தியது. தழை - தழையாலும் மலராலும் அமைத்து மகளிர் உடுக்கும் ஒருவகை ஆடை; இது மிகுதிபற்றி வந்தபெயர்.

விறல் - மிடுக்கு. வலம் - வெற்றி; இங்கே அதற்குக் காரணமாகிய வலிக்குஆயிற்று. மரம் கரையிலிருப்பினும் அதன்கிளை அலைவந்து தோயுமாறு வளைந்தது.

கண்மாறுதல் - இடமாறுதல். மாறின்று - மாறியது; ஏகாரம்: ஈற்றசை.

தலைவன் என் நலம்கொண்டானாதலின் அஃது என்னிடத்தினின்றும் பிரிந்து அவனோடு போய்விட்டதென்று தலைவி கூறினாள்.

நாரை தன் பழைய சிறைவலி கெட்டுத் திரை தானே கொணர்ந்து தரும் மீனைப்பெற்றாலன்றி வேறு இரைபெறாத நிலையில் திரைதோயும் சினையில் இருத்தலைப் போல, யான் என் பழைய நலனை இழந்து தலைவன் தானே உளமிரங்கிச்செய்யும் தண்ணளியை எதிர்நோக்கி ஈண்டுள்ளே னென்பது குறிப்பு. அத்திரை, மீனைத் தாராதொழியின் நாரை இரையின்றி உயிர்நீத்தலைப்போலத் தலைவன் இரங்கி வரைந்து கொள்ளானேல் யானும் உயிர்விடுவேனென்னும் குறிப்புங் கொள்க.

## ஒப்புமைப் பகுதி

1. வளை நெகிழ்தல்: குறுந். கக : 1, ஒப்பு.

2. உளேனே : குறுந். கருரு : 4, ௩க0 : 5.

3. தழையணி யல்குல் மகளிர் : குறுந். கடுக : 1, உகச : 4, உகூச : 5-7 ; குறிஞ்சி. 102 ; ஐங். எஉ : 1-2.

தழையணி மகளிர் : குறுந். உகடு : 1-2, ௩சஉ : 5.

4. நலத்தின் சிறப்பு : குறுந். உசடு : 1-2.

மேம்பட்ட நலன் : "விறனலன்" (கலி. ௩ : 5.)

5. பறை : குறுந். ககூகூ : 1, கஎஉ : 1.

பறைவலந் தப்பிய நாரை : (குறுந். கஉஅ : 1) ; "பறைதபு முதுகுருகு" (ஐங். கஅ0 : 3.)

7. கண்மாறல் : மதுரை. 642 ; கலி. சகூ : 18 ; அகநா. கசச : 6, ௩௩எ : 18 ; புறநா. கச௩ : 4.

4-7. நலன் தலைவனொடு நீங்கல் : குறுந் : டுச ; 1-5, ஒப்பு.

---

(கஉரு)

## தலைவி கூற்று

[தலைவன் மீண்டுவருவேனெனக் கூறிச்சென்ற கார்ப்பருவம் வந்தும் அவன் வாராமையால் வருந்திய தலைவி தோழியை நோக்கி, "கார்ப்பருவம் வந்துவிட்டது ; முல்லைக்கொடிகள் அரும்பின ; தலைவர் இன்னும் வந்திலர்" என்று கூறியது.]

கஉகூ. இளமை பாரார் வளநசைஇச் சென்றோர்
இவணும் வாரா ரெவண ரோவெனப்
பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்

தொகுமுகை யிலங்கெயி றாக
நகுமே தோழி நறுந்தண் காரே.

எ - து. பருவங்கண்டு அழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

ஒக்கூர் மாசாத்தி.

(ப - ரை.) தோழி—, இளமை பாரார் - இளமையது அருமையைப் பாராராகி, வளம் நசைஇ சென்றோர் - பொருளை விரும்பி என்னைப் பிரிந்து சென்ற தலைவர், இவணும் வாரார் - இவ்விடத்தும் இன்னும் மீண்டு வந்திலர்; எவணரோ - எவ்விடத்தில் உள்ளாரோ? என - என்று யாம் எண்ணியிருப்ப, நறு தண் கார் - நறிய தண்ணிய கார் காலம், பெயல் புறந்தந்த - மழையாற் பாதுகாக்கப்பட்ட, பூ கொடி முல்லை - பூவையுடைய முல்லைக்கொடியினது, தொகு முகை இலங்கு எயிறு ஆக - தொக்க முகைகளை விளங்குகின்ற தன்பற்களாகக் கொண்டு, நகும் - நம்மைப் பார்த்துச் சிரிக்கும்.

(முடிபு.) தோழி, சென்றோர் எவணரோ என, கார் நகும்.

(கருத்து.) கார்காலம் வந்துவிட்டது; தலைவர் வந்திலர்.

(வி - ரை.) பொருள் தேடச் செல்வார்க்கு இளமையது அருமை அம்முயற்சிக்குத் தடைசெய்யுமாதலின் வளம் விரும்பிச் சென்றார் இளமை பாராராயினர் என்றாள்; இளமைய தருமையை எண்ணியிருப்பின் செல்லா ரென்று கொள்க; 'வாழ்க்கைநாள் சிலவாதல் ஏதுவாகப் பொருள்செய்தல் குறித்தாரை இளமையது அருமை இன்பத்தின்கண் ஈர்த்து ஒன்றுமை' (தொல். அகத். 41, ந.) என்பதைப் பார்க்க. பெயலும் முல்லைமுகையும் கார்காலத்தை அறிவுறுத்துவன. பூ: முல்லையாகிய முதலுக்கு அடை. முகை எயிறாக என்றதற்கேற்பக் காராகிய மகள் என்று உருவகத்தை நிரப்புக; இஃது ஏகதேச உருவகம். நகுமென்றது, "நம் தலைவர் தாம் கூறிய பருவம் வந்தும் வாராததுகண்டு நீவிர் இன்னும் உயிரோடு உள்ளீரோ?" என்னும் எள்ளல் காரணமாக நகைக்கு மென்றவாறு.

தொகுமுகையாகலின் பல்வரிசையை ஒத்தன. முல்லைமலரால் நறுமையும், பெயலால் தண்மையும் உடைமையின் நறுந்தண் காரென்றாள்; "நறுந்தண்ணீரள்" என்று மகளிர் இயல்பைச் சிறப்பிக்கும் மரபுபற்றி மகளாக உருவகம் செய்த காரையும் இங்ஙனம் கூறினாள்.

இவணும்: உம்மை, உயர்வு சிறப்பு. ஓ: ஐயம். ஏகாரங்கள், அசைநிலை.

எவணரோ என நகுமென்று கூட்டிப் பொருள்கொள்ளுதலும் ஒன்று.

## ஒப்புமைப் பகுதி

1. இளமைபாராது பொருளுக்குப் பிரிதல்: (குறுந். கநிக : 6); "இறந்துசெய் பொருளு மின்பந் தருமெனின், இளமையிற் சிறந்த வள மையு மில்லை, இளமை கழிந்த பின்றை வளமை, காமந் தருதலு மின்றே" (நற். கஉசு : 7-10); "வளமையா னாகும் பொருளிது வென்பாய், இள மையுங் காமமு நின்பாணி நில்லா", "இளமையுந் தருவதோ விறந்த பின்னே" (கலி. கஉ : 11-2, கடு : 26.)

3. பெயல்புறந்தந்த முல்லை: "பெய்த புலத்துப் பூத்த முல்லை" (குறுந். ௩உ௩ : 4.)

3-4. முல்லைமுகைத்த எயிறு: (குறுந்: * கஅசு : 2-3); "மாத ரார் முறுவல்போன் மணமௌவன் முகையூழ்ப்ப" (கலி. உஎ : 4.)

3-5. முல்லைத்தோதநி நகையைக் காட்டுதல்: (குறுந்: கசுஉ : 3-5); "நீந்தள வுகள்செய்யுஞ் சிறுகுறு நகைகாணாய்" (கம்ப. வனம் புகு. 9); "வேள்சரத் துடைகுநர் கோல நோக்கி, இருண்மகள் கொண்ட குறுநகை போல, முல்லையு மௌவலு முருகுயிர்த் தவிழ" (கல். 'கோடிய கோலினன்.')

கார்ப் பருவத்தில் முல்லை முகைத்தல்: குறுந். க0அ, கசுஉ, கஅசு, கஅஅ, உஉ0, உஉக, ௩டுஅ, ௩அஉ. (கஉசு)

---

## தோழி கூற்று

[தலைவன் தலைவியின்பால் பாணனைத் தூதாக விட்டுத் தான் பின் நிற்பத் தோழி அவனை நோக்கி, "நின்பாணன் பொய்யனாயினன்; அதனால் பாணர் யாவரும் பொய்யர் போலுமென எண்ணுவே மாயினேம்" என்று கூறி வாயில் மறுத்தது.]

கஉஎ. குருகுகொளக் குளித்த கெண்டை யயல
துருகெழு தாமரை வான்முகை வெரூஉம்
கழனியம் படப்பைக் காஞ்சி யூர
ஒருநின் பாணன் பொய்ய னாக
உள்ள பாண ரெல்லாம்
கள்வர் போல்வர் † நீ யகன்றிசி னோர்க்கே.

---

* ஒக்கூர்மாசாத்தி பாட்டு. (பி - ம்.) † நின்னகன்றி சினோர்க்கே.

எ - து. பாணன் வாயிலாகப் புக்கவழித் தலைமகற்குத் தோழி சொல்லியது.

ஓரம் போகியார்.

(ப - ரை.) குருகு கொள - நாரை கவர்ந்து கொள்ள, குளித்த - அதன் வாயினின்று தப்பி நீருட் குளித்த, கெண்டை - கெண்டை மீன், பின்பு, அயலது - அயலதாகிய, உரு கெழு தாமரை வான்முகை - நிறம் பொருந்திய தாமரையின் வெள்ளிய அரும்பை, வெரூஉம் - அஞ்சும், கழனி படப்பை - வயற் பக்கங்களையுடைய, காஞ்சி ஊர - காஞ்சிமரங்கள் வளர்ந்த ஊரையுடைய தலைவ, நின் ஒரு பாணன் பொய்யன் ஆக - நின் பாணன் ஒருவன் பொய் பேசுவா னாயினமையால், உள்ள பாணர் எல்லாம் - மற்றுள்ள பாணர் கள் யாவரும், நீ அகன்றிசினோர்க்கு - நீ அகன்றதனால் தனித்திருக் கும் மகளிருக்கு, கள்வர் போல்வர் - பொய்யரைப் போலத் தோற்றுவர்.

(முடிபு.) ஊர, நின் பாணன் பொய்யனாக, நீ அகன்றிசி னோர்க்கு உள்ள பாணரெல்லாம் கள்வர் போல்வர்.

(கருத்து.) நின் தூதுவனாகிய பாணன் பொய்யன்.

(வி - ரை.) குருகு - கொக்குமாம். குளித்தல் - மறைதல். உரு - அச்சமுமாம். தாமரை -இங்கே வெண்டாமரை.

நாரையாற் கௌவப்பட்டுத் தப்பி நீருட் குளித்த கெண்டை மீண்டும் நீரின்மேல் எழும்போது தாமரை முகையை அந்நாரை யென்றே கருதியது; "அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்ற பழமொழி இங்கே நினைத்தற்குரியது.

கழனியம் படப்பை : அம், சாரியை.

"தலைவன் நின்னை மறப்பானல்லன்; அவன் தூய ஒழுக்க முடையவன்" என்று அப்பாணன் தலைவிபாற் கூறிய பொய்க் கூற் றுக்களைக் கேட்டவளாதலின் ஒரு நின்பாணன் பொய்யனாக வென் றாள். நின்பாணன் கூறுவனவெல்லாம் பொய்யென்னும் தன் கருத் தையே சமற்காரமாகப் புலப்படுத்தி வாயில் மறுத்தாள்.

---

(பி - ம்.) * ஓரம்போதியார்.

நீ அகன்றிசினோ ரென்றது நீ பல மகளிரோடு நட்புடையா யென்னும் கருத்தை உள்ளடக்கியது. அகன்றிசினோர்க்குக் கள்வர் போல்வரென்று பொதுப்படக் கூறினாளேனும், கருதியது தலைவி யையே யென்று கொள்க.

குருகிற்கு அஞ்சிய கெண்டை அக்குருகைப் போன்ற தோற் றத்தைமட்டும் உடையதும் கொடுமை யில்லாததுமாகிய தாமரை முகையையும் அஞ்சினாற்போல, நீ விடுத்த பாணனைப் பொய்யனாகக் கண்டு வெறுத்த மகளிர் பொய்யரல்லாத பிற பாணரையும் வெறுத் தனரென்பது குறிப்பு.

ஏகாரம், ஈற்றசை.

## ஒப்புமைப் பகுதி

1-2. மீன் தனக்கு அச்சத்தைத் தரும் பொருளைத் தோற்றத்தால் ஒக்கும் பிற பொருள்களையும் அஞ்சுதல்: "கோள்வல் பாண்மகன் றலைவலித் தியாத்த, நெடுங்கழைத் தூண்டி னடுங்க நாண்கொளீஇக், கொடுவா யிரும்பின் மடிதலை புலம்பப், பொதியிரை கதுவிய போழ்வாய் வாளை, நீர்நணிப் பிரம்பி னடுங்குநிழல் வெரூஉம்" (பெரும்பாண். 284-8); "கொடுங்கழி மருங்கி னிரைவேட் டெழுந்த, கருங்காற் குரு கின் கோளுய்ந்து போகிய, முடங்குபுற விறவின் மோவா யேற்றை, எறி திரை தொகுத்த வெக்கர் நெடுங்கோட்டுத், துறுகடற் றலைய தோடு பொதி தாழை, வண்டுபடு வான்போது வெரூஉம்" (நற். உகக: 3-8.)

(கஉஎ)

---

## தலைவன் கூற்று

[தலைவன் தலைவியைக் குறியிடத்திற் காணாது மீளும்பொழுது நெஞ்சை நோக்கி, "இனி, தலைவி காண்டற் கரியள்; நீ துன்புறற் குரியை" என்று கூறியது.]

கஉஅ. குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
அயிரை யாரிரைக் கணவந் தாங்குச்
சேய ளரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே.

எ -து. (1) அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகன், தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது.

[நெருங்கிச் சொல்லல் - இடித்துரைத்தல். மு. அகநா. உகஉ கருத்து.]

(2) இஃது உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் கூறியதூஉமாம்.

[உணர்ப்புவயின் வாரா ஊடல் - தலைவி ஊடினளாக அவள் ஊடற்குக் காரணமாகக் கூறிய குற்றங்கள் தன்பால் இல்லையென்று தெளிவித்த பின்பும் தன் குறிப்புக்கு உடன்பட்டு வாராத ஊடற் காலத்து.]

பரணர்.

(ப - ரை.) நெஞ்சே—, குணக்கு கடல் திரையது - கீழ்கடல் அலைக்கு அருகிலுள்ளதாகிய, பறைதபு நாரை - முதுமையால் சிறகுகள் நீங்கப்பெற்ற நாரை, திண் தேர் பொறையன் - திண்மையாகிய தேரையுடைய சேரனது, தொண்டி முன்துறை - மேல்கடற் கரையிலமைந்த தொண்டி யென்னும் பட்டினத்தின் கடற்றுறையின் முன் உள்ள, அயிரை அரு இரைக்கு - அயிரை மீனாகிய பெறற்கரிய உணவைப் பெறும்பொருட்டு, அணவந்தாங்கு - தலையை மேலே எடுத்தாற் போல, சேயள் அரியோள் - நெடுந்தூரத்திலுள்ளவளும் பெறற்கரியவளுமாகிய தலைவியை, படர்தி - பெறுவதற்கு நினைந்தாய்; நோயை - நீ வருத்தத்தையுடையை; நோய் பாலோய் - துன்பத்துக்குக் காரணமாகிய ஊழ்வினையை யுடையை.

(முடிபு.) நெஞ்சே, அரியோட் படர்தி; நோயை; நோய்ப் பாலோய்.

(கருத்து.) இனித் தலைவி நாம் பெறற்கரியள்.

(வி - ரை.) தலைவன் அல்லகுறிப்பட்டு மீள்பவனாதலின், 'இனித் தலைவியைப் பெறுதல் அரிது போலும்!' என்று எண்ணிக் காமமயக்கத்தால் நெஞ்சை நோக்கிக் கூறுவானாகி, "நீ கிட்டுதற்கரிய தொன்றை அவாவி வருத்தமுறுகின்றாய்; உன் தலையெழுத்து இதுதான்" என்று இடித்துக் கூறியது இது.

கீழ்கடலிலுள்ள நாரைக்கு மேல்கடலிலுள்ள அயிரை தூரியதும் பெறற்கரியதுமாதலின் அதனை உவமை கூறினன். மேல்கடற்குப்

பறந்து சென்று பெறும் நிலையிலதென்பான் பறைதபு நாரை யென்றான்.

திண்டேர் - போர்க்களத்தில் மேடும் பள்ளமுமாய இடங்களில் ஓடினும் சிதைவின்றித் திண்ணியதாகுந் தேர். முன்றுறை - துறைமுன்; பின்முன்னாகத் தொக்கது. அணவருதல் - இரையைப் பெறும் ஆர்வத்தோடு தலையை மேலெடுத்தல். தான் சென்று அடைய முடியாத இடத்தினளாதலின் சேயளென்றும், அவளாக வந்து தன்னை எதிர்ப்பட்டு எளியளாகாமையின் அரியளென்றும் கூறினான். பால் - ஊழ்வினை.

நோய்ப்பாலோயே : ஏகாரம், தேற்றம் ; அசைநிலையுமாம்.

இரண்டாவது கருத்து : தான் முன் உண்ட பழக்கத்தால் அயிரைமீனுக்கு நாரை அணவந்ததாயினும் தானும் பறத்தற் கருவியாகிய சிறகினை இழப்ப அயிரையும் நெடுந்தூரத்திலுண்மையின் அது பெறற்கரிதாயினதுபோல, முன் பயின்ற பழக்கத்தால் நீ இவளோடு அளவளாவக் கருதினும் நான் இவளது ஊடலை நீக்கும் பழைய வலியிழந்தேன் ; இவளும் நெஞ்சால் எனக்குச் சேயளாயினளாதலின் இவள் பெறற்கரியள் என்று உவமையை விரித்துக் கொள்க.

## மேற்கோளாட்சி

4. பிறன்கட் டோன்றிய வருத்தம் வந்தது (தொல். மெய்ப். 6, பேர்.)

மு. அல்லகுறிப்பட்டுப் பெயர்ந்து செல்லுந் தலைவன் தன் நெஞ்சினை நெருங்கிச் சொல்லியது (இறை. 17) ; நெஞ்சினை வேறு நிறீஇக் கூறினமையின் பிறன்கட்டோன்றிய பிணி (தொல். மெய்ப். 6, பேர் ; இ. வி. 578) ; புணர்ந்து பிரிந்துழி அன்பு மிகுதியால் தான் மறைந்து அவட்காணுங்கால் ஆயத்திடைக் கண்டு, இனிக் கூடுதலரிதெனத் தலைவன் இரங்கியது (ஷை. களவு. 11, ந.) ; அல்ல குறிப்பட்டுத் தலைவன் புலந்து போகியது (நம்பி. 160) ; இரவுக்குறி கழிதல் (களவியற்.)

## ஒப்புமைப் பகுதி

1. பறைதபு நாரை : குறுந். கஉ௬ : 5, ஒப்பு.

2. தோண்டி : குறுந். உ௪0 : 2, உ௩௮ : 4.

3. அயிரை : குறுந். க௭௮ : 1.

அணவருதல் : குறுந் : ௬௪ : 3, ஒப்பு ; பெருங். ௧. 54 : 42.

1-3. நாரைக்கு அயிரை உணவாதல் : "நாரை நிரைபெயர்ந் தயிரை யாரும்" (குறுந். ௧௬௬ : 2) ; "அன்றிலு நாரையுந் துன்றுபு கெழீஇ..........அயிரையும் பிறவு மல்கிரை யமைத்து" (பெருங். ௧. 51 : 71-3.)

மு. அகநா. ௨௧௨ ;

"வடமலை மிசையோன் கண்ணின் மூடவன்
தென்றிசை யெல்லை விண்புகு பொதியிற்
சூருடை நெடுஞ்சுனை நீர்வேட் டாங்கு
வருந்தினை வாழியெ னுள்ளஞ் சாரற்
பொருதுபுறங் கண்ட பூநுத லொருத்தல்
சிலம்பிழி பொழுதி னத்தம் பெயரிய
வல்லிய மடுக்கத் தொடுங்கு நல்வரைக்
கல்லக வெற்பன் மடமகள்
மெல்லியல் வனமுலைத் துயிலுற் றேயே."

(தொல். களவு. 43, ந. மேற்.)

(௧௨அ)

---

## தலைவன் கூற்று

[தலைவியோடு அளவளாவி மீண்ட தலைவனது வாட்டத்தைக் கண்ட பாங்கன், "நினக்கு இவ்வாட்டம் உண்டாதற்குக் காரணம் யாது?" என்றவழி, "ஒரு மங்கையது நுதல் என் உள்ளத்தைப் பிணித்தது" என்று தலைவன் கூறியது.]

௧௨௯. எலுவ சிறாஅ† ரேமுறு நண்ப
புலவர் தோழ கேளா யத்தை
மாக்கட னடுவ ணெண்ணாட் பக்கத்துப்
பசுவெண் டிங்க டோன்றி யாங்குக்
கதுப்பயல் விளங்குஞ் சிறுநுதல்
புதுக்கோள் யானையிற் பிணித்தற்றா லெம்மே.

எ - து. தலைமகன் பாங்கற்கு உரைத்தது.

கோப்பெருஞ் சோழன்.

---

* பரணர் பாடியது. (பி - ம்.) † ரேமுறு.

(ப - ரை.) எலுவ - எம் நண்ப, சிறுஅர் ஏழுறு நண்ப - இளைஞர் இன்புறுதற்குக் காரணமாகிய நட்டையுடையோய், புலவர் தோழ - அறிவுடையாருக்குத் தோழ, கேளாய் - கேட்பாயாக : மா கடல் நடுவண் - பெரிய கடலின் நடுவில், எண்ணாள் பக்கத்து பசு வெண் திங்கள் - எட்டாந் திதிக்குரிய இளைய வெள்ளிய திங்கள், தோன்றியாங்கு - தோன்றியதைப்போல, கதுப்பு அயல் விளங்கும் சிறு நுதல் - ஒரு மகளின் கூந்தலுக்கு அயலில் விளங்குகின்ற சிறிய நெற்றி, புது கோள் யானையின் - புதிதாகப் பிடிக்கப்பட்ட யானையைப் போல, எம் பிணித்தற்று - எம்மைப் பிணித்தது.

(முடிபு.) எலுவ, நண்ப, தோழ, கேளாய் : சிறுநுதல் எம்மைப் பிணித்தற்று.

(கருத்து.) ஓர் அழகிய மகள் என் நெஞ்சத்தைக் கவர்ந்தாள்.

(வி - ரை.) எலுவ வென்றது தனக்குத் தோழமை யுடைமையைச் சுட்டியது. தான் தலைவியைப் பாங்கனது உதவியினாற் கண்டு இன்புறலாகுமென்று எண்ணியவனாதலின், ஏழுறு நண்ப வென்றான் ; ஏமம் ஏமென்றாயிற்று (முருக. 97, ந.) அறிவுரையைக் கூறுதல் அவன் கடமை யென்பதைப் புலப்படுத்திப் புலவர் தோழ வென்றான் ; சிறுவர் நண்பவென்றதனால் இழுக்கு நேராதவாறு புலவர் தோழவென்று சிறப்பித்தான்.

எண்ணாட் பக்கம் - எட்டாவது திதி; அட்டமி. பசுமை-இளமை. கடலுக்குக் கூந்தலும் திங்களுக்கு நுதலும் உவமைகள். கதுப்பயல் விளங்கும் சிறுநுதலென்றது அளகமாகிய முன்னுச்சி மயிருக்கு அருகில் விளங்கும் நெற்றியென்றபடி ; இதுபற்றியே, “அளகவாணுதல்” (கம்ப. ஊர்தேடு. 53) என்பது போன்ற வழக்குக்கள் உண்டாயின ; இந்நூலின் ௩௪ - ஆம் செய்யுள் விசேடவுரையைப் பார்க்க.

புதுக்கோள் யானை - புதியதாகக் காட்டிலிருந்து பிடிபட்ட யானை ; தலைவன் தான் முன்னர் இத்தகைய உள்ளக்கவர்ச்சியை அடைந்தவனல்லனாதலின் புதுக்கோள் யானையை உவமை கூறினான். பிணித்தற்று : பிணித்தன் றென்பதன் விகாரம் ; பிணித்தல் - இங்கே உள்ளத்தைப் பிணித்தல்.

அத்தை, ஏ : அசைநிலை.

## மேற்கோளாட்சி

1. *ரகார வீற்று உயர்திணைப் பெயர் விளிவேற்றுமைக்கண் அளபெடுத்தது (நன். 308, மயிலை.)

1-2. னகாரவீற்று உயர்திணைப் பெயர் அண்மை விளிக்கண் ஈறு அழிந்தது (நன். 306, மயிலை, 307, சங், வி.)

3-5. 'கடல் போன்றது கூந்தலெனவும், கடல் நடுவெழுந்த எண்ணாட் பக்கத்து மதி போன்றது நுதலெனவும் கூறினான்; அதனால், கடல் போலு மயிரென்றதும், பல காவதப் பரப்புடைய மதிபோன்றது நுதலென்றதும் கழியப் பெரியவாயினும், அது வழக்காதலிற் சிறப்பிற்றீராது மனங்கொள வந்த உவமம் எனவே படும்' (தொல். உவம. 10, பேர்.); எண்ணாட் டிங்கள் மகளிர்நெற்றிக்கு உவமை (சிலப். உ : 38-40, அடியார்.); குழவிப் பருவத்து ஒரு கலையுடைத்தாய்ப் பின்பு இளமைப் பருவத்தே நின்ற பிறை, மகளிர்நெற்றிக்கு உவமை (சீவக. 165, ந.)

மு. தலைவன் பாங்கற்கு உற்ற துரைத்தது (இறை. 3; தொல். களவு. 11, இளம், ந; நம்பி. 137); பாங்கன் கேட்பத் தலைவன் கூறியது (தொல். செய். 196, பேர், ந.); பாங்கற் கூட்டம் (ஷை. ஷை. 198, பேர், 201, ந.); தலைவன் பாங்கனை எலுவவென்று விளித்தது (ஷை. பொருளியல், 26, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. அத்தை : குறுந். ௩௮௯ : 2.

4. பசு வெண்டிங்கள் : (குறுந். ௨௫௯ : 2); "பசுவெண் ணிலவு" (நற். ௧௯௬ : 2.)

3-5. நுதலுக்குப் பிறை : குறுந். ௨௨௬ : 2-3.

6. புதுக்கோள் யானை : மணி. ௧௨ : 45, ௧௮ : 168; பெருங். ௧. 33 : 79.

தலைவனுக்கு யானை : குறுந். ௩௫௯ : 1; கலி. ௨ : 26 - 9; மணி. ௧௮ : 160 - 68.

5-6. தலைவியின் நுதல் தலைவன் உள்ளத்தைக் கவர்தல் : "ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள், நண்ணாரு முட்குமென் பீடு" (குறள், 1088.)

(௧௨௯)

* 'சிறுஅர்' என்பதை மயிலைநாதர் விளியாகக் கொண்டார் போலும்.

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்திருக்கும்போது வருந்திய தலைவியை நோக்கி, "தலைவர் இவ்வுலகில் எங்கேனும் ஓரிடத்தில் இருப்பார்; அவரைத் தேடித் தருவேன்" என்பதுபடத் தோழி கூறியது.]

கஙo. நிலந்தொட்டுப் புகாஅர் வான மேறார்
*விலங்கிரு முந்நீர் காலிற் செல்லார்
நாட்டி னாட்டி னூரி னூரிற்
குடிமுறை குடிமுறை தேரிற்
கெடுநரு முளரோநங் காத லோரே.

எ - து. (1) பிரிவிடை அழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியது. † 'நீ அவர் பிரிந்தாரென்று ஆற்றாயாகின்றது என்னை? யான் அவர் உள்வழி அறிந்து தூதுவிட்டுக் கோணர்வேன்; நின் ஆற்றாமை நீங்குக' எனத் தோழி தலைமகளை ஆற்றுவித்தது.

(2) தோழி தூதுவிடுவோளாகத் தலைமகள் தனது ஆற்றாமையாற் கூறியதூஉமாம்.

[தூது விடுவோளாக - தூது விடும்பொருட்டு.]

‡ வெள்ளி வீதியார்.

(ப - ரை.) தோழி, நம் காதலோர் - நம்முடைய தலைவர், நிலம் தொட்டு புகாஅர் - சித்தி பெற்ற சாரணரைப்போலப் பூமியைத் தோண்டி உள்ளே புகார்; வானம் ஏறார் - ஆகாயத்தின் கண் ஏறார்; விலங்கு இரு முந்நீர் - குறுக்கிடுகின்ற பெரிய கடலின்மேல், காலின் செல்லார் - காலினால் நடந்து செல்லார்; நாட்டின் நாட்டின் - நாடுகள் தோறும், ஊரின் ஊரின் - ஊர்கள் தோறும், குடிமுறை குடிமுறை - முறையாகக் குடிகள் தோறும், தேரின் - ஆராய்ந்தால், கெடுநரும் உளரோ - அகப்படாமல் தப்புவாரும் உள்ளாரோ? இரார்.

(முடிபு.) நம் காதலோர் புகாஅர்; ஏறார்; செல்லார்; தேரிற் கெடுநரும் உளரோ?

(கருத்து) தூதுவிட்டுத் தலைவரைத் தேடித் தருவன்.

---

(பி - ம்.) * பிறங்கிரு. † இது, முன்னுள்ள கருத்தின் விரியென்றே தோற்றுகின்றது. (பி - ம்.) ‡ வெள்ளி வீதி.

(வி - ரை.) நிலந்தொட்டுப் புகுதல் முதலிய மூன்று அற்புத சத்திகளும் சித்தி வகைகள்; இவற்றை இருத்தி யென்பர். சைனர்கள் இத்தகைய சித்திகளைப் பெற்ற சாரணரெனப்படுவோரென்பர். பௌத்தர்களும் இத்தகைய சித்திகளைப் பற்றிப் பாராட்டுவர். தம் தந்தையாகிய சுத்தோதனனுக்கு ஞானம் உண்டாக்குதற்பொருட்டு இத்தகைய அற்புதங்களைப் புத்தர் காட்டினரென்று அசுவகோஷ போதிசத்துவ ரென்பவரால் இயற்றப்பெற்ற புத்த சரிதத்தின் 19-ஆம் வர்க்கம் தெரிவிக்கின்றது.

விலங்குதல் - அலைகள் குறுக்கிடுதல். முந்நீர் - மண்ணைப் படைத்தல், காத்தல், அழித்தலென்னும் மூன்று நீர்மையையுடையது (சிலப். கஎ : 'முந்நீரின்' அடியார்.); யாற்று நீரும் ஊற்றுநீரும் மழை நீருமுடைமையால் இப்பெயர் பெற்றதென்பது சிலர் கொள்கை (புறநா. கூ, விசேடவுரை.)

நாடு, ஊர், குடி என்பன ஒன்றனுள் ஒன்று அடங்கியவை ஆதலின், அம் முறைப்படிக் கூறினள். குடியென்றது குடும்பத்தை.

"நம் தலைவர் இவ்வுலகத்தில் ஏதேனும் ஒரு நாட்டிலுள்ள ஓரூரில் ஒரு குடியில் இருப்பர்; சாரணரைப்போல இவ்வுலகுக்குப் புறம்பே செல்பவரல்லர்; ஆதலின் எல்லா நாட்டிலும் உள்ள ஊர்கள் யாவற்றினும் அமைந்த குடிகளையெல்லாம் தேடின் அகப்படாமற் போதற்கு நியாயமில்லை; அங்ஙனம் தேடித் தருவேன். நீ வருந்தற்க" என்று தோழி, தலைவியை ஆற்றுவித்தாள்.

ஏ : அசைநிலை.

இரண்டாவது கருத்து : "தலைவரைத் தேடின் அகப்படுவார்" என்று கூறும் வாயிலாக, தூதுவிட்டு அங்ஙனம் தேடி அவரைக்கண்டு தன் நிலையைக் கூறச்செய்யின் நலமென்னும் கருத்தைத் தலைவி தோழிக்குப் புலப்படுத்தினள்.

## மேற்கோளாட்சி

மு. செவிலி இடைச்சுரத்துச் சென்று தலைவியைத் தேடத் துணிந்தது; 'இக் குறுந்தொகையுள், நம்மாற் காதலிக்கப் பட்டாரென்றது * அவ்விருவரையும்' (தொல். அகத். 37, ந.)

* இருவராவார், தலைவனும் தலைவியும்.

## வரலாறு

இச்செய்யுளைப் பாடிய வெள்ளிவீதியார் தம்முடைய கணவனைத் தேடித் திரிந்தா ரென்றதொரு செய்தி,

"நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றும்
செலவயர்ந் திசினால் யானே" (அகநா. கசள: 8-10)

என்று ஔவையாராற் கூறப்பட்டுள்ளது. அகநானூற்றின் சஙு - ஆம் செய்யுளில் வெள்ளிவீதியார்,

"ஆதி மந்தி போலப் பேதுற்
றலந்தனெ னுழல்வென் கொல்லோ"

என்று பாடியுள்ளார். வெள்ளி வீதியார் தம் கணவனைத் தேடிய வரலாற்றை நோக்குமிடத்து அங்ஙனம் தேடுவதற்குமுன் அகநானூற்றின் சஙு-ஆம் செய்யுளையும், குறுந்தொகைச் செய்யுளாகிய இதனையும் கூறின ரென்று தோற்றுகின்றது.

## ஒப்புமைப் பகுதி

1-2. நிலந்திற் புகுதல், வான மேறுதல், கடலிற் செல்லுதல்: "நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச், சலத்திற் றிரியுமோர் சாரணன்" (மணி. உச: 46-7); "நீரினிற் பூவில் வானி னினைத்துழி யொதுங்கு கின்ற, சாரண ரெண்ம ராவார் சமணரி லிருத்தி பெற்றோர்" (சூடாமணி. உ: 4.)

3. மு. அகநா. உ௩௯: 17. (௧௯0)

## தலைவன் கூற்று

[தலைவியைப் பிரிந்துவந்த தலைவன் தான் மேற்கொண்ட முயற்சி முற்றுப்பெற்றபின் தலைவிபால் மீள எண்ணி, "தலைவியின் ஊர் நெடுந்தூரத்தில் உள்ளது; அவள்பாற் செல்வதற்கு என் நெஞ்சம் என்று கூறியது.]

கூ௯க. ஆடமை புரையும் வனப்பிற் பணைத்தோட்
பேரமர்க் கண்ணி யிருந்த வூரே
நெடுஞ்சே ணாரிடை யதுவே நெஞ்சே

ஈரம் பட்ட செவ்விப் பைம்புனத்
தோரே ருழவன் போலப்
பெருவிதுப் புற்றன்று ளோகோ யானே.

எ - து. வினைமுற்றிய தலைமகன் பருவவரவின்கட் சொல்லியது

[வினைமுற்றிய - தன் தலைவியைப் பிரிந்துவந்ததற்குக் காரண மாகிய காரியம் முற்றுப்பெற்ற.]

ஓரேருழவனார்.

(ப - ரை.) ஆடு அமை புரையும் வனப்பின் - அசைகின்ற மூங்கிலை யொத்த அழகினையும், பணை தோள் - பருமையையும் உடைய தோளையும், பேர் அமர் கண்ணி - பெரிய அமர்த்தலையுடைய கண்ணை யும் பெற்ற தலைவி, இருந்த ஊர்—, நெடு சேண் அரு இடையது - நெடுந் தூரத்தின்கண் அடைதற்கரிய இடத்தில் உள்ளது; நெஞ்சு - எனது நெஞ்சானது, ஈரம் பட்ட செவ்வி பசு புனத்து - ஈரம் உண்டா கிய செவ்வியையுடைய பசிய புனத்தையுடைய, ஓர் ஏர் உழவன் போல - ஒற்றை ஏரையுடைய உழவனைப்போல, பெரு விதுப்பு உற்றன்று - பெரிய விரைவை அடைந்தது; யான் நோகு - அதனால் நான் வருந்துவேன்.

(முடிபு.) கண்ணி இருந்த ஊர் நெடுஞ்சேணரிடையது நெஞ்சு பெருவிதுப்புற்றன்று; யான் நோகு.

(கருத்து.) யான் கூறிவந்த பருவம் வந்தமையின் என் நெஞ்சம் தலைவியை அடைய அவாவுகின்றது.

(வி - ரை.) தோளிணைத்துஞ்சி யின்புற்றவனாதலின் அவற்றின் சிறப்பை முற்கூறினன். அமைபுரையும் தோள், வனப்பிற் றோள், பணைத்தோளென இயைக்க. பணைத்தோள் - பருமையை யுடைய தோள். அமர்த்தலாவது கண்டார் நெஞ்சொடு போர் புரிதல் (கலி. எ௰ : 7, ந.)

ஓரேருழவன், ஈரம் வீண்படாமல் உழுதற்கு விரைதலைப்போல என் நெஞ்சம் தலைவியை உரியபருவத்தே கண்டு அளவளாவ விரை கின்ற தென்றான். பல ஏருடையான் சிறிது சோம்பியிருப்பினும் ஏவலாளர் உதவிகொண்டு குறுகிய கால அளவில் உழுதுவிடல் கூடும்;

(பி - ம்.) * நக்கீரர்.

- ஒரேருழவனே அவ்வோரேரைக்கொண்டே ஈரம் விண்படாமல் உழ வேண்டியவனாதலின் விரைவான். ஆதலின் அவனை உவமை கூறினன். ஓரேருழவனென்றது ஓரேரும் அதனால் உழப்படும் சிறு நிலமும் உடையவனைக் குறித்தது. விதுப்பு - விரைவு; விதும்பென்பது இதன் வினைப்பகுதி.

ஏகாரங்களும் ஓகாரமும் அசைநிலைகள்.

தன் நெஞ்சு விரைந்தும், தான் உடனே சென்றுகாண்பதற்குரிய நிலையில் இன்மையின் நோகோயானே யென்றான்.

## மேற்கோளாட்சி

மூ. தலைமகன் தலைமகள் வாழும் ஊர்நோக்கி மதிமயங்கியது (நம்பி. 156.)

## ஒப்புமைப் பகுதி

1. ஆடமை: குறுந். ௧௧௫: 4, ஒப்பு.

ஆடமைத்தோள்: "ஆடமைத் தோளி" (பு. வெ. 264); "ஆடமைத் தோ ணல்லார்" (நள. 55.)

மகளிர் தோளுக்கு மூங்கில்: குறுந். ௨௬௮: 6, ஒப்பு.

2. பேரமர்க் கண்ணி: குறுந். ௨௮௬: 4; கலி: ௭௪: 14; புறநா. ௭௧: 6; குறள், 1083.

3. நெடுஞ்சே ணாரிடை: அகநா. ௩: 18.

5. ஓரேருழவர்: 'ஓரேர்க்காரன் உழுது கெட்டான்; அஞ்சேர்க்காரன் அமர்த்திக் கெட்டான்' (ஒரு பழமொழி.)

6. விதுப்புறுதல்: அகநா. ௧௩௬: 8.

4-6. ஈரங்கண்டு உழவன் விரைதல்: "மாவீரம் போகுதென்று விதைகொண் டோட" (தனிப்.)

சிறுநில முடைய உழவன் அந்நிலத்தைப் பாதுகாத்தல்: "வறிஞ ரோம்புமோர், செய்யெனக் காத்து" (கம்ப. அரசியற். 12); "மிடிய ரொருசெய் யாளனச்செய் விளையக் காக்குஞ் செயல்போல" (பிரபு. மாயை உற்பத்தி. 49.)

6. நோகோ யானே: குறுந். ௧௭௮: 7, ௨௧௨: 5; நற். ௨௬: 1, ௪0௮: 9, ௨௫௭: 10, ௩௧௨: 1, ௩௧௪: 9; ஐங். ௧0௭: 4; அகநா. ௧௩௭: 16; புறநா. ௧௧௬: 9, ௨௩௪: 1. (௧௩௧)

## தலைவன் கூற்று

[பேரறிவுடைய நீ ஒரு மகள் திறத்து உள்ளமுடைதல் அழகோவென இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவியின் இயல்பும் வனப்பும் கூறி, "இத்தகைய தன்மையுடையாளை யான் எங்ஙனம் மறந்தமைவேன்!" என்று தலைவன் சொல்லியது.]

கௌ௨. கவவுக் கடுங்குரையள் காமர் வனப்பினள்
குவவுமென் முலையள் கொடிக்கூந் தலளே
யாங்குமறந் தமைகோ யானே ஞாங்கர்க்
கடுஞ்சுரை நல்லா னடுங்குதலைக் குழவி
தாய்காண் விருப்பி னன்ன
* சாஅய்நோக் கினளே மாஅ யோளே.

எ - து. கழற்றெதிர்மறை.

[கழறு எதிர்மறை - பாங்கன் இடித்துரைத்தபோது தலைவன் அதனை எதிர் மறுத்துக் கூறியது.]

சிறைக்குடியாந்தையார்.

(ப - ரை.) தோழ, மாஅயோள் - மாமையையுடைய தலைவி, கவவு கடுங்குரையள் - தழுவுவதில் விரைவுடையவள்; காமர் வனப்பினள் - விருப்பம் தரும் வனப்பையுடையவள்; குவவு மெல் முலையள் - குவிதலையுடைய மெல்லிய நகிலினையுடையவள்; கொடி கூந்தலள் - நீட்சியையுடைய கூந்தலையுடையவள்; ஞாங்கர் - பக்கத்தில் மேயச்சென்ற, கடு சுரை நல் ஆன் - மிக்க சுரப்பையுடைய நல்ல பசுவினது, நடுங்கு தலை குழவி-நடுங்கும் தலையையுடைய கன்று, தாய் காண் விருப்பின் அன்ன - அத்தாய்ப்பசுவைக் காணவேண்டும் விருப்பத்தோடு இருந்தாற்போன்ற, சாஅய் நோக்கினள் - விருப்பத்தை வெளிப்படுத்தும் மெலிந்த பார்வையையுடையவள்; ஆதலால், யான்—, யாங்கு மறந்து அமைகு - எப்படி அவளை மறந்து அமைவேன்!

(முடிபு.) மாஅயோள், கவவுக்கடுங்குரையள்; வனப்பினள்; முலையள்; கூந்தலள்; நோக்கினள்; யான் யாங்கு மறந்தமைகு!

(கருத்து.) தலைவி மறத்தற்கரிய இயல்புடையவள்.

---

(பி - ம்.) * சாஅய நோக்கின்.

(வி - ரை.) கவவு - அகத்திடுதல் (தொல். உரி. 59); இங்கே தழுவுதல் (கலி. ௩௩ : 7.) கடுங்குரையள் - கடுமையள்; குரை: அசை. வனப்பு - பல உறுப்புக்களிலும் காணப்படும் அழகு; 'வனப் பென்பது, பெரும்பான்மையும் பல உறுப்புந் திரண்டவழிப் பெறுவ தோர் அழகு' (தொல். செய். 235, பேர்.) இயற்கைப்புணர்ச்சி யின்பம் துய்த்த நிலையினனாதலின் முதலில் தலைவி தழுவிய இன்பத்தைக் கூறினன். தன் முயற்சி யின்றியே தலைவியும் பெருவிருப்பினளென் பான் தழுவுதலில் விரைவுடையாளென்று கூறினன் (குறள், 1290.)

யாங்கு - எவ்வாறு. ஞாங்கர் - ஊர்ப்பக்கம். கடுஞ்சுரை யென்ற அடை கன்று ஆவின்பால் உண்ணும் விருப்பின தென்பதைப் புலப் படுத்தியது. 'வாங்கக் கலம்நிறைக்கும்' பசுவாதலின் கடுஞ்சுரை யென்பதற்கு விரைவிற் சுரத்தலையுடைய வென்பதும் பொருந்தும்.

நடுங்குதலை யென்ற அடை கன்றின் இளமைமிகுதியை விளக்கியது.

சாஅய் நோக்கு - மெலிந்த நோக்கம்; என்றது தலைவனை எதிர் நோக்கிய பார்வையை.

ஏகாரங்கள், அசைநிலை; அமைகோ: ஓகாரம் இரக்கக் குறிப்பு; அசை நிலையுமாம்.

'கன்று பசுவைப் பார்த்திருத்தலைப் போன்ற விருப்புடைய ளாதலினாலும், மனங்கவரும் இயல்பினளாதலினாலும் அவளை மறந்து அமைதல் அரிது' என்று தலைவன் கூறினன். ஈன்றணிமையை யுடைய நடுங்குதலைக் கன்றைத் தலைவிக்கு உவமை கூறினன், அணிமையிலே முதன்முதற்கண்டு நெஞ்சு கலந்தவனாதலின்.

தலைவனுக்குப் பசுவையும் தலைவிக்குக் கன்றையும் உவமை கூறும் மரபு இந்நூல் கூச - ஆம் செய்யுளாலும் அதன் விசேடவுரை முதலியவற்றாலும் விளங்கும்.

## மேற்கோளாட்சி

2. கொடியென்பது நீடலென்னும் பொருளில் வந்தது (தொல். புறத். 33, ந.)

மு. களவுக்காலத்து நிகழ்ந்த கூட்டத்து அருமையைத் தனித்துச் சுழலுதலையுடைய உள்ளத்தோடே உசாவிய விடத்துத் தலைவற்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 5, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. தலைவி தழுவுதல்: "இன்னகை யிளையோள் கவவ" (அகநா. ௩௪ : 21.)

தலைவியின் கவவுக் கடுமை: 'நம் கவவுக் கடுமை யறிந்த தலைவர்' (குறள், 1156, பரிமேல்.)

4. கடுஞ்சுரையான்: பு. வெ. 18.

6. மாயோள்: குறுந். ௯ : 1, ஒப்பு.

4-6. தலைவன் வரவை எதிர்பார்க்கும் தலைவிக்குத் தாய்ப்பசுவை எதிர்பார்க்கும் கன்று: குறுந். ௬௪ : 1-4. (௧௩௨)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைந்துகொள்ளாமல் நெடுங்காலம் இருந்தானாக, வருந்திய தலைவி, "என் நலத்தை இழந்தும் தலைவர் வரைவாரென்னும் கருத்தினால் இன்னும் உயிர் தாங்கி நிற்கின்றேன்" என்று கூறியது.]

௧௩௩. புனவன் *துடவைப் பொன்போற் †சிறுதினை
கிளிகுறைத் துண்ட கூழை யிருவி
பெரும்பெய லுண்மையி னிலையொலித் தாங்கென்
உரஞ்செத் துளெனே தோழியென்
நலம்புதி துண்ட புலம்பி னானே.

எ - து. வரைவு நீட்டித்த விடத்துத் தலைமகள் சொல்லியது.

உறையூர் முதுகண்ணன் சாத்தன்.

(ப - ரை.) தோழி—, புனவன் துடவை - குறவனுக்குரிய தோட்டத்தில் விளைந்த, பொன்போல் சிறு தினை - பொன்னைப் போன்ற சிறிய தினையினது கதிரை, கிளி குறைத்து உண்ட கூழை இருவி - கிளி ஒடித்து உண்ணுதலால் கூழையாகிய தாளில், பெரு பெயல் உண்மையின் - பெரிய மழை உண்டானமையால், இலை ஒலித்தாங்கு - இலை தழைத்தாற்போல, என் நலம் புதிது உண்ட புலம்பினான் - தலைவர் எனது பெண்மை நலத்தைப் புதிதுண்டமையால்

(பி - ம்.) * ரொடவைப். † சிறுதினைக்,

உண்டாய தனிமை வருத்தத்தோடு, என் உரம் செத்தும் - எனது வலி அழிந்தும், உளென் - இன்னும் உயிரோடு இருக்கின்றேன்.

(முடிபு.) தோழி, புலம்பினுன் உரஞ்செத்தும் உளென்.

(கருத்து.) தலைவர் அருள் செய்வாரென்று இன்னும் உயிர் தாங்கி நிற்கின்றேன்.

(வி - ரை.) புனவன் - தினைப்புனத்தையுடைய குறவன். பொன்போற் சிறுதினையென்றது செந்தினையை. குறைத்து உண்ட வென்பதனை உண்டு குறைத்தவென்று விகுதி பிரித்துக்கூட்டினும் பொருந்தும்.

சிறு பெயலால் அத்தினை இலைவிடாதாதலின் பெரும்பெயலைக் கூறினுள். உரம் - மனவலி; கன்னித்தன்மையுமாம். புதிதுண்ணல் - பிறரால் உண்ணப்படாது புதிதாக உள்ள பொருளை முதன்முறை உண்டல். நலம் புதிதுண்ட லென்பதற்கு நலத்தின் புதுமையை நுகரலென்று உரை கூறுவர் நச்சினார்க்கினியர் (கலி. அந : 21.) புலம்பு - நலமிழந்த தனிமை. உண்டற்குரியதல்லாத நலத்தை உண்டதாகக் கூறுதல் ஒரு மரபு. புலம்பினுல் உரஞ்செத்தும் உளென் என்று கூட்டிப் பொருளுரைப்பினும் அமையும்.

கிளி உண்டமையாற் கதிரிழந்த தினைத்தாள் பெரும்பெயலுண்மையால் உலர்ந்து வாடாமல் இலை விட்டதுபோல, தலைவர் உண்டமையால் நலனிழந்த யான் அவரது தண்ணளியை நினைந்து உயிர் வைத்துள்ளேனென்று உவமையை விரித்துக்கொள்க. பெரும் பெயல் நீட்டிப்பின் தினை மீண்டுங் கதிர்விடுதல்போலத் தலைவன் தண்ணளி மிக்கு வரைந்துகொள்வானேல் என் நலனை மீண்டும் பெறுவே னென்பதும் இவ் வுவமையாற் பெறப்படும்.

குறிஞ்சி நிலத்தினளாகிய தலைவி தினைப்புனங் காத்துக் கிளியோப்பிய பழக்கத்தினுல் தான் அறிந்த உவமையையே கூறினுள்.

உளெனே : ஏகாரம் இரக்கக் குறிப்பு. புலம்பினுனே : ஏகாரம், அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. பூ. குறுந். சoரு : 1.
2. கூழை : குறுந். கஎக : 7, உஉஎ : 3.

1-2. தினையைக் கிளி உண்ணுதல் : குறுந். நகo : 5-6.

3. பெரும்பெயல் : குறுந். கந : 2.

4. தலைவி உரனழிதல்: குறுந். ௧௪௦: 3-4.
உளேனே: குறுந். ௧௨௫: 2, ஒப்பு.

5. தலைவன் தலைவியின் நலனுண்டல்: குறுந். ௧௧௨: 5, ௨௩௬: 6 ௩௮௪: 3.

தலைவன் புதிதுண்டல்: "தோள்புதி துண்ட ஞான்றை" (அகநா ௩௨௦: 13); "பூமாண் கருங்குழலா ருள்ளம் புதிதுண்பான்" (ஆதி யுலா, 58.)

தலைவன் நலம்புதிதுண்டல்: "பூவினன்ன நலம்புதி துண்டு" (நற் ௧௫: 4); "நலம்புதி துண்டுள்ளா நாணிலி" (கலி. ௮௩: 21); "பொன் மாலை மார்பனென் புதுநலனுண் டிகழ்வானோ" (தே. திருநா. திருப் பழனம்.) (௧௩௩

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைபொருட்குப் பிரிந்த காலத்தில் வருந்திய தலைவி யைத் தோழி ஆற்றுவிப்ப அத்தோழியை நோக்கி, "தலைவன் பிரி யாமல் இருப்பின் அவனது நட்பு நன்று; பிரிவுண்மையின் வருத்தம் உண்டாகின்றது" என்று தலைவி கூறியது.]

௧௩௪. அம்ம வாழி தோழி நம்மொடு
பிரிவின் றாயி னன்றுமற் றில்ல [கைட்
குறும்பொறைத் தடைஇய நெடுந்தாள் வேங்
பூவுடை யலங்குசினை புலம்பத் தாக்கிக்
கல்பொரு திரங்கும் *கதழ்வீ ழருவி
நிலங்கொள் பாம்பி னிழிதரும்
விலங்குமலை நாடனொடு கலந்த நட்பே.

எ - து. வரைவிடை ஆற்றாளாகிய தலைமகள், ஆற்றுவிக்கும் தோழிக்குச் சொல்லியது.

கோவேங்கைப் பெருங்கதவன்.

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று கூறுவன் கேட்பாயாக குறு பொறை தடைஇய - குறிய கற்களினிடத்தே பருத்து வளர்ந்த நெடு தாள் வேங்கை - உயர்ந்த அடியையுடைய வேங்கை மரத்தினது

---

(பி - ம்.) * கதம் வீழருவி.

பூ உடை அலங்கு சினை - மலர்களையுடைய அசைந்த கிளைகள், புலம்ப - அம் மலர்களை நீங்கித் தனிக்கும்படி, தாக்கி - அடித்து, கல் பொருது - கற்களை அலைத்து, இரங்கும் - ஒலிக்கும், கதழ் வீழ் அருவி - விரைந்து வீழும் அருவியானது, நிலம் கொள் பாம்பின் - நிலத்தைத் தனக்கு இடமாக ஊர்ந்து கொள்ளும் பாம்பைப்போல, இழிதரும் - இறங்கு தற் கிடமாகிய, விலங்கு மலை நாடனொடு - ஒன்றற் கொன்று குறுக் கிடும் மலைகளையுடைய நாட்டுக்குத் தலைவனோடு, கலந்த நட்பு - மணந்ததனால் உண்டான தொடர்பு, நம்மொடு பிரிவு இன்று ஆயின் - தலைவனுக்கு நம்மோடு பிரிவு இல்லையாயின், நன்றுமன் - நிச்சயமாக நன்றாகும்; தில்ல - இஃது எனது விருப்பம்.

(முடிபு.) தோழி, நாடனொடு கலந்த நட்பு, பிரிவின்றாயின் நன்று.

(கருத்து.) தலைவன் பிரிவை நான் ஆற்றேனாயினேன்.

(வி - ரை.) தலைவன் வரைந்துகொள்ளுதற்குரிய பொருளைத் தேடப் பிரிந்தான். அப்பிரிவை யாற்றாது தலைவி வருந்தினாள். அப்பொழுது தோழி அவளை நோக்கி, "தலைவர் உன்னை மணப்பதற் கன்றோ முயல்கின்றனர்? அவர் நட்பினால் நன்மையைப் பெற்ற நீ வருந்துதல் தகாது" என்ற வழித் தலைவி கூறியது இது.

வாழி: அசைநிலை. நம்மொடு என்று கூறினாள் தோழிக்கும் தனக்கும் உள்ள ஒற்றுமை பற்றி. பிரிவின்றாயின் நன்றென்றமை யின், இப்பொழுது பிரிவு உண்மையின் எனது ஆற்றாமைக் கேது வாயிற் றென்பது பெறப்படும். குறும் பொறை - குறிய கற்கள்; மலையில் உருண்டைக் கற்களுக்கிடையே வேங்கை மரம் வளர்ந்தது. தடைஇய - பருத்த (நேநேல். 149, ௩.)

அருவியின் அருகில் வளர்ந்ததாதலின் வேங்கை பருத்தும் உயர்ந்தும் பூக்கள் மலிந்தும் விளங்கியது. அருவி தாக்குதலால் பூக்கள் உதிர்ந்தன; அதனால் சினை தனிமை யுற்றது. கதழ்வீழ் அருவி - கதழ்ந்து வீழும் அருவி; இத்தொடர் 'வரிப்புனை பந்து' என்பதுபோல நின்றது.

குறும்பொறைகள் குறுக்கிடுங்கால் வளைந்து வளைந்து வேகமாகச் செல்லுவதால் அருவிக்குப் பாம்பு உவமையாயிற்று. ஏ: அசைநிலை.

நிலங் கொள் பாம்பு என்ற உவமையடையைப் பொருளுக்குங் கூட்டி அருவி நிலப்பரப்பில் இழிதலையும் கொள்க.

*அருவி நிலப் பரப்பில் இழிந்து வளந்தருவதேனும் இடையில் மலரை உதிர்த்தலும் கல்லைப் பொருதலும் பாம்பு போலத் தோன்றலுமாகிய துன்பத்திற்கேதுவான செயலைச் செய்ததுபோல, நாடனது நட்பு முடிவில் நன்மையையே தருவதாயினும் இடையிற் பிரிவினால் துன்பத்திற்குக் காரணமாயிற்றென்பது குறிப்பு.*

## ஒப்புமைப் பகுதி

1. அம்மவாழி தோழி : குறுந். ௭௭ : 1, ஒப்பு.

2. நன்றுமற்றில்ல : குறுந். ௯௮ : 2, ஒப்பு.

3. குறும்பொறை : குறுந். ௨௧௯ : 5, ௩௩௩ : 4.

கற்களுக்கிடையே வேங்கை வளர்ந்திருத்தல் : "*அகலறை மலர்ந்த வரும்புமுதிர் வேங்கை*", "*கல்சேர் வேங்கை*", "*குறும்பொறை யயலது நெடுநெந்தாள் வேங்கை*" (அகநா. ௧௦௯ : 1, ௧௪௧ : 27, ௩௬௮ : 6.)

5. கல்பொருதிரங்கும் அருவி : "*கல்பொரு திரங்கு மல்லற் பேரியாற்று*" (புறநா. ௧௧௨ : 8.)

4-5. பூவுடையலங்குசினை புலம்பத் தாக்கும் அருவி : "*பூவுடையலங்குசினை புலம்பவேர் கீண்டு ... நாக நறுமல ருதிர ... இழுமென விழிதரு மருவி*" (முருகு. 298- 316.)

3-5. அருவியின் அருகில் வேங்கைமரம் இருத்தல் : குறுந். ௬௬ : 1, ஒப்பு.

5-6. அருவிக்குப் பாம்பு : "*பாம்பென முடுகுநீர்*" (அகநா. ௩௩௧ : 3) ; "*ஓங்குகோட்டுத் தொடுத்த பாம்புபுரை யருவி*" (தொல். செய். 54, பேர். மேற்.) ; "*நெடுவரை மருங்கிற் பாம்பென விழிதரும், கடுவரற் கலுழி*" (யா. வி. 95, மேற். '*துணியிரும்*') ; "*பாம்பளை புகுவதேபோற் பாய்தரு பரவைத் தெண்ணீர்*", "*குண்டிகை யிருந்த நீத்தங் குவலயம் படர்ந்த பான்மை, எண்டருந் தடையால் வல்லோ னிருங்கடத் திட்ட பாந்தள், மண்டலத் தொருவ னீப்ப வழிக்கொளல் போன்ற தன்றே*" (கந்த. ஆற்றுப். 33, இந்திரனருச். 2.)

7. விலங்குமலை நாடு : குறுந். ௧௪௪ : 7.

2-7. நட்பு, பிரிவின்றயின் நன்று : குறுந். ௩௨ : 3, ௯௭ : 3.(௧௩௪)

## தோழி கூற்று

[தலைவன் பிரியவெண்ணியிருப்பதை யறிந்து வேறுபட்ட தலைவியை நோக்கி, "ஆடவர் மகளிர்க்கு உயிரென்று கூறியவராகிய தலைவர் இப்பொழுது நின்னைப் பிரிந்து செல்லார்" என்று தோழி கூறி ஆற்றுவித்தது.]

**கடரு. வினையே யாடவர்க் குயிரே வாணுதல்**
**மனையுறை மகளிர்க் காடவ ருயிரென**
**நமக்குரைத் தோருந் தாமே**
**அழாஅ ரேழி யழுங்குவர் செலவே.**

எ - து. தலைமகன் பிரியுமென வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) தோழி—, வினையே - தொழில்தான், ஆடவர்க்கு உயிர் - ஆண்மக்களுக்கு உயிர் ஆகும்; மனையுறை மகளிர்க்கு - இல்லின்கண் உறையும் மகளிருக்கு, ஆடவர் உயிர் என - கணவன்மாரே உயிர் ஆவரென்று, நமக்கு உரைத்தோரும் தாமே - நமக்கு எடுத்துக்கூறியவரும் அத்தலைவரே; அழாஅல் - அழுதலை யொழிவாயாக; செலவு அழுங்குவர் - அவர் செல்லுதலைத் தவிர்வர்.

(முடிபு.) தோழி, உரைத்தோரும் தாமே; அழாஅல்; செலவு அழுங்குவர்.

(கருத்து.) தலைவர் உன்னைப் பிரியாராதலின் நீ வருந்தற்க.

(வி - ரை.) தலைவன், "ஆடவர்க்கு வினை உயிர்" என்று கூற அதனால், "இவன் வினைமேற் பிரியக் கருதினான்" என்று எண்ணித் தலைமகள் வேறுபட்டாள். அதுகண்ட தோழி, "வினையே ஆடவர்க்கு உயிரென்றதன்றி, மகளிர்க்கு ஆடவரே உயிரென்றும் அவர் கூறியுள்ளார்; ஆதலின் அவர் உடலாகிய நின்னைவிட்டுப் பிரியார்; நீ வருந்தாதே" என்றுகூறி ஆற்றுவித்தாள். இது கற்புக்காலத்தது.

வினையே: ஏகாரம், பிரிநிலை. வினையே யென்பதன் ஏகாரத்தை உயிரென்பதற்குங் கூட்டி முடிக்க. உயிரே: ஏகாரம், அசைநிலை. மனையுறை மகளிர் - மனையிலிருந்து கற்பொழுக்கம் தவறாத மகளிர். உடலுள்ளளவும் முயற்சியுடன் இருத்தல் ஆடவர்க்கு இலக்

கணமாதலின் அவருக்கு வினை உயிரென்றும், கணவரைப் பிரிதலின்றி வாழ்வதே மகளிர்க்கு இலக்கண மாதலின் அவருக்கு ஆடவர் உயிரென்றும் கூறினன். நமக்கென்றது தனக்கும் தலைவிக்கும் உள்ள ஒற்றுமைபற்றி. உரைத்தோரு மென்ற உம்மை இப்பொழுது பிரிவதற்குரிய முயற்சியைச் செய்வோரும் என்று எதிரது தழீஇயது. தாமே: ஏகாரம் தேற்றம்.

அழுங்குவர் - தவிர்வர்; 'செலவழுங்கினர் - செலவு கெடுத்தார்' (தொல். உரி. 53, இளம்.)

செலவே: ஏ, அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. வினை ஆடவர்க்கு உயிர்: "வினைநன் றாதல் வெறுப்பக் காட்டி" (அகநா. ௩௩: 1); "இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர், துன்பந் துடைத்தூன்றுந் தூண்" (குறள், 615.)

2. மகளிர்க்கு ஆடவர் உயிர்: "இன்னுயி ரன்ன பிரிவருங் காதலர்" (நற். ௨௩௭: 3); "ஆடவ ருயிரென வருகு போயினர்", "ஐயா நீயென தாவி யென்பது, பொய்யோ பொய்யுரை யாத புண்ணியா", "பொருடரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற், குருடரு தேர்மிசை யியிர்கொண் டெய்தலான்", "விழைவுறு பொருடரப் பிரிந்த வேந்தர்வந், துழையுற வுயிருற வுயிர்க்கு மாதரின்" (கம்ப. எழுச்சிப். 22, அரசியற். 9, கார்காலப். 22, 25.)

4. அழாஅல்: குறுந். அ௨: 2.

"ஆழன் மடந்தை யழுங்குவர் செலவே" (நற். ௩௧௧: 1.) (௧௩௫)

---

## தலைவன் கூற்று

["நீ காமநோயுறல் தகாது" என்ற பாங்கனை நோக்கித் தலைவன், "காமம் யாவரிடத்தும் இயல்பாக உள்ளதே; ஆயினும் அது வெளிப்படற் குரியதொரு காலத்தையுடையது" என்று கூறியது.]

௧௩௬. காமங் காம மென்ப காமம்
அணங்கும் பிணியு மன்றே நுணங்கிக்
கடுத்தலுந் † தணிதலு மின்றே யானை

---

* பாலைபாடிய பெருங்கடுங்கோ இயற்றிய செய்யுட்பகுதி.

(பி - ம்.) † தணித்தலும்,

குளகுமென் றுண்மதம் போலப்
பாணியு முடைத்தது காணுநர்ப் பெறினே.

எ - து. தலைமகன், பாங்கற்கு உரைத்தது.

மிளைப்பெருங் கந்தன்.

(ப - ரை.) காமம் காமம் என்ப - காமம் காமம் என்று உலகினர் அதனைக் குறைகூறுவர்; காமம் - அக் காமமானது, அணங்கும் - புதியதாகத் தோற்றும் வருத்தமும், பிணியும் அன்று - நோயும் அன்று; நுணங்கி - நுண்ணிதாகி, கடுத்தலும் - மிகுதலும், தணிதலும் - குறைதலும், இன்று - இலது; யானை—, குளகு மென்று ஆள் மதம் போல - தழைபுணவை மென்று தின்று அதனுற் கொண்ட மதத்தைப்போல, காணுநர் பெறின் - கண்டு மகிழ்வாரைப் பெற்றால், அது பாணியும் உடைத்து - அக்காமம் வெளிப்படும் செவ்வியையும் உடையது.

(முடிபு.) காமம் காமம் என்ப; காமம் அணங்கும் பிணியும் அன்று; கடுத்தலும் தணிதலும் இன்று; அது காணுநர்ப் பெறின் பாணியும் உடைத்து.

(கருத்து.) காமம் இயல்பாகவே ஒருவரிடம் இருந்து உரிய காலத்தில் வெளிப்படுவது.

(வி - ரை.) தலைவன் ஒரு தலைவியைக் காமுற்றுனென்பதை யறிந்த பாங்கன், "பேரறிவுடைய நீ காமநோயை அடைதல் நன்றோ?" என்று இடித்துரைக்க, அவனை நோக்கித் தலைவன் கூறியது இது.

என்ப - என்று உலகினர் கூறுவர். பொதுவாகச் சுட்டினும் பாங்கன் கூறியதையே தலைவன் கருதினன். அணங்கு - பிறரால் உண்டாகும் வருத்தம். பிணி - தன்பால் தோன்றும் நோய். கடுத்தல்: கடி யென்னும் உரிச்சொல் ஈறு திரிந்தது; குறள், 706, பரிமேல்.

நுணங்கிக் கடுத்த லென்னுந் தொடரை இரண்டு செயலாக்கி நுணங்குதலும், கடுத்தலுமென்று கொள்க. கடுத்தல் - வெம்மையாதல்; தணிதல் - தண்மையாதல் எனலும் பொருந்தும் (குறள், 1104.)

அடங்கியிருந்த யானையின்மதம் தழையுணவை உண்ட காலத்தில் வெளிப்படுவதைப்போல, ஊழின் வலியால் காணற்குரியாரைக் காணப்

பெறின் இயல்பாகவே உள்ளத்துள் அடங்கியிருந்த காமம் வெளிப் படுமென்று உவமையை விரித்துக் கொள்க. இங்ஙனம் கூறியதனால், "தெய்வத்தின் ஆணைவழியே யான் தலைவியைக் கண்டேன்; அவள் எனக்குரியளாதலின் அவளைக் கண்ட மாத்திரத்தே என்பால் இதுகாறும் தோற்றாமல் அடங்கியிருந்த காமம் வெளிப்படும் செவ்வியை உடையதாயிற்று; ஆதலின் யான்கொண்ட காமம் பிறரால் வந்த வருத்தமன்று; என்பால் புதிதாக வந்த நோயுமன்று" என்பதைத் தலைவன் விளக்கினான்.

இங்ஙனமே தலைவியைக் கண்ட காலத்தில் காமம் உண்டாவதற்குக் குளகையுண்டபோது யானைக்கு மதம் விளைதலை உவமங் கூறிய,

"நாறுமும் மதத்தி னாலே நாகத்தை யிரிக்கு நாகம்
ஆறிய சினத்த தன்றி யதிங்கத்தின் கவளங் கொண்டால்
வேறுநீர் நினைந்து காணீர் யாவர்க்கும் விடுக்க லாகா
தூறித்தே னொழுகுங் கோதை நம்பிக்கு மன்ன னென்றான்" (750)

என்ற சிந்தாமணிச் செய்யுளும், 'குளகுபோல் மதத்தை விளைப்பவள் இவளும் ஆதலால் விடுத்தலரி தென்றான்' என்ற அதன் விசேடவுரையும் இங்கே பயன்படுவன.

காமம் தலைவனிடத்தே அடங்கியிருந்து தலைவியைக் கண்ட காலத்தே வெளிப்படுமென்னும் கருத்து,

"நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னும்
தீயாண்டுப் பெற்றா ளிவள்" (குறள், 1104)

என்பதன் விசேடவுரையில் பரிமேலழகர்,

'தன் காமத்தீத் தன்னையே அவள் தந்தாளாகக் கூறினான், அவளான் அது வெளிப்படுதலின்'

என்றெழுதியதனாலும் விளங்கும்.

பாணி - ஏற்ற காலம் (புறநா. ௨0௬: 17); என்றது வெளிப் படற்குரிய காலத்தை.

காணுநர் எனப் பன்மையாற் கூறினமையின் தலைவன் தலைவி யென்னும் இருசாரார்க்கும் இந்நிலை பொதுவென்பது பெறப்படும்; இதனை, உதயணனும் வாசவதத்தையும் ஒருவரையொருவர் காணுங் காலையில் அவ்விருவரிடத்தும் புதிதாகக் காமம் வெளிப்பட்டு இருவயி னொத்ததென்பதைக் கூறுவதாகிய,

" இருவரு மவ்வழிப் பருகுவனர் நிகழ
... ... ... ... ...
... ... எடுத்த சென்னியன்
மன்னவன் முகத்தே மாதரு நோக்கி
உள்ளமு நிறையுந் தள்ளிடக் கலங்கி
வண்டுபடு கடாஅத்த வலிமுறை யொப்பன
பண்டுகடம் படாஅ பறையினுங் கனல்வன
விடற்கருந் தெருவினுள் விட்ட சேவியுட்
டடக்குவரை நில்லாது தோட்டி நிமிர்ந்து
மதக்களி றிரண்டுடன் மண்டி யாஅங்
கில்வழி வந்ததம் பெருமை பீடறத்
தொல்வழி வயத்துத் தொடர்வினை தொடர
... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... இசைந்த
அமைப்பருங் காதலும் ... ... ...
... ... ... ... ... ... ... ...
இருவயி னொத்து " (௧. 32 : 27-49)

என்னும் இனிய அரிய பெருங்கதைப் பகுதியால் உணரலாகும்.

ஊழ்வலியினாலன்றி, * 'வடகடலிட்ட ஒருநுகத்தின் ஒருதுளை யில் தென்கடலிட்ட ஒருகழி கோத்தாற்போல' க் † காணப்பெறுதல் அருமையாதலின், பெறினென்றான்.

காணுநர்ப்பெறின் - ஆராய்வாரைப் பெறினென்பதும் ஒன்று.

## மேற்கோளாட்சி

மூ. களவுக்காலத்துத் தலைவனைப் பாங்கன் கழறல் (தொல். கற்பு. 41, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

1-2. காமம்......அன்றே : ‡ குறுந். உ0௪ : 1-2.

4. யானை தழையுணவைத் தின்று மதங்கோள்ளுதல்: " புன்காற், சிறியிலை வேம்பின் பெரிய கொன்று, கடாஅஞ் செருக்கிய கடுஞ்சின முன்பிற், களிறு " (நற். ௩0௩ : 1-3.) (கரு சு)

* இறை. 2, உரை. † குறள், 334, பரிமேல். ‡ மிளைப்பெருங் கந்தன் பாடியது.

## தலைவன் கூற்று

[தலைவியைப் பால்வயத்தனாகிக் கண்டு அளவளாவிய தலைவன், "நின்னை யான் பிரியேன்" என்று கூறி, அவள் பிரிவென்பதொன் றுண்டென்று ஓர்ந்து அஞ்சுமாறு செய்தது.]

கஙஎ. மெல்லிய லரிவை நின் னல்லகம் புலம்ப
நிற்றுறந் தமைகுவெ னாயி னெற்றுறந்
திரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே.

எ - து. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிவச்சம் உரைத்தது.

[பிரிவச்சம் உரைத்தது - பிரிவென்பதொன்று உண்டென்றும், அஃது அஞ்சுதற்குரியதென்றும் தோன்ற உணர்த்தியது.]

பாலை பாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) மெல் இயல் அரிவை - மென்மைத் தன்மையை யுடைய அரிவையே, நின் நல் அகம் புலம்ப - நின் நல்ல நெஞ்சம் தனிமையால் வருந்த, நின் துறந்து - நின்னைப் பிரிந்து சென்று, அமைகுவென் ஆயின் - சென்ற இடத்தே மனம் பொருந்தி இருப் பேனாயின், யான் செலவு உறு தகவு - யான் அங்ஙனம் செல்வதற் குற்ற தக்க வினையின்கண், என் துறந்து இரவலர் வாரா வைகல் பல ஆகுக - என்னை நீங்கி இரப்போர் வாராத நாட்கள் பலவாகுக!

(முடிபு.) அரிவை, நின் அகம் புலம்ப நிற்றுறந்து அமைகுவெ னாயின் யான் செலவுறுதகவு இரவலர் வாரா வைகல் பலவாகுக.

(கருத்து.) நின்னைப் பிரியேன்; பிரியின் அறப்பயனை இழந்தவ னாவேன்.

(வி - ரை.) மெல்லியலரிவை யென்றதும் நல்லக மென்றதும், என் பிரிவால் துன்பத்தைத் தாங்கற்கேற்ற ஆற்றலுடையாயல்லை யென்னும் கருத்துடையன. அரிவையென்றது இங்கே பருவங் குறித்ததன்று.

எற்றுறந்து - என்னை நெடுந்தூரத்திலே மனத்தால் துறந்து.

" ஒல்வ, கொடாஅ தொழிந்த பகலு முரைப்பிற்
படாஅவாம் பண்புடையார் கண் " (நாலடி. 169)

என்பவாதலின் ஈதலில்லா நாள் நன்னாளன்று. யான் வினைமேற் கொண்டு செல்வேனாயின் அங்ஙனம் செல்லுமிடத்தில் இரவலரைப் பெறாத துன்பத்தை யானடைகவென்பது கருத்து.

யான் செலவுறு தகவானது இரவலர் வாராவைகல் பலவற்றின் பயனை உடையதாகுகவென்றும் பொருள் கூறுதல் பொருந்தும். செல்லலென்பது துன்பத்துக்குப் பெயராதலைப்போலச் செலவென் பதையும் துன்பத்துக்குப் பெயராகக் கொண்டு, யான் துன்பத்தை அடையும்படி இரவலர் வாரா வைகல் பல எனக்கு ஆகுகவென்று பொருள் கொள்ளுதலும் ஒன்று; செலவு உறுதக - துன்பத்தை அடைய.

இரப்போரைக் காணாமலும், இரப்போர்க்கு ஈயாமலும் இருக்கும் நாள் கெட்ட நாளென்பது கருதி வஞ்சினங் கூறுவோர் இங்ஙனம் குறிப்பது மரபு;

" புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா வின்மையா னுறவே " (புறநா. எஉ : 17-8),

" எற்றவற் கொருபொரு ளுள்ள தின்றென்று
மாற்றல னுதவலன் வரம்பில் பல்பகல்
ஆற்றில னுழற்றுமோ ராத னெய்துமக்
கூற்றுறு நரகினோர் கூறு கொள்கயான் "
(கம்ப. பள்ளியடைப். 113),

" கருந்தடங்கண் மங்கையரை நோக்குற்ற கண்ணும்
பெருந்தடந் தோள்பிணித்த கையும் - பருந்தின்
வளைவாயிற் பெய்யேனேல் வந்திரந்தார் துன்பம்
களையாது மாற்றுகவென் கை " (வீர. பொருட். 17, மேற்.)

என்பவற்றை ஓர்க.

தலைவன் இங்ஙனம் கூறியதனால் தலைவி, " இவர் செலவுறுதற் குரிய காரியமும் உண்டுபோலும்!" என்று கருதிப் பிரிவை அஞ்சு வாள்;

" இவ்வாறு இவை கேட்ட தலைமகள் ' எம்பெருமான் நின்னிற் பிரியேன், பிரியினுமாற்றே னென்கின்றானல். பிரிவென்பதும் ஒன்று உண்டுபோலும்! கேட்ட தகைமையால் அது தங் காதலரைக்

*காணாதுங் கேளாதுங் கையினகன்று மெய்யினீங்குவது' எனக் கலங்கி......மன முருகிப் பசந்துகாட்டினள்" (இறை. 2, உரை)*

*என்பதைப் பார்க்க.*

## மேற்கோளாட்சி

மூ. *தெளிவகப்படுத்தியது* (தொல். களவு. 10, ந.); *தீராத் தேற்றம்* (இ. வி. 497.)

## ஒப்புமைப் பகுதி

1. மெல்லியலரிவை: நற். அக: 7, ஒப்பு. (௧௩௭)

---

## தோழி கூற்று

*[முதல்நாள் உரிய இடத்தே வந்து தலைவியைக் காணாத தலைவன் மறுநாள் கேட்கும் அணிமையில் நிற்பதை அறிந்த தோழி, "நேற்றிரவு தலைவாது வரவை எதிர்நோக்கித் துயிலாமல் இருந்தேம்; அவர் வந்திலர்" எனக் கூறியது.]*

௧௩௮. கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சலமே
எம்மி லயல தேழி லும்பர்
மயிலடி யிலைய மாக்குர னொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே.

எ - து. (1) குறிபிழைத்த தலைமகன், பிற்றை ஞான்று இரவுக்குறி வந்துழித் தோழி, சிறைப்புறமாகக் கூறியது.

(2) இரவுக்குறி நேர்ந்ததூஉமாம்.

கொல்லன் அழிசி.

(ப - ரை.) *எம் இல் அயலது - எமது வீட்டின் அயலதாகிய, ஏழில் உம்பர் - ஏழிற்குன்றத்தின் மேலுள்ள, மயிலடி இலைய - மயிலின் அடியைப் போன்ற இலையையுடைய, மா குரல் நொச்சி - கரிய பூங்கொத்தையுடைய நொச்சியினது, அணி மிகு மெல் கொம்பு ஊழ்த்த - அழகு மிக்க மெல்லிய கொம்புகள் உதிர்த்த, மணிமருள்*

பூவின் பாடு - நீலமணிபோன்ற மலர்களின் ஓசையை, நனி கேட்டு - மிகக் கேட்டு, கொன் ஊர் துஞ்சினும் - பெரிய ஊரிலுள்ளார் துயின் றாலும், யாம் துஞ்சலம் - நாங்கள் துஞ்சேமாயினேம்.

(முடிபு.) ஊர் துஞ்சினும், யாம் பூவின்பாடு கேட்டுத் துஞ்சலம்.

(கருத்து.) நேற்றுத் தலைவரை யாம் எதிர்நோக்கி யிருந்தேம்.

(வி - ரை.) கொன் - பெருமை; அலரால் தலைவியை அஞ்சு வித்தலின் அச்சமுமாம். தலைவிக்கும் தனக்கும் உள்ள ஒற்றுமை பற்றி யாமென்றாள். ஏழில்: ஒருமலை; இது நன்னன் என்பவனுக் குரியது; ஏழிலைப்பாலையென்னும் மரமும் ஆம்; இப்பொருள் கொள்ளுங்கால் உம்பரென்பதற்கு அப்பாலென்று கொள்க.

தலைவன் கேட்கும் அணிமையில் இருப்பதை அறிந்த தோழி, "நேற்றிரவு நாம்துயிலாமல் தலைவரது வரவை எதிர்நோக்கி இருந் தேம். ஊரினர் யாவரும் துயின்றனர். வீட்டுக்கு அருகிலுள்ள ஏழிற் குன்றத்தின்மேல் வளர்ந்த நொச்சியின் மலருதிரும் ஓசையும் எம் காதில் விழுந்தது. தலைவர் வந்தால் நாம் நன்கு அறிந்திருப்பேம். அவர் வந்திலர்" என்று கூறியது. மருள்: உவமவுருபு.

நள்ளிரவில் நொச்சியினது மலர்கள் உதிரும்; "நொச்சிப் பூவு திர் நள்ளிரு ணடுநாள்" (கல். ௨: 18.) ஏகாரங்கள் அசை நிலைகள்.

இரண்டாவது கருத்து: "இராக் காலத்தில் யாம் துயிலேம்" என்றமையால் அப்பொழுது வரின் தலைவியைக் கண்டு அளவளாவலா மென்று குறிப்பித்தாள்.

## மேற்கோளாட்சி

1. இடைச்சொல் பெயரைப் பின்னே அடுத்து வந்தது (தொல். இடை. 3, இளம், சே, கல், தெய்வச், ந.); கொன்னென்னும் இடைச் சொல் பெருமையென்னும் பொருளில் வந்தது (ஷை. ஷை. 6, இளம், சே, கல், தெய்வச், ந; இ. வி. 265); 'இடைச்சொற்களிலும் விசே டித்து நிற்றற்குமுரியன சிலவுள' (ஷை. எச்ச. 59-60, ந.); இடைச் சொல் பெயரின் அகத்துறுப்பாய் முன்னே வந்தது (நன். 419, மயிலை, 420, சங்,வி.); இடைச்சொற்றொடர் வந்தது (இ. வி. 54.)

௨. இரவுக்குறி பிழைத்தவிடத்துத் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். களவு. 16, ந.); என் பிழைப்பு அன்றென்று இறைவி நோதல் (நம்பி. 160; இ. வி. 519); தூங்கிசை யகவலோசை ஆசிரியப்பா (யா. வி. 69.)

## ஒப்புமைப் பகுதி

1. ஊர் துஞ்சினும் தலைவி துயிலாமை: குறுந். ௬: 3-4, ஒப்பு.

2. ஏழில்: நற். ௪௧௧: 7; அகநா. ௧௫உ: 13, ௪௪௯: 7, ௪௯௧: 9.

3. நொச்சியின் இலைக்கு மயிலின் அடி: "மயிலடி யிலைய மாக்குர னொச்சி", "மயிலடி யன்ன மாக்குர னொச்சியும்" (நற். ௧௧௫: 5, ௪௦௫: 2); "நொச்சிப்பா சிலையன்ன பைந்தாண் மஞ்ஞை" (திருவிளை. இந்திரன். 74.)

3-4. நள்ளிரவில் நொச்சிப்பூ உதிர்தல்: "நொச்சி மென்போது வீழு மிருளின்" (கூர்ம. இராமன்வனம். 62.)

3-5. நள்ளிருளில் நொச்சிப்பூ வீழ்தலைக் கேட்டல்: "ஏறிரங் கிருளிடை யிரவினிற் பதம்பெறூஅன், மாறினெ னெனக்கூறி மனங் கொள்ளுந் தானென்ப, கூடுதல் வேட்கையாற் குறிபார்த்துக் குரனொச்சிப், பாடோர்க்குஞ் செவியோடு பைதலேன் யானாக" (கலி. ௪௬: 10-13); "வியலூ ரெயிற்புற நொச்சியி னூழ்மலர் வீழ்தொ றெண்ணி, மயலூர் மனத்தொடு வைகினன் யான்றஞ்சை வாணன்வெற்பர், புயலூ ரிருட்கங் குல் வந்தவ ரேகின்று போயினரென், றயலூர் நகைக்குமென் னேயென்ன பாவங்கொ லாக்கினவே" (தஞ்சை. 201); "நொச்சிப் புதுமலர் வீங் கிருள் வீழ்வன நோக்குதுமே" (தணிகை. களவு. 575.) (௧௩௮)

---

## தோழி கூற்று

[பரத்தையர் வீட்டிற்குச் சென்ற தலைவன் தலைவியிடத்தே மீண்டுவந்த காலத்தில் தோழி, "நீ இங்கே வந்தாற் பரத்தையர் பழி கூறுவார்; ஆதலின் இங்கே வாரற்க" என்று கூறியது.]

௧௩௯. மனையுறை கோழிக் குறுங்காற் பேடை
வேலி வெருகினை மாலை யுற்றெனப்
புகுமிட னறியாது தொகுபுடன்*குழீஇய
பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்
கின்னா திசைக்கு மம்பலொடு
வாரல் வாழிய ரையவெந் தெருவே.

---

(பி - ம்.) * குழீஇப்.

எ - து. வாயில் வேண்டிப் புக்க தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது.

ஒக்கூர் மாசாத்தியார்.

(ப - ரை.) ஐய—, மனை உறை கோழி குறுகால் பேடை - இல்லின்கண் உறைகின்ற கோழியினது குறிய காலையுடைய பேடையானது, வேலி வெருகு இனம் - வேலிக்கு அயலில் உள்ள காட்டுப் பூனையின் கூட்டம், மாலை உற்றெனை - மாலைக்காலத்தில் உற்றதாக, புகும் இடன் அறியாது - அதற்கு அஞ்சிப் பாதுகாப்பாகப் புகுவதற்குரிய இடத்தை அறியாமல், தொகுபு உடன் குழீஇய - சேர்ந்து ஒருங்கே கூடும்பொருட்டு, பைதல் பிள்ளை கிளை - துன்பத்தையுடைய குஞ்சுகளாகிய இனத்தை, பயிர்ந்தாஅங்கு - அழைத்துக் கூவினாற் போல, இன்னாது இசைக்கும் அம்பலொடு - இன்னாததாகிப் பரத்தையரால் கூறப்படும் பழிமொழியோடு, எம் தெரு - எம்முடைய தெருவிற்கு, வாரல் - வருதலை ஒழிவாயாக; வாழியர் - நீ வாழ்வாயாக!

(முடிபு.) ஐய, அம்பலொடு எம் தெரு வாரல்; வாழியர்!

(கருத்து.) எம் தெருவிற்கு வரின் பரத்தையர் பழி கூறுவர்.

(வி - ரை.) காட்டுப் பூனைகள் வேலியின்கண்ணே மறைந்து வாழ்வனவாதலின், "வேலி வெருகினம்" என்றாள்; 'படப்பை வேலியும் புதலும் பற்றி விடக்கிற்கு வேற்றுயிர் கொள்ளும் வெருகு' (தொல். மரபு, 68, உரை) என்று பேராசிரியர் கூறுவது காண்க.

தன்னாற் பாதுகாக்கப்பட்ட பிள்ளையை வெருகு கவருமோ வென்னும் அச்சத்தினால் கோழிப் பேடை கூவியது போலத் தம்பால் இருந்துவந்த தலைவனைத் தலைவி கவர்ந்து தன்பால் இருத்திக்கொள்வாளோ வென்னும் அச்சத்தினால் பரத்தையர் பழிமொழி கூறினரென்று உவமையை விரித்துக் கொள்க.

அம்பல் - தலைவன் பரத்தையரோடு அளவளாவினானென்று ஊரினர் கூறும் பழிமொழி யெனலுமாம்;

"........................நெருநை
ஆடினை யென்ப புனலே யலரே
மறைத்த லொல்லுமோ மகிழ்ந
புதைத்த லொல்லுமோ ஞாயிற்ற தொளியே"

(ஐங். எக : 2-5)

என்பதை யறிக. "இங்ஙனம் ஊரினர் நின்னைப்பற்றிக் கூறும்பழி மொழிகளோடு இங்கேவரின் தலைவி நின்னை ஏற்றுக்கொள்ளாள்; ஆதலின் வாரற்க" என்று தோழி கூறியதாக இப்பொருளுக் கேற்பச் செய்யுட்பொருளை முடித்துக் கொள்க.

தலைவனிடத்துப் பணிந்தொழுகும் நிலையினளாகிய தோழி 'வாரல்' என்று வாயில் மறுத்தாளாதலின் அத்துணிவுக்கு மாற்றாக 'வாழியர்' என வாழ்த்தினாள்.

ஏகாரம், அசைநிலை.

## மேற்கோளாட்சி

1. பிள்ளை யென்னும் இளமைப் பெயர் கிளியின்மேல் வருமென்பதற்குப் பேராசிரியர், "பைதற் பிள்ளைக் கிளிபயிர்ந் தாஅங்கு" என்ற ஓரடியைக் காட்டினர் (தொல். மரபு. 4, உரை); அவ்வடி இவ்வடியின் பாடபேதம் போலும்.

மு. *நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக் காத்த தன்மையிற் கண்ணின்று பெயர்க்குங்கால் தோழிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 9, இளம்.); 'இதனுள் அம்பலொடுவாரலெனவே, பன்னாள் நீத்தமையுங் கண்ணின்று பெயர்த்தமையுங் கூறிற்று. கோழி போலத் தாயர் மகளிரைத் தழீஇக்கொண்டா ரென்றலிற் புறம்போயும் பயமின்றெனக் காத்த தன்மை கூறிற்று' (ஷை. ஷை. ஷை. ந.)

## ஒப்புமைப் பகுதி

1. மனையுறை கோழி: "மனைவாழளகு", "மனையுறை கோழியொடு" (பெரும்பாண். 256, 299); "மனையளகு" (திருவள்ளுவ. 5.)

2. வேலி வேருது: "ஈர்முள் வேலிப் புலவுநாறு முன்றில், எழுதியன்ன கொடிபடு வெருகின், பூளை யன்ன பொங்குமயிர்ப் பிள்ளை" (அகநா. உகஎ: 12-4.)

1-2. வெருது மாலைக்காலத்திற் கோழியைக் கவர்தல்: "குவியடி வெருகின் பைங்க ணேற்றை, ஊனசைப் பிணவி னுயங்குபசி களைஇயர், தளிர்புரை கொடிற்றிற் செறிமயி ரெருத்திற், கதிர்த்த சென்னிக் கவிர்ப்பூ வன்ன, நெற்றிச் சேவ லற்றம் பார்க்கும், புல்லென் மாலையும்" (அகநா. ௩௬௭: 8-12.)

---

* பரத்தையிற் பிரிந்து தலைவியைக் கைவிட்ட தலைவனைத் தானொழுகும் இல்லறத்தே படுத்தல்வேண்டி, புறத்தொழுக்கிற் பயனின்மை கூறிக் காத்த தன்மையினாலே கண்ணோட்டமின்றி நீக்குதல் (ந.)

4. பிள்ளை : குறுந். சக : 5, கஉ : 4.

1-4. வெருகினை யஞ்சி, கோழிப்பேடை ஒலித்தல்: "ஊர்முது வேலிப் பார்நடை வெருகின், இருட்பகை வெரீஇய நாகிளம் பேடை, உயிர்நடுக் குற்றுப் புலாவிட் டரற்ற" (புறநா. நஉசு : 1-3.) (கநகூ)

---

## தலைவி கூற்று

[தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலத்தில் அவனுடைய பிரிவி னால் துன்புற்ற தலைவியை நோக்கி, "நீ ஆற்ருமல் இருக்கின்ருய்" என்று தோழி இரங்கினளாக, "இவ்வூர் இப்பொழுது யான்படுந் துன்பத்தை எங்ஙனம் அறிந்தது?" என்று முன்னிலைப் புறமொழி யாகத் தலைவி கூறியது.]

கசுo. வேதின வெரிநி னோதி முதுபோத்
தாறுசென் மாக்கள் புட்கொளப் பொருந்துஞ்
சுரனே சென்றனர் காதல ருரனழிந்
தீங்கியான் ருங்கிய வெவ்வம்
யாங்கறிந் தன்றிவ் வழுங்க லூரே.

எ - து. பொருள்வயிற் பிரிந்தவிடத்து, நீ ஆற்றுகின்றிலையென்ற தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

அள்ளூர் நன்முல்லை.

(ப - ரை.) காதலர் - தலைவர், வேதினம் வெரிநின் - கருக்கரி வாளைப் போன்ற முதுகையுடைய, ஓதி முது போத்து - முதிய ஆண் ஓந்தியானது, ஆறு செல் மாக்கள் - வழிச்செல்லும் மனிதர்கள், புள் கொள பொருந்தும் - நிமித்தமாகக் கொள்ளும்படி தங்குகின்ற, சுரன் சென்றனர் - பாலைநிலத்திற் சென்றனர்; உரன் அழிந்து - வலிமை யழிந்து, ஈங்கு யான் தாங்கிய எவ்வம் - அவர் பிரிந்த பிறகு இங்கே இருந்து யான் பொறுத்துக்கொண்டுள்ள துன்பத்தை, இ அழுங்கல் ஊர் - இரங்குதலையுடைய இவ்வூர், யாங்கு அறிந்தன்று - எவ்வாறு அறிந்தது?

(முடிபு.) காதலர் சுரன் சென்றனர்; இவ்வூர் யான் தாங்கிய எவ்வம் யாங்கு அறிந்தன்று.

---

(பி - ம்.) * ஆங்கறிந்தன்று.

(கருத்து.) தலைவர் பிரியுங்காலத்து அவரைச் செல்லாதவாறு செய்யாமல் இப்பொழுது என்னை, "நீ ஆற்றுகின்றிலை" என்று கூறிப் பயனில்லை.

(வி - ரை.) ஓந்தியும் நன்னிமித்தம் பார்த்தற்குரியதென்பது "நாவிசிச் சிவி யோந்திதான்....வலமாயின் வழிப்பயணமாகை நன்றும்" (அறப்பளீசுர சதகம்) என்பதனாற் பெறப்படும். புள் - நிமித்தம்; உரன் - மனவலியும், உடல்வலியும். ஊரென்றது தோழியை. தலைவர் பிரிந்த காலத்தில் அவரைச் செல்லாமற் காத்தலின்றி அவர் பிரிவுக்கு உடம்பட்டிருந்து, இப்பொழுது தன் எவ்வத்தை ஆற்றியிருக்க வேண்டுமென்னுங் குறிப்புப்பட உரைத்த தோழியின்பாற் சினங்கொண்டவளாதலின் அவளை வேறுபடுத்து 'ஊர்' என்றாள் (குறள், 1129, பரிமேல்.)

யாங்கு - எவ்வாறு (புறநா. கககக: 2); யாரிடத்தென்றலும் ஒன்று. அழுங்கலூரென்றது காதலர் சென்ற பிறகு அழுங்குவதாற் பயனில்லையென்னும் நினைவிற்று.

## மேற்கோளாட்சி

1. ஓந்தியென்பது ஓதியென இடைக்குறைந்து வந்தது (தொல். எச்ச. 57, சே, ந; யா. வி. 95; நன். 155, மயிலை, 156, சங், வி; இ. வி. 58); ஓதியென்றது குறிப்பாற் பொருளை விளக்குஞ் சொல் (இ. வி. 170.)

மு. * கற்புக்காலத்தும் அலரெழுந்ததென்று கூறுதல் தலைவிக்கு உண்டு (தொல். கற்பு. 19, இளம், 21, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. ஓதி முதுபோத்து: "கானம் வெம்பிய வறங்கூர் கடத்திடை, வேனி லோதி நிறம்பெயர் முதுபோத்து" (நற். கஅசு: 4-5.)

5. யாங்கறிந்தன்று: குறுந். உ0௬: 6; நற். உக: 6.

அழுங்கலூர்: குறுந். கஉ: 6, ஒப்பு; உஎசு: 8, ௩அ௬: 7; கலி. உ௩: 5; அகநா. எ0: 17. (கசு0)

---

* இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் ஊரென்பதற்கு ஊரினரென்றே பொருள் கொண்டனரென்று தெரிகின்றது.

## தலைவி கூற்று

[இராக்காலத்தே வந்து ஒழுகாநின்ற தலைவன் கேட்கும் அண்மையனாக, அவன் வரும் வழியினது ஏதத்தை அஞ்சிய தலைவி தோழியை நோக்கி, 'நீ தலைவரிடம், இனி இரவில் வாரற்க; எம் தாய் எம்மைத் தினைப்புனங்காக்கும்படி கூறியுள்ளாள்; ஆதலின் அங்கே வருக வென்று உணர்த்தின் என்ன குற்றம் உளதாகும்?' என்று கூறியது.]

கசஎக. வளைவாய்ச் சிறுகிளி விளைதினைக் கடீஇயர்
செல்கென் றோளே யன்னை *யெனநீ
சொல்லி †னெவனோ தோழி கொல்லை
நெடுங்கை வன்மான் கடும்பகை யுழந்த
குறுங்கை யிரும்புலிக் ‡கோள்வ லேற்றை
பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கும்
ஆரிரு ணடுநாள் வருதி
சார னாட வாரலோ வெனவே.

எ - து. இற்செறிக்கப்பட்டுழி இரவுக்குறி வந்தொழுகுந் தலைமகற்குவரும் ஏதம் அஞ்சிப் பகற்குறி நேர்ந்த வாய்பாட்டான் §அது[வு] மறுத்துச் சிறைப்புறமாகத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

[அது - அவ்விரவுக் குறி]

மதுரைப் பெருங் கொல்லன்.

(ப - ரை.) தோழி—, சாரல் நாட - மலைப்பக்கத்தையுடைய நாட, கொல்லை - கொல்லையினுள்ள, நெடு கை வல் மான் - நெடிய கையை யுடைய யானையினது, கடுபகை உழந்த - கடிய பகையினால் வருந்திய, குறு கை இரு புலி கோள் வல் ஏற்றை - குறிய கையையுடைய கொல்லுதல் வல்ல பெரிய ஆண் புலியானது, பசு கட் செ நாய் - பசிய கண்ணை யுடைய செந்நாய், படுபதம் பார்க்கும் - அகப்படுகின்ற செவ்வியைப் பார்த்திருக்கும், அரு இருள் நடுநாள் வருதி - வருதற்கரிய இருளை யுடைய நடுயாமத்தில் வருகின்றாய்; வாரல் என - அங்ஙனம் வருதலை ஒழிவாயாக எனவும், வளை வாய் சிறு கிளி - வளைந்த அலகையுடைய

(பி - ம்.) * சேறெனனச். † னெவனோந். ‡ கொலைவ லேற்றை.
§ அதுவுமென்றவும்மை மிகையென்று தோற்றுகின்றது.

சிறிய கிளிகளை, விளை தினை கடீஇயர் - விளைந்த தினையினிடத்துப் படாமற் கடியும்பொருட்டு, அன்னை - நம் தாய், செல்க என்றாள் - செல்வீராக என்றாள், என நீ சொல்லின் எவன் - எனவும் நீ தலைவருக்குக் கூறின்வரும் குற்றம் யாது?

(முடிபு.) தோழி, 'சாரனுட, நடுநாள் வருதி; வாரல்' எனவும், 'அன்னை செல்கென்றோள்' எனவும் சொல்லின் எவன்?

(கருத்து.) தலைவரை இனிப் பகற்குறிக்கண் வரும்படி நீ சொல்லவேண்டும்.

(வி - ரை.) கிளி, விளைந்த தினையின்கண் அதனை உண்ணும் பொருட்டுப் படியும். விளைதினையைக் கொய்து உண்ணும் கருவியுடையதென்பாள், 'வளைவாய்ச் சிறுகிளி' என்றாள். கடீஇயர் - கடியும் பொருட்டு. குறிஞ்சிநில மகளிர் தினைப்புனங் காத்தலும், அப் புனத்திற்படியும் கிளி முதலியவற்றைத் தட்டை, கவண் முதலியவற்றாற் கடிதலும் இயல்பு.

என்றோளே: ஏ, அசைநிலை. எவனோ: ஓ, அசைநிலை. கொல்லை யென்றது இங்கே புனத்தை. குறுங்கை: கை யென்றது முன் கால்களை. படுபதம் - கண் படுக்கும் செவ்வியெனலும் ஆம். நீ வரும் வழி இத்தகைய ஏதமுடைய தென்பாள் புலியின் செயலைக் கூறினாள். வாரலோ: ஓகாரம் அசைநிலை. எனவே: ஏ, ஈற்றசை. 'வாரலோ வெனவும் செல்கென்றோளே யெனவும் சொல்லின்' என்னும் உம்மைகள் தொக்கன.

அன்னை தினைகாக்கும் பொருட்டு எம்மைச் செல்லச் சொன்னாளென்றதன் குறிப்பு, நீ இனி ஈண்டு இரவில் வாராது ஆண்டுப் பகலில் வருக வென்பது.

## மேற்கோளாட்சி

மு. பொழுதும் ஆறும் புரைவதன்மையின் அழிவுதலை வந்த சிந்தைக்கண் தலைவி கூறியது (தொல். களவு. 21, இளம், 20, ந.); தலைமகள் குறிவிலக்குவித்தது (நம்பி. 164; இ. வி. 521.)

## ஒப்புமைப் பகுதி

1. வளைவாய்ச் சிறுகிளி: (குறுந். ௬௭: 1-2, ஒப்பு.); "வளைவாய்க் கிளி" (ஐந். எழு. 13.)

3. சொல்லி னெவனோ : ஐங். ௩௧௧ : 3.

5, மு. நற். ௩௬ : 1 ; ஐங். உ௧௬ : 1.

துறுங்கை யிரும்புலி : "குறுக்கை யிரும்புலி பொரூஉ நாட" (ஐங். உ௬௬ : 2.)

புலிக் கோள்வ லேற்றை : "கோள்வல் புலியதனும்" (திணை மாலை. 22.)

கோள்வ லேற்றை : அகநா. ௧எ௧ : 9.

4-5. களிறு புலியோடு பொருதல் . குறுந். ௮௮ : 2-3, ஒப்பு. (கசக)

---

## தலைவன் கூற்று

[தலைவியைப் பாலவயத்தனுகிக் கண்டு அளவளாவி நீங்குந் தலைவன், "என் உள்ளம் தலைவியினிடத்தே உள்ளது ; இதனை அவள் அறிந்தனளோ, இலளோ!" எனக் கூறியது.]

கசஉ. சுனைப்பூக் குற்றுத் தொடலை தைஇப்
புனக்கிளி கடியும் பூங்கட் பேதை
* தானறிந் தனளோ விலளோ பானாட்
பள்ளி யானையி னுயிர்த்தென்
உள்ளம் † பின்னுந் தன்னுழை யதுவே.

எ - து. (1) இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் சொல்லியது.

(2) தோழிக்குத் தலைமகன், தன்குறை கூறியதூஉமாம்.

கபிலர்.

(ப - ரை.) பால் நாள் பள்ளி யானையின் உயிர்த்து - நடுயாமத்துப் படுத்துத் துயிலுதலையுடைய யானையைப் போலப் பெருமூச்சு விட்டுக்கொண்டு, என் உள்ளம் - எனது நெஞ்சம், பின்னும் - நான் தலைவியைப் பிரிந்து வந்த பின்னரும், தன் உழையது - அவளிடத்திலே இருக்கின்றது ; சுனை பூ குற்று - சுனையில் மலர்ந்த மலர்களைப் பறித்து, தொடலை தைஇ - மாலையைக் கட்டி, புனம் கிளி கடியும் -

(பி - ம்.) * தானறிந்தன்றே விலளே. † பின்னுத்தன் னுழை.

தினைப்புனத்திற் கதிரை உண்ணும் பொருட்டு வீழும் கிளிகளை ஓட்டு கின்ற, பூ கண் பேதை - பூவைப் போன்ற கண்ணையுடைய பேதை யாகிய அத்தலைவி, அறிந்தனளோ இலளோ - இதனை அறிந்தாளோ, இல்லையோ!

(முடிபு.) என் உள்ளம் தன்னுழையது; பேதை அறிந்த னளோ இலளோ!

(கருத்து.) என் உள்ளம் தலைவியின்பால் உள்ளது.

(வி - ரை.) குற்று - பறித்து. தொடலை - தொடுக்கப்படும் மாலை. முதலிற் குறிப்பு நோக்கால் இன்புறுத்தினமையை நினைந்து, 'பூங்கட் பேதை' என்றான். தனது நெஞ்சம் அவளிடத்தே பொருந்தியிருப்பதை அறியாமையின் பேதை யென்றான்.

தான் அறிந்தனளோ இலளோ என்ற ஓகாரங்கள் ஐயப் பொருளன; "யான்கண் டனனோ விலனோ" (குறுந். ௯௧: 4) என்று இந்நூலுட் பின்வருவதுங் காண்க. பால்நாள் - நடு இரவு. உள்ளத்துக்கு உயிர்த்தல் முதலியன இல்லையாயினும், உறுப்புடை யதுபோல் உணர்வுடையதுபோல், மறுத்துரைப்பதுபோல் நெஞ் சொடு புணர்த்து உரைக்கும் மரபுபற்றிக் கூறப்பட்டன. தான் தலை வியின் பிரிவாற்றாமையால் உயிர்ப்பதையே இலக்கணவகையால் நெஞ்சின்மேல் ஏற்றிக்கூறினான்.

பின்னுமென்றது தான் தலைவியோடு அளவளாவுவதற்கு முன் னும் அவளைக் கண்டமாத்திரத்தே தன் நெஞ்சம் அவள்பாற் சென்ற தென்பதைக் குறித்து நின்றது.

'பின்னுத்தன் னுழையதுவே' என்ற பாடத்திற்குத் தலைவியின் பின்னலினிடத்ததென்று பொருள் கொள்க;

"கன்றுபுகு மாலை நின்றோ ளெய்திக்
கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்
பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே"

(அகநா. ௯ : 20-26)

என்பதைக் காண்க.

தோழிக்குத் தலைமகன் தன்குறை கூறியதாக இச் செய்யுளைக் கொள்ளுங்கால், 'ஆதலின் என் உள்ளம் விரும்பியதை யான் பெறு வேணுக' என்ற எச்சத்தைப் பெய்து பொருளுரைக்க.

## ஒப்புமைப் பகுதி

1. மகளிர் பூக்குறுதல்: (குறுந். கசச: 1, கஎஅ : 3); "பூக்குற் றெய்திய" (ஐங். உரு : 2); "சுனைப்பூக் குற்றுஞ் சுள்ளி சூடியும்" (பெருங். உ. 12 : 129.)

தொடலை தைஇ : அகநா. கoஒ : 2.

1. மு. நற். கஎரு : 1.

3. பானாள் : குறுந். கூச : 3, ஒப்பு.

4. பள்ளியானையின் உயிர்த்தல் : "பள்ளி யானையி னுயிரா வசைஇ" (குறுந். ருஒக : 4); * "பள்ளி யானையின் வெய்ய வுயிரினை" (நற். உ.ஒரு : 2.)

பள்ளியானை : அகநா. ருoஉ : 3.

தலைவனுக்கு யானை உவமை : அகநா. சு : 9. (கசஉ)

---

## தோழி கூற்று

[தலைவன் வரை பொருட்காகப் பிரிந்தவிடத்து வருந்திய தலைவியை நோக்கி, "தலைவர் நம்முடைய வருத்தத்தை யறிந்து இரங்கும் தன்மையுடையவர்; ஆதலின் அவர் விரைவில் வருவர்; நின் மேனிப் பசப்பு அவர் வரவால் நீங்கிவிடும்" என்று தோழி கூறியது.]

கசங. அழிய லாயிழை†யழிபுபெரி துடையன்
பழியு மஞ்சும் பயமலை நாடன்
நில்லா மையே நிலையிற் றாகலின்
நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற்
கடப்பாட் டாள னுடைப்பொருள் போலத்
தங்குதற் குரிய தன்றுநின்
அங்கலுழ் மேனிப் ‡பாய பசப்பே.

---

* கபிலர் பாட்டு. (பி - ம்.) † யன்பு, யிழிபு. ‡ பாஅய.

எ-து. வரைவிடை வைத்துப் பிரிந்தவிடத்துத் தலைமகட்குத் தோழி கூறியது.

மதுரைக் கணக்காயன் மகன் நக்கீரன்.

(ப - ரை.) ஆய் இழை - தெரிந்து அணிந்த அணிகலங்களை யுடையாய், பயம் மலை நாடன் - பயனையுடைய மலைநாட்டுக்குத் தலைவன், அழிபு பெரிது உடையன் - நம்மைப்போல இரங்குதலை மிக உடையன்; நில்லாமையே நிலையிற்று ஆகலின் - நில்லாது அழியும் தன்மையே இவ் வுலகத்தில் நிலைபெற்றதாதலின், நல் இசை வேட்ட - நிலைபெறுதலையுடைய நல்ல புகழை விரும்பிய, கடப்பாட்டாளன் உடை பொருள் போல - ஒப்புரவாளன் பெற்ற செல்வத்தைப்போல, நின் அம் கலுழ் மேனி - நினது அழகு ஒழுகும் மேனியின்கண், பாய பசப்பு - பரவிய பசலை, தங்குதற்கு உரியதன்று - தங்குவதற்கு உரிமையுடையதன்று; ஆதலின், அழியல் - நீ வருந்தாதே.

(முடிபு.) ஆயிழை, நாடன் அழிபு பெரிதுடையன்; பழியும் அஞ்சும்; நின் மேனிப்பாய பசப்பு தங்குதற்குரியதன்று.

(கருத்து.) தலைவன் நம்பால் இரங்கி விரைவில் வந்து வரைந்து கொள்வான்.

(வி - ரை.) "தலைவர் யான் ஈண்டிருந்து இரங்கும்படி பிரிந்து சென்றனர்; என்பால் இரக்கமில்லார்; ஊரினர் கூறும் பழிமொழியையும் அஞ்சினாரல்லர். அவருடைய பிரிவினால் என் மேனியழகு கெடப் பசலைபரந்தது" என்று கூறி வருந்திய தலைவியை நோக்கித் தோழி சொல்லியது இது.

அழிபு - வருத்தம். 'நீ தலைவரைப் பிரிந்து இரங்குதலைப் போலவே அவரும் நின்னைப் பிரிந்தமையால் இரங்குவர்' என்பாள் அழிபுபெரிதுடையனென்றாள். ஒரு பெண்ணை வருந்தச் செய்தாரென்னும் பழியையும் அஞ்சவாரென்பதுபடப் பழியுமஞ்சுமென்றாள்; "ஒழித்தது பழித்த நெஞ்சமொடு வழிப்படர்ந்து" (அகநா. ௩௯ : 1) என்றவிடத்து ஒழித்த தென்பதனை 'ஸ்திரீ விஸநம் பண்ணலாகாதென்று முன்னோர் கழித்தது' என்று அதன் உரையாசிரியர் உரைத்தனர்; ஈண்டுப் பழியென்று கூறப்பட்டதும் அதுவே; 'ஒரு மகள்பால் நட்புப்பூண்டு நெடுநாள்வரையா தொழுகுகின்றான்' என்னும் பழியென்பதும் பொருந்தும்.

உலகத்திலுள்ள பொருள்கள் நிலையற்றவை; புகழ் ஒன்றே நிலையுடையதாதலின் அதனைக் கடப்பாட்டாளர் விரும்புவர்;

"ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
பொன்றாது நிற்பதொன் றில்" (குறள், 233)

என்னும் பொதுமறையைக் கருதுக.

கல்வி, ஆண்மை, ஈகை முதலியவற்றால் உண்டாகும் இசைவகைகளுள் ஈகையால் வருவது சிறந்ததாதலின் அதனை நல்லிசை யென்று சிறப்பித்தாள்;

"ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு" (குறள், 231)

என்பதன் உரையில் பரிமேலழகர்,

'இசைபட வாழ்தற்குக் கல்வி ஆண்மை முதலிய பிறகாரணங்களும் உளவேனும், உணவின் பிண்ட மூண்டி முதற்றாகலின், ஈதல் சிறந்ததென்பதற்கு ஞாபகமாக ஈதலென்றார்'

என்றெழுதிய பகுதியினால் இதனை உணரலாகும். நயனுடை நெஞ்சு - ஈயும்போது அன்போடு கொடுக்கும் நெஞ்சம்;

"முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானாம்
இன்சொ லினதே யறம்" (குறள், 93

என்பது காண்க; நயன் - அன்பு.

"நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்
தில்லோர் புன்கண் டீர நல்கும்
நாடல் சான்ற நயனுடை நெஞ்சிற்
பாடுநர் புரவலன்" (பதிற். அரு : 5-8)

என்பதிலும் நயனுடை நெஞ்சு கூறப்பட்டிருத்தல் காண்க.

கடப்பாடு - ஒப்புரவு (தொல். கற்பு. 10, ந.)

தாம்பெற்ற பொருளைப் பிறருக்கு ஈந்து புகழ்படைக்க விரும்புவோன் இரப்போர்க்கு முற்றும் வழங்கிவிடுதலின், அப்பொருள் அவனை நீங்குதல்போலப் பசலை நின்னைவிட்டு நீங்குமென்றாள்;

"* நிலையிலா வுலகி னின்றவண் புகழை
வேட்டவ னிதியமே போன்றும்

---

* 'புகழை விரும்பினவன் கையிற் பொருள் போமாறு போலேயும்' என்று உரையெழுதினர் நச்சினார்க்கினியர்.

...... ...... ...... ......
உலைவிலார் நில்லா தொருபக லுள்ளே
யுருப்பவிர் வெஞ்சுரங் கடந்தார்" (சீவக. 2107)

என்று பிறரும் இக் கருத்தை உவமையாக ஆளுதல் காண்க.

'நின் பசப்புத் தங்குதற்குரியதன்று' என்றதனால் போவதற் குரிய தென்பது பெறப்படும்; தலைவனைப் பிரிந்த காலத்தில் தலைவிக் குப் பசலை உண்டாவதும், அவனோடு பொருந்திய காலத்தில் அது நீங்குவதும் மரபு; இதனை இந்நூல் நகூகூ-ஆம் செய்யுளால் நன்குண ரலாகும். பசலை நீங்குமென்று தோழி கூறியது, அந் நீக்கத் திற்குக் காரணமாகிய தலைவர் வரவு உண்டாகுமென்னும் கருத்தை நினைந்தே.

அம் கலுழ்மேனி யென்றது பசலை பரவாது இயல்பான அழ குடன் நின்ற மேனியை; அழகுதான் தங்குதற்குரியது, அதனை மறைக்கும் பசலை தங்குதற்குரியதன்றென்பதை இவ்வடையினால் உணர வைத்தாள்.

பசப்பு - பசலை. ஏகாரம், அசைநிலை.

## மேற்கோளாட்சி

மு. தோழி தலைமகளை ஆற்றுவித்தது (தொல். களவு. 24, இளம்.); தோழி இயற்பட மொழிந்து தலைவியை வற்புறுத்தியது (ஷை. ஷை. 23. ந.)

## ஒப்புமைப் பகுதி

1. பி - ம். தலைவன் அன்புடையன்: குறுந். நஎ: 1, உகந: 1.

2. தலைவன் பழி யஞ்சுதல்: குறுந். உ௬உ: 8.

பயமலை: மணி. கஎ: 50; பெருங். உ. 18: 3.

பயமலை நாடன்: கலி. சந: 6.

3 - 4. உலகின் நிலையாமையும் புகழின் நிலைபேறும்: "நில்லா வுலகத்து நிலைமை" (பொருந. 176, பெரும்பாண். 466); "மன்னா வுல கத்து மன்னுதல் குறித்தோர், தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே" (புறநா. கசுரு: 1 - 2); "மன்னா வுலகத்து மன்னிய சீர்த்தஞ்சை வாணன்" (தஞ்சை. 21.)

புகழின் நிலைபேறு : மலைபடு. 70, அடிக்.

7. அங்கலுழ்மேனி : "அங்கலி ழாகம்", "அங்கலிழ் மேனி" (ஐங். ௧0௬ : 4, ௧௭௪ : 4) ; "அங்கலுழ் மாமை" (அகநா. ௪௧ : 15, ௬௬ : 12) ; "அங்கலுழ் மேனியாய்" (சீவக. 1988.) (௧௪௩)

---

## செவிலித்தாய் கூற்று

[தலைவி தலைவனுடன் போனாளாக, அவளைப் பிரிந்த செவிலித் தாய், "ஆயமகளிரோடு பிரிவின்றி விளையாடும் என் மகள் இப் பொழுது பாலைநிலத்திலே பரல் தன் அடிகளை வருத்தா நிற்க எம் மைப் பிரிந்து சென்றனள்" என்று கூறி வருந்தியது.]

கசுச. கழிய காவி குற்றுங் கடல
வெண்டலைப் புணரி யாடியு நன்றே
பிரிவி லாய முரியதொன் றயர
* இவ்வழிப் படுதலு மொல்லா ளவ்வழிப்
† பரல்பாழ் படுப்பச் சென்றனண் மாதோ
‡ சென்மழை தவழுஞ் சென்னி
விண்ணுயர் பிறங்கல் விலங்குமலை நாட்டே.

எ - து. மகட்போக்கிய செவிலித்தாய் சொல்லியது.

¶ மதுரை ஆசிரியன் கோடங்கொற்றன்.

(ப - ரை.) *கழிய காவி குற்றும்* - கழியினிடத்து மலர்ந்த காவிமலர்களைப் பறித்தும், *கடல வெள் தலை புணரி ஆடியும்* - கடலி லுள்ள வெள்ளிய தலையையுடைய அலையின்கண் விளையாடியும், *நன்று* - மிக, *பிரிவு இல் ஆயம்* - தன்னோடு என்றும் பிரிதலில்லாத ஆயத்தார், *உரியது ஒன்று அயர* - தத்தமக்கு உரிய விளையாட்டைப் புரிய, *இ வழி படுதலும் ஒல்லாள்* - இவ்விடத்துப் பொருந்துதலுக் கும் உடம்படாளாகி, *செல் மழை தவழும் சென்னி* - விரைந்து செல் லும் மேகங்கள் தவழ்கின்ற உச்சியையுடைய, *விண் உயர் பிறங்கல்* - வானத்தளவும் உயர்ந்த விளக்கத்தையுடைய, *விலங்குமலை நாட்டு* - குறுக்கிடும் மலைகளையுடைய நாட்டில், *அ வழி* - அப்பாலைநிலத்தில்,

---

(பி - ம்.) * இல்வழி. † பரல் பாறபடுப்ப, பால் பரற்படுப்ப. ‡ சேண் மழை. ¶ மதுரை நூலாசிரியன், மதுரைப் பாலாசிரியன்.

பரல் பாழ்படுப்ப - பருக்கைக்கற்கள் தன் அடியின் அழகைச் சிதைக்கும் வண்ணம், சென்றனள் - தலைவி போயினள்.

(முடிபு.) ஆயம் அயர இவ்வழிப்படுதலும் ஒல்லாள், விலங்கு மலைநாட்டில் அவ்வழிச் சென்றனள்.

(கருத்து.) தலைவி நம்மைப் பிரிந்து தலைவனுடன் சென்றனள்.

(வி - ரை.) பிரிவில் ஆயமென்றாள் அதனையும் பிரிந்தன ளென்று நினைந்து. உரியதொன்று அயர - தலைவிக்கு உரியதொரு செயலைப்புரிய என்றலுமாம்.

பால் பரற்படுப்ப வென்ற பாடத்திற்கு ஊழ்வினை தன்னைப் பாலைநிலத்துப் பருக்கைக்கற்களினிடையே செல்லும்படி செய்ய வென்று பொருள் கொள்க. மாது, ஓ: அசைநிலைகள்.

செல்மழை - இடியையுடைய மேகமெனலும் ஒன்று. விண்ணளவும் உயர்ந்ததாகலின், விரைவாகச்செல்லும் மேகம் அம்மலையினால் தடையுற்றுத் தவழ்ந்தேறியது. பிறங்கல் - விளக்கம்; 'பிறங்குகல், பிறங்கலெனை விகாரம்; வழியுயர்ச்சியுமாம்' (அ: 13, உரை) என்பர் அகநானூற்றுரையாசிரியர்.

பரல் பாழ்படுப்பச் சென்றனளென்றது தலைவியின் மென்மைத் தன்மைக்கு இரங்கியவாறு.

## ஒப்புமைப் பகுதி

1. கழிப்பூக் குறுதல்: "கழிப்பூக் குற்றும்" (அகநா. ௩௩௦: 1.) மகளிர் பூக்குறுதல்: குறுந். ௧௪௨: 1, ஒப்பு.

2. மகளிர் கடலாடுதல்: "வெண்டலைப் புணரி யாயமொ டாடி", "தொடலை யாயமொடு கடலுட னாடியும்", "திரையுழந் தசைஇய நிரைவளை யாயம்" (அகநா. ௨௦: 8, ௧௪௦: 6, ௧௯௦: 1.)

வெண்டலைப் புணரி: அகநா. ௨௦: 8; புறநா. ௨: 10, ௯௯: 18.

5. பரல் பாழ்படுத்தல்: "பரற்பகை யுழந்த நோயொடு சிவணி" (பொருந. 44); "பாத்தி யன்ன குடுமிக் கூர்ங்கல், விரனுதி சிதைக்கு நிரைநிலை யதர, பரன்முரம் பாகிய பயமில் கானம்" (அகநா. ௫: 13 - 5.)

6. விண்ணுயர்பிறங்கல் மலை: "வானுயர் பிறங்கன்மலை" (குறுந். ௨௮௯: 8.)

விலங்கு மலைநாடு: குறுந். ௧௩௪: 7. (௧௪௪)

## தலைவி கூற்று

[தலைவன் வரைபொருட்குப் பிரிந்து நீட்டிப்ப அதனால் துன்ப முற்ற தலைவி தோழியை நோக்கி, "என் துன்பத்தை அறியாமல் துயிலுகின்ற மாக்களையுடைமையால் இச்சிறுகுடி எனக்கு உறைபதி யன்று" எனக்கூறித் தன் ஆற்றாமையைப் புலப்படுத்தியது.]

**கசரு. உறைபதி யன்றித் துறைகெழு சிறுகுடி**
**கானலஞ் சேர்ப்பன் கொடுமை யெற்றி**
**ஆனாத் துயரமொடு வருந்திப் பானாட்**
**டுஞ்சா துறைநரொ டுசாவாத்**
**துயிற்கண் மாக்களொடு நெட்டிரா வுடைத்தே.**

எ - து. வரைவிடை ஆற்றாது தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

கொல்லனழிசி.

(ப - ரை.) இ துறைகெழு சிறுகுடி - கடற்றுறை பொருந்திய இந்தச் சிற்றூர், கானல் அம் சேர்ப்பன் - கடற்கரைச் சோலையை யுடைய சேர்ப்பனது, கொடுமை எற்றி - கொடுமையை நினைந்து, ஆனா துயரமொடு - மிகுகின்ற துன்பத்தோடு, வருந்தி - துயர முற்று, பானாள் - நடுயாமத்தில், துஞ்சாது உறைநரொடு - துயிலா மல் தங்குவாரை, உசாவா - ஏனென்று வினவாத, துயில் கண் மாக்க ளொடு - துயிலுதல் பொருந்திய கண்களையுடைய அறிவற்ற மக்க ளோடு, நெடு இரா உடைத்து - நெடிய இரவை உடையது; ஆதலின், உறை பதி அன்று - இது நாம் தங்கி யிருத்தற்குரிய ஊர் அன்று.

(முடிபு.) இச்சிறுகுடி துயிற்கண் மாக்களொடு நெட்டிரா வுடைத்து; உறைபதியன்று.

(கருத்து.) தலைவர் இல்லாமையால் இவ்வூர் நமக்கு இனி உறையும்பதி அன்று.

(வி - ரை.) "புல்வேய் குரம்பை, ஊரென வுணராச் சிறுமை" (அகநா. உ00 : 2 - 3) யுடைத்தாதலின் சிறுகுடி யென்றாள். கொடுமை - பிரிவின்கண் நீட்டித்தல்; (குறள், 1169, பரிமேல்.) எற்றி - நினைந்து; (தொல். உரி. 39.) துஞ்சாதுறைநரென்று தலைவி தன்னையே பிறர் போலக் கூறினாள்; (குறள், 1154, பரிமேல்.) உறைநரொடு :

உருபுமயக்கம். உசாவாவென்றது உசர்வித்தன் துயர் நீங்குதற்கு ஆவனவற்றைச் செய்யாத என்பதாம். தோழி மறை வெளிப்படுத்துக்கொண்டு மேல் அறத்தொடு நிற்றற் பொருட்டுத் தலைவி கூறுவன கேட்டற்குப் பொய்த்துயில் கொள்வாளாதலின் 'துயிற்கண்மாக்கள்' என்றாள். மாக்களென்றது இங்கே தோழியை; தன் ஆற்றாமை அறியும் வன்மையில்லாமைபற்றி இங்ஙனம் கூறினாள். கணவனைப் பிரிந்தார்க்கு இராப்பொழுது பண்டையினெடியதாகத் தோற்றுதல் இயல்பாதலின் நெட்டிரா வென்றாள்; "ஊழியிற் பெரிதாலுழிகை யென்னும்" (திவ். பெரிய திரு. உ. 7 : 4.) ஏகாரம் : அசைநிலை.

## மேற்கோளாட்சி

2. எற்று என்னும் சொல் நினைவென்னும் பொருளில் வரும் (தொல். உரி. 41, சே, தெய்வச், 39, ந ; இ - வி. 282.)

மு. தலைவனோடு தன்திறத்து ஒருவரும் ஒன்று உரையாத வழித் தனது ஆற்றாமையால் தன்னோடும் அவனோடும் பட்டன சில மாற்றம் தலைவி தானே கூறுதலும் உள (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப்பகுதி

2. தலைவன் கொடுமை : குறுந். ௯ : 7, ஒப்பு ; அகநா. ௩௯அ : 7 ; குறள், 1169.

3. தலைவி துஞ்சாமை : குறுந். ௬ : 4, ஒப்பு.

5. மாக்கள் : குறுந். ௬ : 2, ஒப்பு.

நெட்டிரா : "கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நாள், நெடிய கழியு மிரா" குறள், 1169.

4-5. தலைவி துஞ்சாமையும் பிறர் துயிலலும் : குறுந். ௬ : 1-2, ஒப்பு. (௧௪௫)

---

## தோழி கூற்று

[தலைவன் சான்றோரைத் தலைவியின் தமர்பால் மணம்பேசிவர விடுப்ப, தன்தமர் மறுப்பாரோ என்று அஞ்சிய தலைவியைநோக்கி "தலைவன் வரைவை நமர் ஏற்றுக்கொண்டனர்; நீ கவலை ஒழிவாயாக" என்று தோழி கூறியது.]

கசச௬. அம்ம வாழி தோழி நம்மூர்ப்
பிரிந்தோர்ப் * புணர்ப்போ ரிருந்தனர் கொல்லோ
தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர்
நன்றுநன் றென்னு மாக்களோ
டின்றுபெரி தென்னு மாங்கண தவையே.

எ - து. தலைமகன்தமர் வரைவோடு வந்து சொல்லாடுகின்றுழி வரைவுமறுப்பவோ எனக்கவன்ற தலைமகட்குத் தோழி சொல்லியது.

[தலைமகள் தமர் வரைவு மறுத்தல் : இறை. 29, உரை.]

வெள்ளிவீதியார்.

(ப - ரை.) தோழி—, அம்ம - கேட்பாயாக : ஆங்கணது அவை - அவ்விடத்திலுள்ளதாகிய நம்மைச் சார்ந்த குழுவிலுள்ளார், தண்டுடை கையர் - தண்டைப்பிடித்த கையினரும், வெள் தலை சிதவலர் - நரையையுடைய தலைக்கண் துகிலையுடையவருமாகிய, நன்று நன்று என்னும் மாக்களோடு - நன்று நன்று என்று கூறும் தலைவன் தமரோடு, இன்று பெரிது என்னும் - இந்நாள் நீங்கள் வரப்பெற்றமையால் பெருமையுடையதென்று முகமன் கூறுவர்; ஆதலின், நம் ஊர் - நமது ஊரின்கண், பிரிந்தோர் புணர்ப்போர் இருந்தனர் - பிரிந்தவர்களைச் சேர்த்துவைப்போர் இருந்தனர்.

(முடிபு.) அவை மாக்களோடு இன்று பெரிதென்னும்; பிரிந்தோர்ப் புணர்ப்போர் இருந்தனர்.

(கருத்து.) தலைவன் வரைவை நமர் ஏற்றுக்கொண்டனர்.

(வி - ரை.) வாழி : அசைநிலை. பிரிந்திருக்கும் தலைவியும் தலைவனும் வரைவினால் ஒன்றுபடுவாராதலின் அதற்குடம்பட்டோரை, 'பிரிந்தோர்ப் புணர்ப்போர்' என்றாள். தண்டுடைக்கையர் வெண்டலைச் சிதவலரென்றது, தலைவன் விடுத்த சான்றோரது முதுமைப் பருவத்தை விளக்கிநின்றது; பெரியோரை மணம் பேசவிடுத்தல் மரபு; "கற்றார் மற்றுங் கட்டுரை வல்லார் கவியென்னும், நற்றேர் வல்லார் நால்வரை விட்டாற் கவர்சென்றார்" (சீவக. 1054.) சிதவல் - சிதறிய துணி; "சிதவற் றுணியொடு" (மணி. ௩ : 106); இங்கே தலையிலணியும் துகிலுக்கு ஆயிற்று. அவையென்றது தந்தையையும்

(பி - ம்.) * புணர்ப்பவர்.

தன்னையரையும்; 'தலைமகன் பார்ப்பாரை முன்னிட்டு அருங்கலங்க ளோடு வரைவு வேண்டி விட்ட விடத்துத் தந்தையுந் தன்னையரும் மறுத்தார்' (இறை. 28, உரை); இந்த அவை மன்றென்றும் கூறப் படும் (குறள், 1138.)

கொல், ஓ, ஏ : அசை நிலைகள்.

## மேற்கோளாட்சி

மு. தயா வரைவு மறுப்பரோவெனக் கவன்றாட்குத் தோழி கூறி யது (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அம்மவாழி தோழி : குறுந். எஎ : 1. ஒப்பு.

2. பிரிந்தோர்ப் புணர்ப்போர் : "பிரிந்தோர்ப் புணர்க்கும் பண் பின்." (குறுந். கஙகூ : 6.)

3. தண்டுடைக் கையர் : "தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக் குற்; றிருமிடை மிடைந்த சிலசொற், பெருமூ தாளரேம்" (புறநா. உசங : 12-4.)

5. ஆங்கண்: மதுரைக். 327; குறிஞ்சிப். 4, 192; மலைபடு. 350, 438.

அவை : "மன்றங் கறங்க மணப்பறை யாயின" (நாலடி. 23.)

3 - 5. நரைமுதாளர் மன்றத்திருத்தல் : "கொழுங்குடி போகிய பெரும்பாழ் மன்றத்து, நரைமூ தாளர்" (அகநா. ருஎஎ : 6 - 7); "பாழ் படு பொதியில், நரைமூ தாளர்" (புறநா. ௫உ : 13 - 4.) (கசசு)

---

## தலைவன் கூற்று

[தலைவன் தலைவியைப் பிரிந்து சென்ற இடத்துத் துயிலும் பொழுது அவளைக் கனவிற் கண்டு பிரிவாற்றாமற் சொல்லியது.]

கசஎ. வேனிற் பாதிரிக் கூன்மல ரன்ன
* மயிரேர் பொழுகிய வங்கலுழ் மாமை
நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல

(பி - ம்.) * மயிரோ வொழுகிய.

இன்றுயி லெடுப்புதி கனவே
எள்ளா ரம்ம துணைப்பிரிந் தோரே.

எ - து. தலைமகன் பிரிந்தவிடத்துக் கனக்கண்டு சொல்லியது.

[தலைவன் பிரிவின்கண் கனவிற் றலைவியைக் காண்டல்: தொல். பொருளியல், 3; ஐங். ௩உச.]

கோப்பெருஞ் சோழன்.

(ப - ரை.) கனவே —, வேனில் பாதிரி கூன் மலர் அன்ன - வேனிற்காலத்தில் மலரும் பாதிரியினது வளைந்த மலரினது துய்யைப் போன்ற, மயிர் ஏர்பு ஒழுகிய அம் கலுழ் மாமை - மயிர் எழுந்து படர்ந்த அழகு ஒழுகும் மாமையையும், நுண்பூண் - நுண்ணிய தொழிலையுடைய ஆபரணத்தையும் உடைய, மடந்தையை - தலைவியை, தந்தோய்போல - கொணர்ந்து கொடுத்தாயைப்போல, இன் துயில் எடுப்புதி-இனிய துயிலினின்றும் எழுப்புகின்றாய்; துணை பிரிந்தோர் - தம் துணைவியரைப் பிரிந்தோர், எள்ளார் - நின்னை இகழார்.

(முடிபு.) கனவே, இன்றுயில் எடுப்புதி; துணைப்பிரிந்தோர் எள்ளார்.

(கருத்து.) தலைவியைக் கொணர்ந்து காட்டிய கனவிற்கு யாது கைம்மாறு செய்வேன்!

(வி - ரை.) பாதிரி வேனிற்பருவத்தே மலர்வதென்பது, 'வேனிற்கட் பாதிரி' (நன். 300, மயிலை.) எனவும், 'வேனிற்கட் பூத்தது பாதிரி' (ஷை. 301, சங்.) எனவும் காட்டப்பெற்ற உதாரணங்களால் விளங்கும். பாதிரியின் மலர் வளைந்திருப்பதாதலின் கூன் மலரென்றான்; "பைங்கூற் பாதிரிப் போது" (பெருங். க. 42 : 204) என்பது காண்க. மலர் : ஆகுபெயர். பாதிரிமலரிலுள்ள துய் மயிரென்றும் வழங்கும்; "பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்" (நற். ௩௩எ : 4.) பாதிரி மலரின் துய் தலைவியின் வயிற்றினிடத்தேயுள்ள மயிரொழுங்கிற்கு உவமை; "எய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற், றைதுமயி ரொழுகிய தோற்றம்" (பொருந. 6-7) என்று வருணிக்கப்படுதல் காண்க. நுண்பூணென்றது, "நூலாக் கலிங்கம்" (பதிற் கஉ: 21) என்பதுபோலப் பூணின் சினையாகிய சிற்பத்தின் அடை சினையோடு முதற்கு உள்ள ஒற்றுமைபற்றி முதல்மேலேற்றிக் கூறப்பட்டது. மடந்தையென்றது பருவங் குறியாது தலைவியென்னும் மாத்திரையாய் நின்றது. பிரிந்த தலைவர் தம்

தலைவியரைக் கனவிற் காண்டல்,

"பிரியாப் பெருக்கத்துப் பிரச்சோ தனன்மகள்
... ... ... ...
நனவிற் போலக் காதலன் முகத்தே
கனவிற் றேன்ற" (ரு. 9 : 151-7)

என்னும் பெருங்கதைப் பகுதியாலும் விளங்கும். எடுப்புதல் - எழுப்புதல்; "துயிலெடை நிலை" (தொல். புறத். 36.) கனவே: விளி. பிரிந்தோரே: ஏ, அசைநிலை.

கனவு, உண்மையில் தலைவியைத் தந்திலதாதலின் தந்தோய் போலவென்றான். தலைவியைப் பிரிந்தமையால் துன்புற்றுத் துயிலா மையே பெரும்பாலும் உடையான் அரிதிற்பெற்ற துயிலாதலின் இன் றுயிலென்றான். துயிலுங்கால் தலைவியைக் கனவிற்கண்டு பொருக் கென விழித்தவனாதலின் அங்ஙனம் துயிலினின்றும் எழுதற்குக் கனவைக் காரணமென்றான். இனிய துயிலை நீப்பதற்குக் காரண மாகி எள்ளுதற்குரியதாயினும் அதனினும் இனிய தலைவியின் தோற் றத்தைத் தந்ததாதலின் எள்ளாரம்மவென்றான். எள்ளாரென்றது புகழ்வாரென்றபடி. துணைப்பிரிந்தோ ரென்றமையின் தலைவன் தலைவி ஆகிய இருவர்க்கும் இந்நிலை பொதுவென்று கொள்க.

## ஒப்புமைப் பகுதி

1. **வேனிற் பாதிரி மலர்:** "காய்சினந் திருகிய கடுந்திறல் வேனிற், பாசிலை யொழித்த பராரைப் பாதிரி, வள்ளிதழ் மாமலர்" (பெரும்பாண். 3-5); "செங்க ணிருங்குயில், புகன்றெதி ராலும் பூமலி காலையும்.........................துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி, வாலித ழலரி வண்டுபட வேந்திப், புதுமலர் தெருவுதொறு நுவலும்", "முதிரா வேனி லெதிரிய வதிரல், பராரைப் பாதிரிக் குறுமயிர் மாமலர்" (நற். கக அ : 9, ௩௩எ : 3-4); "புன்காற் பாதிரி யரிநிறத் திரள்வீ, நுண்கொடி யதிரலொடு நுணங்கறல் வரிப்ப.................. குயில்குரல் கற்ற வேனிலும்", "கானப் பாதிரிக் கருந்தகட் டொள்வீ, வேன லதிரலொடு விரைஇ" (அகநா. ௨௩எ : 1-5, ௨௬க : 1-2.)

**பாதிரிக் கூன்மலர்:** "வேனிற் பாதிரிக் கூனி மாமலர்" (அகநா. ௨௫எ : 1.)

2. **அங்கலுழ் மாமை:** அகநா. சக : 15, கக : 12.

**மயிரோர்பு ஒழுகியமாமை:** "மடந்தை மாண்ட நுடங்கெழி லாகத், தடங்குமயி ரொழுகிய வவ்வாய்" (மலைபடு. 31-2.)

4. தலைவன் கனுக்காண்டல்: "பரந்துபடு பாய னவ்வி பட்டென, இலங்குவளை செறியா விருத்த நோக்கமொடு, நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண், டின்னகை யினைய மாகவு மெம்வயின், ஊடல் யாங்குவந் தன்றென யாழநின், கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி, நறுங்கதுப் புளரிய நன்ன ரமயத்து, வறுங்கை காட்டிய வாயல் கனவு" (அகநா. ருக: 16-23.) (கசஎ)

---

## தலைவி கூற்று

[தலைவன் மீண்டு வருவதாகக் கூறிச்சென்ற கார்ப்பருவம் வரவும் அவன் வாராமையால் துன்பமுற்ற தலைவியை நோக்கித் தோழி, "இது பருவமன்று; அவர் பொய்யார்" என வற்புறுத்த, தலைவி, "கொன்றை மரங்கள் பூத்தன; இது கார்ப்பருவந்தான்" எனக் கூறியது.]

கசஅ. செல்வச் சிறாஅர் சிறடிப் பொலிந்த
தவளை வாய பொலஞ்செய் கிண்கிணிக்
காசி னன்ன போதீன் கொன்றை
குருந்தோ *டலம்வரும் பெருந்தண் காலையும்
† காரன் றென்றி யாயிற்
கனவோ மற்றிது வினவுவல் யானே.

எ - து. பருவங்கண்டு அழிந்த தலைமகளைத் தோழி 'பருவமன் றென்று வற்புறுத்தத் தலைமகள் சொல்லியது.

இளங்கீரந்தையார்.

(ப - ரை.) செல்வம் சிறாஅர் - செல்வத்தையுடைய சிறுபிள்ளைகளுடைய, சிறுஅடிபொலிந்த - சிறிய அடியின்கண் விளங்கிய, தவளை வாய - தவளையின் வாயைப்போன்ற வாயையுடைய, பொலம் செய் கிண்கிணி காசின் அன்ன - பொன்னாற் செய்யப்பட்ட கிண் கிணிக்காசைப் போன்ற, போது ஈன் கொன்றை - பேரரும்பை வெளிப்படுத்தும் கொன்றை மரம், குருந்தோடு - குருந்த மரத்தோடு, அலம்வரும் - சுழலும், பெரு தண் காலையும் - மிக்க தண்மையை யுடையப் பருவத்தையும், கார் அன்று என்றி ஆயின் - கார்

---

(பி-ம்.) * டலரும். † காரெனத் தேறாயாயின்.

காலமன்றென்று நீ கூறுவாயாயின், இது கனவோ - இங்ஙனம் தோற்றுவது கனவோ ? யான் வினவுவல் - யான் கேட்பேன் ; கூறுவாயாக.

(முடிபு.) கொன்றை அலம்வரும் காலேயும் காரன்றென்றியாயின் கனவோ ? யான் வினவுவல்.

(கருத்து.) தலைவர் இக்கார்காலத்தும் மீண்டு வந்திலர்.

(வி - ரை.) பொன்னாற் செய்யப்பட்ட கிண்கிணி யென்னும் ஆபரணத்தை யணியும் பொருள் மிகுதியையுடையாராதலின் 'செல்வச் சிறாஅர்' என்றாள். பொலிந்த கிண்கிணி, வாய கிண்கிணியென இயையும். கிண்கிணி பொன்னாற் செய்யப்படுதலின் 'பொலஞ்செய் கிண்கிணி' என்றாள். கிண்கிணி கொன்றைப் போதிற்கு உவமை ; போது - மலரும்பருவத்தரும்பு. கொன்றையும் குருந்தும் கார்காலத்தே மலர்வன ; "குருந்தலை வான்படலை சூடிச் சுரும்பார்ப்ப, ஆயன் புகுதரும் போழ்தினான்" (ஐங். எழு. 28) என்பது காண்க. காற்றடித்தலால் கொன்றை குருந்தோடு அலம் வந்தது ; அலமருதல் அலம்வருதலெனவும் வழங்கும் ; "வெறியோடலம்வரும் யாய்" (ஐங். ஐம். 20) ; "அலம்வ ருஞ்சுட ருடுக்களுமமரும் பிறரும், வலம்வ ரும்படி யிருப்பது கயிலைமால் வரையே" (கந்த. திருக்கைலாசப். 12.) காலேயும் : உம்மை, உயர்வுசிறப்பு. என்றி - என்கின்றாய் ; "இன்றை யளவைச் சென்றைக் கென்றி" (குறுந். ௱அ௲ : 3) என்று பின்னும் வருதல் காண்க. கனவோ : ஓகாரம், வினா. மற்று, ஏ : அசை நிலை.

## மேற்கோளாட்சி

மு. இகுளை வம்பென்பதைத் தலைவி மறுத்தது (நம்பி. 170.)

## ஒப்புமைப் பகுதி

2. பொலஞ்செய் கிண்கிணி : கலி. கூ௬ : 17.

தவளைவாய்க் கிண்கிணி : "தேரைவாய்க் கிண்கிணி" (கலி. அ௬ : 9) ; (பெருங். க. 46 : 246, 53 : 166 ; ௩. 9 : 167 ; ரு. 9 : 90) ; (சீவக. 243, 2481, 3126.)

1-2. சிறடிக் கிண்கிணி : "கிண்கிணி களைந்தகா லொண்கழ ஒரட்டு" (புறநா. எ௭ : 1.)

சிறார் காலில் கிண்கிணி யணிதல் : " அரிபெய் கிண்கிணி யார்ப்பத் தெருவிற், றேர்நடை பயிற்றுந் தேமொழிப் புதல்வன் ", " பெருஞ்செங் கிண்கிணிப், பாலார் துவர்வாய்ப் பைம்பூட் புதல்வன் " (நற். உ௫௦ : 2-3, உசுக : 1-2) ; " அரிபொலி கிண்கிணி யார்ப்போவா தடிதட்ப........... போல வருமென் னுயிர் ", " காலவை, சுடுபொன் வளைஇய வீரமை சுற் றொடு, பொடியழற் புறந்தந்த செய்வுறு கிண்கிணி" (கலி. அக : 6-10, அ௫ : 1-2.)

2-3. கொன்றை மலருக்குப் பொன் : " நன்னெடுங் காந்தட் போதி னறைவிரி கடுக்கை மென்பூத், துன்னிய கோபத் தோடுந் தோன் றிய தோற்றந் தும்பி, இன்னிசை முரல்வ நோக்கி யிருநில மலர்க்கை யேந்திப், பொன்னொடுங் காசை யீட்டிக் கொடுப்பதே போன்ற தன்றே" (கம்ப. கார்காலப். 31.)

4-5. குருந்து கார்காலத்தில் மலர்தல் : " குரவுந் தளவுங் குருந்துங் கோடலும், அரவுகொண் டரும்ப...........கார்வளம் பழுனிக் கவினிய கானத்து " (பெருங். க. 49 : 98-101) ; " குருந்தோடு முல்லை குலைத் தனகாண் " (திணைமா. 112); கைந்நிலை, 25, 29.

கொன்றையும் குருந்தும் : " குருந்துங் கொன்றையும் வருந்த வணக்கி", " கொன்றையுங், குருந்தும் " (பெருங். க. 51 : 42, உ. 12 : 18-9); " கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய் வாடினீர் " (திணைமா. 81.)

3-5. கொன்றை கார்காலத்து மலர்தல் : குறுந். உக : 3-4, ஒப்பு. (கசஅ)

---

தலைவி கூற்று

[தோழி தலைவனுடன் போகவேண்டுமென்று கூறத் தலைவி அவனுடன் செல்லுதலால் நாண் அகலுமென்று இரங்கிக் கூறியது.]

கசகூ. அளிதோ தானே நாணே நம்மொடு
நனிநீ டுழந்தன்று மன்னே யினியே
வான்பூங் கரும்பின் ஓங்குமணற் சிறுசிறை
தீம்புன னெரிதர *வீய்ந்துக் காஅங்குத்
தாங்கு மளவைத் தாங்கிக்
காம நெரிதரக் கைந்நில் லாதே.

---

(பி - ம்.) * வீழ்ந் துக்காங்கு.

எ - து. உடன்போக்கு உணர்த்திய தோழிக்குத் தலைவி சொல்லியது.

* வெள்ளிவீதியார்.

(ப - ரை.) *தோழி—, நாண் - நாணம், நம்மொடு நனி நீடு உழந்தன்று - நம்மோடு மிக நெடுங்காலம் உடனிருந்து வருந்தியது; இனி - இனிமேல், வான் பூ கரும்பின் - வெள்ளிய பூவையுடைய கரும்பினது, ஓங்கு மணல் சிறு சிறை - உயர்ந்த மணலையுடைய சிறிய கரை, தீம்புனல் நெரிதர - இனியநீர் நெருங்கி அடித்தலால், வீய்ந்து - அழிந்து, உக்காங்கு - வீழ்ந்தாற்போல, தாங்கும் அளவை தாங்கி - தடுக்கும் வரையில் தடுத்து, காமம் நெரிதர - காமம் மேன் மேலும் நெருக்க, கைநில்லாது - என்பால் நில்லாது; போய்விடும்; அளிது - அஃது இரங்கத்தக்கது.*

(முடிபு.) *நாண் நனிநீடுழந்தன்று; கைநில்லாது; அளிது.*

(கருத்து.) *யான் தலைவனுடன் செல்லுதலால் நாணழியும்.*

(வி - ரை.) *அளிது - இரங்கத்தக்கது; "அளிதோ தானே பாரியது பறம்பே"* (புறநா. க0கூ: 1.) *நாண் நீடுழந்தன் றென்றது, தலைவியோடு உடன் வளர்ந்து அணியாய் நின்று பிரியாதிருந்தமை பற்றி; 'நாணென்பது பெண்டிர்க்கு இயல்பாகவே உளதொரு தன்மை'* (இறை. 2, *உரை.) மன், கழிவுப் பொருளை உணர்த்திற்று. கரும்பின் பூ வெண்மையுடையதாதலின் வான்பூ வென்றாள்; "ஆடுகட் கரும் பின் வெண்பூ"* (புறநா. ௩௫: 10.) *நாணத்திற்குச் சிறுசிறையும் காமத்திற்குப் புனலும் உவமை; "சிறையு முண்டோ செம்புனன் மிக்குழீஇ, நிறையு முண்டோ காமங் காழ்க்கொளின்"* (மணி. ரு: 19-20); *"சிறையென்ப தில்லைச் செவ்வே செம்புனல் பெருகு மாயின், நிறையென்ப தில்லைக் காம நோர்நின்று சிறக்கு மாயின்"* (சூளா. *கல் யாணச்.* 155) *எனப் பிறரும் உவமை கூறுதல் காண்க. இதுவரை தம்முள் ஒத்த அளவினவாக இருந்த காமம் நாண் என்னும் இரண்டனுள் நாணத்தைக் காமம் வென்றதென்பது கருத்து. நில்லாதே: ஏகாரம், அசைநிலை.*

## மேற்கோளாட்சி

2. *இனியென்பது பின்வருங்காலம் உணர்த்தி நின்றது* (தொல். *எச்ச.* 67, *ந.*)

---

(பி - ம்.) * *வெள்ளிவீதி.*

1 - 2. இனியென்பது காலத்தின்மேல் முன்னென்னும் பொருள்பட வரும் (நன். 420, மயிலை.)

6. தலைவி தோழிக்கு நாணும் மடனும் நீங்கிய சொல்லைக் கூறுதலும் பொருந்தும் (தொல். களவு. 19, ந.)

மு. நொதுமலர் வரைவின்கண் தலைவி நாணழிபு இரங்கிக் கூறியது (தொல். களவு. 23, இளம்.); இக்குறுந்தொகை தலைவி நாண் நீங்கினமை கூறியது (ஷை. அகத். 42, ந.); இஃது உடன்போக்கு வலித்தமையின் தலைவி நாண் துறந்து கூறியது (ஷை. களவு. 16, ஷை); தலைமகள் உடன்செல நேர்ந்த பாவக்கிளவி (தமிழ்நெறி. 20); தலைவி உடன்போக்கின்கண் நாணழிந்து வருந்தல் (இறை. 23); உடன்போக்கு நயப்பித்த தோழி தலைமகளுழைச் சென்றுணர்த்தத் தலைமகள் சொல்லுதல் (களவியற்காரிகை); தலைவி நாணழி பிரங்கல் (நம்பி. 182.)

## ஒப்புமைப் பகுதி

1-2. நாண் அளிது: "என் கண்மணிபோன், றொருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த, அருநா ணளிய தழல்சேர் மெழுகொத் தழிகின்றதே" (சிற். 44.)

நாண் நனி நீடுழந்தன்று: "சேணு மெம்மொடு வந்த, நாணும் விட்டே மலர்கவிவ் வூரே" (நற். கரு: 9-10); "நாணே டுடன்பிறந்த நான்" (முத். 98.)

1-6. காமமும் நாணும்: குறுந். ககஉ: 2, ஒப்பு.

காமத்தால் நாண் அழிதல்: "மிகுபெயல், உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல, நாணுவரை நில்லாக் காம நண்ணி", "காமங் கைம்மிகச் சிறத்தலி னாணிழந்து" (அகநா. உ0அ: 18-20, உகக: 8.)

மு. "எனு மிகலு மழிந்துதெவ் வேந்தரெல் லாமிறைஞ்சிக், காணுங் கழனெடு மாறன்செங் கோனின்று காக்குமண்மேற், சேணு மகலா துடனென்னொ டாடித் திரிந்துவந்த, நாணு மழியத் தருகற்பு மேம்பட நைகின்றதே." (பாண்டிக்.) (கசக)

---

## தலைவி கூற்று

[தலைவனுக்கு இரவுக்குறி நேர்ந்த தோழி தலைவிக்கு அதனைத் தெரிவிப்ப, தலைவி, "தலைவர் மார்பு, நினைத்தால் காமநோய் மிகுதற்குக் காரணமாக உள்ளது; புல்லினால் அந்நோய் நீங்குதற்குக் காரணமாக உள்ளது" என்று தோழிக்குக் கூறும் வாயிலாகத் தன் உடம்பாட்டைத் தெரிவித்தது.]

௩௱௫0. சேணோன் மாட்டிய நறும்புகை ஞெகிழி
வான மீனின் வயின்வயி னிமைக்கும்
ஓங்குமலை நாடன் சாந்துபுல ரகலம்
உள்ளி னுண்ணோய் மல்கும்
புல்லின் மாய்வ தெவன்கொ லன்னாய்.

எ - து. இரவுக்குறி நேர்ந்த தோழிக்குத் தலைமகள் கூறியது.

மாடலூர் கிழார்.

(ப - ரை.) அன்னாய் - தோழியே, சேணோன் - மரத்தின் உச்சியிற் பரணின்மீது இருக்கும் குறவன், மாட்டிய - கொளுத்திய, நறு புகை ஞெகிழி - நன்மணமுள்ள புகையையுடைய கொள்ளியானது, வானம் மீனின் - வானத்திலுள்ள நட்சத்திரங்களைப் போல, வயின் வயின் இமைக்கும் - இடந்தோறும் ஒளியை வீசும், ஓங்கு மலைநாடன் - ஓங்கிய மலை நாட்டையுடைய தலைவனது, சாந்துபுலர் அகலம் - பூசியசந்தனம் புலர்ந்த மார்பினை, உள்ளின் உள் நோய் மல்கும் - யான் நினைத்தால் என் உள்ளத்தின்கண் காமநோய் பெருகும்; புல்லின் - அம்மார்பை அணைந்தால், மாய்வது எவன் - அந்நோய் இல்லையாதல் என்ன ஆச்சரியம்!

(முடிபு.) அன்னாய், நாடன் மார்பு உள்ளின் நோய் மல்கும்; புல்லின் மாய்வது எவன்!

(கருத்து.) தலைவனைக் கண்டு அளவளாவினாலன்றி என் நோய் தீர்வதில்லை.

(வி - ரை.) சேணோன் - மலைமிசையுறையும் குறவனென்பர் (மதுரைக். 294, ந.); "கலிகெழு மரமிசைச் சேணோன்" (குறிஞ்சிப். 40) என்பதனால் இவன் மரத்தின்மீது இருப்பவனென்பது விளங்கும். வேங்கை மரத்தின்மீது கட்டப்பட்ட பரணிலும், யானையாலும் எட்டமுடியாதபடி குன்றின்மீது கட்டப்பட்ட பரணிலும் இருப்பவனாதலின் இவன் சேணோனெனப்பட்டான். மாட்டிய - மடுத்து எரிக்கப்பட்ட (புறநா. ௧0௮ : 1, உரை.) சந்தன மரம் முதலியவை எரிக்கப்பட்டமையின் நறும்புகை ஞெகிழியென்றாள்; "நறையகில் வயங்கிய நளிபுன நறும்புகை" (குறுந். ௩௩௯ : 1); "குறத்தி மாட்டிய வறற் கடைக் கொள்ளி, ஆர மாதலி னம்புகை" (புறநா. ௧0௮ : 1-2); "ஈரமில் குறவ ரீதண்மிசைப் பொத்திய, ஆரத் துணியொடு காரகில் கழுமிய, கொள்ளிக் கூரெரி" (பெருங். ௧. 50 : 17-19) என்பவற்று

ஆம் இது விளங்கும். பன்றி (அகநா. அஅ: 4-6), யானை (நற். ௩௬௩. 4-5, முதலியன புனத்தை மேய்வதாகப் பேசுவதும் கொள்ளியேற்றுவது இயல்பு. ஞெகிழிக்கு வானமீன் உவமையாக இந்நூல், ௩௫௭-ஆம் பாடலினும் கூறப்பட்டுள்ளது. ஞெகிழி இரவில் ஒளிவிடுவதை நோக்கித் தலைவன் வருவதை (அகநா. அஅ: 5-7) 'ஞெகிழி வயின் வயின் இமைக்கு நாடன்' என்பதனாற் குறிப்பித்தாள். தலைவன் இரவுக்குறிக்கண் சந்தனம் பூசிவருதல் இயல்பாதலின், 'சாந்து புலரகலம்' என்றாள்.

சொல்: அசைநிலை.

## மேற்கோளாட்சி

1. சேணோனென்பது மரத்தின் உச்சியில் இராக்காலத்தில் ஆகாயத்தில் இருப்போனென்று பொருள்படும் (குறிஞ்சிப். 40, ந.)

5. தோழியைத் தலைவி அன்னாயென்றது (தொல். பொருளியல், 52, ந.)

மு. தலைவன் அளி சிறந்தவழித் தலைவிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். களவு. 21, இளம்; ஷை. ஷை. 20, ந.); தோழிமுன் தலைவிக்கு வேட்கைக் கூற்று நிகழ்ந்தது (ஷை. ஷை. 27, ந.); தலைமகள் இரவுக்குறி நேர்ந்து பாங்கியொடுரைத்தது (நம்பி. 158.)

## ஒப்புமைப் பகுதி

1. *சேணோன்: "சேணோ னகழ்ந்த மடிவாய்ப் பயம்பு" (மதுரை. 294); "கழுதிற் சேணோன்" (மலைபடு. 243); "சேணோ னிழைத்த நெடுங்காற் கழுதின்" (நற். உஎ௩: 5); "எனலஞ் சிறுதினைச் சேணோன் கையதைப், பிடிக்கை யமைந்த கனல்வாய்க் கொள்ளி", "கல்லுயர் கழுதிற் சேணோன்" (அகநா. எ௩: 14-5, ௩௪உ: 14); "கலிகெழு மீமிசைச் சேணோ னோதையும்" (சிலப். உ௫: 30.)

ஞெகிழி மாட்டல்: "நொய்ம்மர விறகின் ஞெகிழி மாட்டி" (மலைபடு. 446.)

சேணோன் மாட்டிய ஞெகிழி: (குறுந். ௩௫௭: 5-6); "கானவ னெறிந்த கடுஞ்செலன் ஞெகிழி" (நற். ௩௬௩: 5.)

---

* பலவிடங்களிலுமுள்ள ஆட்சியை நோக்கும்போது சேணோனென்பது ஆகுபெயர் வகையாற் பரணுக்கே உரிய பெயராக வழங்கியதென்று தோற்றுகின்றது.

3. தலைவன் சந்தனம் பூசி வருதல்: குறுந். ௧௬௧ : 6, ௧௬௮ : 7 ௩உ௧ : 1; கலி. ௫௨ : 7, 15.

4. உள்ளின் உண்ணோய் மல்கும்: குறுந். ௧௦௨ : 1.

5. எவன்கொலன்னாய்: ஐங். உ௧ : 4, ௩௦ : 4, உ௧௬ : 6, உ௧௭ : 4, உ௧௯ : 4.

தோழியைத் தலைவி அன்னை யென்றல்: குறுந். ௩௩ : 1.

(௧௫௦)

---

## தலைவன் கூற்று

[பொருள் தேடிவரும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்லத்துணிந்த தன் நெஞ்சை நோக்கி, "பாலைநிலம் செல்லுதற்கு அரிதென்று கருதாமல் தலைவியைப் பிரிந்து செல்லுதல் நம் இளமைக்கு முடிவாகும்" என்று கூறித் தலைவன் வருந்தியது.]

௧௫௧. *வங்காக் கடந்த செங்காற் பேடை
எழாலுற வீழ்ந்தெனக் கணவற் காணாது
குழலிசைக் குரல குறும்பல வகவும்
† குன்றுகெழு சிறுநெறி யரிய வென்னாது
மறப்பருங் காதலி யொழிய
இறப்ப லென்பதீண் ‡ டிளமைக்கு முடிவே.

எ - து. பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லியது.

தூங்கலோரி.

(ப -ரை.) நெஞ்சே—, வங்கா கடந்த - ஆண் வங்காப் பறவை நீங்கப்பெற்றமையால் தனித்த, செ கால் பேடை - சிவந்த காலையுடைய பெண்பறவை, எழால் உற வீழ்ந்தென - புல்லூறென்னும் பறவை தன் மேல் நெருங்க இரையாகக் கொள்ளும்பொருட்டு வீழ்ந்ததாக, கணவன் காணாது - தம்முடைய கணவனாகிய ஆண்பறவையைக் காணமல், குழல் இசை குரல - வேய்ங்குழலினது இசையைப் போன்ற குரல்களை யுடையனவாய், குறு பல அகவும் - குறிய பல ஒலிகளால் அழைக்கும், குன்று கெழு சிறு நெறி - குன்றைப்பொருந்

(பி - ம்.) * வங்காக் கடிந்த, வங்காக் கிடந்த. † குன்றுறு சிறுநெறி. ‡ டின்மைக்கு.

திய சிறிய வழிகள், அரிய என்னாது - கடத்தற்கு அரியன வென்று எண்ணாமல், மறப்பு அரு காதலி ஒழிய - மறத்தற்கரிய நம் தலைவி இங்கே தங்க, இறப்பல் என்பது - நான் செல்வேனென்று துணிவது, ஈண்டு - இங்கே, இளமைக்கு முடிவு - நம் இளமைப் பருவத்துக்கு முடிவாகும்.

(முடிபு.) நெஞ்சே, சிறுநெறி அரிய என்னாது காதலி யொழிய இறப்பலென்பது இளமைக்கு முடிவு.

(கருத்து.) இளமை பயனற்றுக் கழியுமாதலின், யான் தலைவியைப் பிரிந்து செல்லேன்.

(வி - ரை.) நெஞ்சென்னும் முன்னிலை முன்னத்தால் வருவிக்கப்பட்டது. வங்கா - ஒருவகைப் பறவை (தொல். உயிர் மயங்கு. 23, ந. மேற்.); "வங்கா வரிப்பறை" (நற். ருசக : 1); இது வக்காவெனவும் வழங்கும் (குற். குற.) எழால் - புல்லூறென்னும் பறவை; "மயிலு மெழாலும் பயிலத் தோன்றும்" (தொல். மரபு. 43) என்பதனாலும், "போத்தொடு வழங்கா மயிலு மெழாலும்" என்னும் அதன் மேற்கோளாலும் விளங்கும். கணவனென்பது அஃறிணைக்கும் வரும்; "கயந்தலை மடப்பிடி, வலிக்குவரம் பாகிய கணவ னோம்பலின்" (மலைபடு. 307 - 8), "பைங்கட் செந்நாய், மாயா வேட்டம் போகிய கணவன், பொய்யா மரபிற் பிணவுநினைந் திரங்கும்" (நற். க0ரு : 6-8), "நிறைச் சூல் யாமை........முட்டை, பார்ப்பிட னாகு மளவைப் பகுவாய்க், கணவ னோம்பும்" (அகநா. கரு0 : 5-8) என்பவற்றால் இது விளங்கும். குறும்பல - தன்னுடைய குறிய பல குஞ்சுகளை யெனினும் ஆம்; "தேம்பாய் கூந்தற் குறும்பல மொசிக்கும், வண்டுகடிந் தோம்ப றேற்றாய்" (அகநா. உருஎ : 8-9.) குறிஞ்சி திரிந்த பாலைநிலமாதலின், 'குன்றுகெழு சிறு நெறி' என்றான். மறப்பருங்காதலி யென்றது, அவள் குணங்கள், இடைச்சுரத்தே செல்லினும் நினைத்தற்குரியவாதல்பற்றி (ஐங். ருஉக - ரு, ருஉரு - எ.)

இளமைக் காலத்தே தலைவியோடிருந்து இன்புற வேண்டும்; பொருள் தேடச்சென்றால் அது முற்றும் வரையில் பிரிவு நேர்வதால் அதற்குள் இளமை கழியும்; இளமை கழியுமேல் அவ்வின்பம் கைகூடாதென்று கருதியவனாதலின், இறப்பலென்பது இளமைக்கு முடிவென்றான்.

முடிவே: ஏகாரம், தேற்றம்; அசைநிலையுமாம்.

## ஒப்புமைப் பகுதி

2. எழால்: (பதிற். ௩௯ : 10, அகநா. ௧0௩ : 1); "சிறுபுன் புற வொடு சிற்றெழால் சீறும், நெறியரு நீள்சுரத்து" (திணைமொழி. 15.)

3. துறும்பல: நற்: ௨௬௪ : 4; புறநா. ௧௫௯ : 3; சிலப். ௧௦ : 39 ௬௨ : 3.

4. குன்றுகெழு சிறு நெறி: "வரைசேர் சிறுநெறி" (அகநா ௧௨௩ : 3.)

6. பொருட்பிரிவு இளமையின்பத்தைக் கெடுத்தல்: குறுந். ௧௨௬ : 1, ஒப்பு; நற். ௪௬ ; கலி. ௧௮ : 7-8.

5-6. "மறப்பருங் காத லிவளீண் டொழிய, இறப்பத் துணிந் தனிர்" (கலி. ௨ : 9-10.) (௧௫௧)

---

## தலைவி கூற்று

[தலைவன் நெடுங்காலம் வரையாது இருந்தமையின் வருந்திய தன்னை இடித்துரைத்த தோழியை நோக்கி முன்னிலைப்புறமொழி யாக, "என்னை இடித்துரைப்போர் காமத்தின் தன்மையையும் தலை வர் உடனுறைவதன் இன்றியமையாமையையும் உணர்ந்திலர்" என்று தலைவி கூறியது.]

௧௫௨. யாவது மறிகிலர் கழறு வோரே
தாயின் முட்டை போலவுட் கிடந்து
சாயி னல்லது பிறிதெவ னுடைத்தோ
யாமைப் பார்ப்பி னன்ன
காமங் காதலர் கையற விடினே.

எ - து. வரைவு நீட்டித்தவழி ஆற்றளாகிய தலைமகள், "நீ ஆற்றுகின்றிலை" என்று நெருங்கிய தோழிக்குச் சொல்லியது.

[நெருங்கிய - இடித்துரைத்த.]

* கிளிமங்கலங் கிழார்.

(ப - ரை.) யாமை பார்ப்பின் அன்ன காமம் - தாய்முகம் நோக்கி வளருந்தன்மையையுடைய ஆமையின் பார்ப்பைப் போலத் தலைவரைப் பல்காற் காண்டலால் வளருந்தன்மையையுடைய காம

(பி - ம்.) * கிழிமங்கலங் கிழார்.

மானது, காதலர் கையறவிடின் - அவர் நாம் செயலறும்படி நம்மைப் பிரிந்து கைவிட்டால், தாய் இல் முட்டை போல - தாயில்லாத முட்டை கிடந்தபடியே அழிவதுபோல, உள் கிடந்து சாயின் அல்லது - உள்ளத்துள்ளே கிடந்து மெலியினன்றி, பிறிது எவன் உடைத்து - வேறு என்ன உறுதியை உடையது? கழறுவோர் - என்னை இடித்துரைப்போர், யாவதும் - இதனைச் சிறிதேனும், அறிகிலர் - அறிந்திலர்.

(முடிபு.) காமம், காதலர் விடின், சாயினல்லது பிறிதெவ னுடைத்து? கழறுவோர் யாவதும் அறிகிலர்.

(கருத்து.) தலைவர் விரைவில் வரைகிலரேல் காமம் பயனற்றுக் கெடும்.

(வி - ரை.) விரைவில் வரைந்து கொள்ளுதற்குரிய முயற்சியைத் தலைவன்செய்யும்படி அவனைத்தூண்டாமல் தன்னைக் கடிந்த அயன்மை பற்றித் தோழியை வேறுபடுத்திப் படர்க்கையாற் கூறினாள்; முன்னிலைக்கண் உள்ள தோழிக்குப் படர்க்கையாற் குறிப்பாக உணர்த்தினமையின் இது முன்னிலைப் புறமொழி.

கழறுதல் - இடித்துரைத்தல்.

தாயில்லாத முட்டை அத்தாயால் இடப்பட்டும், அடைகாத்துப் பாதுகாத்தலை யொழிந்தமையின் குஞ்சாகும் பயனைப் பெறாதது போல, தலைவனால் உண்டான காமம் அவன் வரைந்துகொண்டு இடையீடின்றி உடனுறையும் நிலை பெறாமையின் இல்லறப்பயனைப் பெறாதென உவமையை விரித்துக் கொள்க. உட்கிடந்து சாய்தலை உவமைக்குங் கூட்டிக் கருவானது வெளிவராமல் முட்டைக்குள்ளே கிடந்து அழிதலையுங் கொள்க.

> "தீம்பெரும் பொய்கை யாமை யிளம்பார்ப்புத்
> தாய்முக நோக்கி வளர்ந்திசி னாஅங்
> கதுவே யையநின் மார்பே
> அறிந்தனை யொழுகுமதி யறனுமா ரதுவே" (ஐங். ௪௪)

என்புழியும் யாமைப் பார்ப்பைக் காமத்துக்கு உவமை கூறியிருத்தல் காண்க. பார்ப்பின் அன்ன : இன், வேண்டாவழிச் சாரியை.

## மேற்கோளாட்சி

4 - 5. பார்ப்பென்னும் இளமைப் பெயர் தவழ்வனவற்றிற்கும் உரியது (தொல். மரபு. 26, இளம், 5, பேர்.)

மு. தலைவி முன்னிலைப் புறமொழி மொழிந்தது (இ. வி. 513.)

ஒப்புமைப் பகுதி

1. கழறுவோர் காமத்தின் தன்மையை அறியார் : குறுந். உகூ0 : 1-2.

4. யாமைப் பார்ப்பு : அகநா. கசுo : 5-7. (கரு௨)

---

தலைவி கூற்று

[தலைவன் வரையாமல் நெடுங்காலம் வந்து அளவளாவுதலால் வருந்திய தலைவி, தோழியை நோக்கி, "இனி அவரை வாரற்கவென்று கூறுவாயாக" என, தோழி தலைவியை, "அங்ஙனம் கூறுதற்குக் காரணம் யாது?" என வினவ, "அவர் வரும் வழியின் ஏதமறிந்து எனக்கு ஆற்றுமை உண்டாகின்றது" என்று தலைவி கூறியது.]

கருகூ. குன்றக் கூகை குழறினு முன்றிற்
பலவி னிருஞ்சினைக் கலைபாய்ந் துகளினும்
அஞ்சும னளித்தெ னெஞ்ச மினியே
ஆரிருட் கங்கு * லவர்வயிற்
சார னீளிடைச் செலவா னுதே.

எ - து. வரையாது, நெடுங்காலம் வந்தொழுகுகின்றுழி, "நாம் அவரை வேறுபடுத்தற்குக் காரணம் என்னை?" என்ற தோழிக்கு, "அவர் வரவு, நமக்கு ஆற்றுமைக்குக் காரணமாம்" எனத் தலைமகள் கூறியது.

[வேறுபடுத்தல் - இங்ஙனம் வருதலைத் தவிர்வாயாக வென்று கூறிப் பிரித்தல்.]

கபிலர்.

(ப - ரை.) என் நெஞ்சம்—, குன்றம் கூகை குழறினும் - குன்றிலுள்ள பேராந்தை ஒலித்தாலும், முன்றில் - முற்றத்திலுள்ள, பலவின் இரு சினை - பலாமரத்தினது பெரிய கிளையினிடத்து, கலை பாய்ந்து உகளினும் - ஆண்குரங்கு தாவித் துள்ளினாலும், அஞ்சும் -

---

(பி - ம்.) * லவர்வரிற்.

அச்சத்தை முன்பு அடையும்; மன் - அது கழிந்தது; இனி - இப்பொழுது, அரு இருள் கங்குல் - செல்லுதற்கரிய இருளையுடைய இரவில், அவர் வயின் - அவரிடத்தே, சாரல் நீள் இடை - மலைச் சாரற்கண்ணுள்ள நெடுவழியில், செலவு ஆனது - செல்லுதலை நீங்காது; அளித்து - அஃது இரங்குதற்குரியது.

(முடிபு.) என் நெஞ்சம் அஞ்சுமன்; இனி அவர்வயிற் செலவு ஆனது; அளித்து.

(கருத்து.) தலைவர் இரவில் வருதலின், ஆற்றின் ஏதம் அஞ்சி வருந்துகின்றேன்.

(வி - ரை.) குழறுதல் - பொருளற்ற ஒலியைச் செய்தல்; கூகை ஒலித்தலைக் குழறலென்றல் மரபு. தலைவர் வருங்காலத்தும் மீண்டு செல்லுங்காலத்தும் அவருக்கு ஏதேனும் இடையூறு உண்டாகுமோவென அஞ்சி அவரையே நினைந்திருத்தலின் தன் நெஞ்சத்தை அவர்வயின் நீளிடைச் செல்வதென்றாள். அரிருட் கங்குலென்றாள், புறத்தே செல்லுதற்குரிய காலமன்றென்பது கருதி. சாரலென்றாள், புலி முதலிய கொடிய விலங்குகள் உண்மையை நினைந்து. நீளிடையாதலும் ஆற்றாமையை மிகுவித்தற்குக் காரணமாயிற்று.

## மேற்கோளாட்சி

1. குன்றக் கூகை யென்பதில் அக்குச் சாரியையின் அகரம் நிற்ப ஏனைய கெட்டன (தொல். புணர். 26, ந.); உருபுதொகவந்தது (ஷை. வேற்றுமை மயங். 21, சே, ந, கல்.); ஏழாம் வேற்றுமைத் தொகை (ஷை. எச்ச. 17, இளம், 16,தெய்வச்; நன். 362, மயிலை, 363, சங், வி.)

மு. தலைமகள் ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி (நம்பி. 164.)

## ஒப்புமைப் பகுதி

3. இனி : குறுந். அச : 2, ஒப்பு.

1-3. கூகை குழறினால் மகளிர் அஞ்சுதல் : "பராஅரை வேம்பின் படுசினை யிருந்த, குராஅற் கூகையு மிராஅ விசைக்கும், ஆஅ நோயட வருந்தி" (நற். உகஅ : 7-9); * "வெருவர, மன்ற மராஅத்த கூகை குழறினும், நெஞ்சழிந் தாணஞ் சேரும்" (அகநா. கடுஅ : 12-4); 'மாடத் தகத்தி லாடுவினைக் காவினுட், கொம்பர் மீமிசைக் கூகைவந் துலாஅய், வித்தகக் கைவினைச் சத்தி யேறி, உட்குத்தக வுரைத்தலுங்

* கபிலர் பாட்டு.

கட்கின் பாவை, நெஞ்சந் துட்கென நெடுவிடை நின்ற, காற்றெறி வாழையி னுற்ற நடுங்கி", "இரவுக் குறிவயின், வெருவக் குழறிய விழி கட் கூகைக், கடுங்குர லறியாள் கதுமென நடுங்கினள்" (பெருங். ௩. 14 : 151-6, 22 : 150-52.)

ஆண்துரங்கு பாய மகளிர் அஞ்சுதல்: "கருமுக முசுக்கலை கது மெனத் தோன்ற, இன்னதென் றுணரா னன்னுத னடுங்கி", "முகத்தே வந்தோர் முசுக்கலை தோன்ற, அகத்தே நடுங்கி யழற்பட வெய்துயிர்த்து" (பெருங். உ. 16 : 109-10, 19 : 167-8.)

3-5. தலைவனோடு நெஞ்சு அவன் செல்லும் வழியிற் செல்லுதல்: "சாரல், விலங்குமலை யாரா றுள்ளுதொறும், நிலம்பரந் தொழுகுமென் னிறையி னெஞ்சே" (நற். கஙச : 10-12) ; *"நன்னர் நெஞ்சம், என் னொடு நின்னொடுஞ் சூழாது கைம்மிக், கிறும்புபட் டிருளிய விட்டருஞ் சிலம்பிற், குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக், கான நாடன் வரூஉம் யானைக், கயிற்றுப்புறத் தன்ன கன்மிசைச் சிறுநெறி, மாரி வானந் தலைஇ நீர்வார், பிட்டருங் கண்ண படுகுழி யியவின், இருளிடை மிதிப்புழி நோக் கியவர், தளரடி தாங்கிய சென்ற தின்றே" (அகநா. கஉஅ : 6-15.)

(கருங)

---

## தலைவன் கூற்று

[பொருளீட்டும் பொருட்டுத் தன்னைப் பிரிந்து சென்ற தலைவனை நினைந்து, "என்னைப் பிரிந்து நெடுந்தூரத்தில் தங்கும் வன்மையை அவர் எங்ஙனம் பெற்றார்?" என்று தலைவி தோழியை நோக்கிக் கூறியது.]

கருச. யாங்கறிந் தனர்கொ றோழி பாம்பின்
உரி நிமிர்ந் தன்ன வுருப்பவி ரமையத்
திரைவேட் டெழுந்த சேவ † லுள்ளிப்
பொறிமயி ரெருத்திற் குறுநடைப் பேடை
பொரிகாற் கள்ளி விரிகா யங்கவட்டுத்
தயங்க விருந்து புலம்பக் கூஉம்
அருஞ்சுர வைப்பிற் கானம்
பிரிந்துசே ணுறைதல் வல்லு வோரே.

---

* கபிலர்பாட்டு. (பி - ம்.) † லுன்னிப்.

எ - து. பொருள்வயிற் பிரிந்த தலைமகனை நினைந்து தலைமகள் தோழிக்கு உரைத்தது.

மதுரைச் சீத்தலைச் சாத்தன்.

(ப - ரை.) *தோழி—, பாம்பின் உரி நிமிர்ந்தன்ன - பாம்பினது உரி மேலெழுந்தாற்போன்ற, உருப்பு அவிர் அமையத்து - கானல் விளங்குகின்ற நண்பகற்காலத்தில், இரை வேட்டு எழுந்த சேவல் உள்ளி - இரையை விரும்பி மேலெழுந்து பறந்து சென்ற ஆண்பறவையை நினைந்து, பொறி மயிர் எருத்தின் - புள்ளிகளையுடைய மயிர் பொருந்திய கழுத்தையும், குறுநடை - குறுக அடியிடும் நடையினையும் உடைய, பேடை - பெண்புறுவானது, பொரி கால் கள்ளி - பொரிந்த அடியையுடைய கள்ளியினது, விரி காய் அம் கவட்டு - வெடித்த காயையுடைய அழகிய கிளையில், தயங்க இருந்து - விளங்கும்படி இருந்து, புலம்ப கூஉம் - தனிமை தோன்றும்படி கூவுகின்ற, அரு சுரம் வைப்பின் கானம் - கடத்தற்கரிய வழியையுடைய இடமாகிய பாலைநிலத்தை, பிரிந்து - கடந்து, சேண் உறைதல் வல்லுவோர் - நெடுந்தூரத்தில் தங்குதலில் வன்மையையுடைய தலைவர், யாங்கு அறிந்தனர் - அவ்வன்மையை எவ்வாறு தெரிந்து கொண்டனர்?*

(முடிபு.) *தோழி, கானம் பிரிந்து உறைதல் வல்லுவோர், யாங்கு அறிந்தனர்?*

(கருத்து.) *தலைவர் என்னைப் பிரிந்து எங்ஙனம் ஆற்றியிருக்கின்றனர்?*

(வி - ரை.) *யான் அத்தகைய வன்மையை அறிந்திலனே யென்னும் கருத்தால் அவர் எங்ஙனம் அறிந்தனரென்றாள். கானலின் தோற்றத்திற்குப் பாம்பின் சட்டை உவமை. விரிகாய் - வெடிக்கும் காய்.*

*அப்பாலை நிலத்தைக் கடக்கும் போது அங்குள்ள காட்சிகள் தலைவன் தலைவியரிடையே இருக்கவேண்டிய அன்பை நினைப்பூட்டுவனவாதலின் அவற்றைப் பார்த்த பின்பும் மேலே செல்லுதற்குப் பெருவன்மை வேண்டுமென்பாள், உறைதல் வல்லுவோரென்றாள்.*

*பிரிந்த சேவலை நினைந்து பேடை கூவுதலைக் கண்டு தம்மை நினைந்து யானும் வருந்துதலைத் தலைவர் உணர்தல்கூடுமென்பது தலைவி கருத்து.*

கொல், ஏ: அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

மு. தலைவன் பிரிந்துழித் தோழிகூற்றினைப் பின்னுங் கேட்டற்குத் தலைவி விரும்பியது; 'இது வல்லுவோரென்னும் பெயர் கூறித் தோழி கொடுமை கூறியவழி அவனையே பிரிதல் வன்மை யாங்கறிந்தனெனத் தலைவி வினவுதலின் அது பின்னுங் கேட்டற்கு அவாவியதாம்' (தொல். கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. உருப்பு: குறிஞ்சிப். 45; நற். ௪௩: 1, ௧௧: 2; அகநா. ௧௧: 2; பு. வெ. 255.

4. புற, பொறிகளையுடையது: "பொறிவரிப் புறவின் செங்காற் சேவல்" (அகநா. ௨௭௧: 1.)

குறுநடைப் புறவு: அகநா. ௪௭: 11; புறநா. ௪௩: 6.

4-6. புற கள்ளியில் இருத்தல்: (குறுந். ௧௭௪: 1-3); "நுண் பொறிப் புறவின் செங்காற் சேவல், வெண்சிறைப் பெடையொடு விளையாட்டு விரும்பி, வன்பர லார்ந்த வயிற்ற வாகிக், கண்பொரி கள்ளிக் கவர்சினை யேறிக், கூப்பிடு குரலிசை சேட்புலத் திசைப்பவும்" (பெருங். க. 52: 46-50.)

7. அருஞ்சுர வைப்பு: குறுந். ௭௪: 5, ஒப்பு. (௧௫௪)

---

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச் சென்ற பருவம் வந்தமை யறிந்த தலைவி, "இன்னும் அவர் வந்திலர்" என்று கூறி வருந்தியது.]

௧௫௫. முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்
விதைக்குறு வட்டி போதொடு பொதுளப்
பொழுதோ தான்வந் தன்றே மெழுகான்
றாதுலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி
மரம்பயி லிறும்பி னார்ப்பச் சுரனிழிபு

மாலை நனிவிருந் * தயர்மார்
தேர்வரு † மென்னு முரைவா ராதே.

எ - து. தலைமகள் பருவங் கண்டு அழிந்து சொல்லியது.

‡ உரோடகத்துக் காரத்தன்.

(ப - ரை.) முதை புனம் கொன்ற - பழங்கொல்லையை உழுத, ஆர் கலி உழவர் - மிக்க ஆரவாரத்தையுடைய உழவர்களுடைய, விதை குறு வட்டி - காலையிலே விதைக்கும் பொருட்டு விதையை எடுத்துச் சென்ற சிறிய வட்டிகள், போது பொதுள - விதைத்து விட்டு வீட்டிற்கு மீளும்பொழுது மலர்கள் நிறையும்படி, பொழுது வந்தன்று - மாலைப்பொழுது வந்தது; மெழுகு ஆன்று - அரக்காற் செய்த கருவில் அமைத்து, ஊது உலை பெய்த - ஊதுகின்ற கொல்ல னுலையின்கண் பெய்து இயற்றிய, பகுவாய் தெள் மணி - பிளவுபட்ட வாயையுடைய தெளிந்த ஓசையையுடைய மணிகள், மரம் பயில் இறும்பின் ஆர்ப்ப - மரங்கள் நெருங்கி வளர்ந்த குறுங்காட்டிடத்து ஒலிக்கும்படி, சுரன் இழிபு - அருவழியைக் கடந்து, மாலை நனி விருந்து அயர்மார் - மாலைக்காலத்தில் மிக விருந்து நுகரும்பொருட்டு வரும் தலைவருடைய, தேர் வரும் என்னும் உரை வாராது - தேர்வரு கின்றதென்று கூறும் உரை வந்திலது.

(முடிபு.) பொழுதோ வந்தன்று; விருந்தயர்மார் தேர் வரு மென்னும் உரை வாராது.

(கருத்து.) மாலைக்காலம் வரவும் தலைவர் வந்திலர்.

(வி - ரை.) முதை - பழமை. பழைய கொல்லையில் உள்ள மரங்களை வெட்டி உழுதுவிட்ட இடத்திற் பருவமறிந்து விதைக்கும் பொருட்டு உழவர் சென்றனர்; "நறைபடர் சாந்த மறவெறிந்து நாளால், உறையெதிர்ந்து வித்தியவூ ழேனல்" (திணைமா. 1) என் பதனால் உணர்க. இதனால் மழைக்குரிய கார்ப்பருவம் வந்ததென்பது பெறப்படும்.

வட்டி - பனையோலை முதலியவற்றால் முடையப்பெற்ற சிறு பெட்டி. போதொடு: ஒடு, இசைநிறைப் பொருளில் வந்தது.

---

(பி - ம்.) * தயர்வர். † மென்னுமுன்னுரை. ‡ ஒரோடகத்துக்கந்த ரத்தனர்.

காலையில் விதைக்கும் பொருட்டுச் சென்ற உழவர் மாலைக்காலத்தில் மீள்கையில் தாம் விதையைக் கொண்டுசென்ற வட்டிகளில் வழியிற் பூத்த முல்லைப் பூவைக் கொணர்ந்தனர். போதென்றது இங்கே முல்லைப் போதை, கார்காலத்து மாலையில் மலர்வது அதுவே யாதலின். பொழுது - தலைவர் கூறிய கார்காலத்து மாலைப்பொழுது. பொழுதோ: ஓகாரம், அசைநிலை; பிரிநிலையுமாம். தான், ஏ: அசைநிலைகள். தெண்மணி: தெள்ளென்ற அடை மணியொலியைக் கருதியது. இறும்பு - செய்காடென்பாரும் உளர் (சிற். 148, பேர்.)

மணி தேரில் உள்ளது. அயர்மார் - அயர்பவர்; "தங்தொழின் முடிமார்" (முருகு. 89) என்றவிடத்து முடிமாரென்பதற்கு முடிப்பாரென்று நச்சினார்க்கினியர் உரை யெழுதியிருத்தல்காண்க; அயர்மார் - நாம் அயரும் பொருட்டு எனலுமொன்று.

தலைவர் மீண்டுவரின் தலைவியர் விருந்தயர்தல் மரபு; "அரும் பெறற் காதலர் வந்தென விருந்தயர்பு" (குறுந். ௧௫௫: 6) என வருதல் காண்க.

## மேற்கோளாட்சி

1-2. ஒடுவென்னும் இடைச்சொல் இசைநிறைப் பொருளில் வந்தது (நன். 435, மயிலை, 436, சங், வி; இ. வி. 272.)

1-3. பிரிநிலையோகாரம் வந்தது (நன். 422, மயிலை.)

மு. தலைவி பொழுது கண்டு மகிழ்ந்து கூறியது (தொல். கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. முதைப்புனம்: "முதைச்சுவல்" (குறுந். ௨௦௪: 3); "முதையலங் காட்டு", "முதைச்சுவன் மூழ்கிய கான்" (அகநா ௫: 8, ௧௫௪: 14.)

2. விதைக்குறு வட்டி: "வித்தொடு சென்ற வட்டி" (நற். ௨௩௦: 3.)

வட்டி: ஐங். ௪௭: 2, ௪௮: 2.

1-2. "விதையர் கொன்ற முதையற் பூழி" (நற். ௧௨௧: 1.)

4. ஊதுலை: மணி. ௨: 43.

பதுவாய்த் தெண்மணி: குறுந். ௨௭௧: 2.

5. மரம்பயில் இறும்பு: பெரும்பாண். 495; அகநா. கஉ: 8, கடுஎ: 10, உகூஅ: 1, ௩௬அ: 9.

6. தலைவன் வரவுகுறித்து விருந்தயர்தல்: "பூண்கதில் பாகநின் றேரே,......அரிவை, விருந்தயர் விருப்பொடு வருந்தின ளசைஇய, முறுவ லின்னகை காண்கம்", "நெடுநா வொண்மணி பாடுசிறந் திசைப்ப, மாலை மான்ற மணன்மலி வியனகர்த், தந்தன நெடுந்தகை தேரே யென் றும், அரும்படா ரகல நீக்கி, விருந்தயர் விருப்பின டிருந்திழை யோளே" (நற். அக: 5-9, ௩௬க: 5-9); "விருந்தும் பெறுகுநள் போலுந் திருந் திழைத், தடமென் பணைத்தோண் மடமொழி யரிவை...செல்லு நெடுந் தகை தேரே, முல்லை மாலை நகர்புக லாய்ந்தே", "மனைக்கொண்டு புக் கன னெடுந்தகை, விருந்தோ பெற்றன டிருந்திழை யோளே" (அகநா. ௩உச: 1-15, ௩அச: 13-4); "வினைகலந்து வென்றீக வேந்தன் மனை கலந்து, மாலை யயர்கம் விருந்து" (குறள், 1268.)

4-7. தலைவன் மணியோலிக்கத் தேரில் வருதல்: (குறுந். ௩௩௬: 3-4); "காமம் பெருமையின் வந்த ஞான்றை,.....தேர்மணித் தெள் ளிசை கொல்லென" (நற். உஅஎ: 7-10); "தாதுண் பறவை பேதுற லஞ்சி, மணிநா வார்த்த மாண்வினைத் தேரன், உவக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்" (அகநா. ச: 11-3.)

3-7. பொழுது வந்தது, தலைவர் வந்திலர்: ஐங். ௩சக - ௫0.

(கடுரு)

---

## தலைவன் கூற்று

[தலைவியின்பால் விருப்புற்ற தன்னைப் பாங்கன் இடித் துரைத்தபோது தலைவன் பாங்கனை நோக்கி, "நீ இடித்துரைத் தலால் பயனொன்றுமில்லை" என்று கூறியது.]

கடுகூ. பார்ப்பன மகனே பார்ப்பன மகனே
செம்பூ முருக்கி னன்னார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்கமண் டலத்துப்
படிவ வுண்டிப் பார்ப்பன மகனே
எழுதாக் கற்பி * னின்சொ லுள்ளும்

(பி - ம்.) * னின்செய லுள்ளும்.

பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்து முண்டோ மயலோ விதுவே.

எ - து. கழறிய பாங்கற்குக் கிழவன் அழிந்து கூறியது.

பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணன்.

(ப - ரை.) பார்ப்பன மகனே பார்ப்பன மகனே—, செ பூ முருக்கின் - செம்மையாகிய பூவையுடைய புரசமரத்தினது, நல் நார் களைந்து - நல்ல பட்டையை நீக்கிவிட்டு, தண்டொடு பிடித்த - அதன் தண்டோடு ஏந்திய, தாழ் கமண்டலத்து - தாழ்கின்ற கரகத்தையும், படிவம் உண்டி - விரத வுணவையுமுடைய, பார்ப்பனமகனே—, எழுதா கற்பின் - வேதத்தை யறிந்த, நின் சொல்லுள்ளும் - நின்னுடைய அறிவுரைகளுள், பிரிந்தோர் புணர்க்கும் - பிரிந்த தலைவியரையும் தலைவர்களையும் சேரச்செய்யும், மருந்தும் உண்டோ - பரிகாரமும் இருக்கின்றதோ? இது - இங்ஙனம் நீ கழறுதல், மயல் - மயக்கத்தால் வந்ததாகும்.

(முடிபு.) பார்ப்பன மகனே, பார்ப்பன மகனே, பார்ப்பன மகனே, நின்சொலுள்ளும் மருந்துமுண்டோ? இது மயல்.

(கருத்து.) நீ என்னை இடித்துரைத்தலால் வரும் பயன் யாதும் இல்லை.

(வி - ரை.) இது பார்ப்பனப் பாங்கன் காமநிலை யுரைத்துத் தேர்நிலை யுரைத்தபோது (தொல். கற்பு. 36) தலைவன் கூறியது. முருக்கென்றது புரச மரத்தை; இது பலாசென்றும் கூறப்படும். தாழ் கமண்டலம் - உறியிலே தாழ்ந்த கமண்டலம்; "உறித்தாழ்ந்த கரகமும்" (கலி. கூ: 2.) எழுதாக் கற்பு - எழுதாக் கிளவியைக் கற்ற கல்வி; அதாவது வேதமுணர்தல். மருந்து - பரிகாரம்; "மருந்தில் கூற்றம்" (புறநா. ரு: 12.) மருந்து முண்டோவென்ற உம்மை, பயனற்ற இடித்துரையேயன்றிப் பரிகாரமும் உண்டோவென்னும் பொருட்பயன் உடையது. 'நாம் இடித்துரைத்தால் இவன் கொண்ட காமம் நீங்கும்' என்று பாங்கன் எண்ணிய எண்ணத்தை மயலென்றான். உண்டோ: ஓகாரம் எதிர்மறைப் பொருளது; மயலோ: ஓ, அசை நிலை.

பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின் மருந்தும் உண்டோவென்றது, என்னையும் தலைவியையும் சேர்த்துவைக்கும் முயற்சியே பயன்

படுவதென்னும் குறிப்பையுடையது; எனவே நீ கழறுவதொழிந்து அது செய்க என்றுணுயிற்று.

## மேற்கோளாட்சி

1. முறைமை சுட்டா மகனென்னும் பெயர் ஏகாரம் பெற்று விளியேற்றது (தொல். விளி. 18, தெய்வச்.); உயர்திணைப் பெயர் ஏகாரவிளியுருபு பெற்று வந்தது (நன். 304, மயிலை.)

4. முறைமை சுட்டா மகனென்பது விளிவேற்றுமைக்கண் ஏகாரம் பெற்றுவந்தது (தொல். விளி. 12, ந; இ. வி. 207.)

3-4. அந்தணர்க்குக் கரகமும் முக்கோலும் உரியவை (தொல். மரபு. 70, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

2. நாரோன்பது பட்டைக்த வருதல்: குறுந். ௧௧௨: 4, உ௭௪: 5.

4. படிவவுண்டிப் பார்ப்பன மகன்: "படிவப் பார்ப்பான்" (முல்லைப். 37.)

6. பிரிந்தோர்ப் புணர்த்தல்: குறுந். ௧௪௬: 6. (கருசு)

---

## தலைவி கூற்று

[பூப்பு எய்திய தலைமகள் அதனை மறைத்துக் கூறுவாளாய், "வைகறைவந்தது; இனித் தலைவனைப் பிரியநேருமென்று அஞ்சுகின்றேன்" என்று சொல்லியது.]

கரு௭. குக்கூ வென்றது கோழி யதனெதிர்
துட்கென் றன்றென் * றூய நெஞ்சம்
தோடோய் காதலர்ப் பிரிக்கும்
வாள்போல் வைகறை வந்தன்றா லெனவே.

எ - து. பூப்பெய்திய தலைமகள் உரைத்தது.

† அள்ளூர் நன்முல்லை.

(ப - ரை.) கோழி—, குக்கூ என்றது - குக்கூவென்று கூவியது; அதன் எதிர் - அதற்கு நேரே, தோள் தோய் காதலர் பிரிக்கும் - எனது தோளை மணந்த தலைவரைப் பிரியச்செய்யும், வாள் போல் - வாளைப்போல, வைகறை வந்தன்று என - விடியற் பொழுது

(பி - ம்.) * றூஉயநெஞ்சம், † அள்ளூர் நன்முலன்.

வந்ததென்று, என் தூய நெஞ்சம் - எனது மாசற்ற நெஞ்சம், துட்கென்றன்று - அச்சத்தை யடைந்தது.

(முடிபு.) கோழி குக்கூவென்றது; நெஞ்சம் துட்கென்றன்று.

(கருத்து.) தலைவனை இனிப்பிரிந்திருத்தல் வேண்டுமென்று அஞ்சுகின்றேன்.

(வி - ரை.) "அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்" என்பது விதியாதலின் தலைவி தான் பூப்பெய்தியதை வெளிப்படையாகக் கூறுதொழிந்தாள். துட்கென்றன்று - துட்கென்றது; துட்கு - அச்சம். தலைவனோடு ஒன்றுபட்டுப் பிறிதொரு நினைவின்றி யமைந்ததாதலின் தூய நெஞ்சாயிற்று.

பூப்புக்காலமாகிய மூன்றுநாளும் தலைவியினது சொற்கேட்கும் அணிமையிலிருத்தலேயன்றி அளவளாவுதல் அறநெறி யன்றாதலின் பூப்பு, தலைவனைத் தோள் தோயாமற் பிரிப்பதாயிற்று;

> 'முந்நாளுங் கூடி உறையப்படுங் குற்றமென்னையெனின் பூப்புப் புறப்பட்டஞான்று நின்ற கரு வயிற்றில் அழியும்; இரண்டாம் நாள் நின்ற கரு வயிற்றிலே சாம்; மூன்றாம் நாள் நின்ற கரு குறு வாழ்க்கைத்தாம்; வாழினுந் திருவின்றாம். அதனாற் கூடப்படா தென்பது;
>
> பூப்புமுதன் முந்நாட் புணரார் புணரின்
> யாப்புறு மரபி னையரு மமரரும்
> யாத்த கரண மழியு மென்ப
>
> எனப் பிறரும் ஓதினாராகலான் அமையாதென்பது' (இறை. 43, உரை)

என்பதனால் பூப்புநாட்களிற் கூட்டமின்மை உணரப்படும்.

ஆல், ஏ : அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

மூ. முந்நாட்பிரிவாகிய பூப்பிடைப் பிரிவு வந்துழித் தலைவி கூறியது (தொல். களவு. 31, ந.); 'பூப்புப் புறப்பட்டஞான்றும் மற்றை நாளுங் கருத்தங்கின் அது வயிற்றில் அழிதலும், மூன்றாம் நாள் தங்கின் அது சில்வாழ்க்கைத்தாதலும் பற்றி முந்நாளுங் கூட்டமின்றென்றார்... ...குக்கூ என்பதனைக் காட்டுவாரு முளர்' (ஷை. கற்பு. 46, ந.)

## ஒப்புமைப் பகுதி

3. தோள் தோய் காதலர் : குறுந். ருஉரு : 6.

4. வாள் போல் வைகறை : குறள், 334.

## தலைவி கூற்று

[தலைவன் இரவுக்காலத்தில் வந்து அளவளாவுங்காலத்து ஒரு நாள் பெருமழை உண்டாயிற்றாக, அவனது வரவுக்குத் தடை நிகழுமோவென அஞ்சிய தலைவி அவ்வச்சத்தைத் தலைவன் வந்தபின்னர் அம்மழையை நோக்கிக் கூறுவாளாய் அவன் கேட்பக் கூறியது.]

கநஅ. நெடுவரை மருங்கிற் பாம்புபட விடிக்குங்
கடுவிசை யுருமின் கழறுகுர லளைஇக்
காலொடு வந்த கமஞ்சூன் மாமழை
ஆரளி யிலையோ நீயே பேரிசை
இமயமுந் துளக்கும் பண்பினை
துணையில ரளியர் பெண்டிரிஃ தெவனே.

எ - து. தலைமகன் இரவுக்குறி வந்துழி, அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

ஔவையார்.

(ப - ரை.) நெடுவரை மருங்கின் - உயர்ந்த மலையின் பக்கத்திலுள்ள, பாம்பு பட இடிக்கும் - பாம்புகள் இறந்துபடும்படி இடிக்கின்ற, கடு விசை உருமின் - மிக்க வேகத்தையுடைய இடியேற்றினது, கழறு குரல் அளைஇ - இடிக்கும் முழக்கத்தோடு கலந்து, காலொடு வந்த - காற்றோடு வந்த, கம சூல் மா மழை - நிறைந்த நீராகிய சூலையுடைய பெரிய மழையே, நீ ஆர் அளி இலையோ - இயல்பாகவே நின்பால் நிறைந்த இரக்கத்தை நீ இப்பொழுது பெறவில்லையோ? பெரு இசை இமயமும் துளக்கும் பண்பினை - பெரிய புகழையுடைய இமயமலையையும் அசைக்கின்ற தன்மையினை உடையாய்; பெண்டிர் துணை இலர் - நின்னால் அலைக்கப்படும் மகளிர் துணைவரைப் பெற்றிலர்; அளியர் - ஆதலின் இரங்கத்தக்கார்; அங்ஙனம் இருப்ப, இஃது எவன் - இங்ஙனம் நீ பெய்து அலைத்தல் எதன் பொருட்டு?

(முடிபு.) மாமழை, நீ அளியிலையோ? இமயமும் துளக்கும் பண்பினை; பெண்டிர் துணையிலர்; அளியர்; இஃது எவன்?

---

(பி - ம்.) * அவ்வையார்.

(கருத்து.) இதுகாறும் தலைவர் வாராமையின் இப்பெருமழையினால் அவர் வரவு தடைப்படுமோவென்று அஞ்சினேன்.

(வி - ரை.) தலைவன் பெருமழையினால் துன்புறுவானோவென்றும் வாரானோவென்றும் அஞ்சிய தலைமகள் தான் அங்ஙனம் அஞ்சியதை இதனால் தலைவனுக்கு உணர்த்தினாள். இங்ஙனம் அஞ்சுதற்குரிய ஒழுகலாற்றை விடுத்து வரைந்துகொண்டு எப்பொழுதும் உடனுறைவதே நன்றென்பது எச்சப்பொருளாதலின், இது வரைவு கடாவியதாகும்.

மழையின் அச்சத்தன்மையை மிகுவித்துக் கூறுவாளாய் அதனைச்சார்ந்த இடியின் கொடுமையையும் உடன்கூறினாள். நடுக்கின்றி நிலைபெறுவதாகிய இமயமும் (புறநா. 2) நின்றால் துளங்குமெனின் பற்றுக் கோடில்லாத யாங்கள் எவ்வளவினேமென்றாள். இமயமும்; உம்மை, உயர்வு சிறப்பு.

இடிமுழக்கம், பெருங்காற்று முதலியவற்றோடு வந்த மழையினால் தலைவனுக்கு வரும் ஏதங்குறித்து அஞ்சுதலையன்றித் தம் மெல்லியல்பாலும் பெண்டிர் அஞ்சுவராதலின் 'அளியர்' என்றாள். பெண்டிரென்று பொதுவகையாற் கூறினும் கருதியது தன்னையே என்க.

துணையிலராளியரென்றமையின், துணையுளராயின் அஞ்சாரென்பதாம். இஃதென்றது அளியின்மையை.

## மேற்கோளாட்சி

3. கம என்னும் உரிச்சொல் நிறைவுப் பொருளில் வந்தது (தொல். உரி. 58, இளம், 59, சே, தெய்வச்.)

5-6. 'மலையைத்துளக்கும் ஆற்றலையுடையாய், காமப்பிணி கூர்ந்தோரை அலைப்பது நினக்குத் தகுவதன்று' என இளிவந்து வாடைக்குக் கூறினமையின், இது தன்கட்டோன்றிய பிணிபற்றி இளிவரவு பிறந்தது (தொல். மெய்ப். 6, பேர்; இ. வி. 578.)

## ஒப்புமைப் பகுதி

1-2. பாம்புபட இடிக்கும் உருமு: (குறுந். கசO : 4-5, உகஅ : 3-4, ருகக : 3-4) ; "நாகத், தணங்குடை யருந்தலை யுடலி வலனேர், பார்கலி நல்லேறு திரிதரும்", "ஈர்ங்குர லுருமி னார்கலி நல்லேறு, பாம்புகவி

னழிக்கும் ", "கேழ்கிளர் ருத்தி யரவுத்தலை பனிப்பப், படுமழை யுருமி னுரற்றுகுரல்", "திருமணி யரவுத்தேர்ந் துழலு, உருமுச்சிவந் தெறியு மோங்குவரை யாறே" (நற். ௩௭ : 8-10, ௧௧௪ : 9-10, ௧௨௯ : 7-8, ௨௫௫ : 10-11) ; "உருமுச்சிவந் தெறிந்த வுரனழி பாம்பின்", "பாம்பின், பைபட விடிக்குங் கடுங்குர லேற்றொடு" (அகநா. ௯௨ : 11, ௩௨௩ : 10-11) ; "இடியே றுண்ட நாகம் போல" (பெருங். ௨. 10 : 112.)

3. காலொடு வந்த மழை : "காலொடு பட்ட மாரி" (நற். ௨ : 9) ; "காற்றுடைக் கனைபெயல்" (கலி. ௪௫ : 4.)

கமஞ்சூன் மாமழை : முருகு. 7.

3-4. மழைக்கு அளித்தன்மையுண்மையைக் கூறுதல் : நற். ௨௧௬ : 5-6.

1-5. மழை பாம்பை வருத்தி மலையைத் துளக்குதல் : "யாங்குச் செய்வாங்கொ றோழி யோங்குகழைக், காம்புடை விடரகஞ் சிலம்பப் பாம்புடன், றோங்குவரை மிளிர வாட்டி வீங்குசெலற், கடுங்குர லேற் றொடு கனைதுளி தலைஇப், பெயலா னாதே வானம்", "முழங்குகடன் முகந்த கமஞ்சூன் மாமழை, மாதிர மனைத்தலை புதையப் பாஅய், ஓங்கு வரை மிளிர வாட்டிப் பாம்பெறிபு" (நற். ௫௧ : 1-5, ௩௪௭ : 1-3.)

மழை மலையைத் துளக்குதல் : "பெருமலை மிளிர்ப்பன்ன காற்று டைக் கனைபெயல்" (கலி. ௪௫ : 4.) (௧௫௮)

---

## தோழி கூற்று

[தலைவன் கேட்கும் அணிமையிலே நின்றாளாக, "தலைவியின் துயரத்தை உணர்ந்து இரங்காதாரை யுடையதாயிற்று இவ்வூர்" என்று கூறும் வாயிலாகத் தலைவியை இற்செறிக்கக் கருதி யிருப் பதைத் தோழி அவனுக்குப் புலப்படுத்தியது.]

௧௫௯. தழையணி யல்கு றாங்கல் செல்லா
நுழைசிறு நுசுப்பிற் கெவ்வ மாக
அம்மெல் லாக நிறைய வீங்கிக்
கொம்மை வரிமுலை செப்புட னெதிரின
யாங்கா குவள்கொல் பூங்குழை யென்னும்
அவல நெஞ்சமொ டுசாவாக்
கவலை மாக்கட்டிப் பேதை யூரே.

எ - து. (1) தலைமகன் சிறைப்புறமாகத் தோழி செறிப்பறிவுறுத்தது.

(2) உயிர் செல வேற்றுவரைவு வரினும் அது மாற்றுதற்கு நிகழ்ந்ததூஉமாம்.

[" உயிர் செல வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணும்" (களவு. 20) தலைவிக்குக் கூற்று நிகழுமென்பது தொல்காப்பிய விதி. இதன்பொருள்: 'இறந்துபாடு பயக்குமாற்றால் தன் றிறத்து நொதுமலர் வரையக் கருதிய ஞான்று அதனை மாற்றுதற்கு நிகழ்ந்த தலைவி கூற்று.']

வடம வண்ணக்கன் பேரிசாத்தன்.

(ப - ரை.) இ பேதை ஊர் - இந்தப் பேதைமையை யுடைய ஊர், தழை அணி அல்குல் - தழையை அணிந்த அல்குலை, தாங்கல் செல்லா - பொறுத்தலாற்றாத, நுழை சிறு நுசுப்பிற்கு - நுணுகிய சிறிய இடைக்கு, எவ்வம் ஆக - துன்பம் உண்டாகும்படி, அ மெல் ஆகம் நிறைய வீங்கி - அழகிய மெல்லிய மார்பகம் நிறையப்பருத்து, கொம்மை வரி முலை - பெருமையையும் தேமலையும் உடைய நகில்கள், செப்புடன் எதிரின - செப்போடு மாறுபட்டன; பூ குழை - பூத் தொழிலையுடைய குண்டலத்தை யணிந்த தலைவி, யாங்கு ஆகுவள் - என்ன துன்பத்தையுடையள் ஆவளோ, என்னும் அவலம் நெஞ்சமொடு - என்று எண்ணும் கவலையையுடைய நெஞ்சத்தோடு, உசாவா - ஏனென்று கேளாத, கவலை மாக்கட்டு - கவலையையுடைய மாக்களை உடையது.

(முடிபு.) இப்பேதையூர் 'பூங்குழை யாங்காகுவள்' என உசாவாக் கவலைமாக்கட்டு.

(கருத்து.) என்தாய் முதலியோர் என் நிலையை உணர்ந்திலர்.

(வி - ரை.) தழை - மகளிர் உடுக்கும் உடை விசேடம். தழையணியல்குலென்றாள் தழையும் ஒருபொறை யென்பது கருதி. "தலைவி தக்க பருவத்தை அடைந்தனளே; இவள் கருத்து யாதோ? இவள் யாரிடத்தில் அன்பு பூண்ட தகைமையினளோ" என்று பிறர் உசாவ வேண்டுமென்பது தோழி கருத்து. உசாவா - உசாவி ஆவன செய்யாத. கவலைமாக்கட்டென்றது, குறிப்பு மொழி; சிறிதும் கவலையற்றவர்களென்னும் நினைவிற்று. தலைவியின் துயரறியும் அறிவின்மையின் மாக்களென்றாள்; மாக்களென்றது செவிலி முதலி

போரை. பேதை யூரென்றது, ஊரிலுள்ளார் தலைவியின் நிலையுணராப் பேதைமையுடையா ரென்றபடி.

தலைவி பருவம் வாய்த்தாளென்னும் காரணம்பற்றி இற்செறிக்கப்படுவதை இதன் முற்பகுதியால் தோழி உணர்த்தினாள் ;

“ முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை யுடையை
அலமர லாயமொ டியாங்கணும் படாஅல்
மூப்புடை முதுபதி தாக்கணங் குடைய
காப்பும் பூண்டிசிற் கடையும் போகலை
பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென
ஒண்சுடர் நல்லி லருங்கடி நீவி ” (அகநா. எ)

என்புழிப் பருவம் வந்த தலைமகளை இற்செறித்துக் காக்கும் செய்தி காணப்படும்.

கொல், ஏ : அசைநிலை.

இரண்டாவது கருத்து :—நொதுமலர் வரைவு நேரின் இவள் எந்நிலையினளாவளெனச் சிறிதும் ஆராயாத மாக்களையுடையது என்று பொருள் கொள்க.

## மேற்கோளாட்சி

மூ. தலைவனோடு தன்திறத்து ஒருவரும் ஒன்று உரையாதவழித் தனது ஆற்றுமையால் தன்னோடும் அவனோடும் பட்டன சில மாற்றம் தலைவி தானே கூறியது (தொல். களவு. 21, இளம். 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. மகளிர் தழையுடை யணிதல் : நற்ந். கஉகு : 3, ஒப்பு.

2. நுழைசிறு நுசுப்பு : நற்ந். எக : 3.

4. கோம்மை வரி முலை : (அகநா. கூகு : 18) ; “ கொம்மை வெம்முலை ”, “ கொம்மை யார்ந்தன ... விழுத்தகு முலைத்தடம் ” (சீவக. 347, 2364.)

நகிலுக்குச் செப்பு : “ முலையும், சூழி மென்முகஞ் செப்புட னெதிரின ” (அகநா. ருகவு : 1-2) ; “ தாமச் செப்பிணை ” (சீவக. 171.)

5. யாங்காதவள்கோல்: (குறுந். ௩௩௭: 6); "யாங்கா குவென் கொலளியேன் யானே" (நற். ௧௫௨: 9); "யாங்கா குவங்கொல் பாண", "யாங்கா குவள்கொ ருனே" (அகநா. ௧௪: 13, ௨௬௦: 11.)

6-7. குறுந். ௧௪௫: 4-5. (௧௫௯)

---

## தலைவி கூற்று

[வரைபொருட்குப் பிரிந்த தலைவன் நீட்டித்தானாக, ஆற்றாமையை யடைந்த தலைவியை நோக்கித் தோழி, "அவர் நின்னை வரைந்து கொள்வர்; நீ ஆற்றியிருப்பாயாக" என, "அவர் வரவேண்டிய பருவத்து வந்தாரிலர்; இனி வரைந்து கொள்வது யாங்ஙனம்?" என்று கவன்று கூறியது.]

௧௬௦. நெருப்பி னன்ன செந்தலை யன்றில்
இறவி னன்ன கொடுவாய்ப் பெடையொடு
தடவி னோங்குசினைக் கட்சியிற் பிரிந்தோர்
கையற நரலு நள்ளென் யாமத்துப்
பெருந்தண் வாடையும் வாரார்
இஃதோ தோழிநங் காதலர் * வரைவே.

எ - து. வரைவு நீட்டிப்ப ஆற்றாளாகிய தலைமகளை நோக்கித் தோழி, வரைவரென ஆற்றுவிப்புழித் தலைமகள் கூறியது.

மதுரை மருதன் இளநாகன்.

(ப - ரை.) தோழி—, நெருப்பின் அன்ன செ தலை அன்றில் - நெருப்பைப்போன்ற சிவந்த தலையையுடைய ஆண் அன்றில், இறவின் அன்ன கொடு வாய் பெடையொடு - இறாமீனை ஒத்த வளைந்த அலகையுடைய பெண் அன்றிலோடு, தடவின் ஓங்கு சினை கட்சியில் - தடா மரத்தினது உயர்ந்த கிளையின்கண்ணுள்ள கூட்டினிடத்தே யிருந்து நரலும் - ஒலிக்கின்ற, நள்ளென் யாமத்து - செறிந்த இடையிரவையுடைய, பெரு தண் வாடையும் - பெரிய தண்மையையுடைய வாடைக் காற்று வீசும் கூதிர்க் காலத்திலும், வாரார் - தலைவர் வந்தாரிலர்; நம் காதலர் வரைவு - நம் தலைவர் என்னை மணந்து கொள்வது, இஃதோ - இதுதானோ?

---

(பி - ம்.) * வரவே.

(முடிபு.) தோழி, வாடையும் வாரார்; காதலர் வரைவு இஃதோ?

(கருத்து.) தலைவர் இன்னும் வந்திலர்; வரைவரெனக் கருது தல் எங்ஙனம்?

(வி - ரை.) செந்தலையென்றது செஞ்சூட்டை; தலை: ஆகு பெயர்; "பூந்தலை யன்றில்" (ஐங். ஐம். 41) என்பதற்குப் பழைய உரையாசிரியர், 'செம்பூப் போலுஞ் சூட்டினையுடைய பெடையன் றில்' என்றெழுதியது காண்க. தடவென்பது ஒரு மரம்; இதன் இலையைத் தைத்து உண்கலமாகக் கொள்ளும் வழக்குக் காளத்தி முதலிய இடங்களிற் காணப்படுகிறது; "தடவும் பிடவுந் தாழச் சாய்த்து" (பெருங். க. 51 : 43.) ஆண் அன்றில் பெடையோடு மகிழ்ந்து நரலுதல் கேட்டு, 'இப்பறவை பெற்றபேறு யாம் பெற் றிலமே!' எனத் தனித்தார் இரங்குவராதலின், 'பிரிந்தோர் கையற நரலும்' என்றாள்.

வாடையும்: உம்மை, உயர்வு சிறப்பு; தலைவர் வரைவு இன்றியமை யாததாகிய இக்காலத்தும் அவர் வந்திலர்; இனி வருவரென்று துணி தல் யாங்ஙனமென்றாள் தலைவி. 'தலைவர் வருதலையே கண்டோ மில்லை; இனி வந்து வரைவரென நீ கூறுவது எங்ஙனம் நிகழும்?' என்று தோழியை நோக்கிக் கூறினாள். இஃதோ - இந்நிலையோ.

## ஒப்புமைப் பகுதி

1. செந்தலையன்றில்: "சேவ லோடுறை செந்தலை யன்றிலின், நாவி னுல்வலி யெஞ்ச நடுங்குவாள்" (கம்ப. சூர்ப்ப. 76.)

நெருப்பின் அன்ன செந்தலையன்றில்: "எரியகைந் தன்ன செந்தலை யன்றில்" (தொல். களவு. 21, ந. மேற்.)

1-2. அன்றிலின் கோடுவாய்: "எங்குவயி ரிசைய கொடுவா யன் றில்" (குறிஞ்சிப். 219); "கொடுவாய்ப் புணரன்றில்" (கைந்நிலை, 57.)

4. நள்ளென்யாமம்: குறுந். சுஉ: 1, ஒப்பு; நெடுநல். 186; நற். உஉ : 11, கச஖ : 10, களஅ : 8, கஅக : 3, உஅஎ : 9, ௩௨௩ : 12 ; ஐங். ௩உச : 3; அகநா. கoஉ : 12, கஉக : 2, கசஉ : 20, கஎo : 12, உஎக:6.

1-4. அன்றில் யாமத்து நரலுதல்: (குறுந். கஎஎ : 1-4, ௩oக : 1-4); "பெடைபுண ரன்றி லியங்குகுர லளைஇக், கங்குலுங் கையறவு தந் தன்று", "இன்னுந், தமியேன் கேட்குவென் கொல்லோ, பரியரைப்

பெண்ணை யன்றிற் குரலே", "ஒலியவிந் தடங்கி யாம நள்ளென........ மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத், துணைபுண ரன்றி லுயவுக் குரல் கேட்டொறும், துஞ்சாக் கண்ண ரெடச் சாஅய், நம்வயின் வருந்து நன்னுத லென்ப", "மையிரும் பனைமிசைப் பைதல வுயவும், அன்றிலு மென்புற நரலும்" (நற். கூ௨ : 7-8, உகஅ : 9-11, ௩0௩ : 1-7, ௩௩௫ : 7-8) ; "கழுதுகண் படுக்கும் பானாட் கங்குல், எம்மினு முயவுதி செந்தலை யன்றில்" (தொல். களவு. 16, ந. மேற். "இருள்வீ".)

5. பெருந்தண்வாடை : நற். ௩௫ : 5, ஒப்பு. (கசூ0)

---

## தலைவி கூற்று

[தாய் உறங்காமல் விழித்திருந்தமையால் தலைவன் இரவில் வந்தும் அவனைக் காணுதற்கு இயலாத தலைவி மறுநாள் அவன் வந்து மறைவில் நிற்பதை யறிந்து, "நேற்று அன்னை விழித்திருந்தாள். தலைவன் வந்தானென்பதை யான் உணர்ந்தும் பயனிலதாயிற்று" என்று தோழியை நோக்கிக் கூறியது.]

கசூக. பொழுது மெல்லின்று பெயலு மோவாது
கழுதுகண் பனிப்ப வீசு மதன்றலைப்
புலிப்பற் றாலிப் *புதல்வற் புல்லி
† அன்ற வென்னு மன்னையு மன்றே
யென்மலைந் தனன்கொ றானே தன்மலை
ஆர நாறு மார்பினன்
மாரி யானையின் வந்துநின் றனனே.

எ - து. இரவுக்குறிக்கண் வந்த தலைமகனைக் காப்புமிகுதி யான் எதிர்ப்படப் பெறாத தலைமகள், பிற்றைஞான்று தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

நக்கீரர்.

(ப - ரை.) தோழி, பொழுதும் எல் இன்று - சூரியனும் விளக்கம் இலனாயினன் ; பெயலும் - மழையும், ஓவாது - ஒழியாமல், கழுது கண்பனிப்ப - பேய்கள் கண்ணை அடிக்கடி கொட்டி நடுங்கும்படி, வீசும் - வேகமாகப் பெய்யும் ; அதன்தலை - அதற்குமேல், அன்னையும் - தாயும், புலி பல் தாலி - புலிப்பற்கோத்த தாலியை யணிந்த,

---

(பி-ம்.) * புதல்வர்ப் புல்லி. † அன்றயென்னும்.

புதல்வன் புல்லி - மகனைத் தழுவி, அன்னு என்னும் - அன்னையே யென்று என்னை விளிப்பாள்; அப்பொழுது, தன் மலை ஆரம் நாறும் மார்பினன் - தனது மலையில் விளைந்த சந்தனம் மணக்கின்ற மார்பை யுடைய தலைவன், மாரி யானையின் - மழையில் நனைந்த யானையைப் போல, வந்து நின்றனன் - இவ்வீட்டுப்புறத்தே வந்து நின் ருன்; அன்னே -அந்தோ! என் மலைந்தனன் கொல் - அவன் எதனைச் செய்ய மேற்கொண்டானே!

(முடிபு.) பொழுதும் எல்லின்று; பெயலும் வீசும்; அன்னை யும் அன்னுவென்னும்; மார்பினன் வந்து நின்றனன்; என்மலைந்த னன் கொல்?

(கருத்து.) நேற்றுக் காப்புமிகுதியால் தலைவனைக் காணப் பெற்றேனில்லை.

(வி-ரை.) பொழுது - சூரியன்; "முழுநீர்ப் பொய்கையிற் பொழுதொடு விரிந்த, செழுமலர்த் தாமரை" (பெருங். உ. 16: 32-3.) "எல்லு மெல்லின்று" (குறுந். கஎக: 2, ௩௯௦: 1) என்று பின்வரு வதுங் காண்க. "எல்லினிர் புகினே" (மலைபடு. 416) என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'இராக்காலத்தை யுடையிராய்' என எல்லினிரென் பதைக் குறிப்பு வினையாகக் கொண்டனர்; அதை ஆராய்கையில், எல் லின் றென்பதே இருண்டதென்னும் பொருள்தரும் ஒருசொல் லென்று கருதவும் இடமுண்டு. இராக்காலத்தில் பேய்கள் அச்சமின் றித் திரிவன; அவையும் கண்பனித்தன வென்பது பெயலின் கடுமை மிகுதியை உணர்த்தியது. புலிப்பற்றாலி - புலிப்பல்லைப் பொன்னிலமைத்துச் சிறுவர் மார்பிலணியும் ஓர் ஆபரணம்.

'புதல்வனைப்புல்லிய தாய் அன்னுவென்று என்னையும் அழைத்த லின் நானும் அவளருகில் இருத்தல் இன்றியமையாததாயிற்று' என்று தலைவி புலப்படுத்தினாள். அன்னையென்றது விளியேற்று, "முறைப்பெயர் மருங்கி னையெ னிறுதி, ஆவொடு வருதற் குரியவு முளவே" (தொல். விளி. 9) என்னும் விதிப்படி அன்னுவென வந் தது. புதல்வனைப் புல்லி அவனையே அன்னு வென்னுமென்று பொருள் கொள்ளுதலும் ஒன்று. தலைவன் தன்மலையில் விளைந்த சந்தனத்தைப் பூசி வந்தகாலத்தில் அதன் மணத்தை யறிந்தவளாத லின், அவன் புறத்தே வந்துநின்றானெனினும் அச் சந்தன மணத் தால் அவன் வரவை யறிந்தாள்.

என் மலைந்தனன் கொலென்றது, அவன் நினைந்தது நிறைவேற வில்லையென்னும் நினைவிற்று. கொல்: ஐயம். தான், ஏ: அசை நிலைகள்.

## மேற்கோளாட்சி

1-4. தலைவியிடத்துக் காதல் கையிகந்து பெருகுதலால் துயிலா நின்றுழியும் ஒன்று கூறிச் செவிலி அரற்றியது இது; 'பொழுது மெல்லின் றென்பதனுள் புதல்வற்புல்லி அன்னையென்று தலைவியை விளித்தது கனவின் அரற்ற லாயிற்று' (தொல். களவு. 24, ந.)

7. உவமையில் திணை மயங்கிவந்தது (தொல். உவம. 6, பேர்.)

5-7. துஞ்சிச் சேர்தல் என்னும் மெய்ப்பாடு வந்தது; 'என்ன காரியம் மேற்கொண்டு வந்தானென்றமையின் இது துஞ்சிச் சேர்தலாயிற்று; அல்லாக்கால் அங்ஙனஞ் சொல்லுதல் அன்பழி வெனப்படும்' (தொல். மெய்ப். 23, பேர்; இ. வி. 580.)

மு. காப்பு மிகுதிக்கண் மனையகப்பட்டுக் கலங்கி உணர்வு அழிந்த வழித் தலைவி ஆராய்ச்சி யுடையதாகிய அருமறையினைத் தோழிக்குக் கூறியது (தொல். களவு. 21, இளம், 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. பொழுதும் எல்லின்று: "எல்லின்று பொழுதே" (நற். ௨௬௪: 6, அகநா. ௨௨௪: 1); "எல்லு மெல்லின்று" (அகநா. ௧௧௦: 11, ௬௭௦: 2.)

3. புலிப்பற்றலி: "புலிப்பற் கோத்த புலம்புமணித் தாலி" (அகநா. ௭: 18); "புலிப்பற் றாலிப் புன்றலைச் சிறாஅர்" (புறநா. ௬௭௪: 9); "மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற, மாலை வெண்பற் றாலி" (சிலப். ௧௨: 27-8); "போதிற் பொலியுந் தொழிற்புலிப் பற்குரற் பொற்றொடியே" (சிற். 239.)

6. ஆரம் நாறும் மார்பினன்: குறுந். ௧௬௮: 7, ௬௨௧: 1; கலி. ௫௨: 7, 15.

7. யானை தலைவனுக்கு: குறுந். ௨௪௪: 2; அகநா. ௬௦௮: 15.

மாரியானை: நற். ௧௪௧: 2. (௧௬௧)

## தலைவன் கூற்று

[தலைவியைப் பிரிந்த தலைமகன் தான் மேற்கொண்ட செயல் முடித்து மீளும்பொழுது வழியில் அரும்பியிருந்த முல்லையைப் பார்த்து, "நீ தனித்திருப்போரை நோக்கி அரும்பால் எள்ளி நகையாடல் தகுமோ?" என்று கூறியது.]

கசுஉ. *கார்புறந் தந்த நீருடை † வியன்புலத்துப்
பலர்புகு தரூஉம் புல்லென் மாலை
முல்லை வாழியோ முல்லை நீநின்
சிறுவெண் முகையின் முறுவல் கொண்டனை
நகுவை போலக் காட்டல்
தகுமோ மற்றிது தமியோர் மாட்டே.

எ - து. வினை முற்றி மீளுந் தலைமகன் முல்லைக்குரைப்பானாய் உரைத்தது.

[வினைமுற்றி - தான் தலைவியைப் பிரிந்து செல்லுதற்குக்காரணமான செயல் நிறைவேறப்பெற்று.]

கருவூர்ப் பவுத்திரன்.

(ப - ரை.) முல்லை - முல்லையே, வாழி - நீ வாழ்வாயாக! முல்லை - முல்லையே, கார் புறந்தந்த - மேகத்தாற் பாதுகாக்கப்பெற்ற நீருடை வியன்புலத்து - நீரையுடைய அகன்ற முல்லைநிலத்தின்கண், பலர் புகுதரும் புல் என் மாலை - பலர் தம் இல்லத்திற் புகும் ஒளியிழந்த மாலைக் காலத்தில், நீ நின் சிறுவெள் முகையின் - நீ நினது சிறிய வெள்ளிய அரும்புகளினால், முறுவல் கொண்டனை - புன்னகை கொண்டாய்; தமியோர் மாட்டு - தலைவியரைப் பிரிந்த தனிமையையுடையோர்பால், நகுவை போல காட்டல் இது தகுமோ - எள்ளி நகைப்பாய் போலக் காட்டுதலாகிய இது நினக்குத் தகுமோ?

(முடிபு.) முல்லை, வாழி! முல்லை, புலத்து மாலையில் நீ முகையின் முறுவல்கொண்டனை; தமியோர்மாட்டு நகுவைபோலக் காட்டல் தகுமோ?

(கருத்து.) நான் தலைவியைப் பிரிந்தமையை இகழ்ந்து என்னைச் சிரிப்பதுபோல் இம்முல்லைக்கொடிகள் பூத்தன.

---

(பி - ம்.) * கார்புனந்தந்த. † வியன்புனத்துப்.

(வி - ரை.) கார் - பெய்யும் நிலையிலுள்ள மேகம். தம்தம் செயல் முடிந்து மாலையில் யாவரும் வீடுபுகுவராதலின், 'பலர் புகுதரூஉம் மாலை' என்றான். தலைவியோடு சேரப்பெற்றிலனாதலின் அவனுக்குப் புல்லென் மாலையாயிற்று. காம மயக்கத்தால் முல்லையை நகைப்பதுபோலக் கொண்டு இது கூறினான்.

வாழியென்றது குறிப்புமொழி. நகுதலாவது, இந்தக் கார்ப் பருவத்திலும் தலைவியைச் சேராது தனித்தனையே யென்று எள்ளி நகுதல். தமியோரென்று பன்மையிற் கூறினும் கருதியது தன்னையே யென்க.

வாழியோ: ஓ, அசைநிலை. மற்று, ஏ: அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

2. புல்லென் மாலை: அகநா. ௨௬௪: 14; பு. வெ. 296.

3. முல்லையை முன்னிலைப்படுத்திக் கூறுதல்: "நின்னுடைக் கேண்மை யெவனோ முல்லை" (தொல். அகத். 3, ந. மேற்.)

2-3. மாலையில் முல்லை மலர்தல்: குறுந். ௧௦௮: 4-5, ஒப்பு.

1-3. கார்புறந்தந்த புலத்து முல்லை: குறுந். ௧௨௬: 3, ஒப்பு.

3-5. முல்லை நகுதல்: குறுந். ௧௨௬: 3-5, ஒப்பு; ௧௮௬: 2-3.

(௧௬௨)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவினால் வருந்துந் தலைவி காமமிகுதியாற் கடலை நோக்கி, "நீ நள்ளிரவிலும் ஒலிக்கின்றனையே; யாரால் வருத்த முற்றாய்?" என இரங்கிக் கூறியது.]

௧௬௩. யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடுபரந் தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
வெள்வீத் *தாழை திரையலை
நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே.

---

(பி - ம்.) * தாழைத்திரை.

எ - து. தன்னுட் கையாறெய்திடு கிளவி.

[கையாறு - செயலறுதல்.]

அம்மூவன்.

(ப-ரை.) கடலே—, பூழியர் - பூழிநாட்டாரது, சிறு தலை-சிறிய தலையையுடைய, வெள்ளை தோடு பரந்தன்ன - வெள்ளாட்டின் தொகுதி பரவினாற்போன்ற, மீன் ஆர் குருகின் - மீனை உண்ணும் கொக்குகளையுடைய, கானல் பெரு துறை - சோலை சூழ்ந்த பெரிய துறையினிடத்து, வெள் வீ தாழை - வெள்ளிய பூவையுடைய தாழையை, திரை அலை - அலைகள் அலைக்கின்ற, நள்ளென் கங்குலும்- நடு இரவிலும், நின் குரல் கேட்கும் - நினது ஆரவாரம் செவிப்படும்; யார் அணங்கு உற்றனை - நீ யாரால் வருத்தமடைந்தாய்?

(முடிபு.) கடலே, கங்குலும் நின்குரல் கேட்கும்; யார் அணங் குற்றனை?

(கருத்து.) கடலே, நீ யார் பிரிவுபற்றி வருந்துகின்றாய்?

(வி-ரை.) தலைவனைப் பிரிந்த காம மயக்கத்தால் கடலைப் பார்த்துத் தலைவி கூறியது இது. நள்ளென் கங்குலிலும் துயிலாமல் அரற்றும் நிலையையுடைய அவள் கடலையும் தன்னைப் போன்றதெனக் கருதி, "யான் ஒரு தலைவனால் அணங்குற்றதுபோல நீயும் ஒரு தலைவனால் அணங்குற்றனைபோலும்! அத்தலைவன் யார்?" என்று வினவினாள்.

பூழிநாட்டினர் ஆட்டுநிரையுடையரென்ற செய்தி, "பூழியர், உருவத் துருவி னண்மேய லாரும்" (நற். கசுஉ : 3-4) என்றவிடத்தும் காணப்படுகின்றது. வெள்ளை - வெள்ளாடு (மலைபடு. 414, ந.) கானலம் பெருந்துறை: அம், சாரியை. கானல் - கடற்கரைச்சோலை. வெள்வீத் தாழை யென்றாள் செந்தாழையும் உண்மையின்.

நள்ளென் கங்குலில் நின்குரல் கேட்குமென்றமையால் அதனைக் கேட்பாளாகிய தலைவியும் அந்நள்ளிரவில் துஞ்சாமை பெறப்படும்.

## மேற்கோளாட்சி

மு. கடலொடு கவலல் (களவியற்.)

## ஒப்புமைப் பகுதி

2. சிறுதலை வெள்ளைத்தோடு : "இடையன், சிறுதலை யாயமொடு குறுகல் செல்லா" (புறநா. திச : 11-2.)

வெள்ளை : அகநா. கoச : 9, கஙிசு : 14.

ஆட்டின் தோடு : "ஆடுதலைத் துருவின் றோடு" (அகநா. உஎச : 4.)

3. மீனூர் தருத : அகநா. சo : 3.

கானலம் பெருந்துறை : அகநா. கoo : 3; * உஅo : 14.

3, மு. அகநா. கoo : 4.

4. தாழையின் மலர் திரையால் அலைக்கப்படுதல்: "தயங்குதிரை பொருத தாழை வெண்பூ" (குறுந். உஉசு : 5.)

5. நள்ளென் கங்குல் : குறுந். சு : 1, ஒப்பு; கசுo : 4, ஒப்பு.

மு. "பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடல்
தூவறத் துறந்தனன் றுறைவனென் றவன்றிறம்
நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்
காதல்செய் தகன்றாரை யுடையையோ நீ"

(கலி. கஉக : 8-11);

"மணிநிறநெய்த விருங்கழிச் சேர்ப்பன்
அணிநல முண்டகன்றா னென்றுகொ லெம்போற்
றிணிமணல் லெக்கர்மே லோதம் பெயரத்
துணிமுந்நீர் துஞ்சா தது" (ஐந். எழு. 60);

"பூங்கணை வேளைப் பொடியாய் விழவிழித் தோன்புலியூர்
ஓங்கணை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத்
தீங்கணைந் தோரல்லுந் தேறாய் கலங்கிச் செறிகடலே
ஆங்கணைந் தோர்நின் னையுமுள ரோசென் றகன்றவரே"

(சிற். 179);

"காமுற்று யாமன்றே காளத்தி யான்கழற்கே
யாமுற்ற துற்று யிருங்கடலே—யாமத்து
ஞாலத் துயிரெல்லாங் கண்டுஞ்ச நள்ளிருள்கூர்
காலத்துந் துஞ்சாதுன் கண்" (கைலைபாதி. 64);

"தன்போற் சினத்துரு மேந்திய கோன்கன்னித் தண்டுறையும்
பொன்போன் மலர்புன்னைக் கானலு நோக்கிப் புலம்புகொண்ட
என்போ லிரவினெல் லாந்துயி லாதுநின் றேங்குதியால்
அன்போ டொருவற் கறிவழிந் தாயோ வலைகடலே"

(பாண்டிக்.)

* அம்மூவனார் பாட்டு.

“உன்னையு நீத்தகன்ற ருண்டோ வுடல்கருகிப்
புன்னை கமழும் பொருகடலே—என்னைப்போல்
நெஞ்சா குலம்பெருகி நீயு மிரவெல்லாம்
துஞ்சாத தென்கொலோ சொல்” (கிளவித்தெளிவு.)

குறிப்பு:—இத்தகைய செய்யுட்கள் பல பிற்காலத்துப் பிரபந்தங்களில் உண்டு. (கசுந.)

---

## காதற்பரத்தை கூற்று

[தலைவி தன்னைப் புறங்கூறினளெனக் கேட்ட காதற்பரத்தை, தலைவிக்குப் பாங்காயினர் கேட்பத் தன்தோழியை நோக்கிக் கூறுவாளாய், “தலைவி குறை கூறுதற்குரிய குற்றம் உடையேமெனின் எம்மைக் கடல் வருத்துக” என்று சொல்லியது.]

கசுச. கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாகு
துணர்த்தேக் கொக்கின் றீம்பழங் கதூஉம்
தொன்றுமுதிர் வேளிர் குன்றூர்க் குணாது
தண்பெரும் பவ்வ மணங்குக தோழி
மனையோள் மடமையிற் புலக்கும்
அனையே மகிழ்நற்கியா மாயின மெனினே.

எ - து. காதற்பரத்தை தலைமகட்குப் பாங்காயினர் கேட்ப உரைத்தது.

[ஒப்பு: அகநா. எசு, கருத்து.]

மாங்குடி மருதன்.

(ப - ரை.) தோழி —, மனையோள் மடமையின் புலக்கும் அனையேம் - தலைவி தன் அறியாமையாற் புலப்பதற்குக் காரணமாகிய அத்தன்மையேமாக, மகிழ்நற்கு - தலைவன்திறத்து, யாம் ஆயினம் எனின் - நாம் ஆயினேமாயின், கணை கோடு வாளை - திரண்ட கொம்பையுடைய வாளை மீனினது, கம சூல் மடம் நாகு - நிறைந்த கருப்பத்தையுடைய மடப்ப மிக்க பெண்ணானது, துணர் தேக்கொக்கின் - கொத்தையுடைய தேமாவினது, தீ பழம் - உதிர்ந்த இனிய

---

(பி - ம்.) * தொன்று முதுவேளிர்,

பழத்தை, கதூஉம் - கவ்வுதற்கிடமாகிய, தொன்றுமுதிர்வேளிர் - மிகப் பழைய வேளிருக்குரிய, குன்றூர் குணஅது - குன்றூருக்குக் கிழக்கின் கண்ணுள்ளதாகிய, தண் பெரு பவ்வம் - தண்ணிய பெரிய கடல், அணங்குக - எம்மை வருத்துவதாக.

(முடிபு.) தோழி, மனையோள் புலக்கும் அனையேம் மகிழ்நற்கு யாம் ஆயினம் எனின், பவ்வம் அணங்குக.

(கருத்து.) தலைவி அறியாமையால் எம்மைக் குறைகூறுகின்றாள்.

(வி - ரை.) கோடு - பக்கமுமாம். துணரென்றது மலர்க்கொத்துக்கேயன்றிக் காய்க்கொத்து பழக்கொத்து ஆகியவற்றிற்கும் வரும்; "பைம்பாகற் பழந்துணரிய, செஞ்சுளைய கனிமாந்தி" (பொருந. 191-2) என்பதன் உரையைப் பார்க்க. தேக்கொக்கு - தேமாவென்னும் சாதி. நீரளவுந் தாழ்ந்த பழக்கொத்திலுள்ள கனியை வாளை கவ்வுமென்பதும் பொருந்தும். தொன்றுமுதிர் வேளிர் - மிகப் பழங்காலமுதல் இந்நாட்டில் இருந்து பழமையுற்ற வேளிர்.

பவ்வம் அணங்குகவென்றது யாம் செய்த குற்றத்திற்குரிய தண்டமாகக் கடல் எம்மை வருத்துக வென்றபடி; கடல் தன்பாலுள்ள தெய்வத்தால் எம்மை வருத்துகவெனலும் ஒன்று.

மனையினிடத்தே இருப்பவளுக்குப் புறத்தே நிகழும் செய்தி அறிதற் கியலாதென்னும் நினைவினளாதலின் மனையோளென்றாள். மடமை - அறியாமை. புலத்தல்: 'இவள் என் கொழுநனை வலிதின் நயப்பித்துக்கொண்டு புறம்போகாவாறு செய்தனள்' என்று பழி கூறி வெறுத்தல்.

ஆயினமெனினென்றது ஆகாமையை உணர்த்தி நின்றது.

'வாளைநாகு தான் இருந்தவிடத்தே யிருந்து முயற்சி சிறிதுமின்றி எளிதில் கொக்கின் பழத்தைப் பெற்றதுபோல, யாம் முயலாமே தலைவன் வலியவந்து எம்மை நயப்ப யாம் அவனோடு உறைந்தேம்; ஆதலின் யாம் குறைகூறற்குரியேமல்லேம்' என்று காதற்பரத்தை கூறினள்.

## மேற்கோளாட்சி

1. நாகென்பது இளமைக்கு வரும் (தொல். மரபு. 26, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. கணைக்கோட்டு வாளை : நற். கூசo : 4; அகநா. கஉகூ : 8; புறநா. உசக : 2.

2. தேக்கோக்கு : குறுந். உகூ : 6, ஒப்பு.

1-2. வாளை மாம்பழத்தை உண்ணுதல் : குறுந். அ : 1-2, ஒப்பு.

3. தோன்றுமுதிர் வேளிர் குன்றூர் : நற். உஅo : 8. (கசுச)

---

## தலைவன் கூற்று

[தோழியினிடம் இரந்து நின்றும் உடம்பாடு பெறாத தலைவன் தலைவிபாற் சென்ற தன் நெஞ்சை நோக்கி, "ஒருமுறை விரும்பி அறிவிழந்தாய்; மீண்டும் விழைகின்றாய்!" என்று கூறியது.]

கசுரு. மகிழ்ந்ததன் றலையு நறவுண் டாங்கு
விழைந்ததன் றலையு நீவெய் துற்றனை
அருங்கரை நின்ற வுப்பொய் சகடம்
பெரும்பெய றலையவீந் தாங்கிவள்
இரும்பல் கூந்த லியலணி கண்டே.

எ - து. பின்னின்ற தலைமகன், மறுக்கப்பட்டுப் பெயர்த்துங் கூடலுறு நெஞ்சிற்குச் சொல்லியது.

[பின்னிற்றல் - வழிபடுதல்.]

பரணர்.

(ப - ரை.) நெஞ்சே, அருகரை நின்ற - ஏறுதற்கரிய கரையில் நின்ற, உப்பு ஒய் சகடம் - உப்பைச் செலுத்துகின்ற வண்டி, பெரு பெயல் தலைய - பெரிய மழை பொழிந்ததனால், வீந்தாங்கு - அழிந்ததுபோல, இவள் இரு பல் கூந்தல் - இவளது கரிய பலவாகிய கூந்தலின், இயல் அணிகண்டு - இயற்கை அழகைக் கண்டு, மறுக்கப் பட்டோமென்று அன்பு ஒழியாயாய்க் காமத்தால் நாண் அழிந்து,

(பி - ம்.) * பெரும்பெயற் றலையவிந் தாங்கு, பெரும்பெயறலைய வீஇந் தாங்கு.

மகிழ்ந்ததன் தலையும் - கள்ளுண்டு அறிவிழந்து களித்ததன்மேலும், நற உண்டாங்கு - கள்ளை உண்டாற்போல, நீ—, வெய்து உற்றனை - விருப்பத்தை அடைந்தாய்.

(முடிபு.) சகடம் வீந்தாங்கு இவள் கூந்தல் அணிகண்டு நற வுண்டாங்கு நீ வெய்துற்றனை.

(கருத்து.) நீ தலைவியோடு அளவளாவ விரும்பல் மயக்கத்தின் பாற்பட்டது.

(வி - ரை.) தலைவியைப் பாங்கிவாயிலாக அடையவிரும் பிய தலைவன் அவள்பாற் பணிந்து குறையிரந்தும் அவள் உடம் படாத காலத்து, விருப்பம் மிக்க தன்னெஞ்சை நோக்கிக்கூறியது இது.

மகிழ்தல் - கள்ளுண்டார் அறிவிழந்து நின்று களித்தல் (குறள், 1281, பரிமேல்.) ஒருமுறை கள்ளுண்டு மீட்டும் உண்ணும் வேட்கை யைக் காமமுடையார் நிலைக்கு உவமைகூறும் வழக்கு,

"களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது" (குறள், 1145)

என்பதிலும் காணப்படும்.

வெய்துறுதல் - விருப்புறுதல் (குறுந். ஙகூ : 6); வெம்மை விருப்பமாதல்போல அதன் வேறு வாய்பாடாகிய வெய்தும் விருப்ப மாயிற்று; வெய்துறல் - வெப்பத்தையடைதலெனலுமாம் (பெருங். க. 35 : 51.)

உப்பொய் சகடமென்பதை, சகடம் ஒய்த உப்பென்று மாறிக் கூட்டுக; "குடிமிய வாகபிறர் குன்றுகெழு நாடே" (புறநா. ருஅ : 32) என்றவிடத்து, நாடுகெழுகுன்றெனக் கூட்டிப் பொருள்செய்தல் போல. ஒய்தல் - செலுத்துதல் (புறநா. எ௦ : 17, உரை.)

'பெரும்பெயற்றலை யவிந்தாங்கு' என்ற பாடத்துக்குப் பெரிய மழையினிடத்து அழிந்ததுபோலவெனப் பொருள் கொள்க. இவ ளென்று தலைவியைச் சுட்டினன், நெஞ்சிற்கணியளாக விருத்தல் பற்றி (புறநா. எஉ : 2, உரை.) ஐந்து பிரிவாக உள்ளதாதலின் பல்கூந்த லென்றான். வெய்தாம் அக்காயவிடாய் தீர்த்தற்குக் கூந்தலின் நிழல் உதவுதலின் கூந்தலணிகண்டு நெஞ்சு விரும்பியது.

உப்பொய் சகடமானது பெருமழையால் அழிந்தது போல நீ நாணும் உரனும் அழிந்தாயெனவும், ஒருமுறை கள்ளுண்டான்

நாணும் அறிவும் அற்று மயங்கினும் அதனை உணராது மீண்டும் உண்டுமகிழ்ந்தது போல ஒருமுறை தலைவியை விரும்பி இத்தோழி பாற்பணிந்து குறையிரந்து நாணழிந்து நின்றும் அமையாமல் மீண்டும் விரும்பினே னெனவும் உவமைகளை விரித்துக்கொள்க.

## ஒப்புமைப் பகுதி

1. மகிழ்ந்ததன் றலையும் நறவுண்ணுதல்: "களித்தார்க்குக், கள் ளற்றே" (குறள், 1288.)

1-2. காமம் உற்றருக்குக் கள்ளுண்போர் உவமை: "உட்கொண் டரற்று முறுபிணி தலைஇக், கட்கொண் டாங்குக் களிநோய் கனற்ற", "நறவினை தேற லுறுபிணி போலப், பிறிதிற் றீராப் பெற்றி நோக்கி" (பெருங். க. 35 : 50 - 51, உ. 16 : 63-4.)

3. உப்போய் சகடம்: "நோன்பகட் டுமண வொழுகை" (சிறுபாண். 55); "பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச், சில்பத வுணவின் கொள்ளை சாற்றி" (பெரும்பாண். 63-4); "உப்பின் கொள்ளை சாற்றி, நெடுநெறி யொழுகை நிலவுமண னீந்தி" (நற். கஅ௲ : 2-3); "உப்பொ யுமண ரருந்துறை போக்கும், ஒழுகை" (அகநா. ௲0 : 5-6); "உமணர், உப்பொ யொழுகை" (புறநா. ககசு : 7 - 8.)

4. பெரும் பெயல்: குறுந். க௲ : 2, க௲௲ : 3, கசுஅ: 3; முல்லை. 6.

பெயல் தலைய: "தலைப்பெய றலைஇய" (முருகு. 9.)

3-4. உப்பு மழையால் அழிதல்: "கடல்விளை யமுதம் பெயற்கேற் றாஅங், குருகி யுகுதல்" (நற். அஅ : 4-5); "உப்பியல் பாவை யுறையுற் றதுபோல, உக்கு விடுமென் னுயிர்" (கலி. க௲அ : 16-7); "நெடுவெள் ளுப்பி னிரம்பாக் குப்பை, பெரும்பெயற் குருகி யாஅங்கு", * "மிகுபெயல், உப்புச்சிறை நில்லா வெள்ளம் போல, நாணுவரை நில்லாக் காம நண்ணி" (அகநா. உ0சு : 14-5, உ0அ: 18-21); "உப்பின் பெருங்குப்பை நீர்படியி னில்லாகும்" (திரி. 83); "கடும்புன னெருங்க வுடைந்துநிலை யாற்று, உப்புச் சிறைபோ லுண்ணெகிழ்ந் துருகி" (பெருங். ௲. 20: 120-21); "ஒளிநல வுப்புக் குன்ற மூர்புனற் குடைந்த தேபோல்" (சீவக. 813.)

5. இரும்பல் கூந்தல்: குறுந். க௲: 5, ஒப்பு; ஐங். உ௲க: 2, உஅக: 3; அகநா. கசஉ: 18; புறநா. கஉ0: 17. (கசுரு)

* பரணர்பாட்டு.

## தோழி கூற்று

[தாய் முதலியோருடைய பாதுகாப்பின்கண் தலைவி இருத்தலால் தலைவன் அவளைக்கண்டு அளவளாவுதல் அரிதாயிற்றாக, அதனால் உண்டான துன்பத்தைக் குறிப்பிப்பாளாகி, மரந்தையூர் சிறந்ததாயினும் தனிமையினால் வருத்தந் தருவதாகின்றதென்று தோழி கூறியது.]

கசுசு. தண்கடற் படுதிரை பெயர்த்தலின் வெண்பறை
நாரை *நிரைபெயர்ந் தயிரை யாரும்
ஊரோ நன்றுமன் மரந்தை
ஒருதனி வைகிற் புலம்பா கின்றே.

எ - து. காப்பு மிகுதிக்கண் தோழி தலைமகட்கு உரைத்தது.

கூடலூர் கிழார்.

(ப - ரை.) *தண் கடல் படு திரை பெயர்த்தலின்* - குளிர்ந்த கடற்கண்ணே உண்டாகும் அலைகள் மீன்களைப் பெயரச்செய்வதனால், *வெள் பறை நாரை நிரை* - வெள்ளிய சிறகுகளையுடைய நாரையின் வரிசை, *பெயர்ந்து அயிரை ஆரும்* - நீங்கி அயிரைமீனை உண்ணுதற்கிடமாகிய, *ஊர் மரந்தை* - ஊராகிய மரந்தை, *நன்றுமன்* - தலைவனோடு இருக்குங்கால் மிக நன்மையையுடையது; *ஒரு தனி வைகின்* - தலைவனைப் பிரிந்து தனியே தங்குவேமாயின், *புலம்பு ஆகின்று* - வருத்தத்தைத் தருவதற்குக் காரணமாகின்றது.

(முடிபு.) மரந்தை நன்றுமன்; தனிவைகிற் புலம்பாகின்று.

(கருத்து.) தலைவனைப் பிரிந்திருத்தல் துன்பத்துக்குக் காரணமாகின்றது.

(வி - ரை.) திரை மீனைப் பெயர்த்தாலும் நாரை அம்மீன் உள்ள இடத்தே சென்று அதனை ஆர்ந்தது போல, தாயர் முதலியோர் இற்செறித்துக் காப்பிடை வைப்பினும் தலைவன் தலைவியிருக்குமிடத்து வந்து கண்டு இன்புறல் வேண்டுமென்பது குறிப்பு.

மரந்தை இயற்கை யழகால் நன்மையையுடையது; ஆயினும் தலைவன் இல்லாத் தனிமையால் புலம்புடையதாயிற்றென்று கூறலும் பொருந்தும். மரந்தை கடற்றுறைப்பட்டினமாதலின் கடலில் நிகழும்

(பி - ம்.) * நிறைபோத் தயிரை, நிரைபோத் தயிரை.

நிகழ்ச்சியை அதற்கு அடையாக்கினாள். ஒருதனி - மிக்கதனிமை. தமக்கினிய சுற்றத்தார் சூழவிருப்பினும் தலைவனில்வழித் தனிமைத் துன்பம் தோற்றும்; இது புலம்பித் தோன்றலென்னும் மெய்ப்பாடு (தொல். மெய்ப். 18, பேர்.) புலம்பு - தனிமையால் வரும் வருத்தம்.

ஓ, ஏ : அசைநிலைகள். நன்று - முன்பு நன்றாக இருந்தது; மன் - அதுகழிந்ததே யெனலும் பொருந்தும்.

## ஒப்புமைப் பகுதி

1. பறை : குறுந். கஉரு : 5, கஎஉ : 1.

2. நாரை அயிரைமீனை உண்ணுதல் : (குறுந். கஉஅ : 1-3, ஒப்பு); "தடந்தா ளாரை யிரிய வயிரைக், கொழுமீ ளார்கைய" (பதிற். உக : 4-5.)

3. மரந்தை : குறுந். கூச : 6, ஒப்பு.

4. ஒருதனி : மணி. கூ : 31, ச : 9, 96, அ : 27, கரு : 76, கசு : 33, கஅ : 56, உ0 : 94.

ஆகின்று : குறுந். கரு : 4, ஒப்பு, க0ரு : 6.

3-4. தலைவரோடு கூடின் ஊர் நன்று, இன்றேனின் நன்றன்று : "இனிதே காணுநர்க் காண்புழி வாழ்தல், கண்ணுறு விழுமங் கைபோ லுதவி, நம்முறு துயரங் களையா ராயினும், இன்னா தன்றே யவரில் லூரே" (நற். உகசு : 2 - 5); "தமரையில் லார்க்கு, நகரமுங் காடுபோன் றுங்கு" (பழ. 3.) (கசுசு)

---

## செவிலித்தாய் கூற்று

[தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்று வந்த செவிலி நற்றாயினிடத்தில், "தலைவி தலைவன் உவக்கும்படி அட்டு உண்பிக்கின்றாள்" என்று கூறியது.]

கசஎ. முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கங் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குப்புகை * கமழத்
தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவ னுண்டலின் [னே.
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முக

---

(பி - ம்.) * கழுமத்.

எ - து. கடிநகர்ச் சென்ற செவிலித்தாய் நற்றாய்க்குரைத்தது.

[கடிநகர் - தலைவனும் தலைவியும் மணம்புரிந்து கொண்டு இல்லறம் நடத்தும் மனை. சென்ற - சென்று மீண்ட.]

கூடலூர் கிழார்.

(ப - ரை.) தோழி, முளி தயிர் பிசைந்த - முற்றிய தயிரைப் பிசைந்த, காந்தள் மெல் விரல் - காந்தள்மலரைப்போன்ற மெல்லிய விரலை, கழுவுறு கலிங்கம் - துடைத்துக்கொண்ட ஆடையை, கழாஅது உடீஇ - துவையாமல் உடுத்துக்கொண்டு, குவளை உண்கண் - குவளை மலரைப்போன்ற மையுண்ட கண்களில், குய் புகை கமழ - தாளிப்பினது புகை மணப்ப, தான் துழந்து அட்ட - தானே துழாவிச் சமைத்த, தீ புளி பாகர் - இனிய புளிப்பையுடைய குழம்பை, கணவன் - தன் தலைவன், இனிது என உண்டலின் - இனிதென்று உண்பதனால், ஒள்நுதல் முகன் - தலைவியின் முகமானது, நுண்ணிதின் மகிழ்ந்தன்று - நுண்ணிதாக மகிழ்ந்தது.

(முடிபு.) தான் அட்ட பாகரைக் கணவன் இனிதென உண்டலின் ஒண்ணுதல் முகன் மகிழ்ந்தன்று.

(கருத்து.) தலைவி தன் தலைவனுக்கு வேண்டியவற்றை அவன் மகிழும்படி செய்துவருகின்றாள்.

(வி - ரை.) முளிதயிர் - நன்றாக முற்றிய தயிர்; முளிதல் - காய்தல்; நன்றாகக் காய்ந்த பாலால் உண்டாகிய தயிரென்று கொள்க; இதனை, "பாறைபடுதயிர்" (சீவக. 426) என்பர்.

இறுகிய தயிராதலின் தலைவி புளிக்குழம்பு செய்யும்பொருட்டுத் தன் மெல்விரலால் துழாவித் தாளிதம் செய்தாள். விரைவில் அமைக்கவேண்டுமென்னும் விருப்பினளாதலின் தயிர் பிசைந்த கையைத் துடைத்த ஆடையைத் துவைத்தலை மறந்தாள்; கையை ஆடையிற்றுடைத்தது செல்வ மிகுதியால் வந்த இயல்பு. "ஏனது சுவைப்பினு நீகை தொட்டது, வானோ ரமுதம் புரையுமா லெமக்கென" (தொல். கற்பு. 5) விரும்புபவனாதலின் இனிதென உண்டான்.

தலைவி கொண்ட அகமகிழ்ச்சியை முகம் காட்டியது. இயல்பாகவே பொலிவுபெற்ற நுதல் மகிழ்ச்சியாற் பின்னும் பொலிவுடையதாயிற்று. அம்மகிழ்ச்சியை மிகுதியாக வெளிப்படுத்தாமையின் நுண்ணிதின் மகிழ்ந்தன்றென்றாள். அங்ஙனம் வெளிப்படுத்தின் அது தருக்கின்பாற்படும்.

இதனால் தலைவி தற்கொண்டானைப் பேணுந் தகைசிறந்தாளென்பதைச் செவிலி உணர்த்தினளாயிற்று.

## மேற்கோளாட்சி

5-6. கற்பினுள், நகுநயமறைத்தலென்னும் மெய்ப்பாடு வந்தது (தொல். மெய்ப். 19, பேர்.)

மு. அடிசிற்றொழிலின்கண் மகிழ்ச்சியாகிய தலைவியின் மாண்பை அகம்புகல் மரபின் வாயில்கள் தம்முள் தாம் கூறியது (தொல். கற்பு. 11, இளம், ந.); 'இது *பார்ப்பானையும் பார்ப்பனியையுந் தலைவராகக் கூறியது. கடிமனைச் சென்ற செவிலி கூற்று. வாயில் நேர்வித்தலுமாம்' (ஷை. அகத். 24, ந.); உலகியல் வழக்கே வந்தது (ஷை. ஷை. 53, ஷை; இ. வி. 378); செவிலி நற்றாய்க்குத் தலைமகள் நன்மனைவாழ்க்கைத் தன்மை உணர்த்தியது (நம்பி. 203.)

## ஒப்புமைப் பகுதி

1. காந்தள் மெல்விரல் : பொருந. 33.

1-2. தயிர் முதலியவற்றை ஆடையில் துடைத்துக்கொள்ளல்: "நெய்யுங் குய்யு மாடி மையொடு, மாசுபட் டன்றே கலிங்கமுந் தோளும்" (நற். கூஅ0 : 1-2.)

3-4. "கிளரிழை யரிவை நெய்துழந் தட்ட, விளரூ னம்புகை யெறிந்த நெற்றிச், சிறுநுண் பல்வியர் பொறித்த, குறுநடை" (நற். சுக : 7-10.) (கசுஎ)

---

## தலைவன் கூற்று

[பொருள்தேடத் துணிந்த நெஞ்சை நோக்கி, "தலைவியைப் பிரியின் உயிர்வாழ்தல் அரிது" என்று தலைவன் கூறியது.]

கசுஅ. மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை
இரும்பனம் பசுங்குடைப் பலவுடன் பொதிந்து

* இப்பாட்டிற் கூறப்படும் உணவு வகையினால் இங்ஙனம் கொண்டனர்போலும்; பெரும்பாணாற்றுப்படையில் அந்தணர்மனையிற் பாணர் பெறும் உணவைப்பற்றிக் கூறியிருக்கும் பகுதி (304 - 10) இங்கே ஆராய்தற்குரியது.

பெரும்பெயல் விடியல் விரித்துவிட் டன்ன
நறுந்தண் ணியளே நன்மா மேனி
புனற்புணை யன்ன சாயிறைப் பணைத்தோள்
† மணத்தலுந் தணத்தலு மிலமே
பிரியின் வாழ்த லதனினு மிலமே.

எ - து. பொருள்வலிக்கும் நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

[பொருள்வலிக்கும் - பொருள்தேடும் முயற்சியைத் துணியும்.]

சிறைக்குடி யாந்தையார்.

(ப - ரை.) நெஞ்சே, தலைவி, நல் மா மேனி - நல்ல மாமையை யுடைய மேனி, மாரி பித்திகத்து - மாரிக்காலத்தில் மலரும் பிச்சியினது, நீர் வார் கொழு முகை - நீர் ஒழுகும் கொழு விய அரும்புகளில், இரு பனை பசு குடை - பெரிய பசிய பனங்குடை யில், பல உடன் பொதிந்து - பலவற்றை ஒருங்கே வைத்து மூடி, பெரு பெயல் விடியல் - பெருமழை பெய்தலையுடைய விடியற் காலத்தே, விரித்துவிட்டன்ன - விரித்து விட்டாற்போன்ற, நறு தண்ணியள் - நறுமையையும் தண்மையையும் உடையவள்; புனல் புணை அன்ன - நீரில் விடும் தெப்பத்தைப் போன்ற, சாய் இறை பணை தோள் - வளைந்த சந்தினையுடைய பருத்த அவள் தோள்களை, மணத்தலும் - பொருந்துதலும், தணத்தலும் - பிரிதலும், இலம்—; பிரியின் - பிரிவேமாயின், வாழ்தல் - உயிர் வாழ்தல், அதனினும் - அதனைக் காட்டிலும், இலம் - இல்லேம்.

(முடிபு.) மேனி நறுந்தண்ணியள்; தோள் மணத்தலும் தணத்தலும் இலம்; பிரியின் வாழ்தல் அதனினும் இலம்.

(கருத்து.) தலைவியைப் பிரிதல் அரிது.

(வி - ரை.) மாரிக்காலத்தில் அரும்பியதாதலின் நீர்வார் கொழு முகை யாயிற்று. பித்திகம் மாரிக்காலத்தில் அரும்பி மலர்வதென் பதை இந்நூல் கூச - ஆம் செய்யுளாலும் அதன் விசேடவுரையாலும் அறியலாகும். குடை - உட்குழிவாகப் பனையோலையால் அமைக்கப் பட்டதொரு கருவி.

மேனியியல்பையும் தோளியல்பையும் கூறினன், அவற்றாற் கவ ரப்பட்டுப் பிரியமாட்டாமையின். புணை - பேய்க்கரும்பாற் செய்த

(பி - ம்.) * பெரும்புலர்விடியல். † மணத்தொறுந்.

தெப்பம் (கலி. ௫௬ : 20, ந.) சாயிறை - வளைந்த சங்கு (அகநா. ௩௨ : 18, உரை) ; மெல்லிய சங்கெனலுமாம்.

எப்பொழுதும் தோளோடு ஒன்றுபட்டு இருத்தலின், புதிதாக மணத்தலும் பின்பு தணத்தலும் இலமென்றான். அதனினுமென்ற சுட்டு, தணத்தலும்இலமென்பதிலுள்ள இன்மையைச் சுட்டியது.

## ஒப்புமைப் பகுதி

1. மாரிப்பித்திகம் : குறுந். ௯௪ : 1, ஒப்பு.

1, மு. குறுந். * ௨௨௨ : 5.

1-2. மலர்களைப் பனங்குடையிற் பெய்தல் : "அவல்வகுத்த பசுங் குடையாற், புதன்முல்லைப் பூப்பறிக் குந்து" (புறநா. ௩௫௨ : 3-4.)

3. பெரும்பெயல் : குறுந். ௧௯௫ : 4, ஒப்பு.

4. நறுந்தண்ணியள் : குறுந். ௭௦ : 2, ஒப்பு.

நன்மாமேனி : குறுந். ௧௮௫ : 8.

1-4. தலைவியின் மேனிமணத்திற்கு மலர் : குறுந். ௯௨ : 1-4, ஒப்பு.

5. புனற்புணையன்ன தோள் : "எந்தோள்புரை புணையே" (ஐங். ௭௮ : 4) ; "முழங்குநீர்ப் புணையென வமைந்தநின் றடமென்றோள்" (கலி. ௫௯ : 20.)

இறைப்பணைத்தோள் : குறுந். ௨௭௧ : 8.

7. பிரியின்வாழாமை : குறுந். ௩௨ : 6, ஒப்பு.

வாழ்தல் அதனினு மிலம் : "யானுயிர் வாழ்த லதனினு மரிதே" (அகநா. ௯௮ : 30.)

அதனினும் இலம் : புறநா. ௧௯௨ : 13. (௧௯௮)

---

## தலைவி கூற்று

[தலைவன் தன்பால் பரத்தைமை இல்லையென்று தலைவியினிடம் கூறித் தெளிவிக்குங் காலத்து, தலைவி மாறுபட்டு, "எம் உயிர் நீங்குவதாக!" என்று கூறியது.]

---

* சிறைக்குடியாந்தையார் பாட்டு.

கசுக. சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டிற்
றெற்றென விறீஇயரோ வைய மற்றியாம்
நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே
பாணர், பசுமீன் சொரிந்த மண்டை போல
எமக்கும் பெரும்புல வாகி
நும்முமம் பெறேஎ மிறீஇயரெம் முயிரே.

எ - து. (1) † கற்புக்காலத்துத் தெளிவிடை விலங்கியது.

[தெளிவு - தலைவன் தான் யாதொரு குற்றமும் செய்யாமையை எதுவானும் சூளினானும் தலைவி தெளியச் சொல்லுதல். விலங்கியது - தலைவி மாறுபட்டது. இதனை அகப்பொருட் பெருந்திணைக் குரிய துறை யாக்குவர் அகப்பொருள் விளக்கமுடையார் (நம்பி. 243.)]

(2) இனி, தோழி வரைவு நீட்டித்தவழி வரைவுகடாயதூஉ மாம்.

வெள்ளி வீதியார்.

(ப - ரை.) ஐய—, யாம் நும்மொடு நக்க வால் வெள் எயிறு - யாம் நும்மோடு மகிழ்ந்து சிரித்த தூய வெள்ளிய பற்கள், சுரம் செல் யானை - பாலைநிலத்திற் செல்லும் யானையினது, கல் உறு கோட்டின் - மலையைக் குத்திய கொம்பைப் போல, தெற்றென - விரைவாக, இறீஇயர் - முறிவனவாக; எம் உயிர் - எமது உயிர், பாணர் பசுமீன் சொரிந்த மண்டைபோல - பாணர் தாம் பிடித்த பச்சைமீனைப்பெய்த மண்டையைப் போல, எமக்கும் பெரு புலவாகி - எமக்கும் பெரிய வெறுப்பைத் தருவதாகி, நும்மும் பெறேஎம் - உம்மையும் யாம் பெறேமாய், இறீஇயர் - அழிக.

(முடிபு.) ஐய, யாம் நக்க எயிறு இறீஇயர்; எம் உயிர் எமக்கும் புலவாகி நும்மும் பெறேஎம் இறீஇயர்.

---

(பி - ம்.) * எமக்குப்.

† களவுக் காலத்தும் வரைவு நீட்டித்துத் தலைவன் சூளுற்ற வழி அதற்கு நொந்து தெளிவிடை விலங்கல் (தொல். களவு. 20, ந.) உண்மையின், இங்கே அதனின் வேறுபடுத்தக் கற்புக்காலத்தென்பதமைக் கப்பட்டது.

(கருத்து.) இனி, நம்மோடு அளவளாவுதலினும் இறத்தல் நன்று.

(வி - ரை.) தலைவன், "யாம் முன்னொருகால் அன்போடு மகிழ்ந்து பயின்று நகையாடினேமன்றே!" என்று பழமையை நினைவுறுத்தினானாக அது கேட்ட தலைவி, "அங்ஙனம் நம்மோடு நகை செய்த எம் பற்கள் இறுவனவாக" என்று சினந்து கூறினாள்.

வால்வெள்ளெயிறு - மிக வெண்மையான எயிறெனலுமாம்; ஒரு பொருட் பன்மொழி. பாணர் மீன்பிடித்துத் தமக்குரிய மண்டையிலே இட்டு வைத்தல் மரபு. மண்டை - வாயகன்ற மண்பாத்திரம்; வாணெயென வழங்கும். 'அம்மண்டை மீன்நாற்றத்தைப் பெற்று வேறொன்றற்குப் பயன்படாதது போல எம் உயிர் எமக்கே வெறுப்புத் தருவதாயிற்று; நமக்கும் இனிப் பயன்படேம்; இது கழிக' என்றாள். பெறேஎமென்ற முற்றுவினை இங்கே வினையெச்சப் பொருளில் வந்தது.

தலைவனது பரத்தைமையால் மிக்க சினம் கொண்டவளாதலின் தலைவி இங்ஙனம் கூறினாள்.

இரண்டாவது கருத்து: 'நீ இன்னும் வரைந்துகொள்ளாமல் இருக்கின்றாய்; தலைவி நின்னால் நலனுணப்பட்டாள்; நின்னையும் பெறாள் போலும்; இனி உயிர்கழிக' என்று தோழி கூறியதாகக் கொள்க. இங்ஙனம் வன்மை தோன்றக் கூறின் தலைவன் விரைவில் மணந்து கொள்வானென்பது தோழியின் கருத்து.

## மேற்கோளாட்சி

3. தன் மடத்தால் நகை தோன்றியது, 'நீயிர் கூறிய அதனையே மெய்யெனக்கொண்டு மகிழ்ந்து நக்கன மென்றமையின்' (தொல். மெய்ப். 5, பேர்.); நகுநயமறைத்தலென்பது தலைவிமாட்டு நிகழும் மெய்ப்பாடு; இதன்கண் 'நகை கூறிற்றாலெனின், அங்ஙனம் மறைக்கப்பட்ட நகை தலைமகன் அறிந்தது மெய்ப்பாடாமாகலான் அவ்வாறு கூறினனென்பது' (ஷை. ஷை. 13, ஷை.)

மு. இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த காலத்துத் தலைவனது தீங்கு உணராது அவனை நன்றாக உணர்ந்த அறிவினது மடப்பங்கூறித் தம் காதற்சிறப்புரைத்தவிடத்துத் தோழி கூறியது; 'இஃது அவனோடு நகுதற்குத் தோன்றிய உணர்வு இன்றியமையாமை கூறித் தம் காதற்சிறப்புரைத்தது' (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. சுரந் சேல் யானை : அகநா. சு௫ : 16-7; திணைமொழி. ஐம். 1.

3. தலைவனொடு நந்தல் : குறுந். ௩உ௦ : 4-5.

4. பாணரும் மீனும்: பெரும்பாண். 283-7 ; ஐங். சஎ : 1-3, சஅ : 1-3, சகூ : 1-2, ககக: 1-3 ; அகநா. உகசு : 1-2.

மண்டையில் மீன் சொரிதல் : "மண்டை, இருங்கெடிற்று மிசை யொடு பூங்கள் வைகுந்து" (புறநா. ௩அச : 8-9.)

பாணர் மண்டை : புறநா. க0௩ : 9, கக௫ : 2, கஉ௫ :1-3, கஎகூ : 2, உ௩௫ : 10, உசுக : 2, ௩கூஅ : 21. (கசாகூ)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடைவைத்துப் பிரிந்த காலத்தில் அவனது பிரிவை யாற்றுளெனக் கவலையுற்ற தோழிக்கு, "தலைவனது நட்புக் கெடாதென்பதை யான் அறிந்துள்ளேன் ; பலர் தமக்குத் தோற்றிய வற்றைச் சொல்லுக. அதனால் யான் உறுதி நீங்கேன்" என்று தலைவி கூறியது.]

கஎ0. பலருங் கூறுகவஃ தறியா தோரே
அருவி தந்த நாட்குர லெருவை
*கயநா டியானை கவள மாந்தும்
மலைகெழு நாடன் கேண்மை
தலைபோ காமைநற் கறிந்தனென் யானே.

எ - து. வரைவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

கருவூர் கிழார்.

(ப-ரை.) தோழி, யான்—, அருவி தந்த - அருவியால் தரப் பட்ட, நாள் குரல் எருவை - காலத்தில் விளைந்த கொத்தையுடைய கொறுக்காந்தட்டையை, கயம் நாடு யானை - ஆழமான நீர்நிலையை

---

(பி - ம்.) * கயனுடியானை.

ஆராய்கின்ற யானையானது, கவளம் மாந்தும் - கவளமாக உண்ணும், மலைகெழு நாடன் கேண்மை - மலைகள் பொருந்திய நாட்டையுடைய தலைவனது நட்பு, தலைபோகாமை - கெடாமையை, நற்கு - நன்றாக, அறிந்தனென் - அறிந்தேன்; அஃது - அதனை, அறியாதோர் பலரும் - அறியாதோராகிய பலரும், கூறுக - தமக்குத் தோற்றியவற்றைக் கூறுக.

(முடிபு.) யான், நாடன்கேண்மை தலைபோகாமை அறிந்தனென்; அஃது அறியாதோர் பலருங் கூறுக.

(கருத்து.) தலைவன் என்னை வரைந்துகொள்வானென்னும் துணிவுடையேன்.

(வி-ரை.) பலர் - செவிலி முதலியோர். அஃது - கேண்மையின் இயல்பு; செய்யுளாதலின் சுட்டுப்பெயர் முன்வந்தது. எருவை - கொறுக்காந்தட்டை (குறிஞ்சிப். 68, ந.) யானையின் உணவைக் கவளமென்றல் மரபு. தலைபோதல் - முடிதல்; அழிதல்; தலை யென்றது அசைநிலையாக நின்றது; "அரசுதலை நீங்கிய வருமறை யந்தணன்" (மணி. கக: 84.)

கயத்தை நாடிச் செல்லும் யானை, தன் முயற்சியின்றியே அருவியினாற் கொணர்ந்து தரப்பட்ட எருவையை நுகர்ந்தாற்போல விளையாட்டு விருப்பான் வந்த தலைவன் நல்லூழின் வயப்பட்டு என்னைக் கண்டு இன்புற்றானென்பது குறிப்பு. இக்கேண்மை பால்வயத்தால் அமைந்ததாகலின் அறாதென்பது தலைவி கருத்து.

அருவியை ஊழிற்கு உவமை கூறும் மரபு, "நீர்வழிப் படூஉம் புணைபோ லாருயிர், முறைவழிப் படூஉம்" (புறநா. கஙஉ: 9-10) என்பதனாற் பெறப்படும்.

ஏகாரங்கள், அசைநிலை.

## மேற்கோளாட்சி

3-4. மாந்துமலை: அல்வழிக்கண் மகரம் கெட்டுவந்த பெயரெச்சம் (தொல். புள்ளி மயங்கு. 19, ந.)

## ஒப்புமைப் பகுதி

3. கயநாடு யானை (குறுந். உகசு: 4.)

4-5. தலைவன் கேண்மை கேடாதது: குறுந். உஙச: 4-5, ருகரு: 4-5. (களO)

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடைவைத்துப் பிரிந்த காலத்தில் அயலார் வரைய‌ப் புக்கனராக, அதுகண்டு கவன்ற தோழிக்கு, "இவர்கள் செய்யும் முயற்சி பயன்படாதொழியும்" எனத் தலைவி கூறியது.]

கஎக. காணினி வாழி தோழி யாணர்க்
கடும்புன லடைகரை நெடுங்கயத் திட்ட
மீன்வலை மாப்பட் டாஅங்
கிதுமற் றெவனோ நொதுமலர் தலையே.

எ - து. வரைவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

பூங்கணுத்திரையார்.

(ப - ரை.) தோழி—, இனி காண் - இப்பொழுது பார்ப்பாயாக; யாணர் - புதுவருவாயாகிய, கடு புனல் - மிக்க புனலையும், அடைகரை - அடைந்த கரையையுமுடைய, நெடு கயத்து இட்ட - ஆழமான குளத்தின்கண் அமைத்த, மீன்வலை - மீனுக்குரிய வலையின்கண், மா பட்டாஅங்கு - விலங்கு அகப்பட்டாற் போல, நொதுமலர் தலை - அயலாரிடத்து, இது - வரைவுக்குரிய இம்முயற்சி, எவன் - என்ன பயனுடைத்து?

(முடிவு.) தோழி, காண்; நொதுமலர்தலை இது எவன்?

(கருத்து.) அயலார் வரைவுமேற்கொள்வதனாற் பயனொன்றுமில்லை.

(வி - ரை.) மீனுக்கென அமைத்த வலையில் விலங்கு பட்டாற்போலத் தலைவனுக்கென அமைந்த என்திறத்து நொதுமலர் வரைய முயன்றனரென்று உவமையை விரித்துக்கொள்க. மா - நீர்நாய் முதலன.

வாழி, மற்று, ஓ, ஏ: அசைநிலைகள்.

### மேற்கோளாட்சி

மூ. தலைவி பிற விலக்குவித்தது (நம்பி. 164.)

(பி - ம்.) * பூங்கண்ணுத்திரையார்.

## ஒப்புமைப் பகுதி

ஓ. " அருங்கண்ணி வெண்மதி சூடும் பிரான்வெங்கை யாவிமலர்க்
கருங்கண்ணி கங்கையின் மென்றூவி யன்னங் கருதிவைத்த
பெருங்கண்ணி யிற்புனற் காக்கைபட் டாங்குப் பிறர்நமதில்
மருங்கண்ணி வந்தன ரென்பது கேட்டின்னு மாய்ந்திலமே "
(வெங்கைக் கோவை, 229.) (கஎக)

---

### தலைவி கூற்று

[வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்த காலத்தில், 'இவள் ஆற்றாள்' எனக் கவன்ற தோழியை நோக்கி, " அவர் என்னைப் பிரிந்து அங்கே எங்ஙனம் இருப்பார்? என்மனம் மிகவருந்துகின்றது " என்று தலைவி கூறியது.]

கஎஉ. தாஅ வஞ்சிறை நொப்பறை வாவல்
பழுமரம் படரும் பையுண் மாலை
எமிய மாக வீங்குத் துறந்தோர்
தமிய ராக வினியர் கொல்லோ
† ஏழூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலைவாங்கு மிதிதோல் போலத்
தலைவரம் பறியாது வருந்துமென் னெஞ்சே.

எ - து. வரைவிடை ஆற்றுளேனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(ப - ரை.) தோழி, தா அம் சிறை - வலியையுடைய அழகிய சிறையையும், நொ பறை - மென்மையாகப் பறத்தலையும் உடைய, வாவல் - வௌவால்கள், பழு மரம் படரும் - பழுத்த மரங்களை நினைத்துச் செல்லும், பையுள் மாலை - தனியரானார்க்குத் துன்பத்தைத்தரும் மாலைக்காலத்தில், எமியம் ஆக - யாம் தமியேமாகும்படி, ஈங்கு துறந்தோர் - ஈங்கு எம்மை வைத்துப் பிரிந்த தலைவர், தமியர் ஆக - தாம் தனிமையை உடையராகவும், இனியரோ - இனிமையை

---

(பி - ம்.) * தமியமாக. † வேளூர்ப்.

யுடையரோ? என் நெஞ்சு—, எழ் ஊர் பொதுவினைக்கு - ஏழு ஊரி லுள்ளார்க்குப் பொதுவாகிய தொழிலின் பொருட்டு, ஓர் ஊர் யாத்த - ஓர் ஊரின்கண் அமைத்த, உலைவாங்கு மிதி தோல் போல - உலையிற் செறித்த துருத்தியைப்போல, தலைவரம்பு அறியாது - எல்லையை யறியாமல், வருந்தும் - வருத்தத்தை அடையும்.

(முடிபு.) சுங்குத்துறந்தோர் இனியர்கொல்லோ? என் நெஞ்சு வருந்தும்.

(கருத்து.) தலைவர் என்னைப் பிரிந்த தனிமையினால் துன்புறுவா ரென்று என் நெஞ்சம் வருந்துகின்றதே யன்றி எனது தனிமைத் துன்பத்தைக் குறித்தன்று.

(வி-ரை.) உடலோடு பொருந்தித் தோலாலமைந்தமையின் வௌவாலின் சிறை வலியுடையதாயிற்று. பறை - பறத்தற்றொழில்; "துனைபறை நிவக்கும் புள்ளின மான" (மலைபடு. 55) என்பதன் உரையைப் பார்க்க. பழுமரம் - ஆலமரமுமாம். எமியமென்றது தோழியையும் நினைந்து. மாலையில் தலைவர் உடனிருத்தல் இன்றி யமையாமையின் அக்காலத்திலும் யாம் தனித்திருப்பத் துறந்தோ ரென்றாள். இனியர்கொல்லோ வென்றது இனியராயிராரென்னும் நினைவிற்று. ஓர் ஊரென்றது ஒரூரிலுள்ள கொல்லனை. உலை - அவனது உலை. தலைவரம்பு: தலை, அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

2. பழுமரம்: பொருந. 64; சீவக. 93.

பையுண்மாலை: குறுந். சுகூ: 2, கூசுக: 6.

1-2. "பையுண் மாலைப் பழுமரம் படரிய, நொவ்வுப்பறை வாவ ஞேன்சிறை" (தொல். களவு. 23, ந. மேற்.)

வாவல் மாலையிற் பழுமரம் நோக்கிச் செல்லுதல்: (குறுந். கூ௦உ: 1-5); "ஞாயிறு ஞான்று கதிர்மழுங் கின்றே...வாவலும் வயின் றொறும் பறக்கும்" (நற். உசஅ: 1-3); "குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய, வாவ லுகக்கு மாலையும்", "செல்லிய முயலிப் பாஅய சிறகர், வாவ லுகக்கு மாலை" (ஐங். கூகூக: 2-3, கூஎஅ: 1-2.)

3. எமியம்: குறிஞ்சிப். 32; அகநா. கூகூ: 12, சுசுஉ: 7, கூஎசு: 10.

6. உலைவாங்கு மிதிதோல்: "மென்றோல், மிதியுலை" (பெரும் பாண். 206-7.)

5-6. ஒன்றுக்கு ஏழ கூறும் மரபு: குறுந். ௨௪ : 4, ஒப்பு; குறள், 1278. (கஎ௨)

---

## தலைவன் கூற்று

[பாங்கியிற்கூட்டத்தின்கண் தலைவன் தோழியிடம் குறையிரப்ப அவள் மறுத்தாளாக, "இனி மடலேறும் பரிகாரமொன்று இருத்தலால், அது செய்ய நினைந்து நான் செல்கின்றேன்" என்று அவன் கூறியது.]

கஎ௩. பொன்னே ராவிரைப் புதுமலர் மிடைந்த
பன்னூன் மாலைப் பனைபடு கலிமாப்
பூண்மணி கறங்க வேறி நாணட்
டழிபட ருண்ணோய் வழிவழி சிறப்ப
இன்னள் செய்த திதுவென முன்னின்
றவள்பழி நுவலு மிவ்வூர்
ஆங்குணர்ந் † தமையினீங் கேகுமா ருளெனே.

எ - து. குறைமறுக்கப்பட்ட தலைமகன் தோழிக்கு உரைத்தது.

[குறை - தலைவியைக் காணல்வேண்டுமென்ற காரியம்.]

மதுரைக்காஞ்சிப் புலவன்.

(ப - ரை.) பொன் நேர் ஆவிரை புதுமலர் மிடைந்த - பொன்னைப்போன்ற ஆவிரையின் புதிய பூக்களை நெருங்கக் கட்டிய, பல்நூல் மாலை - பலவாகிய நூல்களையுடைய மாலைகளை அணிந்த, பனைபடு கலிமா - பனங்கருக்கால் உண்டாக்கப்பட்ட மனச்செருக்கையுடைய குதிரையை, பூண் மணி கறங்க ஏறி - அதன் கழுத்திற் பூட்டிய மணி ஒலிக்கும்படி ஊர்ந்து, நாண் அட்டு - நாணத்தைத் தொலைத்து, அழிபடர் உள்நோய் - மிக்க நினைவையுடைய உள்ளத்தேயுள்ள காமநோய், வழி வழி சிறப்ப - மேலும் மேலும் மிகுதியாக, இன்னள் செய்தது இது என - இன்னாளால் உண்டாக்கப்பட்டது இக்காமநோயென்று யான் கூற, இ ஊர் - அக்கோலத்தைக் கண்ட இவ்வூரிலுள்ளார், முன் நின்று - எல்லோருக்கும் முன்னே நின்று, அவள் பழி நுவலும் - தலைவியினது பழியைக் கூறுவர்; ஆங்கு

---

(பி - ம்.) * இன்னள். † தமையினீ ரேகுமாறுளனே.

உணர்ந்தமையின் - அங்ஙனம் உள்ளதொரு பரிகாரத்தை அறிந்திருத்தலால், ஈங்கு - இவ்விடத்தினின்றும், ஏகுமார் உளென் - போகும்பொருட்டு உள்ளேன்.

(முடிபு.) கலிமா ஏறி நாண் அட்டு நோய் சிறப்ப இன்னள் செய்தது இதுவென, இவ்வூர் அவள் பழிநுவலும்; ஆங்கு உணர்ந்தமையின் ஏகுமாருளென்.

(கருத்து.) நான் இனி மடலேறுவேன்.

(வி - ரை.) மடலேற்றத்தைப்பற்றிய செய்திகளை இந்நூல் கச, கஎ-ஆம் செய்யுட்களின் விசேடவுரை முதலியவற்றால் உணரலாகும்.

மடலேறுவார், அம்மடன்மாவிற்கு ஆவிரம் பூ அணிவர். கலிமா வென்றது சாதியடை. நாண் - செய்யத்தகாதனவற்றின்கண் உள்ளம் ஒடுங்குதல் (தொல். பொருள். 53, ந.); 'இழிவாயின செய்தற்கண் விலக்குவது' (குறள், 1133, உரை) என்பர் பரிமேலழகர். அழி படர் - மிக்கபடர்; "அழிபசி" (குறள், 226) என்பதற்கு 'மிக்க பசி' என்றெழுதிய உரையைக் காண்க; ஆண்மையையும் நாணையும் அழிக்கும் படரென்பதும் பொருந்தும்; "நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன், காமுற்றா ரேறு மடல்" (குறள், 1133) எனக் கூறுதல் காண்க. வழிவழி - மேன்மேலும் (அகநா. சஎ : 1, உரை.)

தலைவனே தன் நோய் இன்னளால் வந்ததெனக் கூறும் செய்தியைக் கலித்தொகை, கஙஅ, கஙக, கசo, கசக-ஆம் செய்யுட்களிற் பரக்கக் காணலாகும். இன்னள் செய்ததிதுவென இவ்வூர் பழி நுவலுமென்று கூட்டிப் பொருள் கோடலும் பொருந்தும்; "நல்லோள் கணவ னிவனெனப், பல்லோர் கூற" (குறுந். கச) என்று முன் வந்தமை உணர்க.

அத்தகைய பரிகார மொன்றுண்மையின் நீ மறுத்தமையாற் கவலாது செல்லத் துணிகின்றேனென்றான் இதனால், தான் மடலேறித் தன் குறையை முடித்துக் கொள்ளுந் துணிபுடையனாதலைப் புலப்படுத்தினான்.

## ஒப்புமைப் பகுதி

1. பொன்னேர் ஆவிரை மலர்: "பொலமல ராவிரை", "அடர் பொன் னவிரேய்க்கு மாவிரங் கண்ணி" (கலி. கஙஅ : 18. கசo : 7.)

2. நூன் மாலை மா: "மணிப்பீலி சூட்டிய நூலொடு", "பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி" (கலி. கநஅ : 8, கசo : 6.)

பனைபடு கலிமா : குறுந். கஎ : 1, ஒப்பு, கஅஉ : 1.

1-2. மடன்மாவிற்கு ஆவிரம்பூ அணிதல்: "அணிப்பூளை யாவிரை யெருக்கொடு பிணித்தியாத்து", "அணியலங் காவிரைப் பூவோ டெருக்கின், பிணையலங் கண்ணி மிலைந்து" (கலி. கநஅ : 9, கநக : 8-9); "பனிவா ராவிரைப் பன்மலர் சேர்த்தி" (துணைநாற்பது.)

3. மடல் மாவிற்கு மணி கட்டுதல்: "மணியணி பெருந்தார் மரபிற் பூட்டி" (குறுந். கஅஉ : 2); "சிறுமணி தொடர்ந்து...உண்ணு நன் மாப் பண்ணி" (நற். உஉo : 1-3); "மணியார்ப்ப, ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து", "பெய்ம்மணி கட்டி" (கலி. கநக: 9-10, கசo : 6.)

மடலேறும் தலைவன் நாணத்தை நீந்தல்: "பெருநா ணீக்கி" (குறுந். கஅஉ : 4); "அறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு, வறிதாக" (கலி. கநஅ: 3-4); "நோனா வுடம்பு முயிரு மடலேறும், நாணினை நீக்கி நிறுத்து" (குறள், 1132.)

4. அழிபடர் : குறுந் : கஅ௫ : 8; அகநா. உ௫௫ : 8, உஅ௫ : 2, உகஎ : 2.

வழிவழி சிறத்தல் : மதுரை. 194; அகநா. சஎ : 1.

5. இன்னள் : குறுந் : கூஅ : 1, கஅ௫ : 3, உகக : 7.

2-6. குறுந். கஎ : 1-3, ஒப்பு.   (கஎந)

---

## தலைவி கூற்று

[தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதியிருப்பதையுணர்ந்து கூறிய தோழியை நோக்கி, "பாலை நிலத்து வழிகள் கடத்தற்கரியன வென்று எண்ணாமல் நம்மை அவர் பிரிந்து செல்வரேல், உலகத்தில் பொருள்தான் பெறற்குரியது போலும்! அருள் யார்பாலுமின்றி ஒழிவது போலும்!" என்று தலைவி கூறியது.]

கஎச. பெயன்மழை துறந்த * புலம்புறு கடத்துக்
கவைமுட் கள்ளிக் காய்விடு கடுநொடி
துவைமென் றூவித் துணைப்புற விரிக்கும்

---

(பி - ம். * புலமபறு.

அத்த மரிய வென்னார் நத்துறந்து
பொருள்வயிற் பிரிவா ராயினிவ் வுலகத்துப்
பொருளே மன்ற பொருளே
அருளே மன்ற வாருமில் லதுவே.

எ - து. பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

வேண்பூதி.

(ப - ரை.) தோழி, பெயல் மழை - பெய்தலையுடைய மழை, துறந்த - பெய்யாது நீங்கிய, புலம்பு உறு கடத்து - தனிமை மிக்க பாலைநிலத்தில், கவை முள் கள்ளி - கவைத்த முள்ளையுடைய கள்ளியினது, காய் விடு கடு நொடி - காய் வெடிக்கும்பொழுது விடும் கடிய ஒலியானது, துதை மெல் தூவி துணை புறவு இரிக்கும் - நெருங்கிய மெல்லிய சிறகுகளையுடைய ஆணும் பெண்ணுமாகிய இரட்டைப் புறாக்களை நீங்கச் செய்யும், அத்தம் - அருவழிகள், அரிய என்னார் - கடத்தற்கரியனவென்று கருதாராகி, நம் துறந்து - நம்மைப் பிரிந்து, பொருள்வயின் பிரிவார் ஆயின் - பொருளைத் தேடும்பொருட்டு நம் தலைவர் பிரிவாராயின், இ உலகத்து - இந்த உலகத்தில், மன்ற - நிச்சயமாக, பொருளே பொருள் - செல்வமே உறுதிப்பொருளாவது; மன்ற—, அருளே - அருள்தான், ஆரும் இல்லது - தன்னை ஏற்றுக் கொள்வார் யாரும் இல்லாதது.

(முடிபு.) அத்தம் அரிய என்னார் நத்துறந்து பொருள்வயிற் பிரிவாராயின், பொருளே பொருள்; அருளே ஆரும் இல்லது.

(கருத்து.) அருளுடையாராயின் என்னைப் பிரிந்து செல்லல் தகாது.

(வி - ரை.) மழை, பெய்தலைத் துறந்தவெனலும் பொருந்தும்; துறந்த : காரணப் பொருளில் வந்த பெயரெச்சம். புலம்பு - நீர் பெறாத வருத்தமுமாம் (அகநா. ச: 5, உரை.) நத்துறந்து: இத்தகைய புணர்ச்சி முடிபுகளை இரண்டாம் வேற்றுமைத்திரிபைத் தொகுத்து உணர்த்தும் சூத்திரத்தில் (தொல். தொகை. 15) 'அன்னபிறவும்' என்பதனுள் நச்சினார்க்கினியர் அமைப்பார்: 'எக்கண்டு பெயருங் காலை யாழநின், கற்கெழுசிறுகுடியெனவும், நட்புணர்வில்லா நயனில் லோர் நட்பெனவும் வருவழி, எக்கண்டு, நட்புணர்வு என்னும் தொடக்கங் குறுகும் உயர்திணைப் பெயர்கள் மெல்லெழுத்துப் பெறுதற்கு உரியன, வல்லெழுத்துப் பெறுதல் கொள்க.'

'அத்தம் கடத்தற்கரியனவாயிருப்பவும் அது கருதாமலும், நம்மைத் துறத்தல் அருளுக்கு மாறுபாடான செயலாக இருப்பவும் அது கருதாமலும் செல்லுதற்குக் காரணமான பொருள், பெறற்குரிய உறுதியுடையதுபோலும்!' என்றாள். 'அருளுடையராயின் என்னை நீத்துச் செல்லார்; பொருளைப் பொருளாகக் கருதார்' என்பது தலைவியின் நினைவு. பொருளே மன்ற பொருளே: ஏகாரங்களுள் முன்னது பிரிநிலையேகாரம்; பின்னது தேற்றம்.

## ஒப்புமைப் பகுதி

1. **புலம்புறுகடம்:** "புள்ளும் வழங்காப் புலம்புகொ ளாரிடை" (கலி. ௪ : 6); "புலம்புவீற் றிருந்த நிலம்பகு வெஞ்சுரம்" (அகநா. ௩௩௫ : 8.)

2. **கவைமுள்:** புறநா. ௩௮ : 8.

**கவைமுட் கள்ளி:** புறநா. ௩௨௨ : 2.

**கள்ளிக்காய்விடு கடுநொடி:** "நொடிவிடு வன்ன காய்விடு கள்ளி" (நற். ௩௧௪ : 9); "கொள்ளுங் கடுங்கதி ரிற்கள்ளி தீச்சில வேயுலறி, விள்ளும் வெடிபடும் பாலை" (திருவேகம்ப. திருவந். 68.)

**நொடி:** "அமைக்கண் விடுநொடி" (அகநா. ௪எ : 7.)

2 - 3. **கள்ளியும் புறவும்:** குறுந். ௧௭௪ : 4-6, ஒப்பு; நற். ௩௧௪: 9-11.

4. **நத்துறந்து:** குறுந். ௨௨௮ : 4; நற். ௩௨௧ : 8, ௩௪௩ : 8; அகநா. ௮௫ : 3, ௧௮௩ : 3, ௧௮௫ : 3, ௨௨௩ : 1, ௨௧௮ : 20, ௩௧எ : 21.

6-7. **பொருளும் அருளும்:** குறுந். ௨௦ : 1-2, ஒப்பு, ௩௧௫ : 1-3; அகநா. ௫௩ : 14-6, எ௫ : 1-2, ௩௦௫ : 9.                (௧எ௪)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்திருந்த காலத்து ஆற்றாளாகிய தலைவியை நோக்கி, 'நீ ஆற்றியிருத்தல் வேண்டும்' என்று தோழி வற்புறுத்தினளாக, "நான் வருந்துகின்றேனல்லேன்; ஊரார் யாது கூறினும் கூறுக" என்று தலைவி சொல்லியது.]

௩௭௫. பருவத் தேனசைஇப் பல்பறைத் தொழுதி
உரவுத்திரை பொருத திணிமண லடைகரை
நனைந்த புன்னை மாச்சினை தொகூஉம்
மலர்ந்த பூவின் மாநீர்ச் சேர்ப்பற்
கிரங்கேன் றோழியிங் * கென்கொ லென்று
பிறர்பிற ரறியக் கூறல்
அமைந்தாங் கமைக வம்பலஃ தெவனே.

எ - து. பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லி வற்புறுத்துவாட்குக் கிழத்தி உரைத்தது.

[வற்புறுத்துதல் - மீண்டும் மீண்டும் கூறி அறிவுறுத்தல்.]

உலோச்சன்.

(ப - ரை.) தோழி—, பருவம் தேன் நசைஇ - செவ்வியை யுடைய தேனை விரும்பி, பல் பறை தொழுதி - பல வண்டுக் கூட்டங்கள், உரவு திரை பொருத - உலாவுதலையுடைய அலைகள் மோதிய, திணி மணல் அடைகரை - செறிந்த மணல் அடைந்த கரையின்கண் உள்ள, நனைந்த புன்னை - அலைத் துவலையால் நனைந்த புன்னை மரத்தினது, மா சினை தொகூஉம் - பெரிய கிளையின்கண் கூடுகின்ற, மலர்ந்த பூவின் - மலர்ந்த மலர்களையும், மா நீர் - கரிய நீரையுமுடைய, சேர்ப்பற்கு - கடற்கரைத் தலைவன் பொருட்டு, இரங்கேன் - வருந்தேன்; இங்கு என் என்று - இவ்விடத்து இவள் ஏன் இங்ஙனம் ஆயினளென்று, பிறர் பிறர் அறிய கூறல் - பிறர் பிறர் அறியும்படி கூறுதல், அமைந்தாங்கு அமைக-அவர்களுடைய மனம் அமைந்தபடி அமைக; அம்பல் - அவர்கள் கூறும் அம்பல், எவன் - என்ன துன்பத்தைச் செய்வதாகும்?

(முடிபு.) தோழி, சேர்ப்பற்கு இரங்கேன்; பிறர் கூறல் அமைக; அம்பல் எவன்?

(கருத்து.) ஊரவர் கூறும் பழிமொழியை யான் அஞ்சேன்.

(வி - ரை.) பறை - பறத்தற்றொழிலையுடைமைபற்றிப் பறவைக்காயிற்று. தேன் நசைஇ யென்ற குறிப்பால் பறை யென்ற பொதுப் பெயர் இங்கே வண்டிற்காயிற்று. தொழுதி - தொகுதி.

(பி - ம்.) * கெனவென்று.

உரவு - வன்மையுமாம். திரைபொருத மணற்கரையில் நிற்றலின் புன்னை நனைந்தது. மாச்சினை - கரிய கிளையெனலுமாம். மலர்ந்தபூ வென்றது புன்னையில் மலர்ந்து உதிர்ந்த பூக்களை; முள்ளி மலர் முதலியனவும் ஆம்.

தலைவி பிரிவாற்றாது வருந்தியது கண்ட தோழி, "நின் ஆற்றாமை ஊரவர்க்குப் புலனாதலின் அவர் அம்பல் கூறுகின்றனர். ஆதலின் நீ பொறை பூண்டிருத்தல் வேண்டும்" என்று வற்புறுத்திய காலத்தில் தலைவி கூறியது இது.

"தலைவன் என்னைப் பிரிந்தானென நான் வருந்தினேனல்லேன்; ஆயினும் என்னையறியாது என்பால் வேறுபாடுகள் உண்டாகின்றன. அது கண்டு பிறர் கூறுவன கூறுக; அவற்றால் என்காமம் வலியுறுமே யன்றி எனக்கு வரும் ஏதமொன்றில்லை" என்றாள்.

"பிறர் என் நிலைகுறித்துக் கூறுதலைக் கூறுக. அதுபற்றி நான் வருந்தேன்; பழிமொழியை என் கூறுகின்றனர்? அதனால் யான் வருந்துகின்றேன்" என்று பொருள்கோடலும் ஒன்று.

அம்பல் - சிலர் அறிந்து கூறும் பழிமொழி. அம்பலஃது: அஃது, பகுதிப்பொருள் விகுதி. கொல், ஏ : அசைநிலைகள்.

பலவிடங்களிற் பறந்து செல்லும் வண்டுகள் பருவத் தேனை உரிய காலத்திலே உண்ண வந்து அடையும் சேர்ப்பனாதலின், பலவகை முயற்சிகளின்பொருட்டு என்னைப் பிரிந்து செல்வானெனினும், உரிய காலத்தே வந்து அளவளாவுவனென்னும் உறுதியுடையேனாதலின் அவன்பொருட்டு வருந்தேனென்பது குறிப்பு.

## ஒப்புமைப் பகுதி

1. பறைத்தோழுதி : நெடுநல். 15; நற். கஉ௯ : 2; அகநா. ௪௦ : 3.

**வண்டின் தொழுதி** : "அஞ்சிறை வண்டின் மென்பறைத் தொழுதி" (அகநா. உ௩௪ : 12.)

2. **உரவுத்திரை** : பட். 101.

**உரவுத்திரை பொருத கரை** : "உரவுத்திரை, அடுங்கரை" (குறிஞ்சிப். 178-9.) (கஎரு)

---

## தோழி கூற்று

[தலைவனைத் தலைவி ஏற்றுக்கொள்ள வேண்டுமென்னுங் கருத்தி ணால், "பலநாள் இங்கே வந்து பணிந்த சொற்களைக் கூறிச் சென்ற தலைவன் இப்பொழுது எங்கே இருக்கின்றானோ? அவனை நினைந்து என் நெஞ்சம் கலங்குகின்றது" என்று அவளுக்கு இரக்கம் உண்டா கும்படி தோழி கூறியது.]

கஎசு. ஒருநாள் வாரல னிருநாள் வாரலன்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றியென்
நன்னர் நெஞ்சம் * நெகிழ்த்த பின்றை
வரைமுதிர் தேனிற் போகி யோனே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
† வேறுபுல னன்னாட்டுப் பெய்த
ஏறுடை மழையிற் ‡ கலிழுமென் னெஞ்சே.

எ - து. தோழி, கிழத்தியைக் குறைநயப்பக் கூறியது.

[குறைநயப்ப - தலைவனது காரியத்தை விரும்பி நிறைவேற்று தற்கு.]

வருமுலையாரித்தி.

(ப - ரை.) ஒருநாள் வாரலன் - ஒருநாள் வந்தானல்லன்; இருநாள் வாரலன் - இரண்டுநாட்கள் வந்தானல்லன்; பல நாள் வந்து - பலநாட்கள் வந்து, பணிமொழி பயிற்றி - பணிவைப் புலப் படுத்தும் மொழிகளைப் பல்கால் கூறி, என் நன்னர் நெஞ்சம் நெகிழ்த்த பின்றை - எனது நன்மையையுடைய நெஞ்சத்தை இரங் கச் செய்தபிறகு, வரை முதிர் தேனின் போகியோன் - மலையினிடத் தில் முதிர்ந்து வீழ்ந்த தேனிறாலைப் போலப் போயினவனும், ஆசு ஆகு எந்தை - நமக்குப் பற்றுக்கோடாகிய எந்தையுமாகிய தலைவன், யாண்டு உளன்கொல் - எங்கே இருக்கின்றானோ? வேறு புலன் நல் நாட்டு பெய்த - வேற்றுப் புலங்களையுடைய நல்ல நாட்டிற் பெய்த, ஏறுடை மழையின் - இடியேற்றையுடைய மழைநீர் கலங்கி வருவது போல, என் நெஞ்சு—, கலிழும் - கலங்கும்.

---

(பி - ம்.) * நெகிழ்ந்த. † வேறுபுனல். ‡ கலுழும்.

(முடிபு.) போகியோன், எந்தை, யாண்டுளன் கொல்? என் னெஞ்சு கலிழும்.

(கருத்து.) நின்னை ஒரு தலைவன் விரும்பி அலமருகின்றான்.

(வி - ரை.) தலைவியினது நெஞ்சில் இரக்கம் தோன்றும்படி கூறப்புக்கவளாதலின், தலைவன் பல நாள் வந்தானென்பதை விரித்து 'ஒருநாள்வாரலன்........பயிற்றி' என்று தோழி கூறினாள். ஒருமை, இருமை, பன்மை யென்னும் வழக்கு அவள் கூற்றிலமைந்துள்ளது. பயிற்றல் - பலமுறை கூறி வற்புறுத்தல். தலைவனைப்பற்றித் தலைவி பால் தான் கூறப்புக்கது நன்மையையே கருதியென்பதைக் குறிப் பிப்பாள், 'என் நன்னர் நெஞ்சம்' என்றாள்.

வரையில் முதிர்ந்த தேனடை தன்பாலுள்ள தேனை ஒருவருங் கொள்ளாது வீழ்ந்து கழிதல் போல, தன்மொழியை யாருங் கொள் ளாமையின் தலைவன் போயினனென உவமையை விரித்துக்கொள்க. போகியோன் - போனனென முற்றாகக்கொள்ளலும் பொருந்தும். ஆசு - பற்றுக்கோடு; 'ஆசா கென்னும் பூசல் - எனக்கு நீர் பற்றாக வேண்டுமென்னும் ஆரவாரம்' (புறநா. உகூகூ : 9, உரை); ஆசாகு என்பதனை இரங்கற் குறிப்புப்படுமொழி யென்பாரும் உளர் (ஷை.) எந்தையென்றாள் தலைவன்பால் தனக்குள்ள ஆதரவு தலைவிக்குப் புலப் படும்பொருட்டு. கொல் : ஐயம். வேறுபுலனன்னாட்டுப் பெய்தவென் பதை வேறு நாட்டுப் புலத்துப் பெய்தவென்று கூட்டிப் பொருள் செய்க. வேற்று நாட்டிற் பெய்த மழைநீர் அந்நாட்டில் தெளி வுடையதாக வீழினும் அந்நீர் வெள்ளம் அயல் நாட்டிற் புகும்போது கலங்கிவருமாதலின் அதனை உவமை கூறினார்.

## மேற்கோளாட்சி

மு. தோழி வலிதாகச் சொல்லிக் குறை நயப்பித்தது (இறை. 10); பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும் தோழிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 24, இளம், 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. தலைவன் பலநாள் வந்து குறை யிரத்தல்: "கயமல ருண்கண் ணாய் காணா யொருவன், வயமா னடித்தேர்வான் போலத் தொடை மாண்ட, கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு, முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற, நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னா ளும்" (கலி. கூஎ : 1-5.)

பணிமொழி பயிற்றல்: "இரவன் மாக்களிற் பணிமொழி பயிற்றி" (அகநா. கூஉ : 4.)

2, மு. அகநா, கூசய : 4.

1-2. ஒருநாள், இருநாள், பன்னாள் வருதல்: "ஒருநாட் செல்லல மிருநாட் செல்லலம், பலநாள் பயின்று பலரொடு செல்லினும்" (புறநா. கய்க : 1-2.)

ஒருமை, இருமை, பன்மை: தொல். மொழிமரபு. 12; ஷை. எச்ச. 21, இளம்.

5, மு. குறுந். கூஉ௯ : 4; புறநா. உகூ௯ : 16, கூய௭ : 1.

மு. அகநா. கூஉ. (கள௬)

---

தோழி கூற்று

[தலைவன் மாலைக்காலத்தில் வருவானென்று தோழி தலைவிக்குக் கூறியது.]

கள௭. கடல்பா டவிந்து கானன் மயங்கித்
துறைநீ ரிருங்கழி புல்லென் றன்றே
மன்றவம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை
அன்றிலும் பையென நரலு மின்றவர்
வருவர்கொல் வாழி தோழி † நாந்தப்
புலப்பினும் பிரிவாங் கஞ்சித்
தணப்பருங் காமந் தண்டி யோரே.

எ - து. கிழவன் வரவுணர்ந்து, தோழி கிழத்திக்கு உரைத்தது.

‡ உலோச்சன்.

(ப - ரை.) தோழி—, கடல் பாடு அவிந்து - கடலானது ஒலி அடங்க, கானல் மயங்கி - கடற்கரைச் சோலை மயக்கத்தையுடையதாக, துறைநீர் இரு கழி - துறையையும் நீரையும் உடைய கரியகழி, புல்லென்றன்று - பூக்கள் கூம்பியதனால் பொலிவழிந்தது; மன்றம் அம் பெண்ணை - மன்றத்தின்கண் உள்ள அழகிய பனைமரத்தினது,

---

(பி - ம்.) * மன்றலம் பெண்ணை, மன்றப்பெண்ணை. † நாககப். ‡ உலோச்சனார்.

மடல் சேர் வாழ்க்கை - மடலின்கண்ணே பொருந்திய வாழ்க்கையை யுடைய, அன்றிலும் - அன்றிற்பறவையும், பையென - மெல்ல, நரலும் - கூவும்; நாம் தம் புலப்பினும் - முன்பு நாம் தம்மைப் புலந்தாலும், பிரிவு ஆங்கு அஞ்சி - அவ்விடத்துப் பிரிதலை அஞ்சி, தணப்பு அரு காமம் - நீங்குதற்கரிய காம இன்பத்தை, தண்டியோர் - அலைத்தும் பெற்றவராகிய, அவர் - தலைவர், இன்று—, வருவர்—.

(முடிபு.) தோழி, கழி புல்லென்றன்று; அன்றிலும் நரலும்; தண்டியோர் இன்று வருவர்.

(கருத்து.) தலைவர் இன்று வருவர்.

(வி - ரை.) கடல்பாடவிதல் முதலியன இரவுவந்ததைப் புலப்படுத்தின. கடல் ஒலியடங்குதலாவது, வலைஞரும் கலவரும் தொழிலொடுங்கி அகஞ்சேர்ந்தமையின் அவர்களால் உண்டாகும் ஆர்ப்பு அடங்குதல். இருளினால் கானல் மயங்கியது. அவிந்து, மயங்கி: எச்சத்திரிபுகள்.

அன்றில் பெரும்பாலும் பனைமடலிலே வாழ்வது. வருவர்கொல்: கொல், அசை நிலை (புறநா. கூஅ : 18, உரை); "வருவர் கொல்" (கலி. கக : 5) என்பதற்கு, 'வருவர்போல இருந்தது' என்றுரைப்பர் நச்சினார்க்கினியர். வாழி : அசை நிலை. நப்புலப்பினும்: தம், நிலைமொழி; "நத்துறந்து" (குறுந். கஎச : 4.) என்றது போல. தண்டியோர் - அலைத்துங் கொள்வோர் (பொருந. 104, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கடல் பாடு அவிந்து : அகநா. ஙo : 1.

2. புல்லென்றல் : குறுந். கக : 2, ஒப்பு.

3-4. மன்றப் பெண்ணையில் அன்றில் இரவில் நரலுதல்: "யாம நள்ளென...... மன்றப் பெண்ணை வாங்குமடற் குடம்பைத், துணைபுணரன்றி லுயவுக்குரல் கேட்டொறும்" (நற். ஙoங : 1-5.)

பெண்ணையில் வாழும் அன்றில் இரவில் நரலுதல்: குறுந். ஙoக: 1-4.

அன்றில் இரவில் நரலுதல்: குறுந். கசo : 1-4, ஒப்பு.

அன்றில் பனைமரத்தில் வாழ்தல்: "மன்றிரும் பெண்ணை மடல்சேரன்றில்" (கலி. கஉக : 12); "மனைசேர் பெண்ணை மடிவா யன்றில்", "பெண்ணை யோங்கிய வெண்மணற் படப்பை, அன்றி லகவும்", "துணைபுண ரன்றில், எக்கர்ப் பெண்ணை யகமடல் சேர", "பராரைப்

*பெண்ணைச் சேக்குங் கூர்வாய், ஒருதனி யன்றில்", "பனைமிசை, அன்றில் சேக்கு முன்றில்"* (அகநா. ருo: 11, கஉo: 14-5, உகo: 6-7, நoரு: 12-3, நகo: 16-7); *'பனையின்கண் அன்றில்'* (நன். 301, சங். மேற்.)

5-6. **நாம் தப் புலப்பினும்** : குறுந். நசo : 2.

7. **தணப்பருங் காமம்** : குறுந். ருஎ : 3, ஒப்பு. (கஎஎ)

---

## தோழி கூற்று

[*தலைவனும் தலைவியும் வாழும் மனைக்கு அவர்களோடு சென்ற தோழி தலைவியை அளவளாவுதலில் தலைவனுக்கு இருக்கும் விரைவைக் கண்டு, "இக்காலத்தில் இப்படி இருப்பீராகிய நீர் களவுக் காலத்தில் தலைவியோடு அளவளாவ வேண்டுமென்ற நும் விரைவை வெளிப்படாமற் செய்து வருந்தினீர் போலும்!" என்று கூறி இரங்கியது.*]

*கஎஅ. அயிரை பரந்த வந்தண் பழனத்*
*தேந்தெழின் மலர தூம்புடைத் திரள்கால்*
*ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கிவள்*
*இடைமுலைக் கிடந்து நடுங்க லானீர்*
*தொழுதுகாண் பிறையிற் றோன்றி யாநுமக்*
*கரிய மாகிய காலைப்*
*பெரிய நோன்றனிர் நோகோ யானே.*

எ - து. கடிநகர் புக்க தோழி, தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு, முன்னர்க் களவுக் காலத்து † ஒழுகலாற்றை நினைந்து அழிந்து கூறியது.

[*கடிநகர் - தலைவனும் தலைவியும் மணம் புரிந்துகொண்டு இல்லறம் நடத்தும் மனை. விதும்பல் - விரைதல். அழிதல் - இரங்கல்.*]

நெடும்பல்லியத்தை.

(ப - ரை.) *அயிரை பரந்த - அயிரைமீன் மேய்தற்குப் பரந்த, அம்தண் பழனத்து - அழகிய தண்மையாகிய பொய்கையினிடத்து, ஏந்து எழில் மலர - அழகை மேற்கொண்ட மலரை யுடையனவாகிய,*

(பி - ம்.) * *கரியேமாகிய.* † *ஒழுகலாற்றுமை.*

தூம்புடை திரள் கால் - உள்ளே துளையையுடைய திரண்ட தண்டையுடைய, ஆம்பல் குறுநர் - ஆம்பலைப்பறிப்போர், நீர் வேட்டாங்கு - புனல் வேட்கையை அடைந்தாற்போல, இவள் இடைமுலை கிடந்தும் - இத்தலைவியின் நகிலினிடையே துயிலப்பெற்றும், நடுங்கல் ஆனீர் - நடுங்குதலை யொழிந்தீர் அல்லீர்; யாம்—, தொழுதுகாண் பிறையின் தோன்றி - கன்னிமகளிரும் பிறரும் தொழுது காணுகின்ற பிறையைப்போலத் தோன்றி, நுமக்கு அரியம் ஆகிய காலை - நுமக்குக் காண்டற்கரியேமாகிய களவுக்காலத்தில், பெரிய நோன்றனிர் - பெரிய வருத்தங்களைப் பொறுத்தீர்; யான் நோகு - யான் அதனை யறிந்து வருந்துவேன்.

(முடிபு.) இவள் இடைமுலைக் கிடந்தும் நடுங்கல் ஆனீர்; யாம் நுமக்கு அரியமாகியகாலைப் பெரிய நோன்றனிர்; யான் நோகு.

(கருத்து.) நீர் தலைவிபாற்கொண்ட அன்பின் வன்மையை முன்பு யான் நன்கறிந்திலேன்.

(வி - ரை.) ஏந்துதல், நீருக்குமேலே உயர்தலுமாம். மலரும் காலும் ஆம்பலாகிய முதலுக்கு அடை; ஆம்பல் - இங்கே ஆம்பல் மலர்; ஆகுபெயர்.

நீரில் வளர்ந்த ஆம்பலைப் பறிப்போர் விடாயுற்ற காலத்தில்எளிதிற் பருகுதற்கு அணிமையில் நீர் இருப்பவும் நீரை வேட்டு விரைந்தாற்போல, நும் வேட்கையை முற்றுவிக்கும் தலைவி இடையறாது நும் அருகிலே இருப்பவும் நீர் விரைந்தீரென்றாள். இதனால் தலைவனது காமநிலை உரைக்கப்பட்டது.

இடைமுலை - முலையிடை; இடை - நடுவில்; முன்பின்னாகத் தொக்கது; மொழிமாற்றென்பாரும் உளர். நடுங்குதல் - காமவேகத்தால் நடுங்குதல்; விரைவுடையாருக்கு மெய்ந்நடுங்குதல் இயல்பு.

பிறை - மூன்றாநாட் சந்திரன். அது திங்களுக்கொருமுறையே தோன்றுவதாதலின் காட்சியருமைக்கு அதனை உவமை கூறினாள்; கார்த்திகைப் பிறையுமாம். பெரிய - பெரிய வருத்தங்களை; என்றது காமத்தால் நேரும் துன்பங்களை. "களவுக் காலத்தில் நீர் இவளைக் காண்டல் குறித்து மிக வருந்தியிருத்தல் வேண்டும். அஃது இப்பொழுதுள்ள நும் நிலையால் உய்த்துணரக் கிடக்கின்றது. அதனை அக்காலத்தே நன்கறிந்திலேன்" என்னுங் கருத்தால் 'நோகோ யானே' என்றாள். நோகோ: ஓ, அசைநிலை. யானே: ஏ, அசைநிலை

## மேற்கோளாட்சி

4. மொழி மாற்றுப் பொருள்கோள் வந்தது (தொல். எச்ச. 13, ந.)

மு. பொழுது மறுப்பாக்கமென்னும் மெய்ப்பாடு வந்தது; 'தொழுதுகாண் பிறையிற் றோன்றினமென்பது களவுக் காலத்து இடையீடு பெருகிற்றெனக்கூறி, அங்ஙனம் * வரைந்தபொழுதினை மறுத்த காலத்தும் நடுங்கலானீரென்றமையின் இஃது அப்பொருட்டாயிற்று' (தொல் மெய்ப். 24, பேர்.); வதுவை நிகழ்ந்தபின் தன்னைச் சிறப்பித்துக் கூறுமிடத்துத் தோழிக்குக் கூற்று நிகழ்ந்தது; 'இதனுள் முலையிடைக் கிடந்தும் பனிக்கின்றநீர் அரியமாகிய காலத்து எங்ஙனம் ஆற்றினீரென நோவாநின்றேன்; இங்ஙனம் அருமை செய்தலால் தேற்றுதற்குரியேனாகிய என்னைச் சிறப்பித்துக் கூறலாகாதென்றவாறு காண்க' (ஷை. கற்பு. 9, ந.); பாங்கி தலைவனை வரையும் நாளளவும் நிலைபெற ஆற்றிய நிலைமை வினாவியது (நம்பி. 203); பொழுது மறுப்பாக்கம் வந்தது (இ. வி. 580.)

## ஒப்புமைப் பகுதி

1. அயிரை: குறுந். கஉஅ: 3, கசுக: 2.

2. தூம்புடைத் திரள்காலாம்பல்: "நீர்வள ராம்பற் றூம்புடைத் திரள்கால்" (நற். ௬: 1.)

3. "குவளை குறுநர் நீர்வேட் டாங்கு" (நற். ௬௬உ: 2); "வெள்ளத்து ளுவற்றி யாங்கு" (திருவா. நீத்தல். 14.)

4. இடைமுலைக் கிடத்தல்: "இரவின் வந்தெம் மிடைமுலை பொருந்தி" (அகநா. ௬உஅ: 5.)

தலைவன் தலைவியின் நகிலிடைக் கிடத்தல்: குறுந். ௬க: 4, ஒப்பு.

5. தொழுதுகாண் பிறை: (குறுந். ௬0எ: 1-3); "ஒள்ளிழை மகளி ருயர்பிறை தொழூஉம், புல்லென் மாலை" (அகநா. உ௬க: 9-10); "அப்பிறை, பதினெண் கணனு மேத்தவும் படுமே" (புறநா. க: 9-10); "குழவித் திங்க ளிமையவ ரேத்த" (சிலப். உ: 38-9); "முன்னுந் தொழத்தோன்றி முள்ளெயிற்று யத்திசையே, இன்னுந் தொழத்தோன் றிற் றீதேகாண்—மன்னும், பொருகளிமால் யானைப் புகார்க்கிள்ளி பூண்

* வரைந்த பொழுதினை மறுத்தகாலம் - இரவுக் குறியென்றும் பகற்குறியென்றும் வரையறுத்த காலத்தை நீக்கி எப்பொழுது வேண்டுமெனினும் இன்புறற்குரிய காலம்.

போற், பெருசொளியான் பிக்க பிறை" (தொல். களவு. 23, ந, மேற்.); "அந்தி யாரண மந்திரத் தன்புட னிவனே, வந்தி யாதவர் மண்ணினும் வானினு மில்லை" (வி. பா. குருகுலச். 6); கோவை நூல்களில் வரும் 'பிறைதொழு கென்றல்' என்னும் துறைச்செய்யுட்களிலும் காண்க.

7. நோகோ யானே : குறுந். கஅக :6, ஒப்பு. (கஎஅ)

---

## தோழி கூற்று

[பகலில்வந்து தலைவியோடு அளவளாவிய தலைவனை நோக்கி, "எம் ஊருக்குவந்து இரவில் தங்கிச் செல்வாயாக" என்று தோழி கூறியது.]

கஎக. கல்லென் கானத்துக் கடமா வாட்டி
எல்லு மெல்லின்று ஞமலியு மிளைத்தன
செல்ல லைஇய வுதுவெம் மூரே
ஓங்குவரை யடுக்கத்துத் தீந்தேன் கிழித்த
குலையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்
பேதை யானை சுவைத்த
கூழை மூங்கிற் குவட்டிடை யதுவே.

எ - து. பகல் வருவானை இரவுக்குறி நேர்ந்தாள் போன்று வரைவு கடாயது.

குட்டுவன் கண்ணன்.

(ப - ரை.) ஐய—, கல் என் கானத்து - கல்லென்னும் ஆரவாரத்தையுடைய காட்டின்கண், கடமா ஆட்டி - கடமாவை நீ அலைப்ப, எல்லும் எல்லின்று - பகற்பொழுதும் மங்கியது; ஞமலியும் இளைத்தன - நாய்களும் நின்னுடன் வேட்டையாடி இளைப்பை அடைந்தன; செல்லல் - போகற்க; ஓங்கு வரை அடுக்கத்து - உயர்ந்த மலைப்பக்கத்தில், தீ தேன் கிழித்த - இனிய தேனிறாலைக் கிழித்த, குலையுடை பசு கழை தின்ற கயம் வாய் - கூட்டமாகிய பசிய மூங்கில்களின் குருத்தைத்தின்ற ஆழ்ந்த வாயையுடைய, பேதை யானை - பேதைமையையுடைய யானை, சுவைத்த கூழை மூங்கில் - தின்றதனாற் கூழையாகிய மூங்கிலையுடைய, குவட்டிடையது - உச்சியின் இடையே உள்ளதாகிய, உது எம் ஊர் - அஃது எமது ஊராகும்.

(முடிபு.) ஐய, எல்லும் எல்லின்று ; ஞமலியும் இளைத்தன ; செல்லல் ; குவட்டிடையயதுவாகிய ; உது எம் ஊர்.

(கருத்து.) இரவில் எம்முடைய ஊருக்கு வந்து தங்கிச் செல்வாயாக.

(வி - ரை.) கல்லென்றல்: சிள்வீடு, விலங்கு முதலியவற்றால் உண்டாகும் ஆரவாரம். கடமா - ஒருவகை விலங்கு ; "கடமா தொலைச்சிய கானுறை வேங்கை" (நாலடி. 300.) எல்லின்று : கக்ச-ஆம் செய்யுள் விசேடவுரையைப் பார்க்க.

ஞமலி, தலைவனோடு வந்தவை ; தலைவன் நாயொடு வருதலை,

"முளைபாழ் படுக்குந் துன்னருந் துப்பிற்
பகைபுறங் கண்ட பல்வேல் இளைஞரின்
உரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளும்
முளைவா ளெயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர" (குறிஞ்சிப். 128-32)

என்பதனால் உணரலாகும்.

செல்லலென்றும், உதுவெம் மூரென்றும் கூறியதனால், நீ போகாமல் எம்முடன் வந்து இரவில் தங்கிச்செல்வாயாக வென்றாளாயிற்று. இதனால் இடையறாது உடனுறைய வேண்டுமென்னும் தம் விருப்பத்தை உணர்த்தி, அங்ஙனம் இருத்தற்கு ஏற்ற நிலை வரைந்து கொண்டு இல்லறம் நடத்தலே யென்பதை உய்த்துணரவைத்தாள் ; வைத்தமையின், இது வரைவுகடாவியதாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. கல்லென் கானம் : "கல்லென் கடத்திடை" (மலைபடு. 415.)

கானத்துக் கடமாவாட்டல்: "வெட்சிக் கானத்து வேட்டுவ ராட்டக், கட்சி காணுக் கடமா நல்லேறு" (புறநா. உ0உ : 1-2.)

2. எல்லும் எல்லின்று : நற்றி. ௩௧0 : 1 ; அகநா. ௧௧0 : 11.

தலைவனுடன் நாய் வருதல்: அகநா. ௧௧அ : 5, ௧அஉ : 5, ௩அஅ : 14-5.

3. உதுவெம்மூர் : "அஃதெம் மூர்" (அகநா. ௩அ : 17.)

4. ஓங்குவரை யடுக்கம் : (குறுந். ௬௧ : 4) ; "நெடுமலை யடுக்கம்" (அகநா. ௬உ : 1.)

4-5. அடுக்கத்துக்கழை: "கழைவள ரடுக்கம்" (அகநா. அஉ: 9.)

தேனடையைக் கழை கிழித்தல்: "சாம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப், பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே" (கம்ப. நாட் டுப். 35.)

5-6. யானை மூங்கிலை உண்ணுதல்: நற். ககசு: 4-5; அகநா. அ௫: 7-8, கசஅ: 13, உகஅ: 2-3, ௩உஅ: 13, ௩௩உ: 1-2; புறநா. எ௩: 9, அ௦: 7. (களகூ)

---

## தோழி கூற்று

[தலைவனது பிரிவினால் வருந்திய தலைவியை நோக்கி, "அவர் சென்றவிடத்தில் தாம் கருதிச்சென்ற பொருளைப் பெற்றனரோ; இலரோ; பெற்றனராயின் உடனே மீண்டுவருவார்" என்று தோழி கூறி வற்புறுத்தியது.]

கஅ௦. பழூஉப்பல் லன்ன பருவுகிர்ப் பாவடி
இருங்களிற் றினநிரை யேந்தல் வரின்மாய்ந்
தறைமடி கரும்பின் கண்ணிடை யன்ன
பைதலொருகழை நீடிய சுரனிறந்
தெய்தினர் கொல்லோ பொருளே யல்குல்
அவ்வரி வாடத் துறந்தோர்
வன்ப ராகத்தாஞ் சென்ற நாட்டே.

எ - து. பிரிவிடை வேறுபட்டாளைத் தோழி வற்புறுத்தியது.

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(ப - ரை.) அல்குல்—, அ வரி வாட - அழகிய தேமல் வாடும்படி, துறந்தோர் - நம்மைப் பிரிந்த தலைவர், பழூஉ பல் அன்ன - பேயின் பற்களைப் போன்ற, பரு உகிர் பா அடி - பருத்த நகங்களையுடைய பரவிய அடிகளைப்பெற்ற, இரு களிறு இனம் நிரை ஏந்தல் வரின் - பெரிய களிற்றுத்திரளின் வரிசையினது தலைவன் வந்து கைக்கொள்ளின், மாய்ந்து - அழிந்து, அறை மடி கரும்பின் - பாத்தியின்

---

(பி - ம்.) * வைகல்.

கண் விழ்ந்த கரும்புகளின், கண் இடை அன்ன - கணுக்களின் இடையேயுள்ள பகுதியைப் போன்ற, பைதல் ஒரு கழை - வருந்துதலையுடைய ஒற்றைமூங்கில், நீடிய - ஓங்கிய, சுரன் இறந்து - பாலைநிலத்தைக் கடந்து, வன்பர் ஆக - வன்னெஞ்சினராக, தாம் சென்ற நாட்டு - தாம்போன நாட்டினிடத்து, பொருள் எய்தினர் கொல் - பொருளை அடைந்தாரோ இல்லையோ?

(முடிவு.) துறந்தோர் பொருள் எய்தினர்கொல்லோ?

(கருத்து.) தலைவர் தாம் தேடிச்சென்ற பொருளைப் பெற்றாரோ, இலரோ?

(வி - ரை.) யானை அடியின் நகத்திற்குப் பேயின் பல் உவமை. பழு - பேய் (குறிஞ்சிப். 259, ந.) யானைகள் கூட்டமாகப் போகுங்கால் அக்கூட்டத்திற்குமுன் ஒரு வலிய களிறு செல்லுவது வழக்கம்; அதனை யூதநாதனென்பர்; இங்கே ஏந்தலென்றதும் அதனையே. அறை - பாத்தி (மலைபடு. 118, ந.) யானையால் முறிக்கப்பட்ட கரும்பின் ஒருகணுவுக்கும் மற்றொருகணுவுக்கும் இடையிலுள்ள அளவே வளர்ந்த மூங்கில்.

எய்தினர் கொல்: கொல், ஐயம். பொருளை அடைந்தனரோ இலரோ என்றது, பொருளைப் பெற்றால் உடனே தங்காது மீண்டு வருவரென்று வற்புறுத்தியபடி.

## மேற்கோளாட்சி

1. செய்யுளில் மகர உகரம் நீண்டு உகரம் பெற்று வந்தது (தொல். உயிர்மயங்கு. 59, இளம்; ந; இ. வி. 95); குற்றெழுத்தளபெடை வந்தது (இ. கொ. 90.)

## ஒப்புமைப் பகுதி

1. யானையின் கால்நகத்திற்குப் பேயின் பல்: "கருமறிக் காதிற் கவையடிப் பேய்மகள், நிணனுண்டு சிரித்த தோற்றம் போலப், பிணனுகைத்துச் சிவந்த பேருகிர்ப் பணைத்தாள், அண்ணல் யானை" (சிறுபாண். 197 - 200.)

2. களிற்றினநிரை: குறுந். உ௬௬: 4; கலி. உ௬: 9, ௬உ: 4-5; அகநா. உசஅ: 1.

களிற்றினநிரை யேர்தல்: "அலகி லானைக ளனேகமு மவற்றொடு மடைந்த; திலக வாணுதற் பிடிகளுங் குருளையுஞ் செறிந்த, உலவை

நீள்வனத் தூதமே யொத்தவவ் ஆதத், தலைவ னேயொத்துப் பொலிந்தது சந்திர சயிலம் " (கம்ப. வரைக்காட்சி, 7.)

1-2. பாவடிக்களிறு : " பாவடி யானை " (புறநா. உருரு: 2.)

3. அறைமடி கரும்பு : (குறுந். உகஉ : 7, ஒப்பு.); " அறைக் கரும்பு " (பொருந. 193); " அறையுற், றாலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே " (மலைபடு. 118-9); " அறையுறு கரும்பு " (பதிற். எ௫ : 6; பெருங். க. 48 : 146.)

4. பாலைநிலத்திலுள்ள மூங்கிலின் நிலை : குறுந். ருருக : 1, ஒப்பு.

5-6. அல்தலவ்வரி : கலி. சo : 4; அகநா. ருரு : 16.

7. வள்பர் : குறுந். ருக௬ : 3. (கஅo)

---

## தலைவி கூற்று

[தலைவன் பரத்தையிற் பிரிந்த காலத்தில் தலைவியின் ஆற்றாமையைக் கண்ட தோழி அவனது பரத்தைமையை இழிவு தோன்றக் கூறியபோது, " நமக்கு எவ்வளவோ கடமைகள் உள ; அவற்றைச் செய்துகொண்டிருத்தல் சாலும்; தலைவனைக் குறைகூறல் வேண்டா " என்று தலைவி கூறியது.]

கஅக. * இதுமற் றெவனோ தோழி துனியிடை
இன்ன ரென்னு மின்னாக் கிளவி
இருமருப் பெருமை யீன்றணிக் காரான்
உழவன் யாத்த குழவியி னகலாது
பாஅற் பைம்பயி ராரு மூரன்
திருமனைப் பலகடம் பூண்ட
பெருமுது † பெண்டிரே மாகிய நமக்கே.

எ - து. தலைமகன் பரத்தையிற் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள் ஆற்றல் வேண்டித் தோழி இயற்பழித்தவழி, தலைமகள் இயற்பட மொழிந்தது.

‡ கிளிமங்கலங்கிழார்.

---

(பி - ம்.) * இதுவுமற். † பெண்டிராகிய. ‡ கிள்ளிகிழார்.

(ப - ரை.) தோழி—, இரு மருப்பு எருமை ஈன்றணி காரான்-பெரிய கொம்பையுடைய ஈன்றணிமையையுடைய பெண்ணெருமை யானது, உழவன் யாத்த குழவியின் அகலாது - உழவனாற் கட்டப்பட்ட கன்றின் பக்கத்தினின்றும் அகலச் செல்லாமல், பாஅல் வை பயிர் - பக்கத்திலுள்ள பசிய பயிர்களை, ஆரும் ஊரன் - மேய்வதற்கிடமாகிய ஊரையுடைய தலைவனது, திருமனை பல கடம் பூண்ட - செல்வத்தையுடைய மனைவாழ்வுக்குரிய பல கடப்பாடுகளை மேற்கொண்ட, பெரு முது பெண்டிரேம் ஆகிய நமக்கு - பெரிய முதிய பெண்டிராகிய நமக்கு, துனியிடை - புலவிக்காலத்தினிடையே, இன்னர் என்னும் இன்னு கிளவி - தலைவர் இத்தகையரென்னும் இனிமையில்லாத கூற்றாகிய, இது எவன் - இதனாற் பயன் யாது?

(முடிபு.) தோழி, ஊரன் மனைக்கடம் பூண்ட நமக்கு இன்னாக் கிளவி எவன்?

(கருத்து.) தலைவனைக் குறை கூறாமல் நம் கடப்பாடுகளை நாம் செய்வேமாக.

(வி - ரை.) இது: செய்யுளாதலின் சுட்டு முன் வந்தது. மற்று, ஓ: அசைநிலை. இன்னரென்றது, பரத்தைமையுடையரென்று கூறுதல்; ஆதலின் இன்னாக் கிளவியாயிற்று. இரு மருப்பு - கரிய மருப்பெனலுமாம். "பெற்றமு மெருமையு மரையு மாவே" (தொல். மரபு. 60) என்பது விதியாதலின் எருமையைக் காரானென்றாள். எருமையின்கன்று குழவியென வழங்கப்படும் மரபு, "ஆவு மெருமையு மவைசொலப் படுமே" (ஷை. ஷை. 20) என்னும் சூத்திரத்தால் உணரப்படும். திருமனை யென்றாள் இல்லறம் புரிதற்குரிய செல்வமுடைமைபற்றி. பல கடமாவன,

"அறவோர்க் களித்தலு மந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலுந் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும்" (சிலப். கசு : 71-3)

முதலியன. பூணல் - மேற்கொள்ளல்.

தலைவன் பரத்தையர்பாற் சென்றிருந்த காலத்தில் தலைவி ஆற்றாமையையுடையளானாள்; அப்பொழுது தலைவனுடைய பரத்தைமையைக் கூறின் அவள் தன் துயர்க்காரணமறிந்து கூறுகின்றாளென ஆற்றியிருப்பாளென்று எண்ணிய தோழி, இழிப்புக் குறிப்புத் தோன்றத் தலைவன் ஒழுகலாற்றை யெடுத்துரைத்தாள். தான் தன்

அன்புடைமையினால் ஆற்றளாயினும் பிறர் தன் தலைவனது குறையைக் கூறப் பொறாத சிறந்த கற்புடையளாதலின் தலைவி அவளை நோக்கி, "அவரோடு புலந்து உறையும் இக்காலத்தில் அவரைப் பற்றிக் குறை கூறுவதனாற் பயனொன்றுமில்லை. இல்லறம் நடத்தும் பெண்டிராகிய நாம் செய்யக்கடவ அறங்கள் பலவுண்டு; இன்பமொன்றையே பெரிதாகக் கருதும் இளமையையும் நாம் கடந்து முதுமை யெய்தினேம். ஆதலின் தலைவர் எங்ஙனம் இருப்பினும் நம் கடப்பாடுகளை நாம் செய்தல் சாலும்" என்று கூறினள்.

"அன்புடைக் கணவ ரழிதகச் செயினும்
பெண்பிறந் தோர்க்குப் பொறையே பெருமை"
(பெருங். ௪. 14 : 98-9)

என்பவாதலின் தலைவி இங்ஙனம் கூறினாள்.

எருமை, கட்டப்பட்ட தன் குழவியினின்றும் அகலாமல் அருகிலேயுள்ள பயிரை ஆரும் ஊரனென்றது, தலைவன் இல்லின் கண் உறையும் தலைவிபாற் கொண்ட அன்பு குறையாமல் தனக்கு வேண்டிய இன்பத்தை அருகிலுள்ளார்பாற் பெறுகின்றானென்னும் குறிப்பைப் புலப்படுத்துவது.

## மேற்கோளாட்சி

மு. அடங்கா ஒழுக்கத்தையுடைய தலைவன்மாட்டு மனன் அழிந்தோளை அடங்கக் காட்டுதற்கு ஏதுவான பொருட்பக்கத்தில் தோழிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 9, இளம்.); தோழி இன்னாக் கிளவி கூறியதனை, இது பொழுது கூறிப் பயந்ததென்னெனத் தலைவி காய்ந்து கூறியது (ஷை. ஷை. 6, ந.); தலைவியைப் பாங்கி கழறியது (நம்பி. 205.)

## ஒப்புமைப் பகுதி

1. இதுமற் றெவனோ தோழி: குறுந். ௨௬௪ : 1.

இன்னார்: "இன்னா னவ னெவன்கொ லன்னாய்" (ஐங். ௨௪ : 4); "இன்ன ரினைய ரெமர்பிற ரென்னுஞ் சொல்" (நாலடி. 205.)

3. எருமைக் காரான்: குறுந். ௨௬௪ : 3; நற். ௮0 : 1.

3-4. எருமைக் குழவி: பட். 14; நற். ௧௨0 : 1-2, ௨௭௧ : 1; ஐங். ௯௨ : 1-2.

6. கடம்பூணல்: சிலப். ௧௫ : 2; மணி. ௬ : 70.

7. பெருமுது பெண்டிர்: முல்லைப். 11. (௧அ௧)

தலைவன் கூற்று

[தன் குறையைத் தோழி மறுத்தாளாக, "தலைவியும் இரங்கிக் குறை நயந்திலள்; தோழியும் உடம்படவில்லை; ஆதலின் இனி மடலேறுவேன்" என்பதுபடத் தலைவன் தன் நெஞ்சை நோக்கிக் கூறியது.]

கஅ௨. விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்
மணியணி பெருந்தார் * மரபிற் பூட்டி
வெள்ளென் பணிந்துபிற ரெள்ளத் தோன்றி
ஒருநாண் மருங்கிற் பெருநா ணீக்கித்
தெருவி † னியலவுந் தருவது கொல்லோ
‡ கலிழ்ந்தவி ரசைநடைப் பேதை
மெலிந்தில ளாம்விடற் கமைந்த தூதே.

எ - து. தோழியாற் குறைமறுக்கப்பட்ட தலைமகன், தன்னெஞ்சிற்கு உரைத்தது.

மடல்பாடிய மாதங்கீரன்.

(ப - ரை.) நெஞ்சே, கலிழ்ந்து அவிர் அசை நடை பேதை - அழகு ஒழுகிவிளங்கும் அசைந்த நடையையுடைய தலைவி, மெலிந்திலள் - நம்மாட்டு நெஞ்சம் நெகிழ்ந்திலள்; நாம் விடற்கு அமைந்த தூது - நாம் அத்தலைவியினிடத்து விடுதற்கு அமைந்த தூது, விழு தலை பெண்ணை - சிறந்த உச்சியையுடைய பனையின்கண், விளையல் மாமடல் - முதிர்தலையுடைய பெரிய மடலாற்செய்த குதிரைக்கு, மணி அணி பெரு தார் - மணிகள் அணிந்த பெரிய மாலையை, மரபின் பூட்டி - முறைமையோடு அணிந்து, வெள் என்பு அணிந்து - நாம் வெள்ளிய என்பை அணிந்துகொண்டு, பிறர் எள்ள தோன்றி - பிறர் இகழும்படி அம்மடல்மாவின்மேல் தோன்றி, ஒருநாள் மருங்கில் - ஒருநாளில், பெருநாண் நீக்கி - பெரிய நாணத்தை விட்டுவிட்டு, தெருவின் இயலவும் தருவது கொல் - தெருவின்கண் செல்லவும் தருவதோ?

(பி - ம்.) * மார்பிற். † னியல்வுதருவது. ‡ கலிங்கவிர், கலிந்தவிர், கலிழ்கவின்.

(முடிபு.) பேதை மெலிந்திலள்; தூது, மா மடலில் தார்பூட்டி என்பணிந்து எள்ளத்தோன்றி நாண் நீக்கித் தெருவின் இயலவுந் தருவது கொல்?

(கருத்து.) நான் இனி மடலேறுவேன்.

(வி - ரை.) கருக்குடையதாக வேண்டுதலின் விளையல் மாமடலென்றான். மாமடலென்பதை மடன்மாவென்று மாற்றிப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. மணியை மடல்மாவுக்குப் பூட்டுவர். பேதையென்றான், தன் நெஞ்சத்திலுள்ள காமத்தைஅறியாமையின். தூதென்றது தோழியை; 'பெட்ட வாயில்' என்று அவளைக் குறிக்கும் வழக்காறு காண்க. அமைந்த தூது என்றான், தலைவியினிடத்துச் சென்று தன் குறை கூறத்தக்க உரிமையுடையாளிவளே யென்பதை முன்னர்த் தலைவியின் நோக்கக் குறிப்பால் உணர்ந்தவனாதலின்.

நெஞ்சை நோக்கிக் கூறினானேனும் கருதியது தோழி அறிய வேண்டுமென்பதே.

இயலவும்: உம்மை, இழிவு சிறப்பு. கொல்: ஐயம்; ஓ, ஏ: அசை நிலைகள்.

மடலேறுதலைப்பற்றிப் பாடிய சிறப்பால் இச்செய்யுளை இயற்றிய ஆசிரியர் '**மடல்பாடிய**' என்ற சிறப்பைப் பெற்றார்.

## மேற்கோளாட்சி

மு. தோழி சேட்படுத்த விடத்துத் தலைவன் மடன்மா ஏறுவலெனத் தன் நெஞ்சொடு கிளந்தது (தொல். களவு. 11, ந.)

## ஒப்புமைப் பகுதி

1-2. **மடன்மாவிற்கு மணியணிதல்:** நற்றி. கஎ௨: 3, ஒப்பு.

3. **மடலேறுவார் என்பை அணிதல்:** "மங்கையர்தங் கண்ணான் மயங்கினார் வெள்ளெலும்பும், துங்க வெருக்குந் தொடுத்தணிந்—தங்க மெலாம், வெந்தாறு சாம்பன் மிகவணிந்து வீதிதொறும், வந்தேறி யூர்வர் மடல்" (**கிளவித்தெளிவு**); "என்பணி வேன்மடன் மேல்வருவேன்", "தொடையே யெருக்கென்பு நீயணிந் தாலென்னை" (**தஞ்சை.** 103-4); "கொம்மைப் பணைமுலை கூட்டும் பரிசு கொடியிடையார், தம்மைப் பெறுவர் தாலப் புரவியு மாலையென்பும்...இம்மைக்கு நாடி" (**அம்பிகாபதிக்கோவை**, 119.)

மடலேறுவாரைப் பிறர் எள்ளுதல்: "வறிதாகப் பிறரென்னை நகுபவும்", "காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்து" (கலி. ௧௩௮ : 4, ௧௩௯ : 20.)

4. மடலேறுவார் நாணை நீக்குதல்: குறுந். ௧௭௩ : 3, ஒப்பு.

1-5. மடலேறித் தெருவில் வருதல்: குறுந். ௧௭ : 1-3, ஒப்பு.

6. (பி-ம்.) கலிழ்கவின்: மதுரை. 413; ஐங். ௧௦௪ : 4, ௧௭௪ : 4; அகநா. ௪௧ : 15, ௯௯ : 12; பெருங். உ. 5 : 170.

அசைநடைப்பேதை: "அசையியற் கொடிச்சி" (குறுந். ௨௧௪ : 3); "அசைநடைக் கொடிச்சியை" (ஐங். ௨௫௮ : 2); "அசையியற்கு" (குறள், 1098.) (௧௮௨)

---

## தலைவி கூற்று

[*தலைவன் கூறிச் சென்ற கார்ப்பருவம் வரவும் அவன் வாராமையால் தலைவி ஆற்றாளென்று எண்ணி வருந்திய தோழியை நோக்கி, "கார்காலத்துக்குரிய அடையாளங்களை அவர் கண்டு என்னை நினைந்து வருவர்" என்பதுபடத் தலைவி கூறியது.*]

௧௮௩. *சென்ற நாட்ட கொன்றையம் பசுவீ
நம்போற் பசக்குங் காலைத் தம்போற்
சிறுதலைப் பிணையிற் றீர்ந்த நெறிகோட்
டிரலை மானையுங் காண்பர்கொ னயரே
புல்லென் காயாப் பூக்கெழு பெருஞ்சினை
மென்மயி லெருத்திற் றோன்றும்
கான வைப்பிற் புன்புலத் தானே.*

எ - து. பருவ வரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தியுரைத்தது.

† ஔவையார்.

(ப - ரை.) *தோழி, புல் என் காயா பூ கெழு பெரு சினை - மழை பெய்வதற்குமுன் பொலிவழிந்திருந்த காயாவினது மலர்கள் பொருந்திய பெரிய கிளை, மெல் மயில் எருத்தின் தோன்றும் - மழை பெய்தபின் மெல்லிய மயிலினது கழுத்தைப்போலத் தோற்றும்,*

---

(பி - ம்.) * புன்புல வைப்பிற் கானத் தானே. † அவ்வையார்.

கானம் வைப்பின் புல் புலத்தான் - காட்டிடத்தையுடைய புல்லிய நிலத்தின்கண், சென்ற நாட்ட - எம்மைப் பிரிந்து சென்று தங்கிய நாட்டிடத்து உள்ளனவாகிய, கொன்றை அம் பசுவீ - கொன்றையின் அழகிய செவ்வி மலர்கள், நம்போல் பசக்கும் காலை - நம்மைப்போலப் பசலை நிறத்தையடையும் கார்ப்பருவத்தில், சிறுதலை பிணையின் தீர்ந்த - சிறிய தலையையுடைய பெண்மானிடத்தினின்றும் நீங்கிய, நெறி கோடு இரலைமானையும் - நெறிந்த கொம்பையுடைய ஆண்மானையும், நமர் - நம் தலைவர், காண்பர்கொல் - காண்பரோ; காணார்.

(முடிபு.) புன்புலத்தான் கொன்றையம் பசுவீ பசக்குங் காலைப் பிணையிற்றீர்ந்த இரலைமானையும் நமர் காண்பர்கொல்?

(கருத்து.) கார்காலம் வந்ததை அறிந்து தலைவர் விரைவில் வந்துவிடுவர்.

(வி - ரை.) பசத்தல் - பொன்னிறமடைதல்; என்றது கார் காலத்தில் கொன்றை வளம்பெற்று மலர்வதைக் குறித்தபடி. தாம் என்னைப் பிரிந்திருப்பதுபோலப் பிணையைப் பிரிந்திருக்கும் இரலையென்றாள். காண்பர்கொலென்றது காணாரென்ற நினைவிற்று. " கார் காலத்தில் ஆண்மானும் பெண்மானும் ஒருங்கு கூடி உகளுதலே இயல்பு; ஆதலின் அவர் அவ்விரண்டும் ஒன்றியிருப்பதையே காண் பாரன்றித் தனித்திருக்கும் இரலையைக் காணார்; அவ்வொன்றிய காட்சியைக் கண்டு தாமும் அங்ஙனம் ஒன்றுபட வேண்டுமென்னும் விருப்புடையராவர். ஆண்டுள்ள கொன்றைமரத்திலுள்ள மலர்கள் தம்மைப் பிரிந்தமையால் என்பால் உண்டாயிருக்கும் பசலையை நினைவுறுத்தும். இவற்றால் அவர் விரைவில் மீள்வர். இதுகருதி நான் ஆற்றியுள்ளேன் " என்று கூறினாள். ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பதுபடக் கூறியது இது.

" வன்பரற் றெள்ளறல் பருகிய விரலைதன்
இன்புறு துணையொடு மறுவந் துகளத்
தான்வந் தன்றே தளிதரு தண்கார் " (குறுந். ௬௫ : 1-3)

என்பது முதலியவற்றால் கார்காலத்தில் ஆண்மான் தனித்திராது பெண்மானோடு சேர்ந்திருக்குமென்பது தெளியப்படும்.

புல்லென் காயா வென்பதிலுள்ள அடை முன்னிருந்த நிலையைக் குறித்தது. கானவைப்பு - முல்லைநிலம். புன்புலம் - புன்செய்.

## ஒப்புமைப் பகுதி

1-2. பசலை கொன்றைப்பூவிற்கு : " கொன்றை, ஊழுறு மலரிற் பாழ்பட முற்றிய, பசலை மேனி " (அகநா. ருகசு : 3-5); " மெல்லியாள், தன்னுருவம் பூங்கொன்றைத் தார்கொள்ளத் தான்கொன்றைப், பொன்னுருவங் கொண்டு புலம்புற்றாள் " (ஆதியுலா, 131-2) ; " குழலுஞ் சுணங்குங் கொன்றை காட்ட " (திருவாரூர் மும். க.)

கொன்றை கார்காலத்தில் மலர்தல் : குறுந். உக : 3-4, ஒப்பு ; ஐங். சசுஉ, சகூஎ.

3. சிறுதலைப் பிணை : " சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை " (புறநா. உ : 21.)

5. காயா மரம் கார்காலத்தில் மலர்தல் : " மணியெனப், பன்மலர்க் காயாங் குறுஞ்சினை கஞலக், கார்தொடங் கின்றே " (நற். உசஉ : 3-5); " வானம் வாய்ப்பக் கவினிக் கானம், கமஞ்சூல் மாமழை கார்பயந் திறுத்தென, மணிமருள் பூவை யணிமல ரிடையிடைச், செம்புற மூதாய் பரத்தலின் ", " மணிமிடை பவளம் போல வணிமிகக், காயாஞ் செம்ம லாஅய்ப் பலவுடன், ஈயன் மூதா யீர்ம்புறம் வரிப்பப், புலனணி கொண்ட காரெதிர் காலை ", " காயா, அணிமிகு செம்ம லொளிப்பன மறையக், கார்கவின் கொண்ட காமர் காலை " (அகநா. கருச : 1-4, ருOச : 13-6, ருஎச : 13-5.)

1-5. கொன்றையும் காயாவும் : பொருந. 201 ; முல்லைப். 93-4 ; நற். உசஉ : 3-4, * ருஎக : 1 ; ஐங். சகஉ : 1, சஉO : 1-2 ; பெருங். க. 49 : 115-6.

5-6. காயாஞ்சினை மயிலின் கழுத்திற்கு : " கருநனைக் காயாக் கண மயி லவிழ " (சிறுபாண். 165) ; ' மயிலெருத் துறழணி - மயிலினது கழுத்தை மாறுபடுகின்ற அணியப்பட்ட காயாம்பூவாற் செய்த கண்ணிகள் ' (கலி. கOரு : 59, ந.) ; " விரவுப்பொறி மஞ்ஞை வெரீஇ யரவின், அணங்குடை யருந்தலை பைவிரிப் பவைபோற், காயா மென்சினை தோய நீடிப், பஃறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்தள் " (அகநா. கOஅ : 12-5) ; " கருவுற்ற காயாக் கணமயிலென் றஞ்சி " (திணைமாலை. 107) ; " கலவ மாமயி லெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா " (சீவக. 1558.)

7. புன்புலம் : குறுந். உOஉ : 2. (கஅரு.)

---

* ஔவையார் பாட்டு.

## தலைவன் கூற்று

[தன்னை இடித்துரைத்த பாங்கனை நோக்கி, "சிற்றூரிடத்துச் செல்பவர் யாரும் தலைவியின் கண்வலையிற் படுவர்; என் நெஞ்சம் அதிற்பட்டது" என்று கூறியது.]

கஅச. அறிகரி பொய்த்த லான்றோர்க் கில்லை
குறுக லோம்புமின் சிறுகுடிச் செலவே
இதற்கிது மாண்ட தென்னா தரதற்பட்
டாண்டொழிந் தன்றே *மாண்டகை நெஞ்சம்
மயிற்க ணன்ன † மாண்முடிப் பாவை
நுண்வலைப் பரதவர் மடமகள்
கண்வலைப் படூஉங் கான லானே.

எ - து. கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது.

ஆரியவரசன் யாழ்ப்பிரமதத்தன்.

(ப - ரை.) மயில் கண் அன்ன - மயிலினது பீலிக்கண்ணைப் போன்ற, மாண் முடி பாவை - மாட்சிமைப் பட்ட முடியையுடைய பாவைபோல்வாளாகிய, நுண் வலை பரதவர் மடமகள் - நுண்ணிய வலையையுடைய நெய்தனில மாக்களுடைய மடமையையுடைய மகளது, கண் வலை படூஉம் கானலான் - கண்வலையின்கண் ஆண்டுச் செல்வார் அகப்படுகின்ற கடற்கரைச்சோலையினிடத்து, மாண் தகை நெஞ்சம் - எனது மாட்சிமைப்பட்ட தகுதியையுடைய நெஞ்சம், இதற்கு இது மாண்டது - இப்பொருளுக்கு இப்பொருள் ஏற்ற மாட்சியையுடையது, என்னாது - என்று ஆராயாமல், அதன்பட்டு - அக்கண்வலையின்கண்ணே பட்டு, ஆண்டு ஒழிந்தன்று - அக்கானலினிடத்தே தங்கியது; ஆன்றோர்க்கு - அறிவான் அமைந்தவர்கட்கு, அறிகரி பொய்த்தல் இல்லை - தாம் கண்டறிந்த தொன்றை மறைத்துப் பொய்க்கரி கூறும் இயல்பு இல்லை; ஆதலின் யாம் கண்டறிந்த இதனை உண்மையாகக் கொள்க; சிறு குடி செலவு - அச்சிற்றூரினிடத்துச் செல்லுதலை, குறுகல் ஓம்புமின் - அடைதலைப் பரிகரிமின்.

---

(பி - ம்.) * நாண்டகை. † மாமுடிப்பாவை.

(முடிபு.) கானலான் நெஞ்சம் ஒழிந்தன்று; அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கில்லை; குறுகல் ஓம்புமின்.

(கருத்து.) நீவிர் ஆண்டுச் சென்றால் இங்ஙனம் கழறீர்.

(வி - ரை.) அறிகரி பொய்த்தல் - தாம் அறிந்ததோருண்மையான நிகழ்ச்சியை மறைத்துப் பொய்க்கரி கூறுதல்; அறிகரி - நெஞ்சறிந்த கரி; "தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின், தன்னெஞ்சே தன்னைச் சுடும்" (குறள், 293) என்பது இங்கே அறிதற்குரியது. ஆன்றோரென்றது தன்னையும் உளப்படுத்தி; இங்ஙனங் கூறுதல் தற்புகழ்ச்சியன்று; பட்டாங்கு கூறியது (சிற். 27, உரை; சீவக. 1364, உரை.) அதற்பட்டு: அன், சாரியை; "என்னிதற் படலே" (அகநா. கூரு: 15) என்று வருதலுங் காண்க. ஆன்றோனாதலின் மாண்டகை நெஞ்ச முடையனாயினன். மாண்டகை நெஞ்சமென்ற பாடத்திற்கு நாணத்தை நீத்த நெஞ்சமென்று பொருள் கொள்க. நுண்வலையென்றது நுண்ணிய நூலாலான வலையை; "நுண்ஞாண் வலையில்" (ஐந். எழு. 66.) வலையையுடையார் மகளொன்றமையின் அவள் கண்ணையும் வலையாக உருவகித்தான். கண்வலை யென்றதற் கேற்ப நெஞ்சத்தை மீனாகக் கொள்க (சிற். 74.)

"பரதவர் மடமகள் கண்வலையில் என்னெஞ்சம் பட்டு ஆண்டே தங்கிவிட்டது; இந்நிலை எனக்குமட்டும் அமைந்ததன்று; யாராயினும் அவ்வலையிலே படுவர்; இது யான் அறிந்த உண்மை; ஆதலின் அங்கே ஒருவரும் செல்லற்க; செல்லின் துன்புறுவீர்" என்னுங் கருத்துப்படத் தலைவன் கூறினான். இதனால், "நீர் கண்டனிராயிற் கழறலிர்" (அகநா. கஙo: 2) என்ற எச்சப் பொருள் தோன்றியது.

## மேற்கோளாட்சி

மூ. முல்லையுங் குறிஞ்சியும் ஒழிந்தவற்றுடன் திணைதொறும் மரீஇய பெயருடையோரிலும் திணைநிலைப்பெயராகிய தலைமக்களாக வழங்குவாரும் உளர்; 'இது கழறிய பாங்கற்குக் கூறியது' (தொல். அகத். 22, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அறிகரி பொய்த்தல்: நற். கககூ: 9; சிலப். கரு: 78.
கரி பொய்த்தல்: கலி. கூச: 10.
அறிகரி: அகநா. உஙகூ: 18.

2. குறுந். உ0சு : 5.

சிறுதுடி : குறுந். கூஞ : 3, க00 : 3, க0அ : 1, கசஞ : 1, உஉஅ : 3, உஅச : 8, ௩உஉ: 3, ௩௩உ : 5, ௩ஞஞ : 6, ௩எ௩ : 7.

6. நுண்வலை : "நூனல நுண்வலை" (திணைமாலை. 32.)

6-7. மடமகள் கண்வலை : "காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து, வீசினை போதுள்ள மீனிழந்தார்" (சிற். 74.) (கஅச)

---

## தலைவி கூற்று

[தலைமகன் இரவில் வந்து தலைவியோடு அளவளாவி வருங்காலத்தில் ஆற்றின் ஏதம் அஞ்சி வேறுபட்ட தலைவியை நோக்கி, "நீ வேறுபட்டாயால்!" என்ற தோழிக்கு, "யான் வேறுபட்டமையைத் தலைவனுக்குச் சொல்லிப் பரிகாரம் தேடுவாயாக" என்று தலைவி கூறியது.]

கஅறு. நுதல்பசப் பிவர்ந்து திதலை வாடி
நெடுமென் பணைத்தோள் சாஅய்த் தொடிநெகிழ்ந்
தின்ன ளாகுத * னும்மி னாகுமெனச்
சொல்லி னெவனுந் தோழி பல்வரிப்
பாம்புடை யவிந்தது போலக் கூம்பிக்
கொண்டலிற் றொலைந்த வொண்செங் காந்தள்
கன்மிசைக் கவியு † நாடற்கென்
நன்மா மேனி யழிபடர் நிலையே.

எ - து. தலைமகன் இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற காலத்து வேறுபட்ட தலைமகளை, "வேறுபட்டாயால்" என்றாட்குக் கிழத்தி உரைத்தது.

[என்றாட்கு - என்ற தோழிக்கு.]

மதுரை அறுவை வாணிகன் ‡ இளவேட்டன்.

---

(பி - ம்.) * னும்மிற் றாகுமெனச். † நாடற்கென்னமா மேனி.
‡ வேட்டன், இளவேட்டனார்.

(ப - ரை.) தோழி—, பல் வரி பாம்பு - பல பத்திக் கீற்றுக் களையுடைய பாம்பினது, பை அவிந்தது போல கூம்பி - படம் ஒடுங்கியதைப் போலக் குவிந்து, கொண்டலின் தொலைந்த - கீழ்காற்றால் வீழ்த்தப்பட்ட, ஒள் செ காந்தள் - ஒள்ளிய செவ்விய காந்தள் மலர், கல்மிசை - பாறையின்மேல், கவியும் - கவிந்துகிடக்கும், நாடற்கு - நாட்டையுடைய தலைவனுக்கு, என் நல் மா மேனி - எனது நல்ல மாமையையுடைய மேனியினது, அழி படர் நிலை - மிக்கதுயரையுடைய நிலையை, நுதல் பசப்பு இவர்ந்து - நெற்றி பசலைபரந்து, திதலை வாடி - தேமல் ஒளியிழந்து, நெடு மென் பணைதோள் - நெடிய மெல்லிய பருத்த தோள்கள், சாஅய் - மெலிந்து, தொடிநெகிழ்ந்து - வளைகள் நெகிழப்பெற்று, இன்னள் ஆகுதல் - இத்தகைய வேறுபாட்டையுடையளாகுதல், நும்மின் ஆகும் என - உம்மால் ஆகியதென, சொல்லின் எவனும் - விளங்கச் சொன்னால் என்ன குற்றம் உளதாகும்?

(முடிபு.) தோழி, நாடற்கு என் மேனி நிலையை இன்னளாகுதல் நும்மினாகுமெனச் சொல்லின் எவனும்?

(கருத்து.) தலைவன் இராவந்தொழுகுவதனால் நான் வேறுபட்டமையை அவனுக்கு நீ அறிவிப்பாயாக.

(வி - ரை.) "இரவிலே தலைவன் வந்து அளவளாவும்பொழுது அதனால் மனமகிழ்ந்து இருத்தற்குமாறாக நீ இங்ஙனம் வேறுபட்டாயே!" என்ற தோழியை நோக்கி, "இங்ஙனம் என்னிடம் கூறுவதினும் என் நிலையைத் தலைவனிடம் கூறுதல் நலம்" என்று தலைவி கூறினாள்.

தோழி அங்ஙனம் கூறின் தலைவன் தலைவியின் வேறுபாட்டிற்குக் காரணம் யாதென்று ஆராயப்புகுந்து, தான் இராவருதலால் ஆற்றின்கண் ஏதம் நிகழுமோவெனத் தலைவி அஞ்சி வேறுபட்டாளென்பதனை அறிவான்; அறிந்து இவ்வொழுகலாற்றை நீத்து வரைந்து கொண்டு இடையறாது உடனிருத்தலே நலமென்று கருதி வரைவு மேற்கொள்வான். இதுவே இங்ஙனம் கூறியதற்குப்பயன்.

திதலை - தேமல். பணைத்தோள் - மூங்கிலைப்போன்ற தோளெனலுமாம். தோள் மெலிந்தமையின் தொடிநெகிழ்ந்தது. இவர்ந்து வாடி முதலிய எச்சவினைகள் சினைக்கும் முதலுக்குமுள்ள ஒற்றுமை பற்றி ஆகுதலென்னும் வினைமுதல் வினையோடு முடிந்தன. நும்மி

ஞரு மென்றால், "யாம் யாதுஞ் செய்திலமே! இவளை நாடோறும் காண்டற்பொருட்டன்றே நீண்ட நெறியைக் கடந்து வருகின்றேம்' என்று ஆராயப்புகுவான்; ஆதலின் அங்ஙனம் கூறும்படி சொன்னாள்.

"நெஞ்சங் கடுத்தது காட்டும் முகம்" ஆதலின், தன் வேறுபாடு களைக் கூறப்புக்கவள் முதலில் நுதல்வேறுபாட்டை உரைத்தாள்.

## ஒப்புமைப் பகுதி

1. நுதல் பசத்தல்: குறுந். அஎ: 4, ஒப்பு.

2. நெடுமென்பணைத்தோள்: குறுந். உசுஅ: 6.

தோள் மெலிதல்: குறுந். அஎ: 5, ஒப்பு.

தொடி நெகிழ்தல்: ௬௦: 4 - 5, ஒப்பு.

தோள்மெலிதலும் தொடிநெகிழ்தலும்: குறுந். உகூக: 1; குறள், 1236.

1-2. நுதல் பசத்தலும் தோள் நெகிழ்தலும்: குறுந். அஎ: 4-5, ஒப்பு.

3. இன்னாளாதல்: குறுந். கூஅ: 1, உககூ: 7-8.

4. சொல்லின் எவன்: "சொல்லி னெவனோ பாண" (அகநா. ௬௦: 10.)

4-5. பல்வரிப் பாம்பு: குறுந். கககூ: 1, ககூ௦: 3-4.

5-6. காந்தளுக்குப் பாம்பு: குறுந். உகூக: 3-5, ஒப்பு.

மு. தலைவி தன் வேறுபாட்டைத் தலைவனுக்கு அறிவிக்க விரும்புதல்: குறுந். கூஅ: 1-3, ஒப்பு. (கஅரு)

---

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற கார்ப்பருவம் வரவும் அவன் வாராமையால் தலைவி துயருறுவாளென்று வருந்திய தோழியை நோக்கி, "தலைவனை நினைந்து துயிலேனாயினேன்" என்று தலைவி கூறியது.]

கஅசு. ஆர்கலி யேற்றொடு கார்தலை மணந்த
கொல்லைப் புனத்த முல்லை மென்கொடி

எயிறென முகைக்கு நாடற்குத்
துயிறுறந் தனவாற் † றோழியென் கண்ணே.

எ - து. பருவவரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

ஒக்கூர் மாசாத்தி.

(ப - ரை.) தோழி—, என்கண் - என் கண்கள், ஆர்கலி ஏற்றொடு - மிக்க முழக்கத்தையுடைய இடியேற்றோடு, கார் தலைமணந்த - மேகம் மழைபெய்து கலந்த, கொல்லை புனத்த - முல்லை நிலத்திலுள்ளனவாகிய, முல்லை மெல் கொடி - மெல்லிய முல்லைக் கொடிகள், எயிறு என முகைக்கும் நாடற்கு - பற்களைப்போல அரும்பும் நாட்டையுடைய தலைவன்பொருட்டு, துயில் துறந்தன - உறக்கத்தை யொழிந்தன.

(முடிபு.) தோழி, என்கண் நாடற்குத் துயில் துறந்தன.

(கருத்து.) தலைவன் இன்னும் வாராமையின் நான் துயிலொழிந்து வருந்துகின்றேன்.

(வி - ரை.) ஏறு - இடியேறு; "இன்குர லேற்றொடு" (குறிஞ்சிப். 49); "முழவதிர்ந் தன்ன முழக்கத் தேறொ, டுரவுப் பெயல் பொழிந்த நள்ளென் யாமத்து" (அகநா. ௩௨௮ : 2-3.) தலைமணந்த : தலை, அசைநிலை; 'தலைமயங்கி யென்பதனுள் தலை அசைநிலை' (புறநா. ௧௭ : 9, உரை) எனப் பிறாண்டும் இவ்வசைநிலை வருதல் காண்க. கொல்லைப்புனம் - புனமாகிய கொல்லை; 'புனமென்பது, முன்பு பயிராயதனை; கொல்லையென்பது, பயிரின்றித் தரிசாய்க்கிடந்த காட்டினை' (அக. : 17) என்பர் அகநானூற்று உரையாசிரியர். முல்லை யெயிறென முகைக்கு மென்றது கார்ப்பருவம் வந்ததைப் புலப்படுத்தியது. 'முகையும்' என்னும் பாடமும் அரும்பும் என்னும் பொருளுடையது; "முகைந்த தாமரை" (ஐங். ௬ : 4) என வருவதை இங்கே கருதுக. நாடற்குத் துயில் துறத்தலாவது, நாடனைச் சேரா

## ஒப்புமைப் பகுதி

2. கோல்லைப் புனம்: "கொல்லை யிரும்புனத்து" (நாலடி. 178); "கொல்லைப் புனத்த வகில்" (ஐந். எழு. 2.)

1-2. கார், புனம், முல்லை: குறுந். கஅஅ: 1-2.

2-3. முல்லை எயிறேன முகைத்தல்: (* குறுந். கஉக: 3-4, ஒப்பு); "முல்லை யிலங்கெயி றீன" (கார். 14); "கார்கொடி முல்லை யெயி றீன" (ஐந். எழு. 21); "கார்செய் புறவிற் கவினிக் கொடிமுல்லை, கூரெயி றீன", "முல்லை யெயிறீன" (கைந்நிலை, 25, 34.)

முல்லை முகைக்கும்: "பாசிலை முல்லை முகைக்கும்" (புறநா. ககஎ: 9.)

1-3. முல்லை கார்காலத்தில் அரும்புதல்: குறுந். கஉக: 3-5, ஒப்பு.

3-4. தலைவன் பிரிவினுல் கண்துயிலாமை: குறுந் ௬: 4-5, ஒப்பு. (கஅகூ)

---

## தலைவி கூற்று

[வரைபொருட்குப் பிரிந்த தலைவன் நீட்டித்தானுக, அவன்மேற் குறையேற்றி யுரையாடிய தோழியை நோக்கி, "அவர் தாம் சென்ற வினையை நிறைவேற்றிக்கொண்டு விரைவில் வரும் வன்மையையுடையார்" என்று தலைவி கூறியது.]

கஅ௭. செவ்வரைச் † சேக்கை வருடை மான்மறி
சுரைபொழி தீம்பா லார மாந்திப்
பெருவரை நீழ லுகளு நாடன்
கல்லினும் வலியன் றோழி
வலிய னென்னுது மெலியுமென் னெஞ்சே.

எ-து. வரைவு நீட்டித்தவழி ஆற்றுளாகிய தலைமகளை ஆற்றுவிக்க வேண்டித் தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

கபிலர்.

(ப - ரை.) தோழி—, செ வரை சேக்கை - செவ்விய மலைப் பக்கத்தின்கண் தங்குதலையுடைய, வருடைமான் மறி - எண்கால்

* ஒக்கூர் மாசாத்தியார் பாட்டு. (பி - ம்.) † செச்சை.

வருடையினது குட்டி, சுரைபொழி தீ பால் - தன் தாயின் மடியினின்றும் சுரக்கின்ற இனிய பாலை, ஆர மாந்தி - வயிறுநிறைய உண்டு, பெருவரை நீழல் - பெரிய மலைப்பக்கத்திலுள்ள நிழலில், உகளும் நாடன் - துள்ளுதற்கிடமாகிய நாட்டையுடைய தலைவன், கல்லினும் வலியன் - கல்லைக்காட்டிலும் வன்மையை உடையவன்; என் நெஞ்சு—, வலியன் என்னுது - அவன் வன்மையையுடையானென்று கருதாமல், மெலியும் - அவன் திறத்து மெலிவை அடையும்.

(முடிபு.) தோழி, நாடன் வலியன்; என் நெஞ்சு மெலியும்.

(கருத்து.) தலைவன் வரைபொருள் பெற்று விரைவில் மீள்வான்.

(வி - ரை.) வரைபொருளுக்காகப் பிரிந்த தலைமகன் நீட்டித்தானாக, தலைவி அன்பு மிகுதியினால் ஆற்றாளாயினாள்; அது கண்ட தோழி, அவளை ஆற்றுவிக்க எண்ணி, "தலைவன் தான் நினைந்து சென்ற பொருளைப் பெற்றிலன் போலும்! உரிய காலத்தே அதனைப் பெற்று வருதற்குரிய வன்மையிலன் போலும்!" என்று தலைவனுக்கு இழிபு தோன்றக் கூறினாள். அது கேட்ட தலைவி, தலைவனைக் குறை கூறுவதைக் கேட்கப் பொறாத கற்புடையவளாதலின், "அவன் வலியன்; தான் நினைந்த பொருள் பெற்று மீள்வன். என் நெஞ்சு அவன் வன்மையை நினையாது அறியாமையால் வருந்துகின்றது. என் ஆற்றாமைக்குக் காரணம் தலைவன் செயலன்று; எனது நெஞ்சின் அறியாமையே" என்று தலைவன் திறத்திற் குற்றம் சாராதவாறு மொழிந்தாள்.

செவ்வரை - செங்குத்தான மலையுமாம்; அத்தகைய மலைகளில் ஏறும் வன்மை வருடைக்கு உண்டு; * "நெடுவரை மிசையது குறுங்கால் வருடை" (ஐங்: உ௮எ: 1.) வருடை - எட்டுக்காலையுடையதொரு விலங்கு; இதற்கு முதுகிற் கால்கள் இருக்குமென்பர்; "மீமிசைக் கொண்ட கவர்பரிக் கொடுந்தாள், வரைவாழ் வருடை வன்றலை மாத்தகர்" (மலைபடு. 502-3) என்பதன் உரையைப் பார்க்க. பாலை மாந்திய களிப்பினால் மறி வரைநீழலில் துள்ளி விளையாடிற்று.

வருடையின்மறி பாலை ஆரமாந்தி வரைநீழலில் உகளும் நாடனென்றது, தலைவன் வரைவதற்குரிய பொருள் நிரம்பப்பெற்று ஈண்டு வந்து வரைந்துகொண்டு இல்லறம் நடத்துவானென்ற குறிப்பையுடையது.

---

* கபிலர் பாட்டு.

## மேற்கோளாட்சி

1. மறியென்னும் இளமைப்பெயர் சிறுபான்மை வருடைக்கும் வரும் (தொல். மரபு. 12, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. வரைச்சேக்கை வருடை: "வரையாடு வருடை" (பட். 139); "மலைப், போருடை வருடை" (நற். கூகூக: 7-8); "வரைவாழ் வருடை" (அகநா. கூஎஅ: 6); "வரையாடு வருடையும்" (சிலப். உடு: 51); "வரைபாய் வருடை" (தொல். தொகை. 15, ந, மேற்.)

வருடை மான் மறி: *"வருடை மான் குழவி", *"வருடை மட மறி"; "வருடை நன்மான், குழவி" (கலி. சகூ: 14, ௫0: 4, 21-2) (கஅஎ)

---

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்ததைக் கண்ட தலைவி "கார்காலம் வந்து விட்டது, இன்னும் தலைவர் வந்திலர்!" என, தோழிக்குக் கூறி வருந்தியது.]

கஅஅ. முகைமுற் றினவே முல்லை முல்லையொடு
தகைமுற் றினவே தண்கார் வியன்புனம்
வாலிழை நெகிழ்த்தோர் வாரார்
மாலை வந்தன்றென் மாணலங் குறித்தே.

எ - து. பருவங்கண்டு அழிந்த கிழத்தி தோழிக்கு உரைத்தது.

† மதுரை அளக்கர் ஞாழார் மகன் மள்ளன்.

(ப - ரை.) தோழி, முல்லை முகை முற்றின - முல்லைக் கொடிகளில் அரும்பு முதிர்ந்தன; தண் கார் வியல் புனம் முல்லையொடு தகை முற்றின - தண்ணிய கார்காலத்தை ஏற்ற அகன்ற முல்லை நிலங்கள் முல்லை மலர்களோடு அழகு முதிர்ந்தன; என் மாண் நலம் குறித்து - எனது மாட்சிமைப்பட்ட அழகைக் கெடுத்தலை எண்ணி,

---

* கபிலர் பாட்டு. (பி - ம்.) † மதுரை அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார்.

மாலை வந்தன்று - மாலைக்காலம் வந்தது; வால் இழை நெகிழ்த்தோர் வாரார் - என்னைப் பிரிந்து என் தூய ஆபரணங்களை நெகிழச் செய்த தலைவர் இன்னும் வந்தாரல்லர்.

(முடிபு.) முல்லை முகை முற்றின; புனம் தகை முற்றின; மாலை வந்தன்று; இழை நெகிழ்த்தோர் வாரார்.

(கருத்து.) கார்காலம் வந்தும் தலைவர் வந்திலர்.

(வி - ரை.) தகை - தகுதி; முல்லைத் திணையென்னும் தகுதியை முல்லை மலர்களால் பெற்ற தென்றலுமாம். தலைவன் பிரிவினால் தலைவியின் உடல் மெலிந்தது; அதனால் இழைகள் நெகிழ்ந்தன. தன் மெலிவினால் இழைகள் நெகிழ்ந்தனவேயன்றி அவை குற்றமுடையன வல்லவென்பாள் 'வாலிழை' என்று சிறப்பித்தாள். 'கார்காலத்தைக் கண்டு வருந்தினேன்; அக் கார்ப்பருவத்திலும் காமம் மலர்வதற்குரிய மாலையைக் கண்டு பின்னும் வருந்தினேன்' என்பாள் அவற்றை அடைவே கூறினாள். வந்தன்று - வந்தது. நலங்குறித்து வந்ததென்றது நலத்தையழித்தல் குறித்து வந்ததென்றவாறு; "பகைவர்ச் சுட்டிய படைகொ ளோன்விரல்" (முல்லைப். 77) என்பதுபோல.

## ஒப்புமைப் பகுதி

1. முல்லை கார்காலத்தில் அரும்புதல்: குறுந். கஉகூ: 3-5, ஒப்பு.

1-2. முல்லை, கார், புனம்: குறுந். கஅகூ: 1-2.

3. வாலிழை: குறுந். சகு: 2.

இழை நெகிழ்த்தல்: (குறுந். ௩௫அ: 1); "விறலிழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்", (குறிஞ்சிப். 3); "இழைநெகிழ் பருவரல்", "புனையிழை ஞெகிழ்த்த புலம்புகொ ளவலமொடு" (நற். எ0: 9, ௨சஅ: 7); "இழைநெகிழ் செல்லல்", "இழைநிலை நெகிழ", "இழை நெகிழ் செல்ல லுறீஇ", "வில்லிழை நெகிழ" (ஐங். உ௫: 4, ௩௧0: 2, ௩௧௫: 3, ௩௧அ: 2); "பாசிழை ஞெகிழ" (பதிற். கூஅ: 15); "திருந்திழை நெகிழ்ந்தன", "வீங்கிழை நெகிழச் சாஅய்", "திருந்திழை நெகிழ்ந்து" (அகநா. உ0கூ: 16, உ௫௧: 3, உ௫௫: 17, ௩அஎ: 11.)

3-4. தலைவர் வாரார், மாலைவந்தது: குறுந். க௫௫: 3-7, ஒப்பு.

(கஅஅ)

---

## தலைவன் கூற்று

[வேந்தனது வினைமேற்செல்லாநின்ற தலைவன் தன் பாகனை நோக்கி, "இன்று விரைந்து சென்று வினைமுடித்து, நாளைத் தலைவிபால் மீண்டு வருவேமாக" என்று கூறியது.]

கஅ/கூ. இன்றே சென்று வருவது நாளைக்
குன்றிழி யருவியின் வெண்டேர் முடுக
இளம்பிறை யன்ன விளங்குசுடர் நேமி [பசுங்
விசும்புவீழ் கொள்ளியிற் பைம்பயிர் † துமிப்
காலியற் செலவின் மாலை யெய்திச்
சின்னிரை வால்வளைக் குறுமகள்
பன்மா ணாகம் ‡ மணந்துவக் குவமே.

எ - து. வினை தலைவைக்கப்பட்ட விடத்துத் தலைமகன் பாகற்கு உரைத்தது.

[தலைவைக்கப்பட்ட விடத்து - செய்ய வேண்டுமென்று சுமத்தப்பட்ட காலத்தில்.]

மதுரை ஈழத்துப் பூதன்றேவன்.

(ப - ரை.) பாக, இன்றே சென்று - இன்றைக்கே வினையின்பொருட்டுப் புறப்பட்டுப் போய், நாளை வருவது - நாளை மீண்டு வருவேமாக. குன்று இழி அருவியின் - குன்றினின்றும் வீழும் அருவியைப்போல, வெள் தேர் முடுக - யானைத் தந்தத்தாற் செய்த வெள்ளிய தேர் விரைந்து செல்ல, இள பிறை அன்ன - இளம்பிறையைப் போன்ற, விளங்கு சுடர் நேமி - விளங்குகின்ற ஒளியையுடைய அத்தேரினது சக்கரம், விசும்பு வீழ் கொள்ளியின் - வானத்தினின்றும் வீழ்கின்ற கொள்ளியைப்போல, பசு பயிர் துமிப்ப - பசிய பயிர்களைத் துணிப்ப, கால் இயல் செலவின் - காற்றைப் போன்ற இயல்பையுடைய வேகத்தினால், மாலை எய்தி - மாலைக் காலத்தில் தலைவியிருக்கு மிடத்தை யடைந்து, சில் நிரை வால் வளை குறுமகள் - சிலவாகிய வரிசையையுடைய வெள்ளிய வளைகளை யணிந்த அவளது, பல் மாண் ஆகம் - பலவாக மாட்சிமைப் பட்ட மேனியை, மணந்து உவக்குவம் - மணந்து உவப்போம்;

(பி - ம்.) * விசும்புவீசு. † துமியக். ‡ மடைந்துவக்கும்மே.

(முடிபு.) இன்றே சென்று நாளை வருவது. தேர் முடுக, நேமி துமிப்ப, மாலை எய்திக் குறுமகள் ஆகம் மணந்து உவக்குவம்.

(கருத்து.) இன்று சென்று வினைமுடித்து விட்டுத் தலைவியின் பால் நாளை மாலையில் வந்து எய்துவேமாக.

(வி - ரை.) வேந்தனால் ஏவப்பட்டு வினைமேற் செல்லும் தலைவன், இது கூறினான்.

இன்றே: ஏகாரம் பிரிநிலை. வருவது - வருவேமாக; வியங்கோட் பொருளில் வந்தது; "கொள்ளப் படாது மறப்ப தறிவிலென் கூற்றுக்களே" (சிற். 87) என்பதில் மறப்பதென்பது வியங்கோளாக வந்ததைக் காண்க. யானையின் தந்தம் வெண்ணிறமுடையதாதலின் அதனாற் செய்த தேரை 'வெண்டேர்' என்றான்; "வெண்கா லமளி" (சிலப். ௪ : 170) என்ற விடத்து, 'வெண்கால்-மருப்புக்கால்' என அடியார்க்கு நல்லார் எழுதினர்.

நேமி போகும்போது மண்ணிற் புதைந்த பகுதிபோக எஞ்சிய பகுதியே வெளியில்தெரியுமாதலின் அப்பகுதிக்குப் பிறை உவமையாயிற்று. விசும்பினின்றும் வீழும் கொள்ளியினாற் பயிர் துமிதலைப் போல நேமியால் துமிந்தது; "இழையணி நெடுந்தே ராழி யுறுப்ப, நுண்கொடி மின்னிற் பைம்பயிர் துமிய" (அகநா. உ௫௪ : 13-4) என்பதனோடு இதனை ஒப்பு நோக்குக.

சின்னிரை வளையென்ற அடை தலைவி பெதும்பைப் பருவங் கடந்த மங்கைப் பருவத்தினளென்பதைக் குறித்தது (பதிற். ௬௭ : 6, உரை); பல்வளைகளணிந்திருப்பினும் தன் உடன். மெலிவினால் அவற்றை இழந்து சில்வளை யுடையளா யிருப்பாளென்னும் கருத்தினாற் கூறினனெனினுமாம் (அகநா. கக : 15, உரை.) வால்வளை - சங்கினாற் செய்த வளை. பன் மாணாகம் - காட்சி யினிமை, ஊற்றினிமை, நன்மணம் முதலிய பல மாட்சிமைப்பட்ட உடம்பு. ஆகத்தைப் பன்மாண் மணந்துவக்குவமெனக் கூட்டிப் பன்மாணென்பதற்குப் பல படியாக வென்று பொருளுரைத்தலும் ஒன்று.

## மேற்கோளாட்சி

1-2. தலைவன் பிரிவலெனக் கூறியது (தொல். அகத். 41, ந.); வேந்துறு தொழிலுக்கு இழிந்த எல்லை கூறுூர் (ஷை. கற்பு. 48, ந.)

மு. நெட்டாறு சேறலின்றி அணிமைக்கட் பிரியும் பிரிவு வந்தது (தொல். களவு. 17, இளம்.); நீடேனென்ற தலைவன் நெங்கியது (நச்சி. 170.)

## ஒப்புமைப் பகுதி

1. தேருந்த அருவி: "நல்லெழி னெடுந்தே ரியவுவந் தன்ன, கல்யா றொலிக்கும் விடர்முழங் கிரங்கிசை" (மலைபடு. 323-4); "கற்பா லருவியி னொலிக்கு நற்றேர்" (அகநா. கஅச: 17.)

வெண்டேர்: குறுந். உoரு: 3.

அருவி வேகத்திற்கு: "கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்" (பு. வெ. 11.)

3-4. பயிர் முதலியவை துமியத் தேர் வருதல்: குறுந். உஉஎ: 1-3, ஒப்பு.

5. காலியற் செலவு: "காலுறழ் கடுந்திண்டேர்", "வளியி னிகன்மிகுந் தேரும்" (கலி. ருரு: 31, ருo: 15); "காலென மருள வேறி நூலியற், கண்ணோக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர்", "துனைகா லன்ன புனைதேர்", "வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ" (அகநா. உருச: 7-8, உகூக: 7, ருஅச: 9); "காலிய னெடுந்தேர்" (தமிழ் நெறி. மேற்.)

6. சின்னிரைவளை: "சில்வளை" (பதிற். சo: 21, ருஎ: 6, எஅ: 3.)

துறுமகள்: குறுந். அக: 7, ஒப்பு. (கஅக)

---

## தலைவி கூற்று

[பொருளீட்டும்பொருட்டுத் தலைவன் பிரிந்திருந்த காலத்தில் தனிமையையாற்றாத தலைவி தோழியை நோக்கி, "நடுயாமத்தில் யான் துயிலின்றிப்படும் துன்பத்தைத் தலைவர் அறிவாரோ?" என்று கூறியது.]

கககo. நெறியிருங் கதுப்பொடு பெருந்தோ ளிவிச்
செறிவளை நெகிழச் செய்பொருட் ககன்றோர்
அறிவர்கொல் வாழி தோழி பொறிவரி
வெஞ்சின வரவின் பைந்தலை துமிய

உரவுரு முரறு மரையிரு ணடுநாள்
நல்லே றியங்குதோ றியம்பும்
பல்லான் றொழுவத் தொருமணிக் குரலே.

எ - து. பிரிவிடை ஆற்ருளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

பூதம்புல்லன்.

(ப - ரை.) *தோழி— நெறி இரு கதுப்பொடு - நெறிப்பையுடைய கரிய கூந்தலோடு, பெரு தோள் நீவி - பெரிய தோள்களைத் தடவி என்னைத் தேற்றி, செறி வளை நெகிழ - இறுகச் செறித்த வளைகள் நெகிழும்படி, செய்பொருட்கு அகன்ருேர் - தாம் ஈட்டும் பொருளின்பொருட்டு என்னைப் பிரிந்து சென்ற தலைவர், பொறி வரி வெஞ்சினம் அரவின் - புள்ளிகளையும் பத்திக்கீற்றுக்களையும் மிக்க சினத்தையுமுடைய பாம்புகளின், பசு தலை துமிய - பசிய தலைகள் துணியும்படி, உரம் உரும் உராறும் - வலிமையுடைய இடியேறு முழங்குகின்ற, அரை இருள் நடு நாள் - பாதியிரவின்கண், பல் ஆன் தொழுவத்து - பல பசுக்கள் உள்ள தொழுவத்தில், நல் ஏறு இயங்குதோறு இயம்பும் - நல்ல ஆனேறு செல்லுந்தோறும் ஒலிக்கின்ற, ஒரு மணி குரல் - ஒற்றை மணியின் குரலை, அறிவர்கொல் - அறிவாரோ?*

(முடிபு.) *தோழி, அகன்ருேர் நடுநாள் ஏறு இயங்குதோறியம்பும் மணிக்குரலை அறிவர் கொல்?*

(கருத்து.) *இங்கே நான்படுந் துன்பத்தைத் தலைவர் அறியார் போலும்!*

(வி - ரை.) *கதுப்பும் தோளும் நீவித்தலையளி செய்தது பின்பு பிரியும்பொருட்டு. செறிவளை - முன்பு செறிந்திருந்த வளை. அறிவர் கொல் என்றது அறிந்தாற் பிரிந்திராரென்னும் நினைவிற்று. கொல்: ஐயம். வாழி: அசைநிலை. உரம் - மலையையும் பிளக்கும் ஆற்றல்; “வரையுதிர்க்கும், நரை யுருமினேறு” (மதுரைக் 62-3.) ஆவினங்களுக்கு இன்பந் தருதலின் நல்லேறாயிற்று. இயங்குதோறு - அசையுந்தோறு மெனினுமாம். ஒருமணி, ஏற்றின் கழுத்திலுள்ளது. பல பசுக்கள் கட்டிய தொழுவத்தில் கேட்கும் ஒருமணிக்குரல், அவை அந்நல்லேற்ருேடு இன்புற்றிருக்கும் நிலையை நினைவுறுத்தி, “இவை*

(பி - ம். * வரவரு, மாவுரு, நரையுரு.

பெற்ற பேறு யாம் பெற்றிலேமே!" என இரங்குதற்குக் காரண மாயிற்று. அக்குரலை நள்ளிரவில் தான் கேட்பதாகக் குறிப்பித்தாள்; இதனால் அவள் நள்ளிரவிலும் துஞ்சாமை பெறப்படும்.

## ஒப்புமைப் பகுதி

1. நெறியிருங் கதுப்பு: "நெறிபடு கூந்தல்" (குறுந். ககக: 4); "நெறியிருங் கதுப்பினென் பேதை", "நெறியிருங் கதுப்பிற் கோதையும் புனைக" (அகநா. கூடு: 17, உகூக: 2.)

கதுப்பு நீவுதல்: (குறுந். கூஎகூ: 6); "பாறுமயிர் நீவி" (அகநா. கூ00: 7); "ஒலிநெடு நுதலு நீவி" (தொல். மெய்ப். 15, பேர், மேற்.)

கதுப்பும் தோளும்: "நெறியிருங் கதுப்பு நீண்ட தோளும்" (நற். கூஅஎ: 1.)

5. அரையிருணடுநாள்: "அரைநாட் கங்குல்", "அரைநாள் யாமத்து", "அரைநாள்" (அகநா. ககஉ: 4, ககூஅ: 4, கூகக: 4.)

5, மு. நற். கூஅ: 8.

4-5. பாம்பின் தலை கெட இடி இடித்தல்: குறுந்.கடுஅ: 1-2, ஒப்பு பகுதிப். இக: 25-8; அகநா. கூஉ: 11, கூஉகூ: 10-11; புறநா. கஎ: 38-9, கூஎ: 1-4, டுஅ: 6-7, கஉகூ: 19, கூகூகூ: 3; நாலடி. 164; கார். 20; களவழி. 13, 38; திணைமொழி. 28.

உரவுநும் உருமுவதால் அரவின் பைந்தலை துமிதல்: "பாஅள், உத்தி யரவின் பைத்தலை துமிய, உரவுரு முரறும்" (அகநா. உ0உ: 9-11.)

6-7. ஏற்றின் மணி: குறுந். உஎடு: 3-4.

தலைவியாமத்தில் ஆன்மணியோசையைக் கேட்டுத்துன்புறல்: குறுந். அகூ: 4 - 6, ஒப்பு. (ககூ)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்திருந்த காலத்தில், "தம் பிரிவினால் யான் துன் புறுவேனென்பதையும், தாம் பிரியுங்காலம் ஏற்றதன்றென்பதையும் கருதாமற் பிரிந்து சென்ற தலைவர் மீண்டு வரிற் புலந்து மறுப்பேன்" என்று தோழிக்குத் தலைவி கூறியது.]

கஙக. உதுக்கா ணதுவே யிதுவென் மொழிகோ
* நோன்சினை யிருந்த விருந்தோட்டுப் புள்ளினம்

---

(பி - ம்.) * நேர்சினை.

தாம்புணர்ந் தமையிற் பிரிந்தோ *ருள்ளா
தீங்குர லகவக் கேட்டு நீங்கிய
ஏதி லாள ரிவண்வரிற் போதிற்
பொம்ம லோதியும் புனையல்
எம்முந் தொடாஅ லென்குவெ மன்னே.

எ - து. பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

† ...............

(ப - ரை.) தோழி, இது என் மொழிகு - இதனை என்னென்று சொல்வேன்? நோன் சினை இருந்த-வலிய மரக்கிளையில் இருந்த, இரு தோடு புள் இனம் - பெரிய தொகுதியையுடைய பறவைக் கூட்டங்கள், தாம் புணர்ந்தமையின் - தாம் துணைகளோடு சேர்ந்தமையால், பிரிந்தோர் உள்ளா - துணைவரைப் பிரிந்தாருடைய துன்பத்தை எண்ணுதனவாய், தீ குரல் அகவ கேட்டும் - இனிய குரலால் அழைப்பக் கேட்ட பின்பும், நீங்கிய - நம்மைப் பிரிந்த, ஏதிலாளர் - அயற்றன்மையையுடைய தலைவர், இவண் வரின் - இங்கே மீண்டு வந்தால், போதின் பொம்மல் ஓதியும் புனையல் - மலர்களால் பொங்குதலையுடைய கூந்தலையும் அலங்கரித்தலை யொழிக, எம்மும் தொடாஅல் - எம்மையும் தொடுதலை யொழிக, என்குவெம் - என்று கூறுவம்; அது - அங்ஙனம் செய்தலை, உது காண் - உவ்விடத்துப் பார்ப்பாயாக.

(முடிபு.) இதுவென் மொழிகு? கேட்டும் நீங்கிய ஏதிலாளர் வரின் "ஓதியும் புனையல், தொடாஅல்" என்குவம்; அது உதுக்காண்.

(கருத்து.) நம்மைப் பிரிந்த தலைவர் வரின் அவரை ஏற்றுக்கொள்ளேன்.

(வி - ரை.) உதுக்காண்: இத்தொடரின் இலக்கண முடிபை இந்நூல் அக - ஆம் செய்யுள் விசேட வுரையிற் காண்க. புள்ளினம் அகவுதலை, 'உதுக்காண்' என்று சுட்டியதாகப் பொருள்செய்தலும் அமையும். 'இது வென் மொழிகோ' என்பது, 'இங்ஙனம் நம்மைப் பிரிந்துசென்ற தலைவர் செயலை, அறத்தின்பாற்பட்டதென்றோ அருளின்பாற்பட்டதென்றோ என்னென்று சொல்லுவேன்?' என்றவாறு. என்னென்றது வினாவுதல் கருதாது தலைவியது கவற்சியை விளக்கியது

(பி - ம்.) *ருள்ளாது, ருள்ளத். † ஆசிரியர் பெயர்காணப்படவில்லை.

(சிற். 24, உரை.) பிரிந்தோர் நன்னாரென்றது, தாம் புணர்ந்துடன் கூடிய மகிழ்ச்சியால் அகவும் குரல் பிரிந்தாருக்குத் துன்பத்தைத் தருமெனஅவர் நிலையை நினையாரென்றபடி. பிரிந்தோர் துன்புறுதலாவது, 'இவைபெற்ற பேறு யாம் பெற்றிலேம்!' என இரங்குதல். புணர்ந்த மகிழ்ச்சியால் அகவுவதாதலின் திங்குரலாயிற்று. கேட்டும்: உம்மை, இழிவு சிறப்பு.

ஏதிலாளர் - ஏதின்மையை யுடையவர்; நம்பால் அன்புடையராயின் பிரியாரென்னும் நினைவிற்று. தலைவன் தன் ஆதரம் புலப்படத் தலைவியின் கூந்தலைப் புனைதல் மரபு;

"போழ் திடைப் படாஅமல் முயங்கியு மமையாரென்
தாழ்கதுப் பணிகுவர் காதலர்" (கலி. ச : 10-11.)

பிரிந்த தலைவன் மீண்டுவந்தவுடன் தலைவியின் கூந்தலை அணிந்து தன் அன்பை வெளிப்படுத்தும் மரபு,

"இனிதுசெய் தனையா லெந்தை வாழிய
பனிவார் கண்ணள் பலபுலந் துறையும்
ஆய்தொடி யரிவை கூந்தல்
போதுகுர லணிய வேய்தந் தோயே" (அகநா. சoச : 14-7)

என்பதனால் உணரப்படும்.

தலைவன் வந்தவுடன் முதலில் ஓதியைப் புனைந்து பின்பு மேனியைத் தொடப் புகுவானென்பது தலைவியின் நினைவு; இம்முறை,

" பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாளொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே"
(க : 22-6)

என்ற அகநானூற்றுச் செய்யுளாலும் தெரியவருகின்றது.

ஏதிலாரென்று பன்மையாற் கூறியவள் பின் புனையல், தொடாஅலென ஒருமையாற் கூறினள் தன் உள்ளத்தெழுந்த செறல் பற்றி; *"எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையும், தேரான் பிறனில் புகல்" (குறள், 144) என்புழிப் போல.

---

* இக்குறளை, 'செறலிற் பலர்பால் ஒருமைப்பாலாயிற்று' என்பதற்கு உதாரணமாகக் காட்டினர் சங்கரநமச்சிவாயர் (நன். 379, உரை.)

'புனையல், தொடாஅ லென்குவம்' என்ற தலைவி,

"எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து" (குறள், 1285)

என்றபடி தலைவனைக் காணாத விடத்தே புலந்திருத்தலும் கண்ட விடத்தே புலவிதீர்ந்து எதிர்கொள்ளலும் மகளிர் இயல்பாதலின் (கலி. ௬௭, ௭௭) அதுகருதி, "இதுபொருளற்ற கூற்று; அவர்வரின் இவள் ஊடல்தானே நீங்கும்" எனத் தோழி எண்ணுதல் கூடுமென்னும் நினைவினளாதலின் ஆக்கப்பொருள்தரும் மன்னைக் கூட்டி, 'என்குவம்மன்னே' என்றாள். ஏ: ஈற்றசை.

ஓதியும்: உம், எதிரது தழீஇயது; எம்மும்: உம், இறந்தது தழீஇயது.

## மேற்கோளாட்சி

மு. தலைவன் பிரிந்தவழித் தலைவி காய்ந்து கூறியது (தொல். கற்பு. 6, ந); ஊடலென்னும் உரிப்பொருள் வந்தது (நம்பி. 251.)

## ஒப்புமைப் பகுதி

1. உதுக்காண்: குறுந். அக: 4, ஒப்பு; ஐங். ௧0௧, ௪௫௨; கலி. ௧0௮: 39; புறநா. ௩0௭: 3.

2. தோட்டுப்புள்ளினம்: குறுந். ௩௪: 4-5, விசேட.

2-4. புணர்ந்த பறவையின் ஒலி பிரிந்தாருக்குத் துன்பத்தை உண்டாக்குதல்: (குறுந். ௧௬0: 1-4); "அமுழ்ந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா, எவ்வ நெஞ்சத் தெஃகெறிந் தாங்குப், பிரிவில புலம்பி நுவலுங் குயிலினும்", "புணர்குயில் விளித்தொறு, நம்வயி னினையு நெஞ்சமொடு கைம்மிகக், கேட்டொறுங் கலுழுமால்", "செங்க ணிருங்குயி லெதிர் குரல் பயிற்றும், இன்ப வேனிலும் வந்தன்று" (நற். ௬௭: 1-3, ௧௫௭: 5-7, ௨௨௪: 5-6.)

பறவைகள் புணர்ந்து அகவுங்காலத்தில் தலைவர் பிரிதல்: "அடைகரை மாஅத் தல்குநினை பொலியத், தளிர்கவி னெய்திய தண்ணறும் பொதும்பிற், சேவலொடு கெழீஇய செங்க ணிருங்குயில், புகன்றெதி ராலும் பூமலி காலையும், அகன்றோர் மன்றநம் மறந்திசினோர்", "பூங்க ணிருங்குயில்......அகற லோம்புமி னறிவுடை யீரெனக், கையறத் துறப் போர்க் கழறுவ போல, மெய்யுற விருந்து மேவர நுவல, இன்னா தாகிய காலைப் பொருள்வயிற், பிரித லாடவர்க் கியல்பெனின்" (நற். ௧௧௮:

1-5, உ௪௩ : 4-10); "விரிகாஞ்சித் தாதாடி யிருங்குயில் விளிப்பவும், பிரி வஞ்சா தவர்திறை" (கலி. உ௪ : 8 - 9.)

5. தலைவனை ஏதிலனென்றல்: "ஏதி லாளர்க்குப் பசந்தவென் கண்ணே", "ஏதிலாளனை" (ஐங். ௩௪ : 1, உ௩உ : 2.)

6. பொய்ம்மலோதி: குறுந். ௩௭௧ : 6; நற். உ௫உ : 12; அகநா. உ௧௪ : 9, உஉ௧ : 3, ௩௧௧ : 7, ௩௫௩ : 23; பெருங். ௪. 55 : 119; சீவக. 1674, 2364.

தலைவன் தலைவியின் ஓதியைப்புனைதல்: குறுந். அஉ : 1, ௧௬௨ : 6.

7. எம்மும் தொடாஅல்: "தொடல்விடு நற்கலையே" (சிற். 358.)

(௧௬௧)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்திருந்த காலத்தில், "அவர் வருவர்; நீ வருந்தற்க" என்று தோழி கூறி ஆற்றுவிப்பத் தலைவி, "இளவேனிற் பருவத்தும் அவர் வாராமையின் தனித்திருக்கும் யான் எங்ஙனம் வருந்தாமல் இருப்பேன்!" என்று இரங்கிக் கூறியது.]

௧௬௨. ஈங்கே வருவ ரினைய லவரென
அழாஅற்கோ *வினியே நோய்நொந் துறைவி
† மின்னின் றூவி யிருங்குயில் பொன்னின்
உரைதிகழ் கட்டளை கடுப்ப மாச்சினை
நறுந்தாது கொழுதும் பொழுதும்
‡ வறுங்குரற் கூந்த றைவரு வேனே.

எ - து. பிரிவிடை வற்புறுத்த வன்புறை எதிரழிந்து கிழத்தி உரைத்தது.

[வற்புறுத்த - வற்புறுத்திய. வன்புறை - ஆற்றுவித்தல்; இறை. 54, உரை.]

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(ப - ரை.) நோய் நொந்து உறைவி - நோயால் வருந்தி உறையும் தோழி, அவர் ஈங்கே வருவர் - தலைவர் இவ்விடத்தே மீண்டு வரு

---

(பி - ம்.) * வினிய. † மின்னென். ‡ வருங்குரற்.

வார், இனையல் என - வருந்தற்கவென்று நீ சொல்வதனால், இனி - இப்பொழுது, அழாஅற்கோ - நான் அழாமல் இருப்பேனோ? மின் இன் தூவி - மின்னுகின்ற இனிய இறகுகளையுடைய, இரு குயில் - கரிய குயில், பொன்னின் உரைதிகழ் கட்டளை கடுப்ப - தன்மேனி பொன்னினது உரைத்த பொடிவிளங்குகின்ற உரைகல்லை ஒக்கும்படி, மா சினை - மாமரத்தின் கிளையினிடத்து, நறு தாது கொழுதும் பொழுதும் - நறிய பூந்தாதைக் கோதுகின்ற இளவேனிற் காலத்திலும், வறு குரல் கூந்தல் தைவருவேன் - அவர் வாராமையால் புனையப் பெறுமலுள்ள வறிய கொத்தாகிய கூந்தலைத் தடவுவேன்.

(முடிபு.) "நோய் நொந்துறைவி, இனையல்" என அழாஅற்கோ? வறுங்குரற் கூந்தல் தைவருவேன்.

(கருத்து.) தலைவருடைய பிரிவைப் பொறுத்துக்கொண்டு யான் எங்ஙனம் வருந்தாமல் இருத்தல் இயலும்?

(வி - ரை.) அழாஅற்கு: தன்மை யொருமை எதிர்மறை முற்றுவினை; அழுகென்னும் உடம்பாட்டின் எதிர்மறை; அழேனென்னும் பொருளது; ஓகார வினாவுடன் சேர்ந்து அழேனோ வென்னும் பொருளதாயிற்று. இனி - இப்பொழுது; ஏகாரம் அசை நிலை. நோநொந்துறைவியென்பதும் பாடம். உறைவி: உறை யென்னும் வினையடியாகப் பிறந்த பெயர்; தருவி, கள்வி என்பன போல. மின்னென்றூவி யென்ற பாடத்திற்கு மின்னைப் போன்ற தூவி யென்று பொருள் கொள்க. இன்றூவி: இனிமை, காட்சிக் கினிமையும் ஊற்றினிமையும். மாம்பூவின் தாதிற்குப் பொற்பொடியும் குயிலுக்குக் கட்டளைக் கல்லும் உவமை. தாதிலாடிய குயிலுக்கு இங்கே கட்டளைக் கல்லை உவமித்ததுபோல,

"நறுந்தா தாடிய தும்பி பசுங்கேழ்ப்
பொன்னுரை கல்லி னன்னிறம் பெறூஉம்" (நற். ௨௫: 3-4)

என்று தாதாடிய தும்பிக்கு உவமித்திருத்தல் இங்கே கருதற்குரியது.

நறுந்தாதென்றாள், குயில் கோதும் தாதின் மணம் தான் இருக்கும் இடத்தளவும் வந்து வீசுதலால். குயில் மாம்பூவின் தாதைக் கொழுதும் என்ற அடையினால் இங்கே குறித்த பெரும்பொழுது இளவேனிலாயிற்று. பொழுதும்: உயர்வு சிறப்பும்மை. இளவேனிற் காலம் காமத்தை மிகுவிப்பதாதலின் அக்காலத்திற் பிரிவுத்துன்பம் மிகுதியாகத் தோற்றும்.

வறுங்குரற் கூந்தல்: மகளிர் தம் காதலரைப் பிரிந்த காலத்தில் கூந்தலைப் புனைதல், மலரணிதல் முதலியவற்றைச் செய்யார்; தலைவர் மீண்ட காலத்துப் புனைந்து மகிழ்வர்;

"நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல வின்று பெயரின்
அதுமனெம் பரிசில்" (புறநா. கசஎ : 6-9)

என்பதைக் காண்க.

குரற் கூந்தல் - கொத்தாகக் கிடந்த கூந்தல்; எண்ணெய் நீவுதல் முதலியன இன்றி ஒன்றோடொன்று பிணங்கிக் கற்றைச் சடையாகிய கூந்தல்;

"வாச வெண்ணெ யின்றி மாசொடு
பிணங்குபு கிடந்த பின்னுச்சேர் புறத்தொடு" (௪. 7 : 103-4)

என்ற பெருங்கதை யடிகளையும்,

"கமையி னுடிரு முகத்தயல் கதுப்புறக் கவவிச்
சமையு டைக்கற்றை நிலத்திடைக் கிடந்தது மதியை
அமைய வாயிற்பெய் துமிழ்கின்ற வயிலெயிற் றரவிற்
குமையு றத்திரண் டொருசடை யாகிய குழலாள்"
(காட்சிப். 10)

என்ற கம்பராமாயணச் செய்யுளையும் காண்க. குரல் - ஐம்பால் வகையுள் ஒன்றெனினும் ஆம் (பு. வெ. 223, உரை.)

கூந்தற் பாயலிற்றுயிலும் தலைவரைத் தைவரற்குரிய காலத்தில் கூந்தலை மட்டுந் தைவருவே னென்னும் நினைவினால் வறுங்குரற் கூந்தல் தைவருவேனே யென்றாள்.

## மேற்கோளாட்சி

2. அழுகென்னும் உடம்பாட்டிற்கு அழாற்கென எதிர்மறை வந்தது (தொல். வினை. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. தோழி தலைவியை துணையலென்றல்: அகநா. கஎக : 5, நகள : உஉஎ : 5.

2. தலைவன் பிரிவால் தலைவி அழுதல்: குறுந். கக: 2, ஒப்பு, ௩0எ: 9.

உறைவி: குறுந். ௪00: 7; அகநா. உகூ௮: 23, ௩௫க: 17; புறநா. க௪௫: 10.

3-4. பொன்னின் உரைதிகழ் கட்டளை: "பொன்காண் கட்டளை" (பெரும்பாண்: 220); "தாதுகப், பொன்னுரை கட்டளை கடுப்ப" (அகநா. கஎ௮: 10-11.)

3-5. துயில் மாவின் தாதைக் கோழுதுதல்: "மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்" (நற். கூ: 10); "மாநனை கொழுதிய மணிநிற விருங்குயில்" (அகநா. உ௫: 6.)

6. தூரற் கூந்தல்: கலி. எஉ: 20, கூ௩: 22.

3-6. துயில் மாவிலிருந்து மகிழும் காலத்திலும் தலைவன் பிரிந்திருத்தலால் தலைவி வருந்துதல்: நற். கக௮: 1-5, க௯எ: 4-6; அகநா. உஉகூ: 18-21. (ககூஉ)

---

தலைவி கூற்று

[தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்ற தோழி, "நீ வரையு நாளளவும் நின்நலம் தொலையாமல் ஆற்றியிருந்தாய்" என்று பாராட்ட, அது கேட்ட தலைவி, "அஃது என் வலியன்று; தலைவன் செய்த தண்ணளியே அத்தகைய நிலையைத் தந்தது" என்றது.]

ககூ௩. மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன
இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த் தேரை
தட்டைப் பறையிற் கறங்கு நாடன்
தொல்லைத் திங்க ணெடுவெண் ணிலவின்
மணந்தனன் * மன்னெடுந் தோளே
இன்று முல்லை முகைநா றும்மே.

எ - து. தோழி, கடிநகர் புக்கு, "நலந் தோலையாமே நன்கு ஆற்றினாய்!" என்றாட்குக் கிழத்தி உரைத்தது.

† அரிசில் கிழார்.

(பி - ம்.) * மன்னனெந். † அரிசிற் கிழார்.

(ப - ரை.) தோழி, மட்டம் பெய்த - கள்ளைப் பெய்த, மணி கலத்து அன்ன - நீலக்குப்பிகளைப் போன்ற, இட்டு வாய் சுனைய - சிறிய வாயையுடைய சுனையின்கண் உள்ளன வாகிய, பகு வாய் தேரை - பிளந்த வாயையுடைய தேரைகள், தட்டை பறையின் கறங்கும் நாடன் - கிளிகடி கருவியாகிய தட்டைப் பறையைப்போல ஒலிக்கும் நாட்டையுடைய தலைவன், தொல்லை திங்கள் நெடு வெள் நிலவின் - களவுக் காலமாகிய பழைய திங்களில் நெடிய வெண்ணிலாவின்கண், நெடு தோள் - என் நீண்ட தோள் களை, மணந்தனன் - தழுவினான்; அதனால், இன்றும் - இக்காலத் தும், முல்லை முகை நாறும் - அவன் மேனியினது முல்லையினது மொட்டுமலரின் மணத்தை என் தோள்கள் வீசா நிற்கும்.

(முடிபு.) நாடன், தொல்லைத் திங்கள்நிலவில் தோளை மணந் தனன்; இன்றும் முல்லை முகை நாறும்.

(கருத்து.) தலைவன் களவுக்காலத்துச் செய்த இன்னருள் இன்றளவும் மாறாது என்னைப் பாதுகாத்தது.

(வி - ரை.) மட்டம் - கள் (பதிற். ௬௨ : 12); மட்டென்பது கள்ளின் பெயர்; அஃது அம்முச்சாரியை பெற்று இங்ஙனம் வந்தது. கள்ளைக் குப்பிகளில் ஊற்றி வைத்தல் பழைய வழக்கம்;

"சோலைக் கமுகின் சூல்வயிற் றன்ன
நீலப் பைங்குடம்" (பெரும்பாண். 381-2),

"கள்ளி னிரும்பைக் கலம்" (மதுரை. 228)

என்பவற்றையும் அவற்றின் உரைகளையும் பார்க்க.

கள்வைத்த கலம் சுனைக்கு உவமை.

இட்டுவாய் - இட்டியவாய்; சிறியவாய் (மதுரை. 482.)

தட்டைப் பறையென்றது தட்டையையே; தட்டை, மகளிர் தினைப்புனத்திற் கிளி முதலியவற்றைக் கடிவதற்குரிய கருவிகளுள் ஒன்று; மூங்கிலைக் கண்ணுக்குக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டப்படுவது (குறிஞ்சிப். 43, ந.); தட்டப்படுவதனால் தட்டையென்னும் பெயர் உண்டாயிற்று (மதுரை. 305, ந.)

மன் : மிகுதியை உணர்த்தியது. நெடுந்தோளென்றாள், அவன் மணந்தமையாற் பொலிவு பெற்றமையை யுணர்த்த வேண்டி.

சிறந்த ஆடவர் மேனி முல்லைமலரின் மணமுடையதென்று தெரிய வருகிறது; இதனை,

"பந்தினை யிளையவர் பயில்இட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்" (கம்ப. நாட்டு. 48),

"தேன்மறிக்கும் வெறித்தொங்க லறற்கூந்தற் றிருந்திழைகண்
மான்மறிக்குன் றிருமேனி மலர்முல்லைப் புறவமே"
(சிதம்பரச் செய். 57.)

என்னும் செய்யுட்கள் உணர்த்துகின்றன.

தொல்லைத் திங்களென்றது அவன் நெடுங்காலத்துக்கு முன் மணந்தனனேனும் அவனன்பு இன்றளவும் அருது நின்று காத்த தென்பதை வெளியிட்டவாறு. முல்லை முகைநாறு மென்றாள் அந் நறுமணத்தை மோந்து ஆற்றினேனென்பது கருதி.

நாறும்மே: விரிக்கும் வழி விரித்தது. ஏகாரங்கள், அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

மு. தலைமகள் தலைவன் பிரிவின்கண் வருந்தாதிருந்ததற்குக் காரணம் கூறியது (நம்பி. 203.)

## ஒப்புமைப் பகுதி

2. சுனையின் துறுகிய வாய்: "நுங்கின், தடிகண் புரையுங் குறுஞ்சுனை" (கலி. ௧௦௮: 40-41.)

பதுவாய்த் தேரை: அகநா. ௧௫௪: 2.

1-2. சுனையின் துறுமை: குறுந்: ௧௨: 1.

---

* இச்செய்யுள் நிரனிறை. இதன் பொருள்: இளைய மகளிர் சந்தன வனங்களில் பந்தாடல் செய்தனர்; அவ்வனங்கள் தம் இயற்கை மாறி அம் மகளிர் மேனியின் இயற்கை மணமாகிய சண்பக மணத்தால் சண்பக வனங்களைப் போலாயின. இங்ஙனமே கந்தனையனைய ஆடவர் கலைதெரி கழகங்களமைந்த நந்தனவனங்கள் அவர் தம் மேனியின் முல்லை மணத்தால் முல்லை வனம்போல ஆயின.

என்னுடைய ஆசிரியராகிய மகா வித்துவான் பிள்ளையவர்கள் இச்செய்யுளுக்குக் கூறிய இவ்வரிய வுரை இக்குறுந்தொகைச் செய்யுளுக்கு உரைகாணச்செய்து பயன்பட்டமை குறித்து அவர்களை வாழ்த்துகின்றேன்.

3. தட்டை : குறுந். உஉ௲ : 1; மலைபடு. 9, 328; பெருங். உ. 12 : 120.

2-3. தேரையின் ஒலிக்குத் தட்டையின் ஒலி : "*அரிக்குரற் றட்டை*" (மலைபடு. 9.)

தேரை கறங்குதல் : அகநா. ௲கூச : 3.

4. திங்கள், நிலவு : "*அற்றைத் திங்க ளவ்வெண் ணிலவின்......இற்றைத் திங்க ளிவ்வெண் ணிலவின்*" (புறநா. ககஉ : 1-3.)

நெடு வெண்ணிலவு : குறுந். சஎ : 4, ஒப்பு.

5. நெடுந்தோள் : குறுந். உகூஅ : 6.

தலைவன் தலைவியின் தோளை மணத்தல் : குறுந். ௲ச : 4, கூ0 : 5, க00 : 7, உஎஉ : 1-8.

6. தலைவர் மேனி நறுமணம் உடையதாதல் : "*நாற நறுமேனி, கூட லினிதா மெனக்கு*" (ஐந். ஐம். 30.)

(கஙங)

*தலைவி கூற்று*

[*தலைவன் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்ததை மேகத்தின் ஒலியாலும் மயிலின்மகிழ்ச்சியாலும் அறிந்த தலைவி தோழிக்குத் தன் ஆற்றாமைக் காரணத்தை அறிவித்தது.*]

கஙச. என்னெனப் படுங்கொ றோழி மின்னுபு
வானேர் பிரங்கு மொன்றோ வதனெதிர்
கான மஞ்ஞை கடிய வேங்கும்
ஏதில கலந்த † விரண்டற்கென்
பேதை நெஞ்சம் பெருமலக் குறுமே.

எ - து. பருவ வரவின்கண் ‡ ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

¶ கோவ தத்தன்.

(ப - ரை.) *தோழி—, மின்னுபு - மின்னி, வான் ஏர்பு - மேகம் எழுந்து, இரங்கும் ஒன்றோ - ஒலிக்கின்ற செயல் ஒன்று*

(பி - ம்.) * *வலனேர்.* † *விரண்டற்கே.* ‡ *ஆற்றாளெனக்.* ¶ *கோவத்தன்.*

நானோ எனக்குத் துன்பந்தருவது? அதன் எதிர் - அந்த மேகம் ஒலித்தற்கு எதிரே, கானம் மஞ்ஞை - காட்டிலுள்ள மயில்கள், கடிய ஏங்கும் - விரைவனவாகி ஆரவாரிக்கும்; ஏதில கலந்த இரண்டற்கு - இவ்வாறு அயன்மையை யுடையனவாகிக் கலந்த இரண்டு பொருளாலும், என் பேதை நெஞ்சம் - எனது பேதைமையையுடைய நெஞ்சம், பெரு மலக்கு உறும் - பெரிய கலக்கத்தை அடையும்; என் எனப்படும் - இந்நெஞ்சினது நிலை எத்தகையதென்று சொல்லப்படும்?

(முடிபு.) தோழி, வான் இரங்கும் ஒன்றோ? மஞ்ஞை ஏங்கும்; இரண்டற்கு என் நெஞ்சம் மலக்குறும்.

(கருத்து.) கார்ப்பருவம் வந்தமையின் என் மனம் கலங்குகின்றது.

(வி - ரை.) கொல் : அசைநிலை. ஒன்றோ : எண்ணிடைச் சொல் (புறநா. கஅஎ : 1-2, உரை.)

கார்காலம் வந்துவிட்டதை மேகத்தின் முழக்கம் உணர்த்தியது; அதனெதிர் அகவிய மயிலின் ஆரவாரம் பின்னும் அதனை வலியுறுத்தியது.

ஏர்பு - கடலினீரைக் குடித்து வானத்தில் எழுந்து. தனக்குத் துன்பத்தைத் தருவனவாதலின் மேக முழக்கத்தை இரங்குமென்றும், மயிலின் ஆரவாரத்தை ஏங்குமென்றும் குறித்தாள். அதன் எதிர் - அம்மேகத்தின் எதிரேயெனலுமாம். ஏதில - தனது துன்பத்தைக் கருதாத அயன்மையுடையன. இரண்டற்கு மென்ற முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

தலைவரது வாய்மையை உணராது வருந்துவதாதலின் பேதை நெஞ்சமென்றாள். தனது கலக்கத்தை நெஞ்சின் மேலேற்றிக் கூறினாள்.

இதனால் தலைவி தோழிக்கு ஆற்றாமையின் காரணம் கூறினாளாயிற்று.

## மேற்கோளாட்சி

1. 'என்' என்பது யாதென்னும் பொருளில் வந்தது (சீவக. 1632, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. என்னனைப் படுங்கோல் தோழி : நற். உஉஅ : 1, ௩௩உ : 1; அகநா. உ0௬ : 1.

2. (பி - ம்.) வலனேர்பு: முருகு. 1; முல்லை. 4; நெடுநல். 1; பட்டினப். 67.

3. மஞ்ஞை கார்காலத்தில் ஒலித்தல்: குறுந். ௩௧௧: 7-8.

கானமஞ்ஞை: குறுந். ௩௮: 1; சிறுபாண். 85; அகநா. ௧௭௭: 10, ௩௯௯: 6.

4. மேகத்தின் ஏதின்மை: "நொதுமல் வானம்" (குறுந். ௨௫௧: 7.) (கக௬)

---

## தலைவி கூற்று

*[தலைவன் கூறிச்சென்ற பருவ வரவின்கண், "எனக்குத் துன்பத்தைத்தரும் இம்மாலைக் காலத்தில் தாம் மேற்கொண்ட வினையை முடிக்கச் சென்றவர் எனது நிலையை உணராராயினர். அவர் யாண்டுள்ளாரோ!" என்று தலைவி கூறி வருந்தியது.]*

கக௬. சுடர்சினந் தணிந்து குன்றஞ் சேரப்
படர்சுமந் * தெழுதரு பையுண் மாலை
யாண்டுளர் கொல்லோ வேண்டுவினை முடிநர்
இன்னா திரங்கு மென்னா ரன்றே
† தைவர லசைவளி மெய்பாய்ந் ‡ துறுதரச்
¶ செய்வுறு பாவை யன்னவென்
மெய்பிறி தாகுத லறியா தோரே.

எ - து. பிரிவிடைப் பருவவரவின்கட் கிழத்தி மெலிந்து கூறியது.

§ தேரதரன்.

(ப - ரை.) *தோழி, தைவரல் அசை வளி - தடவுதலையுடைய அசைந்துவரும் காற்று, மெய் பாய்ந்து உறுதர - உடம்பின்கண் பரந்து தீண்ட, அதனால், செய்வு உறு பாவை அன்ன - அலங்காரம் செய்தலைப்பெற்ற பாவையைப் போன்ற, என் மெய் - எனது மேனி,*

---

(பி-ம்.) * *தெழுதரும். † தைஇயசைவளி. ‡ தூர்தரச். ¶ செய்புறு. § தோதான், தாமோதரன்.*

பிறிது ஆகுதல் அறியாதோர் - வேறுபாடுடையதாகுதலை அறியாதவராகிய தலைவர், வேண்டுவினைமுடிநர் - தாம் விரும்பிச்சென்ற கருமத்தை முடித்துக்கொள்வாராய், சுடர் சினம் தணிந்து - கதிரவன் வெம்மை நீங்கி, குன்றம் சேர - அத்தகிரியை அடைய, படர் சுமந்து - நினைவு கூரும் துன்பத்தை மேற்கொண்டு, எழுதரு பையுள் மாலை - வாராநிற்கும் துன்பத்தைத்தரும் மாலைக்காலத்தில், யாண்டு உளர் கொல் - எங்கே இருக்கின்றனரோ? அன்னோ - அந்தோ! இன்னது - இம் மாலைக்காலம் துன்பத்தைத் தருவது, இரங்கும் - தலைவி வருந்துவாள், என்னார் - என்று நினையாராயினர்.

(முடிபு.) என் மெய் பிறிதாகுதலை அறியாதோர், வேண்டுவினை முடிநர் யாண்டுளர் கொல்? இரங்கு மென்னார்.

(கருத்து.) என்னுடைய மெலிவையறிந்து தலைவர் இன்னும் மீண்டாரல்லர்.

(வி - ரை.) சினம் - வெயிலுமாம். சினந்தணிந்தமையைக் கூறினமையின் குன்றம் அத்தகிரியாயிற்று. படர் - தனியராயினார் படும் துன்பம். அதனைச்சுமந்ததென்று மாலையைக் கூறியது இலக்கணை. கொல்: ஐயம். ஓ: அசைநிலை; இரங்கற்குறிப்புமாம். அசைவளி - மெலிந்தகாற்று; மெல்லென்ற காற்றெனலுமாம்.

தாம் பிரியும் காலத்தில் பாவையன்னதாகவிருந்த என் மேனியையே யறிந்தவர், இப்பொழுது அழகு கெட்டமையை உணராரென்றாள்; உணர்வரேல் மீள்வரென்றது தலைவியின் நினைவு. பாவையன்ன வென் மேனியென்றது கழிந்ததற்கிரங்கியதாதலின் தற்புகழ்ச்சியாகாது; பட்டாங்கு கூறியதுமாம். ஏகாரம் ஈற்றசை. செய்வு - செய்தல் (கலி. எ: 7, ந.) பாவை - பொன்னாற் செய்த பாவை; "செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை, செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றியன்ன, செய்யர்" (மதுரைக். 410-12) எனவும், "தாவி னன்பொன் றைஇய பாவை, விண்டவ ழிளவெயிற் கொண்டுநின் றன்ன, மிகுகவின்" (அகநா. உகஉ: 1-3) எனவும் வருவனவற்றைக் காண்க.

## மேற்கோளாட்சி

2. பையுளென்னும் உரிச்சொல் நோயென்னும் குறிப்புணர்த்தியது (தொல். உரி. 45, சே, தெய்வச்.)

## ஒப்புமைப் பகுதி

1. சுடர் சினந்தணிதல்: "கதிர்சினந் தணிந்த கையறு மாலை" (குறுந். ௬அ௭ : 2.)

சுடரின் சினம் : கலி. ௧௬ : 11 ; புறநா. ௯௩ : 5-6.

சுடர் குன்றம் சேர்தல்: சிறுபாண். 170-71 ; மதுரைக். 546-7; குறிஞ்சி. 215-6 ; கலி. ககக : 1-2, க௨௦ : 3, க௨க : 1, க௨௬ : 1, க௪அ : 3 ; அகநா. ௪௭ : 9.

1, மு. நற். ௬௬௩ : 1.

2. படர்சுமந்தெழுதரு மாலை : "படருறு மாலை" (சிலப். அ : 68.)

பையுண் மாலை : குறுந். ௪௬ : 6.

5. அசைவளி : குறுந். ௨அ : 4, ஒப்பு.

6. தலைவிக்குப் பாவை : நற். ௬கக : 7-8; அகநா. ௬அ : 12.

செய்வுறு பாவை : புறநா. ௨௪௩ : 2.　　　　(கக௫)

---

## தோழி கூற்று

[ஊடியிருந்த தலைவியின் உடம்பாடு பெறுவதற்குத் துணைபுரியும் வண்ணம் தலைவன் தோழியை வேண்டியபொழுது, "நீர் முன்பு எம் தலைவிபால் அன்புடையராயினீர்; இப்பொழுது அதனை நீங்கினீர்; ஆதலின் நும்மை ஏற்றுக்கொள்ளுமாறு எங்ஙனம்?" என்பதுபட அவள் கூறியது.]

கக௬. வேம்பின் பைங்காயென் றோழி தரினே
தேம்பூங் கட்டி யென்றனி ரினியே
பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கட் டண்ணிய தரினும்
* வெய்ய வுவர்க்கு மென்றனிர்
ஐய வற்றா † லன்பின் பாலே.

---

(பி - ம்.) * அதுவே, வெய்ய.　† லவ்வன்பின்.

எ - து. வாயில் வேண்டிப் புக்க கிழவற்குத் தோழி கூறியது.

மிளைக்கந்தன்.

(ப - ரை.) ஐய—, என் தோழி - என் தோழியாகிய தலைவி வேம்பின் பசு காய் - வேம்பினது பசிய காயை, தரின் - முன்பு தந்தால், தேம் பூ கட்டி - இனிய பொலிவுபெற்ற வெல்லக்கட்டி, என்றனிர் - என்று பாராட்டிக் கூறினீர்; இனி - இப்பொழுது, பாரி பறம்பில் - பாரியென்னும் வள்ளலுக்குரிய பறம்பென்னும் மலையிடத்திலுள்ள, தை திங்கள் தண்ணிய - தைமாதத்திற் குளிர்ந்தனவாகிய, பனி சுனை தெள் நீர் தரினும் - குளிர்ச்சியையுடைய சுனையிலுள்ள தெளிந்த நீரைத் தந்தாலும், வெய்ய உவர்க்கும் என்றனிர் - வெப்பத்தையுடையனவாகி உவர்ப்புச்சுவையைத் தருமென்று கூறினீர்; அன்பின் பால் - நமது அன்பின் பகுதி, அற்று - அத்தகையது.

(முடிபு.) ஐய, என் தோழி வேம்பின்காய் தரின் கட்டி என்றனிர்; இனி, தண்ணிய தரினும் வெய்ய வுவர்க்குமென்றனிர்; அன்பின்பால் அற்று.

(கருத்து.) முன்பு நீர் தலைவிமாட்டு அன்புடையராயிருந்து இப்போது அவ்வன்பு இல்லீராயினீர்.

(வி - ரை.) "இயல்பாகவே கைப்புடையதாகிய வேப்பங்காய் முன்பு தலைவியின் கைப்பட்ட காரணத்தால் நமக்கு இனியதாயிற்று; இயல்பாகவே இனிய நீர் இவள் கைப்பட்ட காரணத்தால் இப்பொழுது நமக்கு உவர்ப்புடையதாயிற்று. அன்றும் இவளே தந்தனள்; இன்றும் இவளே தந்தனள். ஆயினும் நம்பால் இம்மாறுபாடு உண்டாய தன் காரணம் நம் அன்பு மாறியதேயாம்" எனத் தோழி கூறினாள்.

"எனது சுவைப்பினும் நீகை தொட்டது, வானோ ரமுதம் புரையுமா லெமக்கென" (தொல். கற்பு. 5) மகிழ்பவனாதலின் வேம்பினை வெல்லக்கட்டியென்றான்.

கட்டி - கற்கண்டுமாம். பாரி - எழு வள்ளல்களுள் ஒருவன். இவன் வாழ்ந்த மலை பறம்பு. அதன்கண் உள்ள சுனை பாராட்டப் படும் மரபு,

"கடும்பரிப் புரவிக் கைவண் பாரி
தீம்பெரும் பைஞ்சுனை" (அகநா. எஅ : 22-3)

என்பது முதலியவற்றால் அறியப்படும்.

தை மாதத்தில் சுனைநீர் மிகக்குளிர்ந்திருக்கும். தண்மையும் உண்ணுதற்கினிமையுமுடைய சுனைநீரை வெய்யவென்றும் உவர்க்குமென்றும் கூறியமை அவனது அன்பின் திரிபைப் புலப்படுத்தியது. அற்று - அத்தகைய மாறுபாட்டையுடையது. ஆல், ஏ : அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

1-2. எனது சுவைப்பினும் நீகை தொட்டது வாஅமிர்தம் புரையுமா லெமக்கென அடிசிலும் பூவுந் தொடுதற்கண் தலைவன் கூறிய கூற்றினைத் தோழி கொண்டு கூறியது (தொல். கற்பு. 5, இளம், ந.)

மு. தாம் எளியராகிய கற்புக் காலத்திலே, களவுக் காலத்துத் தமது பெருமையை உணர்த்திய வருத்தத்தின்கண் தோழி கூறியது (தொல். கற்பு. 9, இளம், ந.); பாங்கி அன்பிலை கொடியையென்று இணர்த்தார் மார்பனை இகழ்ந்தது (நம்பி. 206 ; இ.வி. 555.)

## ஒப்புமைப் பகுதி

2. கட்டி : (பெருங். உ. 4 : 93) ; "சாறட்ட கட்டியே" (யா. வி. 62, மேற் : 'வையகமெல்லாம்')

3. பாரி பறம்பு : சிறுபாண். 91 ; அகநா. உ0சு : 10 ; புறநா. 0அ : 4-5, க0க : 1, கக0 : 2, ககசு : 7, ககஅ : 5, கஙஅ : 4.

பாரி பறம்பிற் சுனை : "அளிதோ தானே பாரியது பறம்பே...... மீன்க ணற்றதன் சுனையே" (புறநா. க0க : 1-10.)

3, மு. புறநா. களக : 9, ருருள : 6.

4. தைந்திங்கள் நீர் தண்ணிது : "தைஇத் திங்கட் டண்கயம்" (நற். அ0 : 7) ; "தைஇத் தண்கயம்" (ஐங். அச : 4) ; "தைஇத் திங்கட் டண்கயம் போல" (புறநா. எ0 : 6.)

"நிம்பால் கமழு மணிவாய்ப் புதல்வற்குச் சிற்சிறுழம்பு
பூம்பாவை யாக வருள்வோன்வெறன் வெங்கைப் பொருப்பிலிளங்
காம்பான தோளிமுன் வேம்புதந் தாலுங் கழைக்கரும்பாம்
வேம்பா முனக்குக் கரும்பா யினுமின்று வேலவனே"

(வெங்கைக்கோவை, 403.)

(கஙக)

## தலைவி கூற்று

[பருவ வரவின்கண், “தலைவர் வருவர்; நீ வருந்தற்க” எனத் துணிபு கூறிய தோழியை நோக்கி, “என் உயிரைக் கொள்ள வருவதுபோல இக்கூதிர்ப் பருவம் வந்தது; இனி என் செய்வேன்!” என்று தலைவி கூறியது.]

௧௯௭. யாதுசெய் வாங்கொ றோழி நோதக
நீரெதிர் கருவிய காரெதிர் கிளைமழை
ஊதையங் குளிரொடு பேதுற்று மயங்கிய
கூதி ருருவிற் கூற்றம்
காதலர்ப் பிரிந்த வெற்குறித்து வருமே.

எ - து. பருவவரவின்கண் வற்புறுத்தும் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(ப - ரை.) தோழி—, நோதக - நோதல் பொருந்தும்படி, நீர் எதிர் கருவிய-நீரை ஏற்றுக்கொண்ட மின் முதலிய தொகுதியையுடையனவாகிய, கார் எதிர் கிளை மழை - கார்காலத்தை ஏற்றுக்கொண்ட கிளைத்த மழையையுடைய, ஊதையம் குளிரொடு - ஊதைக் காற்றினது குளிர்ச்சியோடு, பேதுற்று மயங்கிய - மிக மயங்கிக் கலந்த, கூதிர் உருவின் கூற்றம் - கூதிர்க்காலமாகிய உருவத்தையுடைய கூற்றம், காதலர் பிரிந்த என் குறித்து வரும் - தலைவரைப் பிரிந்திருக்கும் என்னைக் கொல்லுதல் குறித்து வாராநின்றது; யாது செய்வாம்—!

(முடிபு.) தோழி, கூதிர் உருவிற் கூற்றம் எற்குறித்து வரும்; யாது செய்வாம்!

(கருத்து.) தலைவர் கூதிர்க்காலத்தும் வந்திலராதலின் இனி உயிர்வாழேன்.

(வி - ரை.) யாது - இத்துன்பத்தினின்றும் உய்வதற்குரிய முயற்சிகளுள் எதனை. கொல்: அசைநிலை. கருவி - தொகுதி; இந்நூல், ௪௨ - ஆம் செய்யுளின் விசேடவுரையைப் பார்க்க. மழைத் துளி வீசுதலும் ஊதைக் காற்றும் கூதிர்க்காலத்துக் குரியவை. ஊதை - வாடை. ஊதையங் குளிர்: அம், சாரியை. கூற்றமென்றது தன் உயிரை உடலினின்றும் கூறுபடுத்துவதற் கேதுவாதலின். எற்குறித்து - என்னைக் கொல்லுதல் குறித்து. ஏகாரம்: ஈற்றசை.

## ஒப்புமைப் பகுதி

1, மு. அகநா. ௩௬௪ : 12.

2. கருவிய மழை : குறுந். ௪௨ : 2, ஒப்பு.

4. கூதிர் உருவிற் கூற்றம் : "வாடையாய்க் கூற்றி னொரு முருவினை மாற்றி வந்தார்" (கம்ப. கார்காலப். 60.)

5. எற்றுறித்து வரும் : குறுந். கஅஅ : 4, உகக : 7. (கக௲எ)

---

## தோழி கூற்று

["இனி யாங்கள் தினைப்புனங் காக்கச் செல்கின்றேம்; நீ ஆண்டே வருக. ஈண்டு எம்முடைய தாய் வருவாளாதலின் வாரற்க" என்று தோழி தலைவனுக்குக் கூறியது.]

கக௲அ. * யாஅங் கொன்ற மரஞ்சுட் டியவிற்
கரும்புமருண் முதல பைந்தாட் செந்தினை
மடப்பிடித் தடக்கை யன்ன பால்வார்பு [குரற்
கரிக்குறட் டிறைஞ்சிய † செறிகோட் பைங்
படுகிளி கடிகஞ் சேறு மடுபோர்
எஃகுவிளங்கு தடக்கை மலையன் கானத்
தார நாறு மார்பினை
‡ வாரற்க தில்ல வருகுவள் யாயே.

எ - து. தோழி குறியிடம் பெயர்த்துக் கூறியது.

[குறியிடம் - இரவுக்குறி யிடத்தை. பெயர்த்து - மாற்றி.]

கபிலர்.

(ப - ரை.) யாஅம் கொன்ற - யாமரத்தை வெட்டிய, மரம் சுட்ட இயவில் - மரங்களைச் சுட்ட வழியில், கரும்பு மருள் முதல - கரும்பைப்போன்ற அடியையுடையனவாகிய, பசு தாள் செ தினை -

---

(பி - ம்.) * மாஅங். † செறிகோற், செறிதாட். ‡ வாரன் மற்றைய.

பசிய காம்பையுடைய சிவந்த தினையினது, மட பிடி தட கை அன்ன - மடமை மிக்க பிடியினது வளைந்த கையைப் போன்றனவாகி, பால் வார்பு - பால் நிரம்பி, கரி குறட்டு இறைஞ்சிய - கரியை எடுக்கின்ற குறட்டைப்போல வளைந்த, செறி கோள் பசு குரல் - செறிந்த குலையையுடைய பசிய கதிர்களில், படு கிளி - தின்னும்பொருட்டு வீழ்கின்ற கிளிகளை, கடிகம் சேறும் - ஓட்டுவேமாகிச் செல்வேம்; யாய் வருகுவள் - இவ்விடத்தில் தாய் வருவாள்; அடு போர் - பகைவரைக் கொல்லும் போர்க்குரிய, எஃகு விளங்கு தட கை - வேற் படை விளங்குகின்ற பெரிய கைகளையுடைய, மலையன் கானத்து - மலையனது முள்ளூர்க் கானத்தில் வளர்ந்த, ஆரம் நாறும் மார்பினை - சந்தனம் மணக்கின்ற மார்பினை யுடையையாகி, வாரற்க - வருதலை யொழிக; தில்ல - இஃது எங்கள் விருப்பம்.

(முடிபு.) இயவில் சேறும்; யாய் வருகுவள்; வாரற்க.

(கருத்து.) இனித் தினைப்புனத்தே வந்து தலைவியோடு அளவளாவுவாயாக.

(வி - ரை.) தினை விதைத்தற்பொருட்டு யாமரங்களை வெட்டினர் (குறுந். உகச.) சுட்ட இயவு, சுட்டியவாயிற்று; அகரம் விகாரத் தாற் றொக்கது; "புகழ்புரிந் தில்லிலோர்" (குறள், 59) என்புழிப் போல.

களிற்றின்கை கொம்புடையதாதலின் அதனைக் கூறாது பிடியின் கையைக் கூறினாள். பால் - தினை முதலியவற்றிலுள்ள பால். கரிக் குறடு - கொல்லர் கரியை எடுக்கப் பயன் படுத்துங் குறடு. கோள் - விந்துமாம். தடக்கை, மலையனுக்கு அடை. மலையன் - மலையமான் திருமுடிக்காரியென்னும் வள்ளல். 'மலையன்கானத்து ஆரம்நாறும் மார்பினை' என்றது, அவ்வாரத்தின் மணமறிந்து, "இஃது எற்றினன் வந்தது" என்று தாய் ஆராய்தற்கு ஏதுவாகித் துன்பம் பயக்கு மென்னும் நினைவிற்று. தலைவியைக் காண வந்தவனாதலின் சந்தன முதலியவற்றாற் புனைந்துகொண்டு வந்தான்.

யாம் இயவிற் சேறுமென்றது, நீயும் ஆண்டே வருகவென்னும் மறைப்பொருளைத் தந்தது. இதனால் இது குறியிடம் பெயர்த்துக் கூறியதாயிற்று.

மேற்கோளாட்சி

1. அகக்காழன மரமென்று கூறப்படும் (தொல். மரபு. 85, பேர்.)

மு. தலைவனது குறையைக் கடிது முடியாமையைக் கருதும் தோழி குரவரைத் தான் அஞ்சித் தலைவியும் அவரை அஞ்சுவளெனக் கூறுவன வற்றுள் இது யாயை அஞ்சுதல் கூறியது (தொல். களவு. 23, ந.); பாங்கி இறைவியைக் குறிவரல் விலக்கியது (நம்பி. 156.)

## ஒப்புமைப் பகுதி

1. யாம் : குறுந். ௬௭ : 3, விசேட.

2. தினையின்தாளுக்குக் கரும்பு : "கரும்பெனக் கவினிய பெருங் குரலேனல்" (அகநா. ௩௦௨ : 10.)

பைந்தாட் செந்தினை : அகநா. ௨௪௨ : 5.

1-2. மரங்களை வெட்டியவிடத்தில் தினையை விதைத்தல் : குறுந். ௨௧௪ : 1-2 ; திணைமாலை. 1.

மரங்களைச்சுட்டவிடத்தே தினையை விதைத்தல் : "சுடுபுன மருங்கிற் கலித்த வேனல்" (குறுந். ௨௧௧ : 1) ; "தொடுதோற் கானவன் சூடுறு வியன்புனம், கரிபுறங் கழீஇய பெரும்பாட் டீரத்துத், தோடுவளர் பைந்தினை நீடுகுரல்" (அகநா. ௩௯௮ : 1-3) ; "கானவர், கரிபுன மயக்கிய வகன்கட் கொல்லை, ஐவனம் வித்தி மையுறக் கவினி, ஈனல் செல்லா வேனற்கு", "எரிபுனக் குறவன் குறைய லன்ன, கரிபுற விறகி னீம வொள்ளழல்" (புறநா. ௧௫௯ : 15-8, ௨௩௧ : 1-2.)

2-3. பால்வார்ந்த தினை : "துய்த்தலைப் புனிற்றுக்குரல் பால்வார் பிறைஞ்சித், தோடலைக் கொண்டன வேனல்", "ஏனற் செந்தினைப் பாலார் கொழுங்குரல்" (நற். ௨௦௬ : 1-2, ௨௮௮ : 8.)

3-4. தினைக்கதிருக்குப் பிடியின்கை : (குறுந். ௩௬௦ : 5); *"யானை... இறங்குகை கடுப்பத், துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல், நற் கோட் சிறுதினை" (குறிஞ்சிப். 35-8) ; "பொய்பொரு கயமுனி முயங்கு கை கடுப்பக், கொய்பத முற்றன குலவுக்குர லேனல்" (மலைபடு. 107-8); "நீடிருஞ் சிலம்பிற் பிடியொடு புணர்ந்த, பூம்பொறி யொருத்த லேந்து கை கடுப்பத், தோடுதலை வாங்கிய நீடுகுரற் பைந்தினை", "மணியேர் தோட்ட மையா ரேனல், இரும்பிடித் தடக்கையிற் றடைஇய பெரும் புனம்" (நற். ௩௧௭ : 1-3, ௩௪௪ : 2-3) ; "உறங்குபிடித் தடக்கை யொருங்குகிரைத் தவைபோல், இறங்குகுர லிறடி" (பெருங். ௧. 49 : 103-4.)

5. கிளிகடிகத் சேறும் : "உறுகிளி கடிகஞ் சென்றும்" (நற். ௨௮௮ : 9.)

---

* கபிலர் பாட்டு.

4-5. திணையிற் கிளிகடிதல் : * நற்றி. உகக : 1-2, கூசுo : 5-6.

2-5. * " முறஞ்செவி யானைத் தடக்கையிற் றடைஇ, இறைஞ்சிய குரல பைந்தாட் செந்தினை, வரையோன் வண்மை போலப் பலவுடன், கிளையோ டுண்ணும் வளைவாய்ப் பாசினம் " (நற். கூஎசு : 1-4.)

6. எஃகுவிளங்கு தடக்கை மலையன் கானம் : * "செவ்வேன் மலையன், முள்ளூர்க் கான நாற" (நற்றி. கூகஉ : 2 - 3.)

எஃகுவிளங்கு தடக்கை மலையன் : "செவ்வேல், முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி" (அகநா. உ0௯ : 11-2) ; "வல்வேன் மலையன்" (புறநா. கஉ௬ : 14.)

7. தலைவர் சந்தனம் பூசிவருதல் : நற்றி. க௯o : 3, ஒப்பு.

8. வாரற்க தில்ல : நற்றி. கூசுo : 4 ; அகநா. சo : 12.

மு. நற்றி. கசக. (ககூஅ)

---

## தலைவன் கூற்று

[தாய் முதலியோர் தலைவியை வீட்டிற்கு அழைத்துச் செல்ல எண்ணியிருப்பதைத் தோழியால் அறிந்த தலைவன், " இனி இவளைப் பெறுவது அரிதுபோலும் ! ஆயினும் என் காமநோய் என்றும் அழியாதது ; பிறவிதோறும் தொடர்ந்து வருவது " என்று நெஞ்சை நோக்கிக் கூறியது.]

ககூகூ. பெறுவ தியைவா தாயினு முறுவதொன்
றுண்டுமன் வாழிய நெஞ்சே திண்டேர்க்
† கைவள் ளோரி கானந் தீண்டி
எறிவளி கமழு நெறிபடு கூந்தல்
மையீ ரோதி மாஅ யோள்வயின்
இன்றை யன்ன நட்பி னிந்நோய்
இறுமுறை யெனவொன் றின்றி
மறுமை யுலகத்து மன்னுதல் ‡ பெறுமே.

எ - து. தோழி செறிப்பறிவுறுப்ப, நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

பரணர்.

---

* கபிலர் பாட்டு. (பி - ம்.) † கைவள ரோரி. ‡ பெறினே.

(ப - ரை.) நெஞ்சே—, திண் தேர் - திண்ணிய தேரை யுடைய, கைவள் ஓரி - கைவண்மையையுடைய ஓரியினது, கானம் தீண்டி - கானத்தைத் தீண்டி, எறி வளி - வீசுகின்ற காற்றைப் போல, கமழும் - மணக்கின்ற, நெறிபடு கூந்தல் - நெறிப்பு அமைந்த கூந்தலாகிய, மை ஈர் ஓதி - மையைப்போன்ற தண்ணிய மயிரை யுடைய, மாயோள் வயின் - மாமையை யுடையோளிடத்து, இன்றை அன்ன நட்பின் இ நோய் - இன்றைநிலையைப் போன்று என்றும் உள்ள நட்பையுடைய இந்தக் காமநோயானது, இறு முறை என ஒன்று இன்றி - அழியுமுறை என்பது ஒன்று இல்லாமல், மறுமை உலகத்தும்-மறுமையில் வாழ்தற்குரிய உலகத்திலும், மன்னு தல் பெறும் - நிலைபேற்றை அடையும்; ஆதலின், பெறுவது இயை யாது ஆயினும் - தலைவியை இப்பிறவியின்கண் பெறுதல் நம்மாட்டுப் பொருந்தாதாயினும், உறுவது ஒன்று உண்டு - மறுமை யுலகத்துப் பெறுவதாகிய நாம் அடையும் பயன் ஒன்று உண்டு.

(முடிபு.) நெஞ்சே, இந்நோய் மறுமையுலகத்தும் மன்னுதல் பெறும்; பெறுவது இயையாதாயினும் உறுவதொன்றுண்டு.

(கருத்து.) இனி இம்மையில் தலைவியைக் காணப்பெறேன்.

(வி - ரை.) மன், வாழிய: அசைநிலைகள். ஓரி - ஒரு வள்ளல்.

இந்நட்பு என்றும்குன்றாது பிறவிதோறும் தொடர்ந்து வருவ தென்றான். மறுமை - மறுபிறவி.

## மேற்கோளாட்சி

மூ. தோழி இற்செறிப்பு அறிவுறுப்பத் தலைவன் ஆற்றானாய்க் கூறி யது (தொல். களவு. 12, ந.); தலைமகன் தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளந்தது (நம்பி. 154.)

## ஒப்புமைப் பகுதி

2. வாழிய நெஞ்சே: குறுந். கசு: 3, ஒப்பு.

3. கைவள்ளோரி: "மழவர் பெருமகன் மாவள் ளோரி, கைவளம்" (நற். ருஉ: 9-10); "ஓரி விசும்பிற், கருவி வானம் போல, வரையாது சுரக்கும் வள்ளியோய்" (புறநா. உ0ச: 12-4.)

4. நெறிபடு கூந்தல்: குறுந். சககூ: 4, ககூ0: 1.

3-4. * "வல்வில் லோரி கான நாறி, இரும்பல் லொலிவருங் கூந்தல்" (நற். ௬ : 8 - 9.)

5. மையிரோதி : "மையிருங் கூந்தல்" (குறுந். ௨௦௧ : 7); "மையுக் கன்ன மொய்யிருங் கூந்தல்" (மதுரைக். 417.)

மாயோள் : குறுந். ௬ : 1, ஒப்பு.

6. இன்றையன்ன நட்பு : குறுந். ௬௮௫ : 6, ஒப்பு.

6-8. நட்பு மறுபிறப்பிலும் மன்னுதல் : (குறுந். ௨ : 3, ஒப்பு, ௪௯ : 3-5, ஒப்பு); "எனை யுலகத்து மியைவதா னமக்கென" (குறிஞ்சிப். 24.) (௧௯௯)

---

## தலைவி கூற்று

[பருவம் வந்தகாலத்துக் கவன்ற தலைவியை நோக்கி, "இது காரன்று; வம்பு" எனக்கூறிய தோழிக்கு, "கார்ப்பருவத்துக்குரிய மேகமுழக்கமும் புதுவெள்ளமும் உள்ளன; இக்காலத்தும் தலைவர் வந்திலர்; அவர் நம்மை மறந்தார்போலும்!" என்று தலைவி கூறி வருந்தியது.]

௨௦௦. பெய்த குன்றத்துப் பூநாறு † தண்கலுழ்
‡ மீமிசைத் தாஅய ¶ வீஇ சுமந்துவந்
திழிதரும் புனலும் வாரார் தோழி
மறந்தோர் மன்ற மறவா நாமே
கால மாரி மாலை § மாமழை
இன்னிசை யுருமின $ முரலும்
முன்வா லேமஞ் செய்தகன் றோரே.

எ - து. பருவ வரவின்கண் ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி, "பருவமன்று; வம்பு" என்றவழித் தலைமகள் சொல்லியது.

** ஔவையார்.

(ப - ரை.) தோழி—, காலம் மாரி - கார்ப்பருவத்துப் பெய்தற்குரிய மழையையுடைய, மாலை மா மழை - மாலைக்காலத்து வரும்

---

பரணர் பாட்டு. (பி - ம்.) † தண்கமழ் ‡ நிலமிசை. ¶ வீசும்வந் வீசுமக். § மாமறை. $ குரலும். ** அவ்வையார்.

கரிய மேகங்கள், இன் இசை உருமின முரலும் - வித்தியானோர்க்கும் புலமுடையாருக்கு இனிய ஒலியையுடைய இடியேற்றையுடையன வாகி முழங்கும்; பெய்த குன்றத்து - முன்பு மழைபெய்த குன்றத் தின்கண், பூநாறு தண் கலுழ் மீமிசை - மலர் மணக்கின்ற தண்ணிய கலங்கலின்மேலே, தாய - பரவிய, வீ சுமந்து வந்து - மலர்களைச் சுமந்து வந்து, புனலும் இழிதரும் - அருவிப் புனலும் வீழும்; முன் வரல் ஏமம் செய்து அகன்றோர் - கார்ப்பருவத்திற்கு முன்னரே வருவேமென்ற பாதுகாப்பைச் செய்து அகன்ற தலைவர், வாரார் - இன்னும் வாராராயினர்; மன்ற மறந்தோர் - அவர் நிச்சயமாக நம்மை மறந்தார்; நாம் மறவாம் - நாம் அவரை மறத்தல் செய்யாம்.

(முடிபு.) தோழி, மழை முரலும்; புனலும் இழிதரும்; அகன்றோர் வாரார்; மறந்தோர் மன்ற; நாம் மறவாம்.

(கருத்து.) கார்ப்பருவம் வரவும் தலைவர் வந்தாரல்லர்.

(வி - ரை.) கலுழ், அருவிநீரில் புதுமழையால் உண்டாயது. முன்னரே வீழ்ந்த பூக்களுந் தாதும் உண்மையின் கலுழ் பூ நாறியது. வீயென்றது அப்பொழுது உதிர்ந்த பூக்களை. வம்பென்றுளை மறுத்தவளாதலின் 'காலமாரி' என்றாள். கார்காலத்திற்கு முன்னரே வருவதாகக் கூறிச் சென்றவர் அது வந்த பின்பும் வந்திலரென்றாள்.

நாமே: ஏகாரம், பிரிநிலை. அகன்றோரே: ஏகாரம், அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1-3. புனலும் பூவும்: "நீர்நிறங் கரப்ப ஊழுறு புதிர்ந்த, பூமலர் கஞலிய கடுவரற் கான்யாற்று" (அகநா. கஅ: 1-2.)

4. மறந்த தலைவனைத் தலைவி மறவாமை: "எம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்" (சிலப். எ: 32.)

5. காலமாரி: குறுந். உகூக: 2.

6. இன்னிசை யுருமு: "இன்குரற், றளிமழை பொழியும்" (மதுரைக். 262-3.)

7. முன்வர லேமம்: "கூதிர்ப், பெருந்தண் வாடையின் முந்துவந்தனனே" (ஐங். உகூஉ: 4-5.) (உ00)

தலைவி கூற்று

[தலைவனும் தலைவியும் மணந்துகொண்டு இல்லறம் நடத்தும் மனைக்கண் சென்றதோழி, "வரைந்துகொள்ளும் வரையில் நீ வேறு படாமல் எங்ஙனம் ஆற்றியிருந்தாய்" என்று கூற, "நான் அங்ஙனம் ஆற்றியிருக்கும்வண்ணம் அயன்மனைக்கிழத்தி முன்பு தலைவன் வரவைக் கூறினாள்; அவள் வாழ்க!" என்று தலைவி சொல்லியது.]

உ0க * அமிழ்த முண்கநம் மயலி லாட்டி
பால்கலப் பன்ன தேக்கொக் கருந்துபு
நீல மென்சிறை வள்ளுகிர்ப் பறவை
நெல்லி யம்புளி மாந்தி யயலது
முள்ளி லம்பணை மூங்கிற் றூங்கும்
கழை நிவந் தோங்கிய சோலை
மலைகெழு நாடனை வருமென் றோளே.

எ - து. கடிநகர் வேறுபடாது நன்கு ஆற்றினையென்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

[கடிநகர் - காவலமைந்த வீட்டில்; மணம் செய்துகொண்டு இல்லறம் நடத்தும் மனையிலெனலும் ஆம்.]

†......................

(ப - ரை.) தோழி, அயல் இல் ஆட்டி - அயன்மனைக் கிழத்தி, பால் கலப்பு அன்ன - பாலைக் கலந்தாற்போன்ற இனிமையையுடைய, தேக்கொக்கு அருந்துபு - தேமாம்பழத்தைத் தின்று, நீலம் மெல் சிறை - கரிய மெல்லிய சிறகுகளையும், வள் உகிர் பறவை - கூரிய நகங்களையும் உடைய வௌவால், நெல்லியம் புளி மாந்தி - நெல்லியினது புளித்த காயை உண்டு, அயலது - அயலிலுள்ளதாகிய, முள் இல் அம் பணை மூங்கில் தூங்கும் - முள்ளில்லாத அழகிய பருத்த மூங்கிலின்கண்ணே தொங்குகின்ற, கழை நிவந்து ஓங்கிய சோலை - மூங்கிற் கோல்கள் உயர்ந்துவளர்ந்த சோலைகளையுடைய, மலைகெழு நாடனை - மலைகள் பொருந்திய நாட்டையுடைய தலைவனை, வருமென்றோள் - வரைவுக்குரியவற்றோடு வருவானென்று கூறினாள் ஆதலின், அமிழ்தம் உண்க - அவள் அமிழ்தத்தை உண்பாளாக!

(பி - ம்.) * அமிர்த, அமுத. † ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.

(முடிபு.) அயலிலாட்டி நாடனை வருமென்றோள்; அமிழ்தம் உண்க!

(கருத்து.) தலைவன் வரைவொடு வருதலை முன்பு கூறி எனக்கு உறுதி யுண்டாக்கிய அயலிலாட்டி வாழ்வாளாக!

(வி - ரை.) அமிழ்தமுண்கவென்றது சுவர்க்க போகத்தைப் பெறுக வென்றபடி. இங்ஙனம் வாழ்த்தும் மரபை இந்நூல் ௮௬ - ஆம் செய்யுளாலும் உணரலாகும்.

தலைவி, புறம்போந்து செய்தியறிதற்கியலாத பெருங்காப்பினளாக இருந்தமையின், தலைவன் வரைவொடு புகுதலைத் தான் அறியாது அயலிலாட்டி கூற அறிந்தாள்.

நெல்லியம் புளியென்றது நெல்லிக்காயையே; அம்: சாரியை. தேமாங்கனியை யருந்தித் தெவிட்டினமையின் வேற்றுச் சுவையை யுடைய நெல்லியம்புளியை வெளவால்கள் உண்டன.

தலைவன் வரைவுடன் வருதலை அயலிலாட்டி முன்பு கூறின மையின் ஆற்றியிருந்தேனென்று தலைவி காரணத்தைப் புலப்படுத்தினா ளாயிற்று.

தேமாம்பழத்தை உண்ட வெளவால் பின்பு மாறுபட்ட சுவையையுடைய நெல்லிக்காயை உண்டு சிறிதும் ஊறு உண்டாக்காத முள்ளில் மூங்கிலிற்றூங்கியதுபோல, களவுப் புணர்ச்சியின்கண் இன்பந் துய்த்த தலைவன் அவ்வின்பத்துக்கு மாறுகிய இடையீடுகளையும் ஏற்றுப் பின் வரைந்துகொண்டு சிறிதும் ஏதமின்றி இன்பம் துய்க்கும் நிலையினனாயினனென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

1. அகரத்தோடு கூடிய ககரவீறு வியங்கோளில் வாழ்த்துதற் பொருண்மைக்கண் வந்தது (நன். 337, மயிலை; இ. வி. 239.)

## ஒப்புமைப் பகுதி

1. அயலிலாட்டி : அகநா. ௩௮௪ : 11

1, மு. நற். ௬௫ : 1.

2. தேக்கொக்க : குறுந். உ௬ : 6, ஒப்பு.

1. நெல்லியம்புளி: "தீம்புளி நெல்லி" (குறுந். கூகஎ : 2); "பாரா ரை நெல்லி யம்புளித் திரள்காய்" (அகநா. ருரு : 7.)

2-4. வெளவால், மா, நெல்லி: "உள்ளூர் மாஅத்த முள்ளெயிற்று வாவல், ஓங்கலஞ் சினைத் தூங்குதுயில் பொழுதின், வெல்போர்ச் சோழ ரழிசியம் பெருங்காட்டு, நெல்லியம் புளிச்சுவைக் கனவி யாஅங்கு" (நற். அஎ : 1-4.)

7. குறுந். அஉ : 5.

6-7. சோலை மலைகெழு நாடன்: "பிறங்கிருஞ் சோலை நன்மலை நாடன்" (கலி. சஉ : 4.)

மு. குறுந். அஉ, கூஅக; நற். ருகு. (உ0க)

---

## தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனுக்குத் தூதாகவந்த தோழியை நோக்கி, "தலைவர் இப்பொழுது எனக்கு இன்னாமையைத்தரும் ஒழுக்கத்தினராதலின் என் நெஞ்சு வருந்தும்; அவரை ஏற்றுக் கொள்ளேன்" என்று தலைவி கூறியது.]

உ0உ. *நோமென் னெஞ்சே நோமென் னெஞ்சே
புன்புலத் தமன்ற சிறியிலை † நெருஞ்சிக்
கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்
கினிய செய்தநங் காதலர்
இன்னா செய்த னோமென் னெஞ்சே.

எ - து. வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் வாயில் மறுத்தது.

அள்ளூர் நன்முல்லை.

(ப - ரை.) தோழி, என் நெஞ்சு நோம் - என் நெஞ்சு வருந்தும்; என் நெஞ்சு நோம் -; புன்புலத்து - முல்லை நிலத்தின்கண், அமன்ற - நெருங்கி முளைத்த, சிறிய இலை நெருஞ்சி - சிறிய இலைகளையுடைய நெருஞ்சியினது, கட்கு இன் புதுமலர் - முன்னர்த் தோன்றிக் கண்ணுக்கு இனிய புதியமலர், முள் பயந்தாஅங்கு -

(பி - ம்.) * நோமெனெஞ்சே. † நெரிஞ்சி.

பின்னர் இன்னாமையைத்தரும் முள்ளைத் தந்தாற்போல, இனிய செய்த நம் காதலர் - முன்பு நமக்கு இனியவற்றைச் செய்தொழுகிய நம் தலைவர், இன்னா செய்தல் - இப்பொழுது இன்னாதனவற்றைச் செய்தொழுகுதலால், என் நெஞ்சு நோம்—.

(முடிபு.) என் நெஞ்சு நோம்; என் நெஞ்சு நோம்; நம் காதலர் இன்னா செய்தலால் என் நெஞ்சு நோம்.

(கருத்து.) தலைவர் இன்னாராகி ஒழுகுதலால் என் நெஞ்சம் வருந்தும்.

(வி - ரை.) நோமென்னெஞ்சே நோமென்னெஞ்சே யென்று அடுக்கு இடைவிடாது நோதலைக் குறித்தது; "பொய்யாமை பொய் யாமை யாற்றின்" (குறள், 297) என்புழிப்போல. புன்புலம் - செந் நிலம்; என்றது முல்லைநிலத்தை; புன்மை - செம்மை; புன் செய்யு மாம். சிறிய இலை, சிறியிலையென விகாரம் (நன். 155, வி.)

"தலைவர் நின்பாற் இனிய பல செய்தவரன்றோ; அவரை நீ வெறுத்தல் வேண்டாம்" என்ற தோழியை மறுப்பவளாதலின், 'அவர் இனியராயிருந்தது முன்பு; இப்பொழுது இன்னாராயினர்' என்றாள். கட்கின் புதுமலரென்பதனோடு முள்ளையும் ஊழ்த்திருந்து இன்னாதமுள்ளென்பதை இசையெச்சத்தால் வருவிக்க. இன்னா செய்த லாவது பரத்தையர்பாற் அன்புடையனாகி யொழுகுதல்.

## மேற்கோளாட்சி

2-5. தலைவி பாங்கியொடு பகர்ந்தது (இ. வி. 513.)

மு. தலைவி பாங்கியோடு பகர்தல் (நம்பி. 154.)

## ஒப்புமைப் பகுதி

1. நோமென்னெஞ்சு : குறுந். ச : 1, ஒப்பு.

2. சிறியிலை நெருஞ்சி : "சிற்றிலை நெருஞ்சிப் பொற்பூ" (கல்லா டம், கூ௫ : 15.)

சிறியிலை : புறநா. ௬0௬ : 1, ௬0௮ : 4.

4-5. இனிய செய்த தலைவர் பின் இன்னாசெய்தல் : "இனியசெய் தநின்றுநீ யின்னாதாத் துறத்தலின்" (கலி. ௭௨ : 12.) (உ0உ)

---

தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்த தலைவனுக்குத் தூதாகப் புக்க தோழியை நோக்கி, "தலைவர் உடனுறைந்து அன்பு பாராட்டற்குரிய நிலையினராக விருந்தும் அயன்மை தோன்ற ஒழுகுகின்றார்; அவர்பால் முன்பு பரிவுடையேன்; இப்பொழுது அது நீங்கியது" என்று தலைவி மறுத்துக் கூறியது.]

௨0௩. மலையிடை யிட்ட நாட்டரு மல்லர்
மரந்தலை தோன்றா வூரரு மல்லர்
கண்ணிற் காண நண்ணுவழி யிருந்தும்
கடவு ணண்ணிய பாலோர் போல
ஒரீஇ யொழுகு மென்னைக்குப்
† பரியலென் மன்யான் பண்டொரு காலே.

எ - து. வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

‡ நெடும்பல்லியத்தன்.

(ப - ரை.) தோழி, மலை இடை இட்ட நாட்டரும் அல்லர் - தலைவர் மலைகள் இடையிடுவதனாற் சேயதாகிய நாட்டினருமல்லர்; மரந் தலை தோன்றா ஊரரும் அல்லர் - தன்னிடத்துள்ள மரங்கள் நமக்குத் தோன்றாத சேய்மையிலுள்ள ஊரினரும் அல்லர்; கண்ணின் காண - கண்ணாலே காணும்படி, நண்ணுவழி இருந்தும் - விரைவில் வருதற்குரிய அணிமையிடத்தில் இருந்தும், கடவுள் நண்ணிய பாலோர் போல - முனிவரை அணுகி வாழும் பகுதியினரைப்போல, ஒரீஇ ஒழுகும் என்னைக்கு - மனத்தால் நீங்கி ஒழுகுகின்ற என் தலைவர் பொருட்டு, யான்—, பண்டு ஒருகால் - முன்பு ஒரு சமயத்தில், பரியலென் - பரிதலையுடையேனாயினேன்; மன் - அஃது இப்பொழுது கழிந்ததே!

(முடிபு.) நாட்டருமல்லர்; ஊரரும் அல்லர்; நண்ணுவழியிருந்தும் ஒரீஇயொழுகும் என்னைக்குப் பண்டொருகால் யான் பரியலென்மன்.

(கருத்து.) இப்பொழுது என்னைப் புறக்கணித் தொழுகும் தலைவர்பால் யான் முன்பு பரிவுடையளாக இருந்தேன்.

(பி - ம்.) * வெரீஇயின னொழுகு. † பரியலெமன். ‡ நெடும் பல்லியத்தை.

(வி - ரை.) மலையிடையிட்ட நாட்டரென்றது வேற்று நாட்டா ரென்றபடி; மரந்தலை தோன்றா ஊரரென்றது காடிடையிட்ட வேற் றூராரென்றபடி. மலையிடையிட்ட நாட்டினராயின் நினைத்தபோது காண்டற்கு அரிய நிலையினராவர்; வேற்றூராராயின் எப்பொழுதும் காணும் நிலையிலதாகும். கண்ணிற்காண நண்ணுவழி - கண்ணாலே காணுதற்குரிய அணிமை; என்றது கற்பொழுக்கத்திற்றலைப்பட்டு எப்பொழுதும் உடனுறையும் நிலையைக் குறித்தது.

மரந்தலை - மரம்; தலை: அசைநிலை; "மரந்தலை கரிந்து" (அகநா. கக௯: 1.)

முனிவரைக் கண்டார் தம் தூய்மையன்மை காரணமாக அஞ்சி விலகி யொழுகும் தன்மையைப்போல என்னிடத்தினின்றும் நீங்கி ஒழுகினாரென்றாள். இவ்வுவமையால், தனது தூய்மையையும் தலை வனது பரத்தைமையாகிய தூய்மையன்மையையும் குறிப்பாலுணர்த் தினாள். கடவுள் - முனிவர் (மதுரைக். 41, ந.)

அவர் இங்ஙனம் ஒழுகினும் என்பால் உரிமையுடையாரென்னும் கருத்துப்பற்றி என்னையென்றாள். பண்டென்றது களவுக்காலத் தைச் சுட்டியபடி.

களவுக் காலத்து மலையிடையிட்டும் காடிடையிட்டும் உள்ள இடத்திலிருந்து வருந்திவந்து என்னோடு இன்புற்ற அவர், இப் பொழுது என்றும் உடனுறைவதற் கேற்ற நிலையைப்பெற்றும் ஒருவி யொழுகினாரென்றாள்.

பண்டொருகால் பரிவையுடையேனென்றது, இப்பொழுது அதனை ஒழிந்தேனென்னும் பொருள் பயந்து வாயில்மறுத்த தாயிற்று.

வாயில்வேண்டிய தோழி, "நீ முன்பு அவர்பால் மிக்க அன் புடையையாக இருந்தாயன்றே! ஆதலின் உடம்படுக" என்று கூறினா ளாதலின், "அவரும் தம் பண்டை நிலையிற் பிறழ்ந்தார்; யானும் பரிவு நீங்கினேன்" என மறுத்தாள்.

மன் : கழிவிரக்கப்பொருளில் வந்தது.

## மேற்கோளாட்சி

5. தலைமகள் தலைவனை என்னை யென்றது (தொல். பொருள். 50, இளம்.)

5-6. ஷை (ஷை. ஷை, 52, ந.)

ஒப்புமைப் பகுதி

3, மு. பொருந. 76.

மு. குறுந். உஉக. (உ0ரு)

---

## பாங்கன் கூற்று

[தலைவனைப் பாங்கன் இடித்துரைத்தது.]

உ0ச. காமங் காம மென்ப காமம்
அணங்கும் பிணியு மன்றே நினைப்பின்
முதைச்சுவற் கலித்த முற்றா விளம்புல்
மூதா தைவந் தாங்கு
விருந்தே காமம் பெருந்தோ ளோயே.

எ - து. தலைமகற்குப் பாங்கன் உரைத்தது.

மிளைப்பெருங் கந்தன்.

(ப - ரை.) பெருந்தோளோயே - பெரிய தோளையுடைய தலைவ, காமம் காமம் என்ப - காமம் காமமென்று அதனை அறியார் இகழ்ந்து கூறுவர்; காமம் - அக்காமமானது, அணங்கும் பிணியும் அன்று - வருத்தமும் நோயும் அன்று; முதை சுவல் கலித்த - பழங்கொல்லையாகிய மேட்டுநிலத்தில் தழைத்த, முற்றா இள புல் - முதிராத இளைய புல்லை, முது ஆ - முதிய பசு, தைவந்தாங்கு - நாவால் தடவி இன்புற்றாற்போல, நினைப்பின் - நினைக்குங் காலத்து, காமம் விருந்து - அக்காமம் புதிய இன்பத்தை யுடையதாகும்.

(முடிபு.) பெருந்தோளோயே, காமம் காமம் என்ப; காமம் அணங்கும் பிணியும் அன்று; அது விருந்தே.

(கருத்து.) காமம் நம்முடைய அறிவின் எல்லைக்கு உட்பட்டது.

(வி - ரை.) காமமென்றது இங்கே காம உணர்ச்சியை. தலைவன், "ஒருமகள் என்னை அணங்க இந்நோய் உற்றேன்" என்று

---

(பி - ம்.) * முதுசுவற்.

ஞதலின் காமம் பிறர் அணங்க வருவதன்றெனவும் நோயன்றென வும் மறுத்துரைத்தான். நினைப்பின் - ஆராய்ந்தாலெனனுமாம். 'தனக்குக் கறிக்க வியலாத இளம்புல்லைத் தடவியவளவில் முதிய பசு இன்புற்றதற்குக் காரணம் அப் புல்லின் சுவை யன்று; பசுவின் ஆர்வமே. அதன் ஆர்வத்தளவு அவ்வின்பம் நிற்றலைப் போலக் காமமானது நம்முடைய நினைப்பினளவிற் புதுமையின்பத் தைத் தருவதாகின்றது. அதனை நம் அறிவினல் அவித்தொழுகின் அதனல் இன்பந்தோன்றாது. நம் மனநிலையே அதனை விருந்தாகத் தோற்றுவிக்கின்றது' என உவமையை விரித்துக்கொள்க.

விருந்தென்றது புதிதாகத் தோற்றிச் சிறுபொழுதில் அழிவ தென்றும், என்றும் நிலைநிற்கும் நற்குணமன்றென்றும் உணர்த்திய படி.

இதனல், அறிவுடையார்பாற் காமம் தோன்றாதென்றும், அறிவின்றி மனத்தின்வழியே செல்வார்க்கு அது விருந்தாவதென் றும் புலப்படுத்தி இடித்துரைத்தானுயிற்று.

பெருந்தோளோயே என்றது, இத்தகைய தோளின் வன்மையை இழந்தனையேயென இரங்கியபடி.

## மேற்கோளாட்சி

மு. பாங்கன் கூற்று (தொல். செய். 189, பேர், ந.); தலை வன் உற்றதுரைப்பக் கேட்ட பாங்கன் உலகத்து நிலைநிற்கும் நற்குணங் களை அவனை நினைப்பித்துக் கழறிக் கூறியது (ஷை. களவு. 11, ந.); பாங் கன் கிழவோற் பழித்தது (நம்பி. 137.)

## ஒப்புமைப் பகுதி

1-2, மு. * குறுந். கஙக : 1-2.

3. முதைச்சுவல் : குறுந். கஉஉ : 1 ; அகநா. ௯௨க : 14. (உ0ச)

* மிளைப்பெருங் கந்தன் பாட்டு.

தலைவி கூற்று

[வரைவிடை வைத்துப் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாளென வருந்திய தோழியை நோக்கி, "தலைவர் பிரிந்தவுடன் என் நுதலிற் பசலை தானே பரந்தது" என்று தலைவி கூறியது.]

உ0௫. மின்னுச்செய் கருவிய பெயன்மழை தூங்க
விசும்பா டன்னம் பறைநிவந் தாங்குப்
பொலம்படைப் பொலிந்த * வெண்டே ரேறிக்
கலங்குகடற் † றுவலை யாழி நனைப்ப
இனிச்சென் றனனே யிடுமணற் சேர்ப்பன்
யாங்கறிந் தன்றுகொ றோழியென்
தேங்கமழ் திருநுத லூர்தரும் பசப்பே.

எ - து. வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

உலோச்சன்.

(ப - ரை.) தோழி—, இடு மணல் சேர்ப்பன் - அலைகள் கொண்டு வந்திட்ட மணலையுடைய கடற்கரையையுடைய தலைவன், மின்னு செய் கருவிய - மின்னலைச் செய்கின்ற தொகுதியையுடையன வாகிய, பெயல் மழை தூங்க - பெய்தலையுடைய மேகம் பெய்யா நிற்ப, விசும்பு ஆடு அன்னம் - வானத்தில் அசையும் அன்னப் பறவை, பறை நிவந்தாங்கு - பறத்தலில் உயர்ந்ததைப்போல, பொலம்படை பொலிந்த - பொற்படைகளாற் பொலிவு பெற்ற, வெள் தேர் ஏறி - யானை மருப்பாற் செய்த வெள்ளிய தேரின்கண் ஏறி, கலங்கு கடல் துவலை - கலங்கிய கடலிலுள்ள அலையின் நீர்த் துளிகள், ஆழி நனைப்ப - அத்தேரின் சக்கரங்களை நனைக்க, இனி சென்றனன் - இப்பொழுது என்னைப் பிரிந்து சென்றான்; பசப்பு - பசலையானது, யாங்கு அறிந்தன்று - இதனை எப்படி அறிந்தது? என் தேம் கமழ் திருநுதல் ஊர்தரும் - எனது மணம் கமழ்கின்ற அழகிய நெற்றியிடத்து அது பரவாநிற்கின்றது.

(முடிபு.) தோழி, சேர்ப்பன் ஏறி நனைப்பச் சென்றனன்; பசப்பு யாங்கறிந்தன்று கொல்? நுதலில் ஊர்தரும்.

(பி - ம்.) * வொண்டே. † திவலை.

(கருத்து.) தலைவன் பிரிவினால் யான் பசலை நோயுற்றேன்.

(வி - ரை.) பறை - பறத்தல்; சிறகுமாம். படை - தட்டு; பக்கத்திலமைத்த பலகைகளுமாம்; "இழையணி நெடுந்தேர்" (புறநா. கஉ௩ : 4) என்பதற்கு, 'பொற்படைகளால் அணியப்பட்ட உயர்ந்த தேர்' என்றெழுதப்பட்ட உரையைக் காண்க;

"கோடகத் தேர்படு குதிரை தாவிய
ஆடகத் தட்டிடை" (கம்ப. கிளைகண்டு. 33)

என்பதனால் பொன்னாலாகிய தேர்த்தட்டுண்மையை உணரலாகும். வெண்டேர்: இந்நூல் கஅ௬ - ஆம் செய்யுளின் விசேடவுரையைப் பார்க்க.

இருபுறமும் உள்ள சக்கரங்கள் துவலையால் நனைய வெண்டேர் விரைந்து செல்லுதல், இரண்டு சிறகுகளும் மழைத்துளியால் நனைய அன்னம் விரைந்து போதலைப் போன்றது.

பொலம்படையென்பதற்குப் பொன்னாலாகிய சேணமென்று பொருள் கொண்டு அதனைக் குதிரைக்கு அடையாகக் கொள்ளலும் ஒன்று. அது சினைக்கும் முதலுக்கும் உள்ள ஒப்புமையால் வெண்டேரொடு முடிந்தது. "பொலம்படைப் பொலிந்த கொய்சுவற் புரவி" (மலைபடு. 574) என வருதல் காண்க.

விசும்பாடன்னத்தைக் குதிரைக்கு உவமை கூறுவதன் பொருத்தம், "விசும்புசெ லிவுளி" (பெரும்பாண். 492) என்பதனாலும் வலியுறும்.

தேம் - மணம்; இனிமையுமாம். தேங்கமழ் திருநுதலென்றது, அத்தகைய அழகிய நுதலின் இயல்பு இப்பொழுது அழிந்ததே!' எனக் கழிந்ததற்கு இரங்கியதாதலின் தற்புகழ்ச்சி யன்று. நுதல் இயற்கைமணமுடையது.

கொல் : ஐயம்.

தலைவன் பிரிந்தவுடன் பசலை பரந்ததென்றாள்; இந்நூல் ௩௯௯ - ஆம் செய்யுளால் இது தெளிவாக விளங்கும்.

ஊர்தரும் பசப்பு யாங்கறிந்தன்றுகொலென எச்சமாக்கி முடித்தலும் ஒன்று. 'அவர் பிரிவை யறிந்து யான் துன்புறுவதற்கு முன்பு இப்பசலை அதனை எங்ஙனம் அறிந்தது!' என வியப்புத் தோன்றக் கூறினாள்.

## மேற்கோளாட்சி

மூ. களவு அலராகாமல் யான் பிரிந்துழித் தலைவி கலங்குவளென் றஞ்சித் தலைவன் பிரியாது உறைதலின் பிரிவைக் கருதப்பெறாத தலைவி அவ்வாறன்றிப் பிரிந்துழிக் கலங்கியது (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கருவி மழை: குறுந். சஉ: 2, ஒப்பு.

2. பறைநிவத்தல்: "துனைபறை நிவக்கும் புள்ளினம்" (மலை படு. 55.)

3. பொலம்படைப் பொலிந்த குதிரை: புறநா. ககசு: 19, ௩ிக: 14; பு. வெ. 276.

2-3. குதிரையின் வேகத்திற்கு அன்னம்: மதுரைக். 385 - 7, அடிக்.

5. இனி: குறுந். அச: 2, ஒப்பு.

6. யாங்கறிந்தன்று: குறுந்: கசுo: 5.

7. நறுநுதல்: குறுந். உஉ: 5, ஒப்பு.

நுதல் பசத்தல்: குறுந். அஎ: 4, ஒப்பு.

5-7. தலைவன் பிரிவினுற் பசலை தோன்றல்: குறள், 1185-6.

(உ0ரு)

---

## தலைவன் கூற்று

[பாங்கன் தன்னை இடித்துரைத்தபோது, "நான் அறியாமை யால் காமநோயுற்றேன். இனிச் செய்யுமாறு யாது? நீவிர் அங் ஙனம் செய்யற்க" என்று தலைவன் கூறியது.]

உ0சு. அமிழ்தத் தன்ன வந்தீங் கிளவி
அன்ன வினியோள் குணனு மின்ன
இன்னு வருப்படர் செய்யு மாயின்
உடனுறை வரிதே காமம்
குறுக லோம்புமி னறிவுடை யீரே.

---

(பி - ம்.) * அமிர்தத். † னறிவுடை யோரே.

எ - து. கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது.

ஐயூர் முடவன்.

(ப - ரை.) *அறிவுடையீரே - அறிவையுடையவரே, அமிழ்தத்து அன்ன - அமிழ்தத்தைப்போன்ற, அம் தீம் கிளவி - அழகிய இனிய சொற்களையுடைய, அன்ன இனியோள் - மனத்தாலுணர்தல் மாத்திரையே பயன்ற அத்தகைய இனிமையையுடையோளது, குணனும் - குணமும், இன்ன - இத்தகைய, இன்னா அரு படர் செய்புமாயின் - இன்னாதனவாகிய துன்பங்களை உண்டாக்குமாயின், காமம் - காமமானது, உடன் உறைவு அரிது - ஒருங்கு வாழ்தற்கு அரிது; ஆதலின், குறுகல் ஓம்புமின் - அதனை அணுகுதலைப் பரிகரிமின்.*

(முடிபு.) *அறிவுடையீரே, இனியோள்குணனும் படர்செய்புமாயின் காமம் உடனுறைவரிது; குறுகல் ஓம்புமின்.*

(கருத்து.) *காமம் என்னால் தாங்கற்கரியது.*

(வி - ரை.) *கேட்டார் பிற செயல்களை மறந்து நிற்றலின் அமிழ்தத்தை உவமை கூறினர்; "அஞ்சொற்க ளமுதி னள்ளிக் கொண்டவள்"* (கம்ப. *மாரீசன்,* 70) *என்றார்* கம்பரும். *அந்தீங் கிளவி - அழகிய இனிய சொல்; அழகு பொருளால் அமைந்தது; இனிமை மென்மையாலமைந்தது. தான் நுகர்ந்த இனிமையைச் சொல்லால் உணர்த்தலாகாமையின் 'அன்ன இனியோள்' என்றான்* (சிற். 19, பேர்.) *இனிமை, ஐம்பொறிக்கும் இனிமை. குணனும்: உம்மை, உயர்வு சிறப்பு. இத்தகைய இனிமையையுடையாளது இனிய குணங்களும் காமத்தின் தொடர்பால் இன்னாமை செய்யின் அக்காமம் கோடற்கு உரியதன் றென்றான்.*

*'கிளவி அமிழ்தத்தன்ன; குணனும் அன்ன; இன்ன (கிளவியும் குணனும்) படர் செய்புமாயின் காமம் உடனுறைவரிது' எனக் கூட்டிப் பொருள்கொள்ளுதலும் பொருந்தும்.*

*அரும்படர் - பிறமருந்தால் தீர்த்தற்கரிய துன்பம்;*

*"பிணிக்கு மருந்து பிறம னணியிழை*
*தன்னோய்க்குத் தானே மருந்து"* (குறள், 1102.)

*அரிதே: ஏகாரம், தேற்றம். பாங்களைப் பன்மையாற் கூறினான்; பார்ப்பனப்பாங்களைப் பன்மையாற் கூறுவது மரபென்று தெரிகின்றது* (இறை. 3, உரை.)

'நான் அறிவின்மையால் இந்நோய் தலைக்கொண்டேன். இதனால் விளைந்த துன்பம் தீர்த்தற்கரிதாயிற்று. அறிவுடையீராகிய நீர் செல்லுதலை ஒழிமின்' என்றான். இதனால் தலைவன் தன் நிலைமையை ஒருவாறு புலப்படுத்தினானாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

3. இன்று அரும்படர்: நெடுநல். 167.

5. நறுக லோம்புமின்: குறுந். ௧௮௪: 2.

---

(௨௦௬)

## தலைவி கூற்று

[தலைவர் சொல்லாமற் பிரிந்து செல்வதைத் தோழிகூறிய பொழுது, "இங்ஙனம் சொல்லிய ஆர்வலர் பலர்; அவரைப்போல நீயும் சொன்னாய்; தலைவரைத் தடுத்தாயல்லை" எனத் தலைவி இரங்கிச் சொல்லியது.]

௨௦௭. செப்பினஞ் செலினே செலவரி தாகுமென்
றத்த வோமை யங்கவட் டிருந்த
இனந்தீர் பருந்தின் புலம்புகொ டெள்விளி
சுரஞ்செல் மாக்கட் குயவுத்துணை யாகும்
கல்வரை யயலது *தொல்வழங்கு சிறுநெறி
நல்லடி பொறிப்பத் தாஅய்ச்
சென்றெனக் கேட்டநம் மார்வலர் பலரே.

எ - து. செலவுக் குறிப்பறிந்து, அவர் †செல்வாரென்று தோழி சொல்லக் கிழத்தி உரைத்தது.

[செலவுக்குறிப்பு - ஆயுதங்களைத் துடைத்தல் முதலியன; கலி. ௭, நற். ௧௭௭.]

உறையன்.

(ப - ரை.) செப்பினம் செலின் - நம்முடைய செலவைத் தலைவியினிடத்துச் சொல்லிச் செல்வேமாயின், செலவு அரிது

(பி - ம்.) * தோல். † செல்லார், சொல்லார்.

ஆகும் - செல்லுதல் அரிதாகும், என்று - என்று கூறி, அத்தம் ஓமை - பாலைநிலத்திலுள்ள ஓமைமரத்தினது, அம் கவட்டு இருந்த - அழகிய கிளையின்கண் இருந்த, இனம் தீர் பருந்தின் - இனத்தினின்றும் பிரிந்து வந்த பருந்தினது, புலம்பு கொள் தெள் விளி - தனிமையைப் புலப்படுத்தலைக் கொண்ட தெளிந்த ஓசை, சுரம் செல் மாக்கட்கு - அருவழியிற் செல்லும் மனிதர்களுக்கு, உயவு துணை ஆகும் - உசாத்துணையாக அமைதற்கு இடமாகிய, கல் வரை அயலது - கற்களையுடைய மலையினது அயலதாகிய, தொல் வழங்கு சிறுநெறி - யாவரும் நடக்கும் பழையதாகிய சிறிய வழியில், நல் அடி பொறிப்ப - தம் நல்ல அடிகள் சுவடு செய்ய, தாஅய் - தாவி, சென்றெனெ - சென்றாரென்று, கேட்ட நம் ஆர்வலர் பலர் - கேட்ட நம்முடைய அன்பர் பலராவர்.

(முடிபு.) என்று சென்றெனக் கேட்ட ஆர்வலர் பலர்.

(கருத்து.) தலைவர் செலவை யான் முன்னரே அறிந்தேன்.

(வி - ரை.) அத்த வோமை - சிவந்த அடியையுடைய ஓமை யென்பதும் பொருந்தும்; "ஓமைச் செவ்வரை" (நற். உஎக : 7); "ஓமைப், பெரும்பொளிச் சேயரை நோக்கி" (அகநா. ரு ௩எ : 11-2); "அரக்கார்ந்த வோமை" (கைந்நிலை, 19.)

இனந்தீர் பருந்தாதலின் புலம்புகொள் விளியாயிற்று. பிற ஒலி யின்மையின் தெள்விளியாயிற்று. தொல்வழங்கென்ற பாடத்திற்கு யானைகள் வழங்குகின்றவெனப் பொருள்கொள்க.

நல்லடியென்றது அப்பாலை நிலத்தில் நடத்தற்குரியதன்றென் னும் நினைவிற்று. சென்றாரெனவென்பது சென்றென விகாரப்பட்டு நின்றது.

"என்பால் அன்புடையார் பலர் கேட்டு இதனை எனக்கு முன் னரே தெரிவித்தனர். நீ இப்பொழுது தெரிவித்தலால் ஆகும் பயன் யாது? எல்லோரையும் போல நீ கேட்டலை யன்றிச் செல வழுங்குவித்தாயல்லை" எனத் தோழியின் நொதுமற்றன்மையைச் சுட்டித் தலைவி இரங்கினாள்.

என்று சொல்லிச் சென்றாராக, அவர் அங்ஙனம் கூறியதைக் கேட்ட ஆர்வலர் பலரென்றலும் ஒன்று.

பழைய கருத்தில், செல்லாரென்பது பாடமாயின், "அவர் சென் றனரென அறிந்து கூறினவர் பலராக இருப்ப, நீ செல்லாரென்றது

என்னை?" எனவும், சொல்லாரென்பது பாடமாயின், "அவர் சொல்லாது அகன்றலை யாவரும் அறிந்தனர்; நீ அவரைச் செல்லாமல் தடுத்தனையல்லை" எனவும் பொருள்கொள்க.

ஆர்வலர் - ஆர்வமில்லாரைச் சுட்டிய குறிப்பு மொழியெனினும் பொருந்தும்.

ஏகாரங்கள் அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. சொல்லிப் பிரிதலரிதாதல்: "மனமகிழ்ந்து, தெருட்டிற் றெளியலர் செப்பும் வகையில்லை" (சிற். 270.)

2. அத்தவோமை: "நிழை நீடிய கானிடை யத்தம்" (நற். ௧௧௮ : 2.)

3. புலம்புகோள் தெள்விளி: நற். ௨௧௨ : 2, ௩0௫ : 7.

பருந்தின் தெள்விளி: "வளைவாய்ப் பருந்தின் வள்ளுகிர்ச் சேவல், கிளைதரு தெள்விளி" (அகநா. ௩௬௩ : 13 - 4.)

2-3. ஓமைக்கவட்டிற் பருந்து இருத்தல்: "பருந்திளைப் படூஉம் பாறுதலை யோமை", "கருங்கா லோமை யேறி வெண்டலைப், பருந்து பெடை பயிரும்" (அகநா. ௨௯ : 15, ௧௭௭ : 6-7.)

ஓமையிலிருந்து பருந்து விளித்தல்: "உலறுதலைப் பருந்தி னுளிவாய்ப் பேடை, அலறுதலை யோமை யங்கவட் டேறிப், புலம்புகொள விளிக்கு நிலங்காய் கானத்து" (ஐங். ௩௨௧ : 1-3.)

4. உயவுத்துணை: ஐங். ௪௭௭ : 3; அகநா. ௧0௩ : 12, ௨௧௮ : 22, ௩௩௮ : 11, ௩௪௩ : 11.

3-4. பருந்தின்விளி உயவுத்துணையாதல்: "பருந்திருந் துயா விளி பயிற்றும்" (அகநா. ௧௯ : 2-3.)

5. (பி - ம்.) தோல்வழங்கு சிறுநெறி: ஐங். ௩௧௪; அகநா. ௧௨௩ : 1-4, ௩௧௮ : 1.

வரையயலது சிறுநெறி: "பெருவரைச் சிறுநெறி" (நற். ௨௯௧ : 10.)

(௨0௭)

தலைவி கூற்று

[வரைவிடை வைத்துத் தலைவன் பொருள்வயிற் பிரிந்த காலத்து ஆற்றுளாகிய தலைமகளை நோக்கி, "நீ ஆற்றல் வேண்டும்" என்ற தோழிக்கு அவள், "நான் தலைவர் கருத்தை உணர்ந்தேன்; ஆயினும் நொதுமலர் வரையப்புகுவரேல் என் செய்வதென ஆற்றே ணுயினேன்" என்றது.]

உ௦அ. ஒன்றே னல்லே னொன்றுவென் குன்றத்துப்
பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை
குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்
நின்றுகொய மலரு நாடனொ
டொன்றேன் றோழி * யொன்ற னேனே.

எ - து. வரைவிடை ஆற்றல்வேண்டுமென்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கபிலர்.

(ப - ரை.) தோழி—, ஒன்றேன் அல்லேன் - யான் தலைவ னோடு பொருந்தாத இயல்பினை உடையேனல்லேன்; ஒன்றுவென் - பொருந்தும் இயல்பினேன்; ஆயினும், ஒன்றனேன் - நொதுமலர் வரைவொடு புகுவதாகியதொரு காரணத்தினால், குன்றத்து - மலையி னிடத்து, பொரு களிறு மிதித்த - ஒன்றோடொன்று பொருத களிறு களால் மிதிக்கப்பட்ட, நெரி தாள் வேங்கை - நெரிந்த அடியை யுடைய வேங்கைமரம், குறவர் மகளிர் - குறமகளிர், கூந்தற் பெய்ம் மார் - தம்முடைய கூந்தலின்கண்ணே அணிந்துகொள்ளும்பொருட்டு, நின்று கொய-ஏறவேண்டாமல் நின்றபடியே மலர்களைக் கொய்யும்படி, மலரும் - தாழ்ந்து மலர்தற்கிடமாகிய, நாடனொடு - நாட்டையுடைய தலைவனோடு, ஒன்றேன் - பொருந்தேன்.

(முடிபு.) தோழி, ஒன்றேனல்லேன்; ஒன்றுவென்; ஒன்ற னேனே ஒன்றேன்.

(கருத்து.) தலைவர் வரவு நீட்டிக்கலின் நொதுமலர் வரையப் புகுவரென்று யான் ஆற்றேனாயினேன்.

---

(பி - ம்.) * யொன்றி னேனே, யொன்றேனேனே, யென்றி சினே.

(வி - ரை.) "நின்னை வரைந்து கொள்ளற்பொருட்டன்றே அவர் பிரிந்தனர். அவர் தம் கருத்தோடு நீ ஒன்றாது ஆற்றாயாகின்ற தென்?" என்ற தோழிக்குக் கூறியது இது. ஒன்றுதல் - மனத்தால் பொருந்தி ஆற்றியிருத்தல்.

பொருத களிறு மிதித்தலால் வேங்கைமரம் சாய்ந்து மகளிர் ஏறாமே மலர் பறித்தற்கு எளிதாக மலர்ந்தது. மகளிர் வேங்கை மரத்தின்மேல் ஏறிப் பூப்பறித்தலுமுண்டென்பது,

"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை
மேக்கெழு பெருஞ்சினை யிருந்த தோகை
பூக்கொய் மகளிரிற் றோன்று நாடன்" (குறுந். உசு : 1-3)

என்பதனாற் பெறப்படும்.

பொருகளிற்றால் மிதிக்கப்பட்ட வேங்கைமரம் சிதைந்தொழியாது பின்னும் பறித்தற்கு எளியதாகித் தாழ்ந்து மலருமென்றது, நொதுமலர்வரைவினால் அச்சமுற்றேனாக, அதுவே காரணமாக விரைவில் மணந்துகொண்டு பின்னும் எளிதில் இன்பந்துய்த்தற்கு உரியானென்ற குறிப்பு உணர்த்தியது.

ஒன்றனேனே - தாம் கூறிய காலத்தே வாராமையாகியதொரு காரணத்தாலெனலும் ஆம்; 'பிரிந்து சென்றதற்கே புலந்து ஒன்றா இயல்பினரைப் போலாது, பிரிந்தும் உரிய காலத்தே வரின் ஒன்றும் இயல்பினளே யான்; அங்ஙனம் வாராமைக் காரணத்தால் அவ்வியல்பு நீங்கி ஒன்றேனாயினேன்' என்பது கருத்தாகக் கொள்க.

## மேற்கோளாட்சி

1-3. தலைவி உள்ளுறையுவமம் கூறுங்கால் அவளறியுங் கருப்பொருளானே கூறல்வேண்டும்; 'பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கைமரம் படப்பையில் உள்ளதாகலானும், தன்னால் பூக்கொய்யப் படுமாகலானும் அஃது அவளறி கிளவி எனப்பட்டது' (தொல். உவம. 26, பேர்.)

மு. இறைச்சிப்பொருள் பிறிதுமோர் பொருள்கொள்ளக்கிடந்தது; 'வரைவெதிர் கொள்ளாது தமர் மறுத்தவழித் தலைமகனோடு ஒன்றுமாறு என்னெனக் கவன்ற தோழிக்கு உடன்போதற் குறிப்பினளாய்த் தலைமகள் கூறியது; ஆதலின், இதனுள் பொருகளிறு என்றமையால், தலைமகள்தமர் தலைமகன்வரைவிற்கு உடன்படுவாரும் மறுப்பாருமாகி

மாறுபட்டனரென்பது தோற்றுகின்றது. பொருகளிறு மிதித்த வேங்கை யென்றதனால், பொருகின்ற இரண்டு களிற்றினும் மிதிப்பது ஒன்றாகலின் வரைவுடன் படாதார் தலைமகனை அவமதித்தவாறு காட்டிற்று. வேங்கை நின்று கொய்ய மலருமென்றதனான், முன்பு ஏறிப் பறித்தல் வேண்டுவது இப்பொழுது நின்று பறிக்கலாயிற்று என்னும் பொருள்பட்டது; இதனானே பண்டு நமக்கு அரியனான தலைமகன் தன்னை அவமதிக்கவும் நமக்கு எளியனாகி அருள் செய்கின்றானெனப் பொருள்படக் கிடந்தவாறு காண்க' (தொல். பொருள். 34, இளம்.); மிதியுண்டு வீழ்ந்த வேங்கை குறையுயிரோடு மலர்ந்தாற்போல யானும் உளேனாயினே னென்றமையின் மெய்யுவமப் போலியாயிற்று (ஷை. உவம. 25, பேர்.); உள்ளுறையுவமம் தெய்வம் ஒழிந்த கருப்பொருளை நிலமாகக் கொள்ளும்; 'இக் குறுந்தொகை, பிறிதொன்றன் பொருட்டுப் பொருகின்ற யானையால் மிதிப்புண்ட வேங்கை நசையற வோங்காது மலர் கொய்வார்க்கு எளிதாகி நின்று பூக்கும் நாடனென்றதனானே, தலைவன் நுகரும் காரணத்தானன்றி வந்து எதிர்ப்பட்டுப் புணர்ந்து நீங்குவான் எம்மை இறந்துபாடு செய்வியாது ஆற்றுவித்துப் போயினானெனவும், அதனானே நாமும் உயிர் தாங்கியிருந்து பலராலும் அலைப்புண்டு நின்றனம் வேங்கை மரம் போலெனவும் உள்ளத்தான் உவமங் கொள்ள வைத்தவாறு காண்க' (ஷை. அகத். 47, ந.); உள்ளுறையுவமம் வந்தது (கலி. ௩அ, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. களிறு மிதித்த வேங்கைமரம்: "மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை" (நற். ௩௯உ : 7); "புலிக்கேழ் வேங்கைப் பூஞ்சினை புலம்ப, முதல்பாய்ந் திட்ட முழுவலி யொருத்தல்" (அகநா. உஉஎ : 8-9.)

2-3. வேங்கை மலரை மகளிர் அணிந்து கொள்ளுதல்: "தலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை, மலைமா றிடூஉ மேமப் பூசல்" (மலைபடு. 305-6); "கருங்கால் வேங்கை நாளுறு புதப்பூப், பொன் செய் கம்மியன் கைவினை கடுப்பத், தகைவனப் புற்ற கண்ணழி கட்டழித், தொலிபல் கூந்த லணிபெறப் புனைஇ" (நற். ௩௧௩ : 1-4); "அகலறை மலர்ந்த வரும்புமுதிர் வேங்கை, ஒள்ளிலைத் தொடலை தைஇ", "பொன்னென, மலர்ந்த வேங்கை மலிதொட ரடைச்சிப், பொலிந்த வாயமொடு காண்டக வியலி", "கருங்கால் வேங்கைச் செம்பூம் பிணையல்...யாமணிந் துவக்கும்", "பொரியரை வேங்கைத், தண்கமழ் புதுமலர் நாறும், அஞ்சி லோதி", "வதுவை மகளிர் கூந்தல் கமழ்கொள, வங்கூ ழாட்டிய வங்குழை வேங்கை" (அகநா. ௧0௫ : 1-2, ௧அஅ : 8-10, ௩௪௫ : 8-9, ௩௬௫ : 13-5, ௩எ௮ : 2-3.)

2-4. வேங்கைப் பூவை மகளிர் கொய்தல்: குறுந். உ௪: 1-3; மதுரைக். 296-7; ஐங். * உ௧எ: 1-2, ௩௧௧: 1; அகநா. ௪அ: 6; இஉ: 2-4. (உ0அ)

---

தலைவன் கூற்று

[பொருள்வயிற் சென்ற தலைவன் அப்பொருளைப் பெற்று மீண்டு வந்து தோழியை நோக்கி, "நான் பிரிந்தவிடத்து வேறொன்றையும் நினையாமல் தலைவியின் கூட்டத்தையே நினைந்திருந்தேன்" என்று கூறும் வாயிலாகத் தனது அன்பைத் தலைவிக்குப் புலப்படுத்தியது.]

உ0௯. †அறந்தலைப் பட்ட நெல்லியம் பசுங்காய்
மறப்புலிக் குருளை கோளிடங் கறங்கும்
இறப்பருங் குன்ற மிறந்த யாமே
‡ குறுநடை பலவுள் ளலமே நெறிமுதற்
§ கடற்றிற் கலித்த ¶ முடச்சினை வெட்சித்
தளையவிழ் பல்போது கமழும்
மையிருங் கூந்தன் மடந்தை **நட்பே.

எ - து. பொருள்முற்றி மறுத்தரும் தலைமகன் தோழிக்கு உரைப்பானாய்க் கிழத்தியைத் தெருட்டியது.

[பொருள்முற்றி - பொருளீட்டும் முயற்சி நிறைவெய்தி. மறுத்தரும் - மீளும் (கலி. ௧௫: 15, அக: 34.)]

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) குறுநடை - குறுக அடியிட்டு நடக்கும் நடையையுடைய தோழி, அறம் தலைப்பட்ட - வழிப்போவாரது உயிரைத் தாங்கற்குரிய அறத்தைச் செய்யும், நெல்லி அம் பசு காய் - நெல்லிமரத்தினது அழகிய பசிய காய்கள், மறம் புலி குருளை - வலியையுடைய புலிக்குட்டிகள், கோள் இடம் - கொள்ளற்குரிய இடத்தில், கறங்கும் - உதிர்ந்து உருளுகின்ற, இறப்பு அரு குன்றம் - கடத்தற்கரிய மலைகளை, இறந்த யாம் - கடந்து சென்ற யாம், அங்ஙனம் சென்ற

---

* கபிலர் பாட்டு. (பி - ம்.) † சுரந்தலைப். ‡ குறுநடைப்பல் லுள்ளலமே. § கடத்திற், களரிற். ¶ முட்சினை. ** நட்பே.

விடாது, பல உள்ளலம் - பல பொருள்களை நினைந்தேமல்லேம்; நெறிமுதல் - வழியினிடத்தே, கடற்றில் கலித்த - காட்டினிடத்தில் தழைத்த, முடம் சினை வெட்சி - வளைந்த கிளைகளையுடைய வெட்சியினது, தளை அவிழ் - முறுக்கு அவிழ்ந்த, பல் போது கமழும் - பல பேரரும்புகள் மணக்கின்ற, மை இரு கூந்தல் - மையைப் போன்ற கரிய கூந்தலையுடைய, மடந்தை நட்பே - தலைவியினது நட்பையே நினைத்திருந்தேம்.

(முடிபு.) குறுநடை, யாம் பல உள்ளலம்; மடந்தை நட்பே உள்ளினேம்.

(கருத்து.) நான் எப்பொழுதும் தலைவியையே நினைத்திருந்தேன்.

(வி - ரை.) இஃது, "எம்மை நினைத்தும் அறிதிரோ?" என வினவிய தோழிக்கு உரைத்தபடி.

"குறும்பொறை மருங்கிற் கோட்டுமா தொகுதி
நெடுஞ்சேண் வந்த நீர்நசை வம்பலர்
செல்லுயிர் நிறுத்த சுவைக்காய் நெல்லி"

(அகநா. உ௭௧ : 5-7)

என்பவாதலின், அறந்தலைப்பட்ட நெல்லியம் பசுங்காயெனச் சிறப்பித்தான். தருமத்தின்பொருட்டு வளர்த்த நெல்லி மரத்தின் காயெனினும் ஒன்று. அம் : சாரியையுமாம்.

கறங்கும் - கீழே உதிர்ந்து ஒலிக்குமென்பதும் ஆம். பாலை நிலத்தில் நெல்லிக்காயுதிர்தல்,

"பளிங்கத் தன்ன பல்காய் நெல்லி
மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப
உதிர்வன படூஉங் கதிர்தெறு கவாஅன்"

(அகநா. ரு : 9-11)

என்பதனாலும் விளங்கும்.

யாமே : ஏ, அசைநிலை. பன்மை, பொருண்முற்றிய பெருமிதந் தோன்ற நின்றது.

'இறப்பருங்குன்றத்தை அரிதிற் கடந்த யாம் அங்ஙனம் கடத்தற்குக் காரணமான பொருண்முயற்சிக்குரிய பலவற்றையும் உள்ளலம்' என்று கூறினான்.

---

* பாலை பாடிய பெருங்கடுங்கோ பாட்டு.

வெட்சி, காட்டில் தழைத்து வளர்வது; "வெட்சிக் கானத்து" (புறநா. உ0உ : 1.) முட்சினை யென்ற பாடத்திற்கு, இதல் முள்ளைப்போன்ற அரும்பையுடையவெனப் பொருள் கொள்க; "இதன்முள் ளொப்பின முகைமுதிர் வெட்சி" (அகநா. கஙங : 14); சினை - அரும்பு. மகளிர் வெட்சிமலரைப் புனைதல் வழக்கம்;

"துணையோ ராய்ந்த விணையீ ரோதிச்
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடு" (முருகு. 20-21.)

மடந்தை: இங்கே பருவங் குறியாது தலைவியென்னுந் துணையாய் நின்றது. நட்பு - கூட்டம். ஏகாரம், பிரிநிலை. மையிருங் கூந்தலென்ற அடை அக்கூந்தற்பாயலிற்றுயிலும் நிலையையே நினைத்திருந்தேனென்ற கருத்தைப் புலப்படுத்தியது. நட்பே உள்ளினமென ஒருசொல் வருவித்து முடிக்க.

## ஒப்புமைப் பகுதி

1. நெல்லியம்பசுங்காய்: "நெல்லிப் பைங்காய்", "புன்காய் நெல்லிக்கோடை யுதிர்த்த குவிகட் பசுங்காய்", புல்லிலை நெல்லிப் புகரில் பசுங்காய்", "நெல்லிப் பைங்காய்" (அகநா. டுச : 15, ருகடு : 10-11, ருகரு : 6, ருகக : 14.)

7. மையிருங் கூந்தல்: குறுந். கககூ : 5, ஒப்பு.

(உ0கூ)

## தோழி கூற்று

[தலைவியைப் பிரிந்து சென்று மீண்டுவந்த தலைவன், "யான் பிரிந்த காலத்தில் தலைவி துயருறாமல் நன்கு ஆற்றுவித்திருந்தாய்" என்று தோழியைப் புகழ, "என் செயல் ஒன்றுமின்று; காக்கை கரைந்த நன்னிமித்தத்தால் அவளை ஆற்றுவித்தேன்" என்று அவள் கூறியது.]

உகO. திண்டேர் நள்ளி கானத் தண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் * விளைந்த வெண்ணெல் வெஞ்சோ
† றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த ‡ செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே.

(பி - ம்.) * விளைந்த. † ரொருகலத். ‡ செல்வற்கு.

எ - து. பிரிந்துவந்த தலைமகன், "நன்காற்றுவித்தாய்" என்றற்குத் தோழி உரைத்தது.

காக்கை பாடினியார் நச்செள்ளையார்.

(ப - ரை.) திண் தேர் நள்ளி - திண்ணிய தேரையுடைய நள்ளியென்னும் உபகாரியினது, கானத்து - காட்டிலுள்ள, அண்டர் - இடையர்களுக்குரிய, பல் ஆ பயந்த நெய்யின் - பல பசுக்கள் உண்டாக்கிய நெய்யோடு, தொண்டி - தொண்டியென்னும் ஊரிலுள்ள வயல்களில், முழுது உடன் விளைந்த - முற்றும் ஒருங்கே விளைந்த, வெள் நெல் வெ சோறு - வெண்ணெல்லரிசியால் ஆக்கிய வெம்மையையுடைய சோற்றை, எழு கலத்து ஏந்தினும் - ஏழு பாத்திரங்களில் ஏந்திக் கொடுத்தாலும், என் தோழி - என் தோழியாகிய தலைவியினுடைய, பெரு தோள் நெகிழ்த்த செல்லற்கு - பெரிய தோளை நெகிழச் செய்த துன்பத்தை நீக்கும் பொருட்டு, விருந்து வர - விருந்தினர் வரும்படி, கரைந்த காக்கையது பலி - கரைதலைச் செய்த காக்கைக்குரிய அப் பலியானது, சிறிது - சிற்றளவினதே யாகும்.

(முடிபு.) சோறு ஏந்தினும் கரைந்த காக்கையது பலி சிறிது.

(கருத்து.) காக்கை கரைதலாகிய நின்வரவுக்குரிய நிமித்தங் காட்டி, யான் தலைவியை ஆற்றுவித்தேன்.

(வி - ரை.) நள்ளி - எழு வள்ளல்களில் ஒருவனாகிய கண்டீரக் கோப்பெரு நள்ளி. கானம் - முல்லை நிலம். தொண்டி - ஈண்டு மேல் கடற்கரைக் கண்ணேயுள்ளதொரு துறைமுகப் பட்டினம்.

நெய்யிற் சோறு ஏந்தினுமென இயைக்க.

செந்நெல்லும் உண்மையின், வெண்ணெல்லென்றாள். வெம்மை, சோறட்ட அணிமையைக் குறித்தது.

பெருந்தோளென்றது நெகிழ்தற்குரியதன்றென்னும் கருத்தினது. செல்லற்கு விருந்தென்றது 'நோய்க்கு மருந்து' என்பதுபோல நின்றது. காக்கைக்கு இடும் உணவைப் பலியென்றல் மரபு. காக்கை கரைதல் புதியோர் வரவைக் குறிக்கும் நிமித்த மென்பர்;

"மறுவி றூவிச் சிறுகருங் காக்கை
அன்புடை மரபினின் கிளையோ டாரப்
பச்சூன் பெய்த பைந்நிண வல்சி

---

(பி - ம்.) * காக்கைபாடினி நச்செள்ளையார்.

பொலம்புனை கலத்திற் றருகுவென் மாதோ
வெஞ்சின விறல்வேற் காளையொ
டஞ்சி லோதியை வரக்கரைந் தீமே" (ஐங். ௩௯௧)

"பணங்களஞ் சாலும் பருவர வார்த்தவன் றில்லையன்ன
மணங்கொளஞ் சாயலு மன்னனு மின்னே வரக்கரைந்தால்
உணங்கலஞ் சாதுண்ண லாமொண் ணிணப்பலி யோக்குவன்மாக்
குணங்களஞ் சாற்பொலி யுந்நல சேட்டைக் குலக்கொடியே"
(சிற். 235.)

"நான் ஆற்றுவித்தற்பொருட்டுப் பெருமுயற்சி செய்தேனல்லேன். நின்வரவை முன்னரே யுணர்த்தும் நிமித்தமாகக் காக்கை கரைந்தது. அதுகாட்டி யான் ஆற்றுவித்தேன். ஆதலின் அக் காக்கையே பாராட்டுதற்குரியதாகும்" என்றாள்.

காக்கையை இங்ஙனம் பாடிய சிறப்பால் இச்செய்யுளைப் பாடியவர் காக்கைபாடினியாரென்னும் பெயரைப் பெற்றார்.

## மேற்கோளாட்சி

மு. குற்றமில்லாத தலைமகனைச் சுட்டிய தெய்வக்கடன் கொடுத்தற்கண் தோழிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 9, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

1. திண்டேர் : குறுந். ௧௨௮ : 2, விசேட.

2. தொண்டி : குறுந். ௧௨௮ : 2, ஒப்பு.

2-3. நெய்யுஞ் சோறும் : "நெய்யிடை நல்லதோர் சோறும்" (திவ். திருப்பல்லாண்டு, 8) ; "பாற்சோறு, மூடநெய் பெய்து முழங்கை வழிவார" (திருப்பாவை, 27.)

தொண்டி நெல் : குறுந். ௨௩௮ : 2-4.

4. ஏழுகூறுதல் மரபு : குறள், 1278 ; சீவக. 116.

5. தோள் நெகிழ்ந்த செல்லல்: குறுந். ௮௭ : 5, ஒப்பு.

6. காக்கையது பலி : "செஞ்சோற்ற பலிமாந்திய, கருங்காக்கை" (பொருந. 183-4) ; "பலியுண் காக்கை", "உகுபலி யருந்திய தொகுவிரற் காக்கை" (நற். ௨௮௧ : 1, ௩௪௩ : 5) (௨௧0)

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்தில், "சுரத்திடையே நம் துணையைப் பிரிந்த விலங்கும் பறவையும் கவல்வது கண்டு நாமும் அங்ஙனம் கவல்வோமென நினைந்து தலைவர் மீள்வரோ?" என ஐயுற்ற தலைவியைநோக்கி, "அவர் அத்தகைய அருள் உடையரல்லர். நம்மைப் பிரிந்த வன்மையையுடையார். ஆதலின் மீளார்" என்று தோழி கூறியது.]

உகக. அஞ்சி லோதி யாய்வளை நெகிழ
நேர்ந்துநம் மருளார் நீத்தோர்க் கஞ்சல்
எஞ்சினம் வாழி தோழி †யெஞ்சாத்
தீய்ந்த மராஅத் தோங்கல் வெஞ்சினை
வேனி லோரிணர் தேனோ டூதி
ஆராது பெயருந் தும்பி
நீரில் வைப்பிற் சுரனிறந் தோரே.

எ - து. 'இடைச்சுரத்துக் கவலுவன கண்டு, நம்மை ஆற்றாரென நினைந்து மீள்வர்கொல்?' எனக் கவன்ற கிழத்திக்குத் தோழி சொல்லியது.

காவன்முல்லைப் பூதனர்.

(ப - ரை.) தோழி—, எஞ்சா - குறைந்து, தீய்ந்த மராஅத்து - வேனிலால் வெம்பிய மராமரத்தினது, ஓங்கல் வெ சினை - ஓங்குதலையுடைய வெவ்விய கிளையின்கண், வேனில் ஓர் இணர் - வேனிற்காலத்து மலர்ந்த ஒற்றைப் பூங்கொத்தை, தேனோடு ஊதி - தேனென்னும் சாதி வண்டோடு ஊதி, ஆராது பெயரும் - அதன்கண் ஒன்று மின்மையின் உண்ணுமல் மீள்கின்ற, தும்பி - தும்பியென்னும் வண்டுகளையுடைய, நீர் இல் வைப்பின் - நீரில்லாத இடங்களையுடைய, சுரன் இறந்தோர் - பாலைநிலத்தைக் கடந்தோரும், அம் சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலையுடைய நினது, ஆய் வளை நெகிழ - அழகிய வளைகள் நெகிழும்படி, நேர்ந்து - நம் விருப்பத்திற்கு உடம்பட்டு, நம் அருளார் - நம்பால் அருள் செய்யாராகி, நீத்தோர்க்கு - நம்மைப் பிரிந்து சென்றோருமாகிய தலைவர்பொருட்டு, அஞ்சல் எஞ்சினம் - அஞ்சுதலை நீங்கினேம்.

(பி - ம்.) * நொந்து நமருளார். † யெஞ்சா, தீந்த.

(முடிபு.) தோழி, சுரன் இறந்தோராகிய நீத்தோர்க்கு அஞ்சல் எஞ்சினம்.

(கருத்து.) தலைவர் மீளார்.

(வி - ரை.) நெகிழும்படி நீத்தோர். 'அவர் இடைச் சுரத்தில் தம் துணையையிழந்து கவலுவனவற்றைக்கண்டு மீளும் இயல்புடையராயின், ஈண்டு நாம் துன்புறும்படிசெய்து பிரியார். நம்மோடு உடம்பட்டு ஈண்டிருந்து அருள்செய்வார்' என்பது படக் கூறினாள்.

நோதலாவது செலவழுங்கல். நோந்தென்னுமெச்சம் அருளாரென்பதன் பகுதியோடு முடிந்தது. எஞ்சுதல் - குறைதல். மராமரம் வேனிலிற் பூப்பது. தேன் - ஒரு சாதி வண்டு (சீவக. 892, ந.) ஆராது - தெவிட்டாதெனினும் பொருந்தும்.

"அவர் இரங்கும்நெஞ்சுடையராயின் வளை நெகிழும்படி நமக்கு உளதாகும் துன்பத்தையும், நீரில் வைப்பிற் சுரம் போகுங்கால் தமக்கு உளதாகும் துன்பத்தையும் எண்ணிப் பிரியார். அவர் பிரிந்தமையின் இடைச்சுரத்தே இரங்கி மீளா வலியநெஞ்சினராவர்" என்று தோழி கூறினாள்.

இடைச்சுரத்திலிருந்து வினைமுடியாமல் மீளுதல் அறனன்றாதலின் தலைவி கவன்றாள்.

## ஒப்புமைப் பகுதி

1. அஞ்சிலோதி: குறுந். ௨௧௪: 3, ௨௮௦: 2; குறிஞ்சிப். 180; நற். ௧௦௫: 10, ௩௨௪: 8, ௩௫௫: 8, ௩௭௦: 7; ஐங். ௪௧: 1, ௩௧௧: 6, ௪௪௮: 5; அகநா. ௨௧௧: 3; சீவக. 2576.

2. வளை நெகிழ்தல்: குறுந். ௧௧: 1, ஒப்பு.

4-5. மராம் வேனிலில் மலர்தல்: குறுந். ௨௨: 3-4, ஒப்பு; ஐங். ௩௪௮.

7. நீரில் வைப்பிற் சுரம்: "நீரி லத்தத் தாரிடை", "நீரிலாராற்று நிவப்பன" (அகநா. ௧௭: 12, ௪௫: 4.) (௨௧௧)

## தோழி கூற்று

[தலைவனது குறையைத் தலைவி நயக்கும்படி, "தலைவனது தேர் வந்து வறிதே பெயர்வதாயிற்று; அவன் விருப்பம் கழிந்தது. அது கருதி வருந்துகின்றேன்" என்று தோழி கூறியது.]

உகஉ. கொண்க னூர்ந்த * கொடிஞ்சி நெடுந்தேர்
தெண்கட லடைகரைத் † தெளிமணி யொலிப்பக்
காண வந்து நாணப் பெயரும்
அளிதோ தானே காமம்
விளிவது மன்ற நோகோ யானே.

எ - து. குறைநேர்ந்த தோழி குறைநயப்பக் கூறியது.

[குறை நேர்ந்த - தலைவனது குறையை நிறைவேற்றுதற்கு உடம்பட்ட. குறை நயப்ப - தலைவனது குறையைத் தீர்த்தலைத் தலைவி நயக்கும்வண்ணம்.]

நெய்தற் கார்க்கியன்.

(ப - ரை.) கொண்கன் ஊர்ந்த - தலைவன் ஏறிச்சென்ற, கொடிஞ்சி நெடு தேர் - கொடிஞ்சியையுடைய உயர்ந்த தேரானது, தெள் கடல் அடை கரை - தெள்ளிய நீரையுடைய கடலை யடைந்த கரைக்கண், தெளி மணி ஒலிப்ப - தெளிந்த ஓசையையுடைய மணிகள் ஒலிக்கும்படி, காண வந்து நாண - நாம் காணும்படி வந்து பின்பு நாம் நாணும்படி, பெயரும் - மீண்டு செல்லா நிற்கும்; காமம்—, அளிது - இரங்கத் தக்கது; மன்ற விளிவது - நிச்சயமாக அழியக் கடவதாகும்; யான் நோகு - இவை கருதி யான் வருந்துவேன்.

(முடிபு.) கொண்கன் ஊர்ந்த தேர் வந்து பெயரும்; காமம் அளிது; அது விளிவது; யான் நோகு.

(கருத்து.) தலைவன் குறைபெறாமல் வருந்திச் சென்றான்.

(வி - ரை.) கொண்கன் - நெய்தனிலத் தலைவன் (குறுந். உ௲௦ : 1, உகக : 4); தமிழ் நெறி விளக்கம், 8 - ஆம் சூத்திரம் பார்க்க.

கொடிஞ்சி - தாமரைமொட்டின் வடிவமாகச் செய்து தேர்முன் நடப்படுவது; தேரூரும் தலைவர் இதனைக் கையாற் பற்றிக்கொள்வது

(பி - ம்.) * கொடிஞ்சி. † தெளிர்மணி.

வழக்கம்; "மணித்தேர்க் கொடிஞ்சி கையாற் பற்றி" (மணி. ௪ : 48.) தம்பால் நயந்துவந்தோரது குறையைப் போக்குதல் அறநெறியாளர் கடனாகலின், அதனைச் செய்யாமையால் வறிதே தலைவன் மீண்டது நாணத்தைத் தருவதாயிற்று; "இன்னா திரக்கப் படுத லிரந்தவர், இன்முகங் காணு மளவு" (குறள், 224); "இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்கால், தன்மெய் துறப்பான் மலை" (கலி. ௪௩ : 26 - 7) என்பவற்றை ஓர்க.

'நாம் காண வந்தானாயினும் நீ கண்டு குறைநயந்தாயில்லை' என்பது குறிப்பு. காமம் - தலைவனது காமம். தலைவன்நிலைக்கு இரங்கி, 'யான் வருந்துவேன்' என்றாள், தலைவிக்கும் இரக்கம் உண்டாகிக் குறை நயத்தற்பொருட்டு.

ஓகாரங்கள், ஏகாரங்கள், தான் : அசைநிலைகள்.

கருப்பொருளால் இப்பாட்டு நெய்தற்குரியதாயிற்று; இங்ஙனமே நெய்தற்றிணைக்குரிய பலசெய்யுட்களைப் பாடிய காரணத்தால் இச்செய்யுளை இயற்றிய நல்லிசைப்புலவர், நெய்தற் கார்க்கியனென்னும் சிறப்புப் பெற்றார்போலும்.

## ஒப்புமைப் பகுதி

1. கொடிஞ்சி நெடுந்தேர் : குறுந். ௩௪௫ : 1; பொருந. 163; பெரும்பாண். 416 ; மதுரைக். 752.

1-3. தேர்மணியொலிப்பத் தலைவன் வருதல் : குறுந். ௩௩௬ : 3-4.

4. அளிதோதானே : குறுந். ௧௪௬ : 1, ௩௧௫ : 7.

5. நோகோ யானே : குறுந். ௧௩௧ : 6, ஒப்பு. (௨௧௨)

---

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்து, "நம்பாலுள்ள விருப்பத்தினால் தலைவர் தாம் சென்ற வினையை நிறைவேற்றாமல் வந்துவிடுவாரோ?" என்று ஐயுற்ற தலைவியை நோக்கி, "அவர் விலங்கினமும் தமதுகடமையை ஆற்றுங்காட்சி கண்டு தாமும் தம்கடனாற்றத்துணிவாராதலின் மீளார்" என்று தோழி கூறியது.]

உகங. நசைநன் குடையர் தோழி * ஞெரேரெனக்
கவைத்தலை முதுகலை காலி னொற்றிப்
பசிப்பிணிக் கிறைஞ்சிய பரூஉப்பெருந் † ததரல்
ஒழியி னுண்டு ‡ வழுவி னெஞ்சிற்
றெறித்துநடை மரபிற்றன் மறிக்குநிழ லாகி
நின்றுவெயில் கழிக்கு மென்பநம்
இன்றுயின் முனிநர் சென்ற வாறே.

எ - து. 'நம்பெருமான், நம்பொருட்டு இடைநின்று மீள்வர்' எனக் கவன்ற தலைமகட்குத் தோழி உரைத்தது.

கச்சிப்பேட்டுச் சாஞ்சிக் கோற்றன்.

(ப - ரை.) தோழி—, நசை நன்கு உடையர் - தலைவர் நின்பால் விருப்பம் மிக உடையவர்; நம் இன் துயில் முனிநர் - நம்மோடு செய்யும் இனியதுயிலை வெறுத்துப் பிரிந்து சென்ற அவர், சென்ற ஆறு - போனவழியில், ஞெரேரென - விரைவாக, கவை தலை முது கலை - கிளைத்த கொம்பையுடைய தலையைப்பெற்ற முதிய ஆண்மான், காலின் ஒற்றி - காலால் உதைத்து, பசி பிணிக்கு இறைஞ்சிய - பசிநோயைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு வளைத்த, பரூஉ பெரு ததரல் - பருத்த பெரிய மரப்பட்டை, ஒழியின் உண்டு - தனது குட்டி உண்டபின் எஞ்சினால் தான் அதை உண்டு, வழு இல் நெஞ்சின் - குற்றமில்லாத நெஞ்சினோடு, தெறித்து நடை மரபின் - துள்ளி நடத்தலாகிய இயல்பினையுடைய, தன் மறிக்கு நிழலாகி - தனது குட்டிக்கு நிழலாகி, நின்று வெயில் கழிக்கும் - நின்று வெயிலை நீக்கும், என்ப - என்று கூறுவர்.

(முடிபு.) தோழி, நசை நன்குடையர், முனிநர், அவர் சென்ற ஆறு கலை வெயில் கழிக்கும் என்ப.

(கருத்து.) தலைவர் தம் கடமையை உணர்ந்து, மீளாது சென்று பொருள் தேடி வருவர்.

(வி - ரை.) ஞெரேரென - விரைவாக (பொருந. 141, ந.) கவை - கவைத்த கொம்பு; ஆகுபெயர். கவைத்தலை - கவைபோன்ற கொம்புகளையுடைய தலையெனலும் ஆம்; "தொடுதோற் கானவன்

(பி - ம்.) * நெரேரென, நெரோவென. † தாதால். ‡ வழியினெஞ்சிற், வழியனெஞ்சிற்.

கவைபொறுத் தன்ன, இருதிரி மருப்பி னண்ண லிரலை" (அகநா. ௩௪: 3-4.) ஒற்றுதல் - உதைத்து விழ்த்துதல் (புறநா. உ௩௭: 16, உரை.) இறைஞ்சிய - இறைஞ்சுவித்த "ஒடித்துண்டெஞ்சிய" (குறுந். உ௩௨: 4) என்பதில் உள்ள 'எஞ்சிய' என்பது போல: ததரல் - சிதைந்த பட்டை (கலி. ௬௧: 13, ந.) தெறித்தல் - துள்ளுதல் (அகநா. ச: 4, உரை.)

தன் பசியைத் தீர்த்துக் கொள்ளுதலில் நாட்டமின்றித் தன் மறியின் பசியை முதலில் நீக்கியும், தன்மேற்படும் வெயில்வெம்மையைக் கருதாமல் மறிக்கு நிழலாகியும் கடம்பேணுதலின் வழுவினெஞ்சுடையதாயிற்று; வழு - அறத்தினீங்கிய செயல்; தன் குட்டி பசித்திருப்பத் தான் உண்டலும் அது வெயிலால் வாடத் தான் ஓடுதலும் வழுவாகும். வெயில் கழிக்கும் - வெயிற் போதைக் கழிக்கு மென்பதும் பொருந்தும்.

"தலைவர் நசை நன்குடையரேயாயினும், தன்னலத்தையும் பேணாது கடம் பேணிய கலையைக்காண்பார்; தாமும் தம் நசையையே கருதாது இல்லறம் புரியுங் கடமையை நினைந்து அதற்குரிய பொருள் தேடச் சென்று அது முற்றியே மீள்வர்" என்பது தோழியின் கருத்து.

தான் பாலைநில நிகழ்ச்சிகளை யறியாளாதலின் அறிந்தார் வாய்க் கேட்டுள்ளேனென்பாள் 'என்ப' என்றாள்.

## மேற்கோளாட்சி

2. கலையென்னும் ஆண்மைப் பெயர் புல்வாய்க்கு வந்தது (தொல். மரபு. 46, பேர்.)

5. மறியென்னும் இளமைப்பெயர் புல்வாய்க்கு வந்தது (தொல். மரபு. 12, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. தலைவனது நசை: குறுந். ௩௭: 1, ஒப்பு.

2. கவைத்தலை முதுகலை: "கவைமருப் பெழிற்கலை" (அகநா. ௩௯: 8.)

7. இன்றுயில் முனிநர்: குறுந். ௩௧: 4. (உ௬௩)

## தோழி கூற்று

[தலைவியின் வேறுபாடு கண்டு தாய் முதலியோர் வெறியாட்டெடுத்த விடத்து, "இவளுக்குத் தழையுடையுதவி அன்பு செய்தான் ஒருவன் இருப்ப, அதனை யறியாது இது முருகனால் வந்ததென மயங்கி வெறியெடுப்பதனாற் பயனில்லை" என்று தோழி கூறி உண்மையை வெளிப்படுத்தியது.]

உகச. மரங்கொல் கானவன் புனந்துளர்ந்து வித்திய
பிறங்குகுர லிறடி காக்கும் புறந்தாழ்
அஞ்சி லோதி யசையியற் கொடிச்சி
திருந்திழை யல்குற்குப் பெருந்தழை யுதவிச்
செயலை முழுமுத லொழிய வயல
தரலை மாலை * சூட்டி
ஏமுற் றன்றிவ் வழுங்க லூரே.

எ - து. தோழி, வெறியாட்டு எடுத்துக்கொண்ட விடத்து அறத்தோடு நின்றது.

கூடலூர்கிழார்.

(ப - ரை.) மரம் கொல் கானவன் - மரங்களை வெட்டிய குறவன், புனம் துளர்ந்து வித்திய - கொல்லையை உழுது விதைத்த, பிறங்கு குரல் இறடி - விளங்குகின்ற கதிரையுடைய தினையை, காக்கும் - காவல் செய்யும், புறம் தாழ் அம் சில் ஓதி - புறத்தின்கண்ணே தாழ்ந்த அழகிய சிலவாகிய கூந்தலையும், அசை இயல் - மெலிந்த சாயலையும் உடைய, கொடிச்சி - தலைவியினது, திருந்து இழை - செவ்விதாக அமைத்த ஆபரணத்தை யணிந்த, அல்குற்கு—, பெரு தழை உதவி - பெரிய தழையாகிய உடையை அளித்து, செயலை முழுமுதல் ஒழிய - அசோகினது பெருத்த அடிமரம் ஒழிந்து நிற்ப, அயலது - அதனோடு தொடர்பின்றி அயலதாய் நின்ற, அரலை மாலை சூட்டி - அலரி மாலையை முருகனுக்குச் சூட்டி வெறியெடுத்து, இ அழுங்கல் ஊர் - இந்த ஆரவாரத்தையுடைய ஊரானது, ஏம் உற்றன்று - மயக்கமுற்றது.

---

(பி - ம்.) * சூடி.

(முடிபு.) செயலை ஒழிய அரலை மாலை சூட்டி இவ்வூர் ஏமுற்றன்று.

(கருத்து.) தலைவிக்குத் தழையுடை யளித்த அன்பனொருவன் உளன்.

(வி - ரை.) துளர்தல் - களைக்கொட்டால் கொத்துதலெனலும் ஆம் (மலைபடு. 122, ந.) பிறங்கு குரலிறடி காக்குமென்றாள், கதிர் தோன்றிய பின்னரே காவல் இன்றியமையாததாதலின். அசைதல் - இளைத்தல்; மெலிதல் (பெரும்பாண். 331, ந.); 'அசையியல் - நுடங்கிய இயல்பு' என்பர் பரிமேலழகர் (குறள், 1098, உரை.) அசையியல் - அசைந்து நடக்கும் இயல்பெனலுமாம்; "அசைநடைப் பேதை" (குறுந். கஅஉ: 6) என்பதன் உரையையும் ஒப்புமைப் பகுதியையும் பார்க்க.

இழையென்றது இங்கே மேகலையை. பெருந்தழையென்றான் அதனை யணியும் உறுப்புப் பெரிதாதல் பற்றி; "அகலல்குலாள் கண்ணென மூவழிப் பெருகி" (கலி. கoஅ: 2.)

தலைவன் அசோகந்தழையைத் தந்தான்.

அயலது - அயன்மையையுடையது; இது சூட்டுவதனாற் பயனில்லை யென்ற குறிப்பை யுணர்த்தியது; அருகிலுள்ளதெனப் பொருள்கொண்டு அரலைமலர் கொய்வார் அதனருகே நின்ற செயலையின் நிலை கண்டு அது தழையின்றி நிற்பதன் காரணத்தை யாய்ந்திலரென்னுங் குறிப்புரைத்தலும் பொருந்தும்.

வெறியாடுவார் அரலைமாலையை முருகக்கடவுளுக்குச் சூட்டுதல் வழக்கம் (முருகு. 236); அரலை யென்பது இப்போது அரளியென வழங்கும்.

ஏமுறுதல் - மயக்குறுதல்; "ஏமுற் றவரினும்" (குறள், 873, பரிமேல்.); ஏமம் ஏமென நின்றது.

ஊரென்றது தாய் முதலியோரை.

இதனால், 'தலைவனொருவன் தலைவி தினைப்புனங்காக்குங்காலத்தில் ஆண்டுப் போந்து அசோகந் தழையுதவி அவளோடு அளவளாவிச் சென்றான்' என்பதைத் தோழி உணர்த்தினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. கானவன் மரத்தை வெட்டியவிடத்து விதையை வித்துதல்: குறுந். கக௭ : 1-2, ஒப்பு.

2. இறடி : மலைபடு. 169 ; பெருங். ௧. 49 : 104.

3. அஞ்சிலோதி : குறுந். உகக : 1, ஒப்பு.

3. மூ. ஐங். உகக : 3, பி-ம்.

2-3. புறந்தாழ் ஓதி : "புறந்தாழ் பிருளிய பிறங்குகுர லைம்பால்" (அகநா. கஉ௬ : 20.)

4. அல்குற்குத் தழை : குறுந். கஉ௫ : 3, ஒப்பு.

5. முழமுதல் : குறுந். உ௫௫ : 2, ௬௬க : 4.

4-5. தலைவன் அசோகந்தழை உதவல் : "கையது செயலையந் தழையே" (தமிழ் நெறி. மேற்.)

6. அரலை : நற். கஉக : 4. (உகசு)

---

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்திருந்த காலத்தில் வருந்திய தலைவியை நோக்கி, "உன்னுடைய துன்பம் நீங்கும்; தலைவர் இன்று வந்து விடுவார்" என்று தோழி உறுதி கூறியது.]

உகரு. படரும் *பைபயப் பெயருஞ் சுடரும்
என்றூழ் மாமலை மறையு மின்றவர்
வருவர்கொல் வாழி தோழி நீரில்
வறுங்கயந் துழைஇய விலங்குமருப் பியானை
குறும்பொறை மருங்கி னமர்துணை தழீஇக்
† கொடுவரி யிரும்புலி காக்கும்
நெடுவரை மருங்கிற் சுரனிறந் தோரே.

எ - து. பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.

---

(பி - ம்.) * பயப்பயப். † கொடுவரை.

[வற்புறுத்தியது - உறுதி கூறியது.]

மதுரை அளக்கர் * ஞாழார் மகனார் மள்ளனார்.

(ப - ரை.) தோழி—, படரும் பைபய பெயரும் - துன்பமும் மெல்ல மெல்ல நீங்கும்; சுடரும் என்றூழ் - ஒளி விடுகின்ற சூரியன், மா மலை மறையும் - பெரிய அத்தகிரியின்கண் மறையா நின்றது; ஆதலின், நீர் இல் வறு கயம் துழைஇய - நீரில்லாத வறிய குளத்தைத் துழாவிய, இலங்கு மருப்பு யானை - விளங்கிய கொம்புகளையுடைய ஆண்யானைகள், குறு பொறை மருங்கின் - குறிய குண்டுக் கற்களுக்கு அருகில், அமர் துணை தழீஇ - தாம் விரும்புகின்ற பிடிகளைத் தழுவி, கொடு வரி இருபுலி - வளைந்த கோடுகளையுடைய பெரிய புலிதாக்குதலினின்றும், காக்கும் - பாதுகாக்கின்ற, நெடுவரை மருங்கின் - உயர்ந்த மலைப்பக்கத்திலுள்ள, சுரன் இறந்தோர் - பாலைநிலத்தைக் கடந்து சென்றோராகிய, அவர் - அத்தலைவர், இன்று வருவர்— ; வாழி - நீ வாழ்வாயாக!

(முடிபு.) தோழி, படரும் பெயரும்; என்றூழ் மறையும்; சுரனிறந்தோராகிய அவர் இன்று வருவர்; வாழி!

(கருத்து.) தலைவர் இன்று வருவர்.

(வி - ரை.) படர் - தலைவனை நினைந்து வருந்தும் துயர். வருவர் கொல்: கொல், அசைநிலை. இலங்கு மருப்பியானை யென்றாள், புலியொடு பொரும் கருவியுடையன வென்பதைப் புலப்படுத்த. குறும் பொறை மருங்கில் மறைந்து ஆண்யானை பெண்யானைகளைத் தழுவிநின்றன. குறிஞ்சி திரிந்த பாலையாதலின் நெடுவரைமருங்கிற் சுரனென்றாள்.

## ஒப்புமைப் பகுதி

1. பைபய: நற். ௪௧: 3, ௧௧௯: 10, ௩௭௮: 3; ஐங். ௮௩: 1, ௧௧௩: 5.

5. குறும்பொறை: குறுந். ௧௩௪: 3, ௩௩௩: 4.

அமர்துணை தழீஇ: குறுந். ௨௩௭: 1.

4-6. யானை பிடியைப் புலியினின்றும் காத்தல்: மலைபடு. 307-9. யானை பிடியைக் காத்தல்: அகநா. ௧௬௮: 9-10, ௧௭௯: 4-6.

7. சுரனிறந்தோர்: குறுந். ௨௧௧: 7, ௨௬௦: 8, ௩௧௪: 6. (௨௧௫)

---

(பி - ம்.) * ஞாழலார்.

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற கார்ப்பருவம் வந்ததாகத் தலைவி ஆற்றாளெனக் கவலையுற்ற தோழியை நோக்கி, "அவர் பொருள் தேடச் சென்றார். நான் அவரை நினைந்து வருந்துகின்றேன். கார்ப்பருவமும் வந்துவிட்டது; இனி என் உயிர் நில்லாது போலும்!" என்று தலைவி கூறியது.]

உகசு. அவரே, கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே
யானே, தோடா ரெல்வளை நெகிழ வேங்கிப்
பாடமை சேக்கையிற் † படர்கூர்ந் திசினே
அன்ன ளளிய ளென்னாது மாமழை
இன்னும் பெய்ய ‡ முழங்கி
மின்னுந் தோழியென் னின்னுயிர் குறித்தே.

எ - து. பருவவரவின்கண் ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கச்சிப்பேட்டுக் காஞ்சிக் கொற்றன்.

(ப - ரை.) தோழி—, அவர் - அத்தலைவர், கேடு இல் விழு பொருள் - கேடில்லாத உயர்ந்த செல்வத்தை, தருமார் - கொணரும் பொருட்டு, பசு இலை வாடா வள்ளி காடு இறந்தோர் - பச்சையிலைகளையுடைய வாடாத வள்ளிக்கொடி படர்ந்த காட்டைக் கடந்து சென்றார்; யான்—, தோடு ஆர் எல் வளை நெகிழ - தொகுதியார்ந்த விளக்கத்தையுடைய வளைகள் நெகிழும்படி, ஏங்கி - கவலையுற்று, பாடு அமை சேக்கையில் - படுத்தல் அமைந்த படுக்கையின்கண் வீழ்ந்து, படர் கூர்ந்திசின் - துன்பம் மிக்கேன்; மா மழை - கரிய மேகம், அன்னள் - அத்தகைய துன்பத்தையுடையாள், அளியள் - இரங்கத் தக்காள், என்னாது - என்று எண்ணாமல், இன்னும் பெய்ய முழங்கி - இன்னும் மழையைப் பெய்யும்பொருட்டு முழக்கம் செய்து, என் இன்னுயிர் குறித்து - எனது இனிய உயிரைக் கொள்ளுதலைக் குறித்து, மின்னும் - மின்னு நின்றது.

---

(பி - ம்.) * அவரேஎஎ. † படர்சார்ச். ‡ முழங்கு.

(முடிபு.) தோழி, அவர் காடிறந்தோர்; யான் படர் கூர்ந்திசின்; மழை என் உயிர் குறித்து மின்னும்.

(கருத்து.) கார்காலம் வந்தது கண்டு யான் துன்புறுவேனாயினேன்.

(வி - ரை.) அவர்: நெஞ்சறி சுட்டு. கேடில் விழுப் பொருள் - தன்னையுடையார் கெடுதலன்றித் தானே கெடுதலறியாத சீரிய பொருள்; "வீத லறியா விழுப்பொருள்" (கலி. அகூ: 21) என்றவிடத்து நச்சினார்க்கினியர் இங்ஙனம் பொருள் எழுதினர். "கேடில் விழுச் செல்வங் கல்வி" (குறள், 400) என்று கூறுவதே தக்கதாதலின் கேடுடைய செல்வத்தை இங்ஙனம் கூறியது குறிப்பு மொழியெனலும் பொருந்தும்.

வள்ளியங்காடு: அம், சாரியை. படர் - நினைந்து வருந்தும் துன்பம். அன்னள் - மிக்க வருத்தத்தை யுடையவள். உயிர் குறித்து உயிரைக் கொள்ளுதல் குறித்து (குறுந். கஅஅ: 4, ககூஎ: 5.)

## மேற்கோளாட்சி

2. சொல்லின் ஈற்றிலும் அசைநிலை யேகாரம் வந்தது (தொல். இடை. 9, ந.); ஈற்றசை செய்யுளிடையும் வந்தது (இ. வி. 278.)

1-2. அளவடிக்கண் ஆசிரியப்பாவிற் சீர் கூனாய் வந்தது. (தொல். செய். 47, இளம், 49, பேர், ந.); நான்கு இயற்சீரும் வந்தன (ஷை. ஷை. 13, பேர், ந.); வருக்க வெதுகை வந்தது (ஷை. ஷை. 94, பேர்.); செய்யுளிடைக்கண் வரும் ஈற்றசை ஏகாரம் இரண்டு மாத்திரை பெற்றுப் பாவென்னும் உறுப்பை விளக்கி நின்றது (ஷை. இடை. 38, ந.) வினையிடத்து ரகர ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று (இ. வி. 326.)

ரு. ஆசிரியத்துள் அடிமுதற்கண் கூன் வந்தது (வீர. யாப்புப். 13; யா. வி. 94; யா. கா. ஒழிபு. 8; இ. வி. 751.)

## ஒப்புமைப் பகுதி

2. வள்ளியங் காடு: முல்லை. 101.

1-2. பொருள்தரும் பொருட்டுத் தலைவர் சென்றார்: குறுந். உகூச: 6, ருருக: 8, ருகூ0: 8, ருகூகூ: 2.

3. வளை நெகிழ்தல்: குறுந். கக: 1, ஒப்பு.

4. பாடமை சேக்கை: "படையமை சேக்கை" (அகநா. உஅகூ: 12.)

(உககூ)

## தோழி கூற்று

[" 'பகற்குறியும் இரவுக்குறியும் இப்பொழுது பொருந்தா; என் செய்வேம்!' என்றதற்குத் தலைவன் உடன்போக்கை யெண்ணி வெய்துயிர்த்தான்; அது நன்றேயென நான் கூறினேன்" எனத் தோழி தலைமகளுக்குக் கூறி உடன்போக்கை நயக்கச் செய்தது.]

உகள. தினைகிளி கடிகெனிற் பகலு மொல்லும்
இரவுநீ வருதலி னூறு மஞ்சுவல்
யாங்குச்செய் வாமெம் மிடும்பை நோய்க்கென
ஆங்கியான் கூறிய வனைத்திற்குப் பிறிதுசெத்
தோங்குமலை நாட னுயிர்த்தோன் மன்ற
ஐதே காமம் யானே
கழிமுதுக் குறைமையும் பழியுமென் றிசினே.

எ - து. உடன்போக்கு நயப்பத் தோழி தலைமகட்குக் கூறியது.

† தங்கால் முடக்கோல்லனார்.

(ப - ரை.) தினை கிளி கடிகெனின் - தினையின்கண் படியும் கிளிகளை ஓட்டுவீர்களாகவென்று கூறி எம்தாய் எம்மைப் போதர விடின், பகல் ஒல்லும் - பகற்காலம் நின்னோடு அளவளாவுதற்குப் பொருந்தும், அங்ஙனம் இன்மையின், இரவு நீ வருதலின் - இராக் காலத்து நீ வருதலினால், ஊறு அஞ்சுவல் - வழியின்கண் நேரும் துன்பங்களுக்கு அஞ்சுவேன், எம் இடும்பை நோய்க்கு - துன்பத்தைத் தரும் எமது காமநோயை நீக்குதற்கு, யாங்கு செய்வாம் - எவ்வாறு பரிகாரம் செய்வேம், என ஆங்கு யான் கூறிய அனைத்திற்கு - என்று அவ்வாறு யான் சொன்ன அதற்கு, ஓங்கு மலைநாடன் - உயர்ந்த மலைநாட்டையுடைய தலைவன், பிறிது செத்து - வேறு ஒன்றை நினைத்து, உயிர்த்தோன் - அந்நினைவினால் வெய்துயிர்த்தான்; காமம் ஐது - காமநோய் நுண்ணியது; யான் - அவனது குறிப்பை உணர்ந்த யான், கழி முதுக்குறைமையும் - நீ நினைத்தவாறு செய்தல் மிக்க அறிவுடைமையும், பழியும் - பழிக்குக் காரணமும் ஆம், என்றிசின் - என்றேன்.

(பி - ம்.) * ஐதேய்கம்ம, ஐதேகம்ம, ஐதெமக்கம்ம. † தங்கான் முடக்கோவலனார்.

(முடிபு.) என யான் கூறிய அனைத்திற்கு நாடன் உயிர்த்தோன்; காமம் ஐது; யான் முதுக்குறைமையும் பழியும் என்றிசின்.

(கருத்து.) தலைவன் நின்னை உடனழைத்துச் செல்ல விரும்புகின்றான்.

(வி - ரை.) உம்மை இரண்டும் அசைநிலைகள். எம்நோயென்றாள் காமநோயால் தலைவி துயருறவும் அதுகண்டு தான் துயருறவும் காரணமாதலின். அனைத்திற்கு - அவ்வளவிற்கெனலும் ஆம் (குறள், 1129, உரை.) ஐது - மெல்லிதெனலும் ஆம்; "மலரினு மெல்லிது காமம்" (குறள், 1289.)

"'இப்பொழுது தினைகாவலை ஒழிந்தேமாதலின் பகற்குறி வாயாது; இரவுக் குறியோ ஆற்றாறஞ்சும் நிலையினது; ஆதலின் அதனையும் விரும்பேம். இந்நிலையில் யாது செய்வேம்!' எனக் கவன்றேன். அதற்குரிய பரிகாரமொன்றை நினைந்த தலைவன் அதனை வாய்விட்டுக் கூற அஞ்சிப் பெருமூச்சு விட்டான். காமம் எவ்வளவு நுண்ணியது! யான் அவன் குறிப்பை உணர்ந்தேன். அவன் நினைந்ததே தக்க விரகாகத் தோற்றியது. 'நீ நினைந்தது அறிவுடைமையே யாகும்; ஆயினும் ஊரினர் பழி கூறுதற்கு இடமாம்' என்றேன்" என்று தோழி கூறினாள். இதனால் தலைவன் உடன்போக்கு நயக்கின்றானென்பதையும், அதனையன்றி வேறு பரிகாரம் இல்லையென்பதையும், அங்ஙனம் செய்தலே அறிவுடைமைக்கு ஏற்றதென்பதையும், பழிக்கு அஞ்சி அறிவுடைய செயலை விலக்குதல் தகாதென்பதையும் புலப்படுத்தித் தலைவியை உடம்படச்செய்தாள்.

## மேற்கோளாட்சி

6. ஐயென்னும் உரிச்சொல் வியப்பென்னும் குறிப்பில் வந்தது (தொல். உரி. 88, இளம், 89, சே, 87, ந.)

## ஒப்புமைப் பகுதி

3. யாங்குச் செய்வாம்: குறுந். ௨௬அ : 3, ௩அ0 : 5 ; நற். ௫௧ : 1, ௨௫௧ : 1 ; அகநா. ௨௫௨ : 9.

6. ஐதே காமம் : குறுந். ௬0௧ : 6 ; நற். ௧௬௩ : 1.

(பி - ம்.) ஐதேகம்ம : நற். ௫௨ : 11, ௨௬0 : 1. (௨௧எ)

தலைவி கூற்று

[பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழியை நோக்கி, "தலைவர் நம் உயிர்க்கு உயிர்போன்றவர்; அவரைப் பிரிந்து கணப்போதும் பொருந்தும் வன்மையிலேம்; இத்தகைய நம்மை அவர் மறந்து ஆண்டேயிருப்பாராயின் அவர் பொருட்டுக் கடவுளைப் பராவுதலும் நிமித்தம் பார்த்தலும் என்ன பயனைத் தரும்?" என்று தலைவி கூறியது.]

உகஅ. விடர்முகை யடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் * பூணுங் கைந்நூல் யாவாம்
புள்ளு மோராம் விரிச்சியு நில்லாம்
உள்ளலு முள்ளா மன்றே தோழி
உயிர்க்குயி ரன்ன ராகலிற் றம்மின்
றிமைப்புவரை யமையா நம்வயின்
மறந்தாண் டமைதல் † வல்லியோர் மாட்டே.

எ - து. பிரிவிடை ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கோற்றன்.

(ப - ரை.) தோழி—, உயிர்க்கு உயிர் அன்னர் ஆகலின் - நம் உயிருக்கு உயிரைப் போன்றவராதலின், தம் இன்று - தம்மை யின்றி, இமைப்புவரை - இமைப்பொழுதளவேனும், அமையா - பிரிந்திருத்தலைப் பொருந்தாத, நம்வயின் - நம்மை, மறந்து ஆண்டு அமைதல் வல்லியோர் மாட்டு - மறந்துவிட்டுத் தாம் சென்ற அவ் விடத்தே தங்குதலில் வல்ல தலைவர்திறத்தில், விடர் முகை அடுக்கத்து - பிளப்பையும் குகைகளையுமுடைய மலைப்பக்கத்திலுள்ள, விறல்கெழு சூலிக்கு - வெற்றி பொருந்திய துர்க்கைக்கு, கடனும் பூணும் - பலிக்கடன் கழித்தலைச் செய்யோம்; கை நூல் யாவாம் - கையிற் காப்புநூலைக் கட்டோம்; புள்ளும் ஓராம் - நிமித்தத்தையும் பாரோம்; விரிச்சியும் நில்லாம் - நற்சொல்லைக் கேட்டற்குச் சென்று நில்லோம்; உள்ளலும் உள்ளாம் - நினைத்தலையும் செய்யோம்.

(பி - ம்.) * பூணுது. † வலியோர்.

(முடிபு.) தோழி, ஆண்டு அமைதல் வல்லியோர் மாட்டு, கடனும் பூணும்; யாவாம்; ஓராம்; நில்லாம்; உள்ளாம்.

(கருத்து.) நம் அன்புநிலை தெரிந்து விரைந்துவருதல் தலைவர் கடனாம்.

(வி - ரை.) விறல் - மிடுக்குமாம். சூலத்தையுடைமையின் கொற்றவையைச் சூலியென்றாள். கடன் - பராய்க்கடன். பிரிந்த தலைவர் மீண்டு வந்து சேர்ந்து, பின் பிரியாது உறைய வேண்டுமென்று கொற்றவையை வழிபடுதலை இங்கே தலைவி குறித்தாள். முருகக் கடவுளையும் இங்ஙனம் வழிபடும் மரபு, "கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை, எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே" (பரி. ௧௪ : 23-4) என்பதனாலும், 'பிரிந்த கேளிர் வந்து புணர்ந்து பின் நீங்காமைப் பொருட்டு மகளிர் யாழை யெழுவி நின்னைப் பாடுகின்ற பாட்டை விரும்பினோய்' (பரிமேல்.) என்னும் அதன் உரையாலும் அறியப்படுகின்றது.

தலைவர் மேற்கொண்ட வினை நன்கு முடிய வேண்டுமென்று கடம்பூணுதலும் உண்டு;

"செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்
ஐயம ரடுகென வருச்சிப் போரும்" (பரிபாடல், ௮ : 107-8.)

தலைவரைப் பிரிந்த மகளிர் அவர் மேற்கொண்ட வினை நன்கு முடிந்து விரைவில் வந்து சேரவேண்டுமென்று கருதி நோன் பிருத்தல் வழக்கம். அந்நோன்பு நோற்குங்காற் கையிற் காப்பு நாணணிவர்;

"பொலந்தொடி தின்ற மயிர்வார் முன்கை
வலம்புரி வளையொடு கடிகைநூல் யாத்து" (நெடுநல். 141-2.)

புள் ஓர்த்தல் - நிமித்தம் பார்த்தல் (மலைபடு. 448, ந.); தலைவர் வருதற்குரிய நன்னிமித்தங்களைப் பார்த்தல். விரிச்சி - நற்சொல்; தலைவர் வரவைக் குறிப்பால் தெரிவிக்கும் நற்சொல். பிரிந்த தலைவரது வருகையை விரிச்சிபார்த்து நின்றறியும் மரபை,

"நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பவிழ் அலரி தூஉய்க்கை தொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுய ரலமர னோக்கி யாய்மகள்
நடுங்குசுவ லசைத்த கையள் கைய

கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
இன்னே வருகுவர் தாய ரென்போள்
நன்னர் நன்மொழி கேட்டன மதனால்
நல்ல நல்லோர் வாய்ப்புட் டெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருத றலைவர் வாய்வது நீநின்
பருவர லெவ்வங் களைமா யோயென" (9-21)

என்னும் முல்லைப் பாட்டுப் பகுதியால் அறியலாகும்.

'ஒருகணப் பொழுதேனும் அவரைப் பிரிந்து அமையேமாகிய நம்மைப் பிரிந்து, தாம் சென்ற இடத்தே நம்மை மறந்து இருக்கும் மனவலியையுடையர் தலைவர். அவர் நம் உயிருக்கு உயிர் போன்றவ ராதலின், நம் நிலையை உணர்ந்து விரைவில் வரும் கடப்பாடுடையர். அங்ஙனம் அவர் செய்யாராயின் நாம் கடவுளை வழிபட்டுப் பயன் என்?' என்று தலைவி கூறினாள்.

அன்று, ஏ: அசை நிலைகள். நம்வயின்: உருபு மயக்கம்.

## ஒப்புமைப் பகுதி

1. விடர் முகை: குறுந். உகக: 2, கூசரு: 4; நற். கஙசு: 9, கஙஅ: 5, உசுக: 8, கூஉஉ: 4, கூகூஉ: 5; ஐங். கூகூஙி: 2.

விடர்முகையடுக்கம்: அகநா. சஎ: 6; புறநா. கூஎச: 12.

2. கடன் பூணல்: "நிலையுயர் கடவுட்குக் கடம்பூண்டு" (கலி. சசு: 16.)

கைந்நூல் யாத்தல்: "செந்நூல் யாத்து" (முருகு. 231); "காப்பு நூல் யாத்து" (தொல். புறத். 5, ந. மேற்.)

3. விரிச்சி நிற்றல்: "திருந்திழை மகளிர் விரிச்சி நிற்ப" (நற். சഠ: 4); "நென்னீ ரெறிந்து விரிச்சி யோர்க்கும்" (புறநா. உஅഠ: 6.)

4. உள்ளலும் உள்ளாம்: குறுந். கூஎ: 1, ஒப்பு.

5-6. தலைவரையின்றித் தலைவி யமையாமை: "தம்மின் றமையா நந்நயந் தருளி" (நற். க: 7); "தம்மின்றி, யாமுயிர் வாழு மதுகை யிலேமாயின்" (கலி. உச: 13-4); "தம்மல தில்லா நம்மிவ ணொழிய" (அகநா. கூகக: 8.)

7. வல்லியோர்: குறுந். உசுசு: 4. (உகஅ)

## தலைவி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தில் இருப்பத் தலைவி தோழிக்குக் கூறுவாளாய்த் தன் துயரின்மிகுதி கூறி, "தலைவர் நம் துயர் நீக்க இது செவ்வி" என்று உணர்த்தியது.]

உகக. * பயப்பென் மேனி யதுவே நயப்பவர்
நாரி னெஞ்சத் தாரிடை யதுவே
செறிவுஞ் சேணிகந் தன்றே யறிவே
ஆங்கட் செல்க மெழுகென வீங்கே
வல்லா கூறி யிருக்கு † முள்ளிலைத்
தடவுநிலைத் தாழைச் ‡ சேர்ப்பர்க்
கிடமற் றோழியெந் ¶ நீரிரோ வெனினே,

எ - து. சிறைப்புறம்.

வெள்ளூர்கிழார்மகனார் வெண்பூதியார்.

(ப - ரை.) தோழி—, பயப்பு என் மேனியது - பசலையானது எனது மேனியின்கண்ணது; நயப்பு அவர் நார் இல் நெஞ்சத்து அரு இடையது - காதல் அவரது அன்பற்ற நெஞ்சமாகிய செல்லுதற்கரிய இடத்தின்கண்ணது; செறிவும் - எனது அடக்கமும், சேண் இகந்தன்று - நெடுந்தூரத்தில் நீங்கியது; அறிவு - எனது அறிவு, ஆங்கண் செல்கம் எழுகென - தலைவர் உள்ள இடத்திற்கே செல்வேம்; அதன்பொருட்டு எழுவாயாக வென்று, வல்லா கூறி ஈங்கு இருக்கும் - நம்மால் மாட்டாதவற்றைக் கூறி இங்கே தங்கியிருக்கும்; எ நீரிரோ எனின் - எந்தத்தன்மையிலுள்ளீரோ வென்று பரிவு கூர்ந்து வினவிக் குறைதீர்ப்பாராயின், தடவு நிலை தாழை சேர்ப்பர்க்கு - பருத்த அடியையுடைய தாழையையுடைய கடற்கரைத் தலைவருக்கு, இடம் - இது தக்க செவ்வியாகும்.

(முடிபு.) தோழி, பயப்பு என் மேனியது; நயப்பு ஆரிடையது; செறிவும் இகந்தன்று; அறிவு இருக்கும்; எந்நீரிரோ எனின், சேர்ப்பர்க்கு இடம்.

(கருத்து.) தலைவர் வரைவதற்கு ஏற்ற சமயம் இது.

(பி - ம்.) * பசப்பென். † மள்ளிலைத். ‡ சேர்ப்பற்கு. ¶ நீரோ.

(வி - ரை.) பகற்குறிக்கண் நிகழும் இடையீட்டால் வருந்திய தலைவி தலைவன் வரைந்து கோடலைவிரும்பிக் கூறியது இது. இதன்கண் தன் நிலையைப் புலப்படுத்தி, இது நீக்குதற்குரிய செவ்வி இது வென்று தலைவன் உணரும்படி கூறினாள், அவன் அதனை உணர்ந்து விரைவில் வரைந்து கொள்வானென்பது கருதி.

நயப்பு - விருப்பம்; இங்கே தலைவன் மாட்டுள்ள அன்பு. நயப்பு, தலைவன் நெஞ்சளவிலே நிற்றலல்லது எம் மாட்டுத் தொடர்ந்தில தெனலும் ஒன்று. செறிவு - அடக்கம்; அறிவு - நன்மைபயப்பன வும் தீமைபயப்பனவும் அறிவிப்பது; இவ்விரண்டும் பெண்பாலார்க் குரிய சிறப்பியல்புகளைச் சார்ந்தன;

"செறிவு நிறைவுஞ் செம்மையுஞ் செப்பும்
அறிவு மருமையும் பெண்பா லான." (தொல். பொருள். 15.)

தலைவன் உள்ளவிடத்தே செல்வேமெனத் தலைவி கூறுதல் மரபு;

"காமக் கிழவ னுள்வழிப் படினும்
தாவி னன்மொழி கிழவி கிளப்பினும்" (தொல். களவு. 22)

என்பதன் உரையைப் பார்க்க.

இடம் - செவ்வி; "இடனறிந் தூடி" (நாலடி. 384.) மன்: ஆக் கப்பொருளில் வந்தது. எந்நீரிரோ வெனின் - எந் நிலையிலுள்ளீரோ வென்று வினவப்புகின்; என்றது அங்ஙனம் வினவிக் குறைதீர்க்க எண்ணின் என்றவாறு.

## ஒப்புமைப் பகுதி

1. பயப்பும் நயப்பும்: அகநா. ௩௪௪: 12 - 3; குறள், 1181, 1189 - 90.

5. வல்லா கூறல்: தொல். செய். 113.

6. தடவுநிலை: குறுந். ௬௬: 1. (௨௧௯)

---

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச் சென்ற கார்காலம் வரவும் அவன் வாராமை யால், "தாம் வரவேண்டிய இக் காலத்தும் வந்திலர்; இனி என் செய்வேன்!" என்று தோழிக்குத் தலைவி கூறியது.]

௨௨௦. பழமழைக் கலித்த புதுப்புன வரகின்
இரலை மேய்ந்த குறைத்தலைப் பாவை
இருவிசேர் மருங்கிற் பூத்த முல்லை
வெருகுசிரித் தன்ன † பசுவீ மென்பிணிக்
குறுமுகை யவிழ்ந்த நறுமலர்ப் புறவின்
வண்டுசூழ் மாலையும் வாரார்
கண்டிசிற் றோழி பொருட்பிரிந் தோரே.

எ - து. பருவவரவின்கட் கிழத்தி தோழிக்கு உரைத்தது.

ஒக்கூர் மாசாத்தி.

(ப - ரை.) *தோழி—, பொருள் பிரிந்தோர் - பொருள் ஈட்டி வரும்பொருட்டு நம்மை இங்குவைத்துப் பிரிந்த தலைவர், பழ மழை கலித்த - பழைய மழையினால் தழைத்த, புது புனம் வரகின் - புனத்திலுள்ள புதிய வரகினது, இரலை மேய்ந்த குறை தலை பாவை இருவி - ஆண்மான் மேய்ந்தமையால் குறைதலையுடைய நுனியையுடைய கதிர் அரிந்த தாள், சேர் மருங்கின் - சேர்ந்த பக்கத்தில், பூத்த முல்லை - மலர்ந்த முல்லைக்கொடியினது, வெருகு சிரித்தன்ன - காட்டுப்பூனை சிரித்தாற்போன்ற தோற்றத்தையுடைய, பசு வீ மெல் பிணி குறு முகை - செவ்விப் பூவின் மெல்லிய பொதிதலையுடைய சிறிய அரும்புகள், அவிழ்ந்த - மலர்ந்த, நறு மலர் புறவின் - நறிய மலர்களையுடைய முல்லைநிலத்தில், வண்டு சூழ் மாலையும் வாரார் - வண்டுகள் அம்மலரை ஊதும்பொருட்டுச் சுற்றுகின்ற மாலைக் காலத்திலும் வாராராயினர்; கண்டிசின் - இதனைக் கருதுவாயாக.*

(முடிபு.) *தோழி, பிரிந்தோர் மாலையும் வாரார்; கண்டிசின்.*

(கருத்து.) *தலைவர் தாம் கூறிச்சென்ற பருவம் வரவும் வந்திலர்.*

(வி - ரை.) *பழமழை யென்றது வரகு விதைத்த காலத்திற் பெய்த மழையை. புதுமை கதிரின்மேற்று. பாவை - மானால் உண்ணப்படும் இலையையுடைய வரகின்தாள்; இங்ஙனமே அறுகின் தண்டையும் கூறுதல் மரபென்று தெரிகிறது;*

> *"பதவின் பாவை முனைஇ மதவுநடை*
> *அண்ண லிரலை யமர்பிணை தழீஇ",*

(பி - ம்.) * *அருவிசேர்.* † *பருவீ.*

"பழங்கன்று கறிக்கும் பயம்பம லறுகைத்
தழங்குகுரல் வானின் றலைப்பெயற் கின்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவை"
(அகநா. உ௯: 7 - 8, க௩௯: 11 - 3.)

இருவி - கதிர்கொய்த தட்டை (சிறு. 144, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. மழையாற் கலித்த வரகு: "வரகிணர் சிறப்ப, மாமலை புலம்பக் கார்கலித் தலைப்ப" (ஐங். ௪௯௯: 1 - 2.)

1 - 2. வரகை இரலை மேய்தல்: "வானம் வாய்த்த வயங்குகதிர் வரகிற், றிரிமருப் பிரலையொடு மடமா னுகள" (முல்லைப். 98 - 9); "ஈரிலை வரகின், கவைக்கதிர் கறித்த காமர் மடப்பிணை, அரலை யங்காட் டிரலையொடு வதியும்" (நற். கஉக: 2 - 4.)

4. பசுவீ: குறுந். ௬உ: 1, க௮௬: 1.

4 - 5. பிணியவிழ்ந்த பூ: குறுந். ௬௯௯: 4 - 5.

3 - 5. முல்லையரும்பிற்கு வெருகின்பல்: (குறுந். உ௪0: 3); "பிள்ளை வெருகின் முள்ளெயிறு புரையப், பாசிலை முல்லை முகைக்கும்" (புறநா. ககள: 8 - 9); "வெருகு வேட்பச் சிரிப்பனபோன் முகைத்த முல்லை" (சீவக. 1651.)

முல்லை கார்காலத்தில் மலர்தல்: குறுந். கஉ௯: 3 - 5, ஒப்பு.

7. கண்டிசின்: குறுந். உ௪0: 5, ௬௫௧: 1.

கண்டிசிற் றோழி: குறுந். ககஉ: 5. (உஉ0)

---

## தலைவி கூற்று

[தலைவன் குறிச்சென்ற பருவம் வந்ததுகண்டு கவன்ற தலைவியை, "நீ ஆற்றியிருத்தல் வேண்டும்" என வற்புறுத்திய தோழியை நோக்கி, "முல்லை மலர்ந்தது; கார்காலம் வந்துவிட்டது; அவர் வந்திலர்; யான் எங்ஙனம் ஆற்றியிருப்பேன்!" என்று தலைவி கூறியது.]

உஉக. அவரோ வாரார் முல்லையும் பூத்தன
பறியுடைக் கையர் மறியினத் தொழியப்

பாலொடு வந்து கூழொடு பெயரும்
யாடுடை யிடைமகன் * சென்னிச்
சூடிய வெல்லாஞ் சிறுபசு முகையே.

எ - து. பிரிவிடைப் பருவவரவின்கண் வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

உறையூர் முதுகோற்றன்.

(ப - ரை.) *தோழி, முல்லையும் பூத்தன - முல்லைகளும் மலர்ந்தன; பறியுடை கையர் - பறியோலையை யுடைய கையினை யுடையார், மறி இனத்து ஒழிய - குட்டிகளையுடைய ஆட்டின் திரளோடு சென்று தங்க, பாலொடு வந்து கூழொடு பெயரும் - பாலைக் கொணர்ந்துவந்து பாற்சோற்றைப் பெற்று மீண்டு செல்கின்ற, ஆடுடை இடை மகன் - ஆடுகளை யுடைய இடையன், சென்னி சூடிய எல்லாம் - தன் தலையில் அணிந்து கொண்டன யாவும், சிறு பசு முகையே - சிறிய செவ்வியையுடைய அம் முல்லையின் அரும்புகளே யாகும்; அவர் வாரார் - அத்தலைவர் இன்னும் வாராராயினர்.*

(முடிபு.) *முல்லையும் பூத்தன; இடைமகன் சூடியவெல்லாம் முகையே; அவர் வாரார்.*

(கருத்து.) *கார்ப்பருவம் வரவும் தலைவர் வந்திலர்.*

(வி - ரை.) *அவரோ: ஓகாரம், அசைநிலை; இரங்கற்குறிப்புமாம். முல்லையும்: உம்மை, சிறப்பு. முல்லை பூத்தல் கார்காலத்திற்கு அடையாளம். பறி - இடையர்கள் மழைக்காகத் தலையிற் கவிழ்த்துக் கொள்ளும் ஒரு வகைக் கருவி; இது பனையோலையால் செய்யப்படுவது; இதிற் படுத்தலும் உண்டு.*

*மாலைக்காலத்தில் ஆட்டை மேய்ப்பவர்கள் மேய்ச்சல் நிலத்திற் றங்கப் பாலை வீட்டிற்குக் கொணர்ந்துகொடுத்து அவர்களுக்குப் பாற்சோற்றை இடையன் கொண்டு சென்றான். பாலை விற்கும்பொருட்டு வந்த இடையன் ஊரில் அதனை விற்றுவிட்டு அதற்கு விலையாக உணவுக்குரிய தானியத்தைப் பெற்றுச் சென்றானெனலுமொன்று. இடையர் பாலைவிற்றல் வழக்கம்; "பாலொடை யிடையன்" (நற். கசஉ: 4.) அவன் செல்லும் வழியிற் பூத்த முல்லைப்பூக்களைப் பறித்துத் தன் தலையிற் சூடினான்.*

---

(பி - ம்.) * *சென்னி சூடிய.*

முகையே : ஏகாரம், பிரிநிலை.

## மேற்கோளாட்சி

மு. இருத்தலென்னும் உரிப்பொருள் வந்தது; 'இது பருவங்கண்டு ஆற்றாது கூறியது. இது முல்லை சான்ற கற்பாயிற்று; அவன் கூறிய பருவம் வருந்துணையும் ஆற்றியிருத்தலின்' (தொல். அகத். 14, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அவரோ வாரார்: ஐங். ௬௪௪ - ௫௦.

முல்லை கார்காலத்தில் மலர்தல்: குறுந். ௧௨௬ : 3-5, ஒப்பு.

2. பறி : "பறிப்புறத் திட்ட...இடையன்" (நற். ௧௪௨ : 4); "மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற விடையன்" (அகநா. ௬௪ : 4); "பறியோலை மேலொடு கீழா விடையர், பிறியோலை போர்த்து விளியாக் கதிப்ப" (திணைமாலை. 113); "பறியோலைச் சயனத்தர்" (திவ். பெரியாழ்வார், ௧. 1 : 5.)

3. சூழ் : பெரும்பாண். 175.

4. ஆடுடை இடைமகன் : நற். ௨௬௬ : 3.

4-5. இடையன் முல்லைப்பூ அணிதல் : குறுந். ௬௯௪ : 7.

---

(௨௨௧)

## தலைவன் கூற்று

[தலைவியும் தோழியும் நீராடி ஒருங்கிருந்தவிடத்து அத் தோழியின்பால் தலைவிக்குளதாய ஒற்றுமையை யறிந்து, "இவளே தலைவியை நாம் பெறுதற்குரிய வாயில்; இனி இவள்வாயிலாக நாம் இரந்து குறைபெறுதும்" என்று தலைவன் நினைந்தது.]

௨௨௨. தலைப்புணைக் கொளினே தலைப்புணைக் கொள்ளும்
கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்
புணைகை விட்டுப் புனலோ டொழுகின் [ளும்
ஆண்டும் வருகுவள் போலு மாண்ட

மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச்
செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட்
டுளிதலைத் தலைஇய தளிரன் னோளே.

எ - து. பெட்ட வாயில் பெற்று இரவு வலியுறுத்தல்.

சிறைக்குடி யாந்தையார்.

(ப - ரை.) மாண்ட - மாட்சிமைப்பட்ட, மாரி பித்திகத்து - மழைக்காலத்தில் மலரும் பிச்சியினது, நீர் வார் கொழு முகை - நீர் ஒழுகும் வளவிய அரும்பினது, செ வெரிந் உறழும் - சிவந்த புறத்தை யொத்த, கொழு கடை மழை கண் - கொழுவிய கடையையும் குளிர்ச்சியையும் உடைய கண்களையும், துளி தலை தலைஇய - மழைத் துளி தன்னிடத்தே பெய்யப்பெற்ற, தளிர் அன்னோள் - தளிரைப் போன்ற மென்மையையும் உடைய தலைவி, தலை புணை கொளின் தலை புணை கொள்ளும் - தெப்பத்தின் தலைப்பை இத்தோழி கைக்கொண்டால் தானும் அதன் தலைப்பைக் கைக்கொள்வாள்; கடை புணை கொளின் கடை புணை கொள்ளும் - இவள் தெப்பத்தின் கடைப்பகுதியைப் பிடித்துக் கொள்ளின் தலைவியும் அதன் கடைப்பகுதியைக் கொள்வாள்; புணை கைவிட்டு - தெப்பத்தைக் கைசோரவிட்டு, புனலோடு ஒழுகின் - நீரோடு இவள் சென்றால், ஆண்டும் வருகுவள் போலும் - அங்கும் தலைவி வருவாள் போலும்.

(முடிபு.) தளிரன்னோள் தலைப்புணைக் கொளின் தலைப்புணைக் கொள்ளும்; கடைப்புணைக் கொளின் கடைப்புணைக் கொள்ளும்; ஒழுகின் வருகுவள்போலும்.

(கருத்து.) இத்தோழி தலைவியோடு மனமொத்த நிலையினள்.

(வி - ரை.) தலைவன் தன் நெஞ்சை நோக்கிக் கூறியது இது. நீராடியபோது கண்டவனாதலின் அக்காலத்து நிகழ்ச்சியையே கூறினான். தலைப்புணை, கடைப்புணை: புணைத்தலை, புணைக்கடை என்பவை மாறிநின்றன. புணையென்றது, வாழைமரத்துண்டு, மிதக்கும் தன்மையையுடைய மரத்துண்டுகள் போன்றவற்றை;

"நறவீ நாகமு மகிலு மாரமும்
துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய"

(சிறுபாண். 116 - 7);

வேழக்கோலாற் செய்த தெப்பமெனினும் ஆம்.

தோழி வலிபின்மையிற் கைசோர்ந்து புனலோடு செல்லின் தலைவி தன்பால் வலியுளதாகவும் தோழி வழியொழுகுவாளென்பத ஞல் அவ்விருவருக்கும் உள்ள ஒற்றுமை விளக்கப்பட்டது;

" ஒன்றித் தோன்றுந் தோழி " (அகத்திணை. 39.)

என்பது தொல்காப்பியம்.

மாரிக்காலத்து அரும்பியதாதலின் நீர் வார்ந்தது. பித்திகம் - பிச்சிமலர். அது மாரிக்காலத்தில் மலர்வது.

இயல்பாகவே சிவந்த கண்ணின்கடை, நீராடியதாற் பின்னும் சிவப்பு மிக்கது. தலைவியினது கண்ணின் குறிப்பிஞல் உயிர்த் தோழியை அறிந்தவனுதலால் அக்கண்ணைச் சிறப்பித்தான் (சிற். 18.)

கொழுமுகையினது வெரிந் செம்மையும் தண்மையும் ஒருங்கே பெற்றதுபோலக் கண்ணின் கடையும் பெற்றது.

தளிர்மென்மைக்கும் தண்மைக்கும் உவமை; மேனியின் நிறத் திற்கும் பொருந்தும்; நீராடிய அண்மையிற் கண்டவனுதலின் மழைத்துளி பொழியப்பெற்ற தளிரை உவமை கூறினன்.

தளிரன்னேனென்பதைத் தோழிக்கு ஆக்குவதும் ஒன்று.

போனுமென்றது துணியப்படாததன்கட் செல்லும் சொல் லாக நின்றது.

## மேற்கோளாட்சி

மு. தோழி உடம்பட்டு விலக்கியது (இறை. 10); பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுப்பினு மென்பதற்கு இரட்டுறமொழிதலென்பத ஞல், தலைமகள் தான் விரும்பப்பட்ட தோழியாகி எமக்கு வாயில் நேர் வாளிவளெனப் பெற்று, பின் இரந்து குறையுற நினைத்தலுண்டு; அங்ங னம் நினைந்தது (தொல். களவு. 11, இளம்.); தோழியிற் கூட்டம் (ஷை. செய். 187, பேர்.); ' தலைவன் தோழியை இரந்து பின்னிற்பலென வலித்தது; ' இது தலைவி அவட்கு இனையளென்று கருதி அவளை வாயி லாகத் துணிந்தது. அன்றி, தோழி கூற்றெனின் தலைவியை அருமை கூறினன்றி இக்குறை முடிப்பலென ஏற்றுக் கொள்ளாள், தனக்கு ஏதமா மென்றஞ்சி ; அன்றியும், தானே குறையுறுகின்றூற்கு இது கூறிப் பயந்ததூஉமின்று ' (ஷை. களவு. 11, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. தலைப்புணை: அகநா. கசுக: 12, உசுக: 3.

3. புனலோடு பொழுதல்: "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடு வாள், தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலால்" (கலி. ௩௯: 1-2.)

5. மாரிப் பித்திகம்: குறுந். ௯௪: 1, ஒப்பு.

5. மூ. குறுந். * ௧௯௮: 1.

6. மழைக்கண்: குறுந். ௨௫௯: 4, ௩௨௯: 7.

5-6. பித்திகத்தின் அரும்பு சிவந்திருத்தல்: குறுந். ௯௪: 1 - 2, ஒப்பு.

கண்ணரின் கடைக்குப் பித்திகம்: "மாரிப் பித்திகத் தீரிதழ் புரையும், அங்கலுழ் கொண்ட செங்கடை மழைக்கண்" (அகநா. ௨௬௧: 19 - 20.)

7. துளிதலைத் தலைஇய: அகநா. ௮: 15, ௬௩௨: 9.

தலைவிமேனிக்குத் தளிர்: குறுந். ௬௨: 4 - 5, ஒப்பு.

5-7. தலைவியின் கடைக்கண்ணுக்குப் பிச்சியரும்பும் மேனிக்குத் தளிரும்: "மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக், கொயலரு நிலைய பெயலேர் மணமுகைச், செவ்வெரி நுறழுங் கொழுங்கடை மழைக்கட், டளிரேர் மேனி மாஅ யோயே" (அகநா. ௪௨: 1 - 4.)

மூ. தோழிக்கும் தலைவிக்கும் உள்ள ஒற்றுமை: நற். ௧௨௮: 3 - 4; சிற். ௮௧; இறை. மேற். "ஓங்கும் பெருபுகழ்" (௨௨௨)

---

தலைவி கூற்று

[தலைவன் வரைபொருட்குப் பிரிந்த காலத்தில் வற்புறுத்திய தோழிக்கு, "முன் ஒருகால் நின்சொற் கேட்டுத் தலைவனைக் கண்டு என் நலனிழந்தேன். நலனிழந்த புலம்பொடு இப்பொழுதும் கவல்வே னாயினேன்" என்று தலைவி கூறியது.]

௨௨௩. பேரூர் கொண்ட வார்கலி விழவிற்
செல்வாஞ் செல்வா †மென்றி யன்றிவண்
‡ நல்லோர் நல்ல பலவாற் ¶ றில்ல
தழலுந் தட்டையு முறியுந் தந்திவை

---

* சிறைக்குடி யாந்தையார் பாட்டு.

(பி - ம்.) † மென்றிவணல்லோர். ‡ நல்லோ நல்ல. ¶ றில்லே.

ஒத்தன நினக்கெனப் பொய்த்தன கூறி
அன்னை யோம்பிய வாய்நலம்
என்னை கொண்டான்யா †மின்னமா லினியே.

எ - து. வரைவிடை வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகன்.

(ப - ரை.) தோழி, பெரு ஊர் கொண்ட ஆர் கலி விழவின் - முன்னொருநாள் பெரிய ஊரினர் மேற்கொண்ட மிக்க ஆரவாரத்தை யுடைய விழாவிற்கு, செல்வாம் செல்வாம் என்றி - போவோம் போவோமென்று கூறினாய்; அன்று இவண் நல்லோர் நல்ல பல - அன்று நாம் புறப்படுகையில் இங்கே நல்லோராற் கூறப்பட்ட நல்ல வாய்ச்சொற்களாகிய நிமித்தங்கள் பலவாக இருந்தன; தழலும் தட்டையும் - கிளிகடி கருவிகளாகிய தழலையும் தட்டையையும், முறியும் - தழையையும், தந்து - எனக்குக் கொடுத்து, இவை நினக்கு ஒத்தன என - இப்பொருள்கள் உனக்கு ஏற்புடையன என்று சொல்லி, பொய்த்தன கூறி - பின்பு புனைந்துரைகளைக் கூறி, அன்னை ஓம்பிய ஆய்நலம் - நம்முடைய தாய் பாதுகாத்த அழகிய எம் பெண்மை நலத்தை, என்னை கொண்டான் - என்னுடைய தலைவன் கொள்ளை கொண்டான்; யாம் இனி இன்னம் - யாம் இப்பொழுது அந்நலனிழந்த இத்தகையேமாயினேம்.

(முடிபு.) செல்வாம் செல்வாம் என்றி; நல்ல பல; நலம் என்னை கொண்டான்; யாம் இனி இன்னம்.

(கருத்து.) தலைவனால் நலனிழந்தமை நினைந்து வேறு பட்டேன்.

(வி - ரை.) தலைவியும் தோழியும் விழவின்கட் சென்று தலைவனை எதிர்ப்பட்டு அளவளாவிய பழைய நிகழ்ச்சியைத் தலைவி நினைவுறுத்தினாள். விழாக்காலத்து வீரர்கள் குழூஉதலும் மகளிர் துணங்கையாடுதலும் வழக்கு; இந்நூல் ௩௧ - ஆம் செய்யுளைப் பார்க்க.

செல்வாம் செல்வாமென்றது பன்முறை வற்புறுத்தியதைப் புலப்படுத்தியது. அன்று - புறப்பட்ட நாளில். நல்லவென்றது நல்ல

(பி - ம்.) * என்னைக். † மின்னபாலினியே.

நிமித்தமாகிய வாய்ச் சொல்லை; இதனைப் புள்ளென்றும், விரிச்சி யென்றும் கூறுவர்; "நல்ல நல்லோர் வாய்ப்புள்" (முல்லைப். 18.) தில், காலங்குறித்தது; பலவாகியும் யான் நலனிழந்தேனென்பது பயந்து ஒழியிசைப்பொருள்பட நின்றதெனலும் ஆம்.

தழல் - கையாற் சுற்றினகாலத்துத் தன்னிடத்துப் பிறக்கும் ஓசையாற் கிளி முதலியவற்றை ஓட்டுங்கருவி; கவணென்பாரும் உளர் (குறிஞ்சி. 43, ந.) தட்டை - கிளிகடிகருவியுள் ஒருவகை; இந்நூல், ௧௯௩ - ஆம் செய்யுளின் விசேடவுரையைப் பார்க்க.

முறி - தழை; என்றது தழையாலாகிய உடையை; தளிரெனலுமாம்; விளா, புன்கு முதலியவற்றின் தளிர்களை மகளிர் அப்பிக் கொள்ளுதல் வழக்காதலின் அவற்றை யளித்தான்;

"வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியா" (முருகு. 37);

"பொரிப்பூம் புன்கி னெழிற்றகை யொண்முறி
சுணங்கணி வனமுலை யணங்குகொளத் திமிரி"
(நற். ௯ : 5-6);

"எழிற்றகை யிளமுலை பொலியப்
பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே" (ஐங். ௩௪௭ : 2-3.)

பொய்த்தன கூறலென்றது தலைவன் பொய்பாராட்டியதை.

புறத்தே செல்லற்கவென்று தகைந்தும், பெருங்காவல் புரிந்தும் தாயர் பாதுகாத்தமையின் அன்னை யோம்பிய வாய்நலமென்றாள். ஆய் நலம் - பலராற் சிறப்பித்துக் கூறப்பட்டு ஆராய்ச்சிக்குட் படும் அழகெனலும் ஆம்; "பலராய் மாண்கவின்" (அகநா. ௯௮ : 12.)

இன்னமென்றாள் நலமிழந்த நிலையைச் சுட்டி.

"தலைவன் நின்னை வரைந்து கொள்ளுதற்பொருட்டன்றே பொருட்குப் பிரிந்தான்; நீ கவலுதல் நன்றன்றே" என்று தோழி வற்புறுத்த, "நின்சொல்லைக் கேட்டு முன்னர் என் நலனிழந்தேன்; மீண்டும் நீ வற்புறுத்துகின்றாய்!" என்று தலைவி கூறினாள்.

'நல்லோம் நல்ல' என்ற பாடத்திற்குப் பின்வருமாறு பொருள் கொள்க:—

வரைவிடை வேறுபட்ட கிழத்தியை நோக்கி, "நின் வேறுபாடு புறத்தே தோற்றாது மறைத்து விழாக் காண வருதி" என்று கூறிய தோழிக்கு, "விழாக்காணச் செல்வோம், செல்வோமென்கின்றாய். முன்பு யாம் நலனிழவாமல் நல்லோமாயிருந்தோம்; எம்பால் நல்

ரு வியல்புகள் பல இருந்தன; இப்பொழுதோ எம் நலத்தைத் தலைவன் கொண்டான்; அதனால் அழகிழந்து புறத்தே தோற்றும் வேறுபாடுடையே னாயினேன்; அதனை எங்ஙனம் மறைப்பேன்!" எனத் தலைவி கூறினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. பேநூர் கொண்ட விழவு: (குறுந். சக: 2); "ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்" (முருகு. 220); "அகன்றலைப் பேரூர்ச், சாறு" (பொருந. 1-2.)

ஆர்கலி விழவு: மதுரைக். 428; கலி. ௫ : 10; அகநா. ச : 14.

4. தட்டை: குறுந். ககரு : 3, ஒப்பு; நற். கசஎ: 8; ஐங். உஅ௫ : 2; அகநா. ருஉ : 6, ருஅஅ : 2.

தழலுந் தட்டையும்: "தழலுந் தட்டையுங் குளிரும் பிறவும்" (குறிஞ்சி. 43); "தட்டை குளிர்தழலைத் தாங்கி" (கந்த. வள்ளி. 52.)

தழல் தட்டை முறி: "தழலை வாங்கியுந் தட்டை யோச்சியும், அழலேர் செயலை யந்தழை யசைஇயும்" (அகநா. கஅஅ : 11 - 2.)

6. அன்னை ஓம்பிய நலம்: "அன்னை காக்குந் தொன்னலம்" (நற். உரு : 4); "யாய்நயந் தெடுத்த வாய்நலம்" (ஐங். ருஅச : 3); "தாயோம் பாய்நலம்", *"ஓம்பிய, நலம்புனை யுதவியோ வுடையேன் மன்னே" (அகநா. கசசு : 13, ககூ : 9-10.)

7. தலைவனைத் தலைவி என்னையென்றல்: குறுந். உச : 2, ஒப்பு.

இன்னம்: அகநா. கஉஅ : 6; புறநா. கசக : 9.

6-7. என்னை நலங்கொண்டான்: ஐங். உச : 3-5.

5-7. தலைவனால் நலனிழத்தல்: நற். ருசு : 4-5; அகநா. கசசு : 9-13; பெருங். ரு, 6 : 133. (உஉரு)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்து, "இவள் இறந்துபடுவாளோ!" எனக் கவலையுற்ற தோழிக்கு முன்னிலைப் புறமொழியாக, "தலைவரைப் பிரிந்த துயரினும் இவள் வருந்துதலைக் காணுந்துயர் பெரிதாயிற்று" என்று தலைவி கூறியது.]

* நற்றாய் கூற்று.

உஉச. கவலை யாத்த வவல நீளிடைச்
சென்றோர் கொடுமை யெற்றித் துஞ்சா
நோயினு நோயா கின்றே கூவற்
குராலான் படுதுய *ரிராவிற் கண்ட
உயர்திணை யூமன் போலத்
துயர்பொறுக் கல்லேன் றோழி நோய்க்கே.

எ - து. பிரிவிடை இறந்துபடுமெனக் கவன்ற தோழி கேட்பக் கிழத்தி உரைத்தது.

கூவன் மைந்தன்.

(ப - ரை.) *கூவல் குரால் ஆன் படு துயர்-கிணற்றின்கண்ணே வீழ்ந்த குராற்பசு படுந் துன்பத்தை, இராவில் கண்ட - இராக்காலத்திற்கண்ட, உயர்திணை ஊமன் போல - ஊமையாக இருப்பவன் அத்துயரத்தை வெளியிட முடியாமல் துன்புற்றது போல, தோழி நோய்க்கு - என் பொருட்டுத் தோழிபடும் வருத்தத்தினால், துயர் பொறுக்கல்லேன் - துயரைப் பொறுக்கும் ஆற்றல் இல்லேனாயினேன்; அத்துயரம், கவலை யாத்த - கவர்த்தவழிகளில் யாமரங்களையுடைய, அவலம் நீள் இடை - துன்பத்தையுடைய நீண்ட வழிகளில், சென்றோர் கொடுமை எற்றி - எம்மைப் பிரிந்து சென்ற தலைவரது கொடுமையை நினைந்து, துஞ்சா நோயினும் - துயிலாமலிருக்கும் துன்பத்தைக் காட்டிலும், நோய் ஆகின்று - மிக்க துன்பமாகின்றது.*

(முடிபு.) *தோழிநோய்க்குத் துயர் பொறுக்கல்லேன்; துஞ்சா நோயினும் நோயாகின்று.*

(கருத்து.) *தோழி வருந்துதல் பயனற்றது.*

(வி - ரை.) *இது முன்னிலைப் புறமொழியாகத் தோழிக்கு அறிவுறுத்தியது.*

*கவர்த்த வழிகளும் ஆங்கு நேரும் அவலங்களும் நீண்ட வழிகளும் துன்பத்தை மிகுவிப்பன. எற்றல் - நினைதல் (குறுந். கசரு: 2; தொல். உரி. 39.) துஞ்சா நோய் - யான் துஞ்சாமைக்குக் காரணமாகிய நோய்.*

---

(பி - ம்.) * *ரிரவிற்.*

குராலான் - குரால் நிறமுள்ள பசு; "ஏந்திமிற் குராலும்" (கலி. க0ரு: 14) என்பதன் உரையைப் பார்க்க; இந்நிறத்தைக் கபில நிறமென்பர்.

ஊமன் என்பது அஃறிணையாகிய கோட்டானுக்கும் வருதலின் அதனை விலக்க, 'உயர்திணை யூமன்' என்ருள்; இது வெளிப்படை யென்னும் இலக்கணத்தின்பாற் படும்.

பசு இராக்காலத்தில் கிணற்றில் விழுந்துவிட்டதைக் கண்ட ஊமன் அதனை விளங்கப் பிறருக்குச் சொல்லும் வன்மை இல்லாமையால் மிக வருந்துவதைப்போல யானும் இத்துயரைப் பிறருக்குச் சொல்லும் வலியின்றி வருந்தினேனென்ருள். துயர் பொறுக்கல்லேனென்றது, அதனைப் பொருது வாய்விட்டு இங்ஙனம் புலப்படுத்தத் துணிந்ததன் காரணம் கூறியவாறு.

"என் துயரத்தை நான் ஆற்றுவேனே! தோழியின் துயரத்தை ஆற்றுவேனே! ஏதும் செய்ய அறிகிலேன்!" என்பதனுல் தோழியின் வருத்தம் பயனற்ற தென்றுணர்த்திஞள். 'எனக்கு இத் துயர் வாராதவாறு காப்பதையேனும், யான் இத்துயர் படாவாறு ஆற்றுவதையேனும் செய்யாது பின்னும் இதனை மிகுவித்தாள்' என்னும் கருத்திஞல் இது கூறிஞள்.

துயர் கூறவியலா நிலையிலுள்ள தலைவிக்குக் குராற் பசு கூவலில் விழக்கண்ட ஊமனை உவமை கூறிய இச்சிறப்பினுல் கூவலென்ற அடை இதனை யியற்றிய ஆசிரியர் பெயருக்கு அமைந்தது போலும்.

## மேற்கோளாட்சி

3-6. உயர்திணைப்பால், உவமத்தில் மயங்கி வந்தது (தொல். உவம. 6, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. **பாலையில் யாமரம் இருத்தல்: குறுந். உகஉ: 5.**

2. **பிரிந்து சென்ற தலைவனது கொடுமையை எற்றித் துஞ்சாமை: குறுந். கசரு: 2 - 4.**

**தலைவனது கொடுமை: குறுந். க: 7, ஒப்பு, கசரு: 2, ஒப்பு.**

**தலைவி துஞ்சாமை: குறுந். கு: 4, ஒப்பு.**

5-6. துயர்போறத தலைவிக்கு ஊமன் :

"நோமுறு நோய்நிலை நுவல கிற்றிலள்
ஊமரின் மனத்திடை யுன்னி விம்முவாள்"

(கம்ப. மிதிலைக். 42.)

(உஉச)

---

## தோழி கூற்று

[வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியும் தலைவனை நோக்கி, "இதுகாறும் நின்விருப்பப்படியே ஒழுகி வந்த யாம் செய்த நன்றியை மறவாது, எம் விருப்பத்திற்கு இணங்க விரைவில் வரைந்து கொள்வாயாக" என்று தோழி கூறியது.]

உஉரு. கன்றுதன் பயமுலை மாந்த முன்றிற்
றினைபிடி யுண்ணும் பெருங்கன் னாட
கெட்டிடத் துவந்த வுதவி கட்டில்
வீறுபெற்று மறந்த மன்னன் போல
நன்றிமறந் தமையா யாயின் மென்சீர்க்
கலிமயிற் கலாவத் தன்னவிவள்
ஒலிமென் கூந்த லுரியவா நினக்கே.

எ - து. வரைவிடைவைத்துப் பிரிவாற்குத் தோழி சொல்லியது.

கபிலர்.

(ப - ரை.) கன்று தன் பயம் முலை மாந்த - யானைக் கன்று தனது பாலுள்ள முலைகுடித்து நிற்ப, முன்றில் தினை - வீட்டின் முன்னிடத்துள்ள தினைப் பயிரை, பிடி உண்ணும் - பெண் யானை உண்ணுதற்கு இடமாகிய, பெரு கல் நாட - பெரிய மலைகளையுடைய நாடனே, கெட்ட இடத்து உவந்த உதவி - தான் வறுமையுற்ற காலத்துப் பிறராற் பெற்று மகிழ்ந்த உதவியை, கட்டில் வீறு பெற்று - அரசுகட்டிலாகிய சிறப்பைப் பெற்று, மறந்த மன்னன் போல - மறந்துவிட்ட அரசனைப்போல, நன்றி மறந்து - நீ யாம் செய்த நன்றியை மறந்து, அமையாய் ஆயின் - பொருந்தாயாகி அதனை நினைந்து வரைந்து கொள்வாயாயின், இவள் - இத்தலைவியி

(பி - ம்.) * நன்றி மறந்தனை யாயின்.

னுடைய, மெல் சீர் கலி மயில் கலாவத்து அன்ன - மெல்லிய சிறப்பை யுடைய ஆரவாரிக்கும் மயிலினது பீலியைப் போன்ற, ஒலி மெல் கூந்தல் - தழைத்த மெல்லிய கூந்தற்பகுதிகள், நினக்கே உரிய ஆம் - நினக்கே உரிமையுடையன வாகும்.

(முடிபு.) நாட, நன்றி மறந்து அமையாயாயின், இவள் கூந்தல் நினக்கே உரியவாம்.

(கருத்து.) நீ யாம் புரிந்த நன்றியை மறவாது விரைவில் வரைந்து கொள்ளவேண்டும்.

(வி - ரை.) கெட்ட இடம், கெட்டிடமாயிற்று; தொகுத்தல் விகாரம். கட்டில் வீறு - அரசுகட்டிலாற் பெற்ற சிறப்பெனலு மாம்; கட்டில் - சிங்காதனம். நன்றி மறந்து அமையாயாயினென்றது, நன்றி மறவாது அமைவாயாயினென்னும் பொருள் தந்தது.

தான் நல்ல நிலைக்கு வருந்துணையும் பிறர் உதவியை உவந்து பின் அதனை மறந்ததுபோல, நீ நின்விருப்பத்தை நிறைவேற்றும் வரையில் எம்மாற் செய்யப்பெற்ற உதவிகளை யேற்று இப்போது எம்மை மறவாதொழிக என்றாள்.

கன்று தன் முலைமாந்திக் கொண்டேயிருப்பத் தன் பசியை நீக்குதற்கும் அக்கன்றுக்குரிய பாலைப் பெறுதற்கும் தினையைப்பிடி உண்டதுபோல, நீயும் யாங்கள் நின்வரவை எதிர்நோக்கி மகிழ்ந் திருக்குங்கால் நின் கடப்பாட்டையும் இவளை வரைவதையும் ஒருங்கே செய்வித்தற்குக் கருவியாகிய பொருளை ஈட்டிவருதற்குரியை யென் பது குறிப்பு.

தலைவியின் கூந்தலில் தலைவன் துயின்று இன்புறுதலின் அதனை அவனுக்கு உரிமைப்படுத்தினாள். கூந்தல் உரியவாமெனப் பன்மை வாசகம் படக்கூறினாள், குழல் முதலிய ஐந்தையும் நினைந்து (அகநா. எ : 2, உரை.)

## மேற் கோளாட்சி

ரு. கருப்பொருள் பிறிதோர் பொருட்கு உபகாரப்படும் பொருட் டாதலேயன்றி அக்கருப்பொருள் தன்னுள்ளே தோன்றும் பொருளும் உள; இதனுள், தான் கெட்டவிடத்து உதவின உதவியை அரச வுரிமை யெய்திய மன்னன் மறந்தாற்போல நீ இரந்து குறையுற்ற காலத்து யான் தலைவியை நின்னோடு கூட்டிய செய்ந்நன்றியை மற வாது இன்று நீ வரைந்து கொள்வாயாயின் இவள் கூந்தல் நினக்

குரிய வென்ற வழி, உவமையும் பொருளும் ஒத்து முடிந்தமையின், முன் நின்ற நாடவென்பது உள்ளுறை யுவமமன்றாய் இறைச்சியாம்; என்னை? தன் கன்றிற்குப் பயன்பட்டுப் பிறர்க்கு உயிரைக் கொடுக்கின்ற தினையைத் தான் உண்டு அழிவு செய்கின்றாற்போல, நீ நின் கருமம் சிதையாமற் பார்த்து எமக்கு உயிராகிய இவளைத் துயருறுத்தி எம்மை இறந்து படுவித்தலாகாதென்று உவமை யெய்திற்றேனும், பின்னர் நின்ற பொருளோடு இயையாது இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள்பயவாது இறைச்சியாகிய நாடனென்பதனுள்ளே வேறோர் பொருள் தோற்றுவித்து நின்றதேயாதலின். முலைமாந்த வென்றது, தன் கருமஞ் சிதையாமற் பார்த்தென்னுந் துணையன்றி உள்ளுறை யுவமப் பொருளை முற்ற உணர்த்தாமை யுணர்க' (தொல். பொருள். 36, ந.); கருப்பொருள் பிறிதோர் பொருட்கு உபகாரப் படுதலே யன்றி அக்கருப்பொருள் தன்னுள்ளே தோன்றும் பொருளுமுள; அஃது உள்ளுறை யுவமமன்று; இறைச்சி யென்று கொள்க (மாற. பொருளணி. 91.)

## ஒப்புமைப் பகுதி

3. கட்டில்: மலைபடு. 550; பதிற். எக: 14.

6. கலிமயிற் கலாவம்: அகநா. கஙஉ: 14.

7. ஒலிமென் கூந்தல்: *குறிஞ்சிப். 2; நற். சு: 9, கசக: 12, கக௯: 6, உசு0: 8, உகரு: 2, ௩கரு: 4; * கலி. சுச: 6; புறநா. * க0க: 16, ௩0சு: 3.

6-7. கூந்தலுக்கு மயிற்கலாவம்: "அணிகிளர் கலாவ மைது விரித் தியலும், மணிபுரை யெருத்தின் மஞ்ஞை போலநின், வீபெய் கூந் தல் வீசுவளி யுளர", "கலிமயிற் கலாவத் தன்னவிவள், ஒலிமென் கூந் தல்" (நற். உசுச: 3 - 5, உசுரு: 8 - 9); "விசும்பிழி தோகைச் சீர் போன் றிசினே, பசும்பொ னவிரிழை பைய நிழற்றக், கரைசேர் மருத மேறிப், பண்ணை பாய்வோ டண்ணறுங் கதுப்பே" (ஐங். எச); "கலி மயிற் கலாவங் கால்குவித் தன்ன, ஒலிமென் கூந்தல்" (புறநா. கசசு: 8 - 9.)

தலைவியின் கூந்தல் தலைவனுக்கே உரியது: "ஒரூஉநீ யெங்கூந்தல் கொள்ளல்", "யாரிவ னெங்கூந்தல் கொள்வான்" (கலி. அஎ: 1, அக: 1); * "கூந்தற் கிழவரை" (புறநா. ககங: 9); "கூந்த லொடேல்" (சீவக. 1229.) (உஉரு)

* கபிலர் பாட்டு.

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்தகாலத்தில் தலைவி ஆற்றாளெனக் கவன்ற தோழியை நோக்கி, "தலைவன் என்னை மணந்தபின் என் நலனிழந்தேன்" என்று தலைவி வருந்திக் கூறியது.]

உஉசு. பூவொடு புரையுங் கண்ணும் வேயென
விறல்வனப் பெய்திய தோளும் பிறையென
மதிமயக் குறூஉ நுதலு நன்றும்
நல்லமன் வாழி தோழி யல்கலும்
தயங்குதிரை பொருத தாழை வெண்பூக்
குருகென மலரும் பெருந்துறை
விரிநீர்ச் சேர்ப்பனொடு நகாஅ வூங்கே.

எ - து. வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

மதுரை எழுத்தாளன் சேந்தம்பூதன்.

(ப - ரை.) தோழி—, அல்கலும் - இரவுதோறும், தயங்கு திரை பொருத - விளங்கிய அலைகளால் மோதப்பட்ட, தாழை வெண் பூ - தாழையினது வெள்ளிய பூ, குருகு என மலரும் - நாரையைப் போல மலர்தலைச் செய்வதற்கு இடமாகிய, பெரு துறை விரி நீர் சேர்ப்பனொடு - பெரிய துறைகளையுடைய அகன்ற நீர்ப்பரப்பையுடைய சேர்ப்பனோடு, நகா ஊங்கு - நகுவதற்கு முன்பு, பூவொடு புரையும் கண்ணும் - தாமரை மலரையொத்த கண்களும், வேய் என விறல் வனப்பு எய்திய தோளும்-மூங்கிலைப்போல வெற்றியையுடைய அழகைப் பெற்ற தோள்களும், பிறை என மதி மயக்குறூஉம் நுதலும் - பிறையென்று கருதும்படி அறிவை மயங்கச் செய்யும் நெற்றியும், நன்றும் நல்ல - மிகவும் நல்லனவாக இருந்தன ; மன் - அந்நிலை இப்பொழுது கழிந்தது !

(முடிபு.) தோழி, சேர்ப்பனொடு நகாஅ வூங்கு, கண்ணும் தோளும் நுதலும் நல்லமன் !

(கருத்து.) தலைவனது பிரிவினால் என் மேனி நலம் அழிந்தது.

(வி - ரை.) பூவொடு: உருபு மயக்கம். விறல் வனப்பு - பிறர் தோள் வனப்போடு ஒப்பு நோக்குங்கால் தான் யாவற்றினும் விஞ்சி வெற்றிபெறும் வனப்பு.

"ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு" (குறள், 1088)

என்பதனால் நுதல் மதியை மயக்குதல் பெறப்படும். தன் உறுப்புக்களைப் புகழ்ந்தது தற்புகழ்ச்சியாகாது, கழிந்ததற்கு இரங்கினமையின். தலைவன் மயங்கியபடியை அவன் தனது நலம் பாராட்டிய வழிக் கூறக் கேட்டுணர்ந்தவளாதலின் நுதல் மதிமயக்குமென்று கூறினாள்.

வாழி: அசைநிலை. தாழை வெண்பூ வென்றாள் செந்தாழையை விலக்குதற்கு.

கருதல் - அளவளாவுதல்; இஃது இடக்கரடக்கிக் கூறியது. ஏகாரம், ஈற்றசை.

## ஒப்புமைப் பகுதி

1. கண்ணிற்குப் பூ: குறுந். ௭௨ : 1-5, ஒப்பு, ௧௦௧ : 4, ஒப்பு.

2. விறல் வனப்பு: "விறனலன்" (கலி. ௩ : 5, ௧௨௪ : 15.)

1-2. தோளுக்கு வேய்: குறுந். ௨௬௮ : 6, ஒப்பு.

3. மதிமயக் குறூஉம் நுதல்: "மதிமருட்டுஞ் சிறுநுதல்" (யா. கா. 4.)

௨-௩. நுதலுக்குப் பிறை: குறுந். ௧௨௯ : 3-5; நற். ௨௫௦ : 1, ௨௬௩ : 1; பெருங். ௧. 36 : 265, ௪ : 11 : 68, ௫. 6 : 11; சீவக. 165.

4. நல்லமன்: குறுந். ௩௫௭ : 4.

வாழி தோழி: குறுந். ௨௬௦ : 4.

1-4. கண், தோள், நுதல் பழைய அழகு கெடுதல்: "தோளே தொடிகொட் பானா கண்ணே, வாளீர் வடியின் வடிவிழந் தனவே, நுதலும் பசலைபா யின்று" (நற். ௧௩௩ : 1-3.)

5. தாழை திரையால் அலைக்கப்படுதல்: குறுந். ௧௬௩, 4.

5-6. தாழைப் பூவிற்குக் குருகு: "செய்தற் குருகுதன் பிள்ளை யென் றெண்ணி நெருங்கிச்சென்று, கைதை மடற்புல்கு தென்கழிப் பாலை யதினுறைவாய்" (தே. திருநா.); "அருகு கைதை மலர்க் கெண்டை, குருகென் றஞ்சுங் கூட லூரே" (திவ். பெரிய. ௫. 2 : 9.)

7. தலைவனொடு நகுதல்: குறுந். ௧௬௧: 3, ௬௨0: 5, ௬௮௧: 7, ௬௧௪: 7; மதுரைக். 420; நற். ௧௬௫: 9, ௧௮௭: 10, உ௧௧: 9.

மு. குறுந். ௬௫௭. (உஉ௬)

---

## தோழி கூற்று

[அல்லகுறிப்பட்டு மறுநாள் வந்த தலைவன் மறைவில் இருப்ப, அவன் முதல் நாள் வந்ததைத் தோழி தலைவிக்கு உணர்த்தியது.]

உஉஎ. * பூண்வனைந் தன்ன பொலஞ்சூட்டு நேமி
வாண்முகந் துமிப்ப வள்ளிதழ் குறைந்த
கூழை நெய்தலு முடைத்திவட்
டேரோன் போகிய கான † லானே.

எ - து. சிறைப்புறம்.

ஓத ஞானி.

(ப - ரை.) தேரோன் போகிய கானலான் - தேரில் வந்த தலைவன் மீண்டு சென்ற கடற்கரைச் சோலையில், இவண் - இவ்விடம், பூண் வனைந்தன்ன - பூணைப் பதித்தாற் போன்ற, பொலஞ் சூட்டு நேமி - பொன்னாலாகிய விளிம்பையுடைய சக்கரத்தின், வாள் முகம் துமிப்ப-வாளைப்போன்ற வாய் துணித்தலினால், வள் இதழ் குறைந்த- வளவிய இதழ்கள் ஒடிக்கப்பட்ட, கூழை நெய்தலும் உடைத்து - குறையாகிய நெய்தற்பூக்களையும் உடையது.

(முடிபு.) தேரோன் போகிய கானல் நெய்தலும் உடைத்து.

(கருத்து.) நேற்றுத் தலைவன் ஈண்டு வந்திருந்தான்.

(வி - ரை.) தலைவன் அல்லகுறிப்பட்டுச் சென்று மறுநாள் வந்து தான் முதல்நாள் வந்து தலைவியைக் காணப் பெறுமையைத் தோழியிடம் உரைப்ப, தலைவி தான் குறியென மருண்டு சென்றும் தலைவன் வந்திலனெனக் குறை கூறும்பொழுது தோழி, "அவன் வந்திருந்தான். அதற்கு அடையாளமாக அவன் ஊர்ந்து வந்த

---

(பி - ம்.) * பூவனைந்தன்ன. † லோனே.

*தேர்ச்சக்கரச்சூட்டாற் குறைக்கப்பட்ட நெய்தல்மலர்களைக் காணலாம்" என்று கூறினாள். கூழை நெய்தற்கொடிகளெனினுமாம்.*

*கானலானே : ஏ அசை நிலை.*

## ஒப்புமைப் பகுதி

1. போலஞ் சூட்டு நேமி : "*பொலஞ்சுட ராழி பூண்ட தேரே*" (தொல். புள்ளி. 61, ந. மேற்.)

3. கூழை : குறுந். கடூ : 2, கஎகூ : 7 ; அகநா. உஎரு : 17.

1-3. நேமியால் நெய்தல் துறைதல் : "*கடுமா நெடுந்தேர் நேமி போகிய, இருங்கழி நெய்தல் போல*" (குறுந். டூகூ : 4-5) ; "*நெய்தன் மயக்கி வந்தன்று...கொண்கன் றேரே*" (ஐங். கoக : 3-5) ; "*ஆழி, மதி முகங் குறைத்த பொதிமுகிழ் நெய்தல்*" (அகநா. கசுo : 12-3.)

கடற்கரைக் கோடிகள் நேமியால் துறைதல் : நற். டூஅ : 2-3 ; அகநா. அo : 8-10. (உஉஎ)

---

## தலைவி கூற்று

[*தலைவனுடன் இல்வாழ்க்கை நடத்திய தலைவியை நோக்கி, "நீ இதுகாறும் நன்றாக ஆற்றியிருந்தாய்!" என்று தோழி கூறிய பொழுது, "தலைவர் என் நெஞ்சிற்கு அணியராயிருந்ததனாலும் அவர்நாட்டுத்திரை நம்மூர்க்கு வந்து பெயர்ந்ததனாலும் ஆற்றியிருந்தேன்" என்று தலைவி கூறியது.*]

உஉஅ. *வீழ்தாழ் தாழை பூழுறு கொழுமுகை*
*குருகுள * ரிடத்தின் விரிபுதோ டவிழும்*
*† கான னண்ணிய சிறுகுடி முன்றிற்*
*றிரைவந்து பெயரு மென்பநத் துறந்து*
*நெடுஞ்சே ணாட்டா ராயினும்*
*நெஞ்சிற் ‡கணியர் தண்கட னாட்டே.*

எ - து. 'கடிநகர் வேறுபடாது நன்குஆற்றினாய்' என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன்.

---

(பி - ம்.) * *றிறகின்.* † *கான நண்ணிய.* ‡ *கணியரே, கணியரோ, கணியோர்.*

(ப - ரை.) தோழி, நம் துறந்து - நம்மைப் பிரிந்து சென்று, நெடு சேண் நாட்டார் ஆயினும் - மிக்க சேய்மையிலுள்ள நாட்டில் இருப்பவராயினும், நெஞ்சிற்கு அணியர் - நெஞ்சிற்கு அணிமையிடத்துள்ளாராது, தண் கடல் நாட்டு - தண்ணிய கடலேயுடைய நாட்டினிடத்து, வீழ் தாழ் தாழை - விழுது தாழ்ந்த தாழையினது, ஊழ் உறு கொழு முகை - முதிர்ந்த கொழுவிய அரும்பு, குருகு உளர் இடத்தின் - நாரைகள் சிறகைக் கோதுகின்ற இடத்தில், விரிபு தோடு அவிழும் - விரிந்து மடல்கள் மலர்கின்ற, கானல் நண்ணிய - கடற்கரைச்சோலையிற் பொருந்திய, சிறுகுடி முன்றில் - சிற்றூரின் முன்னிடத்தில், திரை வந்து பெயரும் - அலைகள் வந்து மீண்டு செல்லும்.

(முடிபு.) சிறுகுடி முன்றிலில் திரைவந்து அணியராது தண்கடனாட்டுப் பெயரும்.

(கருத்து.) தலைவன் என் நெஞ்சில் இருந்தமையின் ஆற்றியிருந்தேன்.

(வி - ரை.) குருகுளரிறகின் என்ற பாடத்திற்குக் குருகுகள் கோதுகின்ற சிறகைப்போலவெனப் பொருள் கொள்க. நத்துறந்து : குறுந். கஎச : 4, விசேட.

"தலைவர் நின்னை வரைந்து கொள்வதற்குமுன் அவர் நெடுந்தூரத்திலுள்ள நாட்டினராகியிருப்பவும் நீ ஆற்றியிருந்தது நின் வன்மையைக் காட்டுகின்றது" என்று தோழி தலைவியைப் புகழ, தலைவி, "அவர் நெடுந்தூரத்திலிருந்தாராயினும் என் நெஞ்சிற்கு அணியராக இருந்தார். அதனாலும் அவர் நாட்டுக்கும் எங்கள் ஊருக்கும் அலைகளின் தொடர்பு இருந்தமையாலும் ஆற்றியிருந்தேன்" என்றாள். தலைவனது நாட்டிலிருந்து வரும் நீரையேனும் பிறபொருளையேனும் கண்டும் கைக்கொண்டும் ஆற்றியிருத்தல் தலைவியர் இயல்பு; இதனை இந்நூல் கூகக - ஆம் செய்யுளால் உணரலாம்.

## ஒப்புமைப் பகுதி

1. வீழ்தாழ் தாழை : பட். 84; நற். எஅ : 4; கலி. கஙக : 10-11; அகநா. உ0 : 6; பெருங். க. 40 : 112-3.

3. கானல் நண்ணிய சிறுகுடி : நற். ச : 1, சஓ : 1.

சிறுகுடி : குறுந். கஅச : 2, ஒப்பு.

4. நத்துறந்து : குறுந். ௧௭௪ : 4, ஒப்பு.

5. நெடுஞ்சேரலாதன் : நற். ௧௧௫ : 8.

6. நெஞ்சிற் கணியர் : குறுந். ௩௬ : 3, ஒப்பு ; குறள், 1130.

5-6. குறுந். ௩௦௨ : 7-8. (௨௨௮)

---

## கண்டோர் கூற்று

[தலைவனும் தலைவியும் பாலைநிலத்தில் உடன்போனவழி அவரைக் கண்டார், "இவர்கள் இளமையில் ஒருவரோடொருவர் கலாம் விளைத்திருந்தனர். இப்பொழுதோ இணைபிரியாத துணைவராயினர். ஊழின் வலிதான் என்னே!" எனத் தம்முட் கூறியது.]

௨௨௯. இவனிவ ளைம்பால் பற்றவு மிவளிவன்
புன்றலை யோரி * வாங்குநள் பரியவும்
காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா
தேதில் சிறுசெரு வுறுப † மன்னோ
‡ நல்லைமன் றம்ம பாலே மெல்லியற்
றுணைமலர்ப் பிணைய லன்னவிவர்
¶ மணமகி ழியற்கை காட்டி யோயே.

எ - து. இடைச் சுரத்துக் கண்டார், தம்முள்ளே சொல்லியது.

மோதாசனார்.

(ப - ரை.) இவன் இவள் ஐம்பால் பற்றவும் - இவன் இவளது கூந்தலைப் பிடித்து இழுக்கவும், இவள் இவன் புன் தலை ஓரி வாங்குநள் பரியவும் - இவள் இவனது புல்லிய தலைமயிரை வளைத்து இழுப்பாளாய் ஓடவும், காதல் செவிலியர் தவிர்ப்பவும் - அன்புடைய செவிலித்தாயர் இடைமறித்துத் தடுக்கவும், தவிராது - ஒழியாமல், ஏதில் சிறு செரு உறுப - அயன்மையையுடைய சிறிய சண்டையை முன்பு பொருந்துவார்கள் ; இப்பொழுது, மலர் துணை பிணையல் அன்ன இவர் - மலரைப் பிணைத்த இரட்டை மாலையைப் போன்ற இவர்கள், மணம் மகிழ் இயற்கை காட்டியோய் - மணம்

(பி - ம்.) * வாங்கினள். † மன்னே. ‡ நல்லைமன்றபாலே. ¶ மனமகிழ்.

புரிந்து மகிழும் இயல்பை உண்டாக்கினாய்; ஆதலின், பாலே - ஊழ்வினையே, மன்ற நல்லை - நீ நிச்சயமாக நன்மையை யுடையாய்.

(முடிபு.) செரு உறுப; பாலே, மணமகிழியற்கை காட்டியோய்; நல்லை மன்ற.

(கருத்து.) ஊழ்வினையின் வலியால் இவர்கள் தலைவனும் தலைவியும் ஆயினர்.

(வி - ரை.) தமக்கு அணிமையிலே செல்வதைக் காண்பவராதலின் இவனென்றும் இவளென்றும் சுட்டினர். ஐம்பால் - ஐந்து பகுப்பையுடைய கூந்தல்; அவை குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை யென்பன (சீவக. 2437, ந.)

புன்றலை - சிவந்த தலையெனலுமாம் (பட். 90, ந.) ஓரி - ஆண் தலைமயிர் (பெரும்பாண். 172, ந.) ஐவகையினராதலின் செவிலியரெனப் பன்மையாற் கூறினர் (சீவக. 363, ந.) ஏதில் சிறு செரு - காரணமில்லாத சிறிய கலாமெனலுமாம்; ஏது - காரணம்; "ஏதின்றி" (கலி. கஉஉ : 3.) மன்ற அம்மவென்பது மன்றம்மவென வந்தது; விகாரம்; அம்ம : வியப்பிடைச் சொல். துணைப்பிணையல், மலர்ப்பிணையல் எனக் கூட்டுக.

தம்முட் கலாம் விளைத்தாரை ஒன்று படுத்திப் பாலைநிலத்தில் உடன்போகச் செய்வித்தமையின் 'நல்லை மன்றம்ம' என்று வியந்தனர். இளமையிற் கலாம் விளைத்ததை யறிந்தவராதலின் இது கூறினர்.

## மேற்கோளாட்சி

மூ. தலைவியும் தலைவனும் ஒருரினர் (தொல். களவு. 2, ந; இ. வி. 487.)

## ஒப்புமைப் பகுதி

1. ஐம்பால் பற்றல் : நற். ௧00 : 4.

5. ஊழினை வாழ்த்துதல் : "வாழிய பாலே" (ஐங். ௧௧0 : 5.)

மன்றம்ம : கலி. ௧௪உ : 5; அகநா. ௬௬௭ : 13.

6. துணைமலர்ப் பிணையல் : "துணைத்த கோதை" (குறுந். ௬உ௬ : 1); "துணையார் கோதை" (சிறுபாண். 69); "துணையறை மாலையின்" (குறிஞ்சிப். 177); "துணைமலர்க் கோதையார்" (கலி. ௭0 : 9); "துணையமை பிணையல்" (அகநா. ௯ : 23.)

தலைவனுக்குந் தலைவிக்குந் துணைமாலைகள் உவமை: "துணை யொத்த கோதையும் போலெழிற் பேதையுந் தோன்றலுமுன், இணை யொத்த கொங்கையொ டேயொத்த காதலொ டேகினரே" (திருவே கம்பமுடையார் திருவந்தாதி, 73.) ('உ௬)

---

## தோழி கூற்று

[தலைவனது குறையைக் கேட்ட தோழி, தலைவிபால், "நெடு நாட்களாக நினது உடம்பாட்டை எதிர்நோக்கி வந்து கொண்டிருந்த தலைவன் யான் சேட்படுத்தியமையின் சிலகாலமாக வாராதொழிந் தான்" என்று இரக்கம் வரும்படி கூறியது.]

உ௯௰. அம்ம வாழி தோழி கொண்கன்
தானது துணிகுவ னல்லன் யானென்
பேதை மையாற் * பெருந்தகை கெழுமி
நோதகச் செய்ததொன் றுடையேன் கொல்லோ
வயச்சுறா வழங்குநீ ரத்தம்
சின்னாள் † அன்ன வரவறி யானே.

எ - து. வலிதாகக் கூறிக் குறை நயப்பித்தது.

அறிவுடை நம்பி.

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று கூறுவன், கேட்பா யாக: கொண்கன் - தலைவன், வய சுறா வழங்கு நீர் அத்தம் - வலிமை யுடைய சுறாமீன் வழங்குகின்ற நீரையுடைய வழியில், சில் நாள் - சில நாட்களாக, அன்ன - முன்னர் வந்து கொண்டிருந்த அத்தகைய, வரவு அறியான் - வருதலை அறியானாயினான்; தான் அது துணிகு வன் அல்லன் - அங்ஙனம் வாராதிருத்தலைத் தானாகவே துணிந்து ஒழுகும் இயல்புடையனல்லன்; யான்—, என் பேதைமையால் - என் அறிவின்மையால், பெரு தகை கெழுமி - பெரிய உரிமையைப் பொருந்தி, நோதக செய்தது ஒன்று - அவன் வருந்தி இங்கே வாராத வண்ணம் செய்த செயலொன்றை, உடையேன்கொல் - உடையேனோ?

---

(பி - ம்.) * பெறுதகை. † வின்ன.

(முடிபு.) தோழி, கொண்கன் வரவறியான்; தான் துணி குவன் அல்லன்; யான் கெழுமிச் செய்தது உடையேன்கொல்.

(கருத்து.) நின்னைக் காணப் பலகால் வந்த தலைவன் யான் சேட் படுத்தியமையின் வாராதொழிந்தான்கொல்?

(வி - ரை.) வாழி: அசைநிலை. கொண்கன் - நெய்தனிலத் தலைவன். அதுவென்னும் சுட்டு, செய்யுளாதலின் முன் வந்தது; வாராமையைச் சுட்டியது. தகை - தகுதி; இங்கே உரிமை.

"பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின்" (குறள், 805)

என்பவாகலின், நான் நட்புரிமையால் இங்ஙனம் செய்தேனென்றாள். நோதக - நோவ. தலைவன் நோவச் செய்தலாவது சேட்படுத்தல். ஓ: அசைநிலை. அன்ன: பண்டறி சுட்டு. வரவறியான் - வந்திலனென்ற படி.

## ஒப்புமைப் பகுதி

1. அம்மவாழி தோழி: குறுந். எஎ: 1, ஒப்பு.

5. வயச்சுறு: குறுந். உசுசு: 3.

சுறுவழங்கு நீர்: "எறிசுறாக் கலித்த விலங்குநீர்ப் பரப்பு" (குறுந். ௩௨அ: 1); "சுறவுப்பிற ழிருங்கழி நீந்தி யல்கலும், இரவுக்குறிக் கொண்கன் வந்தனன்" (சிற்றட்டகம்.) (உ௲௦)

---

## தலைவி கூற்று

[தலைவனுக்குத் தூதாக வந்த தோழியை நோக்கி, "அவர் இங்கே வந்தாலும் என்னோடு அளவளாவாமற் செல்வர். அவருக்கு என்பால் அன்பு இலதாயிற்று" என்று தலைவி கூறி வாயில் மறுத்தது.]

உ௲க. ஒரூர் வாழினுஞ் சேரி வாரார்
சேரி வரினு மார முயங்கார்
ஏதி லாளர் சுடலை போலக்
காணக் கழிப மன்னே * நாணட்டு

---

(பி - ம்.) * நாணிட்டு, நாணட.

நல்லறி விழந்த காமம்
வில்லுமிழ் கணையிற் சென்றுசேட் படவே.

எ - து. வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) தோழி, ஓர் ஊர் வாழினும் சேரி வாரார் - தலைவர் நம்மோடு ஓர் ஊரிலே வாழ்ந்தாலும் நாம் இருக்கும் தெருவில் வாரார்; சேரி வரினும் ஆர முயங்கார் - இத்தெருவில் வந்தாலும் நன்றாகத் தழுவிக்கொள்ளார்; நாண் அட்டு - நாணத்தை அழித்து, நல் அறிவு இழந்த காமம் - தக்கதிது தகாததிதுவென்று எண்ணும் நல்ல அறிவை இழக்கச் செய்யும் காமமானது, சென்று சேண் பட - போய் நெடுந்தூரத்தில் அழியும்படி, ஏதிலாளர் சுடலைபோல - அயலாருடைய சுடுகாட்டைப்போல, காணூ - நம்மைக் கண்டும் வேறொன்றும் புரியாமல், கழிப - செல்லுவார்.

(முடிபு.) வாரார்; முயங்கார்; காமம் சேட்படக் கழிப.

(கருத்து.) தலைவர் என்பால் அன்பின்றி ஒழுகுகின்றார்.

(வி - ரை.) ஆர - எனக்கு மனநிறைவு உண்டாம்படி. "சுடலையை யாரும் விரும்பார்; அயலார் சுடலையாயின் வெறுத்து ஒதுங்கிச் செல்வர்; அதுபோல என்னைக் கண்டும் விருப்பின்றி வெறுத்தொழுகினர்" என்றாள்.

காமம் நாணை இழப்பதற்கும் நல்லறிவை இழப்பதற்கும் காரணமாதலின் நாணட்டு நல்லறிவிழந்த காமமென்றாள். விரைவில் நெடுந்தூரம் செல்லுதல்பற்றி வில்லுமிழ் கணையை உவமை கூறினாள். தலைவன் புறத்தொழுக்கினால் தலைவி தன் காமத்தை இழந்தாள். தலைவன்பால் விருப்பமில்லாள்போலக் கூறி வாயில் மறுத்தாள்.

'நாணத்தை நீக்கி நல்லறிவிழந்த தம் காமம் என்பால் அமையாமல் சேணிடத்திலுள்ளாராகிய பரத்தையர்பால் அமைவதற்காக என்னைக் கண்டும் செல்லுவார்' எனப் பொருள்கொள்ளுதலும் பொருந்தும்.

"நோதக் கன்றே காமம் யாவதும்
நன்றென வுணரார் மாட்டும்
சென்றே நிற்கும் பெரும்பே தைமைத்தே" (குறுந். எஅ)

என்பவாகலின், 'நல்லறிவிழந்த காமம்' என்றாள்.

மன், ஏ : அசை நிலைகள்.

## மேற்கோளாட்சி

1-2. சித்திரவண்ணம் வந்தது (தொல். செய். 214, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

1. சேரி : குறுந். உ௫அ : 1.

1-4. குறுந். உ0௩ : 1-5.

4-5. நாணும் காமமும் : குறள், 1163, 1247.

6. கணை வேகத்திற்று : நற். சுசு : 2 ; பெருங். ௧. 48 : 8 ; சீவக. 502, 701. (உருக)

---

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்திருந்த காலத்தில், "தலைவர் நம்மை நினைத்திலர் போலும்!" எனக் கவன்ற தலைவியை நோக்கி, "அவர் நினையாமலிரார் ; வினை முற்றாமையின் வந்திலர்" என்று தோழி கூறியது.]

உருஉ. உள்ளார் கொல்லோ தோழி யுள்ளியும்
வாய்ப்புணர் வின்மையின் வாரார் கொல்லோ
மரற்புகா † வருந்திய மாவெருத் திரலை
உரற்கால் யானை யொடித்துண் டெஞ்சிய
யாஅ வரிநிழற் றுஞ்சும்
மாயிருஞ் சோலை மலையிறந் தோரே.

எ - து. பிரிவிடைத் தோழி வற்புறுத்தியது.

[வற்புறுத்தியது - துணிவுபடச் சொல்லியது.]

ஊண்பித்தை.

(ப - ரை.) தோழி—, மரல் புகா அருந்திய - மரலாகிய உணவை உண்ட, மா எருத்து இரலை - பெரிய பிடரையுடைய ஆண் மான், உரல் கால் யானை - உரலைப் போன்ற காலையுடைய யானை,

---

(பி - ம்.) * வரற்புகா. † வருந்த.

ஒடித்து உண்டு எஞ்சிய - முறித்து உண்டு குறையச்செய்த, யாஅ வரிநிழல் - யாமரத்தின் புள்ளிகளையுடைய நிழலில், துஞ்சும் - தூங்குகின்ற, மா இரு சோலை மலை இறந்தோர் - மிகப் பெரிய சோலைகளையுடைய மலைகளைக் கடந்து நம்மைப் பிரிந்து சென்ற தலைவர், உள்ளார் கொல் - நம்மை நினைத்தாரலரோ? உள்ளியும் - அன்றி நினைத்தும், வாய்ப்பு உணர்வு இன்மையின் - வினைமுற்றி மீள்வதற்கு வாய்த்த செவ்வியை உணராமையினால், வாரார் கொல் - வாராராயினரோ?

(முடிபு.) தோழி, மலையிறந்தோர் உள்ளார் கொல்? உள்ளியும் வாய்ப்பு உணர்வின்மையின் வாரார்கொல்?

(கருத்து.) தலைவர் வினை முற்றாமையின் வந்திலர்; விரைவில் வருவர்.

(வி - ரை.) தலைவி, "அவர் வாராராயினர்; நம்மை நினைத் திலர்" என்று கவன்றனளாதலின், அவள் கருத்தையும் ஐயத்தின்பாற் படுத்தித் தன் கருத்தையும் ஐயத்தின்பாற் படுத்தினாள்; படுப்பினும் வாய்ப்பு உணர்வின்மையின் வாராராயின ரென்பதே தோழி கருத் தாகக் கொள்க.

கொல்: ஐயம். ஓ: அசைநிலை.

வாய்ப்பு - வாய்த்தல்; என்றது தாம் நினைந்து வந்த வினை முடிந்து மீள்வதற்குரிய செவ்வி வாய்த்தல். புகா - உணவு. உண்டு - உண்ண எனினுமாம்; எச்சத்திரிபு.

தனக்கு வேண்டிய உணவைப் போதிய அளவுண்ட இரலை யா மரத்தினடியின்கண் வந்து துஞ்சுதலைப் பார்ப்பாராதலின் தமக்கு வேண்டிய வினையை நன்கு முடித்து ஈண்டு வந்து நின்னோடு இன் புறுவரென்பது குறிப்பு.

## மேற்கோளாட்சி

4. செய்தெனெச்சம் செயவெனெச்சப் பொருட்டாய் நின்றது (தொல். வினை. 34, சே.); செய்தெனெச்சம் வினைமுதல்வினை கொள்ளாது பிறிதின் வினைகொண்டு ஈறுதிரிந்தது (ஷை. எச்ச. 61, சே, 55, தெய்வச்.); செய்தெனெச்சம் தனக்குரிய வினைமுதலானன்றிப் பிற வினைமுதலோடு காரணகாரியமின்றி வந்துமுடிந்தது (ஷை. வினை. 34, ந.); செய்தெனெச் சம் பிறவினைகொண்டு முடிந்தது (சீவக. 15, ந.); முதனிலை திரியாத பிறவினை (இ. கொ. 71.)

4-5. *செயவெனெச்சம் செய்தெனெச்சமாகத் திரிந்தது* (நன். 345, மயிலை, 346, சங், வி.) ; *முதற்பொருளின் வினை தமக்குரிய வினைமுதல் வினையானன்றிப் பிறவினைமுதல் வினையோடு முடிந்தது* (இ. வி. 248) ; *எஞ்சிய வென்பதற்கு எஞ்சுவித்தவெனப் பொருள் கொள்ளவேண்டும்* (தொல். *பாயிரவிருத்தி.* ப. 10.)

## ஒப்புமைப் பகுதி

1. **உள்ளார்கொல்லோ தோழி** : குறுந். கசு : 1, ஒப்பு.

1-2. "*உள்ளார் கொல்லோ காதல ருள்ளியும், சிறந்த செய்தியின் மறந்தனர் கொல்லோ*" (அகநா. உ௲ு : 2-3.)

3. **மரல்** : குறுந். ச00 : 2.

**மான் மரலை உண்ணுதல்** : "*மடமா னசாவினந் திரங்குமரல் சுவைக்கும்*", "*வரிமரற் கறிக்கு மடப்பிணைத், திரிமருப் பிரலைய காடிறந் தோரே*" (அகநா. சக : 12, க௲௲ : 17-8.)

4. **உரற்கால் யானை** : "*கறையடிக், குன்றுறழ் யானை*" (பெரும் பாண். 351-2) ; "*உரல்புரை பாவடி......ஒருத்தல்*" (கலி. உக : 1-2.)

4-5. **யானை யாவை உண்ணல்** : குறுந். ௲எ : 3-4, ஒப்பு. (உ௲உ)

---

## *தலைவன் கூற்று*

[*தலைவியை மணந்துகொள்ளாமல் வினைமேற் பிரிந்து சென்ற தலைவன் மீண்டு வருகையில் பாகனுக்குத் தலைவியினது ஊரைக் காட்டியது.*]

உ௲௲. கவலை கெண்டிய *வகல்வாய்ச் சிறுகுழி
கொன்றை யொள்வீ தாஅய்ச் செல்வர்
பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன
காரெதிர் புறவி னதுவே யுயர்ந்தோர்க்கு
நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்
† வரைகோ ளறியாச் சொன்றி
நிரைகோற் குறுந்தொடி தந்தை யூரே.

---

(பி - ம்.) * *கல்வாய்ச்.* † *வரை கொள்வறியா, வரைகொள வறியா.*

ஏ - து. பட்டபின்றை வரையாது சென்று வினைமுற்றி மீளுந் தலைமகன், தேர்ப்பாகற்குச் சொல்லியது.

[*பட்ட பின்றை - களவு வெளிப்பட்ட பிறகு; "பட்ட பின்றை வரையாக் கிழவன், நெட்டிடை கழிந்து பொருள் வயிற் பிரிதலும்.... கற்பா லான"* (இறை. 25.)]

பேயன்.

(ப - ரை.) *பாக, உயர்ந்தோர்க்கு - பெரியவர்களுக்கு, நீரொடு சொரிந்த மிச்சில் - நீரொடு தானம் பண்ணி எஞ்சிய பொருளையும், யாவர்க்கும் வரைகோள் அறியா சொன்றி - யாவருக்கும் தடை செய்தலை அறியாத சோற்றையும் உடைய, நிரை கோல் குறு தொடி - வரிசைப்பட்ட திரட்சியையுடைய குறிய வளைகளை யணிந்த தலைவியினுடைய, தந்தை ஊர் - தந்தைக்குரிய ஊரானது, கவலை கெண்டிய அகல் வாய் சிறு குழி - கவலைக் கிழங்கைக் கல்லியதனால் உண்டான அகன்ற வாயையுடைய சிறிய குழி, கொன்றை ஒள் வீ தாஅய் - கொன்றையினது ஒள்ளிய மலர் பரவப் பெற்று, செல்வர் - செல்வருக்குரிய, பொன் பெய் பேழை - பொன்னையிட்டு வைக்கும் பெட்டியினது, மூய் திறந்தன்ன - மூடியைத் திறந்து வைத்தாற்போன்ற தோற்றத்தையுடைய, கார் எதிர் - கார்காலத்தை ஏற்றுக்கொண்ட, புறவினது - முல்லை நிலத்தின்கண்ணது.*

(முடிபு.) *குறுந்தொடியின் தந்தையூர், புறவினது.*

(கருத்து.) *முல்லைநிலத்தினிடையே தோன்றும் அதுவே தலைவியின் ஊராகும்.*

(வி - ரை.) *களவு வெளிப்பட்ட பின்னர் தலைவியை வரைந்து கொள்ளாமல் வினைமேற் சென்று வினையை முடித்துக்கொண்டு, வரைந்து கொள்ளும்பொருட்டு மீளுந் தலைவன், தலைவியின் ஊரை உவகை மிகுதியினால் பாகனுக்குக் காட்டிக் கூறியது இது.*

*"வெளிப்படை தானே கற்பினொ டொப்பினும்*
*ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக*
*வரையாது பிரிதல் கிழவோற் கில்லை"* (தொல். *களவு.* 50)

*என்ற சூத்திரத்தின் உரையில் நச்சினார்க்கினியர்,*

*"மூன்றுமென முற்றும்மை கொடாது கூறினமையின் ஏனைப்பிரிவுகளின் வரையாது பிரியப் பெறும் என்றவாறாயிற்று; அவை வரை*

தற்குப் பொருள்வயிற் பிரிதலும் வேந்தற்குற்றுழியும் காவற்குப் பிரிதலு மென மூன்றுமாம் ”

என்றெழுதியதனால் இதற்கு விதிபெறலாகும். இதனைக் கற்பினுள் அமைத்துக் கூறுவர் தொல்காப்பியனாரும் இறையனாரகப் பொருளுடையாரும்.

கவலை - ஒருவகைக் கிழங்கு. கெண்டுதல் - கல்லுதல்; இச்சொல் இக்காலத்தில் கிண்டுதலென வழங்கும். ஒள்வீயென்றது அப்பொழுது உதிர்ந்த மலர்களை.

பொன்பெய்பேழை செல்வரேயுடைமையின் ‘செல்வர் பொன் பெய் பேழை’ என்றான். பொன் என்றது இங்கே பொற்காசுகளை. பொற்காசுகள் உருண்டை வடிவினவாக ஒருகாலத்தில் இருந்தன வென்பது இந்நூல் கஎ - ஆம் செய்யுளால் உணரலாகும். கொன்றை மலரை அப்பொற் காசோடு உவமித்தலை,

“ காசி னன்ன போதீன் கொன்றை ” (குறுந். கசஅ : 3)

என்ற அடியால் அறியலாம்.

குழிக்குப் பேழையும், கொன்றைக்குப் பொன்னும் உவமைகள். காரெதிர் புறவென்றான், கொன்றை மலருங்காலம் அதுவாதலின். தன்கையாற் சுட்டி ‘அதுவே’ எனக் காட்டினான். ஏகாரம் தேற்றம்.

உயர்ந்தோரென்பது அந்தணர்களை ; அவருக்கே நீரொடு சொரிதல் மரபாதலின். மிச்சில் - எஞ்சிய பொருள். வரைகோள் - வரைதல் ; தடைசெய்தல் ;

“ உண்மருந் தின்மரும் வரைகோ ளறியாது
... ... ... யாவரும்
கண்மெதி மருளும் வாடாச் சொன்றி ” (பதிற். உச : 18-22.)

தலைவியின் தந்தை பொன்னும் நெல்லும் மிகவுடையனென்பதைத் தலைவன் கூறினான்.

ஊரே : ஏகாரம், அசை நிலை.

## மேற்கோளாட்சி

மு. பிரிந்து மீளுந் தலைமகன் பாகற்குக் கூறியது (தொல். களவு, 12, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கவலை கெண்டிய குழி : “ கவலையங் குழும்பு ” (மதுரைக். 241.)

கவலைக் கிழங்கைக் கல்லுதல்: "கல்லுவென் மலைமேலுங் கவலையின் முதல்யாவும்" (கம்ப. கங்கைப். 66.)

1-2. கிழங்ககழ் குழியில் மலர் வீழ்தல்: ஐங். ௨௦௮ : 1-3.

1-3. கொன்றைக்குப் பொன்: குறுந். ௨௧ : 2-3, ஒப்பு.

4. காரேதிர் புறவு: "காரெதிர் கானம்" (புறநா. ௧௪௪ : 3.)

2-4. கொன்றை கார்காலத்தில் மலர்தல்: குறுந். ௨௧ : 3-4, ஒப்பு.

6. வரைகோள் இல்லாத சோறு: "சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி, வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப, மலரத் திறந்த வாயில் பலருண" (குறிஞ்சிப். 201 - 3.)

5-6. செல்வமும் சோறும்: "பெருந்திரு நிலைஇய வீங்குசோற் றகன்மனை" (கலி. ௮௩ : 1.)

7. கோற் குறுந்தொடி: "கோலமை குறுந்தொடிக் குறுமகள்", "கோலமை குறுந்தொடித் தளிரன் னோளே" (குறுந். ௨௬௭ : 5, ௩௫௬ : 8.)

6-7. சோற்றுவளமுடைய தந்தை: "தந்தை, அல்குபத மிகுத்த கடியுடை வியனகர்", "கூழுடைத் தந்தை யிடனுடை வரைப்பின்" (அகநா. ௪௯ : 13-4, ௧௪௫ : 17.)

மு. குறுந். ௨௩௫; அகநா. ௨௭௪. (௨௩௩)

---

தலைவி கூற்று

[பருவ வரவின்கண் தோழியை நோக்கி, "மாலைக்கால மென்று தனியே ஒன்றை வரையறுத்துச் சிலர் கூறுவர். தனியாயினோர்க்கு எல்லாப் பொழுதும் மாலைப் பொழுதே" என்று தலைவி கூறியது.]

௨௩௪. சுடர்செல் வானஞ் சேப்பப் படர்கூர்ந்
* தெல்லறு பொழுதின் முல்லை மலரும்
மாலை யென்மனார் மயங்கி யோரே

(பி - ம்.) * தெல்லுறு.

குடுமிக் கோழி நெடுநக ரியம்பும்
பெரும்புலர் விடியலு மாலை
பகலு மாலை துணையி லோர்க்கே.

எ - து. பருவவரவின்கண் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

மிளைப்பெருங் கந்தன்.

(ப - ரை.) தோழி, மயங்கியோர் - அறிவு மயங்கியோர், சுடர் செல் வானம் சேப்ப - சூரியன் மறைந்து சென்ற வானம் சிவப்புநிறத்தை யடைய, படர் கூர்ந்து - துன்பம் மிக்கு, எல் அறு பொழுதில் - ஒளி மங்கிய பொழுதில், முல்லை மலரும் - முல்லைப்பூ மலர்கின்ற, மாலை - மாலைக்காலம், என்மனார் - என்று அதனை வரையறுத்துக் கூறுவர்; துணையிலோர்க்கு - துணைவரைப் பிரிந்தவர்களுக்கு, நெடு நகர் - நீண்ட நகரத்தில், குடுமி கோழி இயம்பும் - உச்சிக் கொண்டையையுடைய கோழி கூவுகின்ற, பெரு புலர் விடியலும் - பெரிய இராப்பொழுது புலர்கின்ற விடியற்காலமும், மாலை - மாலைக்காலமாகும்; பகலும் மாலை - பகற்காலமும் மாலைக் காலமாகும்.

(முடிபு.) மயங்கியோர் முல்லை மலரும் மாலையென்மனார்; துணையிலோர்க்கு விடியலும் மாலை; பகலும் மாலை.

(கருத்து.) தலைவரைப் பிரிந்தமையால் நான் எப்பொழுதும் துன்பத்தையுடையவளானேன்.

(வி - ரை.) படர் - தனியரானார் படும் துன்பம்.

"மாலைக்காலமென்பது சூரியன் மறைந்து முல்லைமலரும் பொழுதென்று வரையறுத்து மயங்கியோர் கூறுவர். அது சிலருக்குப் பொருந்தும். தலைவரைப் பிரிந்த மகளிருக்கு எக்காலத்தும் காமநோய் மிகுதியாகவே இருத்தலின் எப்பொழுதும் மாலையேயாகும்" என்று தலைவி கூறினாள்.

தோழி, 'மாலைப் பொழுது வந்துவிட்டதே; இனித் தலைவி ஆற்றாளாவள்' என்று எண்ணியபொழுது, "ஆற்றாமை எனக்குப்புதிதன்று; அதனை எப்பொழுதும் உடையேன். எல்லாப் பொழுதும் எனக்கு மாலைக்காலம் தரும் துன்பத்தையே தருதலின் எல்லாம் மாலையே" என்று தலைவி கூறினாள்.

பகலென்றது விடியல், மாலை, யாமமொழிந்த சிறுபொழுதுகளை. ஏகாரங்கள் இரண்டும் அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

3. * மன் அசைநிலைப் பொருளில் வந்தது (நன். 431, மயிலை.)

## ஒப்புமைப் பகுதி

3, மு. கலி. ௧௧௯ : 16.

2-3. மாலையில் முல்லை மலர்தல்: குறுந். ௧0௮ : 4-5, ஒப்பு; ஐங். ௪௮௯ : 2.

4. தடமிக் கோழி : குறுந். ௧0௭ : 1-2.

5. பெரும்புலர் விடியல்: அகநா. ௬0௪ : 5.

மு. ஐங். ௧௮௬. (௨௬௪)

---

## தலைவன் கூற்று

[வரைந்து கொள்வதற்குமுன் பிரிந்து சென்ற தலைவன், தலைவி பால் மீளும்போது வாடைக்குக் கூறுவானாகி, "வாடையே, அதோ தெரிகின்றதே, அது தலைவியின் ஊர்; நீ அவளைப் பாதுகாப்பாயாக" என்று பாகனுக்கு உணர்த்தியது.]

௨௬௫. ஓம்புமதி வாழியோ வாடை பாம்பின்
தூங்குதோல் கடுக்குந் தூவெள் ளருவிக்
கல்லுயர் நண்ணி யதுவே நெல்லி
மரையின மாரு முன்றிற்
புல்வேய் குரம்பை நல்லோ ளூரே.

எ - து. வரையாது பிரிந்து வருவான் வாடைக்கு உரைப்பானாய்ப் பாகற்கு உரைத்தது.

[வருவான் - மீண்டு வரும் தலைவன்.]

மாயேண்டன்.

---

* என்மனாரென்பதிலுள்ள மன்.

(ப - ரை.) வாடை - வாடைக் காற்றே, நெல்லி - நெல்லிக் காயை, மரை இனம் ஆரும் முன்றில் - மரையின் திரள் உண்ணு கின்ற முன்னிடத்தையுடைய, புல் வேய் குரம்பை - புல்லால் வேயப் பட்ட குடிசைகளையுடைய, நல்லோள் ஊர் - நல்ல தலைவியினது ஊரானது, பாம்பின் தூங்கு தோல் கடுக்கும் - பாம்பின் நாலுகின்ற உரியை ஒக்கும், தூ வெள் அருவி - தூய வெள்ளிய அருவியை உடைய, கல் உயர் நண்ணியது - மலையின் உயரத்திலே பொருந்தி யது; ஓம்புமதி - அங்கேயுள்ள தலைவியை நீ பாதுகாப்பாயாக; வாழி - நீ வாழ்வாயாக!

(முடிபு.) வாடை, நல்லோள் ஊர் நண்ணியது; ஓம்புமதி; வாழி.

(கருத்து.) மலையின் உச்சியிலே தோன்றுவது தலைவியினது ஊராகும்.

(வி - ரை.) ஓம்புதலாவது தலைவியைத் துன்புறுத்தாமற் பாது காத்தல். தலைவி வாடைக்கு வருந்துதல் இயல்பு. துன்பம் செய்யும் இயல்பினதாகிய வாடைக்குக் கூறுவான், அதனை வயப்படுத்துவான் போல வாழி யென்றான். வாழியோ: ஓகாரம், அசைநிலை. உயர் - உயர்ந்த இடம்; என்றது உச்சியை. நல்லோளென்றான் அவள் நல்லியல்புகளை என்றும் நினைந்தவனாதலின்.

இதனால், தலைவி வாடைக் காற்றால் வருந்துவாளென்பதைப் புலப்படுத்தி அவள் ஊர் உள்ள இடமும் உணர்த்திக் குறிப்பினாற் பாகனை விரைந்து தேரைச் செலுத்தத் தூண்டினான்.

## மேற்கோளாட்சி

மு. தலைவன் நெட்டாறு சேறலின்றி அணிமைக்கட் பிரிந்தவழிக் கூறியது (தொல். களவு. 17, இளம்.); வரைவிடை வைத்துப் பிரிந்து போகும் தலைமகன் கூறியது (ஷை. ஷை. 12, ந.)

## ஒப்புமைப் பகுதி

1-2. அருவிக்குப் பாம்பின் உரி: "செவ்வரைக் கொழிநீர் கடுப்ப வரவின், அவ்வரி யுரிவை யணவரு மருங்கின்" (அகநா. கூஉஎ: 12-3.)

3-4. நெல்லிக்காயை மரையினம் உண்ணுதல்: (குறுந். கூகஎ: 1-2); "பராரை நெல்லி யம்புளித் திரள்காய், கான மடமரைக் கணநிரை

கவரும்", "பல்கா னெல்லிப் பைங்கா யருந்தி, மெல்கிடு மடமரை" (அகநா. சுக : 7-8, கூகக : 14-5); "மரைபிரித் துண்ட நெல்லி வேலி" (புறநா. கஎ0 : 1.)

5. புல்வேய் குரம்பை : மலைபடு. 439 ; அகநா. அஎ : 3, கஎஉ : 10, உ00 : 2, கூசுக : 23 ; புறநா. கஉ0 : 13.

மு. குறுந். உகூகூ ; அகநா. கூச, உஎச, உஅச. (உகூரு)

---

## தோழி கூற்று

[வரைவிடை வைத்துத் தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணிய தலைவன், "இவளை வருந்தாது பாதுகாப்பாயாக" என்று தோழிக்குக் கூற, அவள், "இவளைப் பிரிந்தால் என்றும் பிரிந்தே யிருக்கவேண்டும்; அங்ஙனம் செய்வாயேல் நீ உண்ட நலனைத் தந்து செல்வாயாக" என்று கூறுமுகத்தால் அவன் பிரிவைத் தடுத்தது.]

உகூசு. * விட்டென விடுக்குநாள் வருக வதுநீ
† நேர்ந்தனை யாயிற் றந்தனை சென்மோ
குன்றத் தன்ன குவ்வுமண லடைகரை
நின்ற புன்னை நிலந்தோய் படுசினை
வம்ப நாரை சேக்கும்
தண்கடற்சேர்ப்ப நீ யுண்டவென் ‡ னலனே.

எ - து. வரைவிடை வைத்துப் பிரிவான், 'இவள் வேறுபடாமை ஆற்றுவி' என்றாற்குத் தோழி நகையாடி உரைத்தது.

நரிவெரூஉத் தலையார்.

(ப - ரை.) குன்றத்து அன்ன - குன்றைப்போன்ற, குவவு மணல் அடை கரை - குவிதலையுடைய மணல் அடைந்த கரையினிடத்து, நின்ற புன்னை நிலம் தோய் படு சினை - வளர்ந்து நின்ற புன்னை மரத்தினது நிலத்தைத் தோய்ந்த தாழ்ந்த கிளையில், வம்ப நாரை சேக்கும் - புதிய நாரை தங்கும், தண் கடல் சேர்ப்ப - தண்ணிய கடற் கரையை யுடைய தலைவ, விட்டென விடுக்கும் நாள் வருக - இவளைநீ கைவிட்டாயென விடுக்கும் காலம் வருவதாக! அது நீ நேர்ந்தனை

(பி - ம்.) * விட்டொடன். † நொந்தனை. ‡ னலக்கே.

யாயின் அதற்கு நீ உடம்படுவாயாயின், நீ உண்ட என் நலன் - நீ நுகர்ந்த என் பெண்மை நலத்தை, தந்தனை சென்மோ - தந்து செல் வாயாக.

(முடிபு.) சேர்ப்ப, நாள் வருக; நேர்ந்தனையாயின் நலன் தந்து சென்மோ.

(கருத்து.) இவளைப் பிரிந்து செல்லல் தகாது.

(வி - ரை.) விட்டென - முற்றும் கைவிட்டாயென்னும்படி. சென்மோ: மோ, முன்னிலையசை. புதிய நாரையாதலின் மீனுணவு கொள்ளும் இடமறியாது மணற்குன்றிலுள்ள புன்னைச்சினையில் இருந்தது; நீ இவளியல்பறியாது பிரிய எண்ணினுயென்ற குறிப்பை யுடையது.

படுசினை - தாழ்ந்த கிளை. என்நலனென்றுள் தனக்கும் தலை விக்கும் உள்ள ஒற்றுமைபற்றி (தொல். பொருள். 27.)

தலைவனிடம் நலந்தாவெனத் தோழி கூறும் மரபு,

" மாணலந் தாவென வகுத்தற் கண்ணும் " (தொல். கற்பு. 9)

என்பதனுற் பெறப்படும்.

இதனுல் தோழி, பிரிந்தால் தலைவி உயிர்வாழாளென்பதைக் குறிப்பாற் புலப்படுத்தினுள்.

## மேற்கோளாட்சி

மூ. நீ கொண்ட நலத்தினைத் தந்து போவெனக் கூறுதற்கண் தோழிக்குக் கூற்று நிகழ்ந்தது (தொல். கற்பு. 9, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

3. குன்றத்தன்ன மணல்: (குறுந். ௲கக : 5); " குன்றத் தன்ன குவவுமண னீந்தி ", " குன்றிற் றோன்றுங் குவவுமண லேறி " (நற். உ0எ : 5, உ௲௫ : 6); " குன்றிற் றோன்றுங் குவவுமணற் சேர்ப்ப " (அகநா. ௲௪0 : 10.)

3-4. மணற் குன்றிற் புன்னை : குறுந். ௲கக : 5.

5. வம்பநாரை : அகநா. ௯00 : 14, ககo : 8.

4-5. புன்னையில் நாரை இருத்தல் : குறுந். உகூசு : 1-2; அகநா. ௯00 : 13-4, ககo : 7-8.

6. சேர்ப்பன் உண்ட நலன்: குறுந். ௧௩௩: 5, ஒப்பு.

2-6. என் நலத்தைத் தாவேன்றல்: குறுந். ௨௩௮: 3-4, ௩௪௧: 3-4; நற். ௩௧௫: 9-10; ஐங். ௧௫௧: 5; கலி. ௧௨௮: 10-11; அகநா. ௩௭௬: 18, ௩௧௬: 19; ஐந். எழு. 64, 66. (௨௩௬)

---

## தலைவன் கூற்று

[பொருளுக்காகத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் அதனை ஈட்டிக்கொண்டு மீள்கையில், தேர்ப்பாகனை நோக்கி, "எனக்கும் தலைவிக்கும் உள்ள இடையிடம் சேயதாகவும் பல இடையூறுகளை யுடையதாகவும் உளது. ஆயினும் என் நெஞ்சு அவள்பால் விரைந்து சென்றது" என்று கூறியது.]

௨௩௭. அஞ்சுவ தறியா தமர்துணை தழீஇய
நெஞ்சு நப்* பிரிந்தன் றாயினு மெஞ்சிய
கைபிணி நெகிழினஃ தெவனோ நன்றும்
சேய வம்ம † விருவா மிடையே
மாக்கடற் றிரையின் முழங்கி வலனேர்பு
கோட்புலி வழங்குஞ் சோலை
எனைத்தென் றெண்ணுகோ முயக்கிடை மலைவே.

எ - து. பொருள் முற்றி மீள்வான், தேர்ப்பாகனுக்கு ‡ உரைத்தது.

அள்ளூர் நன்முல்லை.

(ப - ரை.) பாக, அஞ்சுவது அறியாது - அஞ்சுதலை யறியாமல், அமர் துணை தழீஇய - நாம் விரும்பும் தலைவியைத் தழுவும்பொருட்டு, நெஞ்சு - என் நெஞ்சு, நம் பிரிந்தன்று - நம்மைப் பிரிந்து சென்றது; ஆயினும் - ஆனாலும், எஞ்சிய - குறைபாடாக உள்ள, கை பிணி நெகிழின் - கையாற்றழுவுதல் நெகிழுமாயின், அஃது எவன் - நெஞ்சு சென்று தழுவிய அதனாற் பயன் யாது? இருவாம் இடை - யானும் தலைவியுமாகிய இருவருக்கும் இடையிலுள்ள இடங்கள், நன்றும்

(பி - ம்.) * நெஞ்சுணப். † விருவர்தமிடையே. ‡ உரைப்பானுய்த் தன் நெஞ்சிற் குரைத்தது.

சேய - மிக்க சேய்மையை யுடையன; முயக்கிடை மலைவு - தலைவியோடு சேர்தற்கு இடையிலே உள்ள தடையாகிய, கோள் புலி - கொலை செய்யும் புலியானது, மா கடல் திரையின் முழங்கி - கரிய கடலின் அலையைப்போல ஆரவாரஞ் செய்து, வலன் ஏர்பு - வலமாக எழுந்து வழங்கும் சோலை - உலவுகின்ற சோலை, எனைத்து என்று எண்ணுகு - எத்தனை யென்று எண்ணுவேன்?

(முடிவு.) நெஞ்சு பிரிந்தன்று; ஆயினும் நெகிழின் எவன்? இடை சேய; மலைவாகிய சோலை எனைத்தென்று எண்ணுகு?

(கருத்து.) தலைவியுள்ள இடம் நெடுந்தூரத்தில் உள்ளது.

(வி - ரை.) அஞ்சுவது அறியாது - நான் அஞ்சுவதைத்தான் அறியாது எனலும் ஆம். தலைவியைக் காண்பதற்குரிய விருப்பையும் விரைவையும் நெஞ்சத்தின்மேல் ஏற்றிக் கூறினான். தனக்கு முன் நெஞ்சு பிரிந்து தலைவியை யடைந்ததென்னும் இத்தகைய கருத்து,

"கன்றுபுகு மாலை நின்றோ ளெய்தி
... ... ... ... ...
தொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ
நாணொடு மிடைந்த கற்பின் வாணுதல்
அந்தீங் கிளவிக் குறுமகள்
மென்றோள் பெறனசைஇச் சென்றவென் னெஞ்சே"

(அகநா. க: 20-26)

என்பதிலும் காணப்படும்.

'நெஞ்சு என்னினும் முந்தச் சென்றதாயினும் கைநெகிழாது தழுவாமையால் அது சென்றும் பயனில்லை. யான் செல்லின் நெகிழாது தழுவுவேன்' எனக் கூறினான். உள்ளப் புணர்ச்சியினும் மெய்யுறு புணர்ச்சியே வேண்டுவதென்பது அவன் கருத்து. நன்று, மிகுதிப் பொருளது (குறுந். உக: 4.) இருவாம் - இருவ ராகிய யாம் (கலி. சக: 3, சஙு: 4.)

சோலையின்கண் மலைவு எனைத்தெனக் கூட்டலும் பொருந்தும்.

இதனால் தலைவன் பாகனுக்குத் தனது காமமிகுதியையும் நெஞ்சின் விதுப்பையும் புலப்படுத்தி விரைவில் தேரை விடுதல் வேண்டுமென்று குறிப்பித்தான்.

அம்மவும், ஓகாரங்களும், ஏகாரங்களும் அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. அமர் துணை தழீஇ : குறுந். ௨௪௫ : 5.

2. (பி - ம்.) நேஞ்சுணை : நற். ௨0௪ : 5, ௨௪௪ : 6; அகநா. ௩௫௭ : 10.

3. கைபிணி நெகிழ்தலாற் பயனின்மை : " முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது, பைந்தொடிப் பேதை நுதல்" (குறள், 1238.)

5-6. புலியின் முழக்கத்திற்குக் கடலின் ஒலி : "வயமாப்போல், ஆலித்துப் பாயு மலைகடற் றண்சேர்ப்ப" (பழ. 40.) (௨௩௭)

---

## தோழி கூற்று

[பரத்தையினிடத்திருந்து மீண்டுவந்த தலைவன் தோழியின் பாற் சூள்கூறித் தெளிவிக்கப் புகுகையில், "எம் நலனைத் தந்து நின் சூளைக் கொண்டு செல்க" என்று அவள் கூறி வாயில் மறுத்தது.]

௨௩௮. பாசவ லிடித்த கருங்கா ழுலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
தொண்டி யன்னவென் னலந்தந்து
கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே.

எ - து. தலைமகன் பரத்தையின் மறுத்தந்து வாயில் வேண்டி தோழியிடைச் சென்று தேளிப்பான் புக்காற்குத் தோழி சொல்லியது.

[மறுத்தந்து - மீண்டுவந்து (குறுந். ௨0௬, கருத்து.) தெளித்தல் - சூள் கூறித் தேற்றுதல்.]

குன்றியன்.

(ப - ரை.) மகிழ்ந—, பச் அவல் இடித்த - பச்சை அவலை இடித்த, கரு காழ் உலக்கை - கரிய வயிரம் பொருந்திய உலக்கையை, ஆய் கதிர் நெல்லின் - அழகிய கதிரையுடைய நெற்பயிரையுடைய வயலினது, வரம்பு அணை துயிற்றி - வரப்பாகிய அணையிலே படுக்க வைத்து, ஒள் தொடி மகளிர் - ஒள்ளிய வளையையுடைய பெண்கள், வண்டல் அயரும் - விளையாட்டைச் செய்யும், தொண்டி அன்ன -

தொண்டியென்னும் பட்டினத்தைப் போன்ற, என் நலம் தந்து-எனது பெண்மை நலத்தைத் தந்துவிட்டு, நின் சூள் கொண்டனை சென்மோ-நினது சூளைப் பெற்றுக்கொண்டு செல்வாயாக.

(முடிபு.) மகிழ்ந, என் நலம் தந்து நின் சூள் கொண்டனை சென்மோ.

(கருத்து.) நீ சூள் கூறுவதனால் யாம் மயங்கேம்.

(வி-ரை.) தலைவன் பரத்தையினிடத்திருந்து மீண்டு வந்து தலைவியின் உடம்பாட்டைப் பெறும்பொருட்டுத் தோழியை அணுகி அவளைத் தூதுவிடக் கருதி அவள்பால் சூளுற்றுத் தான் பரத்தைமையுடையன் அல்லனெனக் கூறியவழி, தோழி, "நின் சூளின் இயல்பை நன்கறிவேம்; அதனை நீயே கொண்டு செல்; யாம் வேண்டேம். எம்பால் நீ நுகர்ந்த நலத்தைத் தந்து செல்க" என்று கூறி வாயில் மறுத்தாள்.

பாசவல் - நெல்லை வறுமல் இடித்துச் செய்த அவல். என் நலந்தந்து சென்மோ : உஙக - ஆம்செய்யுள் விசேடவுரையைப் பார்க்க. தொண்டி : குறுந். உகம.

நெல் : வயலுக்கு ஆகு பெயர். துயிற்றி : துயிலாததனை இங்ஙனம் கூறியது இலக்கணை. மகிழ்நன் - மருதநிலத் தலைவன்.

## ஒப்புமைப் பகுதி

1. பாசவல் : அகநா. கசக : 16-8 ; புறநா. சுங : 13 ; சீவக. 68, 1562.

3. வண்டலயர்தல் : அகநா. கஅ0 : 3, ஙங0 : 2.

3, ழ. குறுந். உசங : 3.

1-3. பதிற். உக : 1-2.

4. தொண்டியன்ன நலம் : "வளங்கெழு தொண்டி யன்னவிவ ணலனே", "திண்டேர்ப் பொறையன் றொண்டி யன்ன வெம்" (அகநா. க0 : 13, சு0 : 7.)

5. தலைவனது சூள்: குறுந். ௩௮௪: 4; தொல். கற்பு. 6, 9; ஐங். ௫௬: 4; பரி. ௮: 65, ௧௨: 64, கலி. ௭௫: 21, ௮௪: 33.

(௨௩௮)

---

## தலைவி கூற்று

[தலைவன் சிறைப்புறமாக இருக்கையில் தலைவி தோழிக்குக் கூறுவாளாய், "என் தோள்கள் நெகிழ்ந்தன; நாணமும் அகன்றது" என்றுகூறி வரைவு கடாயது.]

௨௩௯. * தொடிஞெகிழ்ந் தனவே தோள்சா யினவே
விடுநா ணுண்டோ தோழி விடர்முகைச்
சிலம்புடன் கமழு மலங்குகுலைக் காந்தள்
நறுந்தா தூதுங் குறுஞ்சிறைத் தும்பி
பாம்புமிழ் மணியிற் றோன்றும்
முந்தூழ் வேலிய மலைகிழ வோற்கே.

ஏ - து. சிறைப்புறம்.

ஆசிரியன் பெருங்கண்ணனன்.

(ப - ரை.) தோழி—, விடர் முகை சிலம்பு உடன் கமழும் - பிளப்பையும் முழைகளையும் உடைய பக்கமலை முழுதும் மணம் வீசும், அலங்கு குலை காந்தள் நறு தாது - அசைகின்ற கொத்துக்களிலுள்ள காந்தட் பூவின் நறிய தாதை, ஊதும் தும்பி - ஊதுகின்ற தும்பியென்னும் வண்டு, பாம்பு உமிழ் மணியின் தோன்றும் - பாம்பினால் உமிழப்படும் மணியைப்போலத் தோன்றுகின்ற, முந்தூழ் வேலிய - மூங்கிலை வேலியாகவுடைய, மலை கிழவோற்கு - மலைகளையுடைய தலைவன்பொருட்டு, தொடி ஞெகிழ்ந்தன - என் வளைகள் நழுவின; தோள்சாயின - என் தோள்கள் மெலிந்தன; விடு நாண் உண்டோ - இனி விடுவதற்குரிய நாணம் உள்ளதோ? அது முன்னரே ஒழிந்தது.

(முடிபு.) தோழி, மலைகிழவோற்குத் தொடி ஞெகிழ்ந்தன; தோள்சாயின; விடுநாண் உண்டோ?

---

(பி - ம்.) * தொடி நெகிழ்ந்தன.

(கருத்து.) என் நிலையறிந்து தலைவன் விரைவில் வரைந்து கொள்ளவேண்டும்.

(வி - ரை.) தொடி - தோள்வளை ; கைவளையுமாம். விடுநாண் - இனி விடப்படும் நாண். 'முன்பே நாணம் ஒழிந்ததாதலின் இனி விடுதற்கு என்பால் நாணம் என்றொன்றில்லை' என்றபடி. உண்டோ : ஓகாரம், எதிர்மறை. நறுந்தாது இயல்பிலே கமழ்வதாயினும் தும்பி ஊதியதனால் பின்னுங் கமழ்வதாயிற்று. பாம்பு காந்தளுக்கும், மணி வண்டுக்கும் உவமைகள்.

காந்தளின் தாதை ஊதி அதன் மணம் எங்கும் பரவும்படி செய்யும் தும்பியைப்போல, என் நலனுகர்ந்து அலர் எங்கும் பரவச் செய்தானெனவும், காந்தளுந் தும்பியும் பொருந்தியது பாம்பும் மணியும் போலும் வெருவரும் தோற்றத்தைத் தந்ததுபோல, எம் இருவர் நட்பும் அஞ்சுதற்குரியதாயிற்றெனவும் குறிப்புக்கள் தோன்றின.

இதனால் தன் மேனிமெலிவையும் நாணழிவையும் கூறி வரைவின் இன்றியமையாமையைத் தலைவி தலைவனுக்குப் புலப்படுத்தினாளாயிற்று.

## மேற்கோளாட்சி

1. 'மற்றுத் தொடி நெகிழ்ந்தனவே தோள் சாயினவேயெனப் பிரிவின்கண் வந்த வேறுபாட்டினை ஈண்டுக் கூறுரோ வெனின், அவை இன்னதன் பின்னர் இன்னது தோற்றுமென்னும் முறைமைய அல்லவாகலின் ஈண்டுக் கூறார் ; அவை, வினையுயிர் மெலிவிடத் தின்மையு முரித்தே யென்புழிச் சொல்லப் படு மென்பது' (தொல். மெய்ப். 14, பேர்.)

மு. ஆற்றுமை மிக்க விடத்து ஊழணி தைவரலென்னும் மெய்ப்பாடு வந்தது (தொல். மெய்ப். 21, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. தொடி நெகிழ்தல் : குறுந். ௯௦ : 4-5, கஅ௯ : 2, உ௯உ : 1.

தோள் மெலிதல் : குறுந். அஎ : 5, ஒப்பு ; கலி. உசு : 10 ; அகநா. கசஎ : 12.

தொடி நெகிழ்ந்து தோள் சாய்தல் : குறுந். கஅ௯ : 2, ஒப்பு ; ஐங். உஅ : 3-4 ; அகநா. ௬அஎ : 1.

2. விடர் முகை : குறுந். உகஅ : 1, ஒப்பு.

3. சிலம்புடன் கமழும் காந்தள் : " நறுந்தண் சிலம்பி னறுகுலைக் காந்தள் " (ஐங். உஉ௬ : 2) ; " அடுக்கரா றலர்காந்தள் " (கலி. ௫௯ : 3.)

குலைக்காந்தள் : குறுந். க : 4, ஒப்பு.

3-4. காந்தளை ஊதுந் தும்பி : கலி. ௪௩ : 8 - 9; அகநா. க0அ : 15-6 ; நாலடி. 283.

5. பாம்புமிழ் மணி : குறிஞ்சிப். 221 ; அகநா. எஉ : 14-5.

3-5. காந்தளுக்குப் பாம்பு உவமை : குறுந். கஅ௫ : 5-6 ; கலி. ௪௫ : 2 - 3 ; அகநா. க0அ : 12 - 5 ; கார். 11 ; திணைமாலை. 107 ; திணைமொழி. 3, 29 ; சிற். 233, 324.

வண்டுக்கு நீலமணி : "சில தும்பி...........நீலம் புரைவன பல காணாய் " (கம்ப. வனம்புகு. 12.)

காந்தளுக்குப் பாம்பும் தும்பிக்கு மணியும் : "திருமணி யுமிழ்ந்த நாகங் காந்தட், கொழுமடற் புதுப்பூ வூதுந் தும்பி, நன்னிற மருளு மருவிடர் " (அகநா. க௩அ : 17-19.)

6. முந்தூழ் வேலி : குறுந். கஅ : 1, ஒப்பு. (உ௩௯)

---

*தலைவி கூற்று*

[*வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்தகாலத்தில் தலைவி ஆற்றுளெனக் கவன்ற தோழியை நோக்கி, " நான் அவர் மலையை நோக்கி ஆற்றினேன் ; மாலைக்காலத்தில் அது மறைகின்றது ; ஆதலின் ஆற்றேனாயினேன் " என்று தலைவி கூறியது.*]

உ௪0. பனிப்புத லிவர்ந்த பைங்கொடி யவரைக்
கிளிவா யொப்பி னொளிவிடு பன்மலர்
வெருக்குப்பல் லுருவின் முல்லையொடு * கஞல
வாடை வந்ததன் றலையு நோய்பொரக்
கண்டிசின் வாழி தோழி தெண்டிரைக்
கடலாழ் கலத்திற் றோன்றி
மாலை மறையுமவர் மணிநெடுங் குன்றே.

---

(பி - ம்.) * கஞலி.

ஏ - து. வரைவிடை ஆற்ருளெனக் கவன்ற தோழிக்குச் கிழத்தி உரைத்தது.

கோல்லன் அழிசி.

(ப - ரை.) *தோழி—, பனி புதல் இவர்ந்த - குளிர்ச்சியை யுடைய புதலின்கட் படர்ந்த, பசு கொடி அவரை - பசிய கொடியாகிய அவரையினது, கிளி வாய் ஒப்பின் ஒளி விடு பல் மலர் - கிளிமூக்கை ஒப்பாகவுடைய ஒளியை வெளிப்படுத்தும் பல மலர்கள், வெருகு பல் உருவின் முல்லையொடு கஞல - காட்டுப்பூனையின் பல்லைப் போன்ற உருவத்தையுடைய முல்லைமலர்களோடு நெருங்கும்படி, வாடை வந்ததன் தலையும் - வாடை வீசுங்காலம் வந்ததற்கு மேலும், நோய் பொர - வருத்தம் என்னை அலைக்கும் வண்ணம், அவர் மணி நெடு குன்று - தலைவரது மணிகளுண்டாகும் உயர்ந்த குன்று, கடல் ஆழ் கலத்தில் தோன்றி - கடலில் ஆழ்கின்ற கப்பலைப் போலத் தோன்றி, மாலை மறையும் - மாலைக்காலத்தில் மறையும்; கண்டிசின் - இதனைக் காண்பாயாக.*

(முடிபு.) *தோழி, கஞல வாடை வந்ததன்றலையும் பொரக் குன்று மறையும்; கண்டிசின்.*

(கருத்து.) *அவர் மலையை நோக்கி ஆற்றினேன்; அது மறைவ தால் ஆற்றேனாயினேன்.*

(வி - ரை.) *அவரை யென்றது இங்கே மொச்சையை. அவரை யின்பூவிற்குக் கிளிமூக்கு உவமை. "வாடையே துன்பத்தை உண்டாக் குகின்றது; அதற்குமேலும் இம்மாலையால் நோய் உண்டாகும்" என்ருள். தலையும்: "கனலுநோய்த் தலையும்" (கலி. கக: 13.) வாழி: அசை நிலை.*

*இருளில் மறையும் குன்றுக்குக் கடலில் ஆழும் கலம் உவமை. கதிரவன் மறைய மறைய, மலை அடியிலிருந்து மறைந்துவருமாதலின் ஆழுங்கலத்தை உவமைகூறினுள்.*

*இருளுக்குக் கடல் நீரை உவமை கூறும் மரபு,*

"*கங்குல் வெள்ளங் கடலினும் பெரிதே*" (குறுந். ௩அஎ)

*என்பதிலும் காணப்படும்.*

*தலைவி, தலைவனது குன்றை நோக்கி ஆற்றியிருக்கும் வழக்கம் இந்நூல், உசகூ - ஆம் செய்யுளாலும் உணரப்படும்.*

*மணிநெடுங்குன்று* - நீல மணியைப் போன்ற நெடிய குன்றென லும் ஆம் (குறுந். ௩௬௭ : 6-7.)

## மேற்கோளாட்சி

மூ. *பருவங் கண்டு ஆற்றாது தலைவி தோழிக்குக் கூறியது* (தொல் களவு. 21, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. பனிப்புதல் : குறுந். ௬அ : 4, ஒப்பு.

1-2. அவரையின் செம்மலர்: "*பைந்நனை யவரை பவழங் கோப்ப வும்*" (சிறுபாண். 164.)

3. முல்லையரும்பிற்கு வேருகின்பல் : குறுந். ௨௨௦ : 3-5, ஒப்பு.

4. தலைவி வாளுடையால் வருந்துதல் : குறுந். ௧௦௩ : 4, ஒப்பு.

5. கண்டிசின் தோழி : குறுந். ௧௧௨ : 5, ஒப்பு.

7. மணிநெடுங் குன்று : சிறுபாண். 1 ; ஐங். ௨௦எ : 4, ௨௦௧ : 5 ௨௫௦ : 2 ; பரி. ௧௩ : 1, ஷை. திரட்டு, ௨ : 3.

மலையில் மணி உண்டாதல் : புறநா. ௨௧அ : 2 ; நான்மணி. 5 சிலப். ௨ : 77 ; சீவக. 4.

6-7. தலைவனது மலையைக்கண்டு தலைவி உவத்தல்: "*சேணெ டுங் குன்றங் காணிய நீயே*" (நற். ௨௨௨ : 10) ; "*அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைப், புலவுச்சேர் துறுக லேறி யவர்நாட்டுப், பூக்கெழு குன்ற நோக்கி நின்று, மணிபுரை வயங்கிழை நிலைபெறத், தணிதற்கு முரித்தவ ணூற்ற நோயே*" (ஐங். ௨௧௦) ; "*உள்ளா ராயினு முளனே யவர்நாட்டு...கடுந்திற லணங்கி னெடும்பெருங் குன்றத்துப், பாடின் னருவி சூடி, வான்றோய் சிமையந் தோன்ற லானே*" (அகநா. ௩௭அ 19-24) ; "*தோழியென், நெஞ்சிற் பிரிந்ததூஉ மிலரேதம், குன்ற நோக்கங் கடிந்தது மிலரே*" (தொல். களவு. 20, ந. மேற். "தொடி நிலை".)

தலைவன்குன்று மறையத் தலைவி வருந்துதல் : "*அவர்நாட்டு, மணி நிற மால்வரை மறைதொறிவள், அறைமலர் நெடுங்க ணார்ந்தன பனியே*" (ஐங். ௨௦அ : 3-5.)

(௨௩௦)

## தோழி கூற்று

[பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழியை நோக்கி, "யான் ஆற்றுவதற்கு எண்ணியும் என் கண்கள் தாமே அழுதன ; என் அவச நிலைக்கு யாதுசெய்வேன் !" என்று தலைவி கூறியது.]

உசக. * யாமே காமந் தாங்கவுந் தாந்தம்
கெழுதகை மையி னழுதன தோழி
கன்றாற்றுப் படுத்த புன்றலைச் சிறாஅர்
மன்ற வேங்கை மலர்பத நோக்கி
ஏறா திட்ட வேமப் பூசல்
விண்டோய் விடரகத் தியம்பும்
குன்ற நாடற் † கண்டவெங் கண்ணே.

எ - து. பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கபிலர்.

(ப - ரை.) தோழி—, யாமே காமம் தாங்கவும் - நாம் காம நோயைப் பொறுத்து ஆற்றியிருப்பவும், கன்று ஆற்றுப் படுத்த புன் தலை சிறாஅர் - கன்றுகளை வழியிலே செலுத்திய புல்லிய தலையையுடைய சிறுவர்கள், மன்றம் வேங்கை மலர்பதம் நோக்கி - மன்றத்தின்கண் உள்ள வேங்கைமரம் மலரும் செவ்வியைப்பார்த்து, ஏறாது இட்ட ஏமம் பூசல் - அம்மரத்தின்மேல் ஏறாமல் செய்த இன்பத்தைத் தரும் ஆரவாரம், விண் தோய் விடர் அகத்து இயம்பும் - வானத்தை அளாவிய மலைமுழைபின்கண் எதிரொலியுண்டாக்கும், குன்றம் நாடன் - குன்றங்களையுடைய நாட்டுக்குத் தலைவனை, கண்ட எம் கண் தாம் - கண்ட எம் கண்களாகிய தாம், தம் கெழுதகைமையின் - தமக்கு எம்பாலுள்ள உரிமையினால், அழுதன - தலைவர் பிரிந்தமை கருதி அழுதன.

(முடிபு.) தோழி, யாமே காமம் தாங்கவும் கண்தாம் கெழுதகைமையின் அழுதன.

(கருத்து.) யான் ஆற்ற எண்ணியும் ஆற்றாமை மீதூர்கின்றது.

(பி - ம்.) * யா்மெங். † கண்டவென்.

(வி - ரை.) யாமே: ஏகாரம், பிரிநிலை. தாங்குதல் - தடுத்தல்; வெளிப்படாது அடக்குதல். தாம்: அசை நிலையுமாம். கெழுதகைமை - உரிமை; கண்ட உரிமையென்பதும் பொருந்தும். கன்று - யானைக்கன்று; பசுக் கன்றுமாம். ஆற்றுப்படுத்த - போக்கிய (கலி. அ௫: 16, ந.) புன்றலை - சிவந்த தலையுமாம். மன்றம் - பொதுவிடம். தெய்வமுறைதலின் வேங்கைமரத்தின்மேல் ஏறுராயினர்.

வேங்கைமலரைப் பறிக்கக் கருதுவார் புலிபுலியென்று ஆரவாரித்தல் வழக்கம்;

"ஒலிசினை வேங்கை கொய்குவஞ் சென்றுழிப்
புலிபுலி யென்னும் பூச லேறன்ற" (அகநா. ௪அ: 6-7.)

கணணே: ஏகாரம், அசைநிலை.

'தலைவி ஆற்றுள்' எனக் கவன்ற தோழிக்குத் தான் ஆற்றுவலென்பது படவும், ஆற்றுமையைக் கண்களின்மேல் ஏற்றியும் கூறினுள்.

## மேற்கோளாட்சி

3. கருமச் சிதைவு இல்வழிப் பல பொருளொரு சொல்லைக் கிளந்து கூறவேண்டா (தொல். கிளவி. 55, கல், ந.)

மு. கையறு தோழி கண்ணீர் துடைத்தகாலத்துத் தலைவி கூறியது (தொல். களவு. 21, இளம், 20, ந.); தலைமகள் கலுழ்தற்காரணம் கூறியது (நம்பி. 176.)

## ஒப்புமைப் பகுதி

1. காமந் தாங்குதல்: குறுந். உ௬௦: 1.

3. ஆற்றுப் படுத்த: முல்லை. 81.

புன்றலைச் சிறர்: மலைபடு. 217, 253.

4. மன்ற வேங்கை: * ஐங். உ௫௪: 2; அகநா. உ௩உ: 7.

4-5. வேங்கை மலரின்பொருட்டு இடும் ஆரவாரம்: "கருங்கால் வேங்கை யிருஞ்சினைப் பொங்கர், நறும்பூக் கொய்யும் பூசல்" (மதுரைக். 296-7); "தலைநாட் பூத்த பொன்னிணர் வேங்கை, மலைமா ரிடூஉ மேமப் பூசல்" (மலைபடு. 305-6); "கிளர்ந்த வேங்கைச் சேணெடும் பொங்கர்ப், பொன்னேர் புதுமலர் வேண்டிய குறமகள், இன்னா விசைய பூசல் பயிற்றலின்" (அகநா. ௫உ: 2-4.)

* கபிலர் பாட்டு.

6. விடரகத்தியம்பும்: * குறுந். சஉ: 3.

6, ழ. அகநா. அ: 12.

2-7. கண்கள் தாமே அழுதல்: "தன்வரைத் தன்றியுங் கலுழ்ந் தன கண்ணே", "கண்ணே காமங் கரப்பரி யவ்வே", "கரப்பவுங் கரப்பவுங் கைம்மிக், குரைத்த தோழி யுண்க ணீரே" (நற். கஉ: 10, உரு: 9, உகரு: 9-10.) (உசக)

---

## செவிலித்தாய் கூற்று

[தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் மனைக்குச் சென்று மீண்டு வந்த செவிலித்தாய், "தலைவனும் தலைவியும் பிரிவின்றி ஒன்றி வாழ்கின்றனர். அவன் எங்கே சென்றாலும் விரைவில் வந்து விடுகின்றான்" என்று நற்றாய்க்குக் கூறியது.]

உசஉ. கானங் கோழிக் கவர்குரற் சேவல்
† ஒண்பொறி யெருத்திற் றண்சித ருறைப்பப்
புதனீர் வாரும் பூநாறு புறவிற்
சீறூ ரோளே மடந்தை வேறூர்
வேந்துவிடு தொழிலொடு ‡ செலினும்
¶ சேந்துவர லறியாது § செம்ம றேரே.

எ - து. கற்புக்காலத்துக் கடிநகர் சென்ற செவிலித்தாய் நற்றாய்க்குச் சொல்லியது.

[கடிநகர் - தலைவன் தலைவியுடன் இல்லறம் புரியும் மனை.]

குழற்றத்தன்.

(ப - ரை.) மடந்தை - தலைவி, கானங்கோழி கவர் குரல் சேவல் - காட்டுக் கோழியினது கவர்த்த குரலையுடைய சேவலினது, ஒள் பொறி எருத்தில் - ஒள்ளிய புள்ளிகளையுடைய கழுத்தில், தண் சிதர் உறைப்ப - தண்ணிய நீர்த்துளி துளிக்கும்படி, புதல் நீர் வாரும் - புதலின்கண் நீர் ஒழுகும், பூ நாறு புறவில் - மலர் மணம் வீசுகின்ற முல்லைநிலத்தின்கண் அமைந்த, சிறு ஊரோள் - சிறிய

---

* கபிலர்பாட்டு. (பி - ம்.) † நுண்பொறி. ‡ செல்லினும். ¶ சேர்ந்து. § செம்மற்றேரே.

ஊரில் உள்ளாள் ; செம்மல் தேர் - தலைவனதுதேர், வேந்துவிடு தொழிலொடு - வேந்தனால் ஏவப்பட்ட தொழிலை மேற்கொண்டு வேறு ஊர் செலினும் - வேற்றூருக்குச் சென்றாலும், சேந்துவரல் அறியாது - சென்ற ஊரின்கண்ணே தங்கிப் பின்வருதலை அறியாது ; உடனே வந்துவிடும்.

(முடிபு.) மடந்தை சீறூரோள் ; செம்மல்தேர் செலினும் அறியாது.

(கருத்து.) தலைவனும் தலைவியும் பிரிவின்றி ஒன்றி வாழ்கின்றனர்.

(வி - ரை.) கானங்கோழி : அம், சாரியை. மடந்தை : பருவங் குறியாது தலைவியென்னுந்துணையாய் நின்றது. செலினுமென்றது செல்லுதலின் அருமையைப் புலப்படுத்தியது. வேற்றூர் செலினுமென்று வாளாகூறாது, வேந்துவிடுதொழிலொடு செலினுமென்றது, பிறவற்றிற்காகச் செல்லுதலின்மையையும், அரசனது ஆணைக்கு அடங்குதல் இன்றியமையாததாதலின் அதன்பொருட்டே செல்லுதலையும் குறித்தது.

“ தலைவன் தலைவியைப் பிரியாது உறைகின்றான். எச்செயல் குறித்தும் பிரிந்து செல்வதில்லை. அரசனது ஏவல் கடத்தற்கரிதாதலின் அதன்பொருட்டு மாத்திரம் அரிதிற் சிலகால் வேற்றூர் போவான். போயினும் உடனே மீள்வன் ” என்ற கருத்துக்களை இவ்வடிகள் கொண்டுள்ளன.

## மேற்கோளாட்சி

1. சேவலென்பது காட்டுக்கோழிக்கு வந்தது (தொல். மரபு. 48, பேர்.) ; னகர வீறு வேற்றுமைக்கண் அம்முச்சாரியை பெற்று வந்தது (ஷை. புள்ளிமயங்கு. 110, ந.)

மு. செவிலி தலைமகனது நிலைமையும் தலைமகளது நிலைமையும் பார்த்துவந்து நற்றாய்க்குச் சொல்லியது (இறை. 53) ; தலைவியின் மாண்புகளை அகம்புகல் மரபின் வாயில்கள் தம்முட் கூறியது (தொல். கற்பு. 11, இளம்.) ; செவிலி நற்றாய்க்கு உவந்துரைத்தல் (ஷை. ஷை. 12, ந.); செவிலி நற்றாய்க்கு இருவர் காதலும் அறிவித்தது (நம்பி. 203.)

## ஒப்புமைப் பகுதி

1, மு. மலைபடு. 510.

2. தணிசிதநுறைப்ப : குறுந். கOச : 2.

3. புதல் நீர்வாரும் புறவு : குறுந். கூஅ : 4, ஒப்பு.

5. வேந்துவிடுதொழில் : தொல். மரபு. 81.

மு. "தெவ்வர் மேற்செலினும், பெருநெடுந் தோளண்ணல் பேர்ந் தன்றித் தங்கான்", "தேர்மன்ன னேவச்சென் றுலு முனைமிசைச் சேர்ந்தறியா, போர்மன்னு வேலண்ணல் பொன்னெடுந் தேர்பூண் புரவி களே", "வாரார் கழன்மன்னன் றனே பணிப்பினும் வல்லத்துத்தன், நேரார் முனையென்றுந் தங்கி யறியா னெடுந்தகையே" (பாண்டிக்.); "நனையகத் தல்கிய நாண்மல ரோதி நயந்துறையும், மனையகத் தல்லிடை வைகுத லாற்றஞ்சை வாணனென்னுர், வினையகத் தல்குதல் செல்லுவ ரேனுமவ் வேந்தர்பொற்றேர், முனையகத் தல்கல்செல் லாதொரு நாளு முகிழ்நகையே" (தஞ்சை. 376.) (உசஉ)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி வருந்தியது கண்டு, "நீ ஆற்றியிருக்கவேண்டும்" என்று வற்புறுத்திய தோழியை நோக்கி, "நான் தலைவனை நினைப்பதனுல் ஆற்றுமை மீதூர்கின்றது; இனி நினையேன்" என்று இரங்கித் தலைவி கூறியது.]

உசகூ. மானடி யன்ன கவட்டிலை யடும்பின்
தார்மணி யன்ன வொண்பூக் கொழுதி
ஒண்டொடி மகளிர் வண்ட லயரும்
புள்ளிமிழ் பெருங்கடற் சேர்ப்பனை
உள்ளேன் றோழி படீஇயரென் கண்ணே.

எ - து. வன்புறையெதிர் அழிந்து சொல்லியது.

[வன்புறை - வற்புறுத்துதல். அழிந்து - இரங்கி.]

நம்பி குட்டுவன்.

(ப - ரை.) தோழி—, மான் அடி அன்ன கவடு இலை அடும்பின் - மானின் குளம்பைப்போன்ற பிளவையுடைய இலைகளையுடைய

அடும்பினது, தார் மணி அன்ன ஒள் பூ கொழுதி - குதிரைக் கழுத்திலிடும் மாலையின்கண் உள்ள மணியைப்போன்ற ஒள்ளிய பூவை வலிய அலர்த்தி, ஒள் தொடி மகளிர் - ஒள்ளிய வளையையுடைய பெண்கள், வண்டல் அயரும் - விளையாட்டைச் செய்யும், புள் இமிழ் பெரு கடல் சேர்ப்பனை - பறவைகள் ஒலிக்கும் பெரிய கடற்கரைக்குத் தலைவனை, உள்ளேன் - இனி நினையேன்; ஆதலின், என் கண் படீஇயர் - என் கண்கள் துயில்க.

(முடிபு.) தோழி, சேர்ப்பனை உள்ளேன்; என்கண் படீஇயர்.

(கருத்து.) தலைவனை நினையாதிருத்தல் அரிதாதலின் ஆற்றுமையும் நீங்கல் அரிது.

(வி - ரை.) தலைவனது பிரிவினால் தலைவி துயிலொழிந்தனள். அதுகண்ட தோழி, "நீ துஞ்சாதது என்? நீ ஆற்றியிருத்தல் வேண்டும்" என்று வற்புறுத்திக் கூறினாள். அது கேட்ட தலைவி, தன் இயல்பறியாது தோழி கூறுவதற்கு நெஞ்சழிந்து, "நான் தலைவனை நினைந்தேன்; அதனால் என்கண்கள் துயிலொழிந்தன. இனி நீ வற்புறுத்தியமையின் நினையேன்; என் கண்கள் துயிலுக" என்றாள். தலைவனை நினையாமையும் கண் துயிலுதலும் கூடாவென்பதே தலைவி கருத்து.

அடும்பு - நெய்தனிலத்தில் வளரும் ஒருவகைக் கொடி. மகளிர் நெய்தனிலத்தில் அடும்பின் மலரைக் கொய்து வண்டலயரும் வழக்கம்,

"வண்ட லிழைஇயும் வருதிரை யுதைத்தும்
குன்றோங்கு வெண்மணற் கொடியடும்பு கொய்தும்"
(நற். உ௫௪ : 1-2)

என்பதனாலும் அறியப்படுகின்றது.

தம் விளையாட்டொன்றையே கருதி மகளிர் பூவை அலைக்கும் சேர்ப்பனென்றது, தன் வினையொன்றையே கருதிப் பிரிந்து என்னை வருந்தச் செய்வானென்னுங் குறிப்பினது.

## மேற்கோளாட்சி

மூ. பெரிதாகிய இடையீட்டினுள் அரிதாகத் தலைவன் வந்த ஞான்றும் பெறுத ஞான்றைத் துன்பமிகுதியாற் பெற்றதனையும் கனவு போன்று கொண்டு இகழ்ந்திருப்பின் தலைவிக்குக் கூற்று நிகழும் (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கவட்டிலையடும்பு : "ஒண்பன் மலர கவட்டிலை யடும்பு" (அகநா. அ௦ : 8.)

அடும்பின் இலைக்கு மானின் அடி : "கான லடும்பின் கவட்டிலைகள் - மானின், குளம்பேய்க்கு நன்றுடன்" (நள. கலிதொடர். 89.)

2. பூக்கோழுதுதல்: குறுந். அ௫ : 5.

3, மு. குறுந். உ௩அ : 3.

4. புள்ளிமிழ் சேர்ப்பு : "புள்ளிமிழ் கானல்" (குறுந். உகக :2.)

5. தலைவி துஞ்சாமை : குறுந். ௬ : 4, ஒப்பு.

5, மு. ஐங். கசஉ : 3. (உசங)

---

## தோழி கூற்று

[தலைவன் இரவுக்குறி வந்து ஒழுகாநின்றகாலத்துக் காப்பு மிகுதியால் தலைவியைக் காணப்பெறுமையின், தோழி அதன் காரணங்கூறி வரைவுகடாயது.]

உசச. பல்லோர் துஞ்சு நள்ளென் யாமத்
துரவுக்களிறு போல்வந் * திரவுக்கதவ முயறல்
கேளே மல்லேங் கேட்டனம் பெரும
ஓரி முருங்கப் பீலி சாய
நன்மயில் வலைப்பட் டாங்கியாம்
உயங்குதொறு முயங்கு மறனில் யாயே.

எ - து. இரவுக்குறி வந்தொழுகாநின்ற தலைமகற்குத் தம் காவல் மிகுதியாற் புறப்பட்டு எதிர்கொள்ளப் பெறுதவழி, பிற்றை ஞான்று தோழி, "வரைந்து கோளினல்லது † இவ்வொழுகலாற்றின் இனிக் கூடல் அரிது" என வரைவுகடாயது.

[பிற்றை ஞான்று - மறுநாள். இவ்வொழுகலாறென்றது களவொழுக்கத்தை.]

கண்ணன்.

(மு - ம்.) * திரவுக்கதவு. † இவ்வொழுகலாறு இனி,

(ப - ரை.) பெரும - தலைவ, பல்லோர் துஞ்சும் நள்ளென் யாமத்து - ஊரிலுள்ளார் பலரும் துயிலும் இருள் செறிந்த இடையிரவின்கண், உரவு களிறுபோல் வந்து - வலியையுடைய களிற்றைப் போல வந்து, இரவு கதவம் முயறல் - இராக்காலத்தே தாழிட்ட கதவைத் திறக்க முயன்றதனால் உண்டான ஒலியை, கேளேம் அல்லேம் - யாம் கேளேம் அல்லேம்; கேட்டனம் - கேட்டேம் ஓரி முருங்க - தலைக்கொண்டை சிதைய, பீலி சாய - தோகை மெலிய, நல் மயில் வலை பட்டாங்கு - நல்ல மயில் வலையின்கண்ணே அகப்பட்டாற்போல, யாம் உயங்கு தொறும் - யாம் வருந்தும் தோறும், அறன் இல் யாய் - மறமிக்க தாய், முயங்கும் - எம்மைத் தழுவுவாள்; அதனால் நின் குறிப்பறிந்து நின்பால் வர இயலவில்லை

(முடிபு.) பெரும, கதவம் முயறல் கேளேம் அல்லேம்; கேட்டனம்; யாய் முயங்கும்.

(கருத்து.) காவல்மிகுதியால் நின்னைத் தலைவி காண்டல் அரிதாதலின் வரைந்து கோடலே நலம்.

(வி - ரை.) தலைவன் இரவுக்குறியின்கண் தலைவியோடு அளவளாவுதற்கு வந்து கதவைத் தட்டித் தன் வரவைக் குறிப்பித்தான். அப்பொழுது அவன் வந்தது தெரிந்த தலைவி வருந்தினள் அவளது வருத்தத்தின் காரணத்தை உணராத செவிலி அவள் அச்சத்தால் அங்ஙனம் வருந்தினளென்று கருதி இறுகத் தழுவிக்கொண்டாள். இச்செய்தியையே தோழி தலைவனுக்குக் கூறினள்.

பல்லோர் துஞ்சும் யாமமாதலின் தலைவன் செய்த ஒலி தெளிவாகக் கேட்டது. தாம் கேட்டதை வற்புறுத்திக் கூறுவாளாகி எதிர் மறையாலும் உடம்பாட்டாலும் உணர்த்தினள்.

ஓரி - ஆண் தலைமயிர்; இங்கே ஆண்மயிலின் கொண்டைக்காயிற்று. தலைவனை எதிர்ப்படாது தடுத்தலின் அறனில்யாயென்றாள்.

## மேற்கோளாட்சி

மு. காப்புவரையிறத்தல் (தொல். களவு. 24, இளம்.); இரவுக் குறிக் காப்பின்கடுமை தோழி கூறியது (ஷை. ஷை. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. நள்ளென் யாமம்: குறுந். ௬ : 1. ஒப்பு.

பல்லோர் துஞ்சும் யாமம்: (குறுந். ௬: 1-3, ௩0௨: 6-7, ௩௫௫: 4); "பலர்மடி பொழுதில்" (ஐங். ௧0௪: 2.)

2. களிறு தலைவனுக்கு: குறுந். ௧௬௧: 7, ஒப்பு.

தலைவன் கதவம் முயறல்: "களையாநின் குறிவந்தெங் கதவஞ் சேர்ந் தசைத்தகை", "பொருந்துநோன் கதவொற்றிப் புலம்பியா முலமர" (கலி. ௬அ: 8, அ௩: 2); "வீழாக் கதவ மசையினன் புகுதந்து", "கடைஇன், நருங்கடிக் காப்பி னகனக ரொருசிறை, எழுதியன்ன திண்ணிலைக் கதவம், கழுதுவழங் கரைநாட் காவலர் மடியத், திறந்து" (அகநா. ௧0௨: 13, ௩௧௧: 1-5.)

5. மயில் வலைப்படுதல்: குறிஞ்சிப். 250; கலி. ௧௨அ: 16; சீவக. 424, ந.

6. அறனில் யாய்: குறுந். ௨௬௨: 2; நற். ௬௩: 6, ௧௪௫: 7, ௩௭௬: 12.

அன்னை தலைவியை முயங்கல்: குறுந். ௩௫௩: 6-7.     (உ௪௪)

---

## தலைவி கூற்று

[வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி ஆற்றாளெனக் கவன்ற தோழியை நோக்கி, "தலைவனது கொடுமையைப் பிறர் அறியின் அது மிக இன்னாது; ஆதலின் யான் ஆற்றியிருப்பேன்" என்று தலைவி கூறியது.]

உ௪௫. கடலங் கான லாய மாய்ந்தவென்
நலமிழந் ததனினு நனியின் னாதே
வாள்போல் வாய கொழுமடற் றாழை
மாலை வேணுட்டு வேலி யாகும்
மெல்லம் புலம்பன் கொடுமை
பல்லோ ரறியப் பரந்துவெளிப் படினே.

எ - து. வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

மாலைமாறன்.

(பி - ம்.) * மானில வெண்ணுட்டு, மரலை வெனணுட்டு.

(ப - ரை.) தோழி, வாள் போல் வாய - வாளரம் போன்ற விளிம்பையுடைய, கொழு மடல் தாழை - கொழுவிய மடலையுடைய தாழையானது, மாலை வேல் நாட்டு வேலி ஆகும் - வரிசையாக உள்ள வேல்களை நாட்டிய வேலியைப்போலப் பயன் தரும், மெல்லம் புலம்பன் கொடுமை - மெல்லிய கடற்கரையையுடைய தலைவன் என் மாட்டுச் செய்த கொடுமை, பல்லோர் அறிய பரந்து வெளிப் படின் - பலர் அறியும் வண்ணம் பரவி வெளிப்பட்டால், அங்ஙனம் வெளிப்படுதல், கடல் அம் கானல் ஆயம் - அழகிய கடற்கரைச் சோலையிலே விளையாடும் மகளிர் கூட்டத்தினர், ஆய்ந்த என் நலம் இழந்ததனினும் - பாராட்டிய எனது பெண்மைநலத்தை நான் இழந்ததைக் காட்டிலும், நனி இன்னாது - மிக இன்னாமையைத் தருவதாகும்.

(முடிபு.) புலம்பன்கொடுமை வெளிப்படின் நலம் இழந்த தனினும் இன்னாது.

(கருத்து.) என் துயரைப் பிறர் அறியாவாறு ஆற்றுவேன்.

(வி - ரை.) கடலங்கானல்: அம், சாரியையுமாம். ஆயம் ஆய்ந்த நலனுவது, எல்லாருடைய நலனினும் சிறப்பாகத் தெரிந் தெடுத்துப் பாராட்டும் நலன். கானலில் நலமிழந்ததனினு மெனக் கூட்டிப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். வாள் - கருக்கமைந்த வாயையுடைய கருவி. இயல்பாகவே வளர்ந்த தாழை செயற்கை வேலியைப்போலத் தோற்றியது. மெல்லம் புலம்பன்: அம், சாரியை. புலம்பு - கடற்கரை.

வெளிப்படுதல் இன்னாதெனச் சொற் கூட்டியுரைக்க.

கொடுமையென்றது பிரிந்து சென்றதை.

செயற்கையானன்றி இயல்பாகவே உள்ள தாழை வேலியாவது போல, நீ கூறவேண்டாமே இயல்பாகவே தலைவன் கொடுமையை நான் மறைத்து ஆற்றுவேனென்பது குறிப்பு.

## ஒப்புமைப் பகுதி

2. நனியின்னாதே: அகநா. ௩௬௨: 10.

2. ஒப்பு: "நாடிழந் ததனினு நனியின் னாது" (புறநா. ௯௩: 11.)

1-2. ஆயம் ஆய்ந்த நலம்: "வல்லோ ராய்ந்த தொல்கவின் றொலைய" (நற். உஅ௩: 4); "பலராய் மாண்கவின்" (அகநா. கஅ: 12.)

3. தாழையின் மடலுக்கு வாள்: "அரவுவாள் வாய முள்ளிலைத் தாழை" (நற். உ௩௫: 2.)

4. வேல்நாட்டு வேலி: "எஃகூன்றி" (பட். 78); "வாண்மதி லாக வேன்மிளை யுயர்த்து" (பதிற். ௩௩: 7); "வேன்மிடைந்த வேலியும்" (சீவக. 279); "சுற்றிலும், வேலியிட்ட தவர்களிட்ட வில்லும் வாளும் வேலுமே" (திருவரங்கக். 53.)

3-4. தாழை வேலி: "கண்டல் வேலி" (நற். ககக: 5, உ0எ: 1.)

5. மெல்லம் புலம்பன்: குறுந். ரு: 4, ஒப்பு.

தலைவனது கோடுமை: குறுந். க: 7, ஒப்பு; கலி. எஎ: 14.

(உசரு)

---

## தலைவி கூற்று

[இரவுக்குறிவந்த தலைவன் சிறைப்புறத்தில் இருப்ப, தலைவி தோழியை நோக்கிக் கூறுவாளாய், "நேற்று இரவில் ஒரு தேர் ஈண்டுப்போந்து சென்றது என்று சிலர் சொல்ல, அதுமுதல் தாய் என்னை வருத்துகின்றாள்" எனக் காவன்மிகுதியை உணர்த்தி வரைவு கடாவச் செய்தது.]

உசசு. பெருங்கடற் *கரையது சிறுவெண் காக்கை
களிற்றுச்செவி யன்ன பாசடை மயக்கிப்
பனிக்கழி துழவும் பானாட் டனித்தோர்
தேர்வந்து † பெயர்ந்த தென்ப வதற்கொண்
டோரு மலைக்கு மன்னை பிறரும்
பின்னுவிடு கதுப்பின் மின்னிழை மகளிர்
இளையரு மடவரு முளரே
அலையாத் தாயரொடு நற்பா லோரே.

எ - து. சிறைப்புறம்.

கபிலர்.

---

(பி - ம்.) * திரையது. † பெயரு மென்ப.

(ப - ரை.) தோழி, பெருகடல் கரையது-பெரிய கடற்கரையின் கண் உள்ளதாகிய, சிறு வெள் காக்கை - சிறிய வெண்மையையுடைய காக்கை, களிறு செவி அன்ன - களிற்றினது காதைப்போன்ற, பசு அடை மயக்கி - பசிய இலையைக் கலக்கி, பனி கழி - குளிர்ச்சியை யுடைய கழிநீரை, துழவும் - இரையின் பொருட்டுத் துழாவுகின்ற, பால் நாள் - பாதி இரவில், தனித்து ஓர் தேர் வந்து பெயர்ந்தது என்ப - தனியாக ஒரு தேர் இங்கே வந்து மீண்டு சென்றதென்று அயலார் கூறுவர்; அதற்கொண்டு - அது தொடங்கி, அன்னை - தாய், அலைக்கும் - என்னைத் துன்புறுத்துகின்றாள்; பின்னு விடு கதுப்பின் - பின்னல் நாலவிடப்பட்ட கூந்தலையுடைய, மின் இழை மகளிர் - மின்னுகின்ற ஆபரணத்தை யணிந்த மகளிருள், இளையரும் மடவரும் - இளமையுடையோரும் மடப்பமுடையோருமாகிய, பிறரும்—, உளர் - இருக்கின்றனர்; அவர், அலையா தாயரொடு - தம்மை வருத்துதல் இல்லாத தாய்மாரோடு, நல் பாலோர் - நல் வினையுடையர்.

(முடிபு.) தேர் வந்து பெயர்ந்ததென்ப; அன்னை அலைக்கும்; மகளிர் இளையரும் மடவரும் பிறரும் உளர்; அவர் நற்பாலோர்.

(கருத்து.) இப்பொழுது காப்புமிக்கதாதலின், தலைவன் என்னை வரைந்துகொள்வதே நலம்.

(வி - ரை.) சிறுவெண்மை யென்றது கழுத்திலுள்ளநிறத்தை. பாசடை - நெய்தலின் இலை முதலியன. அதற்கொண்டு - அது தொடங்கி (குறிஞ்சிப். 237, ந.); அதனைக் காரணமாகக் கொண்டெ னலுமாம்.

ஓரும்: அசைநிலை; இங்ஙனம் வந்த தேர் யாவரதெனை ஆராய் வாளெனலும் ஒன்று. அலைத்தலாவது புறம்போகலென்று காத்தல்.

பிறரும் இளையரும் மடவரும் உளரென்றமையின் தலைவி இளைய ளென்பதும் மடவளென்பதும் பெறப்பட்டன. உளரே: ஏகாரம் அசைநிலை. நற்பாலோரே: ஏகாரம், தேற்றம். யான் அந்நற்பால் பெற்றிலே னென்பது எச்சம்.

இதனால் இரவுக் குறியினால் உண்டாகும் அச்சமுணர்த்தி வரை தலே நலனென்னுங் கருத்துண்டாகச் செய்தாள். தலைவன் வரைதல் இதன் பயன்.

## மேற்கோளாட்சி

மு. பிறர் கூற்றுவல் தமர் தலைவியைக் காத்தற்கண் தலைவி கூறியது (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. சிறுவெண் காக்கை : குறுந். கூகூச : 1; நற். கூக : 2.

1, மு. ஐங். கசுக-எ0 : 1.

1, (பி - ம்.) பெருங்கடற்றிரையது சிறுவெண் காக்கை : குறுந். கூகங : 5.

2. பாசடைக்குக் களிற்றுச்செவி : "நெய்தற் பாசடை புரையு மஞ்செவி", "பிடிச் செவியி னன்ன பாசடை", "களிற்றுச் செவி யன்ன பாசடை தயங்க" (நற். சஎ : 3, உகூ0 : 1, கூக0 : 2); "களிற் றுச்செவி யன்ன பாசடை மருங்கின்", "நீர்மிசை நிவந்த நெடுந்தா ளகலிலை.........பெருங்களிற்றுச் செவியி னலைக்கும்" (அகநா. களகூ : 4, கஅகூ : 4-6.)

1-2. காக்கை பாசடையை மயக்கல்: "பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை, இருங்கழி நெய்தல் சிதைக்குந் துறைவன்" (ஐங். கஎ0 : 1-2.)

1-3. காக்கை கழியைத் துழவல்: "சேயிறு வெறிந்த சிறுவெண் காக்கை, பாயிரும் பனிக்கழி துழைஇ" (நற். கூக : 2-3.)

4. அதற்கொண்டு : கலி. கஙக : 7; அகநா. கூஉ : 9, உ௫0 : 9.

5. அன்னை அலைத்தல் : (குறுந். உசுஉ : 2); "எவ்வாய்ச் சென் றனை யவணெனக் கூறி, அன்னை யானுள் கழற", "சிறுகோல் வலந்தன ளன்னை யலைப்ப" (நற் கசஎ : 4-5, கசக : 4); *"என், அமர்க்க ணஞ்ஞையை யலைத்த கையே" (அகநா. கச௫ : 21-2); "அன்னை, அலையுமலை" (ஐந். எழு. 3); "அன்னையுங் கோல்கொண் டலைக்கும்" (முத். 66.)

3-5. தலைவன்தேர் வந்ததெனக் கேட்டு அன்னை அலைத்தல் : "பொங்குகழி நெய்த லுறைப்ப வித்துறைப், பல்கால் வரூஉந் தேரெனச், செல்லா தீமோ வென்றனள் யாயே" (ஐங். கஅகூ : 3-5); "கொடிதறி பெண்டிர் சொற்கொண் டன்னை, கடிகொண் டனளே தோழி......... நிலவுமணற் கொட்குமோர் தேருண் டெனவே" (அகநா. உ0 : 12 - 6.)

* செவிலி கூற்று.

6. பின்னுவிடு கதுப்பு: (குறுந். ௩௱௩: 6); "பின்னகம்" (அகநா. ௧: 22.) (உ௪௬)

---

## தோழி கூற்று

[தலைவன் விரைவில் வரைந்துகொள்வானென்று தலைவியிடம் தோழி கூறியது.]

உ௪எ. எழின்மிக வுடைய * தீங்கணிப் படூஉம்
திறவோர் செய்வினை யறவ தாகும்
கிளையுடை மாந்தர்க்குப் † புணையுமா ரிவ்வென
ஆங்கறிந் திசினே தோழி வேங்கை
வீயா மென்சினை வீயுக யானை
ஆர்துயி லியம்பு நாடன்
மார்புரித் தாகிய மறுவி னட்பே.

எ - து. (1) கடிநகர்த் தெளிவு விலங்கினமை யறிய, தோழி கூறியது.

[கடிநகர் - காவற்பட்ட மனையில். தெளிவு விலங்கினமை - தலைவன் தான் கூறித் தெளித்த சொல்லினின்றும் மாறுபட்டமையை. அறிய - தலைவி வாயிலாக அறியும்பொருட்டு.]

(2) வரைவுடன் பட்ட தோழி, தலைமகட்குக் கூறியதூஉமாம்.

[வரைவுடன் படுத்திய வென்பதே பொருத்தமுடையது.]

சேந்தம்பூதன்.

(ப - ரை.) தோழி—, வேங்கை - வேங்கை மரத்தினது, வீயா மென் சினை வீ உக - கெடாத மெல்லிய கிளையிலிருந்து மலர்கள் உதிர, அங்ஙனம் உதிருமிடத்திலே, யானை ஆர் துயில் இயம்பும் நாடன் - யானையானது பெறுதற்கரிய துயில்செய்வதனால் உயிர்ப்பின் ஒலியுண்டாகும் நாட்டையுடைய தலைவனது, மார்பு உரித்தாகிய மறு இல் நட்பு - மார்பை உரியதாகப் பெற்ற குற்றமற்ற நட்பானது, எழில் மிக உடையது - மிக அழகுடையது; ஈங்கு அணிப்படூஉம் - இவ்விடத்தில் அணிமைக்காலத்தே உண்டாகும்; திறவோர் செய்

(பி - ம்.). * தீங்கனிப், † புணையுமா ரில்லென.

வினை - திறமையுள்ளோர் செய்யும் காரியம், அறவது ஆகும் - அறத்தொடு பொருந்தியதாகும்; கிளை உடை மாந்தர்க்கு - சுற்றத்தையுடைய மக்களுக்கு, இவ் புணையும் என - இவை பற்றுக் கோடும் ஆகுமென்று, ஆங்கு அறிந்திசின் - அங்ஙனம் அறிந்தேன்.

(முடிபு.) தோழி, நாடன்நட்பு எழில் உடையது; அணிப் படூஉம்; வினை அறவதாகும்; இவ் புணையும் ஆம்; ஆங்கு அறிந்திசின்.

(கருத்து.) தலைவன் நின்னை விரைவில் வரைந்து கொள்வான்.

(வி - ரை.) இங்ஙனம் கூறின், "அவன், தான் கூறிய உறுதி மொழி பொய்த்தனன்" என்று தலைவி கூறுவாளாதலின், தெளிவு விலங்கினமையைத் தோழி அறிவாள்.

இரண்டாவது கருத்து: காப்புமிகுதி முதலியவற்றைத் தலைவன் பால் எடுத்துரைப்ப அவன் வரைந்துகொள்வேனென்று உறுதி கூறியதை யறிந்த தோழி அச்செய்தியைத் தலைவியிடம் கூறினாள்.

"அவன் வரைவானோ, வரையானோ" எனக்கவன்ற தலைவியிடம் முதலில் எழில் மிகவுடையதென்றாள், அவள் மனம் உறுதிபெறற்கு. அணிப்படும் - விரைவில் நடைபெறும். அவன் அங்ஙனம் செய்யப் புகுந்தது அறத்தின்பாற் பட்டதென்பாள் அறவதென்றாள். திறவோரென்றமையால் தலைவனைப் பாராட்டினாள். கிளையுடை மாந்தரென்றது தம்மையே. "சுற்றத்தாரிடையே காவற்பட்டுக் கிடக்கும் நமக்கும் அச்சுற்றத்தாருக்கும் உவப்பாக இருக்கும் வரைவிற்குரிய செயல்கள், இதுகாறும் பற்றின்றிக் கலங்கிய மனத்தினேமாகிய நமக்குப் பற்றுக்கோடாயின" என்றாள்.

இவ் - இவை; அண்மையில் நிகழும் செயல்களாதலின் இங்ஙனம் சுட்டினாள். மார் : அசைநிலை. அறிந்திசின் : இசின், தன்மைக் கண் வந்த அசை. யானையாற் சிதைக்கப்படாமல் இருத்தலின், 'வீயா மென்சினை' எனச் சிறப்பித்தாள். துயில் : ஆகுபெயர். இயம்புதல் - நெடுந்தூரம் ஒலித்தல் (அகநா. அ : 12, உரை.)

வேங்கைமலர் தன்மேல் உதிரப் புறத்தே செவிப்படும் ஒலியோடு யானை தூங்கும் நாடனென்றது, தலைவன் இருவகைச் சுற்றத்தாரும் பாராட்ட அவரிடையே தலைவியை மணந்துகொண்டு வெளிப்படையாகத் தலைவியின் இன்பம் நுகர்வானென்ற குறிப்பினது.

"புலிப்பகை வென்ற புண்கூர் யானை
கல்லகச் சிலம்பிற் கையெடுத் துயிர்ப்பின்
நல்லிணர் வேங்கை நறுவீ கொல்லன்
குருகூது மிதியுலைப் பிதிர்விற் பொங்கிச்
சிறுபன் மின்மினி போலப் பலவுடன்
மணிநிற விரும்புதற் றூவு நாட"    (அகநா. உ0உ : 3-8)

என்னும் பகுதியைப் பார்க்கையில் இச்செய்யுளின் 4-6-ஆம் அடிகள்,

"  ...   ...   ... வேங்கை
வீயா மென்சினை வீயுக யானை
ஆருயி ரியம்பு நாடன்"

என்று இருக்கலாமென ஊகிக்கப்படுகின்றது.

## ஒப்புமைப் பகுதி

3. இவ்வேனை : தொல். களவி. 4.

6-7. நாடன்மார்பு தலைவிக்கு உரியது : குறுந். சுஅ : 4, ஒப்பு; நற். கூஉஎ : 7-9.

நாடன் நட்பு : குறுந். கூ : 4, கஙச : 7, கூ0ச : 8, கூகூ : 4, கூஉசு : 3, ச0க : 6.    (உசஎ)

---

## தோழி கூற்று

[வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய தலைவியை நோக்கி, "வெறியாட்டு அயர்ந்து தாய் தலைவனையறிந்து, வரைவுக்குரிய வற்றைச் செய்கின்றாளாதலின் வரைவுண்டாதல் ஒருதலை; அதற்குரிய நாளும் அணிமையிலுள்ளது; ஆதலின் நீ ஆற்றுயாதல் நன்றன்று" என்று தோழி கூறியது.]

உசஅ. அதுவர லன்மையோ வரிதே யவன்மார்
புறுக வென்ற நாளே குறுகி
ஈங்கா கின்றே தோழி கானல்
ஆடரை புதையக் கோடை யிட்ட
† அடும்பிவர் மணற்கோ டூர நெடும்பனை

(பி - ம்.) * பிறுக. † அடும்பிவர் மணற்கோ டூர்நெடும் பெண்ணை, அடம்பிவர் பமன்ற கோடுயர் நெடும்பனை.

*குறிய வாகுந் துறைவனைப்*
*பெரிய கூறி யாயறிந் தனளே.*

எ - து. வரைவு நீட்டித்தவழி ஆற்றாளாகிய கிழத்தியைத் தோழி ஆற்றுவித்தது.

உலோச்சன்.

(ப - ரை.) *தோழி—, கானல் ஆடு அரை புதைய - கடற் கரைச் சோலையினிடத்துள்ள அசைந்த அடியிடம் புதையும்படி, கோடை இட்ட - மேல்காற்றுக் கொணர்ந்து இட்ட, அடும்பு இவர் மணல் கோடு ஊர - அடும்பங்கொடி படர்ந்த மணற்குவியல் பரவ, நெடு பனை - நெடிய பனைமரங்கள், குறிய ஆகும் - குறியனவாகும், துறைவனை - கடற்றுறையையுடைய தலைவனை, பெரிய கூறி - முருகனென்று சொல்லி வெறியெடுத்து, யாய் அறிந்தனள் - நம் தாய் அறிந்து கொண்டாள்; ஆதலின், அது வரல் அன்மை அரிது - வரைவுக்குரிய நாள் வாராமை அரிதாகும்; வரைவு நேரும்; அவன் மார்பு உறுக என்ற நாள் குறுகி - அவனது மார்பை அடைகவென்று வரையறுத்த நாள் அணிமையாக வந்தும், ஈங்கு ஆகின்று - இவ்வண்ணம் நின்பால் ஆற்றாமை உண்டாகின்றது; இஃது என்கொல் ?*

(முடிபு.) *தோழி, துறைவனை யாய் கூறி அறிந்தனள்; அது வரலன்மை அரிது; குறுகி ஈங்காகின்று.*

(கருத்து.) *வரைவு அணிமையில் நிகழ்வதாதலின் நீ ஆற்று திருத்தல் நன்றன்று.*

(வி - ரை.) *அது: நெஞ்சறிசுட்டு; வரைவுநாளைச் சுட்டியது. அன்மையோ: ஓகாரம், அசைநிலை. அரிதே: ஏகாரம், தேற்றம். குறுகியுமென்ற உம்மை தொக்கது. ‘குறுகியதனால் இத்தகைய முயற்சிகள் நடைபெறுகின்றன’ எனப்பொருள் கொள்ளுதலும் ஆம்.*

*கோடை - மேல்காற்று. மணல் மேலே பரவப்பரவ வெளியிலே தோன்றும் பனையின் அடிப்பகுதி குறியதாகின்றது. பெரிய கூறுதலாவது, இது தெய்வத்தான் வந்ததெனக் கூறுதல். கூறி யென்றது கூறிவெறியாட்டெடுத்தாளென்பதைக் குறித்தது. யாய் அறிந்தது, தோழி அறத்தொடு நின்றதனால்.*

## ஒப்புமைப் பகுதி

1-2. தலைவன் மார்பைத் தலைவி உறுதல்: குறுந். சுஅ: 4, ஒப்பு: உசஎ: 7, ஒப்பு.

3. ஆகின்று: குறுந். கரு: 4, ஒப்பு.

5. மணற்கோட்டின்மேல் அடும்பங்கொடி படர்தல்: (குறுந். கூசக: 1-2); "அடும்பிவ ரணியெக்கர்" (கலி. ககூஉ: 16); "அடும்பம னெடுங்கொடி யுள்புதைத் தொளிப்ப, வெண்மணல் விரிக்குந் தண்ணந் துறைவன்" (தொல். களவு. 20, ந. மேற்.)

4-5. காற்றால் மணற்றவியல் உண்டாதல்: (குறுந். கூஎஉ: 2); "கடுவளி தொகுப்ப வீண்டிய, வடுவா ழெக்கர் மணலினும்" (புறநா. கூரு: 20-21.)

5-6. மணலாற் பனை மறைதல்: குறுந். கூஎஉ: 1 - 3.

(உசஅ)

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடைவைத்துப் பிரியுங் காலத்தில், தன்னை நோக்கி, "நீ ஆற்றும் ஆற்றல் உடையையோ?" என்ற தோழிக்கு, "அவர் மலையைக்கண்டு ஆற்றுவேன்" என்பதுபடத் தலைவி கூறியது.]

உசகூ. இனமயி லகவு மரம்பயில் கானத்து
நரைமுக வூகம் பார்ப்பொடு பனிப்பப்
படுமழை பொழிந்த சார லவர்நாட்டுக்
குன்ற நோக்கினென் றோழி
பண்டை யற்றோ கண்டிசி னுதலே.

எ - து. வரைவிடை வைப்ப, ஆற்றகிற்றியோ வென்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கபிலர்.

(ப - ரை.) தோழி—, இனம் மயில் அகவும் - திரளாக உள்ள மயில்கள் ஆரவாரிக்கும், மரம் பயில் கானத்து - மரங்கள் செறிந்த காட்டிடத்தில், நரை முகம் ஊகம் - வெள்ளைமுகத்தையுடைய கருங் குரங்கு, பார்ப்பொடு பனிப்ப - குட்டிகளோடு குளிரால் நடுங்கும்

படி, படு மழை பொழிந்த சாரல் - ஒலிக்கின்ற மழை பொழிந்த மலைச்சாரலையுடைய, அவர் நாடு குன்றம் - அத்தலைவரது நாட்டி லுள்ள குன்றத்தை, நோக்கினென் - பார்த்தேன்; அதனால், நுதல் - ஒளியிழந்து பசப்பூர்ந்த என் நெற்றி, பண்டை அற்றோ - பசப் பூராத பழைய தன்மையுடையதாயிற்றோ? கண்டிசின் - பார்ப் பாயாக.

(முடிபு.) தோழி, அவர் நாட்டுக் குன்றம் நோக்கினென்; நுதல் பண்டையற்றோ? கண்டிசின்.

(கருத்து.) தலைவருடைய குன்றத்தை நோக்கி ஆற்றி யிருப்பேன்.

(வி - ரை.) தலைவன் பிரியுங் காலத்தில் தலைவி வேறுபட்டாள்; அவள் நுதல் பசப்பூர்ந்தது. அது கண்ட தோழி, "இப்பொழுதே நின் வண்ணம் வேறுபடுகின்றது. தலைவன் பிரிந்திருக்கும் காலமுழு தும் ஆற்றும் ஆற்றல் நின்பால் உளதோ?" என்று வினவத் தலைவ னது குன்றத்தைநோக்கி ஊக்கம்பெற்ற தலைவி, "இப்பொழுது என் நுதலைப்பார்; பழைய விளக்கம் அதன்பால் உண்டாயிற்றன்றே. இங்ஙனமே தலைவர் குன்றத்தைப் பார்த்துப் பார்த்து ஆற்றுவேன்" என்று கூறினாள்.

மழை பொழிந்த கார்காலமாதலின் மயிலினம் அகவின. மழைக்குக் குரங்குகள் நடுங்கும்; அங்ஙனம் நடுங்கி ஒடுங்கியிருக்கும் இருப்பைக் * கூரலிருக்கையென்றும் † குன்னுக்கலென்றும் கூறுவர்;

"மாமேயன் மறப்ப மந்தி கூர" (நெடுநல். 9);

"மடவ மயில்கூவ மந்திமா கூர" (கைந்நிலை, 36.)

படுமழை - தாழ்ந்த மழையெனலும் பொருந்தும்.

## ஒப்புமைப் பகுதி

2 - 3. மழைக்குக் குரங்கு அஞ்சுதல்: "மழையென்றஞ்சிச், சில மந்தி யலமந்து மரமேறி முகில்பார்க்குந் திருவை யாறே" (தே. திருநா.); "மந்திதுயி லுற்றமுழை வன்கடுவ னங்கத், திந்திய மவித்ததனி யோகியி னிருந்த" (கம்ப. கார்காலப். 76.)

5. கண்டிசின்: குறுந். உசo : 5.

* நற். கஅக : 7. † நெடுநல். 9, ந.

4-5. தலைவனது குன்றத்தை நோக்கித் தலைவி உவத்தல்: குறுந். உ௪0 : 6-7, ஒப்பு. (உ௬௬)

---

## தலைவன் கூற்று

[தலைவியைப் பிரிந்து சென்று வினைமுற்றி மீண்டுவரும் பொழுது தலைவன் தேர்ப்பாகனைநோக்கி, "இன்றுமாலை வருவதற்குள் தலைவி யிருக்குமிடத்திற்கு விரைவில் தேரைச் செலுத்துவாயாக" என்றது.]

உ௫0. பரலவற் படுநீர் மாந்தித் துணையோ
டிரலை நன்மா * னெறிமுத லுகளும்
மாலை வாரா வளவைக் காலியற்
கடுமாக் கடவுமதி பாக நெடுநீர்ப்
பொருகயன் முரணிய வுண்கட்
டெரிதீங் கிளவி தெருமர † லுயவே.

எ - து. தலைமகன் பாகற்கு உரைத்தது.

நாமலார் மகன் இளங்கண்ணன்.

(ப - ரை.) பாக - தேர்ப்பாகனே, பரல் அவல் படு நீர் - பருக்கைக் கற்களையுடைய பள்ளத்திலே தங்கிய நீரை, மாந்தி - உண்டு, இரலை நல் மான் - ஆண்மான், துணையோடு - பெண்மானோடு, நெறி முதல் - வழியினிடத்து, உகளும் - துள்ளி விளையாடுகின்ற, மாலை வாரா அளவை - மாலைக்காலம் வருதற்குமுன்னே, நெடு நீர் பொரு கயல் முரணிய உண்கண் - ஆழ்ந்த நீரிலுள்ள ஒன்றையொன்று எதிர்ந்த இரண்டு கயல்களையொத்த மையுண்ட கண்களையும், தெரி தீம் கிளவி - ஆராய்ந்த இனிய சொற்களையுமுடைய தலைவி, தெருமரல் உய - துன்பத்தாற் சுழலுதலினின்றும் நீங்க, கால் இயல் கடு மா கடவுமதி - காற்றின் இயல்பையுடைய விரைகின்ற குதிரையைச் செலுத்துவாயாக.

(முடிபு.) பாக, மாலை வாரா அளவை, கிளவி உய மாக்கடவுமதி.

---

(பி - ம்.) * னெறிதலுமுகளும். † லுகவே.

(கருத்து.) மாலை வருவதற்குமுன் தலைவியிருக்கு மிடத்திற்குத் தேரைச் செலுத்துவாயாக.

(வி - ரை.) மாலைவந்தால் தலைவி காமம்மிக்குத் துன்புறுவ தன்றித் தானும் நெறிமுதலுகளும் இணைமான்களைக் கண்டு, 'இப் பொழுது நாம் இங்ஙனம் தலைவியோடு இருக்கப்பெற்றிலேமே!' என்னும் ஆராமை யுறுதலின் அதற்குமுன் தலைவிபாற் செல்ல விரும்பினான்.

கடவாக் குறையன்றிக் குதிரையாற் குறையில்லை யென்பான் அதனை, 'காலியற் கடுமா' எனச் சிறப்பித்தான்.

நெடுநீர்: நெடுமை, இங்கே ஆழத்தின் மேற்று; "நெடுங் கடலுந் தன்னீர்மை குன்றும்" (குறள், 17) என்புழிப்போல.

பொருகயல் - ஒன்றையொன்று எதிரிடுங் கயல். முரணிய : உவமவாசகம்.

## ஒப்புமைப் பகுதி

1. பரலின் நீர் : குறுந். கூகு : 1, ஒப்பு.

1-2. பரலும் இரலையும் : குறுந். கூகு : 1, ஒப்பு.

பரலிலுள்ள நீரைப் பருகி இரலைமான் பெண்மானோடு உகளுதல் : குறுந். கூகு : 1-2.

இரலையும் துணையும் இணைந்திருத்தல் : குறுந். கூகு : 1-3, ஒப்பு.

3-4. குதிரையின் வேகத்திற்குக் காற்று : "வான்வழங் கியற்கை வளிபூட் டினையோ" (அகநா. கூஅச : 9.)

5. கயல் முரணிய உண்கண் : "கயலென வமர்த்த வுண்கண்", "மதர்கயன் மலைப்பி னன்னகண்" (அகநா. கஉகூ : 19, கசo : 10); "கயன்மலைப் பன்ன கண்ணிணை" (யா. வி. 39, மேற்.)

(உருo)

---

## தோழி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற கார்காலம் வந்தபொழுது தலைவி வருந்த, "இது கார்காலமன்று; இப்பொழுது பெய்வது கால மல்லாத காலத்துப் பெய்யும் மழை" என்று தோழி வற்புறுத்திக் கூறி ஆற்றுவித்தது.]

உருக. மடவ வாழி மஞ்ஞை * மாயினம்
கால மாரி பெய்தென வதனெதிர்
† ஆலலு மாலின பிடவும் பூத்தன
காரன் றிகுளை தீர்கநின் படரே
கழிந்த மாரிக் கொழிந்த பழநீர்
புதுநீர் கொளீஇய வுகுத்தரும்
‡ நொதுமல் வானத்து முழங்குகுரல் கேட்டே.

எ - து. பிரிவிடைத் தோழி, "பருவமன்று; பட்டது வம்பு" என்று வற்புறுத்தியது.

[வம்பு - காலமல்லாத காலத்துப் பெய்யும் மழை.]

இடைக்காடன்.

(ப - ரை.) இகுளை - தோழி, கழிந்த மாரிக்கு ஒழிந்த பழநீர் - சென்ற கார்காலத்திற் பெய்யாது எஞ்சியிருந்த பழைய நீரை, புது நீர் கொளீஇய - புதிய நீரைக் கொள்ளும்பொருட்டு, உகுத்தரும் - சொரிகின்ற, நொதுமல் வானத்து - அயன்மையையுடைய மேகத்தினது, முழங்கு குரல் கேட்டு - ஒலிக்கின்ற ஓசையைக் கேட்டு, மஞ்ஞை மா இனம் - மயில்களாகிய கரிய கூட்டங்கள், காலம் மாரி பெய்தென - பருவத்துக்குரிய மழை பெய்ததென்று தவறாக எண்ணி, அதன் எதிர் - அம் மழைக்கு எதிரே, ஆலலும் ஆலின - ஆடுதலைச் செய்தன; பிடவும் பூத்தன - பிடாவும் மலர்ந்தன; மடவ - அவை அறியாமையை உடையன; கார் அன்று - இது கார்காலமன்று; ஆதலின், நின்படர் தீர்க - நின் துன்பத்தை விடுவாயாக.

(முடிபு.) இகுளை, கேட்டு மஞ்ஞையினம் ஆலின; பிடவும் பூத்தன; மடவ; காரன்று; நின்படர் தீர்க.

(கருத்து.) இது கார்கால மன்று.

(வி - ரை.) தலைவன் கார்காலத்தில் மீள்வதாகக் கூறிச் சென்றான். அக்காலம் வந்தும் அவன் வாராமையின் தலைவி துயர் கூர்ந்தாள். அதுகண்ட தோழி, "இஃது அவர் கூறிச் சென்ற கார்ப் பருவ மன்று" என்றாள். "மழை பெய்கின்றது; மயில் ஆடுகின்றது;

(பி - ம்.) * யாயினம். † ஆலு மாலின. ‡ நொதுமலர்

பிடா மலர்கின்றது. இவை கார்ப்பருவத்துக்கு உரியன வல்லவோ?" என்று வினவிய தலைவிக்குத் தோழி கூறியது இது.

மடவ : இந்நூல், ௬௬ - ஆம் செய்யுள் விசேடவுரையைப் பார்க்க. வாழி : அசைநிலை.

மாயினம் - கரிய திரள் ; "மாயிருஞ் சோலை" (குறுந். உ௬௨ : 6) என்புழிப்போல யகரம் பெற்றது. காலமாரி யென்றது கார்காலத்து மழையை. பிடா கார்காலத்தில் மலர்வது.

ஒழிந்த - பெய்யாது எஞ்சிய. நொதுமல்வானமென்றாள், தலைவி துன்புறுவாளென்பதை அறியாது முழங்குதலின் ;

"என்னெனப் படுங்கொ றோழி மின்னுபு
வானேர் பிரங்கு மொன்றோ வதனெதிர்
கான மஞ்ஞை கடிய வேங்கும்
ஏதில கலந்த விரண்டற்கென்
பேதை நெஞ்சம் பெருமலக் குறுமே" (குறுந். ௯௪)

என முன்வந்துள்ளது காண்க.

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்" (குறள், 292)

என்பதுபற்றித் தோழி கார்காலம் வரவும், அன்றென்று கூறினாள்.

## மேற்கோளாட்சி

மூ. இருளை வம்பென்றது (நம்பி. 170.)

## ஒப்புமைப் பகுதி

1. மடவ : *நற். ௩௬௬ : 1.

மஞ்ஞையினம் மடவ : குறுந். ௩௯௧.

2. காலமாரி : குறுந். உ௦௦ : 5.

3. ஆலலும் ஆலின : குறுந். ௩௭ : 1, ஒப்பு.

பிடவு கார்காலத்தில் மலர்தல்: "சேணுறு பிடவமொடு" (முல்லைப். 25) ; "பூவலர் குரவோடும் புடைதவழ் பிடவீனும், மாவலர் சொரிகுழல்" (கம்ப. வனம்புகு. 7.)

---

* இடைக்காடனார் பாட்டு.

1-3. மயில் வம்பமழையைக்கண்டு ஆலுதல்: "பொய்யிடி யதிர் குரல் வாய்செத் தாலும், இனமயின் மடக்கணம் போல, நினைமருள் வேனோ வாழியர் மழையே" (நற். உசஅ: 7-9.)

மஞ்ஞையும் பிடவும் மடவ: "பிடவங் குருந்தொடு பிண்டி மலர, மடவ மயில்கூவ" (கைந்நிலை, 36.)

5. பழநீர்: குறுந். உ௨௦: 1, உசுக: 1.

மு. குறுந். சுசு; நற். கக. (உருக)

---

தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனை ஏற்றுக்கொண்ட தலைவியை நோக்கி, "நீ சிறிதும் மாறுபாடின்றித் தலைவனை ஏற்றது என்?" என்ற தோழிக்கு, "அவன் பழியஞ்சுபவன்; ஆதலின் அவன் பழியை யெடுத்துரையாது உடம்பட்டேன்" என்று தலைவி கூறியது.]

உருஉ. நெடிய திரண்ட தோள்வளை * ஞெகிழ்த்த
கொடிய ளாகிய குன்றுகெழு நாடன்
வருவதோர் காலை யின்முகந் திரியாது
கடவுட் கற்பி † னவனெதிர் பேணி
மடவை மன்ற நீயெனக் கடவுபு
துனியல் வாழி தோழி சான்றோர்
புகழு முன்னர் நாணுப
பழியாங் கொல்பவோ காணுங் காலே.

எ - து. தலைமகன் வரவறிந்த தோழி, "அவர், நம்மை வலிந்து போயினார்க்கு எம்பெருமாட்டி தீயன கடிந்து நன்காற்றினாய்" என்றாட்குக் கிழத்தி உரைத்தது.

[வலிந்து - மாறுபட்டு (தக்க. 317.) தீயன - வாயில் மறுத்தலும், பழிகூறலும் போல்வன. நன்கு - நன்மை; என்றது இன்முகங் கொண்டு எதிரேற்றதை.]

கிடங்கிற் ‡குலபதி நக்கண்ணன்.

---

(பி - ம்.) * நெகிழ. † னவனே பேணி. ‡ குலபதினக்கண்ணன்.

(ப - ரை.) தோழி—, நெடிய திரண்ட தோள்வளை ஞெகிழ்த்த - நெடுமையையும் திரட்சியையும் உடைய தோள்களிலுள்ள வளைகளை நெகிழச் செய்த, கொடியனாகிய குன்றுகெழு நாடன் - கொடுமையை உடையவனாகிய குன்றுகள் பொருந்திய நாட்டையுடைய தலைவன், வருவதோர்காலை - பரத்தையர் வீட்டினின்று வருங்காலத்தில், இன் முகம் திரியாது - இனியமுகம் வேறுபடாமல், கடவுள் கற்பின் - தெய்வத்தன்மையையுடைய கற்பினால், அவன் எதிர் பேணி - அவனை எதிர்முகமாகச் சென்று உபசரித்து, நீ—, மன்ற மடவை - நிச்சயமாக அறிவில்லாயாயினை, என கடவுபு - என்று வினாவி, துனியல் - வருத்த முறாதே; சான்றோர் - அறிவானமைந்த பெரியோர், புகழும் முன்னர் - தம்மைப் புகழ்வதற்கு முன்னரும், நாணுப - நாணுவர்; அத் தகையோர், காணுங்கால் - ஆராயுமிடத்து, பழி யாங்கு ஒல்ப - பழிச் சொல்லை யாம் கூற எங்ஙனம் பொறுப்பர்?

(முடிபு.) தோழி, மடவை நீயெனக் கடவுபு துனியல்; சான்றோர் புகழு முன்னர் நாணுப; பழி யாங்கு ஒல்ப?

(கருத்து.) தலைவன் பழிக்கு அஞ்சும் இயல்பினனாதலின் நான் அவனை ஏற்றுக்கொண்டேன்.

(வி - ரை.) 'நெடிய' என்றது முதல் 'நீ' என்றதுவரையி லுள்ளன தோழிகூற்றைத் தலைவி கொண்டுகூறியவை.

நெடுமையும் திரட்சியும் தோளுக்கு அடை. கொடியன் - தன்னால் தலைவிக்கு உண்டாகும் நோயறியாத கொடுமை யுடையவன். இன்முகந்திரியாதென்றது முகனமர்ந்து எதிர்கொண்டதை யுணர்த்தியது. கடவுட் கற்பு - மழை தருதல் முதலிய தெய்வத்தன்மையை யுடைய கற்பு; அருந்ததி போன்ற கற்பெனலும் ஆம் (அகநா. ௬௩ : 18.)

திரியாது பேணி மடவையென வினைமுடிவு செய்க.

வாழி : அசைநிலை. சான்றோர் இயல்பு இதுவென உலகின் மேல் வைத்துக் கூறினும் தலைவி கருதியது தலைவனையே யென்க. இதனால் தலைவன் சான்றோனென்பதையும், பழிக்கு நாணுபவனென் பதையும் புலப்படுத்தினாள்.

ஓகாரமும் ஏகாரமும் அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. தோள்வளை நெகிழ்தல் : குறுந். ௰ : 4-5, ஒப்பு.

2. தலைவனைக் கோடியனென்றல்: குறுந். உரு: 8, ஒப்பு.

1-2. தோள்வளை நெகிழ்த்த நாடன்: "பணைத்தோ ளெல்வளை ஞெகிழ்த்தவெங் காதலர்" (நற். கசுடு: 6.)

4. கடவுட் கற்பு: அகநா. கஅச: 1.

5. மடவை மன்ற: நற். டுச: 11, கஅடு: 6; அகநா. உஎ: 6; பெருங். க. 47: 251.

6-7. சான்றோர் தம்புகழ் கேட்பின் நாணுதல்: "தம்புகழ் கேட் டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச" (கலி. கககு: 6); "தன்பெய ராகலி னாணி", "பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந், திறைஞ்சி யோனே குருசில்" (புறநா. கஙஉ: 22, உஅங: 13-4); "பிறர்தன்னைப் பேணுங்கா ணாணலும்" (திரி. 6.)

8. பழிக்குத் தலைவன் அஞ்சுதல்: குறுந். கசடு: 2. (உருஉ)

---

## தோழி கூற்று

[பிரிவிடை வருந்திய தலைவியை நோக்கி, "தலைவர் நின் நிலையை உணர்ந்திலர்; உணரின் தம்வினை முற்றுதலையும் ஓராது உடனே மீள்வர்" என்று தோழி கூறி ஆற்றுவித்தது.]

உருங. கேளா ராகுவர் தோழி கேட்பின்
விழுமிது கழிவ தாயினு நெகிழ்நூற்
பூச்சே ரணையிற் பெருங்கவின் றொலைந்தநின்
நாட்டுயர் *கெடப்பி னீடலர் மாதோ
ஒலிகழை நிவந்த வோங்குமலைச் சாரற்
புலிபுகா வுறுத்த புலவுநாறு கல்லளை
ஆறுசென் மாக்கள் சேக்கும்
கோடுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

எ - து. பிரிவிடைத் தோழி †வற்புறுத்தது.

பூங்கண்ணன்.

---

(பி - ம்.) * கேட்பின், கொட்பின். † வரவுறுத்தது.

(ப - ரை.) தோழி—, ஒலி கழை நிவந்த - ஒன்றோடொன்று உராய்ந்து ஒலிக்கின்ற மூங்கில்கள் ஓங்கி வளர்ந்த, ஓங்கு மலை சாரல் - உயர்ந்த மலைப்பக்கத்தில், புலி புகா உறுத்த புலவு நாறு கல் அளை - புலி தனக்குரிய உணவைச் செலுத்திவைத்திருந்த புலால்நாற்றம் வீசும் கற்குகையினிடத்து, ஆறு செல் மாக்கள் சேக்கும் - வழிச்செல்லும் மனிதர் தங்கும், கோடு உயர் பிறங்கல் மலை - சிகரங்கள் உயர்ந்த விளக்கத்தையுடைய மலைகளை, இறந்தோர் - கடந்து சென்ற தலைவர், கேளார் ஆகுவர் - நின் துயரைக் கேளார் ஆவர்; கேட்பின் - கேட்டாராயின், விழுமிது கழிவதாயினும் - சிறந்த பொருள் நீங்குவதாக இருப்பினும், நெகிழ்நூல் பூ சேர் அணையில் - நெகிழ்ந்த நூலாற் கட்டிய மலர் மாலைகள் சேர்ந்த படுக்கையினிடத்தே இருந்து வருந்தி, பெரு கவின் தொலைந்த நின் - பெரிய அழகு நீங்கிய நினது, நாள் துயர் - இக்காலத்துள்ள துயரமானது, கெட - கெடும்படி, பின் நீடலர் - பின்பும் தாமதியாமல் வருவார்.

(முடிபு.) தோழி, மலையிறந்தோர் கேளாராகுவர்; கேட்பின் நீடலர்.

(கருத்து.) அவர் நின் நிலையை அறிந்திலர்; அறியின் உடனே மீள்வர்.

(வி - ரை.) கேட்பின் நீடலரென்ற குறிப்பு நான் தூதுவிட்டு நின் துயர்நிலையை அறிவித்து மீளச்செய்வேனென்னும் கருத்தைப் புலப்படுத்துகின்றது. இது கற்புக் காலத்தது.

விழுமிது - அறம், பொருள் முதலியன (அகநா. கந: 12, உரை); மிக உயர்ந்த பொருளெனினுமாம். கேட்பின் விழுமிது கழிவதாயினும் நீடலர். நீடலராதலின் துயர்கெடும். கெட என்ற எச்சம் நீடலரென்றதன் கண்ணுள்ள அலரென்ற வினைக்குறிப்பைக் கொண்டு முடிந்தது. நாட்டுயர் - நாடோறும் படுந்துயரெனலும் பொருந்தும்.

முறுக்கேறிய நூலாயின் மெல்லிய மலர்களைத் தொடுத்தற்கு இயலாமையின் நெகிழ்நூலைக் கூறினாள். மாலைகளை நூலாற்கட்டும் வழக்கமும் உண்டு. அணையினாற் குறையில்லையென்பாள் அதனைச் சிறப்பித்தாள்.

தலைவன் பிரிந்த காலத்தில் தலைவி பாயலில் இருந்து துயருறும் செய்தி நெடுநல்வாடையில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

ஒலிகழை - தன்பாலுள்ள துளைவழியே காற்றுப் போகையில் ஒலிக்கும் மூங்கிலெனலும் ஆம்;

"ஆடமைக் குயின்ற வவிர்துளை மருங்கிற்
கோடை யவ்வளி குழலிசை யாக" (அகநா. ௮௨ : 1-2);

தழைத்த மூங்கிலென்பதும் ஒன்று.

புகா - உணவு; "புகாஅக் காலை" (தொல். களவு. 16) என்பதன் உரையைப் பார்க்க.

பிறங்கல் - பிறங்குகல் என்பதன் விகாரமுமாம்.

## ஒப்புமைப் பகுதி

2-3. நூலாற் பூவைத் தொடுத்தல்: "பன்னூன் மாலை" (குறுந். ௧௭௩ : 2); "விரிநுண்ணூல் சுற்றிய வீரித ழலரி" (கலி. ௬௪ : 3); "புரிநூன் மீக்கோள் பூம்புறத் தேற்றதன், தெரிநூல் வாங்கி யிருநூற் கொளீஇப், பவழமும் வெள்ளியும் பசும்பொன் னடரும், திகழ்கதிர் முத்தமுந் திருமணிக் காசும், உறழ்படக் கோத்த வொளியின போல, வண்ணம் வாடாது வாசங் கலந்த, தண்ணறும் பன்மலர் தானத் திரீஇ, வாட்டொழிற் றடக்கையின் வத்தவர் பெருமகன், சூட்டெலம் புனைந்து சுடர்நுதற் கீய" (பெருங். ௨. 15 : 126-34.)

6. புகா: குறுந். ௨௩௨ : 3, ௨௫௮ : 5; ஐந். எழு. 31.

புலியின் புலால் நாற்றம் வீசும் உணவு: "புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை" (அகநா. ௩ : 9, ௧௭ : 3.)

கல்லேயும் புலியும்: "பைங்கண் வல்லியங் கல்லளைச் செறிய" (அகநா. ௩௬௨ : 4); "புலிசேர்ந்து போகிய கல்லளை போல" (புறநா. ௮௬ : 4.)

8. பிறங்கன் மலை: குறுந். ௧௪௪ : 7, ௨௮௫ : 8. (௨௫௩.)

---

## தலைவி கூற்று

[தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற பருவம் வரவும் அவன் வாரானாக, வருந்திய தலைவியை நோக்கி, "நீ ஆற்றல் வேண்டும்" என்று வற்புறுத்திய தோழிக்கு, "அவர் கூறிய பருவம் வந்தபின்னரும் அவர் வருவாரெனச் சொல்லும் தூதுகள் வந்தில; அவர் என்னை மறந்தனர்" என்று தலைவி கூறியது.]

உருச. இலையி லஞ்சினை யினவண் டார்ப்ப
முலையேர் மென்முகை யவிழ்ந்த கோங்கின்
தலையலர் வந்தன * வாரா தோழி
துயிலின் கங்குற் றுயிலவர் மறந்தனர்
பயினறுங் கதுப்பிற் பாயலு முள்ளார்
செய்பொரு † டரனசைஇச் சென்றோர்
எய்தின ரால்என வருஉந் தூதே.

எ - து. பருவங்கண்டு, வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

[கண்டு உரைத்ததென்று கூட்டுக.]

‡ பாரகாபரன்.

(ப - ரை.) தோழி—, இலை இல் அம் சினை இனம் வண்டு ஆர்ப்ப - இலையில்லாத அழகிய கிளையினிடத்துத் திரளாகிய வண்டுகள் ஆரவாரிக்கும்படி, முலை ஏர் மெல் முகை அவிழ்ந்த - நகிலையொத்த மெல்லிய அரும்புகள் விரிந்த, கோங்கின் தலை அலர் வந்தன - கோங்கமரத்தினது முதற்பூக்கும் மலர்கள் தோன்றின; செய்பொருள் தரல் நசைஇ சென்றோர் - ஈட்டுதற்குரிய பொருளைக் கொண்டுவருதலை விரும்பிச் சென்ற தலைவர், எய்தினர் என வருஉம் தூது - மீண்டுவந்தனரென்று அறிவித்தற்கு வரும் தூதுகள், வாரா - வந்தில; அவர் - நம்மைப் பிரிந்து சென்ற அவர், துயில் இன் கங்குல் துயில் மறந்தனர் - துயிலுதலினிய இராக்காலத்தில் உடன்துயிலுதலை மறந்தனர்; பயில் நறு கதுப்பின் பாயலும் உள்ளார் - தாம் பழகுகின்ற நறிய என் கூந்தலாகிய அணையையும் நினையாராயினர்.

(முடிபு.) தோழி, அலர் வந்தன; தூது வாரா; அவர் மறந்தனர்; உள்ளார்.

(கருத்து.) தலைவர் என்னை மறந்தனர் போலும்.

(வி - ரை.) கோங்கின் முகையவிழ்ந்தமை கூறுதலின் பருவம் இளவேனிலாயிற்று (ஐங். ருசரு.)

இலவமரத்தின் இனமாகிய கோங்கும் அவ்விலவத்தைப் போன்றே மலருங்காலத்தில் இலையின்றித் தோன்றும். தலையலர் -

(பி - ம்.) * வாரார். † டரநசைஇச். ‡ பாரகரபரன், பார்காப்பான்.

முதலிற் பூக்கும் மலர்கள்; "தலைநாட் செருந்தி" (சிறுபாண். 147) என்பது போன்றது.

துயிலினிமை கங்குலுக்கு அடை. பயில் நறுங்கதுப்பிற் பாய லென்றது, பாயலுக்குரிய மென்மையும் மணமும் உடையதென்ற படி. துயிலையும் பாயலையும் நினைத்தனரேல் வந்திருப்பரென்பது தலைவியின் உள்ளக்கிடக்கை. பாயலும்: உம்மை, உயர்வு சிறப்பு.

ஆல், ஏ: அசை நிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. இலையில் லஞ்சினை: "இலையில மலர்ந்த வோங்குநிலை யிலவம்" (ஐங். ௩௩௮: 2); "இலையில மலர்ந்த முகையி லிலவம்" (அகநா. ௧௧: 3.)

2. கோங்கரும்புக்கு உகிர்: முருகு. 34-5; சிறுபாண். 25-6; கலி. ௫௬: 23-4; அகநா. உ௪௦: 11; புறநா. ௩௩௬: 9-10; நாலடி. 400; சிறுபஞ்ச. 44; பெருங். உ. 12: 100-105; சிந். 1.

1-3. ஐங். ௩௪௧ - ௫௦.

5. கதுப்பிற் பாயல்: "நறுமென் கூந்தன் மெல்லணை யேமே" (குறுந். உ௭௦: 8); "கணங்குழை நல்லவர் கதுப்பற லணைத்துஞ்சி", "ஒள்ளிழை, வாருறு கூந்தற் றுயில்பெறும்" (கலி. ௭௧: 19, ௧௦௪: 20); "மகளிர், விரிமென் கூந்தன் மெல்லணை வதிந்து" (பதிற். ௫௦: 18-9); "தண்ணறுங் கமழ்தொடை வேய்ந்தநின், மண்ணுறு கூந்தன் மரீஇய துயிலே", "தோடார் கூந்தன் மரீஇ யோரே," "இருளைங் கூந்த லின்றுயின் மறந்தே", "கூந்தன் மெல்லணைத் துஞ்சி" (அகநா. உஉ௩: 15-6, உ௩௧: 15, உ௩௩: 15, ௩௦௮: 13.)

6. செய்பொருள்: குறுந். ௧௬௦: 2; கலி. ௭: 21, ௧உ: 10, ௧௬: 18, உ௧: 24.

7. பிரிந்த தலைவன் தூதுவிடுத்தல்: குறுந். உ௬௬: 4; அகநா. ௩௩௩: 22. (உ௫௪)

---

## தோழி கூற்று

[வினைமேற் சென்ற தலைவன் தன்மாட்டுள்ள அன்பினால் தான் குறித்த இடத்தின்கட் செல்லாமல் இடையே மீள்வனென்று கவன்ற தலைவியை நோக்கி, "அவர் தாம் செல்லும் பாலைநிலத்தில் யானை தன்

சுற்றத்தைப் பாதுகாக்கும் காட்சியைக் கண்டு, நாமும் நம் இல்லறக் கடன் இறுப்பதற்கு நம் முயற்சி முற்றல் வேண்டுமென்று செல்வார்'' என்று தோழி கூறியது.]

உடுடு. பொத்தில் காழ வத்த யாஅத்துப்
பொரியரை முழுமுத லுருவக் குத்தி
மறங்கெழு தடக்கையின் வாங்கி யுயங்குநடைச்
சிறுகட் பெருநிரை யுறுபசி தீர்க்கும்
தடமருப் பியானை * கண்டனர் தோழி
† தங்கட னிறீஇய ரெண்ணி யிடந்தொறும்
காமர் பொருட்பிணிப் போகிய
நாம்வெங் காதலர் சென்ற வாறே.

எ - து. இடைநின்று மீள்வரேனக் கவன்ற கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

கடுகுபெருந் தேவன்.

(ப - ரை.) தோழி—, தம் கடன் இறீஇயர் - தம்முடைய கடமையை நிறைவேற்றும்பொருட்டு, இடந்தொறும் - இடங்கள் தோறும், காமர் பொருள் பிணி போகிய - விருப்பத்தையுடைய பொருண்முயற்சிக்கண் உள்ள உள்ளப்பிணிப்பினுற் சென்ற, நாம் வெம் காதலர் - நாம் விரும்பும் தலைவர், சென்ற ஆறு - நம்மைப் பிரிந்து சென்ற வழியில், பொத்து இல் காழ - புரையற்ற வயிரத்தை யுடையனவாகிய, அத்தம் யாத்து - அருவழியில் நின்ற யாமரங்களின், பொரி அரை முழுமுதல் - பொரிந்த திரண்ட அடியை, உருவ - உருவும்படி, குத்தி - தன் கொம்பாற் குத்தி, மறம் கெழு - வன்மை பொருந்திய, தட கையின் வாங்கி - வளைந்த கையினுற் கொண்டு தந்து, உயங்கு நடை - வருந்திய நடையையும், சிறு கண் - சிறிய கண்களையுமுடைய, பெரு நிரை - பெரிய யானைவரிசையின், உறு பசி தீர்க்கும் - மிக்க பசியைத் தீர்க்கின்ற, தட மருப்பு யானை - வளைந்த கொம்பையுடைய ஆண்யானையை, கண்டனர் - கண்டார்.

(முடிபு.) தோழி, இறீஇயர் எண்ணிப் போகிய காதலர் சென்றவாற்றில், யானை கண்டனர்.

---

(பி - ம்.) * கண்டன. † கடன்கடன்.

(கருத்து.) தலைவர் வினைமுற்றியே மீள்வர்.

(வி - ரை.) பொத்து - பொந்து; உட்புரை. காழ் - வயிரம். அத்த யா - சிவந்த யாமரமுமாம்; "செந்நிலையா" (அகநா. ருரு: 3.) பாலைநிலமாதலின் நீரின்றி யாவின் அரை பொரிந்தது. தட மருப்பு யானையாதலின் குத்தியது கோட்டாலென்று கொள்க. நிரை யென்றது பிடியும் கன்றுகளுமாகிய யானைவரிசையை.

"குழூஉப்புறந் தருதல் குஞ்சரத் தியல்பே" என யானையின் இயல்பை விதந்தோதுவர். இங்ஙனம் யானைக் கூட்டத்தைப் பாது காக்கும் களிற்றை ஏந்தலெனவும், யூதநாதனெனவும் வழங்குவர்; இந்நூல் கஅ௦-ஆம் செய்யுளைப் பார்க்க.

காண்பாரென்னாது கண்டனரென்றது துணிவுபற்றி. தம் கட னென்றது, தம் சுற்றத்தாரைப் பாதுகாத்தலும் தம்மை இரப்பார்க் கீதலுமாகிய செயல்களை. அவை செய்யப் பொருள் வேண்டுமாதலின் காதலர் சென்றார்;

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்"

(கலி. கக: 1-4),

"கேள்கே டூன்றவுங் கிளைஞ ராரவும்
கேளல் கேளிர் கெழீஇயின ரொழுகவும்
ஆள்வினைக் கெதிரிய வூக்கமொடு" (அகநா. கரு: 1-3).

என்பவற்றைக் காண்க.

காமர் - காமம் மருவிய வென்பதன் விகாரமாக்கி, விருப்பம் பொருந்தியவெனப் பொருளுரைத்தலும் பொருந்தும். பொருட் பிணி - பொருளிடத்து நெஞ்சுபிணித்தல் (கலி. ச: 25, ந.)

தன் கடனையறிந்து அதனை முற்ற ஆற்றும் யானையைக் காண் பாராதலின், இல்லறத்திற்கு உரியன ஆற்றும் பொருட்டுப் பொருள் தேடச் சென்ற அவர் தம் வினைமுற்றிய பின்னரே மீள்வரென்பது குறிப்பு.

அறம்புரிவதில் தலைவியுய்
வனுக்குத் துணை செய்பவளாத
அறம் செய்தலிற் குறை

தாம் சென்ற விடத்துக் காட்சிகள் அவருடைய கடனை நினை வுறுத்துமாதலின் சோர்வின்றி எண்ணிய எண்ணியாங் கெய்தி வருவரெனத் தோழி துணிவுறுத்தினள்.

## ஒப்புமைப் பகுதி

1. முழமுதல் : குறுந். உகச : 5, ௩௬௧ : 4.

4. யானையின் நிரை : குறுந். க௮௦ : 2, ஒப்பு.

1-5. யானையும் யாமரமும் : குறுந். ௩௭ : 2-4, ஒப்பு.

7. பொருட்பிணி : குறுந். ௩சச : 7, ௩௫௦ : 8 ; நற். ச௬ : 11, ௭௧ : 1, ககங : 5 ; ஐங். ௩௫௫ : 2 ; கலி. ச : 25 ; அகநா. ச௩ : 14, ௫௧ : 8.

8. நாம்வெங் காதலர் : கலி. உ௭ : 26.

7-8, மு. நற். க௮௬ : 9-10. (உ௫௫)

---

## தலைவன் கூற்று

[பொருள்வயிற்பிரிய எண்ணிய தலைவன் தன் கருத்தைத் தலைவிக்கு உணர்த்த, அவள் வெய்துற்று அழுதாளாக, அது கண்ட தலைவன் செலவு தவிர்ந்து கூறியது.]

உ௫௬. மணிவார்ந் தன்ன மாக்கொடி யறுகை
பிணிகான் மென்கொம்பு பிணையொடு * மார்ந்த
மானே றுகளுங் கானம் † பிற்பட
வினைநலம் படீஇ வருது மவ்வரைத்
தாங்க லொல்லுமோ பூங்குழை யோவெனச்
சொல்லா முன்னர் நில்லா வாகி
நீர்விலங் ‡ கழுத லாறு
தேர்விலங் கினவாற் றெரிவை கண்ணே.

எ - து. பொருள் விலக்கப்பட்ட கிழவன் செலவழுங்கியது.

---

(பி - ம்.) * மமர்ந்த. † பின்பட. ‡ கழிதல்.

[பொருள் முயற்சியினின்றும் விலக்கப்பட்ட தலைவன் செல லுதலினின்றும் நீங்கியது.]

..........................

(ப - ரை.) பூ குழையோய் - பொலிவையுடைய குழையை யணிந்தோய், மணி வார்ந்தன்ன - நீலமணி ஒழுகினாற்போன்ற, மா கொடி அறுகை - கரிய கொடியாகிய அறுகினது, பிணி கால் மெல் கொம்பு - பிணிப்பு நீங்கிய மெல்லிய தண்டை, பிணையொடும் ஆர்ந்த - பெண்மானோடு வயிறு நிரம்ப உண்ட, மான் ஏறு உகளும் - ஆண் மான் துள்ளுகின்ற, கானம் பின்பட - காடு பின்னாகச் சென்று, வினை நலம் படீஇ வருதும் - தொழில்நன்மை உண்டாகப்பெற்று மீண்டு வருவேம்; அ வரை - அக்காலத்தளவும், தாங்கல் ஒல்லுமோ - நின்னாற் பொறுத்திருத்தல் இயலுமோ? என சொல்லா முன்னர் - என்று நாம் சொல்லாமைக்கு முன்பே, தெரிவை கண் - தலைவியின் கண்கள், நில்லாஆகி - பழையநிலையில் நில்லாமற் கலங்கி, நீர் விலங்கு அழுதல் ஆன - நீரால் மாறுபடுதலையுடைய அழுகை அமையாவாகி, தேர் விலங்கின - எம் தேரைத் தடைசெய்தன.

(முடிபு.) 'பூங்குழையோய், கானம் பிற்பட வினைநலம்படீஇ வருதும்; தாங்கல் ஒல்லுமோ?' எனச் சொல்லாமுன்னர், தெரிவை கண் அழுதல் ஆனவாகித் தேரை விலங்கின.

(கருத்து.) தலைவி என் பொருட்பிரிவுக்கு உடம்படாமையின் யான் செல்லேன்.

(வி - ரை.) மணி - நீலமணி. பிணியென்றது அறுகினது இலை இளைதாக இருக்குங்கால் அமைந்துள்ள முறுக்கு. மென்கோம்பா தலின் ஆர்ந்தது. கானம் பிற்பட வென்றது கானத்தைக் கடா தென்றபடி. ஆண்டுச் செல்வேனாயினும் பிணைமானும் மானேறும் ஒன்றுபட்டு உகளும் காட்சிகண்டு மேற்செல்லாது மீள்வேனென் பது குறிப்பு.

வினைநலம்படுதல் - பொருள்முயற்சி முற்றுப்பெறுதல். வரை யென்றது அளவு; அஃது ஈண்டுக் காலஅளவு குறித்தது. தாங்கல் - பிரிவினால் உண்டாகும் துன்பங்களைப் பொறுத்தல். பூங்குழை - பூத் தொழில் அமைந்த குழையெனினுமாம்.

---

* இச்செய்யுளியற்றிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

நீர்விலங்கு அழுதல் - நீர் கண்மணியுள்ளபாவையை மறைக்கின்ற அழுகையென்பதும் ஆம்; "பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு" (அகநா. ரு : 21.)

கண் நேர்விலங்கினவென்று கூறினும், அவள் அழுதல் கண்டு நான் செலவு தவிர்ந்தேனென்பதே கருத்து. தெரிவை : தலைவியென்னும் பொருட்டாய் நின்றது.

## ஒப்புமைப் பகுதி

1. அறுகின் கோடிக்த நீலமணி : "பழங்கன்று கறிக்கும் பயம்பமலறுகைத், தழங்குகுரல் வானின் றலைப்பெயற் கீன்ற, மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவை" (அகநா. ௧௩௬ : 11-3.)

2-3. பிணையும் மானும் உகளுதல் : குறுந். ௬௫ : 1-3, ஒப்பு.

பிணையும் மானேறும் : குறுந். ௩௧௧ : 1.

1-3. அறுகம்புல்லை மான் பிணையோடு உண்ணல் : அகநா. உ௩ : 7-9; பு. வெ. 277.

5. காமந் தாங்குதல் : குறுந். உ௪௧ : 1.

தாங்கல் ஒல்லுமோ : அகநா. ௩௩௩ : 5. (உரு௬)

---

## தலைவி கூற்று

[வரைவுணர்த்திய தோழியை நோக்கி, "தலைவனைக் கண்ட போது இன்பமும் அவனைக் காணாதபோது துன்பமும் உடையேனாக இருந்தேன். இனி எப்பொழுதும் உடனுறைதலால் இன்பமே உண்டாகும்" என்பதுபடத் தலைவி கூறியது.]

உருஎ. வேரு முதலுங் கோடு மொராங்குத்
தொடுத்த போலத் தூங்குபு தொடரிக்
கீழ்தாழ் வன்ன வீழ்கோட் பலவின்
ஆர்கலி வெற்பன் வருதொறும் வரூஉம்
அகலினு மகலா தாகி
இகலுந் தோழிநங் காமத்துப் பகையே.

எ - து. வரைவுணர்த்திய தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

உறையூர்ச் சிறுகந்தன்.

(ப - ரை.) தோழி—, நம் காமத்து பகை - நம்மிடத்துள்ள காமமாகிய பகை, வேரும் முதலும் கோடும் - வேரிலும் அடிமரத்திலும் கிளையிலும், ஓராங்கு - ஒருபடியாக, தொடுத்தபோல - தொடுத்து வைத்தனபோல, தூங்குபு தொடரி - தொங்கித்தொடர்ந்து, கீழ்தாழ்வன்ன - கீழே தாழ்ந்தாற்போன்ற, வீழ் கோள் பலவின் - தணிந்த குலைகளையுடைய பலாமரத்தினையுடைய, ஆர்கலி வெற்பன் - ஆரவாரத்தையுடைய மலைக்குத் தலைவன், வருதொறும் - இங்கே வருந்தோறும், வருஉம் - வெளிப்படும்; அகலினும் - அவன் அகன்றாலும், அகலாதாகி - போகாததாகி, இகலும் - மாறுபடும்; இஃது என்ன வியப்பு!

(முடிபு.) தோழி, காமத்துப்பகை, வெற்பன் வருதொறும் வருஉம்; அகலினும் இகலும்.

(கருத்து.) தலைவனைப் பிரிதலின்றி ஒன்றியிருத்தலே எனக்கு இன்பம் பயப்பது.

(வி - ரை.) தொடுத்தபோல - ஓரிடமும் எஞ்சாது தொடர்ந்து காய்களைத் தொடுத்தாற்போல. கீழ்தாழ்வன்ன - கீழேவிழுந்து விடுதலைப்போன்ற வெனலுமாம்; பருமையைச் சுட்டியபடி. வீழ் கோள் - விரும்பும் குலையெனலும் பொருந்தும். கோள் - காய்க்குலை. மலையிலுள்ள பலவகை ஆரவாரங்களை 'மலைபடுகடாம்' என்னும் பாட்டால் உணரலாம்.

காமம் இன்பத்தைத் தருவதாயினும் தலைவனைப் பிரிந்தஞான்று தன்னுடனுறைந்தே துன்பத்தைத் தருதலின் அதனைப் பகையாகக் கூறினாள்;

" கைதையந் தண்புனற் சேர்ப்பனொடு
செய்தன மன்றவோர் பகைதரு நட்பே "

" பகையா கின்றவர் நகைவிளை யாட்டே "

(குறுந். ௩0௪ : 7-8, ௩௯௪ : 7)

என வருவனவற்றையுங் காண்க.

தலைவனைக் காணுந்தோறும் காமம் வெளிப்படு மென்றாள்; இக்கருத்து முன்பும், ௧௩௬ - ஆம் செய்யுளில் வந்துள்ளது.

தலைவன் வருங்காலத்தில் காமம் இன்பம் பயத்தலும் அவன் பிரிந்த காலத்தில் துன்பம் பயத்தலுமாகிய இக்கருத்து,

"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையும்
சாரச் சார்ந்து தீரத் தீரும்
சார லுடன் கேண்மை
சாரச் சாரச் சார்ந்து
தீரத் தீரத் தீர்பொல் லாதே"

என்ற பழம்பாட்டினும் காணப்படுகின்றது.

"தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ" (1159)

என்பது குறள்.

காமத்துப் பகை: அத்து, வேண்டாவழிச் சாரியை.

## ஒப்புமைப் பகுதி

1. ஓராங்கு: குறுந். ௩அ: 5, ௩௧௬: 5.

1-3. வேரிற் காய்த்தலையையுடைய பலவு: (குறுந். ௧அ: 1, ஒப்பு); "செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி", "பலவின், வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழம்" (நற். ௨௦௧: 5, ௨௧௩: 2-3.)

கோடுதோறும் காய்த்தலையையுடைய பலவு: குறுந். அ௩: 3-5, ஒப்பு.

5-6. காமத்தின் தன்மை: "நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னும், தீ" (குறள், 1104.) (உ௫எ)

---

## தோழி கூற்று

[பரத்தையிற் பிரிந்த தலைவனை நோக்கி, "தலைவி அழகிழந்தாள்; ஆதலின் நினக்கு ஆகும் பயனொன்றில்லை; ஈண்டு வாரற்க" என்று தோழி வாயில் மறுத்தது.]

உ௫அ. வாரலெஞ் சேரி தாரனின் றாரே
அலரா கின்றாற் பெரும காவிரிப்
பலராடு பெருந்துறை மருதொடு பிணித்த

ஏந்துகோட் டியானைச் * சேந்தன் றந்தை
அரியலம் புகவி னந்தோட்டு வேட்டை
நிரைய வொள்வா ளிளையர் பெருமகன்
அழிசி யார்க்கா டன்னவிவள்
பழிதீர் மாணலந் † தொலைதல் கண்டே.

எ - து. (1) தோழி, தலைமகற்கு வாயில் மறுத்தது.
(2) வாயில் நேர்ந்ததூஉமாம்.

பரணர்.

(ப - ரை.) பெரும—, காவிரி பலர் ஆடு பெரு துறை - காவிரி நதியினது பலர் நீராடுகின்ற பெரிய நீர்த்துறையின்கண் வளர்ந்த, மருதொடு பிணித்த - மருதமரத்திற் கட்டிய, ஏந்து கோடு யானை - மேலுயர்ந்த கொம்பையுடைய யானைகளையுடைய, சேந்தன் தந்தை - சேந்தனுடைய தந்தையும், அரியலம்புகவின் - கள்ளாகிய உணவையும், அம் தோடு வேட்டை - அழகிய விலங்குத் தொகுதியை வேட்டையாடும் தொழிலையும், நிரையம் ஒள்வாள் - பகைவருக்கு நரக வாழ்வைப் போன்ற துன்பத்தைத்தரும் ஒள்ளிய வாளையு முடைய, இளையர் பெருமகன் - இளைய வீரர்களுடைய தலைவனு மாகிய, அழிசி ஆர்க்காடு அன்ன - அழிசியினது ஆர்க்காடென்னும் நகரத்தைப்போன்ற, இவள் பழி தீர் மாண் நலம் - இவளது குற்றந் தீர்ந்த மாட்சிமைப்பட்ட அழகு, தொலைதல் கண்டு - அழிதலைக் கண்டபின், எம் சேரி - எமது சேரிக்கண், வாரல் - வருதலை யொழிவாயாக; நின் தார் தாரல் - நின் மாலையைத் தருதலை யொழிக; அலர் ஆகின்று - பழிமொழி உண்டாகின்றது.

(முடிபு.) பெரும, இவள் நலம் தொலைதல் கண்டு வாரல்; தாரல்.

(கருத்து.) நீ ஈண்டு வாரற்க.

(வி - ரை.) 'இவள் நலம் தொலைதல் கண்டாய்; இனி இவள் பால் நினக்கு இன்பம் பிறவாது; ஆதலின் வாரற்க' என்று வாயில் மறுத்தாள்.

அலர் - பரத்தையர் கூறும் பழிமொழி; 'தலைவி தலைவனைத் தன்பாலே இருத்திக் கொண்டாள்' எனக் கூறுவது. ஆற்றங்கரை களிலும் துறைகளிலும் மருதமரங்களை வளர்த்தல் வழக்கம்.

(பி - ம்.) * சேந்தனுறந்தை. † தொழுதன

அரியலம் புகவு: அம், சாரியை. புகவு - உணவு; புகாவென் பதன் விகாரம். அரியலம் புகவின் இளையரென்க. இது வீரபானம்; "கள்ளி னிரும்பைக் கலஞ்செல வுண்டு" (மதுரைக். 228) என் பதையும் அதனுரையையும் பார்க்க. தோடு - விலங்கின் தொகுதி. நிரைய வொள்வாள் - பகைவருக்கு நரகவேதனையை உண்டாக்கும் ஒள்ளிய வாள்;

"நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்" (பதிற். ௧௧: 4),

"நிரயத் தானை" (சிலப். ௨௬ : 37)

என்பவற்றின் உரையைப் பார்க்க.

சேந்தனென்பவனுடைய தந்தை அழிசியென்பதும் அவனுக்கு ஆர்க்காடு உரியதென்பதும்,

"நோயினி வாழிய நெஞ்சே மேவார்
ஆரரண் கடந்த மாரி வண்மகிழ்த்
திதலை யெஃகிற் சேந்தன் றந்தை
தேங்கமழ் விரிதா ரியறே ரழிசி
வண்டுமூசு நெய்த னெல்லிடை மலரும்
அரியலங் கழனி யார்க்கா டன்ன
காமர் பணைத்தோ ணலம்வீ றெய்திய
வலைமான் மழைக்கட் குறுமகள்
சின்மொழித் துவர்வாய் நகைக்குமகிழ்ந் தோயே"
(நற். ௧௯0)

என்னும் பாட்டினாலும் அறியப்படுகின்றன.

இரண்டாவது கருத்து: 'வாரல் எம் சேரி; தாரல் நின்தார்; இவள் நலம் தொலைதல் கண்டு அலராகின்று' என்று கூட்டி, 'எமக்கு நீ வருதலும் நின்தார் தருதலும் உடம்பாடல்லவேனும், ஊரினர் கூறும் பழிமொழியை அஞ்சினேம்; ஆதலின் நினக்கு உடம்பட்டேம்' எனக் கூற்றெச்சம் வருவித்துரைக்க.

## ஒப்புமைப் பகுதி

1. சேரி: குறுந். ௨௩௧ : 1.

தலைவி தலைவனது தாரை விரும்பாமை: "பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பாய்புனல், நல்வய லூரநின் றார்புலால்" (தொல். களவி. 56, ந. மேற்.); "ஒல்லேங் குவளைப் புலாஅன் மகன்மார்பிற், புல் லெருக்கங் கண்ணி நறிது" (ஷை. ஷை. 55, சே. மேற்.)

2. அலராகின்று : ஐங். கஙஉ : 3 ; அகநா. கசு : 18.

ஆகின்று : குறுந். கடு : 4, ஒப்பு.

3. பெருந்துறை மருது : "உளைப்பூ மருதத்துக் கிளைக்குரு கிருக்கும், தண்டுறை", "முடமுதிர் மருதத்துப் பெருந்துறை", "மருதுயர்ந் தோங்கிய விரிபூம் பெருந்துறை", "கரைசேர் மருதம்" (ஐங். எ : 4-5, ஙக : 3, ஙங : 2, எச : 3) ; "திருமருத முன்றுறை", "திருமருத நீர்ப்பூந் துறை", "தீம்புனல் வையைத் திருமருத முன்றுறையால்", "திருமருத முன்றுறை முற்றங் குறுகி" (பரி. எ : 83, கக : 30, உஉ : 45, திரட்டு, உ : 72) ; "திசைதிசை தேனார்க்குந் திருமருத முன்றுறை" (கலி. உசு : 13) ; "வருபுனல் வையை வார்மண லகன்றுறைத், திருமரு தோங்கிய விரிமலர்க் காவின்", "துறையணி மருதமொடு" (அகநா. ஙசு : 9-10, கஎ : 19) ; "உயர்சினை மருதத் துறை" (புறநா. உசங : 6); "வருபுனல் வையை மருதோங்கு முன்றுறை" (சிலப். கச : 72.)

5-6. "மட்டப் புகாவிற் குட்டுவ ரேறே" (பதிற். கo : 26.)

8. மாணலம் : குறுந். எச : 5, ஒப்பு. (உருஅ)

---

## தோழி கூற்று

[தோழி அறத்தொடு நின்றபின், அங்ஙனம் தான் செய்ததைத் தலைவன் அறிந்தால் வரைந்து கொள்வதற்குரிய முயற்சிகளைச் செய்வானென்று தான் எண்ணியதைத் தலைவிக்கு உணர்த்துவாளாய், "பொய் சொல்வதிற் பயன் யாது? தலைவன் நன்னெஞ்சமுடையான்" என்று கூறியது.]

உருகூ. மழைசேர்ந் தெழுதரு மாரிக் குன்றத்
தருவி யார்ந்த தண்ணறுங் காந்தள்
முகையவிழ்ந் தானா நாறு நறுநுதற்
பல்லிதழ் மழைக்கண் மாஅ யோயே
ஒல்லை யாயினுங் கொல்லை யாயினும்
நீயளந் தறிவைநின் புரைமை வாய்போற்
பொய்ம்மொழி கூறலஃ தெவனோ
நெஞ்சந் நன்றே நின்வயி னானே.

எ - து. காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தோழி, அறத்தோடு நின்று, அவனே பரிகரிப்பனென்று கருதியதனைத் தலைமகளும் நயப்பாளாகக் கூறியது.

[நின்று கூறியதென இயைக்க.]

பரணர்.

(ப - ரை.) *மழை சேர்ந்து எழுதரும் - மேகங்கள் சேர்ந்து எழுந்த, மாரி குன்றத்து - மழையையுடைய மலையினிடத்துள்ள, அருவி ஆர்ந்த - அருவிக்கு அருகிற் பொருந்திய, தண் நறு காந்தள் முகை அவிழ்ந்து - தண்ணிய நறிய காந்தளரும்புகள் விரிந்து, ஆறு நாறும் நறு நுதல் - அமையாதனவாய் மணம் வீசுகின்ற நறிய நெற்றியையும், பல் இதழ் மழை கண் - பல இதழையுடைய தாமரைப் பூவைப்போன்ற குளிர்ச்சியையுடைய கண்ணையும் உடைய, மாஅயோயே - மாமை நிறம் பொருந்தியோய், ஒல்லை ஆயினும் - நீ என் பிழையைப் பொறுப்பாயாயினும், கொல்லை ஆயினும் - அன்றிச் சினந்து கொல்வாயாயினும், நின் புரைமை - நினது உயர்வை, நீ அளந்து அறிவை - நீயே அளவிட்டு அறியும் ஆற்றலையுடையை; வாய்போல் பொய் மொழி - மெய்யைப் போலப் பொய் வார்த்தைகளை, கூறல் அஃது எவன் - கூறுதலாகிய அஃது என்ன பயனைத் தரும்? நின்வயின் - நின்திறத்து, நெஞ்சம் நன்று - தலைவனது நெஞ்சு நலமுடையது.*

(முடிபு.) *மாஅயோயே, நின்புரைமை நீ அறிவை; பொய்ம் மொழி கூறல் எவன்? நின் வயினன் நெஞ்சம் நன்று.*

(கருத்து.) *நான் அறத்தொடு நின்றதனால் நன்மையே விளையும்.*

(வி - ரை.) *மழை சேர்ந்தமையின் மாரியும், மாரியுடைமையின் அருவியும், அருவியிருத்தலின் தண்ணறுங்காந்தளும் உண்டாயின. நறுநுதல் - நன்மையையுடைய நுதலுமாம். பல்லிதழ்: தாமரை மலருக்கு ஆகு பெயர் (குறுந். ௫ : 5, விசேட.)*

*'யான் செய்தது நின் உயர்வுக்கு ஏற்றதோ, அன்றோ வென்பதை யான் அறியேன்; நீயே நின் உயர்வை அறிவாய். நான் செய்ய வேண்டுவதைத் துணிந்து செய்தேன்' என்றாள் தோழி. வாய்போற் பொய்ம்மொழி கூறலாவது, தலைவியின் வேறுபாடு கண்டு தாயர் ஆராய்ந்த பொழுது உண்மை கூறாமல் அவ்வேறுபாட்டுக்குப் பொய்க் காரணங்களை உரைத்தல். 'அங்ஙனம் கூறுதலாற் பய*

னில்லை யாதலின் நான் உண்மையையே கூறினேன்' என்று தான் அறத்தொடு நின்றதைக் குறிப்பித்தாள். எவனோ: ஓகாரம், அசை நிலை.

தலைவன் நின்திறத்து நல்ல நெஞ்சுடையனென்றது, வரைந்து கொள்ளும் கொள்கையுடையனென்பதை உணர்த்தியவாறு; அக் கொள்கையுடையனாதலின் அறத்தொடு நிற்பின் நலம் விளையுமென் பது தோழியின் உட்கிடக்கை.

நெஞ்சம் நன்றே - எனது நெஞ்சம் நன்றே யெனலும் பொருந்தும்; 'யான் நன்மை கருதியே செய்தேன்' என்றபடி.

நன்றே: ஏகாரம், தேற்றம்.

## ஒப்புமைப் பகுதி

2. அருவியார்ந்த காந்தள்: "நீரயற் கலித்த நெரிமுகைக் காந் தள்" (பரி. ௧௪: 13); "உயர்முகை நறுங்காந்த ளுடோறும் புதிதீன, அயனந்தி யணிபெற வருவியார்த் திழிதரும், பயமழை தலைஇய பாடு சால் விறல்வெற்ப" (கலி. ௫௩: 5-7.)

3. நுதலுக்கு மணம் உண்மை: குறுந். ௨௨: 5, ஒப்பு.

2-3. நுதல் காந்தளின்மணம் வீசல்: "சினையொண் காந்த ளாறு நறுநுதல்" (அகநா. ௩௩௮: 7.)

4. பல்லிதழ் மழைக்கண்: குறுந். ௫: 5, ஒப்பு.

5-6. "அடுநை யாயினும் விடுநை யாயினும், நீயளந் தறிதிநின் புரைமை" (புறநா. ௩௬: 1-2.)

6-7. வாய்போற் பொய்ம்மொழி: அகநா. ௩: 14.

8. தலைவனது நல்ல நெஞ்சம்: குறுந். ௨௬௫: 6. (௨௫௯)

---

## தோழி கூற்று

[தலைவனது பிரிவை ஆற்றுதிருந்த தலைவியை நோக்கி, "நன்னி மித்தங்கள் உண்டாகின்றன; ஆதலின் தலைவர் வந்துவிடுவர்; நீ ஆற்றுக" என்று தோழி கூறியது.]

உகூ0. குருகு மிருவிசும் பிவரும் புதலும்
வரிவண் டூத வாய்நெகிழ்ந் தனவே
சுரிவளைப் பொலிந்த தோளுஞ் செற்றும்
வருவர்கொல் வாழி தோழி பொருவார்
மண்ணெடுத் துண்ணு மண்ணல் யானை
வண்டேர்த் தொண்டையர் * வழையம லடுக்
கன்றி லோரா விலங்கிய [கத்துக்
புன்று ளோமைய சுரனிறந் தோரே.

எ - து. அவர் வரவிற்கு நிமித்தமாயின கண்டு, ஆற்றுளாகிய தலைமகட்குத் தோழி சொல்லியது.

கல்லாடனார்.

(ப - ரை.) *தோழி—, குருகும் இருவிசும்பு இவரும் - நாரைகளும் கரிய வானத்தின்கண் உயரப் பறக்கும்; புதலும் - புதலிலுள்ள போதுகளும், வரிவண்டு ஊத - கோடுகளையுடைய வண்டுகள் ஊதுவதனால், வாய் நெகிழ்ந்தன - மலர்ந்தன; சுரி வளை பொலிந்த தோளும் - சுழித்த சங்கால் செய்த வளையினால் விளங்கிய தோள்களும், செற்றும் - நெகிழ்ச்சி நீங்கி வளையோடு செறியும்; ஆதலின், பொருவார் - பகைவரது, மண் எடுத்து உண்ணும் - பூமியைக் கொண்டு நுகரும், அண்ணல் யானை - தலைமை பொருந்திய யானையையும், வள் தேர் - வளவிய தேரையுமுடைய, தொண்டையர் - தொண்டைமான்களுக்குரிய, வழை அமல் அடுக்கத்து - சுரபுன்னைகள் நெருங்கிய மலைப்பக்கத்தில், கன்று இல் ஓர் ஆ - கன்றில்லாத ஒற்றைப் பசுவை, விலங்கிய - நிழலினால் தம்பால் வரச்செய்து தடுத்த, புல் தாள் ஓமைய சுரன் - புல்லிய அடியையுடைய ஓமைமரங்களையுடைய பாலைநிலங்களை, இறந்தோர் - கடந்து சென்ற தலைவர், வருவர்—.*

(முடிபு.) *தோழி, குருகும் இவரும்; புதலும் நெகிழ்ந்தன; தோளுஞ் செற்றும்; சுரன் இறந்தோர் வருவர்.*

(கருத்து.) *நன்னிமித்தங்கள் உண்டாதலின் தலைவர் வருவர்.*

(வி - ரை.) *இதில் கூறப்படும் நிமித்தங்கள் கூதிர்க்கால மென்பதைப் புலப்படுத்தின* (நெடுநல். 15-7.) *புதல்: ஆகுபெயர்.*

---

(பி - ம்.) * *வழையம ரடுக்கத்து.*

வண்டூத மலர்கள் மலர்வது இயல்பு. வளை - சங்கினாற் செய்த தோள் வளை. வளை இறுகுதல் நன்னிமித்தம்;

"மயிர்வார் முன்கை வளையுஞ் செறாஅம்
............................................
பெருங்க ணுடன் வருங்கொ லன்னாய்" (ஐங். ௨௧௮ : 2-5.)

கொல், வாழி: அசைநிலைகள். பொருவார் மண்ணெடுத்துண்ணும் தொண்டையரென இயைக்க. பொருவார் மண்ணெடுத்துண்ணுதலாவது, பகையரசர்களுடைய நாடுகளை வென்று அடிப்படுத்து அவற்றால்வரும் பயன்களை நுகர்தல்; இப்பொருள் பற்றியே வடமொழியிலும் அரசனை, 'பூபுக்' என்று கூறுவர்;

"பிறர்மண் ணுண்ணுஞ் செம்ம னின்னாட்டு
வயவுறு மகளிர் வேட்டணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே" (புறநா. ௨௦ : 13-5.)

தொண்டையரடுக்கமென்றது வேங்கட மலையை;

"வென்வேற் றிரையன் வேங்கட நெடுவரை",

"வினைநவில் யானை விறற்போர்த் தொண்டையர்
இனமழை தவழு மேற்றரு நெடுங்கோட்
டோங்குவெள் ளருவி வேங்கடத் தும்பர்"
(அகநா. ௮௫ : 9, ௨௧௩ : 1-3.)

விலங்கிய - தடுத்த (குறுந். ௫௯ : 5.)

புன்தாள் - சிவந்த தாளெனலும் பொருந்தும்; "ஓமைச் செவ்வரை" (நற். ௨௭௯ : 7.)

## மேற்கோளாட்சி

8. குறிப்பு வினைமுற்று, பெயரெச்சக் குறிப்பாயிற்று (நன். 350, மயிலை, 351, சங், வி ; இ. வி. 250.)

## ஒப்புமைப் பகுதி

1. **குருகு விசும்பிற் பறத்தல்:** "வேழ வெண்பூ, விசும்பாடு குருகிற் றோன்று மூரன்" (ஐங். ௧௭ : 1-2.)

1-2. **வண்டு ஊதப் புதல் மலர்தல்:** குறுந். ௨௬௫ : 1-5, ஒப்பு.

4. வாழிதோழி : குறுந். ௨௨௯ : 4, ௨௪௦ : 5, ௨௭௮ : 4, ௩௧௯ : 3, ௩௩௧ : 5, ௩௩௯ : 5, ௩௫௦ : 1, ௩௮௭ : 4.

6. வழையமலடுச்சுர் : " வழையமை சாரல்" (மலைபடு. 181.)

8. புன்றளோமை : குறுந். எக : 2, ஒப்பு. (உகூo)

---

## தலைவி கூற்று

[இரவுக்குறிக்கண் வந்த தலைமகன் சிறைப்புறத்தே இருப்ப அதனையறிந்த தலைவி தோழிக்குச் சொல்வாளாகி, "தலைவரது வரவை எதிர்நோக்கி வருந்தி இரவெல்லாம் துயின்றிலேன்" என்று கூறி, விரைவில் வரைந்துகோடலே நன்றென்பதைப் புலப்படுத்தியது.]

உகூக. பழமழை பொழிந்தெனப் பதனழிந் துருகிய
சிதட்டுக்கா யெண்ணின் * சில்பெயற் கடைநாட்
சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
நள்ளென் யாமத் தையெனக் கரையும்
அஞ்சுவரு பொழுதி னானு மென்கண்
துஞ்சா வாழி தோழி காவலர்
கணக்காய் வகையின் வருந்தியென்
நெஞ்சுபுண் ணுற்ற விழுமத் தானே.

எ - து. இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறமாகத் தோழிக்குச் சொல்வாளாய்ச் சொல்லியது.

கழார்க் கீரன் எயிற்றி.

(ப - ரை.) தோழி—, காவலர் கணக்கு ஆய் வகையின் - நாழிகைக் கணக்கர் இரவில் காலக்கணக்கை ஆராயும் திறத்தைப்போல ஆராய்ந்து, நெஞ்சு புண் உற்ற விழுமத்தான் - நெஞ்சம் புண்பட்ட துன்பங் காரணமாக, பழ மழை பொழிந்தென - பழைய மழை பொழிந்ததாக, பதன் அழிந்து உருகிய - செவ்வி அழிந்து ஒழுகிய, சிதடு காய் எண்ணின் - உள்ளீடில்லாத ஊமைக் காயையுடைய எட் பயிரையுடைய, சில் பெயல் கடைநாள் - சிறிய மழையையுடைய கார்ப்பருவத்தின் இறுதிநாட்களில், சேற்று நிலை முனைஇய - சேற்றின்கண் நிற்றலை வெறுத்த, செ கண் காரான் - சிவந்த கண்ணை

(பி - ம்.) * விற்பெயற் கடைநாள், விற்பெயர்க் கடைநாள்.

யுடைய எருமை, நள்ளென் யாமத்து - இருள் செறிந்த நடு இரவின் கண், ஐ என கரையும் - ஐயென்று ஒலிக்கும், அஞ்சுவரு பொழுதினும் - அச்சம் உண்டாகின்ற காலத்திலும், என் கண் - என்னுடைய கண்கள், துஞ்சா - தூங்காவாயின.

(முடிபு.) தோழி, வருந்தி உற்ற விழுமத்தான், பொழுதினும் என்கண் துஞ்சா.

(கருத்து.) தலைவனது வருகையை நோக்கி நான் இரவில் துயிலாதிருந்தேன்.

(வி - ரை.) பழமழை பொழிந்த காலத்தில் எள் பதனழிந்தது. பதனழிந்துருகுதல், உள்ளீடு அழுகி விழுதலால் ஒன்றும் இல்லையாதல்.

ஐ யென : அநுகரண வொலி. தனிமைத் துன்பத்தை மிகுதிப் படுத்தலின் யாமத்தை அஞ்சுவரு பொழுதென்றாள். கரையும் பொழுதென இயைக்க.

காவலரென்றது நாழிகைக் கணக்கரை. அவர் இரவில் துயிலாது நாழிகை வட்டிலைக் கூர்ந்து நோக்கி யாமக்கணக்கை அறிவிப்பர்; அவர்கள் துயிலாதிருத்தலைப்போல யானும் தலைவன் வரும் பொழுதை நினைந்து நினைந்து துயிலாதிருந்தேனென்றாள். வருந்துதல், இன்னும் வந்திலரே யென்றும், காவலர் ஆதியோர் கண்டனரோ வென்றும் வருந்துதல்.

இதனால் தான் படுந்துன்பத்தையும் அச்சத்தையும் கூறி, வரைதலே இதற்குப் பரிகாரமென்று தலைவி புலப்படுத்தினாள்.

## மேற்கோளாட்சி

3. முனைவென்னும் உரிச்சொல் முனிவென்னும் குறிப்பை உணர்த்தியது (தொல். உரி. 89, இளம், 90, சே, தெய்வச். 88, ந.); ஆவென்னும் பெயர் எருமைக்கும் வந்தது (ஷை. மரபு. 60, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. **பழ மழை : குறுந். உ௬௪ : 5, ஒப்பு.**
2. **சில்பெயற் கடைநாள் : குறுந். ௬௬உ : 1.**
3. **காரான் : குறுந். ௧௮௪ : 3, ஒப்பு.**

**செங்கட்காரான் :** "செங்க ணெருமை" (மலைபடு. 472); "செந் நோக் கெருமை" (ஐந். எழு. 46.)

3, ழ. அகநா. சகூ : 1.

4. நள்ளென் யாமம் : குறுந். ௬ : 1, ஒப்பு; ககூ0 : 1, ஒப்பு.

5-6. தலைவி துஞ்சாமை : குறுந். ௬ : 4, ஒப்பு.

6-7. நாழிகைக்கணக்கர் கணக்காய்தல் : முல்லைப். 55-8 ; சிலப். ௫ : 49, அடியார் ; கம்ப. மாரீசன். 129. (உகூக)

## தோழி கூற்று

[தலைவி தலைவனுடன் போவதற்கு நேர்ந்த தோழி, அதனைத் தலைவிக்கு உணர்த்தியது.]

உகூஉ. ஊரலரெழச் சேரி கல்லென
ஆனா தலைக்கு மறனி லன்னை
தானே யிருக்க தன்மனை யானே
நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
உணலாய்ந் திசினு லவரொடு சேய்நாட்டு
விண்டொட நிவந்த விலங்குமலைக் கவாஅற்
கரும்புநடு பாத்தி யன்ன
பெருங்களிற் றடிவழி நிலைஇய நீரே.

எ - து. உடன்போக்கு நேர்ந்த தோழி, கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது.

பாலை பாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) ஊர் அலர் எழ - ஊரில் பழிமொழி உண்டாக, சேரி கல்லென - தெருவிலுள்ளார் கல்லென்று ஆரவாரிப்ப, ஆனாது அலைக்கும் - அமையாமல் நம்மை வருத்துகின்ற, அறன் இல் அன்னை - அறநினைவில்லாத தாய், தன்மனை - தன் வீட்டில், தானே இருக்க - நின்னைப் பிரிந்து தான் ஒருத்தியே இருப்பாளாக; யான்—, சேய் நாட்டு - நெடுந்தூரத்திலுள்ள நாட்டின்கண், விண் தொட நிவந்த - வானத்தைத் தொடும்படி உயர்ந்த, விலங்கு மலை கவான் - குறுக்கிட்ட மலையின் அடிவாரத்திலுள்ள, கரும்பு நடு பாத்தி அன்ன - கரும்பை நட்ட பாத்தியைப்போன்ற, பெரு களிறு அடி வழி - பெரிய ஆண் யானையினது அடிச்சுவட்டின்கண், நிலைஇய - தங்கிய, நீர் - நீரை, அவ

ரொடு - அத்தலைவரோடு, நெல்லி தின்ற முள் எயிறு தயங்க - நெல்லிக் காயைத் தின்ற முள்ளைப்போலக் கூரிய பற்கள் விளங்கும்படி, உணல் ஆய்ந்திசின் - நீ உண்ணுதலை நினைந்தேன்.

(முடிபு.) எழ, கல்லென, அன்னை இருக்க; யான் உணல் ஆய்ந்திசின்.

(கருத்து.) நீ தலைவனுடன் போதலுக்கு யான் நேர்ந்தேன்.

(வி - ரை.) ஊர் அலரெழுதலும் சேரி ஆரவாரித்தலும் தலைவி தலைவனுடன் செல்வதனால் நிகழ்வன. சேரியிலுள்ளார், ஊரினருள் தலைவியை நன்கறிந்தவராதலின் ஆரவாரித்தனர். அலைத்தல் - காவல் செய்தல். அறன் - தக்க தலைவன் இன்னானென்பதறிந்து மணம் செய்து தருதல். தானே : ஏகாரம், பிரிநிலை.

முள் எயிறு - முட்போலக் கூரிய எயிறு. நெல்லி பாலைவழியில் இருப்பது. அதனைத் தின்றமையால் ஒளியிழந்த பல் நீருண்பதனால் விளக்கமுறும். உணல் - தலைவி உண்ணுதல்.

யானை அடிச்சுவட்டின்கண் தங்கிய நீர் கருப்பம்பாத்தியிலுள்ள நீரைப் போல்வது. இங்ஙனம் நீர் களிற்றடிச்சுவட்டிற் றங்குதலை இந் நூல், ௫௨-ஆம் செய்யுளாலும் உணரலாகும்.

நெல்லிக்காயைத் தின்ற பின்னர் நீரைக் குடித்தால் இனிக்கும் (அகநா. ௫௪ : 15-6.) இங்ஙனம் குடிக்கும் வழக்கம்,

"செழுந்தண் மனையோ டெம்மிவ ணொழியச்
செல்பெருங் காளை பொய்மருண்டு சேய்நாட்டுச்
சுவைக்காய் நெல்லிப் போக்கரும் பொங்கர்
வீழ்கடைத் திரள்கா யொருங்குடன் றின்று
வீசுனைச் சிறுநீர் குடியினள் கழிந்த
குவளை யுண்க ணென்மகள்" (நற். ௨௭௧ : 3-8)

என்பதனாலும் விளங்கும்.

களிற்றின் அடிவழி நிலைஇய நீராயினும் அது தலைவனோடு உண்ணும்பொழுது தலைவிக்கு மிக இனியதாகும் ;

"அன்னாய் வாழிவேண் டன்னைநம் படப்பைத்
தேன்மயங்கு பாலினு மினிய வவர்நாட்
டுவலைக் கூவற் கீழ
மானுண் டெஞ்சிய கலிழி நீரே." (ஐங். ௨௦௩.)

இச்செய்யுளை அடியொற்றி வந்த பழஞ்செய்யுளொன்று வருமாறு :—

"ஊருஞ் சேரியு மலரெழ யாயும்
தானே யிருக்க தன்மனை யானே
திருந்துவேல் விடலையொடு செழீஇ
அருஞ்சுரஞ் சேறல் புரிந்தன ளினியே"

(தமிழ்நெறி. மேற். 92.)

## மேற்கோளாட்சி

1. ஊராருடைய கூற்று, கொண்டெடுத்து மொழியப்பட்டது (தொல். செய். 192, பேர். 191, ந ; இ. வி. 563) ; அசையும் ஒரோவழிச் சீராம் (யா. வி. 95.)

2-3. இடையூறு பொருளின்கண் * தலைவி போக்குடன்பட்டது (தொல். பொருள். 31, ந.)

ழ. போக்கு நேர்ந்தமை தோழி கூறியது (தொல். அகத். 39, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. ஊருஞ் சேரியும் அலரெழல் : "ஊருஞ் சேரியு முடன்றியைத் தலரெழ", "ஊருஞ் சேரியு மோராங் கலரெழ" (அகநா. உஉ0 : 1, ௯அ௯ : 2.)

அலரிற் கல்லெனல் : (குறுந். உச : 6); "இவ்வூர்க், கல்லென் கௌவை" (ஐங். க௯க : 2-3.)

கல்லென்றல் : குறுந். உச : 6, ஒப்பு ; நற். உ0எ : 3, உகூ : 7.

2 அன்னை அலைத்தல் : குறுந். உசஎ : 5, ஒப்பு.

அறனிலன்னை : குறுந். உசச : 6, ஒப்பு.

4. முள்ளெயிறு : குறுந். உஅ௬ : 1 ; நற். கஉ0: 11 ; கலி. ச : 13, க0ச : 18, ககஉ : 20 ; அகநா. உகஉ : 5; ஏலாதி. 7 ; மணி. கஅ : 71 ; சீவக. 491, 1099, 2732.

6. விண்டோட நிவந்த மலை : குறுந். கசச : 7, உஅகூ : 8.

விலங்குமலை : குறுந். க௯ச : 7, கசச : 7.

மலைக்கவான் : குறுந். ௯கூ௯ : 2 ; நற். ௯உ : 1.

---

* இக்கருத்து, சிறப்புடையதாகத் தோற்றுகின்றது.

7. கரும்பு நடு பாத்தி: குறுந். கஅ0: 3, ஒப்பு; ஐங். சுக: 1; பதிற். கட: 3.

7-8. * "பெருங்களிறு மிதித்த வடியகத் திரும்புலி, ஒதுங்குவன கழிந்த செதும்ப லீர்வழி" (அகநா. கடுக: 11-2.)

மூ. அகநா. சுகு. (உசுஉ)

---

## தோழி கூற்று

[தாய் வெறியாட்டெடுக்கக் கருதியிருப்பதைத் தோழி தலைவிக்குக் கூறுவாளாகிச் சிறைப்புறத்தானாகிய தலைவனுக்கு உணர்த்தியது.]

உசுங. மறிக்குர லறுத்துத் தினைப்பிரப் பிரீஇச்
செல்லாற்றுக் கவலைப் பல்லியங் கறங்கத்
தோற்ற மல்லது நோய்க்குமருந் தாகா
வேற்றுப்பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்திப்
பேஎய்க் கொளீஇய ளிவளெனப் படுதல்
நோதக் கன்றே தோழி மால்வரை
மழைவிளை யாடு நாடனைப்
பிழையே மாகிய நாமிதற் படவே.

எ - து. "அன்னை வெறியாட்டெடுக்கக் கருதாநின்றாள்; இனி, யாம் இதற்கு என்கோலோ செயற்பாலது?" எனத் தோழி, தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகக் கூறியது.

பெருஞ்சாத்தன்.

(ப - ரை.) தோழி—, மால் வரை - பெரிய மலையினிடத்து, மழை விளையாடும் நாடனை - மேகம் விளையாடுகின்ற நாட்டுக்குத் தலைவன்மாட்டு, பிழையேம் ஆகிய நாம் - தவறிலேமாகிய நாம், இதன் பட - இக் களவொழுக்கத்திலே நிகழாநிற்ப, மறி குரல் அறுத்து - ஆட்டின் கழுத்தை அறுத்து, தினை பிரப்பு இரீஇ - தினையையுடைய பிரப்பை வைத்து, செல் ஆறு கவலை - ஓடுகின்ற ஆற்றுத் துருத்தியிலே, பல் இயம் கறங்க - பலவகையான இசைக்

* பாலைபாடிய பெருங்கடுங்கோவின் பாட்டு.

கருவிகள் ஒலிப்ப, தோற்றம் அல்லது - தாம் வெளிப்படுதலேயன்றி, நோய்க்கு மருந்து ஆகா - நம்முடைய காமநோய்க்குப் பரிகாரம் ஆகாத, வேறு பெரு தெய்வம் பல உடன் வாழ்த்தி - வேறாகிய பெரிய தெய்வங்கள் பலவற்றை ஒருங்கு வாழ்த்தி, இவள் பேஎய் கொளீஇயள் - இவள் பேயாற்கொள்ளப்பட்டாள், என படுதல் - என்று கூறப்படுவது, நோதக்கன்று - வருந்துதற்கு உரியதாகும்.

(முடிபு.) தோழி, நாம் இதற்பட, அறுத்து இரீஇ வாழ்த்தி எனப்படுதல் நோதக்கன்று.

(கருத்து.) தாய் வெறியாடக் கருதினாள்; அதனை நாம் தடுக்க வேண்டும்.

(வி - ரை.) தலைவியின் வேறுபாடு கண்ட தாய் வெறியாட்டெடுத்து உண்மை யறிய எண்ணினாள். அதனை உணர்ந்த தோழி அச்செய்தியைத் தலைவிக்குக் கூறும் வாயிலாகத் தலைவனுக்குப் புலப்படுத்தியது இது. பிரப்பு - தானியங்களைப் பலியாக வைத்தல். ஆற்றுக் கவலை - ஆற்றிடைக் குறையாகிய துருத்தி; "உள்ளாற்றுக் கவலை" (புறநா. உகக: 1) என்பதன் உரையைப் பார்க்க. துருத்தியில் தெய்வம் உறைதலை,

"கவின்பெறு துருத்தியும்" (முருகு. 223),
"நல்யாற்று நடுவும்" (பரி. சு: 67)

என்பவற்றால் அறியலாகும்.

வழிப்போவார் செல்லும் வழியிலுள்ள கவர்த்த இடம் என்றலும் ஒன்று.

முருகன் முதலியோரை மறியறுத்துத் தினைப்பிரப்பை வைத்து வழிபடுதலை,

"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து" (முருகு. 218)

என்பதனால் உணரலாகும்.

தலைவனையே தெய்வமாகக் கொள்ளும் கற்புடையாராதலின், தாய் வெறியாட்டெடுக்குங்கால் வணங்குந் தெய்வங்களை 'வேற்றுப் பெருந்தெய்வம்' என்றாள். அவற்றை, 'நோய்க்கு மருந்தாகாத் தெய்வம்' எனவே நோய்க்கு மருந்தாகும் தெய்வமொன்றுண்டென்பது பெறப்படும்; அத்தெய்வமே தலைவன்;

"நோய்க்குமருந் தாகிய கொண்கன்" (ஐங். கoக: 5)

நாடனைப் பிரையேமென்றது நாடன்றிறத்துள்ள அன்பினில் மாறுபடேமென்றவாறு.

இதற்பட - இத்துன்பத்திலேபட வென்பதும் பொருந்தும்.

இதனால், தலைவன் வரைந்து கொள்ள வேண்டியதன் இன்றி யமையாமையைத் தோழி புலப்படுத்தினாள்.

## ஒப்புமைப் பகுதி

3. நோய்க்கு மருந்து : குறள், 1102 ; கம்ப. மிதிலைக். 80.

1-3. தெய்வம், வழிபடத் தோன்றுதல் : முருகு. 239-44 ; பரி. ௫ : 14-5.

4. வேற்றுப் பெருந்தெய்வம் : குறிஞ்சிப். 6.

6. நோதக்கன்று : குறுந். எஅ : 4.

6-7. வரையில் மழை விளையாடுதல் : குறுந். ௧0அ : 1, ஒப்பு.

மு. குறிஞ்சிப். 1-8 ; அகநா. ௧அ, உ௪உ. (உ௬௩)

---

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவால் தலைவியினது மேனியின்நிறம் வேறுபடு தலைக்கண்டு கவன்ற தோழியை நோக்கி, “யான் அவர் கேண்மையின் உறுதியை அறிவேனாதலின் ஆற்றுவேன்” என்று தலைவி கூறியது.]

உ௬௪. கலிமழை கெழீஇய கான்யாற் றிகுகரை
ஒலிநெடும் பீலி துயல்வர வியலி
ஆடுமயி லகவு நாட னம்மொடு
நயந்தனன் கொண்ட கேண்மை
* பயந்தக் காலும் பயப்பொல் லாதே.

என - து. ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற் றுவல் என்றது.

கபிலர்.

---

(பி - ம்.) * பசந்தக் காலும் பசப்பொல் லாதே.

(ப - ரை.) தோழி, கலி மழை கெழீஇய - ஆரவாரத்தை யுடைய மழை பொருந்திய, கான் யாறு இகு கரை - காட்டாற்றினது தாழ்ந்த கரையினிடத்து, ஒலி நெடு பீலி துயல்வர - தழைத்த நெடிய தோகை அசைய, இயலி - நடந்து, ஆடு மயில் அகவும் நாடன் - ஆடுகின்ற மயில்கள் கூவும் நாடன், நம்மொடு நயந்தனன் கொண்ட கேண்மை - நம்மோடு விரும்பி உண்டாக்கிக்கொண்ட நட்பானது, பயந்தக்காலும் - நாம் பசலையை அடைந்தாலும், பயப்பு ஒல்லாது - அப்பசலையொடு பொருந்தாது.

(முடிபு.) நாடன் கொண்ட கேண்மை பயந்தக்காலும் பயப்பு ஒல்லாது.

(கருத்து.) என் மேனியில் வேறுபாடு உண்டாயினும் என் நெஞ்சம் அவர் செய்த நட்பில் உறுதியுடையதாகையால் ஆற்றுவேன்.

(வி - ரை.) கலி - இடி முதலியவற்றால் உண்டாகும் ஆரவாரம். இகு கரை - தாழ்ந்த கரை; "இகுத்த நோக்கம்" (அகநா. ௩௯ : 17) என்ற விடத்து அதன் உரையாசிரியர், தாழ்ந்த நோக்க மெனப் பொருளெழுதியிருத்தல் காண்க; இகுத்தலென்பதற்கு அடித்தலென்னும் பொருளுண்மையின் (புறநா. ௩௫௮ : 1) அலைகள் மோதும் கரையெனப் பொருள்கொள்ளுதலும் ஆம்; "இருங்க விகுப்பத்து" (மலைபடு. 367) என்றவிடத்து இகுப்பமென்பதற்கு நச்சினார்க்கினியர் திரட்சியெனப் பொருள் கூறுதலின், திரண்ட கரை யென்பதும் ஒன்று.

கேண்மை அப்பயப்புக்கு உடம்படாது விரைவில் கூட்டுவிக்கு மென்பதும் பொருந்தும்.

'என்னுடைய மேனி பசந்ததேயன்றித் தலைவன்கொண்ட கேண்மை மெலிவுற்றிலது. அது மிக்க திண்ணிதாக அமைந்தது. ஆதலின் யான் ஆற்றுவேன்' என்று தலைவி கூறினாள்.

## ஒப்புமைப் பகுதி

3. மயில் அகவும் நாடன்: "மயிலின மகவு நாடன்" (யா.கா. மேற். 'பூத்த வேங்கை')

1-3. மயில் இயலி ஆடுதல்: "மால்வரைச் சிலம்பின் மகிழ் சிறந் தாலும், பீலி மஞ்ஞையி னியலி" (பெரும்பாண். 330-31); "கழைவள ரடுக்கத் தியலி யாடுமயில்" (அகநா. அ௨ : 9.)

3-4. நாடன் கேண்மை : குறுந். சுக : 5, ஒப்பு.

நயந்த, பயந்த : குறுந் உகக : 1 ; குறள், 1181, 1190.

4-5. தலைவன்கேண்மை கெடாதது : குறுந். கஎ0 : 4-5, ௬கரு : 4-5.

தலைவியின் உடல் வேறுபாடுற்றும் தலைவன் கேண்மை மெலி யாமை : குறுந். க0 : 6-7, ஒப்பு. (உசுச)

---

## தோழி கூற்று

[வரைபொருட்குத் தலைவன் பிரிந்தானாக, அவன் வரையாது பிரிந்தானென வருந்திய தலைவிக்குத் தலைவன் பிரிந்த காரணங் கூறித் தோழி ஆற்றுவித்தது.]

உசுரு. காந்தளங் கொழுமுகை காவல் செல்லாது
வண்டுவாய் திறக்கும் பொழுதிற் பண்டும்
தாமறி செம்மைச் † சான்றேரைக் கண்ட
கடனறி மாக்கள் போல விடன்விட்
டிதழ்தளை யவிழ்ந்த வேகல் வெற்பன்
நன்னர் நெஞ்சத்தன் றோழி நின்னிலை
யான்றனக் குரைத்தனெ னாகத்
தானு ணினனினைந் தாகா வாறே.

எ-து. வரையாது பிரிந்தவிடத்து, அவர் ‡ பிரிந்தது நின்னை வரைந்து கோடல் காரணமாகத்தானெனத் தோழி தலைமகட்குக் கூறியது.

கருவூர்க் கதப்பிள்ளை.

(ப-ரை.) தோழி—, காந்தள் அம் கொழு முகை - காந்தளினது அழகிய கொழுவிய அரும்பை, காவல் செல்லாது - தானாக

---

* கபிலர் பாட்டு.

(பி-ம்.) † சான்றோர் கண்ட. ‡ பிரிந்த காரணம்.

மலரும் வரையில் காத்து நில்லாமல், வண்டு - வண்டுகள், வாய் திறக்கும் பொழுதில் - மூடிய இதழ்களைத் திறக்கும் சமயத்தில், பண்டும் தாம் அறி செம்மை சான்றோர் கண்ட - முன்பும் தாம் அறிந்த நடுநிலைமையையுடைய சான்றோரைக் கண்ட, கடன் அறி மாக்கள்போல - எதிர்கொள்ளுதல் முதலிய கடமைகளை அறிந்த மனிதரைப்போல, இடன்விட்டு - இடங்கொடுத்து, இதழ் தளை அவிழ்ந்த - இதழ்கள் பிணிப்பவிழ்ந்த, ஏகல் வெற்பன் - உயர்ச்சியை யுடைய மலைகளையுடைய தலைவன், நின் நிலை - நினது நிலையை, யான் தனக்கு உரைத்தனென் ஆக - நான் தனக்குச் சொன்னேனாக, இஃது ஆகாவாறு - இக்களவொழுக்கம் மேலும் நீட்டித்து நிகழாத படி, நாணினன் - நாணத்தையடைந்தான்; நன்னர் நெஞ்சத்தன் - அவன் நின்னை வரைந்து கொள்ள வேண்டுமென்னும் நல்ல நெஞ் சத்தை உடையவன்.

(முடிபு.) தோழி, நின்னிலை யான் உரைத்தனெனாக, வெற்பன் இஃது ஆகாவாறு நாணினன்; நன்னர் நெஞ்சத்தன்.

(கருத்து.) நின்னை வரைந்துகொள்ளுதல் காரணமாகவே தலைவன் பிரிந்தானாதலின் நீ வருந்தற்க.

(வி - ரை.) வாய் திறத்தல் - பாடுதலுமாம். தானே மலரும் பருவத்துக்குமுன் வண்டு மலரைத் திறக்குமென்றது, களவு வெளிப்பட்டு அலராதலுக்குமுன் வரைந்துகொள்ளும் எண்ண முடையான் தலைவனென்ற குறிப்பினது.

'யான், நீ ஆற்றாறஞ்சுதலையும் காவன்மிகுதியால் துன்பப் படுதலையும் கூறி வரைவு கடாவினேனாக, இனி இத்தகைய கள வொழுக்கம் நிகழாவாறு எண்ணி நாணினான். அதனால் வரை பொருட்குப் பிரிந்தான்' என்றாள். நாணத்தால் நிகழும் காரியம் களவொழுக்கமாகாவாறு செய்வது; இங்கே காரணத்தைக் காரியமாக உபசரித்தாள்.

'யாம் இதுகாறும் இதனை அறிந்து ஆவன புரிந்திலேமே!' எனத் தலைவன் நாணினன்; இதனால் அவன், "வடுப்பரியு நாணுடை யான்" (குறள், 502) என்பது போதரும்.

## ஒப்புமைப் பகுதி

5. ஏகல் வெற்பு: நற். கககூ: 10; அகநா. ௬உ: 5, கஎஎ: 8; திணை. ஐம். 10; பழ. 68, 127.

1-5. வண்டு வாய்திறக்கப் போது மலர்தல்: (குறுந். உசுO : 1-2, கூஎ0 : 1-2); "வண்டுவாய் திறப்ப விண்ட பிடவம்" (நற். உகூஅ : 3.)

6. தலைவன் நன்னர் நெஞ்சத்தன்: குறுந். உருக : 8. (உசாரு)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைந்துகொள்ளாமல் பிரிந்த காலத்தில் வருந்திய தலைவி தோழியை நோக்கி, "அவர் வருவாரென்று தெரிவிக்கும் தூது ஒன்றையும் காணோம்" எனக் கூறியது.]

உசாசா. நமக்கொன் றுரையா ராயினுந் தமக்கொன்
றின்னா விரவி னின்றுணை யாகிய
படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ
துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே.

என்பது. வரையாது பிரிந்தவிடத்துத் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

நக்கீரர்.

(ப - ரை.) தோழி, துறத்தல் வல்லியோர் - நம்மைப் பிரிந்து சென்ற வன்மையை யுடையோராகிய தலைவர், புள் வாய் தூது - பறவை வாயிலாக விடும் தூது மொழியை, நமக்கு ஒன்று உரையார் ஆயினும் - நம்மைப் பொருட்படுத்தி நமக்கு ஒன்றைக் கூறிவிடா ராலும், தமக்கு ஒன்று இன்னா இரவின் - தமக்குப் பொருந்திய இன்னாமையையுடைய இராக்காலங்களில், இன் துணை ஆகிய - இனிய துணையாக இருந்த, படப்பை வேங்கைக்கும் - மனைத்தோட்டத்தின் கண் உள்ள வேங்கைமரத்திற்கும், மறந்தனர் கொல் - தூது மொழியை மறந்தனரோ?

(முடிபு.) வல்லியோர் தூது நமக்கு உரையாராயினும் வேங் கைக்கு மறந்தனர்கொல்?

(கருத்து.) தலைவர் வருதற்குரிய அடையாளமொன்றும் கண்டேமில்லை.

(வி - ரை.) நமக்கு ஒன்று உரையாரென்றது, 'அவர் வரை யாது சென்றவராதலின் சென்ற வினை முடிந்து என்னை வரைந்து

கொள்ளும் பொருட்டு எமர்பால் மணம் பேசுதற்குத் தூது விட்டாரிலர்' என்னும் கிடக்கையது. தாம் பிரிந்துசென்ற காலத்தில் நமக்கு ஒன்று உரைத்துவிட்டுச் சென்றாரிலரென்று பொருள் கூறுதலும் பொருந்தும். இரவுக்குறி வந்தொழுகியகாலத்தில் தலைவன் வேங்கை மரத்தின் அடியில் தலைவியைக் கண்டானாதலின் அவனுக்கு அதனை இன்றுணை யென்றாள்;

"பனைவளர் கைம்மாப் படாத்தம் பலத்தரன் பாதம்விண்ணோர்
புனைவளர் சாரற் பொதியின் மலைப்பொலி சந்தணிந்து
சுனைவளர் காவிகள் சூடிப்பைந் தோகை துயில்பயிலும்
சினைவளர் வேங்கைகள் யாங்கணின் றாடுஞ் செழும்பொழிலே"
(சிற். 154)

என்ற செய்யுளில் இரவுக்குறியாக வேங்கைமரச்சூழல் சொல்லப் பட்டுள்ளது.

இன்னா இரவு - காவல் மிகுதியாகிய துன்பத்தையுடைய இரவு. தன்னைக் காண்பதற்குரிய இடமாதலின் இன்றுணை யென்றாள்.

வேங்கைக்குத் தூது மறந்தனர்கொல் என்றது, இரவுக்குறியினிடத்து வந்து அளவளாவிய செய்திகளை மறந்தனரோ வென்னும் கருத்தினது.

மரத்திற்கேற்பப் புள்வாய்த்தூது கூறினாள். புள்விடு தூது புலனெறி வழக்கம்.

ஓ, ஏ : அசை நிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

3. வேங்கை தலைவியின் வீட்டருகில் இருத்தல்: நற்றி. ௩௱௫௰௯ : 6.

4. வல்லியோர் : நற். உகஅ : 7; அகநா. ௩கசு : 12, ௩கூஅ : 15.

பிரிந்த தலைவன் தூதுவிடுத்தல்: நற். உ௫௪ : 7, ஒப்பு.

புள்வாய்த் தூது : "துணிமுந்நீர்ச் சேர்ப்பற்குத் தூதோடு வந்த, பணிமொழிப் புள்ளே" (கைந்நிலை, 51.) (உசுசு)

தலைவன் கூற்று

[‘முன்னோரைப் பின்பற்றி நாமும் பொருள்தேடச் செல்வோம்’ என்றெண்ணிய தலைவன் பிறகு, வாழ்நாளது சிறுமையையும், இளமையினது அருமையையும் கருதிச் செலவு தவிர்ந்தது.]

உ௬எ. இருங்கண் ஞாலத் தீண்டுபயப் பெருவளம்
ஒருங்குட னியைவ தாயினுங் கரும்பின்
காலெறி கடிகைக் கண்ணயின் றன்ன
வாலெயி றூறிய வசையி றீநீர்க்
கோலமை குறுந்தொடிக் குறுமக ளொழிய
ஆள்வினை மருங்கிற் பிரியார் நாளும்
உறன்முறை மரபிற் கூற்றத்
தறனில் கோணற் கறிந்திசி னோரே.

எ-து. ‘மேனின்றும் ஆடவர் பொருட்குப் பிரிந்தாராகலின் நாமும் பொருட்குப் பிரிதும்’ என்னும் நெஞ்சிற்கு, நாளது சின்மையும் இளமையது அருமையும் கூறிச் செலவழுங்கியது.

[மேல் நின்றும் - முற்காலந் தொடங்கி. நாளது சின்மை - வாழ்நாளின் சிறுமை; இளமையது அருமை - இளமை பெறுதற் கரிதாதல்; இவ்விரண்டும் பொருள் தேடற்குரிய முயற்சியைத் தகைவன (தொல். அகத். 44, இளம்.)]

காலெறி கடிகையார்.

(ப - ரை.) நெஞ்சே, நாளும் - நாள்தோறும், உறல் முறை மரபின் - முறையாக அடைதலாகிய மரபையுடைய, கூற்றத்து - கூற்றுவனது, அறன் இல் கோள் - கண்ணோட்டமில்லாத கொலைத்தொழிலை, நற்கு அறிந்திசினோர் - நன்றாக அறிந்தோர், இரு கண் ஞாலத்து - பெரிய இடத்தையுடைய பூமியின்கண், ஈண்டு பயம் பெரு வளம் - தொக்க பயனையுடைய பெரிய செல்வம், ஒருங்கு உடன் இயைவது ஆயினும் - ஒருங்கே பொருந்துவதாயினும், கரும்பின் கால் எறி கடிகைக்கண் - கரும்பின் அடிப்பகுதியில் வெட்டிய துண்டத்தை, அயின்றன்ன - உண்டாற்போன்ற சுவையையுடைய, வால் எயிறு ஊறிய - வெள்ளிய பல்லினிடத்தே ஊறிய, வசை இல் தீ நீர் - குற்ற

(பி - ம்.) * காலறி, காலரி.

மில்லாத இனிய நீரையும், கோல் அமை குறு தொடி - திரட்சி யமைந்த குறிய வளையையும் உடைய, குறுமகள் ஒழிய - இளைய தலைவி நீங்கியிருப்ப, ஆள்வினை மருங்கின் - முயற்சியின் பொருட்டு, பிரியார் - தாம் மட்டும் தனித்துப் பிரிந்து செல்லார்.

(முடிபு.) அறிந்திசினோர், வளம் இயைவதாயினும் குறுமகள் ஒழியப் பிரியார்.

(கருத்து.) நான் தலைவியைப் பிரியேன்.

(வி - ரை.) கரும்பின் அடிப்பகுதி மிகச் சுவையுடையதா யிருக்கும்;

"கனைகடற் றண்சேர்ப்ப கற்றறிந்தார் கேண்மை
நுனியிற் கரும்புதின் றற்றே" (நாலடி. 138)

என்பதிற் கரும்பின் நுனிப்பகுதியினும் அடிப்பகுதி இனிமையுடைய தென்ற கருத்துக் காணப்படும். கடிகைக்கண்: உருபுமயக்கம்.

நாளும் உறன் முறைமரபிற் கூற்றம் - நாள்தோறும், வாழ்நாள் முடிவு வரையறுக்கப்பட்ட உயிர்கள்பால் முறையே செல்லும் மரபை யுடைய கூற்றுவன்;

"ஞாலத் தின்னுயிர் வாழ்வோர் நாப்பட்
காலம் பார்க்குங் காலன்" (பெருங். ௧. 37 : 204-5.)

அறனில் கோள்: ஈண்டு அறனென்றது கண்ணோட்டத்தை;

"தவத்துறை மாக்கண் மிகப்பெருஞ் செல்வர்
ஈற்றிளம் பெண்டி ராற்றுப் பாலகர்
முதியோ ரென்னா திளையோ ரென்னான்
கொடுந்தொழி லாளன் கொன்றனன் குவிப்ப"
(மணி. ௬ : 97-100)

என்று கூற்றுவனது அறனில்கோள் கூறப்பட்டிருத்தல் காண்க.

கூற்றுவனது கோளை அறிந்திசினோர், நாம் பிரியின் இருவருள் ஒருவர் உயிர்விட நேரின் மீட்டும் கூடுதல் அரிதென்று அஞ்சிப் பொருள்வயிற் பிரியார்; இது நாளது சின்மைபற்றிச் செலவு தவிர்ந் தது. தலைவியின் வாய்நீருறலைப் புனைந்து அவளைக் குறுமகளெனச் சுட்டினமையின் அவள் இளமைப்பருவமுடையாளென்பது பெறப் படும். இங்ஙனம் கூறியது, 'இவ்விளமைப் பருவத்தே நுகரும் இன் பத்தை இடையீடின்றி நுகரேமேல் இது பின் பெறற்கரிய தாகும்'

என்னும் குறிப்பை உட்கொண்டு; இஃது இளமையதருமையை நினைந்தது.

அறிந்திசினோரெனப் பொதுவிற் கூறினும் தான் அறிந்தமையையே கருதினன். அறிந்திசினோர் குறுமகள் ஒழிய என்ற ஒருமை பன்மை மயக்கத்தை, "ஏவலிளையர் தாய்வயிறு கரிப்ப" (தமிழ்நெறி. மேற்.) என்பதுபோலக் கொள்க.

தலைவியின் எயிற்றில் ஊறிய நீரின்சுவைக்குக் கரும்பின் காலெறிகடிகையின் சுவையை உவமித்தமையின் இச்செய்யுளை இயற்றிய ஆசிரியர் காலெறிகடிகையார் என்னும் சிறப்புப்பெயர் பெற்றார்.

## ஒப்புமைப் பகுதி

2-3. கரும்பின் அடிப்பகுதி சுவையாக இருத்தல்: "கருப்புக் கான்மட்டுந் தின்று வெனநின்ற கண்ணப்பன்" (காளத்திநாதர் கட்டளைக் கலிப்பா.)

4. வாலெயிறூறிய நீர் . அகநா . உ௬எ : 17 ; குறள், 1121.

வாலெயிறு : ஐங். ௪அ : 1.

3-4. "சுரும்பிவர் நறவயிற் சூழ்ந்தெழு கரும்பிற், றீநீ ரன்ன வாய் நீர்" (திருவலஞ்சுழி மும்மணிக்கோவை, 13.)

5. கோலமை குறுந்தொடி : குறுந். உ௬௬ : 7, ஒப்பு.

குறுந்தொடி : குறுந். ௬௫௬ : 8, ௬அ௪ : 2.

குறுமகள் : குறுந். அ௬ : 7, ஒப்பு.

6. ஆள்வினை மருங்கிற் பிரிதல்: அகநா. ௬௬ : 3, உ௫௫ : 7, ௬௫௬ : 1, ௬எ௬ : 4.

1-6. பெரும்பொருள் பெறினும் தலைவியைப் பிரியாமை : குறுந். ௬00 : 7-8 ; பட். 218-20 ; நற். ௬௬.

7-8. கூற்றத்து அறனில் கோள் : "அறனில் கூற்றந் திறனின்று துணிய", "நயனில் கூற்றம்" (புறநா. உ௬0 : 8, உ௬எ : 9, உ௨எ : 1); "ஆட்பார்த் துழலு மருளில் கூற்று" (நாலடி. 20.)

மு. அகநா. ௬எ௬. (உ௬எ)

## தோழி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தே இருப்ப, இரவுக்குறியின்கண் உண்டாகும் ஏதத்துக்கு அஞ்சுதலையும், தலைவனது வருகையின் இன்றியமையாமையையும் தோழி தலைவிக்குக் கூறி, வரைந்து கோடலே தக்கதெனப் புலப்படுத்தியது.]

உசாஅ. சேறி ரோவெனச் செப்பலு மாற்றும்
வருவி ரோவென வினவலும் வினவாம்
யாங்குச்செய் வாங்கொ றேழி பாம்பின்
பையுடை யிருந்தலை துமிக்கு † மேற்றொடு
நடுநா ளென்னோர் வந்து
நெடுமென் பணைத்தோ ளடைந்திசி னோரே.

எ - து. தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகட்குத் தோழி சொல்லியது.

கருவூர்ச் சேரமான் சாத்தன்.

(ப - ரை.) தோழி—, பாம்பின் பையுடை இரு தலை - பாம்புகளின் படத்தையுடைய பெரிய தலையை, துமிக்கும் - துணிக்கும்; ஏற்றொடு - இடியொடுகூடிய, நடு நாள் - பாதியிரவு, என்னோர் - என்று எண்ணாராகி, வந்து - ஈண்டுப் போந்து, நெடு மெல் பணை தோள் - நெடிய மெல்லிய மூங்கிலைப்போன்ற நின்தோள்களை, அடைந்திசினோர் - அடைந்த தலைவர்பால், சேறிரோ என - செல்கின்றீரோ என்று, செப்பலும் ஆற்றும் - செப்புதற்கும் வன்மை இல்லேமாயினேம்; வருவிரோ என - சென்றால் மீண்டும் வருவிரோ என்று, வினவலும் வினவாம் - கேட்டலையும் செய்யோம்; யாங்கு செய்வாம் - எவ்வாறு செய்வேம்!

(முடிபு.) தோழி, வந்து அடைந்திசினோர்பால், சேறிரோ வெனச் செப்பலு மாற்றும்; வினவாம்; யாங்குச் செய்வாம்!

(கருத்து.) தலைவர் வரைந்துகொள்ளுதலே நலம்.

(வி - ரை.) தலைவனுடன் இடையீடின்றி இருத்தலை விரும்புபவராதலின் சேறிரோவெனச் செப்பும் ஆற்றல் இலராயினர். இடி

(பி - ம்.) * மருவிரோ. † மேறொடு.

முதலிய ஆற்றுறுகளை அஞ்சுபவராதலின் வருவிரோமெனை வினவ அஞ்சினர்.

தலைவனது வரவினால் இன்பம் உண்டாயினும் ஆற்றில் நிகழும் ஏதம் நினைந்து அச்சமும், அவன் வாராமையின் அவ்வச்சமின் றெனினும் அவனைக் காணாத் துன்பமும் உண்டாதலின் 'யாங்குச் செய்வாம்!' என மயங்கினாள். இதனால், இடையீடின்றி உடனுறை வதற்குரிய இல்லறநிலையே தக்கதென்றும், அதன்பொருட்டுத் தலைவன் வரைந்துகொள்ள வேண்டுமென்றும் உய்த்துணரவைத்தாள்.

அடைந்திசினோர்: வினைமுற்றாக்கிப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும்.

கொல், ஏ: அசை நிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

2. வினவலும் வினவாம்: குறுந். ௩௭: 1, ஒப்பு.

3. யாங்குச் செய்வாம்: குறுந். ௨௪௭: 3, ஒப்பு.

3-4. இடி பாம்பை எறிதல்: குறுந். ௧௫௮: 1-2, ஒப்பு.

5. தலைவன் நடுநாளில் வருதல்: குறுந் ௮௮: 4.

6. பணைத்தோள்: குறுந். ௧௩௧: 1, ௨௭௧: 8, ௩௧௫: 4, ௩௧௮: 6, ௩௨௬: 1, ௩௬௪: 5.

தோளுக்கு மூங்கில்: குறுந். ௨௨௬: 1-2.

நெடுந்தோள்: குறுந். ௧௧௩: 5.

மென்றோள்: குறுந். ௬௦: 7. (௨௬௮)

---

## தலைவி கூற்று

[தலைவன் சிறைபுறத்தானாக, தலைவி, "எந்தையும் யாயும் ஈண்டு இப்போது இலராதலின் தலைவன் என்னைக் காண்டற்கு இஃது எளிய செவ்வியென யாரோ...

உசாகூ. சேயாறு சென்று * துனைபரி யசாவா
துசாவுநர்ப் பெறினே நன்றுமற் றில்ல
வயச்சுறு வெறிந்த புண்டணிந் தெந்தையும்
நீனிறப் பெருங்கடல் புக்கனன் யாயும்
உப்பை மாறி வெண்ணெற் றரீஇய
உப்புவிளை † கழனிச் சென்றன ளதனாற்
பனியிரும் பரப்பிற் சேர்ப்பற்
கினிவரி னெளிய ளென்னுந் தூதே.

எ - து. தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

ப்லாடனார்.

(உ - ரை.) தோழி, எந்தையும் வய சுறு எறிந்த புண் தணிந்து - எனது தந்தையும் வலியையுடைய சுறுமீன் வீசியதனால் உண்டான புண் ஆறி, நீல் நிறம் பெரு கடல் புக்கனன் - மீண்டும் மீன் வேட்டை ஆடும்பொருட்டு நீலநிறத்தையுடைய பெரிய கடலினிடத்துப் புகுந்தனன்; யாயும் - என் தாயும், உப்பை மாறி - உப்பை விற்று, வெள் நெல் தரீஇய - வெண்ணெல்லை வாங்கி வரும் பொருட்டு, உப்பு விளை கழனி சென்றனள் - அவ்வுப்பு உண்டாகின்ற அளத்திற்குச் சென்றாள்; அதனால்—, பனி இரு பரப்பின் சேர்ப்பற்கு - குளிர்ச்சியையுடைய பெரிய பரப்பாகிய கடற்கரையையுடைய தலைவனுக்கு, இனி வரின் எளியள் என்னும் தூது - இப்பொழுது இங்கே வந்தால் தலைவி எளிதிற்கண்டு பெறுதற்குரியளென்னும் தூதுமொழியை, சேய் ஆறு சென்று - நெடுந்தூரமாகிய வழியைக் கடந்து போய், துனை பரி அசாவாது - விரையும் நடையினால் வருந்தாமல், உசாவுநர் பெறின் - கூறி உசாத்துணையாவாரைப் பெற்றால், நன்றுமன் - மிக நல்லதாகும்; தில்ல - இஃது என் விருப்பம்.

(முடிபு.) 'எந்தையும் கடல் புக்கனன்; யாயும் சென்றனள்; அதனால் இனிவரின் எளியள்' என்னும் தூதினைச் சேர்ப்பற்குக்கூறி உசாவுநர்ப்பெறின் நன்றுமன்.

(கருத்து.) தலைவன் என்னோடு அளவளாவுதற்கேற்ற செவ்வி இது.

(பி - ம்.) * துணைபரி. † கழனி சென்றனள்.

(வி - ரை.) தலைவி நெய்தனிலமகள். அவள் தந்தை சுறுவெறிந்த புண்ணுற் பலநாள் வீட்டிற்றங்கினன்; அவனுக்கு உரியன ஆற்றும் கடப்பாட்டினுல் தாயும் வீட்டில் இருந்தாள். ஆதலின் தலைவனும் தலைவியும் பலநாள் கண்டு அளவளாவல் இயலாதாயிற்று. இந்நிலை யில் தலைவன் ஒரு நாள் வந்து மறைவில் நின்றுனுக, அவன் முன்னுட் களைப்போலத் தன்னைக் காணுமற் போய்விடின் என்செய்வதெனக் கவன்ற தலைவி, அது சாறும் தம் கூட்டத்திற்குத் தடையாக நின்ற தந்தைதாயர் இன்மையை உரைத்து 'இது நற் செவ்வி' எனப்புலப் படுத்தினுள்.

தூதுசெலின் நலமென்றது, தோழியைப் புறம்போக்குதற்குக் கூறியதொரு குறிப்பு.

சேயாறுதலின் விரைந்தநடை கூறினுள். உசாவுநர் - தலைவிக்கு உசாத்துணையாவார். நீல்: நீலமென்பதன் விகாரம். இருமை, கரு மையுமாம்.

தூதால் உசாவுநரென்று பொருள் கூறுதலும் பொருந்தும். தூது - தூதுமொழி (சீவக. 1022, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. சேயாறு : குறுந். ௪00 : 1.

3. வயச்சுறு : குறுந். உ௬0 : 5; அகநா. ௧௩0 : 12.

4. நீல்நிறப் பெருங்கடல் : நற். ௪௫ : 2.

5. உப்பைவிற்று நெல்லைப் பெறுதல் : "உப்புநொடை நெல்லின் மூரல் வெண்சோறு", "நெல்லி னேரே வெண்க லுப்பெனச், சேரி விலைமாறு கூறலின்", "நெல்லு முப்பு நேரே யூரீர்,கொள்ளீ ரோவெனச் சேரிதொறு நுவலும்" (அகநா. ௬0 : 4, ௧௪0 : 7-8, ௩௯0 : 8-9.)

6. உப்பு விளை கழனி : "இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு" (மதுரைக். 117); "இருங்கழிச் செறுவி னுழாஅது செய்த, வெண்க லுப்பின் கொள்ளை" (அகநா. ௧௪0 : 2-3.) (உ௬௯)

## தலைவன் கூற்று

[வினைமுற்றி மீண்டு தலைவியோடு இன்புற்ற தலைமகன், மழையை நோக்கி, "நீ நன்றாகப் பெய்வாயாக!" என வாழ்த்தியது.]

உஎ0. தாழிரு டுமிய மின்னித் தண்ணென
வீழுறை யினிய சிதறி * யூழிற்
† கடிப்பிகு முரசின் முழங்கி யிடித்திடித்துப்
பெய்தினி வாழியோ பெருவான் யாமே
செய்வினை முடித்த செம்ம லுள்ளமோ
டிவளின் ‡ மேவின மாகிக் குவளைக்
குறுந்தா ணண்மலர் நாறும்
நறுமென் கூந்தன் மெல்லணை யேமே.

எ - து. வினைமுற்றிப் புகுந்த தலைமகன் கிழத்தியோடு உடனிருந்து கூறியது.

பாண்டியன் பன்னாடு தந்தான்.

(ப - ரை.) யாம் —, செய் வினை முடித்த செம்மல் உள்ளமோடு - செய்வினை முற்றுவித்ததனால் நிறைவையுடைய உள்ளத்தோடு, இவளின் மேவினம் ஆகி - இத்தலைவியோடு விரும்பிப் பொருந்தினேமாகி, குவளை குறு தாள் நாள் மலர் நாறும் - கூடிய குவளையினது குறிய காம்பையுடைய அலர்ந்த செவ்வியையுடைய மலர் மணக்கின்ற, நறு மென் கூந்தல் மெல் அணையேம் - நல்ல மெல்லிய கூந்தலாகிய மெல்லிய பாயலின்கண்ணே யிருந்தேம்; ஆதலின், பெரு வான் - பெரிய மேகமே, இனி - இப்பொழுது, தாழ் இருள் துமிய மின்னி - தங்கிய இருள் கெடும்படி மின்னுதலைச் செய்து, தண்ணென வீழ் உறை இனிய சிதறி - குளிர்ச்சி உண்டாம்படி வீழுகின்ற துளிகளுள் இனியவற்றைத் துளித்து, ஊழின் - முறைமையினால், கடிப்பு இகு முரசின் முழங்கி - குறுந்தடியால் அடிக்கப்பெறும் முரசைப்போல முழங்கி, இடித்து இடித்து - பன்முறை இடித்து, பெய்து வாழி - மழையைப் பெய்து வாழ்வாயாக!

(முடிபு.) யாம் மெல்லணையேம்; பெருவான், இனி மின்னிச் சிதறி முழங்கி இடித்துப் பெய்து வாழி!

---

(பி - ம்.) * யூழியிற். † கடிப்பிடு. ‡ மேவலமாகி, மேவுதலாகி.

(கருத்து.) நாம் இன்பம் பெற்றேம்; மழை நன்கு பெய்வதாக!

(வி - ரை.) இது, வினைமுற்றிய தலைமகன் தான் மேற்கொண்ட இல்லறத்துக்குரிய பொருள் கைவந்தமையால் அறமும் பொருளும், தலைவியைச் சேர்ந்தமையால் இன்பமும் பெற்ற உள்ளநிறைவினால் வானைவாழ்த்தியது. அறம், பொருள், இன்பமென்னும் இம்மூன்றையும்பெற்ற தலைவன் அம்மூன்றும் நடத்தற்கு ஏதுவாகிய வானை வாழ்த்தினான்;

'கடவுளது ஆணையான் உலகமும் அதற்குறுதியாகிய அறம் பொருளின்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழை'

(குறள், வான் சிறப்பு, அவதாரிகை, பரி.)

வாழ்த்தப்படும் பொருள்களுள் வானும் ஒன்று;

'வாழ்த்தப்படும் பொருளாவன: கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும் அரசரும் மழையும் நாடும் என்பன'

(தொல். செய். 109, பேர்.)

இங்ஙனம் தலைவன் வாழ்த்துதலைக் கோவைப் பிரபந்தங்களுட் பெரும் பாலனவற்றின் இறுதியிற் காணலாம்.

வீழ் உறை - உயிர்களால் விரும்பப்படும் துளியெனலும் ஆம். அளவிகந்து பெய்து இன்னுமை விளையாமைவேண்டி 'இனிய சிதறி' என்றான். ஊழ் - முறை; முறை, முரசை அடித்தலின் மேற்று. வாழியோ: ஓ, அசைநிலை. செம்மல் - உள்ள நிறைவு; செம்மலுள்ள மென்பதற்குத் தலைமை பொருந்திய உள்ளமென்று பொருளெழுதுவர் (முருகு. 62, ந.)

நாறுமென்றமையின் நறுமை நன்மையாயிற்று. மென்மையும் நறுமையும் அணையின் இலக்கணமாதலின் அவற்றையுடைய கூந்தலை அணையென்றான்.

ஏகாரங்கள், அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

1-5. பிரிந்த விடத்துத் தான் பெற்ற பெருக்கம் எய்திய சிறப்பின்கண் தலைவன் மனமகிழ்ந்து கூறியது (தொல். கற்பு. 5, ந.)

மு. பிரிந்துவந்து புகுந்த தலைவன் கூற்று (தொல். கற்பு. 5, இளம்.) ; தலைவன் பள்ளியிடத்து வந்திருந்து கூறியது (ஷை. ஷை. ஷை. ந.) ; தலைமகளோடு இருந்த தலைமகன் கார்ப்பருவங் கண்டு உவந்து சொல்லியது (நம்பி. 209.)

## ஒப்புமைப் பகுதி

3. கடிப்பிகு முரசு : புறநா. கஇஅ : 1 ; நாலடி. 100 ; பெருங். க. 37 : 5.

இடியின் ஒலிக்கு முரசின் முழக்கம் : குறுந். ௩அ0 : 1-3 ; முருகு. 121 ; குறிஞ்சிப். 49 ; நற். ககஎ : 10-12 ; பரி. ச : 19, உஉ : 4 ; அகநா. ௩கஉ : 10 ; புறநா. கஎ : 39, ௩ஙo : 4 ; திணை. ஐம். 23.

5. வினை முடிந்தமையால் தலைவனுக்கு இன்பம் உண்டாதல் : "வினைமுடித் தன்ன வினியோள்" (நற். ௩ : 8.)

5, மு. குறுந். உஏ௫ : 5 ; அகநா. கஅச : 5.

8. கூந்தலின் மணம் : குறுந். உ : 4-5, ஒப்பு.

கூந்தலணை : குறுந். உ௫ச : 5, ஒப்பு.

6-8. குவளை நாறும் கூந்தல் : "குவளை நாறுங் குவையிருங் கூந் தல்" (குறுந். ௩00 : 1) ; "குவளை நாறுங் கூந்தற் றேமொழி" (நற். உகூஉ : 7.) (உஎ0)

---

## தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்கு உடம்பட்டுத் தூதாக வந்த தோழியை நோக்கி, "தலைவரோடு ஒருநாள் நட்புப் பூண்டேன்; அது பலநாளும் எனக்குத் துன்பந்தருவதாயிற்று. அவ்வொரு நாட் செய்த நட்புப்பற்றியே ஏற்றுக்கொள்வேன்" என்றது.]

உஎக. அருவி யன்ன பருவுறை சிதறி
யாறு நிறை பகரு நாடனைத் * தேறி
உற்றது மன்னு மொருநாண் மற்றது
தவப்பன் னெடோண் † மயங்கி
வௌவும் பண்பி னோயா கின்றே.

---

(பி - ம்.) * தெரியுற்றது. † மயக்கி.

எ - து தலைமகற்கு வாயில் நேர்ந்து புக்க தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

அழிசி நச்சாத்தனார்.

(ப - ரை.) தோழி, அருவி அன்ன பரு உறை சிதறி - அருவியை யொத்த பரிய துளிகளைச் சிதறி, யாறு நிறை பகரும் - ஆறு வெள்ளத்தைக் கொண்டு ஒலிக்கும், நாடனை தேறி - நாட்டையுடைய தலைவனைத் தெளிந்து, உற்றது - அவனோடு பொருந்திய காலம், ஒருநாள் - ஒரு நாளே யாகும்; அது - அங்ஙனம் பொருந்தியது, தவ பல் நாள் - மிகப் பலநாட்கள், தோள் மயங்கி - தோளோடு கலந்து, வௌவும் பண்பின் - அழகைக் கொள்ளைகொள்ளும் தன்மையினையுடைய, நோய் ஆகின்று - நோயாக ஆகின்றது.

(முடிபு.) நாடனை உற்றது ஒருநாள்; அது மயங்கி நோயாகின்று.

(கருத்து.) அறங்கருதித் தலைவனை ஏற்றுக்கொள்கின்றேன்.

(வி - ரை.) தலைவன் பரத்தையிற் பிரிந்துவந்து தோழியை வாயில் வேண்டியவிடத்து அவள் அவனுக்கு உடம்பட்டாள்; அதனைத் தலைவியிடம் தெரிவித்து, 'நீ அவனை ஏற்றுக்கொள்ள வேண்டும்' என்று கூறியபொழுது, தலைவி, "அவனைத்தெளிந்து மணந்தது ஒருநாள். அங்ஙனம் ஒருநாள் மேற்கொண்ட அச்செயல் பலநாள் அவன் கொடுமையை நினைந்து வருந்தி அழகு கெடுதற்கு ஏதுவாயிற்று" என்றாள். இதனால் தான் அவனுக்கு உரியளானமையின் அவனை ஏற்றுக்கோடல் அறமென்னும் குறிப்புத் தோற்றியது.

யாறு தன் துளிகளை அருவிபோலச் சிதறிப் புறத்தேயுள்ள பொருள்களுக்குப் பயன்பட்டதுபோல, தலைவன் புறத்துள்ள பரத்தையர்க்குப் பயன்படுவானென்பது குறிப்பு.

நிறை - வெள்ளம். "வேழம் வெண்பூப் பகரும்" (ஐங். கரு : 2) என்பதற்கு அதன் உரையாசிரியர், வேழம் வெண்பூவைக் கொடுக்குமென்று பொருளெழுதி யிருத்தலின், ஈண்டுப் பகருமென்பதற்குக் கொடுக்குமென்று பொருள் உரைத்தலும் பொருந்தும்.

மன், உம் : அசைநிலைகள் (குறள், 1146, பரிமேல்.) மற்று : அசைநிலை.

ஒப்புமைப் பகுதி

3. " கண்டது மன்னு மொருநாள் " (குறள், 1146.)

5. ஆகின்று : குறுந். ௧௫ : 4, ஒப்பு.

மு. குறுந். ௨௱௨௰௬, ௨௱௬௰௩. (உஎ௧)

---

தலைவன் கூற்று

[இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவி பெறுதற்கரிய ளென்று தலைவன் கூறியது.]

உஎஉ. தீண்டலு மியைவது கொல்லோ மாண்ட
வில்லுடை * விளையர் கல்லிடு பெடுத்த
நனந்தலைக் கானத் தினந்தலைப் பிரிந்த
புன்கண் மடமா னேர்படத் தன்னையர்
சிலைமாண் கடுவிசைக் கலைநிறத் தழுத்திக்
குருதியொடு பறித்த செங்கோல் வாளி
† மாறுகொண் டன்ன வுண்கண்
நாறிருங் கூந்தற் கொடிச்சி தோளே.

எ - து. கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது.

[கழறிய - இடித்துரைத்த.]

ஒருசிறைப் பெரியன்.

(ப - ரை.) மாண்ட - மாட்சிமைப்பட்ட, வில்லுடை விளையர் - வில்லையுடைய விளைவொலியையுடையோராய், கல் இடுபு எடுத்த - கற்களை வீசி எழுப்பிய, நன தலை கானத்து இனம் தலைப் பிரிந்த - அகன்ற இடத்தையுடைய காட்டிடத்துத் தன் இனத்தினின்றும் பிரிந்த, புன்கண் மடம் மான் - துன்பத்தையும் மடப்பத்தையுமுடைய பெண்மான், நேர் பட - நேரே இருப்ப, தன்னையர் - தன் தமையன்மார், சிலை மாண் கடு விசை - சிலைத்தல் மாட்சிமைப்பட்ட மிக்க வேகத்தையுடைய, கலை நிறத்து அழுத்தி - ஆண்மானினது

(பி - ம்.) * யிளையர். † மாறுகண்டன்ன.

மருமத்திலே அழுந்தச்செய்து, குருதியொடு பறித்த - இரத்தத்தோடு பிடுங்கிய, செ கோல் வாளி - சிவந்த திரட்சியையுடைய அம்பு, மாறு கொண்டன்ன உண் கண் - ஒன்றையொன்று மாறுபட்டாற்போன்ற மையுண்ட கண்களையும், நாறு இரு கூந்தல் - மணம் வீசுகின்ற கரிய கூந்தலையும் உடைய, கொடிச்சி தோள் - தலைவியினுடைய தோள்களை, தீண்டலும் இயைவதுகொல் - மீட்டும் ஒரு கால் தழுவுதலும் என்பாற் பொருந்துவதோ!

(முடிபு.) உண்கண்ணையும் கூந்தலையும் உடைய கொடிச்சி தோள் தீண்டலும் இயைவதுகொல்!

(கருத்து.) தலைவி பெறுதற்கரியவள்.

(வி - ரை.) தீண்டலும்: உம், சிறப்பு. கொல்லோ: ஓ, அசைநிலை; இரங்கற் குறிப்புமாம். மாண்ட வில் - பல விலங்குகளைக் கொல்வதற்குக் கருவியாகி மாட்சிமைப்பட்ட வில்.

வீளை - சீழ்க்கை; உதட்டை மடித்துச் செய்யும் ஒலி; இதனை இக்காலத்தில் 'சீட்டி' யென்பர். கல்லிடு பெடுத்தலால் இனத்தினின்றும் மடமான் பிரிந்தது. மடமான் கோர்பட என்றது அது வருந்தவும் அதனை ஓராராய்க் கலையைக் கொல்லுவரென அவரது வன்கண்மையைப் புலப்படுத்தியபடி. சிலை - கலையின் முழக்கம்; "இன்சிலை, ஏறுடையினத்த நாறுயிர் நவ்வி" (அகநா. எ: 9-10.) நிறம் - உயிர் நிலை. விலங்குகளின் உயிர்நிலையையறிந்து அதன்கண் அம்பெய்து கொல்லுதல் வேடர் இயல்பு;

"இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்
விரிமலர் மராஅம் பொருந்திக் கோறெரிந்து
வரிநுதல் யானை யருநிறத் தழுத்தி" (அகநா. கஎஉ : 6-8.)

குருதியோடு பறித்தமையால் அது செவ்வாளியாயிற்று. தலைவியின் கண்களுக்கு உவமை கூறுமுகத்தால் அவள் தன்னையரின் வன்கண்மையைப் புலப்படுத்தி, 'இத்தகைய கொடியர்பாலுள்ள தலைவியைப் பெறுதல் அரிதன்றே' என்பதை உய்த்துணர வைத்தான்.

வாளியன்ன கண்ணென்றான், அது தன்னை வருத்தியதை நினைந்து. நாறிருங் கூந்தற் கொடிச்சியென்றான், முன் அவளுடன் அளவளாவியவனாதலால்.

கொடிச்சி - குறிஞ்சி நிலமகள். தோள் தீண்டல்: இடக்கரடக்கு.

## மேற்கோளாட்சி

2. வீளை - சீழ்க்கை (சீவக. 447, ந.)

மு. கழறிய பாங்கற்குக் கூறும் தலைவன், 'இவனுன் இக்குறை முடியாது; நெருநல் இடந்தலைப்பாட்டிற் கூடியாங்குக் கூடுவல்; அது கூடுங்கொல்!' என்று கூறுவான், அற்றை ஞான்று மெய்தொட்டுப் பயின்றதே கூறியது (தொல். களவு. 11, இளம், ந.); தலைவன் நீடு நினைந்திரங்கியது (நம்பி. 127.)

## ஒப்புமைப் பகுதி

2. வீளை: குறிஞ்சிப். 161; நற். உகூ௬: 3; அகநா. ௯௯: 5, க௭உ: 4, உ௭௪: 1; கைந்நிலை, 13; சீவக. 120.

3. நளந்தலைக் கானம்: குறுந். உகஎ: 5.

4-5. வேடர் மானை எய்தல்: "எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக், கையிற் கணைகளைந்து கன்னிமான் - பையப்போ, என் கின்ற பாவனைசெ யீங்கோயே தூங்கெயில்கள், சென்றன்று வென்றான் சிலம்பு" (திருவீங்கோய். 12); "கானமர் குன்றர் செவியுற வாங்கு கணை துணையா, மானமர் நோக்கியர் நோக்கென மானற் றொடை மடக்கும்" (சிற். 274.)

வேடர் கலையை எய்தல்: "அள்ள லாடிய புள்ளி வரிக்கலை, வீளை யம்பின் வில்லோர் பெருமகன்" (நற். உகூ௬: 2-3.)

6. செங்கோல் வாளி: குறுந். க: 2, ஒப்பு.

6-7. தலைவியின் கண்ணுக்குக் குருதியோடு பறித்த அம்பு: "எனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த, பகழி யன்ன சேயரி மழைக்கண்", "கொடுவிற் கானவன் கோட்டுமா தொலைச்சிப், பச்சூன் பெய்த பகழி போலச், சேயரி பரந்த வாயிழை மழைக்கண்" (நற். கூ௯: 3-4, ௭௫: 6-8); "சிறத்தெறிந்து பறித்த சிணங்கொள்வேற், றிறத்தை வெளவிய சேயரிக் கண்ணினாள்" (சீவக. 993.)

8. கூந்தலின்மணம்: குறுந். உ: 4-5, ஒப்பு.

நாறிருங் கூந்தல்: புறநா. ககூ: 9.

கோடிச்சி: குறுந். உக௪: 3, உகக: 2, ௯௯௬: 7, ௯௬0: 6.

1-8. தோள்தீண்டல்: குறுந். ௫0: 5, ஒப்பு, கக௯: 5, ஒப்பு.

தோள் தீண்டற் கரிது: குறுந். க00: 7. (உ௭உ)

## தோழி கூற்று

[தலைவன் பிரிவானெனை எண்ணிக் கவன்ற தலைவியை நோக்கி, "தலைவன் பிரிய எண்ணினும் நம் நிலைநோக்கிச் செலவு தவிர் வான்" என்று தோழி கூறித் துணிவுண்டாக்கியது.]

உஎங. அல்குறு பொழுதிற் றாதுமுகை தயங்கப்
பெருங்காட் டுளரு மசைவளி போலத்
தண்ணிய கமழு மொண்ணுத லோயே
நொந்தனை யாயிற் கண்டது மொழிவல்
பெருந்தேன் கண்படு வரையின் முதுமால்
பறியா தேறிய மடவோன் போல
ஏமாந் தன்றிவ் வுலகம்
நாமுளே மாகப் † பிரியலன் றெளிமே.

எ - து. பிரிவரெனக் கவன்ற தலைமகளைத் தோழி வற்புறுத்தியது.

சிறைக்குடி யாந்தையார்.

(ப - ரை.) அல்குறு பொழுதில் - இரவில், தாது முகை தயங்க - தாதையுடைய அரும்பு விளங்க, பெரு காடு உளரும் - பெரிய காட்டில் தடவி வருகின்ற, அசை வளிபோல - அசைகின்ற காற்றைப் போல, தண்ணிய கமழும் - குளிர்ந்தனவாகிய நறுமணம் வீசுகின்ற, ஒள் நுதலோய் - ஒள்ளிய நெற்றியையுடையோய், நொந்தனை ஆயின் - நீ தலைவன் பிரிவானென்று வருந்தினை யாயின், கண்டது மொழிவல் - யான் அறிந்ததைச் சொல்லுவேன், கேட்பாயாக: பெரு தேன் கண்படு வரையில் - பெரிய தேனிறால் தங்கியிருக்கும் மலைப்பக்கத்தில், அத் தேனிறாலைப் பெறும்பொருட்டு, முது மால்பு - பழைய கண்ணேணியின்மேல் அறியாது ஏறிய மடவோன்போல - அறியாமல் ஏறிய அறிவிலாதானைப்போல, இ உலகம் - இந்த உலகமானது, ஏமாந்தன்று - ஏமாந்தது; நாம் உளேம் ஆக - நாம் உயிரோடு இருப்ப, அதுகாறும், பிரியலன் - தலைவன் நின்னைப் பிரிந்து செல்லான்; தெளிமே - இதனைத் தெளிவாயாக.

---

(பி - ம்.) * பெருங்காடுள்ளு மசைவளி. † பிரியலெந்தெளிமே

(முடிபு.) நுதலோய், நொந்தனையாயின் மொழிவல்; இவ்வுலகம் ஏமாந்தன்று; உளேமாகப் பிரியலன்; தெளிமே.

(கருத்து.) தலைவன் நின்னைப் பிரிந்துசெல்லான்.

(வி - ரை.) அசைவளி - அசைந்து மெல்ல வீசும் காற்று; மந்த மாருதமென்பதற்கு நேரான பொருளுடையது. கண்டது - அறிந்தது. பெருந்தேன் - மலைத்தேன்; இங்கே அதனையுடைய இறாலுக்கு ஆயிற்று. கண் படுதல் - பிறரால் கொள்ளப்படாது நெடுங்காலமாக அமைந்து இருத்தல். முதுமால்பு - பழையதாகி ஒடிந்துபோம் நிலையையுடைய கண்ணேணி; மால்பு - கண்ணேணி (புறநா. ௧0௫ : 6); மூங்கிலின் கணுவைக் கழியாமல் கால்வைக்கும்படி செப்பஞ் செய்து சார்த்தி அக்கணுவையே படியாகக்கொண்டு ஏறுவது. முதுமால்பு அறியாதேறிய மடவோன் சிறிது ஏறிப் பின் அவ்வேணியின் இயல் பறிந்து அஞ்சி மீண்டும் இறங்குவன். அதுபோலச் சேய்நாடு சென்று வினைமுற்றுறக் கருதிய தலைவன் தலைவியைப்பிரிதலை மேற்கொள்ள எண்ணி அப் பிரிவு தலைவியின் உயிரிழவையும் அதனால் தனக்கு இன்னுமையையும் தருதலை யறிந்து செலவுதவிர்ந்தான். உலகத்தின்மேல் வைத்துக் கூறினும் கருதியது தலைவனையே யென்க.

ஏமாந்தது, தான் முதலில் எண்ணியபடி செய்யமாட்டாமல் செலவு தவிர்ந்தது.

நாம் உளேமாகப் பிரியலனென்றது, பிரிந்தால் தலைவி உயிர் நீங்குவளென்பதை யுணர்ந்தமையைக் குறித்தது.

மே : முன்னிலையசை.

## ஒப்புமைப் பகுதி

2. வளிஉளர்தல் : (குறுந். உ௪௮ : 1) ; "வீபெய் கூந்தல் வீசுவளி யுளர" (நற். உ௬௪ : 5), "விரைவளர் கூந்தல் வரைவளி யுளர" (புறநா. ௧௩௩ : 4.)

அசைவளி : குறுந். உ௮ : 4, ஒப்பு.

3. நுதல் மணத்தல் : குறுந். உஉ : 5, ஒப்பு.

1-3. அரும்பின்மேல் வீசிய காற்றின்மணம் நுதலின் மணத் திற்கு : "கொய்யகை முல்லை காலொடு மயங்கி, மையிருங் கான நாறு நறுநுதல்" (அகநா. ௪௩ : 9-10.)

4. கண்டது மொழிதல் : குறுந். உ : 2.

5. பெருந்தேன் கண்படுவரை : "பிரசந் தூங்குமலை" (குறுந். ௩௯௨ : 8) ; "தேன்றூங்கு முயர்சிமைய, மலை" (மதுரைக். 3-4) ; "பிரசந் தூங்கு சேட்சிமை, வரையக வெற்பன்" (அகநா. உ௪உ : 21-2.)

5-6. மால்பிலேறித் தேன் எடுத்தல் : "கலைகை யற்ற காண்பி னெடுவரை, நிலைபெய் திட்ட மால்புநெறி யாகப், பெரும்பயன் றொகுத்த தேங்கொள் கொள்ளை" (மலைபடு. 315-7) ; "அவ்வரைத், தேனி னிறுலென வேணி யிழைத்திருக்கும், கானக நாடன் மகன்" (கலி. ௩௯ : 8-10) ; "ஈவிளை யாட நறவிளை வோர்ந்தெமர் மால்பியற்றும், வேய்விளை யாடும் வெற்பா" (சிற். 133.) (௨௭௩

---

## தலைவன் கூற்று

[பொருள்வயிற்பிரியக் கருதிய தலைவன் பாலைநிலத்தின் வெம்மையை நினைந்து பின், "தலைவியின் இனிய தன்மைகளை நினைந்து செல்லின் அவ்வெம்மை தோற்றாது" என்று தன் நெஞ்சை நோக்கிக் கூறியது.]

௨௭௪. புறவுப்புறத் தன்ன * புன்கா லுகாஅய்க்
காசினை யன்ன நளிகனி யுதிர
விடுகணை வில்லொடு பற்றிக் † கோடிவர்பு
வருநர்ப் பார்க்கும் வன்க ணுடவர்
நீர்நசை வேட்கையி னார்மென்று தணியும்
இன்னாக் கானமு மினிய பொன்னொடு
மணிமிடை யல்குன் மடந்தை
அணிமுலை யாக ‡ முள்கினஞ் செலினே.

எ - து. பொருள்வலித்த நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது.

உருத்திரன்.

(ப - ரை.) நெஞ்சே, பொன்னொடு மணி மிடை அல்குல் மடந்தை - பொன்னாலும் மணியாலும் இயற்றப்பட்ட அணிகளை

---

(பி - ம்.) * புன்காயுகாய், புன்கா லுகாஅத்துச்சினை. † கொடியவர். ‡ மூழ்கினம், முயங்கினம்.

யணிந்த அல்குலையுடைய தலைவியினது, அணி முலை ஆகம் - அழகிய நகிலையுடைய மார்பை, உள்ளினம் செலின் - நினைந்தேமாகிச் சென்றால், புறவு புறத்து அன்ன புல் கால் உகாய் - புறாவினது முதுகைப் போன்ற புல்லிய அடியையுடைய உகாய்மரத்தினது, காசினை அன்ன - மணியைப் போன்ற, நளி கனி உதிர - செறிந்த பழங்கள் உதிரும்படி, விடு கணை வில்லொடு பற்றி - விடுகின்ற அம்பை வில்லோடு பிடித்து, கோடு இவர்பு - உயர்ந்த இடத்தின்மேல் ஏறி, வருநர் பார்க்கும் - வழியிலே வருபவரைப் பார்க்கும், வன்கண் ஆடவர் - தறுகண்மையையுடைய ஆறலை கள்வர், நீர் நசை வேட்கையின் - நீரை விரும்புகின்ற வேட்கையினால், நார் மென்று தணியும் - மரப்பட்டையை மென்று அவ்வேட்கை நீங்கும், இன்னா கானமும் இனிய - இன்னாமையையுடைய காடுகளும் இனியவாகும்.

(முடிபு.) மடந்தை ஆகம் உள்ளினம் செலின், இன்னாக் கானமும் இனிய.

(கருத்து.) தலைவியை மறவாது நினைத்திருப்பின் பிரிந்து வருதல் கூடும்.

(வி - ரை.) புறா பாலைநிலத்ததாதலின் இடத்திற்கு ஏற்ப அதனை உவமை கூறினன். உகாஅய் - ஒரு மரம்; இது யகர விறுடையதென்பது நேமிநாதம், சூ. 15-உரையால் உணரப்படும்; உகாஅ வெனவும் வரும். இதன்கனி மணியைப் போன்ற தோற்றமுடையதென்பது,

"வெயிலவிர் நுடங்கும் வெவ்வெங் களரிக்
குயிற்கண் ணன்ன குரூஉக்காய் முற்றி
மணிக்கா சன்ன மானிற விருங்கனி
உகாஅய் மென்சினை யுதிர்வன கழியும்" (அகநா. உகூ : 5-8)

என்பதனாலும் அறியப்படும். காசினை : ஐகாரம், அசைநிலை.

கனி உதிரும்படி அம்பை விடுவர். நார் - பட்டை (குறுந். கசஉ : 4, க௱சு : 2.) தலைவியை நினைந்து செல்லின் கானம் இனியவாகுமென்று தலைவன் கருதுவதை,

"நெடுங்கழை முளிய வேனி னீடிக்
கடுங்கதிர் ஞாயிறு கல்பகத் தெறுதலின்
வெய்ய வாயின முன்னே யினியே
ஒண்ணுத லரிவையை யுள்ளுதொறும்
தண்ணிய வாயின சுரத்திடை யாறே".

"வேனி லரையத் திலையொலி வெரீஇப்
போகில்புகா வுண்ணாது பிறிதுபுலம் படரும்
வெம்பலை யருஞ்சுர நலியா
தெம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே",

"பொறிவரித் தடக்கை வேத லஞ்சிச்
சிறுகண் யானை நிலந்தொடல் செல்லா
வெயின்முளி சோலைய வேயுயர் சுரனே
அன்ன வாரிடை யானும்
தண்மை செய்தவித் தகையோள் பண்பே"

(ஐங். ௩௨௨, ௩௨௫, ௩௨௭)

என்னும் செய்யுட்களிலும் காணலாம்.

## மேற்கோளாட்சி

1. செய்யுளிற் குறியதன்கீழ் ஆக்குறுகி உகரமேற்றது (தொல். உயிர்மயங்கு. 32, ந.; இ. வி. 90.)

## ஒப்புமைப் பகுதி

1. புன்கால் உகாய்: "புல்லரை யுகாஅய்" (குறுந். ௩௬௩: 4.)

(பி - ம்.) புன்காய் உகாய்: நற். ௬௬: 1-2.

உகாய்: பெருங். ௧. 52: 37.

1-3. கனியை அம்பால் உதிர்த்தல்: சீவக. 1640-41; வி. பா. பழம்பொருந்து. 3.

3-5. "ஊரில்ல வுயவரிய, நீரில்ல நீளிடைய, பார்வ லிருக்கைக் கவிகண் ணோக்கிற், செந்தொடை பிழையா வன்க ணாடவர்" (புறநா. ௩; 17-20.)

6. இன்னாக்கானம்: குறுந். ௧௨௪: 2-3. (௨௭௪)

---

## தோழி கூற்று

[தலைவன் கூறிச் சென்ற பருவம் வந்த காலத்துத் தலைவியை நோக்கி, "மணியொலி செவிப்படுகின்றது; அது தலைவனது தேர் மணி யோசையோவென்று சென்று பார்ப்போம்" என்று தோழி கூறியது.]

உஎ௫. முல்லை யூர்ந்த * கல்லுய ரேறிக்
கண்டனம் வருகஞ் சென்மோ தோழி
எல்லூர்ச் சேர்தரு மேறுடை யினத்துப்
† புல்லார் நல்லான் ‡ பூண்மணி கொல்லோ
செய்வினை முடித்த செம்ம லுள்ளமொடு
வல்வி லிளையர் பக்கம் போற்ற
ஈர்மணற் காட்டா றுவரூஉந்
தேர்மணி கொல்லாண் டியம்பிய வுளவே.

எ - து. பருவவரவின்கண் வரவுநிமித்தந் தோன்றத் தோழி தலைமகட்கு உரைத்தது.

[வரவு நிமித்தம் : குறுந். உ௬௦, கருத்து.]

ஒக்கூர் மாசாத்தி.

(ப - ரை.) தோழி—, ஆண்டு இயம்பிய உள - அங்கே ஒலிப்பனவாக உள்ளவை, எல் ஊர் சேர்தரும் - மாலைக்காலத்தில் ஊரை வந்து அடையும், ஏறுடை இனத்து - காளையையுடைய பசுவினத்தினுள்ள, புல் ஆர் நல் ஆன் - புல்லை உண்ட நல்ல பசுக்கள், பூண்மணி கொல் - கழுத்திற் பூண்ட மணியோசையோ? செய்வினை முடித்த - தாம்செய்த வினையை முற்ற முடித்ததனாலாகிய, செம்மல் உள்ளமொடு - சிறைவுடைய உள்ளத்தோடு, வல்வில் இளையர் பக்கம் போற்ற - வலிய வில்லையுடைய இளைய வீரர் தன் அருகிற் பாதுகாப்ப, ஈர் மணல் காடு ஆறு வரும் - ஈரமாகிய மணலையுடைய காட்டுவழியிலே வரும், தேர் மணிகொல் - தேரின் மணியோசையோ? முல்லை ஊர்ந்த கல் உயர் ஏறி - முல்லைக்கொடி படர்ந்த கல்லின்மேல் ஏறி, கண்டனம் வருகம் - கண்டு வருவேம்; சென்மோ - வருவாயாக.

(முடிபு.) ஆண்டு இயம்பிய உள, ஆன் பூண்மணி கொல்? தேர்மணி கொல்? ஏறிக்கண்டனம் வருகம்; சென்மோ.

(கருத்து.) தலைவனது தேரின் மணியோசை கேட்டலின் அவன் வருகின்றானெனத் தோற்றுகின்றது.

---

(பி - ம்.) * கல்லுயர் பேறி. † புல்லூர். ‡ பூமணி.

(வி - ரை.) உயர் - உயர்ந்த இடம் (குறுந். உ௬௫ : 3.) மோ : முன்னிலையசை (குறுந். உ : 2.) வல்வில் : குறுந். ௧௦௦ : 5, விசேட.

இளையர் பாதுகாத்தலை, "உழைக்குறுந் தொழிலுங் காப்பு முயர்ந்தோர்க்கு, நடக்கை யெல்லா மவர்கட் படுமே" (தொல். கற்பு. 30) என்னும் இலக்கணம் தெளிவுறுத்தும்.

மழை பெய்த கார்ப்பருவமாதலின் காட்டாறு ஈர்மணலையுடைய தாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. முல்லையூர்ந்த கல்: "கல்லிவர் முல்லை" (குறிஞ்சிப். 77) "முல்லை தாய கல்" (நற். ௩௪௩ : 1) ; "கல்லிவர் முல்லைக் களிவண்டு (யா. வி. 42, மேற்.)

கல்லுயர் : குறுந். உ௬௫ : 3, ஒப்பு.

1-2. உயர்ந்த இடத்திலேறிப் பார்த்தல்: நற். ௩௩௧ : 5-8 அகநா. ௧௬௦ : 1-3 ; புறநா. ௧௧௬ : 7-18.

தலைவன் வரவைப் பார்த்தல் : "பொருபெரு வேந்தர்க்குப் போர்ப்புணை யாகி, ஒருபெருங் காதலர் சென்றூர்—வருவது, காணிய வம்மோ கனங்குழை கண்ணேக்கால், நீணகர் முன்றின்மே னின்று" (தொல். அகத். 27, ந. மேற்.)

3. ஏறுடை யினம் : நெடுநல். 4 ; மலைபடு. 408-9, 573 ; அகநா. உ௬௬ : 3.

4. ஆன்மணி : குறுந். ௮௬ : 5-6, ௧௬௦ : 6-7 ; மலைபடு. 573 ; நற். உ௬௪ : 8.

5, மு. குறுந். உ௭௦ : 5, ஒப்பு.

6. வல்வில் : குறுந். ௧௦௦ : 5, ஒப்பு.

வல்வில் இளையர் : அகநா. ௧உ௦ : 12, ௧௯உ : 15 ; பெருந். ௩. 17 : 217.

6-8. தலைவன் இளையர்போற்ற மணல்வழியில் தேரேறி வருதல் : "வினைவலம் படுத்த வென்றியொடு மகிழ்சிறந்து, போர்வ லிளையர் தாள்வலம் வாழ்த்தத், தண்பெயல் பொழிந்த பைதுறு காலை............ வெண்கள ரரிமணை னன்பல தாஅய்...........திண்டேர் வலவ கடவெனக் கடைஇ, இன்றே வருவர்" (அகநா. ௭௪ : 1-12.) (உ௭௫)

## தலைவன் கூற்று

[தோழியாற் சேட்படுக்கப்பட்டவிடத்துத் தலைவன், "இனி மடல் ஏறிச் சான்றோரறிய வழக்குரைத்துத் தலைவியை மணம்புரிவேன்" என்று தோழி அறியும்படி முன்னிலைப் புறமொழியாகக் கூறியது.]

உ௭௬. பணைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்
பஞ்சாய்ப் பள்ளஞ் சூழ்ந்து மற்றிவள்
உருத்தெழு வனமுலை யொளிபெற வெழுதிய
தொய்யில் காப்போ ரறிதலு மறியார்
முறையுடை யரசன் செங்கோ லவையத்
தியான்றற் கடவின் யாங்கா வதுகொல்
பெரிதும் பேதை மன்ற
அளிதோ தானேயிவ் வழுங்க லூரே.

௭ - து. தோழிக்குக் குறைமறுமல் தலைவன் கூறியது.

[குறை - தலைவியை உடம்படச் செய்தல்.]

கூழிக் கோற்றன்.

(ப - ரை.) பணை தோள் குறு மகள் பாவை தைஇயும் - மூங்கிலைப்போன்ற தோள்களையுடைய இளைய தலைவியினது பாவையைப் பண்ணி ஈந்தும், பஞ்சாய் பள்ளம் சூழ்ந்தும் - அதன்பொருட்டுப் பஞ்சாய்க்கோரை வளர்ந்த பள்ளமாகிய நீர்நிலையைச் சுற்றியும், இவள் உருத்து எழு வனம் முலை - இவளது தோற்றம் செய்து எழுந்த அழகிய நகிலில், ஒளி பெற - நிறம் பெற, எழுதிய தொய்யில் - நான் எழுதிய தொய்யிலை, காப்போர் - இவளைப் பாது காத்து நிற்போர், அறிதலும் அறியார் - அறிதலையும் செய்யார்; முறையுடை அரசன் - நீதியையுடைய அரசனது, செ கோல் அவையத்து - செங்கோன்மையையுடைய அறங்கூறவையத்தில், யான் தன் கடவின் - யான் தலைமகளை வினவினால், யாங்கு ஆவது - இஃது எவ்வாறாவது? ஆதலின், இ அழுங்கல் ஊர் - இந்த வருத்தத்தையுடைய ஊர், மன்ற பெரிதும் பேதை - நிச்சயமாக மிக்க அறிவின்மையையுடையது; அளிது - இரங்கத்தக்கது!

(பி - ம்.) * கோழிக் கொற்றன், கூளிக் கொற்றன்.

(முடிபு.) தைஇயும் சூழ்ந்தும் எழுதிய தொய்யிலே, காப்போர் அறியார்; அரசன் அவையத்தில் யான் கடவின் யாங்காவது? இவ்வூர் பேதை; அளிது.

(கருத்து.) மடலேறி அறங்கூறவையத்துச் சான்றோரது துணை கொண்டு தலைவியை மணந்துகொள்வேன்.

(வி - ரை.) தலைவி இளையளெனவும், பெறற்கரியளெனவும் கூறித் தோழி தலைவனைச் சேட்படுக்கவழி அவன் முன்னுறு புணர்ச்சி மொழிந்து, "யான் மடலேறிச் சான்றோர் அறியத் தலைவியால் யான் துன்புற்றதை அறிவிப்பேன். அப்பொழுது அறங்கூறவையத்தாராகிய அவர்கள் முன்னிலையில் தலைவியை நான் பெறும் வண்ணம் வினவப்புகுந்தேனாயின் என்னைத்தடுக்கும் தோழியின் முயற்சி எவ்வாறு முடியும்!" என்று படர்க்கை வாய்பாட்டால் தோழிக்குக் கூறியது இது. இதனால் தோழி அஞ்சி, அவனது குறை முடிக்கக் கருதுவள்.

முதலில் தான் தலைவியின் விளையாட்டுக்குத் துணைசெய்ததையும் தொய்யிலெழுதியதையும் உணர்த்தும் வாயிலாக முன்னுறு புணர்ச்சி முறையுறப் புலப்படுத்தினான்.

பைஞ்சாயென்பது பஞ்சாயென வந்தது. பஞ்சாய்க்கோரையாற் பாவை பண்ணித் தலைவன் கொடுத்தான்; இச்செயல்,

"செவ்விரல் சிவப்பூரச் சேட்சென்ற யென்றவன்
பௌவநீர்ச் சாய்க்கொழுதிப் பாவைதந் தனைத்தற்கோ"
(கலி. எசு : ∪-(

என்பதிலும் சொல்லப்பட்டது. இவளென்றான், நெஞ்சிற்கு அணியளாதலின்.

வனமுலையென்றது தொய்யிலால் அழகு வேண்டாதே இயல்பாக அழகுடைய தென்றபடி; என் ஆதரவுமிகுதியால் தொய்யிலெழுதினேனென்பது தலைவன் கருத்து. அங்ஙனம் எழுதியதனால் அத் தொய்யில் ஒளிபெற்றது. காப்போரென்றது தலைவியைக் காப்போராகிய தன்னையராதியோர்.

தலைவன் தொய்யிலெழுதும் வழக்கு,

"பிரிந்துறை சூழாதி யைய விரும்பிநீ
என்றோ ளெழுதிய தொய்யிலும்",

"நெய்த னெறிக்கவும் வல்ல னெடுமென்றோட்
பெய்கரும் பீர்க்கவும் வல்ல னிளமுலைமேற்
றொய்யி லெழுதவும் வல்லன்" (கலி. கஅ : 2-3, கசங : 31-3)

என்பவற்றாலும் பெறப்படும்.

அவையத்துச் சான்றோரிடம் தலைவியைப் பற்றிக் கூறி அவளைப் பெற விரும்பிக் கேட்டலைக் கலித்தொகை கஙகூ, கசO-ஆம் செய்யுட்களால் உணரலாகும்.

அழுங்கலூரென்றது தோழியை.

இவ்வூர் யாங்காவதுகொல் எனக் கூட்டிப் பொருளுரைத்தலும் பொருந்தும்.

மற்று, கொல், ஓ, தான், ஏ : அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

மூ. தோழி சேட்படுத்தியவழித் தலைவன் பிற கூறியது (தொல். களவு. 11, இளம்) ; தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலின் தனக்கு உண்டாகிய வருத்தத்தைப் பார்த்துத் தலைவன் மடல் மா ஏறுதலைக் கூறியது (ஷை. ஷை., ஷை, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. திருமகள் : குறுந். அகூ : 7, ஒப்பு.

தலைவியின் பாவை : குறுந். சஅ : 1, ஒப்பு.

பாவை தைஇ : கலி. ருகூ : 7.

1-2. "சாய்தாட் பிள்ளை தந்து கொடுத்தும்" (கல்லாடம்.)

3. அறிதலும் அறியார் : நற். கOகூ : 1.

3-4. தலைவன் தொய்யில் எழுதுதல் : கலி. எகூ : 14-5, கசச : 34 ; சீவக. 1081.

5. அரசனது செங்கோலவையம் : மதுரைக். 492 ; நற். சOO : 7-8 ; அகநா. கூங : 5 ; புறநா. நக : 8-9, எக : 7-9 ; சிலப். ௫ : 135 பெருங். க. 34 : 25.

7-8. ஊர் பேதை : குறுந். அகூ : 3, ஒப்பு. (உஎகூ)

## தோழி கூற்று

[தலைமகன் குறித்துச்சென்ற பருவம் வருங்காலம் யாதென்று தோழி அறிவரை வினவியது.]

௨௭௭. ஆசி றெருவி னாயில் வியன்கடைச்
செந்நெ லமலை வெண்மை வெள்ளிழு
தோரிற் பிச்சை யார மாந்தி
அற்சிர வெய்ய வெப்பத் † தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே
மின்னிடை நடுங்குங் கடைப்பெயல் வாடை
எக்கால் ‡ வருவ தென்றி
அக்கால் வருவரெங் காத லோரே.

எ - து. தலைமகன் பிரிந்தவழி, அவன் குறித்த பருவவரவு, தோழி ¶ அறிவரைக் கண்டு வினயது.

ஓரிற் பிச்சையார்.

(ப - ரை.) அறிவ! மின் இடை நடுங்கும் - மின்னைப்போன்ற இடையையுடைய தலைவி நடுங்குதற்குக் காரணமான, கடை பெயல் வாடை - இறுதியில் மழையையுடைய வாடைக்குரிய காலம், எ கால் வருவது என்றி - எப்பொழுது வருவது என்பாயோ, அ கால் - அப் போது, எம் காதலர் - எம்முடைய தலைவர், வருவர்—; ஆதலின் சொல்வாயாக; நீ—, ஆசு இல் தெருவில்-குற்றமற்ற தெருவினிடத்தே, நாய் இல் வியன்கடை - நாய் இல்லாத அகன்ற வாயிலில், செ நெல் அமலை - செந்நெற்சோற்றுருண்டையும், வெண்மை வெள் இழுது - மிக வெள்ளிய நெய்யும் ஆகிய, ஓர் இல் பிச்சை - ஒரு வீட்டில் இடும் பிச்சையை, ஆர மாந்தி - பெற்று வயிறு நிரம்ப உண்டு, அற்சிரம் வெய்ய வெப்பம் தண்ணீர் - அற்சிரக் காலத்துக்குரிய விரும்பத் தக்க வெப்பத்தையுடைய நீரை, சேமம் செப்பில் - நீரைச் சேமித்து வைக்கும் செப்பில், பெறீஇயர் - பெறுவாயாக.

(முடிபு.) வாடை எக்கால் வருவதென்றி; அக்கால் எம் காதலோர் வருவர். நீ தெருவில் பிச்சையை மாந்தி நீரைப் பெறீஇயர்.

---

(பி - ம்.) * அற்சிரை. † தண்ணீர்ச். ‡ வருவரென்றி. ¶ அறிவாரைக்.

(கருத்து.) வாடைவீசும் பருவம் எப்பொழுது வரும்?

(வி - ரை.) அறிவவென்னும் விளி முன்னத்தால் வருவிக்கப் பட்டது. தலைவன் வாடைவீசும் பருவத்தில் வருவதாகக் கூறிச் சென்றான்; அப்பருவம் எப்பொழுது வருமென்று அறியும் பொருட்டுத் தோழி அறிவரை வினவினாள்.

அறிவர் - துறவுள்ளமும், முக்காலத்தையும் அறியும் ஆற்றலும் உடைய பெரியோர்; இவர்,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியி னாற்றிய அறிவன்" (தொல். புறத். 20)

எனச் சிறப்பிக்கப் பெறுவர். முக்காலமு முணர்ந்த முனிவரென்பர் புறப்பொருள் வெண்பாமாலை உரையாசிரியர். இவர் எக்காலத் திலும், கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்தலும் தீயவற்றைக் கடிதலுமாகிய செயலுடையர் (தொல். கற்பு. 13); தலைவன் தலைவி யாகிய இருவரும் இவரது ஏவலைச் செய்து நிற்பர்; அவர்களை இடித் துரைத்து நல்வழியிலே நிறுத்துதல் இவர் இயல்பு (ஷை. ஷை. 14); இவர் வாயில்களுள் ஒருவகையினர் (ஷை. கற்பு. 52); இவர் கூற்றை யாவரும் கேட்டு அதன்வழியொழுகுவர் (ஷை. செய்யுள். 197.)

இவர் துறவுள்ளத்தினராதலின் துறவியரைப் போலவே பிச்சையூண் பெற்றுண்பரென்பது இச்செய்யுளாற் பெறப்படு கின்றது.

வாடை முன்பனிப்பருவத்தும் உளதாதலின் இதிற் கூறப் பட்ட பருவம் அஃதென்றே கொள்க.

ஆசில் தெருவென்றும், நாயில் வியன்கடையென்றும் சிறப் பித்தமையால் இங்கே கூறியது அந்தணர் தெருவென்று தோற்று கின்றது;

"பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்
மனையுறை கோழியொடு ஞமலி துன்னாது
வளைவாய்க் கிள்ளை மறைவிளி பயிற்றும்
மறைகாப் பாள ருறைபதி" (பெரும்பாண். 298-301.)

ஆய் இல் கடையென வைத்து, செல்வம் சுருங்குதலில்லாத வாயிலென்று பொருளுரைத்தலும் பொருந்தும்; ஆய்தல் - சுருங் குதல் (தொல். உரி. 32.)

செந்நெல், நெல்வகையில் உயர்ந்தது. பல வீடுகளிற் சென்று ஐயம்பெற்றுண்ணும் இரவலரது பிச்சை போலாது ஒரு வீட்டிற் பெற்றுண்ணும் பிச்சையாதலின், 'ஓரிற்பிச்சை' என்றாள். ஆர - உள்ளநிறைவுண்டாக வெனலும் ஒன்று.

அற்சிரம் - முன்பனிக் காலம்; இஃது அச்சிரமெனவும் வழங்கும். வெப்பத் தண்ணீர் - வெந்நீர்; தண்ணீரென்பது நீரென்னுந் துணையாய் நின்றது.

அறிவர் பெறும் உணவை ஓரிற்பிச்சையென்று சிறப்பித்தமையால் இச்செய்யுளியற்றிய புலவர் ஓரிற்பிச்சையாரென்று பெயர் பெற்றார்.

## ஒப்புமைப் பகுதி

1. நாயில் வியன்கடை: "பார்ப்பாரிற் கோழியு நாயும் புகலின்னா" (இன்னா. 3.)

2. அமலை: "அமலைக் கொழுஞ்சோறு" (புறநா. ருச: 14) "பெருஞ்சோற் றமலை" (மணி. எ: 2.)

1-3. அந்தணர் வீட்டுச்சோறும் நெய்யும்: "முந்துமுக் கனியி னோடு முதிரையின் மூழ்ந்த நெய்யில், செந்தயிர்க் கண்டங் கண்ட மிடையிடை செறிந்த சோற்றில், தந்தமி லிருந்து தாமும் விருந்தொடுந் தமரி னோடும், அந்தண ரமுத வுண்டி யயில்வுறு மமலை யெங்கும்" (கம்ப நாட்டுப். 19.)

5. பெறீஇயர்: குறுந். எ௫: 4, ஒப்பு.

6. தலைவி வாடைக்கு நடுங்கல்: குறுந். ௧0௬: 4, ஒப்பு. (உஎ)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்திருந்த காலத்து, நீ ஆற்றுதல் வேண்டுமென்று வற்புறுத்துந் தோழியை நோக்கித் தலைவி, "அவர் எம்மை நினையாது கொடியராயினர்" எனக்கூறியது.]

உஎஅ. உறுவளி யுளரிய வந்தளிர் மாஅத்து
முறிகண் டன்ன மெல்லென் சீறடிச்
சிறுபசும் பாவையு மெம்மு முள்ளார்

கொடியர் வாழி தோழி கடுவன்
ஊழுறு தீங்கனி யுதிர்ப்பக் கீழிருந்
தேற்பன வேற்பன வுண்ணும்
பார்ப்புடை மந்திய மலையிறந் தோரே.

எ - து. பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் உரைத்தது.

† பேரி சாத்தன்.

(ப - ரை.) தோழி—, கடுவன் - ஆண்குரங்கு, ஊழுறு தீங் கனி உதிர்ப்ப - முதிர்ந்த இனிய பழங்களை மரத்தின்மேல் இருந்து உதிர்க்க, கீழ் இருந்து - அம்மரத்தின் கீழே இருந்து, ஏற்பன ஏற் பன உண்ணும் - ஏற்பவற்றை ஏற்பவற்றைத் தின்னுகின்ற, பார்ப் புடை மந்திய மலை இறந்தோர் - குட்டிகளையுடைய பெண்குரங்குகள் உள்ள மலையைக் கடந்து சென்ற தலைவர், உறு வளி உளரிய - மிக்க காற்றுக் கோதிய, அம் தளிர் மாஅத்து - அழகிய தளிரையுடைய மாமரத்தினது, முறி கண்டன்ன - தளிரைக் கண்டாற் போன்ற, மெல் என் சிறு அடி - மெல்லிய சிறிய அடியையுடைய, சிறு பசு பாவையும் எம்மும் உள்ளார் - சிறிய பசிய தாதுமுதலியவற்றாற் செய்த விளையாட்டுப் பாவையையும் எம்மையும் நினையார்; கொடி யர் - அவர் கொடுமையை யுடையர்.

(முடிபு.) தோழி, மலையிறந்தோர் உள்ளார் ; கொடியர்.

(கருத்து.) தலைவர் எம்மை நினைந்திலர்.

(வி - ரை.) தலைவன் இயற்றித்தந்த பாவையாதலின் அதனை முற்கூறினள். 'கடுவன் தன் மந்தியையும் பார்ப்பையும் அகலாது அவற்றிற்குரிய கனியை உதிர்க்கும் மலையைக் கண்டும் அவர் என்னை யும் பாவையையும் அகன்று உறைந்தார் ; அவர் கொடுமை இருந்த வாறு என்னே !' என்பது தலைவியின் கருத்து.

வாழி, ஏ : அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

6-7. பார்ப்பென்னும் இளமைப்பெயர் குரங்கிற்கும் உரியது (தொல். மரபு. 14, பேர்.)

---

(பி - ம்.) * தேர்ப்பன வேர்ப்பன. † வேரி சாத்தன்.

## ஒப்புமைப் பகுதி

1. வளி உளர்தல் : குறுந். உஎரு : 2.

அந்தளிர் மா : "பைங்கான் மாஅத் தந்தளிர்" (குறுந். ருருக : 6.

3. பாவை : குறுந். சஅ : 1, ஒப்பு.

பாவையும் தலைவியும் : ஐங். ருஅரு : 5-6; பெருங். உ. 15
112 ;சிறு. 200, உரை.

4. தலைவனைக் கொடியனென்றல் : குறுந். உசு : 8, ஒப்பு.

வாழி தோழி : குறுந். உசுO : 4, ஒப்பு.

5. ஊழுறு தீங்கனி : அகநா. உ : 2.

4-5. ஆண்குரங்கு பழத்தை உதிர்த்தல்: "ஆய்சுளைப் பலவின் மேய்கலை யுதிர்த்த, துய்த்தலை வெண்காழ்" (அகநா. எ : 20-21.)

7. பார்ப்புடை மந்தி : குறுந். உக : 6, ஒப்பு. (உஎஅ

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்தில் ஆற்றுளாகிய தலைவியை ஆற்றல் வேண்டுமென்று தோழி வற்புறுத்திய பொழுது தலைவி ஆற்றுமை யின் காரணத்தைக் கூறியது.]

உஎகூ. திரிமருப் பெருமை யிருணிற மையான்
வருமிட றியாத்த பகுவாய்த் தெண்மணி
புலம்புகொள் யாமத் தியங்குதொ றிசைக்கும்
இதுபொழு தாகவும் வாரார் கொல்லோ
* மழைகழூஉ மறந்த மாயிருந் துறுகல்
துகள்சூழ் யானையிற் பொலியத் தோன்றும்
இரும்பல் குன்றம் † போகித்
திருந்திறைப் பணைத்தோ ளுள்ளா தோரே.

எ - து. வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

மதுரை மருதன் இளநாகனார்.

---

(பி - ம்.) * மழைகெழு மறந்த. † போக்கித்.

(ப - ரை.) தோழி, மழை கழூஉ மறந்த மா இரு துறுகல் - மழை கழுவுதலை மறந்த கரிய பெரிய பொற்றைக்கல், துகள் சூழ் யானையின் - புழுதிபடிந்த யானையைப்போல, பொலிய தோன்றும் - விளங்கத்தோன்றுகின்ற, இரு பல் குன்றம் போகி - பெரிய பலமலைகளைக் கடந்து சென்று, திருந்து இறை பணை தோள் உள்ளாதோர் - இலக்கணத்தால் திருந்திய சந்துகளையுடைய மூங்கிலைப்போன்ற என் தோள்களை நினையாதோர், திரி மருப்பு எருமை இருள் நிறம் மை ஆன் - முறுக்கிய கொம்பையும் இருள் நிறத்தையுமுடைய எருமையினது, வரு மிடறு யாத்த - வளர்கின்ற கழுத்தின்கண் கட்டப்பட்ட, பகு வாய் தெள் மணி - பிளந்த வாயையுடைய தெளிந்த ஓசையையுடைய மணியானது, புலம்புகொள் யாமத்து - தனிமையைக் கொண்ட நடு இரவில், இயங்குதொறு - அவ்வெருமை நடக்குந்தோறும், இசைக்கும் - ஒலிக்கின்ற, இது பொழுது ஆகவும் - இக்காலம் தாம் வருதற்குரிய செவ்வியாக இருப்பவும், வாரார் - அவர் வாராராயினர்.

(முடிபு.) போகி உள்ளாதோர், வாரார்.

(கருத்து.) தலைவர் வருதற்குரிய செவ்வி இஃதாக இருந்தும் அவர் வந்திலரென ஆற்றேனாயினேன்.

(வி - ரை.) எருமையின் மணியோசையைத் தலைவி துயிலாது கேட்டவளாதலின் இங்ஙனம் கூறினாள். இரவில் தனிமையை மிகுதிப்படுத்திக்காட்டும் அம்மணியோசையினால் தலைவி துன்புறுவாள். இதனை இந்நூல் அகூ - ஆம் செய்யுளாலும் உணரலாகும்.

புலம்புகொள் யாமமென்றது தனது தனிமையை நினைந்து. மழை கழூஉ மறந்த துறுகலென்றது, மழையின்றி வெம்பிய பாலை நிலத்தின் இயல்பைக் குறிப்பித்தபடி. துகள் - புழுதி; யானை தன் மீது புழுதியைத் தானே வாரி வீசிக்கொண்டதனால் துகள் சூழ்ந்ததாகும்.

பணைத்தோள்களை உள்ளுவாராயின் அவற்றோடு பொருந்தி அளவளாவும் ஆர்வத்தால் மீள்வரென்பது தலைவியின் கருத்து.

கொல், ஓ, ஏ: அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. எருமை ஆன் : பெரும்பாண். 165 ; அகநா. கசூ௫: 5.

திரிமருப் பெருமை : * அகநா. உ௦சு : 3.

2. பதவாய்த் தெண்மணி : குறுந். க௫௫ : 4.

1-4. குறுந். அக : 4-6, ஒப்பு.

6. துகள்சூழ் யானை : "நீறாடிய களிறு" (பட். 48.)

5-6. துறுகல்லிறந்த யானை : குறுந். கஉ : 1-2, ஒப்பு.

8. இறைப்பணைத்தோள் : குறுந். கசூஅ : 5 ; கலி. ௩அ : 26 புறநா. ௩௫௪ : 9.

(உஎகூ

## தலைவன் கூற்று

[தன்னை இடித்துரைத்த பாங்கனை நோக்கித் தலைவன், தலைவியினது அருமையைக் கூறியது.]

உஅ௦. கேளிர் வாழியோ கேளிர் நாளுமென்
நெஞ்சுபிணிக் கொண்ட வஞ்சி லோதிப்
பெருந்தோட் குறுமகள் சிறுமெல் லாகம்
ஒருநாள் புணரப் புணரின் [யானே
அரைநாள் வாழ்க்கையும் † வேண்டலென்

எ - து. கழற்றெதிர்மறை.

நக்கீரர்.

(ப - ரை.) கேளிர் - நண்பரே, வாழி - நீர் வாழ்வீராக கேளிர்—, நாளும் என் நெஞ்சு பிணி கொண்ட - எப்பொழுதும் என்னுடைய நெஞ்சத்தைத் தன்னிடத்திலே பிணித்துக்கொண்ட, அம் சில் ஓதி - அழகிய சிலவாகிய கூந்தலையும், பெரு தோள் - பெரிய தோளையுமுடைய, குறுமகள் - இளைய தலைவியினது, சிறு மெல் ஆகம் - சிறிய மெல்லிய மேனியை, ஒருநாள் புணர புணரின் - ஒருநாள் என் ஐம்புலனும் இயையும்படி அளவளாவவேனுமின், யான்—, அரை நாள் வாழ்க்கையும் - அதன் பின் அரைநாளேனும் வாழ்தலை, வேண்டலென் - விரும்பேன்.

* மதுரை மருதனிளநாகனார் பாட்டு. (பி - ம்.) † வேண்டலன்.

(முடிபு.) கேளிர், வாழி! கேளிர், குறுமகள் ஆகம் ஒருநாள் புணரப் புணரின் யான் வேண்டலென்.

(கருத்து.) தலைவி எனக்கு இன்றியமையாதவள்.

(வி - ரை.) பாங்கனைப் பன்மையாற் கூறும் வழக்கு, "இடிக் கும் கேளிர்" (குறுந். ருஅ) என்னும் செய்யுளினும் வந்துள்ளது; பாங்கனைப் பன்மையாற் கூறுவதற்குரிய காரணமாக இறையனாரகப் பொருள் உரையாசிரியர் கூறுவது வருமாறு :

'பாங்கனோரினென்று பன்மைபடக் கூறியதெற்றிற்கு? அவன் ஒருவனுலோவெனின்; பாங்கன் பார்ப்பானுகலிற் பன்மை வாசகத்தாற் சொன்னுரென்பது. அல்லதூஉம், இருமுதுகுரவரா னும், இவனை எம்போற் கொண்டொழுகென்று தலைமகற்குக் காட் டிக் கொடுக்கப்பட்டான் பாங்கனென்பதூஉம், நீயும் எம்போலத் தீயன கண்டு பண்பானவிடத்து அடக்குவாயாகென்று பாங்கற்குக் காட்டிக் கொடுக்கப்பட்டான் தலைமகனென்பதூஉம் போதரல் வேண்டி இவ்வாறு பன்மை வாசகம்படச் சொன்னுரென்பது' (3, உரை.)

பிணிக்கொண்ட - பிணித்துக்கொண்ட; 'வரிப்புனை பந்து' என்பதுபோல நின்றது.

தலைவன் கூந்தற்பாயலையும் தோண்மாறுபடுதலையும் நினைந்த வனுதலின் அவ்விரண்டையும் கூறினன்.

தலைவியோடு அளவளாவாது பலநாள் உயிர் வாழ்வதினும், அவ ளோடு அளவளாவி அப்பாற் சிறிது பொழுதிலே இறந்துபடுதல் நன் றென்றான்.

புணரப் புணரின் - புணரக் கூடுமாயி னென்பதும் பொருந்தும்; 'வெகுளாமை புணரின் நன்று - வெகுளாமை ஒருவர்க்குக் கூடுமா யின் அது நன்று' (குறள், 308, பரிமேல்.) வாழ்க்கையும் : உம்மை, இழிவு சிறப்பு; பிரித்து அரைநாளென்பதனோடு கூட்டப் பட்டது.

ஓ, ஏ : அசை நிலைகள்.

## மேற்கோளாட்சி

1. இர்ஈறு விளிவேற்றுமையில் இயல்பாய் நின்றது (தொல். விளி. 12, ந; சீவக. 393, ந.)

மு. தலைவன் கூற்று (தொல். செய். 189, பேர்; இ. வி. 562); பாங்கற் கூட்டத்துப் பாட்டு (ஷை. ஷை. 198, பேர், 201, ந.); தலைவன் தலைவியின் தன்மை கூறியது (ஷை. களவு. 11, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கேளிர்: அகநா. கஙo: 1.

பாங்கனைப் பன்மையிற் கூறுதல்: திணைமொழி ஐம். 49.

2. நெஞ்சுபிணிக் கொண்ட தலைவி: "கொடிச்சி கையகத் ததுவே பிறர், விடுத்தற் காகாது பிணித்தவென் னெஞ்சே" (நற். கூ: 9-10.)

அஞ்சிலோதி: குறுந். உகக: 1, ஒப்பு.

3. குறுமகள்: குறுந். அக: 7, ஒப்பு. (உஅo)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தவிடத்து வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்தினளாக அவளை நோக்கி, "தலைவர் கொடிய பாலைநிலத் தைக் கடந்தனரோ வென்னும் வருத்தத்தால் ஆற்றேனாயினேன்" என்று தலைவி கூறியது.]

உஅக. வெண்மணற் பொதுளிய பைங்காற் கருக்கின்
கொம்மைப் போந்தைக் குடுமி * வெண்டோட
டத்த வேம்பி னமலை வான்பூச்
சுரியா ருளைத்தலை பொலியச் சூடிக்
குன்றுதலை மணந்த கானம்
சென்றனர் கொல்லோ சேயிழை நமரே.

எ - து. பிரிவிடை வேறுபட்டாளைக் கண்டு தோழி வற்புறுப் பாட்டுக் கிழத்தி உரைத்தது.

குடவாயிற் கீரத்தன்.

---

(பி - ம்.) * வெண்டோடத்த.

(ப - ரை.) செ இழை - சிவந்த பொன்னணியையுடையாய், நமர் - நம் தலைவர், வெள் மணல் பொதுளிய - வெள்ளிய மணலின் கண்ணே தழைத்த, பசு கால் கருக்கின் - பசிய அடியையும் கருக்கையும், கொம்மை போந்தை - திரட்சியையும் உடைய பனையினது, குடுமி வெள் தோடு - உச்சியிலுள்ள வெள்ளிய குருத்தோலையின் கண் வைத்த, அத்த வேம்பின் - பாலைநிலத்திலுள்ள வேப்பமரத்தினது, அமலை வான் பூ - நெருக்கத்தையுடைய வெள்ளிய மலரை, சுரி ஆர் உளை தலை பொலிய சூடி - சுழித்தல்ஆர்ந்த மயிரையுடைய தலை விளங்கும்படி அணிந்துகொண்டு, குன்று தலைமணந்த கானம் - மலைகளோடு சேர்ந்த காட்டை, சென்றனர் கொல் - கடந்து சென்றனரோ?

(முடிபு.) சேயிழை, நமர் கானம் சென்றனர்கொல்?

(கருத்து.) தலைவர் பாலையைக் கடந்து சென்றனரோ? இலரோ?

(வி - ரை.) குடுமி - உச்சி. உச்சியிலுள்ளதென்றும் வெண்ணிறமுடையதென்றும் சிறப்பித்தமையால் தோடு, குருத்தோலையாயிற்று. வேம்பு பாலைநிலத்திற்குரியது. வேம்பின் பூவைக் கூறினமையின் தலைவன் பிரிந்த பருவம் இளவேனிலென்பது பெறப்படும் (குறுந். உச);

> "அவரோ வாரார் தான்வந் தன்றே
> வேம்பி னொண்பூ வுறைப்பத்
> தேம்படு கிளவியவர் தெளிக்கும் பொழுதே" (ஐங். ௩௫0)

எனனும் இளவேனிற்பத்துச் செய்யுளைக் காண்க.

மலரைப் பனந்தோட்டில் வைத்துக்கட்டி அணிந்துகொள்ளல் மரபு. சுரி - சுருள். தலைமணந்த: தலை, அசைநிலை; இடமுமாம். குன்று தலைமணந்த கானமென்றது குறிஞ்சியும் முல்லையுங் கலந்து இயல்பு திரிந்த பாலைநிலமென்றபடி.

கொல்: ஐயம். ஓ, ஏ: அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1-2. மணல் சூழ்ந்த பனை: நற்றி. ௩௭உ: 1-2.

3-4. வேப்பம்பூவை ஆடவர் அணிதல்: பெரும்பாண். 59-61.

1-4. பூக்களைப் பனந்தோட்டுடன் வைத்துச் சூடுதல்: "போர்படு மள்ளர் போந்தொடு தொடுத்த, கடவுள் வாகைத் துய்வீ", "நாறி

ணர்க் கொன்றை வெண்போழ்க் கண்ணியர்" (பதிற். கூகூ: 14-5, கூஎ: 13); "வட்கர் போகிய வளரிளம் போந்தை, உச்சிக் கொண்ட வூசி வெண் டோடு, வெட்சி மாமலர் வேங்கையொடு விரைஇச், சுரியிரும் பித்தை பொலியச் சூடி", "ஓங்குநிலை வேங்கை யொள்ளிணர் நறுவீப், போந்தை யந் தோட்டிற் புனைந்தனர் தொடுத்து" (புறநா. ௧00: 3-6, உகூ௫: 3-4); "வட்கர் போகிய வான்பனந் தோட்டுடன், புட்கைச் சேனை பொலியச் சூட்டி.........வஞ்சி சூடுதும்" (சிலப். உ௫: 146-9.) (உஅக)

---

## தோழி கூற்று

[தலைவன் வினைவயிற் பிரிந்தகாலத்தில் அவன் கூறிய கார்ப்பருவம் வந்ததாக, "இப்பருவத்தின் அடையாளங்களைத் தாம் சென்ற விடத்தே கண்டு இனி நீ ஆற்றாயென்பதறிந்து தலைவர் மீண்டு வருவர்" என்று தோழி தலைவிக்குக் கூறியது.]

உஅஉ. செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த
கௌவை நாற்றின் காரிரு ளோரிலை
நவ்வி நாண்மறி கவ்விக் கடன்கழிக்கும்
காரெதிர் தண்புனங் காணிற் கைவளை
நீர்திகழ் சிலம்பி னோராங் * கவிழ்ந்த
வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்
ஆர்கழல் † புகுவ போலச்
சோர்குவ வல்ல வென்பர்கொ னமரே.

எ - து. வினைவயிற் பிரிந்தவிடத்துத் தோழி கிழத்திக்கு உரைத்தது.

நாகம் போத்தன்.

(ப - ரை.) நமர் - நம்மைப் பிரிந்து சென்ற தலைவர், செ சுவல் கலித்த - செம்மண்ணையுடைய மேட்டின்மேல் தழைத்த, செவ்வி கொள் வரகின் - பருவம் வாய்த்த வரகினது, கௌவை நாற்றின் - கௌவை நாற்றுல் ஒலித்தலையுடைய நாற்றினது, கார் இருள் ஓர் இலை - மிக்க கருப்பையுடைய ஓர் இலையை, நவ்வி நாள் மறி - நாட்காலத்தே

---

(பி - ம்.) * கவிந்த. † புகுவீ போலச்.

'ந்த மான்குட்டி, கவ்வி—, கடன் கழிக்கும் - தின்னலென்னும் கடனைத் தீர்த்துக்கொள்ளுதற்கிடமாகிய, கார் எதிர் தண்புனம் - கார்காலத்தை ஏற்றுக்கொண்ட தண்ணிய கொல்லையை, காணின் - காண்பாராயின், நீர் திகழ் சிலம்பின் - நீர் விளங்குகின்ற மலைப்பக்கத்தில், ஓராங்கு அவிழ்ந்த - ஒரு படித்தாக மலர்ந்த, வெள் கூதாளத்து அம் தூம்பு புது மலர் - வெள்ளிய கூதாளத்தின் உட்டுளையையுடைய அழகிய புதிய மலர்கள், ஆர் கழல்பு உகுவ போல - காம்பிற்கழன்று உதிர்தலைப்போல, வளை - நின் கை வளைகள், சோர்குவ அல்ல என்பர்கொல் - சோர்ந்து வீழ்வன அல்லவென்று எண்ணுவாரோ? எண்ணார்.

(முடிபு.) அவர் புனம் காணின், வளை சோர்குவ அல்ல என்பர் கொல்?

(கருத்து.) தாம் கூறிச்சென்ற கார்ப்பருவம் வந்ததறிந்து தலைவர் விரைவில் வருவர்.

(வி - ரை.) தலைவன் கார்காலத்தில் மீண்டுவருவேனென்று கூறி வினைவயிற் பிரிந்துசென்றான். அவன் கூறிச்சென்ற கார்ப் பருவம் வரவும், அதுகண்டு தலைவி ஆற்றாளாவளென்றஞ்சிய தோழி கூறியது இது.

வரகு கார்காலமாகிய செவ்வியைக் கொண்டது. செஞ்சுவல் - முல்லை நிலத்திலுள்ள செம்மண் மேடு.

> "கான நந்திய செந்நிலப் பெருவழி
> வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்
> றிரிமருப் பிரலையொடு மடமா னுகள" (முல்லைப். 97-9)

என்பதில் வரகு செம்மண்ணையுடைய முல்லைநிலத்திற் கார் காலத்தில் வளம்பெறுவதென்பதும், அதனை மான் மேயுமென்பதும் கூறப்பட்டுள்ளன.

மான்மறி தன் இளமையினால் ஓரிலையைக் கௌவுதலோடு அமைந்தது. கூதாளம்: இது கூதளம், கூதளியெனவும் வழங்கும். ஆர் - காம்பு.

சோர்குவவல்லவென்பர்கொலென்றது சோர்தலை எண்ணுவரென்பதைப் புலப்படுத்தியது.

வரகுப்புலத்தின் நிலை கண்டு, தாம் மீள்வதாகக் கூறிய கார்ப் பருவம் வந்தமையையும், அதனால் கைவளை சோரும் நின் நிலைமையை யும் உணர்ந்து விரைவில் மீள்வரென்பது கருத்து.

## மேற்கோளாட்சி

3. மறியென்னும் இளமைப் பெயர் நவ்வியோடு அடுத்து வந்தது (தொல். மரபு. 12, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1-2. சுவலில் விளைந்த பயிர்: குறுந். ௨0௪ : 3; பெரும்பாண். 131; மலைபடு. 436.

1-3. மான் வரகிலையைக் கறித்தல்: குறுந். ௨௨0 : 1-2, ஒப்பு.

4. காரெதிர் புனம்: குறுந். ௨௬௬ : 4, ஒப்பு.

5. நீர்திகழ் சிலம்பு: குறுந். ௯௨ : 1.

6. வெண்கூதாளம்: முருகு. 192; பட். 85.

6-7. ஆர் கழல்பு மலர் உதிர்தல்: "வெண்பூ.........ஆர்கழல்பு களிறுவழங்கு சிறுநெறி புதையத் தாஅம்" (குறுந். ௬௨௧: 1-3) "ஆர்கழல், பாலி வானிற் காலொடு பாறி" (அகநா. ௧ : 6-7.) (௨அ௨)

---

## தலைவி கூற்று

[தலைவன் பொருளீட்டச் சென்ற காலத்தில் ஆற்றுளெனக் கவன்ற தோழியை நோக்கி, "அவர் பிரிவுகருதி வருந்தேன்; அவர் சென்ற பாலை நிலத்திலுள்ளார் செய்யும் தொழிற்கொடுமையெண்ணி அஞ்சினேன்" என்று தலைவி கூறியது.]

௨அ௩. உள்ளது சிதைப்போ ருளரெனப் படாஅர்
இல்லோர் வாழ்க்கை *யிரவினு மிளிவெனச்
சொல்லிய †வன்மை தெளியக் காட்டிச்
சென்றனர் வாழி தோழி யென்றும்

---

(பி - ம்.) * யிறவினு. † வண்மை.

கூற்றத் தன்ன கொலைவேன் மறவர்
ஆற்றிருந் தல்கி வழங்குநர்ச் செகுத்த
* படுமுடை பருந்துபார்த் திருக்கும்
† நெடுமூ திடைய நீரி லாறே.

எ - து. தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழி ஆற்றுளெனக் கவன்ற தோழிக்கு, "அவர் பிரிய, ஆற்றேனாயினே னல்லேன்; அவர் போயின கானத்துத் தன்மை நினைந்து வேறுபட்டேன்" என்று கிழத்தி சொல்லியது.

பாலைபாடிய பெருங்கடுங்கோ.

(ப - ரை.) தோழி—, உள்ளது சிதைப்போர் - தம்முடைய முன்னோரால் தேடிவைக்கப் பெற்றுத் தம்பால் உளதாகிய செல்வத்தைச் செலவழிப்போர், உளர் என படாஅர் - செல்வரென்று உலகத்தாரால் சொல்லப்படார், இல்லோர் வாழ்க்கை - தாமாக ஈட்டிய பொருள் இல்லாதார் முந்தையோர் பொருளின் பயனைத் துய்த்து வாழ்தல், இரவினும் இளிவு - இரத்தலைக் காட்டினும் இழிவுடையது, என - என்று, சொல்லிய வன்மை - சொன்ன ஆண்மைத் தன்மையை, தெளிய காட்டி - யாம் தெளியும்படி எடுத்துக் கூறி, என்றும் கூற்றத்து அன்ன - எப்பொழுதும் கூற்றுவனைப்போன்ற, கொலை வேல் மறவர் - கொலைத்தொழிலைச் செய்யும் வேலையுடைய மறச்சாதியார், ஆறு இருந்து அல்கி - வழியினிடத்தே தங்கி, வழங்குநர் செகுத்த படுமுடை-வழிப்போவாரைக் கொன்றதனால் உண்டான புலாலை, பருந்து பார்த்து இருக்கும் - பருந்துகள் எதிர்நோக்கித் தங்கியிருக்கின்ற, நெடு முது இடைய - நெடிய பழைய இடத்தையுடையனவாகிய, நீர் இல் ஆறு - நீரில்லாத பாலைநிலத்து வழிகளிலே, சென்றனர் - தலைவர் சென்றார்; வாழி - அவர் வாழ்வாராக!

(முடிபு.) தோழி, 'சிதைப்போர் உளரெனப் படார்; இல்லோர் வாழ்க்கை இளிவு' எனச் சொல்லிய வன்மை காட்டி ஆறு சென்றனர்; வாழி.

(கருத்து.) தலைவர் சென்ற வழியினது கொடுமையை நினைதலால் ஆற்றாமை உண்டாகின்றது.

---

* படுமுடைப் பருந்து.　† நெடுமூருடைய.

(வி - ரை.) முன்னோரால் ஈட்டிவைத்த பொருள் கொண்டு இல்லறம் நடத்துதல் முறையன்றென்பது பண்டையோர் கொள்கை. இதனை,

'இனி, பொருட்பிணி யென்பது பொருளிலனாய்ப் பிரியுமென்ப தன்று; தன்முதுகுரவராற் படைக்கப்பட்ட பல்வேறு வகைப்பட்ட பொருளெல்லாங் கிடந்ததுமன்; அதுகொடு துய்ப்பது ஆண்மைத் தன்மைஅன்றெனத் தனது தாளாற்றலாற் படைத்த பொருள் கொண்டு வழங்கி வாழ்தற்குப் பிரியுமென்பது; அல்லதூஉந் தேவர் காரியமும் பிதிரர் காரியமும் தனது தாளாற்றலாற் படைத்த பொருளாற் செய்தன தனக்குப் பயன்படுவன; என்னை? தாயப் பொருளாற் செய்தது தேவரும் பிதிரரும் இன்புறார், ஆதலான்; அவர்களையும் இன்புறுத்தற்குப் பிரியுமென்பது' (இறை. 35, உரை),

'பொருள்வயிற் பிரிதலென்பது, குரவர்களாற் படைக்கப்பட்ட பொருள்கொண்டு இல்லறஞ் செய்தால் அதனான் வரும்பயன் அவர்க்கு ஆம் அத்துணையல்லது தமக்காகாமையால் தமது பொருள் கொண்டு இல்லறம் செய்தற்குப் பொருள் தேடப் பிரியாநிற்றல்' (சீந். 332, உரை)

என்பவற்றால் தெளியலாகும்.

தம்முயற்சியொன்றின்றியே பெற்ற பொருளால் வாழ்தலினும், இரத்தலாகிய சிறுமுயற்சியேனும் செய்து பொருள்பெற்று வாழும் இரவு உயர்ந்ததாயிற்று. இல்லோர், வறியவரென்பதும் அமையும். சென்றனர் - சென்ற தலைவரென வினையாலணையும் பெயராக்குதலும் ஒன்று. முடை - தசை; ஆகுபெயர் (அகநா. ௩ : 9, உரை.)

வன்மை தெளியக்காட்டி என்றதனால் அவர் பிரிவின் காரணத்தை நன்கறிந்து ஆற்றினேனென்பதும், பாலைவழியின் இயல்பைக் கூறியதனால் அவ்வழியின் ஏதமே ஆற்றாமைக்குக் காரணமாவதென்பதும் புலப்படுத்தினாள்.

## ஒப்புமைப் பகுதி

4. **வாழிதோழி** : குறுந். ௨௯௦ : 4, ஒப்பு.

7. **பருந்து முடை பார்த்திருந்தல்** : "மான்றுவேட் டெழுந்த செஞ்செவி யெருவை.........புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை, கொள்ளை மாந்தரி னானது கவரும்" (அகநா. ௩ : 5-10.)

**படுமுடை** : நற். ௧௬௪ : 8.

5-7. ஆறலைகள்வர் செயல்: (குறுந். உஎச: 3-4, உகஎ: 1-4, ௩௩க: 1-3); "செங்கோல் வாளிக் கொடுவி லாடவர், வம்ப மாக்க ளுயிர்த்திறம் பெயர்த்தென", "இலைமாண் பகழிச் சிலைமா ணிரீஇய, அன்பி லாடவ ரலைத்தலிற் பலருடன், வம்பலர் தொலைந்த வருஞ்சுரக் கவலை" (நற். கசுச: 6-7, ௩௰௨: 1-3); "அற்றம்பார்த் தல்குங் கடுங்கண் மறவர்தாம், கொள்ளும் பொருளில ராயினும் வம்பலர், துள்ளுநர்க் காண்மார் தொடர்ந்துயிர் வௌவலின்" (கலி. ச: 3-5); "இறந்தோர், கைப்பொரு ளில்லை யாயினு மெய்க்கொண், டின்னுயிர் செகாஅர் விட்டடு தந் தப்பற்கு", "அம்புதொடை யமைதி காண்மார் வம்பலர், கலனில ராயினுங் கொன்றுபுள் ளூட்டும், கல்லா விளையர்" (அகநா. கoக: 10-12, ௩எ௫: 3-5.)

மறவர் கொன்றமையாற் பட்ட தசையைப் பருந்து விரும்புதல்: "வடியாப் பித்தை வன்க ணாடவர், அடியமை பகழி யார வாங்கி, வம்பலர்ச் செகுத்த வஞ்சுவரு கவலைப், படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி, எருவைச் சேவல்", "வாங்குதொடை பிழையா வன்க ணாடவர், விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி, ஆறுசெல் வம்பல ருயிர்செலப் பெயர்ப்பின், பாறுகிளை பயிர்ந்து படுமுடை கவரும்" (அகநா. கசுக: 2-6, களரு: 2-5); "செந்தொடை பிழையா வன்க ணாடவர், அம்புவிட வீழ்ந்தோர் வம்பப் பதுக்கைத், திருந்துசிறை வளைவாய்ப் பருந்திருந் துயவும்" (புறநா. ௩: 20-22.) (உஅ௩)

## தோழி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த காலத்தில், ஊரினர் அலரையஞ்சிய தலைவியை நோக்கி, "இவ்வூரினர் அறிவிலர் போலும்!" என்று தோழி கூறியது.]

உஅச. பொருத யானைப் புகர்முகங் கடுப்ப
மன்றத் துறுகன் மீமிசைப் பலவுடன்
ஒண்செங் காந்த ளவிழு நாடன்
அறவ னாயினு மல்ல னாயினும்
நம்மே சுவரோ தம்மிலர் கொல்லோ
வரையிற் றாழ்ந்த வால்வெள் ளருவி
கொன்னிலைக் குரம்பையி னிழிதரும்
இன்னா திருந்தவிச் சிறுகுடி யோரே.

எ - து. வரைவிடைத் தோழி, கிழத்திக்கு உரைப்பாளாட உரைத்தது.

மிளைவேள் தித்தன்.

(ப - ரை.) பொருத யானை - போர் செய்த யானையினது, புகர் முகம் கடுப்ப - புள்ளியையுடைய முகத்தையொப்ப, மன்றம் துறு கல் மீமிசை - மன்றத்தின்கண்ணுள்ள பொற்றைக் கல்லின்மேல் ஒள் செ காந்தள் பல உடன் அவிழும் நாடன் - ஒள்ளிய செங்காந்தள்மலர் பல ஒருங்கே மலர்கின்ற நாட்டையுடைய தலைவன், அறவன் ஆயினும் - வாய்மையை யுடையனாயினும், அல்லன் ஆயினும் - வாய்மையனல்லனாயினும், வரையில் தாழ்ந்த - மலையினிடத்திலே தாழ்ந்து வீழ்கின்ற, வால் வெள் அருவி - தூய வெள்ளிய அருவியானது, கொன் இலை குரம்பையின் இழிதரும் - அச்சத்தைத் தரும் இலையால் வேய்ந்த குடிலினருகில் இறங்கி ஓடும், இன்னாது இருந்த இ சிறு குடியோர் - நமக்கு இன்னாதாகியிருந்த இச்சிற்றூரிடத்திலுள்ளார், நம் ஏசுவரோ - தலைவன் அங்ஙனம் இருத்தல் கருதி நம்மைப்பழிப்பார்களோ? தம் இலர்கொல் - அவர் தமக்கென்று ஓரறிவும் இல்லாதவர்களோ?

(முடிபு.) நாடன் அறவனாயினும், அல்லனாயினும், இச் சிறு குடியோர் நம் ஏசுவரோ? தம் இலர் கொல்லோ?

(கருத்து.) தலைவன் செயல்பற்றி நம்மை ஏசுவோர் அறிவில்லாதவர்.

(வி - ரை.) தலைவன் வரைபொருட்குப் பிரிந்த காலத்தில் தலைவி, "தலைவன் கூறிய காலத்தில் வந்துமணப்பானோ? அல்லனோ! அங்ஙனம் மணவாவிடின் இவ்வூரினர் நம்மைப் பெரிதும் ஏசுவரே!" எனக் கவன்றனள்; அது கண்ட தோழி, "தலைவன் நல்லனாயினும் அல்லனாயினும் நம்மை ஏசுவதால் மட்டும் பயனில்லை; அறிவில்லாரே அங்ஙனம் செய்வர்" என்றாள்.

தமக்கென்று ஒரு பயனை யிலரோ வெனலும் ஆம்; தம் குடித்தலைமகளுக்கு வரும் நன்மையைக் கண்டு உவத்தலும் அவளுக்குவரும் தீமைகண்டு துன்புறுதலும் குடியோர் கடமையாதலின் அவருக்கும் தலைவன் தொடர்பினாற் பயனுண்மையைக் கூறினாள்.

பொருதமையினால் உண்டான புண்ணும், இயல்பாக உள்ள புள்ளியும் காந்தள்மலரின் தோற்றத்தைத் தந்தன. துறுகல்லுக்கு யானை உவமை.

*அறவன் - நல்லனெனினும் பொருந்தும். தம் இலர்கொல் - தம்மை ஏசுதல் இலரோவென்பதும் அமையும்.*

*'அறவனுயினும் - தான் வரைவொடு வருதலை ஏற்றுக்கொண்டால் தலைவன் அறநெறிவழி வரைந்து கொள்ளினும், அல்லனுயினும்- அங்ஙனம் ஏற்றுக்கொள்ளாரேல் மனவலிமிக்கு நின்னை உடனழைத்துச் சென்றேனெனும்' என்றுரைத்தலும் ஆம். இக்கருத்தை, தலைவனைச் சுற்றத்தார் ஏற்றுக் கொள்வாரோவெனக் கவன்ற தலைமகட்குத் தோழி உரைத்ததாகக் கொள்க.*

*கொன் : இலைக்கு அடையாக்கி, எலி, அணில் முதலியவற்றிற்கு அச்சத்தைத் தரும் ஈத்திலையென்று பொருள் உரைப்பினும் இயையும் ;*

*" வரிப்புற வணிலொடு கருப்பை யாடா*
*தியாற்றறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்*
*வேற்றலை யன்ன வைந்நுதி நெடுந்தகர்*
*ஈத்திலை வேய்ந்த வெய்ப்புறக் குரம்பை "* (பெரும்பாண். 85-8)

*என்பது காண்க.*

*குரம்பை - சிறுகுடில். இன்னுமை, தலைவி நிறுத்தமைந்தது. இன்னது : வினையெச்சம் ; " இன்னு துறைவி ", " இன்னு துயங்கும் "* (அகநா. கஙச : 10, உஎ0 : 14.)

## ஒப்புமைப் பகுதி

1-3. மலருந்த யானையின் முகப்புண் : கலி. சஅ : 1-6.

காந்தள்மலருந்த யானையின் முகத்து வரி : *" நிரைத்த யானை முகத்துவரி கடுப்பப், போதுபொதி யுடைந்த வொண்செங் காந்தள் "* (நற். கஎக : 5-6.)

துறுகல்லிழந்த யானை : குறுந். கக : 1-2, ஒப்பு.

4. அறவன், அல்லன் : புறநா. சச : 11-3, கூகo : 1-2.

7. இலைக்குரம்பை : பெரும்பாண். 88 ; மதுரைக். 310.

8. சிறுகுடி : குறுந். கஅச : 2, ஒப்பு. (உஅச)

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற பருவங்கண்டு வேறுபட்ட தலைவியை நோக்கித் தோழி வற்புறுத்தினளாக, அவளுக்கு, "தலைவர் கூறிய பருவம் இதுவே. யான் ஒவ்வொரு நாளும் அவர் வரவை நோக்கி நிற்கின்றேன்; அவர் வந்திலர்" என்று தலைவி வருந்திக் கூறியது.]

உ௮௫. * வைகல் வைகல் வைகவும் வாரார்
எல்லா வெல்லை † யெல்லையுந் தோன்றார்
யாண்டுளர் கொல்லோ தோழி யீண்டிவர்
சொல்லிய பருவமோ விதுவே பல்லூழ்
புன்புறப் பெடையொடு பயிரி யின்புற
விமைக்க ணேதா கின்றோ ஞெமைத்தலை
ஊனசைஇ யொருபருந் ‡ திருக்கும்
வானுயர் பிறங்கன் மலையிறந் தோரே.

எ - து. பருவங்கண்டு வேறுபட்ட விடத்து வற்புறுத்தும் தோழிக்கு வன்புறை எதிரழிந்து தலைமகள் சொல்லியது.

[வன்புறை எதிர் அழிந்து - வற்புறுத்திய கூற்றுக்கு மாறாக வருந்தி.]

பூதத் தேவன்.

(ப - ரை.) தோழி—, இன் புறவு - இனிய ஆண் புறா, பல் ஊழ் - பலமுறை, புல் புறம் பெடையொடு பயிரி - புல்லிய புறத்தையுடைய பெண்புறவை அழைத்து, இமைக்கண் ஏது ஆகின்று - இமைப் பொழுதில் எத்தகைய இன்பத்தையுடையதாக ஆகின்றது! இங்ஙனம் அவை இருப்பவும், ஞெமைதலை - ஞெமை மரத்தின் உச்சியில், ஊன் நசைஇ - இறந்தோரது தசையை விரும்பி, ஒரு பருந்து இருக்கும் - ஒற்றைப் பருந்து இருக்கின்ற, வான் உயர் பிறங்கல் மலை இறந்தோர் - வானளவும் உயர்ந்த விளக்கத்தையுடைய மலையைக் கடந்து சென்ற தலைவர், வைகல் வைகல் வைகவும் வாரார் - நாள் தோறும் விடியற்காலம் நீங்கிப் பகல்வரவும் அப்பகற்காலத்தில் வந்திலர்; எல்லா எல்லை எல்லையும் தோன்றார் - எல்லாப் பகலின் எல்லையாகிய இரவிலும் மீண்டு வந்து தோன்றார்; யாண்டு உளர்கொல் - எங்கே

(பி - ம்.) * வைகாவைகல். † யெல்லவுந். ‡ திறுக்கும்.

நுக்கின்றாரோ? ஈண்டு இவர் சொல்லிய பருவம் இதுவே - இங்கே வர் மீண்டு வருவேனென்று சொல்லிய பருவம் இதுவே; பிறி தன்று.

(முடிபு.) தோழி, மலையிறந்தோர் வைகவும் வாரார்; எல்லை யெல்லையுந் தோன்றார்; யாண்டுளர் கொல்? இவர் சொல்லிய பருவமோ இதுவே.

(கருத்து.) தாம் கூறிச்சென்ற பருவம் வந்தும் தலைவர் வந்திலர்.

(வி - ரை.) தலைவன் கூறிச்சென்ற பருவம் வந்துவிட்டதறிந்து தலைவி கவன்று வேறுபட்டாள். அப்பொழுது தோழி, "தலைவர் விரைவில் வருவர்; நீ ஆற்றியிரு" என்று வற்புறுத்தினாள். அது கேட்ட தலைவி, "ஒவ்வொரு நாளும் பகலிலும் இரவிலும் அவர் வரவை எதிர்பார்த்து நிற்கின்றேன். இரவில், விடிந்தால் வருவரென் றெண்ணுவேன்; ஆயினும் விடிந்தபின் அவர் வந்திலர்; அதுகண்டு பகல் கழிந்தால் தோன்றுவரென எண்ணுவேன்; அப்பொழுதும் வந்திலர். அவர் கூறிய பருவம் இஃதென்பதிலோ ஐயமில்லை" என்று கூறினாள்.

நெஞ்சிற்கு அணியராதலின் இவரென்றாள். ஆண் புறா, பெண் புறவின் அருகிருந்து அழைத்து இன்புறுதலைத் தலைவரும் கண்டிருத் தல்கூடுமென்பதும் அக்காலத்தும் தன்னை நினைந்து மீண்டிலரே யென்பதும் தலைவியின் எண்ணம்.

## ஒப்புமைப் பகுதி

1. வைகல் வைகல் வைகுதல்: "வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுணரார், வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்" (நாலடி.39.)

3. யாண்டுளர் கொல்லோ: குறுந். கஎகூ: 5, ஒப்பு.

5. ஆண்புறு, பெண்புறவைப் பயிர்தல்: குறுந். எகூ: 4.

8. வானுயர் பிறங்கல் மலை: குறுந். கசச: 7, உ௫௩: 8.

---

(உஅ௫)

## தலைவன் கூற்று

[தலைவியைத் தோழிவாயிலாகப் பெற நினைந்து அத்தோழியிடம் பணிவுடைய சொற்களைக் கூறிநின்ற தலைவன் தலைவிக்கும் தனக்கும் முன்னுள்ள பழக்கத்தைக் குறிப்பாக அறிவித்தது.]

உஅகூ. உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்
றமிழ்த மூறுமஞ் செவ்வாய்க் கமழகில்
ஆர நாறு மறல்போற் கூந்தற்
பேரமர் † மழைக்கட் கொடிச்சி
மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே.

எ - து. (1) இரந்து பின்னின்ற கிழவன், குறைமறுமற் கூறியது (2) பாங்கற்குச் சொல்லியதூஉமாம்.

எயிற்றியனார்.

(ப - ரை.) முள் எயிறு - முள்ளைப் போன்ற கூரிய பற்களை யும், அமிழ்தம் ஊறும் அம் செ வாய் - அமிழ்தம் ஊறுகின்ற அழகிய செய்ய வாயையும், கமழ் அகில் - மணம் வீசுகின்ற அகிற்புகையும், ஆரம் - சந்தனப்புகையும், நாறும் - மணக்கின்ற, அறல்போல் கூந் தல் - கருமணலைப் போலக் கரிய கூந்தலையும், பேர் அமர் மழை கண் - பெரிய அமர்த்த குளிர்ச்சியையுடைய கண்களையும் உடைய, கொடிச்சி - தலைவியின், மூரல் முறுவலொடு - புன்னகையோடு, மதைஇய நோக்கு - செருக்கின பார்வையை, உள்ளி காண்பென் போல்வல் - நினைத்துப் பார்ப்பேன் போல்வேன்.

(முடிபு.) கொடிச்சியின் மூரன் முறுவலொடு நோக்கினை உள்ளிக் காண்பென்போல்வன்.

(கருத்து.) யான் அளவளாவிய தலைவியை இனிக் காண்ட அரிது போலும்.

(வி - ரை.) உள்ளிக்காண்பெனென்றது கண்ணாற் காண்டல் அரிதென்றபடி. போல்வலென்றது ஒப்பில்போலியாகி ஐயப்பொருளை உடையதாயிற்று. செவ்வாயமிழ்தும், கூந்தற்பாயலும் அவனுக்கு இன் பத்தை யளித்தனவாதலின் அவற்றைச் சிறப்பித்தான். அமர் கண் - ஒன்றையொன்று அமர்த்தகண்; தம்மைக் காண்பாரை அமர்த்த கண்கள் எனலும் பொருந்தும்; பிறருக்கு அமர்த்த கண்ணாயினும் எனக்கு மழைக்கண் ஆயினவென்றான். மதைஇய நோக்கு - செருக் கின பார்வை; 'மதைஇய நோக்கு - செருக்கின நோக்கு; என்றது எக்காலத்தும் அவள் என்னளவில் அன்புடையளாயிருப்பாள்; அவ

(பி - ம்.) * றமிர்தம். † மழைக்கண் மடந்தை.

ளறிவது ஒன்றுண்டோ? உன்னுடைய கொடுமையல்லவோ இந்த மாறுதல்? எனத் தோழியொடு புலந்து கூறினன்' (அகநா. அசு: 30, உரை) என்பது ஈண்டும் ஏற்புடைத்தாதல் காண்க.

அமிழ்தமூறும் செவ்வாயென்றும் அறல்போற் கூந்தலென்றும் கூறியவற்றால், முன்னுறுபுணர்ச்சி முறைபுற மொழிந்தான். 'இங்ஙனம் முன்னரே ஒன்றுபட்ட எங்களை நீ நடுநின்று விலக்குவதாற் பயனென்' என்பதுபடக் கூறி, தோழி மறுவகை செய்தான்.

தலைவியின்பால் வறிதுநகை தோற்றிய காலத்துக் கண்டு மகிழ்ந்து அவளது அருட்பார்வையால் உள்ளந்தளிர்த்தவனாதலின் அவ்விரண்டையும் உள்ளிக்காண்பெனென்றான்.

இரண்டாவது கருத்து: தலைவியை மீட்டும் ஒருகாற் பெறுவேனோவென வருந்திக்கூறியது.

## மேற்கோளாட்சி

மு. ஒருதலையுள்ளுதலென்னும் மெய்ப்பாடுவந்தது (தொல். களவு. 9, இளம்; இ. வி. 405); தலைமகளைக் காணு வகையிற் பொழுது மிகவும் கடந்தபொழுது தலைவன் கூறியது (ஷை. ஷை. 17, இளம்.); இருவரும் உளவழி வந்த தலைவன் தலைவிதன்மை கூறவே, இவள்கண்ணது இவன் வேட்கையென்று தோழி குறிப்பான் உணர அவன் கூறியது (ஷை. 11, ந.); பின்னுள் நெடுந்தகை குறிவயின் நீடுசென்றிரங்கியது (நம்பி. 156.)

## ஒப்புமைப் பகுதி

1. முள்ளெயிறு: குறுந். உகூஉ: 4, ஒப்பு.

1-2. எயிற்றில் ஊறிய அமிழ்தம்: குறுந். கச: 1-2, ஒப்பு.

3. ஆரம் நாறும் கூந்தல்: "சாந்துளர் நறுங்கதுப்பு" (குறுந். ருகஉ: 6.)

4. பேரமர்க்கண்: குறுந். கருக: 2, ஒப்பு.

பேரமர் மழைக்கண்: நற். உக: 9, சச: 2, ருகக: 10; ஐங். உகச: 4; அகநா. ருஉகூ: 2.

5. மதைஇய நோக்கு: கலி. கருக: 21; அகநா. அகூ: 30, கரு0: 14; சிலப். அ: 76.

1-5. தலைவன் தலைவியின் நோக்கை நினைத்தல்: "உள்ளுப தில்ல தாமே.........திங்க ளன்னநின் றிருமுகத், தொண்சூட் டவிர்குழை மலைந்த நோக்கே" (அகநா. ௨௫: 21-6); "மடங்கெழு நோக்க மரீஇய நெஞ்சே" (தமிழ்நெறி. மேற். 164.) (௨அ௬)

---

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்து, "தலைவர் நம்மைத் துறந்தார்; இனி வாரார்" என்று கவன்ற தலைவியை நோக்கி, "இதோ கார்ப் பருவம் வந்தது; இனி அவர் துறந்திரார்; வருவர்" என்று தோழி கூறியது.]

௨அ௭. அம்ம வாழி தோழி காதலர்
இன்னே கண்டுந் துறக்குவர் கொல்லோ
முந்நாற் றிங்க ணிறைபொறுத் தசைஇ
ஒதுங்கல் செல்லாப் பசும்புளி வேட்கைக்
கடுஞ்சூன் மகளிர் போல நீர்கொண்டு
விசும்பிவர் கல்லாது தாங்குபு புணரிச்
செழும்பல் குன்ற நோக்கிப்
பெருங்கலி வான மேர்தரும் பொழுதே.

எ-து. பிரிவிடை வேறுபட்ட தலைவி, நம்மைத் துறந்து வாரா ரென்று கவன்றாட்குப் பருவங்காட்டித் தோழி வருவரெனச் சொல்லி யது.

கச்சிப்பேட்டு நன்னாகையார்.

(ப - ரை.) தோழி—, அம்ம - கேட்பாயாக: மு நால் திங்கள் நிறை பொறுத்து அசைஇ - பன்னிரண்டு மாதம் நிறைந்த கருப்பத் தைத் தாங்கித் தளர்ந்து, ஒதுங்கல் செல்லா - நடக்கமாட்டாத, பசு புளி வேட்கை - பச்சைப் புளிச்சுவையில் விருப்பத்தையுடைய, கடு சூல் மகளிர் போல - முதற் சூலையுடைய மகளிரைப்போல, நீர் கொண்டு - நீரை முகந்து கொண்டு, விசும்பு இவர்கல்லாது - வானத்தின் கண் ஏறுமல், தாங்குபு புணரி - அந்நீர்ப் பொறையைத்

---

(பி - ம்.) * முந்நாட்டிங்கள்.

தாங்கிக் கொண்டு ஒன்ருேடொன்று சேர்ந்து, செழு பல் குன்றம் நோக்கி - வளமிக்க பல மலைகளை நோக்கி, பெரு கலி வானம் - பெரிய முழக்கத்தையுடைய மேகங்கள், ஏர்தரும் பொழுது - எழுகின்ற கார்ப்பருவத்தை, இன்னே கண்டும் - இப் பொழுது பார்த்த பின்பும், காதலர் - தலைவர், துறக்குவர்கொல்லோ - நம்மைப் பிரிந்து வாராமல் இருப்பாரோ? வருவர்.

(முடிபு.) தோழி, காதலர் பொழுது கண்டும் துறக்குவர் கொல்லோ?

(கருத்து.) கார்ப்பருவம் வந்தமையின் இனித்தலைவர் விரைவில் மீள்வர்.

(வி - ரை.) துறக்குவர் - துறந்துறைவரென்னும் பொருட்டு. கொல் : அசைநிலை ; ஓ : வினு ; எதிர்மறைப் பொருளது.

மகளிர் பன்னிரண்டு திங்கள் கருவுற்றிருத்தலும் உண்டு ;

“ பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்டவப் பாங்கினல்
என்னிளங் கொங்கை யமுத மூட்டி யெடுத்துயான்
பொன்னடி நோவப் புலரியே கானிற் கன்றின்பின்
என்னிளஞ் சிங்கத்தைப் போக்கினே னெல்லே பாவமே ”

(பெரியாழ். ௩. 2 : 8.)

நிறை - நிறைந்த கருப்பம். ஒதுங்கல் - நடத்தல்.

வயாநோயுடையார் புளித்த சுவையையுடைய பொருள்களை விரும்புதல் இயல்பு ; பசும்புளி - பச்சைப் புளியங்காய் ;

“ நீருறை கோழி நீலச் சேவல்
கூருகிர்ப் பேடை வயாஅ லூர
புளிங்காய் வேட்கைத் தன்றுநின்
மலர்ந்த மார்பிவள் வயாஅ நோய்க்கே ” (ஐங். ௫௧.)

கடுஞ்சூல் மகளிர் - முதற் சூல் கொண்ட மகளிர் (மதுரைக். 609, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அம்மவாழி தோழி : குறுந். எஎ : 1, ஒப்பு.

4. வயாநோயுற்றார் புளியை விரும்புதல் : “ வயாவுநோய் நிலை யாது, வளைகாய் விட்ட புளியருந் தாது ” (கல். எ : 5 6) ; “ பொய்த்து யில் கொண்டு புளிக்கு முவந்தாள் ” (பிரபு. மாயை உற்பத்தி. 27.)

5. கடுஞ்சூல் : சிறுபாண். 148; பெரும்பாண். 395; கலி. ௧௧0 : 14.

(உ௮எ)

தலைவி கூற்று

[தலைவன் அன்பிலனென்று தோழி கூறிக்கொண்டிருப்ப, அவனது வரவுணர்ந்த தலைவி அவன் செய்வன யாவும் இனியன வென்று கூறியது.]

உஅஅ. கறிவள ரடுக்கத் தாங்கண் முறியருந்து
குரங்கொருங் கிருக்கும் பெருங்க னாடன்
இனிய னாகலி னினத்தி னியன்ற
இன்னா மையினு மினிதோ
இனிதெனப் படூஉம் புத்தே ணாடே.

எ - து. தலைமகனது வரவுணர்ந்து, நம்பெருமான் நமக்கு அன்பிலனேன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

[கிழத்தி உணர்ந்து தோழிக்கு உரைத்ததென்க.]

கபிலர்.

(ப - ரை.) தோழி, கறி வளர் அடுக்கத்து ஆங்கண் - மிளகு கொடி வளர்கின்ற மலைப்பக்கமாகிய அவ்விடத்தே, முறி அருந்து குரங்கு ஒருங்கு இருக்கும் - தளிரை உண்ணுகின்ற குரங்குகள் ஒன்றாகத் திரண்டு இருக்கின்ற, பெரு கல் நாடன் - பெரிய மலைகளை யுடைய நாட்டினனாகிய தலைவன், இனியன் - பரத்தையிற் பிரிந்தனனா யினும் நம்மாட்டு இனிமையை உடையான்; ஆகலின்—, இனத்தின் இயன்ற இன்னாமையினும் - உறவுடையாராற் செய்யப்படும் இன்னா மையைக் காட்டிலும், இனிது என படும் புத்தேள் நாடு - இனியு தென்று சிறப்பிக்கப்படும் தேவருலகம், இனிதோ - இனிமையை உடையதோ?

(முடிபு.) நாடன் இனியனாகலின், இனத்தின் இயன்ற இன்னா மையினும் புத்தேணாடு இனிதோ?

(கருத்து.) அன்புடைய தலைவன் செய்வன யாவும் இனியனவே.

(வி - ரை.) தலைவனது வரவு நீட்டித்ததாகத் தோழி, "தலைவன் நம்பால் அன்பிலன்" என இயற்பழித்தாள்; அப்பொழுது தலைவன் வந்தான்; அவன் வரவையறிந்த தலைவி, "அன்புடைய உறவினர் செய்யும் இன்னாமை தேவருலக இன்பத்தினும் சிறந்தது" என்று கூறி இயற்பட மொழிந்தாள்.

இனத்தின்மேல் வைத்துக் கூறினும் கருதியது தலைவனையே யென்க. அவன் இனியனாகலின், அவன் செய்வனவற்றுள் சில இன்னா தனவாகத் தோன்றினும், முடிவில் இனியனவாகவே முடியுமென்பது தலைவி கருத்து. இனிதோ: ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

புத்தேணாடு ஒருபடித்தாக இன்பம் பயத்தலின் அதனை நுகர் வார் இன்பத்தின் அருமையை யறியார்; தலைவன் செய்யும் இன் னாமை பின்வரும் இன்பம் மிகுதிப்படுவதற்குக் காரணமாகி அவ் வின்பத்தின் அருமையை யறியச் செய்தலின் அவ்வின்னாமை புத்தேணாட்டினும் இனிதாயிற்று;

"இனியவ ரென்சொலினு மின்சொல்லே" (நீதிநெறி.),

"மாசற்ற நெஞ்சுடையார் வன்சொ லினிது" (நன்னெறி)

என்பவற்றிற் சொல்லுக்குக் கூறிய கருத்து ஈண்டு நினைதற் குரியது.

"....................நரகம் பெறினும்
எள்ளேன் றிருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா"
(திருவாசகம்)

என்பதும் இக்கருத்தோடு ஒப்புமையுடையது.

## ஒப்புமைப் பகுதி

1. கறிவள ரடுக்கம்: குறுந். கூ0: 2; புறநா. கசுஅ: 2.

மலையில் மிளகுகொடி வளர்தல்: ஐங். உசரு: 1; அகநா. உ: 6, ககஉ: 14; சிலப். உஅ: 114.

1-2. முறியருந்து குரங்கு: "முறிமே யாக்கைக் கிளை" (மலைபடு. 313); "முறிமேய் கடுவன்" (ஐங். உஎசு: 1.)

குரங்கு கறிமுறி யுண்ணுதல்: அகநா. கஅஉ: 14; சீற். 196.

3-4. தலைவன் செய்யும் இன்னாமை இனிதாதல்: "நாட னய முடைய னென்பதனா னீப்பினும், வாடன் மறந்தன தோள்" (ஐந். எழு. 2.) (உஅஅ)

## தலைமகள் கூற்று

[தலைவன் கூறியபருவம் வந்தது கண்டு தலைவி வேறுபட்டாளெனக் கவலையுற்ற தோழிக்கு, "நான் அவரை நினைந்து இரங்கினேனல்லேன்; என்பொருட்டுக் கவலையுடையார்போல் இவ்வூரினர் அவரைக் கொடியரென்பதையறிந்தே வருந்தினேன்" என்று தலைவி கூறியது.]

உ௮௯. வளர்பிறை போல * வழிவழிப் பெருகி
இறைவளை நெகிழ்த்த வெவ்வ நோயொடு
குழைபிசைந் தனையே மாகிச் சாஅய்
உழைய ரன்மையி னுழப்ப தன்றியும்
மழையுந் தோழி மான்றுபட் டன்றே
பட்ட மாரி படாஅக் † கண்ணும்
அவர்திறத் திரங்கு நம்மினும்
நந்திறத் திரங்குமிவ் வழுங்க லூரே.

எ - து. காலங்கண்டு வேறுபட்டாளெனக் கவன்ற தோழிக்கு, "காலத்து வந்திலரென்று வேறுபட்டேனல்லேன்; அவரைப் புறத்தார் கொடியரென்று கூறக்கேட்டு வேறுபட்டேன்" என்று தலைமகள் சொல்லியது.

பெருங்கண்ணன்.

(ப - ரை.) தோழி—, வளர் பிறை போல - பூருவபக்கத்து வளர்கின்ற பிறையைப் போல, வழிவழி பெருகி - மேலும் மேலும் பெருக்கத்தை யடைந்து, இறை வளை நெகிழ்த்த எவ்வம் நோயொடு - தோட்சந்தில் அணிந்த வளையை நெகிழச் செய்த துன்பத்தைத்தரும் காம நோயினால், குழை பிசைந் தனையேம் ஆகி - தளிரைக் கசக்கினாற் போன்ற நிலையை உடையேமாகி, சாஅய் - மெலிந்து, உழையர் அன்மையின் - அந் நோயைத் தீர்ப்பதற்குரிய தலைவர் பக்கத்திலுள்ளார் அல்லாமையினால், உழப்பது அன்றியும் - நாம் துன்பப் படுவதல்லாமலும், மழையும் - இம்மழையும், மான்று பட்டன்று - மயங்கிப் பெய்தது; பட்ட மாரி படாஅ கண்ணும் - அங்ஙனம் பெய்த மழை பெய்

(பி - ம்.) * வழிவழிபெருகி. † கண்ணம்.

வதற்கு முன்னரே, இ அழுங்கல் ஊர் - இந்தக் கலக்கத்தையுடைய ஊரிலுள்ளார், அவர் திறத்து இரங்கும் நம்மினும் - அவர்பொருட்டு வருந்துகின்ற நம்மைக்காட்டிலும் மிக, நம் திறத்து இரங்கும் - நம் மாட்டு இரங்குவர்.

(முடிபு.) தோழி, அணையேமாகிச் சாஅய் உழப்பதன்றியும், மழையும் மான்றுபட்டன்று; படாஅக் கண்ணும் ஊர் இரங்கும்.

(கருத்து.) பிறர் தலைவரைக் கொடியரென்பது நினைந்து வேறு பட்டேன்.

(வி - ரை.) தோள்வளை நெகிழ்தல் மெலிவின் மிகுதியைப் புலப்படுத்தலின் இறை, தோட் சந்தாயிற்று; முன்கையுமாம். நெகிழ்த்த நோய், எவ்வநோ யென்க. தலைவிக்குத் தளிரை உவமை கூறுதல் மரபு. சாஅய் - மேனி நலம் மெலிந்து. மான்றுபடல் - மயங்கி வீழ்தல் (அகநா. ருகூ: 13.) காலமல்லாத காலத்து மழை யென்பது தலைவியின் நினைவு.

கார்ப்பருவம் வந்தவிடத்து, "மழை பெய்தது; தலைவர் வந்திலர்; இவள் வேறுபட்டாள்; இவளை இந்நிலையில் இருக்கச்செய்த அவர் கொடியர்" என்று தோழி கவன்றுளாக அதனை யறிந்த தலைவி இது கூறினாள்.

"அவரைப் பிரிந்து நாம் துன்பப் படுகின்றோம்; இதன்மேலும் மழையானது மயங்கிப் பருவமல்லாத காலத்துப் பெய்தது; அது பெய் வதற்கு முன்பே இவ்வூரினர் நமக்கு இரங்குவார்போல அவரைக் கொடியரென்கின்றனர். நம்பால் இவர்கட்கு நம்மினும் உள்ள ஆதரவு தான் என்னே!" என்றாள் தலைவி.

அழுங்கல் - ஆரவாரமுமாம். ஊரென்று கூறினளாயினும் கருதியது தோழியையே என்க (ஐங். 154, உரை.)

இதனால் தோழி கவலுதல் வீணென்பதை அறிவுறுத்தினாள்.

இச்செய்யுட் பொருளோடு இந்நூல் உஉச - ஆம் செய்யுள் ஒரு வாறு ஒப்புமையுடையது.

## ஒப்புமைப் பகுதி

1. வளர்பிறைபோலப் பெருகுதல்: "குடமுதற் றோன்றிய தொன்றுதொழு பிறையின், வழிவழிச் சிறக்கநின் வலம்படு கொற்றம்" (மதுரைக். 193-4); "ஆனா ணிறைமதி யலர்தரு பக்கம்போல், நாளி

ளுளி னளிவரைச் சிலம்புதொட்டு, நிலவுப் பரந்தாங்கு நீர்நிலம் பரப்பி" (பரி. கக : 31-3) ; "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும்" (நாலடி. 125) ; "நிறைநீர நீரவர் கேண்மை பிறை மதிப், பின்னீர பேதையார் நட்பு" (குறள், 782) ; "சுடர்ப்பிறை போலப், பெருக்கம் வேண்டி" (பெருங். உ. 6 : 35-6.)

2. வளை நெகிழ்த்த நோய் : "தோள், இலங்குவளை நெகிழ்த்த கலங்களுர்" (நற். உகச : 9-10.)

வளை நெகிழ்தல் : குறுந். கக : 1, ஒப்பு ; நற். உகூ : 7 ; ஐங். உ0 : 5, ககூ௭ : 4.

3. தலைவியின் மேனிக்குத் தளிர் உவமை : குறுந். கூஉ : 4-5, ஒப்பு, கூகூக : 6-7, கூஅகூ : 5 ; ஐங். உககூ : 5-6.

4. உழையர் : நற். கூகஉ : 6.

6. பட்ட மாரி : நற். உ : 9 ; புறநா. அஉ : 2.

8. அழுங்கலூர் : குறுந். கஉ : 6, ஒப்பு. (உஅகூ)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில், "நீ ஆற்றியிருத்தல் வேண்டு மென்ற தோழிக்கு முன்னிலைப் புறமொழியாக, "காமத்தின் இயல் பறியாத வன்கண்ணர், அதனைத் தாங்கி ஆற்றவேண்டுமென்கின்ற னர்" என்று தலைவி கூறியது.]

உகூ0. காமந் தாங்குமதி யென்போர் தாமஃ
* தறியலர் கொல்லோ வனைமது கையர்கொல்
யாமெங் காதலர்க் காணே மாயிற்
செறிதுனி பெருகிய நெஞ்சமொடு பெருநீர்க்
கல்பொரு சிறுநுரை போல
மெல்ல மெல்ல வில்லா குதுமே.

எ - து. வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் அழிவுற்றுச் சொல்லியது.

[அழிவுற்று - நெஞ்சழிந்து ; வருந்தி.]

கல்பொரு சிறுநுரையார்.

---

(பி - ம்.) * தறியுநர்.

(ப - ரை.) காமம் தாங்குமதி என்போர் - காமநோயைப் பொறுத்து ஆற்றுவாயாக என்று வற்புறுத்துவோர், அஃது அறிடலர் கொல் - அக்காமத்தின் தன்மையை அறிந்திலரோ? அனை மதுகையர் கொல் - அத்துணை வன்மையுடையவரோ? யாம்—, எம் காதலர் காணேம் ஆயின் - எம் தலைவரைக்காணேமானல், செறிதுனி பெருகிய நெஞ்சமொடு - செறிந்த துயர்மிக்க நெஞ்சத்தோடு, பெரு நீர் - மிக்கவெள்ளத்தில், கல் பொரு சிறு நுரை போல - பாறையின்மேல் மோதும் சிறிய நுரையைப்போல, மெல்ல மெல்ல இல் ஆகுதும் - மெல்ல மெல்ல இல்லையாவேம்.

(முடிபு.) காமம் தாங்குமதி என்போர், அஃது அறியலர் கொல்? மதுகையர்கொல்? யாம் காணேமாயின் இல்லாகுதும்.

(கருத்து.) தலைவரது பிரிவு நீட்டிப்பின் என் உயிர் நீங்கும்.

(வி- ரை.) "காமத்தைத்தாங்கி ஆற்றியிருத்தல் வேண்டுமென்பார் அக்காமத்தின் இயல்பை அறியலர் போலும்! அதனை இரக்கமுள்ள நெஞ்சினர் அறிதல் கூடும். அவர் வன்னெஞ்சராதலின் அறிந்திலர். தலைவர் பிரியுமிடத்து ஆற்றேமாதலுக்கே இங்ஙனம் கூறுகின்றனர். அவர் பிரிவு நீட்டிப்பின் மெல்ல மெல்ல உயிரை இழப்பேம்; அதன் தன்மை இவரால் அறிவரிதேயாகும்" என்று தலைவி கூறினள். அனைமதுகையர் கொல் - காமத்தைத் தாங்கும் அத்துணை வன்மையுடையரோ வெனலும் பொருந்தும்.

இது படர்க்கையிற் கூறினும் தோழியைக் கருதியதே யாதலின் முன்னிலைப் புறமொழி.

கற்பொரு சிறுநுரையெனற்பாலது எதுகை நோக்கிக் கல் பொரு சிறுநுரையென நின்றது. நுரை கல்லில் மோதுந்தோறும் சிறிது சிறிதாகக் கரைதலைப்போலத் தலைவர்பிரிவை எண்ணுந் தோறும் உயிர் தேய்ந்தொழியு மென்க. இவ்வுவமையின் சிறப்பினல் இச்செய்யுளியற்றிய நல்லிசைப்புலவர் 'கல் பொரு சிறு நுரையார்' என்னும் பெயர் பெற்றார்.

இல்லாகுதல்: "இல்லாகி" (குறள், 479.)

மெல்ல மெல்ல இல்லாகுதல், சாக்காடென்னும் மெய்ப்பாடு.

தாம், ஓ, ஏ: அசை நிலைகள்.

## மேற்கோளாட்சி

மூ. அறமும் பொருளும் செய்வதனுற் புறத்து உறைதலால் தலைவனைத் தலைவி நீங்குங்காலம் பெரிதாகலின் அதற்குச் சுழற்சி மிக்க வேட்கைமிகுதி நிகழ்ந்தவிடத்துத் தெருட்டும் தோழிக்குத் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. காமந் தாங்குதல்: குறுந். உசுக : 1.

1-2. "யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார், யாம்பட்ட தாம் படா வாறு" (குறள், 1140.)

காமம் தாங்க மாட்டாமை: "பொறைநில்லா நோய்" (கலி. ங: 4.)

6. இல்லாததும்: "நாமில மாகுத லறிதும்" (நற். உகக: 6.)

5-6. மெல்ல மெல்ல அழிதல்: "ஒளிறேந்து மருப்பிற் களிறு மாறு பற்றிய, தேய்புரிப் பழங்கயிறு போல, வீவது கொல்லென் வருந் திய வுடம்பே" (நற். உஅச: 9-11.)

மூ. குறுந். கூ௨. (உகூ0)

## தலைவன் கூற்று

[தலைவன் பாங்கனுக்குத் தலைவி இவ்விடத்தினள், இவ்வியல் பினளென்று கூறியது.]

உகூக. சுடுபுன மருங்கிற் கலித்த வேனற்
படுகிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே
இசையி * னிசையா வின்பா ணித்தே
கிளியவள் விளியென † வெழலொல் லாவே
அதுபுலந் தழுத கண்ணே சாரற்
குண்டுநீர்ப் பைஞ்சுனைப் பூத்த குவளை
வண்டுபயில் ‡ பல்லிதழ் கலைஇத்
தண்டுளிக் கேற்ற மலர்போன் றனவே.

எ-து. பாங்கற்கு உரைத்தது.

கபிலர்.

---

(பி-ம்.) * னிசையாய். † விழலொல்லாவே. ‡ பல்லிதழ்க்கலைஇய.

(ப - ரை.) தோழ, சுடு புனம் மருங்கில் - மரங்களைச் சுட்ட கொல்லையில், கலித்த ஏனல் - தழைத்த தினையினிடத்தே, படுகிளி கடியும் - வீழ்கின்ற கிளிகளை ஓட்டுகின்ற, கொடிச்சி கை குளிர் - தலைவியினது கையின்கண் உள்ள குளிரென்னும் கருவியானது, இசையின் இசையா - இசையோடு பொருந்தி, இன்பாணித்து - இனிய தாளத்தைபுடையது; அவள் விளி என - அக்குளிரின் ஓசையை அத்தலைவியின் பாட்டென்று கருதி, கிளி - கிளிகள், எழல் ஒல்லா - தாம் படிந்த தினையினின்றும் எழுதலைப்பொருந்தா; அது புலந்து அழுதகண் - அதனைப் புலந்து அழுத அவளுடைய கண்கள், சாரல் - மலைப்பக்கத்திலேயுள்ள, குண்டு நீர் பசு சுனை பூத்த குவளை - ஆழமாகிய நீரையுடைய பசிய சுனையினிடத்தே பூத்த குவளையினது, வண்டு பயில் - வண்டுகள் பழகுகின்ற, பல் இதழ் கலை இ - பல இதழ்கள் கலந்து, தண் துளிக்கு ஏற்ற - தண்ணிய மழைத்துளியை ஏற்றுக் கொண்ட, மலர் போன்றன - மலர்களைப் போன்றன.

(முடிபு.) கொடிச்சியின் கைக்குளிர் இன்பாணித்து; கிளி எழலொல்லா; கண் மலர் போன்றன.

(கருத்து.) தலைவி தினைப்புனத்தில் காவல் செய்து கொண்டிருக்கின்றாள்.

(வி - ரை.) குளிர் - கிளி கடிகருவிகளுள் ஒன்று; தினைப் புனத்திற் கிளிகளை ஓட்டுவார் மூங்கிலை வீணைபோற் கட்டித் தெறிக்குங் கருவியென்பர் தஞ்சைவாணன் கோவை யுரையாசிரியர். இசையின் இசையாவென்ற பாடத்திற்கு இசைகளுக்குட் சிறந்த இசையாகியெனப் பொருள் கொள்க.

தலைவியினுடைய பாட்டென்று குளிரின் முழக்கத்தை நினைந்த கிளிகள், அவ்வொலியால் அச்சமுற்று நீங்காமல் அதில்மயங்கித் தினைப் பயிரில் விழுந்தன. தலைவியின் பாட்டில் மயங்கி அதை விரும்பியவையாதலின், அவள் பாடிக்கொண்டே ஒலிப்பிக்கும் குளிரைத் தனித்து ஒலிப்பிக்குங் காலத்திலும் அவள் பாட்டென மயங்கின. தலைவியின் பாட்டைக் கேட்டுக் கிளிகள் தினைப்புனத்திலே எழாமல் இருத்தலை,

"சாந்த மெறிந்துழுத சாரற் சிறுதினைச்
சாந்த மெறிந்த விதண்மிசைச் - சாந்தம்
கமழக் கிளிகடியுங் கார்மயி லன்னாள்
இமிழக் கிளியெழா வார்த்து" (திணைமாலை. 3)

என்னும் செய்யுளாலும் அறியலாகும்.

கிளி எழாமல் வீழ்வதனால், தான் செய்யும் தினைக்காவல் பய னின்றி யொழிந்ததென்று தலைவி அழுதாள். குவளைமலர்போன்ற கண்கள் அழுதமையால் நீர்த்துளிகளோடு கூடித் துளிக்கேற்ற மலர் போன்றன. துளிக்கு: உருபுமயக்கம்.

## ஒப்புமைப் பகுதி

1. மரங்களைச்சுட்ட இடத்தில் தினையை விளைத்தல்: * குறுந். ககூஅ: 1-2, ஒப்பு.

2. கொடிச்சி: குறுந். உஎஉ: 8, ஒப்பு.

1-2. ஏனலில் தலைவி கிளிகடிதல்: * குறுந். கசுஅ: 1-5.

குளிரால் கிளிகடிதல்: "ஏனல், உண்கிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே" (குறுந். ௩௬0: 5-6); * "குளிரும் பிறவும், கிளிகடி மரபின ஊழூழ் வாங்கி" (குறிஞ்சிப். 43-4); "சிறுகிளி கடிதல் பிறக்கியா வண் தோ, குளிர்படு கையள் கொடிச்சி" (நற். ௩0சு: 2-3.)

6. தண்டு நீர்ப் பைஞ்சுனைப் பூத்த குவளை: குறுந். ௫௯: 2-3 ஒப்பு.

5-8. நற். ௩எக: 5 - 9. (உகூக)

---

## தோழி கூற்று

[தலைவன் இரவுக்குறிக்கண் வந்து சிறைப்புறத்தானாக, அதனை யறிந்த தோழி தலைவிக்குக் கூறுவாளாய், "நம்தாய், ஒருநாள் தலைவன் வந்ததை அறிந்தாள்; அறிந்த அன்றுமுதல் முன்னையினும் மிகப் பாதுகாத்து வருகின்றாள்" என்று கூறி விரைவில் வரைந்து கோடலே நன்றென்பதைப் புலப்படுத்தியது.]

உகூஉ. மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் † றப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை
பொன்செய் பாவை ‡ கொடுப்பவுங் கொள்
பெண்கொலை புரிந்த நன்னன் போல [ளான்
வரையா நிரையத்துச் ¶ செலீஇயரோ வன்னை

---

* கபிலர் பாட்டு. (பி - ம்.) † றப்பிற்கு. ‡ கொடுப்பினுங். ¶ செலீஇயளோ.

ஒருநாள், நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே.

எ - து. தோழி, இரவுக்குறிக்கட் சிறைப்புறமாகக் காப்பு மிகுதி சொல்லியது.

பரணர்.

(ப - ரை.) *அன்னை - தாய், ஒருநாள் - ஒருநாளில், நகை முகம் விருந்தினன் வந்தென - நகுதலையுடைய முகத்தைக் கொண்ட விருந்தினனாகித் தலைவன் வந்தானாக, பகைமுகம் ஊரின் - பகைவர் மாறுபடும் போர்க்களத்தின்கண் உள்ள ஊரினரைப்போல, துஞ்சல் இலள் - பலநாளும் துயில் செய்தல் இலள்; மண்ணிய சென்ற ஒள் நுதல் அரிவை-நீராடும்பொருட்டுச் சென்ற ஒள்ளிய நெற்றியை யுடைய பெண், புனல் தரு பசு காய் தின்ற தன் தப்பற்கு - அந்நீர் கொணர்ந்த பசுங்காயைத் தின்றதாகிய குற்றத்திற்காக, ஒன்பதிற்று ஒன்பது களிற்றொடு - எண்பத்தொரு ஆண் யானைக ளோடு, அவள் நிறை பொன் செய் பாவை கொடுப்பவும் கொள் ளான் - அவளது நிறையையுடைய பொன்னாற் செய்த பாவையைக் கொடுப்பவும் கொள்வானாகி, பெண் கொலை புரிந்த நன்னன் போல - அப்பெண்ணைக் கொலை செய்த நன்னனைப்போல, வரையா நிரையத்து செலீஇயர் - நீக்குதல் இல்லாத நரகத்தின்கண் சென்று துன்புறுவா ளாக.*

(முடிபு.) *அன்னை, ஒரு நாள் விருந்தினன் வந்தெனத் துஞ்சல் இலள் ; நிரையத்துச் செலீஇயர்.*

(கருத்து.) *அன்னையின் காப்பு இப்பொழுது மிக்கது.*

(வி - ரை.) *நன்னன் என்னும் சிற்றரசனொருவன் ஆற்றங் கரையிலிருந்த தன் தோட்டத்தில் அரிதின் வளர்த்த மாமரத்தின் காயொன்று அவ்வாற்றிலே வீழ்ந்து மிதந்துவர, அதனை ஆற்றிற்கு நீராடச் சென்ற பெண்ணொருத்தி எடுத்துத் தின்றாள் ; அதுகண்ட காவலர் அவளை நன்னன் முன் கொண்டு நிறுத்த, அவன் அவளுக்குக் கொலைத்தண்டம் விதித்தான் ; அதனையறிந்த அவள் தந்தை அவளது நிறைக்கேற்ற பொன்னாற்செய்த பாவையையும், எண்பத்தொரு களிற்றையும் தண்டமாக இறுப்பதாகக் கூறவும் நன்னன் அதற்கு உடம்படாமற் கொலை புரிவித்தான்.*

அரசனைப் பிழைத்தவர் தம் நிறையுள்ள பொன்னாற் பாவை செய்து தண்டமாக இறுத்தல் மரபு ;

" ......ஆடுவி ருளிரெனின்
ஆடகப் பொன்னினு மளவி னியன்ற
பாவை யாகும் படுமுறை" (பெருங். க. 40 : 371-3.)

தலைவன் விருந்தினர்களோடு ஒருவனாகப் புக்கபோது தாய் அவனை அறிந்து கொண்டாள்; இங்ஙனம் புகுவதுண்டென்பது, இந்நூல் ககஅ-ஆம் செய்யுளாலும் பெறப்பட்டது.

## மேற்கோளாட்சி

2. தன்மை முன்னிலைகட்குரிய தரலென்பது படர்க்கைக்கண் வந்தது (தொல். கிளவி. 30, இளம், கல், 29, ந ; நன். 380, மயிலை ; இ. வி. 301.)

5-6. நன்னன் பெண்கொலைசெய்த குற்றத்தால் அவனது குலத்திற் பிறந்தார், சான்றோரால் வரையப்படுதற்குக் காரணமாவர் (புறநா. கடுக, உரை.)

மு. புகாக்காலத்துத் தலைமைமிக்க தலைவன் புக்கதற்கு விருந்தேலாது, செவிலி இரவும் துயிலாதாளைத் தலைவி முனிந்து கூறியது (தொல். களவு. 16, ந.) ; தாய் துஞ்சாமை (நம்பி. 161 ; இ. வி. 519.)

## ஒப்புமைப் பகுதி

3. தப்பல் : குறுந். எக : 7, ஒப்பு.

4. பொன்செய் பாவை கொடுத்தல் : அகநா. கஉஎ : 8.

8. பகைமுக ஊர் துஞ்சாமை : குறுந். கக : 7-8, ஒப்பு. (உகூஉ)

---

## தலைவி கூற்று

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்குத் தூதாக வந்த தோழியை நோக்கி, "தலைவன் ஈண்டுறைவது தெரியின் பரத்தை இங்கு வந்து அவனைக் கொண்டு செல்வள்" என்று கூறியது.]

உ௬௩. கள்ளிற் கேளி * ராத்திரை யுள்ளூர்ப்
† பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்
ஓங்கிரும் பெண்ணை நுங்கொடு பெயரும்
ஆதி யருமன் மூதூ ரன்ன
‡ அயவெள் ளாம்ப லம்பகை நெறித்தழை
தித்திக் குறங்கி னூழ்மா றலைப்ப
¶ வருமே சேயிழை யந்திற்
$ கொழுநற் காணிய வளியேன் யானே.

எ - து. பரத்தையிற் பிரிந்து வந்த கிழவற்கு வாயிலாகப் புக்க தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

கள்ளிலாத்திரையன்.

(ப - ரை.) தோழி, கள்ளில் கேளிர் ஆத்திரை - கள்ளைக் குடிக்கும் விருப்பத்தை யுடையவர்களது பயணம், உள் ஊர் பாளை தந்த பஞ்சி அம் குறு காய் - ஊரினகத்துள்ள பாளையினால் ஈனப்பட்ட நாரையுடைய குறிய காய்களைக் கொண்ட, ஓங்கு இரு பெண்ணை நுங்கொடு பெயரும் - உயர்ந்த கரிய பனையினது நுங்கைக் கைக்கொண்டு மீள்வதற்கு இடமாகிய, ஆதி அருமன் மூது ஊர் அன்ன - ஆதி அருமனுக்குரிய பழைய ஊரைப்போன்ற, அயம் வெள் ஆம்பல் அம் பகை நெறி தழை - நீரில் வளர்ந்த வெள்ளாம்பலினது அழகிய மாறுபட்ட முழுநெறியையுடைய தழையுடை, தித்தி குறங்கின் ஊழ் மாறு அலைப்ப - தேமலையுடைய துடையின்கண் முறையே மாறி மாறி அசைய, செ இழை - பொன்னாற் செய்த செவ்விய அணிகலன்களையுடைய பரத்தை, அந்தில் - அவ்விடத்திலே, கொழுநன் காணிய - தலைவனைக் காணும்பொருட்டு, வரும் - வருவாள்; யான் அளியேன் - நான் இரங்கத்தக்கேன்.

(முடிபு.) மூதூரன்ன சேயிழை, கொழுநற்காணிய, அலைப்ப வரும்; யான் அளியேன்.

(கருத்து.) தலைவனை மீட்டும் பரத்தை கைக்கொள்வாள்.

(வி - ரை.) கள்ளில் - கள்; கட்கடையுமாம். ஆத்திரை - யாத்திரை; "ஆத்திரை முன்னி" (பெருங். க. 36 : 221.)

(பி - ம்.) * ராத்திய. † பள்ளை. ‡ வயல்வெள். ¶ வருமோ. $ கொழுநர்க்.

பஞ்சியென்றது நுங்கின் புறத்தேயுள்ள நாரை; பஞ்சுடையுமாம். குறுங்காய், பெண்ணைக்கு அடை.

அருமனது மூதூரை நக்கீரர்,

"கொடுங்கட் காக்கைக் கூர்வாய்ப் பேடை
நடுங்குசிறைப் பிள்ளை தழீஇக் கிளைபயிர்ந்து
கருங்கட் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய குறுங்காற்
கூழுடை நன்மனை குழுவின விருக்கும்
மூதி லருமன் பேரிசைச் சிறுகுடி" (நற். ௩௬௭ : 1-6)

என்று சிறப்பிப்பர்.

பனைமரத்திலுள்ள கள்ளையுண்ணச் சென்றோர், அதனை யுண்ணுதலோடமையாது நுங்கைக் கைக்கொண்டு அப்பனைக்கு ஊறுபுரிந்தாற் போலத் தலைவனைக் காண வருபவள் அவனைக் காண்பதோடமையாமல் அவனைக் கைக்கொண்டு தலைவியை இழிவுபடுத்திச் செல்வாளென்பது உவமையாற் பெறப்படும் கருத்து.

இது வாயில் மறுத்தது.

கள்ளுண்பாரது செலவைக் கள்ளிலாத்திரை யெனக்கூறிய இதனால் இச்செய்யுளை யியற்றிய புலவர் கள்ளிலாத்திரையன் என்னும் பெயர் பெற்றார் போலும்.

## மேற்கோளாட்சி

7-8. அந்திலென்னும் இடைச்சொல் இடஞ்சுட்டி வந்தது (தொல். இடை. 19, இளம், சே, தெய்வச், ந; நன். 436, மயிலை, 437, சங். வி.)

## ஒப்புமைப் பகுதி

1. ஆத்திரை: பெருங். ௧. 36: 238, 255, 38: 1, 139, ௨. 9: 251, 11: 75, 15: 9, 37, ௩. 1: 105.

1-3. பனங்கள்: "பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்" (பட். 89); "அரியற் பெண்டி ரல்கிற் கொண்ட, பகுவாய்ப்பாளைக் குவிகுலைச் சுரந்த, அரிநிறக் கலுழி யார மாந்தி" (அகநா. ௧௫௭: 1-3.)

உள்ளூர்ப் பனை: "நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க, படுபனை யன்னர்" (நாலடி. 96.)

5. அய ஆம்பல்: "குண்டுநீ ராம்பல்" (குறுந். கஉஉ : 2.)

பகைநெறித் தழை : "அம்பகை நெறித்தழை யணிபெறத் தைஇ" (நற். கூகூ : 8) ; "நெய்தலம் பகைத்தழை" (ஐங். கஅஎ : 3) ;

ஆம்பற் பூவாலான தழையுடை : "அளிய தாமே சிறுவெள் ளாம்பல், இளைய மாகத் தழையா யினவே" (புறநா. உசஅ : 1-2) ; "ஆம்பலணித்தழை" (திணை. ஐம். 40.)

6. தீந்திக் துறந்த : அகநா. ௬அ௰ : 10. (உகூ௩.)

---

## தோழி கூற்று

[பகற்குறிக்கண் தலைவன் சிறைப்புறமாக நிற்ப, தோழி தலைவிக்குக் கூறுவாளாகி, "பலரோடு நாம் விளையாடும்போது தலைவன் வந்து அளவளாவிச் சென்றால் அலருண்டாகும்; அதனால் நாம் இன்பத்தையே பெறுவோம். எப்பொழுதும் அருகில் தலைவன் இருத்தலின் தாய் அறிந்தாள்; இனி இல்லிற்கு அழைத்துச் சென்று பாதுகாப்பாள்; இதற்குத் தலைவனே காரணம் ஆயினன்" என்று கூறியது.]

உகூச. கடலுட னாடியுங் கான லல்கியும்
தொடலை யாயமொடு தழூஉவணி யயர்ந்தும்
நொதுமலர் போலக் கதுமென வந்து
முயங்கினன் செலினே யலர்ந்தன்று * மன்னே
† தித்தி பரந்த பைத்தக லல்குற்
றிருந்திழை துயல்வுக்கோட் டசைத்த ‡ பசுங்
தழையினு முழையிற் போகான் [குழைத்
தான்றந் தனன்யாய் காத்தோம் பல்லே.

எ - து. பகற்குறிக்கண் தலைமகன் வந்தவிடத்துத் தோழி செறிப்பறிவுறீஇயது.

அஞ்சியாந்தை.

(ப - ரை.) கடல் உடன் ஆடியும் - கடலினிடத்தே ஒருங்கே நீர் விளையாட்டுப் புரிந்தும், கானல் அல்கியும் - கடற்கரைச் சோலையி

---

(பி - ம்.) * மனனே. † துத்திப் பாந்தட் பைத்தகல். ‡ பசுங்கழைத்.

ளிடத்தே தங்கியும், தொடலை ஆயமொடு - மாலையையுடைய மகளிர் கூட்டத்தோடு, தழுவணி அயர்ந்தும் - குரவை கோத்து ஆடியும், நொதுமலர்போல - அயலாரைப்போல, கதுமென வந்து - விரைவாகவந்து, முயங்கினன் செலின்-தலைவன் தழுவிச் செல்வானாயின், அலர்ந்தன்று மன் - அலருண்டாயிற்று; அஃது இப்பொழுது கழிந்தது. இப்பொழுது அங்ஙனம் செய்யாமல், தித்தி பரந்த - தேமல் படர்ந்த, பைத்து அகல் - விரிந்து அகன்ற, அல்குல் - அல்குலினது, திருந்து இழை துயல்வு கோடு அசைத்த - திருத்தமுறச் செய்த அணிகலன்கள் அசைதலையுடைய பக்கத்தின்கண் கட்டிய, பசு குழை தழையினும் - பசிய தளிராற் செய்த தழையைக் காட்டினும், உழையின் போகான் - மிக அணிமையிலிருந்து போகானாகி, அக்காரணத்தால், யாய் காத்து ஓம்பல் - தாய் நம்மை இற்செறித்துக் காவல் செய்தலை, தான் தந்தனன் - தானே உண்டாக்கினன்.

(முடிபு.) ஆடியும் அல்கியும் அயர்ந்தும் முயங்கினன் செலின், அலர்ந்தன்று மன்; உழையிற் போகான், தான் ஓம்பலைத் தந்தனன்.

(கருத்து.) தலைவனையறிந்த தாய் நின்னை இற்செறிக்கக் கருதினாள்.

(வி - ரை.) இது சிறைப்புறம். பல மகளிரொடு கூடிக் கடலில் நீராடியும், பொழிலில் விளையாடியும், குரவையாடியும் விளையாடும் காலத்தில் அயலானைப் போலவந்தால் அலருண்டாகும்; அவ்வலர் என் ஆருயிர் நிற்றற் குரிய துணையாகும் (குறள், 1141) என்றாள். அலர்ந்தன்று மனனேயென்னும் பாடத்திற்கு மனம் மகிழ்ச்சியால் மலர்ந்ததென்று பொருள் கொள்க. இழை - இங்கே மேகலை. கோடு - பக்கம்.

## மேற்கோளாட்சி

மு. பகற்குறிக்கண் சிறைப்புறமாகச் செறிப்பறிவுறீஇயது (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. **கடலாடுதலும் கானலில் விளையாடுதலும் அப்போது தலைவன் வருதலும்:** "கடலாடு மகளிர் கான லிழைத்த, சிறுமனைப் புணர்ந்த நட்பே" (குறுந். ௩௨௬ : 2-3.)

5. தித்தி பரந்த அல்குல்: குறுந். உஎ : 5, ஒப்பு.

5-6. அல்குற்கோடு: "கோடேந் தல்குல்" (நற். உ அஉ : 2.)

6-7. தழையுடுத்தல்: குறுந். கஉரு : 3, ஒப்பு. (உகூச)

---

## தோழி கூற்று

[பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன் தோழியை வாயில்வேண்டிய பொழுது அவள், "நீ பரத்தையரோடிருந்தமைதோன்ற வந்தாய்; நின் வளத்திற்குக் காரணமான தலைவியை நீத்து உறைந்தாய்" என்று கூறியது.]

உகூரு. உடுத்துந் தொடுத்தும் பூண்டுஞ் செரீஇயும்
தழையணிப் பொலிந்த வாயமொடு துவன்றி
விழவொடு * வருதி நீயே யிஃதோ
ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கை
பெருநலக் குறுமகள் வந்தென
இனிவிழ வாயிற் றென்னுமிவ் வூரே.

எ - து. வாயில் வேண்டிச்சென்ற கிழவற்குத் தோழி உரைத்தது.

தூங்க லோரி.

(ப - ரை.) உடுத்தும் - உடையாக உடுத்துக்கொண்டும், தொடுத்தும் - மாலையாகத் தொடுத்தணிந்தும், பூண்டும் - குழை முதலிய அணிகலன்களாக அணிந்தும், செரீஇயும் - கூந்தலின்கண்ணே செருகியும், தழை அணி பொலிந்த ஆயமொடு - தழையலங்காரத்தினுற் பொலிவுபெற்ற பரத்தையர் கூட்டத்தோடு, துவன்றி - நெருங்கி, நீ விழவொடு வருதி - நீ நீர்விழாவிற்குரிய அடையாளங்களோடு வாராநின்றாய்; இ ஊர் - இந்த ஊரிலுள்ளார், இஃது ஓர் ஆன் வல்சி சீர்இல் வாழ்க்கை - ஒரு பசுவினுல்வரும் ஊதியத்தைக் கொண்டு உண்ணும் உணவையுடைய செல்வச்சிறப்பில்லாத இவ் வாழ்க்கை, பெரு நலம் குறு மகள் வந்தென - மிக்க அழகையுடைய இளைய தலைவி இவனுக்கு வாழ்க்கைப்பட்டுப் புக்கனளாக, இனி -

---

(பி - ம்) * நின்றாய்.

இப்பொழுது, விழவு ஆயிற்று - விழாவை உடையதாயிற்று, என
னும் - என்று சொல்வர்.

(முடிபு.) துவன்றி நீ வருதி; இவ்வூர், 'ஓரான் வல்சி
வாழ்க்கை, குறுமகள் வந்தென விழவாயிற்று' என்னும்.

(கருத்து.) நின் செல்வத்துக்குக் காரணமாகிய தலைவியை நீ
துறைந்தமையால் ஊரினர் பழிகூறினர்.

(வி - ரை.) தழையை உடுத்துதலாவது, மலரோடு இலை
யிட்டுத் தொடுத்துத் தழையென்னும் ஆடையாக உடுத்துவது
தொடுப்பதாவது, மலரோடு கட்டிப் படலைமாலையாக அணிவது
பூண்பதாவது காதிற்குழையாகப் பூணுதல்; செருகுதல் - தலையில்
செருகுதல்.

"நீ நீர்விழாவை யயர்ந்து வருகின்றாய். தலைவி வருதற்கு முன்
இவ்விழாவுக்குரிய வளம் நின்பால் இல்லை. அவள் வந்த பின்னரே
செல்வம் பெற்றாயென்று ஊரினர் கூறினர். இப்படியிருப்பவும்
அவளைப் புறக்கணித்தாய்" என்று தோழி தலைவனை இடித்
துரைத்து வாயில் மறுத்தாள்.

ஓராவையுடைய வீடு வறியதென்ற கருத்து,

"சிறப்புஞ் சீரு மின்றிச் சீறூர்
நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
ஓரா யாத்த வொருதூண் முன்றில்
ஏதில் வறுமனை" (அகநா. ௩௬௯ : 22-5

என்பதிலும் அமைந்துள்ளது.

இஃதோ வாழ்க்கை யென்றது இவ்வாழ்க்கை யென்னும்
பொருட்டாய் நின்றது; 'இஃதோ செல்வன் - இந்தச் செல்வன்'
(அகநா. ௨௬ : 19-20, உரை.) வல்சி வாழ்க்கை, சீரில் வாழ்க்கை
யென்க.

தலைவியின் சிறப்பை இங்கே கூறியது, "ஏர் பிடித்தவன் என்ன
செய்வான்; பானை பிடித்தவள் பாக்கியம்" என்ற பழமொழியை
நினைவுறுத்துகின்றது.

## மேற்கோளாட்சி

மு. கழறித் தலைவனை எல்லையின் கண்ணே நிறுத்துதல் அறிவர்க்
குரியது; அங்ஙனம் கழறியது இது (தொல். கற்பு. 14, இளம்.); நல் குரம்

சிறப்பித்தல் காரணமாக வந்தது ; 'இதனுள் ஓரான் வல்சிச்சீரில் வாழ்க்கையெனத் தலைமகன் செல்வக்குறைபாடு கூறி, பெருநலக் குறுமகள் வந்தெனை விழவாயிற் றென்னுமிவ் வூரென்றமையான் நல்குரவு பற்றித் தலைமகளைச் சிறப்பிக்க வந்தது' (தொ. பொருள். 49, நச்.); உணர்ப்பு வயின் வாராது ஊடிய தலைவிமாட்டு ஊடினை தலைவனை அறிவர் கழறியது (தொ. கற்பு. 11, ந.) ; தோழியும் அறிவரும் பரத்தையிற்பிரி வால் தலைவர்க்கும் தலைவியர்க்கும் தோன்றிய வருத்தமிகுதியைத் தீர்க்கக் கருதி, அவரது இல்வாழ்க்கைநிகழ்ச்சிக் கண்ணே தமக்கு வருத்தந் தோன்றிற்றாகக் கூறியது ; 'இதனுள் முன்னர் நிகழ்த்திய வாழ்க்கை இவள் வந்தாளாகப் புறத்து விளையாடும் விழவுளதாயிற் றென்று இவ்வூர் கூறு நிற்கும் செல்வம், இவளை நெகிழ்ந்தாற் பழைய தன்மையா மென்று அறிவர் இரங்கிக் கூறியவாறுகாண்க' (தொ. பொருள். 32, நச்.)

## ஒப்புமைப் பகுதி

1-2. தழையணியாயம் : குறுந். ௧௨௬ : 3, ஒப்பு.

5. குறுமகள் : குறுந். அ௯ : 7, ஒப்பு. (உ௯௫)

---

## தலைவி கூற்று

[பகற்குறிக்கண் இடையீடின்றித் தலைவனோடு அளவளாவும் நிலைபெறாத தலைவி வருந்தி, தலைவன் சிறைப்புறத்தானாக, தோழிக்குக் கூறுவாளாய், "நீ அவரைக் கழறுதலையொழி" என்று கூறும் வாயிலாகத் தன் நிலையைப் புலப்படுத்தியது.]

உ௯௬. அம்ம வாழி தோழி புன்னை
அலங்குசினை யிருந்த வஞ்சிறை நாரை
உறுகழிச் சிறுமீன் முனையிற் செறுவிற்
† கண்ணுறு நெய்தல் கதிரொடு நயக்கும்
தண்ணந் துறைவற் காணின் முன்னின்று
கடிய கழறலோம்புமதி தொடியோள்
இன்னள் ஆகத் துறத்தல்
‡ நும்மிற் றகுமோ வென்றனை துணிந்தே.

(பா - ம்.) * அறுகழிச். † கண்ணுர் செய்தல். ‡ நும்மிதிற்.

எ - து. காணும்போழுதிற் காணாப்போழுது பெரிதாகலான் ஆற்றாளாய தலைமகள், தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

[' இவ்வகை பகற்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகனைக் காணும் பொழுதிற் காணாப்பொழுது பெரிதாகலான் ஆற்றாளாய்' (இறை. 18, உரை.)]

பெரும்பாக்கன்.

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று கூறுவன் கேட்பாயாக; புன்னை அலங்கு சினை இருந்த அம் சிறை நாரை - புன்னையினது அசைந்த கிளையினிடத்திருந்த அழகிய சிறகையுடைய நாரை, உறுகழி சிறு மீன் முனையின்-மிக்க கழியிடத்துச் சிறுமீன் உணவை வெறுத்த தாயின், செறுவில் - வயலில் உள்ள, கள் நாறு நெய்தல் கதிரொடு நயக்கும் - கள் மணக்கின்ற நெய்தற்பூவை நெற்கதிரோடு விரும்புகின்ற, தண் அம் துறைவன் காணின் - தண்ணிய அழகிய துறைவனைக் கண்டால், முன் நின்று - அவன் முன்னே நின்று, தொடியோள் இன்னள் ஆக - வளையை யணிந்த தலைவி இத்தன்மை யுடையளாகும்படி, துறத்தல் - பிரிந்து செல்லுதல், நும்மின் தகுமோ - உமக்குத் தகுமோ, என்றனை துணிந்து கடிய கழறல் ஓம்புமதி - என்று துணிந்து கடுமையான சொற்களைக் கூறி இடித்துரைத்தலைப் பாதுகாப்பாயாக.

(முடிபு.) தோழி, துறைவற்காணின் முன்னின்று, " துறத்தல் தகுமோ?" என்றனை துணிந்து கழறல் ஓம்புமதி.

(கருத்து.) இங்ஙனம் பிரிந்து வருதல்பற்றித் தலைமகனை நீ கழறற்க.

(வி - ரை.) வாழி: அசைநிலை. தொடியோள் இன்னளாக - தொடியையணிந்த தலைவி அத்தொடியையிழந்து மெலிந்து வருந்தும் இந் நிலையினளாக.

தோழி கழறுமை வேண்டுதல் தலைவி கருத்தன்று; சிறைப் புறத்தானாகிய தலைவன் தன் துயர்நிலையையறிதல் வேண்டு மென்பதே கருத்து.

மேற்கோளாட்சி

5. தண்ணந்துறைவனென்றது விரிக்கும்வழி விரித்தது (தொல். எச்ச. 7, இளம், சே.)

## ஒப்புமைப் பகுதி

1. அம்ம வாழி தோழி : குறுந். எஎ : 1, ஒப்பு.

1-2. புன்னையில் நாரை இருத்தல் : குறுந். உ௬௬ : 4-5, ஒப்பு.

7. இன்னனள் : குறுந். கஎ௬ : 5, ஒப்பு.

7-8. குறுந். கஅ௰ : 3. (உகக)

---

## தோழி கூற்று

[தோழி, "இனித் தலைவனுடன் சென்று அவனை மணந்து வாழ்தலே செயற்குரியது" என்று தலைவிக்குக் கூறியது.]

உகஎ. அவ்விளிம் புரீஇய கொடுஞ்சிலை மறவர்
வைவார் வாளி விறற்பகை பேணார்
மாறுநின் * றிறந்த வாறுசெல் வம்பலர்
உவலிடு பதுக்கை யூரிற் றோன்றும்
கல்லுயர் நனந்தலை நல்ல கூறிப்
புணர்ந்துடன் போதல் பொருளென
உணர்ந்தேன் மன்றவவ ருணரா வூங்கே.

எ - து. தோழி வரைவு மலிந்தது.

காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணன்.

(ப - ரை.) அ விளிம்பு உரீஇய கொடு சிலை மறவர் - மேல் விளிம்பை உருவிய கொடிய வில்லையுடைய மறச்சாதியாருடைய, வை வார் வாளி விறல் பகை பேணார் - கூர்மையையுடைய நீண்ட அம்பினது வெற்றியையுடைய பகையினின்றும் தம்மைப் பாதுகாவாராகி, மாறு நின்று இறந்த ஆறு செல் வம்பலர்-எதிரே நின்று இறந்துபட்ட வழிப்போவார்மீது, உவல் இடு பதுக்கை - தழையை யிட்டுவைத்த குவியல்கள், ஊரின் தோன்றும் - ஊரைப்போலத் தோன்றுகின்ற, கல் உயர் நன தலை - மலைகள் ஓங்கியுயர்ந்த அகன்ற இடத்தில், நல்ல கூறி - ஆண்டுப்போய் வரைவேமென்பது முதலிய நல்ல சொற்களைக் கூறி, புணர்ந்து உடன் போதல் - தலைவனோடு சேர்ந்து போதலே,

---

(பி - ம்.) * றெதிர்ந்த.

பொருள் என - செய்யத்தக்க காரியமென்று, அவர் உணரா ஊங்கு - தலைவர் உணர்வதற்கு முன்னர், மன்ற - நிச்சயமாக, உணர்ந்தேன் - யான் உணர்ந்தேன்.

(முடிபு.) நனந்தலை, கூறிப்போதல் பொருளென அவர் உணராவூங்கே உணர்ந்தேன்.

(கருத்து.) தலைவனுடன் சென்று நீ மணத்தலே நன்று.

(வி - ரை.) இது, தலைவனது வரைவிற்குத் தலைவியின் தமர் உடம்படாரென்பதுணர்ந்த தோழி வெளிப்பட்டது. தலைவனும் இதுவே கூறுவானாதலின் இதனை முன்பே யானுணர்ந்து நினக்கு அறிவித்தேனென்றாள்.

நல்லகூறி யென்பது, இனி ஆண்டுச்சென்று வரைவேனென்ற மங்கலச்சொற்களைக் கூறியெனப் பொருள்பட்டு, வரைவு மலிந்ததாயிற்று, கொடுப்போரின்றியுங் கரணம் நிகழ்தலுண்டாதலின்.

அவ்விளிம்பு : அகரச்சுட்டு மேல்விளிம்பைக் குறித்தது.

பாலைநிலத்திலுள்ள மறவர் தம் சிலைவிளிம்பையுருவி நாணேற்றி அம்பு தொடுப்பர் ;

" வீங்குவிளிம் புரீஇய விசையமை நோன்சிலை
வாங்குதொடை பிழையா வன்க ணாடவர்
விடுதொறும் விளிக்கும் வெவ்வாய் வாளி
ஆறுசெல் வம்பல ருயிர்செலப் பெயர்ப்பின் ",

" அவ்விளிம் புரீஇய விசையமை நோன்சிலைச்
செவ்வாய்ப் பகழிச் செயிர்நோக் காடவர்
கணையிட " (அகநா. கஎரு : 1-4, கஎக : 1-3.)

வம்பலர் உயிர்கவர்தலின் கொடிய வில்லாயிற்று ; வளைந்த வில்லுமாம். வாளியாகிய பகையென்க. பொருள் - மேற்கொள்ளத் தக்க காரியம்.

## ஒப்புமைப் பகுதி

1-3. மறவர் செயல் : குறுந். உ௮௩ : 5-7, ஒப்பு.

3-4. வம்பலர்மேல் உவலிடு பதுக்கை : (குறுந். எஎ : 3, ஒப்பு.) "செருவேட்டுச் சிலைக்குஞ் செங்க ணாடவர், வில்லிட வீழ்ந்தோர் பதுக்கை" (அகநா. கருஎ : 4-5.)

5. நனந்தலை : குறுந். உஎஉ : 3. (உகூஎ)

## தோழி கூற்று

[தலைவன் மடலேறத் துணிந்ததைத் தோழி தலைவிக்கு உணர்த்தியது.]

உகூஅ. சேரி சேர மெல்ல வந்துவந்
தரிது வாய்விட் டினிய கூறி
வைக லூறு நிறம்பெயர்ந் துறையுமவன்
பைத னோக்க நினையாய் தோழி
இன்கடுங் * கள்ளி னகுதை † பின்றை
வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசின் மானப்
பிறிதொன் றுகுறித்ததவ னெடும்புற நிலையே.

எ - து. கிழத்திக்குத் தோழி குறைமறுமற் கூறியது.

பரணர்.

(ப - ரை.) தோழி—, சேரி சேர - நம்முடைய தெருவின்கண் அடைய, மெல்ல வந்து வந்து—, அரிது வாய்விட்டு - அருமையின் வாய்திறந்து, இனிய கூறி - நம் சிந்தைக்கு இனியவற்றைக் கூறி, வைகல்தோறும் - நாள்தோறும், நிறம் பெயர்ந்து உறையும் அவன் - தான் நினைத்தமொன்று கைகூடாமையின் ஒளிமாறித் தங்குகின்ற அத்தலைவனது, பைதல் நோக்கம் - துன்பத்தைப் புலப்படுத்தும் பார்வையை, நினையாய் - நினைத்துக் காண்பாயாக; அவன் நெடு புறம் நிலை - அவன் நீண்ட நேரம் இங்ஙனம் என் பின் நிற்றல், இன் கடு கள்ளின் - இனிய கடுமையையுடைய கள்ளையுடைய, அகுதை பின்றை - அகுதைக்குப்பின் நின்ற, வெள் கடை சிறு கோல் அகவல் மகளிர் - வெள்ளிய முனையையுடைய சிறிய கோலைக்கொண்ட அகவன்மகளிர் பெறும், மடம் பிடி பரிசில் மான - மடப்பம் பொருந்திய பிடியாகிய பரிசிலைப்போல, பிறிது ஒன்று குறித்தது - நம்மைக் கண்டு இனிய கூறுதலேயன்றி வேறு ஒன்றைக் கருதியதாயிற்று.

(முடிபு.) தோழி, சேரி சேர வந்துவந்து வாய்விட்டுக் கூறிப் பெயர்ந்து உறையும் அவன் நோக்கம் நினையாய்; அவன் நிலை பரிசில் மானப் பிறிதொன்று குறித்தது.

---

(பி - ம்.) * களிற்றின். † தந்தை.

(கருத்து.) தலைவன் மடலேற நினைந்தான்.

(வி - ரை.) இனிய கூறுதலாவது, 'நீவிர்வேண்டும் குறை முடித்துத்தருவேன்' என்றல். தலைவன் தன் குறையை வாய்விட்டுக் கூறாது வருந்துதல்,

"கயமல ருண்கண்ணாய் காணா யொருவன்
வயமா னடித்தேர்வான் போலத் தொடைமாண்ட
கண்ணியன் வில்லன் வருமென்னை நோக்குபு
முன்னத்திற் காட்டுத லல்லது தானுற்ற
நோயுரைக் கல்லான் பெயருமற் பன்னாளும்" (கலி. ௩எ : 1-5)

என்பதிலும் காணப்படும்.

நினையாயென்றது, நினைந்து அவன் குறை தீர்க்கவேண்டுமென்னும்பொருட்டு.

இன் கடுங்கள் - உண்ணற்கினிமையும், மயக்கந்தருதலிற் கடுமையும் உடைய கள். அகவன் மகளிர்: குறுந். உங - ஆம் செய்யுளைப் பார்க்க. வெண் கடை - வெள்ளிய நுனி; என்றது வெள்ளியாற் செய்த பூண்கட்டிய நுனியை.

அகுதை: மதுரையிலிருந்த ஓர் உபகாரி.

தலைமகள் குறை மறுதபடி கூறுவதாதலின், பிறிதென்றது இங்கே மடலேறுதலைக் குறித்தது. புறநிலை - பின்னிற்றல்; வழிபட்டு நிற்றல்;

"என்குறைப் புறனிலை முயலும்
அண்க ணாளனை நகுகம் யாமே" (அகநா. ௩உ : 20-21)

என்பதன் உரையைப் பார்க்க.

## ஒப்புமைப் பகுதி

4. பைதல் நோக்கம்: அகநா. ௩அ : 15.

3-4. குறைவேண்டிய தலைவன் மெலிதல்: குறுந். எச : 5.

5. இன் கடுங்கள்: குறுந். ௩௩0 : 5; நற். ௬0 : 5; அகநா. ௧௩எ : 6; புறநா. அ0 : 1.

இன்கடுங்கள்ளின் அதுதை : அகநா. எசு : 3.

6. அகவன் மகளிர் : குறுந். உங : 1.

அகவன்மகளிர் கோல் உடையராதல்: "நுணங்குகட் சிறுகோல் வணங்கிறை மகளிரொ, டகவுநர்", "புண்கோ லகவுநர்" (அகநா. கஎ : 10-11, கடுஉ : 4, உ0அ : 3.)

5-7. அதுதை யானை வழங்குதல்: அகநா. ககங : 4; புறநா. உ௩௩ : 2-3.

8. நெடும்புறநிலை : அகநா. ௫அ : 14, உஉ0 : 11.

புறநிலை : நற். ௩0சு : 11. (உகூஅ)

---

## தலைவி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தே நிற்ப, தலைவி தன் தோள்மெலிவைத் தோழிக்குக் கூறுவாளாய் வரைதல் வேண்டுமென்பதை அவனுக்குப் புலப்படுத்தியது.]

உகூகூ. இதுமற் றெவனோ தோழி முதுநீர்ப்
புணரி திளைக்கும் புள்ளிமிழ் கானல்
இணரவிழ் புன்னை யெக்கர் நீழற்
புணர்குறி வாய்த்த ஞான்றைக் கொண்கற்
கண்டன மன்னெங் கண்ணே யவன்சொற்
கேட்டன மன்னெஞ் செவியே மற்றவன்
மணப்பின் மாணல மெய்தித்
தணப்பின் ஞெகிழ்பவென் றடமென் றோளே.

எ - து. சிறைப்புறமாகத் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

வெண்மணிப் பூதி.

(ப - ரை.) தோழி—, முதுநீர் புணரி திளைக்கும் - நிலத்திற்குப் பழையதாகிய கடலின் அலை அளவளாவுகின்ற, புள் இமிழ் கானல் - பறவைகள் ஒலிக்கின்ற கடற்கரைச் சோலையிலுள்ள, இணர்

---

(பி - ம்.) * இணர்வீழ்.

அவிழ் புன்னை எக்கர் நீழல் - பூங்கொத்துக்கள் மலர்ந்த புன்னை வளர்ந்த மேட்டிலுள்ள நிழலில், புணர்குறி வாய்த்த ஞான்றை - புணர் குறியைப் பெற்ற காலத்தில், எம்கண் - எம் கண்கள், கொண்கன் கண்டன - தலைவனைப் பார்த்தன; எம் செவி - எம்முடைய காதுகள், அவன் சொல் கேட்டன - அவனுடைய சொற்களைக் கேட்டன; என் தட மெல் தோள் - எனது பரந்த மெல்லிய தோள்கள், அவன் மணப்பின் - அவன் என்னை மணந்தால், மாண் நலம் எய்தி - மாட்சிமைப் பட்ட அழகைப் பெற்று, தணப்பின் - அவன் பிரிந்தால், ஞெகிழ்ப - சோர்வன; இது எவன் - இஃது என்ன வியப்பு!

(முடிபு.) தோழி, எம் கண் கண்டன; செவி கேட்டன; தோள் மணப்பின் நலம் எய்தித் தணப்பின் ஞெகிழ்ப.

(கருத்து.) தலைவன் இடையிட்டு வருவதால் யான் வருந்து வேனாயினேன்.

(வி - ரை.) இது: செய்யுளாதலின் சுட்டு முன்வந்தது. மற்று, ஓ: அசைநிலைகள். நீர்க்குப்பின்னே நிலம் தோற்றுதலின் நீரை முது நீரென்றாள். கொண்கன் - நெய்தனிலத் தலைவன் (குறுந். உ௬உ, விசேட.)

'தலைவனைக் கண்ட கண்ணும் கேட்ட செவியும் வாளா விருப்பத் தோள்கள் மட்டும் தம் மெலிவைப் புறத்தாரறியும்படி நெகிழ்ந்தன என்றாள். இடையிட்டு வந்து அளவளாவும் களவொழுக்கத்தில் தான் தலைவனைப் பிரிந்திருக்குங் காலத்தில் ஆற்றுமை மிகுமென்பதும், இடையீடின்றி அளவளாவும் கற்பொழுக்கத்திற்குரிய வரைவே இனி மேற்கொள்ளுதற்கு உரியதென்பதும் இதனால் தலைவனுக்குக் குறிப்பிக்கப்பட்டன.

## ஒப்புமைப் பகுதி

1. இது மற்றெவனோ தோழி: குறுந். ௧அ௧: 1.

3. புன்னை இணர்: குறுந். ௫௦௫: 6.

4. ஞான்றை: குறுந். ௫௧௫: 5.

3-4. புன்னை நீழற் புணர்குறி: (குறுந். ௧உ௫: 3-4, ஒப்பு.); "புன்னையங் கானற் புணர்குறி வாய்த்த" (நற். உஉஎ: 3); "மின்

..லைப் பொலிந்த விளங்கிண ரவிழ்பொற், றண்ணறும் பைந்தா துறைக்கும், புன்னையங் கானற் பகல்வந் தீமே", "பூவேய் புன்னையந் தண்பொழில், வாவே தெய்ய மணந்தனை செலற்கே", "கழிசேர் புன்னை யழிபூங் கானற், றணவா நெஞ்சமொடு தமியன் வந்தூரம், மணவா முன்னும்" (அகநா. அ0 : 11-3, உசo : 14-5, உகo : 9-11); "புன்னையங் கான லிருந்தேமாப் பொய்த்தெம்மைச், சொன்னலங் கூறி நலனுண்ட சேர்ப்பனை" (கைந்நிலை, 54); "கண்டலை யேகரி யாக்கன் னிப் புன்னைக் கலந்தகள்வர்" (சிற். 177.)

7. மாணலம் : குறுந். எச : 5, ஒப்பு.

தோள் தலைவனை மணப்பின் நலமெய்தல்: ஐங். கஉo.

8. தலைவனைப் பிரிந்தமையால் தோள் நெகிழ்தல்: குறுந். அஎ : 5, ஒப்பு; குறிஞ்சிப். 9; நற். கச : 1, ௲0க : 1; ஐங். உ௲o: 3; கலி. ௲எ : 11, சஇ : 15.

தடமென்றோள் : குறுந். எஎ : 6, ஒப்பு, அஎ : 5.

7-8. தோள்மணத்தல் : குறுந். ௲௬ : 4, ஒப்பு, இo : 5, ஒப்பு.

தோள் மணப்பின் நலம் பெற்றுத் தணப்பின் ஞெகிழ்தல்: "தணந்தமை சால வறிவிப்ப போலும், மணந்தநாள் வீங்கிய தோள்" (குறள், 1233.)

5-8. "கண்டன வுண்கண் கலந்தன நன்னெஞ்சம், தண்டப் படுவ தடமென்றோள் - கண்டாய், உலாஅ மறுகி லுறையூர் வளவற், கெலாஅ முறைகிடந்த வாறு" (முத். 55.) (உ௬௬)

---

## தலைவன் கூற்று

[இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவன் தலைவியை நோக்கி, "நான் நின்னைப் பிரியேன்; பிரியின் ஆற்றேன்" என்றானாக அதுகேட்ட தலைவி, "பிரிவென்பது ஒன்றும் உண்டாங்கொல்?" என அஞ்சினாளை, "நீ அஞ்சற்க; நான் இவ்வுலகத்தைப் பெறுவேனாயினும் நின்னைப் பிரியேன்" என அவன் வற்புறுத்தியது.]

௲00. குவளை நாறுங் குவையிருங் கூந்தல்
ஆம்ப லூறுந் தேம்பொதி துவர்வாய்க்
குண்டுநீர்த் தாமரைக் கொங்கி னன்ன

நுண்பஃ றித்தி மாஅ யோயே
நீயே, அஞ்ச லென்றவென் சொல்லஞ் சலையே
யானே, குறுங்கா லன்னங் குவவுமணற் சேக்கும்
கடல்சூழ் மண்டிலம் பெறினும்
விடல்சூ ழலனு னின்னுடை நட்பே.

எ - து. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன், பிரிவச்ச மும் வன்புறையும் கூறியது.

சிறைக்குடி யாந்தையார்.

(ப - ரை.) குவளை நாறும் - குவளை மலரின் மணத்தை வீசு கின்ற, குவை இரு கூந்தல் - தொகுதியாகிய கரிய கூந்தலையும், ஆம்பல் நாறும் - ஆம்பல்மலரின் மணத்தை வீசும், தேம் பொதி துவர் வாய் - தேன் பொதிந்த சிவந்த வாயையும், குண்டு நீர் தாமரை கொங்கின் அன்ன - ஆழமாகிய நீரில் வளர்ந்த தாமரைப் பூந்தாதைப்போன்ற, நுண் பல் தித்தி - நுண்ணிய பல தேமற் புள்ளியையுமுடைய, மாஅயோயே - மாமை நிறமுடையாய், நீ—, அஞ்சல் என்ற என் சொல் - யான் பிரிவேனென்று கருதி அஞ்சாதே கொளென்ற எனது சொல்லைக் கேட்டு, அஞ்சலை - அஞ்சாதே கொள்; யான்—, நின்னுடை நட்பு - நினது நட்பினை, குறு கால் அன்னம் - குறிய காலையுடைய அன்னப் பறவைகள், குவவு மணல் சேக்கும் - குவிதலையுடைய மணலின்கண்ணே தங்கியிருக்கும், கடல் சூழ் மண்டிலம் பெறினும் - கடல் வளைந்த நிலவட்டத்தைப் பெறினும், விடல் சூழலன் - விடுதலை நினையேன்.

(முடிபு.) மாஅயோயே, நீ அஞ்சலை; யான் நின்னுடை நட்பு விடல் சூழலன்.

(கருத்து.) நின்னைப் பிரியேன்.

(வி - ரை.) கூந்தலும், வாயும் இன்பமளித்தனவாதலின் அவற்றை முற்கூறினான். தேமென்றது வாயூறலைநினைந்து. தலைமகள் உறுப்புநலன் கூறவந்த தலைவன் நீர்ப்பூக்கள் மூன்றை உவமையாகக் கூறினான். மாஅயோய் - மாமையை உடையோய்.

---

(பி - ம்.) * ழலன்யானின்னுடை.

மண்டிலமென்பது வட்டம்; கடல்சூழ் மண்டிலமென்றமையின் நிலவட்டமாயிற்று. அன்னம் மணலிற் சேக்குமென்றது, கடலுக்கு அடை.

ஏகாரங்கள், ஆல்: அசை நிலைகள்.

## மேற்கோளாட்சி

2. மூக்காலறியப்பட்ட பொதுத்தன்மை வந்தது (தொல். உவம. 3, இளம்.); ஆம்பலென்றது முதலாகுபெயர் (நன். 289, மயிலை, 290, சங், வி; இ. வி. 192.)

ம. தலைவன் நயப்பும் வன்புறையுங் கூறியது (தொல். களவு. 10, ந.); தலைவன் பிரிவுணர்த்தல் (களவியற். 23.)

## ஒப்புமைப் பகுதி

1. துவலை நாறும் கூந்தல்: குறுந். ௨௭0: 6-8, ஒப்பு.

துவையிருங் கூந்தல்: குறுந். ௰௨: 3.

2. ஆம்பல் நாறும் வாய்: "ஆம்ப னாறுந் தேம்பொதி நறுவிரைத், தாமரைச் செவ்வாய்" (சிலப். ௪: 73-4); "ஆம்பனா றமுதச் செவ் வாய்", "ஆம்ப னாறு மரக்கார் பவளவா யாரமுதன்னார்" (சீவக. 561, 1656.)

3-4. தேமலுக்குப் பூந்தாது: "அம்பூந் தாதுக் கன்ன, நுண்பலந் தித்தி மாஅ யோளே" (நற். ௧௯௭: 9-10.)

7-8. குறுந். ௨௬௭: 1-6, ஒப்பு. (௩00)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்தகாலத்தில், "நீ ஆற்றும் வன்மையுடையாயோ?" என வினவிய தோழிக்கு, "தலைவன் வாராவிடினும், அவன் வருவானென்னும் நினைவினால் நான் துயின்றிலேன்" என்று தலைவி கூறியது.]

௩0௧. முழவுமுத லரைய தடவுநிலைப் பெண்ணைக்
கொழுமட லிழைத்த * சிறுகோற் குடம்பைக்
கருங்கா லன்றிற் காமர் கடுஞ்சூல்
வயவுப்பெடை யகவும் பானாட் கங்குல்
மன்றம் போழு † மினமணி நெடுந்தேர்
வாரா தாயினும் வருவது போலச்
செவிமுத லிசைக்கு மரவமொடு
‡ துயிறுறந் தனவா றோழியென் கண்ணே.

எ - து. வரைவிடை வைப்ப, "ஆற்றகிற்றியோ?" என்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

குன்றியன்.

(ப - ரை.) தோழி—, முழவுமுதல் அரைய - முழவினைப் போன்ற அடி மரத்தையுடைய, தடவு நிலை பெண்ணை - வளைந்த நிலையையுடைய பனையினது, கொழு மடல் இழைத்த - கொழுவிய ஓலையின் கண்ணே இயற்றிய, சிறு கோல் குடம்பை - சிறிய சுள்ளிகளாலாகிய கூட்டிலுள்ள, கரு கால் அன்றில் - கரிய காலையுடைய அன்றிலினது, காமர் கடு சூல் வயவு பெடை - விருப்பத்தையுடைய முதற்சூலினால் உண்டான நோயையுடைய பெண் பறவை, அகவும் - ஆண் பறவையை அழைக்கின்ற, பானாள் கங்குல்- பாதியிரவில், மன்றம் போழும் - தனது சக்கரத்தால் மன்றத்தைப் பிளந்து கொண்டுவரும், இனம் மணி நெடு தேர் - தொகுதியாகிய மணியையுடைய தலைவனது நெடிய தேர், வாராதாயினும்—, வருவது போல—, செவிமுதல் இசைக்கும் அரவமொடு - காதினிடத்து ஒலிக்கும் ஒலியினால், என் கண் - என்னுடைய கண்கள், துயில் துறந்தன - தூக்கத்தை நீத்தன.

(முடிபு.) தோழி, கங்குலில் தேர் வாராதாயினும் வருவது போல இசைக்கும் அரவமொடு என்கண் துயில் துறந்தன.

(கருத்து.) தலைவன் வரவை எதிர்பார்த்துத் துயின்றிலேன்.

(வி - ரை.) இஃது ஆற்றேனென்றும், அதன் காரணம் இன்னதென்றும் கூறியவாறு.

(பி - ம்.) * சிறுபொற். † மணியுடை நெடுந்தேர். ‡ துயின் மறந்தனவால்.

கங்குலில் தலைவனது தேர் வருவதை முன்னம் அறிந்தவளாதலின் அப்பழக்கத்தாலும் நினைவாலும் தேர்மணியின் ஒலி கேட்பதாகத் தோற்றியது.

## மேற்கோளாட்சி

6-8. எதிர்பெய்து பரிதலென்னும் மெய்ப்பாடு வந்தது; 'வாராதென்றுணர்ந்தது இக்காலத்தாகலான் அதற்குமுன் இன்னவாறு பட்டதன்று என்றமையின் எதிர்பெய்து பரிதலாயிற்று' (தொல். மெய்ப். 22, பேர்; இ. வி. 580.)

மு. இரவுக்குறி பிழைத்த விடத்துத் தலைவி கூறியது (தொல். களவு. 16, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. பனைமரத்தின் அடிக்கு முழவு: "முழாவரைப் போந்தை" (புறநா. அ௫ : 7, ௩௭௫ : 4.)

4. பாணாள் : குறுந். ௧௪ : 3, ஒப்பு.

3-4. கங்குலில் அன்றில் அகவுதல் : (குறுந். ௧௬௦ : 1-4, ஒப்பு.); "ஏங்குவயி ரிசைய கொடுவா யன்றில், ஓங்கிரும் பெண்ணை யகமட லகவ" (குறிஞ்சிப். 219-20); "கடவுண் மரத்த முண்மிடை குடம்பைச், சேவலொடு புணராச் சிறுகரும் பேடை, இன்னா துயங்குங் கங்குலும்" (அகநா. ௨௭௦ : 12 - 4.)

கடுஞ்சூல் வயவுப் பேடை: "கடுஞ்சூல் வயவொடு கான லெய்தாது, கழனி யொழிந்த கொடுவாய்ப் பேடைக்கு" (நற். ௨௬௩ : 5-6.)

அன்றிற்பேடை சேவலையழைத்தல்: "அன்றிற் பேடை யரிக்குரலழைஇச், சென்றுவீழ் பொழுது சேவற் கிசைப்ப" (மணி. ௫ : 127-8.)

5. மன்றம் போழ்தல் : குறுந். ௩௪௬ : 3.

தேர்மணி : குறுந். ௨௭௫ : 8 ; அகநா. ௪ : 12.

4-6. தலைவன்தேர் பாணாளில் வருதல் : குறுந். ௩௧௧ : 3-7.

8. தலைவி துஞ்சாமை : குறுந். ௬ : 4, ஒப்பு. (௩௦௧)

---

தலைவி கூற்று

[தலைவன் வரைவிடைவைத்துப் பிரிந்த காலத்தில் ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குத் தலைவி ஆற்றுமையின் காரணத்தைக் கூறியது.]

க0உ. உரைத்திசிற் றோழியது புரைத்தோ வன்றே
அருந்துய ருழத்தலு மாற்று மதன்றலைப்
பெரும்பிறி தாக லதனினு மஞ்சுதும்
அன்னோ வின்னு நன்மலை நாடன்
பிரியா நண்பின ரிருவரு மென்னும்
அலரதற் கஞ்சினன் கொல்லோ பலருடன்
துஞ்சூர் யாமத் தானுமென்
நெஞ்சத் தல்லது * வரவறி யானே.

எ - து. வரைவிடைக் கவன்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

மாங்குடிகிழார்.

(ப - ரை.) தோழி—, அரு துயர் உழத்தலும் ஆற்றும் - தலைவனுடைய பிரிவால் உண்டாகிய பொறுத்தற்கரிய துயரால் வருந்துதற்கும் ஆற்றலில்லேம்; அதன் தலை - அதற்குமேல், பெரும் பிறிது ஆகல் அதனினும் அஞ்சுதும் - இறந்துபடுதலை அதைக்காட்டிலும் அஞ்சுகின்றேம்; அன்னோ - அந்தோ ! இன்னும்—, நல்மலைநாடன் நல்ல மலைநாட்டையுடைய தலைவன், இருவரும் பிரியா நண்பின் என்னும் - இருவரும் என்றும் பிரியாத நட்பையுடையார் எனறு பிறர் கூறும், அலரதற்கு அஞ்சினன் கொல் - பழிமொழிக்கு அஞ்சினனோ? பலர் உடன் துஞ்சு ஊர் யாமத்தானும் - ஊரிலுள்ளார் பலர் ஒருங்கே துயிலுகின்ற இரவிலும், என் நெஞ்சத்து அல்லது யான் தன்னையே நினைப்பதனால் என் நெஞ்சின்கண் வருதலையன்றி, வரவு அறியான் - நேரிலே வருதலை அறியான்; அது புரைத்தோ - அங்ஙனம் இருத்தல் உயர்வுடையதோ? அன்று—; உரைத்திசின் - நீ கூறுவாயாக.

(முடிபு.) தோழி, உழத்தலும் ஆற்றும்; பெரும்பிறிதாகல் அதனினும் அஞ்சுதும்; நாடன் அஞ்சினன்கொல்? வரவறியான்; அது புரைத்தோ? அன்று; உரைத்திசின்.

---

(பி - ம்.) * வரவறியோனே.

(கருத்து.) தலைவனை நான் நினைந்திருத்தலையன்றி அவன் வந்தானல்லன்.

(வி - ரை.) 'தலைவனைப் பிரிந்திருக்கும் கொடுமையை ஆற்றேம்; ஆற்றாது ஈண்டிருத்தலினும் இறந்துபடுதல் நன்றெனினோ, அதுவும் அஞ்சுதற்குரியது. ஊரினர் அலர் கூறுதற்கு அஞ்சித் தலைவன் வந்திலனோ? அங்ஙனம் கூறப்படும் அலர்தான் என் உயிர் செல்லாமற் காப்பதும் அவனுக்கு உரிமை யாக்குவதுமாதலின் அதற்கு அஞ்சுதல் உயர்வன்று' என்று தலைவி கூறினாள்.

இறத்தற்கு அஞ்சினாள் 'அவன் வாராதொழியான்' என்ற துணிவினால்; "வாரா தொழியா னெனும்வண் மையினால், ஓரா யிரகோ டியிடர்க் குடைவேன்" (கம்ப. உருக்காட்டு. 6.) அலர் தம்மிடையே உள்ள நட்பை உறுதிப்படுத்துவதாக இருப்ப, அதற்கு அஞ்சுதல் முரணாதலின் புரைத்தோ வன்றேயென்றாள்.

## மேற்கோளாட்சி

மூ. வரைவிடைக் கவன்ற தோழிக்குத் தலைவி கூறியது (தொல். களவு. 21, ந.)

## ஒப்புமைப் பகுதி

1, மூ. "உரைத்திசிற்......உயிரே". (தொல். களவு. 12, ந. மேற்.)

2. அதன்றலை : குறுந். ௩௬௬ : 3.

3. பெரும்பிறிது : குறுந். ௬௧ : 1, ஒப்பு.

7. ஊரினர் யாமத்தில் துஞ்சுதல் : குறுந். ௨௮ : 5, ௩௨ : 2, ஒப்பு; கலி. ௬௫ : 3.

துஞ்சூர் யாமம் : ஐங். ௧௩ : 4; அகநா. ௧௧௮ : 11, ௩௬0 : 12.

7-8. தலைவன் தலைவியின் நெஞ்சத்து வருதல் : "தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல், எந்நெஞ்சத் தோவா வரல்" (குறள், 1205.) (௩0௨)

---

## தோழி கூற்று

["தலைவி வேறுபாடு மிக்கனள்; ஆதலின் தாய் இற்செறிக்கக் கருதினாள்; இனி இவளை மணந்துகோடலே தக்கது" என்று தோழி தலைவனுக்கு உரைத்தது.]

௩0௩. கழிதேர்ந் தசைஇய கருங்கால் வெண்குரு
கடைகரைத் தாழைக் குழீஇப் பெருங்கடல்
உடைதிரை யொலியிற் றுஞ்சுந் துறைவ
தொன்னிலை நெகிழ்ந்த வளைய ளீங்குப்
பசந்தனண் மன்னென் றோழி யென்னொடு
மின்னிணர்ப் புன்னையம் புகர்நிழற்
பொன்வரி யலவ னாட்டிய ஞான்றே.

எ - து. செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

அம்மூவன்.

(ப - ரை.) *கழி தேர்ந்து - மீனுணவின் பொருட்டுக் கழியின் நீரை ஆராய்ந்து, அசைஇய - உணவுண்டு தங்கிய, கரு கால் வெள் குருகு - கரிய காலையுடைய வெள்ளிய நாரைகள், அடைகரை தாழை - அடைகரையிலுள்ள தாழையினிடத்து, குழீஇ - கூடி, பெரு கடல் உடை திரை ஒலியின் - பெரிய கடலில் கரையை மோதி உடைகின்ற அலையின் ஓசையினால், துஞ்சும் துறைவ - துயில்கின்ற துறையை யுடைய தலைவ, என்னொடு—, மின் இணர் புன்னை அம் புகர் நிழல் - மின்னுகின்ற பூங்கொத்துக்களையுடைய புன்னைமரத்தினது அழகிய புள்ளியையுடைய நிழலில், பொன் வரி அலவன் ஆட்டிய ஞான்றே - பொன்போன்ற கோடுகளையுடைய நண்டுகளை அலைத்து விளையாடிய போதே, என் தோழி - என் தோழியாகிய தலைவி, தொல் நிலை நெகிழ்ந்த வளையள் - தம் பழைய செறிந்த நிலையினின்றும் நெகிழ்ந்த வளைகளை யுடையளாகி, ஈங்கு மன் பசந்தனள் - இங்கே மிகப்பசந்தாள்.*

(முடிபு.) *துறைவ, என்தோழி அலவன் ஆட்டிய ஞான்றே நெகிழ்ந்த வளையள்; ஈங்குப் பசந்தனள்மன்.*

(கருத்து.) *இனித் தலைவியை மணத்தலே ஏற்புடையது.*

(வி - ரை.) *அசைஇய - தங்கிய* (முருகு. 176, ந.) *அலவனாட்டியஞான்றே நெகிழ்ந்த வளையளென்றது, அதுமுதல் இவளது வேறுபாடு பெரிதாகி இப்பொழுது புறத்தே யாவரும் அறியும் பசப்பிற்குக் காரணமாயிற்றென்றபடி. வளைகழலினும், 'சிறியவும் உளவீண்டு விலைஞர்கைவளையே'* (குறுந். ௧௧௭ : 6) *என்பாராதலின் மெலிவிற்கேற்ற வளையணிந்து புறத்தாருக்கு வேறுபாடு புலனாகாமற் காத்தல் கூடும்;*

பசப்போ மாற்றுதற்கு அரிதாயிற்று. அவள் மிகப்பசந்தாளென்றது, தாயறிவுற்று இற்செறிப்பாளென்ற குறிப்புணர்த்தியவாறு.

தலைவி தோழியோடு அலவனாட்டி விளையாடுகையில் தலைவன் வந்து அளவளாவிய இயற்கைப்புணர்ச்சியைக் குறிப்பாகக் கூறினாள்.

என்னொடும் இன்னிணர்ப் புன்னையெனக் கண்ணழித்தலும் ஆம்.

குருகு கழிதேர்ந்து வயிறுநிரம்ப உண்டு பின் தாழைமடலிலே துஞ்சுமென்றது, இதுகாறும் களவொழுக்கத்தில் நின் உள்ள நிறைவுண்டாம் வண்ணம் அளவளாவினையாதலின் இனி வரைந்துகொண்டு நின் இல்லின்கண் உறைந்து இல்லறம் நடத்துவாயாகவென்ற கருத்தை உணர்த்தியது.

## ஒப்புமைப் பகுதி

1. "மீன்றேர்ந் தருந்திய கருங்கால் வெண்குருகு" (யா. வி. 39, மேற்.)

கருங்கால் வெண்குருகு: குறுந். ௩௨௫: 5; நற். ௫௪: 4, ௬௭: 3.

6. இணரீப்புன்னை: குறுந். ௨௬௬: 3.

7. அலவன் ஆட்டல்: குறுந். ௩௧௬: 5-6; பட். 101; நற். ௩௬௩: 10; ஐங். ௧௬௭: 1.

5-7. தலைவனும் தலைவியும் புன்னைநிழலில் அளவளாவுதல்: குறுந். ௧௨௩: 3-4, ஒப்பு, ௨௬௬: 3-4, ஒப்பு. (௩0௩)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்தில் ஆற்றாளெனக் கருதிக் கவன்ற தோழியை நோக்கித் தலைவி, "அன்று இனி தாயிருந்த நட்பைத் தலைவனோடு செய்தேம்; இப்போது அந்நட்பு நமக்கே பகையாய் முடிந்தது" என்று கூறியது.]

௩0௪. கொல்வினைப் பொலிந்த கூர்வா யெறியுளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்
* தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசைக்

(பி - ம்.) * தாங்கரு வாய்நீர்.

கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீ னெறிய
நெடுங்கரை யிருந்த குறுங்கா லன்னத்து
வெண்டோ டிரியும் வீததை கானற்
கைதையந் தண்புனற் சேர்ப்பனொடு
செய்தனெ மன்றவோர் பகைதரு நட்பே.

எ - து. வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

சணக்காயன் தத்தன்.

(ப - ரை.) தோழி, கொல் வினை பொலிந்த - கொல்லுந் தொழிலில் பொலிவு பெற்ற, கூர் வாய் - கூரிய முகத்தையுடைய, எறி உளி - எறிகின்ற உளியை, முகம் பட மடுத்த - தன்னுடைய முகத்தின்கண் அமையும்படி பொருத்தப்பெற்ற, முளி வெதிர் நோன் காழ் - உலர்ந்த மூங்கிலின் வலிய காம்பை, தாங்கு அரு நீர் சுரத்து எறிந்து - தாங்குதற்கரிய நீரையுடைய வழியின்கண் எறிந்து, வாங்கு - கைக்கொள்ளும், விசை கொடு திமில் பரதவர் - வேகத்தையுடைய வளைந்த மீன்படகையுடைய பரதவர், கோடு மீன் எறிய - கொம்பையுடைய சுறாமீனை எறிய, நெடு கரை இருந்த - நெடிய கரையினிடத்தே இருந்த, குறு கால் அன்னத்து வெள் தோடு - குறிய கால்களையுடைய அன்னப்பறவைகளின் வெள்ளிய தொகுதி, இரியும் - கெட்டு ஓடும், வீ ததை கானல் - மலர்கள் நெருங்கிய சோலையையும், கைதை - தாழையையும், அம் தண் புனல் - அழகிய தண்ணிய நீரையுமுடைய, சேர்ப்பனொடு - கடற்கரையையுடைய தலைவனோடு, மன்ற - நிச்சயமாக, ஓர் பகைதரு நட்பு செய்தனெம் - பகையைத் தருகின்றதொரு நட்பைச் செய்தேம்.

(முடிபு.) சேர்ப்பனொடு ஓர் பகைதரு நட்புச் செய்தனெம்.

(கருத்து.) தலைவனுடைய பிரிவினால் நான் மிக்க வருத்தத்தை யடைந்தேன்.

(வி - ரை.) கொல்லும் தொழிலினிடத்தே பொலிந்ததற்குக் காரணம் கூர்மை யென்பாள், பொலிந்த கூர்வா யெறியுளியென வைத்தாள். கொல்வினை - கொற்றொழில் எனலுமாம். எறி உளி - படகிலிருந்தபடியே எறிந்து கொல்லும் ஒருவகை ஆயுதம்; இதன்

நாம்பிற் கயிறு கட்டப்பட்டிருத்தலின் வாங்குதற்கு எளிதாயிற்று. தாம் கருநீர்ச் சுரத்தெனப் பிரித்துத் தாமென்பதை அசையாக்கு தலும் ஒன்று.

நீர்ச்சுரம் - நீரிலுள்ள வழி; என்றது படகு செலுத்தும் வழியை;

“ திமின்மேற் கொண்டு திரைச்சுர நீந்தி
வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி ” (நற். ௧௧௧ : 6-7.)

கோட்டுமீன் - சுறாமீன்; “ கோட்டுமீன் கெண்டி ” (அகநா. ௧0 : 11) என்பதன் உரையைப் பார்க்க. பறவைத் தொகுதியைத் தோடென்று வழங்குதலே, இந்நூல் ௩௪-ஆம் செய்யுளுரையால் உணரலாகும்.

பகைதரு நட்பென்றாள், அந்நட்பு, பிரிவின்கண் ‘ நறுக்கவின் றொலையவும் நறுந்தோ ணெகிழவும் புட்பிற ரறியவும் புலம்புவந் தலைப்பவும் உட்கரந் துறையு முய்யா வரும்படர் ’ (குறிஞ்சிப். 9 - 11) உண்டாதற்குக்காரணமாதலின். இதுகாறும் எனக்கு நல்லராயவர்பகை யும் நல்லன வாகியவற்றின் பகையும் தரும் நட்பென்றலும் இயையும்.

## ஒப்புமைப் பகுதி

3. நீர்ச்சுரம் : “ திரைச்சுரம் ” (அகநா. ௨௪0 : 5.)

4. திமிற் பரதவர் : குறுந். ௧௨௩ : 5 ; பட். 112 ; நற். ௧௧௧ : 6-7, ௩௭௨ : 11-2.

கோட்டுமீன் : பட். 86 ; நற். ௪௧ : 5 ; அகநா. ௧௭0 : 11 ; புறநா. ௩௩௩ : 5 ; சீவக. 2325.

1-4. மீன் வேட்டை : குறுந். ௧௨௩ : 5, ஒப்பு.

பரதவர் எறியுளியாற் சுறமீனை எறிதல் : “ கயிறுகடை யாத்த கடுநடை யெறியுளித், திண்டிமிற் பரதவ ரொண்சுடர்க் கொளீஇ, நடுநாள் வேட்டம் போகி ” (நற். ௩௮௮ : 3-5) ; “ பரதவர், எறியுளி பொருத வேமுறு பெருமீன் ” (அகநா. ௨௧0 : 1-2.)

8. பகைதரும் நட்பு : குறுந். ௨௫௭ : 6, ௩௩௪ : 7.

7-8. சேர்ப்பனெடு செய்த நட்பு : குறுந். ௨௪௭ : 6-7, ஒப்பு.

(௩0௪)

தலைவி கூற்று

[இற்செறிக்கப்பட்டுக் காப்புமிகுதியால் வருந்திய தலைவி, "என் காமநோய் நீங்குதற்கு உரியன செய்யுந் துணையைப் பெற்றிலேன்" என்று தானே கூறுமுகத்தால் அறத்தொடு நிற்றல் வேண்டுமென்பதைத் தோழிக்குப் புலப்படுத்தியது.]

௩0௫. கண்டர வந்த காம வொள்ளெரி
என்புற நலியினு மவரொடு பேணிச்
சென்றுநா முயங்கற் கருங்காட் சியமே
வந்தஞர் களைதலை யவராற் றலரே
உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல
விளிவாங்கு விளிமி னல்லது
களைவோ * ரிலைபா னுற்ற நோயே.

எ - து. காப்புமிகுதிக்கண், தோழி அறத்தோடு நிற்பாளாக, தனது ஆற்றாமை தோன்றத் தலைமகள் தன்னுள்ளே கூறியது.

[நிற்பாளாக - நிற்கும்பொருட்டு.]

குப்பைக் கோழியார்.

(ப - ரை.) கண் தர வந்த காமம் ஒள் எரி - தலைவரைக் கண்ட கண்கள் தந்ததனால் உண்டாகிய காமமாகிய ஒள்ளியதீ, என்பு உற நலியினும் - என்னைப் பொருந்தும்படி வருத்தினும், அவரொடு பேணி சென்று - அவர்பால் விரும்பிப் போய், முயங்கற்கு - அளவளாவுதற்கு, நாம்—, அரு காட்சியம் - முன்பு நம்மை அவர் கண்ட இடத்திற் காணுதல் அரியேமாயினேம்; அவர்—, வந்து அஞர் களைதலை ஆற்றலர்—நாமிருக்கு மிடத்திற்கு வந்து துன்பத்தை நீக்குதல் செய்தாரல்லர்; இந்த நிலையில், யான் உற்ற நோய் - யான் அடைந்த இக்காமநோய், உய்த்தனர் விடாஅர் - பிறர் செலுத்தி விடார், பிரித்து இடை களையார் - இடையிலே சென்று பிரியச் செய்து நீக்காராக, குப்பை கோழி தனி போர் போல - குப்பைக் கோழிகளின் தனிமையையுடைய சண்டையைப்போல,

(பி - ம்.) * ரில்லை.

விளிவாங்கு விளியின் அல்லது - தானே அழியும்வழி அழிந்தாலன்றி, களைவோர் இல்லை - இதனை நீக்குவார் இல்லை.

(முடிபு.) காம ஒள்ளெரி நலியினும் சென்று முயங்கற்கு அருங்காட்சியம்; அவர் வந்து களைதலை ஆற்றலர்; யான் உற்ற நோய் போர்போல விளிவாங்கு விளியினல்லது, களைவோர் இல்லை.

(கருத்து.) என் துன்பத்தை நீக்கும் துணையாவாரைப் பெற்றிலேன்.

(வி - ரை.) தலைவனைக் கண்டபோதே பால் வயப்பட்ட நெஞ்சம் அவன்பாற் காமத்தை யுடையதாயிற்றாதலின், கண்தர வந்த காம வொள்ளெரி யென்றாள். என்புற நலிதல், புறத்தே தோற்றாமல் அகத்தே வருத்தும் துன்பமிகுதியைக் குறித்தது. பகற்குறிக் கண்ணே தலைவன் எளிதிற் காணும் நிலை நீங்கிக் காப்பிற் பட்டவளாதலின் அருங்காட்சிய மென்றாள்; அருங்காட்சியமென்றது, "அருங்கேடன்" (குறள், 210) என்றாற்போல நின்றது; காட்சி யரியமென்னும் பொருட்டு.

போரின் பொருட்டு வளர்க்கப்பட்டு அப்போரில் ஊக்கமுடையாரால் உய்க்கப்படும் சேரிக்கோழியின் போர் பெருந்திரளான மக்கட்கிடையே நிகழும்; குப்பைக்கோழிப்போர் உய்ப்பாரும் களைவாரும் காண்பாரும் இலதாயிற்று.

யான் உற்ற நோயைக் களைவாரில்லையென்றது அங்ஙனம் களைவாராருவரை வேண்டிநிற்றலைப் புலப்படுத்தியது; இதனால் அறத்தொடு நிற்றல் வேண்டுமென்பதைத் தோழிக்குத் தலைவி குறிப்பித்தாள்.

## ஒப்புமைப் பகுதி

1. **கண் தர வந்த காமம்:** "கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய், தாங்காட்ட யாங்கண் டது", "தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப், பைத லுழப்ப தெவன்", "கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு, மிதுநகத் தக்க துடைத்து", "பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா, உய்வினோ யென்க ணிறுத்து", "படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக், காமநோய் செய்தவென் கண்", "ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண், தாஅ மிதற்பட் டது", "உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து, வேண்டி யவர்க்கண்ட கண்"

(குறள், 1171-7); "கருநெடுங் கண்டருங் காம நோயே". (நன் 403, சங். மேற்.)

காம எரி: "நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, ஒளிட பினுங் காமஞ் சுடும்" (நாலடி. 90); "காமநோய் போல, விடிற்சுட லாற்றுமோ தீ" (குறள், 1159); "காமக் கனலெரி" (பெருங். க. 33 203); "மொழிந்த காமக் கொடுங்கனன் மூண்டதால்" (கம்ப. சூர்ப்ப நகைப். 72.)

6. குப்பைக் கோழி: "குப்பை கிளைப்போவாக் கோழி" (நாலடி 341); "குப்பை கிளைப்பறுக் கோழி போல்வார்." (பெருங். ந கச: 112.) (ஙஂ0ரு

---

## தலைவி கூற்று

[காப்புமிகுதியால் வருந்திய தலைவி, வரையாது வந்தொழுகுட தலைவனிடத்துச் சிறிது வேறுபாடுடையளாகியும் அவ்வேறுபா( அவனைக் கண்டக்கால் மறைவதைத் தன் நெஞ்சை நோக்கிக் கூ( வாளாய்க் கூறியது.]

ஙஂ0சா. மெல்லிய வினிய மேவரு தகுந
இவைமொழி யாமெனச் சொல்லினு மவை(
மறத்தியோ வாழியென் னெஞ்சே பலவுடன்
காமர் * மாஅத்துத் தாதமர் பூவின்
வண்டுவீழ் பயருங் கானற்
† றண்கடற் சேர்ப்பனைக் கண்ட பின்னே.

எ - து. காப்புமிகுதியால் நெஞ்சுமிக்கது வாய் சோர்ந்து கிழத்( உரைத்தது.

[நெஞ்சு மிக்கது வாய் சோர்ந்து - நெஞ்சில் மிகுதியாக உள் ளது தன் முயற்சியின்றியே வெளிப்பட்டு (இறை. 18, உரை.)]

அம்மூவன்.

(ப - ரை.) என் நெஞ்சே—, மெல்லிய இனிய - ஓசையா( மெல்லியனவும் பொருளால் இனியனவும், மேவரு தகுந - விரும்ப(

(பி - ம்.) * மாஅத் தாதமர். † றெண்கடற்.

தக்கனவுமாகிய, இவை - இச்சொற்களை, மொழியாம் - மொழியேம், என சொல்லினும் - என்று நினக்கு நான் சொன்னாலும், காமர் மாஅத்து - அழகிய மாமரத்தினது, தாது அமர் பூவின் - தாதுகள் பொருந்திய மலரினிடத்து, வண்டு பல உடன் - வண்டுகள் பல ஒருங்கே, வீழ்பு அயரும் - வீழ்தலைச் செய்யும், கானல் - சோலையை யுடைய, தண் கடல் சேர்ப்பனை - தண்ணிய கடற்கரையையுடைய தலைவனை, கண்டபின்—, நீ அவை மறத்தியோ - நீ நான் கூறிய அவற்றை மறந்துவிடுகின்றாயோ?

(முடிபு.) நெஞ்சே, மொழியாமெனச் சொல்லினும் சேர்ப்பனைக் கண்டபின், நீ அவை மறத்தியோ?

(கருத்து.) தலைவனைக் காணின் எல்லாத்துன்பங்களையும் மறந்து விடுகின்றேன்.

(வி - ரை.) கானல் - கடற்கரைச்சோலை. தலைவன் வரையாது வந்தொழுகுதலை விரும்பாத தலைவி, 'அவன் வரின் இன்மொழி கூறேன்' என எண்ணியிருந்தும், அவன் வந்தகாலத்து நெஞ்சின்கண் உள்ள ஆதரவினால் மீட்டும் இன்மொழி கூறி அளவளாவினாள். அவனைக் கண்டவுடன் தான் கொண்டிருந்த உறுதி தளர்ந்து போதலை இதிற் கூறினாள்;

"புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சம்
கலத்த லுறுவது கண்டு" (குறள், 1259.)

வாழி: அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1-2. "மெல்லிய வினிய மேவரக் கிளந்து" (குறிஞ்சிப். 138.)

3. வாழியென்னெஞ்சே: குறுந். ௧௧: 4.

4-5. கடற்கரைச்சோலையில் மாமரம் இருத்தல்: * "கொக்கு... கொடுங்கழிக் கூடுநீர்த் தண்சேர்ப்பன்" (கைந்நிலை, 55.) (௩0௪)

---

* 'மாஞ்சோலை நிறைந்த வளைந்த கழியினையுடைய பொருந்திய நீர்த்தண் சேர்ப்பன்' என்பது இதன் பழையவுரை.

## தலைவி கூற்று

[தலைவனது பிரிவின்கண், "நீ ஆற்றுயாதல் நன்றன்று" என்று இடித்துரைத்த தோழியை நோக்கித் தலைவி கூறியது.]

௩௦௭. வளையுடைத் தனைய தாகிப் பலர்தொழச்
செவ்வாய் வானத் தையெனத் தோன்றி
இன்னம் பிறந்தன்று பிறையே யன்றே
மறந்தனர் கொல்லோ தாமே களிறுதன்
உயங்குநடை மடப்பிடி வருத்த நோனது
நிலையுயர் *யாஅந் தொலையக் குத்தி
வெண்ணார் கொண்டு கைசுவைத் தண்ணாந்
தழுங்க னெஞ்சமொடு முழங்கும்
அதத் நீளிடை யழப்பிரிந் தோரே.

எ - து. பிரிவிடைக் கடுஞ்சொற் சொல்லிய தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

[கடுஞ்சொல் - நீ ஆற்றுயாதல் நன்றன்றென்று வற்புறுத்திக் கடிந்து கூறிய சொல்.]

கடம்பனூர்ச் சாண்டிலியன்.

(ப - ரை.) தோழி, பிறை —, வளை உடைத்தனையது ஆகி - வளையையுடைத்தாற் போன்றதாகி, பலர் தொழ - கன்னிமகளிர் பலரும் தொழும்படி, செ வாய் வானத்து - செவ்விய இடத்தையுடைய ஆகாயத்தின்கண், ஐ என தோன்றி - விரைவாகத் தோன்றி, இன்னம் பிறந்தன்று - இன்னும் பிறந்தது; களிறு - ஆண்யானை, தன் உயங்கு நடை மடம் பிடி வருத்தம் - வருந்திய நடையையுடைய தனது மடப்பத்தையுடைய பிடியினது வருத்தத்தை, நோனது - பொறுமல், நிலை உயர் - உயர்ந்த நிலையையுடைய, யாஅம் தொலைய குத்தி - யாமரம் அழியும்படி கொம்பாற் குத்தி, வெள் நார் கொண்டு - பசையற்ற வெள்ளிய பட்டையைக் கைக்கொண்டு, கை சுவைத்து - வறுங்கையைச் சுவைத்து, அண்ணாந்து - மேல் நோக்கி, அழுங்கல் நெஞ்சமொடு - தன் பிடியின் வருத்தத்தைப் போக்க இயலாமையை நினைந்து வருந்துதலை

(பி - ம்.) * யாஅத்துலையக்.

யுடைய நெஞ்சோடு, முழங்கும் - பிளிறுகின்ற, அத்தம் நீள் இடை - அரிய வழியையுடைய நீண்ட இடத்து, அழ பிரிந்தோர் - நாம் அழும்படி நம்மைப் பிரிந்து சென்ற தலைவர், அன்னோ - அந்தோ, மறந்தனர் கொல் - நம்மை மறந்தனரோ?

(முடிபு.) பிறை இன்னம் பிறந்தன்று; அழப்பிரிந்தோர் மறந்தனர்கொல்?

(கருத்து.) தலைவர் என்னை மறந்தனர் போலும்.

(வி - ரை.) பலர் தொழ - கன்னி மகளிரும் பிறருமாகிய பலர் தொழவெனலும் பொருந்தும். செவ்வாய் வானம் - செவ்வானம். ஐயென - விரைய (சீவக. 448, ந.) இன்னம் பிறை பிறந்ததென்றது, 'தலைவன் என்னைப் பிரிந்திருக்குங் காலத்திலும் எனக்குத் துன்பத்தைத் தரும்பொருட்டுப் பிறந்தது' என்னும் நினைவிற்று. வெண்ணாரென்பது உலர்ந்த பட்டையை; ஆதலின் கை சுவைத்தது.

பெண் யானையின் வருத்தத்தை நீக்க முயலும் ஆண் யானையைத் தாம் செல்லும் வழியிலே கண்டும், எனது வருத்தத்தை நீக்க முயன்றிலரென்பது தலைவியின் கருத்து.

தாம்: அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. உடைந்த வளைக்குப் பிறை: "புலவியி லுடைந்த சங்கம் புரிசடைத் திங்கட் கீற்றின், மலைவற விளக்கு மேல்வை" (கூர்ம. கடவுள். 2); "ஊடலி னுடைந்த சங்க மொளிர்சடைப் பிறைவெண் கீற்றின், மாறெப் பொருத்தும் போழ்து" (திருச்செந்தூர்த் தலபுராணம், கடவுள். 2.)

2. ஐயென: அகநா. கூ௦௫: 2; சீவக. 907, 983, 1040, 1205, 2225.

1-3. பிறையைப் பலர் தொழுதல்: (குறுந். கஎஅ: 5, ஒப்பு.); "தொன்றுதொழு பிறையின்" (மதுரைக். 193.)

7. வெண்ணார்: அகநா. அகூ: 6.

4-7. யானை யாமரத்தின் பட்டையை உரித்துப் பிடிக்குத் தருதல்: குறுந். கூஎ: 2-4, ஒப்பு.

யானை யாமரப் பட்டையைச் சுவைத்தல்: "*கவைமுறி யாஅத்து, நாரரை மருங்கி னீர்வரப் பொளித்துக், களிறுசுவைத் திட்ட கோதுடைத் ததரல்*" (அகநா. உ௱௭ : 14-7.)

9. தலைவனது பிரிவால் தலைவி அழுதல்: (குறுந். அஉ : 2; ஒப்பு.) ; "*நாமழத் துறந்தன ராயினும்*" (அகநா. உ௦௯ : 7.) (௩௦௭)

---

## தோழி கூற்று

[*வரைவிடை வேறுபட்ட தலைவியை நோக்கி, "நின்பொருட் டன்றே தலைவன் பிரிந்தான்" என்று தோழி கூறியது.*]

௩௦௮. *சோலை வாழைச் * சுரிநுகும் பினைய*
*அணங்குடை யருந்தலை நீவலின் மதனழிந்து*
*மயங்குதுய ருற்ற மையல் வேழம்*
*உயங்குயிர் மடப்பிடி யுலைபுறந் தைவர*
*ஆமிழி சிலம்பி னரிதுகண் படுக்கும்*
*மாமலை நாடன் கேண்மை*
*காமந் தருவதோர் கைதாழ்ந் தன்றே.*

எ - து. வரைவிடைக் கிழத்தியை வன்சொற் சொல்லி வ[illegible] புறுத்தியது.

பெருந்தோட் குறுஞ்சாத்தன்.

(ப - ரை.) *சோலை வாழை சுரி நுகும்பு* - சோலையின்கண் உள்ள வாழையினது சுருண்ட குருத்து, *இனைய* - தான் வருந்து[illegible] படி, *அணங்கு உடை அரு தலை நீவலின்* - தெய்வத்தையுடை[illegible] பிறர் இருத்தற்கரிய மத்தகத்தைத் தடவுதலினால், *மதன் அழிந்து* வலி கெட்டு, *மயங்கு துயர் உற்ற மையல் வேழம்* - கலங்கிய து[illegible] ரத்தை அடைந்த மயக்கத்தையுடைய களிறு, *உயங்கு உயிர் மட[illegible] பிடி* - வருந்திய மூச்சையுடைய மடப்பத்தையுடைய பிடி, *உ[illegible] புறம் தைவர* - வருந்தும் தன் முதுகைத் தடவ, *ஆம் இழி சில[illegible] பின்* - நீர் இறங்கியோடும் மலைப்பக்கத்தில், *அரிது கண்படுக்கும்*

---

(பி - ம்.) * *சுரித்துகும்பிணிய.*

அரிதிற் றுயில்கின்ற, மா மலை நாடன் கேண்மை - பெரிய மலை நாட்டையுடைய தலைவனது நட்பு, காமம் தருவது ஓர் கை தாழ்ந் தன்று - மெய்யுறு புணர்ச்சியைத் தருகின்றதொரு செயலிலே தங்கியது.

(முடிபு.) நாடன்கேண்மை காமந்தருவதோர் கை தாழ்ந்தன்று.

(கருத்து.) தலைவன் நினக்கு நன்மை உண்டாதற் பொருட் டன்றே பிரிந்தான்.

(வி - ரை.) வாழைத்தோட்டத்தைச் சோலையென்றலும் மரபு. நுகும்பென்றது குருத்தை ; 'நுகும்பென்பது பனை, வாழை, மரல், புல் என்பவற்றிற் குரித்து.' (நன். 387, மயிலை.) வாழையினால் யானையின் வலிகெடுமென்பது, "ஆனைக்கு வாழைத்தண்டு, ஆளுக்குக் கீரைத்தண்டு" என்னும் பழமொழியாலும் பெறப்படும்.

வாழையால் மதனழிந்த வேழம் மயங்கிப் பின் கண்படுக்கு மென்றது, நாம் வரைவு கடாவினமையின் மயங்கிய தலைவன் வரைந்துகொண்டு இடையீடில்லாத இன்பத்தைப் பெறுவானென்ற குறிப்பினது.

காமம் : இங்கே மெய்யுறுபுணர்ச்சி. "அவன் வரையாதொழு குங்காலும் ஆற்றினையல்லை ; நின்னை வரைந்துகொள்ளும் முயற்சியின னாகவும் ஆற்றுயாயினை" என்று தோழி வன்சொற் கூறினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. சோலைவாழை : மலைபடு. 131 ; நற். ௨௩௨ : 3.

1-2. வாழையிலை யானையை நீவுதல் : "சிலம்பிற் போகிய செம்முக வாழை, அலங்க லந்தோ டசைவளி யுறுதொறும், பள்ளி யானைப் பரூஉப்புறந் தைவரும், நல்வரை நாடன்" (அகநா. ௩0௨ : 1-4.)

1-4. வாழையினால் யானை வலியழிதலும் பிடி அதனை ஆற்றுத லும் : "வாழை யோங்கிய தாழ்கண் ணசும்பிற், படுகடுங் களிற்றின் வருத்தஞ் சொலியப், பிடிபடி முறுக்கிய பெருமரப் பூசல்" (அகநா. அ : 9-11.)

6. தலைவன் கேண்மை : குறுந். ௬௧ : 5, ஒப்பு. (௩0அ)

## தோழி கூற்று

[பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனை நோக்கி, "நீ எம்மை அகன்று எமக்கு இன்னாதன செய்யினும் யாம் நினக்கு அன்புடையேமாகி ஒழுகுவேம்" என்று தோழி கூறி வாயில் நேர்ந்தது.]

கூ0க. கைவினை மாக்கடஞ் செய்வினை முடிமார்
சுரும்புண மலர்ந்த வாசங் * கீழ்ப்பட
நீடின வரம்பின் † வாடிய விடினும்
கொடியரோ நிலம்பெயர்ந் துறைவே மென்
பெயர்த்துங் கடிந்த செறுவிற் பூக்கும் [னூது
நின்னூர் நெய்த லனையேம் பெரும
நீயெமக், ‡ கின்னா தனபல செய்யினும்
நின்னின் றமைதல் வல்லா மாறே.

எ - து. பரத்தையிற் பிரிந்துவந்த கிழவற்குத் தோழி வாயில் நேர்ந்தது.

உறையூர்ச் சல்லியன் குமாரன்.

(ப - ரை.) பெரும - தலைவ, நீ எமக்கு—, இன்னாதன பல செய்யினும் - இன்னாதனவாகிய பல செயல்களைச் செய்தாலும், நின் இன்று அமைதல் வல்லாமாறு - நின்னை இன்றிப் பொருந்துதற்கு வன்மையில்லாமையின், யாம், கைவினை மாக்கள் - தொழில் புரியும் உழவர், தம் செய் வினை முடிமார் - தமது செய்தொழிலை முடிப்பாராகி, சுரும்பு உண மலர்ந்த வாசம் கீழ்பட - வண்டு உண்ணும்படி மலர்ந்த மலரின் மணம் கீழே படும்படி, நீடின வரம்பின் வாடிய விடினும் - நீண்ட வரப்பிலே வாடும்படி விட்டாலும், பெயர்த்தும் கடிந்த செறுவில் - மீட்டும் தம்மை நீக்கிய வயலினிடத்தே, பூக்கும் - மலர்கின்ற, நின் ஊர் நெய்தல் அனையேம் - நின் ஊரின்கண்ணுள்ள நெய்தலைப்போன்ற தன்மையையுடையேமாயினேம்.

(முடிபு.) பெரும, நீ எமக்கு இன்னாதன செய்யினும், வல்லாமாறு, நெய்தல் அனையேம்.

(கருத்து.) நின்னையின்றி அமைந்திருத்தல் எமக்கு இயலாமையின் நீ இன்னாதன செய்யினும் நின்னை ஏற்றுக்கொள்வேம்.

---

(பி - ம்.) * கீழ்ப்ப. † வாட. ‡ இன்னாகிய.

(வி - ரை.) கைவினைமாக்க ளென்றது இங்கே உழவர்களை. செய்வினை - உழவு. அது முடித்தற்குக் களைபறித்தனர். நெய்தற் கிழங்கு செறுவில் இருத்தலின் அது மீட்டும் பூத்தது.

நெய்தல் தனக்கு இன்னா செய்த உழவரது செறுவில் மீட்டும் பூத்ததைப் போல எமக்கு இன்னா செய்த நின்பால் மீட்டும் அன்புடையேமாயினேமென்று உவமையை விரித்துக் கொள்க.

கொடியரோ: ஓ, அசை நிலை; இரங்கற் குறிப்புமாம். இன்னா தன பலவென்றது, பரத்தையரோடு சென்று நீராடியது முதலிய செயல்களை.

வல்லாமாறு - வன்மையில்லாத காரணத்தினால்; மாறு: ஏதுப் பொருள் தருவதோர் இடைச்சொல் (புறநா. ச : 17, உரை.)

## ஒப்புமைப் பகுதி

... ப்போர் அக்களையை வரம்பின்மேல் எறிதல்: 'குறுநரிட்ட குவளையம் போதொடு - களைபறிப்பார் வரம்பிலிட்ட குவளைப் பூவுடனே' (சிலப். ௧௦: 86, அடியார்.); "கடுங்கை வயலுழவர் காலைத் தடிய, மடங்கி யரியுண்ட நீலம் - தடஞ்சேரா, நீளரிமேற் கண்படுக்கும்" (தண்டி. 24, மேற்.); "கடைசியர் களைதரு நீலம், செய்வரம் பரும்பு" (திருவிசைப்பா, கருவூர்த்தேவர், கோயில், 2); "கெட்ட சிறு மருங்கிற் கிழ்மகளிர் நீள்வரம்பி, விட்ட பசுங்குவளை" (நள.)

5-6. நெய்தல் செறுவிற் பூத்தல்: "நீர்ச்செறுவி னீணெய்தற், பூ" (பட். 11-2); "வண்டுமூசு நெய்த னெல்லிடை மலரும், அரியலங் கழனி" (நற். ௧௯௦ : 5-6.)

நெய்தற் களை: "நெல்லரி தொழுவர் கூர்வா ளுற்றெனப், பல்லிதழ் தயங்கிய கூம்பா நெய்தல்" (நற். ௧௯௫ : 6-7); "தண்ணறு நெய்தற் றளையவிழ் வான்பூ, வெண்ணெ லரிநர் மாற்றின ரறுக்கும்" (ஐங். ௧௯௦ : 1-2.)

7. தலைவன் இன்னாதனசெய்தல்: குறுந். உ௮௮ : 3-4, ௩௧௭ : 6.

8. தலைவனது இன்றியமையாமை: "நீரின் றமையா வுலகம் போலத், தம்மின் றமையா நந்நயந் தருளி", "தம்மல தில்லா நந்நயந் தருளி" (நற். ௧ : 6-7, ௧௮௧ : 1); "நின்னல தில்லா விவள்" (ஐங். ௭௧ : 4); "நின்னின், றிமைப்புவரை வாழாண் மடவோள்" (கலி. உ௧ : 12-3.)

6-8. தலைவன் இன்னாசெயினும் தலைவி அவனை விரும்புதல்: (குறுந். ௩௧௭ : 4-7); "நல்கா யாயினு நயனில செய்யினும், நின்வழிப்

பஉேமென் ரேழி" (நற். உசஎ : 6-7); "இடர்களையா ரேனு மெமக்கி ரங்கா ரேனும், படரு நெறிபணியா ரேனும் - சுடருருவில், என்பறாக் கோலத் தெரியாடு மெம்மானார்க், கன்பறா தென்னெஞ் சவர்க்கு" (காரைக்காலம்மையார் அற்புதத் திருவந்தாதி, 2.); "கண்டா ரிகழ்வனவே காதலன்றான் செய்திடினும், கொண்டானை யல்லா லறியாக் குலமகள்போல்" (பெருமாள் திருமொழி.) (௬0௯)

---

தலைவி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்தகாலத்தில் தன்னை வற்புறுத்திய தோழியின்பாற் சினமுற்று, "என் நிலையைத் தலைவருக்கு உரைப்பாருளராயின் என் உயிர் உளதாகும்" என்று கூறியது.]

௬௧0. புள்ளும் புலம்பின பூவுங் கூம்பின
கானலும் * புலம்புநனி யுடைத்தே வானமும்
நம்மே போலு மம்மர்த் தாகி
எல்லை கழியப் புல்லென் றன்றே
இன்னு † முளெனே தோழி ‡ யிந்நிலை
தண்ணிய கமழு ஞாழற்
றண்ணந் துறைவர்க் குரைக்குநர்ப் பெறினே.

எ - து. வரைவிடை முனிந்து கிழத்தி தோழிக்கு உரைத்தது.

பெருங்கண்ணன்.

(ப - ரை.) தோழி—, புள்ளும் புலம்பின - பறவைகளும் ஒலித்தன; பூவும் கூம்பின - மலர்களும் குவிந்தன; கானலும் புலம்பு நனி உடைத்து - கடற்கரைச்சோலையும் தனிமையை மிகவுடையதாயிற்று; வானமும்—, நம்மே போலும் மம்மர்த்து ஆகி - நம்மையே போன்ற மயக்கத்தையுடையதாகி, எல்லை கழிய - பகல் கழிய, அதனால், புல்லென்றன்று - பொலிவழிந்தது; இ நிலை - இந்த என் நிலைமையை, தண்ணிய கமழும் ஞாழல் - தண்ணியனவாய் மணம் வீசுகின்ற மலரையுடைய ஞாழல்கள் வளர்ந்த, தண்ணந்துறைவர்க்கு உரைக்குநர் பெறின் - தண்ணிய அழகிய துறையை

---

(பி - ம்.) * புலம்பு பெரிதுடைத்தே. † முளனே. ‡ முன்னிலை.

உடைய தலைவருக்கு உரைப்பாரைப் பெற்றால், இன்னும் உளேன் - இனிமேலும் உயிரோடு இருப்பேனாவேன்.

(முடிபு.) தோழி, புலம்பின; கூம்பின; உடைத்து; புல்லென்றன்று; துறைவர்க்கு உரைக்குநர்ப்பெறின் இன்னும் உளேன்.

(கருத்து.) யாரேனும் என் துயர்நிலையைத் தலைவனுக்கு உரைப்பாராயின் நன்றாம்.

(வி - ரை.) பூவென்றது ஆம்பல் முதலிய நீர்ப்பூக்களை. நம்மே போலும் மம்மர்த்தாகி யென்பதனால் தான் மயக்கமுடையளாதலைத் தெரிவித்தாள். எல்லை - சூரியனெனலுமாம். ஞாழல் - புலிநகக் கொன்றை. 'என்னைக் கடிந்து சொல்வாரையன்றி என் துயர்நிலைக்கு இரங்கித் தலைவர்பாற் சென்று இந்நிலையைத் தெரிவிப்பார் ஒருவரும் 'இலர்' என்னும் நினைவினால், 'உரைக்குநர்ப்பெறினே' என்றாள்.

## மேற்கோளாட்சி

மு. * தலைமகள் தன் துயர் தலைவற்குரைத்தல் வேண்டியது (நம்பி. 164.)

## ஒப்புமைப் பகுதி

1. மாலையில் மலர் கூம்புதல்: குறுந். கஉஉ : 2-3.

2. கானல் புலம்புடைத்தாதல்: "இனிப்புலம் பின்றே கானலும்" (அகநா. உசo : 4.)

4. புல்லென்றல்: குறுந். கக : 2, ஒப்பு.

2-4. "அமரக மருங்கிற் கணவனை யிழந்து, தமரகம் புகூஉ மொருமகள் போலக், கதிராற்றுப் படுத்த முதிராத் துன்பமோ, டந்தி யென்னும் பசலைமெய் யாட்டி, வந்திறுத் தனளான் மாநகர் மருங்கென்" (மணி. ரு : 137-41.)

6. தண்ணிய கமழும் : குறுந். உஎந : 3.

5-7. (குறுந். கூஅ: 1-3); "வரைப்பான் மதுரைத் தமிழ்தெரி வாணன்றென் மாறைவையை, நுரைப்பான் முகந்தன்ன நுண்டுகி லாயிந்த நோயவர்க்கின், றுரைப்பா ருளரே லுயிரெய்த லாநமக் கூர்திரை சூழ், தரைப்பால் வளரும் புகழெய்த லாமவர் தங்களுக்கே" (தஞ்சை. 217.)

(நகo)

* இக்கருத்து சிறப்புடையதாகத் தோற்றுகின்றது.

தலைவி கூற்று

["இரவில் தலைவன் ஈண்டு வந்து செல்வதை ஆயத்தார் யாவரும் அறிந்தனர்; அதனால் அலர் பெருகியது" என்று தலைவி, தலைவன் சிறைப்புறத்தில் இருப்பத் தோழிக்குச் சொல்லியது.]

௩௧௧. அலர்யாங் *கொழிவ தோழி பெருங்கடற்
புலவுநா றகன்றுறை வலவன் றாங்கவும்
நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர்
யான்கண் †டனனோ விலனோ பாணாள்
ஓங்கல் வெண்மணற் றாழ்ந்த புன்னைத்
தாதுசேர் நிகர்மலர் கொய்யும்
ஆய மெல்லா முடன்கண் டன்றே.

எ - து. அலரஞ்சிய தலைமகள், தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

சேந்தன்கீரன்.

(ப - ரை.) தோழி—, பெரு கடல் - பெரிய கடலினது, புலவு நாறு அகல் துறை - புலால்நாற்றம் வீசும் அகன்ற துறையின் கண்ணே, வலவன் தாங்கவும் - பாகன் தடுக்கவும், நில்லாது கழிந்த - நில்லாமற்சென்ற, கல் என் கடு தேர் - கல்லென ஆரவாரம் செய்யும் விரைந்த தலைவனது தேரை, யான் கண்டனனோ இலனோ - நான் கண்டேனோ இல்லையோ, பால் நாள் - நடுஇரவின்கண், ஓங்கல் வெண் மணல் தாழ்ந்த புன்னை - உயர்ச்சியையுடைய வெள்ளிய மணலினிடத்துத்தாழ்ந்து வளர்ந்த புன்னைமரத்தினது, தாது சேர் நிகர் மலர் கொய்யும் - மகரந்தம் சேர்ந்த ஒளியையுடைய மலர்களைப் பறிக்கும், ஆயம் எல்லாம் உடன் கண்டன்று - மகளிர் கூட்டமெல்லாம் ஒருங்கே கண்டது; இங்ஙனமாக, யாங்கு அலர் ஒழிவ - எவ்வாறு பழிமொழி ஒழிவனவாகும்.

(முடிபு.) தோழி, தேர் யான் கண்டனனோ இலனோ, ஆயமெல்லாம் கண்டன்று; அலர் யாங்கு ஒழிவ?

(கருத்து.) தலைவன் வந்துசெல்வதை யாவரும் அறிந்து பழிமொழி கூறுகின்றனர்.

---

(பி - ம்.) * கொல்வ. † டன்றோ விலனே.

(வி - ரை.) *தாங்குதல் - வேகமாகச் செல்லுதலைத் தடுத்தல்; "நிமிர்பரிய மாதாங்கவும்"* (புறநா. *௧௪* : 7.) வேகத்தினால் தேர் கல்லென்னும் முழக்கத்தையுடையதாயிற்று. ஓங்கல் வெண்மணல் - மணல்மேடு; மணற்குன்றென்பர். புன்னைத் தாதுசேர் நிகர்மலர் கொய்யுமென்றது ஆயத்தினர் இயல்பைக் கூறியபடி. நிகர்மலர் - ஒளியையுடைய மலர்.

இதனால் தலைவி தலைவனுக்கு அலர்மிகுதியைப் புலப்படுத்தி வரைந்துகொள்ள வேண்டுமென்பதை அறிவுறுத்தினாளாயிற்று.

## மேற்கோளாட்சி

மூ. *அலர் பார்த்துற்ற அச்சக்கிளவி* (நம்பி. 164.)

## ஒப்புமைப் பகுதி

3. கடுந்தேர் : குறுந். *௪௰* : 1.

2-3. தேரை வலவன் தடுத்து ஓட்டுதல்: "*வலவன், வள்புவலித் தூரி னல்லது முள்ளுறின், முந்நீர் மண்டில மாதி யாற்றா, நன்னால்கு பூண்ட கடும்பரி நெடுந்தேர்*", "*நுண்ணயிர் பரந்த தண்ணய மருங்கின், நிரைபறை யன்னத் தன்ன விரைபரிப், புல்லுளைக் கலிமா மெல்லிதிற் கொளீஇ, வள்பொருங் கமையப் பற்றி மூழ்கிய, பல்கதி ராழி மெல்வழி யறுப்பக், காலென மருள வேறி நூலியற், கண்ணோக் கொழிக்கும் பண்ணமை நெடுந்தேர், வல்விரைந் தூர்தி நல்வலம் பெறுக*" (அகநா. *௧௦௪* : 3-6, *௨௩௪* : 2-9.)

4. பானாள் : குறுந். *௧௪* : 3, ஒப்பு.

3-4. பானாளில் தலைவன் தேர் வருதல்: குறுந். *௩௦௧* : 4-6.

5. ஓங்குதல் வெண்மணல் : குறுந். *௨௩௬* : 3, ஒப்பு.

மணற் குன்றிற் புன்னை: "*குன்றத் தன்ன குவவுமண லடைகரை, நின்ற புன்னை*" (குறுந். *௨௩௬* : 3-4.)

6. நிகர்மலர் : குறுந். *௩௨௧* : 6; அகநா. *௧௧* : 12; சிலப். *௩* : 2; மணி. *௩* : 15. (௩௧௧)

தலைவன் கூற்று

[இரவுக்குறிக்கண் தலைவியை எதிர்ப்பட்டு நீங்கும் தலைவன் தன் நெஞ்சை நோக்கி, "இவள் இரவில் நம்மோடு ஒத்த ஒழுக்கமும் பகலில் அயலாரைப் போன்ற ஒழுக்கமும் உடையளாக இருக்கும் ஆற்றலுடையாள்" என்று கூறி வியந்தது.]

௩௧௨. இரண்டறி * கள்விநங் காத லோளே
முரண்கொ டுப்பிற் செவ்வேன் மலையன்
முள்ளூர்க் கான † நாற வந்து
நள்ளென் கங்கு னம்மோ ரன்னள்
கூந்தல் வேய்ந்த விரவுமல ருதிர்த்துச்
சாந்துளர் நறுங்கதுப் பெண்ணெய் நீவி
அமரா முகத்த ளாகித்
தமரோ ரன்னள் வைகறை யானே.

எ - து. இரவுக்குறி வந்து நீங்குகின்ற தலைமகன், தன்னெஞ்சிற்கு வரைவுடைமை வேட்பக் கூறியது.

கபிலர்.

(ப - ரை.) நெஞ்சே, நம் காதலோள் - நம் தலைவி, இரண்டு அறி கள்வி - இரு வேறுபட்ட ஒழுகலாற்றை அறிந்த கள்ளத் தன்மையை யுடையாள், நள்ளென் கங்குல் - செறிந்த இருளையுடைய இரவில், முரண் கொள் துப்பின் - மாறுபாட்டைக் கொண்ட வலியையுடைய, செ வேல் மலையன் - சிவந்த வேலையுடைய மலையனது, முள்ளூர் கானம் நாற வந்து - முள்ளூர் மலைக்காட்டிலுள்ள நறுமணத்தைப் போன்ற மணம் வீசும்படி வந்து, நம் ஓரன்னள் - நம்மோடு ஒத்தவளாயினாள்; வைகறையான் - விடியற் காலத்தில், கூந்தல் வேய்ந்த - நான் தனது கூந்தலில் அணிந்த, விரவு மலர் உதிர்த்து - பலவாகக் கலந்த மலர்களை உதிர்த்துவிட்டு, சாந்து உளர் நறு கதுப்பு எண்ணெய் நீவி - மயிர்ச்சாந்தையிட்டுக் கோதிய நறிய கூந்தலில் எண்ணெயைத் தடவி, அமரா முகத்தள் ஆகி - பொருந்தாத முகத்தையுடையவளாகி, தமர் ஓரன்னள் - தன் தமரோடு ஒத்தவளாயினள்.

---

(பி - ம்.) * களவினங். † நண்ணுற.

(முடிபு.) நம் காதலோள் இரண்டறி கள்வி; நள்ளென் கங்குல் வந்து நம்மோரன்னள்; வைகறையான், உதிர்த்து நீவி ஆகித் தமரோ ரன்னள்.

(கருத்து.) தலைவி நம்முடைய தொடர்பை அயலார் அறியா வண்ணம் கரந்து ஒழுகுகின்றாள்.

(வி - ரை.) துப்பு - துணைவலி. செவ்வேல் - இரத்தத்தாற் சிவந்தவேல். மலையன் - மலையமான் திருமுடிக்காரியென்னும் வள்ளல்; இவனைத் தேர்வண் மலையனென்பர்.

மலையன், மன்னர்களுள் யாருக்குத் துணையாகச் செல்வானோ அம் மன்னன் போரில் வெற்றி பெறுவான்; ஆதலின் அவன் 'முரண்கொள் துப்பின் மலையன்' எனச் சிறப்பிக்கப்பட்டான். அவனைச்சேர சோழ பாண்டியர்கள் தமக்குத் துப்பாக வேண்டுமென்று இரப்பார்கள்;

"வீயாத் திருவின் விறல்கெழு தானை
மூவரு ளொருவன் றுப்பா கியரென
வேத்தினர் தரூஉங் கூழே நுங்குடி
வாழ்த்தினர் வரூஉ மிரவல ரதுவே" (புறநா. ௧௨௨ : 4-7.)

'சேரமான் மாந்தரஞ்சேர லிரும்பொறையும், சோழன் இராச சூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் பொருதவழிச் சோழற்குத் துப்பாகிய தேர்வண்மலையனை வடம வண்ணக்கன் பெருஞ்சாத்த னார் பாடிய' செய்யுளில்,

"குன்றத் தன்ன களிறு பெயரக்
கடந்தட்டு வென்றோனு நிற்கூ றும்மே
வெலீஇயோ னிவனெனக்
கழலணிப் பொலிந்த சேவடி நிலங்கவர்பு
விரைந்துவந்து சமந்தாங்கிய
வல்வேன் மலைய னல்ல னாயின்
நல்லமர் கடத்த லெளிதும னமக்கெனத்
தோற்றோன் றானு நிற்கூ றும்மே" (புறநா. ௧௨௫)

என்று, மலையன் துப்பாகியதனால் சோழன் வென்றானென்பதும் சேரன் தோற்றானென்பதும் காணப்படுகின்றன.

முள்ளூர்க்கானம் - முள்ளூர்மலையைச் சார்ந்த காடு; இது மலைய னுக்குரியது.

---

* கபிலர் பாட்டு.

நம்மோரன்னளென்றது, தன் நெஞ்சிற்குப் பொருந்திய அன்பு செய்பவளாக இருந்தாளென்றபடி. தமரோரன்னளென்றது தன் தமர் நம்பால் எங்ஙனம் நொதுமலராக ஒழுகுகின்றனரோ அங்ஙனம் ஒழுகினளென்றபடி. பகலென்றது வைகறை யென்றான் விடிந்த அளவிலே அவள் தமரோரன்னளாயினளென்ற வியப்புத் தோன்ற. பகலில் தலைவியின் மனைக்கு விருந்தினனாகச் சென்றகாலத்துத் தலைவி நொதுமலர்போல் ஒழுகுவதை யறிந்தவனாதலின் இது கூறினான்.

இரவில் தனக்குப் பொருந்தியும் பகலில் தமர்க்குப் பொருந்தியு மொழுகும் இரண்டு தன்மையினளாதலின், இரண்டறிகள்வி யென்றான். தன்னோடுள்ள தொடர்பு தமருக்குப் புலப்படாவாறு கரந்து ஒழுகுதல்பற்றிக் கள்வியென்றான்.

தமரையஞ்சி இங்ஙனம் கரந்தொழுகுகின்றாளென்றமையால், இது நீட்டித்து நிகழ்தலரிதென்பதும் வரைதலே நன்றென்பதும் புலப்பட்டு, வரைவுடைமை வேட்பக் கூறியதாயிற்று.

## மேற்கோளாட்சி

மு. தான் புகுதற்குத் தகுதியில்லாத காலத்துக்கண் அகம்புக்கு எதிர்ப்பட்டுழி, அவரால் நீக்கப்படாத விருந்தின் பகுதியானகியவழித் தலைவன் கூறியது (தொல். களவு. 17, இளம்.); அமராமுகத்தளாதலும் தமரோரன்னளாகுதலும் தலைமகற்குப் புலனாகலின் அவை கண்ணுணர் வெனப்படும் (ஷெ. மெய்ப். 27, பேர்.); தான் வருந்திக் கூறுகின்ற கூற்றினைத் தலைவியைச் சார்த்தித் தலைவன் கூறலின், இவ்வாறு ஆற்றுறாய் இங்ஙனம் கூறினனென்று அஞ்சித் தோழி உணராமல் தலைவி தானே கூடியபொழுது தலைவன் கூறியது (ஷெ. களவு. 11, ந.); 'எஞ்ஞான்றும் கூட்டம் பெற்றமையால் தலைவிமகிழ்தல், இரண்டறிகள்வி யென்னும் பாட்டினுள் தோற்றப்பொலிவை மறைப்பளெனத் தலைவன் கூறியவாற்றால் உணரப்படும்' (ஷெ. ஷெ. 20, ஷெ.)

## ஒப்புமைப் பகுதி

1. கள்வி : மணி : கஅ : 121.

3. கானத்தின்மணம் கூந்தல் மணத்திற்கு : (குறுந். கசுசு : 3-4 ஒப்பு.); "இமயக் கான நாறுங் கூந்தல்" (அகநா. கூகசு : 2.)

2-3. மலையன் முள்ளூர் : "பேரிசை முள்ளூர்ப், பலருடன் கழித்த வொள்வாண் மலையன்" (நற். ௧எ0 : 6-7); "செவ்வேல், முள்ளூர் மன்னன் கழறொடிக் காரி" (அகநா. ௨0௯ : 11-2); * "மலையன், மகிழா தீத்த விழையணி நெடுந்தேர், பயன்கெழு முள்ளூர் மீமிசைப், பட்ட மாரி யுறையினும் பலவே", "பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந", "எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை, அருவழி யிருந்த பெருவிறல் வளவன், மதிமருள் வெண்குடை காட்டி யக்குடை, புதுமையி னிறுத்த புகழ்மேம் படுந" (புறநா. ௧௨௯ : 3-6, ௧௨௬ : 8, ௧எ௪ : 13-6.)

4. நள்ளென் கங்குல் : குறுந். : ௬ : 1, ஒப்பு, ௧௬0 : 4, ஒப்பு.

6. நறுங்கதுப்பு : குறுந். ௨ : 4-5, ஒப்பு.

கதுப்பில் எண்ணெய் நீவுதல் : "எண்ணெயு நானமு மிவை மூழ்கி...கடைகுழன்ற கருங்குழல்கள்" (சீவக. 164.)

7. அமரா முகத்தள் : மலைபடு. 74 ; அகநா. ௨௫௯ : 3.

8. ஓரன்னள் : கலி. ௨௯ : 9, 11, 13. (௯௧௨)

---

## தலைவி கூற்று

[இரவுக்குறி வந்த தலைவன் சிறைப்புறமாக இருப்பத் தோழி இயற்பழித்தவிடத்துத் தலைவி, "அவரது நட்பு என்றும் அழி யாதது" என்று கூறியது.]

௯௧௯. பெருங்கடற் † கரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பிற் சேக்குந் துறைவனொ
டியாத்தேம் யாத்தன்று நட்பே
அவிழ்த்தற் கரிதது முடிந்தமைந் தன்றே.

எ - து. இரவுக்குறி வந்து ஒழுகுங் காலத்துத் தலைமகனது வரவுணர்ந்து, பண்பிலர் என்று இயற்பழித்த தோழிக்கு, அவரோடு பிறந்த நட்பு அழியாத நட்பன்றே வென்று, சிறைப்புறமாகத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

‡ .... .... ....

* கபிலர்பாட்டு. (பி - ம்.) † திரையது.

‡ ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.

(ப - ரை.) தோழி, பெரு கடல் கரையது - பெரிய கடற் கரையின் கண்ணதாகிய, சிறு வெள் காக்கை - சிறிய வெண்மையை யுடைய காக்கையானது, நீத்து நீர் இரு கழி இரை தேர்ந்து உண்டு - வெள்ளமாகிய நீரையுடைய கரிய கழியிடத்து மீனுகிய இரையைத் தேடி உண்டு, பூ கமழ் பொதும்பில் சேக்கும் துறைவனொடு - மலர் மணம் வீசும் சோலையினிடத்துத் தங்கும் துறையையுடைய தலைவ னோடு, யாத்தேம் - நம்மைக்கட்டினேம்; நட்பு யாத்தன்று - அங் ஙனம் கட்டப்பட்ட நட்பு நன்றாகப் பொருந்தியது; அது அவிழ்த் தற்கு அரிது - அது பிறராற் பிரித்தற்கு அரியதாகி, முடிந்து அமைந் தன்று - முடிக்கப்பட்டு அமைந்தது.

(முடிபு.) துறைவனொடு யாத்தேம்; நட்பு யாத்தன்று; அது அவிழ்த்தற் கரிதாகி, முடிந்தமைந்தன்று.

(கருத்து.) தலைமகனது நட்பு அழியாதது.

(வி - ரை.) தலைவன் வரையாது வந்தொழுகுவது குறித்துத் தோழி, "அவர் நம் நிலையையறியும் பண்பிலர்" என்று அவ னது இயல்பை இழித்துக் கூறினுள்; அது கேட்ட தலைவி, "அவர் நமது நிலையை உணர்ந்தவரே; அவரது நட்பு என்றும் கெடாத உறுதியினது" என்று கூறி அவன் விரைவில் வரைந்து கொள்வா னென்பதைப் புலப்பட வைத்தாள். இது கேட்ட தலைவன் வரைந்து கோடல் பயன்.

கடற்கரையின்கண் இரை தேர்ந்துண்ட காகம் பூக்கமழ் பொதும்பில் தங்குந்துறைவனென்றது, களவொழுக்கத்தின்கண் வந்து ஒழுகும் தலைவன் வரைந்துகொண்டு தன்மனையிலிருந்து இல் லறம் நடத்துவானென்னும் குறிப்புணர்த்தியது.

யாத்ததாக நட்பைக் கூறினமையின் நட்பை முடியாக (முடிச்சு) உருவகித்தாளாயிற்று; "அற்புத் தளையு மவிழ்ந்தன" (நாலடி. 12) என்று பிறரும் கூறுதல் காண்க.

பாலவயப்பட்டு நின்றதாதலின் நட்பு அவிழ்த்தற்கு அரிதா யிற்று.

## மேற்கோளாட்சி

மு. தலைவனைத் தவறிலனென்று தலைவி கூறியது (தொல். கற்பு 6, ந.)

## ஒப்புமைப் பகுதி

1, மு. குறுந். உ௪௬ : 1, ஒப்பு.

1-3, மு. ஐங். ௧௬உ : 1-4,

3-4. தலைவனது நட்பு : குறுந். உ௪எ : 6-7, ஒப்பு.

3-5. தலைவன் நட்பு, கெடாதது : குறுந். ௧எ0 : 4-5, உ௬௪ : 4-5. (௩௧௩)

---

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற கார்ப்பருவம் வந்தவிடத்து வேறுபட்ட தலைவியை நோக்கி, "நீ ஆற்றல் வேண்டும்" என்று வற்புறுத்திய தோழிக்கு, "அவர் கூறிய பருவம் வந்தது; அவர் வந்திலர்" என்று தலைவி வருந்திக் கூறியது.]

௩௧௪. சேயுயர் விசும்பி னீருறு கமஞ்சூற்
றண்குர லெழிலி யொண்சுட * ரிமைப்பப்
† பெயருழ் பிருளிய புலம்புகொண் மாலையும்
வாரார் வாழி தோழி வருஉம்
‡ மின்னுற ழிளமுலை ஞெமுங்க
இன்னா வைப்பிற் ¶ சுரனிறந் தோரே.

எ - து. பிரிவிடை வேறுபட்ட கிழத்தி வற்புறுத்துந் தோழிக்குப் பருவங்காட்டி அழிந்து கூறியது.

$ பேரிசாத்தன்.

(ப - ரை.) தோழி—, இன்னா வைப்பின் - துன்பத்தைச் செய்யும் இடங்களையுடைய, சுரன் இறந்தோர் - பாலை நிலத்தைக் கடந்து சென்றவர், சேய் உயர் விசும்பின் - நெடுந்தூரம் உயர்ந்த வானத்தின்கண், நீர் உறு கம சூல் - நீர்மிக்க நிறைந்த கருப்பத்தையுடைய, தண் குரல் எழிலி - தண்ணிய முழக்கத்தையுடைய மேகம், ஒள் சுடர் இமைப்ப - ஒள்ளிய மின்னலின் ஒளி விட்டு

---

(பி - ம்.) * ரிழைப்பப். † பெயருமிருளிய. ‡ இன்னுறலிளமுலை. ¶ சுரமிறந்தோரே. $ பெருஞ்சாத்தன்.

விளங்க, பெயல் தாழ்பு இருளிய - மழைபெய்து இருண்ட, புலம்பு கொள் மாலையும்-தனிமையைக் கொண்ட மாலைக்காலத்திலும், வரூஉம்-வளருகின்ற, மின் உறழ் இள முலை ஞெமுங்க - மின்னுதல் மிக்க இளைய முலைகள் அழுந்தும்படி தழுவுதற்கு; வாரார் - வாராராயினர்.

(முடிபு.) தோழி, சுரனிறந்தோர் ஞெமுங்க மாலையும் வாரார்.

(கருத்து.) கார்ப்பருவம் வந்தும் தலைவர் வந்திலர்.

(வி - ரை.) "வானினு முயர்ந்தன்று" (குறுந். ௩ : 1) என்று சிறப்பித்தலின், சேயுயர் விசும்பென்றாள். தண்ணிய எழிலி, குரலெழிலி யெனக் கூட்டிப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். மாலை : கார்காலத்துமாலை. மாலையும் : உம்மை, சிறப்பும்மை. வாழி : அசை நிலை. வரூஉம் - எழும்; 'வருமுலை - எழுகின்ற பெரிய முலை' (சிறுபாண். 72, ந.) இன்னுறல் இளமுலையென்னும் பாடத்திற்கு, இனிய முயக்கத்தையுடைய இளைய நகிலென்று பொருள் கொள்க; 'இன்னுறல் வியன் மார்ப - இனிய முயக்கத்தையுடைய அகற்சியை யுடைய மார்பனே' (கலி. அ : 23, ௧௦௦ : 21, ந.) ஞெமுங்கத் தழுவுதற்கென ஒருசொல் வருவிக்க.

## ஒப்புமைப் பகுதி

1-2. கமஞ்சூலெழிலி : "கமஞ்சூன் மாமழை" (முருகு. 7 ; நற். ௩௪எ : 1; அகநா. ௧௩௪ : 2.)

5, பி - ம். இன்னுறல் : அகநா. ௩௩௧ : 3.

6. சுரனிறந்தோர் : குறுந். ௨௧௧ : 7, ௨௪௫ : 7, ௨௬௦ : 8. (௩௧௪)

---

## தலைவி கூற்று

["தலைவன் வரைவிடை வைத்துப் பிரியுங்காலத்தில் ஆற்றும் ஆற்றல் உடையையோ?" என்று வினவிய தோழிக்கு, "அவனது விருப்பப்படியே ஒழுகும் தன்மையினேனாதலின் ஆற்றுவேன்" என்று தலைவி கூறியது.]

௩௧௫. எழுதரு மதியங் கடற்கண் டாஅங்
கொழுகுவெள் ளருவி யோங்குமலை நாடன்
ஞாயி * றனையன் றோழி
நெருஞ்சி யனையவென் பெரும்பணைத் தோளே.

எ - து. வரைவிடை யாற்றகிற்றியோ என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

† மதுரை வேளாதத்தன்.

(ப - ரை.) தோழி—, எழு தரு மதியம் - உதயமாகின்ற சந்திரன், கடல் கண்டா அங்கு - கடலினிடத்தே காணப்பட்டாற்போல, ஒழுகு வெள் அருவி - ஓடிவருகின்ற வெள்ளிய அருவியையுடைய, ஓங்கு மலை நாடன் - உயர்ந்தமலைநாட்டையுடைய தலைவன், ஞாயிறு அனையன் - சூரியனைப் போன்றவன்; என் பெரு பணை தோள் - என் பெரிய மூங்கிலைப் போன்ற தோள்கள், நெருஞ்சி அனைய - நெருஞ்சி மலர்களைப் போன்றன.

(முடிபு.) தோழி, மலைநாடன் ஞாயிறனையன்; என் தோள் நெருஞ்சி யனைய.

(கருத்து.) தலைவன் கருதுவதையே யானும் கருதி ஆற்றியிருப்பேன்.

(வி - ரை.) மதியமென்றது இங்கே பிறையை. அருவிக்குப் பிறையும் மலைக்குக் கடலும் உவமைகள். நெருஞ்சிமலர் ஞாயிற்றையே நோக்கி நிற்கும் இயல்பினது; ஞாயிறு கீழ்த்திசையிருப்பின் கிழக்கு நோக்கியும் மேற்றிசைச் செல்லின் மேற்கு நோக்கியும் உச்சி வானத்திலிருப்பின் உச்சியை நோக்கியும் நிற்பது. ஞாயிற்றை நோக்கிய நெருஞ்சிபோலத் தலைவனை என்தோள் நோக்கி நிற்குமென்றாள்.

தோள்மேல் வைத்துக்கூறினும் 'அவனது கருத்தின்படியே யான் ஒழுகுவேன்' என்ற தனது இயல்பையே கருதினள்.

## மேற்கோளாட்சி

மு. தலைமகள் பிரிவுடன்பட்டது (தமிழ்நெறி. 24.)

---

(பி - ம்.) * றனையனென். † தும்பிசேர் கீரன்.

## ஒப்புமைப் பகுதி

1. கடற்கண்டாங்கு : ஶநக. 2.

2-3. தலைவனுக்கு ஞாயிறு : "ஞாயி றனையன் யானே" (தமிழ் நெறி. மேற். 55.)

4. பணைத்தோள் : குறுந். உளஅ : 6, ஒப்பு.

3-4. நெருஞ்சி ஞாயிற்றை நோக்கி நிற்றல் : "சுடரொடு திரிதரு நெருஞ்சி போல" (அகநா. ௩௩௬ : 18); "பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ, வேர்தரு சுடரி னெதிர்கொண் டாஅங்கு" (புறநா. கடுஙு: 4-5); "செங்கதிர் விரும்பும் பைங்கொடி நெருஞ்சிப், பொன்புனை மலர்" (பெருங். உ. 4 : 14-5); "வெஞ்சுடர் நோக்கு நெருஞ்சியில்" (பாண்டிக்.); "நீள்சுடர் நெறியை நோக்கு நிரையிதழ் நெருஞ்சிப் பூப்போல்" (சீவக. 461); "எழுனைப் புரவியொ டெழுகதிர் நோக்கிய, சிற்றிலை நெருஞ்சிப் பொற்பூ வென்ன" (கல். கூஙு : 14-5); "நிரம்பு கதிர்நேர் நெருஞ்சியெனத் தன்பால், திரும்புவிழி யாயமொடு சென்றாள்" (வேங்கையுலா, 352.) (௩கரு)

---

### தலைவி கூற்று

[வரைவிடை வேறுபட்ட தன்னை வினவிய தோழிக்கு, "தலைவன் இன்னும் வந்திலன் ; என் துன்பத்தை அன்னை யறியின் உயிர் நீப்பேன். அங்ஙனம் அறிவாளோவென அஞ்சி வேறு பட்டேன்" என்பதுபடத் தலைவி கூறியது.

௩கசு. ஆய்வளை ஞெகிழவு மயர்வுமெய் * நிறுப்பவும்
நோய்மலி வருத்த மன்னை யறியின்
† உளெனோ வாழி தோழி விளியா
துரவுக்கடல் பொருத விரவுமண லடைகரை
ஓரை மகளி ரோராங் காட்ட
வாய்ந்த வலவன் றுன்புறு ‡ துனைபரி
ஓங்குவரல் விரிதிரை களையும்
துறைவன் சொல்லோ பிறவா யினவே.

---

(பி - ம்.) * நிற்பவும். † உளெனே. ‡ துனைப்பரி வோங்கு. ¶ ஓங்கு வர லருவி விரிதிரை.

எ - து. "வரைவிடை வேறுபடுகின்றாய்" என்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

தும்பிசேர் கீரன்.

(ப - ரை.) *தோழி—, விளியாது - கெடாமல், உரவு கடல் பொருத - வலியையுடைய கடலால் அலைக்கப்பட்ட, விரவு மணல் அடை கரை - மணல் விராவிய அடைகரையினிடத்து, ஓரை மகளிர் - விளையாட்டையுடைய பெண்கள், ஓராங்கு ஆட்ட - ஒரு தன்மையாக அலைக்க, வாய்ந்த அலவன் - பொருந்திய நண்டினது, துன்புறு துனை பரி - வருத்தம் மிக்க விரைந்த செலவை, ஓங்குவரல் விரிதிரை களையும் - உயர்ந்து வருதலையுடைய விரிந்த அலை அந்நண்டைக் கொண்டு சென்று நீக்குகின்ற, துறைவன் - துறையையுடைய தலைவன், சொல்—, பிற ஆயின - வேறுபாடுடையனவாயின; ஆய்வளை ஞெகிழவும் - அழகிய வளைகள் நெகிழ்ந்து போகவும், அயர்வு மெய் நிறுப்பவும் - அயர்வினை மெய்யின் கண்ணே நிலைக்கச் செய்யவும், நோய் மலி வருத்தம் - துன்பமிக்க எனது வருத்தத்தை, அன்னை அறியின் - தாய் அறிவாளாயின், இன்னும் உளெனோ - இனிமேலும் உயிரோடு இருப்பேனோவேனோ?*

(முடிபு.) *தோழி, துறைவன் சொல் பிற ஆயின; வருத்தம் அன்னை அறியின் உளெனோ?*

(கருத்து.) *தலைவன் வாராமையால் துன்புற்ற என் நிலையைத் தாய் அறியின் யான் உயிர் நீப்பேன்.*

(வி - ரை.) *ஞெகிழவும் நிறுப்பவும் மலி வருத்தமென இயைக்க. நோய் - உடலின்கண் தோற்றுவது; காம நோயுமாம். உளெனோ: ஓ, எதிர்மறைப் பொருளில் வந்தது. வாழி: அசைநிலை.*

*பரிவென்னும் பாடத்திற்குத் துன்புறுதலென்று பொருள் கொள்க.*

*மகளிர் அலைக்குங் காலத்தில் அவர்க்கு அஞ்சி விரைந்து ஓடிய நண்டை அம்மகளிர் கைப்படாவாறு அலை கொண்டு சென்றது; அதனால் அந்நண்டின் துன்பமும் விரைந்தநடையும் ஒழிந்தன. இது, தாயை அஞ்சி நின்ற எனது நோய்மலி வருத்தத்தை, வரைந்து கொண்டு என்னைத் தன் மனைவியாகப் பெறுமாற்றால் நீக்கற்குரியவன் தலைவனென்னும் குறிப்பை உணர்த்தியது.*

சொல் - இத்துணைக்காலத்துள் வருவேனென்ற சொல். பிற மாறுபட்ட பொருளுடையன. தலைவன் சொல் பிறவாயின - தலைவன் சொற்கள் பொய்பட்டன; அவன் தான் குறித்த காலத்தே வந்திலனென்றபடி (ஐங். கசுஉ : 4, உரை.) பிரிந்திரேனென்றும், விரைவில் வருவேனென்றும், நீட்டிப்பின் ஆற்றேனென்றும் பலபடியாகக் கூறியவையாதலின் சொல்லைப் பன்மையாற் கூறினாள்.

சொல்லோ : ஓ, அசைநிலை. ஏ : அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. தலைவன் பிரிவினால் வளை நெகிழ்தல் : குறுந். கக : 1, ஒப்பு.

2. நோய்மலி வருத்தம் : நற். கூச : 13; அகநா. உ0ரு : 6.

3, பி - ம். உளனே வாழி தோழி : நற். கககூ : 5.

வாழிதோழி : குறுந். உகூ0 : 4, ஒப்பு.

4. "உரவுத்திரை பொருத திணிமண லடைகரை" (குறுந். கஎரு : 2); "உரவுத்திரை, அடுங்கரை" (குறிஞ்சிப். 178-9.)

மணலடைகரை : "மோட்டுமண லடைகரை" (அகநா. க0 : 11.)

5. ஓரைமகளிர் : குறுந். சஅ : 3, ஒப்பு ; நற். கருரு : 1, கூகூஅ : 5 ; கலி. எரு : 4.

ஓராங்கு : குறுந். கூஅ : 5, உருஎ : 1.

5-6. மகளிர் அலவனாட்டுதல் : குறுந். கூ0கூ : 7, ஒப்பு.

4-6. மணலடைகரையில் அலவனாட்டுதல் : "பன்மலர் வேய்ந்த நலம்பெறு கோதையள், திணிமண லடைகரை யலவ னாட்டி" (அகநா. உஅ0 : 2-3.)

8, மு. ஐங். கசுஉ : 4. (கூககூ)

---

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்தில் ஆற்றாளாகிய தலைவியை நோக்கி, "தலைவன் குறித்த பருவத்தே வருவான்" என்று தோழி கூறி வற்புறுத்தியது.]

௩௧எ. புரிமட மரையான் கருநரை நல்லேறு
தீம்புளி நெல்லி மாந்தி யயலது
தேம்பாய் மாமலர் நடுங்க வெய்துயிர்த்
தோங்குமலைப் பைஞ்சுனை பருகு நாடன்
நம்மைவிட் டமையுமோ மற்றே கைம்மிக
வடபுல வாடைக் கழிமழை
தென்புலம் படருந் தண்பனி நாளே.

எ - து. பிரிவிடைக் கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

மதுரைக் கண்டரதத்தன்.

(ப - ரை.) புரி மடம் மரையான் - விரும்புகின்ற மடப்பத்தை யுடைய மரையானினது, கரு நரை நல் ஏறு - கருமையையும் பெருமையையுமுடைய நல்ல ஆண், தீ புளி நெல்லி மாந்தி - இனிய புளிப்பையுடைய நெல்லிக்காயைத் தின்று, அயலது - அருகில் உள்ளதாகிய, தேம் பாய் மா மலர் - தேன் பரவிய அழகிய மலர்கள், நடுங்க வெய்து உயிர்த்து - நடுங்கும்படி வெப்பமாகிய மூச்சை விட்டு, ஓங்கு மலை பசு சுனை - உயர்ந்த மலையினிடத்துள்ள பசிய சுனைநீரை, பருகும் நாடன் - உண்ணுகின்ற நாட்டையுடைய தலைவன், கைம் மிக - மிகும்படி, வடபுலம் வாடைக்கு - வடதிசையினின்றும் வரும் வாடைக்காற்றுக்கு, அழி மழை - அழிந்த மேகம், தென் புலம் படரும் - தென்திசையை நோக்கிச் செல்லும், தண் பனி நாள் - தண்ணிய பனிப்பருவத்தில், நம்மை விட்டு அமையுமோ - இன்றியமையாத நம்மைப் பிரிந்து பொருந்துவானோ? பொருந்தான்.

(முடிபு.) நாடன், தண்பனிநாளில் நம்மை விட்டு அமையுமோ?

(கருத்து.) தலைவன் குறித்த பருவத்தில் வந்துவிடுவான்.

(வி - ரை.) நரை - பெருமை (மதுரைக். 63, ந.); வெண்மையு மாம். முதலிற் புளிப்பும் அப்பால் இனிமையும் தோற்றுதலின் தீம்புளிநெல்லியென்றாள். நெல்லியைத் தின்று நீர்குடிக்குங்கால் இன்சுவை தோற்றும்.

காட்டிலுள்ள மரையா முதலியன மலரால் மூடப்பட்ட சுனை நீரைக் குடிக்கையில் அம்மலர்களைத் தம் மூச்சுக் காற்றால் விலகச் செய்து அப்பால் நீரைக்குடித்தல் வழக்கம்;

(பி - ம்.) * மதுரைக் கண்டாகதத்தன்.

" ........கொழுங்கொடி முல்லை
ஆர்கழல் புதுப்பூ வுயிர்ப்பி னீக்கித்
தெள்ளறல் பருகிய திரிமருப் பெழிற்கலை "

(அகநா. கஅச : 9-11.)

வாடை - வட காற்று; அது வீசியதால் மேகம் தென்றிசையிற் படர்ந்தது.

மற்று, ஏகாரங்கள், கை : அசைநிலைகள்.

## மேற்கோளாட்சி

1. நரை யென்பது பெருமை யென்னும் பொருளில் வந்தது (மதுரைக். 63-4, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. தீம்புளி நெல்லி : குறுந். உ0க : 4, ஒப்பு.

1-2. மரையா நெல்லிப்புளியை மாந்துதல் : குறுந். உகூ௬ : 3-4, ஒப்பு.

3-4. சுனை நீரைப் பூ மூடியிருத்தல் : குறுந். ௬சு : 2.

4-5. நாடன் நம்மை விட்டமையுமோ : "அமையே னின்னையா னகன்ற ஞான்றே" (தமிழ்நெறி. மேற். 1.)

6-7. மழை தென்புலம் படர்தல் : "பெரும்பெயல் பொழிந்த தொழில வெழிலி, தெற்கேர் பிரங்கு மற்சிரக் காலையும், அரிதே காதலர்ப் பிரிதல்", "தன்றொழில் வாய்த்த வின்குர லெழிலி, தென் புல மருங்கிற் சென்றற் றுங்கு" (நற். ௬ : 5-7, க௬ூ : 4-5); "தெற் கேர்பு, கழிமழை பொழிந்த பொழுதுகொ ளமையத்து", "வாடை வைகறை, விசும்புரி வதுபோல் வியலிடத் தொழுகி, மங்குன் மாமழை தென்புலம் படரும்" (அகநா. கூ : 12-3, உச : 6-8.) (கூகள)

---

## தலைவி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தே நிற்பத் தோழிக்குக் கூறுவாளாய், "தலைவன் பிரியேனென்று சூள் செய்தான். அதனைக் காப்பாற்றுதல் அவன் கடன். அதனை அவனே அறியவேண்டுமன்றி யான் கூறுதலாற் பயனில்லை" என்று தலைவி கூறி விரைவில் வரைய வேண்டுமென்னும் குறிப்பை உணர்த்தியது.]

௩௧௮. *எறிசுறுக் கலித்த விலங்குநீர்ப் பரப்பின்
நறுவீ ஞாழலொடு புன்னை தாஅய்
வெறியயர் களத்தினிற் றோன்றுந் துறைவன்
குறியா னாயினுங் குறிப்பினும் பிறிதொன்
†றறியாற் குரைப்பலோ யானே ‡ யெய்த்தவிப்
பணையெழின் மென்றோ ளணைஇய வந்நாட்
பிழையா வஞ்சினஞ் செய்த
கள்வனுங் கடவனும் ¶ புணைவனுந் தானே.

எ - து. கிழவன் கேட்கும் அண்மையனாகத் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

அம்மூவன்.

(ப - ரை.) தோழி, எறி சுறு - அடைந்தாரை எறிகின்ற சுறு மீன்கள், கலித்த - மிக்க, இலங்கு நீர் பரப்பின் - விளங்கிய கடற் பரப்பினிடத்து, நறு வீ ஞாழலொடு புன்னை தாஅய் - நறிய ஞாழற் பூவோடு புன்னைமலரும் பரவி, வெறி அயர் களத்தினின் தோன்றும் துறைவன் - வெறியாடும் இடத்தைப் போலத் தோன்றுகின்ற துறையையுடைய தலைவன், குறியான் ஆயினும் - என்னை வரைந்து கொள்ளுதலை நெஞ்சுட் குறிக்கொள்ளானாயினும், குறிப்பினும் - குறிக்கொண்டானாயினும், பிறிது ஒன்று அறியாற்கு - அயலார் வரைவாகிய வேறு ஒன்று நேருமென்பதை அறியாத அவனுக்கு, யான் உரைப்பலோ - நான் சொல்லுவேனோ? எய்த்த - இப்பொழுது இளைத்த, இ பணை எழில் மெல் தோள் - இந்த மூங்கிலைப் போன்ற அழகையுடைய மெல்லிய தோள்களை, அணைஇய அ நாள் - அணைந்த அந்த நாளிலே, பிழையா வஞ்சினம் செய்த - தான் நம் திறத்துப் பிழையாமையைப் புலப்படுத்தும் சூளைச் செய்த, கள்வனும் - வஞ்ச நெஞ்சுடையவனும், கடவனும் - அவ்வஞ்சினத்தை நிறைவேற்றும் கடப்பாடுடையவனும், புணைவனும் - நமக்கோர் புணைபோன்று இருப்பவனும், தானே - அத்தலைவனே; அன்றிப் பிறரில்லை.

(முடிபு.) துறைவன் குறியானாயினும் குறிப்பினும், அறியாற்கு யான் உரைப்பலோ? அணைஇய அந்நாள் வஞ்சினஞ் செய்த கள்வனும் கடவனும் புணைவனும் தானே.

---

(பி - ம்.) * எறிதருக் கலித்த. † றறியார்க். ‡ வேய்கவிப். ¶ புனைவனுந்.

(கருத்து.) தலைவன் தன் மொழி தவறாது வரைந்துகொள்ள வேண்டும்.

(வி - ரை.) எறி - வலைஞரால் எறியப்படுகின்ற வென்பதும் பொருந்தும். கலித்த - ஆரவாரஞ்செய்த வெனலும் ஆம். விலங்கு நீர் - மாறுபட்ட நீரென்பதும் இயையும். நறுவீ ஞாழலென்றதை ஞாழல் நறுவீயென மாற்றுக.

பலமலர்கள் பரவிய இடத்திற்கு வெறியாடும் இடத்தை உவமை கூறுவர், அவ்விடம் தெய்வத்தை வழிபடுவோர் சிந்தும் மலர்கள் நிறைந்திருத்தலின்.

பிறிது - களவொழுக்கத்திணையன்றி வரைதலாகிய பிறிது என்பதும் அமையும். அறியானென்றது சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

எய்த்த தோளென்றதனால் தலைவனது ஒழுகலாறு தனக்கு உடல்மெலிவை யுண்டாக்கினமையைப் புலப்படுத்தினாள். வஞ்சினம் செய்ததற்கேற்ப ஒழுகாமையின் கள்வனென்றாள். கள்வனாயினும் அவனை ஒறுப்பாரிலர், தானே அதனை நிறைவேற்றும் கடப்பாடுடையனென்பாள் கடவனென்றாள். எங்ஙனமாயினும் அவனையன்றிப் புகல் பிறரிலரென்பாள் புணைவனென்றாள்.

வஞ்சினமென்றது, 'நின்னிற் பிரியேன், பிரியின் ஆற்றேன்' என்று இயற்கைப் புணர்ச்சிக்கண் தலைவன் செய்த சூளை. பிரியாதிருத்தல் வரைந்துகொண்டாலன்றி நிகழாதாதலின் அவ்வஞ்சினத்தை நிறைவேற்றுதற்கு வரைதலே தக்கதென்பதைப் புலப்படுத்தினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. சுறா எறிதல்: "வயச்சுறா வெறிந்த புண்டணிந்து" (குறுந். உகூக: 3.)

2. நறுவீ ஞாழல்: "நறுமலர், ஞாழல்", "ஞாழல், மணங்கமழ் நறுவீ வரிக்குந் துறைவன்" (நற். சு0சு: 6-7, உகூஎ: 4-5); "எக்கர் ஞாழ னறுமலர்" (ஐங். கஙு0: 1.)

ஞாழலும் புன்னையும்: "நறுவீ ஞாழன் மாமலர் தாஅய்ப், புன்னை ததைந்த வெண்மண லொருசிறை", "புதுவீ ஞாழலொடு புன்னை தாஅம், மணங்கமழ் கானல்", "சிறுவீ, ஞாழலொடு கெழீஇய புன்னையங் கொழுநிழல்" (நற். கூகூ: 1-2, கசுஎ: 8-9, ௩கடு: 6-7); "புன்னை

யொடு ஞாழல் பூக்குந் தண்ணந், துறைவன்", "பொன்னிணர் ஞாழன் முனையிற் பொதியவிழ், புன்னையம் பூஞ்சினைச் சேக்குந் துறைவன்" (ஐங். ௧0௬: 1-2, ௧௬௯: 2-3); "எக்கர்ப் புன்னை யின்னிழ லசைஇ......ஞாழ லோங்குசினைத் தொடுத்த கொடுங்கழித், தாழை வீழ்கயிற் றூச றூங்கி", "பொன்வீ ஞாழலொடு புன்னை வரிக்கும், கானலம் பெருந்துறை", "ஞாழலொடு கெழீஇப், படப்பை நின்ற முடத்தாட் புன்னைப், பொன்னேர் நுண்டாது நோக்கி" (அகநா. ௨0: 3-6, எ0 : 9-10, ௧௮0 : 12-4.)

3. வெறியயர் களம் : குறுந். ௫௩ : 3, ஒப்பு.

2-3. பல மலர்கள் பரந்த இடத்திற்கு வெறியயர்'களம் : குறுந். ௫௩ : 2-3; மதுரைக். 279-84; மலைபடு. 149-50; அகநா. ௧௧௪ : 1-3, ௧௮௨ : 15-7; பெருங். உ. 2 : 104-5.

6. பணைத்தோள் : குறுந். ௨௬௮ : 6, ஒப்பு.

மென்றோள் : குறுந். ௯0 : 7, ௨௬௮ : 6.

தோளை அணைதல் : குறுந். ௧௯௩ : 5, ஒப்பு.

5-6. தோள் மெலிதல் : குறுந். ௮எ : 5, ஒப்பு.

7. பிழையா வஞ்சினம் : குறுந். ௬௬ : 5; அகநா. ௨௬எ : 2, ௩எ௮ : 18.

8. தலைவனைக் கள்வனென்றல் : குறுந். ௨௫ : 1, ஒப்பு; குறள், 1258; கம்ப. மிதிலைக். 55.

7-8. தலைவன் வஞ்சினம் பொய்த்தல் : குறுந். ௨௫ : 1-2, ஒப்பு.

6-8. தலைவன் தலைவியின்தோளை அணைந்தபோது வஞ்சினம் கூறுதல் : குறுந். ௬௬ : 4-5. (௩௧௮)

---

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற கார்ப்பருவம் வந்தது கண்ட தலைவி வேறுபட்டாளாக, "நீ ஆற்றவேண்டும்" என்று வற்புறுத்திய தோழியை நோக்கி, "நான் எங்ஙனம் ஆற்றுவேன்? என் உயிர் நில்லாது போலும்" என்று தலைவி கூறியது.]

௩௧௯. மானேறு மடப்பிணை தழீஇ மருள்கூர்ந்து
கான நண்ணிய புதன்மறைந் தொடுங்கவும்
கையுடை நன்மாப் பிடியொடு பொருந்தி
மையணி மருங்கின் மலையகஞ் சேரவும்
மாலை வந்தன்று மாரி * மாமழை
பொன்னேர் மேனி † நன்னலஞ் சிதைத்தோர்
இன்னும் வாரா ராயின்
என்னாந் தோழிநம் மின்னுயிர் நிலையே.

எ - து. பருவவரவின்கண் வேறுபட்ட கிழத்தி ‡ வன்புறை யெதிரழிந்து சொற்றது.

[*வன்புறை - தோழி வற்புறுத்தல்.*]

தாயங்கண்ணன்.

(ப - ரை.) *தோழி—, மான் ஏறு - ஆண்மான்கள், மடம் பிணை தழீஇ - மடப்பம் பொருந்திய பெண்மான்களைத் தழுவி, மருள் கூர்ந்து - மயக்கம் மிக்கு, கானம் நண்ணிய - காட்டினிடத்துப் பொருந்திய, புதல் மறைந்து ஒடுங்கவும் - புதலின்கண்ணே மறைந்து ஒடுங்கியிருக்கும்படியும், கை உடை நல் மா - துதிக்கையையுடைய நல்ல ஆண்யானைகள், பிடியொடு பொருந்தி - பெண்யானைகளோடு சேர்ந்து, மை அணி மருங்கின் மலையகம் சேரவும் - மேகங்களை அணிந்த பக்கத்தையுடைய மலையிடத்தை அடையும்படியும், மாரி மா மழை - கார்காலத்துக்குரிய பெரிய மழை, மாலை வந்தன்று - மாலைக் காலத்திலே வந்தது; பொன் நேர் மேனி - பொன்னையொத்த எனது மேனியின், நல் நலம் சிதைத்தோர் - நல்ல அழகைக் கெடுத்த தலைவர், இன்னும் வாரார் ஆயின்—, நம் இன் உயிர் நிலை - நம்முடைய இனிய உயிர்நிலை, என் ஆம் - எத்தகையது ஆகும்?*

(முடிபு.) *தோழி, மானேறு ஒடுங்கவும், மா சேரவும், மழை வந்தன்று; சிதைத்தோர் வாராராயின் உயிர்நிலை என்னும்?*

(கருத்து.) *தலைவர் வாராவிடின் என் உயிர் நீங்கும்.*

(வி - ரை.) *மழையை அஞ்சி மான் முதலிய விலங்குகள் தம் துணையோடு ஒடுங்கின. கையுடை நன்மாவென்றலின் யானையாயிற்று. மழைகூறினமையின் கார்காலமாயிற்று.*

---

(பி - ம்.) * *மாமழைப்.* † *நன்னிறஞ்.* ‡ *வன்பொறை.*

பொன் ஏர் மேனி - இப்பொழுது பசலை எழுகின்ற எனது மேனி யெனலும் பொருந்தும்.

*தலைவன் மீண்டுவருவதாகக் கூறிச் சென்ற பருவம் வந்ததன்றி அப்பருவத்தில் ஆண்விலங்குகள் பெண்விலங்குகளோடு ஒன்றுபட்டதும் தலைவியின் ஆற்றாமையை மிகுவிப்பதாயிற்று. 'அவ்விலங்குகள் பெற்றபேறு யாம் பெற்றிலேமே!' எனக் கவன்றாள்.*

## மேற்கோளாட்சி

6. நேரென்பது உவம உருபாக வந்தது (நன். 366, மயிலை.)

## ஒப்புமைப் பகுதி

2. மானேறும் பிணையும் : குறுந். உ௩௬ : 2-3.
6. பொன்னேர் மேனி : குறுந். ௧0௧ : 4, ஒப்பு ; நற். ௧௬௬ : 1-2.
8. "என்னு வதுகொனம் மின்னுயிர் நிலையே" (ஐங். உஉ௮ : 4.)

இன்னுயிர் : குறுந். உ௧௬ : 7, ௩௩௪ : 5, ௩௭௧ : 7. (௩௧௬)

---

## தலைவி கூற்று

[*தலைவன் சிறைப்புறத்தானாக, "ஊரினர் கூறும் அலர் பெரிதாயிற்று" என்று தோழிக்குக் கூறுவாளாய், விரைவில் வரைந்து கொள்ள வேண்டுமென்பதை அவனுக்குத் தலைவி புலப்படுத்தியது.*]

௩உ௦. பெருங்கடற் பரதவர் * கொண்மீ னுணங்கல்
அருங்கழிக் கொண்ட விறலின் வாடலொடு
நிலவு நிற வெண்மணல் புலவப் பலவுடன்
எக்கர்தொறும் † பரக்குந் துறைவனொ டொரு
நக்கதோர் பழியு மிலமே போதவிழ் [நாள்
பொன்னிணர் மரீஇய புள்ளிமிழ் பொங்கர்ப்
புன்னையஞ் சேரி யிவ்வூர்
கொன்னலர் ‡ தூற்றுந்தன் கொடுமை யானே.

(பி - ம்.) * கோண்மீ னுணங்கலின். † பரிக்குந். ‡ தூற்றத்தன்

எ - து. அலரஞ்சி யாற்றாளாகிய தலைமகள், தலைவன் கேட்பாளுகத் தோழிக்குக் கூறியது.

தும்பிசேர் கீரன்.

(ப - ரை.) *தோழி, பெரு கடல் - பெரிய கடலினிடத்தே, பரதவர் கொள்மீன் உணங்கல் - பரதவர் கொண்ட மீனினது உலர்ந்த வற்றல், அரு கழி கொண்ட - நீந்துதற்கு அரிய கழியினிடத்தே அவர் கைக்கொண்ட, இறவின் வாடலொடு - இறாமீனின் வாடிய வற்றலோடு, நிலவு நிறம் வெள் மணல் புலவ - நிலவினது நிறத்தைக்கொண்ட வெள்ளிய மணல் புலால் நாறும்படி, பல உடன் - பல ஒருங்கே, எக்கர் தொறும் பரக்கும் துறைவனொடு - மணல்மேடுதோறும் பரவுகின்ற துறையையுடைய தலைவனோடு, ஒரு நாள் நக்கதோர் பழியும் இலம் - ஒருநாளேனும் மகிழ்ந்து விளையாடிய பழி இல்லேம்; அங்ஙனம் இலமாகவும், போது அவிழ் பொன் இணர் மரீஇய - செவ்வி அரும்பு மலர்ந்த பொன்போன்ற பூங்கொத்துக்கள் பொருந்திய, புள் இமிழ் - வண்டுகள் ஒலிக்கின்ற, பொங்கர் புன்னை அம் சேரி - கிளைகளையுடைய புன்னைமரங்களையுடைய சேரிகள் உள்ள, இ ஊர் - இவ்வூரார், தன் கொடுமையான் - தம்பாலுள்ள கொடிய தன்மையினால், கொன் அலர் தூற்றும் - வீணே பழிமொழிகளைக் கூறுவர்.*

(முடிபு.) *துறைவனொடு ஒருநாள் நக்கதோர் பழியுமிலம்; இவ்வூர் அலர் தூற்றும்.*

(கருத்து.) *ஊரினர் கூறும் அலர் பெரிதாயிற்று.*

(வி - ரை.) புலவ - *புலால் நாற்றம் வீச; இஃது புலாவவென வும் வரும்;* " புலாவ வீர்க்கும் " (அகநா. அ : 7.) *ஒரு நாளுமென உம்மையை மாறிக் கூட்டுக; உம் : இழிவு சிறப்பு; ஒரு நாளேனும் நக்க பழியிலமென்றாளேனும் கருதியது சில நாளே மகிழ்ந்தேமென்பது; தன் நெஞ்சத்து நிறைவின்மையின் அது பெற்றும் பெறுததாயிற்று. நக்கது : அவையல் கிளவி. பொன்னிணர் மரீஇய புன்னையெனக் கூட்டுக. புள் - நாரை முதலியனவுமாம். புன்னையஞ்சேரி : அம், சாரியை. ஊர் : ஆகுபெயர். சேரி - தெரு.*

*வலையர்கொண்ட மீனும் இறவும் மணல் முழுதும் புலவப்பரக்குமென்றது, தலைவன் என்னோடு கொண்ட நட்பு ஊர்முழுதும் அலர் கூறப் பரவியதென்ற குறிப்பினது.*

## ஒப்புமைப் பகுதி

2. இறவின் வாடல்: "முடிவலை முகந்த முடங்கிறாப் பாவைப், படுபுள் ளோப்பலிற் பகன்மாய்ந் தன்றே", "சூழ்கழி யிறவின், கணங் கொள் குப்பை யுணங்குதிற ஞேக்கி" (நற். ௪௧ : 3-4, ௧0௧ : 2-3.)

கழியில் இறமீன் உண்மை: "தெண்கழிச் சேயிறாப் படூஉம்" (ஐங். ௧௯௬ : 3.)

1-2. மீனையும் இறவையும் பரதவர் தோதத்தல்: "இருங்கழி முகந்த செங்கோ லவ்வலை, முடங்குபுற விறவோ டினமீன் செறிக்கும்" (அகநா. ௨௨0 : 16-7.)

3. மணலுக்த நிலவு: குறுந். ௧௨௩ : 2, ஒப்பு.

4-5. தலைவி தலைவனோடு நதுதல்: குறுந். ௧௯௧ : 3, ௨௨௯ : 7.

7. புன்னையஞ் சேரி: (குறுந். ௩௫௧ : 6); "புன்னையங் கொழு நிழன் முன்னுய்த்துப் பரப்பும், துறைநணி யிருந்த பாக்கமும்" (நற். ௯0௧ : 4-5.)

6-7. புன்னைப் பூங்கோத்துக்குப் போன்: "பொன்னிணர் நறு மலர்ப் புன்னை", "பொன்னென, நன்மலர் நறுவீ தாஅம், புன்னை நறும் பொழில்" (அகநா. ௧௨௯ : 15, ௩௯0 : 17-9.)

7-8. ஊரினரது கொடுமை: குறுந் ௨௪ : 5-6. (௩௨0)

---

## தோழி கூற்று

[நொதுமலர் வரையப் புக்க காலத்தில், "நான் அறத்தொடு நிற் பேன்" என்று தலைவிக்குத் தோழி கூறியது.]

௩௨௧. * மலைச்செஞ் சாந்தி ஞர மார்பினன்
சுனைப்பூங் குவளைச் சுரும்பார் கண்ணியன்
நடுநாள் வந்து நம்மனைப் பெயரும்
† மடவர லரிவைநின் மார்பம ரின்றுணை
மன்ற மரையா விரிய வேறட்டுச்

(ப்ர - ம்.) * மலைச்சே ரஞ்செஞ் சாந்தின். † மடமாவரிவை.

செங்க ணிரும்புலி குழுமு மதனால்
மறைத்தற் காலையோ வன்றே
திறப்பல் வாழிவேண் டன்னைநங் கதவே.

எ - து. தோழி, கிழத்திக்கு நொதுமலர் வரையுமிடத்து, "அறத்தோடு நிற்பேன்" என்றது.

...........................................

(ப - ரை.) அன்னை—, மடவரல் அரிவை - மடப்பம் வருதலை யுடைய அரிவையே, நின்மார்பு அமர் இன் துணை - நினதுமார்பைப் பொருந்தும் இனிய தலைவன், மலை செ சாந்தின் ஆரம் மார்பினன் - மலையில் உண்டாகிய செஞ்சந்தனத்தையும் முத்துமாலையையும் அணிந்த மார்பினனாகியும், சுனை பூ குவளை சுரும்பு ஆர் கண்ணியன் - சுனையில் மலர்ந்த குவளையினது வண்டுகள் நிறைந்த கண்ணியை உடையவனாகியும், நம் மனை நடு நாள் வந்து - நம்முடைய வீட்டிற்கு நள்ளிரவில் வந்து, பெயரும் - மீண்டு செல்வான்; அக்காலத்தில், மன்றம் மரையா இரிய - மன்றத்தின்கண் உள்ள மரையாவானது நீங்க, ஏறு அட்டு - அதன் ஆணைக்கொன்று, செ கண் இரு புலி குழுமும் - செவ்விய கண்களையுடைய கரிய புலி முழங்கும்; அதனால்—, மறைத்தற்காலை அன்று - நம் ஒழுக்கத்தை மறைக்கும் காலம் இஃது அன்று; நம் கதவு - நமது மந்தணத்தை, திறப்பல் - வெளியிடுவேன்; வேண்டு - இதனை நீ விரும்புவாயாக.

(முடிபு.) அன்னை, அரிவை, நின் துணை, மார்பினன், கண்ணியன், வந்து பெயரும்; புலி ஏறு அட்டுக் குழுமும்; அதனால் மறைத்தற்காலை அன்று; நம் கதவு திறப்பல்; நீ வேண்டு.

(கருத்து.) நான் அறத்தொடு நிற்பேன்.

(வி - ரை.) மலைச்சாந்தை யணிந்து வருவதனால் தலைவன் வருகையைப் பிறர் அச்சாந்தின் மணத்தாலறிவரென்னும் குறிப்பும் பெறப்படும். மார்பென்றது ஆகுபெயரால் நகில்களைக் குறித்தலுமாம். மன்றம் - பொதுவிடம். புலிகுழுமும் என்றது தலைவன் வரும் இடையாமத்தில் அப்புலியினால் அவனுக்கு ஏதம் நிகழ்தலுங் கூடுமென்ற அச்சத்தைக் கொண்ட நினைவிற்று. அதனால், இனி அறத்

(பி - ம்.) * ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.

தொடு நின்று அவனது வரைவை ஏற்றுக்கொள்ளச் செய்தலே நன்றென்பதைத் தோழி உணர்த்தினள்.

கதவு திறப்பலென்றது, பிறரறியாவாறு மறைக்கப்பட்டிருந்த நம் நட்பைப் பிறருக்கு வெளியிடுவேனென்ற பொருளையுடையது. வாழி: அசைநிலை; நான் அறத்தொடு நிற்ப, அதனால் நீ வாழ்வாயாக வென்பதும் ஆம்.

நம் கதவென்றாள் தானும் அம்மறையை உணர்ந்தவளாதலின்.

## ஒப்புமைப் பகுதி

1. தலைவன் சந்தனம் பூசிவருதல்: குறுந். க௯௦: 3, ஒப்பு; நற். கசு௮: 10-11, ௩௪௪: 5-8; அகநா. க௦௦: 1-4.

2. சுனைப்பூங் துவளை: குறுந். ௯க: 2-3, ஒப்பு; நற். க௦௯: 8.

2-3. தலைவன் துவளைப்பூ அணிந்து வருதல்: நற். ௩எசு: 5-6; அகநா. ௩௮: 2, கஉ௮: 9-10.

1-3. தலைவன் சந்தனம் பூசியும் கண்ணி பூண்டும் வருதல்: "நாடன், ஆர மார்பி னரிஞிமி றூர்ப்பத், தாரன் கண்ணிய னெஃகுடை வலத்தன்......புகுதந்து" (அகநா. க௦உ: 9-13.)

4. மடவரலரிவை: குறுந். ௩எ௮: 5.

3-4. தலைவன் நடுநாளில் வருதல்: குறுந். உசு௮: 5, ௩கக: 4-5.

5. மன்ற மரையா: "மரைசேர் மன்றத்து" (அகநா. ௩எ௩: 2.)

6. புலி துழுழுதல்: ஐங். உக௮: 3-4, உஎ௪: 2.

செங்கணிரும்புலி: நற். க௪௮: 9; அகநா. ௬உ: 4.

5-6. மரையாவைப் புலி கொல்லுதல்: மலைபடு. 505-6; அகநா. ௩: 7-9.

8. கதவு திறப்பல்: குறுந். ௩௩௩: 6.

வாழிவேண்டன்னை: குறிஞ்சிப். 1; ஐங். க௦க-க௦, உ௦க-க௦; அகநா. ௪௮: 1, சு௮: 1. (௩உக)

தலைவி கூற்று

[தலைமகனது வரவு நீட்டித்ததாகத் தோழி இயற்பழித்த விடத்து, தலைவன் வர, அஃதுணர்ந்த தலைவி, "நாம் அவரூருக் குப்போய் அவரோடு பழகுவோம்" என்று கூறியது.]

௩௨௨. அமர்க்க ணாமா னஞ்செவிக் குழவி
கானவ ரெடுப்ப *வெரீஇ யினந்தீர்ந்து
கான நண்ணிய சிறுகுடிப் பட்டென
இளைய ரோம்ப மரீஇயவ ணயந்து
மனையுறை வாழ்க்கை வல்லி யாங்கு
மருவி னினியவு முளவோ
செல்வாந் தோழி †யொல்வாங்கு நடந்தே.

எ - து. தலைமகன் ‡ வரவுணர்ந்து தோழிக்குத் தலைமகள் இயற பட மொழிந்தது.

ஐயூர் முடவன்.

(ப - ரை.) தோழி—, அமர் கண் ஆமான் அம் செவி குழவி - மேவுதலையுடைய கண்களையுடைய காட்டுப் பசுவின் அழகிய காது களையுடைய கன்று, கானவர் எடுப்ப வெரீஇ இனம் தீர்ந்து - வேட்டு வர் எழுப்புவதனால் அஞ்சித் தன் இனத்தினின்றும் பிரிந்துசென்று, கானம் நண்ணிய சிறுகுடி பட்டென் - காட்டினிடத்துப் பொருந்திய சிறிய ஊரிலே அகப்பட்டதாக, இளையர் ஓம்ப மரீஇ - இளைய மக ளிர் பாதுகாப்பக் கலந்து, அவண் நயந்து - அவ்விடத்தை விரும்பி, மனை உறை வாழ்க்கை வல்லியாங்கு - வீட்டின்கண் உறையும் வாழ்க் கையில் வன்மைபெற்றதுபோல, மருவின் - கலந்துபழகுதலைக் காட் டினும், இனியவும் உளவோ - இனியபொருள்களும் இருக்கின் றனவோ? ஆதலின் நாமும் தலைவரோடு மருவும்பொருட்டு, ஒல் வாங்கு நடந்து - இயன்ற அளவில் நடந்து, செல்வாம் - தலைவன் இருக்குமிடத்திற்குச் செல்வேம்.

(முடிபு.) தோழி, ஆமான்குழவி எடுப்ப வெரீஇத் தீர்ந்து குடிப்பட்டென, ஓம்ப மரீஇ நயந்து வல்லியாங்கு, மருவின் இனிய வும் உளவோ? நடந்து செல்வாம்.

(பி - ம்.) * வொரீஇ. † யொல்லாங்கு. ‡ வரைவு.

(கருத்து.) தலைவர் இருக்குமிடத்திற்கு யாம் போவோமாக.

(வி - ரை.) தலைவன் குறியிடத்து உரிய காலத்தே வாராமையின், தோழி, "அவனது இயல்பும் நம் இயல்பும் ஒத்தனவல்ல" எனக் கூறி இயற்பழித்தாள். அப்பொழுது தலைவன் வந்து சிறைப்புறத்தே நின்றான். அதனை அறிந்த தலைவி, "அவர் வாராவிடினும் நாமேனும் அவர் உள்ள இடத்திற்கு நடந்து செல்வேமாக" என்று கூறித் தன் ஆதரவைப் புலப்படுத்தினாள்.

அமர்த்தல் - மேவுதல் (புறநா. கக௭ : 4, உரை.) எடுப்ப - மறைந்திருந்த புதல்களிருந்து கொம்பு முதலியன ஊதுதலானும் பிறவாற்றானும் எழுப்ப.

இளையர் - சிறுருமாம். வல்லியாங்கு மருவுதலென்று தொழிற்பெயரின் முதனிலையோடு இயைக்க.

ஆமானின் குழவி தன் இயல்புக்கு ஒவ்வாத குடியிற் பட்டாலும் அவர்களோடு மருவி அவரது வாழ்க்கையிலே வன்மைபெற்றது போல, தலைவர் நம் இயல்புக்கு ஒவ்வாரெனினும் அவரோடு பழகி அவருடைய இயல்புகளைப் பெற்று வாழவேண்டுமென உவமையை விரித்துக்கொள்க.

வேறுபட்ட இயல்புடையாரும் பழக்கத்தினால் இனியராதலை,

"பழகிய பகையும் பிரிவின் னாதே" (நற். ௧௦௭ : 6)

என்பது புலப்படுத்தும்.

தலைவன் வரவறிந்த தலைவி, 'நடந்து செல்வாம்' என்று கூறினாள், அது நோராதென்னும் கருத்துடையளாதலின்.

## ஒப்புமைப் பகுதி

1. அமர்க்கணமான் : நற். ௧௬௫ : 1 ; புறநா. ௧௧௭ : 4-5.

3. சிறுதுடி : குறுந். ௧௮௪ : 2, ஒப்பு.

1-3. ஆமான்குழவி இனத்திற்றீர்ந்து அகப்படல் : "தொழுதி போக வலிந்தகப் பட்ட, மடநடை யாமான் கயமுனிக் குழவி" (மலைபடு. 499-500.)

7, பி - ம். ஒல்லாங்குத் : கலி. ௩ : 11. ௩௨௨)

## தலைவன் கூற்று

[தான் மேற்கொண்ட வினை முடிந்தவிடத்துத் தலைவன் பாகனை நோக்கி, "தலைவியைப் பிரிந்திருக்கும் நாள் நன்னாளன்று; பயனற்றது; ஆதலின் அவளை யடையும்படி விரைவில் தேர்விடுக" என்பது படச் சொல்லியது.]

௩௨௩. எல்லா மெவனோ பதடி வைகல்
பாணர் படுமலை பண்ணிய வெழாலின்
வானத் தெழுஞ்சுவர் நல்லிசை வீழப்
பெய்த புலத்துப் பூத்த முல்லைப்
பசுமுகைத் தாது நாறு நறுநுதல்
அரிவை தோளிணைத் துஞ்சிக்
கழிந்த நாளிவண் வாழு நாளே.

எ - து. வினைமுற்றினான் பாகற்கு உரைத்தது.

பதடி வைகலார்.

(ப - ரை.) பாணர் படுமலை பண்ணிய - பாணர்கள் படுமலைப் பாலையென்னும் பண்ணை வாசித்த, எழாலின் - இசையினது, வானத்து எழும் நல் சுவர் இசை வீழ - வானத்தின்கண் எழுகின்ற நல்ல உச்ச ஒலியை ஒப்ப ஒலி உண்டாக, பெய்த புலத்து - மழைபெய்த கொல்லையின்கண், பூத்த முல்லை - மலர்ந்த முல்லையினது, பசு முகை தாது நாறும் நறு நுதல் - பசிய அரும்பினது தாதின் மணம்போன்ற மணம் வீசுகின்ற நல்ல நெற்றியையுடைய, அரிவை தோள் இணை துஞ்சி - தலைவியின் இரண்டு தோள்களிலே துயின்று, கழிந்த நாள் இவண் வாழும் நாள் - சென்ற நாட்களே இவ்வுலகத்தில் வாழும் நாட்களாகும்; எல்லாம் - ஏனைய நாட்களெல்லாம், எவன் - என்னபயனை உடையன? பதடி வைகல் - அவை உள்ளீடில்லாத கருக்காயைப் போன்ற நாட்கள்.

(முடிபு.) அரிவை தோளிணைத் துஞ்சிக் கழிந்த நாள் வாழும் நாள்; எல்லாம் எவனோ? பதடிவைகல்.

(கருத்து.) விரைவில் தலைவிபாற் போய்ச்சேர்தல் வேண்டும்.

---

(பி - ம்.) * வானத்தஞ்சுவா நல்லிசை.

(வி - ரை.) இவண் வாழுநாளெனத் தனியே பிரித்துக் கூறு தலின், எல்லாமென்றது தலைவியோடு அளவளாவாத ஏனைய நாளைக் குறித்தது. எவனோ : ஓ, அசைநிலை.

இன்பமாகிய உள்ளீடின்மையின் பதடிவைகலென்றான். மேட்டு நிலத்திற்பெய்த மழையின் ஓசைக்குப் படுமலைப் பாலையிசை உவமை;

" பலவயி னிலைஇய குன்றிற் கோடுதோ
றேயினை யுரைஇயரோ பெருங்கலி யெழிலி
படுமலை நின்ற நல்யாழ் வடிநரம்
பெழீஇ யன்ன வுறையினை " (நற். ௧௩௯ : 2-5)

என்று பிறரும் கூறுதல் காண்க.

படுமலை - படுமலைப் பாலை; பாலைப்பண் பன்னிரண்டனுள் ஒன்று (சிலப். ௩ : 70-71, அடியார்.) எழால் - இசையோசை.

சுவலென்பது சுவரென வந்தது; சுவல் - மேலிடம்; என்றது மந்தம், உச்சம், சமமென்ற மூன்றில் உச்சநிலையைக் குறித்தது போலும். வீழ : உவமவுருபு. பசுமுகை - செவ்வியரும்பு. நாறுமெனவைத்தலின் நறுமை, நன்மையாயிற்று. அரிவை : பருவங்குறியாது தலைவியென்னுந் துணையாய் நின்றது. நாளே : ஏ, அசைநிலை.

தலைவியோடிருக்கும் நாட்களே சிறந்தனவெனச் சிறப்பிக்கும் வாயிலாக அவளை விரைவில் அடையவேண்டுமென்ற தன் ஆர்வத்தைப் புலப்படுத்தினான். அதுகேட்ட பாகன் தேர்பண்ணி விரைவில் தலைவிபாற் சேர்த்தல் பயன்.

தலைவியோடு இன்புறாத நாட்களைப் பதடிவைகலெனத் தலைவன் கூறியதாக அமைத்த சிறப்பால் இச்செய்யுளின் ஆசிரியர், 'பதடி வைகலார்' என்னும் பெயர் பெற்றார்.

## ஒப்புமைப் பகுதி

2. படுமலைப் பாலை : புறநா. ௧௩௫ : 7.

4-5. முல்லை நாறும் நுதல் : " நின், நன்னுத னாறு முல்லை மலர " (ஐங். ௪௯௨ : 1-2); " முல்லை காலொடு மயங்கி, மையிருங் கான நாறு நறுநுதல் " (அகநா. ௪௩ : 9-10.)

நுதல் மணத்தல் : குறுந். ௨௨ : 5, ஒப்பு.

6. தலைவியின் தோளில் தலைவன் துஞ்சுதல்: "வேய்புரை மென்றோ ளின்றுயில்" (குறிஞ்சிப். 242); "வேயுறழ் மென்றோட் டுயில் பெறும்" (கலி. கOச: 24); "தோள்புலம் பகலத் துஞ்சி", "முருந்தேர் முறுவ லிளையோள், பெருந்தோ ளின்றுயில் கைவிடு கலனே" (அகநா. கஅஎ: 1, ககரு: 13-4); "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்" (குறள், 1103.) (ரு உரு)

---

## தோழி கூற்று

[தலைவனிடம் தலைவி இற்செறிக்கப்படுவாளென்பதனைக் கூறிய தோழியை நோக்கி, "யான் ஆண்டுவந்து இரவுக்குறியில் தலைவியைக் கண்டு செல்வேன்; அப்பால் வரைந்து கொள்வேன்" என்று தலைவன் கூற, அதுகேட்ட தோழி, "நீ நின் அன்பின்மிகுதியால் வழியின் ஏதம் பாராது வருகின்றாய்; இவள் அதற்கு அஞ்சுவாள்" என்று கூறி வரைவு கடாயது.]

ரு உச. கொடுங்கான் முதலைக் கோள்வ லேற்றை
வழிவழக் கறுக்குங் கானலம் பெருந்துறை
இனமீ னிருங்கழி நீந்தி நீநின்
நயனுடை மையின் வருதி யிவடன்
மடனுடை மையி * னுயங்கும் யானது
கவைமக நஞ்சுண் டாஅங்
கஞ்சுவல் பெருமவென் னெஞ்சத் தானே.

எ - து. செறிப்பறிவுறுக்கப்பட்டு, "இராவாரா வரைவல்" † என்றாற்குத் தோழி அது மறுத்து வரைவு கடாயது.

[செறிப்பறிவு......................என்றாற்கு - தலைவி இற்செறிக்கப் படுவாளென்பதைத் தோழியால் உணர்த்தப் பெற்று, இரவுக் குறி வந்து தலைவியோடு அளவளாவி அப்பால் வரைந்து கொள்வேனென்ற தலைமகனுக்கு.]

கவைமகன்.

---

(பி - ம்.) * னுயக்கும். † என்றார்க்கு.

(ப - ரை.) பெரும - தலைவ, நீ நின் நயன் உடைமையின் - நினது அன்புடைமையால், கொடு கால் முதலை கோள் வல் ஏற்றை - வளைந்த கால்களையுடைய முதலையினது கொல்லுதல் வல்ல ஆணனது, வழி வழக்கு அறுக்கும் - வழியினிடத்தே பிறர் செல்லுவதை நீக்கும், கானல் பெரு துறை - கானலையுடைய பெரிய கடல் துறையின்கண், இனம் மீன் இரு கழி நீந்தி - திரளாகிய மீன்களையுடைய கரிய கழியை நீந்திக்கடந்து, வருதி - வருகின்றாய்; இவள் தன் மடன் உடைமையின் உயங்கும் - இத்தலைவி தன் அறியாமையையுடைமையினால் வருந்துவாள்; யான்—, என் நெஞ்சத்தான் - என் மனத்தினுள்ளே, கவை மக நஞ்சு உண்டாங்கு - இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால் இருவர் திறத்தும் ஒரு தாய் வருந்துவது போல, அது அஞ்சுவல் - நீ அங்ஙனம் வருதலை அஞ்சுவேன்.

(முடிபு.) பெரும, நீ நயனுடைமையின் நீந்தி வருதி; இவள் தன் மடனுடைமையின் உயங்கும்; யான் அஞ்சுவல்.

(கருத்து.) நீ இரவில் வருதல் நன்றன்று.

(வி - ரை.) இரவுக்குறி வேண்டிய தலைவனுக்கு ஆற்றின் ஏதம் கூறி அது மறுத்த வாய்பாட்டால் வரைவுகடாயது இது.

நீர்வழியிற் போவாரைக் கொல்லுந் தொழிலுடைமையின், வழிவழக்கறுக்கும் பெருந்துறை யென்றாள். இதனால், 'நீ அக்கழியின்கண் நீந்திவருங்கால் நினக்கு ஏதம் நேருங்கொலோவென அஞ்சினேம்' என்னும் குறிப்பை அறிவித்தாளாயிற்று.

கானலம் பெருந்துறை: அம், சாரியை. நயன் - அன்பு. மடன் - நின் அன்பையும், வழியில் நிகழும் ஏதத்திற்கு அஞ்சாத நின் ஆண்மையையும் அறியாமை. அதுவென்றது இரவுக்குறியை.

'நீ நின் அன்பினால் வருதலின் நீ வருதலைத் தடுத்தலும் தக்கதன்று; நினக்கு ஏதம் வருமோவென இவள் உயங்குதலின் இரவுக்குறி நேர்தலும் தக்கதன்று. நும்மிருவருக்கும் துன்பமுண்டாகும் இந்நிலையில் இரட்டைப்பிள்ளைகள் நஞ்சுண்டால் இருவர் திறத்திலும் இரங்கும் தாயைப்போல யான் இருவர் திறத்தும் இரக்கமுடையேன்' என்றாள்.

இவ்வுவமையினால், இரண்டு மகவினுக்கும் ஒருங்கே நஞ்சு தீர்க்கும் மருந்து தருதலே தக்கதாதல் போல, இருவருக்கும் நன்மை

தரும் வரைவே ஏற்புடைத்தென்ற வரைவுகடாதற் பொருளும் பெறப்படும்.

கவைமகவின் செய்தியை உவமையாக எடுத்தாண்ட சிறப்பால் இப்பாட்டை இயற்றிய புலவர் கவைமகனென்னும் பெயர் பெற்றார்.

## மேற்கோளாட்சி

1. ஏற்றைக்கிளவி ஆற்றலொடு புணர்ந்த ஆண்பாலுக் கெல்லாம் உரித்து (தொல். மரபு. 49, பேர்.)

## ஒப்புமைப் பகுதி

1. கோடுங்கால் முதலை : குறிஞ்சிப். 257 ; மலைபடு. 90.

2. வழக்கறுத்தல் : புறநா. கூசுஅ : 9; சீவக. 461, 907.

3. இனமீனிருங்கழி : குறுந். க : 5 ; திணைமொழி. 44.

6-7. ஒருவாறு ஒப்பு : "இரண்டு கன்றினுக் கிரங்குமோ ராவென விருந்தார்" (கம்ப. அயோத்தியா. மந்திரப். 32.) (கூஉச)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்து ஆற்றாளென எண்ணிக் கவலையுற்ற தோழியை நோக்கி, "அவர் செல்லாரென நினைந்து போவீராகவெனச் சொன்னேன். இப்பொழுது அவர் யாண்டுள்ளாரோ!" என்று தலைவி வருந்திக் கூறியது.]

கூஉரு. சேறுஞ் சேறு மென்றலிற் * பண்டைத்தன்
மாயச் † செலவாச் செத்து மருங்கற்று
மன்னிக் கழிகென் றேனே யன்னோ
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
கருங்கால் வெண்குருகு மேயும்
பெருங்குள மாயிற்றென் னிடைமுலை ‡ நிறைந்தே.

---

(பி - ம்.) * பண்டைத்தம். † செலவாசெத்து. ‡ நனைந்தே.

எ - து. பிரிவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி மெலிந்து உரைத்தது.

[மெலிந்து - வருந்தி.]

நன்னாகையார்.

(ப - ரை.) தோழி—, சேறும் சேறும் என்றலின் - செல்வேம் செல்வேமென்று தலைவன் பலகாற் சொல்லியதனால், பண்டை தன் மாயம் செலவா செத்து - முன்பு அவன் கூறிய பொய்ச்செலவாக எண்ணி, மருங்கு அற்று - என் பக்கத்தினின்றும் நீங்கி, மன்னி கழிக என்றேன் - நிலைபெற்று நீங்குக என்றேன்; அன்னோ - ஐயோ! ஆசு ஆகு எந்தை யாண்டுளன் கொல்லோ - நமக்குப் பற்றுக் கோடாகிய தலைவன் எங்கே இருக்கின்றானோ! என் இடை முலை நிறைந்து - என் நகில்களின் இடையிலுள்ள இடம் அவனது பிரிவால் அழுத என் கண்ணீரால் நிறைந்து, கரு கால் வெள் குருகு மேயும் - கரிய காலையுடைய வெள்ளிய நாரை உணவை உண்ணும், பெரு குளம் ஆயிற்று - பெரிய குளம்போல ஆயிற்று.

(முடிபு.) என்றலின், செத்து, கழிக என்றேன்; எந்தை யாண்டுளன்கொல்லோ! என் இடைமுலை குளமாயிற்று.

(கருத்து.) தலைவன் பிரிவை யான் ஆற்றேனாயினேன்.

(வி - ரை.) தலைவன் பலகால், யான் பிரிவேன் பிரிவேனெனச் சொல்லியும் பிரியாதிருந்தான். ஒருநாள் அவன் பன்முறை அங்ஙனம் கூறக்கேட்டுச் சிறிது வெறுப்படைந்த தலைவி சினத்தால், "என்னை விட்டுப் போக" என்று கூறினாள். அதுவே தலைக்கீடாகத் தலைவன் பிரிந்தான். அவன் பிரிவால் வருந்திய தலைவி கூறியது இது.

மருங்கு - கண்ணோட்டமுமாம். கழிந்து மன்னுகவென்க. என்றேனே: ஏ, அசைநிலை. எந்தை யென்றது முறைகுறித்ததன்று; உறவின் மிகுதியைக் குறித்தது. கொல்லோ: இரங்கற் பொருட்டு (நன். 420, மயிலை.) முலையிடை யென்றது இடைமுலை யென மாறி நின்றது.

## மேற்கோளாட்சி

4. கொல்லோ வென்பது இரக்கம் குறித்து வந்தது (நன். 420, மயிலை.)

5-6. ‘தன் முலையிடை தடமாம்படி தன் இருகண்ணினீரும் வடிந்து வீழ அழுமோ வென்க ; கருங்கால்...........நிறைந்தே யென்றூர் பிறரும்’ (சீவக. 1629, ந.)

## ஒப்புமைப் பகுதி

1-3. “சேறுஞ் சேறு மென்றலிற் பலபுலந்து, சென்மி னென்றல் யானஞ் சுவலே” (நற். உ௨௯ : 1-2.)

4, மு. குறுந். ௪௩௬ : 5, ஒப்பு.

5. கருங்கால் வெண்குருகு : குறுந். ௩௦௩ : 1, ஒப்பு.

6. அழுதலால் முலையிடை குளமாதல் : “அறுகுள நிறைக்குந போல வல்கலும், அழுதன் மேவல வாகிப், பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே” (அகநா. ௧௧ : 13-5) ; “அழுதாடட மாக வணங்கிழையே”, “கண்ணீர் நிழன்மணிப்பூட், பரப்பி னிடைப்பாய்ந்து குளமாய்ப் பாலார் படாமுலையை, வருத்தி மணிநெடுங் கோட் டருவி போல வீழ்ந்த னவே” (சீவக. 1523, 2944.)

கண்ணீர் நகிலில் வீழ்தல் : குறுந். ௩௪௮ : 4-5, ஒப்பு.

5-6. “உருகி வாடியென் னுற்றது கொல்லெனக்
கருகி வாடிய காமரு கோதைதன்
இருக ணீரு மிடைமுலை பாய்ந்துகக்
குருகு பாய்தட மாக வழுங்கொலோ” (சீவக. 1629.)
(௩௨௫)

---

## தலைவி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தினனாகத் தோழிக்குக் கூறுவாளாய், “தலைவன் ஒருநாள் என்னைப் பிரிந்திருந்தானாயின் எனக்கு அதனால் உண்டாகும் துன்பம் பலநாள் என்னை வருத்துகின்றது” என்று கூறி, இனிப் பிரிவு நேராதவண்ணம் வரைதலே தக்கதென்பதைத் தலைவி புலப்படுத்தியது.]

௩௨௬. துணைத்த *கோதைப் பணைப்பெருந் தோளினர்
கடலாடு மகளிர் கான லிழைத்த
சிறுமனைப் புணர்ந்த நட்பே தோழி

---

(பி - ம்.) * தோகைப் பிணைப்பெருந்.

ஒருநாட் டுறைவன் றுறப்பிற்
பன்னாள் வரூஉ மின்னா மைத்தே.

எ - து. சிறைப்புறம்.

..............................

(ப - ரை.) தோழி—, துணைத்த கோதை பணை பெரு தோளினர் - கட்டிய மாலையை யணிந்த மூங்கிலைப்போன்ற பருத்த தோளை யுடையாராகிய, கடல் ஆடு மகளிர் - கடலில் நீர்விளையாடலைச் செய்யும் மகளிர், கானல் இழைத்த - கடற்கரைச்சோலையிலே செய்த, சிறுமனை-சிற்றிலினிடத்தே, புணர்ந்த நட்பு - யாம் தலைவனோடு பொருந்திய நட்பு, துறைவன் ஒருநாள் துறப்பின் - அத்தலைவன் ஒருநாள் நம்மைப் பிரிந்தால், பல் நாள் வரூஉம் இன்னாமைத்து - பல நாளில் வருகின்ற துன்பத்தை யுடையது.

(முடிபு.) தோழி, சிறுமனையிற் புணர்ந்த நட்பு ஒருநாள் துறைவன் துறப்பின் பன்னாள் வரூஉம் இன்னாமைத்து.

(கருத்து.) தலைவன் சிறிது பொழுது பிரியினும் எனக்குப் பெரிய துன்பம் உண்டாகின்றது.

(வி - ரை.) துணைத்த - கட்டிய; 'கழுநீர் துணைப்ப - செங்கழுநீர்களை மாலைகட்டும்படியாக' (மதுரைக். 551, ந.); இரட்டையாகக் கட்டியவெனலுமாம் (குறுந். ௨௨௧ : 6.) சிறுமனை - சிற்றில். தலைவி சிற்றிலிழைத்து விளையாடுகையில் தலைவனுடைய நட்பு உண்டாயிற்று.

களவொழுக்கமாதலின் இடையிடையே பிரிவுநேர்வது கருதி, 'ஒருநாள் துறைவன் துறப்பின் பன்னாள் வரூஉம் இன்னாமைத்து' என்றாள். இதனால் இடையீடின்றி உடனுறையும் இல்வாழ்வே தக்கதென்றும் அதற்கு வரைந்துகொள்ளுதலே விரகென்றும் தலைவன் உணரவைத்தாள்.

ஏகாரங்கள், அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. பணைப்பெருந்தோள் : குறுந். ௨௬௮ : 6, ஒப்பு.
3. தலைவனது நட்பு : குறுந். ௨௭௭ : 6-7, ஒப்பு.

---

* ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.

2-3. விளையாடுகையில் தலைவனைக் கண்டு தலைவி நட்புச் செய்தல்: (குறுந். உகச : 1-4); "புனையிழை நோக்கியும் புனலாடப் புறஞ் சூழ்ந்தும், அணிவரி தைஇயுநம் மில்வந்து வணங்கியும், நினையுபு வருந்து மிந் நெடுந்தகை" (கலி. எசு : 1-3); "தொடலை யாயமொடு கடலுட னாடியும், சிற்றி லிழைத்துஞ் சிறுசோறு குவைஇயும், வருந்திய வருத்தந் தீர யாஞ்சிறி, திருந்தன மாக வெய்த வந்து, தடமென் பணைத்தோண் மடநல் லீரே, எல்லு மெல்லின் றசைவுமிக வுடையேன், மெல்லிலைப் பரப்பின் விருந்துண் டியானுமிக், கல்லென் சிறுகுடித் தங்கின்மற் றெவனோ, எனமொழிந் தனனே யொருவ னவற்கண், டிறைஞ்சிய முகத்தேம் புறஞ்சேர்பு பொருந்தி, இவை நுமக் குரிய வல்ல விழிந்த, கொழுமீன் வல்சி யென்றன மிழுமென, நெடுங்கொடி நுடங்கு நாவாய் தோன்றுவ, காணு மோவெனக் காலிற் சிதையா, நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளும், என்னே குறித்த நோக்கமொடு நன்னுதல், ஒழிகோ யானென வழிதகக் கூறி, யான் பெயர் கென்ன நோக்கித் தான்றன், நெடுந்தேர்க் கொடுஞ்சி பற்றி, நின்றோன் போலு மென்றுமென் மகட்கே", "நகைநனி யுடைத்தாற் றோழி தகைமிகக், கோதை யாயமொடு குவவுமணலேறி, வீதை கானல் வண்ட லயரக், கதழ்பரித் திண்டேர் கடைஇ வந்து, தண்கயத் தமன்ற வொண்பூங் குவளை, அரும்பலைத் தியற்றிய சுரும்பார் கண்ணி, பின்னுப்புறந் தாழக் கொன்னே சூட்டி, நல்வர விளமுலை நோக்கி நெடிதுநினைந்து, நில்லாது பெயர்ந்தன னொருவன்" (அகநா. ககo : 6-25, க அo : 1-9); "வண்டலுற் றேமெங்கண் வந்தொரு தோன்றல் வரிவளையீர், உண்டலுற் றேமென்று நின்றதோர் போழ்துடை யான்புலியூர்க், கொண்டலுற் றேறுங் கடல்வர வெம்முயிர் கொண்டுதந்து, கண்டலுற் றோர்நின்ற சேரிச்சென் றானோர் கழலவனே" (சிற். 290.)

3-5. குறுந். உஎக : 3-5. (௩௨௬)

---

## தலைவி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தே நிற்ப ஆற்றை நோக்கி, "தலைவனைக் காட்டிலும் கொடியை" என்று கூறும் வாயிலாகத் தலைவி அவனது கொடுமையை உணர்த்தியது.]

௩உஎ. நல்கின் வாழு நல்கூர்ந் தோர்வயின்
நயனில ராகுத னன்றெனவுணர்ந்த
குன்ற நாடன் றன்னினு நன்றும்

நின்னிலை கொடிதாற் * றீய கலுழி
நம்மனை மடமக ளின்ன மென்மைச்
† சாயல ளளிய ளென்னும்
வாழைதந் தனையாற் சிலம்புபுல் லெனவே.

எ - து. கிழவன் கேட்கும் அண்மையனாக அவன் மலையி னின்று வரும் யாற்றிற்கு உரைப்பாளாய் உரைத்தது.

அம்மூவன்.

(ப - ரை.) தீய கலுழி - பொல்லாங்கையுடைய ஆறே, நம் மனை மடம் மகள் - நாம் செல்லும் மனையிடத்துள்ள மடப்பத்தை யுடைய தலைவி, இன்ன - இதனைப்போன்ற, மென்மை சாயலள் - மெல் லிய சாயலை உடையவள், அளியள் - அளிக்கத்தக்காள், என்னும் - என்றுகருதாயாகி, சிலம்பு புல்லென - மலைப்பக்கம் பொலிவழியும்படி, வாழை தந்தனை - அங்கே வளர்ந்த வாழைமரத்தைப்பெயர்த்துக் கொணர்ந்தனை ; ஆதலின், நல்கின் வாழும் - தாம் தண்ணளிசெய் தால் வாழ்கின்ற, நல்கூர்ந்தோர்வயின் - வறியோர்பால், நயன் இலர் ஆகுதல் நன்று என உணர்ந்த குன்றம் நாடன்தன்னினும் - அன்பு இல்லாராதல் நல்லதென்று உணர்ந்த குன்றநாடனது நிலையைக்காட்டி னும், நின் நிலை நன்றும் கொடிது - நினது இயல்பு மிகவும் கொடியது.

(முடிபு.) கலுழி, புல்லென வாழை தந்தனை ; குன்றநாடன் றன்னினும் நின்னிலை கொடிது.

(கருத்து.) தலைவன் கொடியன்.

(வி - ரை.) தலைவன் நெடுநாள் வரையாது வந்தொழுகினானாக, அதனை விரும்பாத தலைவி கூறியது இது.

உலகின்மேல் வைத்துச் சொல்லினும் நல்குதலென்றது தலைவன் தண்ணளி செய்தலையும், நல்கூர்ந்தோரென்றது தலைவியையும், நயனில ராகுதலென்பது வரையாது ஒழுகுதலையும் குறித்து நின்றன. பொது வகையாற் கூறுதலின் பன்மை வாசகம்பட வைத்தாள். நாடன் - நாடனது நிலை ; ஆகுபெயர். நன்றும் : மிகுதியைப் புலப்படுத்தியது. யாறு தலைவனது குன்றத்திலிருந்து வந்து தலைவியின் மனைக்கு

(பி - ம்.) * நீங்கலுழுதி, றீய கலுழ்தி. † சாயலளியளென்னும், சாயலளிய வென்னும்.

அருகில் ஓடுவதாதலின் 'நம்மனை மடமகள்' என்று உளப்படுத்திக் கூறினாள் (குறுந். உஅச: 6-8.)

தலைவியின் மென்மைக்கு வாழையின் மென்மை உவமை. நின்னோடு உறவுடைய என்னை நினைக்கச்செய்யும் வாழையைப் பறித்து வந்ததும், நீ தோன்றும் மலையின் பொலிவு அழியச் செய்ததுமாகிய கொடுமை தலைவனது கொடுமையினும் மிக்கதென்றாள்; தலைவன் பழகியார்திறத்து அன்பிலனாதலோடு அமைய, யாறோ பழகியார்பாற் பகைத்தன்மையும் உடையதாயிற்றாதலின் அதனை நன்றுங் கொடியதென்றாள்.

ஆல், ஏ : அசை நிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1. தலைவன் நல்குதல்: குறுந். கூஎ : 1, ஒப்பு.

7. சிலம்பில் வாழை வளர்தல்: "வாழையஞ் சிலம்பு" (அகநா. கூஉஅ : 14, கூகூஉ : 9.)

ழ. ஆற்றை நோக்கிக் கூறல்: அகநா. கூகஅ. (கூஉஎ)

---

## தோழி கூற்று

[வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்த காலத்தில் வருந்திய தலைவியை நோக்கி, "அலரை அஞ்சற்க. அவ்வலர் நன்மையையே விளைக்கும்" என்று தோழி கூறியது.]

கூஉஅ. சிறுவீ ஞாழல் வேரளைப் பள்ளி
அலவன் சிறுமனை சிதையப் புணரி
குணில்வாய் முரசி னிரங்குந் துறைவன்
நல்கிய நாடவச் சிலவே யலரே
வில்கெழு தானை விச்சியர் பெருமகன்
வேந்தரொடு பொருத ஞான்றைப் பாணர்
புலிநோக் குறழ்நிலை கண்ட
கலிகெழு * குறும்பூ ரார்ப்பினும் பெரிதே.

---

(பி - ம்.) * குறும்ப ரார்ப்பினும்.

எ - து. வரைவிடை வேறுபடும் கிழத்தியை, அவர் வரையும் நாள் அணித்தேனவும், அலரஞ்சலேனவும் கூறியது.

பரணர்.

(ப - ரை.) *சிறு வீ ஞாழல் வேர் அளை பள்ளி - சிறிய மலரை யுடைய ஞாழல்மரத்தின் வேரின்கண் அமைக்கப்பட்ட வளையிடத்தி லுள்ள, அலவன் சிறு மனை சிதைய - நண்டினது சிறிய வீடு அழியும் படி, புணரி - அலைகள், குணில் வாய் முரசின் இரங்கும் துறைவன் - குறுந்தடி வாய்த்த முரசத்தைப்போல வீசி முழங்கும் கடற் றுறையையுடைய தலைவன், நல்கிய நாள் தவ சிலவே - தண்ணளி செய்த நாட்கள் மிகவும் சிலவேயாகும்; அலர் - பழிமொழியோ, வில் கெழு தானை விச்சியர் பெருமகன் - விற்படையைக் கொண்ட படைகளையுடைய விச்சியர்களுக்குத் தலைவன், வேந்தரொடு பொருத ஞான்றை - அரசர்களோடு போர்செய்த காலத்தில், பாணர் புலி நோக்கு உறழ்நிலை கண்ட - பாணர்களது புலியினது பார்வையை ஒத்த நிலையிற் காணப்பட்ட, கலி கெழு குறும்பூர் - ஆரவாரமிக்க குறும்பூரினிடத்திலுள்ளார் செய்த, ஆர்ப்பினும் பெரிது - முழக்கத் தினும் பெரிய முழக்கத்தை யுடையதாயிற்று.*

(முடிபு.) *துறைவன் நல்கியநாள் தவச்சிலவே; அலர் ஆர்ப் பினும் பெரிது.*

(கருத்து.) *அலர் மிகுதியாயிற்று.*

(வி - ரை.) *குணில் வாய் - குறுந்தடியால் அடித்தல் வாய்க்கப் பெற்ற. இரங்குதல் - ஒலித்தல்.*

*விச்சியர் பெருமகன் :* புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் *விச் சிக்கோனென்ற ஒருபகாரி சொல்லப்படுகிறான்; இவன் அவன் போலும்.*

*பாணர் போர்க்களத்தில் களவழிப்பா, பரணி முதலியன பாடு தல் மரபாதலின் அங்கே சென்றார். புலியென்றது இங்கே சிங் கத்தை. புலி நோக்கு - அரிமா நோக்கு; ஸிஹ்மாவலோகனம்; ருபுறமும் பார்த்தல். பொருவார் இருசாராராதலின் இடை நின்ற பாணர் சிங்க நோக்காற் பார்த்தனர். குறும்பூர் : ஓரூர்போலும்.*

*சிலவே : ஏ, பிரிநிலை ; ஏனை ஏகாரங்கள் அசைநிலை.*

97

'அலர் பெரிதாதலின் அவ்வலரால் தமர் தலைவனையறிந்து அவன் வரைவினை ஏற்றுக்கொள்வர்;' ஆதலின் அலரை யஞ்சற்க' என்று தோழி கூறினளாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. சிறுவீ ஞாழல்: குறுந். ௫0 : 1; நற். ககக : 1.

1-2. நண்டின் வேரளை : குறுந். ககஎ : 2-3, ஒப்பு.

3. கடலொலித்த முரசொலி: பெருங். க. 38 : 130.

3-4. தலைவன் நல்குதல்: குறுந். ௯எ : 1, ஒப்பு, ௯உஎ : 1.

8. வீரர் ஆர்த்தல்: குறுந். ௯ச : 5, ஒப்பு.

4-8. அலர் ஆர்ப்பினும் பெரிது: குறுந். ௯௬௯: 2-6; அகநா. ௯௬ : 12-23, உ0௬ : 2-6, உ௫௯: 3-7, உ௫௬ : 13-21. (௯உஅ)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்து வருந்திய தலைவியைத் தோழி வற்புறுத்தினளாக, "யான் ஆற்றுவேன்; என்கண்கள் துயிலாவாகி அழுதன" என்று தலைவி கூறியது.]

௯உ௯. கான விருப்பை * வேனல் வெண்பூ
வளிபொரு நெடுஞ்சினை † யுகுத்தலி னூர்கழல்பு
களிறுவழங்கு சிறுநெறி புதையத் தாஅம்
பிறங்குமலை யருஞ்சுர மிறந்தவர்ப் படர்ந்து
பயிலிரு ணடுநாட் டுயிலரி தாகித்
தெண்ணீர் நிகர்மலர் புரையும்
நன்மலர் மழைக்கணிற் கெளியவாற் பனியே.

எ - து. பிரிவிடை மெலிந்த கிழத்தி வற்புறுத்துந் தோழிக்கு யான் ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

ஓதலாந்தையார்.

(ப - ரை.) தோழி, கானம் இருப்பை - காட்டிலே வளர்ந்த இருப்பைமரத்தினது, வேனல் வெள் பூ - வேனிற்காலத்திலே

(பி - ம்.) * வேனில். † யுகுற்றலின்.

மலரும் வெள்ளிய பூக்கள், வளி பொரு நெடு சினை உகுத்தலின் - காற்றால் அலைக்கப்பட்ட நெடிய கொம்புகள் உதிர்ப்பதனால், ஆர் கழல்பு - காம்பினின்றும் கழன்று, களிறு வழங்கு சிறு நெறி புதைய - களிறுகள் செல்லும் சிறியவழி மறையும்படி, தாஅம் - பரக்கின்ற, பிறங்கு மலை அரு சுரம் - விளங்கிய மலைகளையுடைய கடத்தற்கு அரிய பாலைநிலத்தை, இறந்தவர் படர்ந்து - கடந்துசென்ற தலைவரை நினைந்து, பயில் இருள் நடு நாள் - பயிலுகின்ற இருளை யுடைய அரையிரவில், துயில் அரிது ஆகி - துயிலல் அரியதாகி, தெள் நீர் நிகர் மலர் புரையும் - தெள்ளிய நீரிடத்துள்ள ஒளியை யுடைய மலரை ஒக்கும், நன் மலர் மழைக்கணிற்கு - நல்ல மலர்ந்த குளிர்ச்சியையுடைய கண்ணிற்கு, பனி எளிய - நீர்த்துளிகள் எளி திலே உண்டாவன.

(முடிபு.) சுரம் இறந்தவர்ப் படர்ந்து துயில் அரிதாகிக் கண் ணிற்குப் பனி எளிது.

(கருத்து.) யான் ஆற்றியிருப்பவும் என்கண்கள் துயிலுத லொழிந்து அழுதன.

(வி - ரை.) தலைவனது பிரிவினால் வருந்திய கிழத்தியை நோக்கி, "நீ ஆற்றுதல் வேண்டும். துயிலாதிருத்தலையும் அழுதலை யும் நீங்குதி" என்று தோழி கூற, கிழத்தி, "நான் ஆற்றுவேன்; ஆயினும் என் கண்கள் தாமே துயிலொழிந்து அழுதன. யான் ன் செய்கேன்!" என்று கண்களை வேறுபடுத்துக் கூறினாள்.

கானம் - பாலைநிலம். இருப்பை அந்நிலத்திற்குரியது;

"அத்த விருப்பைப் பூ" (நற். கககு : 1.)

வேனிலென்பது வேனலெனவும் வரும்;

"இளவேனல் வந்ததா லென்னாங்கொ லின்று
வளவேனற் கண்ணி மனம்"

"வேனற்பா ணிக்கலந்தாண் மென்பூந் திருமுகத்தைக்
கானற்பா ணிக்கலந்தாய் காண்"

(சிலப். அ : இறுதி வெண்பாக்கள்);

"வேனல்வேள் மலர்க்கணைக்கும் வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே"

(திருவா. திருச்சதகம், 19.)

வளி பொருதலின் சினை பூவை உகுத்தன.

பயில் இருள் நடு நாள் - நானும் தலைவனும் ஒருவரோடொருவர் பயிலுதற்குரிய இருளையுடைய நடுநாளென்பதும் பொருந்தும். நிகர் மலர் புரையுமென்று வைத்தலின் மலர் மழைக்கணென்பதில் மலர், வினையாயிற்று. கண்ணுக்குத் துயில் அரிதாகி அழுதல் எளிதாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

1-3. இருப்பைமலர் காற்றினால் உதிர்தல்: "இருப்பை,......ஆலி வானிற் காலொடு பாறி", "அத்த விருப்பை யார்கழல் புதுப்பூத், துய்த்த வாய துகணிலம் பரக்க" (அகநா. க : 3-9, கடு : 13-4.)

மலர் ஆர்கழல்பு உதிர்தல் : குறுந். உஅஉ : 6-7.

4. அருஞ்சுரம் : குறுந். எஎ : 5, ஒப்பு.

7. மழைக்கண் : குறுந். உஉஉ : 6, உடுசு : 4.

6-7. குறுந். உசுக : 5-8 ; அகநா. கக : 12-5.

5-7. தலைவி துயிலாமை : குறுந். சு : 4, ஒப்பு.

தலைவி துயிலாமையும் அழுதலும் : குறுந். கக : 2, ஒப்பு ; அகநா. அஉ : 16-8. (௩௨௯)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில் வருந்திய தலைவி, "தலைவர் சென்ற நாட்டில் என்னை வருத்தும் மாலையும் புலம்பும் இலவோ?" என, தோழிக்குக் கூறியது.]

௩௩௦. நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத்
தலைப்புடைப் போக்கித் * தண்கயத் திட்ட
நீரிற் பிரியாப் † பருஉத்திரி கடுக்கும்
பேரிலைப் பகன்றைப் பொதியவிழ் வான்பூ
இன்கடுங் கள்ளின் மணமில கமழும்
புன்கண் மாலையும் புலம்பும்
இன்றுகொ லோழியவர் சென்ற நாட்டே.

---

(பி - ம்.) * தண்ணயத் திட்ட. † பருஉக்கிரி.

எ - து. பிரிவிடை வேறுபட்ட கிழத்தி தோழிக்குச் சொல்லியது.

கழார்க்கீரனெயிற்றியன்.

(ப - ரை.) தோழி—, நலம் தகை புலைத்தி - நன்மையையும் அழகையும் உடைய வண்ணாத்தி, பசை தோய்த்து எடுத்து - கஞ்சியிலே தோய்த்து எடுத்து, தலை புடை போக்கி - முதல் தப்பலைத் தப்பிவிட்டு, தண் கயத்து இட்ட - தண்ணிய நீர்நிலையிலே போகட்ட, நீரில் பிரியா பரூஉ திரி கடுக்கும் - அந்நீரிலே பிரியாத பருத்த ஆடையின் முறுக்கை ஒக்கும், பெரு இலை பகன்றை பொதி அவிழ் வால் பூ-பெரிய இலையையுடைய பகன்றையினது கூம்பு மலர்ந்த வெள்ளிய மலர், இன் கடு கள்ளின் - இனிய கடுமையாகிய கள்ளைப்போல, மணம் இல கமழும் - நறுநாற்றமில்லாதனவாகி நாறுகின்ற, புன்கண் மாலையும்-துன்பத்தைத் தரும் மாலைக்காலமும், புலம்பும் - தனிமையும், அவர் சென்ற நாட்டு - அத்தலைவர் நம்மைப் பிரிந்து சென்ற நாட்டிலே, இன்றுகொல் - இல்லையோ.

(முடிபு.) தோழி, மாலையும் புலம்பும் அவர் சென்ற நாட்டு இன்றுகொல்?

(கருத்து.) மாலைக்காலமும் தனிமையும் எனக்கு வருத்தத்தை உண்டாக்குகின்றன.

(வி - ரை.) தகை - தகுதியுமாம். புலைத்தி - வண்ணாத்தி. வள் ஆடையைப் பசையில் தோய்த்தல் வழக்கம்;

"பசைவிரற் புலைத்தி நெடிதுபிசைந் தூட்டிய
பூந்துகில்" (அகநா. ௩௮௭ : 6-7.)

பகன்றையின் பூவை,

"தளைபிணி யவிழாச் சுரிமுகப் பகன்றை" (அகநா. ௨௪ : 3)

என்பவாதலின் அது முறுக்கிய ஆடையை ஒத்தது. பகன்றை - சிவதையென்பர் நச்சினார்க்கினியர் (குறிஞ்சிப். 88, உரை); பெருங்கையாலென்பர் அடியார்க்கு நல்லார் (சிலப். ௧௩ : 155-60, உரை.)

பொதி - தளையவிழாத கட்டு. பகன்றைமலர் வெண்ணிறமுடைத்து. மணமென்றது நறுமணத்தை; நச்சினார்க்கினியரும், 'மணமில்லாத பகன்றைப்பூ' என்பர் (கலி. ௭௩ : 1-5, உரை.)

(பி - ம்.) * கிழார்க்கீரன்.

'மாலையும் புலம்பும் அவர் சென்ற நாட்டில் இன்றுகொல்' என்றது, 'தலைவரது பிரிவால் இவ்விரண்டும் எனக்குத் துன்பத்தைத் தருகின்றன; அவை என்னைப் பிரிந்த தலைவருக்கும் துன்பத்தைத் தருவனவாம். அவர் துன்புறுவரேல் ஆண்மையுடையவராதலின் அத்துன்பத்தினின்றும் நீங்க ஈண்டே வருவர். அவர் நாட்டில் இவையின்மையின் துன்பத்தை அறிந்திலர் போலும்!' என்னும் நினைவிற்று. இன்றென்பதை மாலைக்கும் புலம்பிற்கும் தனித்தனியே கூட்டுக. கொல்: ஐயம். நாட்டே: ஏ, அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. புலைத்தி: கலி. எஉ: 14; புறநா. நூகக: 2.

1-3. புலைத்தி பசைதோய்த்தல்: "அறனில் புலைத்தி யெல்லித் தோய்த்த, புகாப்புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு" (நற். கூ0: 3-4); "பசைகொள் மெல்விரற் பெருந்தோட் புலைத்தி" (அகநா. நூச: 11.)

4. பகன்றை: குறிஞ்சிப். 88; நற். அசு: 3; ஐங். அஎ: 1; அகநா. கஎசு: 10, நூககு: 6; புறநா. கக: 14, உநூ௫: 18.

பேரிலைப் பகன்றை வான்பூ: "பேரிலைப், பகன்றை வான்மலர்" (அகநா. உகக: 3-4.)

பகன்றையின்மலர் வெண்ணிறமுடையது: "பகன்றை வான்மலர்", "வெள்ளிதழ்ப், பகன்மதி யுருவிற் பகன்றை மாமலர்" (ஐங். கஎ: 1, சஙசு: 1-2); "பகன்றைப்பூ வுறநீண்ட பாசடைத் தாமரை, கண்பொர வொளிவிட்ட வெள்ளிய வள்ளத்தாற், றண்கமழ் நறுந்தேற லுண்பவன் முகம்போல, வண்பிணி தளைவிடூஉம் வயலணி நல்லூர" (கலி. எநூ: 2-5); "பகன்றை, நீலுண் பச்சை நிறமறைத் தடைச்சிய, தோலெறி பாண்டிலின் வாலிய மலர" (அகநா. உகஎ: 6-8.)

3-4. பகன்றைப்பூவிற்த ஆடை: "பனித்துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல், கழுவுறு கலிங்கங் கடுப்பச் சூடி" (பதிற். எசு: 12-3); "போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன, அகன்றுமடி கலிங்க முடீஇ" (புறநா. நூகூநூ: 17-8.)

5. இன்கடுங்கள்: குறுந். உகஅ: 5, ஒப்பு.

6-7. மு. குறுந். சசு: 6-7. (நூநூ0)

## தோழி கூற்று

[தலைவன் பொருள்வயிற் பிரிய எண்ணியதையறிந்து வருந்திய தலைவியை நோக்கி, "அவர் கொடுமையையுடைய பாலைநிலத்தைக் கடந்து செல்வரோ? செல்லார்" என்று தோழி கூறியது.]

௩௩௧. நெடுங்கழை திரங்கிய நீரி லாரிடை
ஆறுசெல் வம்பலர் தொலைய மாறு நின்று
கொடுஞ்சிலை மறவர் கடறுகூட் டுண்ணும்
கடுங்கண் யானைக் கான நீந்தி
இறப்பர்கொல் வாழி தோழி நறுவடிப்
பைங்கான் மாஅத் தந்தளி ரன்ன
நன்மா மேனி பசப்ப
நம்மினுஞ் சிறந்த வரும்பொரு டரற்கே.

எ - து. செலவுக் குறிப்பறிந்து வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.

† வாடாப் பிரமந்தன்.

(ப - ரை.) தோழி—, நறு வடி - நறிய வடுவையும், பசு கால் மாஅத்து அம் தளிர் அன்ன - பசிய அடியையுமுடைய மாமரத்தினது அழகிய தளிரை ஒத்த, நல் மா மேனி பசப்ப - நல்ல மாமை நிறம் பசலையையடைய, நம்மினும் சிறந்த அரு பொருள் தரற்கு - நம்மைக்காட்டிலும் தலைவருக்குச் சிறந்ததாகத் தோற்றுகின்ற பொருளைக் கொணரும்பொருட்டு, நெடு கழை திரங்கிய நீர் இல் அரு இடை - நெடிய மூங்கில் உலர்ந்த நீர் இல்லாத அரிய இடத்தில், ஆறு ல் வம்பலர் தொலைய-வழியிற் போகும் பிரயாணிகள் அழியும்படி, மாறு நின்று - எதிராக நின்று, கொடு சிலை மறவர் - வளைந்த வில்லையுடைய மறச்சாதியார், கடறு கூட்டுண்ணும் - காட்டைக் கொள்ளை [illegible] கடு கண் யானை கானம் நீந்தி - தறுகண்மையையுடைய [illegible]ளையுடைய காட்டைக் கடந்து, இறப்பர்கொல் - செல்வாரோ?

(முடிபு.) தோழி, பொருள்தரற்கு, மேனி பசப்ப, கானம் நீந்தி இறப்பர் கொல்?

(பி - ம்.) * பைங்கண். † வாடாப் பிரபந்தன்.

(கருத்து.) தலைவர் பொருள்வயிற் பிரிதல் உறுதியன்று.

(வி - ரை.) தலைவர் செல்ல எண்ணிய பாலைநிலம் கடுங்கண் மறவரை யுடையதாதலின் அங்கே போகாரென்னும் நினைவின ளாகிய தோழி அப் பாலையின் கொடுமையை விரித்துரைத்தாள். கடறு கூட்டுண்ணுதலாவது வழிப்போவார்பால் உள்ள பொருள்களை வௌவுதல். கடத்தற்கரிய பரப்பினதாதலின் நீந்தியென்றாள்.

மா மேனி - மாமை நிறம் ;

“மாநிறமுங் கொண்டாரிங்கே” (திவ். திருநெடுந்தாண்டகம், 23.)

தலைவன் பிரிவினால் மாமையழியப் பசலை உண்டாதலை, இந்நூல் உஎ-ஆம் செய்யுளாலும் உணரலாகும்.

நம்மினும் சிறந்த அரும்பொருளென்றது குறிப்புமொழி ; நம்மி னுஞ் சிறந்ததன்றென்னும் கிடக்கையாற் கூறியது.

இறப்பர்கொல் என்ற ஐயம் செல்லாமையைச் சார்ந்தே நின்றது.

## ஒப்புமைப் பகுதி

1. பாலைநிலத்தில் மூங்கில் உலர்தல்: (குறுந். கஅ0 : 4, ௩கசு : 7); “மழைபெயன் மறந்த கழைதிரங் கியவில்”, “மழைகரந் தொளித்த கழைதிரங் கடுக்கத்து” (அகநா. உசடு : 5, ௩சஎ : 10.)

நீரிலாரிடை: குறுந். ௩சஎ : 1.

2. ஆறுசெல் வம்பலர் : குறுந். உகஎ : 3, ௩டு0 : 6 ; அகநா, கூடு : 8, க0எ : 6.

1-3. பாலைநிலத்தில் மறவர் ஆறலைத்தல் : குறுந். உஅ௩ : 5-7, ஒப்பு.

4. கானம் நீந்தல் : குறுந். ௩டு0 : 7 ; அகநா. க0௩ : 10.

5-6. நறுவடி மா : நற். உச௩ : 3 ; ஐங். சுக : 1, உக௩ : 1.

வடுவையுடைய மாத்துத்தளிர் : “வடிக்கொண் மாஅத்து டளிர்” (ஐங். கச : 2.)

6-7. மாந்தளிர் மகளிரது மேனிக்கு : “மாவின், அவிர்தளிர் புரையு மேனியர்” (முருகு. 143-4) ; “தேமா மேனிச் சில்வளை யாயம்” (சிறு பாண். 176) ; “கழிகவி னிளமாவின் றளிரன்னாய்” (கலி. கஎ : 13) ;

" வளங்கெழு மாவி னிளந்தளி ரன்ன, நயத்தகு மேனியும்", " மாந்தளிர் மேனியும்" (பெருங். ௩. 6 : 83-4, ௪. 13 : 219) ; " மாந்தளிரே மா மேனி" (சீவக. 652) ; " நறுமாவின், கொய்தளி ரன்ன கிறம்" (முத். 83) ; "மாந்தளிர்போல், மின்னிய மாமை விளர்ப்பதென்னே" (தஞ்சை. 22.)

7. மாமை பசலையால் அழிதல் : (குறுந். ௨௭ : 4-5, ஒப்பு.); " பொன்னேர் பசலை யூர்தரப் பொறிவரி, நன்மா மேனி தொலைத ஞெக்கி" (அகநா. ௨௨௧ : 13-4.)

8. பொருள் நம்மினுஞ் சிறந்தது: கலி. ௨ : 19-22, ௫ : 4-5 ; அகநா. ௨௬௫ : 23. (௩௩௧)

---

## தோழி கூற்று

[தலைவன் வரையாமல் வந்தொழுகிய காலத்தில் ஒருநாள் அவன் சிறைப்புறத்தில் நிற்பத் தலைவிக்கு, " தலைவனுக்கு நின் துயர்நிலையைக் கூறினால் என் ?" எனத் தோழி கூறியது.]

௩௩௨. வந்த வாடைச் சில்பெயற் கடைநாள்
நோய்நீந் தரும்படர் தீர நீநயந்து
கூறி னெவனோ தோழி நாறுயிர்
மடப்பிடி தழீஇத் தடக்கை யானை
குன்றச் சிறுகுடி யிழிதரு
மன்ற நண்ணிய மலைகிழ வோற்கே.

எ - து. வரையாது வந்தொழுகாநின்ற காலத்துக் கிழவன் கேட்பக் கிழத்திக்குத் தோழி கூறியது.

மதுரை மருதங்கிழார் மகன் இளம்போத்தன்.

(ப - ரை.) தோழி—, நாறு உயிர் மடம் பிடி தழீஇ - மணம் வீசுகின்ற மூச்சையுடைய மடப்பத்தையுடைய பெண்யானையைத் தழுவி, தட கை யானை - வளைந்த கையையுடைய யானை, குன்றம் சிறு குடி இழிதரு மன்றம் - குன்றினிடத்துள்ள சிற்றூரின்கண் இறங்கிச் செல்லும் மன்றங்கள், நண்ணிய மலைகிழவோற்கு - பொருந்திய மலையையுடைய தலைவனுக்கு, வந்த வாடை சில் பெயல் கடை

(பி - ம்.) * குன்றகச் சிறுகுடி.

நாள் - வாடைவந்த சிலவாகிய பெயலையுடைய நாளின் கடையாமத்தில், நோய் நீந்து அரு படர் தீர - வருத்தத்திலே துளையும் பொறுத்தற்கரிய நின் துன்பம் தீரும்வண்ணம், நீ நயந்து - நீ விரும்பி, கூறின் எவன் - கூறத் தகுவனவற்றைக் கூறினால் என்ன துன்பம் உளதாகும்?

(முடிபு.) தோழி, மலைகிழவோற்குப் படர்தீர நீகூறின் எவனோ?

(கருத்து.) நினது துன்பமிகுதியைத் தலைவனுக்கு நீயே கூற வேண்டும்.

(வி - ரை.) நாறு உயிர் - தோன்றுகின்ற உயிர்ப்பெனலும் ஆம். பிடியைத் தழுவி யானை இழிதருவதைக் கூறியது, தலைவன் தன்னை வெளிப்படையாக வரைந்து கொள்ளவேண்டுமென்னும் குறிப்பை உணர்த்தியது.

## ஒப்புமைப் பகுதி

1. சில்பெயற் கடைநாள் : குறுந். உகக : 2.

1-2. வாடை துயர்தருதல் : குறுந். கoரு : 4, ஒப்பு.

3-4. நாறுயிர் மடப்பிடி தழீஇ : அகநா. கஅக : 4.

5. குன்றச்சிறுகுடி : "குன்றகச் சிறுகுடி" (முருகு. 196.)

6. மன்றம் : குறுந். ருசக : 3.

மு. குறுந். கஅ : 1-3, ஒப்பு. (ருரு

---

## தோழி கூற்று

[தலைவியின் நோய்மிகுதியைக் கண்ட தோழி, "அறத்தொ நின்று தலைவனது வரைவை நமர் ஏற்றுக்கொள்ளச் செய்வோ என்றது.]

ருருரு. குறும்படைப் பகழிக் கொடுவிற் கானவன்
புனமுண்டு * கடிந்த பைங்கண் யானை
நறுந்தழை மகளி ரோப்புங் கிள்ளையொடு

(பி - ம்.) * படிந்த, கழிந்த.

குறும்பொறைக் கணவுங் குன்ற நாடன்
பணிக்குறை வருத்தம் வீடத்
துணியி னெவனோ தோழிநம் மறையே.

எ - து. அறத்தோடு நிற்பலெனக் கிழத்திக்குத் தோழி உரைத்தது.

† உழுந்தினைம் புலவன்.

(ப - ரை.) தோழி—, குறு படை பகழி - குறிய படையாகிய அம்பையும், கொடு வில் கானவன் - வளைந்த வில்லையும் உடைய வேட்டுவனது, புனம் உண்டு கடிந்த பசு கண் யானை - தினைப் புனத்தை உண்டதனாற் கடியப்பட்ட பசிய கண்ணையுடைய யானை, நறு தழை மகளிர் - நறிய தழையுடையை அணிந்த மகளிர், ஓப்பும் கிளியோடு - ஓட்டுகின்ற கிளிகளோடு, குறு பொறைக்கு அணவும் - குறிய பொற்றைக்கல்லினிடத்துச் செல்ல மேல்நோக்கும், குன்றம் நாடன் - மலையையுடைய நாட்டினனாகிய தலைவன், பணி குறை வருத்தம் - வினை நிறைவேறாமற் குறையாக நிற்றலினால் உண்டாகிய வருத்தம், வீட - நீங்கும்படி, நம் மறை - நம்முடைய இரகசியத்தை, துணியின் எவன் - தாய்க்குத் தெளிவித்தால் என்ன குற்றம் உளதாகும்?

(முடிபு.) தோழி, நாடன் வருத்தம்வீட நம்மறை துணியின் எவன்?

(கருத்து.) யான் அறத்தொடு நிற்பேன்.

(வி - ரை.) கானவன் புனங்காத்துநிற்ப யானை அவனாற் கடியுண்டது. மகளிரால் கிளிகள் கடியுண்டன. அவ்விரண்டும் குறும்பொறைக்குச் செல்ல அவாவின. பணிக்குறை வருத்தமென்றது ...வன் வரைவொடு புகும்பொழுது அது நிறைவேறாதிருப்பதனால் நேரும் வருத்தம். அறத்தொடுநின்றால் உண்மையுணர்ந்து தமர் ஏற்றுக் கொள்வராதலால் தலைவனது குறைதீரும். துணியின் - தெளியச் ...யின்; தன்வினை பிறவினைப் பொருளில் வந்தது. மறை - மந்த...ம்; என்றது தலைவி தலைவன்பாற் காதலுடையாளென்பது. இம் ...ற தோழியாலும் அறியப்பட்டதாதலின் தன்னையும் உளப்படுத்தி ...மறையென்றாள். எவனோ: ஓ, அசைநிலை. மறையே: ஏ, அசைநிலை.

(பி - ம்.) * துணியில். † உழுந்தினைம் புல்லன்.

தினைகாப்பவரால் யானையும் கிளியும் கடியப்படும் நாட னென்றது செவிலியர் முதலியோரது காவலால் தலைவன் தான் விரும் பிய இன்பத்தைப் பெறாது வருந்தும்படி கடியப்பட்டானென்ற குறிப்பை யுணர்த்தியது.

## ஒப்புமைப் பகுதி

2. யானை தினைப்புனத்தில் மேய்தல்: குறிஞ்சிப். 157-65; கலி. ௪௧: 7.

4. குறும்பொறை: குறுந். ௧௩௪: 3, ௨௧௫: 5.

அணவுதல்: பொருந. 13; குறிஞ்சிப். 35; பரி. ௧: 2.

5. பணிக்குறை: குறள், 674.

6. மறை: குறுந். ௬௭: 4, ௩௨௧: 8. (௩௩௩

---

## தலைவி கூற்று

[“தலைவன் வரைவிடைவைத்துப் பிரிந்தால் நீ ஆற்றும் வன்மை உடையையோ?” என்று வினவிய தோழிக்கு, “அவன் பிரியின் எம் உயிர் போம்” என்று தலைவி கூறியது.]

௩௩௪. சிறுவெண் காக்கைச் செவ்வாய்ப் * பெருந்தோ
டெறிதிரைத் திவலை யீர்ம்புற நனைப்பப்
பனிபுலந் துறையும் பல்பூங் கானல்
† விரிநீர்ச் சேர்ப்ப னீப்பி னொருநம்
இன்னுயி ரல்லது பிறிதொன்
றெவனோ தோழி நாமிழப் பதுவே.

எ - து. “வரைவிடை ஆற்றகிற்றியோ?” என்ற தோழிக்குக் கிழத்தி சொல்லியது.

இளம்பூதனார்.

---

(பி - ம்.) * பைந்தோடு. † இருநீர், பெருநீர்.

(ப - ரை.) தோழி—, சிறு வெள் காக்கை - சிறிய வெண்மை யையுடைய காக்கையினது, செ வாய் பெரு தோடு - செவ்விய வாயையுடைய பெரிய தொகுதி, எறி திரை இவலே ஈர்ம்புறம் நனைப்ப - வீசுகின்ற அலைகளின் நீர்த்துளிகள் தம் ஈரமாகிய புறத்தை நனைக்க, பனி புலந்து - அக்குளிரை வெறுத்து, உறையும் பல் பூ கானல் - தங்குதற்கு இடமாகிய பல மலர்களையுடைய சோலையை யுடைய, விரி நீர் சேர்ப்பன் நீப்பின் - அகன்ற கடற்கரையையுடைய தலைவன் பிரிந்தால், நாம் இழப்பது - நாம் இழக்கும் பொருள், நம் இன் உயிர் அல்லது - நமது இனிய உயிரையன்றி, பிறிது ஒன்று எவன் - வேறொன்று யாது?

(முடிபு.) தோழி, சேர்ப்பன் நீப்பின் நாம் இழப்பது உயிரல்லது பிறிதொன்று எவன்?

(கருத்து.) தலைவனது பிரிவை யான் ஆற்றேன்.

(வி - ரை.) சிறுவெண்மையென்றது கழுத்திலுள்ள நிறத்தை. காக்கையின் உள்வாய் சிவந்திருக்கும்.

'நாமிழப்பது பிறிதொன்றெவன்?' என்றது, தோழியாற் செறலைப் புலப்படுத்தியது; 'நம்மிடம் இழப்பதற்கு உயிரை யன்றி வேறு என்ன பொருள் இருக்கிறது?' என்று வினவியது, 'இதனை நீ அறிந்தும் அறியாள்போல் என்னை வினவினை' என்னும் நினைவிற்று.

எவனோ: ஓ, அசைநிலை. ஏ: அசைநிலை.

## மேற்கோளாட்சி

மூ. சேணிடையின்றி இட்டிதாகப் பிரிந்துழித் தலைவி இரங்கித் தன்வயினுரிமையும் அவன்வயிற் பரத்தமையும் படக்கூறியது (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. **சிறுவெண் காக்கை:** குறுந். உ௪௬ : 1, ஒப்பு.

பறவைகளின் தொகுதியைத் தோடென்றல்: குறுந். ௩௪ : 4, விசேட.

4-6. தலைவன் பிரியின் தலைவி உயிர் நீங்குதல்: குறுந். ௩௨ : 6, ஒப்பு, ௯எ : 3-4, ஒப்பு, ௧0௩ : 6, ௧௧௧ : 6, ௧௧எ : 4-5, உஎ௩ : 8, உ௧0 : 3-6, ௩௧௧ : 7-8 ; அகநா. ௯உ : 13, ௧௯ : 4-5. (௩௩௪)

## தோழி கூற்று

[தலைவி இற்செறிக்கப்படுதலை உணர்த்திய தோழி, "அவள் ஊர் வெற்பிடை நண்ணியது" என்றும், "அவள் வல்விற் கானவர் தங்கை" என்றும் கூறி இரவுக்குறி பெறுதற்கரிது என்பதைத் தலைவனுக்குப் புலப்பட வைத்தது.]

௩௩௫. நிரைவளை முன்கை நேரிழை மகளிர்
இருங்கல் வியலறைச் செந்தினை பரப்பிச்
சுனைபாய் சோர்விடை நோக்கிச் சினையிழிந்து
பைங்கண் மந்தி பார்ப்பொடு கவரும்
வெற்பிடை நண்ணி யதுவே வார்கோல்
வல்விற் கானவர் தங்கைப்
பெருந்தோட் கொடிச்சி யிருந்த வூரே.

எ - து. இரவுக்குறி நயவாமைத் தோழி செறிப்பு அறிவுறீஇயது. [நயவாமை - தலைவன் விரும்பாதபடி.]

இருந்தையூர்க் கோற்றன் புலவன்.

(ப - ரை.) வார் கோல் - நீண்ட அம்பையும், வல் வில் - பல இலக்குக்களை ஒரு தொடையில் துளைக்கவிடும் வலிய வில்லையும் உடைய, கானவர் தங்கை - வேட்டுவருடைய தங்கையாகிய, பெரு தோள் கொடிச்சி - பெரிய தோளையுடைய குறிஞ்சிநிலமகளாகிய தலைவி, இருந்த ஊர் - வாழும் ஊர், நிரை வளை முன் கை - வரிசை யாகிய வளையையுடைய முன்கையையும், நேர் இழை மகளிர் - நேர்ந்த அணிகலன்களையுமுடைய மகளிர், இரு கல் வியல் அறை - கரிய மலையிலுள்ள அகன்ற பாறையினிடத்து, செ தினை பரப்பி - சிவந்த தினையைப் பரப்பி, சுனை பாய் சோர்வு இடை நோக்கி - சுனையின்கண் பாய்கின்ற சோர்தலையுடைய சமயத்தைப் பார்த்து, சினை இழிந்து - மரக்கிளையினின்றும் இறங்கி, பசு கண் மந்தி - பசிய கண்ணையுடைய பெண்குரங்குகள், பார்ப்போடு கவரும் - குட்டிக ளோடு அத்தினையைக் கைக்கொள்ளும், வெற்பிடை நண்ணியது - மலையினிடத்தே பொருந்தியது.

(முடிபு.) கொடிச்சி இருந்தவூர், வெற்பிடை நண்ணியது.

---

(பி - ம்.) * வெற்பய னண்ணி, வெற்பன நண்ணி.

(கருத்து.) தலைவியை இரவுக்குறியிற் கண்டு அளவளாவுதல் அரிது.

(வி - ரை.) நேரிழை - பொருந்திய அணிகலன் (பட். 22, ந.) வார்கோல் வல்விற் கானவர் தங்கை யென்றதில் உடம்படு புணர்த்தும் வாயிலாகக் கானவர் இயல்பையும் புலப்படுத்தினுள். வெற்பிடை நண்ணியது வென்றதனுல் அடைதற்கரிய இடத்தினளென்பதையும், கொடிய கானவர் தங்கை யென்றதனுல் அவர் அறியின் தீங்கு நிகழுமென்பதையும் குறிப்பித்தாள்.

இதனுல், வரைந்து கொள்வதே நன்றென்னும் தன் நினைவு கூறினுள். இஃது இரவுக்குறி மறுக்கும் வாய்பாட்டால் வரைவு கடாயது.

## ஒப்புமைப் பகுதி

1-2. பாறையில் தினையை உலர்த்துதல்: "செந்தினை யுணங்க லெருக்கும், இன்கல் யாணர்த்தம் முறைவி னூர்க்கே" (நற். ௩௪௪ : 11-2.)

4. மந்தியும் பார்ப்பும்: குறுந். உஎ௮ : 7.

2-4. மந்தி பிறர் சோர்வுற்றதை யறிந்து உணவுப் பொருளைக் கவர்தல்: "காழோ ரிகழ்பத நோக்கிக் கீழ, நெடுங்கை யானை நெய்ம்மிதி கவளம், கடுஞ்சூன் மந்தி கவரும்" (பெரும்பாண். 393-5.)

6. வல்வில்: குறுந். ௧00 : 5, ஒப்பு.

கானவர் தங்கை: குறுந். ௩௧உ : 5; சிறுபாண். 190; ஐங். ௩௬௩ : 2.

7. பெருந்தோட் கோடிச்சி: குறுந். ௪00 : 2.

6-7. கானவர் தங்கையாகிய கொடிச்சி: "களிற்றுமுகந் திறந்த கவுளுடைப் பகழி, வானிணப் புகவிற் கானவர் தங்கை, அம்பணை மென்றோ ளாயிதழ் மழைக்கண், ஒல்கியற் கொடிச்சியை" (அகநா. ௧௩உ : 4-7.) (௩௩௫)

## தோழி கூற்று

[தலைவன் இரவுக்குறி நயந்த காலத்துத் தோழி, "நீ இரவில் வருதல் தகாது; அதனால் இவள் வருந்துவள்" என்று அது மறுத்த வாய்பாட்டால் வரைவு கடாயது.]

ருருசு. * செறுவர்க் குவகை யாகத் தெறுவர
† ஈங்கனம் வருபவோ தேம்பாய் துறைவ
சிறுநா வொண்மணி விளரி யார்ப்பக்
கடுமா நெடுந்தேர் நேமி போகிய
இருங்கழி நெய்தல் போல
வருந்தின ளளியணீ பிரிந்திசி னோளே.

எ - து. தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்லி மறுத்தது.

குன்றியன்.

(ப - ரை.) தேம் பாய் துறைவ - தேன் பரவுகின்ற துறையை யுடைய தலைவ, செறுவர்க்கு உவகை ஆக - பகைவருக்கு மகிழ்ச்சி உண்டாக, தெறுவர - எமக்குத் துன்பமுண்டாகும்படி, ஈங்கனம் வருபவோ - இங்கே அறிஞர் வருவரோ? நீ பிரிந்திசினோள் - நீ பிரிந்த தலைவி, சிறு நா ஒள் மணி - சிறிய நாவையுடைய ஒள்ளிய மணிகள், விளரி ஆர்ப்ப - விளரிப்பண்ணைப் போல முழங்க, கடு மா நெடு தேர் நேமி போகிய - விரையும் குதிரையைப் பூண்ட நெடிய தேரினது சக்கரம் மேலே ஏறிப் போனமையால் நலிந்த, இரு கழி நெய்தல் போல - கரிய கழியினிடத்துள்ள நெய்தல்மலரைப்போல, வருந்தினள் - வருத்தத்தையடைந்தாள்; அளியள் - இரங்கத்தக்காள்.

(முடிபு.) துறைவ, வருபவோ? நீ பிரிந்திசினோள் வருந்தினள்; அளியள்.

(கருத்து.) நீ இரவில் வருதல் நன்றன்று.

(வி - ரை.) செறுவர்க்கு உவகையாக வென்றது நின. ஏதம் நேரும் என்றபடி. விளரி - இரங்கற்பண்; நெய்தனிலத்து

---

(பி - ம்.) * செறுவார்க். † ஈங்கினம்.

குரியது. தலைவன் தேரேறிக் கடற்கரைவழியே வரும் வழக்க முடையனாதலின் அவனறிந்த உவமையையே எடுத்துரைத்தாள்.

நீ பிரிந்திசினோரென்றது களவுக்காலத்தில் இடையிடையே உண்டாகும் பிரிவினை நினைவுறுத்தியது; இதனால் என்றும் பிரியா துறைதலே வேண்டற்பாலதென்பதும், அதற்கு வரைதலே தக்க தென்பதும் உணர்த்தப்பட்டன.

பிரிந்திசினோள் : இசின், படர்க்கைக்கண் வந்தது.

## மேற்கோளாட்சி

மு. தலைவன் இரவுக்குறி நயந்தானைத் தோழி மறுத்தது (தொல். களவு. 22, ந.)

## ஒப்புமைப் பகுதி

3. சிறுநா வொண்மணி : நற். உ௬எ : 9.

3-4. தலைவன் தேர்மணி யொலிக்க வருதல் : குறுந். ௯௫ : 4-7, ஒப்பு, உ௯உ : 1-3.

5. கழிநெய்தல் : குறுந். ௯ : 4-5, ஒப்பு.

4-5. தேரின்நேமியால் நெய்தல் துறைதல் : குறுந். உஉஎ : 1-3, ஒப்பு. (௩௩௬)

---

## தலைவன் கூற்று

[இரந்து பின்னின்ற தலைவனுக்குத் தோழி தலைவியின் இளமைத்தன்மை கூறிய பொழுது, அவன் அவள் பருவம் வாய்த்த தையும் தன்னை வருத்திய வண்ணத்தையும் உணர்த்தியது.]

௩௩௭. முலையே முகிழ்முகிழ்த் தனவே * தலையே
கிளைஇய † மென்குரல் கிழக்குவீழ்ந் தனவே
செறிநிரை வெண்பலும் பறிமுறை நிரம்பின
சுணங்குஞ் சிலதோன் றினவே யணங்குதற்
கியான்ற னறிவலே தானறி யலளே
யாங்கா குவள்கொ றோனே
பெருமுது ‡ செல்வ ரொருமட மகளே.

---

(பி - ம்.) * தலைஇய. † குரலே. ‡ செல்வனொரு.

எ - து. தோழியை இரந்து பின்னின்ற கிழவன், தனது குறை யறியக் கூறியது.

போதுக்கயத்துக் கீரந்தை.

(ப - ரை.) முலை முகிழ் முகிழ்த்தன - நகில்கள் அரும்பின ; தலை - தலையில், கிளைஇய மெல் குரல் கிழக்கு வீழ்ந்தன - கிளைத்த மெல்லிய மயிர்க்கொத்துக்கள் கீழே தாழ்ந்தன ; செறி நிரை வெள் பலும் - செறிந்த வரிசையாகிய வெள்ளிய பல்லும், பறி முறை நிரம்பின - முதன்முறை விழுந்து முற்றும் முளைத்து நிரம்பின ; சுணங்கும் சில தோன்றின - தேமலும் சில வெளிப்பட்டன ; அணங்குதற்கு யான் தன் அறிவல் - அவள் வருத்தும்பொருட்டு நான் அவளை அறிவேன் ; தான் அறியலள் - அவள் அதனை அறிந்திலள் ; பெருமுது செல்வர் ஒரு மடமகள் - பெரிய முதிய செல்வத்தையுடையாரது ஒப்பற்ற மடப்பத்தையுடைய தலைவியாகிய அவள், யாங்கு ஆகுவள் கொல் - எத்தன்மையை யுடையவளாவளோ ?

(முடிபு.) முலை முகிழ் முகிழ்த்தன ; தலை குரல் வீழ்ந்தன ; பல்லும் நிரம்பின ; சுணங்கும் தோன்றின ; யான் தன்னறிவல் ; தான் அறியலள் ; மடமகள் யாங்காகுவள்கொல் ?

(கருத்து.) தலைவி பருவம் வாய்த்தவளாகி என்னை வருத்தினாள்.

(வி - ரை.) தலைவி பேதைப்பருவங் கடந்தவளென்பதை முதலிற் கூறினான் ;

“ முலைமுகஞ் செய்தன முள்ளெயி றிலங்கின
தலைமுடி சான்ற தண்டழை யுடையை
... ... ... ... ...
பேதை யல்லை மேதையங் குறுமகள்
பெதும்பைப் பருவத் தொதுங்கினை புறத்தென ”

(அகநா. எ : 1-7.)

கிழக்கு - கீழ் (குறள், 488.) பல் செறிந்திருத்தல் அழகுபயப்பது ; “ செறியெயிற் றரிவை ” (குறுந். உ : 4) என்று முன்வந்தது காண்க. பறிமுறை - விழுந்தெழுந்த முறைமை (கலி. கூ௩ : 19, ந. அணங்குதற்கு யான் தன் அறிவலென்றது, யான் அவளது அழகு முதலியவற்றை அறிந்த காரணத்தாலே அணங்கினாளென்றபடி ; இத னால் யான் அறியாது வாளா சென்றேனெனின் அணங்கப்படே

னென்பதும் போதரும். அணங்குதற்கு - அணங்குதலாலென உருபு மயக்கமாக்குதலும் ஒன்று.

பல்லும், சுணங்கும் : உம், இறந்ததுதழீஇயது.

## மேற்கோளாட்சி

2. கிழக்கென்பது கீழென்னும் பொருளில் வந்தது (தொல். உவம. 5, பேர்.)

5. பின்னின்ற தலைமகன் கூறியதனால், தன்கட்டோன்றிய வருத்தம்பற்றிய இளிவரலென்னும் மெய்ப்பாடு வந்தது (தொல். மெய்ப். 6, பேர் ; இ. வி. 578.)

5-7. தலைமகள் கட்டுரையாதிருத்தலின் தலைமகன் தமரின் எய்தல் வேண்டினமையின் கட்டுரையின்மையின் வரைவுகடாதலாயிற்று (தொல். மெய்ப். 23, பேர்.)

மு. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் வரைதல் வேண்டிக் கூறியது (தொல். களவு. 11, இளம்.) ; புணர்தல் நிமித்தம் வந்தது (ஷை. அகத். 14, ந.) ; இறையோன் இறைவிதன்மை இயம்பியது (நம்பி. 144.)

## ஒப்புமைப் பகுதி

1. முகிழ்முகிழ்த்தல் : ‘ அம்பலென்பது முகிழ்முகிழ்த்தல் ’ (இறை. 22, உரை.)

3. பல் பறிமுறை நிரம்புதல்: “ நறுமுல்லை நேர்முகை யொப்ப நிரைத்த, செறிமுறை பாராட்டி னய்மற்றெம் பல்லின், பறிமுறை பாராட் டினையோ வைய ” (கலி. ௨௨ : 9-11.)

5. குறுந். ௧௪௨ : 2 - 3.

6. யாங்காதுவள் : குறுந். ௧௫௧ : 5, ஒப்பு. (௩௩௭)

---

## தோழி கூற்று

[தலைவனது பிரிவினால் வருந்திய தலைவியை நோக்கி, “ தலைவன் வந்தான் ” என்று துணிவுபற்றிக் கூறித் தோழி ஆற்றுவித்தது.]

௩௩௮. திரிமருப் பிரலை யண்ண லல்லே
 றரிமடப் பிணையோ டல்குநிழ லசைஇ

வீததை வியலரிற் றுஞ்சிப் பொழுதுசெலச்
செழும்பயறு கறிக்கும் புன்கண் மாலைப்
பின்பனிக் கடைநாட் டண்பனி * யச்சிரம்
வந்தன்று பெருவிற றேரே பணைத்தோள்
விளங்குநக ரடங்கிய கற்பின்
† நலங்கே ழரிவை புலம்பசா விடவே.

எ - து. பிரிவிடைத் தோழி வற்புறுத்தது.

பெருங்குன்றூர்கிழார்.

(ப - ரை.) பணை தோள் - மூங்கிலைப்போன்ற தோள்களையும், விளங்கு நகர் அடங்கிய கற்பின் - விளங்கிய இல்லின்கண்ணே அடங்கிய கற்பையுமுடைய, நலம் கேழ் - அழகு பொருந்திய, அரிவை - தலைவி, பெரு விறல் தேர் - மிக்க வெற்றியையுடைய தலைவனது தேர், புலம்பு அசாவிட - தனிமையால் உண்டான துன்பம் நீங்கும் வண்ணம், திரி மருப்பு இரலை - முறுக்கின கொம்பையுடைய இரலையாகிய, அண்ணல் நல் ஏறு - தலைமையையுடைய நல்ல ஆண் மான், அரி மடம் பிணையோடு - மென்மையையும் மடப்பத்தையுமுடைய பெண்மானோடு, அல்கு நிழல் அசைஇ - தாம் தங்குதற்குரிய நிழலினிடத்தே தங்கி, வீ ததை வியல் அரில் - மலர்கள் நெருங்கிய அகன்ற பிணக்கத்தையுடைய தூற்றினிடத்தே, துஞ்சி - தூங்கி, பொழுது செல - பொழுது போனமையின், செழு பயறு கறிக்கும் - செழுவிய பயற்றம்பயிரைக் கறித்துத் தின்னும், புன்கண் மாலை - துன்பத்தைத்தரும் மாலைக்காலத்தினையும், பின்பனி கடை நாள் - பின்பனியையுடைய கடையாமத்தையும், தண்பனி - குளிர்ந்த பனியையுமுடைய, அச்சிரம் - அச்சிரக் காலத்தில், வந்தன்று - வந்தது.

(முடிபு.) அரிவை, புலம்பு அசாவிடப் பெருவிறல் தேர் வந்தன்று.

(கருத்து.) தலைவன் மீண்டு விரைவில் வருவான்.

(வி - ரை.) இது கற்புக் காலத்தது.

அல்குநிழல் - மாலைக்காலத்தின் நிழலென்பதும் பொருந்தும் (நாலடி. 166.) இரலையும் பிணையும் துஞ்சிப் பயறு கறிக்குமெ...

---

(பி - ம்.) * யற்சிரம். † நலங்கொளரிவை.

றது, நீயும் நின் தலைவனோடு இனிப் பிரிவின்றி இன்புறுதல் கூடு மென்ற குறிப்பையுணர்த்தியது.

அரில் - பிணங்கிய தூறு. அச்சிரம்: இங்கே பின்பனிக்கு வந்தது.

பயறு அச்சிரக்காலத்தில் முதிர்வதாதலின் அதனை மான்கள் கறித்தன (குறுந். ௬௮, விசேட.)

தலைவன் தேர் வந்திலதேனும் துணிவுபற்றி வந்தன்றெனை இறந்தகாலத்தாற் கூறினள்.

அடங்கிய கற்பென்றது அறக்கற்பென்றும் ஆறிய கற்பென்றும் வழங்கும்;

"ஆறிய கற்பி னடங்கிய சாயல்" (பதிற். ௧௬ : 10.)

கெழுவென்பது கேழென நீண்டது (தொல். குற்றியலுகரப். 76, ந.) புலப்பு அசா - புலம்பையும் அசாவையு மென்பதும் பொருந்தும்.

## ஒப்புமைப் பகுதி

1. திரிமருப்பிரலை: குறுந். ௧௮௩ : 3-4; அகநா. ச : 3-4, ௩௪. ; பு. வெ. 277.

திரிமருப்பு: குறுந். ௨௭௧ : 1.

1-2. இரலை பிணையோடு இருந்தல்: குறுந். ௬௫ : 1-2, ஒப்பு.

3. விலங்குகள் மலர் நிறைந்த இடத்திற் படுத்திருத்தல்: "நறுவீ யடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்" (அகநா. ௨ : 7.)

5. தண்பனி யச்சிரம்: குறுந். ௬௮ : 3, ௭௬ : 6, ௮௨ : 6.

6. பெருவிறல்: குறிஞ்சிப். 199; மலைபடு. 493; கலி. ௮௧ : 9.

8. அசாவிட: கலி. ௧௩௨ : 3; அகநா. ௧௬௨ : 16. (௩௩௮)

---

## தோழி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்தில் வருந்திய தலைவியை நோக்கி, "தலைவனோடு அளவளாவிய காலத்தில் அவ்வொழுக்கம் நினக்கு இனிதாயிருந்தது; இப்பொழுது வருந்துதல் எவன்?" என்று தோழி கூறியது.]

௩௩௧. நறையகில் வயங்கிய * நளிபுன நறும்புகை
† உறையறு மையிற் போகிச் சாரற்
குறவர் பாக்கத் திழிதரு நாடன்
மயங்குமலர்க் கோதை நன்மார்பு முயங்கல்
இனிதுமன் வாழி தோழி ‡ மாயிதழ்க்
குவளை யுண்கண் கலுழப்
பசலை யாகா வூங்கலங் கடையே.

எ - து. வரைவிடை வேறுபட்ட கிழத்தியைத் தோழி கடுஞ் சொற் சொல்லி வற்புறீஇயது.

பேயார்.

(ப - ரை.) *தோழி—, நறை அகில் - வாசனையையுடைய அகிலினது, வயங்கிய நளி புனம் நறு புகை - விளங்கிய செறிந்த புனத்தின்கண் எழுந்த நறிய புகையானது, உறை அறு மையின் போகி - துளிகள் அற்ற வெண்மேகத்தைப் போலச் சென்று, சாரல் குறவர் பாக்கத்து - மலைச்சாரலிலுள்ள குறவர்களுடைய ஊரில், இழிதரும் நாடன் - இறங்கும் நாட்டையுடைய தலைவன், மயங்கு மலர் கோதை - பலவகை மலர்கள் கலந்த மாலையை யணிந்த, நல் மார்பு முயங்கல் - நின் நல்ல மார்பைத் தழுவுதல், மா இதழ் - கரிய இதழை உடைய, குவளை உண் கண் கலுழ - குவளைமலரைப் போன்ற மையுண்ட கண்கள் அழும்படி, பசலை ஆகா ஊங்கலங் கடை - பசலை உண்டாகாததன் முன்பு, மன் இனிது - மிக இனியதாயிற்று.*

(முடிபு.) *தோழி, பசலையாகா வூங்கலங்கடை நாடன் மார்பு முயங்கல் இனிதுமன்.*

(கருத்து.) *தலைவன் மணந்தக்கால் இன்புற்ற நீ அவன் நின் பொருட்டுப் பிரிந்தக்கால் துன்புறுதல் தக்கதன்று.*

(வி - ரை.) *தினைவிதைக்கும் பொருட்டுப் புனத்திலுள்ள மரங்களை அகிலோடு சேர்த்துக் கானவர் சுடுதலின் புகை எழுந்தது. அகில் எரிதலின் நறும்புகையாயிற்று. அப்புகை வெண்ணிறமுடையதாதலின் நீரற்ற வெண்மேகத்தை ஒத்தது.*

---

(பி - ம்.) * *நளிபுன னறும்புகை.* † *உறையுறு மகளிர் மையிற்* ‡ *நறுவிதழ்.*

பாக்கம் - பக்கத்திலுள்ள ஊர்கள். கோதை, தலைவி யணிந்தது. வாழி: அசைநிலை. பசலையாகா ஊங்குக் கடையென்க; அல்லும் அம்மும் வேண்டாவழிச் சாரியை.

தலைவன் பிரிந்ததனால் கண் கலுழ்ந்தன; பசலை மேனியில் உண்டாயிற்று; கண்ணில் பசலை உண்டாயதெனலும் ஆம்.

தலைவன் வந்து நின்னை முயங்கிய காலத்து இனிதாக இருந்தது; இப்பொழுது நின்பொருட்டன்றே பிரிந்தான்? இதற்கு அழிவது என்ன அறிவின்மை!' என்பதுபடத் தோழி கூறி வற்புறுத்தினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. நறும்புகை: குறுந். ௧௫0: 1.

2. உறையறு மை: நெடுநல். 19; பதிற். ௫௫: 14-5; அகநா. ௨௧எ: 1.

1-2. புகைக்கு மேகம்: "அகில்சுடு கானவ னுவல்சுடு கமழ் புகை, ஆடுமழை மங்குலின் மறைக்கும்" (நற். ௨௮௨: 7-8); "கறையில் கார்மழை பொங்கி யன்ன, நறையி னறும்புகை" (பரி. ௧௪: 19-20); "புகைபுரை யம்மஞ் சூர", "வெண்மழை கவைஇக், கலஞ்சுடு புகையிற் றோன்று நாட" (அகநா. ௬எ: 22, ௩0௮: 5-6); "அகிலெழு கொழும்புகை மஞ்சி னூடவும்" (சூளா. நகரச். 6.)

3. துறவர்பாக்கம்: குறுந். ௩௬௪: 2; தொல். புறத். 3; பொருந. 210; மலைபடு. 162.

5. வாழிதோழி: குறுந். ௨௬0: 4, ஒப்பு.

6-7. கண்பசலைபூத்தல்: நற். ௩௫: 12; ஐங். ௧௬: 4, ௨௧: 4; கலி. ௧௬: 1; அகநா. ௧௪௬: 11. (௩௩௯)

---

## தலைவி கூற்று

[தலைவன் இரவுக்குறிக்கண் வந்து அளவளாவுவானென்று உணர்த்திய தோழியை நோக்கி, "என்னெஞ்சம் அவர்திறத்து யாம் வருந்தும்போது உடனிருந்து வருந்தாநின்றது" என்று கூறும் வாயிலாகத் தலைவி இரவுக்குறி வருதலின் ஏதம் கருதித் தான் அஞ்சுதலைக் குறிப்பித்து அதனை மறுத்தது.]

ங.௪௦. காமங் கடையிற் காதலர்ப் படர்ந்து
நாமவர்ப் † புலம்பி னம்மோ டாகி
ஒருபாற் படுதல் செல்லா தாயிடை
‡ அழுவ நின்ற வலர்வேய் கண்டல்
கழிபெயர் மருங்கி னொல்கி யோதம்
பெயர்தரப் பெயர்தந் தாங்கு
வருந்துந் தோழியவ $ ரிருந்தவென் னெஞ்சே.

எ - து. இரவுக்குறி உணர்த்திய தோழிக்குக் கிழத்தி மறுத்தது.

அம்மூவன்.

(ப - ரை.) தோழி—, அவர் இருந்த என் நெஞ்சு - அத் தலைவர் இருந்த என் நெஞ்சம், காமம் கடையின் - காமமானது மிக்கு தாயின், காதலர் படர்ந்து - தலைவரை நினைந்து சென்று, நாம் அவர் புலம்பின் - நாம் அவர்திறத்தே வருந்தினேமாயின், நம் மோடு ஆகி - நம்முடன் இருப்பதாகி, ஒரு பால் படாது ஆகி - ஒரு கூற்றிலே அமையாததாகி, ஆயிடை - அவ்விரண்டினிடையிலும், அழுவம் நின்ற அலர் வேய் கண்டல் - கடற்கரைப்பரப்பிலே நின்ற மலரைப் பொருந்திய தாழை, கழி பெயர் மருங்கின் ஒல்கி - கழி பெயருகின்ற இடத்தில் தளர்ந்து, ஓதம் - வெள்ளம், பெயர்தர பெயர் தந்தாங்கு - பெயரும்பொழுது தானும் பெயர்ந்ததுபோல, வருந்தும் - வருந்தாநிற்கும்.

(முடிபு.) தோழி, நெஞ்சு காமம் கடையிற் படர்ந்து, நாம் புலம்பின் நம்மோடு ஆகி, ஒருபாற்படாதாகி வருந்தும்.

(கருத்து.) தலைவன் இரவுக்குறிவரின் யான் வருந்துவேன்.

(வி - ரை.) காமம் கடைதல் - காமம் மிகுதிப்படுதல்;

"காத லாற்கடை கின்றது காமமே"

"காய்த்தியிட் டுள்ளம் வெம்பிக் கடைந்திடு கின்ற காமம்"
(சீவக. 1308, 2804);

---

(பி - ம்.) * நாமவற். † புலப்பின். ‡ அழுவி. ¶ வலர் வேர்க் கண்டல். $ ரருந்த, வருந்த.

கடையின் - செலுத்தி னெனலுமாம். காதலர்ப் படர்ந்தும், நம்மோ டாகியுமென்னும் உம்மைகள் தொக்கன. அழுவம் - நீர்ப்பரப்பு (மலைபடு. 528.)

'தலைவர்பாற் காமம் மிகின் என் நெஞ்சம் அவர்பாற் சென்று அவரது வரவை விரும்புகின்றது. ஆயினும் அவர் வரும் வழியின் ஏதங் குறித்து நாம் வருந்தினேமாயின் அந் நெஞ்சமும் நம்முடன் சேர்ந்து வருந்துகின்றது. அவர் வருதலினும் வாராமையினும் விருப்பம் மாறிமாறிக் கொண்டது' என்றாள்.

தாழை கழியில் ஓதம் மிகும்பொழுது உயர்ந்தும் தாழ்ந்த பொழுது தாழ்ந்தும் பெயர்தலைப்போல, என் நெஞ்சம் காமம் மிக்க பொழுது அவர்பாற் படர்ந்தும், மிகாதபொழுது அவர்க்கு வரும் ஏதம் நினைந்து வருந்தியும் சலங்குவதாயிற்றென உவமையை விரித்துக்கொள்க.

என் நெஞ்சு ஒருபாற் படாது வருந்துமென்றமையால் இரவுக் குறி மறுத்தாளாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

3. ஆயிடை: குறுந். ௪௩: 3.

7. தலைவன் தலைவியின் நெஞ்சத்து இருத்தல்: குறுந். ௩௬: 3, ஒப்பு. (௩௪௰)

---

## தலைவி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற பருவம் வந்தகாலத்து வருந்துவாளெனக் கவன்ற தோழிக்கு, "அவர் தம் காரியத்தை முற்ற முடித்தபின் வருவரென்று துணிந்து ஆற்றினேன்" என்று தலைவி கூறியது.]

௩௪௧. *பல்வீ பட்ட பசுநனைக் குரவம்
பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக் கோளாஅச்
சினையினி தாகிய காலையுங் காதலர்
பேணா ராயினும் பெரியோர் நெஞ்சத்துக்

(பி - ம்.) * பல்லி பய, பல்லி படீஇய.

கண்ணிய வாண்மை கடவ தன்றென
வலியா நெஞ்சம் வலிப்ப
வாழ்வேன் றோழியென் வன்க ணானே.

எ - து. பருவவரவின்கண் வேறுபடுமெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்தது.

மிளைகிழான் நல்வேட்டன்.

(ப - ரை.) *தோழி—, பல் வீ பட்ட பசு நனை குரவம் - பல மலர்கள் தோன்றிய பசிய அரும்புகளையுடைய குராமரம், பொரி பூ புன்கொடு - நெற்பொரியைப்போன்ற பூக்களையுடைய புன்கமரத்தோடு, பொழில் அணிக்கொளாஅ - சோலையின்கண் அழகைக் கொண்டு, சினை இனிது ஆகிய - கிளை கண்ணுக்கு இனிதாகத் தோற்றிய, காலையும் - இப்பருவத்திலும், காதலர் பேணார் ஆயினும் - தலைவர் நம்மை விரும்பிப் பாதுகாவாராயினும், பெரியோர் நெஞ்சத்து கண்ணிய ஆண்மை கடவது அன்று என - பெரியோர்கள் தம் நெஞ்சத்திலே நினைத்த மேற்கோள் செலுத்தப்படுவதன்றென்றெண்ணி, வலியா நெஞ்சம் - முன்னர்த் துணியாத என் நெஞ்சம், வலிப்ப - பின்னர்த் துணிந்தமையால், என் வன்கணான் - எனது தறுகண்மையால், வாழ்வேன் - உயிரோடு வாழ்வேனாயினேன்.*

(முடிபு.) *தோழி, காதலர் பேணாராயினும் நெஞ்சம் வலிப்ப என் வன்கணான் வாழ்வேன்.*

(கருத்து.) *தலைவர் தம்வினை முடித்து வருவரென்னும் துணிவினால் வாழ்வேனாயினேன்.*

(வி - ரை.) *தலைவி முதலில், "நம்பால் அன்புடைய தலைவர் தாம் மேற்கொண்ட வினையை முற்றச் செலுத்தாவிடினும் வருவர்" என்று எண்ணினாள். அப்பால் "அவர் வினைமுடித்தே வருவர்; ஆதலின் நாம் ஆற்றியிருத்தல் வேண்டும்" எனத் துணிந்தாள். துணியினும் தலைவன் பிரிவினை ஆற்றுதற்கு நெஞ்சத்திண்மை வேண்டுமாதலின், 'என் வன்கணான் வாழ்வேன்' என்றாள்.*

*மலரும் அரும்பும் குரவத்தில் நிறைந்தன. சினையென்றது குரவம், புன்கென்னும் இரண்டன் சினைகளையும். இனிது : சாதியொருமை. காலையும் : உம்மை உயர்வுசிறப்பு. ஆண்மையென்றது*

(பி - ம்.) * வலிய.

இங்கே ஆள்வினையை. கடவது - செலுத்துவது; நிறைவேற்றுதல். வலியா நெஞ்சமென்றது, பெரியார் தாம் மேற்கொண்டதைச் செலுத்தாரென்று எண்ணிய துணிவின்மையையுடைய நெஞ்சமென்றபடி. கடவதெனவும் அன்றெனவும் துணியாத நெஞ்சமென்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும். வலிப்ப - பெரியோர் கண்ணிய ஆண்மை கடவதெனத் துணிய.

ஏ: அசைநிலை.

இஃது ஆற்றுவலென்பதுபடச் சொல்லியது.

## ஒப்புமைப் பகுதி

2. புன்க மலருக்குப் பொரி: குறுந். ௩௯: 2-4, ஒப்பு.

6. நெஞ்சம் வலித்தல்: "வல்லா நெஞ்சம் வலிப்ப" (அகநா. ௩௯: 14.) (௯௪௧)

---

## தோழி கூற்று

[தலைவி இற்செறிக்கப்பட்டதை அறிவித்தபோது தலைவன் பின்னும் களவொழுக்கத்தை விரும்பினனாக, "நீ வரையாது ஒழுகின் இவள் வருந்துவாள்; இனி நீ வரைதலே தக்கது" என்று தோழி கூறியது.]

௯௪௨. கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும்பழம்
காவன் மறந்த கானவன் ஞாங்கர்க்
கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டும்
குன்ற நாட தகுமோ பைஞ்சுனைக்
குவளைத் தண்டழை யிவளீண்டு வருந்த
நயந்தோர் புன்கண் டீர்க்கும்
பயந்தலைப் படாஅப் பண்பினை யெனினே.

எ - து. செறிப்பறிவுறுக்கப்பட்டான் வரைவின்கட் செல்லாது, பின்னும் வரவு வேண்டின தலைமகனைத் தோழி நெருங்கிச் சொல்லி வரைவு கடாயது.

காவிரிப்பூம்பட்டினத்துக் கந்தரத்தனார்.

(ப - ரை.) கலை கைதொட்ட - ஆண்குரங்கு தன் கையால் தோண்டிய, கமழ் சுளை பெரு பழம் - மணம் கமழ்கின்ற சுளைகளையுடைய பெரிய பலாப்பழத்தை, காவல் மறந்த கானவன் - காத்தலை மறந்த வேடன், ஞாங்கர் - அதன்பின், கடியுடை மரந்தொறும் படு வலை மாட்டும் - பழத்தால் மணமுடைய மரந்தோறும் குரங்குகள் படுதற்குரிய வலையை மாட்டிவைக்கும், குன்றம் நாட - மலையையுடைய நாட, பசு சுனை குவளை தண் தழை இவள் - பசிய சுனையினிடத்து மலர்ந்த குவளைமலர்களை இடையிட்டுக் கட்டிய தண்ணிய தழையுடையை அணிந்த இத்தலைவி, ஈண்டு வருந்த - இங்கே துன்புற, நயந்தோர் புன்கண் தீர்க்கும் பயம் - நின்னை விரும்பியவர்களது துன்பத்தைத் தீர்க்கும் நல்வினைப் பயனை, தலைப்படா - அடையாத, பண்பினை எனின் - இயல்புடையாயென்னின், தகுமோ - அவ்வியல்பு நினக்குத் தகுமோ?

(முடிபு.) நாட, இவள் வருந்த, பண்பினையெனின் தகுமோ?

(கருத்து.) நீ இனி இவளை வரைந்து கொள்ளவேண்டும்.

(வி - ரை.) கலை - ஆண்குரங்கு. சுளைப்பெரும் பழமென்றமையின் பலாப்பழமாயிற்று. 'நயந்தோர் புன்கண்டீர்க்கும் பயம்' என்று பன்மை வாசகம்படக் கூறினும் அவள் கருதியது தலைவியின் வருத்தத்தைத் தீர்க்கும் செயலையே; அச்செயலாவது வரைதல்.

கானவனது சோர்வறிந்து குரங்கு தொட்ட பழம் அவன் படுவலை மாட்டியபின் பெறுதற்கு அரிதாதலைப்போல, காப்போரில்லாநிலையில் நீ கண்டு அளவளாவிய தலைவி இற்செறிக்கப்பட்டபின் நின்னால் அணுகுதற்கு அரியவளாவாளென்பது குறிப்பு; இஃது இரவுக்குறி மறுத்த வாய்பாட்டால் வரைவு கடாயது.

'நயந்தோர் புன்கண் தீர்க்கும் பயந்தலைப்படாப் பண்பினை யாதல் தகுமோ?' என இடித்துரைத்தலின் நெருங்கிச் சொல்லியதாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. கலைதொட்ட பழம்: (குறுந். கூ0 : 4, கூஎகூ : 4-6); "கலைதொடு பெரும்பழம்" (மலைபடு. 292); "கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்" (புறநா. உகூசு : 1.)

1-3. பலாப்பழத்தைக் கானவன் காத்தல்: குறுந். கூஅ௫ : 1-2.

5. துவலைத்தலை : புறநா. ௧௧௬ : 1-2.

4-5. சுனைக்துவலை : குறுந். ௯௧ : 2-3, ஒப்பு.

6. நயந்தோர் புன்கண் தீர்த்தல் : "நயவர் பாணர் புன்கண் டீர்த்தபின்" (சிறுபாண். 248); "தந்நயர் துறைவோர்த் தாங்கி" (அகநா. ௧௯௪ : 1.) (௩.௪௨)

---

## தோழி கூற்று

[தோழி தலைவியிடம், "நீ தலைவனுடன் செல்வதை விரும்பி மேற்கொள்வாயாக" என்றது.]

௩௪௩. நினையாய் வாழி தோழி நனைகவுள்
அண்ணல் யானை யணிமுகம் பாய்ந்தென
மிகுவலி யிரும்புலிப் பகுவா யேற்றை
வெண்கோடு செம்மறுக் † கொளீஇ விடர்முகைக்
கோடை யொற்றிய கருங்கால் வேங்கை
வாடுபூஞ் சினையிற் கிடக்கும்
உயர்வரை நாடனொடு ‡ பெயரு மாறே.

எ - து. தோழி, கிழத்தியை உடன்போக்கு நயப்பக் கூறியது.

ஈழத்துப் பூதன்றேவன்.

(ப - ரை) தோழி—, மிகு வலி இரு புலி பகு வாய் ஏற்றை - மிக்க வலியையுடைய பெரிய புலியினது பிளந்த வாயையுடைய ஆணனது, நனை கவுள் - மதத்தால் நனைந்த கவுளையுடைய, அண்ணல் யானை அணி முகம் பாய்ந்தென - தலைமையையுடைய யானையினது அழகிய முகத்தின்கண்ணே பாய்ந்ததாக, வெள் கோடு செ மறு கொளீஇ - அவ்யானையின் வெள்ளிய கொம்பைத் தனது இரத்தத்தால் செவ்விய கறையைக் கொள்ளச்செய்து, விடர் முகை - பிளப்பையுடைய கன்முழையிலுள்ள, கோடை ஒற்றிய - மேல் காற்று வீழ்த்திய, கரு கால் வேங்கை - கரிய அடியையுடைய வேங்கை மரத்தினது, வாடு பூ சினையின் கிடக்கும் - வாடிய பூவையுடைய கிளையைப் போல இறந்து கிடக்கும், உயர்

---

(பி - ம்.) * மிகுவ விரும்புலி. † கொளீஇய. ‡ பேரு.

வரை நாடனொடு - உயர்ந்த மலையையுடைய நாட்டையுடைய தலைவனுடன், பெயருமாறு - போகும் திறத்தை, நினையாய் - நீ எண்ணுவாயாக; வாழி - நீ வாழ்வாயாக!

(முடிபு.) தோழி, நாடனொடு பெயருமாறு நினையாய்; வாழி!

(கருத்து.) நீ தலைவனுடன் செல்லுதலே நன்று.

(வி - ரை.) உடன்போக்கு, தலைவியின் நெஞ்சிற்கு உவந்த தன்றாதலின் அதைக் கூறுதற்குமுன் வாழ்த்தினாள். பகுவாயென்றது பாயும்பொழுது புலி, யானையைக் கொல்வதற்குப் பிளந்த வாயையுடையதாயிற்றென்றபடி. வெண்கோடு செம்மறுக்கொளீஇயென்றது யானையின் கொம்பினாற் குத்தப்பட்டு இறந்ததைப் புலப்படுத்தியது. புலி பாய்ந்ததனால் வெண்கோடு செம்மறுக் கொண்டதையன்றி அவ் யானைக்கு ஊறொன்றும் நேர்ந்திலது.

விடர்முகை வேங்கை, கோடையொற்றிய வேங்கையெனக் கூட்டுக. வேங்கையின்மலர் புலியின் வரியைப்போலத் தோற்றும் (குறுந். சள: 1-2); ஆதலின் இறந்து கிடந்த வேங்கைக்கு வேங்கை மரத்தின் பூஞ்சினை உவமையாயிற்று.

பாலையிற் சென்றால் ஏதம் வருங்கொலோ வென்று தலைவி அஞ்சாவாறு, "அவனது நாட்டிலுள்ள யானை தன்னை எதிர்த்த மிகுவலியையுடைய புலியைத் தான் எதிர்க்காமலே கொம்பினால் வீழச்செய்தது" என்பதனால் அவன் நாட்டிலுள்ளவற்றின் பெருவலியைப் புலப்படுத்தி அந்நாட்டுக்குரியவனாகிய தலைவனும் இடையூறுகளை எளிதில் வெல்லும் ஆற்றலுடையானென்பதை உய்த்துணர வைத்தாள்.

பெயருமாறே நினையாயென்றது, பிறிது நினைத்தலாற் பயனில்லை யென்றபடி; ஏ: பிரிநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. வாழி தோழி: குறுந். உகூ0: 4, ஒப்பு.

3. புலியின் பகுவா யேற்றை: "பொறிகிளர் உழுவைப் பேழ்வா யேற்றை" (அகநா. கசஎ: 6); "பேழ்வா யுழுவை" (புறநா. கஙஉ: 2.)

1-3. யானையும் புலியும் போருதல்: குறுந். அஅ: 2-3, ஒப்பு.

4. செம்மறுக் கொண்ட வெண்கோடு: "கொன்முரணிரும்புலி யரும்புழைத் தாக்கிச், செம்மறுக் கொண்ட வெண்கோட்டி யானை" (நற். ௧௫௧ : 2-3.)

விடர்முகை : குறுந். ௨௧௮ : 1, ஒப்பு.

5. கோடை ஒற்றுதல் : குறுந். ௩௮௮ : 2.

ஒற்றுதல் : அகநா. ௧௮ : 4 ; புறநா. ௨௩௭ : 16.

கருங்கால் வேங்கை : குறுந். ௨௬ : 1, ஒப்பு, ௪௭ : 1, ஒப்பு.

4-5. விடர்முகையில் கோடைக்காற்று அடித்தல்: "கமஞ்சூழ் கோடை விடரக முகந்து, காலுறு கடலி னொலிக்குஞ் சும்மை" (மதுரைக். 308-9.)

3-6. புலிக்குப் பூத்த வேங்கைச் சினை: "கதழ்வாய் வேழம், இருங்கேழ் வயப்புலி வெரீஇ யயலது, கருங்கால் வேங்கை யூறுபட மறலிப், பெருஞ்சினந் தணியுங் குன்ற நாடன்", "கல்லயற் கலித்த கருங் கால் வேங்கை, அலங்கலந் தொடலை யன்ன குரூஉ, வயப்புனிற் றிரும் பிணப் பசித்தென வயப்புலி, புகர்முகஞ் சிதையத் தாக்கி" (நற். ௨௧௭ : 2-5, ௩௮௩ : 1-4); "உறுபுலி யுருவேய்ப்பப் பூத்த வேங்கையை", "வேங்கையஞ் சினையென விறற்புலி முற்றியும்", "கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு, நெடுவரை மருங்கிற் றுஞ்சும் யானை, நனவிற்றான் செய்தது மனத்த தாகலிற், கனவிற் கண்டு கதுமென வெரீஇப், புதுவ தாக மலர்ந்த வேங்கையை, அதுவென வுணர்ந்தத னணிநல முருக்கி" (கலி. ௩௮ : 6, ௪௪ : 5, ௪௯ : 1-6) ; "மலர்ந்த, வேங்கை வெறித்தழை வேறுவகுத் தன்ன, ஊன்பொதி யவிழாக் கோட்டுகிர்க் குரூஉ", "புலிக் கேழ் வேங்கைப் பூஞ்சினை" (அகநா. ௧௪௭ : 1-3, ௨௨௭ : 8.) (௩௪௩)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்தில் வருந்திய தன்னை வற்புறுத்துந் தோழியை நோக்கி, "இக்காலத்தில் தம்மைப் பிரிந்து சென்ற தலைவர் வரப்பெறும் பேறுடைய மகளிர் தவஞ்செய்தாராவார்; யான் அது பெற்றிலேன்" எனத் தலைவி கூறியது.]

௩௪௪. நோற்றோர் மன்ற தோழி தண்ணெனத்
தூற்றுந் * துவலைப் பனிக்கடுந் திங்கட்

---

(பி - ம்.) * திவலைப்.

புலம்பயி ரருந்த வண்ண லேற்றொடு
நிலந்தூங் கணல வீங்குமுலைச் செருத்தல்
பால்வார்பு *குழவி † யுள்ளி நிரையிறந்
தூர்வயிற் பெயரும் புன்கண் மாலை
அரும்பெறற் பொருட்பிணிப் போகிப்
பிரிந்துறை காதலர் வரக்காண் போரே.

எ - து. பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குத் தலைமகள் கூறியது.

குறுங்குடி மருதன்.

(ப - ரை.) தோழி—, தண்ணென - குளிர்ச்சி உண்டாகும் படி, தூற்றும் துவலை பனி கடு திங்கள் - வீசுகின்ற துளிகளாகிய பனியையுடைய கடுமையாகிய மாதத்தில், புலம் பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு - மேய்புலத்தின்கண்ணேயுள்ள பயிரை அருந்திய தலைமையையுடைய எருதோடு, நிலம் தூங்கு அணல - நிலத்தளவும் நாலுகின்ற அலைதாடியை யுடையனவாகிய, வீங்கு முலை செருத்தல் - பால் நிரம்புதலாற் பருத்த முலைக்காம்பையுடைய மடியையுடைய பசுக்கள், பால் வார்பு - பாலை ஒழுகவிட்டு, குழவி உள்ளி - தம் கன்றுகளை நினைந்து, நிரை இறந்து - தம்மோடு ஒருங்கு மேயும் ஏனைய நிரைகளை நீங்கி, ஊர்வயின் - ஊரினிடத்தே, பெயரும் - மீண்டு வருகின்ற, புன்கண் மாலை - துன்பத்தைத்தரும் மாலைக் காலத்தில், அரு பெறல் பொருள் பிணி போகி - அரிதிற் பெறுகின்ற பொருள்மேற் சென்ற நெஞ்சப்பிணிப்பினை நிறைவேற்றச் சென்று, பிரிந்து உறை காதலர் - தம்மை முன்பிரிந்து உறைந்த தலைவர்கள், வர காண்போர் - மீண்டுவரக்காணும் மகளிர், மன்ற - நிச்சயமாக, நோற்றோர் - தவஞ்செய்தவராவர்.

(முடிபு.) தோழி, மாலையில் காதலர் வரக்காண்போர் நோற்றோர் மன்ற.

(கருத்து.) தலைவர் இப்பொழுது வந்திலாதலின் யான் வருந்துவேன்.

---

(பி - ம்.) * பால்வார் குழவி. † யாளி ணிரையிறந், யானிறை யிறந், யாநாளிறையிறந்.

(வி - ரை.) தூற்றுந்துவலைப் பனிக்கடுந்திங்களென்றது பனிக் காலத்தைச் சுட்டியது. அணல் - அலைதாடி யென்பர் (பு. வெ. 12, உரை.) செருத்தல் : ஆகுபெயர். மாலைக்காலத்தில் பசுக்கள் தம் முடைய கன்றுகளை நினைந்து பிரிந்து வந்தன. பொருட்பிணி - பொருள்வேட்கை (இறை. 35, உரை.)

## ஒப்புமைப் பகுதி

1. நோற்றோர் மன்ற : புறநா. ௨௬ : 16.

3-4. ஆனேறுடன் பசுக்கூட்டம் இருந்தல்: அகநா. ௧௦௫ : 15, ௨௧௩ : 6, ௨௬௧ : 3, ௨௯௧ : 3.

6. புன்கண் மாலை : குறுந். ௪௬ : 6, ௩௩௦ : 6.

4-6. மாலையில் கன்றை நினைந்து பசுக்கள் வருதல் : குறுந். ௧௦௮ : 2, ஒப்பு.

பசுக்கள் கன்றை நினைந்து பாலை வார்த்து வருதல் : "பதவுமேய லருந்து மதவுநடை நல்லான், வீங்குமாண் செருத்த றீம்பால் பிலிற்றக், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு, மாலை" (அகநா. ௧௪ : 9-12) ; "குவளை மேய்ந்த குடக்கட் சேதா, முலைபொழி தீம்பா லெழுதுக ளவிப்பக், கன்றுநினை குரல மன்றுவழிப் படர" (மணி. ௫ : 130-32.)

7. பொருட்பிணி : குறுந். ௨௫௫ : 7, ஒப்பு ; இறை. சூ. 35, 39.

(௩௪௪)

---

## தோழி கூற்று

[பகலில் வந்து தலைவியைக் கண்டு அளவளாவிச் செல்லும் வழக்கத்தையுடைய தலைவனை நோக்கி, "நீ இனி இரவில் வந்து இங்கே தங்கிச் செல்க" எனத் தோழி கூறியது.]

௩௪௫. இழையணிந் தியல்வரும் *கொடுஞ்சி நெடுந்தேர்
வரைமரு ணெடுமணற் †றவிர்த்துநின் றசைஇத்
தங்கினி ராயிற் ‡றவறோ தெய்ய
தழைதா ழல்கு லிவள்புலம் பகலத்
தாழை தைஇய தயங்குதிரைக் கொடுங்கழி

(பி - ம்.) * கொடிஞ்சி. † றவிர்த்த நிரையசைஇ, றவிர்த்தனி ரசைஇ. ‡ றவறோதகைய, றவறேதைய, றவறோ தைஇய.

இழுமென வொலிக்கு மாங்கட்
பெருநீர் வேலியெஞ் சிறுநல் லூரே.

எ - து. பகல்வந்து ஒழுகுவானைத் தோழி இரா வாவென்றது.

அண்டர்மகன் குறுவழுதி.

(ப - ரை.) தாழை தைஇய - தாழை பொருந்திய, தயங்கு திரை கொடு கழி - விளங்கிய அலைகளையுடைய வளைந்த கழியானது, இழுமென ஒலிக்கும் - இழுமென்று ஆரவாரம் செய்யும், ஆங்கண் - அவ்விடத்துள்ள, பெரு நீர் வேலி எம் சிறு நல் ஊர் - பெரிய கடலை வேலியாகவுடைய எமது சிறிய நல்லூரின்கண், இழை அணிந்து இயல் வரும் கொடுஞ்சி நெடு தேர் - பொற்படைகளால் அணியப்பட்டு ஓடுகின்ற கொடுஞ்சியையுடைய நுமது உயர்ந்த தேரை, வரை மருள் நெடு மணல் தவிர்த்து - மலையை யொத்த உயர்ந்த மணல்மேட்டிலே நிறுத்திவிட்டு, நின்று அசைஇ - இங்கு இருந்து இளைப்பாறி, தழை தாழ் அல்குல் இவள் புலம்பு அகல - தழையுடை தாழ்ந்த அல்குலையுடைய இத்தலைவியினது தனிமை வருத்தம் நீங்கும்படி, தங்கினிர் ஆயின் - தங்குவீரானால், தவறோ - அது பிழையாகுமோ?

(முடிபு.) தவிர்த்து நின்று அசைஇ, புலம்பு அகல நல்லூரில் தங்கினிராயின் தவறோ?

(கருத்து.) இனி நீர் இரவில் வந்து தலைவியோடு அளவளாவு வீராக.

(வி - ரை.) இழை - பொற்படை (புறநா. ௧௨௩ : 4, உரை); அலங்காரப் பொருள்களுமாம். இரவுக்குறி இல்வரை இகவாததாதலின் அங்கே தேரோடுவரின் ஊரினர் அறிவரென்றஞ்சி அதனை மணல் மேட்டில் நிறுத்தி வரும்படி உரைத்தாள். தவறோவென்ற வினா அங்ஙனம் செய்தல் வேண்டுமென்னும் கிடக்கையினது. தைய : அசை நிலை; தைஇய என்ற பாடத்திற்கு உடுத்தவெனப் பொருள்கொள்க.

தாழையில் மோதும் அலைகள் ஒலித்தலின் கழி இழுமென்னும் ஓசையுடையதாயிற்று.

பகற்குறியிடத்துக்கண் வந்த தலைவனுக்குக் கூறுதலின் தம் ஊருள்ள இடத்தை ஆங்கணெனச் சேய்மைச்சுட்டாற் குறிப்பித்தாள்.

## ஒப்புமைப் பகுதி

1. இழை யணிந்த தேர்: நற். ௧0: 5; கலி. ௬௬: 7; அகநா. உ௬அ: 12; புறநா. ௧உ௬: 4, ௬௫௬: 15.

கோடுஞ்சி நெடுந்தேர்: குறுந். உ௧உ: 1, ஒப்பு.

2. வரைமருள் நெடுமணல்: குறுந். உ௬௬: 3, ஒப்பு.

1-2. தேரைத் தனியே நிறுத்திவிட்டுத் தலைவன் வருதல்: "தேர்சே ணீக்கித் தமியன் வந்து" (அகநா. ௬அ0: 1.)

4. தழை தாழல்தல்: குறுந். ௧உ௫: 3, ஒப்பு.

5. தாழை தைஇய கழி: குறுந். ௬௪0: 4-6.

6. இழுமென ஒலித்தல்: குறுந். ௬௫௧: 3-4; முருகு. 316.

7, மு. அகநா. ௬௧0: 17. (௬௪௫)

---

## தோழி கூற்று

["தலைவன் மாலைப்பொழுதில் நம்மைப் பிரிந்து செல்ல வருந்துகின்றான்" என்று கூறும் வாயிலாக அவன் இரவுக்குறி விரும்புதலைத் தோழி தலைவிக்குக் கூறியது.]

௬௪௬. நாகுபிடி நயந்த * முளைக்கோட் டிளங்களிறு
குன்ற நண்ணிக் குறவ ரார்ப்ப
மன்றம் போழு நாடன் றோழி
சுனைப்பூங் குவளைத் தொடலை தந்தும்
தினைப்புன மருங்கிற் படுகிளி யோப்பியும்
காலை வந்து மாலைப் பொழுதில்
நல்லக † நயந்துதா னுயங்கிச்
சொல்லவு மாகா தஃகி யோனே.

எ - து. தோழி, கிழத்தியை இரவுக்குறி நயப்பக் கூறியது.

வாயிலிளங் கண்ணன்.

---

(பி - ம்.) * முனைக்கோட். † நயந்துதான் மயங்கிச்.

(ப - ரை.) தோழி—, நாகு பிடி நயந்த - இளம்பிடியை விரும்பிய, முளை கோடு இள களிறு - மூங்கில்முளையைப் போன்ற கொம்பையுடைய இளைய களிறு, குன்றம் நண்ணி - மலையிடத்தே பொருந்தி, குறவர் ஆர்ப்ப - அங்குள்ள குறவர் முழங்கியதனால், மன்றம் போழும் - ஊரிடத்துள்ள மன்றத்தைப் போழ்ந்து செல்லும், நாடன் - நாட்டையுடைய தலைவன், காலை வந்து - பகலில்வந்து, சுனை பூ குவளை தொடலை தந்தும் - சுனையில் மலர்ந்த குவளை மலர் மாலையை நினக்குத் தந்தும், தினை புனம் மருங்கில் - தினைக் கொல்லையினிடத்தில், படு கிளி ஒப்பியும் - வீழ்கின்ற கிளிகளை நம்மோடு ஓட்டியும், மாலை பொழுதில் - பிறகு வந்த மாலைக் காலத்தில், நல் அகம் நயந்து - நல்ல நெஞ்சத்தின் கண்ணே ஒன்றை விரும்பி, உயங்கி - வருந்தி, சொல்லவும் ஆகாது - அக்கருத்தை வெளிப்படச் சொல்லவும் எழுச்சிபெறாமல், அஃகியோன் - குறைவுற்றான்.

(முடிபு.) தோழி, நாடன் காலைவந்து தந்தும் ஒப்பியும் மாலைப் பொழுதில் நயந்து உயங்கி அஃகியோன்.

(கருத்து.) தலைவன் மாலைப்பொழுதின்கண்ணும் வரும் இரவுக் குறியை நயந்தான்; அதனைக் குறிப்பினால் அறிந்தேன்.

(வி - ரை.) மன்றம் - குறவர் ஊர்களிலுள்ள பொது இடம்.

பிடியை நயந்த களிறு குன்றம் நண்ணுமென்றது நின்னை நயந்த தலைவன் மனையகத்தே இரவில் வருவானென்ற குறிப்பை உணர்த்தியது.

நல்லகம் என்றவின் அவன் நயந்தது நன்மையையே பயக்குமென்ற தன் உடம்பாட்டை உணர்த்தினாள்; இதனால் தலைவியைத் தோழி இரவுக்குறி நயப்பித்தாளாயிற்று.

## மேற்கோளாட்சி

மு. தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பித்தது (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

3. மன்றம் போழ்தல் : குறுந். ௩௦௪ : 5.

4. சுனைப்பூங்குவளை : குறுந். ௫௯ : 2-3, ஒப்பு, ௩௨௧ : 2.

5. தலைவன் தலைவியோடு கிள்ளையோப்புதல்: "பைந்தாட் செந் தினைக் கொடுங்குரல் வியன்புனம், செந்தார்க் கிள்ளை நம்மொடு கடிந் தோன்", "களிறணந் தெய்தாக் கன்முகை யிதணத்துச், சிறுதினைப் படுகிளி யெம்மோ டோப்பி" (அகநா. உ௪௨ : 5-6, ௩௦அ : 9-10.)

4-5. சுனைப்பூவினால் தொடலை கட்டுதலும் கிளியோப்புதலும்: குறுந். ௧௪௨ : 1-2.

8. தலைவன் தன்கருத்தை வெளிப்படையாகச் சொல்லாமை: குறுந்: உ௯அ : 2; கலி. ௩௭ : 1-5; சிற். 82, 83. (௩௪௬)

---

## தலைவன் கூற்று

[பொருள்வயிற் பிரிய எண்ணிய தன் நெஞ்சத்தை நோக்கி, "தலைவியும் உடன் வருவாளாயின் நாம் பிரிதல் கூடும்" என்று கூறித் தலைவன் செலவு தவிர்ந்தது.]

௩௪௭. * மல்குசுனை புலர்ந்த நல்கூர் சுரமுதற்
குமரி வாகைக் † கோலுடை நறுவீ
மடமாத் தோகைக் குடுமியிற் றோன்றுங்
கான நீளிடைத் தானு நம்மொ
டொன்றுமணஞ் செய்தன ளிவளெனின்
நன்றே நெஞ்ச நயந்தநின் றுணிவே.

எ - து. பொருள்வலிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.

[பொருள் வலிக்கும் நெஞ்சு - பொருள் பெறவேண்டுமென்று எண்ணி அதன்பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்ல எண்ணிய நெஞ்சு. செலவு அழுங்கியது - செல்லுதலைத் தவிர்ந்தது; இங்ஙனம் அழுங்குதல், தலைவியை ஆற்றுவித்துப் பின்னர்ச் செல்லும் பொருட்டேயாகும்.]

காவிரிப்பூம்பட்டினத்துச் சேந்தங் கண்ணனன்.

(ப - ரை.) நெஞ்சம் - நெஞ்சே, மல்கு சுனை புலர்ந்த நல்கூர் சுரமுதல் - முன்பு நீர்மல்கிய சுனை பின்பு வற்றுதலினால்

(பி - ம்.) * மல்குசுனைப் புலர்ந்த. † கொல்லுடை நறுவீ.

வறுமையுற்ற பாலைநிலத்தில் வளர்ந்த, குமரி வாகை கோல் உடை நறு வீ - இளமையையுடைய வாகைமரத்தின் கொம்பின்கண் உள்ள நறிய மலர், மடம் மா தோகை குடுமியின் தோன்றும் - மடப்பத்தையுடைய கரிய மயிலினது உச்சிக்கொண்டையைப் போலத் தோன்றுகின்ற, கானம் நீள் இடை - நீண்ட காட்டு வழியில், இவள் தானும் நம்மோடு ஒன்றும் மணஞ்செய்தனள் எனின் - இத்தலைவி தானும் நம்மொடு வந்து பொருந்தும் முயக்கத்தைச் செய்வாளெனின், நயந்த - பொருள் செய்தற்கு விரும்பிய, நின் துணிவு நன்றே - நினது துணிவு நன்மையுடையதேயாகும்.

(முடிபு.) நெஞ்சம், நீளிடையில் இவள்தானும் மணஞ் செய்தனளெனின் நின் துணிவு நன்றே.

(கருத்து.) தலைவியைப் பிரிந்து செல்லுதல் தக்கதன்று.

(வி - ரை.) மல்குசுனை - முன்பு நீர்மல்கிய சுனை. குமரி யென்றது இளமை குறித்து நின்றது. எனினென்பது அங்ஙனம் செய்தலரிதென்னும் நினைவிற்று. நன்றே: ஏ, தேற்றம். துணிவே: ஏ, அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. சுனை புலர்ந்த சுரம்: "அறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலின்" (அகநா. க: 12.)

2-3. வாகைமலர்க்கு மயிலின் உச்சிச்சூட்டு: "வாகை யொண்பூப் புரைய முச்சிய, தோகை" (பரி. கச: 7-8.)

4-5. கானநீளிடை மணஞ்செய்தல்: "பயந்தபு கானம், எம்மொடு கழிந்தன ராயிற் கம்மென, வம்புவிரித் தன்ன பொங்குமணற் கான்யாற்றுப், படுசினை தாழ்ந்த பயிலிண ரெக்கர், மெய்புகு வன்ன கைகவர் முயக்கம், அவரும் பெறுகுவர் மன்னே" (அகநா. கக: 6-11.)

6. நெஞ்சின் துணிவு: "சேய்வயிற் போந்தநெஞ் சேயஞ்சத் தக்கதுன் சிக்கனவே" (சிற். 343.) (கூசஎ)

---

## தோழி கூற்று

[தலைவன் பிரிவானென்றறிந்து வருந்திய தலைவியை நோக்கி, "அவர் போவாராயின் நின்துன்பத்தைக் காணாது செல்வாரோ? செல்லார்" என்று தோழி கூறியது.]

௩௪அ. தாமே செல்ப வாயிற் கானத்துப்
புலந்தேர் யானைக் கோட்டிடை யொழிந்த
சிறுவீ முல்லைக் கொம்பிற் றூஅய்
இதழழிந் தூறுங் கண்பனி மதரெழிற்
பூணக வனமுலை நனைத்தலும்
காணார் கொல்லோ மாணிழை நமரே.

எ - து. செலவுக்குறிப்பறிந்து வேறுபட்ட கிழத்தியைத் தோழி வற்புறீஇயது.

மாவளத்தன்.

(ப - ரை.) மாண் இழை - மாட்சிமைப்பட்ட ஆபரணங்களை அணிந்தோய், நமர் - நம் தலைவர், தாமே செல்ப ஆயின் - நம்மை விட்டுத் தாம் மட்டும் பிரிந்து செல்வாராயின், கானத்து - காட்டினிடத்து, புலம் தேர் யானை கோட்டிடை ஒழிந்த - மேய்புலத்தைத் தேடிச் செல்லும் யானையினது கொம்பினிடத்தே முறிந்து தங்கிய, சிறு வீ முல்லை கொம்பின் - சிறிய பூக்களையுடைய முல்லைக் கொடியின் கொம்பைப்போல, இதழ் அழிந்து ஊறும் கண் பனி - இமையைக் கடந்து ஊறுகின்ற கண்ணீர்த்துளி, தூஅய் - பரவி, மதர் எழில் - மதர்த்த அழகையுடைய, பூண் அகம் வனம் முலை - அணிகலன்களைத் தன்னிடத்தே உடைய அழகையுடைய நின் நகில் களை, நனைத்தலும் காணார்கொல் - நனைத்தலையும் காணாரோ!

(முடிபு.) மாணிழை, நமர் தாமே செல்பவாயின், காணார் கொல்லோ!

(கருத்து.) தலைவர் நின் வருத்தத்தை யறிந்து, போதலை யொழிவர்.

(வி - ரை.) தாமே செல்பவாயினென்றது, சென்றால் நின்னொடு செல்வாரென்ற நினைவிற்று; தாமே: ஏ, பிரிநிலை. புலம் - மேய்புலம் (குறுந். ௩௪௪ : 3 ; மதுரைக். 303.) யானை கவளமாகக் கொண்ட பொழுது முல்லைக்கொடி ஒழிந்தது. யானைக்கோட்டிடைக் கொண்ட முல்லை எந்தக் கணத்தில் அதன் வாயுட் புகுமோவென அறியாநிலையிலிருத்தலைப் போல இவள் எப்பொழுது உயிர் நீப்

(பி - ம்.) * பொலந்தேர்.

பாளோவென்ற நிலையில் இருப்பாளென்று உவமையை விரித்துக் கொள்க. யானைக் கொம்பினிடத்தே உதிர்ந்து வீழும் சிறிய பூக்களையுடைய முல்லைக் கொம்பைப்போலவென்று பொருள்செய்து, யானைக்கொம்பை நகிலுக்கும் முல்லை மலரைக் கண்ணீர்த்துளிக்கும் உவமையாக்குதலும் ஒன்று.

இதழ் - இமை (குறிஞ்சிப். 247.)

காணுர் கொல்லோ வென்றது காண்பாராதலின் செல்லாரென்ற நினைவிற்று; கொல்லோ: இரங்கற் பொருளில் வந்தது.

## ஒப்புமைப் பகுதி

3. சிறுவீ முல்லை: சிறுபாண். 89; நற். உசஅ: 1.

4. கண்பனி: குறுந். அசு: 1, ௩கூ௫: 2-6; நற். ககஎ: 3; கலி. ௩: 3, க௦: 13.

4-5. கண்ணீர் நகிலை நனைத்தல்: குறுந். ௩உ௫: 6; கலி. எஎ: 4; புறநா. கச௩: 13-5; சீவக. 2049. (௩.சஅ)

---

## தலைவி கூற்று

[தலைமகன் பரத்தையரிடமிருந்து வந்த காலத்தில் தோழி, "நம் நலந்தாவெனக் கேட்போம்" என்றவிடத்து, "ஒருவருக்குக் கொடுத்த பொருளை மீட்டுப் பெறுதலினும் உயிரிழத்தல் சிறந்தது" என்று தலைவி கூறியது.]

௩சகூ. * அடும்பவி ழணிமலர் † சிதைஇமீ னருந்தும்
தடந்தா ளுரை யிருக்கு மெக்கர்த்
தண்ணந் துறைவற் றொடுத்து நந்நலம்
கொள்வா மென்றி தோழி கொள்வாம்
இடுக்க ணஞ்சி யிரந்தோர் வேண்டிய
கொடுத்தவை ‡ தாவென் § சொல்லினும்
இன்னு தோநம் ¶ மின்னுயி ரிழப்பே.

---

(பி - ம்.) * அரும்பவி. † சிதையமீன். ‡ தரவெனச், தாவெனக்கூறலின். § சொல்லலும், சொலலினும். ¶ மின்னுயிரிழந்தே, மின்னுயிரிழவே.

எ - து. பரத்தைமாட்டுப் பிரிந்துவந்த தலைமகன் கேட்கும் அண்மையனாகத் தோழிக்குக் கிழத்தி கூறியது.

சாத்தன்.

(ப - ரை.) *தோழி—, அடும்பு அவிழ் அணி மலர் - அடும்பின் கொடியினிடத்தே மலர்ந்த அழகிய மலரை, சிதைஇ - சிதைத்து, மீன் அருந்தும் தட தாள் நாரை - மீனை உண்ணுகின்ற வளைந்த காலையுடைய நாரை, இருக்கும் எக்கர் - தங்கியிருக்கின்ற மணல் மேட்டையுடைய, தண்ணந்துறைவன் தொடுத்து - தண்ணிய துறையையுடைய தலைவனை வளைத்து, நம் நலம் கொள்வாம் என்றி - நாம் இழந்த பெண்மைநலத்தைப் பெறுவேமென்று கூறுகின்றாய்; கொள்வாம் - அங்ஙனமே கொள்வேம்; ஆயினும், இடுக்கண் அஞ்சி - தாம் உற்ற வறுமைத்துன்பத்துக்கு அஞ்சி, வேண்டிய - விரும்பி இரந்தவற்றை, கொடுத்து அவை தா என் சொலலினும் - கொடுத்துப் பிறகு அங்ஙனம் கொடுத்த அவற்றைத் தருக என்று சொல்லுதலைக் காட்டிலும், நம் இன் உயிர் இழப்பு - நமது இனிய உயிரை இழத்தல், இன்னாதோ - இன்னாமையையுடையதோ? அன்று; ஆதலின் அது கருதிலேன்.*

(முடிபு.) *தோழி, துறைவற்றொடுத்து நலம் கொள்வாமென்றி; கொள்வாம்; கொடுத்தவை தாவென் சொலலினும் நம் இன்னுயிரிழப்பு இன்னாதோ?*

(கருத்து.) *தலைவனை நலந்தாவெனக் கேட்டல் தக்கதன்று.*

(வி - ரை.) *மலர்மீது நின்று மீனை அருந்தலின் அம்மலர் சிதைந்தது. தண்ணந்துறைவன்: அம், சாரியை. 'நம் நலம் தா' என்று தோழி கேட்டல் மரபு;*

*"மாணலந் தாவென வகுத்தற் கண்ணும்"* (தொல். கற்பு. 9)

*என்பதனாலும் இந்நூல் உநகூ - ஆம் செய்யுளாலும் இது விளங்கும்.*

*இடுக்கண் அஞ்சித் தாவென் சொல்லினுமெனக் கூட்டிப் பொருள் கொண்டு, நமக்கு இடுக்கண் ஒன்று வருவதாயினும் அதற்கு அஞ்சிக் கொடுத்ததை மீட்டும் பெறல் இன்னாதென்ற கருத்தைக் கொள்க.*

*தலைவன் விரும்ப நாம் உடம்பட்டுக்கொடுத்த நலத்தை மீட்டும் கேட்டலினும், உயிரிழத்தல் நன்றென்றமையின் தலைவனைக் கடியற்க வென்பதை உணர்த்தினாள்.*

## மேற்கோளாட்சி

மு. தோழி தலைவனைக் காய்தற்கண் தலைவி கூறியது; 'இது பிரித்தல்பற்றி வந்தது' (தொல். கற்பு. 6, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

2. எக்கரில் நாரை இருத்தல்: "இனநாரை.........எக்கர்மே விறைகொள்ளு மிலங்குநீர்த் தண்சேர்ப்ப" (கலி. கஉக : 3-5.)

1-2. மணல்மேட்டில் அடும்பங்கோடி படர்தல்: குறுந். உசஅ : 4-5.

2-3. எக்கர்த்துறை: குறுந். ௬ட : 5.

3-4. நலத்தைத் தாவென்றல்: குறுந். உ௩சு : 2-6, ஒப்பு.

7. இன்னுயிர்: குறுந். உகசு : 7, ௩௩ச : 5.

5-7. கொடுத்ததைத் திரும்பப் பெறுமை: "அலைகடல் கடையக் கண்டே னயனைந்து சிரமுங் கண்டேன், மலையிரு சிறகு கண்டேன் வாரிதி நன்னீர் கண்டேன், சிலைமதன் வடிவு கண்டேன் சிவன்சுத்தக் கழுத்துக் கண்டேன், குலவரி யிருகண் கண்டேன் கொடுத்ததை வாங்கக் காணேன்" (பழம்பாடல்.) (௩. சக)

---

## தோழி கூற்று

[தலைவன் பிரிந்தபின் வேறுபட்ட தலைவியை நோக்கி, "நாம் அவர் செல்லும்பொழுது போகற்கவெனத் தடுத்தேமேல் அவர் செல்லார். அப்பொழுது உடம்பட்டு இப்பொழுது வருந்துதல் தக்க தன்று" என்று தோழி கூறியது.]

௩௫௦. அம்ம வாழி தோழி முன்னின்று
பனிக்கடுங் * குரையஞ் செல்லா தீமெனச்
சொல்லின மாயிற் † செல்வர் கொல்லோ
ஆற்றய லிருந்த ‡ விருந்தோட் டஞ்சிறை

(பி - ம்.) * குன்றஞ். † செல்லார் கொல்லோ. ‡ விருங்கோட் டஞ்சிறை.

நெடுங்காற் கணந்து ளாளறி வுறீஇ
ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்
மலையுடைக் கான நீந்தி
நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே.

எ - து. பிரிவுநேர்ந்த தலைமகள், அவனது நீக்கத்துக்கண் வேறுபட்டாளைத் தோழி வற்புறீஇயது.

ஆலத்தூர் கிழார்.

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று கூறுவன் கேட்பாயாக: ஆறு அயல் இருந்த இரு தோடு - வழியின் அயலிலே இருந்த பெரிய தொகுதியாகிய, அம் சிறை நெடு கால் கணந்துள் - அழகிய சிறகுகளையும் நெடியகாலையும் உடைய கணந்துட் பறவைகள், ஆள் அறிவுறீஇ - தமக்கு ஊறு விளைக்கும் வேட்டுவ மக்களுண்மையை அறிவுறுத்தி, ஆறு செல் வம்பலர் - வழிப்போகும் பிரயாணிகளது, படை தலை பெயர்க்கும் - சேனைத்திரளை இடத்தினின்று நீங்கச்செய்யும், மலையுடை கானம் நீந்தி - மலையையுடைய காட்டைக் கடந்து, நிலையா பொருள் பிணி பிரிந்திசினோர் - நிலையில்லாத பொருள்வேட்கையினால் நம்மைப் பிரிந்து சென்றோர், முன் நின்று - அவர் பிரியுங்காலத்து அவர் முன்னே நின்று, பனி கடும் குரையம் - யாம் பனியினது கடுமையையுடையேம், செல்லாதீம் - ஆதலின் போதலை ஒழிமின், என சொல்லினம் ஆயின் - என்று கூறினோமாயின், செல்வர் கொல் - போவாரோ?

(முடிபு.) தோழி, முன்னின்று செல்லாதீமெனச் சொல்லினமாயின் பிரிந்திசினோர் செல்வர்கொல்?

(கருத்து.) நாம் தலைவரை முன்பே தடுத்திருப்பின் செல்லார்.

(வி - ரை.) முன்னின்று - முன்னே நின்று வெளிப்படையாக. 'இனி வரும் பனிக்காலத்தின் கொடுமையை நும்பிரிவின்கண் பொறுத்தலாற்றேம்' என்னும் கருத்துப்பற்றி, 'பனிக் கடுங்குரையம்' என்றாள். குரை: அசைநிலை.

செல்லாதீம் - செல்லாதீர். கொல்லோ: ஓ, அசைநிலை.

ஆறு செல் வம்பலரும் வீரராக இருத்தலின் அவர் கூட்டத்தைப் படையென்றாள் (அகநா. அகூ: 13.)

தோடு - தொகுதி. கணந்துட் பறவை ஆறலைகள்வர் வருவதை யறிந்து ஒலித்தலின் வம்பலர் பெயர்ந்தனர்.

மலையுடைக் கானம் - குறிஞ்சி திரிந்த பாலை நிலம்.

"தலைவர் பிரிந்த காலத்தில், நும் பிரிவினால் யாம் வருந்துவே மாதலின் செல்லற்கவெனச் சொன்னோமாயின் அவர் நம் விருப் பத்திற்கு இணங்கிச் செலவு தவிர்ந்து ஈண்டிருப்பர். நாம் அப் பொழுது உடம்பட்டமையின் அவர் சென்றார். ஆதலின் அவர்பாற் குறையில்லை. நாமே அன்று உடம்பட்டு இப்பொழுது வேறுபடுதல் நன்றன்று. நீ ஆற்றியிருத்தல் வேண்டும்" என்று தோழி தலை வியை வற்புறுத்தினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. அம்ம வாழிதோழி: குறுந். எஎ : 1, ஒப்பு.

வாழிதோழி: குறுந். உசுO : 4, ஒப்பு.

2. செல்லாதீம்: குறுந். ௩கo : 2; நற். உஉக : 3; ஐங். கஅசு : 5; அகநா. ௩OO : 18.

5. நெடுங்காற் கணந்துள்: நற். உகஉ : 2.

கணந்துட்பறவை: சிலப். கO : 117, அடியார்.

7. "கல்லுடை யதர கான நீந்தி" (அகநா. உகூ : 8.)

8. பொருட்பிணி: குறுந். உ௫௫ : 7, ஒப்பு, ௩சச : 7, ஒப்பு.

நிலையாப் பொருட்பிணி: நற். சசு : 11, எக : 1, கஉசு: 11, உசக : 12; கலி. அ : 11, 14, 17; அகநா. எகூ : 17. (௩௫O)

---

## தோழி கூற்று

[தலைமகன்தமர் தலைவியை மணம்பேசுதற்பொருட்டு வந்தாராக, "அவருக்கு நமர் உடம்படுவார்கொல்லோ?" என ஐயுற்ற தலைவியை நோக்கி, "நமர் உடம்பட்டனர்" என்று தோழி கூறியது.]

௬௱௪. * வளையோ யுவந்திசின் † விரைவுறு கொடுந்
அளைவா ழலவன் கூருகிர் வரித்த        [தாள்
‡ ஈர்மணன் மலிர்நெறி சிதைய விழுமென
உருமிசைப் புணரி யுடைதருந் துறைவர்க்
குரிமை செப்பினர் நமரே விரியலர்ப்
புன்னை யோங்கிய புலாலஞ் சேரி
இன்னகை யாயத் தாரோ
டின்னுமற் றோவிவ் வழுங்க லூரே.

எ - து. தலைமகன்தமர் வரைவோடு வந்தவழி, "நமர் அவர்க்கு வரைவு நேரார் கொல்லோ?" என்று அஞ்சிய தலைமகட்குத் தோழி வரைவு மலிந்தது.

அம்மூவன்.

(ப - ரை.) *வளையோய் - வளையை அணிந்தோய், நமர் - நம் சுற்றத்தார், விரைவு உறு கொடு தாள் அளை வாழ் அலவன் - விரை தலையுடைய வளைந்தகாலையுடைய வளையின்கண் வாழும் நண்டு, கூர் உகிர் வரித்த - தன் கூரிய நகத்தினால் கீறிய, ஈர் மணல் மலிர்நெறி சிதைய - ஈரமுள்ள மணலையுடைய நீருள்ள வழி சிதையும்படி, இழுமென - இழுமென்னும் ஓசையுண்டாக, உரும் இசை புணரி உடைதரும் துறைவர்க்கு - இடியினது முழக்கத்தையுடைய அலைகள் உடையும் துறையையுடைய தலைவருக்கு, உரிமை செப்பினர் - நீ உரியாயென்றமையை உடம்பட்டுக்கூறினர்; உவந்திசின் - அதனை அறிந்து நான் மகிழ்ந்தேன்; விரி அலர் புன்னை - விரிந்த மலர்களையுடைய புன்னைமரங்கள், ஓங்கிய - உயர்ந்து வளர்ந்த, புலால் சேரி - புலால்நாற்றத்தையுடைய சேரியிடத்துள்ள, இன் நகை ஆயத்தாரோடு - இனிய நகையையுடைய மகளிர்கூட்டத்தினரோடு, இ அழுங்கல் ஊர் - இந்த ஆரவாரத்தையுடைய ஊர், இன்னும் அற்றோ - இனியும் அலர்கூறும் அத்தன்மையையுடையதோ?*

(முடிபு.) *வளையோய், நமர் துறைவர்க்கு உரிமை செப்பினர்; உவந்திசின்; இவ்வூர் இன்னும் அற்றோ?*

(கருத்து.) *தலைவரது வரைவுக்கு நம் தமர் உடம்பட்டனர்.*

---

(பி - ம்.) * *வளையோய் வந்திசின்.* † *விரவுங் கொடுந்தாள்.* ‡ *ஈர்மண லீர்நெறி.*

(வி - ரை.) தலைவியின் ஐயத்தைப் போக்க எண்ணியவள் அவள் உவப்பையடையும்பொருட்டு முதலில், "யான் உவந்தேன்" என்று கூறினாள்; அதனால் 'இவள் கூறப்புகுவது நற்செய்தி' எனத் தலைவி துணிவாள்.

அலவன் வரித்த சிறுநெறி சிதைய அலைவீசுமென்பது, ஊரினர் கூறும் அலரெல்லாம் ஒழியத் தலைவன் மணந்து கொள்வானென்ற குறிப்பினது.

வரித்தல் - கோலஞ்செய்தல்; இங்கே, கோடு கோடாகக் கீறுதலெனக் கொள்க. உடைதரும் - கரையின்மேல் மோதி உடையும். துறைவர்க்கு உரிமையென்றது அவருக்கே தலைவி உரியளென்றபடி; ஓர் ஆடவனுக்கு உரிய பொருள்கள் யாவற்றினும் சிறந்தமை பற்றி மனைவிக்கு 'உரிமை' என்னும் பெயர் அமைந்தமை இங்கே கருதற்குரியது (பெருங். க. 38: 263-7.)

புலாலஞ்சேரி: அம், சாரியை. புன்னைமலரின் மணமும் புலாலின் நாற்றமும் ஒருங்கு வீசும் சேரியென்றது தலைவன் வரைவுக்கு உடம்படும் தமரும், வறிதே அலர்கூறும் ஆயமும் உடையதென்ற நினைவிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. கோடுந்தாளலவன்: ஐந். ஐம். 42.

2-3. அலவன் வரித்த நெறி: "தண்சேறு கள்வன் வரிக்கும்" (ஐங். உஅ: 2.)

4. உருமிசைப் புணரி உடைதருதல்: அகநா. ௩க0: 16.

3-4. இழுமென ஒலித்தல்: குறுந். ௩௪௫: 6, ஒப்பு.

6. புன்னையோங்கிய சேரி: குறுந். ௩௨0: 7, ஒப்பு.

புலாலஞ் சேரி: குறுந். ௩௨0: 1-4; நற். க0க: 1-5, ௩௩அ: 8; அகநா. உஎ0: 2.

7. இன்னகையாயம்: பொருந. 85; சிறுபாண். 220; ஐங். ௩கஎ: 5; பெருங். க. 36: 306, 48: 70; பு. வெ. 75. (௩௫க)

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்தகாலத்தில் தோழியை நோக்கி, "தலைவர் பிரிவினால் மாலைக்காலம் எனக்கு நோய் தருகின்றது" என்பதுபடத் தலைவி கூறியது.]

௬௫௨. நெடுநீ ராம்ப லடைப்புறத் தன்ன
கொடுமென் சிறைய கூருகிர்ப் பறவை
அகலிலைப் பலவின் சாரன் முன்னிப்
பகலுறை முதுமரம் புலம்பப் போகும்
சிறுபுன் மாலை யுண்மை
அறிவேன் றோழியவர்க் காணா வூங்கே.

எ - து. பிரிவிடைத் தோழிக்குக் கிழத்தி மெலிந்து கூறியது.

கடியலூர் உருத்திரங் கண்ணனார்.

(ப - ரை.) தோழி—, நெடு நீர் ஆம்பல் - ஆழமாகிய நீரின்கண் வளர்ந்த ஆம்பலினது, அடை புறத்து அன்ன - இலையின்புறத்தைப் போன்ற, கொடு மெல் சிறைய - வளைந்த மெல்லிய சிறையையுடையனவாகிய, கூர் உகிர் பறவை - கூரிய நகங்களையுடைய வெளவால்கள், அகல் இலை பலவின் சாரல் முன்னி - அகன்ற இலைகளையுடைய பலாமரங்களையுடைய மலைச்சாரலை நோக்கி, பகல் உறை முது மரம் - பகற்காலத்தில் தாம் உறைந்த பழைய மரம், புலம்ப - தனிக்கும்படி, போகும்—, சிறு புல் மாலை உண்மை - சிறிய புல்லிய மாலைக்காலம் உளதாதலை, அவர் காணா ஊங்கு - அத்தலைவரைக் காணாதகாலத்தில், அறிவேன் - உணர்வேன்.

(முடிபு.) தோழி, அவர்க்காணாவூங்கு மாலையுண்மை அறிவேன்.

(கருத்து.) தலைவன் பிரிந்தபின்னர் மாலைக்காலம் எனக்குத் துன்பத்தைத் தருகின்றது.

(வி - ரை.) நெடுநீர்: நெடுமை, ஆழத்தின்மேற் சென்றது; "நெடும்புனலுள் வெல்லு முதலை" (குறள், 495) என்பதன் உரையைப் பார்க்க.

தலைவனைக்காணுவிடத்து மாலைக்காலத்தில் காமநோய் மிகுதலின், 'அவர்க்காணுவுங்கு மாலையுண்மை அறிவேன்' என்றாள். அவர்: நெஞ்சறிசுட்டு.

## ஒப்புமைப் பகுதி

2. கோடுஞ்சிறைப் பறவை: குறுந். கஉ : 2.

மென்சிறைக் கூருகிர்ப்பறவை : குறுந். உ0க : 3.

4. வௌவால் பகலிலுறை மரம் : சிறு. 375.

1-4. வௌவால் மாலையில் தாம் இருந்த மரத்தை நீங்கி வேறிடம் செல்லுதல் : "பசைபடு பச்சை நெய்தோய்த் தன்ன,.............மாச் சிறைப் பறவை, பகலுறை முதுமரம் புலம்பப் போகி" (அகநா. உசச : 1-3.)

1-5. குறுந். கஎஉ : 1-2, ஒப்பு.

5-6. தலைவன் பிரிந்தகாலத்தில் தலைவி மாலைக்காலத்தை அறிதல் : (குறுந். ௩அக : 2-4) ; "மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத, காலை யறிந்த திலேன்" (குறள், 1226.) (௩௫உ)

---

## தோழி கூற்று

[பகற்குறி வந்தொழுகும் தலைவன், தலைவி இல்லினின்றும் வெளிப்போதலால் ஊரினர் அறிவரோவென அஞ்சி இரவுக்குறி விரும்பிச் சிறைப்புறத்தே நிற்பத் தலைவியை நோக்கிக் கூறுவாளாய், "நம் அன்னையின்காவல் இரவில் மிக்கது" என்று தோழி இரவுக் குறி மறுக்கும் வாயிலாக வரைவு கடாயது.]

௩௫௩. ஆர்கலி வெற்பன் மார்புபுணை யாகக்
கோடுயர் நெடுவரைக் கவாஅற் பகலே
பாடின் னருவி யாடுத லினிதே
நிரையிதழ் பொருந்தாக் கண்ணோ டிரவிற்
பஞ்சி வெண்டிரிச் செஞ்சுடர் நல்லிற்
பின்னுவீழ் சிறுபுறந் தழீஇ
அன்னை முயங்கத் துயிலின் னாதே.

எ - து. பகற்குறி வந்து ஒழுகுந் தலைமகன் வெளிப்பாடஞ்சி இரவுக்குறி நயந்தானது குறிப்பறிந்த தோழி, இரவின்கண் அன்னையது காவலறிந்து பின்னும் பகற்குறியே நன்று அவ்விரவுக் குறியினென்று பகற்குறியும் இரவுக்குறியும் மறுத்துத் தலைமகன் சிறைப்புறத்தானாக வரைவு கடாயது.

உறையூர் முதுகூத்தன்.

(ப - ரை.) *பகல் - பகற்காலத்தில், கோடு உயர் நெடு வரை கவான் - கொடுமுடிகள் உயர்ந்த நீண்ட மலையினது தாழ்வரையினிடத்தே, பாடு இன் அருவி - ஓசை இனிதாகிய அருவியில், ஆர் கலி வெற்பன் மார்பு புணை ஆக - நிறைந்த முழக்கத்தையுடைய மலையையுடைய தலைவனது மார்பு தெப்பமாக, ஆடுதல் இனிது - நீர்விளையாடல் இனியது; இரவில் - இராக்காலத்தில், பஞ்சி வெள் திரி செ சுடர் நல் இல் - பஞ்சாலாகிய வெள்ளிய திரியையுடைய செவ்விய விளக்கையுடைய நல்ல வீட்டின்கண்ணே, அன்னை - நம் தாய், பின்னு வீழ் சிறு புறம் தழீஇ - பின்னல் தாழ்கின்ற பிடரியைத் தழுவி, முயங்க - அணைப்ப, நிரை இதழ் பொருந்தா கண்ணோடு - வரிசையாகிய இமைகள் ஒன்றோடு ஒன்று பொருந்தாத விழிகளோடு, துயில் - நாம் துயிலுதல், இன்னாது - இன்னாமையையுடையது.*

(முடிபு.) *பகலில் அருவியாடுதல் இனிது; இரவில் அன்னை முயங்கத் துயில் இன்னாது.*

(கருத்து.) *காப்புமிகுதியால் இரவுக்குறி பெறற்கு அரிது.*

(வி - ரை.) *ஆர்கலி - நிறைந்த ஆரவாரங்கள்; மலையிலுள்ள ஆரவாரங்களைப் பற்றிய செய்திகளை 'மலைபடுகடாம்' என்னும் நூலிற் காணலாம். பகலே, இனிதே : ஏ, அசைநிலை.*

*" பெருவரை மிசையது நெடுவெள் ளருவி*
*முதுவாய்க் கோடியர் முழவிற் றதும்பி "* (குறுந். எஅ : 1-2)

*என்று அருவியின் ஒலி சிறப்பிக்கப்படுதலின் அஃது இனியதாயிற்று.*

*அன்னை முயங்கவென்றது அவளது காவன்மிகுதியை உணர்த்தியபடி; இதழ் பொருந்தாது துயிலுதலென்றது துயிலின்மையைக் குறித்தவாறு.*

*இதனால் இரவுக்குறி மறுத்தாளாயிற்று.*

## மேற்கோளாட்சி

மு. இரவுக்குறி நயந்த தலைவன் சிறைப்புறமாக, பகற்குறி நேர்வாள்போல் தோழி இரவுக் காப்புமிகுதி கூறியது; 'பாடின் னருவியாட லென்றூள் அதன்கண் உதவினுனென்பதுபற்றி; அல்லது களவிற்கு உடனுநிதல் இன்று' (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. ஆர்கலி வெற்பன் மார்பு: நற். கoச: 7.

2. வரைக் கவான்: குறுந். உகூஉ: 6, ஒப்பு.

3. பாடின்னருவி: * "முழவின்னிசை மூரி முழங்கருவி" (சீவக. 1193.)

1-3. தலைவன் மார்பு புணையாக நீராடுதல்: "வவ்வுவல் லார்புணை யாகிய மார்பினை" (பரி. சு: 80); "கூடியார் புனலாடப் புணையாய மார்பினில்" (கலி. எஉ: 15); "ஓங்குவரை யிழிதரும் வீங்குபெய னீத்தம்....பெருமலை நாடன் மார்புபுணை யாக, ஆடுகம் வம்மோ" (அகநா. ருகஉ: 4-8.)

தலைவி தலைவனேடு நீராடுதல்: "பெருங்க ளுடனெடு...பெரு வரையடுக்கத் தருவி யாடி", "அங்க ணறைய வகல்வாய்ப் பைஞ்சுனை... சார னுடனெ டாடிய நாளே", "நாடனெடு, சூருடைச் சிலம்பி னருவி யாடி" (நற். உ௫௧: 3-5, ரு௫எ: 7-10, ருஎரு: 4-5.)

5. சுடர்: குறுந். ருகஅ: 5.

6. பின்னுவீழ் புறம்: குறுந். உசகூ: 6, ஒப்பு.

7. அன்னையின் முயக்கத்தைத் தலைவி வெறுத்தல்: குறுந். அச: 2.

6-7. சிறுபுறம் முயங்குதல்: அகநா. கக: 19, சக: 5-7. (ரு௫ரு)

---

* முழவினைப் போன்ற இனிய ஒலியையுடையவெனப் பொருள் கொள்க.

## தோழி கூற்று

[பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகனை நோக்கி, "நீ எம்மை விரும்பாயாயின் எம்மை எம் தந்தையின் வீட்டிற்கு அழைத்துச் செல்வாயாக" என்று கூறும் வாயிலாகத் தோழி வாயில் மறுத்தது.]

௩௫௪. நீர்நீ டாடிற் கண்ணுஞ் சிவக்கும்
ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்
தணந்தனை யாயினெம் மில்லுய்த்துக் கொடுமோ
அந்தண் பொய்கை யெந்தை யெம்மூர்க்
கடும்பாம்பு வழங்குந் தெருவில்
நடுங்களு ரெவ்வங் களைந்த வெம்மே.

எ - து. பரத்தையிற் பிரிந்து வாயில் வேண்டிச் சென்ற தலைமகற்குத் தோழி வாயில்மறுத்தது.

கயத்தூர் கிழான்.

(ப - ரை.) *நீர் நீடு ஆடின் கண்ணும் சிவக்கும்* - நீரின்கண் நெடுநேரம் விளையாடினால் கண்களும் செந்நிறத்தை அடையும்; *ஆர்ந்தோர் வாயில்* - பன்முறை உண்டோரது வாயினிடத்தே, *தேனும் புளிக்கும்* - தேனும் புளிப்பையுடையதாகும்; ஆதலின், *தணந்தனை ஆயின்* - நீ எம்மைப் பிரிவையாயின், *அம் தண் பொய்கை* - அழகிய தண்ணிய பொய்கையையுடைய, *எந்தை எம் ஊர்* - எம் தந்தையினது எம் ஊரின்கண்ணே, *கடு பாம்பு வழங்கும் தெருவில்* - நஞ்சின் கடுமையையுடைய பாம்புகள் ஓடும் தெருவில், *நடுங்கு அளுர் எவ்வம் களைந்த எம்* - நீ முன்பு நடுங்குதற்குரிய மிக்க துன்பத்தை நீக்கிய எம்மை, *எம் இல் உய்த்துக் கொடுமோ* - எம்முடைய வீட்டிற்கு அழைத்துச்சென்று விடுவாயாக.

(முடிபு.) நீர் நீடு ஆடின் கண்ணும் சிவக்கும்; தேனும் புளிக்கும்; தணந்தனையாயின் எம்மை எம்இல் உய்த்துக் கொடுமோ.

(கருத்து.) எம்மை எம் தந்தையின் வீட்டிற்கு அழைத்துச் செல்வாயாக.

(வி - ரை.) தண்ணியதாய் ஆடுதற்கினியதாகிய நீர் நெடுநேரம் ஆடியபின் கண்சிவத்தற்குக் காரணமாயினமையின் வெறுப்பைத்

---

(பி - ம்.) * தணந்தனி ராயின்.

தருவதாயிற்று. தேன் முதலில் இனிதாகிப் பின் நாட் செல்லச் செல்லப் புளிக்கும்; 'இனிதாய்ப் பின் தீங்கு விளைத்தலின் தேன் உவமம்' (சீவக. 222) என்பர் நச்சினார்க்கினியர். இவ்விரண்டு உவமைகளும், 'யாம் உனக்கு இனியமாகியிருந்தும் நெடுங்காலம் பழகினமையின் நின்னால் வெறுத்தற்குரியே மாயினேம்' என்னும் நினைவுபற்றிக் கூறப்பட்டன; 'பழகப் பழகப் பாலும் புளிக்கும்' என்னும் பழமொழி இங்கே நினைத்தற்குரியது.

'நீ முன்பு எம் அருளர் களைந்தாய்' என்றது தலைவனது பழைய அன்பை நினைவுறுத்தியபடி.

கொடுமோ: மோ, முன்னிலையசை. ஏ: அசைநிலை.

## மேற்கோளாட்சி

2. தேன் முன் இனிதாய்ப் பின் தீங்கு விளைக்கும் இயல்பினது (சீவக. 222, ந.)

5. கடியென்னும் உரிச்சொல் அச்சப்பொருளில் வந்தது (தொல். உரி. 87, தெய்வச்.)

மு. தலைவனைத் தலைவி நீங்கித் தனிமையுறுதல் பெரிதாகலின் ஆண்டு அலமரல் பெருகிய காமத்தின் மிகுதியின்கண் தலைவி கூறியது (தொல். கற்பு. 6, இளம்.); பரத்தையிற்பிரிவால் தலைவர்க்கும் தலைவியர்க்கும் தோன்றிய வருத்தமிகுதியைத் தீர்க்கக்கருதித் தோழி கூற்று நிகழ்த்துங் காலத்து அவரது இல்வாழ்க்கை நிகழ்ச்சிக்கண்ணே தனக்கு வருத்தந்தோன்றிற்றாகக் கூறுதலும் உரித்து; 'இதனுள் இல்லறத்தினை நீ துறந்தாயாயின் எம்மை எம்மூர்க்கண்ணே விடுகவெனத் தனக்கு வருத்தந்தோன்றிற்றாகத் தோழி கூறியவாறு காண்க' (ஷை. பொருள் 32, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. நீராடிற் கண் சிவத்தல்: "அருவி தாஅய்...பனிபொரு மழைக் கண் சிவப்ப", "நீத்தம்...அரிமதர் மழைக்கண் சிவப்ப...ஆடுகம் வம்மோ" (அகநா. ௨௭அ : 7-11, ௩௪௨ : 4-8.)

2. தேன் புளித்தல்: 'தேனுக்கு இன்சுவை நிகழ்ந்த காலத்தே புளிச்சுவை நிகழுமாறுபோல' (சீவக. 2382, ந.)

3-4. பெருங். 2-16 : 50-51.

5. கடும்பாம்பு வழங்குந்தெரு: "அருவரை யுள்ளதாஞ் சீறூர் - வருவரையுள், ஐவாய நாகம் புறமெல்லாம்" (திணைமா. 13.) (௩௫௪)

## தோழி கூற்று

[மழைபெய்யும் நடுயாமத்தில் தலைவன் வந்தானாக, "இந்த இருளில் நீ எங்ஙனம் வழிதெரிந்து எம் ஊரைத் தேடி வந்தனை?" என்று அவனுக்குத் தோழி கூறியது.]

கூருரு. * பெயல்கண் மறைத்தலின் † விசும்புகா ணலையே
நீர்பரந் தொழுகலி ‡ னிலங்கா ணலையே
எல்லை சேறலி னிருள்பெரிது பட்டன்று
பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப
வேங்கை ¶ கமழுமெஞ் சிறுகுடி
யாங்கறிந் தனையோ நோகோ யானே.

எ - து. இரவுக்குறிவந்த தலைமகற்குத் தோழி நொந்து கூறியது.

(ப - ரை.) ஓங்கல் வெற்ப - உயர்ச்சியையுடைய மலையையுடைய தலைவனே, பெயல் கண் மறைத்தலின் - மழை இடத்தை மறைப்பதனால், விசும்பு காணலை - வானத்தைக் காண்பாயல்லை; நீர் பரந்து ஒழுகலின் - அம்மழையின் நீர் எங்கும் பரந்து ஓடுதலினால், நிலம் காணலை - நிலத்தைக் காண்பாயல்லை; எல்லை சேறலின் - சூரியன் போனமையால், இருள் பெரிது பட்டன்று - இருள் மிக உண்டாயிற்று; இந்நிலையில், பல்லோர் துஞ்சும் - பலரும் துயில்கின்ற, பால் நாள் கங்குல் - நள்ளிரவில், யாங்கு வந்தனை - எங்ஙனம் வந்தாய்? வேங்கை கமழும் - வேங்கைமரத்தின்மலர் மணம் வீசுகின்ற, எம் சிறு குடி - எமது சிற்றூரை, யாங்கு அறிந்தனை - எங்ஙனம் அறிந்தாய்? யான் நோகு - யான் வருந்துவேன்.

(முடிபு.) வெற்ப, விசும்பு காணலை; நிலங்காணலை; இருள் பட்டன்று; யாமத்து யாங்கு வந்தனை? எம் சிறு குடி யாங்கு அறிந்தனை? யான் நோகு.

(கருத்து.) நீ இவ்விரவில் வருதல் குறித்து அஞ்சுகின்றேன்.

---

(பி - ம்.) * பெயல்கான். † விசும்புகாணலரே. ‡ னிலங்காணலரே. ¶ கமழுஞ் சிறுகுடி.

(வி - ரை.) விசும்பு காணாமையின் விண்மீனொளியும் இல தாயிற்று. நிலம் காணாமையின் வழி காணற்கு அரிதாயிற்று. தானும் தலைவியும் துஞ்சாமையின், யாவரும் துஞ்சும் கங்கு லென்னாது பல்லோர் துஞ்சும் கங்குலென்றாள். விசும்பு காணாமை யின் திசையறிதலும், நீர் பரந்தொழுகலின் நிலமறிதலும், எல்லை சேறலின் நெறியறிதலும், ஊரினர் ஒலியின்றித் துஞ்சுதலின் ஊரிட மறிதலும் அரியவாயின. 'வேங்கை கமழும் எம் சிறுகுடி' என்றது, 'அவ்வேங்கைமலரின் மணத்தைக் கொண்டு எம் ஊரை அறிந்தனை போலும்!' என்ற கருத்தைக் குறித்து நின்றது.

வந்தனையோ, அறிந்தனையோ: ஓ, அசைநிலை. நோகோ: ஓ, இரங்கற்குறிப்பு. ஏகாரங்கள்: அசைநிலை.

இதனால் இரவுக்குறி வருதல் அஞ்சுதற்கு உரியதென்று கூறி வரைவுகடாவினாள்.

## மேற்கோளாட்சி

மு. தலைவி இடையீடின்றித் தலைவனை எதிர்ப்படப் பெற்ற ஞான்று புதுவது மலிந்தமையின் அவள் கூறியது (தொல். களவு. 21, இளம்.); இரவுக்குறி வந்த தலைவனை நோக்கித் தலைவி கூறியது (ஷை. ஷை. 20, ந.); தலைவி ஆற்றினது அருமை நினைந்து இரங்கியது (நம்பி. 158; இ. வி. 517.)

## ஒப்புமைப் பகுதி

1. மழையால் விசும்பு மறைக்கப்படுதல்: (குறுந். ௩அ0: 1-3); "தாழ்நீர் நனந்தலை யழுந்துபடப் பாஅய், மலையிமைப் பதுபோன் மின் னிச், சிலைவ லேற்றொடு செறிந்தவிம் மழைக்கே", "முழங்குகடன் முகந்த கமஞ்சூன் மாமழை, மாதிர நனந்தலை புதையப் பாஅய்" (நற். ௧௧௨: 7-9, ௩௪௭: 1-2.)

2. மழைநீரால் நிலம் மறைதல்: "தாஉ யன்ன துவலை துவற்ற லின், தேஎந் தேருக் கடும்பரிக் கடும்பொடு" (மலைபடு. 363-4); "மாநிலந் தோன்றாமை மலிபெய றலைஇ" (பரி. திரட்டு, ௨: 1.)

4. பல்லோர் துஞ்சும் கங்குல்: குறுந். ௬: 1-3, ஒப்பு, ௨௪௪: 1, ஒப்பு.

பானாள்: குறுந். ௬௪: 3, ஒப்பு.

5. ஓங்கல் வெற்ப: அகநா. * ௧அ: 8.

* கபிலர் பாட்டு.

5, ழ. யா. வி. 95, மேற். "துணியிரும் பௌவம்."

6. வேங்கைமலர் கமழ்தல்: குறுந். ௮௪ : 4; அகநா. ௬௧௮ : 2, ௨௧௮ : 21, ௨௬௮: 3-4, ௩௬௫ : 13-4, ௩௭௮ : 2-4, ௩௮௮ : 6-7 ; புறநா. ௨௬௫ : 2.

சிறுதடி : குறுந். ௧௮௪ : 2, ஒப்பு.

வேங்கைமரம் வீட்டினருகில் இருத்தல்: குறுந். ௨௬௬ :3.

(௩௫௫)

---

## செவிலித்தாய் கூற்று

[தலைவி தலைவனுடன் போயினபின், "என்மகள் எங்ஙனம் பாலையிற் செல்லும் ஆற்றல் பெற்றாள்?" என்று செவிலி கூறி வருந்தியது.]

௩௫௬. * நிழலான் றவிந்த நீரி லாரிடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி
அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
† வெவ்வெங் கலுழி தவ்வெனக் ‡ குடிக்கிய
யாங்குவல் லுநள்கொ றானே யேந்திய
செம்பொற் புனைகலத் தம்பொரிக் கலந்த
பாலும் பலவென வுண்ணாள்
கோலமை குறுந்தொடித் தளிரன் னோளே.

எ - து. மகட் போக்கிய செவிலித்தாய் உரைத்தது.

[மகட் போக்கிய - தலைமகள் தலைவனுடன் போதற்குக் காரணமாகிய.]

கயமன்.

(ப - ரை.) ஏந்திய செ பொன் புனை கலத்து - கையிலேந்திய செம்பொன்னாலாகிய புனைந்த பாத்திரத்தில் உள்ள, அம் பொரி கலந்த - அழகிய பொரியோடு கலந்த, பாலும் பல என - பாலையும் மிக்கன என்று கூறி, உண்ணாள் - உண்ணாளாகிய, கோல் அமை குறு தொடி - திரட்சியமைந்த குறிய வளையை யணிந்த, தளிர் அன்

(பி- ம்.) *சிழலான்று விரிந்த. † வெவ்வவ். ‡குடித்தி, குடித்திய.

னோள் - தளிரை ஒத்த மென்மையையுடைய என்மகள், நிழல் ஆன்று அவிந்த - நிழல் அடங்கி அற்றுப்போன, நீர் இல் அரு இடை - நீர் இல்லாத கடத்தற்கரிய பாலைநிலத்திடத்தே, கழலோன் காப்ப - வீரக்கழலையுடைய தலைவன் தன்னைப் பாதுகாப்ப, கடுகுபு போகி - விரைந்து சென்று, அறுசுனை மருங்கின் - நீர்வளமற்ற சுனையின் பக்கத்தில், மறுகுபு வெந்த - உலர்ந்து வெம்மையைக் கொண்ட, வெ வெ கலுழி - மிக்க வெப்பத்தையுடைய கலங்கல் நீரை, தவ் வென - தவ்வென்னும் ஓசைபட, குடிக்கிய - குடிக்க, யாங்கு வல்லுநள் - எவ்வாறு வலியளானாள்?

(முடிபு.) உண்ணோளாகிய தளிரன்னோள், போகிக் குடிக்கிய யாங்கு வல்லுநள்?

(கருத்து.) என் மகள் எங்ஙனம் பாலைநிலத்திற் செல்லும் வன்மையையுடையளானாள்?

(வி - ரை.) இது செவிலி தன்மகள் மென்மைத்தன்மைக்கு இரங்கியது.

பாலைநிலத்தலைவன் கழலுடையனாதலை இந்நூல் எ - ஆம் செய்யுளாலும் உணரலாகும்.

'செம்பொற் புனைகலத் தேந்தியபால்' என்றது தம் செல்வ நிலைமையைக் குறித்தபடி. 'இத்தகைய செல்வம் நிரம்பிய மனையில் இருந்தவள் பாலைநிலத்திற் செல்ல நேர்ந்ததே!' என்பது செவிலி யின் நினைவு.

பலவென்றது அளவின் பெருமையைச் சுட்டி நின்றது; சிறிது நீரைச் சிலநீரென்னும் வழக்குப் போன்றது. தளிரன்னோளென்றது தலைவியின் மென்மையை நினைந்தது.

## ஒப்புமைப் பகுதி

1. பாலை நிலத்தில் நிழல் அறுதல். "நிழலுரு விழந்த வேனிற் குன்றத்துப், பாலை சான்ற சுரஞ்சேர்ந் தொருசார்" (மதுரைக். 313-4); "நிழறேய்ந் துலறிய மரத்த...காடு", "நிழலறு நனந்தலை", "மரநிழ லற்ற வியவிற் சுரன்", "நிழன்மா யியவின்" (அகநா. க : 11-9, கoரு: 1, ருடுரு: 15, ருகடு : 7); "விடுசுடர் நடுவுநின் றடுதலி னிழலும், அடியகத் தொளிக்கு மாரழற் கானத்து" (திருவாரூர். மும்மணிக். 13.)

ஆன்றவிதல்: புறநா. ககக: 6.

3. அறுகுனை : குறுந். ௫௪௭ : 1; கலி. ௧௨ : 3 ; அகநா. ௧ : 12.

4. தவ்வென : நெடுநல். 185 ; நற். ௫௧௧ : 2 ; குறள், 1144.

5-7. நற். ௧௭௦ : 1-8 ; அகநா. ௨௧௧ : 5-7.

8. கோலமை தோடி : குறுந். ௨௫௫ : 7, ஒப்பு, ௫௬௪ : 3.

குறுந்தொடி : ௫௮௪ : 2.

தளிரன்னோள் : நெடுநல். 148 ; நற். ௨௫௧ : 7 ; ஐங்குறு. ௫௮ : 3, ௧௭௬ : 4, ௫௬௫ : 5 ; கலி. ௧௫ : 19.

5-8. அகநா. ௮௧ : 19-22, ௧௦௫ : 4-8.

மு. அகநா. ௨௦௭. (௫௫௬)

---

## தோழி கூற்று

*[வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தே நிற்ப, தலைவியை நோக்கி, “ நின் தோள்கள் தலைவனோடு நீ நட்புச் செய்யாத தன்முன் நல்லனவாக இருந்தன ” என்று தோழி கூறியது.]*

௫௫௭. முனிபட ருழந்த பாடி லுண்கட்
பனிகால் போழ்ந்து பணையெழின் ஞெகிழ்தோள்
மெல்லிய வாகலின் மேவரத் திரண்டு
நல்ல வென்னுஞ் சொல்லை மன்னிய
ஏனலஞ் சிறுதினை காக்குஞ் சேணோன்
ஞெகிழியிற் பெயர்ந்த நெடுநல் யானை
மீன்படு சுடரொளி வெரூஉம்
வான்றோய் வெற்பன் மணவா வூங்கே.

எ - து. தோழி, கிழவன் கேட்கும் அண்மையனாகக் கிழத்திக்குச் சொல்லியது.

கபிலர்.

---

(பி - ம்.) * மின்படு.

(ப - ரை.) பணை எழில் நெகிழ் தோள் - மூங்கிலினது அழகு நெகிழ்ந்த நின் தோள்கள், முனி படர் உழந்த - வெறுக்கத்தக்க துன்பத்தால் வருந்திய, பாடு இல் உண் கண் பனி - துயிலுதலில் லாத மையுண்ட கண்களில் உண்டாகும் துளி, கால் போழ்ந்து - குறுக்கே சென்று, மெல்லிய ஆகலின் - இப்பொழுது மெலிவை யுடையவாதலினால், ஏனல் அம் சிறு தினை காக்கும் - தினைச் சாதியுள் அழகிய சிறிய தினையைக் காக்கின்ற, சேணோன் - பரணின்மேலுள்ள குறவனது, ஞெகிழியின் - கொள்ளிக் கட்டையி னால், பெயர்ந்த - அஞ்சிப்போன, நெடு நல் யானை - உயர்ந்த நல்ல யானையானது, மீன் படு சுடர் ஒளி - விண்மீன் வீழ்வதனால் உண்டாகிய மிக்க ஒளியை, வெரூஉம் - அஞ்சுகின்ற, வான் தோய் வெற்பன் - வானத்தை அளாவிய மலையையுடைய தலைவன், மணவா ஊங்கு - பொருந்துதற்கு முன்பு, நல்ல என்னும் சொல்லை மன்னிய - இவை நல்லன என்று கூறப்படும் சொற்களை அடைந்தன.

(முடிபு.) தோள், வெற்பன் மணவாவூங்கு நல்லவென்னும் சொல்லை மன்னிய.

(கருத்து.) தலைவன் வரையாது வந்தொழுகுதலின் நினக்குத் துன்புண்டாகின்றது.

(வி - ரை.) தலைவியின் வருத்தத்தையும் துயிலாது அழும் இயல்பையும் மெலிவையும் இதன் வாயிலாகத் தோழி தலைவன் அறியவைத்தாள்.

'இத்தோள்கள் எப்பொழுதும் நல்லன' என்னும் சொல்லைப் பெறாமல், 'முன்பு நல்லனவாக இருந்தன' என்னும் சொல்லைப் பெற்றன; அதற்குக்காரணம் தலைவி துயருழந்து அழுதலால் மெலிந்து போனமையேயென்றாள்.

முன்பு நல்லவென்னும் சொல்லை மன்னிய வென்றதனால் அங்ஙனம் கூறுவார் சிலருளரென்பதும், தலைவியின் மெலிவு புறத் தார்க்குப் புலனாயிற்றென்பதும் போதரும். அதுகேட்ட தலைவன் அம்மெலிவின் காரணத்தை ஆராயப் புகுந்து வரைந்து கோடல் இதன் பயன்.

யானை தீயைக் கண்டு அஞ்சுமாதலின் ஏனல் காக்கும் சேணோன் தினையையுண்ண வாராதபடி ஞெகிழியை மூட்டினான். சேணோன்: குறுந். கஅ0 - ஆம் செய்யுளின் விசேட வுரையைப் பார்க்க.

ஒருமுறை ஒருபொருளால் அச்சமுற்ற ஒருவர் அப்பொருளைப் போன்ற வேறொன்றைக் கண்டாலும் அஞ்சுதல் இயல்பு; 'கொள்ளிக் கட்டையால் அடிபட்ட பூனை மின்மினிப் பூச்சிக்குப் பயந்தது போல' என்பது ஒரு பழமொழி.

சேணோனது ஞெகிழிக்குப் பயந்த யானை, வீழும் விண்மீனைக் கண்டு அஞ்சும் இச்செய்தி,

"பெருவிற் பகழிக் குறவர்கைச் செந்தீ
வெருவிப் புனந்துறந்த வேழம் - இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சும் வேங்கடமே மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று" (திவ். முதற்றிரு. 40)

என்பதிலும் காணப்படுகின்றது.

## ஒப்புமைப் பகுதி

1. தலைவி துயிலாமை: குறுந். ௬: 4, ஒப்பு; நற். ௩௨௭: 2. கண்பாடின்மை: குறுந். ௫: 5, ஒப்பு.

2. பணையெழில் ஞெகிழ்தோள்: "வேய்மருள் பணைத்தோ ணெகிழ" (அகநா. ௧: 8.)

1-2. தலைவன்பிரிவால் தலைவி அழுதல்: குறுந். அ௨: 2, ஒப்பு.

தலைவி துஞ்சாமையும் அழுதலும்: குறுந். ௧௧: 2, ஒப்பு.

கண்ணும் தோளும் அழகழிதல்: குறுந். ௩௭௭: 1-2, ௩அ௧: 1-3.

6. நெடுநல்யானை: குறுந். ௭௭: 4; புறநா. ௫௭: 11, ௭௨: 4.

ஞெகிழியால் யானையை அச்சுறுத்தல்: கலி. ௫௨: 13-4.

5-6. சேணோன் ஞெகிழி: குறுந். ௧௫௦: 1, ஒப்பு.

யானை தினையை மேய்தல்: குறுந். ௩௧௪: 1-6; அகநா. ௭௩: 14-5.

6-7. ஞெகிழிக்கு விண்மீன்: குறுந். ௧௫௦: 1-2; நற். ௩௧௩: 4-7.

5-7. ஒரு பொருளால் உண்டாகிய அச்சம் அப்பொருளைப் போன்ற வேறு பொருளாலும் உண்டாதல்: பெரும்பாண்: 284-8; நற். ௧அ௯: 7-10, ௨௧௧: 4-8; பெருங். ௧. 37: 252-4.

8. நற். ௨௧௧: 9.

மு. குறுந். ௨௨௬. (௩௫௭)

## தோழி கூற்று

[தலைவனது பிரிவின்கண் வருந்திய தலைவியை நோக்கி, "இதோ கார்ப்பருவம் வந்தது; அதனைத் தெரிவிக்கும் முல்லைக்கொடிகளும் அரும்பின; இனி அவர் வருவர்" என்று தோழி கூறியது.]

கரு௮. வீங்கிழை நெகிழ * விம்மி யீங்கே
எறிகட் † பேதுற லாய்கோ டிட்டுச்
சுவர்வாய் பற்று நின் படர்சே ணீங்க
வருவே மென்ற பருவ முதுக்காண்
தனியோ ரிரங்கும் பனிகூர் மாலைப்
பல்லான் ¶ கோவலர் கண்ணிச்
$ சொல்லுப வன்ன முல்லைமென் முகையே.

எ - து. தலைமகன்பிரிவிடைக் கிழத்தியைத் தோழி வற்புறுத்தியது.

கோற்றன்.

(ப - ரை.) வீங்கு இழை நெகிழ - செறிந்திருந்த அணிகலன்கள் நெகிழும்படி, விம்மி - அழுது, ஈங்கு - இவ்வாறு, எறி கண் பேதுறல் - நீர்த்துளிகளை வெளிவிடும் கண்ணோடு மயங்கற்க; ஆய் கோடு இட்டு - ஆராய்கின்ற கோடுகளைக் கிழித்து, சுவர்வாய் பற்றும் - சுவரினிடத்தைப் பற்றி நிற்கும், நின் படர் - நினது துன்பம், சேண் நீங்க வருவேம் - நெடுந்தூரம் போகும்படி மீண்டு வருவேம், என்ற - என்று தலைவர் கூறிய, பருவம் உதுக்காண் - பருவமானது இது பார்; முல்லை மெல் முகை - முல்லையினது மெல்லிய அரும்புகள், தனியோர் இரங்கும் பனி கூர் மாலை - தலைவரைப் பிரிந்த தனிமையையுடையோர் வருந்துதற்குக் காரணமாகிய குளிர்ச்சி மிக்க மாலைக்காலத்தில், பல் ஆன் கோவலர் - பல பசுக்களையுடைய இடையர்களது, கண்ணி - மாலையிடத்தே இருந்து, சொல்லுப அன்ன இப்பருவத்தைச் சொல்லுவனவற்றைப் போன்றன.

(முடிபு.) பேதுறல்; நின் படர் நீங்க வருவேமென்ற பருவம் உதுக்காண்; முல்லைமென்முகை சொல்லுபவன்ன.

---

(பி - ம்.) * விம்ம. † பேதுறல் யாங்கோடிட்டு, பேதுறவாய் ‡ வாயபற்று. ¶ கோவலர்க். $ சொல்லுவ, சொல்லு.

(கருத்து.) தலைவர் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்ததாதலின் அவர் விரைவில் வருவர்.

(வி - ரை.) பேதுற ஆய் கோடிட்டென்னும் பாடத்திற்குக் கண் மயங்கும்படி ஆராயும் கோடுகளை இட்டெனப் பொருள் கொள்க. தலைவர் வரும் நாளைச் சுவரிற் கோடிட்டுக் கணக்குப்பார்த்தல் மகளிர் இயல்பு;

" வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல் " (குறள், 1261.)

மாலையில் கோவலர் தம் வீட்டிற்குத் திரும்பி வருகையில் முல்லையைக் கண்ணியாகக் கட்டி அணிந்து வந்தனர் (குறுந். ௨௨௧: 4-5.)

## ஒப்புமைப் பகுதி

1. இழைநெகிழ்தல்: குறுந். ௧௮௮: 3, ஒப்பு.

2-3. மகளிர் சுவரிற்கோடிட்டு நாட்கணக்குப் பார்த்தல்: "நாளிழை நெடுஞ்சுவர் நோக்கி நோயுழந், தாழல் வாழி தோழி", "சேணுறை புலம்பி னுண்முறை யிழைத்த, திண்சுவர் நோக்கி நினைந்து" (அகநா. ௬௧: 4-5, ௨௮௯: 9-10); "மெல்விரலின், நாள்வைத்து நங் குற்ற மெண்ணுங்கொல்" (நாலடி. 394.)

4. உதுக்காண்: குறுந். ௮௧: 4, ஒப்பு, ௧௯௧: 1, ஒப்பு.

6-7. முல்லை மலர்ந்து கார்காலத்தைத் தெரிவித்தல்: குறுந். ௧௨௬: 3-5, ஒப்பு. (௩௫௮)

---

## தோழி கூற்று

[வாயில் பெறாத தலைமகன் மைந்தனும் ஆற்றாமையும் வாயிலாகத் தானே புக்குப் பாயலிற் புதல்வனைத் தழுவிக்கொண்ட காலத்தில் தலைவி ஊடல்தணிந்ததைத் தோழி பாணனுக்குக் கூறியது.]

௩௫௯. கண்டிசிற் பாண பண்புடைத் தம்ம
மாலை விரிந்த பசுவெண் ணிலவிற்
குறுங்காற் கட்டி னறும்பூஞ் சேக்கைப்

பள்ளி யானையி னுயிர்த்தன னசையிற்
புதல்வற் றழீஇயினன் விறலவன்
புதல்வன் றாயவன் புறங்கவைஇ யினளே.

எ - து. பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் வாயில்வேண்டிப் பெறாது தானேபுக்குக் கூடியது கண்டு தோழி பாணற்குச் சொல்லியது.

பேயன்.

(ப - ரை.) பாண—, விறலவன் - வெற்றியையுடைய தலைவன், மாலை விரிந்த பசு வெள் நிலவில் - மாலைக்காலத்திலே விரிந்த இளைய வெள்ளிய நிலாவொளியில், குறு கால் கட்டில் நறு பூ சேக்கை - குறிய கால்களையுடைய கட்டிலினிடத்தேயுள்ள நறிய மலர் பரப்பிய படுக்கையில், பள்ளி யானையின் உயிர்த்தனன் - படுத்தலையுடைய யானையைப்போலப் பெருமூச்சு விட்டானாகி, நசையின் - விருப்பத்தினால், புதல்வன் தழீஇயினன் - தன் பிள்ளையைத் தழுவினான்; புதல்வன் தாய் - அப்பிள்ளையின் தாயாகிய தலைவி, அவன் புறம் கவைஇயினள் - அத்தலைவனது புறத்தைத் தழுவினாள்; கண்டிசின் - இதனைப் பார்ப்பாயாக; பண்பு உடைத்து - இச்செயல் அழகையுடையது!

(முடிபு.) பாண, விறலவன் புதல்வற்றழீஇயினன்; தாய் அவன் புறங்கவைஇயினள்; கண்டிசின்; பண்புடைத்து!

(கருத்து.) தலைவி புலவி தணிந்தாள்.

(வி - ரை.) பாணன் வாயிலாகப் புக்கவிடத்து மறுத்த தலைவி, தலைவனே எதிர்ப்பட்டுப் பாயலிற் படுத்துப் புதல்வனைத் தழுவிய காலத்தில் தான் புலவி தீர்ந்து சென்று அவனைத் தழுவினாள்; இக் கருத்தை இச்செய்யுளின் ஆசிரியர்,

"புதல்வற் கவைஇயினன் றந்தை மென்மொழிப்
புதல்வன் றாயோ விருவருங் கவைஇயினள்
இனிது மன்றவவர் கிடக்கை
நனியிரும் பரப்பினிவ் வுலகுட னுறுமே" (ஐங். சா0க)

எனப் பிறிதோரிடத்தும் அமைத்தனர்.

(பா - ம்.) * னுயிரா வசைஇப்.

கண்டிசின்: சின், முன்னிலையசை. பண்பு - கற்புக் குண மெனலுமாம்; தலைவனது பிழையை மறந்து புலவி நீங்கி அவனைத் தழுவிய இச்செயல் கற்புப்பண்பை உடையதெனக்கொள்க. அம்ம: வியப்பைப் புலப்படுத்தியது. பசு வெண்ணிலவு: பசுமை, இளமை யிற் சென்றது.

## மேற்கோளாட்சி

மு. தலைவியின் மாண்புகளை அகம்புகல் மரபின் வாயில்கள் தம்முட் கூறியது (தொல். கற்பு. 11, இளம்.)

## ஒப்புமைப் பகுதி

2. பசுவெண்ணிலவு: குறுந். ௧௨௯: 4, ஒப்பு; அகநா ௫௭: 11.

3. கட்டிலும் சேக்கையும்: நெடுநல். 115-35; அகநா. ௯௩: 13-5.

4. தலைவன் யானையைப்போல உயிர்த்தல்: குறுந். ௧௪௨: 4, ஒப்பு.

5. தலைவன் புதல்வனைத் தழுவுதல்: "முதல்வன் பெரும்பெயர் முறையுளிப் பெற்ற, புதல்வற் புல்லிப் பொய்த்துயி றுஞ்சும்" (கலி. ௭௫: 24-5.)

6. புதல்வன்தாய்: குறுந். ௮: 6, ஒப்பு.

மு. ஐங். * ௪௦௨. (௩௫௯)

---

## தலைவி கூற்று

[தாய் வெறியெடுக்கவெண்ணியதைக் கூறி அஞ்சிய தோழிக்கு, "தலைவன் இங்கே வாராதொழியின் நன்றாம்; அதனால் துன்பம் உண்டாயினும் பின் இனிதாக முடியும்" என்று தலைவி கூறியது.]

௩௬௦. வெறியென வுணர்ந்த வேல னோய்மருந்
தறியா னாகுத லன்னை காணிய

---

* பேயனார் பாட்டு.

அரும்பட ரெவ்வ மின்றுநா முழப்பினும்
வாரற்க தில்ல தோழி சாரற்
பிடிக்கை யன்ன பெருங்குர லேனல்
உண்கிளி கடியுங் கொடிச்சிகைக் குளிரே
சிலம்பிற் சிலம்புஞ் சோலை
இலங்குமலை நாட னிரவி னானே.

எ - து. தலைமகன் சிறைப்புறத்தானாக வெறியஞ்சிய தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைவி சொல்லியது.

மதுரை ஈழத்துப் பூதன் தேவன்.

(ப - ரை.) *தோழி—, அரு படர் எவ்வம் - பொறுத்தற்கரிய நினைவாலுண்டாகும் துன்பத்தை, இன்று நாம் உழப்பினும் - இன்று நாம் அடைந்தாலும், வெறி என உணர்ந்த வேலன் - எனது நோயைத் தீர்க்கும்வழி வெறியாடுதலென்று தெளிந்த வேலன், நோய் மருந்து அறியான் ஆகுதல் - அந்நோயைத் தீர்ப்பதற்குரிய பரிகாரத்தை அறியாதவன் ஆதலை, அன்னை காணிய - நம் தாய் காணும்பொருட்டு, சாரல் - மலைச்சாரலின்கண், பிடி கை அன்ன - பெண்யானையின் கையையொத்த, பெரு குரல் ஏனல் - பெரிய கதிர்க் கொத்திலுள்ள தினையை, உண் கிளி கடியும் - உண்ணுகின்ற கிளிகளை ஓட்டும், கொடிச்சி கை குளிர் - குறமகளின் கையிலுள்ள குளிரென்னும் கருவி, சிலம்பின் சிலம்பும் - சிலம்பைப் போல ஒலிக்கின்ற, சோலை இலங்கு மலை நாடன் - சோலைகள் விளங்கும் மலை நாடனாகிய தலைவன், இரவினான் - இராக்காலத்தே, வாரற்க - இங்கே வாராதொழிக ; தில் - இஃது எனது விருப்பம்.*

(முடிபு.) *தோழி, நாடன் இரவினன் வாரற்க.*

(கருத்து.) *தலைவன் ஈண்டு வாராதொழிக.*

(வி - ரை.) *தலைவன் இரவுக்குறி வந்தொழுகா நின்ற காலத்து ஆற்றின் ஏதமும் காவன்மிகுதியும் அஞ்சித் தலைவி வேறுபட்டாள் அவ்வேறுபாடு எற்றினான்ஆயிற்றென்பதைத் தாய் ஆராயப்புகுந்து வெறியாட்டெடுக்க எண்ணியதையறிந்து தலைவி கூறியது இது தலைவன் சிறைப்புறத்தானாதலின் தலைவியின் கருத்தை உணர்வான்.*

---

(பி - ம்.) * ஒண்கிளி.

“தலைவன் வாராமையால் என் நோய் மிகும்; வெறியாட்டெடுத்தவழியும், அந் நோய்மிகுதலை எண்ணித் தாய் வெறியாட்டு இதற்கு மருந்தன்றென்று அறிவாள்; அங்ஙனம் அவள் அறிதற்கு ஏதுவாதலின் தலைவன் வாராமை நமக்குத் துன்பத்தை இன்று தருவதாயினும், பின் நலம்பயக்கும்” என்று தலைவி கூறினாள்.

தில்ல : விழைவின்கண் வந்த தில்லென்னும் இடைச்சொல், ஈறு திரிந்தது.

சிலம்பிற்சிலம்பும் மலைப்பக்கங்களில் எதிரொலியுண்டாக்குமெனினும் அமையும்.

## மேற்கோளாட்சி

1. ‘மங்குல்ஞாயிறு - இருளைக் கெடுக்கும் ஞாயிறு; இதனை, நோய்மருந்தென்றாற் போலக் கொள்க’ (பரி. ௧௬ : 1, பரிமேல்.)

## ஒப்புமைப் பகுதி

1-2. வேலன் நோய்மருந்து அறியாமை: “தோறற மலலது நோய்க்கு மருந் தாகா, வேற்றுப்பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்தி” (குறுந். உ௬௬ : 3-4); “அறியா வேலற் றரீஇ யன்னை, வெறியயர் வியன்களம் பொலிய வேத்தி” (அகநா. உ௪உ : 10-11.)

3. அரும்படர் : அகநா. எஉ : 21.

4. வாரற்க தில்ல : குறுந். ௧௧அ : 8, ஒப்பு.

3-4. தலைவி வருந்தினாலும் தலைவன் வாராமை நன்று : “ஆய்மலர் மழைக்கண் டெண்பனி யுறைப்பவும், வேய்மருள் பணைத்தோள் விறலிழை நெகிழவும், அம்பன் மூதா ரரவ மாயினும்......வாரற்க தில்ல தோழி...... ஓங்குமலை நாடனின் னசையி னானே”, “மென்றோ ணெகிழ்ந்துநாம் வருந்தினு மின்றவர், வாரா ராயினோ நன்றுமற் றில்ல” (நற். அ௫ : 1-11, உ௫௫ : 6-7.)

5. தினைக்கதிர்க்குப் பிடியின் கை : குறுந். ௧௩அ : 3-4, ஒப்பு.

5-6. தினையைக் கிளி உண்ணுதல் : குறுந். ௧௬௬ : 1-2.

தினையிற் கிளிகடிதல் : குறுந். ௧௩அ : 4-5, ஒப்பு.

தலைவி தளிராற் கிளிகடிதல் ; குறுந். உ௬௧ : 1-2, ஒப்பு. (௬௬௦)

## தலைவி கூற்று

[வரைவுக்குரிய முயற்சிகள் நிகழாநிற்ப, "இதுகாறும் நீ தலைவன் பிரிவை நன்கு ஆற்றினை" என்று கூறிப் பாராட்டிய தோழியை நோக்கி, "அவர் மலையிலிருந்து வந்த காந்தளை வளர்த்து ஆற்றினேன்" என்று தலைவி கூறியது.]

௩௬௧. அம்ம வாழி தோழி யன்னைக்
குயர்நிலை யுலகமுஞ் சிறிதா * லவர்மலை
மாலைப் பெய்த மணங்கம ழுந்தியொடு
காலை வந்த † காந்தண் முழுமுதல்
‡ மெல்லிலை குழைய முயங்கலும்
இல்லுய்த்து ¶ நடுதலுங் கடியா தோளே.

எ - து. வரைவுமலிந்தவழித் தோழி "நன்காற்றினாய்" என்றாட்குக் கிழத்தி சொல்லியது.

கபிலர்.

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று கூறுவன் கேட்பாயாக: அவர் மலை - தலைவருடைய மலையிலே, மாலை பெய்த - மாலைக் காலத்திலே பெய்த மழையினால் உண்டாகிய, மணம் கமழ் உந்தியொடு - நறுமணம் கமழும் ஆற்றோடு, காலை வந்த காந்தள் முழு முதல் - காலையிலே இங்கே வந்த காந்தளினது, மெல் இலை குழைய முயங்கலும் - மெல்லிய இலையானது குழையும்படி தழுவுதலையும், இல் உய்த்து நடுதலும் - வீட்டிற் கொணர்ந்து அதன் கிழங்கை நான் நடுதலையும், கடியாதோள் - விலக்காதவளாகிய, அன்னைக்கு - தாய்க்கு, உயர் நிலை உலகமும் - உயர்ந்த நிலையாகிய தேவருலகும், சிறிது - கைம்மாறாகக் கருதுமிடத்துச் சிறிதாகும்.

(முடிபு.) தோழி, உந்தியொடு வந்த காந்தண் முழுமுதலை முயங்கலும் நடுதலும் கடியாதோளாகிய அன்னைக்கு உயர்நிலையுலகமும் சிறிது.

(கருத்து.) தலைவன் மலையிலிருந்து வந்த காந்தளைக் கொண்டு ஆற்றியிருந்தேன்.

---

(பி - ம்.) * லவர் நாட்டு. † முழுமுதற் காந்தள். ‡ மெல்விரல். ¶ விடுதலுங்.

(வி - ரை.) உயர்நிலை யுலகம் - உயர்ந்த நிலைமையையுடைய தேவருலகம் (மதுரைக். 471, ந.) சிறிதால்: ஆல், அசை. அவர்: நெஞ்சறிசுட்டு.

மாலையிலே பெய்த மழையினால் உண்டாகிய அருவியை மாலைப் பெய்த உந்தியென்றாள்; பெய்த உந்தியென்பது, "குண்டுசுனை பூத்த....கண்ணி" (முருகு. 199) என்பது போலச் செயப்படு பொருண்மேல் நின்றது.

காந்தள் முதலியவற்றின் மலர்களை மேற்கொண்டு வருதலின் மணங்கமழ் உந்தியாயிற்று. மலையில் மாலையிற்பெய்த மழையினால் உண்டாகிய அருவியால் பெயர்க்கப்பட்ட காந்தள் மறுநாட்காலையில் தலைவியின் ஊரருகே வந்தது. தம் தலைவரோடு தொடர்புடைய பொருள்களைத் தழுவுதலும் பாராட்டிப் போற்றுதலும் மகளிர் இயல்பு; அநுமான் இராமபிரானது ஆழியைக் கொடுத்தவுடன் சீதையின்பால் நிகழ்ந்தவற்றை,

"மோக்குமுலை வைத்துற முயங்குமொளிர் நன்னீர்
நீக்கிநிறை கண்ணிணை ததும்பநெடு நீள
நோக்குநுவ லக்கருது மொன்றுநுவல் கில்லாள்
மேக்குநிமிர் விம்மலள் விழுங்கலுறு கின்றாள்"
(உருக்காட்டு. 67)

எனக் கம்பர் கூறும் செய்யுளும், தலைவன் அளித்த கையுறையைத் தலைவி யேற்றமையைப் புலப்படுத்தும்,

"போயா னளித்தலுங் கைகுவித் தேற்றபின் போற்றியன்பாற்
சாயாத கொங்கையின் மேலணைத் தாடஞ்சை வாணன்வெற்பா
காயா மலரன்ன மேனிமெய் யாகநின் கையுறையை
நீயாக வல்லது மாந்தழை யாக நினைந்திலளே" (தஞ்சை. 129.)

என்னும் செய்யுளும் இங்கே அறிதற்குரியன.

பலகால் முயங்கினமையின் இலை குழைந்தது.

"தலைவனது மலையிலிருந்து ஆற்றினால் அடித்துக் கொணரப் பட்ட காந்தட்கிழங்கை நட்டு வளர்த்துப் போற்றி அதைக்காணும் போதெல்லாம் தலைவனைக் காண்பதாக நினைந்து ஆற்றினேன். அச் செயலை என்தாய் தடுத்திலள்" என்று தலைவி கூறினாள்.

## மேற்கோளாட்சி

2-6. அவன் தமர் உவத்தலென்னும் மெய்ப்பாடு வந்தது (தொல். மெய்ப். 22, பேர்.)

மு. தலைவனைப் பெற்றவழி மகிழ்ந்து தலைவி தோழிக்கு உரைத்தது (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. அம்மவாழி தோழி : குறுந். எஎ : 1, ஒப்பு.

1-2. தேவருலகத்தைப் பெறும்படி வாழ்த்துதல் : குறுந். அஉ : 1-2, ஒப்பு.

4. முழுமுதல் : குறுந். உகச : 5, உகூகூ : 5 ; முருகு. 307.

மு. ஒருவாறு ஒப்பு : குறுந். அஉ. (௩௬௧)

## தோழி கூற்று

[தலைவியின் நோய் முருகனால் வந்ததெனக் கருதித் தாய் வெறியாட்டெடுத்த விடத்துத் தோழி வெறியாடும் வேலனை நோக்கி, "தலைவியின் நோயைப் பரிகரிக்க எண்ணி இடும் இப்பலியை அந்நோய்க்குக் காரணமாகிய தலைவனது மார்பும் உண்ணுமோ?" என்று கூறும் வாயிலாக அறத்தொடு நின்றது.]

௩௬௨. முருகயர்ந்து வந்த முதுவாய் * வேல
சினவ லோம்புமதி † வினவுவ துடையேன்
பல்வே றுருவிற் சில்லவிழ் மடையொடு
சிறுமறி கொன்றிவ ணறுநுத னீவி
வணங்கினை கொடுத்தி யாயி னணங்கிய
விண்டோய் மாமலைச் சிலம்பன்
‡ ஒண்டா ரகலமு முண்ணுமோ பலியே.

எ - து. வெறிவிலக்கித் தோழி அறத்தொடு நின்றது.

¶ வேம்பற்றூர்க் கண்ணன் கூத்தன்.

(ப - ரை.) முருகு அயர்ந்து வந்த - முருகனை வழிபட்டு வந்த, முது வாய் வேல - அறிவு வாய்த்த வேலனே, சினவல் ஓம்புமதி - கோபித்தலைப் பாதுகாப்பாயாக ; வினவுவது உடையேன் - நின்னைக்

(பி - ம்) * வேலன். † வினவுதலுடையேன். ‡ தண்டாரகலமு. ¶ வேற்பற்றூர்க் கண்ணகன் கூத்தன்.

கேட்பது ஒன்று உடையேன் : பல்வேறு உருவின் - பலவாகிய வேறுபட்ட நிறத்தையுடைய, சில் அவிழ் மடையொடு - சில சோற்றையுடைய பலியோடு, சிறு மறி கொன்று - சிறிய ஆட்டுக் குட்டியைக் கொன்று, இவள் நறு நுதல் நீவி - இத்தலைவியினது நறிய நெற்றியைத் தடவி, வணங்கினை கொடுத்தியாயின் - முருகக் கடவுளை வணங்கிப் பலியாகக் கொடுப்பாயாயின், அணங்கிய - இவளைத் துன்புறுத்திய, விண்தோய் மா மலை சிலம்பன் - வானத்தை அளாவிய பெரிய மலைப்பக்கத்தையுடைய தலைவனது, ஒள் தார் அகலமும் - ஒள்ளிய மாலையை யணிந்த மார்பும், பலி உண்ணுமோ - நீ கொடுக்கும் பலியை உண்ணுமோ?

(முடிபு.) வேல, சினவல் ஓம்புமதி; வினவுவது உடையேன் : மறிகொன்று, நுதல் நீவிக் கொடுத்தியாயின் சிலம்பன்அகலமும் பலி உண்ணுமோ?

(கருத்து.) இவளுக்குற்ற நோய் ஒரு தலைவனால் வந்தது.

(வி - ரை.) முதுவாய் வேலன் - முதுமை வாய்ந்த வேலனென்னும் பொருந்தும். பலவகை நிறங்களையுடைய சோற்றை வேலன் முருகனுக்குப் பலியாக இட்டான். சிறுமறி யென்றது, இரங்கத்தக்க இளமையுடையதென்னும் நினைவிற்று.

நுதனீவியென்று பொதுப்படக் கூறினும் மறியின் உதிரம் கலந்த மண்ணால் நுதல் நீவுதல் மரபென்பது,

“ ......................வாணுதலின்
மன்றி லரிந்த மறியின் குருதியின் மண்ணுமள்ளிச்
சென்றொரு வேலர்கை தீண்டவென் செய்தது தீவினையே”
(அம்பிகா. 267)

என்னும் செய்யுளால் தெரியவருகிறது. அச்சம் நீக்குவதற்குத் தடவுதலும் உண்டு. சிலம்பன் : இடுகுறிமாத்திரையாய் நின்றது (சிற். 128, பேர்.)

இந்நோய் தலைவனது மார்பால் வந்தது; அதனையன்றிப் பிறிது மருந்தில்லை யென்பாள் ‘அகலமும் உண்ணுமோ பலியே’ என்றாள். அஃது உண்ணாதாதலின் இது செய்தும் பயனில்லையென்பது இதனாற் போந்தது.

இங்ஙனம் தோழி வெறிவிலக்கினமையின், தாய்க்கு ‘அச்சிலம்பன் யார்?’ என்னும் ஆராய்ச்சி பிறக்கும்; அது வரைதற்கு ஏதுவாகும்.

## மேற்கோளாட்சி

1. கண்டோர் கேட்பத் தலைவி கூறியது (தொல். செய். 197, பேர்.); செவிலி கேட்பத் தலைவி கூறியது (ஷை. ஷை. 196, ந.)

மு. வெறியாடுமிடத்து வேலற்குச் சொல்லுவாளாய்த் தோழி சொல்லியது (இறை. 16); வேலனொடு கூறுதற்கண் தோழி உசாவியது (தொல். களவு. 24, இளம்; பொருள். 13, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. முதுவாய் வேலன்: அகநா. ருஅஅ : 19.

3. சில்லவிழ் மடை: "புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி" (புறநா. ருசுo : 18.)

4. நுதல் நீவுதல்: குறிஞ்சிப். 182; நற். உஅ : 2, ருகசு : 6; கலி. உக : 6; அகநா. சக : 6, கசுசு : 9, உசo : 10; தமிழ்நெறி மேற். 96.

1-4. வேலன் சிறுமறி கொல்லல்: "சிறுகுள கருந்துபு தாய்முலை பெறுஅ, மறிகொலைப் படுத்தல் வேண்டி வெறிபுரி, ஏதில் வேலன்" (அகநா. உகஉ : 3-5.)

5-7. அணங்கிய அகலம்: "நாடன், மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல்" (அகநா. உஉ : 2-3.)

மு. "தண்ணென் சாயலிவ ளுண்ணோய் தணிய
எண்ணினை கொடுத்தி யாயின்
அண்ண லாகமு முண்ணுமோ பலியே"
(தமிழ்நெறி. மேற். 104);

"வண்டா ரிரும்பொழில் வல்லத்துத் தென்னற்கு மாறெதிர்ந்து
விண்டா ருடலின் மறியறுத் தூட்டி வெறியயர்ந்து
தண்டார் முருகற் றருகின்ற வேலநற் றண்சிலம்பன்
ஒண்டா ரகலமு முண்ணுங் கொலோநின் னுறுபலியே"
(பாண்டிக்.);

"கோல மறியின் குருதியாற் கொய்ம்மலரால்
வேல னயரும் வெறியாட்டுச்—சால
மடமார் மயின்முருக னன்றியே யண்ணல்
தடமார்பு முண்ணுமோ தான்." (களவித்தெளிவு

## தோழி கூற்று

[தலைவனாற் பிரிவுணர்த்தப்பட்ட தோழி, "இனியளாகிய தலைவியைப் பிரிந்து செல்லுதல் இன்னாமையைத் தருவது" என்று அவனுக்குக் கூறியது.]

௩௬௩. கண்ணி மருப்பி னண்ண னல்லேறு
செங்கோற் * பதவின் வார்குரல் கறிக்கும்
மடக்கண் வரையா நோக்கி † வெய்துற்றுப்
புல்லரை யுகாஅய் ‡ வரிநிழல் வதியும்
இன்னா வருஞ்சுர மிறத்தல்
இனிதோ பெரும வின்றுணைப் பிரிந்தே.

எ - து. பிரிவுணர்த்தப்பட்ட தோழி கிழவற்குச் சொல்லியது.

செல்லூர்க் கோற்றன்.

(ப - ரை.) பெரும—, இன் துணை பிரிந்து - இனிய துணைவியைப் பிரிந்து, கண்ணி மருப்பின் அண்ணல் நல் ஏறு - கண்ணியைப் போன்று வளைந்த கொம்பையுடைய தலைமையையுடைய நல்ல மலை எருது, செ கோல் பதவின் வார் குரல் கறிக்கும் - செவ்விய தண்டுகளையுடைய அறுகினது நீண்ட கொத்தைக் கடித்துத்தின்னும், மடம் கண் வரை ஆ நோக்கி - மடப்பம் பொருந்திய கண்ணையுடைய மலைப்பசுவைப் பார்த்து, வெய்துற்று - பெருமூச்சுவிட்டு, புல் அரை உகாஅய் வரி நிழல் வதியும் - புல்லிய அடியையுடைய உகாஅய் மரத்தினது புள்ளிகளையுடைய நிழலின்கண்ணே தங்குகின்ற, இன்னா அரு சுரம் இறத்தல் இனிதோ - இன்னாத கடத்தற்கரிய சுரத்தைக் கடத்தல் இனிமையையுடையதோ?

(முடிபு.) பெரும, துணைப்பிரிந்து சுரம் இறத்தல் இனிதோ?

(கருத்து.) தலைவியைப் பிரிந்து செல்லுதல் இன்னாது.

(வி - ரை.) கண்ணி - ஒருவகை மாலை. கண்ணி மருப்பு - மாலையை அணிந்த மருப்பெனலுமாம். பதவு - அறுகு. உகாய் மரத்தின் அடி, "புன்கா லுகாஅய்" (குறுந். ௨௭௪ : 1) என்று முன்னும் கூறப்பட்டது. தழைகளின் செறிவின்மையின் வரிநிழலை உடையதாயிற்று.

---

(பி - ம்.) * புதவின். † வெய்துற்றுப். ‡ வறுநிழல்.

## ஒப்புமைப் பகுதி

1. மடக்கண் : குறுந். கூச : 3 ; அகநா. உகூஅ : 6.

4. வரிநிழல் : சிறுபாண். 12.

5-6. ஒருவாறு ஒப்பு : குறுந். கஉச : 3-4. (கூகூகூ)

---

## இற்பரத்தை கூற்று

[வேறொரு பரத்தை தன்னைப் புறங்கூறினாளெனக் கேட்ட இற்பரத்தை அப்பரத்தைக்குப் பாங்காயினார் கேட்ப, "மகளிர் துணங்கையாடும் நாளும் மள்ளர் சேரிப்போர் செய்யும் நாளும் வந்தன; இப்பொழுது தலைவன் வலிய என்பால் அன்பு கொள்ளுதலை அறியலாம்" என்று கூறியது.]

கூகூச. அரிற்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்
வாளை நாளிரை பெறூஉ மூரன்
பொற்கோ * லவிர்தொடித் தற்கெழு தகுவி
எற்புறங் கூறு மென்ப தெற்றென
வணங்கிறைப் பணைத்தோ ளெல்வளை மகளிர்
துணங்கை நாளும் வந்தன † வவ்வரைக்
‡ கண்பொர மற்றதன் ¶ கண்ணவர்
$ மணங்கொளற் கிவரும் § மள்ளர் போரே.

எ - து. வேறொருபரத்தை தன்னைப் புறங்கூறினாளெனக் கேட்ட இற்பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது.

** ஔவையார்.

(ப - ரை.) அரில் பவர் பிரம்பின் - பிணக்கையுடைய கொடிப் பிரம்புகளைப்போன்ற, வரி புறம் நீர் நாய் - கோடுகள் பொருந்திய புறத்தையுடைய நீர்நாயானது, வாளை நாள் இரை பெறூஉம் ஊரன் - வாளைமீனாகிய நாட்காலை உணவைப் பெறுகின்ற ஊருக்குத் தலைவ

---

(பி - ம்.) * லவிர் தொடிதற்கெழு. † வவரைக். ‡ கண்போன். ¶ கணவர், களவர். $ மண்கொணற், மண்கொளற். § மன்னர். ** அவ்வையார்.

னுடைய, பொன் கோல் அவிர் தொடி - பொன்னாலாகிய திரட்சியை யுடைய விளங்குகின்ற வளையையணிந்த, தன் செழு தகுவி - தனக் குப் பொருந்திய தகுதியுடைய பரத்தை, என் புறம் கூறும் என்ப - என்னைப் புறங்கூறுவளென்று கூறுவர்; தெற்றென - அவள் கூறு வது உண்மையா அன்று என்பது விளங்கும்படி, வணங்கு இறை பணை தோள் எல் வளை மகளிர் - வளைந்த சந்தையுடைய மூங்கிலைப்போன்ற தோள்களில் விளக்கத்தையுடைய வளையையணிந்த மகளிர்க்குரிய, துணங்கை நாளும் வந்தன - துணங்கைக் கூத்தாடும் நாட்களும் வந் தன; அ வரை - அக்காலத்தில், கண் பொர - ஒருவர்கண் மற்றொரு வர் கண்ணோடு மாறுபடும்படி, அதன்கண் - அத்துணங்கைக் கூத்தி னிடத்து, அவர் மணம் கொளற்கு - அம்மகளிரது மணத்தைக் கொள் ளும்பொருட்டு, மள்ளர் போர் - மள்ளர்களுடைய சேரிப்போரானது, இவரும் - விரும்பிக்கொள்ளப்படும்.

(முடிபு.) ஊரன் தகுவி புறங்கூறுமென்ப; தெற்றென நாளும் வந்தன; அதன்கண் மள்ளர்போர் அவர் மணங்கொளற்கு இவரும்.

(கருத்து.) என்னைத் தலைவனே விரும்பி அடைந்தான்.

(வி - ரை.) சேரிப்பரத்தை யொருத்தி தன்னை, “இவள் தலை வனைப் புறம்போகாவாறு செய்தாள்” என்று புறங்கூறியதையறிந்த இற்பரத்தை, “தலைவனே வலியவந்து என்னை விரும்பினான். இப் பொழுது வரும் விழாவில் வீரர் தம் அன்புக்குரியாரோடு ஒன்றுபட்டு விளையாடுவர். அக்காலத்தில் அவன் வலிய என்பால் அன்புடைய னாதலை யாவரும் அறியலாகும்” என்று கூறினாள்.

பிரம்பின் தூற்றிலுள்ள நீர்நாயென்றலும் பொருந்தும்;

“வாளை மேய்ந்த வள்ளெயிற்று நீர்நாய்
முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்” (அகநா. ௬ : 18-9.)

பொற்கோலவிர்தொடி யென்றது, ‘தன்பாலுள்ள செல்வமிகுதி யால் என்னைப் புறங்கூறினாள் போலும்!’ என்னும் நினைவிற்று. தற் செழு; தன்னென்றது தலைவனை. தெற்றென - யான் தலைவனை அகப் படுத்தலின்றி அவன் தானே வலிய என்பாற்படுதல் விளங்கும்படி.

துணங்கை - மகளிர் விளையாட்டில் ஒன்று; இந்நூல் ௬௧ - ஆம் செய்யுளைப்பார்க்க. அத்துணங்கையில் தலைவன் தலைக்கை தருவான்.

விழாவில் துணங்கையும் மள்ளர் போரும் ஒருங்கே நிகழும் (குறுந். ௬௧; கலி. ௨௭ : 19-20, 24, ௬௦ : 13-4.)

## ஒப்புமைப் பகுதி

1. அரிற்பவர்ப் பிரம்பு : குறுந். * கக : 1.

1-2. நீர்நாய் வாளைநாளிரை பெறுதல் : "பொய்கைப் பள்ளிப் புலவுநாறு நீர்நாய், வாளை நாளிரை பெறூஉ மூர" (ஐங். கூ௯ : 1-2); "நாளிரை தரீஇய வெழுந்த நீர்நாய், வாளையொ டுழப்ப", "பொய்கை நீர்நாய்ப் புலவுநா றிரும்போத்து, வாளை நாளிரை தேரு மூர" (அகநா. ௬௬௬ : 4-5, ௬அ௬ : 1-2); "வாளை நீர்நாய் நாளிரை பெறூஉ" (புறநா. உஅ௯ : 2.)

3. கோல் அவிர்தொடி: குறுந். ௬௭௬ : 8, ஒப்பு.

தருவி : அகநா. க௬௬ : 13.

5. வணங்கிறைப் பணைத்தோள் : புறநா. ௬உ : 3.

பணைத்தோள் : குறுந். உ௬அ : 6, ஒப்பு.

5-6. மகளிர் துணங்கை : குறுந். ௬க : 2, ஒப்பு.

5-8. தலைவன் பரத்தையரோடு துணங்கையயர்தல் : நற். ௫0 : 1-3 ; கலி. ௬௬ : 17-8, ௭0 : 13-4, ௭௬ : 16-7 ; அகநா. க௭௬ : 15.

மு. அகநா. ௬௬௬. (௬௬௪)

---

## தோழி கூற்று

[“யான் வரையுமவ்வளவும் தலைவி ஆற்றுவளோ?” எனக் கேட்ட தலைவனை நோக்கித் தோழி, “இவள் ஆற்றுள்” என்பது படச் சொல்லியது.]

௬௬௫. கோடை ரிலங்குவளை நெகிழ நாளும்
பாடில கலிழ்ந்து பனியா ஞவே
துன்னரு நெடுவரைத் ததும்பிய வருவி
† தண்ணென் முரசி னிமிழிசை காட்டும்
மருங்கிற் கொண்ட பலவிற்
பெருங்க ‡ ஞடனீ நயந்தோள் கண்ணே.

எ - து. “யான் வரையுந்துணையும் ஆற்றவல்லளோ?” என் வினைய கிழவற்குத் தோழி சொல்லியது.

மதுரை நல்வெள்ளி.

---

* ஔவையார் பாட்டு. (பி - ம்.) † தண்ணென் முழவின். ‡ ஞடனீ, ஞடநின்.

(ப - ரை.) *துன் அரு நெடு வரை ததும்பிய அருவி - அணுகு தற்கரிய நெடிய மலைப்பக்கத்திலே ஒலித்த அருவியானது, தண்ணென் முரசின் - தண்ணென்ற ஒலியையுடைய முரசைப்போல, இமிழ் இசை காட்டும் - ஒலிக்கின்ற ஆரவாரத்தை வெளிப்படுத்தும், மருங்கில் கொண்ட பலவின் - பக்கத்திற்கொண்ட பலாமரங்களையுடைய, பெரு கல் நாட - பெரிய மலையையுடைய நாடனே, நீ நயந் தோள் கண் - நின்னால் விரும்பப்பட்ட தலைவியின் கண்கள், கோடு ஈர் இலங்கு வளை நெகிழ - சங்குகளை அறுத்துச் செய்த விளங்குகின்ற வளைகள் நெகிழாநிற்ப, நாளும் - நாள்தோறும், பாடு இல - துயிலுதல் இல்லாதனவாகி, கலிழ்ந்து - கலங்கி, பனி ஆனு - நீர்த் துளியை நீங்கா.*

(முடிபு.) *நாட, நீ நயந்தோள்கண் பாடில; கலிழ்ந்து பனி ஆனு.*

(கருத்து.) *இவள் நின்னைப் பிரிந்து ஆற்றியிராள்.*

(வி - ரை.) *வரைவிடை வைத்துப் பிரியக் கருதிய தலைவன், "என் பிரிவைத் தலைவி ஆற்றுவளோ?" என்று கேட்பக் கூறியது இது. வளை நெகிழவென்றது இவள் உடல் மெலிவாளென்றபடி. கண் பாடிலவாகிக் கலிழுமென்றமையின் துயிலாமையும் துயர்மிகுதியும் உடையளாவளென்றபடி.*

*ஏகாரங்கள், அசைநிலை.*

## மேற்கோளாட்சி

மு. *யான் வரையுந்துணையும் ஆற்றுவளோ வென்ற தலைமகற்குத் தோழி ஆற்றுளென்று கூறியது* (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. கோடீரிலங்குவளை : குறுந். *௧௧* : 1, ஒப்பு.

வளைநெகிழ்தல் : குறுந். *௧௧* : 1, ஒப்பு.

3-4. அருவிக்கு முரசு : "*முரசருவி யார்க்கு மலைநாடற்கு*" (கைந்நிலை, 5.)

3-4, பி - ம். அருவிக்கு முழவு : குறுந். *௭௮* : 1-2, ஒப்பு; நற். *௧௭௩* : 9, *௩௪௭* : 6-7; அகநா. *௨௫* : 21-2, *௧௩௮* : 8-9, *௧௭௨* : 2-4, *௩௧௮*: 5-6.

2-6. கண் பாடில : குறுந். *௫* : 5, ஒப்பு.

தலைவி துயிலாமை : குறுந். சு : 4, ஒப்பு.

தலைவி அழுதல் : குறுந். அஉ : 2, ஒப்பு.

துயிலாமையும் கலிழ்தலும் : குறுந். கக : 2, ஒப்பு.

கண் பாடில, பனியாறு : குறுந். நடுஎ : 1-2.

கண்பனி : குறுந். நுசஅ : 4, ஒப்பு ; ஐங். உ0அ : 5 ; அகநா. நடுக : 1. (நடுரு)

---

## தோழி கூற்று

[காப்பு மிக்கதனால் வேறுபட்ட தலைவியின் நிலைகண்டு, "இஃது எக்காரணத்தால் உண்டாயது?" என்று வினவிய செவிலிக்குத் தோழி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நின்றது.]

நடுசு. *பால்வரைந் தமைத்த லல்ல தவர்வயிற்
சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ
வெறியாள் கூறவு மமையா ளதன்றலைப்
பைங்கண் மாச்சுனைப் பல்பிணி யவிழ்ந்த
வள்ளிதழ் நீல நோக்கி யுள்ளகை
†பழுத கண்ண ‡ ளாகிப்
பழுதன் றம்மவிவ் வாயிழை துணிவே.

எ - து. காவல்மிகுதிக்கண் வேறுபட்ட தலைமகளது வேறுபாடு கண்டு, "இவ்வேறுபாடு எற்றினானாயது?" என்று செவிலி வினவத் தோழி கூறியது.

பேரிசாத்தன்.

(ப - ரை.) இ ஆய் இழை - இந்த ஆய்ந்த அணிகலன்களை அணிந்த தலைவி, வெறியாள் கூறவும் அமையாள் - வெறியாடும் மகள் இந்நோய் முருகனாலாயது என்று சொல்லவும் அமைதிபெறுளாய், அதன் தலை - அதன்மேலும், பசு கண் மா சுனை பல் பிணி அவிழ்ந்த - பசிய இடத்தையுடைய கரிய சுனையினிடத்தே பல கட்டு அவிழ்ந்த, வள் இதழ் நீலம் நோக்கி - வளவிய இதழையுடைய நீலமலரைப் பார்த்து, உள் அகைபு - நெஞ்சுள்ளே வருந்தி, அழுத கண்ணள்

(பி - ம்.) * பால்வரைத். † பொழுகு. ‡ ளாகிய. ¶ பழுதாலம்ம.

ஆகி - அழுத கண்களையுடையவளாகி, துணிவு - துணிந்தது, பழுது அன்று - குற்றமற்றது ; பால் வரைந்து அமைத்தல் அல்லது - பழ வினையினாலே வரையறுத்துப் பொருத்தப்பட்டதன்றி, அவர் வயின் - அத்தலைவர் திறத்தில், சால்பு அளந்து அறிதற்கு - தகுதியை வரையறுத்து அறிவதற்கு, யாம் யார் - யாம் எத்தகுதியை உடையேம்?

(முடிபு.) இவ்வாயிழை அமையாள், நீலம் நோக்கி அழுத கண்ணளாகித் துணிவு பழுதன்று.

(கருத்து.) தலைவிக்கு நீலப்பூவைத் தந்து நட்புச்செய்த அன்பன் ஒருவன் உளன்.

(வி - ரை.) பால்வரைந்தமைத்தலினாலே கூடினரென்பது அறத்தொடு நிற்கும் வகையுள் ஒன்றாகிய தலைப்பாடு ; 'தலைப்பாடு - இருவரும் தாமே எதிர்ப்பட்டார், யான் அறிந்திலேனெனக் கூறுதல்' (தோல். பொருள். 13, ந.) ; சால்பளந்தறிதற்கு யாம் யாரென்றது தலைவனை ஏத்தல்.

நீலநோக்கி அழுதனளென்றது அத்தகையதொரு நீலப்பூவைத் தனக்குத் தந்த தலைவனை நினைந்ததைக் குறித்தபடி ; இஃது ஏதிடு. ஆகியென்ற எச்சம் துணிவென்னும் தொழிற்பெயரின் முதனிலையோடு முடிந்தது. அமையாள் நோக்கி ஆகித் துணிவு பழுதன்றென வினைமுடிவு செய்க.

ஓ, அம்ம, ஏ : அசைநிலைகள்.

## ஒப்புமைப் பகுதி

1-2. தலைவன் சால்பு அறியப்படாமை : குறுந். ௯௭௭ : 4.

3. அதன்றலை : குறுந். ௯௦௨ : 2.

4-5. பிணியவிழ்ந்த பூ : குறுந். ௨௨௦ : 4-5. (௯௬௬)

---

## தோழி கூற்று

[தலைவன் வரைந்து கொள்வானென்பதைத் தலைவிக்கு உணர்த்திய தோழி அவள் உவகை மீதூராமலிருக்கும் பொருட்டு, "தலைவர் தண்ணளி செய்யாராயினும், அவர் மலையைக் கண்டு ஆற்றியிருப்பாயாக" என்று கூறியது.]

நஅ௲எ. கொடியோர் நல்கா ராயினும் யாழநின்
தொடிவிளங் கிறைய தோள்கவின் † பெறீஇயர்
உவக்காண் டோழி யவ்வந் திசினே
தொய்யன் மாமழை ‡ தொடங்கலி னவர்நாட்டுப்
பூச ¶ லாயம் புகன்றிழி $ யருவியின்
மண்ணுறு மணியிற் றோன்றும்
தண்ணறுந் துறுக லோங்கிய மலையே.

எ - து. (1) வரைவுணர்த்திய தோழி தலைமகட்குக் கழிபுவகை மீதூராமை உணர்த்தியது.

(2) வரைவு நீட்டித்தவிடத்து ஆற்றாளாகிய தலைமகளைத் தோழி, ஆற்றும் வகையால் ஆற்றுவித்ததூஉமாம்.

மதுரை மருதன் இளநாகன்.

(ப - ரை.) *தோழி—, தொய்யல் மா மழை - நெகிழ்ச்சியை யுடைய பெரிய மழை, தொடங்கலின் - பெய்யத் தொடங்குதலினால், அவர் நாட்டு - அத்தலைவருடைய நாட்டிலுள்ள, பூசல் ஆயம் - ஆரவாரத்தையுடைய மகளிர்திரள், புகன்று இழி அருவியின் - விரும்பி நீராடும்பொருட்டுப் புகுகின்ற அருவியினால், மண்ணுறு மணியின் தோன்றும்-கழுவப்பட்ட நீலமணியைப் போலத் தோன்றுகின்ற, தண் நறு துறு கல் - தண்ணிய நறிய குண்டுக் கற்கள், ஓங்கிய மலை - உயர்ந்த மலையை, கொடியோர் நல்காராயினும் - கொடுமையையுடைய தலைவர் தண்ணளி செய்யாராயினும், நின் தொடி விளங்கு இறைய தோள் கவின் பெறீஇயர் - வளைகள் விளங்கும் சந்துகளையுடைய நின் தோள்கள் அழகு பெறும் வண்ணம், அவ்வந்திசின் - அங்கே வந்தாயாகி, உவக்காண் - பார்ப்பாயாக.*

(முடிபு.) *தோழி, கொடியோர் நல்காராயினும் நின் தோள் கவின் பெறீஇயர், மலையை அவ்வந்திசின் ; உவக்காண்.*

(கருத்து.) *நீ தலைவரது மலையைக் கண்டு ஆற்றியிருப்பாயாக.*

(வி - ரை.) *கொடியோர் நல்காராயினும் என்றது,* “ வரை

(பி - ம்.) * தொடிவழங். † பெறீஇ, பெறீஇய. ‡ துடங்கலின். ¶ லாய. $ யருவி.

வாரோ? வரையாரோ?" என்னும் ஐயத்தை நிகழ்த்திக் கழியுவகை மீதூராமற் செய்தது. யாழ: அசைநிலை. தொடி வழங்கிறைய வென்னும் பாடத்திற்கு மெலிவினால் தொடிகளை நழுவவிடும் சந்துகளையுடைய வெனப் பொருள் கொள்க; "தொடிநிலை நெகிழச் சாஅய்" (தொல். களவு. 20, ந. மேற்.) என்று வருதல் காண்க.

தம் தலைவரது மலையைக் கண்டு களித்தல் மகளிர் இயல்பு. உவக்காணென்பது ஒட்டிநின்ற இடைச்சொலென்பர் பரிமேலழகர் (குறள், 1185, உரை.) வந்திசின்: சின், முன்னிலை யசைச்சொல்.

தொய்யல் மாமழை - நிலத்தை நன்முக நனைக்கும் பெரிய மழை யெனலும் ஆம் (மலைபடு. 365, ந.) துடங்கலென்னும் பாடத்திற்குப் பொருந்தலெனப் பொருள் கொள்க; இச்சொல் துடக்கலென்பதன் தன்வினை. அருவியினாற் கழுவப்பட்ட மலை மண்ணுறு மணியிற் றோன்றியது.

அருவி மண்ணுறுமணியிற் றோன்று மென்ற பாடத்திற்கு, அருவியானது கழுவப்பட்ட பளிங்கைப் போலத் தோன்றுமெனப் பொருள் கொள்க.

இரண்டாவது கருத்து: வரைவு நீட்டித்தவிடத்துத் தோழி, "அவர் தண்ணளி செய்யாராயினும் அவரது மலையை நோக்கி ஆற்று வாயாக" என்று கூறி ஆற்றுவித்தது. இக்கருத்து, சிறப்புடைய தாகத் தோற்றுகின்றது.

## ஒப்புமைப் பகுதி

1. தலைவனைக் கொடியனென்றல்: குறுந். உசு : 8, ஒப்பு.

2. உவக்காண்: நற். உ௬௭ : 6, உ௪உ : 6; ஐங்: உ0சு : 1, உ0எ : 2; அகநா. ௪ : 13; குறள், 1185.

5-6, பி-ம். அருவிக்குப்பளிங்கு: குறிஞ்சிப். 57; அகநா. ௯சு : 2; புறநா. க௬எ : 11, க௫0 : 27.

6-7. மலைக்கு மணி: (குறுந். உ௪0 : 7); "மணியிற் றோன்றும், மம்மலை கிழவோன்" (நற். கஎ௩ : 6-7); "மணிநிற மால்வரை", "மணிநிறங் கொண்ட மாமலை வெற்பில்" (ஐங். உ0அ : 4, உஉ௪ : 2); "மணிநிறங் கொண்ட மலை", "மணிபுரை மாமலை" (பரி. திரட்டு, க : 9, 74.)

2-7. தலைவி தலைவனது மலையைப் பார்த்து உவத்தல்: குறுந். உ௯0 : 6-7, ஒப்பு. (௩௯௭)

---

## தலைவி கூற்று

[வரைவுக்குரிய முயற்சிகள் மிகுதியாக நிகழ்தலைத் தோழியால் உணர்ந்த தலைவி, "இதுகாறும் மாமையை இழந்து துன்புற்றேன்; இனி இடையீடின்றித் தலைவனோடு இன்புறுவேன்" என்று கூறியது.]

௩௯அ. மெல்லிய லோயே மெல்லிய லோயே
நன்னா ணீத்த பழிதீர் மாமை
வன்பி னாற்றுத லல்லது செப்பிற்
சொல்ல கிற்றா மெல்லிய லோயே
சிறியரும் பெரியரும் வாழு மூர்க்கே
நாளிடைப் படாஅ நளிநீர் நீத்தத்
திண்கரைப் பெருமரம் போலத்
தீதி னிலைமை முயங்குகம் பலவே.

எ - து. வரைவுமலிந்த தோழிக்குக் கிழத்தி கூறியது.

நக்கீரர்.

(ப - ரை.) மெல் இயலோயே - மெல்லிய இயல்பையுடையாய், மெல் இயலோயே மெல் இயலோயே—, நல் நாள் நீத்த பழி தீர் மாமை - நல்ல நாளிலே நம்மை நீங்கிய குற்றமற்ற மாமையின் இயல்பை, வன்பின் ஆற்றுதல் அல்லது - நம் வலிய இயல்பினாற் பொறுத்திருத்தலையன்றி, செப்பின்-அங்ஙனம் நீங்குதற்கு ஏதுவாகிய துன்பத்தைச் சொற்களால், சொல்ல கிற்றாம் - சொல்லுதற்கு ஆற்றல் இல்லேம்; சிறியரும் பெரியரும் வாழும் ஊர்க்கு - சிறியோரும் பெரியோரும் வாழ்கின்ற ஊரில், நாள் இடை படா நளி நீர் நீத்தம் - ஒருநாளேனும் இடையீடுபடாத செறிந்த நீரையுடைய வெள்ளத்தினது, திண் கரை பெரு மரம் போல - திண்ணிய கரையிலேயுள்ள பெரிய மரத்தைப்போல, தீது இல் நிலைமை - தீங்கில்லாதநிலையிலிருந்து, பல முயங்குகம் - பலமுறை தலைவரைத் தழுவுவேமாக;

(பி - ம்.) * வனப்பி.

(முடிபு.) மெல்லியலோயே, மாமை சொல்லகிற்றும்; ஊர்க்கு முயங்குகம்.

(கருத்து.) இனி யாதொரு தீங்குமின்றித் தலைவரோடு கூடியிருப்பேன்.

(வி - ரை.) நல் நாளென்றது, தலைவனைக் கண்டு அளவளாவிய நாளை. மீண்டும் நம்பால் வந்தடையும் தன்மையதென்பது கருதிப் பழிதீர்மாமை யென்றாள். மாமை: ஆகுபெயர்; மாமையின் இயல் புக்காயிற்று. வன்பு - உள்ளத்தின் திண்மை.

வெள்ளத்தின் கரையிலுள்ள மரம் நீரால் குறைவின்றி வளம் பெறுவதுபோல, தலைவனோடு இடையீடின்றி வாழும் வாழ்க்கையால் யான் இழந்த மாமையைப்பெற்று விளங்குவேனென்று உவமையை விரித்துக்கொள்க.

தீதில் நிலைமை - அலர், மாமையை இழத்தல், ஆற்றாறஞ்சுதல் முதலிய தீங்குகள் இல்லாத நிலைமை.

## ஒப்புமைப் பகுதி

2. தலைவன் பிரிவினால் மாமை அழிதல்: குறுந். ௨௭ : 4-5, ஒப்பு. 6-7. குறுந். ௩அஅ : 1-2. (௩௬௮)

---

## தோழி கூற்று

[தலைவியை நோக்கி, "தலைவனுடன் செல்வாயாக" என்று தோழி கூறியது.]

௩௬௯. அத்த வாகை யமலை வானெற்
றரியார் சிலம்பி னரிசி யார்ப்பக்
கோடை * தூக்குங் கானம்
செல்வாந் தோழி நல்கினர் நமரே.

எ - து. தோழி, கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது.
குடவாயிற் கீரத்தனார்.

---

(ஸ்ரீ - ம்.) * தூங்குங்.

(ப - ரை.) தோழி—, நமர் - நம் தலைவர், நல்கினர் - தண்ணளி செய்தனர்; ஆதலின், அத்தம் வாகை - அருவழியிலேயுள்ள வாகைமரத்தின், அமலை வால் நெற்று - ஒலியையுடைய வெள்ளிய நெற்றுக்களை, அரிசி - அவற்றின் விதை, அரி ஆர் சிலம்பின் ஆர்ப்ப - உள்ளிடு பரலையுடைய சிலம்பைப்போல ஆரவாரிக்க, கோடை தூக்கும் - மேல்காற்று அலைக்கின்ற, கானம் செல்வாம் - பாலைநிலத்திற் செல்வோமாக.

(முடிபு.) தோழி, நமர் நல்கினர்; கானம் செல்வாம்.

(கருத்து.) தலைவனுடன் போவேமாக.

(வி - ரை.) பசுமையற உலர்ந்ததாதலின் வெண்ணிறமுடையதாயிற்று. அரிசியென்றது வித்தினை. நெற்றைக் கோடை தூக்குமென இயைக்க.

"தலைவர் நின்னை உடனழைத்துச் சென்று தம்மூரில் மணப்பதாகக் கூறினர்; ஆதலின் பாலைநிலத்தின் வழியே அவரோடு யாம் செல்வேமாக" என்று தோழி கூறினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. வாகையின் நெற்று வெண்ணிறமுடைமை : குறுந். எ : 5.

3. காற்றுத் தூக்கல் : "செல்வளி தூக்கலின்", "கோடை தூக்கு தொறும்", "உறுகா றூக்க" (நற். கூ0எ : 4, கசுஉ : 10, ௩சரு : 3); "உறுவளி தூக்கு முயர்சினை" (கலி. அச : 1.)

1 - 3. கோடைக்காற்றல் வாகைநெற்று ஒலித்தல் : அகநா. சரு : 1-3.

காற்றல் வாகைநெற்று ஒலித்தல் : குறுந். எ : 4-5, ஒப்பு. (௩சுகூ)

---

## பரத்தை கூற்று

["பரத்தை தலைவனைப் புறம்போகாவாறு பிணித்துக் கொண்டாள்" என்று தலைவி கூறியதாக அறிந்த பரத்தை அவட்குப் பாங்காயினார் கேட்ப, "தலைவன் ஈண்டு இருப்பின் அவனோடு பொருந்தியும் அவன் பிரியின் யாம் தனித்தும் இருப்பேம்" என்று கூறியது.]

கஎ0. பொய்கை யாம்ப லணிநிறக் கொழுமுகை
வண்டுவாய் திறக்குந் தண்டுறை யூரனொ
டிருப்பி னிருமருங் கினமே கிடப்பின்
வில்லக விரலிற் பொருந்தியவன்
நல்லகஞ் சேரி னொருமருங் கினமே.

எ - து. கிழத்தி தன்னைப் புறனுரைத்தாளென்பது கேட்டுப் பரத்தை, அவட்குப் பாங்காயினர் கேட்பச் சொல்லியது.

வில்லகவிரலினர்.

(ப - ரை.) *பொய்கை ஆம்பல் - பொய்கையிலே உள்ள ஆம்பலினது, அணி நிறம் கொழு முகை - அழகிய நிறத்தையுடைய கொழுவிய அரும்பில், வண்டு வாய் திறக்கும் தண் துறை ஊரனொடு - வண்டுகள் இதழைத் திறக்கும் தண்ணிய நீர்த்துறைகளையுடைய ஊருக்கு உரியனாகிய தலைவனோடு, இருப்பின் - நாம் இருந்தால், இரு மருங்கினம் - இரண்டு உடலையுடையேம்; கிடப்பின் - அவரோடு துயின்றால், வில் அகம் விரலின் பொருந்தி - வில்லை அகப்படப்பிடித்த விரல்களைப் போலப் பொருந்தி, அவன் நல் அகம் சேரின் - அவன் தனது நல்ல அகத்தின் கண்ணே சேர்ந்தால், ஒரு மருங்கினம் - ஓர் உடலை யுடையேம்.*

(முடிபு.) *ஊரனொடு இருப்பின் இருமருங்கினம்; கிடப்பின் பொருந்தி, சேரின் ஒரு மருங்கினம்.*

(கருத்து.) *தலைவன் தன்விருப்பத்திற்கேற்ப ஒழுகாநிற்ப, யாம் அவன் ஒழுகியவாறே ஒழுகுவேம்.*

(வி - ரை.) *" தலைவனோடு இருந்தக்கால் தனித்தனியே ஈருடம்பினேமாகியும், கிடப்பின் ஈருடலாயினும் ஒருடல்போல் ஒன்றியும், அவன் பிரிந்து தனது மனை சேரின் யாம் தனித்து எம் உடலாகிய ஒருடலினேமாகியும் இருப்பேம். இங்ஙனம் இருத்தல் அவனது ஒழுகலாற்றிற்கேற்ப அமைவதேயன்றி யாமாக வலிந்து மேற்கொள்வதன்று. தலைவனை எம்பால் இருத்திக்கொள்ளும் இயல்பிலேம் " என்று பரத்தை கூறினள். மருங்கு - இங்கே உடலைக் குறித்தது.*

*பொய்கை - மானிடர் ஆக்காத நீர்நிலை* (சீவக. 337, ந.) *கொழு முகை - மலரும் பருவத்ததாகிய அரும்பு. ஆம்பற்போது மலருஞ் செவ்வியறிந்து வண்டு வாய்திறக்கும்; இது, தலைவன் எம்மோடு*

இருக்குங்கால் அவன் எம் உள்ளக்கருத்துக்கு ஏற்ப ஒழுகுவானென்ற குறிப்பினது (பெருங். க. 35 : 211-4.)

வில்லைப்பிடித்த விரல்கள் ஒன்றோடொன்று மிகச் செறிந்திருக்கும்; அதனைக்கூறியது கவவுக்கை நெகிழாமல் அணைந்து நிற்றலை உணர்த்தியது;

"வீட்டிடந் தோறும் வில்லக விரல்போற்
பொருந்திநின் றெருங்கெதிர் கொள்கென்று"
(சீவக. 2110)

என இவ்வுவமையைத் திருத்தக்கதேவரும் எடுத்தாண்டனர்.

ஏகாரங்கள் : அசைநிலை.

செறிவுக்கு வில்லகவிரலைக் கூறினமையின் இச் செய்யுளை இயற்றிய நல்லிசைப்புலவர் வில்லக விரலினார் என்னும் பெயர்பெற்றார்.

## மேற்கோளாட்சி

4. வில்லகவிரலென்பது வந்தது (சீவக. 2110, ந.)

4-5. வினைக்குறிப்புச் சிறுபான்மை ஆக்கமின்றி வரும் (தொல். எச்ச. 36, சே.); வினைக்குறிப்பு ஆக்கம் விரிந்தல்லது பொருளுணர்த்தாது (ஷை. ஷை. ஷை. ந.)

## ஒப்புமைப் பகுதி

1-2. வண்டு வாய்திறக்கப் போது மலர்தல் : குறுந். உகூ௯ : 1-5, ஒப்பு. (௩௭0)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்தில் வேறுபட்ட தலைவியை நோக்கி, "நீ வேறுபடாமல் ஆற்றல்வேண்டும்" என்ற தோழிக்கு, "யான் என்செய்கேன்! யான் ஆற்றியிருப்பினும் காமம் பெரிதாகலின் என் வரைத்தன்றி வேறுபாடு உண்டாயது" என்று தலைவி கூறியது.]

௩௭௧. கைவளை நெகிழ்தலு மெய்பசப் பூர்தலும்
மைபடு சிலம்பி னைவனம் வித்தி
அருவியின் விளைக்கு நாடனொடு
மருவேன் றோழியது காமமோ பெரிதே.

எ - து. வரைவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

உறையூர் முதுகூற்றன்.

(ப - ரை.) தோழி—, மை படு சிலம்பின் - மேகங்கள் பொருந்துகின்ற மலைப்பக்கத்தில், ஐவனம் வித்தி - மலைநெல்லை விதைத்து, அருவியின் விளக்கும் நாடனொடு - அருவியினாலே விளக்கின்ற நாட்டையுடைய தலைவனால், கைவளை நெகிழ்தலும் - என்கைகளில் உள்ள வளைகள் நெகிழ்தலையும், மெய் பசப்பு ஊர்தலும் - மெய்யின் கண்ணே பசலை பரத்தலையும், மருவேன் - பெறேன்; ஆயினும், அது காமம் - அக்காமம், பெரிது—.

(முடிபு.) தோழி, நாடனொடு வளை நெகிழ்தலும் பசப்பூர்தலும் மருவேன்; காமம் பெரிது.

(கருத்து.) காமம் என்வரைத்தன்றி மிக்கது.

(வி - ரை.) தலைவி தலைவனது பிரிவினால் மெலிந்தாள்; அதனால் வளை நெகிழ்ந்தது; மெய்யிற் பசலை உண்டாயிற்று. அதுகண்ட தோழி, "நீ இங்ஙனம் ஆற்றாயாதல் தக்கதன்று. அவர் நின்பொருட்டன்றே பிரிந்தனர்?" என்றாள். அப்பொழுது, "இவ்வேறுபாடு தலைவனால் உண்டாகவில்லை. எனக்கும் இவ்வேறுபாடு கொள்ளல் கருத்தன்று. ஆயினும் காமம்பெரிதாகலின் என்னளவில் நில்லாது இவை உண்டாகக் காரணமாயிற்று" என்று தலைவி கூறினாள்.

மைபடு சிலம்பு - மேகங்கள் தாழ்ந்து மழை பெய்யும் மலை. மை படுவதை நோக்கி ஐவனம் வித்தினர்; பின்னர் மழை பொழிய அதனால் அருவி உண்டாக அதன் நீரால் ஐவனம் விளைந்தது. மேகம் பொழியு மென்னும் உறுதிபற்றி ஐவனத்தை வித்திப் பின்னர் விளக்கும் நாடனென்றது, பின்னர் நலம் உண்டாகுமென்னும் உறுதி பற்றி இக்காமம் உண்டாயிற்றென்ற குறிப்பினது. நாடனொடு: ஒடுவுருபு ஆலுருபின் பொருளில் வந்தது. அது காமமென்றதில் அதுவென்றது அகரச்சுட்டின் பயத்ததாய் நின்றது.

காமமோ : ஓ, அசைநிலை. பெரிதே : ஏ, அசைநிலை; தேற்றமுமாம்.

## ஒப்புமைப் பகுதி

1. வளை நெகிழ்தல் : குறுந். ௧௧ : 1, ஒப்பு.

மெய் பசத்தல்: ஐங். உக: 5, சக: 3-4, உகஎ: 4.

2. மைபடு சிலம்பு: கலி. சரு: 6.

2-3. ஐவனம் வித்தி அருவியினால் விளைத்தல்: குறுந். ௧௦௦: 1, ஒப்பு.

4. காமம் பெரிது: குறுந். கஅ: 5, ஒப்பு. (௩எக)

---

## தோழி கூற்று

[இரவுக்குறிவந்து ஒழுகாநின்ற தலைவன் சிறைப்புறத்தானாக, தலைவிக்குக் கூறுவாளாய், "இவ்வூரில் அலர் பெருகியது" என்று தோழி வரைவின் இன்றியமையாமையைப் புலப்படுத்தியது.]

௩எஉ. பனைத்தலைக், கருக்குடை நெடுமடல் * குருத்தொடு மாயக்
கடுவளி தொகுத்த நெடுவெண் குப்பைக்
கணங்கொள் சிமைய † வணங்குங் கானல்
ஆழிதலை வீசிய வயிர்ச்சேற் றருவிக்
கூழைபெ யெக்கர்க் குழீஇய பதுக்கை
புலர்பதங் கொள்ளா ‡ வளவை
அலரெழுந் தன்றிவ் வழுங்க லூரே.

எ - து. இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகன் கேட்பத் தோழி, தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.

¶ விற்றூற்று மூதெயினனார்.

(ப - ரை.) பனை தலை - பனையின் உச்சியிலுள்ள, கருக்கு உடை நெடு மடல் குருத்தொடு மாய - கருக்கையுடைய நெடிய மடலானது குருத்தோடு மறைய, கடு வளி தொகுத்த - விரைவை யுடைய காற்றுக் கூட்டிய, நெடு வெள் குப்பை - உயர்ந்த வெள்ளிய மணற்குவியலாகிய, கணம் கொள் சிமையம் - தொகுதியைக் கொண்ட சிகரத்தையுடைய, அணங்கும் கானல் - வருத்துகின்ற கடற்கரையில், ஆழி தலை வீசிய அயிர் சேறு அருவி - கடல் வீசிய கருமணற்

(பி - ம்.) * குருந்தொடு. † வுணங்குங். ‡ விரவை. ¶ வீற்றூனுத் தெயினார்.

சேற்றையுடைய அருவியால், கூழை பெய் எக்கர் குழீஇய பதுக்கை - கூந்தலினிடத்தே பெய்யப் படுகின்ற எக்கராகக் குவிக்கப்பட்ட குவியல், புலர்பதம்கொள்ளா அளவை - உலரும் செவ்வியை அடையாததற்குள், இ அழுங்கல் ஊர் - இந்த ஆரவாரத்தையுடைய ஊரில், அலர் எழுந்தன்று - பழிமொழி எழுந்தது.

(முடிபு.) பதுக்கை புலர்பதங் கொள்ளாவளவை இவ்வூரில் அலர் எழுந்தன்று.

(கருத்து.) இங்கே அலர் மிக்கது.

(வி - ரை.) கடுவளி - மிக்க காற்றுமாம். குப்பையாகிய சிமையம். தனித்தவரை முனிவு செய்யும் பொழிலுடையதாதலின் (புறநா. கக : 19, உரை) அணங்குங் கானலென்றாள். சேறுடைய அருவியாதலின் தலைமயிரிற் பெய்தற்குரிய மண்ணையுடையதாயிற்று (குறுந். ககக : 5, விசேட.) பதுக்கை புலர்பதங் கொள்ளா அளவையென்றது தலைவன் வந்து சென்ற சுவடு மறைவதற்குளென்ற குறிப்பை யுடையது.

பனைத்தலை : சீர், பாவின் முதலிற் கூறாய் நின்றது.

ஏ : அசைநிலை.

## ஒப்புமைப் பகுதி

1. கருக்குடைய பனைமடல் : குறுந். உசக : 1.

2. காற்றல் மணற்குவியல் உண்டாதல் : குறுந். உசஅ : 4-5, ஒப்பு.

கடுவளி : குறுந். கக : 1, ஒப்பு.

2-3. மணற்சிமையம் : நற். உசுO : 4 ; ஐங். கOO : 2 ; அகநா. நகO : 5-7.

1-3. பனைமடல் மணலால் மூடப்படுதல் : (குறுந். உசஅ : 4-5, உஅக : 1-2); "தாங்க லோலை யோங்குமடற் பெண்ணை, மாவரை புதைத்த மணன்மலி முன்றில்", "ஓங்குமண லுடுத்த நெடுமாப் பெண்ணை" (நற். கஙு : 1-2, ககக : 1.) (கஎஉ)

---

## தோழி கூற்று

[அலர் மிக்கவிடத்து வருந்திய தலைவியை நோக்கி, "தலைவனது நட்பு என்றும் அழியாதது" என்று தோழி கூறியது.]

௩௭௩. நிலம்புடை பெயரினு * நீர்தீப் பிறழினும்
இலங்குதிரைப் பெருங்கடற் கெல்லை தோன்றினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை யஞ்சிக்
கேடெவ னுடைத்தோ தோழி நீடுமயிர்க்
கடும்ப லூகக் கறைவிர லேற்றை
புடைத்தொடு † புடைஇப் பூநா றுபலவுக்கனி
காந்தளஞ் சிறுகுடிக் கமழும்
ஓங்குமலை நாடனொ டமைந்தநந் தொடர்பே.

எ - து. அலர் மிக்கவழித் தலைமகட்குத் தோழி சொல்லியது.

மதுரைக் ‡ கொல்லன் புல்லன்.

(ப - ரை.) தோழி—, நீடு மயிர் - நீண்ட மயிரையும், கடு பல் - கூரிய பற்களையுமுடைய, ஊகம் கறை விரல் ஏற்றை - கருங்குரங்கினது கறுப்பையுடைய விரல்களையுடைய ஆணனது, புடை தொடுபு - பக்கத்திலே தோண்டியதனால், உடைஇ - உடைந்து, பூ நாறு பலவு கனி - மலரின்மணத்தை வீசும் பலவினது பழம், காந்தள் அம் சிறு குடி கமழும் - காந்தளையுடைய அழகிய சிறிய ஊரினிடத்தே மணக்கின்ற, ஓங்கு மலைநாடனொடு - ஓங்கிய மலையை யுடைய நாடனோடு, அமைந்த நம் தொடர்பு - பொருந்திய நமது நட்பானது, நிலம் புடை பெயரினும் - உலகம் இடம் மாறினாலும், நீர் தீ பிறழினும் - நீரும் தீயும் தம் இயற்கையினின்றும் மாறினாலும் இலங்கு திரை பெரு கடற்கு எல்லை தோன்றினும் - விளங்குகின்ற அலைகளையுடைய பெரிய கடலுக்கு எல்லை தோன்றினாலும், வெ வாய் பெண்டிர் கௌவை அஞ்சி - வெவ்விய வாயையுடைய மகளிரது பழிச்சொல்லை அஞ்சி, கேடு எவன் உடைத்து - கெடுதல் எவ்வாறு உடையதாகும்?

(முடிபு.) தோழி, நிலம்பெயரினும் நீரும் தீயும் பிறழினும் எல்லை தோன்றினும் தொடர்பு கேடு எவன் உடைத்து?

(கருத்து.) தலைவனோடு அமைந்த தொடர்பு என்றும் கெடாதது.

(வி - ரை.) எல்லை - வரம்பு; முடிவுமாம். வெவ்வாய் - அலர் கூறுதலால் வெம்மையை யுடைய வாய்; அவர் கூறும் அலர்

(பி - ம்.) * நீர் திரிந்து பிறழினும். † புடையூ நாறு. ‡ கொல்லம் புல்லன்.

நெஞ்சைச் சுடுவதாதலின் இங்ஙனம் கூறினாள். 'உலகு பிறழ்ந்தாலும் ஊழ்வசத்தால் அமைந்த தொடர்பு கெடாது' என்றாள். உடைத்தோ: ஓ, அசைநிலை. தொடுப்பு: எச்சத்திரிபு; தொடவென்னும் பொருட்டு.

ஒற்றுமையால், நந்தொடர்பெனக் கூறினாள்.

## ஒப்புமைப் பகுதி

1. நிலம் புடை பெயர்தல்: "பெருநிலங் கிளரினும்", "நிலம் புடை பெயர்வ தாயினும்" (நற். உ0௧ : 10, உஅ௯ : 2); "நிலந்திறம் பெயருங் காலை யாயினும்" (பதிற். ௬௩ : 6); "நிலம்புடை பெயர்வ தாயினும்" (புறநா. ௩௪ : 5); "இருநிலம் பெயரினு மெம்மாட் டில" (பெருங். ௧. 58 : 92.)

2. கடந்து முடிவு தோன்றுதல்: "அறந்திருந் துன்னரு ளும்பிறி தாயி னருமறையின், திறந்திரிந் தார்கலி யும்முற்றும் வற்றுமிச் சேணி லத்தே" (சிற். 213.)

3. வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை: "வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்றினும்" (அகநா. ௫0 : 3.)

5. கருவிரலையுடைய ஊகம்: "கருவிரன் மந்தி" (மலைபடு. 311; ஐங். உஎஉ : 1, உஅ0 : 1.)

4-5. ஊகத்தின் மயிர்: (குறுந். ௯0 : 3-4); "குருமயிர்க் கடுவன்" (ஐங். உஎ௫ : 1.)

6. பூநாறு பலவுக்கனி: குறுந். ௯0 : 4.

5-6. பலாப்பழத்தைக் தூங்கு தோன்றுதல்: குறுந். ௩௪உ : 1.

7. காந்தளஞ் சிறுகுடி: அகநா. ௩௧உ : 5.

சிறுகுடி: குறுந். ௧அ௪ : 2, ஒப்பு.

மு. குறுந். ௧எ0. (௩எ௩)

---

## தோழி கூற்று

[தலைவன் வரைவொடு புக்க காலத்துத் தமர் அவனை ஏற்றுக் கொண்டாராக, "யான் அறத்தொடு நிற்றலின் இது நிகழ்ந்தது" என்று தோழி தலைவிக்குக் கூறியது.]

௩௭௪. எந்தையும் யாயு முணரக் காட்டி
ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்
மலைகெழு வெற்பன் றலைவந் திரப்ப
நன்றுபுரி கொள்கையி *ஞென்ரு கின்றே
முடங்க லிறைய தூங்கணங் குரீஇ
நீடிரும் பெண்ணைத் தொடுத்த
கூடினு மயங்கிய மையலூரே.

எ - து. அறத்தோடு நின்றமை தோழி கிழத்திக்கு உரைத்தது.

உறையூர்ப் †பல்காயனார்.

(ப - ரை.) எந்தையும் யாயும் - நம் தந்தையும் தாயும், உணர் காட்டி - உணரும்படி அறிவித்து, ஒளித்த செய்தி - நாம் இது காறும் மறைத்திருந்த களவொழுக்கத்தை, வெளிப்பட கிளந்தபின் - வெளிப்படும்படி யான் சொன்ன பிறகு, மலைகெழு வெற்பன் - மலைகள் பொருந்திய தலைவன், தலைவந்து இரப்ப - தம்மிடத்தே வந்து வரைவினை இரப்ப, நன்று புரி கொள்கையின் - நமர் நன்மையைச் செய்யும் கொள்கையினால், முடங்கல் இறைய - வளைவையுடைய சிறகை யுடையனவாகிய, தூங்கணங் குரீஇ - தூக்கணங் குருவி, நீடு இரு பெண்ணை தொடுத்த - உயர்ந்த பெரிய பனையினிடத்தே அமைத்த, கூடினும் - கூட்டைக் காட்டிலும், மயங்கிய - பலவகையாக மயக்கத்தை அடைந்திருந்த, இ மையல் ஊர் - இம் மயக்கத்தையுடைய ஊரானது, ஒன்று ஆகின்று - நம்மோடு ஒன்று பட்டது.

(முடிபு.) உணரக்காட்டிக் கிளந்தபின் வெற்பன் இரப்ப நன்று புரி கொள்கையின் ஊர் ஒன்றாகின்று.

(கருத்து.) யான் அறத்தொடு நின்றமையின் நமர் தலைவனது வரைவுக்கு உடம்பட்டனர்.

(வி - ரை.) வரைவு மலிந்தவிடத்து உள்ளமகிழ்ச்சியை யடைய தலைவிக்குத் தோழி கூறியது இது. யாய் - எம் தாய்.

---

(பி - ம்.) * ஞென்றே வின்றே, ஞென்றுயின்றே. † பலாகாய னார், பலார் காயனார், பராயனார்.

"உட்கரந் துறைபு முய்யா வரும்படர்" (குறிஞ்சிப். 32) என்றலின் 'ஒளித்த செய்தி' என்றாள்.

வெற்பன்: தலைவனென்னும் துணையாய் நின்றது. நன்று புரிதல் - வரைதலாகிய நன்மையைச் செய்தல். 'நமர் ஏற்றுக் கொண்டமையின் இதுகாறும் பலவாறு அலர் கூறிவந்த இவ்வூரினர் இப்பொழுது நம்மோடு ஒன்றிய கருத்துடையராயினர் என்றாள். கூட்டினும் என்பது எதுகைநோக்கிக் கூடினுமென நின்றது. மையல் ஊரென்றது இத்தன்மைத்து இது வென்னும் துணையாயும் மயங்கிய வென்றது அதன் மிகுதியைப் புலப்படுத்தியும் நின்றன (சிற்.102, பேர்.)

ஏகாரங்கள், அசைநிலை.

## மேற்கோளாட்சி

மூ. அறத்தொடு நின்றமை தோழி தலைவிக்கு உரைத்தது (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. ஒளித்த செய்தியை வெளிப்படுத்துதல்: குறுந். ௩௩௩: 6.

3. தலைவன் தலைவியின் தந்தையை இரத்தல்: அகநா. ௨அ0: 4-14.

5-7. தூக்கணங்குருவியின் கூடு: புறநா. ௨௨௫: 11.

4-7. ஊரின் இயல்பு: புறநா. அ௩: 5-6. (௩எச)

---

## தோழி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தே நிற்ப, "காவலருடைய காவல் மிக்கது" என்று தலைவிக்குக் கூறும் வாயிலாகத் தோழி, வரைதல் வேண்டுமென்பதை அவனுக்கு உணர்த்தியது.]

௩எ௫. அம்ம வாழி தோழி யின்றவர்
வாரா ராயினோ நன்றே சாரற்
சிறுதினை விளைந்த வியன்க ணிரும்புனத்

திரவரி வாரிற் றொண்டகச் சிறுபறை
பானாள் யாமத்துங் கறங்கும்
யாமங் காவல ரவியா மாறே.

எ - து. இரவுக்குறிக்கண் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லுவாளாய் இருபொழுதும் மறுத்து வரைவுகடாயது.

† ...............

(ப - ரை.) தோழி—, அம்ம - ஒன்று கூறுவன் கேட்பாயாக: சாரல் - மலைப்பக்கத்தில், சிறு தினை விளைந்த வியல் கண் இரு புனத்து - சிறிய தினை விளைந்த அகன்ற இடத்தையுடைய பெரிய கொல்லையில், இரவு அரிவாரின் - இராக்காலத்தே தினைக்கதிரை அரிபவர்களைப்போல, தொண்டகம் சிறு பறை - தொண்டகமாகிய சிறிய பறை, பால்நாள் யாமத்தும் - பாதியிரவிலும், யாமம் காவலர் - இராக் காவலாளிகள், அவியாமாறு - தூங்காமையினால், கறங்கும் - ஒலிக்கும்; இன்று—, அவர் - அத்தலைவர், வாராராயின்—, நன்று - நலமாகும்.

(முடிபு.) காவலர் அவியாமாறு கறங்கும்; இன்று அவர் வாராராயின் நன்று.

(கருத்து.) தலைவர் இரவில் வருதல் நன்றன்று.

(வி - ரை.) வாழி: அசை நிலை. அவர்: நெஞ்சறி சுட்டு. 'இன்று வாராராயின்' என்று கூறினும், என்றும் இராவருதல் நன்றன்றென்பதே தோழியின் நினைவு. தினைவிளைந்தமையின் அரிந்தனர். தினையின் மிகுதியினால் இரவிலும் அரிந்தனர்; இதனாற் பகலிலும் அரிந்தமை சொல்லாமே பெறப்பட்டது.

இரவில் விலங்குகள் அணுகாதிருத்தற்பொருட்டுத் தொண்டகப் பறையை முழக்குவர். தொண்டகப்பறை, குறிஞ்சி நிலத்திற்கு உரியது.

அவிதல் - தூங்குதல் (குறுந். சு: 1.) மாறு: ஏதுப் பொருள் தருவதோ ரிடைச் சொல். ஏகாரம், ஈற்றசை.

---

(பி - ம்.) * ரவியன்மாரன்றே, ரவியன்மான்றே.
† ஆசிரியர்பெயர் காணப்படவில்லை.

தினை விளைந்தமையை உவமை வாயிலாக நினைவுறுத்திப் பகற் குறியையும், காவலர் கடுகுதலைக் கூறி இரவுக் குறியையும் மறுத்து வரைவு கடாயினள்.

## ஒப்புமைப் பகுதி

1. அம்மவாழி தோழி : குறுந். ௭௭ : 1, ஒப்பு.

3. சிறுதினை : குறுந். ௧0௫ : 1, ௧௩௩ : 1.

4. தொண்டகச் சிறுபறை : முருகு. 197; நற். ௧0௪ : 4-5. அகநா. ௧௧௮ : 3.

5. பானாள் : குறுந். ௬௪ : 3, ஒப்பு.

6. யாமம் காவலர் : புறநா. ௩௭ : 9. (௩௭௫)

---

## தலைவன் கூற்று

[பொருள்வயிற் பிரியக் கருதிய நெஞ்சை நோக்கித் தலைவியின் நல்லியல்பு கூறித் தலைவன் செலவு தவிர்ந்தது.]

௩௭௬. மன்னுயி ரறியாத் துன்னரும் பொதியிற்
சூருடை யடுக்கத் * தாரங் கடுப்ப
வேனி லானே தண்ணியள் பனியே
வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி யையென
அலங்குவெயிற் † பொதிந்த தாமரை
உள்ளகத் தன்ன சிறுவெம் மையளே.

எ - து. பொருள் வலிக்கும் நெஞ்சிற்குத் தலைமகன் சொல்லிச் செலவழுங்கியது.

‡ படுமரத்து மோசிக் கோற்றன்.

(ப - ரை.) நெஞ்சே, மன் உயிர் அறியா - நிலைபெற்ற உயிர்த் தொகுதியினரால் முற்ற அறியப்படாத, துன் அரு பொதியில் - அணுகுதற்கரிய பொதியில்மலையிலுள்ள, சூர் உடை அடுக்கத்து -

---

(பி - ம்.) * தாஅங். † பொலிந்த. ‡ படுமொற்றூர் மோசிகிரன் கொற்றனர்.

தெய்வங்களையுடைய பக்கத்தில் வளர்ந்த, ஆரம் கடுப்ப - சந்தனத்தைப்போல, வேனிலானே - வேனிற்காலத்தில், தண்ணியள் - இத்தலைவி குளிர்ச்சியை யுடையாள்; பனி - பனிக்காலத்தில், வாங்கு கதிர் - அடக்கிக்கொண்ட சூரியனுடைய கதிர்கள், தொகுப்ப - மறைய, கூம்பி - குவிந்து, ஐயென - அழகிதாக, அலங்கு வெயில் - அசைகின்ற வெயிலை, பொதிந்த தாமரை - உட்பொதிந்த தாமரை மலரின், உள் அகத்து அன்ன - உள்ளிடத்தைப்போன்ற, சிறு வெம்மையள் - சிறிய வெம்மையை உடையாள்.

(முடிபு.) வேனிலானே தண்ணியள்; பனியில் சிறு வெம்மையள்.

(கருத்து.) தலைவி பிரிதற்கரிய இயல்பினள்.

(வி - ரை.) அறிதற்கும் துன்னுதற்கும் அரிய பொதியிலென்றாள்;

"முயலுநர் முற்றா வேற்றரு நெடுஞ்சிமைப்
புகலரும் பொதியில்" (அகநா. ௩௨௨: 13-4.)

சூர் - முருகனும் வரையரமகளிரும். பொதியிற் சந்தனம் சிறப்புடைத்தாதலின் அதனைக் கூறினன். 'அடுக்கத்தாஅம்' என்ற பாடத்திற்கு, மலையிலுள்ள நீரெனப்பொருள் கொள்க; பொதியிற் சுனைநீர்,

"தென்றிசை யெல்லை விண்புகு பொதியிற்
சூருடை நெடுஞ்சுனை நீர்" (தொல். களவு. 43, ந. மேற்.)

எனச் சிறப்பிக்கப்படும். வெயில் - வெம்மை.

வெம்மையையுடைய வேனிலில் தண்ணியளாகவும் குளிர்மிகுதியையுடைய பனிக்காலத்தில் சிறுவெம்மையளாகவும் தலைவியிருத்தலின், எக்காலத்தும் அணைதற்கு இனியளானாள்.

## ஒப்புமைப் பகுதி

2. சூருடையடுக்கம்: நற். ௩௬௧: 9; அகநா. ௧௫௮: 8, ௧௬௨: 25, ௧௬௮: 14-7, ௩௫௯: 11.

1-2. பொதியிற் சந்தனம்: அகநா. ௧௩: 2-5; சிலப். ௪: 38; பெருங். ௧. 58: 30, ௨. 4: 96.

(௩௭௬)

## தலைவி கூற்று

["தலைவன் பிரிந்தமையால் என் உடல் மெலிபவும் அவனது இயல்பு நினைந்து யான் ஆற்றினேன் ; நீ ஆற்றாயாதல் என் ?" என்று தலைவி, வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கூறியது.]

கஎஎ. மலரே ருண்கண் மாணலந் தொலைய
வளையேர் மென்றோ ணெகிழ்ந்ததன் றலையும்
மாற்றா கின்றே தோழியாற் றலையே
அறிதற் கமையா நாடனொடு
செய்து கொண்டதோர் சிறுநன் * னட்பே.

எ - து. வரைவிடை ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து கூறியது

மோசி கோற்றன்.

(ப - ரை.) தோழி—, அறிதற்கு அமையா நாடனொடு - தன் இயல்பு முற்றும் அறிதற்குப் பொருந்தாத தலைவனோடு, செய்து கொண்டதோர் சிறு நல் நட்பு - யாம் செய்து கொண்ட ஒரு சிறிய நல்ல நட்பானது, மலர் ஏர் உண் கண் மாண் நலம் தொலைய - பூவினை யொத்த மையுண்ட கண்களின் மாட்சிமைப்பட்ட அழகு நீங்க, வளை ஏர் மெல் தோள் நெகிழ்ந்ததன் தலையும் - வளையையுடைய அழகிய மெல்லியதோள் நெகிழ்ந்ததன் மேலும், மாற்று ஆகின்று - பரிகாரமாக ஆகின்றது ; அது கருதி யான் ஆற்றா நிற்பவும், ஆற்றலை - நீ ஆற்றினையல்லை.

(முடிபு.) தோழி, நட்பு மாற்று ஆகின்று ; ஆற்றலை.

(கருத்து.) தலைவனது இயல்பை உணர்ந்து யான் ஆற்றினேன்.

(வி - ரை.) தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த காலத்தில் தலைவியினது வேறுபாடு கண்ட தோழி, "நின் அழகிய கண்கள் இயல்பழிந்தன. நின் தோள்கள் நெகிழ்ந்தன ; இனி என் செய்வோம் !" எனக் கவன்றவிடத்துத் தலைவி கூறியது இது.

---

(பி - ம்.) * னடையே,

மலரேருண் கண், மென்றோ ளென்பன பட்டாங்கு கூறின வாதலின் தற்புகழ்ச்சியாகா. தலையும்: உம்மை, இழிவுசிறப்பு.

மாற்று - பரிகாரம்; "மாற்றருங் கூற்றம்" (தொல். புறத். 24.)

தலைவனை அறிதற்கமையா நாடனென்றது அவனது நல் லியல்பை நீ அறிந்தாயல்லை யென்னும் நினைவிற்று. சில நாட்க ளிலே அமைந்தமையின் சிறுநட்பென்றும், நன்மை பயப்பதாத லின் நன்னட்பென்றும் கூறினாள்.

என் உடல் மெலியவும் அவனது நட்பு எனக்குப் பரிகார மாகின்றதென்ற இக்கருத்து,

"குன்ற நாடன் கேண்மை
மென்றோள் சாய்த்துஞ் சால்பீன் றன்றே"
(குறுந். கூ0: 6-7)

என முன்னும் வேற்றுருவத்தில் வந்தது.

ஆற்றலையே: ஏ, இரங்கற்பொருட்டு.

## ஒப்புமைப் பகுதி

1. மலரேருண் கண்: குறுந். ௧0௧: 4, ஒப்பு; நற். ௩௨௫: 7.

மாணலம்: குறுந். ௭௪: 5, ஒப்பு.

4. அறிதற்கமையா நாடன்: "அவர்வயிற், சால்பளந் தறிதற் கியாஅம் யாரோ" (குறுந். ௩௬௬: 1-2.) (௩௭௭)

---

## செவிலித்தாய் கூற்று

[தலைவனுடன் தலைவி சென்றதை அறிந்த செவிலித்தாய், "என்மகள் போன வழி இன்பத்தைத் தருவதாக அமைக" என்று தெய்வத்தை வாழ்த்தியது.]

௩௭௮. ஞாயிறு * காயாது மரநிழற் பட்டு
மலைமுதற் சிறுநெறி மணன்மிகத் தாஅய்த்
தண்மழை தலையின் றாக † நந்நீத்துச்

---

(பி - ம்.) * காணாத மாணிழற் படஇ. † தண்ணளிச்.

சுடர்வாய் நெடுவேற் காளையொடு
† மடமா வரிவை போகிய சுரனே.

எ - து. மகட்போக்கிய செவிலி தெய்வத்திற்குப் பராயது.

கயமனார்.

(ப - ரை.) நம் நீத்து - நம்மைப் பிரிந்து, சுடர் வாய் நெடு வேல் காளையொடு - ஒளி பொருந்திய நெடிய வேலையுடைய தலைவனோடு, மடம் மா அரிவை - மடப்பத்தையும் மாமைமையையும் உடைய தலைவி, போகிய சுரன் - சென்ற பாலைநிலம், ஞாயிறு காயாது - சூரியன் வெயில்வீசாமல், மரம் நிழல் பட்டு - மரத்தின்நிழல் பொருந்தி, மலை முதல் சிறுநெறி - மலையினிடத்தேயுள்ள சிறிய வழியின்கண், மணல் மிக தாஅய் - மணல் மிகப் பரவப்பெற்று, தண் மழை தலையின்று ஆக - குளிர்ந்த மழை பெய்ததாகுக.

(முடிபு.) சுரன் காயாது நிழற்பட்டுத் தாஅய்த் தலையின்றாக.

(கருத்து.) தலைவி சென்ற பாலைநிலம் இனியதாகுக.

(வி - ரை.) நிழல் வேண்டியது, கதிரோன் வெம்மையால் துன்புறுதபடி. மணல் பரவுதலால் தலைவியின் மெல்லடி நடத்தற்கு நெறி ஏற்றதாகும். மழை பெய்தலின் பாலையின் வெம்மை நீங்கும்.

அரிவை : தலைவியென்னும் துணை [illegible]ன்றது. இத்துறை 'சுரந்தணிவித்தல்' எனவும் வழங்கும்.

## மேற்கோளாட்சி

மு. செவிலி தெய்வம் வாழ்த்தியது (நம்பி. 184.)

## ஒப்புமைப் பகுதி

1. மரநிழலால் ஞாயிறு காயாத நிலைபெறுதல்: "மாநிழற் பட்ட மரம்பயி லிறும்பின், ஞாயிறு தெறுஅ மாக நனந்தலை" (மலைபடு. 271-2.)

3. தலையின்று : அகநா. ௯௪ : 3.

4. நெடுவேல் : குறுந். ௧௨, 4, ௯௧0 : 4.

(பி - ம்.) * சுடர்படு. † மடவர லரிவை.

5, பி - ம். மடவாலரிவை : குறுந். ௩உ௧ : 4, ஒப்பு.

மு. "மள்ளர் கொட்டின் மஞ்ஞை யாலும்
உயர்நெடுங் குன்றம் படுமழை தலைஇச்
சுரநனி யினிய வாகுக தில்ல
அறநெறி யிதுவெனத் தெளிந்தவென்
பிறைநுதற் குறுமகள் போகிய சுரனே" (ஐங். ௩௭௧);

"குன்றுதிர் கொண்மூ மின்னுபு பொழியக்
கானங் கடுமை நீங்குக
மானுண் கண்ணி போகிய சுரனே" (தமிழ்நெறி. மேற். 121.)

(௩௭அ)

---

## தோழி கூற்று

[அயலார் தலைவியை வரையும்பொருட்டு வந்தகாலத்துத் தலைவிக்குக் கூறுவாளாய், "முன்பு நின்பால் அன்பு பூண்ட தலைவன் இப்பொழுது எங்குள்ளானோ?" என்று தாய் முதலியோருக்குத் தோழி, உண்மையை வெளிப்படுத்தியது.]

௩௭௯. இன்றியாண் டையனோ தோழி குன்றத்துப்
பழங்குழி யகழ்ந்த கானவன் * கிழங்கினொடு
† கண்ணகன் றூமணி பெறூஉ நாடன்
அறிவுகாழ்க் கொள்ளு மளவைச் ‡ செறிதொடி
¶ எம்மில் வருகுவை நீயெனப்
பொம்ம லோதி நீவி யோனே.

எ - து. நொதுமலர் வரைவுழித் தோழி அறத்தோடு நின்றது.

$ ...............

(ப - ரை.) தோழி—, குன்றத்து-குன்றினிடத்தே, பழ குழி அகழ்ந்த கானவன் - பழைய குழியைத் தோண்டிய வேட்டுவன், கிழங்கினொடு—, கண் அகல் தூ மணி பெறூஉம் நாடன் - இடம் அகன்ற தூய மணியைப் பெறும் நாட்டையுடையவனும், செறி

(பி - ம்.) * கிழங்கின். † கண்ணகன்மத் துணி, எர் கண்ணகன் மத்துளி. ‡ சிறுதொடி. ¶ எம்பின்.

$ ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.

தொடி - செறிந்த தொடியையுடையாய், அறிவு காழ்கொள்ளும் அளவை - நின்அறிவு முதிர்கின்ற பருவத்தில், நீ எம் இல் வருகுவை என - நீ எம்முடைய வீட்டுக்கு இல்லறம் நடத்த வருவாயென்று கூறி, பொம்மல் ஓதி - நெருக்கத்தையுடைய கூந்தலை, நீவியோன் - தடவியவனுமாகிய தலைவன், இன்று யாண்டையனோ - இன்று எவ் விடத்தில் உள்ளானோ?

(முடிபு.) தோழி, நாடன் நீவியோன் இன்று யாண்டையனோ?

(கருத்து.) நின்பால் அன்புபூண்ட தலைவன் இப்பொழுது எங்கே உள்ளானோ?

(வி - ரை.) யாண்டையனோ: ஓகாரம் இரங்கற்பொருட்டு. கானவன் கிழங்கோடு விலைவரம்பறியா மணியையும் பெற்றாற்போல வேட்டைமேற் சென்ற தலைவன் அதனோடு தலைவியையும் பெற்றா னென்பது குறிப்பு.

கானவன் உண்ணும்பொருட்டுக் கிழங்கை அகழ்ந்தான்.

இஃது உசாவுதல் வாயிலாக அறத்தொடு நின்றது.

## மேற்கோளாட்சி

மூ. செவிலி கேட்பத் தலைவியொடு தோழி உசாவி அறத்தொடு நின்றது (தொல். களவு. 24, இளம்.); நொதுமலர் வரையக் கருதியவழி, தோழி தாய் கேட்பத் தலைவிக்குக் கூறியது (ஷை. ஷை. 23, ந.); நொது மலர் வரைவுகூறி உசாவித் தோழி அறத்தொடு நின்றது (ஷை. பொருள். 12, ந.)

## ஒப்புமைப் பகுதி

1-3. குன்றத்திற் கானவன் நிலத்தை அகழ்ந்து மணி பெறுதல்: அகநா. ௨௮௨ : 2-5.

6. பொம்மலோதி : குறுந். ௧௬௧ : 6, ஒப்பு.

ஓதி நீவுதல்: (குறுந். ௧௯௦ : 1, ஒப்பு.); "பொம்ம லோதி நீவிய காதலொடு" (அகநா. ௩௧௧ : 7.)

மூ. "யாண்டுளன் கொல்லோ தானே மாண்குழை
மொய்யிருங் கூந்தன் முடியாப் பருவத்துப்
பெறுக நின்னை யானென
நறுநுதனீவிப் படர்தந் தோனே" (தமிழ்நெறி. மேற். 96.)

(௩௭௯)

தோழி கூற்று

[தலைவன் முன்பனிப் பருவத்தே வருவதாகக் கூறிச் சென்றுழிக் கூதிர்ப்பருவத்தின் இறுதியில் தோழி தலைவியை நோக்கி, "இனி, முன்பனிப் பருவம் வரும்; தலைவர் நம்மை நினைந்திலர்; என் செய்வேம்!" என்று கூறியது.]

௩௮௦. விசும்புகண் புதையப் பாஅய் வேந்தர்
வென்றெறி முரசி னன்பல முழங்கிப்
பெயலா னாதே வானங் காதலர்
நனிசேய் நாட்டர் நம்முன் னலரே
யாங்குச்செய் வாங்கொ றோழி * யீங்கைய
வண்ணத் துய்ம்மல ருதிர
† முன்னர்த் தோன்றும் பனிக்கடு நாளே.

எ - து. பனிப்பருவங் குறித்துப் பிரிந்தான் தலைமகன்; பிரிய, பருவ வரவின்கண் வேறுபடுவோளாயினும் கதுமென ஆற்றுவிப்பது அரிதென்னும் கருத்தினளாய்க் கூதிர்ப்பருவத்துத் தலைமகள் கேட்பத் தனது ஆற்றாமை விளங்கத் தோழி சொல்லியது.

கருவூர்க் கதப்பிள்ளை.

(ப - ரை.) தோழி—, விசும்பு கண் புதைய பாஅய் - வானம் மறையும்படி பரவி, வேந்தர் வென்று எறி முரசின் நல் பல முழங்கி - வேந்தர்கள் பகைவர்களைவென்று அறைகின்ற முரசத்தைப்போல நன்மையையுடைய பலமுறை முழங்கி, வானம் - மேகம், பெயல் ஆனாது - மழை பெய்தலை நீங்காது; காதலர் நனி சேய் நாட்டர் - தலைவர் மிகச் சேயதாகிய நாட்டிலே உள்ளார்; நம் முன்னலர் - அவர் நம்மை நினைத்தாரல்லர்; ஈங்கைய வண்ணம் துய் மலர் உதிர - ஈங்கையிலுள்ளனவாகிய நிறத்தையும் உளையையும் உடைய மலர்கள் உதிராநிற்ப, முன்னர் தோன்றும் - இனிமேல் தோன்றுதற்குரிய, பனி கடுநாள் - கடிய பனிப்பருவத்தில், யாங்கு செய்வாம் - என்ன செய்வோம்!

(முடிபு.) தோழி, வானம் பெயல் ஆனாது; காதலர் நனிசேய் நாட்டர்; நம் முன்னலர்; பனிக்கடுநாளில் யாங்குச்செய்வாம்!

(பி - ம்.) * யீங்கையத்துத் துய்ம்மலர். † முன்னு றென்ப, முன்னர்த் தென்ப.

(கருத்து.) தலைவர் தாம் குறித்த பருவத்தே வாராராயின் என் செய்வேம்!

(வி - ரை.) கொல்: அசைநிலை. "ஈங்கைமலர் இப்பொழுது திராநிற்ப, இனிப் பனிக்கடுநாள் தோன்றும்" என்றாள். ஈங்கை திர்க்காலத்தில் மலர்ந்து உதிரும் இயல்புடையது (குறுந். ௧௧௦.)

பனிநாள், கடுநாளென்க.

## ஒப்புமைப் பகுதி

2. வென்றெறி முரசு: புறநா. ௧௧௨: 4, ௩௬௧: 5.

1-3. மேகமுழக்கத்திற்கு முரசின் ஒலி: குறுந். ௨௭௦: 3, ஒப்பு; அகநா. ௧௭௬: 12-3.

மழையால் விசும்பு மறைதல்: குறுந். ௩௬௬: 1, ஒப்பு; நற். ௨௪௭: 1-2.

4. நனிசேய் நாட்டர்: குறுந். ௨௨அ: 5; நற். ௧௧௬: 8.

5. யாங்குச் செய்வாம்: குறுந். ௨௧௭: 3, ஒப்பு.

5-6. ஈங்கைய வண்ணத் துய்ம்மலர்: குறுந். ௧௧0: 5-6.

ஈங்கையின்மலர் துய்யையுடையது: குறுந். ௧௧0: 5-6, ஒப்பு.

ஈங்கைமலர் கூதிர்ப்பருவத்தில் உதிர்தல்: குறுந். ௧௧0: 5-7, ஒப்பு.

---

(௩அ0)

## தோழி கூற்று

[வரைவிடை ஆற்றாளாகிய தலைவியை நோக்கி, "தலைவனோடு அளவளாவியதன்பயன் இங்ஙனம் வருந்தியிருத்தல்கொல்?" என்று தோழி கூறியது.]

௩அ௧. தொல்கவின் றொலைந்து தோணலஞ் சாஅய்
அல்ல னெஞ்சமோ டல்கலுந் துஞ்சாது
பசலை யாகி விளிவது கொல்லோ
வெண்குருகு நரலுந் தண்கமழ் கானற்

பூமலி பொதும்பர் * நாண்மலர் மயக்கி
விலங்குதிரை யுடைதருந் துறைவனொ
டிலங்கெயிறு தோன்ற நக்கதன் பயனே.

எ - து. வரைவிடை ஆற்றாளாகிய தலைமகளை ஆற்றுவிக்க லுறுந் தோழி, தலைமகனை இயற்பழித்தது.

†............

(ப - ரை.) வெள் குருகு - வெள்ளை நாரைகள், நரலும் - ஒலிக்கின்ற, தண் கமழ் கானல் - தண்ணியதாகக் கமழ்கின்ற கடற்கரையிலேயுள்ள, பூ மலி பொதும்பர் நாள் மலர் மயக்கி - மலர் நிறைந்த சோலையிலுள்ள செவ்வி மலர்களைக் கலக்கச்செய்து, விலங்கு திரை- குறுக்கிடும் அலைகள், உடைதரும் துறைவனொடு - உடைந்து செல்கின்ற துறையையுடைய தலைவனோடு, இலங்கு எயிறு தோன்ற நக்கதன் பயன் - விளங்குகின்ற பற்கள் வெளிப்படச் சிரித்து மகிழ்ந்ததனால் உண்டான பயன், தொல் கவின் தொலைந்து - பழைய அழகு அழிய, தோள் நலம் சாஅய் - தோளினது நலம் மெலிய, அல்லல் நெஞ்சமோடு - துன்பத்தையுடைய நெஞ்சோடு, அல்கலும் - இரவு தோறும், துஞ்சாது - தூங்காமல், பசலை ஆகி - பசலை உண்டாக, விளிவதுகொல் - நாம் அழிவதுவோ?

(முடிபு.) நக்கதன் பயன் விளிவதுகொல்?

(கருத்து.) தலைவனோடு நட்புச் செய்ததற்கு நாம் அழிதலோ பயன்?

(வி - ரை.) தொலைந்து, சாஅய், ஆகி என்பன, செயவென் எச்சங்கள் செய்தெனெச்சமாகத் திரிந்து நின்றன.

புன்னை முதலிய மரம் நீரளவும் தாழ்ந்திருத்தலின் திரை மலரை மயக்கியது. நக்கது: இடக்கரடக்கல்.

“தலைவனோடு நக்கதன்பயன் இன்பந்தருவதாயிருத்தலை யன்றி நாம் அழிதல்கொல்?” என்றது அவனது பெருமைக்கு இழுக்குப் போலத் தோற்றுதலின் இயற்பழித்ததாயிற்று.

---

(பி - ம்.) * நன்மலர்.

† ஆசிரியர் பெயர் காணப்படவில்லை.

## ஒப்புமைப் பகுதி

1. தோல்கவின் தோலைதல் : நற். ௯௬ : 8, ௨௮௩ : 4, ௩௯௦ : 5; கலி. ௨ : 28, ௧௬ : 5, ௨௬ : 10; அகநா. ௧௭௭ : 12, ௧௭௭ : 1, ௨௩௯ : 18, ௨௭௦ : 10.

தோள் நலம் சாய்தல் : முத். 54, 55, 69.

1, மு. நற். ௧௭ : 1.

2. தலைவி துயிலாமை : குறுந். ௬ : 4, ஒப்பு.

1-3. தோள்மெலிதலும் பசலை உண்டாதலும் : "பெருந்தோ ணெகிழ வவ்வரி வாடச், சிறுமெல் லாகம் பெரும்பசப் பூர" (நற். ௩௯௮ : 1-2.)

6 - 7. தலைவனோடு நகுதல் : குறுந். ௪௦௧ : 5; அகநா. ௧௯௬ : 12.

(௩௮௧)

---

## தோழி கூற்று

[தலைவன் கூறிச்சென்ற பருவம் வந்தகாலத்து அவன் வாராமையால் வருந்திய தலைவியை நோக்கி, "இது கார்ப்பருவமன்று; இப்பொழுது பெய்வது வம்பமழை" என்று தோழி கூறித் தெளிவித்தது.]

௩௮௨. * தண்டுளிக் கேற்ற பைங்கொடி முல்லை
முகைதலை திறந்த நாற்றம் புதன்மிசைப்
† பூமலி தளவமொடு தேங்கமழ்பு கஞல
‡ வம்புப் பெய்யுமான் மழையே ¶ வம்பன்று
காரிது பருவ மாயின்
வாரா ரோநங் காத லோரே.

எ - து. பருவவரவின்கண் வேறுபட்ட தலைமகளைத் தோழி பருவமன்று, வம்பென்று வற்புறீஇயது.

நறுங்கீரன்.

---

(பி - ம்.) * கண்டிசிற் றோழி. † பூமலர். ‡ வம்பம் பெய்யுமார். ¶ வம்பழன்று.

(ப - ரை.) *தண் துளிக்கு ஏற்ற பசு கொடி முல்லை - தண்ணிய துளியை எதிர்கொண்ட பசிய கொடியாகிய முல்லையின், முகை தலை திறந்த நாற்றம் - அரும்புமலர்ந்த மணம், புதல்மிசை - புதலினிடத்தே, பூ மலி தளவமொடு - மலர்மிக்க செம்முல்லையோடு, தேம் கமழ்பு கஞல - தேன்மணக்கும்வண்ணம் நெருங்கித்தோன்றும்படி, மழை - மேகம், வம்பு பெய்யும் - காலமல்லாத காலத்துப்பெய்யும் மழையைப் பெய்யும் ; இது வம்பு அன்று - இது வம்பன்றி, கார் பருவமாயின் - கார்காலமானால், நம் காதலோர் - நம் தலைவர், வாராரோ—; வருவார்.*

(முடிபு.) *மழை வம்புப் பெய்யும் ; இது கார்ப்பருவமாயின் நம் காதலோர் வாராரோ ?*

(கருத்து.) *இது கார்ப்பருவம் அன்று.*

(வி - ரை.) *முல்லை கார்காலத்தில் வளம்பெற்று அரும்பி மலரும். தேம் கமழ்பு - இடமெல்லாம் பரவியென்பதும் பொருந்தும். வாராரோவென்ற வினா வருவரென்னும் பொருளது.*

*“ தலைவர் தாம் கூறிய சொற்பிழையாராதலின் அவர் வாராமையே இது கார்ப்பருவமன்றென்பதற்கு அடையாளம். ஆதலின் முல்லை, தளவம், மழையென்பன அடையாளமல்ல ” என்பது தோழியின் கருத்து. குறுந். உக. கார்ப்பருவமேயாயினும் தலைவி ஆற்றுளென்பது கருதித் தோழி காரன்றென்றாள் ;*

*“ பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த*
*நன்மை பயக்கு மெனின் ”* (குறள், 292)

*ஆதலின்.*

## ஒப்புமைப் பகுதி

1-2. **முல்லை கார்காலத்தில் அரும்புதல்** : குறுந். *கஉசு* : 3-5, ஒப்பு.

1-3. **தளவம் மழையை ஏற்று மலர்தல்** : *“ கண்ணக னிருவிசும் பிற் கதழ்பெயல் கலந்தேற்ற, தண்ணறும் பிடவமுந் தவழ்கொடித் தளவமும் ”* (கலி. *கO௨* : 1-2.)

**முல்லையும் தளவும்** : பொருந. 199-200. (௩அஉ)

## தோழி கூற்று

[தலைவனுடன் செல்லத் தலைவி உடம்பட்டமை தெரிந்து அக்கருத்தைத் தலைவனுக்கு வெளியிட்டபின் அவன் வந்து நிற்ப, அப்பொழுது நாண் அழிதற்கு வருந்திய தலைவியை நோக்கி, 'நின் உடம்பாட்டை யறிந்தே அவனை வரச்செய்தேன்; இப்பொழுது மறுப்பின் என்செய்வேன் !" என்று தோழி கூறியது.]

௬அ௬. நீயுடம் படுதலின் யான்றர வந்து
குறிநின் றனனே குன்ற நாடன்
இன்றை யளவை சென்றைக் கென்றி
கையுங் காலு மோய்வன * வழுங்கத்
தீயுறு தளிரி னடுங்கி
யாவது மிலையான் செயற்குரி யதுவே.

எ - து. † உடன்போக வருந்துந் தலைமகளை ‡ நாணுக்கெடச் சொல்லியது.

படுமரத்து மோசிகீரன்.

(ப - ரை.) நீ உடம்படுதலின் - நீ உடன்போக இயைந்தமையால், யான் தர - நான் கூற, குன்றம் நாடன் - தலைவன், குறி நின்றனன் - குறியிடத்தே வந்து நின்றான்; நீயோ—, இன்றை அளவை சென்றைக்க என்றி - இன்றையாகியபோது கழிக என்று கூறினாய்; கையும் காலும் ஓய்வன அழுங்க - கையும் காலும் ஓய்வனவாகி வருந்த, தீ உறு தளிரின் நடுங்கி - நெருப்பில் விழுந்த தளிரைப்போல நடுங்கி, யான் செயற்கு உரியது யாவதும் இலை - நான் செய்யத்தக்கது ஒன்றும் இல்லை.

(முடிபு.) நாடன் நின்றனன்; சென்றைக்கென்றி; அழுங்க நடுங்கிச் செயற்குரியது இலை.

(கருத்து.) நீ தலைவனுடன் இப்பொழுதே செல்லுதல் நலம்.

(வி - ரை.) தர - அழைப்பவெனலுமாம். குறி - குறித்த இடம். சென்றைக்கவென்பது வியங்கோட்பொருளில் வந்தது;

---

(பி - ம்.) * வொடுங்கித். † உடன்போக்கு. ‡ நாணுடைக் கேட்ப.

"இன்பத்தின் பக்க மிருந்தைக்க" (நாலடி. 79)
"ஆய மடமகளி ரெல்லீருங் கேட்டைக்க"
"எழுதெழின் மலருண்க ணிருந்தைக்க"
(சிலப். கஅ : 49, கக : 67)

எனப் பிற சொற்களும் இங்ஙனம் வருதல் காண்க.

தலைவி நாணமிகுதியினால், "இன்று போக, நாளைச்செல் வேம்" என்றாள்.

## மேற்கோளாட்சி

மு. * வருத்த மிகுதியால் தலைவனை வழிபடுதலை மறுத்துக் கூறு மிடத்துத் தலைவிக்குக் கூற்று நிகழும்; 'இத்தோழி கூற்றே சென்றைக்க வென்றதனால் தலைவி மறுத்தமை பெற்றாம்' (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

5. தளிரைப்போல நடுங்குதல்: "கொல்புனற் றளிரி னடுங்கு வனள்" (பதிற். ௫உ : 21.) (௩அ௩)

---

## தோழி கூற்று

[பரத்தையரிடத்திருந்து வந்த தலைவனை நோக்கி, "நின்சூள் பொய்யுடையது" என்று கூறித் தோழி வாயில்மறுத்தது.]

௩அச. உழுந்துடைக் † கழுந்திற் கரும்புடைப் பணைத்தோள்
நெடும்பல் கூந்தற் குறுந்தொடி மகளிர்
நலனுண்டு துறத்தி யாயின்
மிகநன் றம்ம ‡ மகிழ்ந நின் சூளே.

எ - து. "நின் பரத்தையர்க்கு நீ உற்ற சூளுறவு நன்றாயிருந் தது!" என்று நகையாடித் தோழி வாயில் மறுத்தது.

¶ ஓரம்போகியார்.

---

* இது, சிறந்ததாகத் தோன்றுகின்றது.

(பி - ம்.) † கழுதின். ‡ மகிழ்ந்த. ¶ காம்போதியார்.

(ப - ரை.) மகிழ்ந—தலைவ, உழுந்து உடை கழுந்தின் - உழுத் தங்காயை அடித்தற்கு உரிய கழுந்துள்ள தடியைப்போல உள்ள, கரும்பு உடை பணை தோள் - கரும்பெழுதிய தொய்யிலையுடைய பருத்த தோளையும், நெடு பல் கூந்தல் - நெடிய பலவாகிய கூந்தலையும், குறு தொடி மகளிர் - குறிய வளைகளையும் உடைய பரத்தையரது, நலன் உண்டு - பெண்மைநலத்தை நுகர்ந்து, துறத்தி ஆயின் - துறந்து ஈண்டு வருவாயாயின், நின் சூள் - நீ அவர் மாட்டுச் செய்த சூள், மிக நன்று - மிகநன்றாக இருந்தது!

(முடிபு.) மகிழ்ந, மகளிர் நலன் உண்டு துறத்தியாயின், நின் சூள் மிக நன்று!

(கருத்து.) நின்மொழியை மெய்யென்று எண்ணி மயங்கேம்.

(வி - ரை.) தலைவன், "அங்கவர் யாரையும் அறியேன்" என்று சூள் செய்தானாக, "நீ இங்ஙனமே பரத்தையர் மாட்டும் சூள் செய்து அவர் நலன் நுகர்ந்து இப்பொழுது பிரிந்தாய். அவ்வியல்பே ஈண்டும் நின்பால் உள்ளதாதலின் நின்சூள் ஏற்கத் தகுவதன்று" என்று தோழி கூறி வாயில் மறுத்தாள்.

உழுந்தை அடித்தற்குரிய தடியின் கழுந்து தேய்ந்து வழுவழுப் பாகவும் பருத்ததாகவும் இருத்தலின் அதனைத் தோட்கு உவமை கூறி ளுள். பரத்தையர் தோளுக்குக் கூறினமையின் பிற உயர்ந்த பொருள் களைக் கூருது இதனைக் கூறினாள். காமனது வில்லாகிய கரும்பின் உரு வத்தைக் குங்குமக் குழம்பால் மகளிர் தோளில் எழுதுதல் வழக்கம். தோளையுங் கூந்தலையும் சிறப்பித்துக் கூறியது முயங்குதற்குரிய இயல்பினரென்பது கருதி. மகளிரென்று பன்மை வாசகம் படக்கூறி யது தலைவன் பலர்பால் அன்புடையானென்பதை நினைந்து. இதுவே வாயின் மறுத்தற்கு ஏதுவாயிற்று.

அம்ம : வியப்புக் குறிப்பு. ஏ : ஈற்றசை

## ஒப்புமைப் பகுதி

1. **மகளிர்தோள்களில் கரும்பின் வடிவத்தை எழுதுதல் :** "தோண்மேற், கரும்பெழுது தொய்யிற்கு", "நற்றோ ளிழைத்த கரும் புக்கு", "தெரிவேய்த்தோட் கரும்பெழுதித் தொய்யில்செய் தனைத் தற்கோ", "நடாஅக் கரும்பமன்ற தோளாரை", "அன்றுதா னீர்த்த கரும்பணி வாடவென், மென்றோண் ஞெகிழ்த்தான்", "நெடுமென்

றேட், பெய்கரும் பீர்க்கவும் வல்லன்" (கலி. சுரு: 7-8, சுச: 19, எசு 15, ககஉ: 6, கருக: 29-30, கசரு: 31-2); "கரும்பும் வல்லியு பெருந்தோ ளெழுதி" (சிலப். உ: 29.)

2. சுறுந்தோடி: குறுந். உசுஎ: 5, ருடுசு: 8.

3. நலனுண்டு துறத்தல்: "தோணல முண்டு துறக்கப் பட்டோர்" (கலி. உரு: 8.)

4. தலைவனது சூள்: குறுந். உருஅ: 5, ஒப்பு. (ருஅச)

---

## தலைவி கூற்று

[நொதுமலர் வரைவொடு புகுந்தமையறிந்த தலைவி, "தலைவன் தன் அன்பிற் சிறிதும் குறையாதிருப்ப அதனை யறியாது இவ்வூரிற் புதியோர் சிலர் வந்தனர்" என்று கூறுவாளாய்த் தோழியை அறத்தொடு நின்று அவ்வரைவை மாற்றச் சொல்லியது.]

ருஅரு. பலவிற் சேர்ந்த பழமா ரினக்கலை
சிலைவிற் கானவன் செந்தொடை வெரீஇச்
செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்
இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்
பெருவரை யடுக்கத்துக் கிழவ னென்றும்
அன்றை யன்ன நட்பினன்
புதுவோர்த் * தம்மவிவ் வழுங்க லூரே.

எ - து. வேற்று வரைவு மாற்றியது.

["உயிர்செல, வேற்றுவரைவு வரினது மாற்றுதற் கண்ணும்" (தொல். களவு. 20.)]

கபிலர்.

(ப - ரை.) பலவில் சேர்ந்த பழம் ஆர் இனம் கலை - பலாமரத்திற்பொருந்திய பழத்தை உண்ட திரளையுடைய ஆண்குரங்குகள், சிலைவில் கானவன் செ தொடை வெரீஇ - சிலைமரத்தாற் செய்த வில்லையுடைய வேட்டுவனது குறிபிழையாச் செம்மையையுடைய அம்புத்

(பி - ம்.) * தாமிவ்.

தொடைக்கு அஞ்சி, செரு உறு குதிரையின் பொங்கி - போர்க் களத்தே அடைந்த குதிரையைப்போல மேலெழுந்து, சாரல் இரு வெதிர் நீடு அமை தயங்க - சாரலிலுள்ள பெரிய மூங்கிலினது நீண்ட கோல் அசைய, பாயும் - பாய்கின்ற, பெரு வரை அடுக்கத்து கிழவன் - பெரிய மலைப்பக்கத்தையுடைய தலைவன், என்றும் அன்றை அன்ன நட்பினன் - எப்பொழுதும் அன்றிருந்ததைப் போன்று மாறுபாடின்றி இருக்கும் நட்பையுடையான்; அங்ஙனம் இருப்பவும், இ அழுங்கல் ஊர் - இந்த ஆரவாரத்தையுடைய ஊரானது, புதுவோர்த்து - என் மணங்குறித்து வந்த புதியவர்களை யுடையது.

(முடிபு.) கிழவன் என்றும் அன்றையன்ன நட்பினன்; இவ் வூர் புதுவோர்த்து.

(கருத்து.) நொதுமலர் வரையப்புகுந்தனர்.

(வி - ரை.) சிலை - ஒருமரம் (கலி. க௩ : 1, ௩.); சிலைவில் - முழங்கும் வில்லெனலும் ஆம். கானவன் - பலாப்பழத்தைக்காக்கும் வேடன். செந்தொடை : செம்மை - நேர்மை; குறிபிழையாமையைக் கருதியது. போர்க்களத்துள்ள குதிரை மேலெழுதலை,

"விட்ட குதிரை விசைப்பி னன்ன
விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்"
(குறுந். எச : 1 - 2),

"வெடிவேய் கொள்வது போல வோடித்
தாவு புகளு மாவே" (புறநா. ௩0௨ : 1-2)

எனக் கூறியவற்றுலும் அறிக. குதிரையிற் பொங்கி அமை தயங்கும் படி கலைபாயுமென்று கூட்டிப் பொருள்செய்தலும் பொருந்தும்.

அன்றையென்ற சுட்டு இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த நாளைக் குறித்தது. புதுவோர் - வரைவின்பொருட்டு வந்த புதியோர். பல நாட்பழகி நட்பு வலிபெற்ற தலைவன் ஒருவன் இருப்பவும் புதியராகி வந்தாரை இவ்வூர் இன்று உடையதாயிருத்தல் நகைத்தற்கிடமாயிற் றென்னுங் குறிப்பினுல் அம்மவென்ருள்.

தோழிகேட்ப இங்ஙனங் கூறினமையின், வேற்றுவரைவினை மாற்றவேண்டுமென்ற தன் உள்ளக் கிடக்கையைத் தலைவி குறிப் பித்தாளாயிற்று.

## மேற்கோளாட்சி

மு. இறந்துபாடு பயக்குமாற்றால் தன்திறத்து நொதுமலர் வரையக் கருதிய ஞான்று அதனை மாற்றுதற்கண் தலைவி கூறியது (தொல். களவு. 20, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. பலாப்பழத்தைக் தூங்கு உண்ணுதல் : குறுந். ௩௪௨ : 1.

2. சிலைவில் : ஐங். ௩௬௩ : 1; அகநா. ௬௧ : 15; பெருங். ௩. 20 : 8.

செந்தொடை : புறநா. ௩ : 20.

3. போர்க்குதிரை பொங்குதல் : "தாங்கன்மின் றாங்கன்மின் றானை விறன்மறவிர், ஓங்கன் மதிலு ளொருதனி மா - ஞாங்கர், மயி ரணியப் பொங்கி மழைபோன்று மாற்றார், உயிருணிய வோடி வரும்" (பு. வெ. 90.)

6. அன்றையன்ன நட்பு : குறுந். ௧௧௧ : 6; குறிஞ்சிப். 238; நற். ௩௩௨ : 8; அகநா. ௩௩௨ : 15; பெருங். ௧. 35 : 34.

7. அழுங்கலூர் : குறுந். ௧௨ : 6, ௧௪௦ : 5, ஒப்பு, ௨௭௬ : 8, ௨௮௧ : 8. (௩௮௫)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில் ஆற்றவேண்டுமென்று வற்புறுத்திய தோழியை நோக்கி, "மாலைக்காலத்தில் காமநோய் மிகுவதனால் துன்புறுகின்றேன்" என்று தலைவி கூறியது.]

௩௮௬. வெண்மணல் விரிந்த வீததை கானற்
றண்ணந் துறைவன் றணவா வூங்கே
வாலிழை மகளிர் * விழவணி கூட்டும்
மாலையோ வறிவேன் மன்னே மாலை
நிலம்பரந் தன்ன † புன்கணொடு
புலம்புடைத் தாகுத லறியேன் யானே.

---

(பி - ம்.) * விழவணிக் கூட்டும். † புன்கணொடும்.

எ - து. பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குக் கிழத்தி * வன்புறை எதிரழிந்து கூறியது.

வெள்ளிவீதியார்.

(ப - ரை.) தோழி, வெள் மணல் விரிந்த - வெள்ளிய மணல் பரவிய, வீ ததை கானல் - மலர்கள் செறிந்த சோலையையுடைய, தண்ணந் துறைவன் - தண்ணிய கடற்றுறையையுடைய தலைவன், தணவா ஊங்கு - என்னைப் பிரியாத முன்காலத்தில், யான்—, வால் இழை மகளிர் - தூய அணிகலன்களை யணிந்த மகளிர், விழவு அணி கூட்டும் - விழவுக்குரிய அலங்காரங்களைத் தொகுக்கின்ற, மாலையோ அறிவேன் - மாலைக்காலத்தையே அறிவேனாயினேன்; மன் - இனி அது கழிந்தது! மாலை - அம்மாலைக்காலம், நிலம் பரந்தன்ன புன்கணொடு - பூமி பரந்தது போன்ற பெரிய துன்பத்தோடு, புலம்புடைத்து ஆகுதல் - தனிமையை உடையதாதலை, அறியேன் - அப்பொழுது அறியேன்.

(முடிபு.) துறைவன் தணவாவூங்கு யான் மகளிர் அணி கூட்டும் மாலையோ அறிவேன்மன்! மாலை புலம்புடைத்தாகுதல் அறியேன்.

(கருத்து.) தலைவரது பிரிவினால் மாலையில் என்பால் துன்பம் மிக்கது.

(வி - ரை.) தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்கினாளாக, "முன்பெல்லாம் இதுகண்டு வருந்ினையல்லை" என்ற தோழிக்குக் கூறியது இது.

மகளிர் விழவணி கூட்டு மாலையென்றது யானும் அவரோடு விழவணி கூட்டி மகிழ்ந்திருந்தேனென்னும் நினைவினது. மாலையோ: ஓ, பிரிநிலை. மன்: கழிவிரக்கப் பொருளது. ஏ: அசை நிலை. நிலம் பரந்தன்ன புன்கணென்றது அதன் பேரளவை புணர்த்தியபடி; "நிலத்தினும் பெரிதே" (குறுந். ௩: 1) எனப் பெருமைக்கு நிலம் கூறப்படுதல் மரபு.

புன்கண் - காமநோய் மிகுவதனால் வரும் துன்பம். புலம்பு - தலைவனைப் பிரிந்த தனிமை. அப்பொழுது அறியேனென்றமையின், இப்பொழுது அறிந்தேனென்றாளாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

3. வாலிழை மகளிர்: நற்றி. ௬௮: 2; கலி. ௧௧௧: 14.

(பி - ம்.) * வன்பொறையெதிரழிந்தது.

3, பி - ம். விழவணிக் கூட்டும் : அகநா. உசு : 3.

3-4. மாலையில் மகளிர் அலங்காரஞ் செய்து கொள்ளல் : "மாலை மணிவிளக்கங் காட்டி யிரவிற்கோர், கோலங் கொடியிடையார் தாங்கொள்ள" (சிலப். க : 3-4.)

2-4. குறுந். ௩௫௨ : 5-6, ஒப்பு. (௩அசு)

---

## தலைவி கூற்று

[தலைவன் பிரிந்த காலத்தில், "நீ ஆற்றல் வேண்டும்" என்று வற்புறுத்திய தோழிக்கு, "மாலைக்காலமும் யாமமும் எனக்குத் துன்பத்தைத் தருவனவாயின" என்று தலைவி கூறியது.]

௩அஎ. எல்லை கழிய முல்லை மலரக்
கதிர்சினந் தணிந்த கையறு * மாலையும்
† இரவரம் பாக நீந்தின மாயின்
எவன்கொல் வாழி தோழி
கங்குல் வெள்ளங் கடலினும் பெரிதே.

எ - து. பிரிவிடை வற்புறுத்துந் தோழிக்குக் கிழத்தி வன்புறை எதிரழிந்து கூறியது.

கங்குல் வெள்ளத்தார்.

(ப - ரை.) தோழி—, எல்லை கழிய - பகல் நீங்க, முல்லை மலர - முல்லைக் கொடிகள் மலர, கதிர் சினம் தணிந்த - சூரியனது வெப்பம் குறைந்த, கை அறு மாலையும் - செயலறுதற்குரிய மாலைக் காலத்தையும், இர வரம்பு ஆக - இராப்பொழுது எல்லையாக எண்ணி அது வருமட்டும், நீந்தினம் ஆயின் - கடந்தோமாயின், கங்குல் வெள்ளம் - அதன்மேல் வரும் அவ்விரவின் மிகுதி, கடலினும் பெரிது - கடலைக்காட்டிலும் பெரியது; எவன் - நாம் மாலையை நீந்துவதால் வரும் பயன் யாது?

(முடிபு.) தோழி, மாலையும் நீந்தினமாயின் கங்குல் வெள்ளம் பெரிது; எவன்கொல்?

(கருத்து.) மாலையும் யாமமும் தலைவரது பிரிவை நினைவுறுத்தித் துன்பம் செய்வனவாம்.

---

(பி - ம்.) * மாலை. † யுயிரை வரம்பாக.

(வி - ரை.) முல்லை மாலையில் மலர்ந்தது. மாலையும் : உம்மை, உயர்வுசிறப்பு. "செயலறுதற்குரிய மாலைக்காலத்தை நீந்தலே அரிது ; அதனை நீந்தினும் பின்வரும் கங்குல் அதனினும் துன்பஞ் செய்வதிற் பெரிதாயிற்று" என்றாள். சிறுபுன் மாலையாதலின் நீந்தினேனாயினும் மேல் வருவது பெருங்கடலைப்போன்ற கங்குலென்று வருந்தினாள் ;

தலைவி இங்ஙனம் இவ்விரண்டு பொழுதிற்கும் வருந்துதல்,

"வந்தன்று வாழியோ மாலை
ஒருதா னன்றே கங்குலு முடைத்தே" (குறுந். கஉஉ : 3-4)

என்று முன்னும் வந்தது.

மாலையைக் கடலாகவும் அதன் பின்னர்த்தாகிய இராவை அதன் வரம்பாகவும் வைத்துக் கூறினாள் ; ஒரு சிறுபொழுதை யடுத்து வரும் மற்றொரு சிறுபொழுதைக் கரையாகக் கூறும் இச்செய்யுளை நினைந்து பரிமேலழகர், 'கூடிய ஞான்று பிரிவரென்று அஞ்சப் பண்ணிய காலை, அஃது, ஒழிந்து இஞ்ஞான்று கங்குல் வெள்ளத்திற்குக் கரையாய் வாரா நின்றது' (குறள், 1225) என்று உரை எழுதினார் ;

"முழங்குகடற் பட்டோ ருழந்துபின் கண்ட
கரையெனக் காலை தோன்றலின்" (பெருங். க. 33 : 209)

இராவென்பது செய்யுளில் இரவென நின்றது ; (தொல். உயிர் மயங்கு. 32.) இரவரம் பென்றமையின் மாலையும் கடலாயிற்று ; இஃது ஏகதேச வுருவகம்.

எவன்கொல் - யாம் இனிச் செய்வது என் என்று பொருளுரைத்தலும் பொருந்தும் ; கொல், வாழி, ஏ : அசை நிலைகள் ; ஏ : தேற்றமுமாம்.

## ஒப்புமைப் பகுதி

2. கதிர்சினந்தணிந்த மாலை : குறுந். ககூ : 1-2.

கதிரின்சினம் : குறுந். ககூ : 1, ஒப்பு.

கையறுமாலை : குறுந். கூஉ : 1, ஒப்பு.

1-2. மாலையில் முல்லை மலர்தல் : குறுந். க0அ : 4-5, ஒப்பு.

4. வாழி தோழி : குறுந். உகூ0 : 4, ஒப்பு.

5. இரவுக்குக் கடல்: (குறுந். உ௪0: 6-7); "நிறைபுணையா, யாம நெடுங்கட னீந்துவேன்", "இருண்மாலை வெள்ளத்துள்" (பு.வெ. 298, 328); "அல்லாழிக் கரைகண்டான்......துயராழி நெடுங்கடலுட் டுயில்கின் றானே" (கம்ப. மிதிலைக். 154.) (௩அஎ)

---

## தோழி கூற்று

[தலைமகள் தன்னுடன் வருதற்கு உடம்பட்டமையை யுணர்ந்த தலைவன் பாலைநிலத்தின் இன்னாமையையும் அதில் நடக்க மாட்டாத தலைவியினது மென்மையையும் கருதிப் போதற்கு ஒருப்படானாக, "நும்மொடு வரின் தலைவிக்குப் பாலை இனியதாகும்" என்று தோழி கூறிச் செலவு உடம்படச் செய்தது.]

௩அஅ. நீர்கால் யாத்த நிரையிதழ்க் குவளை
கோடை * யொற்றினும் வாடா தாகும்
கவணை யன்ன பூட்டுப்பொரு தசாஅ
† உமணொருத் தொழுகைத் தோடுநிரைத் தன்ன
முளிசினை பிளக்கு முன்பின் மையின்
யானை கைமடித் துயவும்
கானமு மினியவா நும்மொடு வரினே.

எ - து. தலைமகள் உடன்போக்கு நேர்ந்தமை யுணர்ந்த தலைமகன், சுரத்து வெம்மையும் தலைமகள் மென்மையும் குறித்துச் செலவு அழுங்கலுறுவானைத் தோழி அழுங்காமற் கூறியது.

[அழுங்கலுறுவானை - தவிர்தற்குத் தொடங்குபவனை.]

‡ ஔவையார்.

(ப - ரை.) நீர்கால் யாத்த - நீரைத் தன்னுடைய அடியிலே கட்டப்பெற்ற, நிரை இதழ் குவளை - வரிசையாகிய இதழ்களையுடைய குவளைமலரானது, கோடை ஒற்றினும் - மேல்காற்று வீசினாலும், வாடாதாகும் - வாடாததாகும்; கவணை அன்ன பூட்டு

(பி - ம்.) * யெற்றினும். † உமணரொழுகைத். ‡ அவ்வையார்.

பொருது - கவணைப்போன்ற நுகத்தின் பிணிப்புப் பொருதமையால், அசா - வருந்துதலையுடைய, உமண் எருது ஒழுகை - உப்புவாணிகருடைய எருதுகள் பூட்டிய வண்டிகளின், தோடு நிரைத்தன்ன முளி சினை - தொகுதியை வரிசையாக வைத்தாற்போன்ற உலர்ந்த மரக் கிளைகளை, பிளக்கும் முன்பு இன்மையின் - பிளத்தற்குரிய வன்மை இல்லாமையால், யானை கை மடித்து உயவும் - யானை தன் துதிக்கையை மடித்து வருந்துகின்ற, கானமும் - பாலைநிலங்களும், நும்மொடு வரின் - நும்மோடு வந்தால், இனிய ஆம் - தலைவிக்கு இனிமையுடையனவாகும்.

(முடிபு.) குவளை வாடாதாகும்; நும்மொடு வரின் கானமும் இனிய ஆம்.

(கருத்து.) தலைவி நும்மோடுவரின் பாலைநிலம் அவளுக்கு இனியதேயாகும்.

(வி - ரை.) கால்யாத்த - கால்வாயின் வழியே கட்டப்பெற்ற வென்பதும் பொருந்தும். கோடைக்காற்று நீரில்லாத மலர் வாடுதற்கு ஏதுவாகும். கவண் கவணை யெனவும் வழங்கும் : "கடுவிசைக் கவணையிற் கல்கை விடுதலின்" (கலி. ௬௧ : 10.) பொருது - பொர; எச்சத்திரிபு. அசாஅ : முதனிலைத் தொழிற்பெயர். உமணர் உப்புப் பார மேற்றிய வண்டி பாலை நிலவழியே செல்லும்; பாலைநிலத்தி லுள்ள மரச்சினைக்கு அந்நிலத்திற் காணப்படும் உமணர் ஒழுகையையே உவமை கூறினாள்;

"...........................உமணர்
கொடுநுகம் பிணித்த செங்கயிற் றொழுகைப்
பகடசாக் கொள்ளும் வெம்முனைத் துகடொகுத்
தெறிவளி சுழற்று மத்தம்" (அகநா. ௩௨௧ : 5-8.)

உமணரது வண்டிகளுக்கு மேற்கூடின்மையின் அவற்றை உலர்ந்த சினைகளுக்கு உவமை கூறினாள். யானை பட்டையை உண்ணவேண்டிச் சினையைப் பிளந்தது; அது முளிசினை யாதலின் உறுதியுடையதாகிப் பாலையின் வெம்மையால் ஓய்ந்த யானையாற் பிளப்பதற்கு அரிதாயிற்று.

கானமும் : உம்மை, இழிவு சிறப்பு. நும்மொடுவரின் கானமும் இனியவா மென்றதனால் நும்மொடு வாராளாயின் வீடும் இன்னாத தாகுமென்பதும் பெறப்படும்; குறுந். ௧௨௪ : 4.

இதனால், "தலைவியின் மென்மை குறித்து அஞ்சாது உடன் கொண்டு செல்க" என அறிவுறுத்தினாளாயிற்று.

இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி.

## மேற்கோளாட்சி

மு. பாங்கி தலைமகனை உடன்படுத்தியது (நம்பி. 182.)

## ஒப்புமைப் பகுதி

1. நீர்க்குவளை : "தாழ்நீர்க் குவளையும்" (சிலப். கச : 76.)

2. கோடை ஒற்றல் : குறுந். ௩௪௩ : 5.

1-2. ஒருவாறு ஒப்பு : குறுந். ௩௯௮ : 6-8.

4. உமணருடைய வண்டிகள் : "நோன்பகட் டுமண ரொழுகை" (சிறுபாண். 55) ; "பெருங்கயிற் றொழுகை மருங்கிற் காப்பச், சில்பத வுணவின் கொள்ளை சாற்றிப், பல்லெருத் துமணர் பதிபோகு நெடுநெறி" (பெரும்பாண். 63-5) ; "உப்பொ யுமண ரருந்துறை போக்கும், ஒழுகை நோன்பகடு", "தெண்கழி விளைந்த வெண்க லுப்பின், கொள்ளை சாற்றிய கொடுநுக வொழுகை, உரனுடைச் சுவல பகடுபல பரப்பி, உம ணுயிர்த் திறந்த வொழிக லடுப்பின்", "வார்கயிற் றொழுகை நோன் சுவற் கொளீஇப், பகடுதுறை யேற்றத் துமண்விளி", "உப்பொ யுமண ரொழுகை" (அகநா. ௩௦ : 5-6, ௧௯௧ : 1-4, ௧௭௩ : 9-10, ௩௧௦ : 14) ; "உமணர், உப்பொயொழுகை" (புறநா. ௧௧௬ : 7-8.)

5. புளிசினை : குறுந் : ௩௧௬ : 3.

மு. "தீயினும் வெய்ய வென்குவை யாயின்
யாவது மினிய கானம்
சேயுயர் சிலம்ப நின்னொடு செலினே"

(தமிழ்நெறி. மேற். 90);

"பிணையுங் கலையும்வன் பேய்த்தே ரினைப்பெரு நீர்நசையால்
அணையு முரம்பு நிரம்பிய வத்தமு மையமெய்யே
இணையு மளவுமில் லாவிறை யோனுறை தில்லைத்தண்பூம்
பணையுந் தடமுமன் றேநின்னொ டேகினெம் பைந்தொடிக்கே"

(சிற். 202)

"மால்புரை யானை மணிமுடி மாறன்மண் பாய்கிழ் றும்
பால்புரை வெண்குடைத் தென்னன் பறந்தலைக் கோடிவென்ற

வேல்புரை வெம்மைய கான மெனினுமவ் வேந்தன்செய்ய
கோல்புரை தண்மைய வாகின்றெ டேகினெங் கொம்பினுக்கே ”
(பாண்டிக்);

“ மன்னெடு வேலினுய் மாழை மடநோக்கி
நின்னொடு செல்ல நெடுங்கானம் - கொன்னுனைய
வேலன்ன வெம்மைய வாயினும் வேந்தர்செங்
கோலென்ன லாகுங் குளிர்ந்து.” (கிளவிமாலை);

“ தீய பெருவனமுஞ் செந்தறையு நந்தறையும்
தூய பெருவனமுஞ் சோலையுமாம் - ஆய
கலம்பா முலைமகட்குக் காமருபூங் கண்ணிச்
சிலம்பாநின் பின்னர்ச் செலின் ” (கிளவித்தெளிவு.)
(௩அஅ)

---

## தோழி கூற்று

[தலைவன் வரைவுக்குரிய முயற்சிகளை மேற்கொண்டதனை அவனுடைய குற்றேவன்மகனால் அறிந்த தோழி அக்குற்றேவன்மகனை வாழ்த்தும் வாயிலாக அச்செய்தியைத் தலைவிக்கு உணர்த்தியது.]

௩அகூ. நெய்கனி குறும்பூழ் காய மாக
ஆர்பதம் பெறுக தோழி * யத்தை
பெருங்க னாடன் வரைந்தென வவனெதிர்
நன்றோ மகனே † யென்றனெனென்
நன்றே போலு மென்றுரைத் தோனே.

எ - து. தலைமகன்குற்றேவன்மகனால் வரைவுமலிந்த தோழி தலைமகட்குச் சொல்லியது.

வேட்டகண்ணன்.

(ப - ரை.) தோழி—, பெரு கல் நாடன் வரைந்தென - பெரிய மலைநாட்டையுடைய தலைவன் வரைவுக்குரிய முயற்சிகளை மேற்கொண்டானாக, அவன் எதிர் - அவனுக்கு முன், மகனே நன்றோ என்றனென் - குற்றேவன் மகனே, நலமா என்று கேட்டேன்; நன்றே என்றுரைத்தோன் - நலமே என்று கூறிய அவன், நெய் கனி

---

(பி - ம்.) * யத்தைப். † யென்றலின்.

குறும்பூழ் - நெய் மிக ஊறிய குறும்பூழ், காயமாக - சம்பாரத்தோடு கூடிய கறியாக, ஆர்பதம் பெறுக - உண்ணுகின்ற உணவைப் பெறுவானாக!

(முடிபு.) தோழி, நாடன் வரைந்தென நன்றே என்றனென்; நன்றேபோலும் என்றுரைத்தோன் ஆர்பதம் பெறுக!

(கருத்து.) தலைமகனுடைய குற்றேவன்மகனால் தலைவன் வரைவு மேற்கொண்டமையை யுணர்ந்தேன்.

(வி - ரை.) நெய்யிற் பொரிக்கப்படுதலின் நெய்கனிந்தது. குற்றேவன்மகனுக்கு ஏற்ற உணவு கூறினாள்.

அத்தை: அசைநிலை. நன்றே: ஏ, தேற்றம். போலும்: அசைநிலை. உரைத்தோனென்பதை முற்றாக்கினும் பொருந்தும்.

## மேற்கோளாட்சி

மு. தலைவன் குற்றேவன்மகனால் வரைவுமலிந்த தோழி தலைவிக்கு உரைத்தது (தொல். களவு. 23, ந.)

## ஒப்புமைப் பகுதி

2. ஆர்பதம்: குறுந். அ௩: 1, ஒப்பு.

3. பெருங்கல் நாடன்: சிறுபாண். 87.

மு. நன்மை செய்தோரை வாழ்த்துதல்: குறுந். அ௩, உ0௧.

(௩அ௬)

---

## கண்டோர் கூற்று

[பாலை நிலவழியே சேர்ந்துபோகும் தலைவனையும் தலைவியையும் கண்டோர், "பொழுது போயிற்று; ஆறலை கள்வரால் ஏதம் நிகழும்" என்று அறிவுறுத்தி மேற்செல்லுதலைத் தடுத்தது.]

௩௯0. எல்லு மெல்லின்று பாடுங் கேளாய்
செல்லா தீமோ சிறுபிடி துணையே
வேற்றுமுனை வெம்மையிற் சாத்துவந் திறுத்தென
வளையணி நெடுவே லேந்தி
மிளைவந்து பெயருந் தண்ணுமைக் குரலே.

எ - து. புணர்ந்துடன் போயினரை இடைச்சுரத்துக் கண்டார், பொழுதுசெலவும் பகையுங் காட்டிச் செலவு விலக்கியது.

உறையூர் முதுகோற்றன்.

(ப - ரை.) *சிறுபிடி துணையே - சிறிய பிடிபோன்றவளுக்குத் துணையாகியவனே, எல்லும் எல்லின்று - சூரியனும் விளக்கம் இலனா னன்; சாத்து வந்து இறுத்தென - வணிகர்கூட்டம் வந்து அடைந்த தாக, வேற்று முனை வெம்மையின் - பகைப்புலத்தே கொள்ளும் பகைமையைப் போல, வளை அணி நெடுவேல் ஏந்தி - வளையை யணிந்த நெடிய வேலை ஏந்தி, மிளைவந்து - காவற்காட்டினிடத்தே வந்து, பெயரும் தண்ணுமை குரல் - பெயரும் ஆறலைப்போரது தண்ணுமையென்னும் வாத்தியத்தினுடைய முழக்கத்தினது, பாடும் கேளாய் - ஒலியையும் கேள்; ஆதலின், செல்லாதீம் - நீவி ரிருவரும் போதலை ஒழிமின்.*

(முடிபு.) *சிறுபிடி துணையே, எல்லும் எல்லின்று; குரலின் பாடும் கேளாய்; செல்லாதீம்.*

(கருத்து.) *மேலே இந்நிலத்திற் செல்லுதலைத் தவிர்மின்.*

(வி - ரை.) *பாடும்; உம்மை, இறந்தது தழீஇயது. ஓ: அசைநிலை. தலைவன் வலியனாயினும் உடன்வருவாள் பொருட்டேனும் செலவு தவிர்தல் வேண்டுமென்பது கண்டோர் கருத்தாதலின் 'சிறுபிடி துணையே' என்றார்.*

*பாலைநிலத்திற் செல்லும் வணிகர்கூட்டத்தை எதிர்த்து அவரது பொருளைக் கைக்கொள்ளல் ஆறலைகள்வர்க்கு இயல்பு. ஆறலை கள்வர் தண்ணுமை யொலியைக் கேளாயென்றது, அவரால் நுமக்கு ஏதம் வருமென்பதை அறிவுறுத்தியபடி. குரலே: ஏ, அசைநிலை. குரலினது பாடும் கேளாயென இயைக்க.*

## மேற்கோளாட்சி

மு. *இடைச்சுரத்துக் கண்டோர் பொழுதும் ஆறும் உட்குவரத் தோன்றி வழுவினகிய குற்றம் காட்டியது* (தொல். *அகத்*. 40, ந.)

## ஒப்புமைப் பகுதி

1. எல்லும் எல்லின்று: குறுந். கஉக: 1, கஎக: 2, ஒப்பு.

2. செல்லாதீம் : குறுந். ௩௫௦ : 2, ஒப்பு.

3. வேற்று முனை : அகநா. ௬௭ : 11, ௧௩௧ : 12.

5. ஆறலைகள்வரின் தண்ணுமை : "வேட்டக் கள்வர் விசியுறு கடுங்கட், சேக்கோ ளறையுந் தண்ணுமை, கேட்குநள் கொல்லெனக் கலுழுமென் னெஞ்சே" (அகநா. ௬௩ : 17-9.)

3-5. ஆறலை கள்வர் சாத்தெறிதல் : அகநா. ௧௬௭ : 7-9, உசரு : 6, உ௯௧ : 13-5 ; பெருங். ௧. 52 : 26, 55 : 47-9. (௩௯௦)

---

## தலைவி கூற்று

[பிரிவிடைப் பருவவரவின்கண் ஆற்றுளென வருந்திய தோழியை நோக்கி, "கார்காலம் வந்தது ; மயில்கள் கூவின ; அவை பேதைமையுடையன போலும்" என்று தலைவி கூறியது.]

௩௯௧. உவரி யொருத்த * லுழாது மடியப்
புகரி புழுங்கிய புயனீங்கு புறவிற்
கடிதிடி யுருமிற் † பாம்புபை யவிய
இடியொடு மயங்கி யினிதுவீழ்ந் தன்றே
வீழ்ந்த மாமழை தழீஇப் பிரிந்தோர்
கையற வந்த பையுண் மாலைப்
பூஞ்சினை யிருந்த போழ்கண் மஞ்ஞை
தாநீர் நனந்தலை புலம்பக்
கூஉந் தோழி பெரும்பே தையவே.

எ - து. பிரிவிடைப் பருவவரவின்கண் ஆற்றுளெனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி அழிந்து சொல்லியது.

பொன்மணியார்.

(ப - ரை.) தோழி—, ஒருத்தல் உவரி - எருதானது வெறுத்து, உழாது மடிய - உழாமல் சோம்பிக்கிடக்கும்படி, புகரி புழுங்கிய - மான் வெம்மையோடு கிடந்த, புயல் நீங்கு புறவில் - மழை நீங்கிய முல்லை நிலத்தில், கடிது இடி உருமின் பாம்பு பை அவிய - விரைந்து

(பி - ம்.) * லுழாஅது. † பாம்பு பையவிந் திடியொடு.

இடிக்கும் உருமேற்றினால் பாம்புகளின் படம் அழிய, இடியொடு மயங்கி இனிது வீழ்ந்தன்று - இடியோடு கலந்து மழை இனியதாகப் பெய்தது; வீழ்ந்த மா மழை தழீஇ - அங்ஙனம் பெய்த பெரிய மழையைப் பொருந்தி, பிரிந்தோர் கையற வந்த - தலைவரைப் பிரிந்த மகளிர் செயலறும்படி வந்த, பையுள் மாலை - துன்பத்தைத் தரும் மாலைக்காலத்தில், பூ சினை இருந்த போழ் கண் மஞ்ஞை - மலரையுடைய கொம்பிலிருந்த போழ்ந்தாற்போன்ற கண்களையுடைய மயில்கள், தாம் நீர் நனந்தலை புலம்ப - பாய்கின்ற நீரையுடைய அகன்ற இடம் தனித்து வருந்த, கூஉம் - கூவாநின்றன; பெரு பேதைய - அவை மிக்க பேதைமையை யுடையன.

(முடிபு.) தோழி, மழை ஒருத்தல் மடியப் பாம்பு பை அவிய மயங்கி வீழ்ந்தன்று; மழை தழீஇ வந்த மாலை கூஉம்; பெரும் பேதைய.

(கருத்து.) கார்காலம் வந்தமையின் யான் வருந்துவேன்.

(வி - ரை.) உவரி - உவர்த்து; வெறுத்து. புகரி - மான்; புகர் - புள்ளி; அதனையுடையது புகரி;

"புகருழை யொருத்தல்" (அகநா. உ௧௧ : 13.)

என வருதல் காண்க.

"மழை பெய்தது; அதுகண்டு மயில்கள் கூவின; இவை கார்காலத்தைப் புலப்படுத்துகின்றன; யான் எங்ஙனம் ஆற்றுவேன்!" என்று தலைவி கூறினாள். ஏ : அசைநிலை; வினாவுமாம்.

## ஒப்புமைப் பகுதி

3-4. இடியாற் பாம்பு வீழ்தல் : குறுந். ௧௫௮ : 1-2, ஒப்பு.

6. பையுண்மாலை : குறுந். ௧௭௨ : 2.

கையறவந்த மாலை : குறுந். ௩௨ : 1, ௩௮௭ : 2.

7-9. மஞ்ஞை பேதைய : குறுந். உ௫௧ : 1.

மஞ்ஞை கார்காலத்தில் கூவுதல் : குறுந். ௧௯௪ : 3. (௩௧௧)

## தோழி கூற்று

[தலைவன் வரைவு நீட்டித்தானாக அவன் சிறைப்புறத்தே நிற்குங்கால் தோழி, வண்டினை நோக்கிக் கூறுவாளாகி, "தலைவி இன்னும் தன் வீட்டிலேயே உறைகின்றாளென்று சொல்வாயாக" என்றது.]

நகூஉ. அம்ம வாழியோ * வணிச்சிறைத் தும்பி
நன்மொழிக் கச்ச மில்லை † யவர்நாட்
டண்ண னெடுவரைச் சேறி யாயிற்
‡ கடமை மிடைந்த துடவையஞ் சிறுதினைத்
¶ துளரெறி நுண்டுகட் களைஞர் தங்கை
$ தமரிற் றீரா ளென்மோ வரசர்
§ நிரைசெல னுண்டோல் போலப்
பிரசந் தூங்கு ** மலைகிழ வோர்க்கே.

எ - து. வரைவிடைக் கிழத்தியது நிலைமை தும்பிக்குச் சொல்லுவாளாய்ச் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.]

தும்பிசேர் கீரனார்.

(ப - ரை.) அணி சிறை தும்பி - அழகிய சிறகுகளையுடைய தும்பியே, அம்ம - ஒன்று கூறுவன் கேட்பாயாக: நல் மொழிக்கு அச்சம் இல்லை - நல்ல மொழிகளை ஒருவர்பால் கூறுந்திறத்தில் அச்சம் இல்லை; அவர் நாடு - அத்தலைவருடைய நாட்டிலுள்ள, அண்ணல் நெடு வரை சேறி ஆயின் - தலைமையையுடைய உயர்ந்த மலைக்குச் செல்வாயாயின், அரசர் நிரை செலல் நுண் தோல் போல - அரசர்களது வரிசையாகச் செல்லுதலையுடைய நுண்ணிய கேடகங்களைப் போல, பிரசம் தூங்கும் மலைகிழவோர்க்கு - தேனடைகள் தொங்குகின்ற மலையையுடைய தலைவரிடத்தில், கடமை மிடைந்த - கடமைமான்கள் நெருங்கிய, துடவை அம் சிறுதினை-தோட்டத்திலுள்ள அழகிய சிறு தினையினிடத்தே, துளர் எறி நுண் துகள் களைஞர் தங்கை-களைக்கொட்டை எறிவதனால் உண்டாகிய நுண்ணிய புழுதியையுடைய களையெடுப்பாருடைய தங்கையாகிய தலைவி, தமரின் தீராள்-

(பி - ம்.) * மணிச்சிறைத். † யவர்நாட்டுத்தண்ணெ. ‡ கடவை ¶ துளிரெறி. $ தமராற். § நிரைசேர் நுண்டேர்போல. ** மலைகிழு வோற்கே.

தன் சுற்றத்தாரிடத்தினின்றும் நீங்காளாயினள் ; என்மோ - என்று கூறுவாயாக.

(முடிபு.) தும்பி, அச்சம் இல்லை ; சேறியாயின் மலைகிழ வோர்க்கு, களைஞர் தங்கை தீராளென்மோ.

(கருத்து.) வண்டே, தலைவியினுடைய நிலையை நீ போய்த் தலைவனுக்குச் சொல்லுவாயாக.

(வி - ரை.) தலைவன் வரைந்து கொள்வதாக உறுதி கூறியும் நீட்டித்த காலத்தில் தோழி கூறியது இது. வண்டை நோக்கிக் கூறினளாயினும், சிறைப்புறத்தானாகிய தலைவனுக்கு உணர்த்துவதே அவள் கருத்து.

வாழியோ : அசைநிலை ; தும்பியால் முடித்துக்கொள்ளும் குறை யுடைமையின் அதனை வாழ்த்தியதுமாம். மணிச்சிறை யென்னும் பாடத்திற்கு, நீலமணியைப்போன்ற சிறகென்று பொருள் கொள்க.

'நன்மொழிக்கு அச்சமில்லை' என்றது, தான் கூறப்புகுவது நன்மை பயப்பதென்னும் கருத்தை உண்டாக்கியது. துளரெறிந்தமையால் மண்ணின் துகள் மேனியிற் படிந்தது. துளர் - களைக்கொட்டு (மலைபடு. 122, உரை.)

தமரிற்றீராளென்றது, தலைவனால் வரையப்பட்டுத் தலைவனோடிருந்து இல்லறம் நடத்தற்குரியவள் இன்னும் தமரோடு வாழும் வாழ்க்கையையே யுடையவளாயினளென்னும் குறிப்பினது. மோ : முன்னிலையசை.

தமரின்தீராள் - தமர் செய்யும் கொடுமை உயிர் நீக்குமளவினதாயிருப்பவும், இன்னும் வாழ்வாளாயினளென்று பொருள் கொள்ளுதலும் ஒன்று ; இக்கருத்து, தமரது காப்புமிகுதி முதலிய கொடுமைகளைத் தலைவனுக்கு அறிவுறுத்துவது.

நுண்டேர்போலவென்ற பாடத்திற்கு நுண்ணிய கைத்தொழிலையுடைய தேரைப்போலவெனப் பொருள்கொள்க. ஏ : ஈற்றசை.

தும்பியை விளித்துக் கூறியதாக அமைத்தமையின் இச்செய்யுளைப் பாடிய புலவர் தும்பிசேர் கீரனாரென்னும் பெயர் பெற்றார் போலும்.

## ஒப்புமைப் பகுதி

1. அணிச்சிறைத் தும்பி: "அஞ்சிறைத்தும்பி" (குறுந். உ: 1, ஒப்பு.)

1, பி - ம். மணிச்சிறைத்தும்பி : கலி. சகு : 2.

3. அண்ணல் நெடுவரை : குறிஞ்சிப். 54 ; அகநா. எடு : 8.

8. பிரசந்தூங்குமலை : குறுந். உஎக : 5, ஒப்பு.

7-8. தேனடைக்குக் கேடகம் : சீவக. 1561.

மு. வண்டுவிடு தூது : நற். உஎஎ. (கூகூஉ)

---

## தோழி கூற்று

[தலைவன் சிறைப்புறத்தே நிற்ப, "தலைவன் நின்னோடு பழகிய காலம் சிறிதாயினும் அது குறித்து எழுந்த அலர் பெரிதாயிற்று" என்று தலைவிக்குக் கூறுவாளாய்த் தோழி வரைவின் இன்றியமையாமையை உணர்த்தியது.]

கூகூகூ. மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்
முயங்கிய நாடவச் சிலவே யலரே
கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்
பசும்பூட் பாண்டியன் வினைவ லதிகன்
களிறொடு பட்ட * ஞான்றை
ஒளிறுவாட் கொங்க ரார்ப்பினும் பெரிதே.

எ - து. தலைமகன் சிறைப்புறமாகத் தோழி அலர்மலிவுரைத்து வரைவுகடாயது.

பரணர்.

(ப - ரை.) மகிழ்நன் - தலைவன், மயங்கு மலர் கோதை குழைய - விராவிய மலரையுடைய நின் மாலை குழையும்படி, முயங்கிய நாள் - அணைந்த நாட்கள், தவ சில - மிகச் சிலவாகும் ; அலர் - பழிமொழியோ, கூகை கோழி - கோட்டானாகிய கோழியை

(பி - ம்.) * ஞான்றே.

யுடைய, வாகை பறந்தலை - வாகையென்னு மிடத்துள்ள போர்க்களத்தில், பசு பூண் பாண்டியன் வினை வல் அதிகன் - பசிய பூணையணிந்த பாண்டியனது ஏவலிலே வல்ல அதிகன், களிறொடு பட்ட ஞான்றை - தனது யானையோடு பட்ட காலத்தில், ஒளிறு வாள் கொங்கர் ஆர்ப்பினும் பெரிது - விளங்குகின்ற வாட்படையையுடைய கொங்கர்களுடைய வெற்றியாலுண்டாகிய ஆரவாரத்தினும் மிக்கது.

(முடிபு.) மகிழ்நன் முயங்கிய நாள் சிலவே; அலர் ஆர்ப்பினும் பெரிது.

(கருத்து.) அலர் மிக்கது.

(வி - ரை.) கோதை: தலைவி யணிந்தது. கோதை குழைய முயங்குதல் முயக்கத்தின் செறிவை உணர்த்தியது. சிலவே: ஏ, பிரிநிலை. அலரே: ஏ, அசைநிலை.

கோழியிருந்து கூவ வேண்டிய விடத்துக் கூகை கூவிற்றாதலின் கூகைக் கோழி யென்றார்;

"கூகைக் கோழி யானைத்
தாழிய பெருங்காடு"                (புறநா. ௩௬௪: 12-3);

கூகையொடு சேர்ந்த காட்டுக் கோழி யென்பதும் பொருந்தும்.

வாகைப் பறந்தலையை, "சூடா வாகைப் பறந்தலை" (அகநா. ௱௨௫: 19) எனப்பிறவிடத்தும் இவ்வாசிரியரே கூறுவர். வாகையென்பது ஓரூர்ப்பெயர் போலும்.

அதிகன் பசும்பூட் பாண்டியனுடைய அதிகாரிகளுள் ஒருவன்; இச்செய்தி; பரணர் பாடிய, "கொளக்குறை படாஅ" (அகநா. ௱௨) என்னும் பாட்டிற் குறிப்பிக்கப்பெறும்.

பசும்பூட் பாண்டியனுக்கும் கொங்கருக்கும் பகைமை யுண்டென்பதும் அவ்விருவரிடையே போர் நிகழ்ந்ததென்பதும்,

"வாடாப் பூவிற் கொங்க ரோட்டி
நாடுபல தந்த பசும்பூட் பாண்டியன்"
                (அகநா. ௨௫௩: 4-5)

எனபதனால் வெளியாகும். கொங்கரால் அதிகன் போரிற் கொல்லப்பட்ட பின்னர்ப் பாண்டியன் மிடல் கொண்டு கொங்கரொடு பொருது அவரைத் தோல்வியுறச் செய்திருத்தல் கூடும்.

களிற்றொடுபடுதல் களிற்றுடனிலை யென்னும் துறைப்பாற் படும். வென்ற வீரர் ஆர்த்தல் இயல்பு. பெரிதே : ஏ, அசை நிலை; தேற்றமுமாம்.

## ஒப்புமைப் பகுதி

1-2. கோதை குழைய முயங்குதல்: கலி. கூஅ : 14, கக : 11-2, ககஉ : 23; புறநா. எரு : 14; சீவக. 582, 2034.

5. களிறொடுபடுதல்: "குன்றத் தன்ன களிற்றொடு பட்டோன்" (புறநா. ரு0எ : 2.)

6. வென்றவீரர் ஆர்த்தல்: குறுந். ரூச : 5, ஒப்பு.

2-6. அலர் ஆர்ப்பினும் பெரிது : குறுந். ரூஉஅ : 4-8, ஒப்பு.

(ருகூரு)

---

## தோழி கூற்று

[வரைவிடை வைத்துத் தலைவன் பிரிந்த காலத்து ஆற்றாளாகிய தலைவியை நோக்கி, "தலைவன் முன்பு இனியனாகத் தோற்றி இப்பொழுது இன்னாமைக்கு ஏதுவானான்" என்று தோழி கூறியது.]

ருகூச. முழந்தா ளிரும்பிடிக் கயந்தலைக் குழவி
நறவுமலி * பாக்கத்துக் குறமக ளீன்ற
குறியிறைப் புதல்வரொடு மறுவந் தோடி
† முன்னா ளினிய தாகிப் பின்னாள்
‡ அவர்தினை மேய்தந் தாங்குப்
பகையா கின்றவர் நகைவிளை யாட்டே.

எ - து. வரைவிடை ஆற்றாளாகிய கிழத்தியை ஆற்றுவிக்கும் தோழி, தலைமகனை இயற்பழித்துக் கூறியது.

¶ குறியிறையார்.

---

(பி - ம்.) * யாகத்து. † சில பிரதிகளில் இதற்கு முன் 'கூரை முற்றுஞ் சார னாடன்' என ஓரடி காணப்படுகின்றது. ‡ அவர்தினைப் புனமேய்ந்தாங்கு. ¶ குறையிறையார்.

(ப - ரை.) முழந்தாள் இரு பிடி - முழந்தாளையுடைய கரிய பிடியினது, கய தலை குழவி - மெல்லிய தலையையுடைய கன்று, நறவு மலி பாக்கத்து - கள்மிக்க மலைப்பக்கத்தூரில், குறமகள் ஈன்ற - குறத்தி பெற்ற, குறி இறை புதல்வரொடு மறுவந்து ஓடி - குறிய கைச் சந்தையுடைய பிள்ளைகளோடு சுற்றி ஓடி, முன் நாள் இனியதாகி - முற்காலத்தில் இனிமையைத் தருவதாகி, பின் நாள் - பிற்காலத்தில், அவர் தினை மேய்ந்தாங்கு - அவர்களுடைய தினையை மேய்ந்தாற் போல, அவர் நகை விளையாட்டு - தலைவர் நம்மோடு முன்பு நகைத்து விளையாடியது, பகையாகின்று - இப்போது பகைமையையுடையதாகின்றது.

(வி - ரை.) குறிய இறை, குறியிறையென விகாரம்; சிறிய விலை, சிறியிலை (புறநா. ௩௦௧ : 4) என்பது போல. "குறவர் குழந்தைகளோடு விளையாடி மகிழ்ச்சியை விளைவித்த யானைக்கன்று பின் அவருக்குரிய தினையையுண்டு அவருக்குத் துன்பத்தை விளைத்தது போல முன்னாள் நின்னோடு அளவளாவி மகிழ்ந்த தலைவனது நட்பு அப்பொழுது இன்பத்தைப் பயந்து இப்பொழுது நின் அழகு கெடுதற்கு ஏதுவாயிற்று" என்று உவமையை விரித்துக் கொள்க;

"..............................நன்மலை நாடன்
புணரிற் புணருமா ரெழிலே பிரியின்
மணிமிடை பொன்னின் மாமை சாயவென்
அணிநலஞ் சிதைக்குமார் பசலை யதனால்
அசுணங் கொல்பவர் கைபோ னன்றும்
இன்பமுந் துன்பமு முடைத்தே
தண்கமழ் நறுந்தார் விறலோன் மார்பே"
(நற். ௩௦௪ : 4-10)

என்பதில் இக்கருத்து வேறு வகையாக அமைக்கப்பட்டுள்ளது.

நகைவிளையாட்டு : இடக்க ரடக்கல்.

அவர் முன்பு இன்பத்தைத் தருபவர்போலத் தோற்றி விளையாடிப் பின் துன்பத்தை விளைவித்து வஞ்சித்தாரென்பது படக் கூறினமையின் இஃது இயற்பழித்ததாயிற்று.

## ஒப்புமைப் பகுதி

1. முழந்தாள் இரும்பிடி : பெரும்பாண். 53 ; மலைபடு. 127 ; கலி. ௫௦ : 2.

கயந்தலை : நற். ௧௭௪ : 3 ; கலி. ௧௧ : 8.

2. நறவுமலிபாக்கம் : மதுரைக். 137.

1-3. துறச்சிறுநும் யானைக்கன்றும் : "கருங்க ணெயிற்றி காதன் மகனொடு, கான விரும்பிடிக் கன்றுதலைக் கொள்ளும்" (புறநா. ௧௮௧ 2-3.)

6. நகை விளையாட்டு : குறுந். ௩௦௪ : 8, ௪௦௧ : 5.

விளையாட்டுப் பகையாதல் : சீவக. 909.

மு. குறுந். ௩௮௧ : 3-7. (௩௯௪)

---

## தலைவி கூற்று

[தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்தகாலத்தில் ஆற்றாளாகிய தலைவி, "நாம் தலைவனிருக்கும் இடத்திற்குச் செல்வேமாக" என்று தோழிக்குக் கூறியது.]

௩௯௫. நெஞ்சே நிறையொல் லாதே யவரே
அன்பின் மையி னருள்பொரு ளென்னார்
வன்கண் கொண்டு வலித்துவல் லுநரே
அரவுநுங்கு மதியினுக் † கிவணோர் போலக்
களையா ராயினுங் கண்ணினிது படீஇயர்
‡ அஞ்ச லென்மரு மில்லை யந்தில்
அளிதோ தானே நாணே
ஆங்கவர் வதிவயி னீங்கப் படினே.

எ - து. வரைவிடை வைத்துப் பிரிய, ஆற்றளாகிய கிழத்தி நாம் ஆண்டுச் சேறுமெனத் தோழிக்கு உரைத்தது.

$ ..........................

(ப - ரை.) நெஞ்சு நிறை ஒல்லாது - என் நெஞ்சம் நிறுத் தலைச் செய்ய இயலாது ; அவர் - அத்தலைவர், அன்பு இன்மையின்

---

(பி - ம்.) * யாவது மதியிற், அரவுறுமதியிற். † மதியிற் கிவணோா. ‡ அஞ்சேல். ¶ யாங்காவாவதுவை, யாங்காவாவது.

$ ஆசிரியர்பெயர் காணப்படவில்லை.

என்பால் அன்பின்மை காரணமாக, அருள் பொருள் என்னார் - அருளைப் பொருளென்று கருதாராயினர்; வன்கண் கொண்டு வலித்து வல்லுநர் - வன்கண்மையை மேற்கொண்டு என்னை வற்புறுத்தி அவ்வற்புறுத்தலில் வன்மையைப் பெற்றோர், அரவு நுங்கு மதியி ுக்கு இவணோர் போல - அரவினால் உண்ணப்படும் சந்திரன் திறத் ில் இவ்வுலகத்திலுள்ளோர் செயல் போல, களையார் ஆயினும் - னது துன்பத்தை நீக்காராயினும், இனிது கண் படீஇயர் - இனிமையாகக் கண்படுகின்றனர்; அஞ்சல் என்மரும் இல்லை - அஞ்சற்க வென்று கூறி நம்மைத் தேற்றுவாரும் இங்கே இல்லை; ஆதலின், ஆங்கு அவர் வதி வயின் - அங்கே அத்தலைவர் தங்குமிடத்திற்கு, நீங்கப்படின் - நாம் நீங்கிச் சென்றால், நாண் அளிது - நம் நாணம் இரங்கத்தக்கது; அஃது அழியும்.

(முடிபு.) நெஞ்சு நிறை ஒல்லாது; அவர் அருள்பொருள் என்னார்; வலித்து வல்லுநர் கண் இனிது படீஇயர்; அஞ்சலென்மரும் இல்லை; நீங்கப்படின் நாண் அளிது.

(கருத்து.) நாம் தலைவர் உள்ள இடத்திற்குச் செல்வேமாக.

(வி - ரை.) நிறை - நிறுத்தல்; காமத்தை ஆற்றி நிறுத்தல்; அங்ஙனம் நிறுத்தல் கூடுமெனின் தலைவி ஆற்றுவாள்; அது கூடாமையின் ஆற்றாளாயினள். அவர்: நெஞ்சறி சுட்டு. அன்பு இன்மையின் அருளும் இலதாயிற்று; அன்பு விரிந்து அருளுண்டாதல் இயல்பு (குறுந். உ௦: 1.) 'அருளையே பெறுதற்குரிய பொருளாகக் கருதினாராயின் அவ்வருளைத் துறவாது என்பால் இரக்கம் பூண்டு ஈண்டே இருப்பர்' என்பது தலைவியின் நினைவு. வலித்து வல்லுநரென்றது தோழியை.

'சந்திர கிரகணம் வந்தகாலத்தில் அதைக்கண்டு பலபேசிப் பின் துயில்வாரைப் போலத் தோழி என் துயரைக் கண்டு பல கூறி வற்புறுத்திப் பின் இனிதே துயின்றாள்' என்பது பட உவமை நின்றது.

இவணென்றது இவ்வுலகத்தைக் குறித்தது (புறநா. ௫௦: 14.)

தலைவர் அருள் பொருளென்னாராகித் துணிந்து என்னைப் பிரியும் வன்மை பெற்றார்; ஈண்டுள்ளாரில் என் துயரத்தைக் களையாராயினும் யான் துயிலும்படியாவது அஞ்சலென்று கூறுவாரில்லை' என்று பொருள்கொள்ளுதலும் ஆம்.

*தலைவன் உள்ளவிடத்துப் போவேமாகவென்று தலைவி கூறும் மரபு,*

*"காமக் கிழவ னுள்வழிப் படினும்*
*தாவி னன்மொழி கிழவி கிளப்பினும்"* (தொல். களவு. 22)

*என்னும் இலக்கணத்தாற் பெறப்படும். அங்ஙனம் போவதாயின் நாண் அழியும்;*

*"பகலே பலருங் காண நாண்விட்*
*டகல்வயற் படப்பை யவனூர் வினவிச்*
*சென்மோ"* (நற். ௩௬௫ : 3-5, பி - ம்.)

*நீங்கப்படினென்றது, நீங்கும் விருப்பத்தையும் அது செய்தலருமை யையும் புலப்படுத்தியது.*

*ஏகாரங்கள், ஓ, தான் : அசைநிலைகள்.*

## ஒப்புமைப் பகுதி

2. அருள் பொருளென்னுர் : (குறுந். உ0 : 1-2, ஒப்பு) ; *"பொருள் வயிற் பிரிதல் வேண்டுமென்னும், அருளில் சொல்லு நீசொல் லினையே"* (கலி. உக : 4-5.)

3. வல்லுநர் : குறுந். *கஅ0* : 7.

2-3. தலைவன் அன்பும் அருளும் இன்றிப் பிரிதல் : குறுந். உக : 1-2, ஒப்பு.

4. அரவு நுங்குமதி : *"பாம்புசேர் மதிபோல"* (கலி. *கரு* : 17); *"அரவுநுங்கு மதியி னையென மறையும்"* (அகநா. *ககச* : 5) ; *"அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டென"* (தொல். அகத். 3, ந. மேற்.) ; *"காள மாசுணங் கதிர்மதிக் குழவியைக், கோளிழைத் திருக்குங் கொள்கை போல"* (திருவாநூர். மும். 25.)

7. அளிதோதானே : குறுந். உகஉ : 4, ஒப்பு.

7, மு. குறுந். *கசக* : 1.

8. தலைவி தலைவன் இருக்குமிடஞ் செல்ல நினைதல் : குறுந். *கக*.

(௩௬௫)

## செவிலித்தாய் கூற்று

[தலைவனுடன் தலைவி சென்றபின் செவிலித்தாய் அவளது இளமைத் தன்மையையும் பாலையின் வெம்மையையும் நினைந்து வருந்திக் கூறியது.]

௩௧௬. பாலு முண்ணாள் பந்துடன் மேவாள்
விளையா டாயமொ டயர்வோ ளினியே
எளிதென வுணர்ந்தனள் கொல்லோ *முளிசினை
ஓமை குத்திய உயர்கோட் டொருத்தல்
வேனிற் குன்றத்து ‡வெவ்வரைக் கவாஅன்
மழைமுழங்கு கடுங்குர லோர்க்கும்
கழைதிரங் காரிடை யவனொடு செலவே.

எ - து. மகட்போக்கிய தாய் உரைத்தது.

கயமன்.

(ப - ரை.) பாலும் உண்ணாள் - பாலையும் உண்ணாளாகி, பந்துடன் மேவாள் - பந்தையும் விரும்பாளாகி, விளையாடு ஆயமொடு அயர்வோள் - முன்னர்த் தன்னோடு விளையாடும் மகளிர் கூட்டத்தோடு விளையாடிய தலைவி, இனி - இப்பொழுது, முளி சினை ஓமை குத்திய - உலர்ந்த கிளையையுடைய ஓமைமரத்தினைக் குத்திய, உயர் கோடு ஒருத்தல் - உயர்ந்த கொம்பையுடைய ஆண்யானை, வேனில் குன்றத்து வெ அரை கவாஅன் - வேனிலின் தன்மையையுடைய மலையினிடத்துள்ள வெம்மையாகிய அடிவாரத்தில், மழை முழங்கு கடு குரல் ஓர்க்கும் - மேகம் முழங்குகின்ற கடிய முழக்கத்தைக் கூர்ந்து கேட்கும், கழை திரங்கு அரு இடை - மூங்கில்கள் உலர்ந்த செல்லுதற்கரிய இடத்திலே, அவனொடு செலவு - அத்தலைவனோடு செல்லுதல், எளிது என உணர்ந்தனள் கொல்லோ - எளிமையையுடையதென்று அறிந்தாளோ?

(முடிபு.) உண்ணாள், மேவாள், அயர்வாள், இனி அவனொடு செலவு எளிதென உணர்ந்தனள்கொல்லோ?

---

(பி - ம்.) * முறிசினை. † ஓமைக்குத்திய. ‡ வெவ்வறைக்.

(கருத்து.) தலைவி தலைவனொடு செல்லுதல் எளிதென நினைத்தனளோ?

(வி - ரை.) 'பாலுமுண்ணாது தனக்கு இனிய பந்தையும் விரும்பாது ஆயத்தோடு இடைவிடாது விளையாடும் இயல்புடையாள் எங்ஙனம் ஆயத்தைப் பிரியத் துணிந்தாள்!' என்று செவிலி இரங்கினாள்; தலைவியின் இளமைத்தன்மைக்கு இரங்கியபடி.

பாலும்: உம், உயர்வு சிறப்பு. பந்துடன் - பந்தை; உருபு மயக்கம். கொல்: ஐயம்; ஓ: இரங்கற் குறிப்பு.

ஓமையின் பட்டையைக் குத்தி அதிலுள்ள நீரையுண்ண எண்ணிய யானை அஃது உலர்ந்திருந்தமையின் வருந்தி, இடியின் ஒலியைக் கேட்டு, 'மழை பெய்யும் போலும்' என அலந்து நின்றது. யானையின் நிலை, ஓமையின் சினை, கழைதிரங்கினமை ஆகிய யாவும் பாலையில் வேனிற்றன்மை நிலைபெற்றதை வெளிப்படுத்தின.

வேனிற் குன்றத்தென்று பாலையைக் கூறினள், குறிஞ்சி திரிந்த பாலையாதலின். வெவ்வறைக் கவானென்ற பாடத்திற்கு வெம்மையையுடைய பாறைகளையுடைய மலைக்கவானெனப் பொருள்கொள்க.

அவன் - தலைவன்; நெஞ்சறி சுட்டு.

ஏகாரங்கள், அசைநிலைகள்.

இதனை நற்றாய் கூற்றாகவும் கொள்ளுதல் பொருந்தும்.

## ஒப்புமைப் பகுதி

1. தலைவி பால் உண்ணாமை: அகநா. சஅ: 2, அக: 20.

தலைவி பந்தினை விரும்புதல்: அகநா. சக: 1.

3-4. முளிசினை ஓமை: குறுந். ௩அஅ: 5.

யானையும் ஓமையும்: (குறுந். ஏக: 1-2, ஒப்பு); "கடம்பகட் டொருத்த லடங்கக் குத்திப், போழ்புண் படுத்த பொரியரை யோமை" (அகநா. ௩கஎ: 10-11.)

6. மழைக்குரல்: குறுந். கூச: 7.

7 கழைதிரங்காரிடை: குறுந். ௩௩க: 1, ஒப்பு. (௩கூ௫)

## தோழி கூற்று

[வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரியப்புக்க தலைவனை நோக்கி, "தலைவி நின் தண்ணளியால் வாழும் நிலையினள்; ஆதலின் விரைவில் மீண்டு வருவாயாக" என்பதுபடத் தோழி சொல்லியது.]

௩௯௭. நனைமுதிர் ஞாழற் * சினைமரு டிரள்வீ
நெய்தன் மாமலர்ப் † பெய்தல் போல
ஊதை தூற்று முரவுநீர்ச் சேர்ப்ப
தாயுடன் றலைக்குங் காலையும் வாய்விட்
‡ டன்னா வென்னுங் குழவி போல
இன்னா செயினு மினிதுதலை யளிப்பினும்
¶ நின்வரைப் பினளென் றோழி
$ தன்னுறு விழுமங் களைஞரோ விலளே.

எ - து வரைவிடை வைத்து நீங்கும் தலைமகற்குத் தோழி உரைத்தது.

அம்மூவன்.

(ப - ரை.) நனை முதிர் ஞாழல் சினை மருள் திரள் வீ - அரும்புகள் முதிர்ந்த ஞாழலினது முட்டையைப்போன்ற திரண்ட மலர்களை, நெய்தல் மா மலர் பெய்தல் போல - நெய்தலது கரிய மலரிலே பெய்வதைப்போல, ஊதை தூற்றும் - குளிர்காற்றுத் தூவுகின்ற, உரவு நீர் சேர்ப்ப - வன்மையையுடைய கடற்கரைக்குத் தலைவ, தாய் உடன்று அலைக்கும் காலையும் - தாய் மாறுபட்டு வருத்தியபொழுதும், வாய்விட்டு அன்னா என்னும் குழவிபோல - வாய்திறந்து அன்னையே என்று அழும் குழந்தையைப்போல, என் தோழி - என் தோழியாகிய தலைவி, இன்னா செயினும் - நீ இன்னாதவற்றைச் செய்தாலும், இனிது தலையளிப்பினும் - இனிதாகத் தலையளி செய்தாலும், நின் வரைப்பினள் - நின்னாற் புரக்கப்படும் எல்லைக்கு உட்பட்டவள்; தன் உறு விழுமம் களைஞர் இலள் - நின்னையன்றித் தனது மிக்க துன்பத்தை நீக்குவாரைப் பெற்றிலள்.

---

(பி - ம்.) * றினைமருள். † பெய்த போல. ‡ டன்னா வென்னும் ¶ நின்னல திலளென். $ தன்னுடை யின்னல்.

